த. பா. நி. (க. வெ) வரிசை எண் — 225

# பொருளாதார முன்னேற்றமும் திட்டமும்

(இந்தியாவைப்பற்றிய சிறப்புக் கண்ணோட்டம்)

[முதல் பகுதி]

(பட்டப் படிப்பிற்கும் பட்ட மேற்படிப்பிற்கும் உரியது)



ஆசிரியர்
எஸ். சபாநாயகம், எம்.ஏ.,
பொருளாதார உதவிப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினோராண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறை களிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறு வதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பொருளாதார முன்னேற்றமும் திட்டமும்' (முதல் பகுதி) என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத் தின் 294 ஆவது வெளியீடாகும். இதுவரை 329 நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

# 1. பொருளாதார முன்னேற்றம்
## (Economic Development)

முன்னுரை : பொருளாதார வளர்ச்சி நோக்கி, நாடுகளை வளர்ந்த நாடுகள் என்றும் வளரும் நாடுகள் என்றும் இரு கூறுயப் பிரிக்கின்றனர். பொருளாதாரத்தில் வளர்ந்த நாடுகளை வளரும் நாடுகள் பின்பற்றுகின்றன. சென்ற காலப் பொருளாதாரச் சூழ்நிலைகளை விட, இன்றையச் சூழ்நிலைகள் வளர்ந்து வரும் நாடுகளுக்குச் சாதகமாக உள்ளன. இன்றைய செல்வ நாடுகளுக்குப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பல ஆண்டுகள் பிடித்தன. ஏனெனில், பல புதிய கண்டுபிடிப்புகளை அவைதாமே மேற்கொண்டு முன்னேற வேண்டியிருந்தது. வளரக் கருதும் நாடுகளுக்கு அந்தச் சோதனைகளில்லை ; வளர்ந்த நாடுகளின் கண்டுபிடிப்புகளின் பல நன்மைகளையும் வளரும் நாடுகள் எளிதில் பெறலாம் ; முன்னவை மேற்கொண்ட முன்னேற்ற நுட்பங்களைக் கொண்டு எளிதில், குறுகிய காலத்தில் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பின்னவை பெற இயலும். ஆனால், இவ்வித நன்மையைப் பெறத் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி அவசியமானது.

திட்ட முறைகளால்தான் இன்றைய பின்தங்கிய நாடுகள் விரைவில் முன்னேற்றம் அடைய முடியும். இன்றைய உலகில் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தையே பல நாடுகள் மேற்கொண்டுள்ளன. திட்டத்தினால், பொருளாதார முன்னேற்றம் விரைவு பெறும் என்பதை உலகின் பல நாடுகளும் உணர்ந்துள்ளன. சோவியத் ரஷ்யாவின் வியத்தகு முன்னேற்றத்திற்கு அடிப்படைக் காரணம் திட்டங்களேயாகும். இரண்டாவது உலகப் போருக்குப்பின் பல நாடுகளும் இதனை உணர்ந்து திட்டங்களைச் செயல்படுத்தி முன்னேற்றம் பெற முயன்றன.

ஒன்று நாம் உறுதியாகக் கூறலாம். நம் இந்தியத் திட்டங்களினால் வெற்றி குறைவு என்றாலும்கூட, நம் நாட்டில்

பொருளாதார வளர்ச்சியை நாம் ஓரளவு பெற்றுள்ளோம். திட்டங்கள் இல்லாது போயிருந்தால், இந்த அளவிற்காவது நாம் முன்னேற்றத்தைப் பெற்றிருப்போமா என்பது ஐயத்திற்குரியது. திட்டங்களினுல் வெற்றியைப் பெற்றுள்ளோம்—ஆனுல் எதிர் பார்த்த அளவு அல்ல. திட்டங்களில் எப்போது முழுவெற்றி காணலாம்? பொருளாதார முன்னேற்றத்தில் எதிரும் பிரச்சினை களுக்குத் தீர்வுகளைக் காணும்போதுதான் திட்டங்களில் முழு வெற்றி காணமுடியும். எனவே, பொருளாதார முன்னேற்றத்தில் எதிரும் இடையூறுகளையும், அவற்றைக் களைய உதவும் தீர்வுகளையும் அறிய வேண்டியது அவசியம். இவற்றை ஊன்றி ஆராய்ந்தால் தான் நல்ல திட்டங்களை வகுக்க முடியும்; நாடு நலம் பெறப் பொருளாதார முன்னேற்றத்தையும் பெற முடியும்.

சமதர்மத்தை (Socialism) மேற்கொண்டு உலகின் வளரும் நாடுகள் பல முன்னேறி வருகின்றன. முதலாளித்துவ (Capitalism) முறையில் பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதில் உள்ள இடை யூறுகளைக் கண்டு வளரும் நாடுகள் பலவும் சமதர்மப்பாணிச் சமுதாயத்தை அமைப்பதிலேயே அக்கறை கொண்டுள்ளன. வளர்ந்த நாடுகளில் பல நன்மைகளையும் அளிக்கக் கூடிய முதலாளித்துவக் கொள்கை, வளர்ந்து வரும் நாடுகளில் அந்த அளவிற்கு நன்மையை அளிப்பதில்லை. 'பலர் வாடவாட, சிலர் வாழ வாழ' மக்கள் இன்று பொறுப்பதில்லை. மக்களுடைய தீர்ப்பு சமதர்மக் கொள்கைகளுக்கே சாதகமாக இன்று பரவலாக உள்ளது. செல்வத்தைச் சமமாகப் பங்கிடவும், வருமான ஏற்றத் தாழ்வுகளை நீக்கிடவும் வளரும் நாடுகள் திட்டங்களைக் கருவியாகக் கொண்டுள்ளன.

இந்திய நாட்டில் இன்று நாம் பின்பற்றும் சமதர்ம முறையில் முதலாளித்துவத்தின் நன்மைகளும், பொதுவுடைமையின் (Communism) நன்மைகளும் கலந்து அமைந்துள்ளன. முதலாளித் துவத்தையோ பொதுவுடைமையையோ தீவிரமாக நாம் பின் பற்ருத காரணத்தினுல் நமது பொருளாதார வளர்ச்சியில் சிற்சில இடையூறுகள் ஏற்பட்டுள்ளன. எனினும், முதலாளித்துவத் தையோ பொதுவுடைமையையோ முற்றிலும் ஏற்று நாம் நடப்ப திற்கில்லை. நமது அரசியல் அமைப்பும், கலாச்சாரப் பண்பும் இரண்டுக்கும் முரணுயிருக்கின்றன. எனவே கலப்புப் பொருளா தாரக் கொள்கையை நாம் வளரும் முறையாகக் கொண்டுள் ளோம்.

'பொருளாதார முன்னேற்றம்' பற்றிப் பல பொருளாதாரச் சிந்தனையாளர்கள் ஆராய்ந்துள்ளார்கள். 'வணிக வாதத்தினர்' (Mercantilists), ஆடம் ஸ்மித் முதல் மார்க்ஸ், கீன்ஸ்வரை வந்த

அனைத்து ஆசிரியர்களும் பொருளாதார முன்னேற்றம் பற்றி அரிய கருத்துகளைத் தந்துள்ளனர். ஆயினும், 1940ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் பொருளியலறிஞர்களின் நோக்கு வளரும் நாடுகளின் பிரச்சினைகளில் பதிந்ததெனலாம். 'ஓரிடத்தின் ஏழ்மைநிலை எல்லா இடங்களின் செழுமை நிலைகளையும் பாதிக்கும்' என்பது உணரப்பட்டது. மேயர் (Meier) பால்டுவின் (Baldwin) போன்றவர்கள் குறிப்பிடுவதுபடி, 'நாடுகளின் வறுமைபற்றி ஆராய்வது நாடுகளின் செல்வங்களைப் பற்றி ஆராய்வதிலும் மிகவும் அவசியமானதாகும்.'[1]

செல்வ நாடுகள் இரக்க உணர்வோடு ஏழை நாடுகளுக்கு உதவுகின்றன எனக் கூற முடியாது. வளரும் நாடுகள் வளர்ந்த நாடுகளிடமிருந்து பெறும் உதவிகளில் பல அரசியல் நோக்கு கொண்டவை. அமெரிக்கா, இங்கிலாந்து, மற்றும் ஐரோப்பிய முதலாளித்துவ நாடுகள் முதலாளித்துவ அமைப்பைப் பரப்ப வேண்டுமென்ற விருப்போடு ஏழை நாடுகளுக்கு உதவுகின்றன என்று சிலர் கூறுகின்றனர். மறுபுறத்தில் பொதுவுடைமையைப் பரப்ப, இம் முதலாளித்துவ நாடுகளுக்குப் போட்டியாக ரஷ்யாவும் அதைச் சார்ந்த பொதுவுடைமை நாடுகளும் முயலுகின்றன எனக் கூறப்படுகிறது. இதில் குறிப்பிடத்தக்க நிலை ஒன்று அமைந்துள்ளது. இன்றைய வளரும் நாடுகளுக்கு வளர்ந்த முதலாளித்துவ நாடுகள் அளிக்கும் உதவி வளர்ந்த பொதுவுடைமை நாடுகள் அளிக்கும் உதவியைக் காட்டிலும் தொகையளவில் மிகுதியாகும். எனினும், இருக்கின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளால், வளர்ந்து வரும் நாடுகளில் பல, சமதர்மச் சமுதாயத்தை அமைப்பதிலேயே ஆர்வம் கொண்டுள்ளன. இந் நாடுகளில் தீவிரப் பொருளாதாரக் கொள்கைகட்கே மக்களிடம் அதிக ஆதரவு உள்ளது எனக் கூறலாம்.

வளரும் நாடுகளின் இயற்கை வளங்களைப் பயன்படுத்தி பொருளாதார முன்னேற்றத்தைப் பெற, வளர்ந்த நாடுகள் உதவுகின்றன. ஆயினும், நடைமுறையில் வளர்ந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் மேலும் சிறக்கவே, வளரும் நாடுகள் வகை செய்வதாகி விடுகின்றது. வளர்ந்த நாடுகளின் நுகர்வுப் பொருள்கள், மூலதனப் பொருள்கள் யாவற்றிற்கும் பரந்த சந்தையாய் அமைவன வளரும் நாடுகளே. இதனால் வளர்ந்த நாடுகளின் தொழில்கள் மேலும் வளர்ந்து செழிக்கின்றன. வளரும் நாடுகளில் தொடக்கத்திலிருக்கும் இத் தொழில்களால் வளர்ந்த நாடுகளின் தொழில்களோடு போட்டியிட இயலவில்லை. ஏழை நாடுகள் வளர்வதில் இவ்விதமான இடையூறுகள் இருக்கின்றன. வளரும் நாடுகள்

[1]G. . M. Meier and R. E. Baldwin, Economic Development-Theory, History, Policy, p. 12.

இதனால் விரைவாக வளர்வதற்கில்லை ; வளர்ந்த நாடுகள் மேலும் வளரவே வாய்ப்புகள் அமைகின்றன.

இன்றைய செல்வநாடுகளின் பொருளாதார முன்னேற்றம் ஒரு வகையான சூழ்நிலையில் ஏற்பட்டதெனலாம். இந்த வளர்ந்த நாடுகள் பின்பற்றிய முறைகளை முற்றிலுமாகப் பின்பற்றி வளரும் நாடுகள் வறுமை நிலையை நீக்க இயலாது. வளரும் இந் நாடுகளின் பொருளாதாரச் சூழ்நிலைகள் வேறு ; பிரச்சினைகள் வேறு ; எனவே அவற்றிற்கு ஏற்றவாறு புதுக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். இயற்கை வளங்கட்கு இடையே கொடிய வறுமையும் வளரும் நாடுகளில் இருக்கின்றது. இவ் வறுமையைப் போக்க, நிலவும் பொருளாதாரச் சிக்கல்களை அறிய வேண்டும் ; அவற்றைத் தீர்க்கும் வழிமுறைகளை மேற்கொள்ளவேண்டும்.

நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன் நம்முடைய பொருளாதாரம் 'பின்தங்கிய பொருளாதாரம்' [Backward Economy] எனப் பட்டது. இன்று 'வளர்ச்சியடையாத பொருளாதாரம்' (Under developed Economy) என்றுகூட குறிப்பிடாமல் வளரும் பொருளாதாரம்' (Developing Economy) எனக் கூறப்படுகின்றது. இரண்டாவது உலகப்போருக்குப் பின், இந்த நிலை பல நாடுகளிலும் பரவலாக ஏற்பட்டதெனலாம்.

வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் மனித ஆற்றல் முற்றிலும் பயன்படுத்தப்படுவதில்லை ; இயற்கை வளங்களும் செம்மையாகப் பயன்படுத்தப் படுவதில்லை. இவற்றிற்குக் காரணங்கள் தொழில் நுணுக்கக் குறைவும், சமுதாயத்தில் காணப்படும் பிற்போக்கு நிலைகளுமாகும்.

வளர்ச்சி முற்றுத பொருளாதாரமும் வளர்ச்சி முதிர்ந்த பொருளாதாரமும் (Underdeveloped versus Developed Economics)

சர்வ தேச சங்க நிபுணர் குழுவின் கூற்றுப்படி, "வளர்ச்சியடையாத நாடுகளை வரையறை செய்வது கடினமானது. அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா, மேற்கு ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றின் தலா வருமானத்தைக் காட்டிலும் குறைந்த தலா வருமானத்தைக் கொண்டுள்ள நாடுகளை வளர்ச்சியடையாத நாடுகளெனலாம்."[1] பொதுவாக, அமெரிக்காவின் தலா வருமானத்தில் நான்கில் ஒரு பங்கிற்குக் குறைவாகப் பெறும் (அதாவது ஆண்டொன்றிற்கு 500 டாலர்களுக்குக் குறைவாகப் பெறும்) நாடுகள் வளர்ச்சியடையாத நாடுகள் என்று சுட்டப்படுகின்றன.

[1]United Nations. 'Measures for the Economic Development of UnderdevelopedCountries' 1951, p. 3.

அமெரிக்கா, கானடா, சுவிட்ஜர்லாந்து போன்ற நாடுகளில் தலா வருமானமாக ஆண்டொன்றிற்கு 1000 டாலர்களுக்கு மேல் கிடைக்கின்றது. இவற்றை அதிக வளர்ச்சியடைந்த நாடுகள் என லாம். இங்கிலாந்து, டென் மார்க், ஸ்வீடன், ஜெர்மனி, பெல்ஜியம், ஃபிரான்சு, ஃபின்லாந்து, நார்வே போன்ற நாடுகளில் தலா வருமானம் 500 டாலர்களிலிருந்து 1000 டாலர்களுக்கு இடைப் பட்ட நிலையில் உள்ளது. அதிக வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது குறைந்த வளர்ச்சி கொண்ட இந்நாடுகளை இடை நிலை நாடுகள் எனலாம். எஞ்சியுள்ள பிற நாடுகளில் உலகின் மொத்த மக்கள் தொகையில் மூன்றில் இருபங்கு அமைந்துள்ளது. இந் நாடுகளின் தலா வருமானம் 500 டாலர்கட்கும் குறைவே. இவற்றை வளர்ச்சியடையாத நாடுகள் என்று வழங்கலாம். ஆசியாவின் பெரும்பாலான நாடுகள் ஆப்பிரிக்கா, இலத்தீன், அமெரிக்கா, சில ஐரோப்பிய நாடுகள் இப்பிரிவில் அடங்குவன வாகும். இம் மூன்று பிரிவுகளைத் தவிர 250 டாலர்கட்கும் குறை வான தலா வருமானத்தைக் கொண்ட நாடுகள் உள்ளன. பொரு ளாதார முன்னேற்றத்தின் தாழ்ந்தபடியில் உள்ள வறிய நாடுகள் இவையாகும். இந்தியாவின் தலா வருமானம் ஆண்டொன்றிற்கு 90 டாலர்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

'வளரும் நாடுகளின்' சில முக்கிய தன்மைகளை இவற்றிலி ருந்து உணரலாம் :

(1) தலா வருமான அடிப்படையில் 'வளர்ச்சியடையாத நாடு களையும்' 'வளர்ச்சியடைந்த நாடுகளையும்' பாகுபாடு செய்யலாம் என்றாலும் தலா வருமானம் மட்டும் இதை முற்றிலும் உணர்த்தும் எனக் கூற முடியாது. இத் தலா வருமான அளவுகோலால் ஓரளவு பொருளாதார ஏற்றத் தாழ்வு நிலைகளை உணரலாம்.

(2) வளர்ச்சியடையாத நாடுகளின் வறிய நிலையே முன்னேற் றக் குறைவுக்குக் காரணமாகவும், விளைவாகவும் அமைகின்றது.

(3) வளர்ச்சியடையாத இந்நாடுகளின் பரந்த வறிய நிலைக்கு இயற்கை வளங்கள் காரணமல்ல ; பழைமையான உற்பத்தி முறை களும் பிற்போக்கான சமுதாய அமைப்பு முறைகளுமே வளராத நிலைக்குக் காரணங்களாகும். இந் நிலையை மாற்றியமைத்தால் மக்கட் பெருக்கம் ஏற்பட்டாலும் கூட, தலா வருமானத்தை உயர்த்தலாம்.

(4) வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில்களும் சிறப்பாக வளர்ந்திருப்பதில்லை.

வளர்ச்சியடையாத நாடுகளை உலகப் பொருளாதாரத்தின் சேரிகள் எனலாம். உலகில் வறுமை நிலவுவதை இச் சேரிகள்

உணர்த்துகின்றன. அறிவியல், தொழில் நுட்ப முன்னேற்றங்களால் விண்வெளிச் சாதனைகள் புரிய வல்லோம் என நாம் புகழ்ந்து கொள்ளலாம். ஆனால், பட்டினி, வறுமை நிலைகளை முற்றிலும் நீக்கமுடியாத நிலை இருப்பதையும் நாம் உணர்கின்றோம். வறுமையை வெல்ல முனையும் சமுதாய வளர்ச்சியில் தன்னம்பிக்கை வளர்ந்து வருகின்றது ; மனிதன் தானே தன் சூழ்நிலையை அமைக்க வல்லவன் என்ற நம்பிக்கை வலுப்பெறுகிறது.

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பல காரணங்கள் உள்ளன :

(i) பொருள் திரளும் வேகம் ;

(ii) மக்கள் தொகைப் பெருக்கம் ;

(iii) புதிய வளங்களைக் கண்டுபிடித்தல் ;

(iv) தொழில் நுட்ப முன்னேற்றம் ;

(v) பொருளாதார வளர்ச்சியின் மக்களின் முனைப்பு.

விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு மக்கட் தொகைப் பெருக்க விகிதத்தைக் காட்டிலும் வருவாய்ப் பெருக்க விகிதம் அதிகமாக இருக்க வேண்டும் ; அதோடு தொழில் நுணுக்க முன்னேற்றமும் சிறப்பாக அமைந்திருக்க வேண்டும்.

பேராசிரியர் H. W. சிங்கர் (H. W. Singer) பொருளாதார வளர்ச்சியைப் பின் கண்டவாறு நிர்ணயிக்கின்றார் : [1]

$D = SP - r$

D = பொருளாதார வளர்ச்சி வேகம்
S = நிகரச் சேமிப்பின் வேகம்
P = புதிய முதலீட்டின் ஓர் அலகு மூலதனத்திற்கான உற்பத்
r = ஓராண்டு மக்கள் தொகைப் பெருக்க வீதம்.

வளர்ந்த நாடுகளில் அதிக உற்பத்தியால் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்படுவதுண்டு ; வளரும் நாடுகளிலோ தேவைக்குக் குறைவான உற்பத்தியே பல இடையூறுகளுக்கும் காரணமாக

[1] H. W. Singer—"The Mechanics of Economic Development" Indian Economic Review, August, 1952, pp. 15—16.

இருக்கின்றது. 1930ல் தொடங்கிய உலகப் பொருளாதார மந்தத்தை இதற்கு உதாரணமாகக் கூறலாம். வேலையின்மை, விலைவாசிக் குறைவு, முதலீட்டின் அளவில் தாழ்வு ஆகிய யாவும், அக்காலத்தில் அமெரிக்காவில் இருந்தன. உற்பத்தி செய்த பொருள்களுக்கு ஏற்ற தேவை இல்லாதிருந்தது. இந்த நிலையில் வளர்ந்த நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தை நிறுத்திக் கொள்ள முயலுகின்றன ; வளரும் நாடுகள் முன்னேற்ற வேகத்தை விரைவுபடுத்த முற்படுகின்றன. செல்வ நாடுகளில் தேசிய வருவாய், தலா வருவாய், மக்களின் வாழ்க்கைத் தரம் ஆகிய யாவும் உயர்ந்துள்ளன. வளரும் நாடுகளில் ஆக்கமானது மெல்லவே அதிகரிக்கின்றது; ஆக்கத்தைக் காட்டிலும் அதிக விகிதத்தில் மக்கள்தொகை பெருகுவதால், தலா வருவாயில் சிறப்பான வளர்ச்சி ஏற்படுவதில்லை. குறைந்த வருவாயினால், குறைவான சேமிப்புத்திறனும், தாழ்ந்த முதலீட்டு அளவும் அமைகின்றன. வாங்குந்திறனும் குறைவதால் உற்பத்தி பாதிக்கப்படுகின்றது. மூலதனப் பற்றாக்குறையால், பொருளாதாரம் வளராத நிலையிலேயே நின்று, குறைந்த ஆக்கமே குறையும் ஆக்கத்துக்குக் காரணமாகவும், விளைவாகவும் அமைகின்றது.

பொருளாதார முன்னேற்றம் பற்றித் தெரிவது பல நிலைகளில் அவசியமாகும். உலகின் மூன்றில் இருபகுதி மக்கள்தொகை உலகின் மொத்த வருவாயில் ஆறில் ஒருபகுதியையே பெற்று வருகின்றது. இந்த மூன்றில் இருபகுதி மக்கள், வளரும் நாடுகளிலேயே வாழ்ந்து வருகின்றனர். வளரும் இந்த நாடுகளில் இயற்கை வளங்கள் குறைவாக இருக்கின்றன என்று கூற இயலாது. பயன்படுத்தப்படாத இந் நாடுகளின் வளங்களைப் பயன்படுத்தி மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவது எவ்வாறு என்று அறிவது அவசியமானது. இந் நிலையில் வேறொரு நிலையையும் குறிக்கலாம். இயற்கை வளங்களை மிகுதி கொண்டில்லாத ஜப்பான் உலகில் முன்னணியில் இருக்கக் கூடிய அமெரிக்காவையும் விஞ்சக் கூடிய அளவிற்குத் தொழில் துறைகளில் முன்னேறி வருகின்றது. இரண்டாவது உலகப் போருக்குப் பின்தான் இவ்வகை மிக விரைந்த வளர்ச்சியை ஜப்பானியப் பொருளாதாரத்தில் காண முடிகின்றது ; சோவியத் ரஷ்யாவின் முன்னேற்றமும் குறிப்பிடத் தக்க நிலையை அடைந்தது குறுகிய காலத்தில்தான்.

அரசியல் அமைப்பு, சட்டதிட்டங்கள், கல்வியின் தரம், மக்கள் ஆரோக்கிய நிலை, சமூகப் பழக்கவழக்கங்கள் ஆகிய இவற்றாலும் பொருளாதார வளர்ச்சி மாறுபடுகின்றதெனலாம்.

## வளர்ச்சியடையாத நாடுகளின் இயல்புகள்

பேராசிரியர். ஹார்வே லெபண்ஸ்டீன் (Professor. Harvey Leibenstein) குறிப்பிடுபவை :[1]

### I. பொருளாதார இயல்புகள்

(i) பொதுவானவை

*(1) அதிக அளவு மக்கள் தொகை வேளாண்மையில் ஈடுபட்டிருத்தல் (சுமார் 70 முதல் 90 சதவிகிதம்)*

*(2) வேளாண்மைத் துறையிலிருந்து சில உழைப்பாளர்களைக் குறைத்தாலும் பழைய உற்பத்தியின் அளவையே பெறலாம் ; இது அதிக மக்கள்தொகை வேளாண்மையில் அமைந்திருக்கின்ற காரணத்தினால்.*

*(3) வேளாண்மையில் 'மறைந்துள்ள வேலையின்மை' Disguised unemployment) ; வேளாண்மை தவிரப் பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் இல்லாத நிலை.*

*(4) தனி ஒருவருக்குக் குறைந்த அளவு மூலதனம்.*

*(5) தனி ஒருவருக்குக் குறைந்த அளவு வருவாய் ; அவசியத் தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள்ள முடியாத நிலையில் பல மக்கள்.*

*(6) மக்களில் பெரும்பாலோர் சேமிப்பைச் செய்ய முடியாதவர்களாகவே உள்ளனர்.*

*(7) நிலவுடைமையைக் கொண்ட வகுப்பினர் ஓரளவு சேமித்தாலும்கூட, அவர்கள் அச் சேமிப்பை வாணிபம், தொழில் போன்றவற்றில் முதலீடு செய்வதில்லை.*

*(8) முக்கியத் தொழில்களாகிய வேளாண்மை, சுரங்கத் தொழில் போன்றவையே வேலை வாய்ப்புக்களை அளிக்கின்றன.*

*(9) வேளாண்மை உற்பத்தியில் சில முக்கிய கச்சாப் பொருள்களும், தானியங்களும் மட்டுமே அடங்கியுள்ளன ; சத்துணவுப் பொருள்களின் உற்பத்தி குறைவாகவே இருக்கும்.*

[1]Harvey Leibenstein-Economic Backwardness and Economic Growth. (New York 1957) pp. 40-41. Some excellent discriptive material on under-developed countries is Presented in Lyle W. Shannon, under developed Areas (New York, 1957).

(10) உணவுப் பொருள்களையும் மற்றும் அவசியப் பண்டங்களை யும் வாங்குவதில் அதிகச் செலவு.

(11) உணவுத்தானியங்களும், கச்சாப் பொருள்களும் ஏற்றுமதி யாவது.

(12) தனி ஒருவரின் நிலையில் குறைந்த அளவு வாணிபம்.

(13) முன்னேற்றமடையாத கொடுக்கல் வாங்கல் முறைகளும், விற்பனை முறைகளும்.

(14) தாழ்வான குடியிருப்பு வசதிகள்.

(ii) **வேளாண்மையில் அடிப்படை இயல்புகள்**

(1) குறைந்த அளவுள்ள நிலஉடைமைகளும், மிகக் குறை வான அளவுள்ள துண்டு நிலங்களும்.

(2) வேளாண்மைத் தொழில் நுட்பத்தில் முன்னேற்ற மின்மை; வேளாண்மைக் கருவிகளின் பழைய காலத் தன்மையும், எண்ணிக்கைக் குறைவும்.

(3) இந்தியா போன்ற நாடுகளில் பெரிய நிலஉடைமை யாளர்கள் முன்னேற்றமடைந்த வேளாண்மை உற்பத் தியை மேற்கொண்டாலும், போக்குவரத்து வளர்ச்சியின் மையாலும், உள்ளூர்ச் சந்தைகளில் தேவை அதிகம் பெருகாத நிலையாலும், சிக்கல்கள் தோன்றுகின்றன. பல முன்னேற்ற மடையாத நாடுகளில், முன்னேற்றமடைந்த வேளாண்மை உற்பத்தி முறை வெளி நாட்டுச் சந்தை கட்குப் பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கு மட்டுமே மேற்கொள்ளப்படுகிறது.

(4) குறைந்த அளவு வளத்தைக் கொண்ட நிலங்களில் மிக அதிக அளவு ஆக்கத்தைப் பெறச் சிறிய நிலவுடைமை யாளர்களால் முயற்சிகள் செய்யப்படுகின்றன.

(5) சொத்துகளோடும், வருவாயோடும் ஒப்பிடும்போது அதிக அளவுக் கடன் நிலவுகின்றது.

(6) உள்ளூர்ச் சந்தைகளுக்கான உற்பத்தி முறைகள் பழை யனவாகவும், தரக்குறைவானதாகவும் இருப்பதால் விற் பனை உபரி குறைவாகவே உள்ளது. சொந்தச் சாகுபடி முறையிலும், குத்தகைச் சாகுபடி முறையிலும் இந் நிலையே திகழ்கின்றது.

(7) வேளாண்மையில் ஈடுபடும் மக்கள் தொகைப் பெருக்கத்தால் நிலவுடைமைகள் பிரிக்கப்படுகின்றன. நில உடைமைகளின் அளவுகள் சுருங்குகின்றன. சிறிய நிலத் துண்டுகளும்கூட மிகச்சிறிய துண்டுகளாகப் பிரிக்கப் படுகின்றன.

## II. மக்கள் தொகை

(1) அதிகப் பிறப்பு வீதம், ஆயிரத்திற்கு 40 என்ற அளவிற்கு மேலாக.

(2) அதிக இறப்பு வீதம், குறைந்த காலத்திற்கு மட்டுமே மக்கள் வாழும் நிலை.

(3) போதாத சத்துணவுப் பொருள்கள், உணவுப் பற்றாக் குறை.

(4) சுகாதார, ஆரோக்கிய நிலைகளில் முன்னேற்றமின்மை.

(5) கிராமப்புறங்களில் அதிக அளவு மக்கள் தொகை.

## III. பண்பாடும் அரசியலும்

(1) வளர்ச்சியுறாத பழையமுறைக் கல்வி, மிக அதிக மக்களுக்கு இடையே கல்வியறிவின்மை.

(2) மிகுதியான சிறுவர்கள் உழைக்கும் நிலைமை.

(3) நடுத்தர வகுப்பினரின் தாழ்ந்த நிலை அல்லது இல்லாத நிலை,

(4) தாழ்வுற்ற பெண்களின் நிலை.

(5) பழக்க வழக்கங்களின் அடிப்படையில் நடவடிக்கைகளில் ஈடுபடும் மக்கள்.

## IV. தொழில் நுணுக்கமும் பிறவும்

(1) ஓர் ஏக்கருக்கான உற்பத்திக் குறைவு.

(2) பயிற்சி வசதிகள் இல்லாமை அல்லது குறைவாக உள்ள நிலை, பொறியியலாளர்களுக்கும், தொழில் வினைஞர்கட்கும் பயிற்சி அளிக்கும் வசதிகள் குறைவு.

(3) போதாத போக்குவரத்துச் செய்தித் தொடர்பு வசதிகள், குறிப்பாகக் கிராமப் பகுதிகளில்.

(4) முன்னேற்றமடையாத தொழில் நுட்பம்.

வளர்ச்சியடையாத நாடுகளில் தேசிய வருவாயின் பெரும் பகுதி அடிப்படைத் தொழிலாகிய வேளாண்மையால் பெறப்படு

கின்றது. எனினும் வேளாண்மை, விஞ்ஞான நுட்பங்களைக் கொண்ட சாகுபடி முறைகளைக் கொண்டு அமைந்திருப்பதில்லை. ஜே. கே. கால்பிரெய்த் (J. K. Galbraith) கூறுவது போல, 'முற்றிலும் வேளாண்மை அமைந்த நாட்டில் முன்னேற்றமடையாத நிலை வேளாண்மையிலும் கூட இருக்கின்றது.' குன்னார் மிர்டால் (Gunnar Myrdal) குறிப்பிடுவதாவது, 'தொழில் மயமாக்கல் தொழில் நுட்பத்தை வளர்க்கிறது; அத் தொழில் நுட்பத்தை வேளாண்மை முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தலாம்.'

வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மைப் பொருள்கள் அதிக உற்பத்திச் செலவைக் கொண்டிருப்பதால் உள் நாட்டுச் சந்தைகளில் அயல்நாட்டுப் பொருள்களோடு போட்டியிட முடிவதில்லை; உலகச் சந்தையிலும் வளர்ச்சியடையாத நாடுகள் தங்கள் பொருள்களை விற்பது கடினமாகின்றது. முன்னேறிய நாடுகளின் குறைந்த உற்பத்திச் செலவிற்குக் காரணம் வேளாண்மை அறிவியல் முறைகளோடு இயந்திரமயமாக்கப் பட்டிருக்கும் நிலையாகும்.

எல்லா வளர்ச்சியடையாத நாடுகளிலும் மக்கள்தொகை மிகுதியாக இருக்கின்றது எனக் கூற இயலாது. மக்கள்தொகைப் பெருக்க வீதத்திலும் ஏற்றத்தாழ்வுகள், வளர்ச்சியடையாத நாடுகட்கிடையேயும், வளர்ச்சியடையாத நாடுகட்கும் வளர்ச்சியடைந்த நாடுகட்கிடையேயும் இருக்கின்றன. உலகப் போருக்கு முன் பிறப்பு, இறப்பு வீதங்கள் உயர்வாகவே இருந்தன. வளர்ச்சியடையாத நாடுகளில் போருக்குப் பின் பிறப்பு வீதங்கள் அதே நிலையில் இருக்க, இறப்பு வீதங்களில் திடீர்ச்சரிவு ஏற்பட்டுள்ளது. இதற்குக் காரணம், விஞ்ஞான வளர்ச்சி, மருத்துவ வசதிகள் பெருக்கம், சுகாதார ஆரோக்கிய முன்னேற்றங்கள். இருப்பினும் வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது தாழ்வான நிலையிலேயே மருத்துவ வசதிகள் வளர்ச்சியடையாத நாடுகளில் அமைந்திருக்கின்றன.

## பொருளாதார முன்னேற்றமும் (Economic Development) பொருளாதார வளர்ச்சியும் (Economic Growth)

ஷும் பீட்டர் (Schumpeter), திருமதி. உர்சுலா ஹிக்ஸ் (Mrs. Ursula Hicks) போன்றவர்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் உள்ள வேறுபாடுகளை விளக்குகின்றனர். 'பொருளாதார முன்னேற்றம்' வளர்ச்சியடையாத நாடுகளின் பிரச்சினைகள் பற்றியும் 'பொருளாதார வளர்ச்சி' முன்னேற்றமடைந்த நாடுகளின் பிரச்சினைகள் பற்றியும் குறிப்பிடு

கின்றனர். திருமதி ஹிக்ஸ் குறிப்பிடுவதுபோல வளர்ச்சியடையாத நாடுகளின் பிரச்சினை, பயன்படுத்தப்படாத வளங்களைப் பயன் படுத்தச் செய்வதாகும்; முன்னேற்றமடைந்த நாடுகளில் பிரச்சினை வளர்ச்சியைப் பொறுத்தவை. அந் நாடுகளில் முன்னமேயே ஓரளவு வளங்கள் பயன்படுத்தப்பட்டு முன்னேற்றம் அடைந்த நிலை அமைந்துள்ளது.

'பொருளாதார முன்னேற்றத்திற்கும்' 'பொருளாதார வளர்ச்சிக்கும்' அதிக வேறுபாடுகள் இல்லையெனலாம். மேலும், 'வளர்ச்சி' என்பது அளவிடக் கூடியது; உழைப்பவர்களின் எண் ணிக்கைப் பெருக்கத்தைக் குறிப்பிடுவது ; மூலதனம், வாணிபம், நுகர்வுப் பெருக்கங்களைப் பற்றியும் அளவிடுவதாகும். 'பொருளா தார முன்னேற்றம்' என்பது உற்பத்தி முறைகளின் மாற்றங்களை யும், சமுதாய நடவடிக்கைகள், அமைப்புகளின் மாற்றங்களையும் விளக்குவதாகும். சில பொருளியல் அறிஞர்கள் 'பொருளாதார முன்னேற்றம்' 'பொருளாதார வளர்ச்சி' இரண்டையும் ஒரே பொருளைத் தருவதாகவே பயன்படுத்தியுள்ளனர். பொதுவாக, 'பொருளாதார வளர்ச்சி' என்பதை முன்னேற்றமடைந்த நாடு களைக் குறிப்பிடும்போதும் 'பொருளாதார முன்னேற்றம்' என்பதை முன்னேற்றமடைந்து வரும் நாடுகளைக் குறிக்கும் போதும் பயன்படுத்தலாம்.

### பொருளாதார முன்னேற்றம் (Economic Development) — இலக் கணங்கள்

பொருளாதார முன்னேற்றம் பல வகைகளில் வரையறை செய்யப்பட்டுள்ளது:

பொருளாதார முன்னேற்றத்தை அளவிட ஒரு நாட்டின் உண்மையான தேசிய வருவாய், கணக்கிடப்படுகின்றது. ஆனால், இது மக்களின் வாழ்க்கைநலனை உண்மையாக உணர்த்துமெனக் கூற இயலாது. தேசிய வருவாய் உயர்வைத் தொடர்ந்து அவ் வுயர்வு வீதத்தைக் காட்டிலும் விரைவாக மக்கள்தொகைப் பெருக்கம் ஏற்படலாம். தேசிய வருவாய் உயர்ந்தும் கூட, தலா வருவாய் உயராத காரணத்தால் வாழ்க்கைத்தரம் நல்ல நிலையில் அமையாது.

இரண்டாவது வகை இலக்கணம் பொருளாதார முன் னேற்றத்தை அறிய தலா வருவாயைக் கணக்கிடும் ஒன்றாகும். பொருளியலறிஞர்கள் பொருளாதார வளர்ச்சியைத் தலா வருவா யோடும், தலா உற்பத்தியோடும் தொடர்புபடுத்தியே கூறு

கின்றனர். ஒரு குறிப்பிட்ட காலத்தில் தலா உற்பத்தி உயர்வைக் கொண்டு பொருளாதார முன்னேற்றத்திற்கு இலக்கணம் வகுக்கலாம் என பேராசிரியர். பாரன் (Prof. Baran) குறிப்பிடுகின்றார்.

புக்கானன் (Buchanan), இல்லிஸ் (Ellis) போன்றவர்கள் குறிப்பது போல, முன்னேற்றமென்பது உண்மை வருவாயை உயர்த்த உற்பத்தி வளங்களைப் பயன்படுத்தி முதலீடுகளைச் செய்வதாகும்; இம்முறையின் மூலம் தனி ஒருமனிதனின் உண்மை வருவாய் உயர்வடையும். இவ்வகை இலக்கணங்கள் எதை வலியுறுத்துகின்றன என்றால் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற, உண்மை வருவாயின் உயர்வானது மக்கள்தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் அதிகமாக அமைந்திருக்க வேண்டுமென்பதையாகும்.

ஆனால், தலா வருவாய் உயர்வு, வாழ்க்கைத்தர உயர்வைக் கொடுக்கும் எனக் கூற முடியாது. தலா வருவாய் உயரும்போது, தலா நுகர்வானது அதே அளவில் இருக்கலாம் அல்லது குறையவும் செய்யலாம். அதுவேயல்லாமல் அரசு, உயர்வடைந்த வருவாயை இராணுவச் செலவிற்கோ, வேறு செலவினங்கட்கோகூடப் பயன்படுத்தலாம். சில நிலைகளில் உயர்வடைந்த உண்மையான தேசிய வருவாயானது தாழ்ந்த நிலையிலுள்ள பலர்க்குக் கிடைக்காமல், செல்வந்தர்கள் சிலரைச் சென்றடையலாம். இவ் விலக்கணம் ஒரு சமுதாயத்தின் பல பிரிவு மக்கள் தேசிய ஆக்கத்தை எவ்வாறு பெறுகின்றார்கள் என்பதை விளக்கவில்லை. தேசிய வருவாய் பல வகைப்பட்ட மக்களாலும் பல அளவுகளில் பெறப்படுகின்றது. தலா வருவாயில் அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் கூட அமைந்திருக்கலாம். உதாரணமாக நம் நாட்டில், தலா வருவாய் ஆண்டொன்றிற்கு ரூ. 675 என்று சொல்லப்படுகின்ற நிலையில்; இவ் வருவாயில் டாட்டாக்கள், பிர்லாக்கள், தாபார்கள், மபட்லால்கள், டால்மியாக்களின் வருவாயும் அடங்கியுள்ளது என்பதை அறிய வேண்டும். இதே வருவாயில் கிராமப்புற மக்களின் மிகக் குறைந்த வருவாயும்கூடச் சேர்க்கப்பட்டுள்ளது. தனியார், பொதுத் துறைகளில் பணியாற்றும் கடைநிலை ஊழியர்களின் வருவாயும் இதில் இணைவதாகும். இவ்வாறிருக்கும்போது தலா வருவாய் எங்ஙனம் எல்லா மக்களின் வாழ்க்கைத்தரத்தையும் உண்மையாக உணர்த்த இயலும்?

பொருளாதார முன்னேற்றம் நலம்சார் நிலையைக் கொண்டும் விளக்கப்பட்டுள்ளது. உண்மைத் தலா வருவாய் உயரும்போது, வருவாய்கள் அதிக வேறுபாடுகள் இல்லாத நிலையில் பெரும்பாலான மக்கள் மனநிறைவோடு வாழ்வதைப் பொருளாதார வளர்ச்சி என

வரையறுக்கலாம். எந்த அளவிற்கு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதை ஆய்வு செய்யும்போது வருமானப் பங்கீடு மதிப்புக்களை ஆராய வேண்டும்; உண்மை உற்பத்திச் செலவு, விருப்புகள் போன்றவற்றையும் உண்மை வருவாயை ஆராயும் போது அறிய வேண்டும். எளிதாக, மேலெழுந்தவாறு முன்னேற்றத்தைக் கண்டறியவே, பொருளியலாளர் தேசிய வருவாயையும், தலா வருவாயையும் கருத்திற் கொள்கின்றனர்.

வளர்ச்சியடையாத (Under developed) என்ற சொல்லின் பொருள்

'வளர்ச்சியடைய முடியாத' (Undeveloped) நாடுகளையும் 'வளர்ச்சியடையாத' (underdeveloped) நாடுகளையும் பாகுபாடு செய்யலாம். 'ஆர்க்டிக், அன்டார்க்டிக், சகாராவின் பகுதிகளை' வளர்ச்சியடைய முடியாதவை எனலாம். ஏனெனில், அங்கெல்லாம் வளர்ச்சிக்குத் தேவையான வளங்கள் அமைந்திருக்கவில்லை. இந்தியா, பாகிஸ்தான், கொலம்பியா, உகண்டா, பனமா போன்றவற்றை 'வளர்ச்சியடையாத,' ஆனால் வளர்ச்சியடையக் கூடிய நாடுகள் என்று கூறலாம், ஏனெனில், இவை முன்னேற்றத்திற்குத் தேவையான பல இயற்கை வளங்களையும் கொண்டுள்ளன. அவ்வியற்கை வளங்களைப் பயன்படுத்திப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது இவற்றால் முயன்றால் கூடும். பேராசிரியர். ஷெனன் (Prof. Shannon) கூறுவதுபோலப் பொருளாதார வளர்ச்சியைப் பெறுவது 'வளர்ச்சியடைய முடியாத' நாடுகளில் கடினமானது; வளர்ச்சியை அடைவது 'வளர்ச்சியடையாத' நாடுகளில் நடைபெறக்கூடியது.

வளர்ச்சியடையாத நாடுகளை 'ஏழை நாடுகள்' (Poor countries) என 'பின்தங்கிய நாடுகள்' (Backward nations) எனவும் வழங்குகின்றனர். 'ஏழை நாடுகள்' என்ற சொல் 'வளர்ச்சியடைய முடியாத' என்ற சொல்லைப் போன்று இயக்க நிலையில்லாததாகும். ஆயினும், மேயர், (Meier), பால்டுவின் (Baldwin) பார்பரா வார்டு, (Barbara Ward) போன்றவர்கள் 'வளர்ச்சியடையாத நாடுகள்' என்ற சொல்லிற்குப் பதிலாக 'ஏழை நாடுகள்' என்ற சொல்லையே பயன்படுத்துகின்றனர். குன்னர் மிர்டால் (Gunnar Myrdal) இயக்கநிலை கொண்ட 'வளர்ச்சியடையாத' என்ற பதத்தையே பயன்படுத்துகின்றார். வளர்ச்சியடைய வேண்டுமென்ற எண்ணத்தோடு 'வளர்ச்சியடையாத' என்ற சொல்லானது பயன்படுத்தப்படுவதாக அவர் அறிவுறுத்துகின்றார். மிகச் சமீபகாலத்தில் 'வளர்ச்சியடையாத' என்ற சொல்லிற்குப் பதிலாக 'வளர்ச்சியடைந்து வரும்' (Developing) என்ற சொல்லும் வழக்கில் வந்து கொண்டிருக்கின்றது. ஒரே நிலையை உணர்த்தப் பல ஆசிரியர்கள் வெவ்வேறு சொற்களைப் பயன்படுத்துகின்றார்கள் எனலாம்.

## 'வளர்ச்சியடையாத' நிலையை நிர்ணயிக்கின்ற காரணிகள்

முன்னேற்றமடையாத நிலையைப் பல வகைகளில் வரையறை செய்யலாம்: வறிய நிலைகளைக் கொண்டும், அறியாமையைக் கொண்டும், வளர்ச்சியடையாத மருத்துவ வசதிகளைக் கொண்டும் குறிப்பிடலாம். நிர்வாகத் திறமையின்மையாலும், தேசியவருவாய் சரியாகப் பங்கிடப்படாத நிலையாலும், தாழ்வான சமுதாய அமைப்பு முறைகளாலும் பொருளாதாரம் முன்னேற்றமடையாத நிலை இருக்கின்றது. எந்த ஒரு தனி இலக்கணத்தின் மூலமாகவும் 'வளர்ச்சியடையாத' பொருளாதாரத்தின் எல்லா இயல்புகளையும் உணர்த்த இயலாது. வளர்ச்சியடையாத நிலையைக் குறிப்பிடு கின்றவை பலவாகும்,

'வளர்ச்சியடையாத' நிலையை ஒரு நாட்டின் நில அளவிற்கும் மக்கள்தொகை விகிதத்திற்கும் ஒப்பிட்டு அளப்பதுண்டு. பெரும் பாலான வளர்ச்சியடையாத நாடுகள் அதிக மக்கள்தொகையைக் கொண்டுள்ளன என்றாலும், எல்லா வளர்ச்சியடையாத நாடுகளும் இந் நிலையைக் கொண்டுள்ளன எனக் கூறமுடியாது. ஆப்ரிக்கா, இலத்தீன் அமெரிக்கா, பர்மா போன்ற நாடுகளில் இயற்கை வளங்களைப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியைப் பெறத் தேவையான மக்கள்தொகை குறைவாகவே உள்ளது. ஆனால், சீனா, இந்தியா, பாகிஸ்தான், மலேயா மற்றும் பல தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நில அளவிலும் மக்கள்தொகை விகிதம் மிக அதிகமாக உள்ளது. எனவே, நில அளவையும் மக்கள்தொகையை யும் ஒப்பிட்டு, 'வளர்ச்சியடையாத' நிலையை உண்மையாக உணர்த்த முடியாது.

இரண்டாவதாக, ஒரு நாட்டின் வளராத பொருளாதார நிலையை மொத்தத் தேசிய ஆக்கத்தில் தொழில் ஆக்கம் எந்த அள விற்கு அமைந்திருக்கின்றது என்பதைக்கொண்டும் அறியலாம். தொழில் உற்பத்தியின் அளவு தேசிய மொத்தப் பொருளின் அள வில் குறைவானதாக இருந்தால், அப் பொருளாதாரம் வளர்ச்சி யடையாதது என்று கூறலாம். அதைப் போன்றே மொத்த மக்கள் தொகையில் அதிக அளவு மக்கள் தொழில்களைச் சார்ந்தில்லாமல் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தால் அந் நிலையும் வளர்ச்சியடை யாத பொருளாதார நிலையைக் குறிப்பிடுவதேயாகும். இதில் நாம் கருத்திற் கொள்ள வேண்டியது, வளர்ந்து வருகின்ற ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பலவகைப்பட்ட தொழில் களை நிறுவுதல் அவசியமானதாகும். ஆனால், வளர்ச்சி பெற்ற ஒருநாட்டில்தான் தொழில்களைத் தோற்றுவித்தலும் எளிதான தாகும். வளர்ச்சிக்குத் தொழில் மயமாக்குதல் 'இன்றியமை

யாதது.' ஆனால், தொழில்களைத் தொடங்குவதோ பொருளாதார முன்னேற்றத்தின் முதல் சில நிலைகளில் கடினமானதுமாகும்.

மூன்றாவதாக, 'வளர்ச்சியடையாத' நிலையை உணர்த்துவது ஒரு நாட்டில் தனியொருவருக்குக் கிடைக்கக் கூடிய குறைந்த அளவு மூலதனமாகும். டாக்டர் ஆஸ்கார் லாங்கே (Dr. Oskar Lange) குறிப்பிடுவதாவது: "வளர்ச்சியடையாப் பொருளாதாரத்தில், மக்கள்தொகை புதிய உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ளப் போதுமான மூலதனப் பொருள்கள் இருப்பதில்லை"[1]

பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse), 'வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிட்டு நோக்கும்போது, வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள்தொகையையும், இயற்கை வளங்களையும் கருதுமிடத்து மூலதனம் பற்றாக்குறை நிலையில் உள்ளதாகவே கூறலாம்' என்கின்றார். வளர்ச்சிக் குறைவுக்கு இம் மூலதனப் பற்றாக்குறை நிலையைத் தவிர, சமுதாய—பொருளாதார நிலைகளும் சில காரணங்களாக இருக்கின்றன. அவற்றோடு அரசியல் நிலைகள்; சமுதாயப் பழக்கவழக்கங்கள், சரித்திர மாறுதல்கள் ஆகியவற்றாலும் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது. இன்றைய நிலையில் வங்காள தேசத்தில் (Bangla Desh) நடைபெறும் சுதந்திரப் போரைச் சரித்திர மாறுதல் என்று அழைப்பதா? அரசியல் வேறுபாடு எனக் கூறுவதா? அது சுதந்திரப் போர், உள் நாட்டுப் போர் என்று பல பெயர்களில் சொல்லப்பட்டாலும், இப் போர் பாகிஸ்தான், வங்காள தேசம் இரண்டின் பொருளாதார முன்னேற்றத்தையும் பெருமளவு பாதிக்கும். சமுதாய உணர்வு, அரசியல் கருத்துவேறுபாடுகளைத் தோற்றுவித்து, சரித்திரவிபத்துகளை விளைவிப்பது, அதனால் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படுவதும் தெரிந்ததே.

பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவை மூலதனம். ஆனால், மூலதனம் மட்டும் பொருளாதார முன்னேற்றத்தைத் தந்துவிடாது. வளர்ச்சியடையாத பொருளாதாரத்திற்குப் பிற காரணங்களும் உள்ளன. டாக்டர். யூஜீன்ஸ்டேலே (Dr. Eugene Staley), பழைய உற்பத்தி முறைகளாலும், சமுதாய அமைப்பு முறைகளாலும் நிரந்தரமான வறியநிலை பல நாடுகளில் அமைந்திருப்பதை விளக்குகின்றார்.[2] இந்திய முதல் ஐந்தாண்டுத்திட்ட அறிக்கையும் இவ்வாறே குறிப்பிட்டது. வளர்ச்சியடையாத நாடுகளில் ஒரு புறத்தில் மனித சக்தி முற்றிலுமாகப் பயன்படுத்தப்

[1]Essays on Economic Planning, p 33.
[2]The Future of Underdeveloped Countries, p. 13.

படுவதில்லை; மறு புறத்தில் இயற்கை வளங்களும் சரியாகப் பயன்படுத்தப் படுவதில்லை. சமுதாய—பொருளாதார நிலைகளா லும் பழமையான உற்பத்தி முறைகளாலும் பொருளாதார வளர்ச்சி தடைப் படுகின்றது.

எனவே, வளர்ச்சியடையாத நாடுகளில் இயற்கை வளங்கள் சிறப்பாகப் பயன் படுத்தப் படுவதில்லை; அதோடு மூலதனப் பொருட்களின் பற்றுக்குறை; பழைய உற்பத்தி முறைகள்; குறை யுடைய சமுதாய—பொருளாதார அமைப்பு முறைகள் ஆகியவை யும் இருக்கின்றன. பார்பாரா வார்டு (Barbara Ward) கூறுவது போல, வறிய நிலையை எளிய வகையில் உணர்த்துவது மக்களின் சராசரி வருவாயாகிய தலா வருவாய் ஆகும். முன்னேற்றமடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது முன்னேறி வருகின்ற நாடுகளில் தலா வருவாய் மிகக் குறைவாகவே உள்ளது. பாயர் (Bauer), யாமி (Yamey) போன்றவர்கள், உண்மைத்தலா வருவாயானது வட அமெரிக்கா, மேற்கு ஐரோப்பா, ஆஸ்திரேலியா போன்ற நாடு களில் இருப்பதை விட வளர்ச்சியடையாத நாடுகளில் குறைந்ததாக இருக்கின்றது என்று குறிக்கின்றனர்.[1] தற்போது, அமெரிக்கா வின் சராசரி தலா வருவாய் 2000 டாலருக்கு மேல் ஆகும்; 1500 மில்லியன் மக்கள் வசிக்கின்ற உலகின் 66 நாடுகளில் சராசரி தலா வருவாய் ஆண்டொன்றிற்கு 200 டாலர்கட்கும் குறைவாக உள்ளது. இந் நாடுகளை உறுதியாக வளர்ச்சியடையாத நாடுகள் எனலாம். வளர்ச்சியடையாத பொருளாதார நிலை என்னும் போது பண்பாடு, நாகரிகம் போன்றவற்றைக் கருதுவதில்லை; பொருளாதார நிலை ஒன்றே கருதப்படும். இதனைப் பேராசிரியர் ஹிக்கின்ஸ் (Prof. Higgins) குறிப்பாகக் கூறிப் போகிறார்.

ஏழை நாடுகளின் அடிப்படை இயல்புகளை மேயர் (Meier) பால்டுவின் (Baldwin) இருவரும் ஆறுவகைகளில் தருகின்றனர்:[2]

(1) ஒரு ஏழை நாடு அடிப்படை உற்பத்தி கொண்டதாக இருக்கும். (உதாரணமாக பல ஏழை நாடுகள் அடிப்படைத் தொழி லாகிய வேளாண்மைத் தொழிலின் மூலமாகவே தேசிய ஆக்கத் தின் பெரும் பகுதியைப் பெருகின்றன.)

(2) அது மக்கள்தொகைப் பெருக்கம் அதிகம் கொண்டதாக இருக்கும்.

[1]P. T. Bauer and B. S. Yamey, Economics of underdeveloped countries p. 3

[2]Meier and Baldwin - Economic Development - Theory, History, Policy - p. 277

*(3)* அந் நாட்டில் முற்றிலும் பயன்படுத்தப்படாத இயற்கை வளங்கள் அமைந்திருக்கும்.

*(4)* அது பொருளாதார ரீதியில் தாழ்வான மக்கள்தொகையைக் கொண்டிருக்கும்.

*(5)* அந்நாடு மூலதனப் பற்றுக்குறை கொண்ட நாடாக இருக்கும்.

*(6)* அந்த நாடு அயல் நாட்டு வாணிபச் சார்பு கொண்டதாக இருக்கும்.

பால் ஹாஃப்மேன் (Paul Hoffman) வளர்ச்சியடையாத நாடுகளில் உள்ள நிலைகளைப்பற்றி பின்வருமாறு வருணிக்கின்றார் :[1]

"வளர்ச்சியடையாத நாட்டை எவராலும் பார்த்தவுடனேயே புரிந்து கொள்ள இயலும். அந் நாட்டில் வறிய நிலை அமைந்திருக்கும். நகர்ப்புறங்களில் இரவலர்கள் இருப்பார்கள்; கிராமப்புறங்களில் பராமரிப்பு நிலைக்குத் தாழ்வான வாழ்வையே மக்கள் பெற்றிருப்பார்கள். அந்த நாட்டில் தொழில் ஆலைகள் போதுமான எண்ணிக்கையில் இருக்கமாட்டா; அவ்வாலைகட்குத் தேவையான இயக்கச்சக்திகளும் பற்று நிலையிலேயே இருக்கும்; சாலைகளும், இருப்புப் பாதைப் போக்குவரத்தும் சிறப்பாக வளர்ந்திருக்க மாட்டா; அரசியல் பணிகள் போதுமானதாக இருப்பதில்லை; செய்தித் தொடர்பு வசதிகளும் வளர்ந்திருப்பதில்லை; குறைந்த அளவு மருத்துவ மனைகளும், உயர்கல்வி நிலையங்களும் இருக்கும். பெரும் பகுதி மக்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாத நிலை இருக்கும். பொதுவாக வறிய நிலை நிலவுகின்றதென்றாலும், செல்வமானது ஒரு சிலரிடம் குவிந்து அவர்கள் ஆடம்பர வாழ்க்கை வாழ்வர். வளராத நிலையில் வங்கிகள் அமைந்துள்ளன; சிறிய கடன்களை அதிக அளவு லேவாதேவிக்காரர்களிடமிருந்து பெற வேண்டிய நிலை நிலவுகின்றது. அந்நாட்டின் ஏற்றுமதிப் பொருட்களில் கனிப் பொருட்களும், கச்சாப் பொருட்களும், பழங்களுமே பெரிதாயிருக்கும்; குறைந்த அளவிற்குச் சில கைத்தொழில் ஆடம்பரப் பொருட்களும் ஏற்றுமதி செய்யப் படுகின்றன. அதிக அளவில் கச்சாப் பொருட்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்கின்ற நிறுவனங்கள் அங்கே அயல் நாட்டு நிறுவனங்களாகவே அமைந்துள்ளன."

இனி, இந்தியாவைப் பொறுத்தவரை வளர்ந்து வரும் நாடுகளின் இந்த இயல்புகள் எவ்வளவு பொருந்தும் என்று ஆராய்வோம்.

[1]Stephen Enke - Economics For Development, p. 16

**1. வேளாண்மை—முக்கியத் தொழில்**

வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள்தொகையில் மூன்றில் இருபகுதிக்கு மேல் கிராமப் பகுதிகளில் வாழ்கின்றனர்; வேளாண்மையே அவர்களின் முக்கியத் தொழிலாகும். வளராத நாடுகளில் அதிக மக்கள்தொகை உழுதல் தொழிலில் ஈடுபட்டு இருப்பதால் தான் வேளாண்மை விரைவான முன்னேற்றத்தைப் பெறவில்லை. குறைந்த உற்பத்திக்கும் இதுவே காரணம். தனியொருவரின் உற்பத்தியளவு குறைவாக இருப்பதற்கும் இந்நிலையே காரணம், தரமான உழைப்பு அங்கு அமைவதில்லை; உற்பத்தியின் அளவும், தரமும்கூட இதனால் பாதிக்கப் படுகின்றன. வளர்ச்சியடைந்த நாடுகளில் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கின்ற மக்களைக் காட்டிலும் நான்கு மடங்குகட்கும் அதிகமான மக்கள் வளர்ச்சியடையா நாடுகளில் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர். பாகிஸ்தான் தாய்லாந்து, மலேயா போன்ற நாடுகளில் 80 சதவீதத்திற்கு மேல் மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர். இவை வளர்ச்சியடையாத நாடுகளாகும். முன்னேறிய நாடுகளாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளில் வேளாண்மையில் அமைந்திருக்கும் மக்கள்தொகையின் சதவீதம் முறையே 19, 24, 25 ஆகும். வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்திக்கு உதவாத மக்களும் வேளாண்மையில் உள்ளனர். வேளாண்மையிலுள்ள தேவைக்கு அதிகமான மக்கள்தொகையை நீக்கி விட்டால் உற்பத்தியில் குறைவுஏற்படாது. அதே அளவு உற்பத்தியைப் பெற இயலும். இதை, 'மறைந்துள்ள வேலையின்மை' எனலாம்.

அதிக மக்கள்தொகை வேளாண்மையில் அமைந்துள்ளதாலேயே வறிய நிலை நிலவுகின்றது. வேளாண்மைச் சாகுபடியில் முன்னேற்றமடையாத கருவிகள் பயன்படுத்தப் படுகின்றன; பழைய கால உற்பத்தி முறைகளும் அங்கு கைக்கொள்ளப் படுகின்றன. இதன் விளைவாக குறைந்த அளவு உற்பத்தியையே பெற்று, விவசாயிகள் பிழைப்பை நடத்தும் நிலையிலேயே வாழுகின்றனர். உற்பத்தியும் பெரும்பாலும் தன்னிறைவுக்காகச் செய்யப் படுகின்றதேயன்றி, சந்தைகளுக்காக செய்யப் படுவதில்லை. இவ்வித முன்னேற்றமடையாத நாடுகள் உணவுப் பொருட்களையும் கச்சாப் பொருட்களையுமே உற்பத்தி செய்கின்றன; சில கனிப் பொருட்கள் அல்லது மூலப்பொருட்கள் வெட்டி எடுக்கப்பட்டு பெருமளவு அயல்நாடுகட்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன. உதாரணமாக, இலங்கையில் தேயிலை, ரப்பர், தேங்காய்ப் பொருட்கள் உற்பத்தியே பெரிதும் செய்கிறார்கள். பாகிஸ்தான், பருத்தி, சணல் உற்பத்தியிலும்; மலேயா, ரப்பர், தகரம், எண்ணெய் உற்பத்தி

யிலும் ; இந்தோனேசியா, ரப்பர், எண்ணெய், தகரம் உற்பத்தியிலும் அதிக அளவிற்கு ஈடுபட்டுள்ளன. இவ்வகைப் பொருளாதாரத்தின் அடிப்படைப் பிரிவோடு, வளர்ச்சியடையாத, எண்ணிக்கையிற் குறைந்த நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யக்கூடிய சிறு தொழில்கள், பொருளாதாரத்தின் இரண்டாவது பிரிவில் இருக்கின்றன. பொருளாதாரத்தின் மூன்றுவது பிரிவில் அமைந்துள்ள போக்குவரத்து, வாணிபம், வங்கித்துறை, காப்புறுதி நிறுவனத்துறை ஆகியவற்றிலும் முன்னேற்றமடைந்த நிலை அமைந்திருக்கவில்லை.

நம் நாட்டில் 72% மக்கள் வேளாண்மையைச் சார்ந்து வாழ்கின்றனர். இந்தியாவின் மொத்த வருவாயில் 50%க்கு மேல் வேளாண்மை மூலம் கிடைக்கின்றது. இந்தியாவிலும் கூட உணவு உற்பத்தியும், கச்சாப் பொருள் உற்பத்தியும் மொத்தத் தேசிய உற்பத்தியில் அதிக அளவு இருக்கின்றன. உழைக்கும் மக்களில் பலரும் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர். பல ஆசிய நாடுகள், ஆப்ரிக்கா, மத்திய கிழக்கு நாடுகளில் மூன்றில் இரண்டுபகுதி முதல் ஐந்தில் நான்கு பகுதிவரை மக்கள் வேளாண்மையை நம்பி வாழ்கின்றனர். தொழிற் பண்டங்களின் ஆக்கம் நாட்டின் மொத்த ஆக்கத்தில் குறைந்த விகிதத்திலேயே ஒரு வளர்ச்சியடையாத நாட்டில் அமைந்துள்ளது. இந்தியாவில் வேளாண்மை அடிப்படைத் தொழிலாக, ஆதாரத் தொழிலாக இருக்கின்றதெனக் கூறுகின்றமைக்குக் காரணம் தேசிய வருவாயில் 50% மேல் வேளாண்மைத் துறையினின்றும் கிடைக்கின்றது. நம் நாட்டில் பத்தில் எழுவர் வேளாண்மையைச் செய்து வருகின்றனர். வேளாண்மையில் தனியொருவருக்கான உற்பத்திக் குறைவாக இருப்பதால், இந்தியாவில் வேளாண்மை முன்னேற்றமடையாத தொழில் எனலாம். 1961 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி மக்கள்தொகையில் 82% கிராமப்பகுதிகளில் வசித்தனர் ; நகர்ப்புறங்களில் வசித்தவர்கள் 18% ஆவர்.

## 2. பொதுவான வறிய நிலை

வளர்ச்சியடையாத நாடுகளில் வறுமையைக் குறைவான சராசரித் தலா வருமானத்தின் மூலமாகவும், மக்களின் தாழ்ந்த வாழ்க்கைத் தரத்தாலும் அறிந்து கொள்ளலாம். இவ்வித நாடுகளில் உணவே முக்கிய நுகர்வாக இருக்கும் ; வருவாயில் சுமார் 70% உணவிற்காகச் செலவிடப்படுகின்றது. பொருளாதார வளமிக்க நாடுகளில் உணவிற்காக வருவாயில் சுமார் 20% மட்டுமே செலவிடப் படுகின்றது. முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் சத்துள்ள உணவுகளை மக்கள் உட்கொள்வதில்லை. முட்டை,

மாமிசம், மீன், பால் ஆகிய உணவுப் பொருட்கள் குறைந்த அள விலேயே அவர்களால் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. அவர்கள் உட்கொள்ளும் உணவின் சராசரி கலோரியின் குறியளவு 2000 என்ற அளவைத் தாண்டுவதில்லை ; வளர்ச்சியடைந்த நாடுகளில் இந்த அளவு 3000 என்ற அளவிற்கு அதிகமாகவே அமைந்திருக் கின்றது. வளர்ந்துவரும் நாடுகளில் குடியிருப்பு வசதிகள் சிறப்பாக அமைந்திருப்பதில்லை ; உடுக்கும் உடையும் குறைந்த அளவே. சுகா தாரக் குறைவான இடங்களில் மக்கள் வசிக்கின்றனர் ; தேவை யான மருத்துவ வசதிகளும் அவர்கட்குக் கிடைப்பதில்லை. ஆரோக்கிய நிலையும், கல்வியும் மிகக்குறைவு. உண்ண உணவு, இருக்க இடம், உடுக்க உடைமுதலியன மக்களுக்குப் போதுமான அளவு கிடைப்பதில்லை. வறுமையே வளர்ச்சியடையாத நாட்டில் ஒரு நோயாக அமைந்து, துன்பச் சுழலில் பொருளாதாரம் சிக்கு கின்றது. உலகப் பொருளாதார நிலைகளில் வளர்ச்சியடையாத நாடுகள் சேரிகளாக உள்ளன என்று பேராசிரியர். ஏ. கே. கெயின் கிராஸ் (Prof. A. K. Cairn Cross) [1] உரைக்கின்றார். இந்தியாவின் மக்கள் போதுமான வருவாயின்றி வறுமையால் வாடுகின்றனர். நம் நாட்டில் 1968-69 இல் தலா வருவாயானது ரூ. 546 என நான் காவது ஐந்தாண்டுத்திட்ட அறிக்கை குறிப்பிடுகின்றது. இது இங்கிலாந்தின் சராசரி தலா வருவாயில் பதினெட்டில் ஒரு பங்காகும். இதனால் மக்களின் வாழ்க்கைத் தரம் மிகத் தாழ் வானதாகவே இருக்கின்றது. பர்மாவையும், உகாண்டாவையும் தவிர்த்து விட்டால் உலக நாடுகளிலேயே மிகக் குறைந்த தலா வருமானத்தைப் பெற்று வரும் நாடு இந்தியா. நம் நாட்டின் தலா வருமானத்தை விட அமெரிக்காவிலும், கனடாவிலும் தலா வருமானம் முறையே 30 மடங்குகள் 20 மடங்குகள் அதிகமாக உள்ளன. வளர்ச்சியடையாத நாடுகட்கிடையே ஒப்பிட்டு நோக் கினால் கூட இந்தியா மிகக் குறைவான தலா வருமானத்தையே கொண்டுள்ளது. இஸ்ரேலின் தலா வருமானத்தில் எட்டில் ஒரு பகுதியும், மலேயாவின் தலா வருமானத்தில் ஐந்தில் ஒரு பகுதியும், ஜப்பானின் தலா வருமானத்தில் மூன்றில் ஒரு பகுதியும், இலங்கை யின் தலா வருமானத்தில் இரண்டில் ஒரு பகுதியையும் இன்று நாம் இந்தியாவின் தலா வருமானப் பகுதியாகும்.

### 3. பயன்படுத்தப்படாத இயற்கைவளங்கள்

மனித சக்தியையும் மற்றைய இயற்கைவளங்களையும் முற்றிலும் பயன்படுத்தினால் தான் நாடு செழிப்படையும். நம் நாட்டிலுள்ள மலைவளம் நிலவளம், நீர்வளம், கனிவளம், காட்டுவளம் போன்றவற்றைச் சிறப்பாக ஆக்கத்திற்குப்

[1] A. K. Cairn Cross, Factors in Economic Development, p. 15

பயன்படுத்தினால்தான் விரைவான பொருளாதார வளர்ச்சியை நாம் பெற இயலும். வளர்ச்சியடையாத நாடுகளில் இயற்கை வளங்கள் பயன்படுத்தப் படுவதில்லை அல்லது சரியாகப் பயன்படுத்தப்படுவதில்லை என்று சொல்லப் படுவதுண்டு. இயற்கை வளங்கள் குறைந்த நாடு என எந்த ஒருநாட்டையும் குறிக்க இயலாது. ஏனெனில் இயற்கை வளங்கள் புதிதாகக் கண்டு பிடிக்கப்படலாம் அல்லது இயற்கை வளங்களில் குறைந்த நாடுகள்கூட பிற முறைகளின் மூலமாக விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறலாம். சான்றாக அமைபவை இங்கிலாந்தும், ஜப்பானும் ஆகும். இங்கிலாந்து தன்னுடைய பொருளாதார வளர்ச்சியின் முதற் சில படிகளில் அதிக அளவிற்குத் தன் காலனி ஆதிக்கத்தின் கீழிருந்த நாடுகளின் இயற்கை வளங்களைப் பயன் படுத்தி வெற்றிகண்டது. அதிக வளங்களைக் கொண்டில்லாத ஜப்பான் இன்று முன்னேற்றமடைந்த அமெரிக்கா போன்ற நாடு களின் வளர்ச்சி வீதத்தைக் காட்டிலும் அதிக உயர்வான வளர்ச்சி வீதத்தைப் பெற்றுவருகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளை இயற்கை வளங்களில் குறைந்தவை என்று குறிப்பிடுவதைவிட அமைந்திருக்கும் வளங்களை அறியாதவை எனவும், அவ்வளங்களைத் தொழில் நுட்பத்தோடு உற்பத்திக்குப் பயன்படுத்தாத நாடுகள் எனவும் சிலர் கூறுகின்றனர். கனி-வளங்களைப் புதிதாகக் கண்டு பிடிக்கலாம்; வளமற்ற நிலங்களையும் வளமான நிலங்களாக்கலாம்.

பொதுவாகக் கூறுமிடத்து வளர்ச்சியடையாத நாடுகள் நிலம், நீர், மலை, வனம், கனி, இயக்கச்சக்தி வளங்களில் குறைந்தவை எனக் கூறமுடியாது. உதாரணமாக இந்தியாவில் சாகுபடி செய்ய ஏற்ற தரிசு நிலங்கள் 90 மில்லியன் ஏக்கர்கள் இருக்கின்றன. 41 மில்லியன் கிலோ வாட் நீர்மின் சக்தியை நாம் பெற்றிருந்தாலும் அதில் 10%மட்டுமே பயன்படுத்தி வருகின்றோம். இதைப் போன்ற உலக நீர் மின்சக்தி உற்பத்தியில் 44% கொண்ட ஆப்ரிக்கா, அதில் 0·1% மட்டுமே பயன்படுத்துகின்றது. வளர்ச்சி யடையாத நாடுகளில் தாதுப் பொருட்களின் இருப்பும் கணிச மாக அமைந்துள்ளது. ஆப்ரிக்காவில் தங்கம், பாக்சைட், தகரம், தாமிரம் போன்றவை அதிக அளவில் கிடைக்கின்றன. ஆசியாவில் பெட்ரோலியம், இரும்பு, பாக்சைட், தகரம், மைக்கா, மாங்கனீசு போன்ற தாதுப் பொருட்கள் எடுக்கப்படுகின்றன. இலத்தீன் அமெரிக்காவிலும் இரும்பு, பெட்ரோலியம், தாமிரம், துத்தநாகம் போன்றவை கிடைக்கின்றன. தென் அமெரிக்காவிலும், ஆப்பிரிக் காவிலும் உள்ள வனவளத்தை முற்றிலும் அவர்களால் பெற முடியவில்லை.

வளர்ச்சியடையாத நாடுகளில் இயற்கை வளங்கள் அமைந் துள்ளன ; அவை பயன்படுத்தப்படுவதில்லை அல்லது முழுதும்

பயன்படுத்தப்படுவதில்லை, அல்லது தவறாகப் பயன்படுத்தப்படு கின்றன. அதற்குக் காரணம் அவ்வளங்களைக் கண்டுபிடிக்காமை, அவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தத் தெரியாமை, தொழில் நுண்ணறிவு முன்னேறாமை, பரந்த அங்காடி இல்லாமை, மூலதனப் பற்றாக்குறை உள்ளமை ஆகியவையாகும்.

4. இரட்டைப் பொருளாதாரம்

பல வளர்ச்சியடையாத நாடுகள் இருநிலைப் பொருளாதாரத் தையே பெற்றுள்ளன. ஒன்று, சந்தைப் பொருளாதாரம்; (Market Economy). மற்றொன்று, பராமரிப்புப் பொருளாதாரம் (Subsistence Economy) சந்தைப் பொருளாதாரம் உற்பத்தி இடத் தையும், அதைச் சூழ்ந்துள்ள சில நகரங்களையும் குறிப்பதாகும். பராமரிப்புப் பொருளாதரம் கிராமப் பகுதிகளை மட்டுமே கொண்டதாகும். முதல் சந்தை வளர்ச்சியடைந்தது; பின்னது வளர்ச்சியடையாதது. நகர்ப் புறங்களில் அமைந்துள்ள சந்தைப் பொருளாதாரம் புதுமையானது, வாழ்வின் எல்லா வசதிகளையும் கொண்டது. அங்குப் பள்ளிகள், கல்லூரிகள், திரைப்பட அரங்கு கள் அமையப் பெற்றிருக்கும். வானொலிப் பெட்டிகள், கார்கள், பஸ்கள், தொலைபேசிகள், புகை வண்டிகள் யாவும் அப்பொருளா தாரத்தில் பயன்படுத்தப்படும். பெரிய கட்டடங்கள், அரசின் அலுவலகங்கள், வங்கிகள், தொழில் ஆலைகள், வாணிப நிலையங்கள் அங்குக் காணப்படுகின்றன. பராமரிப்புப் பொருளாதாரம் பின் தங்கிய ஒன்று. அது வேளாண்மையைச் சார்ந்ததாகும். தவிர, பல வளர்ச்சியடையாத நாடுகளில் அதிக முதலீட்டைக் கொண்ட பெட்ரோலியம், சுரங்கத் தொழில்களும் இருக்கின்றன; தோட்டப் பயிர்ப்பண்ணைகளும் உள்ளன. இத் தொழில்களின் உற்பத்திப் பொருட்களின் பெரும்பகுதி அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன. எடுத்துக்காட்டாக லிப்யா, வெனிசுலா போன்ற நாடுகளில் பெட்ரோலியம் எடுத்தல்; மத்திய ஆப்ரிக்காவில் தாமிர சுரங்கத் தொழில்; பொலிவியாவில் (Bolivia) தகரம், தென் ஆப்ரிக்காவில் தங்கம் எடுக்கும் தொழில்கள்; மலேயாவில் ரப்பர் பண்ணைகளையும், இலங்கையில் தேயிலைத் தோட்டப் பண்ணைகளை யும் குறிப்பிடலாம். இவற்றில் கூலிகளாகப் பணியாற்றுபவர்களின் வருமானத்தின் ஒரு பகுதி அயல் நாடுகளினின்றும் இறக்குமதி செய்கின்ற நுகர்வுப் பொருட்களை வாங்க அவர்களால் செலவிடப் படுகின்றது. இவர்களின் வாழ்க்கைத்தரமானது வேளாண்மைத் துறையில் அமைந்திருப்பவர்களின் வாழ்க்கைத் தரத்தினின்றும் வேறுபடுகின்றது; அந்நிய உரிமையாளர்களால் நடத்தப் பெறும் இவ்வகைச் சுரங்கத் தொழில்கள், தோட்டப் பண்ணைகள் வளர்ச்சி யடையாத பொருளாதாரங்களில் ஆழமான, மாறாத தழும்பை

ஏற்படுத்தி விடுவதாக ஒரு ஆசிரியர் குறிப்பிடுகின்றார். நம் இந்திய நாட்டைப் பொறுத்த அளவில் இங்குள்ள எண்ணிக்கையிற் குறைந்த ஒரு சில அந்நிய உடைமை உற்பத்தி நிறுவனங்களால் நம் நாட்டுப் பொருளாதாரம் பாதிக்கப்படுகின்றது எனக் கூறமுடியாது. அந்நிய முதலீட்டாளர்கள், வளரும் நாடுகளின் வளங்களைப் பயன்படுத்திக் கிடைத்த அதிக அளவு இலாபத்தைத் தங்கள் நாடுகட்குக் கொண்டு செல்கின்றனர் ; வளரும் நாடுகளின் வளர்ச்சிக்கு அந்த இலாபத் தொகைகள் முதலீடாக்கப்படுவதில்லை. மேலும் அந்நிய முதலீட்டாளர்கள் தாதுப்பொருட்களையும், கச்சாப் பொருட்களையும் உற்பத்தி செய்வது தாங்கள் இலாபம் பெற வேண்டும் என்ற நோக்கோடு ஆகும் ; தங்களுடைய நாடுகளின் தொழில் முன்னேற்றத்தைக் கருதியும் அவர்கள் அவ்வகை உற்பத்திகளை மேற்கொள்கின்றனர். இவ்வகைக் காரணங்களால் வளர்ச்சியடையாத நாடுகள் பொருளாதார ரீதியில் பின்தங்கிய நாடுகளாகவே உள்ளன.

## 5. மக்கட் பெருக்கம்

வளர்ச்சியடையாத நர்டுகட்கிடையே கூட மக்கட் பெருக்க நிலைகளில் வேறுபாடுகள் உள்ளன. இவ்வேறுபாடுகள் மக்கள் தொகையின் அளவு, அடர்த்தி, வயது நிலைகள் ஆகியவற்றில் இருக்கின்றன. குறைந்த அளவு தலா வருவாயைப் பெறுகின்ற இந்நாடுகளில் மூலதனத்திரட்சி குறைவாகவே ஏற்படுகின்றது. மேலும் மேலும் பெருகுகின்ற மக்களைக் காப்பது கடினமாகின்றது. முன்னேற்றமடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகளால் பெருகிய அதிக ஆக்கத்தை, பெருகுகின்ற மக்கள்தொகை குறைத்து விடுகிறது. அதன் விளைவால் பெரும்பகுதி, மக்களின் வாழ்க்கைத் தரம் தாழ்ந்த நிலையிலேயே உள்ளது. பெரும்பாலான வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு விகிதம் அதிகமாக உள்ளது; இறப்பு விகிதம் அதிகமாக இருந்தாலும் படிப்படியாகக் குறைந்து வருகின்றது. அவற்றில் பல நாடுகளில் பிறப்பு விகிதம் ஆண்டொன்றிற்கு ஆயிரத்திற்கு 40 என்ற அளவில் அமைந்துள்ளது. சில நாடுகளில் பிறப்பு விகிதம் இதைக் காட்டிலும் அதிகமாகவே உள்ளது. உதாரணமாக மெக்ஸிகோ, வெனிசுலா நாடுகளில்பிறப்பு விகிதம் ஆண்டொன்றுக்கு ஆயிரத்திற்கு 47 ஆகவும்,கானாவில் 52 ஆவும், கினியாவில் 62 ஆகவும் உள்ளது. மருத்துவத்தில் கண்டுள்ள மாபெரும் முன்னேற்றத்தாலும், புதிய மருந்துகளின் கண்டுபிடிப்புகளாலும் இறப்பு விகிதமானது ஆண்டொன்றுக்கு ஆயிரத்திற்கு 18 என்று மிகக் குறைந்துள்ளது. இறப்புவிகிதம் குறைகின்ற நிலையாலும், இயற்கையாக பிறப்பு விகிதம் அதிகரிக்கின்றது. அதிக மக்கள்தொகைப் பெருக்கம் வேறொரு விளைவையும்

ஏற்படுத்துகிறது. மொத்த மக்கள்தொகையின் பெரும்பகுதி வயது குறைந்தவர்களாக இருப்பார்கள்; குறைந்த இறப்பு விகிதத்தால் முதியோரின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்கும். இப் பிரிவு மக்கள் தொகை நேரடியாக உற்பத்தியில் ஈடுபடுவதில்லை. ஈடுபடுகின்ற குறைந்த அளவு மக்கள் தொகையைச் சார்ந்து, உற்பத்திக்கு நேரடியாக உதவாத, உற்பத்தியில் ஈடுபடாத அதிக அளவு மக்கள் தொகையாக அமைந்துள்ளது. ஆசியா, ஆப்ரிக்கா, இலத்தீன் அமெரிக்கா போன்ற நாடுகளில் மொத்த மக்கள்தொகையில் சுமார் 40 சதவிகிதத்தினர் வயதில் 15 ஆண்டுகட்குக் குறைவானவர்கள் ஆவர்; ஆனால் இங்கிலாந்தில் மொத்த மக்கள்தொகையில் 2 சதவிகிதத்தினர்தான் 15 வயதுக்குட்பட்டவராவர். இந்நிலையால் வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்தி உயராமல் நுகர்ச்சி அதிகரிக்கின்றது. சராசரி ஆயுட்காலம் இந்தியாவில் 47 ஆண்டுகளெனவும் அமெரிக்காவில் 70 ஆண்டுகளெனவும் கணக்கிடப்பட்டுள்ளது. இது எதை உணர்த்துகின்றதென்றால் வேகமாகப் பெருகுகின்ற குழந்தைகளைப் பாதுகாக்கக் குறைந்த அளவு வயது வந்தவர்கள் மட்டுமே உள்ளனர் என்பதையாகும்.

1971-ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி இந்திய மக்கள் தொகை 54·7 கோடியாகும். கடந்த 10 ஆண்டுகளில் 24·5% மக்கள் தொகை பெருக்கம் ஏற்பட்டுள்ளது. சீனாவிற்கு அடுத்தபடியாக அதிக மக்கள் தொகையைக் கொண்ட நாடு இந்தியா. உலக மக்கள் தொகை 371 கோடியாகும். உலகின் மக்கள் தொகையில் இந்தியா சுமார் ஏழில் ஒரு பகுதியைக் கொண்டுள்ளது. குடும்ப நலத்திட்டங்களின் மூலமாக ஆண்டொன்றிற்கு ஆயிரத்திற்கு 39 ஆக இருக்கின்ற பிறப்பு விகிதத்தை ஆயிரத்திற்கு 25 ஆகக் குறைக்க முயன்று வருகின்றோம். நம் நாட்டின் உற்பத்திக் குறைவு, விலையுயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், தாழ்ந்த வாழ்க்கைத்தரம் எல்லாவற்றிற்கும் அதிக மக்கள்தொகைப் பெருக்கமே காரணமாகும்.

மக்கட்பெருக்கம் ஏற்படும் போது, விரைவான பொருளாதார வளர்ச்சியிருந்தால்தான் மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும் அல்லது மக்களின் வாழ்க்கைத்தரத்தைப் பழைய நிலையில் இருந்ததைப் போலாவது காக்கலாம். பெருகி வருகின்ற மக்கள் தொகையை இலாபகரமான தொழில்களில் ஈடுபடுத்தி தேசிய ஆக்கத்தின் அளவை அதிகரிக்க முயலவேண்டும்.

### 6. வேலையின்மைச் சிக்கல்

எல்லா வளர்ச்சியடையாத நாடுகளும் வேலையின்மைச் சிக்கலைக் கொண்டுள்ளன. இந்நாடுகளில் உற்பத்திக் காரணிகளில் முக்கியமானதாகிய உழைப்பு வீணடிக்கப் படுகின்றது. மக்கள் வளத்தைப் பயன்படுத்தி முன்னேற்றத்தைப்

பெறமுடியாமைக்குக் காரணம் குறைந்த அளவு மூலதனத் திரட்சி. வளர்ச்சியடையாத நாடுகளில் கிடைப்பருமை உள்ள உற்பத்திக் காரணி மூலதனம்; உழைப்பல்ல. முழுநேர வேலை யின்றி இருப்பவர்களும், பகுதி நேரம் வேலையின்றி இருப்பவர்களும் மிகுந்து வருகின்றனர். மறைந்துள்ள வேலையின்மையும் முன் னேறி வரும் நாடுகளில் இருக்கிறது. நம் நாட்டில் 70 % மேல் மக்கள் தொகை வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. இந்த 70 % வேளாண்மை மக்கள்தொகையினின்றும் 25 % முதல் 30 % நீக்கினாலும் கூட பழைய அளவு உற்பத்தியை வேளாண்மை யினின்றும் பெறலாம் என்பது சில பொருளியலாளர்களின் கூற்று. அதிக அளவு வேளாண்மையில் அமைந்துள்ள எச்ச மக்கள் தொகையை நீக்கி உற்பத்தியை மேற்கொண்டாலும் அதே அளவு உற்பத்தியைப் பெறலாம். பெருகிவரும் மக்களுக்குப் போதுமான வேலை வாய்ப்புக்கள் இல்லாத காரணத்தால் பெரும்பாலானோர் வேளாண்மையிலேயே ஈடுபடுகின்றனர். எடுத்துக்காட்டாக ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியைச் சாகுபடி செய்ய 4 பேர்கள் போது மென்றாலும், மக்கள் பெருக்கத்தால் 7 பேர்கள் அதே நிலத்தைச் சாகுபடி செய்கின்றனர். 7 பேர்கள் சாகுபடி செய்யும் போதும் உற் பத்தியின் அளவு 4 பேர்கள் சாகுபடி செய்த போது எந்த அளவிற்கு இருந்ததோ அந்த அளவிற்குத்தான் இருக்கும். 4 பேர்களுக்கு மேல் சாகுபடி செய்யும்போது இறுதி நிலை உற்பத்தி பூஜ்யம் என்ற நிலையைக் கொண்டுள்ளது. சில நிலைகளில் இறுதிநிலை உற்பத்தி எதிர் வீதத்திலும் மாறலாம்.

உற்பத்தியில் குறைவு ஏற்படாமல் வேளாண்மையில் ஈடு பட்டுள்ள அதிக மக்கள்தொகையை நீக்கிவிடலாம். இதன் மூலம் வேளாண்மைத் துறையில் தரமான உழைப்பைத் தந்து உற்பத்தியை உயர்த்தலாம்; அறிவியல் முறைச் சாகுபடி, பேரளவு உற்பத்தி முறை, இயந்திர முறை உற்பத்தி முதலியவற்றை மேற் கொள்ளலாம்.

வேளாண்மையில் பகுதி நேரம் வேலையின்மையும் அமைந் துள்ளது. சான்றாக, நம் நாட்டில் பலவகைப் பயிர்களைச் சாகுபடி செய்கின்றவர்களில் பலர் ஆண்டொன்றில் பல மாதங்கள் வேலையின்றி இருக்கின்றனர். வேளாண்மை ஒரு பருவ காலத் தொழில். அதனால்தான் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆண்டில் ஒரு சில மாதங்கள் மட்டுமே ஆக்கப் பணியாற்று கின்றனர்.

நகர்ப்புறங்களில் வேலையின்மைச் சிக்கல் இருக்கின்றதென்றால் கிராமப் புறங்களில் வேலையின்மை மறைந்துள்ள வேலையின்மை யாக அமைகின்றது.

வேளாண்மையில் உள்ள மறைந்துள்ள வேலையின்மையை நீக்கினால், வேளாண்மை உற்பத்தியின் அளவு உயரும். மேலும் நீக்கப்பட்ட மக்களை வேறு பொருளாதாரத் துறைகளின் உற்பத்திப் பணிகளில் ஈடுபடுத்தினால் தேசிய ஆக்கமும் உயரும். தலா வருவாய் அதிகரிப்பால் சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் வகையுண்டு; வேலை வாய்ப்புக்கள் அங்கு தோன்றும். அதன் விளைவு அதிக ஆக்கமாகும்.

7. பின்தங்கிய பொருளாதாரம்

குறைந்த உழைக்குந்திறன், உற்பத்திக் காரணிகளின் இடம் பெயராத நிலை, தொழில்களிலும் வாணிபத்திலும் குறைந்த அளவு தனித் தேர்ச்சி, முன்னேற்ற மடையாத சமுதாய அமைப்புகள் ஆகிய யாவும் பின்தங்கிய பொருளாதாரத்தில் அமைந்துள்ளன. வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது வளர்ச்சியடையாத நாடுகளில் உழைப்பின் உற்பத்தித்திறன் குறைவாக உள்ளது, உழைப்பாளர்களின் வறிய நிலையே உற்பத்தித்திறன் குறைவாக உள்ளமைக்குக் காரணம். சத்துள்ள உணவின்மையாலும், சுகாதாரக் குறைவாலும், கல்வியறிவு இன்மையாலும், போதிய பயிற்சியின்மையாலும், வேலைகட்கிடையே பெயர்ச்சியின்மையாலும், உற்பத்தித்திறன் பாதிக்கப் படுகின்றது. சாதி முறைகளாலும், இணைந்த குடும்பமுறைகளாலும் வேலைக்களுக்கிடையே பெயர்ச்சியின்மை உள்ளது. சில பண்பாட்டு, உளவியல் காரணங்களும் அங்கு அமைந்துள்ளன. கூலி நிர்ணயத்தில், உழைப்பின் அளிப்பு இக்காரணங்களால் எந்த அளவிற்கு இருக்கும் என உறுதியாகக் கூற முடியாது. பல வளர்ச்சியடையாத நாடுகளில் சில பணிகள் குறிப்பிட்ட மதத்தினராலோ, இனத்தினராலோ அல்லது சாதியினராலோ செய்யப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, இலத்தீன் அமெரிக்காவில் துணி உற்பத்தியைச் செய்பவர்கள் பெரும்பாலும் பெண்களேயாவர். இந்தியாவில் காவல் காப்பதைத் தொழிலாகக் கொண்டவர்கள் கூர்க்கா (Gurkha) என்ற இனத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர். டாக்டர் ஸ்டீபென் எங்க் (Dr. Stephen Enke), குறிப்பிடுவது போல வளர்ச்சியடையாத நாடுகளில் கலாச்சாரப் பண்பாடுகள் பொருளாதார ரீதியில் இலாபகரமாக அமைந்திருக்க மாட்டா.

வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் பழைமைவாதிகள், கல்வியறிவற்றவர்கள், மூட நம்பிக்கை கொண்டவர்கள்; எதையும் சரியாக அறியாதவர்கள், புரியாதவர்கள். இந்நிலைகளால் மக்கள் வளமானது முழுமையாக ஆக்கத்திற்குப் பயன்படுவதில்லை, மக்கள் தங்களின் வறியநிலைக்கு விதிப்பயனே காரணம், எல்லாம் இறைவனால் நடப்பவைகளே, எனத் தவறாகக் கருதுகின்றனர்.

மனிதனுடைய நடவடிக்கைகள் யாவும் கடவுளால் முன்னமேயே நிர்ணயிக்கப் படுகின்றதென மக்கள் கருதுகின்றனர். ஆற்றும் பணியால் ஒருவன் தனி அந்தஸ்தைப் பெருகிறுன். உடலுழைப்பை அதிகத் தேவையாகக் கொண்ட பணிகள் பெருமைதரும் பணி களாகக் கருதப்படுவதில்லை. ஒருவருடைய பணியாற்றும் திறமைக் கேற்றவாறு அவருக்கு முன்னேற்றம் கிட்டுவதில்லை, பதவியுயர்வு போன்றவற்றில் வயது, சாதி, நண்பர், உறவினர் போன்ற நிலைகள் அதிக செல்வாக்கு பெற்றிருக்கின்றன. மக்கள் பழக்கவழக்கங் களால்தான் செயல் படுகின்றுர்கள். பொருளாதாரத்தில் பண்ட மாற்றுமுறை பெருமளவு திகழ்கின்றது; பணப் பொருளாதாரம் குறைந்த அளவில் மட்டுமே செயல்படுகின்றது. மக்களிடம் புதுமையான கருத்துக்கள், நோக்குகள், செயல்கள் இல்லாத காரணத்தால் பொருளாதராம் வளர்ச்சியடையாத நிலையிலேயே உள்ளது.

கல்வியறிவு வளர்ச்சியாலும், விரைந்த பொருளாதார வளர்ச்சியைப் பெறலாம். நம் நாட்டில் 1961-இல் மக்கள் தொகையில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் வீதாச்சாரம் 24·03; 1971-இல் கணக்கெடுப்பின் படி இது 29·35% ஆக உயர்ந் துள்ளது. எல்லாவகைகளிலும் சிறப்பாக முன்னேற்றத்தைப் பெற்றுவரும் தமிழ் நாட்டில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் இங்குள்ள மக்கள் தொகையில் 39·39 சதவிகிதம் இருக்கின்றனர். இந்தியாவில் நிதிக்கழகங்கள், கிராமப் பகுதிகளில் இல்லாத காரணத்தாலும் சேமிப்பு விகிதம் குறைவாக உள்ளது. சிறு சேமிப்பு வங்கிகள் இல்லாத நிலையாலும் சேமிப்பின் அளவு குறைந் திருக்கின்றது. சமீப காலத்தில் அஞ்சலகங்களின் மூலமாகச் சிறு சேமிப்பைப் பெருக்க அரசு பல நடவடிக்கைகளை மேற் கொண்டுள்ளது. சிறிய நகரங்களிலும் ஸ்டேட்பாங்க் பலகிளைகளைக் துவக்கிவருகின்றது. முக்கிய 14 பெரிய வணிக வங்கிகளை நாட்டுடைமையாக்கி அதன் மூலம், தாழ்ந்த நிலையிலுள்ளவர் கட்கும், விவசாயிகட்கும் கடனுதவி செய்யவும், வேறு பல பணிகளாலும் சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்தவும் மத்திய அரசு தீவிரமாக முயன்று வருகிறது.

## 8. ஊக்கமின்மையும், தொழில் முயல்வோர் இன்மையும்

கண்டு பிடிப்புகளோ, அல்லது கண்டுபிடிப்புகளில் முன் னேற்றங்களோ, வளர்ச்சியடையாத நாடுகளில் அதிகம் ஏற்படுவ தில்லை. தொழில் தொடங்குவதையும், நடத்துவதையும் மக்கள் அதிகம் விரும்பாமைக்குக் காரணம் குறைந்த அளவே உள்ள சந்தை, மூலதனப் பற்றுக் குறை, குறைந்த அளவுத் தனிச் சொத்

துரிமை ஆகியவையாகும். இந்நாடுகளில் குறைந்த அளவு மட்டுமே வணிகர்கள், வியாபாரிகள் உள்ளனர். வணிகமும், வியாபாரமும், லேவாதேவிக் காரர்களாலும் செய்யப்படுகின்றன. குறைந்த அளவில் அமைந்துள்ள தொழில் முயல்வோரும் முற்றுரிமை நிலையை ஏற்படுத்திக் கொள்கின்றனர். இவர்கள் அரசின் அதிகாரிகளோடு தனித்தொடர்புகள் கொண்டு சில சலுகைகளைப் பெறுகின்றனர்; நிதி நிலைகளிலும், வரிவிதிப்புகளிலும் நன்மைகளைப் பெற இதனால் முடிகின்றது.

வளர்ச்சியடையாத நாடுகளின் ஓரளவு முன்னேற்றத்திற்கு உதவியவர்கள் பிறநாட்டுத் தொழில் முயல்வோர்கள் ஆவர். தொழில், வாணிபம், போக்குவரத்து, சுரங்கத்தொழில், தோட்டப் பயிர்ப்பண்ணை போன்ற பலவற்றின் தொடக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் அவர்கள் உதவியுள்ளார்கள். ஆனால், பொருளாதார முன்னேற்றம் அவர்கள் நோக்கமல்ல; அதிக இலாபம் பெறவேண்டுமென்ற விருப்பத்தோடுதான் அத்துறைகளில் முன்னேற்றத்தைச் செய்தார்கள். வளர்ச்சியடையாத நாடுகளை அவர்கள் சுரண்டினார்கள்; அவ்வாறு சுரண்டுவதற்கான வசதிகளை அவர்களே செய்து கொண்டார்கள். அதன் மூலம் ஏற்பட்டதே தொழில், வாணிப போக்குவரத்து முன்னேற்றங்கள்.

ஆனால், சில நாட்டவர் அயல் நாடுகட்குச் சென்று அதன் மூலம் உண்மையான பொருளாதாரச் செழுமையையும் தந்துள்ளனர். உதாரணமாகச் சீனர்கள், மலேயா, சிங்கப்பூர், இந்தோனேசியா போன்ற நாடுகளில் குடியேறியதையும், இந்தியர்கள் பர்மா, இந்தோனேசியா, இலங்கை, மலேயோ, கிழக்கு ஆப்ரிக்கா போன்ற நாடுகளில் குடியேறியதையும் குறிப்பிடலாம். சீனர்களும், இந்தியர்களும் மேற்கிந்திய தீவுகளுக்குச் சென்று அங்குப் பொருளாதார மேம்பாடு ஏற்பட உதவினார்கள். அவர்கள் மூலதனத்திரட்சிக்கும், திறமைத் திரட்சிக்கும் வகை செய்தனர். பெருந்தன்மை, சிக்கனத் தன்மை, சகிப்புத்தன்மை போன்றவற்றை அங்கிருந்த உழைப்பாளர்கட்கு உணர்த்தினர். ஆனால், இன்றைய நிலையில் ஆசிய, ஆப்ரிக்க நாடுகளில் உள்ள மக்கள் அந்நியர்களைச் சந்தேகத்தோடும், நம்பிக்கையின்மையோடும் நோக்குகின்றனர்.

இந்தியாவைப் பொறுத்த அளவில், தொழில் முயல்வோர் எண்ணிக்கைக் குறைவால் நமது பொருளாதாரம் அதிக அளவு பாதிக்கப்படவில்லை. இன்று நாம் இங்கு காண்பது கல்வி கற்றவர், பயிற்சி பெற்றவரிடையே வேலையின்மை. இவ்வேலையின்மைக்குக் காரணம் மூலதனப் பற்றுக்குறையே. திறமையானவர்களை நாம் கொண்டிருந்தாலும் கூட, மூலதனத் திரட்சி குறைவாக

உள்ளது; அவர்களது சிறந்த பணிகளை அதிக ஆக்கத்திற்குப் பயன் படுத்த நம்மால் இயலவில்லை.

## 9. மூலதனப் பற்றுக் குறை

வளர்ச்சியடையாத நாடுகளின் மற்றொரு இயல்பு மூலதனப் பற்றுக் குறையும், மூலதனப் பொருட்களின் பற்றுக் குறையு மாகும். இந்நாடுகளின் பொருளாதாரங்கள் 'குறைந்த சேமிப்பு, குறைந்த முதலீடும்' கொண்ட பொருளாதாரங்களாக இருக் கின்றன. மூலதனப் பொருட்களின் அளவு குறைவாக இருப்ப தோடு, மூலதனத் திரட்சி விகிதமும் மிகக்குறைவாகவே உள்ளது. வளர்ச்சியடையாத நாடுகளில் மொத்த முதலீடு தேசிய வரு வாயில் 5 முதல் 6 சதவீதம் அமைந்துள்ளது; முன்னேற்றமடைந்த நாடுகளில் இவ்விகிதம் 15 முதல் 20 சதவீதமாக உள்ளது. விரை வாகப் பெருகுகின்ற மக்கள்தொகையைப் பராமரிக்க இச்சேமிப்பு விகிதம் போதுமானதாக இல்லை. முன்னேறிவரும் நாடுகளில் மக்கள்தொகைப் பெருக்க விகிதம் ஆண்டொன்றிற்கு 2 முதல் $2\frac{1}{2}$ % ஆகும். சில சேமிக்கும் நிலையிலுள்ளவர்களும், முதலீடு செய்யும் நிலையிலுள்ளவர்களும் கூட அவற்றைச் செய்யாத காரணத்தால் பொருளாதார வளர்ச்சி ஏற்படுவதில்லை. தலா வருமானம் குறைவாக உள்ளதால், மக்கள் பராமரிப்பு நிலையிலேயே வாழ்கின்றனர். சேமிக்கவும், முதலீடு செய்யவும் அவர்களால் முடிவதில்லை. வருவாய்களிலும் பெருமளவு ஏற்றத்தாழ்வுகள் அமைந்துள்ளன. சமுதாயத்தின் உயர்ந்த நிலையில் உள்ள 3 முதல் 5 சதவிகித மக்கள்தொகை மட்டுமே சேமிக்கும் திறனைக் கொண்ட தாக உள்ளது. சேமிக்கும் திறனைக் கொண்டே வணிகர்களும், நிலப் பிரபுகளும் தங்கள் சேமிப்பை உற்பத்திக்கு உதவும் முதலீடாக்குவ தில்லை. ஆடம்பரமான வீடுகள் கட்டவும், நகைகள், தங்கம் வாங்கவும், மேலைநாடுகளின் நாகரிக வாழ்வை மேற்கொள்ள வும் அவர்கள் தங்கள்சேமிப்பைப் பயன்படுத்துகின்றார்கள்.

இந்தியா 'வறுமையின் வட்டத்திற்குள்' சுழல்கின்றது. அதற் குக் காரணம் மிகுதியான நுகர்வும், குறைவான வருவாயும் ஆகும். நான்காவது திட்ட அறிக்கையின்படி 1968-69இல் நம் நாட்டில் சேமிப்பு தேசிய வருவாயில் 8 8% ஆகும். ஜப்பானில் இது 33% ஆகவும், அமெரிக்கவில் 18% ஆகவும் இருக்கின்றது. பேராசிரியர் நர்க்ஸ் (Nurkse), "ஒரு நாடு ஏழை நாடாக இருக்கின்றமைக்குக் காரணம் அதனுடைய ஏழ்மை நிலையே' எனக் கூறுகின்றார். நம் நாட்டில் மூலதனவளர்ச்சியின் அளவு தாழ்வாகவே உள்ளது. தனியொருவருக்குக் கிடைக்கக்கூடிய மூலதனத்தின் அளவும் குறைவாக இருக்கின்றது.

பேராசிரிர் கோலின் கிளார்க் (Prof. Colin Clark) கணிப் பின்படி, "அதே அளவு மக்களின் வாழ்க்கைத் தரத்தைக் கொண் டிருக்க, ஒரு நாட்டில் மக்கட் தொகைப் பெருக்கம் ஆண்டொன் றிற்கு 1 சதவிகிதமாக இருந்தால், அதிகரிக்கும் புதிய முதலீடு ஆண்டொன்றிற்கு 4 சதவிகிதம் இருக்கவேண்டும்." எனவே ஆண்டொன்றிற்குச் சுமார் 2·5 சதவிகிதம் மக்கள்தொகை பெருகு வதால், பெருகுகின்ற மக்கள்தொகையைப் பராமரிக்க ஆண் டொன்றிற்கு முதலீடுகள் 10 சதவிகிதத்திற்கு மேல் அதிகரிக்க வேண்டும்.

## 10. பின்தங்கிய தொழில் நுணுக்கம்

பழைமையான சிறிய கருவிகளையும், முன்னேற்றமடையாத உற்பத்தி முறைகளையுமே வளர்ச்சியடையாத நாடுகளில் சிறு தொழில்களில் பயன்படுத்தி வருகின்றனர். தொழில் நுணுக்க முன்னேற்றத்தால் ஆக்கத்திறனை அதிகரிக்க முடியும். சிறப்பான உற்பத்தி முறைகள் இல்லாததால், உற்பத்தி குறைந்து இலாபத் தையும் குறைந்த அளவே பெற முடிகின்றது. தவிர, உற்பத்திச் செலவுகளும் அதிகமாகவே உள்ளன. வளர்ச்சியடைந்த நாடுகளில் தொழில் நுணுக்க முன்னேற்ற முறைகளில் உற்பத்தி செய்யப் படுவதால், தரமான பொருட்களைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்கின்றனர் ; அதனால் அதிக இலாபத்தையும் பெற வாய்ப்பு ஏற்படுகின்றது.

பின்தங்கிய தொழில் நுணுக்கத்தை அதிக உற்பத்திச் செல வால் அறியலாம். வளர்ச்சியடையாத நாடுகளில் உழைப்பின் ஊதியம் குறைவாகயிருப்பினும் உற்பத்திச் செலவு உயர்வாகவே உள்ளது. உழைப்பின் உற்பத்தித்திறனும், மூலதனத்தின் உற்பத் தித்திறனும்கூட தாழ்வாக உள்ளன. மேலும் உழைப்பாளர்கள் திறமை குறைந்தவர்களாகவும், பயிற்சியில்லாதவர்களாகவும் இருக்கின்றனர். அதிக தேசிய ஆக்கத்தைப் பெற மூலதனப் பொருட்கள் மிக அதிகமான அளவில் தேவைப்படுகின்றன.

நம் நாட்டின் மிகப் பெரிய தொழில்களில் சீரிய முன்னேற்ற மடைந்த தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் அமைந்திருக்கும் போது, வேளாண்மையிலும், சிறுதொழில்களிலும் பழைய உற்பத்தி முறைகளும் சிறு கருவிகளும் மட்டுமே பயன்படுத்தப்படு கின்றன. குறைந்த அளவு வேளாண்மை உற்பத்திக்கும், தொழில் உற்பத்திக்கும் காரணம் முன்னேற்றமடையாத உற்பத்தி முறை களே. விவசாயிகளும், சிறுதொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களும் குறைந்த வருமானத்தைக் கொண்டுள்ளதால் நல்ல தொழில் நுணுக்கக் கருவிகளைப் பயன்படுத்த முடிவதில்லை.

## 11. பாதக வெளிநாட்டு வாணிப நிலை

வளர்ச்சியடையாத நாடுகள் அதிக அளவு வேளாண்மைப் பொருட்களையும், கச்சாப் பொருட்களையும், கனிப் பொருட்களையும் ஏற்றுமதி செய்கின்றன; மூலதனப் பொருட்களையும், சில வகை நுகர் பொருட்களையும் இறக்குமதி செய்கின்றன.

ஒரு சில ஏற்றுமதிப் பொருட்களே அந்நியச் செலவாணியை ஈட்டித் தருகின்றன. ஏற்றுமதிப் பொருட்களின் அளவு மொத்த உற்பத்தியின் அளவில் சுமார் 20 சதவிகிதம் அமைந்திருக்கும். ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியில் கவனம் செலுத்தப் படுவதால் சில விளைவுகள் ஏற்படுகின்றன :

(1) ஏற்றுமதித் துறைகளில் அதிகக் கவனம் செலுத்தப்படுவ தால், பிற துறைகளின் முன்னேற்றம் பாதிக்கப்படுகின்றது.

(2) அயல்நாடுகளில் நிலவும் விலைகள், உள்நாட்டுப் பொருளா தாரத்தையும் பாதிக்கும். பிற நாடுகளில் நிலவும் பொருளாதார மந்த நிலைகளால் ஏற்றுமதிப் பொருட்களின் விலைகளும், தேவையும் குறையும்.

(3) ஒரு சில ஏற்றுமதிப் பொருட்களில் தீவிர கவனம் செலுத் தப்படுவதால், சில வகை நுகர் பொருட்களுக்காக அதிக அளவு அயல்நாடுகளை எதிர் நோக்க வேண்டிய நிலை ஏற்படும்.

இறக்குமதியின் அதிக அளவாலும், ஏற்றுமதியின் குறைந்த அளவாலும் வெளி நாட்டு வாணிபத்தில் பாதக நிலையே நிலவு கின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் ஏற்றுமதித் துறைகளை ஏற்று நடத்துபவர்கள் அயல் நாட்டு தொழில் முயல்வோராகவே இருக்கின்றனர். அயல் நாட்டு மூலதனமும் ஏற்றுமதித் துறைகளில் அதிகச் செல்வாக்குக் கொண்டதாக உள்ளது. மிகச் சமீப காலம் வரை இலங்கையில் 80% தேயிலைத் தொழிலும், 40% ரப்பர் ஏற்றுமதி- இறக்குமதியும் வெளி நாட்டவரிடமே இருந்தன. இந்தியாவில் 1947-க்கு முன் அயல் நாட்டவர் உடைமையாகவும் அவர்களின் மேற்பார்வையிலும் இருந்தவை இரயில்வேயில் 98%, வங்கிகளில் 46%, தேயிலைத் தொழிலில் 86%, சணல் தொழி லில் 89%, பெட்ரோலியத் தொழிலில் 97%, ரப்பர்தொழிலில் 93% ஆகும். இந் நிலைகளால் வளர்ச்சியடையாத நாடுகளின் வளங்கள் வடிக்கப்பட்டு, வளர்ச்சியடைந்த நாடுகளின் எல்லாவகை முன் னேற்றத்திற்கும் பயன்படுத்தப் படுகின்றன.

இவ்வாறு வளர்ச்சியடையாத நாடுகளின் இயல்புகள் அமைந் துள்ளன. அவற்றில் பலவும் நம் நாட்டிற்குப் பொருந்துவதாக இருக்கின்றன.

# 2. பொருளாதார முன்னேற்றத்தின் காரணிகள்
## (Factors in Economic Development)

### பொருளாதாரக் காரணிகள்

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பல இயற்கைக் காரணிகளோடு, மனிதனால் உருவாக்கப் பெற்ற மூலதனம், தொழில் நுணுக்கம் போன்ற செயற்கைக் காரணிகளும் தேவைப் படுகின்றன. உற்பத்திக் காரணிகளில் ஒரு காரணியின் பணி கிடைக்கப் பெறாவிட்டாலும், உற்பத்தியைச் செய்ய முடியாது. உற்பத்தியின் அளவையும், தரத்தையும் கூட்ட பல காரணிகளின் பணி அவசியமாகின்றது. பொருளாதார முன்னேற்றத்தைத் தருகின்ற பொருளாதாரக் காரணிகளைப் பின் வருமாறு தரலாம்:

(1) நிலம்;

(2) உழைப்பு;

(3) மூலதனம்;

(4) தொழிலமைப்பு;

(5) தொழில் நுணுக்கம் (முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகள்;

(6) உற்பத்திக் காரணிகளை நிச்சயித்தலும், உற்பத்திப் பொருட்களையும் பணிகளையும் விற்பனை செய்தலும் (விலை அமைப்பு முறை, சந்தையின் அளவு, வேலைப்பகுப்பு முறை, மொத்தத் தேவையின் அளவு போன்றவை);

(7) முக்கியமான பொருளாதார முடிவுகளை எடுக்கும் போது அமைந்துள்ள சூழ்நிலைகளும் ;

நிலம், தொழிலமைப்பு, பொருளாதார முடிவுகளை எடுப்பது ஆகிய மூன்று காரணிகளைத் தவிர பிற காரணிகள் வேறு அத்தியாயங்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. எனவே இம் மூன்று காரணிகளையும் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். பொருளாதார முன்னேற்றத்திற்கு எவ்வகைகளில் அவை உதவுகின்றன என்பது பற்றி ஆராயலாம்.

## I. நிலம்

பொருளாதாரத்தில் நிலமென்பது பூமி மட்டத்தை மட்டும் குறிக்காது. உயிர் உள்ள, உயிர் இல்லாத பல இயற்கைச் சாதனங்களையும் அது குறிக்கும். வேளாண்மையில் அமைந்துள்ள நிலங்கள், வனங்கள், காற்று, மழை, மூலப் பொருட்கள், கடல் ஆகியவையும் பொருளாதாரத்தில் நிலமென்ற காரணியில் அடங்குபவையாகும். "பூமியிலும், ஆகாயத்திலும், தண்ணீரிலும், ஒளியிலும், வெப்பத்திலும் மனிதனுக்கு நன்மை அளிக்கக்கூடிய இயற்கையின் அன்பளிப்பாகக் கிடைக்கும் சக்திகளும் சாதனங்களும் நிலமெனப்படும்,"[1] என ஆல்ஃபிரட் மார்ஷல் நிலத்தை வரையறை செய்கின்றார். உற்பத்திக்கு முதற்காரணியாகவும், அடிப்படைக் காரணியாகவும் அமைந்திருப்பது நிலமாகும். நிலத்தின் வளம் வேளாண்மை உற்பத்தியை நிர்ணயிக்கின்றது. ஆனால் இன்று அறிவியல் சாதனைகளின் மூலம் வளமற்ற நிலங்களையும் வளமாக்க முடிகின்றது. தொழில் முன்னேற்றத்திற்கும் நிலத்தினின்றும் கனிப்பொருட்கள் எடுக்கப்படுகின்றன. இந்தியாவில் நிலங்கள் வளம் மிக்கவைகளேயாகும். கனி வளங்களைக் கொண்ட நாடாகவும் இந்தியா இருக்கின்றது. நிலவளத்தைச் சிறப்பாகப் பயன்படுத்தாமையும், இந்தியா, பின் தங்கிய தேக்கநிலைப் பொருளாதாரத்தைப் பெற்றுள்ளமைக்குக் காரணமாகின்றது.

பொருளாதார வளர்ச்சி வீதத்தை, கிடைக்கக்கூடிய இயற்கை வசதிகளின் அளவும், தரமும் நிர்ணயிக்கின்றன. நிலத்தின் அமைப்பு சமமாக இருந்தால் வேளாண்மை உற்பத்தியை மேற்கொள்ள அது உதவும். அதிக அளவு பாறைகளையும், மலைகளையும், வறண்ட பகுதிகளையும் நிலப்பரப்பு கொண்டிருந்தால் உற்பத்தியை எளிதில் உயர்த்த முடியாது. இயற்கையிலேயே செழுமையான நிலங்கள் அமைந்திருந்தால், வேளாண்மை வளர்ச்சியை எளிதில் பெற இயலும். காட்டு வளங்கள் நல்ல மழைப் பொழிவை அளிக்கின்றன. தொழில்களின் முன்னேற்றத்திற்கும்; நகரங்களின் பெருக்கத்திற்கும் அவை உதவுகின்றன. கனிவளத்தை மிகுதியாகக் கொண்ட நாடு தொழில் முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது. இந்தியா கனிவளம் மிக்க நாடாக இருந்தும்கூட, மூலதனப் பற்றுக்குறையால் அதை முற்றிலும் சிறப்பாகப் பயன்படுத்த முடியவில்லை. மேலும் சில வகைத் தாதுப் பொருட்கள் உள்நாட்டுத் தொழில்களின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தப் படாமல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. இது இந்தியா தொழில் முன்னேற்றத்தை உயர்ந்த அளவில் பெறாத நிலையை உணர்த்துகின்றது.

நீர்ப்பாசன வசதிகள் இயற்கையிலேயே அமைந்திருக்கும் பகுதிகள் எளிதில் முன்னேற வாய்ப்பு உண்டு. வளநதிகளைக் கொண்ட வட இந்தியா வேளாண்மையில் சிறந்துள்ளமை இதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது. பஞ்சாப் 'பசுமைப் புரட்சியில்' முன்னணியில் இருக்கின்றமைக்கு அம்மாநிலத்தில் அமைந்துள்ள இயற்கை நீர்ப்பாசனமும் காரணமாகும். இந்தியாவைவிட பாகிஸ்தான் ஓரளவு எளிதாகப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவிடுகின்றமைக்கு அங்கு அமைந்துள்ள நிலவளம், நீர்வளம், கனிவளம் ஆகியவையே அடிப்படையாக அமைந்திருக்கின்றன. அமெரிக்காவின் அதிக வேளாண்மை உற்பத்திக்கு அங்கு அமைந்திருந்த புற்சமவெளிப் பிரதேசங்கள் பெரிதும் உதவின. தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான எல்லா கனிப்பொருட்களும் அமெரிக்காவில் கிடைத்தமையே இன்று அது உலகின் செல்வம் மிக்க நாடுகளுள் ஒன்றாகத் திகழ்கின்றமைக்குக் காரணமாகின்றது.

மழைப் பொழிவைக் கொண்டுள்ள பகுதிகளிலும் முன்னேற்றத்தை எளிதில் பெற முடியும். இந்தியாவில் இராஜஸ்தானில் வறண்ட 'சஹாரா' போன்ற நிலப்பரப்புக்கள் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளன. மழைவளம், நிலவளம், கனிவளம் ஆகியவற்றைக் கொண்டுள்ள பகுதிகளிலேயே மக்கட் செறிவும் அதிகமாக உள்ளது.

இடப் பெயர்ச்சியற்ற காரணியாக நிலம் அமைந்துள்ளது. நிலத்தின் அளவையும் பெருக்க முடியாதாகையால் நிலத்திற்கு அளிப்பு இல்லையெனலாம். செழுமைகளில் வேறுபட்ட பல வகைப்பட்ட நிலங்கள் அமைந்திருக்கின்றன. நிலம் பிற உற்பத்திக் காரணங்களின் இயல்புகளினின்றும் வேறுபடுகின்ற சில தனியியல்புகளைக் கொண்டுள்ளது. நிலத்தை முற்றிலும் நன்கு பயன்படுத்தி அதிக ஆக்கத்தைப் பெற முயலவேண்டும். குறைந்த செலவைக் கொண்ட போக்குவரத்து வசதிகளும் பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்த உதவுகின்றன. ஒரு நாட்டின் பூகோள அமைப்பும் முன்னேற்றத்திற்கு உதவுகின்ற ஒன்றாகும். அயல் நாட்டுச் சந்தைகளை அருகாமையில் கொண்டுள்ள ஒரு நாடு வெளிநாட்டு வாணிபத்தை எளிதில் பெருக்க முடியும். தட்பவெப்ப நிலைகள் சாதகமாக இருக்கும் இடங்களில் உற்பத்தியைப் பெருக்குவது எளிதானதாகும். பொருளாதார வாழ்விற்கு நிலம் முக்கியமானதாக உள்ளது. மனிதன் செய்கின்ற எல்லா நடவடிக்கைகளுக்கும் நிலமே அடிப்படையாக விளங்குகின்றது.

உலக நாடுகளுக்கிடையே பலவித வாணிபத்தடைகள் சமீப காலத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒரு நாட்டின் இயற்கை

வளங்களின் முக்கியத்துவம் இதனால் மேலும் அதிகரிக்கின்றது. 'தடையிலா வாணிபம்' (Free Trade) பல நாடுகளாலும் பின்பற்றப் பட்டபொழுது, சில நாடுகள், இயற்கை வளங்கள் உள்நாட்டில் அமையாத நிலையிலும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடிந்தது. அந்நாடுகளில் தலா வருவாயும் மிகப் பல மடங்கு உயர்வடைந்தது. ஒரு நாடு எளிதில் குறைந்த செலவில் மூலப் பொருட்களை இறக்குமதி செய்து, வினை முடிந்த பொருட்களாக அதிக விலைக்கு ஏற்றுமதி செய்ய முடிந்தது பல தொழில்களும் கச்சாப் பொருட்களை இறக்குமதி செய்து உற்பத்தியை மேற்கொண்டன. வினை முடிந்த பொறி செய்ப் பொருட்களை ஏற்றுமதி செய்து மிக அதிக அளவு இலாபத்தைப் பெற முடிந்தது. இம் முறையிலேயே இங்கிலாந்து விரைவான தொழில் முன்னேற்றத்தைப் பெற்றது. பிற ஐரோப்பிய நாடுகளும், ஜப்பானும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற மற்ற நாடுகளின் இயற்கை வளங்களே பெரிதும் உதவின. ஆனால் தற்பொழுது வெளிநாட்டு வாணிபத்தில் பலவிதத் தடைகள் எல்லா நாடுகளாலும் விதிக்கப்படுகின்றன. இப்போதும் சில வளர்ச்சி குன்றிய நாடுகள் வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு மூலப் பொருட்களை ஏற்றுமதி செய்து வருகின்றன. பழைய காலத்தில் ஒரு நாடு, வெளிநாட்டு வாணிபக் கட்டுப்பாடுகள் குறைவாக இருந்தமையால், பிற நாடுகளின் வளங்களைச் சுரண்டி பொருளாதார மேம்பாட்டைப் பெற முடிந்தது. தற்பொழுது இறக்குமதி, ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் அமைந்துள்ளமையால் எளிதில் ஒரு நாடு மற்றொரு நாட்டைச் சுரண்ட முடியாது. சில காலம் முன்பு வரை வல்லரசு நாடுகள் காலனி ஆதிக்கத்தைக் கொண்டிருந்தன. இதன் மூலமும் பின்தங்கிய நாடுகள் எளிதில் காணப்பட்டன. காலனி நாடுகள் பலவும் விடுதலையடைந்து விட்ட காரணத்தால், வளர்ச்சியடைந்த நாடுகளின் பெரிய அளவு சுரண்டல்களுக்கு இப்போது வாய்ப்பில்லை.

பல பின்தங்கிய நாடுகள் ஏற்றுமதியைப் பெருக்க வாய்ப்பில்லாமல், சில தொழில் மூலப் பொருட்களை இன்னும் ஏற்றுமதி செய்வதை அறிய முடிகிறது. இயற்கை வளங்களைக் கொண்டுள்ள வளர்ச்சி குன்றிய நாடுகள் ஜப்பானிற்குப் பல மூலப் பொருட்களை ஏற்றுமதி செய்கின்றன. ஜப்பான் இயற்கை வளங்களைக் கொண்டில்லாத நாடாகும். எனினும் கச்சாப் பொருட்களை அதிக அளவிற்கு இறக்குமதி செய்து, அமெரிக்காவைவிட பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்ந்த அளவில் பெறும் வகையில் ஜப்பான் தொழில் வளர்ச்சியைப் பெற்றுள்ளது. சோவியத் ரஷ்யாவில் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான எல்லா கனிப்பொருட்

களும் கிடைக்கின்றன. பிற நாடுகளை, இறக்குமதிக்குச் சார்ந்து இல்லாமலேயே ரஷ்யா தன் தொழில்களைப் பெற்றிருக்கின்றது. வளர்ச்சியடையாத நாடுகள் தொழில் முன்னேற்றத்தைப் பெற மூலப் பொருட்களை இறக்குமதி செய்வது கடினமானதாகும். விரைவான பொருளாதார மேம்பாட்டைப் பெற இந்நாடுகள் இயற்கை வளங்களைக் கொண்டு அமைந்திருக்கவேண்டும். பல பின்தங்கிய நாடுகள் இயற்கை வளங்களைக் கொண்டுள்ளன. ஆனால் அவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தி விரைவான வளர்ச்சியைப் பெற அவைகளிடம் மூலதன வசதிகள் அமைந்திருக்கவில்லை.

மக்களின் வாழ்வும், வசதியும் ஒரு நாட்டின் இயற்கை வளங்களைச் சார்ந்தே அமைகின்றன. இந்தியாவில் இயற்கைக் காரணிகள் அதிக அளவில் கிடைக்கப் பெற்றாலும், அவற்றைச் சிறப்பாகப் பயன் படுத்தாமையே நம்முடைய பொருளாதாரம் குறைந்த வேகத்தில் வளர்ந்து வருகின்றமைக்குக் காரணமாகும். இந்தியாவின் பரப்பளவு 12, 69, 640 சதுரமைலாகும். தெற்கு வடக்காக 2000 மைல் நீளமும், கிழக்கு மேற்காக 1,850 மைல் அகலமும் கொண்டு இந்தியா அமைந்திருக்கின்றது. நிலப்பரப்பின் அளவில் இந்தியா உலக நாடுகளுக்கிடையே ஏழாவது இடத்தைப் பெறுகின்றது. பெரிய நிலப்பரப்பைக் கொண்டுள்ளமையால் இயற்கை அமைப்புக்கள் பல மாநிலங்களுக்கிடையே பெரிதும் மாறுபடுகின்றன.

இந்தியா வெப்ப நாடாகவும், பருவ மழை கொண்டதாகவும் இருக்கின்றது. பருவ மழை தவறும் காலங்களில் வேளாண்மை உற்பத்தியானது குறைந்து விடுகின்றது. இந்தியா ஒரு உப கண்டமாக இருப்பதால் பருவ மழை ஒரு சில இடங்களில் தவறினாலும் வேறு சில இடங்களில் தவறுவதில்லை. இதனால் வேளாண்மை உற்பத்தியில் அதிகச் சரிவு ஏற்படுவதில்லை. இந்தியா பரந்த நாடாக இருப்பதே வேளாண்மை உற்பத்தி இயற்கைக் காரணிகளால் பெரிதும் பாதிக்கப் படாமைக்குக் காரணமாகும். நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் குளிர், வெப்ப, மழைப் பருவங்கள் மாறி மாறி வருகின்றன. தட்ப வெப்ப, மழைச் சூழ் நிலைகளில் மாநிலங்களுக்கிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. வேளாண்மை உற்பத்தியில் திடீர்ச்சரிவு ஏற்படாவிட்டாலும்; உற்பத்தியின் அளவில் உறுதியற்ற தன்மையே அமைந்துள்ளது.

வேளாண்மைக்கு ஏற்ற மண்வளத்தையும், புவியமைப்பையும் அதிக அளவிற்கு இந்தியா கொண்டுள்ளது. இதனால்தான் வேளாண்மைச் சாகுபடியில் பெரும் பகுதி நிலம் ஈடுபடுத்தப் பட்டிருக்கின்றது. மொத்த புவிப்பரப்பாகிய 81.1 கோடி ஏக்கர் நிலத்தில், வேளாண்மைக்காகப் பயன் படுத்தப் படுகின்ற நிலத்

தின் அளவு 37.2 கோடி ஏக்கராகும். பயிர்த் தொழிலுக்கு ஏற்ற வண்டல் மண் பிரதேசங்களும் அதிக அளவில் உள்ளன. சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா, கோதாவரி, காவிரி ஆகிய நதிப் பகுதிகளில் வேளாண்மை சிறப்பாகச் செய்யப் படுகின்றது. நீர்வளமானது நாடு முழுதும் அமைந்துள்ளது எனக் கூற முடியாது. ஆனால் பூமிக்கடியில் தண்ணீர் ஏராளமாக இருப்பதால் சிறிய, நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்களினால் நீர் வளத்தை நாட்டின் பல பகுதிகளிலும் பெருக்கிக் கொள்ளலாம். வற்றாத வளநதிகளின் தண்ணீர் முழுவதும் சிறப்பாக ஆக்கப் பணிகளில் பயன்படுத்தப் படுவதில்லை.

இந்தியா ஒரு தீபகற்ப நாடாக இருப்பதால் துறைமுக வசதிகள் சிறப்பாக அமைந்துள்ளன. சென்னை, பம்பாய், கல்கத்தா, கொச்சி, விசாகப்பட்டினம் ஆகிய பெரிய துறைமுகங்களோடு பல சிறிய துறைமுகங்களும் அமைந்திருக்கின்றன. துறைமுகங்களின் முன்னேற்றமும் அரசால் செய்யப் படுகின்றது. கப்பல் கட்டும் தொழிலையும் நாம் வளர்த்து வருகின்றோம். இதன் காரணமாக வெளிநாட்டு வாணிபம் எளிதில் வளர வாய்ப்பு ஏற்படும்.

வளம் மிக்க காடுகளைக் கொண்டதாகவும் இந்தியா திகழ்கின்றது. மொத்த நிலப்பரப்பில் 13.3 கோடி ஏக்கர் காடுகளாக உள்ளது. இது மொத்த நிலப்பரப்பில் சுமார் 22 சதவீதமாகும் காடுகளின் வளத்தால் நேரடி நன்மைகளும், மறைமுக நன்மைகளும் பெறப்படுகின்றன. தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருட்களும், பிற பொருட்களும் ஏராளமாகக் கிடைக்கின்றன மத்திய அரசும், மாநில அரசுகளும் காட்டு வளத்தைக் காக்க நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன.

இந்தியாவில் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான கனிப் பொருட்களும் கிடைக்கின்றன. இரும்புத்தாது, நிலக்கரி அலுமினியம், மாங்கனீசு, மைக்கா போன்றவைகள் அதிக அளவில் அமைந்திருக்கின்றன. இவ்வகை தொழிலுக்கான மூலப் பொருட்கள் சமீப காலம் வரை பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் பெற்றன. தற்பொழுதும் ஓரளவிற்கு இம் மூலப் பொருட்கள் ஏற்றுமதியாகின்றன. கனி வளத்தை உள் நாட்டிலேயே பயன்படுத்த அரசு பல தொழில்களில் அதிக முதலீடு செய்து வருகின்றது. தொழில்களைத் தோற்றுவிப்பதின் மூலமே உள் நாட்டின் தாதுப் பொருட்களைச் சிறப்பாகப் பயன்படுத்த முடியும். மூலப் பொருட்களை நன்கு பயன்படுத்தி தொழில் முன்னேற்றத்தைப் பெற வேண்டும். ஏற்றுமதி செய்வதின் மூலம் மூலப் பொருட்களின் பற்றுக் குறை ஏற்படவும் வாய்ப்பு உண்டு. கனிவளங்கள் அமைந்திருக்கும் இடங்களைக் கண்டுபிடிக்கவும் முயலவேண்டும்.

நில வளத்தை நன்கு பயன்படுத்த விசை வளமும் உதவுகின்றது. தொழில் முன்னேற்றத்திற்கும் விசை வளம் தேவைப்படுகின்றது. இந்தியாவில் இயக்கும் சக்தியைப் பெற மின்விசை, பெட்ரோலியம், நிலக்கரி ஆகியவை அதிக அளவிற்குப் பயன்படுத்தப்படுகின்றன. பெட்ரோலியம் பெருமளவில் பயன்படுத்தப்பட்டாலும், அது அதிக அளவிற்கு இறக்குமதி செய்யப்படுகின்றது. சுமார் 35 மில்லியன் கிலோவாட் நீர் மின் சக்தி கிடைக்கின்றது. 1950-ஆம் ஆண்டிற்கும் 1960-ஆம் ஆண்டிற்கும் இடையே நீர் மின் சக்தியின் உற்பத்தி 206 சதவீதம் அதிகரித்துள்ளது. மின்சார உற்பத்தியை உயர்ந்த அளவில் செய்பவை ஷராவதி விசைத் திட்டம், ரீஹண்ட் திட்டம், பக்ரா திட்டம், பீஸ் திட்டம் (Beas Project), சேம்பல் திட்டம் (Chambal Project), ஹீராஹுட் திட்டம், தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் போன்றவைகளாகும்.

இந்தியாவில் போதுமான அளவிற்கு இயற்கை வளங்கள் அமைந்திருந்தாலும், அவை சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுவதில்லை. மக்கள்தொகையைக் கட்டுப் படுத்தி, வளங்களை முற்றிலும் பயன்படுத்தினால் எளிதில் முன்னேற்றத்தை நாம் பெற முடியும். 'என்ன வளம் இல்லை இந்தத் திரு நாட்டில்,' என்று கூறும் அளவிற்கு நிலவளம், நீர்வளம், கனிவளம், காட்டு வளம், மக்கள் வளம், மலை வளம் ஆகியவற்றைக் கொண்ட நாடாக பாரதம் அமைந்துள்ளது. நாட்டில் நிலவுகின்ற வறுமையை இவ்வளங்களைப் பயன்படுத்துவதின் மூலமே நீக்கலாம். இயற்கை வளங்களை முற்றிலும் பயன்படுத்துவது வறுமைக்கு—முடிவு காண உதவுமெனலாம். அரசு திட்டங்களை மேற்கொண்ட பிறகு இவ்வளங்கள் சிறப்பாக, ஆக்கத்திற்காகப் பயன் படுத்தப்படுகின்றன. எனினும் மூலதனப் பற்றுக் குறையால் சீரிய முறைகளில் வளங்களைப் பயன்படுத்த இயலவில்லை. வளர்ச்சியடையாத நாடுகளில் திட்டமிட்டு இவ்வளங்களைப் பயன்படுத்துவதால் வளமான வாழ்வை மக்களுக்கு அளிக்க முடியும். நாட்டின் மொத்த ஆக்கத்தையும், சராசரித் தலா வருவாயையும், சேமிப்பு முதலீட்டு வீதங்களையும், மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் இதன் மூலமாகவே உயர்த்த வாய்ப்பு உண்டு.

பெருமளவு வேலையின்மையில் அமைந்துள்ள மக்கள்தொகையையும் இந்தியா கொண்டுள்ளது. பல வளங்களையும் சிறப்பாகப் பயன் படுத்தி, குறைந்த செலவில் பொருட்களை உற்பத்தி செய்ய இது உதவும். வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் உழைப்பின் பற்றுக் குறை இருந்தது. ஆனால் நம் நாட்டில் உழைப்பின் அளிப்பு அதிகமாக இருப்பதால் வளங்களை நன்கு பயன்படுத்துவது எளிதானதாகும். இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான வளங்கள் இருந்தும்,

குறைவான மூலதனத் திரட்சியால் அவற்றைச் சிறப்பாகப் பயன் படுத்த முடியவில்லை.

இவ்விதமான பல நன்மைகளைத் தரக் கூடியதாக உற்பத்திக் காரணிகளில் முதன்மையான நிலம் அமைகின்றது. நிலத்தின் முக்கியத்துவம் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்ட பிறகு படிப் படியாகக் குறையத் தலைப்படுகிறது. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பரவுகின்றன. உற்பத்திக் காரணிகளுள் மூலதனம் முக்கிய இடத்தைப் பெறு கின்றது. முன்னேற்றமான தொழில் நுட்பத்தினால் உற்பத்தியை மேற்கொள்ள அதிக முதலீடு தேவைப்படுவதில்லை. குறிப்பிட்ட அளவு உற்பத்தியைப் பெற அதிகச் செலவு பிடிப்பதில்லை. ஓர் அலகிற்கான உற்பத்திச் செலவு குறைவடைகின்றது. பொரு ளாதார முன்னேற்றத்தின் முதற் சில நிலைகளில், நிலத்தின் முக்கியத்துவம் அதிகமாக உள்ளது; பின்வரும் நிலைகளில் மூலதனம் நிலத்தைவிட அதிக முக்கியத்துவத்தைக் கொண்ட காரணியாக மாறுகின்றது. முன்னேற்றமடைந்த பொரு ளாதாரத்தில் குறைந்த அளவு நிலத்தை அதிக அளவு ஆக்கப் பணிகளில் ஈடுபடுத்தலாம். நிலத்தின் பணி அங்கு குறைந்த அளவிற்கே பெறப்படுகின்றது. ஆனால் நிலத்தின் அளிப் பைப் பெருக்க முடியாது. பிற ஆக்கக் காரணிகளின் அளிப்பை அதிகரிக்க முடியும். எனவே பொருளாதாரம் முன்னேற்றமடையும் போது நிலத்தைத் தவிர பிற உற்பத்திக் காரணிகள் பெருகு கின்றன. பிற காரணிகளோடு ஒப்பிடும்போது நிலம் பற்றுக் குறையைக் கொண்ட ஒரு உற்பத்திக் காரணியாக அமைகின்றது.

பூமியில் புதிதான நிலப்பரப்பைக் கண்டு பிடிக்கலாம். ஆனால் உலகில் உயிர் வாழத்தக்க நிலப்பரப்புக்கள் கண்டுபிடிக்கப் பட்டு விட்டன. வேறு கோள்களில் நிலத்தைக் கண்டு பிடிக்க அமெரிக்கர் களும், ரஷ்யர்களும் முயன்று வருகின்றனர். தற்பொழுது அமைந் துள்ள நிலத்தைச். சிக்கனப் படுத்த, தொழில் நுட்பம் தேவைப் படுகின்றது. அதன் மூலம் அதிக உற்பத்தியைப் பெறுவது அவசிய மாகின்றது. அதிக நிலப்பரப்பைக் கொண்ட சோவியத் ரஷ்யா விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றது. மிகக் குறைவான நிலப்பரப்பைக் கொண்ட இங்கிலாந்தும், ஜப்பானும் கூட விரைந்த வளர்ச்சியையே பெற்றன. விரைவான வளர்ச் சியைப் பெறுவது வளங்களைச் சிறப்பாகப் பயன் படுத்துவதில் அமைந்திருக்கிறது.

## 2. தொழில் அமைப்பு

நிலம், உழைப்பு, மூலதனம் ஆகிய உற்பத்திக் காரணிகளை இணைத்து உற்பத்தியை மேற்கொள்வது தொழில் அமைப்பின்

பணியாகும். ஷும்பீட்டர் (Schumpeter) பொருளாதார முன்னேற்றத்தில் தொழில் முயல்வோருடைய பணியை முக்கியமானதாகக் குறிப்பிடுகின்றார். பொருளாதார முன்னேற்றத்தை இயக்குகின்ற பணியைத் தொழில் முயல்வோர் செய்கின்றனர். தொழில் முயல்வோருடைய பணிகளை ஷூம்பீட்டர் பின் வருமாறு தருகின்றார் :

"உற்பத்திமுறைகளில் புரட்சிகரமான மாற்றத்தைக் கொண்டு வருவது தொழில் முயல்வோருடைய பணியாகும். பயன்படுத்தப்படாத புதிய தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளை அவர்கள் புகுத்த வேண்டும் புதிய பொருளை உற்பத்தி செய்ய வேண்டும் ; அல்லது பழைய பொருளைப் புதிய முறையில் உற்பத்தி செய்தல் வேண்டும் .தொழிலை மாற்றங்கள் பெறச் செய்து பொருட்களின் அளிப்பை அதிகரிக்க வேண்டும். அப்பொருட்களின் அதிக அளிப்பிற்கு ஏற்ப தேவைகளைப் பெருக்குவதும் இன்றியமையாததாகும். பொருளாதார அமைப்புக்களில் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும்."

தொழில் முயல்வோருடைய உழைப்பு மேம்பாடான உழைப்பாகும், தொழில் முயல்வோர் ஊதியம் பெறுவதில்லை. அவர் இலாபத்தையே சன்மானமாகப் பெறுகின்றார். தொழில்களைத் தொடங்குவதோடு தொழில்இடர் தாங்குபவர்களாகவும் அவர்கள் உள்ளனர். தொழில்முயல்வோர் தொழிலைத் தொடங்குவதற்கு முன் திட்டமிடுகின்றனர். மூலதனத்தின் தேவையைப் பற்றி ஆராய்கின்றனர். தொழிலில் உற்பத்திப் பொருட்களின் அளவு, தரம் ஆகியவை பற்றிக் கொள்கைகளை எடுக்கின்றனர். உற்பத்தி முறைகளைப் பற்றித் தீர்மானிப்பது. இயந்திரங்களை நிறுவுவது, உழைப்பாளர்களை வேலைக்கு அமர்த்துவது, மூலப் பொருட்களை வாங்குவது, உற்பத்திப் பொருட்களை விற்பனை செய்வது, நிர்வாகப் பொறுப்பேற்பது, மேற்பார்வையிடுவது போன்ற பணிகளையும் அவர்கள் மேற்கொள்கின்றனர்.

தொழில் முயல்வோர் இலாபங்களைப் பெறுகின்றனர் ; நட்டங்களை பெறவும் வாய்ப்பு உண்டு. நிலத்திற்கான வாரத்தையும், உழைப்பிற்கான ஊதியத்தையும், மூலதனத்திற்கான வட்டியையும் கொடுத்து மிகுந்துள்ளதை இலாபமாகப் பெறுகின்றனர். தொழில் முயல்வோர் நட்டத்தை அடையவும் வாய்ப்பு உண்டு, ஆனால் பிற உற்பத்திக் காரணிகள் வருவாயைப் பெறுபவைகளாகவே உள்ளன. உற்பத்திப் பொருட்களுக்கான தேவையைப் பெருக்க விளம்பரங்கள் செய்யப் படுகின்றன ; விற்பனையாளர்கள் நியமிக்கப்படுகின்கின்றனர். இவைகளும் தொழில் முயல்வோருடைய பணிகளேயாகும். உற்பத்திப் பொருட்களின் தேவை எதிர்காலத்தில் எவ்வாறு

அமையுமென்பதை தொழில் முயல்வோர் கணக்கிடுகின்றனர். தொழிலின் முன்னேற்றம் தொழில் முயல்வோர் எடுக்கின்ற முடிவுகளையே சார்ந்து அமையும்.

உற்பத்திப்பணி சிக்கலானதாகும். உற்பத்திக் காரணிகளை இணைக்கின்ற தனித்திறமையைப் பெற்றிருப்பவரைத் தொழில் முயல்வோர் என்கிறோம். 'தொழில் முயல் வோரை' (Entrepreneur), 'அமைப்பாளர்' (Organiser) எனவும் அழைக்காலாம். இவர்கள் இணைப்புப் பணிகளை ஏற்பதோடு, இடர்தாங்கும் பணிகளையும் ஏற்கின்றனர். தொழிலுக்கு ஏற்படக்கூடிய போட்டிக்கு ஈடுகொடுத்து தொழிலை அவர்கள் நடத்துகின்றனர்.

உற்பத்திக் காரணிகள் தனித்தனியே உற்பத்தியில் ஈடுபடுவதில்லை. இக்காரணிகளைக் குறிப்பிட்ட வீதத்தில் இணைத்து உற்பத்தியைத் தொடங்குவதே தொழில் முயல்வோருடைய முக்கியப் பணியாகும். தொழில் முயல்வோராக இருப்பவர் திறமையையும், தகுதியையும் கொண்டிருக்கவேண்டும். தொழில் முயல்வோருடைய பணிகளின் இன்றியமையாமை இங்கிலாந்து நாட்டில் ஏற்பட்ட தொழிற்புரட்சிக்குப் பிறகே உணரப்பட்டது. நல்ல தொழில் முயல்வோரைப் பெற அனுபவம், கல்வி, பயிற்சி ஆகியவை பெரிதும் உதவுகின்றன.

வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் முயல்வோருடைய பணி மிக முக்கிய நிலையைக் கொண்டிருப்பதில்லை. அந்நாடுகளில் பொருளாதார, சமுதாய மேம்பாட்டிற்காக அரசே தொழில் முயல்வோருடைய பல பணிகளையும் ஏற்கின்றது. தொழில் முயல்வோருடைய இலாபம் அந்நாடுகளில் முக்கியமானதாகக் கருதப்படாமல், மக்களின் நலத்திற்காகவே அரசு நடவடிக்கைகளை மேற்கொள்கின்றது. முதலாளித்துவக் கொள்கையைப் பின்பற்றுகின்ற அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றில் தொழில் முயல்வோர் முக்கிய நிலையைக் கொண்டுள்ளனர். அந்நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கும் அவர்கள் பெரிதும் உதவியுள்ளனர். பின்தங்கிய தேக்கப் பொருளாதாரங்களைக் கொண்டுள்ள நாடுகளில் தொழில் முயல்வோரின் அதிக இலாபத்தை அனுமதித்து அதன் மூலம் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது இயலாததாகும். வளர்ச்சியடைந்த நாடுகளில் முதலாளித்துவக் கொள்கை பயனைத்தருவதாக அமைந்திருந்தாலும் கூட, இன்றைய வளர்ச்சியடையாத நாடுகளில் முதலாளித்துவக் கொள்கையை மட்டும் பின்பற்றுவது நன்மை தராது. இன்றைய வளர்ச்சியடையாத நாடுகள் அவ்விதப் பொருளாதாரச் சூழ்நிலைகளைக் கொண்டுள்ளன.

பின்தங்கிய நாடுகளில் தொழில் முயல்வோருடைய பணிகள் சிறப்பாக அமைவதில்லை. தொழில் முயல்வோர்கள் அதிக இலாபத்தைப் பெறுவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளனர். மேலும் அவர்களை அதிக இலாபம் பெறவும் அரசு அனுமதிப்பதில்லை. அதிக இலாபத்தின் மீது வளர்வீத வரிகள் விதிக்கப்படுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளில் இலாபவீதம் மிகக்குறைவாகவே உள்ளது. அதிக இலாப வீதத்தை அனுமதித்து அதன் மூலம் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம் என்பது சிலருடைய கருத்தாகும். ஏனெனில் இலாப வீதத்திற்கும், பொருளாதார வளர்ச்சி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

சமதர்மக் கொள்கையைப் பின்பற்றும் இந்தியா போன்ற நாடுகளில் அரசு பல தொழில்களையும் நாட்டுடைமையாக்குகின்ற நிலை அமைந்திருக்கின்றது. தொழில் முயல்வோரின் மீதும் பல விதக் கட்டுப்பாடுகள் அமைந்துள்ளன. வருவாயிலும், செல்வத்திலும் அதிக அளவுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க இந்திய அரசு தீவிர நடவடிக்கைகளை மேற் கொண்டுள்ளது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் சிறப்பான தொழில் முயல்வோருடைய பணிகள் பெறப்படாமையும் பொருளாதாரத் தேக்க நிலைக்கு ஒரு காரணமாகும். அரசு தொழில் முயல்வோர்களைப் பெற புதிய சில கொள்கைகளை உருவாக்க வேண்டும். உள்நாட்டில் தொழில் முயல்வோருடைய அளிப்பை அதிகரிக்கவேண்டும். அல்லது தொழில் முயல்வோரின் பணிகளை அரசே மேற்கொள்ள வேண்டும். வெளிநாட்டுத் தொழில் முயல்வோருக்கும் ஊக்கமளிக்குமாறு அரசின் கொள்கை அமைவது அவசியமாகும். ஆனால் இந்தியா பெறுகின்ற வெளிநாட்டு உதவியின் பெரும்பகுதி அயல்நாடுகளின் அரசாங்கங்களால் அளிக்கப்படுகின்றது. வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தைக் குறைவாகவே நாம் கொண்டுள்ளோம்.

உள்நாட்டுத் தொழில்முயல்வோருடைய பணிகளோடு அரசும் தொழிலமைப்புப் பணிகளை மேற்கொள்ளுதல் அவசியமாகின்றது. வெளிநாட்டுத் தொழில்முயல்வோரின் முதலீடுகள் குறைந்து வருகின்றன. இவர்களின் முதலீடு அனுமதிக்கப்பட்டால், உள்நாட்டுத் தொழில்முயல்வோர் பாதிக்கப்படுவர். மேலும் வெளிநாடுகளின் செல்வாக்கு உள்நாட்டில் ஏற்பட்டுவிடும்; காலனி ஆதிக்கம் தோன்றவும் அது வழிவகுக்கும் என்ற அச்சம் வெளிநாட்டுத் தொழில்முயல்வோரை அனுமதிப்பதில் அமைந்துள்ளது. அரசின் கொள்கைகள், நிதிவசதிகளைத் தொழில்முயல்வோர் எளிதில் திரட்ட உதவுவதாக அமைய வேண்டும்.

தொழில்முயல்வோர் அதிக இலாபத்தைத் தரக்கூடிய தொழில்களில் முதலீடு செய்யவே விரும்புவார்கள். தவிர குறுகிய

காலத்திலேயே முதலீட்டிற்கான வருவாயைப் பெற அவர்கள் முயலுவார்கள். சமுதாய, பொருளாதார அவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்ய அரசே முதலீடு செய்ய வேண்டும். சான்றாக நீர்ப் பாசன வசதிகள், போக்குவரத்து செய்தித் தொடர்பு வசதிகள், மருத்துவ வசதி, கல்வி வசதி போன்றவற்றின் முன்னேற்றத்திற்காக முதலீடு செய்யமாட்டார்கள். நீண்டகாலத்தில் மட்டுமே பயனையளிக்கக்கூடிய இவற்றை அரசே மேற்கொள்ளவேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்கு இவ்வசதிகள் மறைமுகமாக உதவுகின்றன. மேலும் இவற்றிற்கான முதலீடுகள் அதிக அளவில் தேவைப்படுகின்றன.

வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் முயல்வோரால் அதிக கண்டுபிடிப்புகள் செய்யப்படுவதில்லை. வளர்ச்சியடைந்த நாடுகளின் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளே வளர்ச்சியடையாத நாடுகளில் பின்பற்றப் படுகின்றன. மேம்பாடடைந்த நாடுகளில் தொழில் முயல்வோருடைய பணிகளால் பல கண்டுபிடிப்புகள் ஏற்பட்டன. விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு இக்கண்டுபிடிப்புகள் பெரிதும் உதவின. பின்தங்கிய நாடுகளின் திட்டங்களால் தொழில் முயல்வோருடைய நிலை தாழ்ந்து விட்டது. தனியார் துறைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்ற நாடுகளில் தான் தொழில் முயல்வோருடைய பணிகள் சிறப்பாகப் பெறப்படுகின்றன. முதலாளித்துவக் கொள்கையைப் பின்பற்றுகின்ற பொருளாதாரங்களில்தான் தனியார்துறை முன்னேற வாய்ப்புக்கள் அதிகமுண்டு. ஆனால், பல வளர்ச்சிகுன்றிய பல நாடுகளும் சமதர்மக் கொள்கைகளையே பின்பற்றிவருகின்றன. தனியார் துறை, முக்கிய நிலையைக் கொண்டு இந்நாடுகளில் அமைவதில்லை.

சில வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் முயல்வோருடைய சொத்தின் மீது அதிக வரி விதிப்பு செய்யப்படுவதில்லை. நிர்வாக அமைப்பு முறை சரியாக இல்லாமையே இதற்குக் காரணமாகின்றது. தொழில் முயல்வோருடைய பணிகளைப் பின் தங்கிய நாடுகள் பெற வேண்டும். ஆனால் அவர்களைத் தாங்கள் விருப்பம் போல செயலாற்ற அனுமதிக்கக் கூடாது. தொழில் முயல்வோருடைய சிறப்பான பணிகளைப் பெற வேண்டுமானால் அதிக இலாபத்தை அவர்கள் பெற அனுமதிக்க வேண்டும். பொதுவாக சமதர்மக் கொள்கையைப் பின்பற்றுகின்ற நாடுகளில் தனியார் அதிக இலாபத்தைப் பெறுவது அனுமதிக்கப் படுவதில்லை.

தலையிடாமைக் கொள்கை செல்வாக்கை இழந்துவிட்டது. சமதர்க் கொள்கை விரைவாகப் பல வளர்ச்சியடையாத நாடுகளில் பரவிவருகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளிலும் தொழில் முயல்வோருடைய முக்கியத்துவம் குறைந்துள்ளது. ஷீம்பீட்டரும்,

தொழில் முயல்வோரின் நிலை தாழ்வடையும் என்பதைக் குறிப்பிட்டிருக்கின்றார்.

இயக்க நிலையில் பொருளாதாரம் இல்லாவிட்டால் தொழில் முயல்வோருடைய பணிகள் தேவைப்பட மாட்டா. தொழில் முயல்வோருடைய பணிகள் தற்பொழுது முக்கியத்துவத்தை இழந்துவருகின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவினாலும் கூட விரைவான வேகத்தில் அவர்கள் முக்கியத்துவத்தை இழப்பார்கள். சமீபகாலத்தில் கண்டுபிடிப்புகள், பயிற்சி பெற்றவர்களாலும், தொழில் வாணிபம் போன்றவைகளில் தனித் தேர்ச்சி பெற்றவர்களாலும் செய்யப்படுகின்றன. பழைய காலத்தில் தொழில் முயல்வோரே பல கண்டுபிடிப்புகளுக்கும் காரணமாக இருந்தனர். பொருளாதார முன்னேற்றமென்பது தனிப்பட்ட தொழில் முயல்வோரைச் சார்ந்துதான் அமையவேண்டும் என்பது அவசியமானதல்ல என்பது உணரப் பெற்றுள்ளது. முன்னேற்றத்தைப் பெற பல குழுக்கள் அமைக்கப்படுகின்றன. தகுதி பெற்ற உறுப்பினர்களைக் கொண்ட இக் குழுக்கள் ஆக்கப்பணிகளை ஊக்குவிக்கப் பெரிதும் உதவுகின்றன.

தொழில் அமைப்பாளர்களின் முன்னேற்றத்திற்குப் பின்வரும் காரணிகள் தடையாக உள்ளன;

(1) போதிய பண ஊக்கங்கள் அளிக்கப்படாமை ;

(2) தொழில் முயல்வோரின் தாழ்வான நிலை ;

(3) புதிய தொழில்களில் அமைந்துள்ள பெரிய இடர்கள் ;

(4) சமுதாய அமைப்பில் மாறுதலும், உழைப்பின் பெயர்ச்சியும் இல்லாமை ;

(5) குறைகளையுடைய சந்தைகள் ;

(6) அரசின் நிர்வாகச் சட்டங்களில் அடிக்கடி ஏற்படும் மாற்றங்கள் ;

(7) எதிர்காலத்தைப் பற்றிய உறுதியற்ற நிலை ;

(8) பல இடர்களை ஏற்றும் அதிக இலாபத்தைப் பெற முடியாத நிலை.

தொழில் முயல்வோருக்குச் சாதகமான சூழ்நிலைகளை உருவாக்குவதோடு, அவர்களின் திறமையையும் வளர்க்கவேண்டும். நீண்டகாலத்தில் அமைந்திருக்கக் கூடிய தொழில் முயல்வோர்களின் பணி தேவைப்படுகின்றது. அவர்கள் குறுகிய காலத்தில் மட்டும் ஈடுபடக் கூடிய 'ஊக வணிகர்களாக' (Speculators) இருக்கக்கூடாது. குறுகிய காலத்தில் இலாபத்தைப் பெறும்

நோக்குடைய வியாபாரிகளைப் போல அவர்கள் அமையக் கூடாது. தொடக்கநிலையில் சில இடர்களைக் கொண்ட தொழில் நிறுவனங்களை அரசு ஏற்படுத்தி, சில காலம் சென்றபின் அவற்றைத் தனியாரிடம் ஒப்புவிக்கலாம்.

அரசு தொழில் முயல்வோரை ஊக்குவிக்க அவர்களுக்கு அதிகச் சொத்துரிமைகளை வழங்கலாம். அடிக்கடி நிர்வாக அமைப்புகளில் மாற்றங்களைக் கொண்டுவர அரசு சட்டங்களைத் திருத்தக் கூடாது. நிர்வாகத்தை ஒழுங்குபடுத்த எடுக்கப்படும் இம்முறைகள் தொழில் முயல்வோரை ஊக்கமிழக்கச் செய்து விடும். சமுதாய, பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய வசதிகளையும் அரசு செய்துதர வேண்டும். பொருளாதாரத்தின் உறுதித்தன்மை நிலைபெற்றிருக்க வேண்டும். அரசின் பணக் கொள்கையும், நிதிக்கொள்கையும் தொழில் முயல்வோருக்குச் சாதகமாக அமைதல் அவசியமாகும் அரசு பெரிய தொழில் திட்டங்களை மேற்கொள்ளும்போது, சிறு தொழில்களில் தொழில் அமைப்பாளர்களின் பணி பெறப்பட வேண்டும். பொதுத்துறையில் அரசு மேற்கொள்கின்ற பெரிய திட்டங்களால் பொருளாதாரத்தில் பல வசதிகள் பெருகுகின்றன. இதன் மூலம் சிறிய தொழில்களைத் தொழில் அமைப்பாளர்கள் தொடங்குவது எளிதாக்கப்படுகின்றது. அதிக நிலங்களைச் சாகுபடிக்கு அரசு கொண்டுவருவதன் மூலமும், அதிக மின்சார உற்பத்தியின் மூலமும், திட்டங்களின் மூலமும் தனியார் தொழில் வளர வாய்ப்பு ஏற்படும்.

தொழில் அமைப்பாளர்களின் அளிப்பு, சமுதாய, பண்பாட்டு மாற்றங்களைக் கொண்டும் அமையும். முன்னேற்ற முயற்சிகளுக்கான தலைமையை அளிப்பவர்கள் தொழில் முயல்வோரே ஆவர். தொழில் முயல்வோர்கள் தற்பொழுது அதிக அளவில் வியாபாரத்திலும், ஊக வாணிபத்திலும், பணத்தை வட்டிக்கு அளிப்பதிலும் ஈடுபட்டுள்ளனர். இந்நிலையை மாற்றி அவர்களை ஆக்கப் பணிகளில் பயன்படுத்த வேண்டும். பல புதிய கண்டுபிடிப்புகளுக்காக அரசுகள் சமீப காலத்திலிருந்து அதிக மூலதனத்தை ஒதுக்கி வருகின்றன. எனவே தனியார் துறையினர் இக் கண்டுபிடிப்புகளின் பயனை எளிதில் பெற முடியும். தனியார் துறையினர் கண்டுபிடிப்புக்களுக்காக அதிக மூலதனத்தை ஒதுக்க முடியாது. தொழில் நுணுக்கக் கண்டுபிடிப்புக்களை வளர்ச்சியடைந்த நாடுகளினின்றும் இறக்குமதி செய்யலாம். நாளடைவில் அக் கண்டுபிடிப்புகளின் மாதிரிகளை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய இயலும்.

தொடர்ச்சியாக பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது தொழில் அமைப்பாளர்களின் தேவையானது பெருகும். தொழில் முயல்வோரும் எண்ணிக்கையில் அதிகரிப்பார்கள். பொருளாதார மேம்பாட்டிற்குத் தொழில் அமைப்பாளர்களின் பணி அவசியமாகின்றது; தொழில் அமைப்பாளர்களின் அதிக அளிப்பிற்குப் பொருளாதார முன்னேற்றமும் உதவுகின்றது. பின் தங்கிய பொருளாதாரத் தேக்க நிலை மாறும் போதும்; சந்தைகள் விரிவடையும் போதும்; சேமிக்கும் திறன் அதிகரிக்கும் போதும் தொழில் முயல்வோரின் பணிகளைப் பெற வாய்ப்பு ஏற்படுகின்றது. பெரிய தொழில்களையும், இலாபம் குறைவாகக் கிடைக்கக் கூடிய தொழில்களையும் பொதுத் துறையில் அமைக்கவேண்டும். சிறு தொழில்களும், கணிசமான இலாபம் கிடைக்கும் தொழில்களும் தனியார் துறையில் அமைய வேண்டும். இதன் மூலமே வளர்ச்சி குன்றிய நாடுகள் தொழில் முயல்வோரின் சிறப்பான பணிகளைப் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெற முடியும்.

### 3. முடிவுகளை எடுத்தல்

தனியார் நிறுவனப் பொருளாதாரத்தில், முக்கியமான முடிவுகளில் பல தொழில் முயல்வோரால் எடுக்கப்படுகின்றன. திட்டமிட்டப் பொருளாதாரத்தில், அரசே முக்கிய முடிவுகளை எடுப்பதாக உள்ளது. உற்பத்திக் காரணிகளை எவ்வகைகளில் பயன்படுத்தலாம் என்பது பற்றியும், உற்பத்தி முறைகள், பல்வேறு துறைகள், சேமிப்பு வீதம், முதலீடு வீதம், உற்பத்திப் பொருள்களைப் பகிர்வது ஆகியவை பற்றியும் முடிவுகள் எடுக்கப் பெறுகின்றன. உற்பத்திக் காரணிகளை எந்தெந்த வீதங்களில் சேர்த்து உற்பத்தியை மேற்கொள்வது என்பதைச் சரியான அளவில் தீர்மானிக்க வேண்டும். விலைகளின் நிலை எவ்வாறு அமைந்திருந்தால் உற்பத்தியாளார்களுக்கு ஊக்கமளிப்பதாகவும், நுகர்வோரின் நலனைப் பாதிக்காமல் இருப்பதாகவும் அமையும் என்பதை அறிய வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்குச் சிறப்பான முடிவுகளை எடுப்பது முக்கியமானதாகும். முடிவுகளை எடுப்பவர்கள் திறமையற்றவர்களாகவும், பொருத்தமற்றவர்களாகவும் இருந்தால் உற்பத்தி வசதிகள் வீணடிக்கப்படும். உற்பத்தி வசதிகள் பயன்படுத்தப் படாமல் இருக்கலாம்; அல்லது முற்றிலும் பயன்படுத்தப் படாமல் இருக்கவும் வாய்ப்பு உண்டு. உற்பத்தி வசதிகள் குறைந்த அளவு ஆக்கத்தை அளிக்கக் கூடிய துறைகளிலும் பயன்படுத்தப் படுகின்றன. இதனால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடிவதில்லை.

ஒரு நாட்டில் குறைந்த வசதிகளே அமைந்திருந்தாலும் கூட, திறமையான முடிவுகளை எடுப்பவர்கள் இருந்தால் குறைந்த வசதிகளைச் சிறப்பாகப் பயன்படுத்தி விரைவான முன்னேற்றத்தைப் பெற முடியும். நீண்ட காலத்தில் முன்னேற்றத்திற்கான வசதிகளைப் பெருக்கிக்கொள்ள வாய்ப்பு அமைந்திருக்கின்றது. திறமையான முடிவுகளை எடுப்பவர்கள், பொருளாதார மாற்றங்களால் சில தவறான முடிவுகளை எடுப்பது தவிர்க்க இயலாதது. உள் நாட்டின் சட்டம் ஒழுங்கு, பணத்திட்டம், நிதித்திட்டம், விலை, வருவாய், சந்தை அமைப்பு ஆகியவை மாறிய வண்ணம் அமைந்திருக்கின்றன. சொத்துக்கள், நிலவுடைமைகள் ஆகியவைகளிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இவ்விதமான பொருளாதாரச் சூழ்நிலைகளின் மாற்றத்திற்கு அரசே முக்கியக் காரணமாக அமைகின்றது. எனவே அரசு பொருளாதாரத்தின் பல துறைகளையும் கட்டுப்படுத்தக் கூடிய அதிகாரங்களைக் கொண்டுள்ளது. முடிவுகளைச் சரியாக எடுப்பதற்குச் சாதகமான நிலைகளை அரசு உருவாக்க வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் பல முடிவுகளும் அரசாங்கத்தால் எடுக்கப் படுகின்றன. பலவிதக் கொள்கைகளும் தீர ஆராயப்பட்டு அதன் பின் செயல்படுத்தப் படுகின்றன. இந் நாடுகளில் அரசுகள் முடிவுகளை எடுப்பதற்கு, திட்டக் குழுக்கள், ஆலோசனைக் குழுக்கள் ஆகியவற்றை அமைக்கின்றன. தனியார் துறையிலும் முடிவுகள் எடுக்கப் படுகின்றன உற்பத்தியின் அளவு, தரம், உழைப்பாளர்களின் எண்ணிக்கை, மூலதனத்தின் தேவை, உற்பத்திப் பொருட்களுக்கான தேவையின் அளவு, விற்பனை, விலை போன்ற பல நிலைகளும் ஆராயப்பட்டு முடிவெடுக்கப் படுகின்றது. எனினும் அரசின் முடிவுகள் தனியார் துறையின் முடிவுகளை மாற்றும் தன்மையைக் கொண்டுள்ளன. பின் தங்கிய பல நாடுகளில் அரசின் தீவிரக் கொள்கைகளின் மூலமாகத் தான் முன்னேற்றத்தைப் பெற முடியும் சிறப்பான அரசின் முடிவுகளும், திட்டங்களும் வளர்ச்சி வீதத்தை நிர்ணயிக்கின்றன.

## IV. சமுதாயப் பண்பாட்டுக் காரணிகள் (Socio-cultural Factors)

முன்னேற்றத்திற்குப் பல பொருளாதாரக் காரணிகள் உதவுவதுபோல, வேறு சில காரணிகளும் பொருளாதார முன்னேற்றத்தோடு தொடர்பு கொண்டுள்ளன. பொருளாதாரக் காரணிகளும் சமுதாயப் பண்பாட்டுக் காரணிகளும் ஒன்றையொன்று சார்ந்து அமைந்துள்ளன. பொருளாதார மாற்றங்கள் சமுதாய, அரசியல் விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. இதைப் போன்று சமுதாய அமைப்பு முறையின் மாற்றங்கள் பொருளாதார மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற

பொருளாதாரக் காரணிகளோடு பிற சமுதாய, அரசியல் காரணிகளும் கருதப்பட வேண்டும். ஒரு நாட்டின் வளர்ச்சிக்குப் பொருளாதாரக் காரணிகள் முக்கியத்துவத்தைக் கொண்டிருப்பது போலவே பிற காரணிகளும் முக்கிய நிலையைக் கொண்டுள்ளன.

பின்வரும் சமுதாயப் பண்பாட்டுக் காரணிகள் பொருளாதார முன்னேற்றத்தோடு தொடர்பு கொண்டுள்ளவைகளாகும் :

1. மக்களின் பழக்க வழக்கங்கள் ;
2. மதங்கள் ;
3. அரசின் அமைப்பு முறை ;
4. கல்வியின் அளவு ;
5. மக்களின் ஆரோக்கிய நிலை ;
6. நிலவுடைமை முறை ;
7. மக்களின் நோக்கங்களும், நடவடிக்கைகளும் ;
8. மதிப்பின் அமைப்பு ;
9. நிர்வாக அமைப்பு, தொழில் நுட்பத்திறமைகள் ;
10. தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளின் முன்னேற்றம்;
11. தொழில் முயல்வோரின் பணி;
12. தொழில் நுட்ப, அமைப்புமுறைக் கண்டுபிடிப்புக்கள்.

பொருளாதாரக் காரணிகளுக்கும், பிற காரணிகளுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளைப் பற்றி பல பொருளியலறிஞர்களும் விளக்குகின்றனர். ஜாகப் வைனெர் (Jacob Viner) பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :

"பொருளாதார முன்னேற்றமென்பது நிலத்திலிருந்தும் அதிக நிலக்கரியை எடுப்பதோ, அதிக மூலதனத்தை மட்டும் பெறுவதோ அல்ல. முன்னேற்றமடைந்த நிலையில் மனித முயற்சிகளும், நிர்வாக முறைகளும் சிறப்பாக அமைகின்றன. இதற்குக் காரணமாக இருப்பவை கல்வி, ஆரோக்கியம், சிறப்பான அரசியல் சமுதாய அமைப்புக்கள் ஆகியவைகளாகும். ஒரு நாட்டின் வறிய நிலைக்குப் பொருளாதாரக் காரணிகள் மட்டும் காரணமாக அமைவதில்லை. அரசியல், சமுதாய பண்பாட்டுக் காரணிகள் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுகின்றன. இக் காரணிகளில் சிறப்பான முன்னேற்றம் ஏற்படுவதின் மூலமே வறிய நிலையை நீக்க முடியும்."[1]

[1]Jacob Viner cited in J. W. Williams, Economic Stability in a changing world, p. 16.

குன்னர் மிர்டால் (Gunnar Myrdal) விளக்குவதாவது, பொருளாதாரக் காரணிகளையும் பிற காரணிகளையும் வேறுபடுத்தக் கூடாது என்பதையாகும். அரசியல், சமுதாய, பண்பாட்டுக் காரணிகள் யாவும் பொருளாதாரக் காரணிகளோடு இணைந்தவை என அவர் கூறுகின்றார். இதுபற்றிக் கருத்து வேறுபாடுகள் பொருளாதார நிபுணர்களிடையே அமைந்துள்ளன. பின்தங்கிய நாடுகளில் தொன்மைச் சமுதாய அமைப்பு முறை உள்ளமையே பொருளாதார முன்னேற்றத்தில் தேக்கநிலை உள்ளமைக்கு முக்கியக் காரணமாகும். பழைமையான நோக்குகளை உடைய சமுதாய அமைப்புக்கள் பின்தங்கிய நாடுகளில் உள்ளன. மத, இன, சாதி வேறுபாடுகள் திகழ்கின்றன. குறுகிய சமய நோக்கங்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பாதிக்கின்றன. கல்வி வசதிகள், மருத்துவ வசதிகள் ஆகியவையும் வளர்ந்திருப்பதில்லை. சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் ஏற்படாமையால் உழைப்பின் பெயர்ச்சியும் ஏற்படுவதில்லை. மக்களின் பழக்க வழக்கங்கள் முன்னேற்றத்திற்குத் தடையாக அமைகின்றன.

வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் பழைமை நோக்குள்ள வேளாண்மை மக்கட்தொகை அதிக அளவில் அமைந்துள்ளது. கிராம மக்கள் மாற்றங்களை எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. வோளாண்மையில் விரைவான வளர்ச்சி ஏற்படாமைக்கு இதுவே காரணமாகும். கிராமப்புறங்களில் சேமிப்பு வீதம் குறைவாக உள்ளது. கிராமமக்கள் தங்களுடைய வருவாயின் பெரும்பகுதியை நுகர்விலும், வீணான செலவுகளிலும் பயன்படுத்துகின்றனர். மதச்சடங்குகள், திருமணங்கள் ஆகியவைகளுக்காக அவர்கள் அதிகச் செலவு செய்கின்றனர்.

புதிய தேவைகள், புதிய நோக்கங்கள், புதிய உற்பத்தி முறைகள், புதிய அமைப்பு முறைகள் ஆகிய யாவும் தோன்றுவதின் மூலம்தான் நாட்டு வருவாயை அதிகரிக்க முடியும். பின் தங்கிய வறிய நிலையில் உள்ள மக்களின் நிலை உயர வேண்டுமென்றால், சமுதாய அமைப்பு முறைகளில் மாற்றங்கள் தேவைப் படுகின்றன. மக்களின் பழைய நோக்குகள், மத நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றில் மாற்றங்களை ஏற்படுத்துவதின் மூலமே பின்தங்கிய நாடுகள் விரைவான வளர்ச்சியைப் பெற இயலும். பொருளாதாரக் காரணிகளோடு பிற காரணிகளும் பொருளாதார முன்னேற்றத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

# 3. மேம்பாடடைந்த சில பொருளாதாரங்களின் இயல்புகளும், படிப்பினைகளும்

பொருளாதார முன்னேற்றம் உலகின் பல நாடுகளுக்கிடையே வேறுபடுகின்றது. சில நாடுகள் பொருளாதார நிலையில் முன்னேற்றமடைந்திருக்கின்றன; பல நாடுகள் பொருளாதார நிலையில் பின்தங்கியிருக்கின்றன. வளர்ச்சியடைந்த நாடுகளுக்குள்ளும் முன்னேற்றத்தின் அளவில் வேறுபாடுகள் உள்ளன. பின் தங்கிய நாடுகளுக்கிடையேயும் வேறுபாடுகள் அமைந்துள்ளன. வளர்ச்சியடைந்த உலகின் சில நாடுகளில் மக்கள் தரமான வாழ்வைப் பெற்றிருக்கின்றனர். வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு உதாரணமாக இங்கிலாந்து, அமெரிக்கா, சோவியத் ரஷ்யா, ஜப்பான் போன்ற நாடுகளைக் கூறலாம். வளர்ச்சியடைந்த உலகில் நான்கில் மூன்று பகுதியாக இந்நாடுகள் அமைந்துள்ளன. தலா வருவாயில் விரைவான வளர்ச்சியைப் பெற்றுவரும் நாடாக இன்று ஜப்பான் திகழ்கின்றது. சோவியத் ரஷ்யாவின் வளர்ச்சியும் விரைவாகப் பெறப்பட்டு வருகின்றது. இங்கிலாந்தும், அமெரிக்காவும் முன்னமேயே உயர்ந்த அளவு பொருளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற்றுவிட்டன. இவ்விரு நாடுகளும் ஒரு நூற்றாண்டிற்கு முன்பு வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தைக் கொண்டிருக்கவில்லை. ஆனால் தற்பொழுது பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவிட்ட நாடுகளாக அவை அமைந்துள்ளன.



இந்நாடுகள் பொருளாதார மேம்பாட்டைப் பெற பலவகைப்பட்ட கொள்கைகளைப் பின்பற்றின. அவற்றின் கொள்கைகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவின. அக் கொள்கைகளால் பின்தங்கிய பொருளாதார நிலை மாறி இன்று வளர்ச்சியடைந்த பொருளாதார நிலையை அவை பெற்றுள்ளன. வரலாற்று விபத்துக்களால் பல பொருளாதார மாற்றங்கள் இந்நாடுகளில் விளைந்தன. உலகப்போர்கள் நடைபெற்ற காலங்களிலும், அதற்குப் பிறகும் வெவ்வேறு வகைப்பட்டக் கொள்கைகள் இந்நாடுகளில் பின்பற்றப்பட்டன. இக் காரணங்களால் பொருளாதார அமைப்புக்

களில் மாற்றங்கள் தோன்றின. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவிய இந் நாடுகளின் கொள்கைகளை இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, பர்மா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளும் பின்பற்றலாம். இதன் மூலம் பொருளாதாரத் தேக்க நிலை மாறி, பொருளாதாரத்தில் இயக்கநிலை தோன்றும். வளர்ச்சியடைந்த நாடுகள் பின்பற்றிய எல்லாக் கொள்கைகளையும் இன்றைய பின்தங்கிய நாடுகள் கைக்கொள்ள இயலாது. ஏனெனில் பொருளாதார நிலைகள் நாடுகளுக்கிடையே பெரிதும் வேறுபடுகின்றன. ஆனால் வளர்ச்சியடைந்த நாடுகள் பின்பற்றிய சில கொள்கைகளைப் பின்தங்கிய நாடுகள் கைக்கொண்டு, அதன் மூலம் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம்.

பொருளாதார வளர்ச்சிக்கான கொள்கைகள் பல நாடுகளிலும் வெவ்வேறு வழிகளில் பின்பற்றப்படுகின்றன. ஜப்பான், பொருளாதார முன்னேற்றத்தைச் சிறு பண்ணைகள், சிறு தொழிற்சாலைகள் ஆகியவற்றை வளர்த்து அதன் மூலம் பெற்றது. உழைப்புச் செறிந்த உற்பத்தித் தொழில் நுணுக்கங்கள் வேளாண்மை, தொழில் துறைகளில் பின்பற்றப்பட்டன. ஏற்றுமதிக்கான உலகச் சந்தையை வெற்றிகரமாகப் பெற்ற நாடு ஜப்பான் ஆகும். ஜப்பானில் மக்கட்செறிவு மிகுதியாக இருந்தமையால் உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகள் பின்பற்றப்பட்டன. அமெரிக்கா. சோவியத் ரஷ்யா போன்ற நாடுகளில் வேளாண்மையில் பெரிய பண்ணைகள் ஏற்படுத்தப் பெற்றன. பெரிய அளவு நிலப்பரப்பைக் கொண்டு, குறைந்த மக்கட்தொகையை இந்நாடுகள் கொண்டிருந்தமையால் பேரளவு உற்பத்தி முறையைப் பின்பற்றின. பெரிய தொழில்கள் இவ்விரு நாடுகளிலும் அமைக்கப்பட்ட பிறகுதான் விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் அமெரிக்கா பன்னாட்டு வாணிபத்தில் பெருமளவு ஈடுபட்டது. சோவியத் ரஷ்யா அதிக வெளியுலகத் தொடர்பின்றியே முன்னேற்றத்தைப் பெற்றது. அதிக வெளிநாட்டு உதவி இன்றியும், அதிக அளவு வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபடாமலும் ரஷ்யா பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றது குறிப்பிடத்தக்கதாகும். இங்கிலாந்து, ஜப்பான் ஆகிய நாடுகள் வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபட்டதாலேயே மிக விரைவான வளர்ச்சி வீதத்தைப் பெற முடிந்தது. அமெரிக்கா, சோவியத் ரஷ்யா ஆகிய நாடுகளின் வசதிகளில் எட்டில் ஒரு பங்கிற்கும் மேலாக நாட்டின் பாதுகாப்புப் பணிகளுக்குச் செலவிடப்பட்டது. இங்கிலாந்திலும் இராணுவச் செலவிற்காக அதிக மூலதனம் ஒதுக்கப் பெற்றது. ஆனால் ஜப்பானில் இராணுவத்திற்காக அதிகச் செலவு செய்யப்படவில்லை என்றே கூறவேண்டும். எனவே

இந்நான்கு நாடுகளுக்கிடையேயும் பொருளாதார முறைகளில் வேறுபாடுகள் அமைந்துள்ளன. ஆனால் எல்லா நாடுகளும் கல்வி, தொழில் நுணுக்கம், முதலீடு, உள்நாட்டுச் சேமிப்பு, தொழில் முன்னேற்றம் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் அளித்தன என்பது மறுக்க இயலாத உண்மையாகும்.

பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றி நன்குணர உலகின் சில நாடுகளின் பொருளாதார வளர்ச்சியைப் பற்றி அறிவது இன்றியமையாததாகும். வெவ்வேறு அரசியல், பொருளாதார, சமுதாய, கலாச்சார அமைப்புக்களைக் கொண்டிருக்கும் இங்கிலாந்து, அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான் ஆகிய நான்கு வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சிபற்றி உணர்வது நன்மை பயப்பதாகும். சமீபகாலத்தில் ஜப்பானின் பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றி ஆராய்வது முக்கியத்துவம் பெற்று வருகின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றி முழுமையான அறிவைப் பெற ஜப்பானின் பொருளாதார வளர்ச்சி பற்றி அறிவதும் அவசியமாகின்றது. உலகின் பல நாடுகளுக் கிடையே பொருளாதார அமைப்புக்கள், அவற்றின் இயல்புகள் ஆகிய யாவும் மாறுபடுகின்றன. வளர்ச்சிக் குன்றிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது அவசியமாகின்றது. இந்நாடுகள் வளர்ச்சியடைய முன்னேற்றமடைந்த நாடுகளின் வழி முறைகளைப் பின்பற்றலாம் பின்தங்கிய பொருளா தாரத்தைக் கொண்டுள்ள இந்தியா போன்ற நாடுகள் வளர்ச்சி யடைந்த நாடுகளின் அனுபவங்களைப் பற்றி அறிந்து, தங்கள் நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கேற்ப கொள்கைகளை உருவாக்கி விரைந்த வளர்ச்சியைப் பெற முயலவேண்டும்.

வளர்ச்சியடையாத பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகள், வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளின் பொருளாதார வரலாற்றினின்றும் தெரிந்து கொள்ள வேண்டியவை பலவாகும். மேம்பாடடைந்த நாடுகளின் வளர்ச்சி முறைகள், பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத் திற்கு வழிகாட்டியாக அமைகின்றன. வளர்ச்சியடைந்த நாடு களின் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் பல வெற்றிகள் ஏற்பட்டன; தோல்விகளும் தோன்றின. போர்க்காலங்களில் இந் நாடுகள் எடுத்த நடவடிக்கைகளும், போர் முடிவடைந்த பிறகு பின்பற்றப் பட்டக் கொள்கைகளும் இன்றைய வளர்ச்சிக்குன்றிய நாடுகளால் அறியத்தக்க நிலையைக் கொண்டுள்ளன. பொருளா தார மந்தக் காலங்களில் வெவ்வேறு வகைப்பட்டக் கொள்கைகள் வளர்ச்சியடைந்த நாடுகளால் கைக்கொள்ளப் பெற்றன. இவ் வகைப்பட்டக் கொள்கைகளை வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் அறிந்திருப்பது நன்மை தருவதாகும். வளர்ச்சியடைந்த நாடுகள்

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்ற நிலைகளில் பொருளா தார, சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் ஏற்பட்டன. பொருளாதார அமைப்புக்களில் மாற்றங்களையும், வளர்ச்சியையும் பெறுவது சற்று எளிதானதேயாகும்; ஆனால் சமுதாய அமைப்புக் களில் மாற்றங்களைப் பெறுவது கடின நிலையைக் கொண்டிருக் கின்றது. சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் ஏற்படாமையே பின் தங்கிய நாடுகள் குறைந்த அளவில் வளர்ச்சி வீதத்தைக் கொண்டுள்ளமைக்கு முக்கியக் காரணமாகும். அரசின் அதிக முத லீட்டால் பொருளாதார அமைப்புக்களில் முன்னேற்றத்தைக் குறுகிய காலத்தில் கூட பெற்று விடலாம். ஆனால் சமுதாய மாற் றங்கள் தோன்ற நீண்டகாலம் பிடிக்கின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளில் சமுதாய அமைப்புக்களின் மாற்றங்கள் விரைவாக ஏற் பட்டமை விரைந்த பொருளாதார வளர்ச்சிக்கு வகை செய்தது.

மேம்பாடடைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற் கான கொள்கைகள் வேறுபடுகின்றன. வளர்ச்சியடைந்துவரும் நாடு கள் தங்கள் பொருளாதாரச் சூழ்நிலைகளுக்குத் தக்க முன்னேற்றக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். வளர்ச்சியடைந்த நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப்பெற நீண்டகாலம் பிடித் தது. ஏனெனில் பலவிதத் தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் பொருளாதார முன்னேற்ற நிலைகளிலேயே பயன்படுத்தப்பட்டன. இயந்திர உற்பத்தி முறைகள், தொழிற் சிக்கனங்கள், பேரளவு உற்பத்தி முறைகள், வேலைப் பகுப்புமுறை, வட்டார வேலைப் பகுப்பு முறை ஆகிய யாவும் படிப்படியாகவே தோன்றின. பல கண்டுபிடிப்புகளும் அப்போதுதான் ஏற்பட்டன. ஆனால் இன்றைய வளர்ச்சிக்குன்றிய நாடுகள் குறுகிய காலத்திலேயே பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான வாய்ப்புக்கள் உள்ளன. ஏனெனில் வளர்ச்சியடைந்த நாடுகளில் பயன்படுத்தப் படுகின்ற தொழில் நுட்ப உற்பத்தி முறைகளையும், கண்டுபிடிப்பு களையும் வளர்ச்சியடையாத நாடுகள் அப்படியே பின்பற்ற முடியும்.

உலகின் ஒரு சில நாடுகள் மட்டுமே வளர்ச்சியடைந்த பொரு ளாதாரத்தைப் பெற்றிருக்கின்றன. இந் நாடுகளில் மட்டுமே மக்கள் உண்மை வருவாயை உயர்வாகப் பெற்று நல்ல வாழ்க்கைத் தரத்தைக் கொண்டுள்ளனர். இந் நாடுகளோடு ஒப்பிட்டு நோக் கும்போது, வறிய நிலையைக் கொண்டிருக்கும் நாடுகளே அதிக எண்ணிக்கையில் உள்ளன. இந் நாடுகளில் மக்களின் வாழ்வின் தரம் மிகத் தாழ்வாக இருக்கின்றது ; தலா வருவாயானது மிகக் குறைவாக உள்ளது. சாதாரண சராசரி வாழ்க்கைத் தரத்தைக் கூட மக்கள் பின்தங்கிய நாடுகளில் பெற்றிருப்பதில்லை. பொரு

ளாதார வளர்ச்சி வீதத்தில் பின்தங்கிய நாடுகளுக்கும், மேம்பாடடைந்த நாடுகளுக்கும் இடையே அதிக வேறுபாடு அமைந்துள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளுக்கிடையேயும், வளர்ச்சியடையாத நாடுகளுக்கிடையேயும் வளர்ச்சி வீதத்தில் வேறுபாடுகள் உள்ளன. ஆனால் இவ்வேறுபாடுகளில் மிக அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் அமைந்திருப்பதில்லை.

வளர்ச்சியடைந்த நாடுகளுக்குச் சான்றாக மேற்கு ஐரோப்பிய நாடுகளையும், சோவியத் ரஷ்யா, அமெரிக்கா, ஜப்பான், தென் ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, கனடா ஆகிய நாடுகளையும் குறிப்பிடலாம். இவற்றுள் இங்கிலாந்து, அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான் ஆகியவற்றின் பொருளாதார வரலாற்றைப் பற்றி அறிவது பின்தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும்.

## கிரேட் பிரிட்டன்

ஐரோப்பாவின் கரையிலுள்ள கிரேட் பிரிட்டன் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, வேல்ஸ் ஆகியவற்றை உள்ளடக்கிய பெரிய தீவாகும். உலக நாடுகளுக்குள் பரப்பளவின் அடிப்படையில் கிரேட் பிரிட்டன் எழுபத்தைந்தாவது இடத்தைப் பெறுகின்றது. இது உலக மக்கள் தொகையில் 2 சதவீதத்திற்கும் குறைவான மக்கள் தொகையைக் கொண்டுள்ளது; உலகின் மொத்த நிலப் பரப்பில் சுமார் 0·18 சதவீதத்தைக் கொண்டிருக்கின்றது. ஆனால் கிரேட் பிரிட்டன் மக்கள் செறிவு மிகுந்த நாடாகும். இதைப் போன்ற ஜப்பான், பெல்ஜியம், நெதர்லாந்து ஆகிய நாடுகளும் அதிக மக்கள் நெருக்கத்தைக் கொண்ட நாடுகளாகும். அமெரிக்காவில் ஒரு சதுரமைல் பரப்பளவில் வாழ்பவர்களின் எண்ணிக்கையைவிட, கிரேட் பிரிட்டனில் ஒரு சதுர மைல் பரப்பளவில் வாழ்பவர்களின் எண்ணிக்கை ஒன்பது மடங்கு அதிகமானதாகும். கிரேட் பிரிட்டன் பன்னாட்டு வாணிபத்தில் உலக நாடுகளில் இரண்டாவது இடத்தை வகிக்கின்றது. உலகின் வாணிபத்தில் பத்தில் ஒரு பகுதி கிரேட் பிரிட்டனால் செய்யப்படுகின்றது. உலகின் ஏற்றுமதிகளில் ஐந்தில் ஒரு பகுதியை இது இறக்குமதி செய்கின்றது. கோதுமை, பால் பண்டங்கள், மாமிசம், தானியங்கள், பழங்கள், தேயிலை, புகையிலை, மரப் பொருட்கள், கம்பளி போன்றவை இறக்குமதியாகின்றன. உலகின் மொத்த ஏற்றுமதியில் ஆறில் ஒரு பகுதியை கிரேட் பிரிட்டன் செய்கிறது. பெரும்பாலும் பொறிசெய்ப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஆகாய விமானங்கள், கார்கள், பீற ஊர்திகள், மின்சாரச் சாதனங்கள், இரசாயனப் பொருட்கள், நெசவுப் பொருட்கள், பலவகைப்பட்ட இயந்திரங்கள்

ஆகியவை மிக அதிக அளவிற்கு ஏற்றுமதியாகின்றன. 80 சதவீத மக்கட்தொகை நகர்ப்புறங்களில் வசிக்கின்றது; 4 சதவீத மக்கட்தொகை மட்டுமே வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. உலகின் ஒரு சில நாடுகளில் மட்டுமே வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கட்தொகை இவ்வாறு குறைவாக இருக்கின்றது. பொதுவாக வளர்ச்சியடைந்த நாடுகளில் வேளாண்மையில் அமைந்துள்ள மக்கட்தொகை குறைவாக இருக்கும்.

அயர்லாந்தும், கிரேட் பிரிட்டனும் இணைந்து உலகின் பெரிய சக்திகளில் ஒன்ருக இருக்கின்றன. அமெரிக்கா, சோவியத் ரஷ்யா ஆகிய இரு நாடுகளுக்கும் அடுத்தபடியாகத் தொழிலில் வளர்ச்சியடைந்த நாடாக இது உள்ளது. உலகின் ஒவ்வொரு கண்டத்தின் பல பகுதிகளும் கிரேட் பிரிட்டனால் ஆளப்பட்டவையாகும். காமன்வெல்த் நாடுகளுக்கும், பிரிட்டனுக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்திருக்கின்றது. இங்கிலாந்தின் பவுன்ஸ்டெர்லிங் மூலம் உலக வாணிபத்தில் ஐந்தில் இரு பங்கு நடைபெறுகின்றது. இங்கிலாந்தின் வங்கிகள் பிற நாடுகளின் வங்கிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தன. இங்கிலாந்தின் வாணிபக் கொள்கை அதனுடைய விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு வித்திட்டது எனலாம். இங்கிலாந்தின் பொருளாதார வளர்ச்சி மூன்று அல்லது நான்கு நூற்றுண்டுகளில் ஏற்பட்டதாகக் கூறலாம். இங்கிலாந்து நாட்டுப் பொருளாதாரத்தின் முக்கிய இயல்புகளையும், அதனுடைய பொருளாதார வளர்ச்சி நிலைகளையும் அறிவது இன்றைய வளர்ச்சிக் குன்றிய நாடுகள் பல புதியக் கொள்கைகளை உருவாக்க உதவும்; வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் வெற்றிகரமான திட்டத்தைத் தீட்ட உதவும்.

பிரிட்டனில் வேளாண்மை வளர்ச்சியும், தொழில் முன்னேற்றமும் ஒரே சமயத்தில் ஏற்பட்டன. போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் நாட்டைத் தொழில் மயமாக்க அடிப்படைக் காரணிகளாக அமைந்தன. தொழிற் புரட்சிக்கு இரும்பு, நிலக்கரி, மின்சாரம் ஆகியவற்றின் பெருமளவு உற்பத்தி உதவியது. முன்னேற்றமடைந்த போக்குவரத்து வசதிகள் பரப்பப்பட்டதால் தொழிற் பொருட்களை எளிதில் விற்பனை செய்ய முடிந்தது. ஏற்றுமதி செய்வதற்கான பொருட்களைத் துறைமுகங்களுக்கு எடுத்துச் செல்வதும் எளிதாக இருந்தது. தொழிற் முன்னேற்றத்தால் ஏற்பட்ட மாற்றங்கள் வாணிப வளர்ச்சியையும் தந்தன. வாணிப வளர்ச்சி தொழில் முன்னேற்றத்தை மேலும் ஊக்குவித்தது.

இங்கிலாந்தின் பொருளாதார வளர்ச்சி பல முக்கிய நிலைகளை உணர்த்துகின்றது. பொருளாதார மேம்பாட்டைப் பெற வெளி

நாட்டு வாணிபத்தை வளர்ப்பது அவசியம் என்பதை அது அறிவுறுத்துகின்றது. பொருளாதார முன்னேற நிலைகளில் அரசின் கொள்கைகளும், நடவடிக்கைகளும் சிறப்பாக அமைந் திருக்க வேண்டுமென்பதையும் அது உணர்த்துகின்றது. தொழில் மந்தக் காலங்களில் இங்கிலாந்து 'தலையிடாமைக் கொள்கையைக்' கைவிட்டு விட்டது. முற்றிலும் முதலாளித்துவப் பொருளாதாரம் அமைந்திருந்த இடத்தில் நலங்காக்கும் அரசு ஏற்படுத்தப்பட்டது. மூலதனப் பொருட்களின் உற்பத்தியும், நுகர்பொருட்களின் உற்பத்தியும் சம அளவு முக்கியத்துவத்தையே கொண்டுள்ளன. ஆனால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் முதலில் வளர்க்கப்பட வேண்டும். பிறகு பொருளாதார முன்னேற்றம் ஓரளவு ஏற்பட்டபின் நுகர்பொருட்களின் உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ளலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டன் அதிக அளவு தொழிற் பொருட்களை உற்பத்தி செய்தது ; வாணிபம் செழித் தது ; வங்கித் துறை வளர்ந்தது ; முதலீட்டின் அளவு உயர்ந்தது. இக் காரணங்களால் விரைவாகப் பெருகிய மக்கட்தொகைக்குத் தேவையான பொருட்களை எளிதில் பெற முடிந்தது. மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்வடைந்தது. உலகில் முதன் முதலாகத் தொழிற் புரட்சி இங்கிலாந்தில்தான் ஏற்பட்டது. எனவே பல ஆண்டுகள்வரை இரும்பு, எஃகு உற்பத்தியை அதிக அளவில் செய்த நாடாகவும் அது இருந்தது. நிலக்கரி கிடைத்த இடங் களுக்கு அருகாமையில் தொழிற்சாலைகள் நிறுவப் பெற்றன. மிகக் குறுகிய காலத்தில் பல தொழில் நகரங்கள் தோன்றிவிட்டன. நிலக்கரி இங்கிலாந்தில் ஏராளமாகக் கிடைத்தது. இதனால் நிலக்கரி பிற நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. பருத்திப் பொருட்கள் ஆசிய நாடுகளுக்கும், பிற நாடுகளுக்கும் மிக அதிக அளவில் ஏற்றுமதி செய்யப் பெற்றன. இங்கிலாந்தின் ஆட்டு உரோமங்கள் கம்பளித் தொழில் வளரப் பயன்படுத்தப்பட்டன. இங்கிலாந்தின் தட்ப வெப்பநிலை நூற்பிற்கும், நெசவிற்கும் சாதகமாக இருந்தது. கப்பல் தொழிலும் வளர்ச்சியடைந்த நிலையில் இருந்தது. கப்பல் போக்குவரத்தின் முன்னேற்றத்தால் இங்கி லாந்தின் வெளிநாட்டு வாணிபம் செழித்தது. ஆங்கில அரசின் ஆதிக்கமும் உலகின் பல நாடுகளில் அமைந்திருந்தது. தேவை யான கச்சாப் பொருட்களைக் காலனி நாடுகள் அளித்தன. இதனால் இங்கிலாந்தில் தொழில் வளம் மிகுந்தது. தொழிற் பொருட் களின் விற்பனைச் சந்தைகளாகவும் காலனி நாடுகள் திகழ்ந்தன. இங்கிலாந்தின் தொழில் முன்னேற்றம் பிறநாடுகளின் தொழில் முன்னேற்றத்தை விட விரைவாக இருந்தது. முதல் உலகப் போர்

முடிந்து சில காலம் வரைதான் இங்கிலாந்தின் உற்பத்திப் பொருட்களுக்கு மிகுதியான தேவை இருந்தது. அதன் பிறகு பல பெரிய தொழில்களின் உற்பத்திப் பொருட்களுக்கான தேவைக் குறைந்துவிட்டது.

இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்டக் காலத்தில் இங்கிலாந்து நாட்டின் வெளிநாட்டு வாணிபம் வளரவில்லை. ஏற்றுமதிச் சந்தைகளை இழந்த காரணத்தால் பல தொழில்களும் பாதிக்கப்பட்டன. 1930-ஆம் ஆண்டிற்கும் 1939-ஆம் ஆண்டிற்கும் இடையே வேலையின்மைச் சிக்கல் இதனால் தோன்றிவிட்டது. இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் இங்கிலாந்து நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்தது. கப்பல் போக்குவரத்தில் நஷ்ட மேற்பட்டது. பொதுவாக இக்காலத்தில் தொழில் முன்னேற்ற மானது பாதிக்கப்பட்டது எனலாம். நிதிமுறையிலும், வாணிப முறையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. சில உற்பத்தி நிலைகள் தேசியமயமாக்கப்பட்டன. நிரந்தரமான, நிலையான வளர்ச்சிக் காகத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. சமுதாயக் காப்பீட்டுத் திட்டங்களும் நிறைவேற்றப்பட்டன. கட்டுப்படுத்தும், ஒழுங்கு படுத்தும் கொள்கைகள் கைக்கொள்ளப் பெற்றன. உற்பத்தியை யும், பணிகளையும் அதிக அளவில் பெறுவதற்கான வழி முறைகள் பின்பற்றப்பட்டன. வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்கான திட்டங்களும் வரையப்பட்டன. இவ்வாறு சமதர்மத் தீர்வுகள் பல எடுக்கப்பெற்றன. முதல் உலகப்போர் முடிவடைந்த பிறகு இங்கிலாந்து அரசு மக்களின் நலங்காக்கும் அரசாக மாறியது. அதே நேரத்தில் சில பொருளாதாரத் தீர்வுகளைக் காண வேண்டி யிருந்தது. வெளி நாட்டு வாணிபத்தைக் குறையாமல் காக்க இங்கிலாந்து அரசு பல நடவடிக்கைகளையும் எடுத்தது.

இங்கிலாந்து கடன் அளிக்கும் முறையிலும், புதுமையான தொழில்களிலும் மிகச் சிறப்பான முன்னேற்றத்தைப் பெற்றது. உலகநாடுகள் பலவும் இங்கிலாந்து நாட்டில் உற்பத்தி செய்த ஆகாயவிமானங்களையும், கார்களையும் விரும்பி வாங்கின. அறி வியல் துறையில் வியத்தகு முன்னேற்றம் ஏற்பட்டதெனலாம். தொழில்கள் வளர்ந்தபின் வேலையின்மைச் சிக்கல் தீர்க்கப்பட்டு விட்டது. ஆங்கிலேயர்களின் வாழ்க்கைத்தரம் மிக உயர் வடைந்தது. கல்வியின் வளர்ச்சி சிறப்பாக இருந்தது. கல்வியறிவு பெற்றவர்கள் முன்னேற பல வாய்ப்புக்கள் இருந்தன. சமு தாயக் காப்பீட்டு முறைகள் மிகச்சிறப்பாக மேற்கொள்ளப் பட்டன. ஆரோக்கிய வசதிகள் பரந்த முறையில் அளிக்கப் பட்டன. மிகப் புதுமையான மருத்துவ வசதிகளை மக்கள் பெற்று ஆரோக்கிய வாழ்வு வாழ்ந்தார்கள். விரைவான பொருளாதார

முன்னேற்றத்திற்கு இவை யாவும் உதவின. இங்கிலாந்தின் பொருளாதார வளர்ச்சி இன்றைய மேம்பாடடைந்துவரும் நாடுகளுக்குப் பல படிப்பினைகளைத் தருகின்றது. இவற்றைப் பற்றி அறிவது பின் தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தை எளிதாக்க உதவுமெனலாம். இங்கிலாந்து நாட்டின் பொருளாதார வரலாறு தற்பொழுது வளர்ந்துவரும் நாடுகள் எளிதில் முன்னேற்றத்தைப் பெறும் வழி முறைகளை உணர்த்துகின்றது.

மிகச் சமீப காலத்தில் இங்கிலாந்து நாட்டில் பொருளாதார வளர்ச்சி வீதம் பிற நாடுகளோடு ஒப்பிடும்போது குறைவாகவே உள்ளது. ஆனால் அது உலகின் செல்வ நாடுகளுள் ஒன்றாகவும் திகழ்கின்றது. பிற நாடுகளோடு தராதரம் செய்து பார்க்கும் பொழுது இங்கிலாந்து செல்வ நாடாகவே உள்ளது. 1960 முதல் 1969 வரை இங்கிலாந்தின் பொருளாதார முன்னேற்றம் சிறப்பாக அமையவில்லை. இந் நிலை தொடர்ந்து நீடிக்குமானால் ஆங்கிலேயர்களின் வாழ்க்கைத்தரம் பிற நாட்டினரின் வாழ்க்கைத் தரத்தை விடத் தாழ்ந்த நிலையை அடையும். தற்பொழுது இங்கிலாந்தின் பொருளாதார முன்னேற்றம் பல வழிகளில் தடைப்பட்டிருக்கிறது. இங்கிலாந்து நாட்டின் வேளாண்மை பல சிக்கல்களைக் கொண்டிருக்கிறது. மேலும், பல தொழில்களிலும் சிறப்பான முன்னேற்றம் ஏற்படவில்லை. தொழில்களின் முன்னேற்றம் தேக்கநிலையிலேயே உள்ளது. பிற நாடுகளோடு போட்டியிடத்தக்கத் தொழில்களை இன்று இங்கிலாந்து கொண்டிருக்கவில்லை. விஞ்ஞான, தொழில் நுட்ப முன்னேற்றங்களும் குறிப்பிடத்தக்க அளவில் ஏற்படவில்லை. தேசிய ஆக்கத்தில் குறைந்த அளவு மட்டுமே முதலீடு செய்யப்படுகின்றது ; ஆனால் தலா ஒருவருக்கான முதலீட்டு வீதம் உயர்வாக உள்ளது.

இங்கிலாந்தில் பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்தவும், வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பெற்றன. இன்று பொருளாதாரத்தின் சில துறைகளில் முதலீட்டின் அளவு போதுமானதாக இருக்கவில்லை ; வேறு சில துறைகளில் தேவைக்கு அதிகமான முதலீடு செய்யப்படுகின்றது. நுகர்வுப் பொருட்களின் விலைகள் குறைவாக உள்ளன. இந்நிலை தொழிற்துறையின் வளர்ச்சியைக் குன்றச் செய்கின்றது. சமுதாயப் பணிகளுக்காக நிதியை ஒதுக்கும் முறை பிரிட்டனின் தொழில்களையும், பிற உற்பத்தி நிறுவனங்களையும் பாதிக்கின்றது. அளவிற்கு அதிகமான பாதுகாப்புச் செலவுகள் செய்யப்படுகின்றன. இதன் விளைவால் பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலை தோன்றுகிறது. தேசிய ஆக்கத்தின் பெரும் பகுதி நுகர்விற்காகப் பயன்படுத்தப் படுகின்றது. தொழிலாளர் சங்கங்களே இங்கிலாந்து நாட்டின் பொருளாதாரம் தேக்கநிலையில்

உள்ளமைக்குக் காரணம் எனக் கூறப்படுகிறது. நிர்வாகத்தில் அமைந்துள்ள குறைகளாலும் பொருளாதார முன்னேற்றம் தடைப்படுகிறது என்பது சிலருடைய கருத்தாகும். பொருளாதா ரத்தில் அமைந்துள்ள தேக்கநிலையை மாற்ற அரசு பல நடவடிக் கைகளைச் சமீபகாலத்தில் மேற்கொண்டது. ஜப்பான், அமெரிக்கா போன்ற நாடுகளோடு ஒப்பிடும்போது இங்கிலாந்தின் வளர்ச்சி வீதம் மிகக் குறைவானதேயாகும்.

அமெரிக்கா

இன்று உலக நாடுகளுள் முதன்மையான செல்வ நாடாக இருப்பது அமெரிக்காவாகும். எனவே இந்நாட்டின் பொருளாதார வளர்ச்சியைப் பற்றித் தெரிந்து கொள்வதும் இன்றியமையாத ஒன்றாகின்றது. குறைவான மக்கட்தொகையைக் கொண்டு மிக விரைந்த பொருளாதார முன்னேற்றத்தை அமெரிக்கா பெற்றது. பல நாடுகளினின்றும் குடியேறிய குறைந்த மக்கட் தொகை விரைவான வளர்ச்சி வீதத்தைத் தந்தது. உள்நாட்டில் மக்களின் தேவைக்கு அதிகமான உணவு உற்பத்தி செய்யப்படு கிறது. அமெரிக்காவின் கோதுமை உற்பத்தியின் மூலம் பல பின் தங்கிய நாடுகள் தங்களின் மக்களுக்குத் தேவையான உணவைப் பெறுகின்றன. பல வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் உணவு உற்பத்தியில் தன்னிறைவு ஏற்படவில்லை. இந்நாடுகளின் உணவுப் பற்றாக்குறை அமெரிக்கத் தானிய உற்பத்தியின் மூலம் தவிர்க்கப் படுகிறது. இது போன்றே தொழிற் பொருட்களின் உற்பத்தியும் அமெரிக்கர்களின் தேவைக்கு அதிகமாகவே செய்யப்படுகின்றது. எனவே, ஏராளமான அளவிற்குத் தொழிற்பொருட்களும் பிறநாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அமெரிக்கப் பொருளா தாரம் ஓர் உண்மையான சந்தைப் பொருளாதாரமாகத் திகழ் கின்றது. சுதந்திரச் சமுதாயமானது அமெரிக்காவில் அமைந் திருப்பதாகக் கூறலாம்.

அமெரிக்கப் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றி அறிவது உயர்வான வளர்ச்சி வீதத்தைப் பெற உதவும். அமெரிக்கச் சுதந்திரப்போர் பொருளாதார, வாணிபச் சுதந்திரத்தைக் காலனி நாடுகளுக்கு அளித்தது. உள்நாட்டுப்போர் அமெரிக்காவில் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறக் காரண மாக இருந்தது மேற்கு நோக்கிக் குடியேற்றம் ஏற்பட்ட தால் புதிய சமுதாயம் தோன்றியது; புதிய நாடே அங்கு உருவாகியது எனலாம். புதிய சமுதாய, பொருளாதார மாற்றங்கள் ஏற்பட்டன. மக்களிடம் பண்பாட்டு மாற்றங் களும் தோன்றின. முதல் உலகப்போர் பெரிய தொழில் சமுதாயத்தையே உருவாக்கியது. தேவைக்கும் அதிகமான

உற்பத்தி செய்யப்பட்டது. நாட்டின் மொத்த ஆக்கத்திறன் மிகப் பலமடங்கு உயர்ந்தது. 1929-இல் தொடங்கிய பொருளாதாரப் பெருமந்தம் அமெரிக்கப் பொருளாதாரத்தைச் சீர்குலையச் செய்தது. இதன்காரணமாகப் புதுப் பொருளாதாரக் கொள்கை கைக்கொள்ளப்பட்டது. இக் கொள்கையால் அமெரிக்கப் பொருளாதாரத்தில் பலவித மாற்றங்கள் தோன்றின. இன்று உலகநாடுகளில் அமெரிக்கா வேளாண்மையில் தலைசிறந்ததாகத் திகழ்கின்றது; தொழில் உற்பத்தியிலும் மிக உயர்வான நாடாக உள்ளது. தொழில் நுட்ப, அறிவியல் முன்னேற்றங்கள் வியத்தகு வகையில் ஏற்பட்டு வருகின்றன. நாகரிகச் சமுதாயமாகவும், அதிக உற்பத்தியைச் செய்யக்கூடிய பொருளாதாரத்தைக் கொண்ட நாடாகவும் அமெரிக்கா அமைந்துள்ளது.

இவ்விதமான பல நன்மைகளையும் கொண்டுள்ள அமெரிக்கப் பொருளாதாரத்தில் சில குறைகளும் உள்ளன. அமெரிக்கப் பொருளாதார முறை முதலாளித்துவக் கொள்கையைப் பின்பற்றுவதாக அமைந்திருக்கிறது. இதனால் பொருளாதாரத்தில் மந்த நிலைகளும், பின்னிறக்க நிலைகளும் ஏற்படுகின்றன. வேலையின்மை, பணவீக்கம், குறைவான உற்பத்தி, இயற்கை வளங்களை நன்கு பயன்படுத்தாத நிலை போன்ற சிக்கல்களும் அங்கு அமைந்துள்ளன. பொதுவுடைமை நாடாகிய சோவியத் ரஷ்யாவில் அமைந்தில்லாத பல சிக்கல்கள் அமெரிக்காவில் உள்ளன. சில காலங்களில் அமெரிக்கப் பொருளாதாரத்தில் உற்பத்தியின் அளவு கூடும்போது மக்களின் வாங்கும் திறனது அதே விகிதத்தில் கூடுவதில்லை; வேறு சில காலங்களில் மக்களின் வாங்கும் திறன் கூடும்போது உற்பத்தியின் அளவு அதே விகிதத்தில் அதிகரிப்பதில்லை. பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்த எடுக்கப்படும் நடவடிக்கைகள் பணவாட்டத்தைத் தருவது உண்டு; தொழில் பின்னிறக்கக் காலத்தில் ஏற்படும் பணவாட்டத்தைத் தவிர்க்க மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் பணவீக்கத்தைத் தருவதும் உண்டு.

சமீப காலத்தில் அமெரிக்க அரசு பொருளாதாரத்தை நன்கு நெறிப்படுத்துகிறது. அமெரிக்க ஜனாதிபதி ஒவ்வொரு ஆண்டும் நாட்டின் நிலைபற்றிய 'பொருளாதார அறிக்கையைச்' (Economic Report) சமர்ப்பிக்கின்றார். பொருளாதாரச் சிக்கல்களுக்கான தீர்வுகளும் அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளன. 1946-ஆம் ஆண்டு 'வேலை வாய்ப்புச் சட்டம்' (Employment Act) இயற்றப்பட்டது. பொருளாதார முன்னேற்றத்தைத் தொடர்ந்து நிலை நிறுத்த அரசு நடவடிக்கைகளை எடுத்தது. தற்பொழுது வெளி

நாடுகளுக்குப் பெருமளவிற்கு உதவும் நாடாக அமெரிக்கா உள்ளது. அமெரிக்க உதவியால் உயர்ந்து வரும் உலக நாடுகள் பலவாகும். பலநாடுகள் தொழில் மயமாக அமெரிக்கா உதவியுள்ளது. இந்தியா போன்ற நாடுகளுக்கு உணவுப் பொருட்களையும் ஏற்றுமதி செய்கின்றது. மேன்மையடைந்துள்ள நாடுகளுள் அமெரிக்கா முன்னணியில் திகழ்கிறது. எனவே பல வளர்ச்சி யடைந்துவரும் நாடுகளும் அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சி யைப்பற்றி அறிவது பல நன்மைகளையும் தரும்.

**சோவியத் ரஷ்யா**

உலக நாடுகளிலேயே மிகப்பெரிய அரசியல் அமைப்பைக் கொண்டது சோவியத் ரஷ்யாவாகும். மிகப்பெரிய நிலப்பரப்பைக் கொண்டதாகவும் அது அமைந்துள்ளது. அமெரிக்காவை விட ரஷ்யா மூன்று மடங்கு பெரியதாக உள்ளது. ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் விரிந்து பரந்துள்ள நாடாக அது அமைந்திருக் கிறது. உலகின் மொத்த நிலப்பரப்பில் ஆறில் ஒரு பங்கை ரஷ்யா கொண்டுள்ளது. அதன் நிலப்பரப்பு 8·6 மில்லியன் சதுர மைலாகும். பதினைந்து குடியரசுகளைக் கொண்டிருக்கும் ரஷ்யாவே உலகின் முதல் சமதர்ம நாடாகும். மிகச் சமீப காலம் வரை ரஷ்யா பின்தங்கிய பொருளாதாரத்தையே கொண்டிருந்தது. 'ஜார்' (Tsar) மன்னர்களது ஆட்சிக் காலத்தில் மக்கள் மிகத் தாழ்ந்த வாழ்க்கைத் தரத்தையே கொண்டிருந்தனர். குறைந்த காலத்தில் புதிய முன்னேற்றமடைந்த சமுதாயமானது அங்கு உருவாகியது. சோவியத் அரசு 1917-இல் தோற்றுவிக்கப்பட்டது. ரஷ்யாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1928-இல் தொடங்கப் பெற்றது. 1917 முதல் 1928 வரை பொருளாதார மாற்றங் களுக்கு ஏற்ப அரசின் கொள்கைகள் மாற்றப்பட்டன. ஓரளவு தனியார் துறையும் அனுமதிக்கப்பட்டது. தனியார் துறையின் உதவியில்லாவிட்டால் பொருளாதாரம் சீர்குலைந்து விடும் என்ற நிலையானது இக்காலத்தில் அமைந்திருந்தது. இந்நிலையைத் தவிர்க்கவே அரசு எல்லா உற்பத்தி நிலைகளையும் பொதுவுடைமை யாக்கவில்லை. 1928 முதல் அரசு எல்லாப் பொருளாதாரத் துறைகளையும் தானே ஏற்றுக் கொண்டது. இதன் காரணமாகவே ரஷ்யாவில் விரைவான பொருளாதார முன்னேற்றமானது ஏற்பட்டதெனலாம். இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டம் 1933-ஆம் ஆண்டிலும், மூன்றுவது ஐந்தாண்டுத்திட்டம் 1938–ஆம் ஆண்டிலும் தொடங்கப்பட்டன. நான்காவது, ஐந்தாவது, ஆறுவது திட்டங்கள் முறையே 1946, 1951, 1956 ஆகிய ஆண்டு களில் கைக்கொள்ளப் பெற்றன. ஆறுவது ஐந்தாண்டுத் திட்டம் முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. 1959-ஆம் ஆண்டில் புதிய

ஏழாண்டுதிட்டமானது தொடங்கப்பட்டது. இது ஆறுவது ஐந்தாண்டுத் திட்டத்தையும் உள்ளடக்கிய திட்டமாக இருந்தது. 1966 முதல் 1971 வரை நிறைவேற்றத்தக்க மற்றொரு ஐந்தாண்டுத் திட்டமும் மேற்கொள்ளப்பட்டது.

ரஷ்யாவின் பொருளாதாரம் விரைவாக வளர லெனின், ஸ்டாலின் போன்றவர்கள் சிறந்த அடிப்படையை அமைத்துத் தந்தார்கள். குருஷ்சாவ் தன்னுடைய நிர்வாகத் திறமையாலும் பொருளாதாரம் விரைவாக வளர உதவினர். தற்பொழுது கோசிஜின், பிரஷ்நேவ் போன்ற தலைவர்களும் ரஷ்யாவின் விரைவான வளர்ச்சிக்கு உதவி வருகின்றனர். திட்டங்களில் தொழில் முன்னேற்றத்திற்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. எனினும் வேளாண்மை வளர்ச்சியிலும் கவனம் செலுத்தப் பெற்றது. தற்பொழுது வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்கு ரஷ்யா பல வகைகளிலும் உதவி வருகிறது. இந்தியா போன்ற மேம்பாடடைந்து வரும் நாடுகள் பொதுவுடைமை நாடுகளிட மிருந்தும், முதலாளித்துவ நாடுகளிடமிருந்தும் பொருளாதார முன்னேற்றத்திற்கான உதவியைப் பெற்று வருகின்றன.

ரஷ்யாவின் சாதனைகள் எண்ணிலடங்காதவையாகும். மக்களின் ஆர்வம், தலைவர்களுடைய திறமை ஆகியவற்றால் தற் பொழுது ரஷ்யா உயர்வடைந்துள்ளது. ரஷ்யப் பொருளாதாரம் நம் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பல படிப்பினைகளைத் தரு கின்றது. ரஷ்யாவின் சிறப்பான கொள்கைகள் பலவற்றைப் பின்பற்றுவதின் மூலம் பின்தங்கிய நாடுகள் விரைவான பொரு ளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற இயலும். ரஷ்யாவில் ஏற் பட்டுள்ள தொழில் முன்னேற்றம், வேளாண்மை வளர்ச்சி, பிற துறைகளின் வளர்ச்சி ஆகிய யாவும் அரசின் தீவிரப் பொதுவுடை மைக் கொள்கையால் பெறப்பட்டன. ‘பொதுவுடைமைச் சமு தாயத்தை’ அமைப்பதில் பெருவெற்றியைக் கொண்ட நாடு ரஷ்யா. வியக்கத்தக்கப் பொருளாதார, விஞ்ஞான முன் னேற்றங்கள் மிகக் குறுகிய காலத்தில் பெறப்பட்டுள்ளன. இன்று முன்னேற்றமடைந்துள்ள முதலாளித்துவ நாடுகளோடு ஒப்பிட்டு நோக்குமளவிற்கு ரஷ்யா முன்னேறியுள்ளது. உலக வல்லரசு களில் ஒன்றாக அது திகழ்கின்றது.

1917-ஆம் ஆண்டு வரை வளர்ச்சியடையாதப் பொருளா தாரத்தையே ரஷ்யா கொண்டிருந்தது. 1917 அக்டோபர் புரட்சிக்குப் பின் லெனின் தலைமையில் ‘பாட்டாளிகளின் சர்வாதி காரம்’ (Dictatorship of the Proletariat) ஏற்பட்டது. கார்ல் மார்க்ஸின் கொள்கைகள் செயல்படுத்தப் பட்டன. ஜோசப்

ஸ்டாலின், மாலெங்கோவ், புல்கானின், குருஷ்சேவ் ஆகியவர்களின் தலைமையிலும் ரஷ்யப் பொருளாதாரம் விரைந்து முன்னேறியது. தற்பொழுது அலெக்சி கோசிஜின் தலைமையில் ரஷ்யா மேலும் விரைந்து வளர்கின்றது. பலவித இயற்கை வளங்களைக் கொண்ட ரஷ்யாவில் எல்லா உற்பத்தி நிலைகளும் இயந்திரமயமாக்கப்பட்டு வருகின்றன. மக்கள் தொகைக் குறைவாக உள்ள ரஷ்யாவில் பொருளாதார முன்னேற்றம் எளிதில் பெறப்படுகிறது.

பாட்டாளிகளின் சர்வாதிகாரம் அமைந்துள்ள ரஷ்யா பிற பின்தங்கிய நாடுகளுக்கு வழிகாட்டியாக உள்ளது. ரஷ்யாவின் திட்டமுறைகளையே உலகின் பல வளர்ச்சியடைந்து வரும் நாடுகளும் பின்பற்றுகின்றன. வெளி நாடுகளின் உதவியை அதிக அளவிற்குப் பெறாமல் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்ற நாடு ரஷ்யாவாகும். 1917-ஆம் ஆண்டிற்கு முன் 'ஜார்' மன்னர்களுடைய ஆட்சிக்காலத்தில் வேளாண்மையில் பண்ணையடிமை முறை அமைந்திருந்தது; குத்தகை முறைகளும் அமைந்திருந்தன. தொழில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கவில்லை. தொழிலாளர்களின் நிலை மிகத் தாழ்வாக இருந்தது. இங்கிலாந்தில் தொழிற் புரட்சிக் காலத்தில் தொழிலாளர்கள் குறைந்த ஊதியத்தை மட்டுமே பெற்று, நாளொன்றிற்குப் பல மணி நேரம் தங்கள் உழைப்பைத் தந்தார்கள். போக்குவரத்து வளர்ந்திருக்கவில்லை; பண, நிதி நிலைகள் திருந்தியிருக்கவில்லை. வங்கிகள் குறைந்த அளவிற்கு மட்டுமே வளர்ந்திருந்தன. கூட்டுறவுச் சங்கங்கள் ஓரளவிற்கு மட்டுமே ஏற்பட்டிருந்தன. உள்நாட்டு, வெளிநாட்டு வாணிபங்கள் சிறப்பாக முன்னேறியிருக்கவில்லை. ரஷ்யப் பெரும் புரட்சி வெற்றியைப் பெற்று 1917 மார்ச்சில் இடைக்கால அரசு ஏற்பட்டது. பொருளாதாரத்தைச் சீர்குலையாமல் காக்க 1917 நவம்பர் முதல் 1918 ஜூன் வரை 'கட்டுப்படுத்தப்பட்ட அரசின் முதலாளித்துவக் கொள்கை' (Directed State Capitalism) பின்பற்றப்பட்டது. 1918 ஜூன் முதல் 1921 மார்ச் வரை 'போர்க்காலப் பொதுவுடைமைக் கொள்கை' (Period of War Communism) கைக்கொள்ளப் பெற்றது. 1921 முதல் 1927 வரை 'புதுப் பொருளாதாரக் கொள்கை' (New Economic Policy) செயல்படுத்தப்பட்டது. இவ்வாறு மாறுபடுகின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப பல வகைப்பட்ட வேறுபாடான கொள்கைகளை அரசு பின்பற்றியது.

1928-ஆம் ஆண்டு முதல் ரஷ்யா திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியை ஏற்றது. திட்டங்கள் செயல் படுத்தப்பட்ட பிறகுதான் ரஷ்யப் பொருளாதாரத்தில் மிக விரைவான முன்

னேற்றம் ஏற்பட்டது. ரஷ்யாவில் அரசே எல்லா அதிகாரங்களை யும் கொண்டிருக்கின்றது. எல்லா இயற்கை வளங்களும், நிலமும், உற்பத்திச் சாதனங்களும் அரசின் உடைமையாக உள்ளன. தொடக்கக் காலத்தில் வேளாண்மை நாடாக இருந்த ரஷ்யா, இன்று தொழில் வளம் மிக்க நாடாக மாறியுள்ளது. சமதர்மச் சமுதாயத்தைப் பின்தங்கிய நாடுகள் அமைக்கத் திட்டங்களை மேற்கொள்வது இன்றியமையாதது. ரஷ்யப் பொருளாதாரம் வளர்ந்தமைக்குத் திட்டங்களே அடிப்படையாக அமைந்திருந்தன. ரஷ்யாவில் திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்த அதிகாரங்களைக் கொண்டுள்ளத் திட்டக்குழு அமைந்துள்ளது.

சமதர்மப் பொருளாதாரத்தைக் கொண்டுள்ள ஒரு நாட்டில் மக்கள் அனைவரும் பல நன்மைகளைப் பெறுகின்றனர். ரஷ்யாவில் கூட்டுறவுத்துறை சிறப்புப் பெற்றுள்ள ஒன்றாகும். உற்பத்திக் காரணிகளில் உழைப்பு செல்வாக்குக் கொண்டுள்ள காரணி யாகத் திகழ்கின்றது. பொதுவுடைமை நாடுகளில் மட்டுமே உழைப்பு அதிகச் சிறப்பைக் கொண்டுள்ளது. உள் நாட்டு வாணிபம் அரசாங்கத்தாலும், கூட்டுறவு நிறுவனங் களாலும் நடத்தப்படுகின்றன. வெளிநாட்டு வாணிபத்தில் அரசின் முற்றுரிமையே அமைந்துள்ளது. ரஷ்ய அரசு உண்மை யாக மக்களின் நலத்தைக் காக்கின்றது. சுரண்டல் நிலைகள் முற்றிலும் அங்கு நீக்கப்பட்டு விட்டன.

இன்றைய மேம்பாடடைந்து வரும் நாடுகளுக்குச் சமதர்மக் கொள்கையே நன்மை தரும்; முதலாளித்துவக் கொள்கையால் எல்லா மக்களுக்கும் நன்மை தர முடியாது. சமதர்மச் சமுதாயத்தை அமைக்கப் பொதுவுடைமை நாடுகளைப்பற்றி அறிவது அவசியமாகின்றது. ரஷ்யாவின் படிப்பினைகளால் இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாடுகள் எளிதில் சமதர்மச் சமுதாயத்தை அமைக்க இயலும்.

**ஜப்பான்**

ஜப்பானின் பொருளாதார முன்னேற்றம் 1868-இல் தொடங் கியது எனலாம். இக்காலத்திற்குள் இங்கிலாந்து பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவிட்டது; பிற ஐரோப்பிய நாடுகளும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுக்கொண் டிருந்தன. உள்நாட்டுப் போருக்குப் பிறகு அமெரிக்கப் பொருளா தாரமும் மிக விரைவாக வளர்ந்து வந்தது. ஆனால் சோவியத் பொருளாதாரம் வளர்ச்சியடையாத நிலையிலேயே இருந்தது. ஜப்பான் ஒரு சிறிய தீவாக அமைந்துள்ளது; எனவே வேளாண் மைச் சாகுபடியில் அமைந்துள்ள நில அளவும் குறைவானதே

யாகும். பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் ஜப்பான் அதிக மக்கட்தொகையைக் கொண்ட வேளாண்மை நாடாக இருந்தது. போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் வளர்ந்திருக்கவில்லை. கல்வி, நிதி, நிர்வாகம் ஆகிய துறைகளிலும் பின்தங்கிய நிலையே திகழ்ந்தது. வெளிநாட்டு வாணிபமும் முன்னேறியிருக்கவில்லை. இல்லத்தொழில்கள் குறைந்த அளவிற்கே பெருகி இருந்தன. பல நூற்றாண்டுகள் ஜப்பான் வளர்ச்சியடையாத தேக்கநிலைப் பொருளாதாரத்தையே கொண்டிருந்தது. தொழில் நிறுவனங்கள் பெருகியிருக்கவில்லை; தொழில் நுணுக்கம் வளர்ந்திருக்கவில்லை. மூலப்பொருட்களின் பற்றாக்குறையும் அமைந்திருந்தது. முதலீட்டிற்கான மூலதனத்தின் அளவும் குறைவாகவே இருந்தது. இக்காரணங்களால் ஜப்பானின் பொருளாதாரம் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை.

கடந்த ஐம்பது அல்லது அறுபது ஆண்டுக் காலத்தில்தான் ஜப்பான் தொழிலில் சிறந்த உலக நாடுகளுள் ஒன்றானது. தற்பொழுது தொழில் நுட்ப முன்னேற்றம் கொண்ட உற்பத்தி முறைகளே பின்பற்றப் படுகின்றன. விஞ்ஞான முன்னேற்றமும் சிறப்பாக ஏற்பட்டுள்ளது. ஜப்பானின் தொழில்களில் திறமையான உற்பத்தி முறைகள் கைக் கொள்ளப் பெறுகின்றன. தொழில் முன்னேற்றத்தை முன்னமேயே பெற்ற நாடுகளைக் காட்டிலும் தரமான பொருட்களை ஜப்பான் உற்பத்தி செய்கின்றது. சிறப்பான நிதிமுறை அங்கு அமைந்திருக்கிறது. வங்கிகள், போக்குவரத்துச் செய்தித் தொடர்பு வசதிகள் ஆகியவற்றின் முன்னேற்றம் உயர்வாக உள்ளது. வெளிநாட்டு வாணிபத்தையும் ஜப்பான் பெருமளவிற்குக் கொண்டிருக்கின்றது. வாணிபக் கப்பல்களையும் அதிக எண்ணிக்கையில் கொண்டுள்ளது. ஜப்பானின் வெளிநாட்டு வாணிபம் அதிக அளவில் இருப்பதோடு, அது மேலும் வளர்ந்து வருகின்றது. ஜப்பானின் பொருளாதாரம் பல புதிய மாற்றங்களைப் பெற்று வருகின்ற இயக்க நிலையைக் கொண்டிருக்கின்றது.

ஜப்பானில் வேலையின்மைச் சிக்கல் அமைந்திருக்கவில்லை. இராணுவ பலத்தையும், கப்பற்படை பலத்தையும் அது கொண்டுள்ளது. மக்கட்தொகை விரைவாகப் பெருகும் நிலை கட்டுப்படுத்தப்பட்டு விட்டது. உலகின் சக்தி வாய்ந்த நாடாகவும் அது அமைந்துள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளோடு போட்டியிடத்தக்க நிலையில் ஜப்பான் இருக்கின்றது. மிகச் சமீப காலத்தில் முன்னேற்றத்தைப் பெற்ற ஜப்பான், முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளோடு போட்டியிடத்தக்க நிலையைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். வியத்தகு தொழில் முன்

னேற்றத்தை அது பெற்றிருக்கிறது. இவ்வித வளர்ச்சியைப் பெற்றிருக்கும் ஜப்பான் இயற்கை வளம் மிக்க நாடாக இல்லை. ஜப்பான் பலவித மூலப் பொருட்களை இறக்குமதி செய்து தொழிற் பொருட்களை உற்பத்தி செய்கின்றது. வினைமுடிந்த பொருட்கள் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

ஜப்பானில் உறுதியான அரசியல் அமைப்பு உள்ளது. தேவை யான அளவு மூலதனத்திரட்சியானது அங்கு ஏற்படுகின்றது. தொழில் நிறுவனங்கள் பெருகியுள்ளன. தொழில் நிறுவனங் களைத் தொடங்குவதற்கான திறமையும் ஜப்பானியர்களிடம் திகழ்கின்றது. அதிக இலாபத்தைப் பெற வாய்ப்புக்கள் அமைந் துள்ளன. தொழில் வளர்ச்சிக்கு இந்நிலை ஊக்கத்தை அளிக்கிறது.

இங்கிலாந்து நாட்டில் பொருளாதாரப் புரட்சி ஏற்பட்ட பொழுது பிற நாடுகளின் போட்டி அமைந்திருக்கவில்லை. அமெரிக்கா பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான எல்லா இயற்கை வளங்களையும் கொண்டிருந்தது. ரஷ்யாவின் முன்னேற்றம் தீவிரமான புரட்சியால் ஏற்பட்ட ஒன்றாகும். தீவிரவாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் ஏற்பட்ட உள்நாட்டுப் போரில் பலர் உயிரிழந்தனர். மக்களின் பலவித தியாகங்களுக்குப் பிறகே ரஷ்யாவில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது. ஆனால் ஜப்பானின் பொருளாதார முன்னேற்றம் மேற்குறிப்பிடப் பட்டுள்ள நாடுகளின் பொருளாதார முன்னேற்ற நிலைகளினின்றும் பல வகைகளில் வேறுபாடு கொண்டுள்ளது. ஜப்பானில் மக்க ளிடையே ஒருமைப்பாடு அமைந்துள்ளது.

கடல் சூழ்ந்த நாடாக இருப்பதால் ஜப்பான் வெளிநாட்டு வாணிபத்தை எளிதில் செய்ய முடிகின்றது. கப்பல் தொழிலையும் அதற்கேற்ப வளர்த்துக்கொண்டுள்ள நாடு ஜப்பான் ஆகும்; நிலையான, உறுதியான அரசையும் அது பெற்றுள்ளது. சிறிய நாடாக இருப்பதால் ஒரே மொழியே பேசப்படுகின்றது. எதையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பம் ஜப்பானியர்களிடம் இருக்கிறது. மக்கள் பிற நாட்டுத் தொழில் நுட்பங்களைக் கற்று அவற்றில் முன்னேற்றங்களைச் செய்கின்றார்கள். பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் குறுக்கீடும் அமைந்திருக்கிறது. அரசின் கட்டுப்பாடுகளும் விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்குக் காரணமாகும். தொழில் துறையில் அரசு தீவிர பங்கு கொண் டுள்ளது; அரசின் கட்டுப்பாடுகளும் அங்கு அமைந்துள்ளன. ஜப்பானின் விரைவான பொருளாதார முன்னேற்றம் போற்றத் தக்க ஒன்றாகும்.

பொருளாதார முறைகள்

இங்கிலாந்து, அமெரிக்கா, சோவியத் ரஷ்யா, ஜப்பான் ஆகிய நாடுகள் வெவ்வேறு வகைப் பொருளாதார முறைகளைப் பெற்றிருக்கின்றன. அமைப்பு முறைகளில் அவற்றிடையே வேறுபாடுகள் உள்ளன; வரலாற்று அடிப்படைகளும் வேறுபடுகின்றன; பொருளாதார முன்னேற்ற முறைகளும் மாறுபடுகின்றன. ஆனால் எல்லா நாடுகளிலும் பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் புதுமையான தொழில் நுட்பங்கள் புகுத்தப்பட்டன. நுகர்பொருட்கள் ஏராளமான அளவிற்கு உற்பத்தி செய்யப் பெற்றன. நுகர்பொருட்களின் உற்பத்தி பெருகியதால் மக்களின் வாழ்க்கைத்தரமும் உயர்வடைந்தது. இந்நிலையை முதலில் பெற்ற நாடு இங்கிலாந்து ஆகும். முதல் உலகப் போர் முடிவடைந்த பிறகு அமெரிக்காவின் பொருளாதார முன்னேற்றம் மிகச் சிறப்பாக இருந்தது. பொருளாதார பெருமந்தத்தாலும், இரண்டாவது உலகப் போராலும் பாதிக்கப்பட்ட அமெரிக்கப் பொருளாதாரம், அதற்குப் பிறகு மிக விரைவான வளர்ச்சியைப் பெற்றது. அரசியல் அமைப்பில் மாற்றங்கள் ஏற்பட்ட பிறகே ரஷ்யாவின் முன்னேற்றம் சிறப்புற்றது. அதன் பிறகுதான் பொருளாதார அமைப்புகளிலும் முன்னேற்ற மாற்றங்கள் ஏற்பட்டன. சமீப காலத்தில் ஆசிய நாடுகளில் ஜப்பான் விரைவான வளர்ச்சி வீதத்தைக் கொண்டதாக உள்ளது. அதிக உற்பத்தித்திறன் உள்ளதாகவும் அது இருக்கின்றது. பலவகைப்பட்ட நுகர் பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டு, பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. தரமான பொருட்களை பெருமளவிற்கு ஏற்றுமதி செய்து வெளிநாட்டு வாணிபத்தை வளர்த்துக் கொண்டுள்ள நாடு ஜப்பான் ஆகும்.

உலக நாடுகளில் பல பொதுவுடைமைக் கொள்கையையும், வேறு சில நாடுகள் முதலாளித்துவக் கொள்கையையும் பின்பற்றி வருகின்றன. ஆனால் எந்த ஒரு நாடும் முழுமையான முதலாளித்துவக் கொள்கையையோ, பொதுவுடைமைக் கொள்கையையோ பின்பற்றவில்லை. சமதர்மத்தை நோக்காகக் கொண்டுள்ள ரஷ்யாவில் முழுமையான சமதர்மம் அமையவில்லை. அமெரிக்காவில் பின்பற்றப்படுவது உண்மையான முதலாளித்துவம் எனக் கூற இயலாது. பல முதலாளித்துவ நாடுகளில் அரசின் தீவிரக் கட்டுப்பாடுகளும் உள்ளன. ரஷ்யாவில் மக்கள் வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் குறைந்த அளவிற்கு இருக்கின்றன. எல்லா மக்களும் ஒரே மாதிரியான வாழ்க்கைத்தரத்தைக் கொண்டுள்ளார்கள் எனக்கூற முடியாது. எனினும் முதலாளித்துவ நாடுகளைக் காட்டிலும் சமதர்மச் சமுதாயங்களில் தாழ்ந்த நிலையில்

அமைந்துள்ள மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்த்தப்படுகிறது. முதலாளித்துவ நாடுகளில் மக்களின் வருவாயில் ஏற்றத் தாழ்வுகள் அதிகமாக உள்ளன; செல்வப் பங்கீடும் சம மான அளவில் அமைந்திருக்கவில்லை. ஜப்பான் நாட்டுப் பொரு ளாதாரத்தில் அரசின் குறுக்கீடு அமைந்துள்ளது. இவ்வாறு பல நாடுகளின் நிலையைப் பற்றி அறிவது வளர்ச்சிக் குன்றிய நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும்.

'விலை, இலாப முறையைக்' (Price and Profit System) கொண் டது அமெரிக்கப் பொருளாதாரம் எனக் கருதலாம். எனவே அதை முதலாளித்துவத்தைப் பின்பற்றும் சமுதாயம் எனக் கூறலாம். இது உற்பத்தியானது இலாபத்திற்குச் செய்யப்படும் நிலை யைக் கொண்டது. உற்பத்திச் சாதனங்கள் தனியார் உடைமையில் அமைந்திருக்கின்றன. உழைப்பாளர்கள் ஊதியத்திற்காகத் தங்கள் உழைப்பைத் தருகின்றனர். உற்பத்தியை மேற்கொள்ப வர்களுக்கு உற்பத்தி நிலைகளில் முழுச் சுதந்திரம் அமைந்துள்ளது. அதிக ஊதியத்தை உழைப்பாளர்கள் வேண்டினுல் வேலையை இழக்க வேண்டியுள்ளது. ஏனெனில் வேலை வாய்ப்பைப் பெற்றில் லாதவர்கள் குறைந்த ஊதியத்திற்குத் தங்கள் உழைப்பைத் தர முன் வருகிறுர்கள். பொருளாதார முடிவுகள் பரவலாக எடுக்கப் பெறுகின்றன. சமதர்ம நாடுகளில் பெரும்பாலான பொருளாதார முடிவுகளை அரசே எடுக்கிறது. முதலாளித்துவ நாடுகளில் தொழில் முதலாளிகளும், வணிகர்களும் பலவிதமான முடிவுகளை எடுக்கின்றனர். எந்த அளவிற்கு உற்பத்தியைச் செய்ய வேண்டு மென்பதை உற்பத்தியாளர்கள் நிர்ணயிக்கின்றனர்.

முதலாளித்துவ நாடுகளில் தனியார் நிறுவனங்கள் உற்பத்தி யில் ஈடுபடுகின்றன. அதிக அளவு இலாபத்தைப் பெற வேண்டு மென்ற நோக்கம் பொருளாதார நடவடிக்கைகளில் அமைந் துள்ளது. இவ்விதப் பொருளாதாரங்களில் விலைகள் பெருமளவு செல்வாக்கைக் கொண்டுள்ளன. உற்பத்தியாளர்களால் உற்பத்தியின் அளவு நிர்ணயிக்கப்படுகின்றது. பொருட்களின் தரத்தைப் பற்றியும் அவர்கள் நிர்ணயிக்கின்றுர்கள். எவ்வித உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவது என்பதையும் தீர்மானிக் கின்றுர்கள். உற்பத்தியாளர்களுக்கும், நுகர்வோருக்கும் இடையே போட்டி நிலவுகிறது. உற்பத்தியாளர்களுக்குள் போட்டி அமைந்துள்ளது. இதைப் போன்றே நுகர்வோரிடை யேயும் போட்டி அமைந்திருக்கின்றது. அரசு அதிக அளவிற்குத் தனியாருடைய நடவடிக்கைகளில் தலையிடுவதில்லை. வாணிப

நடவடிக்கைகளில் அரசின் குறுக்கீடு குறைந்த அளவிற்கே இருக்கின்றது.

அமெரிக்கப் பொருளாதாரம் ரஷ்யப் பொருளாதாரத்தினின்றும் வேறுபட்ட ஒன்றாகும். வெவ்வேறு வகைப்பட்ட இயல்புகளைக் கொண்டவைகளாக இவ்விரு பொருளாதாரங்களும் இருக்கின்றன. முதலாளித்துவ முறையில் அமைந்திருந்த பல குறைபாடுகளே ரஷ்யாவில் பொதுவுடைமைச் சமுதாயம் ஏற்படக் காரணமாக இருந்தன. போல்ஷவிக் புரட்சிக்கு முன் செல்வப் பங்கீட்டில் அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் இருந்தன. நிலங்களை அதிக அளவிற்குக் கொண்ட நிலப்பிரபுக்கள் இருந்தனர். குறைந்த அளவே வளர்ந்திருந்த தொழில் துறையிலும் தனியார் ஆதிக்கம் மிகுதியாக இருந்தது. உழைப்பாளர்கள் தங்கள் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெறவில்லை. தொழில் முதலாளிகள் தொழிலாளர்களைச் சுரண்டினர். மக்களின் வருவாயில் இருந்த ஏற்றத்தாழ்வுகள் மிக அதிகமாக இருந்தன. புரட்சி வெற்றி பெற்றுத் தீவிரவாதிகளின் அரசு ‘லெனின்’ தலைமையில் ஏற்பட்டது. அதன் பிறகு மக்கள் அனைவருக்கும் சமமான வாய்ப்புக்கள் தரப்பட்டன; தனியார் சொத்துரிமைகள் ஒழிக்கப்பெற்றன; போட்டி நிலைகள் தவிர்க்கப்பட்டன. சிறப்பான பகிர்வு முறையைக் கொண்டுள்ளதாக ரஷ்யப் பொருளாதாரம் இன்று உள்ளது.

சோவியத் ரஷ்யாவில் தொழில் உற்பத்தியின் பெரும்பங்கு அரசின் நிறுவனங்களாலேயே செய்யப்படுகின்றது. முதலாளித்துவ நாடுகளிலும் சில வகைப்பட்ட உற்பத்தி நிறுவனங்களை அரசு ஏற்று நடத்துகிறது. சோவியத் வேளாண்மையில் ‘கூட்டுப் பண்ணைகள்’ (Collective Farms) அமைக்கப்பட்டுள்ளன. அரசின் வேளாண்மைப் பண்ணைகளும் உற்பத்தியில் ஈடுபடுகின்றன. கூட்டுறவுத்துறை பெருமளவிற்கு ரஷ்யாவில் வளர்க்கப்பட்டிருக்கின்றது. அரசின் பண்ணைகள் வேளாண்மை உற்பத்தியில் 8 முதல் 10 சதவீத உற்பத்தியைச் செய்கின்றன. அரசின் தொழில் நிறுவனங்களைப் போன்று அரசின் பண்ணைகள் அமைந்துள்ளன. உற்பத்தியை நிர்ணயிக்க மத்திய அமைப்பு உள்ளது. இந்த அமைப்பே திட்டக் குழுவாகும். பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களை இது தீட்டுகின்றது.

இந்நிலைகளால் ரஷ்யாவும், அமெரிக்காவும் வெவ்வேறு இயல்புகளைக் கொண்டுள்ள பொருளாதாரங்களைப் பெற்றிருக்கின்றன எனலாம். அமெரிக்கப் பொருளாதாரத்தில் அரசு அதிகச் செல்வாக்கைப் பெற்றிருக்கவில்லை. சோவியத் ரஷ்யாவில் அரசிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு

உள்ளது. இங்கிலாந்தில் இவ்விரு நாடுகளுக்கும் இடைப்பட்ட நிலை இருக்கிறது. 1945-இல் 'உழைப்பாளர் கட்சியின்' (Labour Party) அரசாங்கம் ஏற்பட்டது. சமதர்ம முறையில் முன்னேற்றத்தைப் பெற அங்கு முடிவெடுக்கப்பட்டது. ஆனால் தற்பொழுது இங்கிலாந்து அரசு சமதர்ம முறையைப் பின்பற்றுகின்றது எனக் கூற இயலாது. முதலாளித்துவ முறையையும் அது முழுமையாகப் பின்பற்றவில்லை. 'கலப்புப் பொருளாதாரம்' (Mixed Economy) அல்லது 'சமதர்மப் பொருளாதாரம்' (Socialistic Economy) என இதை அழைக்கலாம். இந்தியாவில் பின்பற்றப்படும் சமதர்ம முறைக்கும், இங்கிலாந்தில் பின்பற்றப்படும் முறைக்கும் அதிக வேறுபாடுகள் உள்ளன. இந்திய அரசு பல தீவிரக் கொள்கைகளைக் கொண்டிருக்கின்றது. பல உற்பத்தி நிலைகளும் இந்தியாவில் பொதுவுடைமையாக்கப்பட்டு வருகின்றன. இங்கிலாந்தின் அரசு இவ்வித புரட்சிகரமான மாற்றங்களைச் செய்து வரவில்லை.

இங்கிலாந்தில் சமீப காலமாக முன்னேற்றத்தைப் பெற முறைப்படி திட்டமிடப்படுகின்றது. பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கான வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. பொருளாதாரத்தில் வளர்ச்சியையும், உறுதியான நிலையையும் பெற நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. நெகிழ்வுள்ள திட்ட அமைப்பு முறை அங்கு அமைந்துள்ளது. இங்கிலாந்தில் அதிக அளவிற்குத் தனியார் துறையே வளர்ந்துள்ளது. பொதுத்துறை குறைந்த அளவு முக்கியத்துவத்தை மட்டுமே பெற்றிருக்கிறது. ஆனால் இது வரை ஆங்கிலேயர்கள் குறிப்பிட்ட காலஅளவிற்கான திட்டங்களை வரைந்து செயல் படுத்தவில்லை. தற்பொழுது முன்னேற்றத்தைப் பெறுவதற்காக எல்லாத் தொழில்களிலும் சிறு வளர்ச்சிக்குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக் குழுக்கள் யாவும் ஒருங்கிணைந்த மத்திய அமைப்பு ஒன்றும் உள்ளது. திட்டத்தை ஏற்கவும், மேற்பார்வையிடவும் புதிதாக அரசின் அமைப்பு செயல் படுகின்றது.

வாய்ப்புக்களை நன்கு பயன்படுத்தி பொருளாதார முன்னேற்றத்தை ஜப்பான் பெற்றது. 'தலையிடாமைக் கொள்கை' (Laissez faire) ஜப்பான் நாட்டில் பின்பற்றப்படவில்லை. இதன் காரணமாகவே அங்கு பொருளாதாரத் தாழ்வு நிலை நீக்கப்பட்டது. படிப்படியாக மூலதனத்திரட்சியும் ஏற்பட்டது. தொழில் முயல்வோர் எண்ணிக்கையில் உயர்ந்தார்கள். இங்கிலாந்தின் பொருளாதாரத் தத்துவம் ஜப்பானில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அவ்வாறு இங்கிலாந்தின் முறை பின்பற்றப்பட்டிருந்தால், விரைவான பொருளாதார முன்னேற்றத்தை ஜப்பான் பெற்றிருக்க இயலாது. ஜப்பான் அரசு வாணிப அமைப்புக்

களோடு இணைந்து செயல்பட்டது. தொழில் முயல்வோருக்கும் அரசிற்கும் இடையே நெருங்கிய தொடர்பு அமைந்திருந்தது. இதன் மூலம் பொருளாதாரத்தில் முன்னேற்றத்தைப் பெறலாம் என்பதை ஜப்பான் உலகிற்கு உணர்த்தியது. தொழில் முதலாளி களுக்கும், தொழிலாளர்களுக்கும் இடையே சுமுகமான உறவு நிலவுகின்றது. நிலப்பிரபுக்களுக்கும், குத்தகையாளர்களுக்கும் இடையே ஒற்றுமை இருக்கின்றது. இந்நிலைகளின் மூலமே ஜப்பான் வளமான பொருளாதாரத்தைப் பெற்றது. ஜப்பான் அரசு பின்பற்றுகின்ற இம்முறையை 'புதுமை முதலாளித்துவம்' (Modern Capitalism) என அழைக்கலாம். தேசியவுடைமையாக் கப்பட்ட உற்பத்தி நிறுவனங்கள் அங்கு அமைந்திருக்கவில்லை. தனியார் நிறுவனங்களுக்கு அரசு உதவுகின்றது. முன்னேற்றத் திட்டங்கள் தொடங்கப் பெறுகின்றன. வாணிபத்தில் ஈடுபடு பவர்களுக்குப் பலவித வசதிகளும் செய்து தரப்படுகின்றன. அரசு தனியார் துறைக்குப் பல வகைகளிலும் உதவுகின்றது.

மேம்பாடடைந்த நாடுகள் பொருளாதார முன்னேற்ற முறை களில் பலவித மாற்றங்களைச் செய்து வருகின்றன. இங்கிலாந்து திட்டமிட்டுப் பொருளாதாரத்தை மேலும் வளர்க்க விழை கின்றது. அரசின் கொள்கைகள் வளமான பொருளாதாரத்தைக் காக்கத் தேவை என்பதை அமெரிக்கர்கள் உணர்ந்துள்ளனர். அரசு பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதும் இன்றிய மையாதது என்பதை அவர்கள் அறிந்திருக்கின்றார்கள். முழுவேலை வாய்ப்பைப் பெறவும், நாட்டின் வளங்களைச் சிறப்பாகப் பயன் படுத்தவும் அரசு திறம்படச் செயலாற்ற வேண்டும். மாறுபடு கின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வரிவிதிப்பு முறை அமையவேண்டும். அமெரிக்காவில் முழுமையான முதலாளித் துவம் செயல்படவில்லையென்றாலும், தனியார் துறையே அதிகச் செல்வாக்கைக் கொண்டிருக்கின்றது. முன்னேற்றத்திற்காக அமெரிக்காவிலும் திட்டங்கள் வகுக்கப்படுகின்றன. அமெரிக்கா வின் கலப்புப் பொருளாதார நிலை அமைந்துள்ளதெனலாம். சோவியத் ரஷ்யாவில் சமீபகாலத்தில் நிர்வாகத்திலும், திட்ட முறையிலும் மாற்றங்கள் கொண்டு வரப்பட்டன. இவ்வாறு எல்லா நாடுகளிலும் இயக்கநிலையில் மாற்றங்கள் ஏற்பட்டு வரு கின்றன. தனியார் துறைக்கு அரசு உதவுவது நன்மைபயக்கும் என்பதை ஜப்பான் உணர்த்துகிறது. இம் முறையை மக்கட் தொகை மிக்க இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பின் பற்றலாம். வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறு இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்குப் பல படிப்பினை களை உணர்த்துவதாக உள்ளது.

## பொருளாதார முன்னேற்றத்திற்கான படிப்பினைகள்

உலகின் வளர்ச்சியடைந்த நாடுகளில் முக்கியமானவைகளாக இருப்பவை இங்கிலாந்து, அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான் ஆகியவையாகும். இந் நாடுகள் யாவும் பல காலத்திற்கு முன்பு வளர்ச்சியடையாத பொருளாதாரத்தையே கொண்டிருந்தன. வளர்ச்சிக் குன்றிய நாடுகளின் பொருளாதார இயல்புகள் வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார இயல்புகளின்னின்றும் வேறுபாடு கொண்டவைகளாகும். முன்னேற்றமடைந்த நாடுகள் முதலாளித்துவம், பொதுவுடைமை, சமதர்மம் போன்ற வெவ்வேறு வகைப்பட்ட முறைகளில் தங்கள் பொருளாதாரங்களை வளர்த்துக் கொண்டுள்ளன. இவற்றில் எம்முறை பின்தங்கிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும் என்பதை ஆராய்வது அவசியமாகும். இதைத்தவிர, திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியைப் பற்றி அறிவதும் இன்றியமையாததாகும். இவற்றின் மூலம் வளர்ச்சிக் குன்றிய நாடுகள் எளிதில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியும்.

## வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொதுவான இயல்புகள்

வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் வறியநிலை மக்களிடையே திகழ்கின்றது. வாழ்க்கைக்கு இன்றியமையாத சில தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்து கொள்ள முடியாத நிலையில் மக்கள் இருக்கின்றனர். உணவுப்பற்றுக்குறையும் இந் நாடுகளில் அமைந்துள்ளது. குறைந்த வருவாயைப் பெறும் மக்களிடம் சேமிக்கும் பழக்கம் அமைந்திருப்பதில்லை ; ஆனால் நுகரும் விருப்பம் அவர்களிடம் அதிக அளவிற்கு அமைந்திருக்கின்றது. இதன் விளைவாக வளர்ச்சியடையாத நாடுகளில் தலா வருவாய் மிகக் குறைவாகவே பெறப்படுகிறது. உலக நாடுகளில் மிகக் குறைவான தலா வருவாயைப் பெறுகின்ற சில நாடுகளில் இந்தியாவும் ஒன்று. எனவே இந்தியாவின் பலவித பொருளாதாரச் சிக்கல்களுக்குத் தீர்வு காண தலா வருவாய் உயர்த்தப்பட வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளின் மற்றொரு முக்கிய இயல்பு முன்னேற்றமடையாத வேளாண்மை அமைந்திருக்கின்ற நிலையாகும். இந்நாடுகளில் வேளாண்மை முக்கியத் தொழிலாக அமைந்துள்ளது. பெரும்பாலான மக்கள் கிராமப்புறங்களில் வசிக்கின்றனர். வேளாண்மையில் வேலையின்மை அமைந்திருப்பதோடு, 'மறைந்துள்ள வேலையின்மையும்' (Under-employment) உள்ளது. ஒரு குறிப்பிட்ட அளவுள்ள நிலத்தில் ஈடுபட்டுள்ள விவசாயிகளின் எண்ணிக்கை இந்தியாவில் அதிமாக இருக்கின்றது. அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் அதே அளவு நிலத்தில்

ஈடுபட்டுள்ள விவசாயிகளின் எண்ணிக்கையைக் காட்டிலும் இது நான்கு மடங்கு அதிகமானதாகும். வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் உணவுப் பற்றுக் குறையால் வாடுகின்றனர்கள். மக்களின் வருவாயில் 50 சதவீதத்திற்கும் மேலாக உணவுப் பொருட்கள் வாங்குவதற்குச் செலவிடப்படுகிறது. இந்நாடுகள் வளர்ச்சியடையாத நிலையில் இருக்கின்றமைக்கு உழைப்பாளர்களில் பெரும் பகுதியினர் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளமையே முக்கியக் காரணமாகும்; இதன் காரணமாகக் குறைந்த அளவு உற்பத்தியை மட்டுமே பெற முடிகின்றது.

இந்நாடுகளில் வேளாண்மை பின்தங்கிய நிலையில் உள்ளமைக்குச் சிறிய நிலவுடைமைகளும் காரணமாகும். ஒவ்வொரு சாகுபடியாளரும் சிறிய அளவுள்ள நிலத்தில் சாகுபடியை மேற்கொள்கின்றனர். தேவையான உற்பத்திச் சாதனங்கள் விவசாயிகளிடம் இருப்பதில்லை. சிறிய நிலவுடைமைகளில் அவர்களால் எவ்வித முன்னேற்றத்தைச் செய்யவும் முடிவதில்லை. பொருளாதார ரீதியில் சிறிய நிலவுடைமைகள் அதிக இலாபத்தைத் தருவதில்லை. சிறிய அளவுகளில் அமைந்துள்ள சாகுபடி நிலங்கள் பல இடங்களில் சிதறிக்கிடக்கின்றன. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் வேளாண்மை இயந்திர மயமாக்கப்படுவதில்லை. இவ்விதப் பின்தங்கிய வேளாண்மை ரஷ்யா, இங்கிலாந்து போன்ற நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தின் முதற் சில நிலைகளில் அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கதாகும். இச்சிக்கல் தற்பொழுது இந்நாடுகளில் பல வழிமுறைகளால் தீர்க்கப்பட்டுவிட்டது.

சந்தைப் பொருளாதாரமும், பணப் பொருளாதாரமும் பின்தங்கிய நாடுகளில் வளர்ந்திருப்பதில்லை. நகர்ப்புறங்களில் மட்டுமே இவை அமைந்துள்ளன. கிராமப் பகுதிகளில் தன்னிறைவு வேளாண்மைப் பொருளாதாரமே திகழ்கின்றது. இவ்வாறு கிராமப் பொருளாதாரத்திற்கும், நகரப் பொருளாதாரத்திற்கும் வேறுபாடுகள் இருக்கின்றன. சிறிய நகரங்கள், பெரிய நகரங்கள், துறைமுகங்கள் ஆகியவைகளும் உள்ளன. இந்நகரங்கள் வெளியுலகத் தொடர்பு கொண்டவைகளாக இருக்கின்றன. வெளிநாடுகளுடன் நேரடித் தொடர்பு கொள்ள கப்பல்கள், ஆகாய விமானங்கள் ஆகியவை பயன்படுத்தப் படுகின்றன. வானொலி வசதியும், தொலைபேசி வசதியும், பிற செய்தித் தொடர்பு வசதிகளும் இந்நகரங்களில் அமைந்துள்ளன. நகர்ப்புறங்களில் மக்கட் தொகைப் பெருக்கம் விரைவாக ஏற்படுகின்றது. குடியிருப்பு வசதிகள் போதுமான அளவில் அமைந்திருப்பதில்லை. இதற்கான செலவும் அதிக அளவில் அமைகின்றது. வரிகள் உயர்ந்த அளவில் வசூலிக்கப் படுகின்றன. உணவுப் பொருட்களின் விலைகளும்

உயர்வாக உள்ளன. போக்குவரத்துச் செலவுகளும் அதிக அளவிலேயே இருக்கின்றன. கிராமங்களைக் காட்டிலும் நகரங்களில் அவசியப் பண்டங்களின் விலைகள் அதிகமாகவே அமைந்துள்ளன.

கிராம மக்கள் குறைந்த அளவிற்கு மட்டுமே நகரங்களுக்குக் குடி பெயர்கின்றனர்கள். கிராமப்புறங்களில் அமைந்துள்ள 'மறைந்துள்ள வேலையின்மைச் சிக்கல்' தீர்க்கப் படாததாகவே இருக்கின்றது. கிராமங்களில் முன்னேற்றம் சிறப்பாக ஏற்படுவதில்லை. நகர்ப்புறங்களில் மக்கட்தொகை அதிகமாக உள்ளது. இதனால் பொருளாதார, சமுதாயச் சிக்கல்கள் தோன்றுகின்றன. பின்தங்கிய நாடுகளின் கிராமங்கள் மிகவும் வளர்ச்சியடையாத நிலையிலேயே இன்னும் இருக்கின்றன. போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் கிராமங்களில் வளர்ந்திருப்பதில்லை. இதனால் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையே சிறப்பானத் தொடர்புகள் ஏற்படுவதில்லை. கிராம மக்களின் வாழ்வில் குறிப்பிடத்தக்க முன்னேற்றங்களோ, மாற்றங்களோ தோன்றுவதில்லை. பல தலைமுறைகளுக்குப் பிறகும் கிராமச் சமுதாயத்தில் மக்களுக்குத் தரமான வாழ்க்கையளிக்கத்தக்க முன்னேற்றங்கள் ஏற்படுவதில்லை. வளர்ச்சியடையாத நாடுகளில் பஞ்சங்கள் தோன்றுகின்றன. சில காலங்களில் தட்பவெப்பநிலைகள் சாதகமாக இல்லாத நிலையாலும் உற்பத்தி பாதிக்கப்படுவதுண்டு. இந்நாடுகளில் தன்னிறைவுப் பொருளாதாரமானது நீக்கப்பட்டு, பணப் பொருளாதாரம் ஏற்படவேண்டும். நகரங்களின் எண்ணிக்கையிலும் உயர்வு தேவைப்படுகின்றது.

மேம்பாடடைந்து வரும் நாடுகளில் மக்களின் பின்தங்கிய பழக்க வழக்கங்களும் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளன. மக்களின் வாழ்க்கைத்தரமானது உயர்த்தப் படவேண்டும். தரமான வாழ்வைப் பெற மக்கள் விரும்புகின்றனர்கள் ; ஆனால் தங்களின் பழக்க வழக்கங்களில் மாற்றங்களை ஏற்படுத்திக்கொள்ள அவர்கள் விரும்புவதில்லை. மக்களின் கலாச்சார, பண்பாட்டு முறைகளில் எளிதில் மாற்றங்கள் தோன்றுவதில்லை. இயக்கநிலை ஏற்படத் தடையாக மதமும் ஒரு காரணமாக அமைகின்றது. இயற்கை ஒத்துழைத்தாலன்றி உற்பத்தியைப் பெருக்க இயலாது என கிராம மக்கள் உறுதியாகக் கருதுகின்றனர். இயற்கைக்கு எதிராகச் செயல்பட அவர்கள் விரும்புவதில்லை ; பலவித மூட நம்பிக்கைகள் கொண்டவர்களாகவும் இருக்கின்றனர். "விதி வலியது என அவர்கள் நம்புகின்றனர் ; விதியென்று எதுவும் இல்லை என்பதை அவர்கள் உணர்ந்திருப்பதில்லை." அதிக நுகர்வில் ஈடுபடுவது தேவையில்லாதது, பாவத்தைத் தருவது எனவும்

அவர்கள் கருதுகின்றனர். இவ்வித நிலைகள் வளர்ச்சியடைந்த நாடுகளில் அமைந்திருக்கவில்லை. வறிய நிலை தங்களுடைய தவறினால் ஏற்படுவது என்பதை வளர்ச்சியடைந்த நாடுகளின் மக்கள் உணர்ந்துள்ளார்கள். சிக்கனம், சேமிப்பு, ஆர்வம் ஆகியவற்றால் எதையும் சாதிக்க முடியும் என்பதை அவர்கள் அறிந்திருக்கின்றார்கள்.

வளர்ச்சியடைந்துவரும் இந்தியா, பாகிஸ்தான், இலங்கை பர்மா போன்ற நாடுகளில் மக்களின் பழக்கவழக்கங்களில் பல தலைமுறைகளாகக் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படவில்லை. வேளாண்மையில் புதிய சாகுபடி முறைகளைப் பின்பற்ற விவசாயிகள் இந்நாடுகளில் விரும்புவதில்லை. அவ்வாறு சிலர் புதிய முறைகளைப் பின்பற்றினால், பிற விவசாயிகள் அம்முறைகளைக் குறை கூறுகின்றனர். புதிய, முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ள அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. ஆனால் விவசாயிகள் மூலதனப் பற்றாக்குறை நிலையைக் கொண்டுள்ளார்கள். சரியான கண்காணிப்பு இல்லாவிடில் முன்னேற்றமான சாகுபடி முறைகள் வெற்றியைத் தருவதில்லை. பரிசோதனை முறைகளையும் விவசாயிகள் விரும்புவதில்லை.

முன்னேற்றமடைந்த நாடுகளில் வாணிபத்தின் அளவு உயர்வாக உள்ளது. இந்தியா போன்ற முன்னேற்றமடைந்து வரும் நாடுகளில் வாணிபத்தில் ஈடுபட மக்கள் அதிக விருப்பம் கொண்டிருப்பதில்லை. வருவாயைப் பெருக்கி நல்வாழ்வைப் பெற வேண்டுமென்ற எண்ணமே மக்களிடம் அமைந்திருப்பதில்லை. ஆடம்பரப் பொருட்களையும், வசதிப் பொருட்களையும் நுகர வேண்டுமென்ற விருப்பமும் குறைந்த அளவே மக்களிடம் உள்ளது. கிராம மக்கள் வியாபாரத்தில் ஈடுபடுவதைவிட நிலத்தை உடைமையாகக் கொள்ளவே விரும்புகின்றார்கள். செல்வங்கள் வாரிசுதாரர்களுக்குச் செல்கின்றன. எனவே மக்கள் அனைவரும் உழைத்து உயர வேண்டுமென்ற அவசிய நிலை அமைந்திருப்பதில்லை. வளர்ச்சியடைந்த நாடுகளில் மக்கள் தங்கள் வாழ்வைத் தாங்களே உயர்த்திக்கொள்கின்றார்கள். இந்நிலை வளர்ச்சியடையாத நாடுகளில் அமைந்திருப்பதில்லை. பின்தங்கிய நாடுகளில் அதிக வருவாய் பெறுபவர்கள் உற்பத்திக்கு உதவாத பணிகளில் தங்கள் வருவாயைச் செலவிடுகின்றனர். கோவிலைக் கட்ட உதவிய ஒருவனைச் சமுதாயம் உயர்ந்த நிலையில் வைத்து எண்ணுகின்றது; அம் மூலதனமானது உற்பத்திப் பணிகளில் ஈடுபடுத்தப்பட்டால் சமுதாய முன்னேற்றம் ஏற்படுமென்பதை மக்கள் அறிந்திருப்பதில்லை. செல்வந்தர்கள் அதிக எண்ணிக்கையில் பணியாளர்களைக் கொண்டுள்ளார்கள். மனித

உழைப்பானது பின்தங்கிய நாடுகளில் வீணடிக்கப்படுகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளில் இந்நிலைகள் அமைந்திருப்பதில்லை. அந்நாடுகளில் மனித உழைப்பு அதிகச் செல்வாக்குக் கொண்டதாக உள்ளது. சமுதாயத்தில் ஒருவருக்குள்ள நிலை அவர் பெறுகின்ற வருவாயைப் பொருத்தே அமைகின்றது. ஆகவே மக்கள் வருவாயைப் பெருக்க வேண்டுமென விருப்புக் கொள்கின்றனர்.

பின்தங்கிய நாடுகளில் கூட்டுக் குடும்ப முறையும் அமைந்துள்ளது. மேம்பாடடைந்த நாடுகளில் ஒரு குடும்பத்தில் உள்ள எல்லோரும் உழைத்து வருவாய் பெற விரும்புகின்றனர். கூட்டுக் குடும்ப முறைகளில் பலவிதக் குறைபாடுகள் உள்ளன. திருமணம் போன்ற சடங்குகளுக்கு அதிக அளவில் செலவிடப்படுகின்றது. கடின உழைப்பு தனி ஒருவரின் விருப்பமாக அமைந்திருப்பதில்லை. வளர்ச்சியடையாத சமுதாயங்களில் புதிய கண்டுபிடிப்புக்கள் ஏற்படுவதில்லை. அதிக வருவாய் பெறுபவர்கள் சேமித்து உற்பத்தியைப் பெருக்கும் முதலீடுகளைச் செய்வதில்லை. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் போன்ற நாடுகளில் மக்களின் பழக்க வழக்கங்கள் உயர்வான உற்பத்தியைப் பெற உதவுகின்றன. இதன் காரணமாகவே இந்நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றன என்று கூறலாம்.

## முன்னேற்றத்திற்கான அடிப்படை முறை

பின்தங்கிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற சில அடிப்படைக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். முன்னேற்றத்தைப் பெறுவதற்கு இடையூறாக மூலதனப் பற்றாக் குறை அமைந்திருக்கின்றது. அதிக அளவு உற்பத்தியைப் பெற ஆக்கக்காரணிகள் முழுமையாகப் பயன்படுத்தப்பட வேண்டும்; சரியான விகிதங்களில் அவற்றை இணைத்து உற்பத்தி மேற்கொள்ளப்பட வேண்டும். முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் ஆக்கத்தின் அளவை அதிகரிக்க உதவுகின்றன. இந்நிலைகள் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் தாமாகவே ஏற்பட்டன. சோவியத் ரஷ்யாவில் அரசு தீவிர நடவடிக்கைகளால் இந்நிலைகளை ஏற்படுத்தியது. வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறுகள் பின்தங்கிய நாடுகளில் முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்ற ஊக்கத்தைத் தோற்றுவிக்கின்றன. வளர்ச்சி பெற்ற பொருளாதாரங்கள் வளர்ச்சிக் குன்றிய பொருளாதாரங்களுக்கு வழிகாட்டியாக உள்ளன.

சோவியத் ரஷ்யாவின் திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சி பல வளர்ச்சியடையாத நாடுகளில் திட்டங்களை மேற்கொள்ள ஊக்கத்தைத் தந்துள்ளது. இந்நாடுகளின் அரசுகள் விரைவான

முன்னேற்றத்தைப் பெற திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தி வருகின்றன. இந்நாடுகளுள் இந்தியாவும் ஒன்றாகும். அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் பொருளாதார வரலாறுகளும் பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன. உலகின் செல்வ நாடுகள் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்கு உதவி புரிகின்றன. இவ்வுதவியின் மூலம் பின்தங்கிய நாடுகள் எளிதில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வாய்ப்பு இருக்கின்றது. பல வளர்ச்சியடைந்த நாடுகள் உதவிகளை அளித்து வரு கின்றமைக்கு அரசியல் நோக்கே முக்கியக் காரணமாகின்றது. அமெரிக்கா முதலாளித்துவத்தைப் பரப்பவும், ரஷ்யா பொது வுடைமையைப் பரப்பவும் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்கு உதவி வருகின்றன. பின்தங்கிய நாடுகள் முன்னேற்றமடைய வேண்டுமென்பது முன்னேற்றமடைந்த நாடுகளின் முதல் முக்கிய நோக்கமாக இருப்பதில்லை. அமெரிக்கப் பொருளாதாரத்தைப் பற்றி அறிவதின் மூலம் அமெரிக்கா அளிக்கும் வெளிநாட்டு உதவியின் நோக்கத்தைப் புரிந்துகொள்ளலாம். வெளிநாட்டு உதவியைப் பெறுகின்ற மேம்பாடடைந்துவரும் நாடுகள் இவற்றைப் பற்றி அறிந்திருப்பது அவசியமாகின்றது.

குறிப்பிட்ட காலத்திற்குள் பின்தங்கிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது இன்றியமையாத தாகும். விரைவான பொருளாதார முன்னேற்றத்தின் தொடக் கத்தைப் பெற வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பல வசதிகளைப் பெற வேண்டும். 17-ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்திலும் 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்திலும் இங்கிலாந்து இவ்வித வசதிகளைப் பெறத் தொடங்கியது. புதுமையான விஞ்ஞானம் வளர்ந்தமையால் புதிய உற்பத்தி முறைகள் வேளாண்மையிலும், தொழில் துறையிலும் கைக்கொள்ளப் பெற்றன. பொருளாதாரத்தில் இயக்கநிலையானது தோன்றியது. இதன் காரணமாக வெளிநாட்டு வாணிபமும் வளர்ந்தது. உலகச் சந்தையில் இங்கிலாந்து முக்கிய இடத்தைக் கொண்டிருந்தது. இங்கிலாந்து உலகச் சந்தையில் பிற நாடுகளின் போட்டியை எளிதில் சமாளிக்க முடிந்தது. சமுதாயம் நலம்பெற, மக்களு டைய வாழ்க்கை வளம்பெற பெருளாதார முன்னேற்றம் முக்கிய மானதாகும்.

பேராசிரியர் ரோஸ்டோவ் (Prof. Rostow) இங்கிலாந்தின் விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்குத் தொழில் நுணுக்க வளர்ச்சியே முக்கியக் காரணமாகும் என்று கூறுகிறார். முன்னேற்றத்தின் தொடக்க நிலையில் சேமிப்பு, முதலீட்டு வீதம் 5 சதவீதத்திலிருந்து 10 சதவீதமாக உயரவேண்டும்.

இங்கிலாந்தின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாக இருந்த காலம் 1783-ஆம் ஆண்டு முதல் 1803-ஆம் ஆண்டு வரையாகும். அமெரிக்கா முன்னேற்றத்திற்கான அடிப்படையை 1860-ஆம் ஆண்டிற்கு முன்பு பெற்றது. சோவியத் ரஷ்யாவில் 1914-ஆம் ஆண்டிற்கு முன்பே முன்னேற்றத்திற்குத் தேவையான அடிப் படை வசதிகள் பெறப்பட்டுவிட்டன. இந்தியா உட்பட பல வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் விரைவான வளர்ச்சியைப் பெறும் தொடக்கநிலையில் உள்ளன. இந்நாடுகள் இயற்கை வளங் களைச் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டும். தொழில்துறை தவிர பிற துறைகளும் வளர்க்கப்படுதல் அவசியமானதாகும். வேளாண்மை, தொழில் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய பல வசதிகள் பெருக்கப்பட வேண்டும். சமுதாயத் திற்கு நன்மையளிக்கக் கூடிய சில இன்றியமையாத வசதிகளும் செய்யப்படுதல் வேண்டும். குறிப்பாக வேளாண்மையை வளர்ப்பது மிக முக்கியமானதாகும். ஏனெனில் பிற துறைகளின் வளர்ச்சி அடிப்படைத் தொழிலாகிய வேளாண்மையைச் சார்ந்திருக் கின்றது. அந்நியச் செலாவணியைப் பெற்றுத்தரும் துறைகள் வளர்க்கப்படவேண்டும். பின்தங்கிய நாடுகள் தொழில் முன்னேற் றத்தைப் பெற மூலதனப் பொருட்களை முன்னேற்றமடைந்த நாடுகளினின்றும் இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்ய அதிக அளவு அந்நியச் செலாவணி யானது தேவைப்படுகின்றது.

மேம்பாடடைந்துவரும் நாடுகளின் உற்பத்தி முறைகளில் தொழில் நுட்பங்களைப் புகுத்துவதின் மூலமாக விரைவான வளர்ச்சி வீதத்தைப் பெற இயலும். அதிக அளவு இலாப வீதத்தை அனுமதிப்பதின் மூலமும் முன்னேற்றத்தைப் பெற லாம். நுகர்வின் அளவிற்கு அதிகமாக உற்பத்தி செய்யப்பட வேண்டும். வேளாண்மையில் அமைந்துள்ள அதிக மக்கட் தொகை பிற துறைகளில் ஈடுபடுத்தப்பட வேண்டும். போக்கு வரத்து, வாணிபம், தொழில் ஆகிய யாவற்றிலும் முன்னேற்றம் ஏற்படுவது தேவையாகின்றது. எளிய கடன் வசதிகள் வேளாண்மை, தொழில் ஆகிய இரு துறைகளுக்கும் அளிக்கப்பட வேண்டும். அரசின் பண, நிதிக் கொள்கைகள் திறம்பட அமைவது எளிதாகப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவு கின்றது. கல்வி வசதிகளைப் பெருக்குவதும் பின்தங்கிய நாடுகளில் அவசியமானதாகும். இவற்றில் வளர்ச்சியடைந்த நாடுகளின் முறைகளை வளர்ச்சியடையாத நாடுகள் பின்பற்றலாம். உற்பத் தியை உயர்த்த வேண்டியதன் அவசியத்தை விவசாயிக்கு உணர்த்தவேண்டும். உற்பத்தி தன்னிறைவிற்காகச் செய்யப் படாமல் சந்தைக்காகவும் செய்யப்பட வேண்டும். புதிய உற்பத்தி

முறைகளை அவர்கள் பின்பற்றுமாறு செய்யவேண்டும். புதிய விரிவான சந்தைகள் தோன்ற வேண்டும். தொழில் முயல்வோரின் எண்ணிக்கை பெருக வேண்டும் ஓரளவு இலாபத்தைப் பெற்று அதிக அளவு உற்பத்தியைப் பெருக்குபவர்களாக அவர்கள் அமைவது அவசியமாகும். பழைய உற்பத்தி முறைகள் நீக்கப்பட வேண்டும். நாட்டின் நலனிற்காகப் பணியாளர்கள் குறைந்த ஊதியத்தைப் பெறவும் தயாராக இருத்தல் வேண்டும். திறமை யான முறைகளில் உழைப்பாளர்கள் உழைப்பைத் தருதல் வேண்டும்.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் உயர்ந்த வளர்ச்சி வீதத்தைப் பெறுவதின் மூலம் பல பொருட்களின் உற்பத்தியில் தன்னிறை வைப் பெற்றுவிடலாம். மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியும். உள்நாட்டுச் சேமிப்பு வீதத்தையும் அதிகரிக்கலாம். இறக்குமதியின் அளவும் படிப்படியாகக் குறைக்கப்பட வேண்டும். பிறநாடுகளின் உதவியை எதிர்நோக்காத அளவிற்குப் பொருளா தாரம் வளர்ந்திருக்க வேண்டும். குறைந்தபட்ச வாழ்க்கைத் தரத்தையாவது மக்கள் அனைவரும் பெறுவது அவசியமான தாகும். மேம்பாடடைந்துவரும் நாடுகள் இறக்குமதியைச் செய் வதும் அவசியமாகும். இறக்குமதிப் பொருட்களின் மதிப்பைக் காட்டிலும் ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பு அதிகமாக இருத்தல் நன்மை பயக்கும். ஏனெனில் வெளிநாட்டுக் கடன்களைத் திருப்பித்தர இந்நிலை உதவும். ஏற்றுமதியின் அளவை அதிகரிக்க ஏற்றுமதி உபரியின் அளவை உயர்த்த வேண்டும். இறக்குமதி செய்கின்ற பொருட்களின் மதிப்பிற்குச் சமமாகவாவது ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பு அமைந்திருக்க வேண்டும்.

வளர்ச்சியடைந்த நாடுகளின் அனுபவங்களினின்றும் பொருளாதார முன்னேற்றத்திற்கான முறைகளைத் தெரிந்தெடுக்க லாம். தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெற வேளாண்மை, தொழில் துறைகளின் முன்னேற்றத்தில் தனிக் கவனம் செலுத்தப் படவேண்டும். ஏற்றுமதியைப் பெருக்கி, இறக்குமதிப் பொருட் களை உள் நாட்டிலேயே உற்பத்தி செய்துகொள்ளலாம். இங்கிலாந்து பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றமைக்குப் பல தொழில்களின் வளர்ச்சியே காரணமாகும். இத் தொழில்கள் உற்பத்தி செய்த பலவகைப்பட்ட பொருட்களுக்கும் ஏற்றுமதிச் சந்தைகள் அமைந்திருந்தன. பன்னாட்டு வாணிபம் பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியை அளித்தது. இதைப் போன்ற நிலையே அமெரிக்காவிலும் அமைந்திருந்தது.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வேளாண்மை உற்பத்தி யைப் பெருக்க வேண்டுமென்றால் கிராம மக்களின் வருவாய்

உயரவேண்டும். இதன் மூலமே உணவு உற்பத்தியில் தன்னிறைவைப் பெற இயலும். தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான கச்சாப் பொருட்களையும் பெற முடியும். வேளாண்மை, தொழில் ஆகிய இரு துறைகளில் எத்துறையை வளர்க்க வேண்டுமென எண்ணத் தேவையில்லை. இரு துறைகளின் முன்னேற்றமும் இன்றியமையாததாகும். கிரேட் பிரிட்டனில் குறைந்த அளவு நிலம் மட்டுமே வேளாண்மையில் அமைந்துள்ளது. அங்கு 6 சதவீத மக்கட்தொகை 40 முதல் 50 சதவீத மக்கட்தொகைக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்கின்றது. அமெரிக்கர்கள் தங்களுக்குத் தேவையான உணவுப்பொருட்களை உற்பத்தி செய்வதோடு, அப் பொருட்களை பிற நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கின்றார்கள். சமீபகாலத்தில், தொழில் நுட்ப முன்னேற்றத்தின் காரணமாக வேளாண்மை முழுதும் முற்றிலும் இயந்திரமயமாக்கப்பட்டு விட்டது. சிறிய பண்ணைகளின் குறைந்த வருவாய் அமெரிக்காவிலும், கிரேட் பிரிட்டனிலும் சிக்கலாகவே அமைந்துள்ளது; சிறிய விவசாயிகள் பல சிக்கல்களைக் கொண்டிருக்கின்றார்கள். எனவே இவ்விரு நாடுகளிலும் இச் சிக்கல்களைத் தீர்க்க அரசுகள் உதவி வருகின்றன. அமெரிக்காவில் கூட்டுறவுத் துறைக்கு அரசு உதவி வருகின்றது வேளாண்மைக்கு உதவும் வகையில் கூட்டுறவுத்துறை பணியாற்றி வருகின்றது. வேளாண்மை விளைபொருட்களின் விற்பனைக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் உதவுகின்றன; அடமான முறையில் உற்பத்திக்கான கடன்களை அளிக்கின்றன. வேளாண்மைக்கான நீர்ப்பாசன வசதிகளும் செய்யப்படுகின்றன. விற்பனைக்கான கூட்டுறவுச் சங்கங்களோடு, கூட்டுறவு வங்கிகளும், மின்சாரக் கூட்டுறவுச் சங்கங்களும் அமைந்துள்ளன. காப்புறுதி வசதிகள், மருத்துவ வசதிகள், தொலைபேசி வசதிகள் ஆகியவைகளும்கூட கூட்டுறவுச் சங்கங்களால் கிடைக்கின்றன. வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் வேளாண்மை முன்னேற்றத்திற்கு இம் முறைகளைப் பின்பற்றலாம்.

வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றக் கொள்கை வேலை வாய்ப்பிற்கும், நுகர்வுக்கும் முக்கியத்துவத்தைத் தரவேண்டுமென்பது சிலருடைய கருத்தாக உள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளை இவர்கள் இக் கருத்துக்கு மேற்கோளாகக் காட்டுகின்றனர். ஆனால் இக்கருத்து தவறுடையதாகும். அதிக வேலை வாய்ப்புகளைப் பெருக்குவது பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் இயலாதெனலாம். இதைப் போன்றே பொருளாதாரம் முன்னேற்றத்தைப் பெற்ற பிறகுதான் மக்கள் தரமான வாழ்வைப் பெறுகின்றார்கள்; நுகர்வின் அளவும் அப்போதுதான் அதிகரிக்கின்றது. விரைவான பொருளாதார

வளர்ச்சி வீதத்தைப் பெற்ற பிறகுதான், வளர்ச்சியில் நிரந்தரத் தன்மை தோன்றுகின்றது. அதற்கு அதிக அளவு முதலீடு தேவைப்படுகிறது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் தாங்களே உள்நாட்டில் இயந்திரங்களையும், கருவிகளையும் உற்பத்தி செய்ய முயல வேண்டும். இதன் மூலம் இறக்குமதியின் அளவைக் குறைக்க முடியும். இறக்குமதி அதிகமாக இருந்தால், ஏற்றுமதியைப் பெருக்குவதும் தவிர்க்க முடியாதது. எனவே இறக்குமதிப் பொருட்களின் அளவைக் குறைத்து, ஏற்றுமதியைப் பெருக்குவது நன்மை பயக்கும்.

மேம்பாடடைந்த நாடுகளில் மூலதனத்திரட்சி உயர்ந்த அளவில் அமைந்திருக்கின்றது. இந்நாடுகளின் பொருளாதார வளர்ச்சி நிலைகளை அறிவதின் மூலம் பின்தங்கிய நாடுகளும் மூலதனத் திரட்சியைப் பெறலாம். வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்ற முறைகளை வளர்ச்சியடையாத நாடுகளும் பின்பற்றலாம். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளும் முன்னேற்றமடைய வேண்டும். எந்த ஒரு நாடும் தொழில் நுணுக்க முன்னேற்றமின்றி விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற முடியாது. இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளைப் போன்று புதுமையான முறைகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவேண்டும். பொருளாதார முன்னேற்றத்தில் தேக்கநிலைகள் ஏற்படக் கூடாது. அறிவியல் முன்னேற்றங்கள் விரைவாக ஏற்பட வேண்டும்.

விவசாயிகளின் வருவாயை அதிகரிக்க வேளாண்மை உற்பத்தி கூடுவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். நல் விதைகள், உரங்கள், கருவிகள், பூச்சி மருந்துகள், இயந்திரக் கலப்பைகள் ஆகியவை அளிக்கப்படலாம். தொழிற்துறையின் மூலமாக இவை அதிக அளவிற்கு உற்பத்தி செய்யப்பட வேண்டும். இந்தியாவின் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இவ்வகைப் பட்ட பொருட்களின் உற்பத்திக்கு முக்கியத்துவம் அளிக்கப் பட்டுள்ளது. தொழிற் பொருட்களைப் பின்தங்கிய நாடுகள் உற்பத்தி செய்யத் தேவையில்லை என்ற கருத்து நிலவி வந்தது. அதன் மூலம் வேலையின்மைச் சிக்கல் தோன்றும் என்று கருதப் பட்டது. ஒரு நாட்டின் எல்லா வளங்களும் முற்றிலும் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டால், இயந்திர மயமாக்குதலின் மூலம் வேலையின்மை தோன்றாது. மேலும், மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்ய அதிக அந்நியச் செலாவணி தேவைப்படுகின்றது. உள்நாட்டிலேயே மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்வதின் மூலம் அந்நியச் செலாவணியை மிச்சம் பிடிக்கலாம். இன்றைய இந்தியா

போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் தொழிற் திறமைகள் வளர்ந்துள்ளன. தற்பொழுது மேம்பாடடைந்த நாடுகளாக இருப்பவை, முன்பு வளர்ச்சியடையாத பொருளாதாரங்களையே கொண்டிருந்தன. அவை பொருளாதார முன்னேற்றத்தைப் பெற நீண்டகாலம் பிடித்தது. இப்பொழுதுள்ள மேம்பாடடைந்து வரும் நாடுகள் குறுகிய காலத்திலேயே முன்னேற்றத்தைப் பெற்றுவிடலாம். தொடர்ச்சியான வளர்ச்சி நீடிக்க வேண்டுமென்றால் இரும்பு, எஃகு, பிற உலோகங்கள், இயந்திரங்கள், இரசாயனப் பொருட்கள், மூலப் பொருட்கள், மின்சாரம் ஆகியவற்றின் உற்பத்தி பெருகவேண்டும். போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் பெருகுவதும் இன்றியமையாததாகும். பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்த இவ்வகை முன்னேற்றங்கள் தேவைப்படுகின்றன. நாட்டு மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாத பொருட்களின் உற்பத்தியைப் பெருக்குவதும் அவசியமானதாகும்.

மக்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதில் இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் சில இடையூறுகளைக் கொண்டுள்ளன. கடந்த காலத்தில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது இன்றைய முன்னேற்றமடைந்த நாடுகளுக்கு எளிதானதாக இருந்தது. வெளிநாட்டு வாணிபத்தை அந்நாடுகள் எளிதில் வளர்த்துக்கொண்டன. இப்பொழுது பின்தங்கிய நாடுகள் வெளி நாட்டு வாணிபத்தில் சாதகநிலையைப் பெறுவது கடினமாக உள்ளது. மேலும், வளர்ச்சியடையாத நாடுகள் இன்றும் மேம்பாடடையாத தொழில் நுட்ப உற்பத்தி முறைகளையே பின்பற்றி வருகின்றன. மருத்துவ வசதிகள் பெருகியிருக்கவில்லை ; மக்களின் ஆரோக்கியநிலை தாழ்வாகவே உள்ளது. எனினும் பின்தங்கிய நாடுகளில் ஓரளவு அதிகரித்துள்ள மருத்துவ வசதிகளினால் இறப்பு வீதம் பெரிதும் குறைந்திருக்கின்றது. ஆனால் இந்நாடுகளில் பிறப்பு வீதம் குறைக்கப்படவில்லை. இதன் காரணமாக, விரைவான மக்கட்தொகைப் பெருக்கம் ஏற்படுகின்றது. தற்பொழுதுள்ள மேம்பாடடைந்த நாடுகளும் பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது மக்கட் பெருக்கத்தை மிகுதியாகக் கொண்டிருந்தன. ஆனால் இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் மக்கட் பெருக்க வீதம் மிக அதிகமாக உள்ளது. இதன் விளைவாக மக்கட்தொகைச் சிக்கல் தோன்றுகின்றது. மக்கட் தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப் படாவிட்டால் பொருளாதார முன்னேற்றத்தினால் ஏற்படக்கூடிய பல நன்மைகளையும் பெற இயலாது. பிறப்பு வீதத்தைக் குறைப்பதின் மூலம் மக்கள் தரமான வாழ்வைப் பெறுவார்கள். ஜப்பானின் பொருளாதார முன்னேற்றத்தின் மூலம் இதை உணர முடிகிறது. ஜப்பான்

வளர்ச்சியடையாத நாடாக இருந்தபோது மக்கட் தொகைச் சிக்கலைக் கொண்டிருந்தது. ஜப்பானியர்கள் குறைவான வருவாயைப் பெற்றனர்கள். அவர்களின் வாழ்க்கைத்தரமும் தாழ்வாகவே இருந்தது. இப்பொழுது ஜப்பானில் மக்கட் தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப் பட்டுவிட்டது. மேம்பாடடைந்த நாடுகளுள் ஒன்றாக ஜப்பான் இன்று இருக்கின்றது. மக்களின் வாழ்க்கைத்தரமும் உயர்வாக உள்ளது. இதே முறை தான் இந்தியாவிலும் பின்பற்றப்பட்டு வருகின்றது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பிறப்பு வீதத்தைக் குறைக்க அதிக மூலதனம் ஒதுக்கப் பெற்றுள்ளது. இதற்காகக் குடும்ப நலத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. இதன் மூலம் இந்தியாவில் பிறப்பு வீதம் குறையுமென எதிர்பார்க்கப்படுகின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வேலையின்மைச் சிக்கல் அமைந்துள்ளது. மேம்பாடடைந்த நாடுகளின் வேலையின்மைச் சிக்கலினின்றும் இது வேறுபட்டது. அமெரிக்காவில் 1929-இல் ஏற்பட்ட பொருளாதாரப் பெருமந்தத்தின் காரணமாக வேலையின்மை தோன்றியது. பொருட்களின் அளிப்பு தேவையைக் காட்டிலும் அதிகமாக இருந்தமையால் உற்பத்திக் காரணிகள் வேலையிழந்தன. உற்பத்தி பல மடங்கு பெருகியிருந்தபோது அதற்கான சந்தை அமைந்திருக்கவில்லை. மக்களின் வாங்கும் திறனும் குறைவாக இருந்தது. இவ்வாறு தேவைக் குறைவின் காரணமாக வேலையின்மை அமெரிக்காவில் தோன்றியது. மேம்பாடடைந்துவரும் நாடுகளில் உற்பத்திச் சாதனங்களின் பற்றாக் குறையால் வேலையின்மை ஏற்படுகின்றது. உற்பத்திக் காரணிகளையும், இயற்கை வளங்களையும் மூலதனப் பற்றாக்குறையால் சிறப்பாகப் பயன்படுத்த இயலாமையால் வேலையின்மை தோன்றுகிறது. தவிர, இந்நாடுகளில் 'மறைந்துள்ள வேலையின்மையும்' (Disguised Unemployment) அமைந்துள்ளது. முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளில் 'மறைந்துள்ள வேலையின்மையானது' அமைந்திருக்கவில்லை. இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மறைந்துள்ள வேலையின்மையால் மனித உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப் படாமல் வீணடிக்கப்படுகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகள் உயர்ந்த அளவில் உற்பத்தியின் அளவைப் பெற்று வருகின்றன. தேசிய வருவாயும், தலா வருவாயும் இந்நாடுகளில் அதிகமாக உள்ளன. வளர்ச்சியடையாத நாடுகளில் குறைந்த அளவு உற்பத்தியின் காரணமாக குறைந்த தேசிய வருவாயும், தலா வருவாயும் மட்டுமே பெறப்படுகின்றன.

பின்தங்கிய நாடுகளில் வேளாண்மையில் மிகுதியான மக்கட் தொகை ஈடுபட்டுள்ளது. இந்நாடுகளில் உற்பத்தித்திறனை உயர்த்த வாய்ப்புக்கள் ஏற்படுத்தப் படவேண்டும்; வேலையின்மையும் தீர்க்கப் படவேண்டும். வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காண்பது மட்டும் போதுமானதாகாது. அதன்மூலம் உற்பத்தியும், வருவாயும் அதிகரிக்க வேண்டும். பொருளாதாரம் வளர்ச்சியடையும் நிலை களில் உற்பத்தி உயர்விற்கும், வருவாய்ப் பெருக்கத்திற்கும் முக்கியத்துவம் தரவேண்டும். பொருளாதாரம் வளர்ச்சியடைந்த பிறகு வேலையின்மையானது எளிதில் தீர்க்கப்பட்டுவிடும். வருவாய்ப் பெருக்கத்தினால் ஏற்படும் சக்தியால் வேலைவாய்ப்புக்கள் அதிகரிக்கின்றன. இன்றைய முன்னேற்றமடைந்த நாடுகளும் இம் முறையையே பின்பற்றின. இவ்வாறு வளர்ச்சியடைந்த நாடுகள் முன்னேற்றமடைந்துவரும் நாடுகளுக்குப் பல படிப்பினை களை உணர்த்துகின்றன. அவற்றின் வளர்ச்சி நிலைகளை அறிவதின் மூலம் மேம்பாடடைந்துவரும் நாடுகள் எளிதில், குறுகிய காலத் தில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்று விடலாம்.

### முதலாளித்துவத்தைப் பற்றிய மதிப்பீடும், திட்டங்களில் சமதர்ம முறையை ஏற்பதும்

சோவியத் ரஷ்யா சமதர்ம நாடாக இயங்கி வருகின்றது. கிரேட் பிரிட்டனில் சமதர்மம் ஓரளவு பின்பற்றப்படுகின்றது என்றாலும், ரஷ்யாவில் அமைந்திருக்கக் கூடிய தீவிரச் சமதர்மம் அங்கு அமைந் திருக்கவில்லை. சிறிய பொதுத்துறையில் விரிவாக்கம் பெற்ற சமுதாயக் காப்பீட்டுத் திட்டம் கிரேட் பிரிட்டனில் அமைந் துள்ளது. இவ்விதத் திட்டங்கள் அமெரிக்காவிலும் உள்ளன. இவை முற்றிலும் முதலாளித்துவக் கொள்கை முறையில் அமைந் திருக்கவில்லையெனலாம். தொடக்கக் காலத்தில் ரஷ்யாவும் முதலாளித்துவ நாடாகவே அமைந்திருந்தது. முதலாளித்துவத் தில் அமைந்திருந்த பல குறைபாடுகளே ரஷ்யாவில் சமதர்மம் மலர்வதற்குக் காரணங்களாக இருந்தன. கிரேட் பிரிட்டனிலும் முற்றிலும் முதலாளித்துவக் கொள்கையே பின்பற்றப்பட்டது. அதில் அமைந்திருந்த குறைபாடுகள் பிறகு களையப்பட்டன. செல்வப் பங்கீட்டில் அமைந்திருந்த அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்பட்டன. இங்கிலாந்தில் பின்பற்றப்பட்ட முதலாளித்துவம் குறை கூறப்பட்டமையால் சிலவித மாற்றங்கள் கொண்டுவரப் பட்டன. இன்று இங்கிலாந்தில் பொதுத்துறை வளர்ந்துள்ளது. உழைப்பிற்கான ஊதியத்தை அளிக்கும் முறையும் சிறப்பாக அமைந்திருக்கின்றது. முழுமை பெறாத சமதர்மம் இங்கிலாந்தில் பின்பற்றப்படுவதாகக் கூறலாம்,

சோவியத் ரஷ்யாவில் சமதர்மம் வேறு முறையில் பின்பற்றப் படுகின்றது. அமெரிக்காவில் குறைந்த வருவாயைப் பெற்றவர்கள் தற்பொழுது அதிக வருவாயைப் பெறுகின்றனர். பொருளாதாரத் தில் செழிப்பு நிலையைத் தோற்றுவிப்பதின் மூலம் மக்களிடையே சமநிலை அமெரிக்காவில் ஏற்படுத்தப் பெறுகின்றது. விரைவான வளர்ச்சி வீதத்தால் மக்கள் அனைவரும் அங்கு நன்மையடை கின்றார்கள். ஜப்பானின் நிலை பிறநாடுகளின் நிலைகளினின்றும் வேறுபட்டதாகும். ஜப்பானில் திட்ட அமைப்பு ஏற்படுத்தப் பட்டுள்ளது. இது அரசிற்கும், தனியார் துறைக்கும் உதவி வரு கின்றது. இதன் மூலம் பொருளாதாரச் சிக்கல்களுக்குத் தீர்வுகள் காணப்படுகின்றன. அமெரிக்கா, கிரேட் பிரிட்டன் ஆகிய நாடு களில் பின்பற்றப்படுகின்றது போன்ற குறுகிய காலகொள்கைகள் ஜப்பானிலும் கைக் கொள்ளப்படுகின்றன. மூலதன இயக்கத்தின் மீது ஜப்பானிய அரசு அதிகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தியுள்ளது. இந்நிலை அமெரிக்காவிலும், கிரேட் பிரிட்டனிலும் அமைந்திருக்க வில்லை. ஜப்பானில் பொருளாதாரப் புள்ளி விவரங்கள் முன்னேற்ற மடைந்த ஐரோப்பிய நாடுகளை விடச் சிறப்பாகச் சேகரிக்கப் படுகின்றன. ஜப்பானில் அரசின் முதலீடு மொத்த தேசிய ஆக் கத்தில் 11 சதவீதத்திற்கும் மேலாக இருக்கின்றது. எதிர்காலத்தில் இது மேலும் அதிகரிக்குமென எதிர்பார்க்கப்படுகின்றது. இவ்வாறு ஜப்பானின் முதலாளித்துவ முறை இயக்கம் மிகுந்ததாக உள்ளது. அமெரிக்காவின் முதலாளித்துவத்தைவிடப் புதுமையானதாக ஜப்பானின் முதலாளித்துவம் அமைந்திருக்கின்றது. ஜப்பானின் அனுபவங்கள் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்குப் புதிய வகைப்பொருளாதாரக் கொள்கைகளைப் பின்பற்ற உதவுபவை களாக உள்ளன. அமெரிக்காவைக் காட்டிலும் உயர்ந்த வளர்ச்சி வீதத்தைக் கொண்டதாக ஜப்பானின் பொருளாதாரம் அமைந்துள்ளது. ஜப்பானியப் பொருளாதார வளர்ச்சி நிலைகளை அறிவது பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவும்.

முதலாளித்துவத்தின் திட்டமிடாத நிலையே பொருளா தாரத்தில் பல சீர்குலைவுகளைத் தோற்றுவித்தன. முதலாளித் துவத்தை 'கார்ல் மார்க்ஸ்' குறை கூறுகின்றார். உழைப்பானது சந்தையில் பண்டங்களைப் போன்று விற்கப்படுவதாக அவர் குறிப் பிடுகிறார். முதலாளித்துவச் சமுதாயங்களில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்துள்ளன; வாணிபச் சுழல்கள் தோன்றிய வண்ணம் இருக் கின்றன; தொழில்களில் தேக்க நிலை, மந்தநிலை, மறுமலர்ச்சி நிலை ஆகியவை மாறிமாறி வருகின்றன. திட்டமிடாமல் அமைந் திருக்கும் முதலாளித்துவ முறை என்றாவது மாறியே தீரும் என்பது சில பொருளியலாளர்களின் கருத்தாகும். பின்தங்கிய

நாடுகள் முதலாளித்துவத்தைப் பின்பற்றினால் மக்களில் பெரும் பகுதியினர் வறிய வாழ்வையே பெற்றிருப்பார்கள். இறுதியாக, அம்முறை முடிவுக்குக் கொண்டு வரப்படும். வாணிபச் சுழல்கள் ஏற்படுகின்றமைக்குத் தேவை, அளிப்பு நிலைகளுக்கிடையே சம நிலை ஏற்படாமையே முக்கியக் காரணமாகும். மேலும், தொழில் முயல்வோர் தவறாகத் தேவையின் அளவைக் கணிப்பதும் குறைபாடுகளுக்குக் காரணமாகின்றது. அரசு தனித்தனியான உற்பத்தியாளர்களைக் கட்டுப்படுத்துவது அவசியமானதாகும். அதன் மூலமே தேவையின் அளவைப்பற்றி ஓரளவு அறிய முடியும். உற்பத்தியின் மீதும், பகிர்வின் மீதும் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவது இன்றியமையாததாகும். பொருளாதாரத்தை அதனுடைய போக்கில் இயங்க விடுவது தவறானது. முதலாளித்துவத்தில் அமைந்துள்ள முக்கியக் குறைபாடு பொருளாதார நடவடிக்கைகளின் மீது அதிகக் கட்டுப்பாடுகள் இல்லாத நிலையாகும். சமதர்மத்தில் அமைந்திருக்கும் தலையாய சிறப்பு அரசு பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தி நெறிப்படுத்துகின்ற நிலையாகும்.

முதலாளித்துவ முறையில் உற்பத்தியாளர்களுக்கிடையே தொடர்பு அமைந்திருப்பதில்லை. முதலாளித்துவத்தில் அமைந்திருக்கக் கூடிய பல குறைபாடுகள் 1929 முதல் 1933 வரை பல முதலாளித்துவ நாடுகளிலும் வெளிப்பட்டன. அக்காலம் முதற்கொண்டுதான் பொருளாதார நிபுணர்களில் பலர் முதலாளித்துவத்தின் மீது நம்பிக்கை இழந்தார்கள். பொருளாதாரப் பெருமந்தம் உலக நாடுகளுக்குப் படிப்பினையைத் தந்தது. அரசின் தலையீடு பொருளாதார முன்னேற்றத்திற்கு அவசியமானது என அறியப் பெற்றது. பொருளாதாரத்தின் பல துறைகளையும் அரசு கட்டுப்படுத்த வேண்டியதின் இன்றியமையாத நிலை உணரப்பட்டது. திட்டமிடப்படாத முதலாளித்துவ முறையின் குறைபாடுகளைப் பல நாடுகளின் பொருளாதார வரலாற்றினின்றும் அறிகின்றோம். பொருளாதாரப் பெருமந்தக்காலத்தில் அமெரிக்காவில் பல இலட்சம் மக்கள் வேலையிழந்தார்கள். இதனால் அமெரிக்காவின் மொத்த உற்பத்தியின் அளவு பாதிக்கப்பட்டது. அமெரிக்காவில் பொருளாதாரப் பெருமந்தத்தின் காரணமாக தேசிய வருவாயில் 51 சதவீதக் குறைவு ஏற்பட்டது; கிரேட் பிரிட்டனின் தேசிய வருவாயில் 12 சதவீதக் குறைவு தோன்றியது. "போட்டி முறையில் அமைந்துள்ள தீர்க்க முடியாத நோயாக இருப்பது மந்த நிலை," என ஹெர்மன் பைனர் (Herman Finer) குறிப்பிடுகின்றார். அமெரிக்கப்பொருளாதாரத்தில் 1854-ஆம் ஆண்டிற்கும் 1938-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் 20 முறைகள் மந்தநிலை தோன்றியதாக அவர்

கூறுகின்றார். பிற முதலாளித்துவ நாடுகளிலும் இந்நிலையே அமைந்துள்ளது.

திட்டமிடப்பெறாத முதலாளித்துவப் பொருளாதாரத்தில் பெரும்பகுதி மக்கட்தொகை வறியநிலையில் இருப்பதோடு, வருவாயிலும் அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. திட்டமிடப்படாத நிலையே இதற்குக் காரணமாகும். மக்கள் அனைவருக்கும் சமமான வாய்ப்புக்கள் அளிக்கப்படுவதில்லை. வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் உள்ளமைக்கு நாட்டின் செல்வம் சமமாகப் பங்கிடப்படாமையே காரணமாகின்றது. அரசின் தீவிர நடவடிக்கைகளால் செல்வத்திலும், வருவாயிலும் உள்ள பெருமளவு ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்படவேண்டும். பொதுவுடைமையின் மூலமாக ஏற்றத்தாழ்வுகளை நீக்குவது எளிதானதேயாகும். முதலாளித்துவச் சமூதாயங்களின் வளர்ச்சி விலையின் நிலைகளைப் பொறுத்தே அமைகின்றது. இதை அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் ஆகிய நாடுகளின் பொருளாதார வரலாற்றினின்றும் உணர முடிகின்றது. முதலாளித்துவ முறையில் அமைந்துள்ள வேறு இரு குறைபாடுகளும் குறிப்பிடப்படுகின்றன. முதலாவதாக, நாட்டின் எல்லா வளங்களும் முற்றிலுமாகப் பயன் படுத்தப்படுவதில்லை. இரண்டாவதாக, நாட்டின் எல்லா வளங்களும் சிறப்பாகப் பயன் படுத்தப்பட்டாலும், அதன் மூலம் சமுதாயத்தில் உள்ள எல்லா நிலை மக்களும் நன்மையடைவதில்லை. தனியார் துறை இலாப நோக்குடனேயே செயல்படுகின்றது. சமுதாய நலத்திற்கான நடவடிக்கைகளைத் தனியார் துறை எடுப்பதில்லை. சமுதாய முன்னேற்றம் தனியார் துறையின் நோக்கமாக அமைந்திருப்பதில்லை. எனவே அரசு சமுதாய நலத்திற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

முதலாளித்துவத்தில் அமைந்துள்ள இவ்விதக் குறைபாடுகளால், அரசு பொருளாதார முன்னேற்றத்திற்கான உற்பத்திக் காரணிகளை நெறிப்படுத்தி இயக்க வேண்டியதின் இன்றியமையாத நிலை உணரப்பட்டுள்ளது. பொருளாதார முன்னேற்றத்திற்குப் 'பெரிய அழுத்தம்' (Big Push) தேவைப் படுகிறது. ஏனெனில் பின்தங்கிய நாடுகளில் புதுமையான தொழில்களில் அதிக அளவு முதலீடு செய்வதற்கான ஊக்கம் அமைந்திருப்பதில்லை. முன்னேற்றமடைந்த, புதுமையான உற்பத்தி முறைகளைக் கைக்கொள்வதின் மூலமாகப் பல தொழிற்பொருட்களின் தேவை பெருகும். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பல துறைகளிலும் அதிக முதலீடுகள் செய்யப்பட வேண்டும். இதன் மூலம் பொருளாதாரம் பல நன்மைகளையும் பெற முடியும். பின்தங்கிய நாடுகளின் அரசுகள் திட்டமிட்டுப்

பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவேண்டும். திட்டமிட்டு அரசு அதிக அளவு முதலீடுகளைச் செய்யும்போது தேசிய வருவா யானது பல மடங்கு பெருகும். இன்று உலகப் பொருளாதாரச் சூழ்நிலைகள் அமைந்துள்ள நிலையில் முதலாளித்துவ முறையின் மூலம் வளர்ச்சிக் குன்றிய நாடுகள் முன்னேற்றத்தைப் பெறுவது எளிதானதன்று சமதர்ம முறையே முன்னேற்றத்தின் பல நன்மைகளை மக்கள் அனைவருக்கும் சமமாக அளிக்குமெனலாம்

வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் பல சமதர்மச் சமுதாயங்களை அமைக்கவே விரும்புகின்றன. மக்களின் வருவாயிலும் அதிக அளவில் அமைந்துள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க அவை நட வடிக்கைகளை எடுக்கின்றன. திட்டங்கள் சரிவர நிறைவேற்றப் பட்டால் மக்களின் வருவாயில் ஓரளவு சமநிலையை ஏற்படுத் தலாம். தற்பொழுது, பல வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வருவாயின் அதிக வேறுபாடுகளைக் களைய திட்டமிடுதலே சிறந்த முறையாகும். சமதர்மச் சமுதாயங்களில் மட்டுமே திட்டங்களைச் சிறப்பாக நிறைவேற்ற இயலும். இந்தியாவில் விரைவான பொரு ளாதார முன்னேற்றம் ஏற்பட வேண்டுமென்றால் சமுதாய மாற்றம் ஏற்படுவது அவசியமாகும். மனித உழைப்பு முற்றுலு மாக உற்பத்திக்குப் பயன்படுத்தப்படவேண்டும். தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதும், நாட்டின் வளங் கள் எல்லாவற்றையும் பயன்படுத்துவதும் இன்றியமையாதவை களாகும். திட்டங்களை நிறைவேற்றுவதின் மூலம் சமுதாயத்தின் எல்லா பிரிவு மக்களும் நன்மையடைய வேண்டும்; குறிப்பிட்ட ஒரு பிரிவு மக்களிடம் மட்டும் திட்டங்களின் நன்மைகள் சென்ற டையக்கூடாது.

கிரேட் பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான் ஆகிய நாடு களில் பொருளாதார முன்னேற்றத்திற்காக வெவ்வேறு வகைப் பட்ட முறைகள் பின்பற்றப்பட்டன. ஜப்பான் பொருளாதார வளர்ச்சியின் முதற் சில நிலைகளில் சிறிய பண்ணைகளுக்கும், சிறிய தொழிற்சாலைகளுக்கும், உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளுக்கும் அதிக முக்கியத்துவம் தந்தது. தற்பொழுது இந்நிலை ஓரளவு மாறிவருகிறது எனலாம். இன்றும்கூட ஜப்பானில் ஏற்றுமதிப் பொருட்களின் பெரும்பகுதி சிறு தொழில்களின் மூலமே உற்பத்தி செய்யப்படுகின்றது. உலகச் சந்தையில் இன்று ஜப்பானியப் பொருட்களுக்கு அதிகத் தேவை அமைந்துள்ளது. ஆனல் அமெரிக்காவிலும், சோவியத் ரஷ்யா விலும் பேரளவுப் பண்ணைகளும், தொழிற்சாலைகளும் அமைக் கப்பட்டுள்ளன. உலக வாணிபத்தினின்றும் சோவியத் ரஷ்யா ஓரளவு ஒதுங்கிள்ளது எனலாம். மேலும், பொருளாதார முன்

னேற்ற நிலைகளில் பன்னாட்டு வாணிபத்தின் மூலம் அதிகம் பயனடைந்த நாடாக ரஷ்யாவைக் கூறமுடியாது. வெளி நாட்டு வாணிபத்தின் மூலமே பொருளாதாரத்தை வளர்த்துக் கொண்ட நாடுகள் இங்கிலாந்தும், அமெரிக்காவும் ஆகும். இந் நாடுகளின் விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு வெளி நாட்டு வாணிபமும் முக்கியக் காரணமாகும். இவ்வாறு உலகின் பல நாடுகளும் பல வகைப்பட்ட பொருளாதார முன்னேற்ற முறைகளைக் கைக்கொண்டுள்ளன. ஆனல் எல்லா நாடுகளிலும் கல்வி, தொழில் நுட்பம் முதலீடு, ஆகியவற்றின் முன்னேற்றத்திற் காக அதிக மூலதனம் அரசால் ஒதுக்கப் படுகின்றது.

மேற்குறிப்பிடப் பட்டுள்ள மேம்பாடடைந்த சில பொருளா தாரங்களின் இயல்புகளும், வளர்ச்சி நிலைகளும் வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் விரைவில் முன்னேற்றத்தைப் பெற பல படிப்பினை களை உணர்த்துகின்றன.

# 4. பன்னாட்டுப் பரிசோதனை விளைவு

## (International Demonstration Effect)

வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதனத்திரட்சி குறைவாக இருக்கின்றமைக்கு ஒரு காரணம், இந்நாடுகளில் மக்கள் வளர்ச்சியடைந்த நாடுகளின் மேன்மையான நுகர்வின் அளவைப் பெற விரும்புவதாகும். பேராசிரியர் நர்க்ஸ்[1] (Prof. Nurkse) போன்ற பல பொருளியலறிஞர்களும் இவ்வாறு கருகின்றார்கள். ஜேம்ஸ் எஸ். டியூசென்பெர்ரிக்குப் பின் (James S. Duesenberry)[2] இது 'பன்னாட்டுப் பரிசோதனை விளைவு' என அழைக்கப்படுகின்றது. டியூசென்பெர்ரி அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வருவாய், சேமிப்பு, நுகர்வோர் நடவடிக்கை ஆகியவற்றின் மாற்றங்களில் உள்ள தொடர்பை விளக்க இக்கோட்பாட்டைப் பயன் படுத்துகின்றார். மற்றவர்களின் மேம்பட்ட நுகர்வின் நிலையைப் பின்பற்றுகின்ற காரணத்தால், அதிக அளவு நுகர்வுப்பொருட்களை வாங்குகின்ற தன்மை ஏற்பட்டு சேமிப்பு குறைந்து விடுகின்றது. தனிப்பட்டவர்களின் நுகர்வு தனிப்பட்டதல்ல ; வேறு சில காரணிகளின் தொடர்பும் அங்கு அமைந்துள்ளது. மக்கள் புதிய பொருட்களைப் பார்க்கும் போதும், புதுவகை நுகர்வுகளை அறியும்போதும், பழைய விருப்பங்களைப் புதிய முறைகளில் பூர்த்தி செய்து கொள்ளும் போதும் அவர்களுக்கு அப்பொருட்களைப் பற்றிய அறிவு வளர்கிறது. அவர்களின் கற்பனை உந்தப்பட்டு, புதிய விருப்பங்கள் தோன்றுகின்றமையால் நுகர்வின் விருப்பம் உயர்கின்றது என பேராசிரியர் நர்க்ஸ் விளக்குகிறார்.

டியூசென்பெர்ரி குறிப்பிடுவதாவது, அமெரிக்காவின் ஒரு சராசரி நகரக் குடும்பம் 1917-19 இல் அதன் ஆண்டு வருவாயில் 8 சதவீதம் சேமித்தது. ஆனால் 'பரிசோதனை விளைவால்' இச் சேமிப்பு 1941-இல் பூஜ்யம் என்ற நிலைக்கு வந்து விட்டது.

[1]R. Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, ch. III.

[2]J. S. Duesenberry, Income, Saving and the Theory of Consumer Behaviour, 1949.

இது முக்கிய ஓர் உண்மையை உணர்த்துகின்றது. தனி ஒருவரின் சேமிக்கும் விருப்பம் அவருடைய உண்மை வருவாயை மட்டும் பொருத்து அமையாமல், அவர் தொடர்பு கொண்டுள்ளவர்களின் வருவாய்களையும் கொண்டு அமையும்.

இன்று சேமிப்பு விகிதம் சிறப்பாக உள்ள அமெரிக்காவில், அதிக அளவுச் சேமிப்பு மிக உயர்ந்த அளவு வருவாயைப் பெறுபவர்களாலேயே செய்யப்படுகின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 25 சதவீத மக்களே (மிக அதிக வருவாயைக் கொண்டவர்களே) சமுதாயத்தின் சேமிப்பைச் செய்கின்றனர்; அங்குள்ள 25 சதவீத மக்கள் எவ்விதச் சேமிப்பையுமே செய்வதில்லை. முன்னேற்ற மடைந்த நாடுகளில் சேமிப்பு வீதங்களில், சேமிப்புப் பழக்கங் களில் ஏற்பட்ட மாறுதல்களுக்குத் 'தொடர்பு விளைவே' (Contact Effect) காரணமாகும். சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ள, அதிக வருவாயைக் கொண்டு ஆடம்பர வாழ்வு வாழ்பவர்களை சமுதாயத்தின் தாழ்ந்த நிலையிலும், மத்திய நிலையிலும் உள்ள குறைந்த வருவாயைக் கொண்டுள்ளவர்கள் பின்பற்றுகின்றனர்.

சமுதாயத்தின் மேல் நிலையில் உள்ள்வர்களின் மேம்பட்ட நுகர்வின் நிலையை தாழ்ந்த வருமானத்தைக் கொண்டவர்கள் பின் பற்றுகின்றனர். மிக அதிக வருவாயைக் கொண்டவர்கள் ஆடம்பர வாழ்வு வாழ்ந்தாலும் சேமிப்புக்கு அங்கு வகையுண்டு. (ஏனெனில் சேமிக்கும் திறனை அவர்கள் கொண்டுள்ள காரணத் தால்) குறைந்த வருவாயைக் கொண்டவர்கள் பல நுகர்வுப் பொருட்களை வாங்கும்போது தங்கள் வருவாயின் பெரும் பகுதியை இழக்கின்றனர். சேமிக்கும் விருப்பத்தை இழந்த அவர்கள், சேமிக்கும் திறனிலும் குறைந்தவர்களாகின்றனர்.

பேராசிரியர் நர்க்ஸ், டியூசென்பெர்ரியின் கோட்பாட்டைப் பன்னாட்டு நிலையில் தருகின்றார். வளர்ச்சியடையாத நாடுகளின் மக்கள் வளர்ச்சியடைந்த நாடுகளின் உயர்ந்த நுகர்வின் நிலையை உணரும்போது, அதைப் பின்பற்ற வேண்டுமெனத் தூண்டப் படுகின்றனர். அந்நாடுகளின் மக்கள் முன்னேற்றமடைந்த நாடு களின் உயர்ந்த வாழ்க்கைத்தரத்தை, மேம்பட்ட நுகர்வின் நிலையை பல வழிகளில் அறிகின்றனர். வானொலி, அயல்நாட்டுத் திரைப்படங்கள், செய்திப்பத்திரிக்கைகள், விளம்பரங்கள் மூலம் பிறநாட்டு மக்கள் வாழ்வின் நிலைகளைப்புரிந்து கொள்கின்றனர். மேம்பட்ட நுகர்வு முறைகள் அயல் நாட்டு உல்லாசப் பயணி களாலும் அறியப்படுகின்றன. உள்நாட்டினின்றும் பிற நாடு களுக்குச் சென்று தாயகம் திரும்புபவர்களாலும் வளர்ச்சி யடைந்த நாடுகளின் வாழ்வு முறைகள் பரப்பப் படுகின்றன.

சிலர் வளர்ச்சியடைந்த நாடுகளில் கல்வி கற்கச் செல்கின்றனர்; வேறு சிலர் பணியாற்றச் செல்கின்றனர். இவர்கள் தங்கள் நாடு திரும்பியபின் பிற நாடுகளின் நாகரிக வாழ்வு முறைகளைப் பரப்புகின்றனர்.

பரிசோதனை விளைவைப் பன்னாட்டு அளவில் பரப்புகின்றவை களாக இன்றைய வானொலி, தொலைநோக்கி (Television), மற்றும் பல செய்தித் தொடர்பு வசதிகள் அமைகின்றன. வருவாய் உயரும் போது, வருவாயின் பெரும்பகுதியோ அல்லது எல்லா வருவா யுமோ குறிப்பிடத்தக்க நுகர்வுக்காகச் செலவிடப் படுகின்றது. மிகக் குறைந்த அளவு மட்டுமே சேமிக்கப்படுகின்றது. சில நிலை களில் சேமிப்பே இல்லாமலும் இருக்கின்றது. எல்லா வளர்ச்சி யடையாத நாடுகளிலும் வானொலிப் பெட்டிகள் (குறிப்பாக டிரான்சிஸ்டர்கள்), ஸ்கூட்டர்கள், குளிர்ச் சாதனப் பெட்டிகள், மின் விசிறிகள், சலவை இயந்திரங்கள், செயற்கை இழைத்துணிகள், பீங்கான் பண்டங்கள் போன்றவை அதிக அளவிற்கு வாங்கப் படுகின்றன. செல்வந்தர்களில் பலர் தங்கள் வருவாயின் பெரும் பகுதியை மிகப்புதுமையான கட்டடங்கள் கட்டப் பயன்படுத்து கின்ற காரணத்தால், அவர்களுடைய வருவாய் ஆக்கப்பணி களில் செலவிடப் படுவதில்லை. இவ்வாறு மேட்டுக் குடியினரின் வருவாய் நுகர்வுப் பணிகளில் ஈடுபடுத்தப்படுகிறது.

வளர்ச்சிடையாத நாடுகளின் அரசுகளும் 'பரிசோதனை விளைவால்' பாதிக்கப்படுகின்றன. அவை தங்கள் வருவாயின் பெரும் பகுதியை மக்களின் புதுமையான வாழ்விற்காகச் செலவிடு கின்றன. ஆடம்பர உணவு விடுதிகள், விடுமுறை நாட்களில் உல்லாசப்பயண இடங்களுக்கு ஆடம்பர பஸ், ரயில் வசதிகள் போன்றவை இந்நாடுகளில் முன்னேற்றமடையச் செய்யப்படு கின்றன. இதனை 'முதலீட்டுப் பரிசோதனை விளைவு' (Investment Demonstration Effect) எனலாம்; இது பேராசிரியர் நர்க்ஸின் 'நுகர்வுப் பரிசோதனை விளைவினின்றும்' (Consumption Demonstra tion Effect) வேறுபட்டது.

வளர்ச்சியடையாத நாடுகளில் இப்பரிசோதனை விளைவு சேமிக்கும் விருப்பத்தைப் பாதிக்கின்றது. அந்நாட்டு மக்கள் முன் னேற்றமடைந்த நாடுகளின் நுகர்வு முறைகளை அறியும்போது 'குறிப்பிடத்தக்க நுகர்வு' (Conspicuous Consumption) உயர் கின்றது. அதனால் அவர்களின் சேமிக்கும் திறனும் குறைகின்றது. அவர்களுடைய உண்மை வருவாய் உயரும்போது, அது நுகர்வின் உயர்வில் கொண்டுபோய் விடுகின்றது. இப்பரிசோதனைக் காரணி சேமிக்கும் விருப்பத்தைக் குறைப்

பதோடு, அரசு தன் பொதுநிதிக் கொள்கைகளின் மூலமாக மூலதனத்திரட்சியை ஏற்படுத்த முடியாமற் செய்து விடுகின்றது.

இப்பரிசோதனை விளைவால் இறக்குமதிப் பொருட்களின் தேவை பெருக்கமடைகின்றது. உள்நாட்டில் அப்பொருட்கள் தேவைக்குக் குறைவாக இருப்பதாலும் பணவீக்க நிலை ஏற்படும்; அயல் நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்து நிலை அமையும். வளர்ச்சியடையாத நாடுகளின் மக்கள் தங்கள் உற்பத்திச் சக்திக்கு அதிகமாக வருவாயைப் பெருகின்றனர்; அவர்களின் செலவினங்களும் உயர்வாகவே உள்ளன. குறைவான அளவு பொருட்களை ஏற்றுமதி செய்து, அதிக அளவு பொருட்களை இறக்குமதி செய்வதால் அயல் நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்து நிலை நிலவுகின்றது. இதற்குக் காரணம் வளர்ச்சியடைந்த நாடுகளின் குறைந்த ஏற்றுமதி விலைகளோ அல்லது அந்நாடுகளின் அதிகப் போட்டியிடும் சக்தியோ அல்ல. வளர்ச்சியடையாத நாடுகளின் அதிக நுகரும் விருப்பமே அவற்றின் பாதக வாணிபச் செலுத்து நிலைக்குக் காரணமாகும். இந்நிலைகளில் மாற்று வீதங்களின் மூலம் இதைத் தவிர்க்க முடியாது. பணவீக்க நிலையைக் குறைப்பது கடினமாகின்றது. இறக்குமதிக் கட்டுப்பாடுகளாலும், செலாவணிக் கட்டுப்பாடுகளாலும் (Exchange Controls) பாதகச் செலுத்து நிலையைத் தவிர்ப்பது முடிவதில்லை. இரண்டாவது உலகப் போருக்குப்பின் டாலரின் தேவை படிப்படியாகப் பெருகிக் கொண்டு வருகின்றது. இதற்குக் காரணம் பல நாட்டு மக்களும் அமெரிக்க நாகரிகத்தை, வாழ்வு முறைகளைப் பின்பற்றி வருகின்ற நிலையாகும். இதனால் அமெரிக்காவின் உற்பத்திப் பொருட்கள் இந் நாடுகளில் அதிக அளவில் இறக்குமதி செய்யப் படுகின்றன. டாலரின் தேவை இதனாலும் பெருகியுள்ளது.

மற்றொரு புறத்தில், வளர்ச்சியடையாத நாடுகளின் ஏற்றுமதிகள் ஒரே நிலையானவைகளாக உள்ளன; சமீப காலத்தில் அவற்றின் ஏற்றுமதிகள் குறைந்திருக்கின்றன என்றும் கூறலாம். இவற்றால் பணவீக்க நிலையும், பாதக வாணிபச் செலுத்து நிலையும் வளர்ந்துவரும் நாடுகளின் பொருளாதாரங்களில் அமைந்துள்ளன.

பன்னாட்டுப் பொருளாதார நிலையில் உண்மை வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்துள்ளன. உண்மை வருவாய்க் குறைவுள்ள வளர்ச்சியடையாத நாடுகளின் நுகர்வு உயர்கின்றது. பன்னாட்டுப் பரிசோதனை விளைவு உள்நாட்டுச் சேமிப்பைக் குறைக்கிறது; மூலதனத் திரட்சிக்கு இடையூறாக உள்ளது.

வளர்ச்சியடையாத நாடுகளில் 'பன்னாட்டுப் பரிசோதனை விளைவு' பொதுத்துறை, தனியார்துறை முதலீடுகளுக்கும்

பொருந்துவதாகும். இவ்விரு துறைகளிலும் 'குறிப்பிடத்தக்க நுகர்வுக்கான' விருப்பம் மிக அதிகமாக அமைகின்றது. வளரும் நாடு இன்றிமையாத தேவைகளாகிய உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றில் கூட தன்னிறைவைப் பெற்றிருப்பதில்லை. அந்நிலையில் அந்நாட்டில் தொலைநோக்கிகள் அமைக்கப்படுகின்றன; சிறப்பான சாலைகள் போடப்படுகின்றன; பல அடுக்குக் கட்டடங்கள் கட்டப்படுகின்றன. இவையாவும் முன்னேற்றமடைந்த நாடுகளைப் பின்பற்றியே செய்யப் பெறுகின்றன. இவ்வகைப் பின்பற்றும் நிலையானது வளர்ச்சியடையாத நாடுகளின் 'வறுமை வட்டத்தை' (Vicious Circle of Poverty) நிரந்தரமாக நிலைபெறச் செய்து விடுகின்றது.

### பன்னாட்டுப் பரிசோதனை விளைவின் மதிப்பீடு

வளர்ச்சியடையாத நாடுகளில் 'பரிசோதனை விளைவு' சேமிப்பையும், மூலதனத் திரட்சியையும் குறைத்து விடும் என்பதை எவரும் மறுக்க இயலாது. எனினும் இது சில வரையறைகளைக் கொண்டதாக அமைந்துள்ளது:

(1) இக்கோட்பாடு குறிப்பிட்ட வருவாய் நிலையில் உள்ள நுகர்வோர் 'குறிப்பிடத்தக்க நுகர்வில்' ஈடுபடுவார்கள் எனக் கூறுகின்றது. ஆனல் வளர்ச்சியடையாத நாடுகளில் உண்மை வருவாயானது மிகமிகக் குறைவானதாகும். அக்குறைந்த வருவாயில் இன்றியமையாத தேவைகளைக் கூட பூர்த்தி செய்து கொள்ள அவர்களால் முடிவதில்லை. அவ்வாறிருக்கும்போது, ஆடம்பர நுகர்வுப் பொருட்களை அவர்கள் வாங்குவார்கள் எனக் கூற இயலாது. ஒரு சில செல்வந்தர்கள் மட்டுமே வருவாயை உயர்வாகக் கொண்டிருக்கும் நிலையில் 'பரிசோதனை விளைவால்' பாதிக்கப்படுவர் எனக் கருதலாம்.

(2) மாற்றுப் பொருளாதாரம் (Exchange Economy) அமைந்துள்ளது என்பதை அடிப்படையாகக் கொண்டது 'பன்னாட்டுப் பரிசோதனை விளைவு'. ஆனல் வளர்ச்சியடையாத நாடுகளில் 'பராமரிப்புப் பொருளாதாரமே' (Subsistence Economy) திகழ்கின்றது. புதுமையான நுகர்வுப் பொருட்கள் அமைந்துள்ளதையே அறியாத மக்கள் அதிக அளவில் இருக்கின்றனர். இவ்விதமான புதுவகைப் பொருட்களைப் பற்றி அவர்கள் அறிந்தாலும், அவற்றை வாங்க வேண்டுமென்ற விருப்பமானது அவர்களுக்குத் தோன்றுது. ஏனெனில் அவர்களின் நுகர்வு பழக்க வழக்கங்களினுல் கட்டுப்படுத்தப் படுகின்றது.

(3) குறிப்பிடத்தக்க நுகர்வின் எதிரிடை விளைவுகளும் மிகைப் படுத்திக் கூறப்பட்டுள்ளன. வளர்ச்சியடையாத நாடுகளில் மேம் பட்ட நுகர்வு நிலை பின்பற்றப்படுகின்ற காரணத்தால் ஆடம்பரப் பொருட்களின் உற்பத்தி உயர அது ஒரு ஊக்கியாக அமையும். புது வகை நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்ய மக்கள் ஊக்கத்தோடு முற்படுவார்கள். சிறு தொழில்கள் முன்னேற்றத்திற்கு இது உதவும். இச் சிறு தொழில்களில் முன்னேற்ற மடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகளும் பின்பற்றப்படும். உதாரணமாக, இந்தியாவில் சமீப காலத்தில் ஏற்பட்ட 'டிரான்சிஸ்டர்' தேவைப் பெருக்கத்தால் பல சிறிய தொழில் நிறுவனங்கள் இதன் உற்பத்தியை மேற்கொண்டுள்ளன. பஞ்சாப் மாநிலத்தில் குறைந்த விலை 'டிரான்சிஸ்டர்களை' நகர்ப்புறங்களிலும், கிராமப் புறங்களிலும் சிறு தொழில்களின் மூலம் அதிக அளவிற்கு உற்பத்தி செய்து வருகின்றார்கள்.

(4) மேலை நாட்டு நுகர்வு நிலைகளைப் பின்பற்றுதல் 'பராமரிப்புப் பொருளாதாரத்திற்குச்' சாதகமாக அமைகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளில் மக்கள் உணவில் பால், முட்டை, காய்கறி, பழம் போன்ற சத்துள்ள பொருட்களைச் சேர்த்துக் கொள்கின்றனர். வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் இவ் வுணவுப் பழக்கங்களை மேற் கொண்டால், வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் சாகுபடி வருவாயைத் தவிர கால் நடை, கோழிப்பண்ணைகளின் மூலமாகவும் வருவாயைப் பெருக்கலாம். காய்கறித் தோட்டங்கள் அமைத்து அதன் மூலம் பிற வகை வருவாய்களைப் பெறலாம். இதனால் கிடைக்கும் மூலதனத்தினால் சிறப்பான வேளாண்மை முறைகளையும் பின்பற்றி மிக அதிக வருவாயைப் பெற வழியுண்டு. இந்நிலைகளால் வேலை வாய்ப்புக்கள் பெருகும்; வருவாய் உயர்ந்து சேமிப்பு வீதமும் அதிகரிக்கும். 'பராமரிப்புப் பொருளாதாரத்தைப்' படிப்படியாக 'மாற்றுப் பொருளாதாரமாக' ஆக்க இம் மூலதனத்திரட்சி உதவும். பராமரிப்புப் பொருளாதாரம் மாற்றுப் பொருளாதார மாக மாறி வருகின்ற நிலையில் அரசு பல வசதிகளைப் செய்து தருகின்றது. போக்குவரத்து, செய்தித் தொடர்புகள், நீர்ப்பாசன வசதிகள், இயக்கச் சக்தி போன்றவைகளில் வளர்ச்சி ஏற்படு கின்றது. கிராமப் பகுதிகளிலிருந்து மக்கள் நகரப்புறங்களுக்குப் பெயர்ந்து செல்லவும் இது வழி வகுக்கும். நகர்ப்புறங்களில் நுகர்வுப் பொருட்களின் உற்பத்தி உயரும்; கிராமப்புறங்களில் நுகர்வுப் பொருட்களின் உற்பத்திப் பணிகளிலும் பலர் ஈடு படுவர்.

(5) பன்னாட்டுப் பரிசோதனை விளைவால் முன்னேற்ற மடைந்த, விஞ்ஞான வேளாண்மைச் சாகுபடி முறைகளை வளர்ச்சி

யடையாத நாடுகள் பின்பற்றுகின்றன. இதனால் வேளாண்மை உற்பத்தி பெருகுகின்றது. இந்தியாவில் நாம் கோதுமை உற்பத்தியில் 'மெக்ஸிகோவின்' (Mexico) முறைகளையும், அரிசி உற்பத்தியில் 'ஜப்பானியச்' சாகுபடி முறைகளையும் பின்பற்றி வருகின்றோம். இவற்றைத்தவிர வேறு பல நாடுகள் பின்பற்றும் உற்பத்தி முறைகளையும், பிறநாட்டு விதைகளையும், உள்நாட்டு ஆராய்ச்சிகளின் மூலம் கிடைத்த விதைகளையும் பயன்படுத்தி 'பசுமைப் புரட்சியை' (Green Revolution) நம் நாட்டில் ஏற்படுத்தியுள்ளோம். தரமான நல்விதைகள், உரங்கள், கருவிகள், இயந்திரங்கள் ஆகியவை பயன்படுத்தப்பட்டு அடிப்படைத் துறையாகிய வேளாண்மை வளர்ந்துள்ளது.

'பன்னாட்டுப் பரிசோதனை விளைவு' முற்றிலும் சேமிக்கும் விருப்பத்தைக் குறைத்துவிடும், மூலதனத்திரட்சிக்கு இடையூறாக இருக்கும் எனக் கூற முடியாது. வளர்ச்சியடைந்த நாடுகளின் நுகர்வையும், முதலீட்டு முறைகளையும் பின்பற்றுவதால் வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் விரைவுபடும். இதனுடைய எதிரிடை விளைவுகளை மேம்பட்ட நுகர்வுப் பொருட்களின் இறக்குமதியைத் தடை செய்வதின் மூலமும், அப்பொருட்களை உள் நாட்டிலேயே உற்பத்தி செய்வதின் மூலமும் நீக்கி விடலாம்.

நம் நாட்டில் பொதுத்துறை, தனியார் துறை இரண்டிலும் முன்னேற்றமடைந்த நாடுகளின் நுகர்வுகள், முதலீட்டு முறைகள் பின்பற்றப்படுகின்றன எனக் கூறலாம். மத்திய அரசையும், மாநில அரசுகளையும் எடுத்துக் கொண்டால் அவை பல நிர்மாணப் பணிகளிலும் முன்னேற்றமடைந்த நாடுகளைப் பின்பற்றுகின்றன. பல அடுக்குக் கட்டடங்கள் அரசின் அலுவலகங்களாகக் கட்டப்படுகின்றன ; அவற்றில் சிலவற்றில் குளிர்ச்சாதன வசதிகளும் அமைந்துள்ளன. பணியாளர்களுக்கான குடியிருப்புக்களும் மிகச் சிறப்பாகத் தரப்படுகின்றன. முன்னேற்றமான சாலைகள் போடப்படுகின்றன ; பாலங்கள் கட்டப்படுகின்றன. இவற்றை ஆக்கமற்ற பணிகள் எனக் கூற முடியாது. இவ்வகை முன்னேற்றங்கள் ஆக்கத்திற்கு மறைமுகமாக உதவக் கூடியவை. வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் ஆடம்பரமான ஹோட்டல்களையும் நிர்வகித்து வருகின்றன. நம் நாட்டில் 'அசோகா ஹோட்டல்' போன்றவற்றை இதற்குச் சான்றாகக் கூறலாம். அயல் நாட்டுப் பிரயாணிகளுக்குப் பல வசதிகளைச் செய்து தருவது தவிர்க்கவியலாதது ; அதன் மூலம் அந்நியச் செலாவணியை அதிகம் பெறவும் அவை அவசியமானதாகின்றன. நம் தமிழ் நாட்டை நோக்கும்போது, சுரங்கப் பாதைகள்

அமைக்கப்படுகின்றன ; கூவம் சீரமைப்புத் திட்டம் செயலாக்கப் படுகின்றது ; போக்குவரத்தைச் சீர்படுத்த 'உயரப் பாதைகள்' (Fly-overs) அமைக்கப்பட இருக்கின்றன. இவை யாவுமே அதிக முதலீட்டைக் கொண்ட பணிகளாகும். பலருக்கும் வேலை வாய்ப்புக்கள் இவற்றின் மூலம் கிடைக்கின்றன. வருவாய்ப் பெருக்கம் ஏற்பட்டு, சேமிப்பு வீதமும் இவற்றின் மூலம் உயர் வடையும். இவை ஆக்கத்திற்கு நேரடியாக உதவாவிடினும், மறை முகமாக உற்பத்தியை ஊக்குவிக்கின்றன எனக் கூறலாம்.

நம் நாட்டில் தனியார் பலரும் மேலை நாட்டு நாகரிக வாழ்வை மேற்கொள்ள விரும்புகின்றனர். வங்கித்துறையை எடுத்துக்கொண்டால், பல வங்கி முறைகள் வளர்ச்சியடைந்த நாடு களைப் பின்பற்றியே செயலாக்கப்படுகின்றன. இந்தியாவில் 'டிரைவ்-இன்-பாங்க்', 'டிரைவ்-இன்-ஹோட்டல்' போன்றவை அமைந்துள் ளன; 'இன்ஸ்டன்ட் காபி' போன்றவைகளும் இருக்கின்றன. நம் நாட்டின் முக்கிய பெரிய நகரங்களின் இரவு உணவு விடுதி நடனங்களும் மேலை நாடுகளின் நாகரிகத்தை நாம் பின்பற்றி வருகின்ற நிலையினால் எனக் கருதலாம். நம்முடைய உடை களிலும், முடியலங்காரங்களிலும்கூட நாம் பிற நாடுகளைப் பின் பற்றிச் செல்கின்றோம். நல்லனவற்றில் பிற நாடுகளைப் பின் பற்றுதல் தவறாகாது. இவற்றைப் பின்பற்றுதலின் மூலமாக உற்பத்திப் பணிகள் மறைமுகமாக ஊக்குவிக்கப்படுகின்றன.

மேலும், நம் நாட்டில் மிகக் குறைந்த வருவாயைக் கொண்ட வர்களும் கூட வானொலிப் பெட்டிகள் போன்றவைகளை வாங்க விரும்புகின்றனர். நகர்ப்புறங்களில் இருப்பவர்களே அதிக அளவிற்குப் பிற நாட்டு நாகரிக வாழ்வை மேற்கொண்டுள்ளனர். தொலைபேசிகளையும், குளிர்ச்சாதன வசதிகளையும் அறியாத பலரும் கிராமப் புறங்களில் இன்றும் அதிக அளவிற்கு வசித்து வருகின்றனர். இந்தியாவின் பெரும் பகுதி மக்கள் மிகக் குறைந்த வருவாயை மட்டுமே பெறுவதால், அவசியத் தேவைகளைக் கூட அவர்களால் பூர்த்தி செய்து கொள்ள முடிவதில்லை. சமுதாயத் தின் மிக உயர்ந்த நிலையில் உள்ள அதிக வருவாய் பெறுபவர்களும், நடுத்தர வருவாய் பெறுபவர்களும் மேம்பட்ட நுகர்வு நிலைகளைப் பின்பற்றுகின்றனர். தொழில் முதலாளிகள், நிலப்பிரபுக்கள், அயல் நாடு சென்று திரும்பியவர்கள் அதிக அளவிற்கு ஆடம் பரப் பண்டங்களை வாங்க விரும்புகின்றனர். இவர்கள் நம் மக்கட் தொகையில் குறைந்த விகிதமேயாதலால், பன்னாட்டுப் பரிசோதனை விளைவால் நம் நாட்டின் மூலதனத்திரட்சி பெருமளவு பாதிக்கப்படுமெனக் கூற முடியாது.

# 5. பொருளாதார முன்னேற்றத்தில் உள்ள இடையூறுகள்

## (Obstacles to Economic Development)

வளர்ச்சியடையாத நாடுகளின் அடிப்படை இயல்புகளே அவற்றின் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளன. எல்லா வளர்ச்சி அடையாத நாடுகளும் எல்லா இயல்புகளிலும் ஒரே தன்மையைக் கொண்டிருப்பதில்லை. வளர்ச்சி யடையாத நாடு ஏழை நாடாக இருக்கின்றமைக்கு இவ் வியல்புகளும் காரணமாகும். இந்த இயல்புகள் வறியநிலைக்குக் காரணமாகவும், விளைவாகவும் அமைகின்றன. குறைந்த அளவு பொருளாதார முன்னேற்றத்திற்கு நிரந்தரத் தன்மை யோடு உள்ள 'வறுமை வட்டமும்' (Vicious Circle of Poverty) ஒரு காரணமாகும். வளர்ச்சியடையாத நாடுகளின் இயல்புகள் இந்திய நாட்டிற்குப் பல நிலைகளிலும் பொருந்து வதால் இந்தியாவையும் வளர்ச்சியடையாத நாடென்றே கொள்ள லாம். வளர்ந்துவரும் நாடுகளில் முக்கிய நான்கு தடைகள் முன்னேற்றநிலைகளில் அமைந்துள்ளன:

### 1. வறுமை வட்டம் (Vicious Circle of Poverty)

வறுமை வட்டத்திற்குள்ளாகவே எல்லா வளர்ச்சியடையாத நாடுகளும் அமைகின்றன. பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) இதைப்பற்றி விளக்கும்போது, "பல காரணிகளும், சக்திகளும் ஒன்றோடொன்று இணைந்து காரணமாகவும், விளைவாகவும் மாறி ஏழை நாட்டை வறிய நிலையிலேயே வைத்துள்ளன. சான்றாக, ஒரு ஏழை மனிதன் உண்ணத் தேவையான உணவு கிடைக்காமை யால் உடல் நலமிழக்கின்றான்; உடல்நலக் குறைவால் உழைக்கும் சக்தி குறைகின்றது. எனவே அவன் ஏழையாகவே இருக்கின்றான்; திரும்பவும் தேவையான அளவிற்கு உணவைப் பெற அவனால் முடியவில்லை" என்று கூறுகின்றார். "ஒரு நாடு ஏழை நாடாக இருக்கின்றமைக்குக் காரணம் அதனுடைய ஏழ்மை நிலையே" எனவும் நர்க்ஸ் குறிப்பிடுகின்றார்.

வளர்ச்சியடையாத நாடுகளில் வறுமை வட்டம் மூலதனக் குறைவினுல் விளைகின்ற குறைந்த உற்பத்தியில் தோன்றுகின்றது. குறைவான உற்பத்திக்கு பிற்போக்குப் பொருளாதாரமும், குறைபாடுள்ள சந்தைகளும், முன்னேற்றமடையாத பொருளாதார நிலைகளும் காரணங்களாகின்றன.

இவ்வறுமை வட்டத்திற்குள் வேறுசில காரணிகளும், விளைவுகளும் அடங்கியுள்ளன. குறைந்த அளவு உண்மை வருவாய் குறைவான தேவையின் அளவிலும், குறைவான முதலீட்டு அளவிலும் முடிகின்றது. இதனுல் மூலதனப் பற்ருக் குறை ஏற்பட்டு தாழ்ந்த உற்பத்தியே கிட்டுகின்றது.

ஏழைநாடுகளில் பயன்படுத்தப்படாத இயற்கை வளங்களும், மனித உழைப்பும் அமைந்துள்ளன. ஒரு நாட்டின் இயற்கை வளங்களைப் பயன்படுத்தி முன்னேற்றத்தைப் பெற மக்களின் ஆக்கத்திறன் அவசியமானது. மக்கள் எழுத்தறிவில்லாத பிற்போக்கான நிலையிலிருந்தால், தொழிற் திறமைகளில் குறைவாக இருந்தால், தொழில் முயல்வோரின் பணிகளைச் செய்ய முடியாதவர்களாக இருந்தால் இயற்கை வளங்களைப் பயன்படுத்த முடியாது ; அல்லது முற்றிலும் சிறப்பாகப் பயன்படுத்த முடியாது அல்லது தவருகப் பயன்படுத்தப்படும். வளர்ச்சிபெருத இயற்கை வசதிகளால் மக்கள் பொருளாதார ரீதியில் பிற்போக்காகவே இருக்கின்றனர். வளர்ச்சியடையாத நாடுகளில் பயன்படுத்தப்படாத இயற்கை வளங்கள் பிற்போக்கான மக்களின் காரணமாக அமைகின்றன. இந்த வறுமை வட்டங்களை கீழ்க்கண்டவாறும் குறிக்கலாம் :

"பின் தங்கிய நாட்டில் வளர்ச்சியடையாத நிலையும் வறிய நிலையும் ஒருங்கே அமைந்துள்ளன. அந்நாடு ஏழை நாடாக இருக்கின்றமைக்கு அதன் வளர்ச்சியடையாத நிலை காரணமாகும்; வளர்ச்சியடையாமைக்கு அதன் ஏழ்மை நிலையும் காரணமாகும். முன்னேற்றத்திற்குத் தேவையான வளங்கள் அந் நாட்டில் பயன் படுத்தப் படுவதில்லை. வறிய நிலை வளர்ச்சியடையாத நாட்டில் நிரந்தரத்தன்மை கொண்டுள்ளது."[1]

நம் நாட்டின் தேசிய வருவாயும், தலா வருவாயும் கூடியிருந்தாலும் பொருளாதார முன்னேற்றத்தின் முதற் சில படிகளிலேயே நாம் இருக்கின்ருேம். 1950-51 இல்-தேசியவருவாய் ரூ. 9,530 கோடியாகும். 1968-69-இல் இது ரூ. 28,800 கோடியாக உயர்ந்துள்ளது. இதே காலத்தில் சராசரித் தலா வருவாய் 266 ரூபாயி

[1]K. N. Bhattacharyya, Indian Plans, P. 4.



குறைபாடுகள் உள்ள சந்தை
வளர்ச்சியடையாத இயற்கை வளங்கள்
(3)
(1)
பிற்போக்கான மக்கள்
மூலதனப் பற்றாக்குறை
குறைந்த முதலீடு
குறைந்த உற்பத்தி
குறைந்த சேமிப்பு
குறைந்த உண்மை வருவாய்
குறைந்த தேவை
(2)

லிருந்து 546 ரூபாயாக வளர்ந்திருக்கின்றது. வேளாண்மையில் 'பசுமைப் புரட்சியும்', தொழில் முன்னேற்றத்தில் அதிக முதலீடும் ஆக்கத்தின் அளவில் உயர்வைத் தந்து கொண்டிருக்கின்றன. 1968-69-இல் இந்தியாவின் சேமிப்பு தேசிய வருவாயில் 8·8 சதவீதம். நாட்டின் மொத்த உற்பத்தியை உயர்விக்க இது போதுமான சேமிப்பு அல்ல. உற்பத்தித்திறனைப் பெருக்க தேசிய வருவாயில் 15 முதல் 20 சதவீத சேமிப்பு அவசியமானதாகும். கிடைக்கக்கூடிய இயற்கை வளங்களையும் நாம் சிறப்பாகப் பயன் படுத்தவில்லை. இரும்பு, நிலக்கரி, அலுமினியம், மாங்கனீசு, மைக்கா போன்றவை அதிக அளவில் கிடைக்கின்றன. சுண்ணாம் புக்கல், டிடானியம், தோரியம் போன்றவைகளும் போதுமான அளவில் அமைந்துள்ளன. இவ்வகைக் கனி வளங்களை மேலும் சிறப்பாகப் பயன்படுத்தி விரைவான தொழில் வளர்ச்சியைப் பெற நாம் முயலவேண்டும். நம்மிடம் மலைவளம், கனிவளம், கடல்வளம், வனவளம், மக்கள் வளம் ஆகியவை அமைந்திருந் தாலும் 'வளத்திற்கிடையே வறுமை' நிலையில் நம் நாடு திகழ் கின்றது. இயற்கைச் செல்வங்களைத் திறம்படப் பயன்படுத் தாமையே நம் வறுமைக்குக் காரணமாகும்.

1971-இல் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் மொத்த மக்கட் தொகையில் 29·35 சதவீதம் மட்டுமே இருந்தனர். சுமார் 70 சதவீத மக்கள் கல்வியறிவு இல்லாதவர்களாக இருப்பதாலும், நம் நாட்டில் விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வில்லை. வறுமை வட்டத்தில் நம் நாடு சுழல்வதைத் தவிர்க்க சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்தவேண்டும்; அறிவியல் வளர்ச்சியை அடையவேண்டும்; மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும்; மக்களின் உண்மை வருவாயை உயர்த்த வேண்டும்; இயற்கை வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டும்.

## 2. குறைந்த வீத மூலதனத்திரட்சி (Low Rate of Capital Formation)

மூலதனப் பற்றாக்குறையே பொருளாதார முன்னேற்றத்தில் மிக முக்கிய இடையூறாக இருக்கின்றது. வளர்ச்சியடையாத நாடு களில் வறுமை வட்டம் இருக்கின்றமையால் குறைந்த மூலதனத் திரட்சியே அமைந்துள்ளது. வறிய நிலையே குறைந்த அளவு மூலதனத்திரட்சிக்குக் காரணமாகவும், விளைவாகவும் ஆகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் பெரும்பகுதி மக்கள் வறியவர் களாக வாழ்கின்றனர். அவர்கள் கல்வியறிவில்லாதவர்களாகவும், குறைந்த அளவு மூலதனப் பொருட்களைக் கொண்டவர்களாகவும், திறமை குறைந்தவர்களாகவும், முன்னேற்றமடையாத உற்பத்தி முறைகளைப் பின்பற்றுபவர்களாகவும் இருக்கின்றனர். உற்பத்தி

தன்னிறைவுக்காகச் செய்யப்படுகின்றது. வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர்களிடம் பெயர்ச்சியில்லை ; சந்தைத் தொடர்புகளை மிகக் குறைந்த அளவே அவர்கள் கொண்டுள்ளனர். அவர்களின் இறுதிநிலை உற்பத்தியும் மிகக் குறைவாகவே உள்ளது.

குறைந்த உற்பத்தி குறைந்த உண்மை வருவாயிலும், குறைந்த சேமிப்பு குறைந்த முதலீட்டிலும், தாழ்ந்த மூலதனத்திரட்சியிலும் முடிகின்றது. நுகர்வு குறைந்த அளவில் இருப்பதால், நுகர்வைக் குறைத்து மூலதன அளவை அதிகரிப்பது முடியாததாகும். இதனால்தான் விவசாயிகள் பழைய உற்பத்திச் சாதனங்களையும், முறைகளையும் பயன்படுத்தி குறைந்த உற்பத்தியைப் பெறுகின்றனர். குறைந்த அளவே சேமிக்கும் பணத்தைக் கையிருப்பாக வைத்துக் கொள்கின்றனர் ; அல்லது நகைகள், தங்கம் போன்றவற்றை வாங்கப் பயன்படுத்துகின்றனர். பணத்தைக் கையிருப்பாக வைத்துக்கொள்கின்றமைக்குக் காரணம் கிராமப் பகுதிகளில் வங்கி வசதிகள் இல்லாமையே ஆகும். இந்நிலைகளால் குறைவான மூலதனத் திரட்சியே வளர்ச்சியடையாத நாடுகளில் ஏற்படுகின்றது.

வளர்ச்சியடையாத நாடுகளில் உயர்ந்த வருவாய்ப் பிரிவினரே அதிக அளவு சேமிப்பைச் செய்கின்றனர். ஆனால் இந்த சேமிப்புக்கள் உற்பத்திப் பணிகளில் செலுத்தப்படுவதில்லை. "அவை தானியக் கையிருப்பாக வைத்துக் கொள்ளப்படுகின்றன ; தங்கம், நகைகள் வாங்கவும் பயன்படுத்தப்படுகின்றன. அச் சேமிப்புக்களைக் கொண்டு ஆடம்பரமான கட்டடங்கள் கட்டப்படுகின்றன. ஊக வாணிபங்கள் செய்யப்படுகின்றன ; வட்டிக்குப் பணமளிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. அயல் நாட்டுப் பணமாகவும் உள்நாட்டுப் பணமாகவும் கையிருப்புக்கள் வைத்துக் கொள்ளப் படுகின்றன."[1] பணத்தைக் கையிருப்பாகக் கொள்ளும் நோக்கமும், நீண்டகாலம் உபயோகப்படத்தக்க நுகர்வுப் பொருட்களை வாங்கும் விருப்பமும் அவர்களிடம் உள்ளது. பெருமைக்காக இறக்குமதிப் பொருட்களையே அவர்கள் விரும்புகின்றனர் ; உள்நாட்டுப் பொருட்கள் தரமுள்ளதாகக் குறைந்த விலைக்குக் கிடைத்தாலும் அவற்றை வாங்க விரும்புவதில்லை.

சேமிப்பதற்கும், முதலீடு செய்வதற்கும் ஊக்கமின்றி மக்கள் முன்னேற்றமடையாத நாடுகளில் இருக்கின்றமைக்குப் பல காரணங்கள் உள்ளன: இந்நாடுகளில் சட்ட ஒழுங்கு நிலைகள் சிறப்பாக இருப்பதில்லை ; அரசியலில் நிலையற்ற தன்மை, வசதிகளைக்

[1]Nurkes, Problems of Capital Formation in Underdeveloped Countries,-p. 26.

குறைக்கின்ற பெரிய கூட்டுக்குடும்பங்கள், நிலச் சீர்திருத்தங்களில் உள்ள குறைபாடுகள், முன்னேற வேண்டுமென்ற விருப்பில்லாத நிலை ஆகிய யாவும் சேமிப்பு, முதலீட்டு விதங்களில் குறைவை ஏற்படுத்துகின்றன. பழக்கவழக்கங்களும் முதலீட்டு அளவில் குறைவைத் தருகின்றன. பழக்கமுள்ள தொழில்களில் ஈடுபடவே அவர்கள் விரும்புகின்றனர்; அவர்கள் புதிய வகைத் தொழில்களைத் தொடங்கத் துணிவதில்லை. தங்கள் சேமிப்பையும் புதுத் தொழில்களில் முதலீடாக்கத் தயங்குகின்றனர். புதிய துறைகளில் எவ்வித இடையூறுகளையும் ஏற்க அவர்கள் முன்வருவதில்லை. வளர்ச்சியடையாத சந்தைகளும் முதலீட்டின் அளவைக் குறைத்து விடுகின்றன. மக்களும் குறைந்த அளவு வாங்குந்திறனைக் கொண்டிருப்பதால், உற்பத்தி செய்த பொருட்களை விற்பது கடினமாகின்றது.

முதலீட்டிற்கான தொகைகளைப் பெறுவதிலும் சில தடைகள் தோன்றுகின்றன. வங்கிமுறை, கடன்வசதி, பணச்சந்தை, பங்குச் சந்தை போன்றவைகளும் வளர்ந்திருப்பதில்லை.

திறமையான உழைப்பு கிடைப்பது கடினமாகின்றது; உற்பத்திக் காரணிகள் அதிக அளவிற்கு இடம் பெயர்வதும் இல்லை. இவற்றால் உற்பத்திச் செலவு அதிகரித்து, திறமைகொண்ட முதலீட்டாளர்களுக்கும் இடர்கள் ஏற்படுகின்றன.

போக்குவரத்து, இயக்கச் சக்தி, தண்ணீர் வசதி போன்றவை போதுமான அளவு வளராத காரணத்தாலும் முதலீடு செய்ய வேண்டுமென்ற ஊக்கம் இழக்கப் படுகிறது.

தொழில் முயல்வோரும் கிடைப்பருமை கொண்ட ஆக்கக் காரணியாக அமைகின்றனர். குறைந்த எண்ணிக்கையில் இருக்கக் கூடிய தொழில் முயல்வோரும் அதிகஅளவு இடையூறுகளால் பாதிக்கப்படுகின்றனர். வணிகர்களும், வியாபாரிகளும் பெருமளவிற்கு ஏற்றுமதித் தொழில்களிலேயே ஈடுபட்டுள்ளனர். எனவே மூலதனப் பொருட்களின் அளவில் முன்னேற்றம் குறைவாக ஏற்படுகின்றது.

அதிக வருவாய் பெறுபவர்களுக்கும், குறைந்த வருவாய் பெறுபவர்களுக்குமிடையே இடைநிலை வருவாயைப் பெறுகின்ற பிரிவு உள்ளது. இப்பிரிவு சிறப்பாக நிரந்தரத்தன்மை கொண்ட, குறைவான இடர்களைக் கொண்டுள்ள துறைகளில் அமைந்துள்ளது. இப்பிரிவினர் திறமையானவர்களாக இருப்பினும் கூட புதிய துறைகளில் ஈடுபட விரும்புவதில்லை. நிதி நிறுவனங்களிட

மிருந்து மூலதனத்தைப் பெறுவது கடினமாக உள்ளது ; முன்னேற்றமடைந்த தொழில் நுட்பத்தைப் பின்பற்றுவதும், பயிற்சி பெற்ற உழைப்பாளரைப் பெறுவதும் கடினமாகின்றன. நிர்வகிக்கும் நிலைகளிலும் இடையூறுகள் ஏற்படுவதுண்டு. இவ்விதத் தடைகள் வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதன வளர்ச்சிக்கு இடையூருக இருக்கின்றன.

எனினும், இந்த இடர்ப்பாடுகளை சமுதாயத்தில் அவசிய முன்னேற்றங்களைச் செய்வதின் மூலம் நீக்கிவிடலாம். முன்னேற்றத்திற்கு ஒரு வகையில் இது உதவும். போக்குவரத்து, செய்தித் தொடர்புகள், இயக்கச்சக்தி முன்னேற்றம் போன்றவைகளே சமுதாயத்தின் அவசிய முன்னேற்றங்களாகும். இவற்றை வளரச் செய்தால் முன்னேற்றத்திற்கு அவை மறைமுகமாக உதவும். அந்நிய ஆதிக்கத்தின் கீழிருந்த பல வளர்ச்சியடையாத நாடுகள் சட்ட,ஒழுங்கு நிலைகளை நிலை நிறுத்தவே பெரிதும் பாடுபடுகின்றன. நாட்டைத் தொழில் மயமாக்குவதில் கவனத்தைச் செலுத்தாமல், வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் ஏற்றுமதித் தொழில்களை வளர்க்கவே முற்படுகின்றன. அரசியலில் பிற்போக்கான நிலையும், நிரந்தரமில்லாத அரசுகளும், திறமைகுறைந்த அரசுகளும் பொருளாதார வளர்ச்சிக்குத் தடைகளாக அமைகின்றன.

நம் நாட்டில் ரிசர்வ் வங்கியின் மதிப்பீட்டின்படி 1950-51-இல் தேசிய வருவாயில் 6.5 சதவீதம் சேமிக்கப்பட்டது; 1961-62-இல் இது 9.5 சதவீதமாக உயர்ந்தது. 1968-69–இல் நம் நாட்டின் சேமிப்பு தேசிய வருவாயில் 8.8 சதவீதமாகும். இதைச் சிறப்பான சேமிப்பு வீதமெனக் கூறயியலாது. தனி ஒருவருக்கான மூலதனம் இங்கு மிகக்குறைவாக உள்ளது. குறைந்த அளவு சேமிப்பு, முதலீடுகளுக்குக் காரணம் சேமிக்கும் விருப்பத்தையும், சேமிக்கும் திறனையும் கொண்டில்லாத மக்கட் தொகையேயாகும். தேசிய வருவாயில் சுமார் 10 சதவீதத்திற்கும் குறைவான முதலீடே செய்யப்படுகின்றது. மூலதனத்திரட்சிக்கு உதவக்கூடிய தொழில் முதலீடுகளும் குறைந்த அளவிலேயே அமைந்துள்ளன.

### 3. சமுதாய-பண்பாட்டுத் தடைகள் (Socio-cultural Obstacles)

மூலதனம் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையாயானது என்றாலும் கூட, அதைத்தவிர பிற காரணிகளும் வளர்ச்சிக்குத் தேவையாகின்றன. "மக்கள் வளங்களும், சமுதாய நடவடிக்கைகளும், அரசியல் நிலைகளும், சரித்திர விபத்துக்களும் பொருளாதார முன்னேற்றத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

வளர்ச்சிக்கு மூலதனம் தேவையானதுதான் ; ஆனால் அது மட்டும் வளர்ச்சிக்குப் போதுமானதல்ல.''[1] வளர்ச்சியடையாத நாடுகளின் சமுதாய அமைப்புகள், நடவடிக்கைகள், பழக்க வழக்கங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதில்லை.

'பொருளாதார மாற்றத்திற்குச் சமுதாய எதிர்ப்புநிலை' இருப்பதாகவும் சொல்லப்படுகின்றது. ஒரே விதமான தொழில்களில் ஈடுபட்டிருப்பதையே மக்கள் விரும்புகின்றனர் ; பழைமையான நம்பிக்கைகளைக் கொண்டவர்களாக அவர்கள் இருக்கின்றனர். வாணிபம் போன்றவற்றில் ஈடுபட்டால் தங்கள் பெருமை குலைந்து விடுமென சமுதாயத்தின் உயர்ந்த நிலையில் அதிக வருவாயைப்பெறுபவர்கள் கருதுகின்றனர். சமுதாயமானது சாதி, இன, மத, வகுப்பு அடிப்படைகளில் பிரிந்துள்ளது. இக்காரணிகள் சமுதாய, பூகோளப் பெயர்ச்சியில்லாமல் செய்து, வளர்கின்ற பொருளாதாரத்தைப் பின்னிழுக்கின்றன. புதுமைகளையோ அல்லது புதுமைக்கண்டுபிடிப்புக்களையோ கண்டு மக்கள் வெறுப்படைகின்றனர். பேராசிரியர் ஆல்வின் ஹான்சென் (Prof. Alvin Hansen) இந்திய நிலையைப் பற்றி விவரிக்கின்றார் : "வேளாண்மை உற்பத்தி முறைகள் பழக்க வழக்கங்களைச் சார்ந்து அமைந்துள்ளன. கிராமப்புறத்திலிருக்கும் ஒருவர் அறிவியலைக்கண்டு அஞ்சுகின்றார். பல கிராமவாசிகள் எல்லா உயிர்களையும் புனிதமாகக் கருதுவதால் பூச்சி மருந்துகளை விலக்கி விடுகின்றார்கள். புதிய, நல்ல முன்னேற்றமடைந்த விதைகளைச் சந்தேகிக்கின்றனர். அவற்றை முயன்று பார்ப்பதைச் சூதாட்டம் எனக் கருதுகின்றனர். உரங்களை இடுதலும் இடரைத் தருமென அவர்களால் கருதப்படுகின்றது. இவ்வகை முயன்று பார்க்காத முறைகளால் உற்பத்தியில் தோல்வியே கிட்டுகின்றது.''[2]

குடும்பமென்பது அடிப்படைப் பொருளாதார சமூக அலகு ஆகின்றது. குடும்ப நடவடிக்கைகளே மக்கட்தொகைப் பெருக்கத்திற்கும், நிலத்தொடர்புகளுக்கும் காரணங்களாகும். சேமிப்பு, முதலீட்டு விகிதங்களையும் குடும்பநிலைகளே நிர்ணயிக்கின்றன. பணம் கையிருப்பாக வைத்துக் கொள்ளப்படுகின்றது ; அல்லது நகைகள், தங்கம், வீடுகள் வாங்குதல் போன்றவற்றில் முதலீடு செய்யப்படுகின்றது. தங்களுடைய தகுதியை நிலைநாட்ட சமுதாயச் சடங்குகள் சிலவற்றிலும் அதிகச் செலவு செய்கின்றனர். செல்வந்தர்கள் சேமித்து முதலீடு செய்யும் ஆற்றல் பெற்றிருந்தாலும், பிற நாட்டினரைப் பின்பற்றி ஆடம்பர வாழ்வு வாழ்வ

[1]Meier and Baldwin, Economic Development, p.323.

[2]Alvin Hansen, Economic Issues of the 196 's, pp. 157-58.

தால் நேரடியாக உற்பத்திக்கு உதவாத துறைகளில் பணம் செலவிடப்படுகின்றது.

மக்களிடத்தில் சாதி, மதம், உறவு, குலம், அந்தஸ்து போன்ற வற்றிற்கு அதிகச் செல்வாக்கு இருக்கின்றது. பல வேலைகளுக்கும் பணியாட்கள் தேர்ந்தெடுக்கப்படும்போது இவை கருதப்படு கின்றன. உழைப்பின் தகுதிக்கேற்ப வேலைகள் தரப்படுவதில்லை. திறமை குன்றிய உழைப்பால் உற்பத்தி பாதிக்கப் படுகின்றது. இச்சமுதாய நிலைகளால் அரசும் சிறப்பாகச் செயல்பட முடிவ தில்லை. அவை வேண்டியவர்களுக்குத் தனிச் சலுகை காட்டு வதிலும், இலஞ்சங்கள் பெறுவதிலும், உறவினர்களுக்குச் சலுகை தருவதிலும், திறமைக் குறைவான நிர்வாகத்திலும் சென்று முடிகின்றன. பொதுத்துறையிலோ, தனியார் துறையிலோ அமைந்துள்ள தரக்குறைவான நிர்வாகம் பொருளாதார முன் னேற்றத்தைக் கடினமாக்கிவிடும்.

கல்வியின்பால் இருக்கக்கூடிய சமுதாய நிலைகளும் வளர்ச் சிக்குத் தடையாகவே இருக்கின்றன. தொழில் நுட்பக் கல்வியை யைப் பெற பலரும் முன்வருவதில்லை ; நடைமுறைக்கு உதவாத கல்லூரிக் கல்வியையே விரும்பிக் கற்கின்றனர். உடல் உழைப்பை அதிகத் தேவையாகக் கொண்ட பணிகளின் மீது தவறான எண்ணம் கொள்ளப் படுகின்றது. மேலும், பணிகளுக்குக் குறைந்த ஊதியமே அளிக்கப்படுகின்றது. சான்றாக, பொறியியலாளர்கள் நம் நாட்டில் இன்று பெறும் ஊதியத்தைக் குறிப்பிடலாம். அவர்கள் ஆற்றுகின்ற பணிக்குக் கொடுக்கப்படும் ஊதியம் அதிக மெனக் கூறமுடியாது. உடலுழைப்பை அதிகத்தேவையாகக் கொண்டில்லாத பிற பணியாளர்கள் நல்ல ஊதியத்தைப் பெறு கின்றார்கள். எனவே, நடைமுறைகளுக்கு ஏற்ற, ஆக்கத்திற்கு நேரடியாக உதவக்கூடிய தொழில் நுட்பப் பயிற்சிக் கல்வியைக் கற்பதில் விருப்பு குறைந்து விடுகின்றது. இவற்றால் வளர்ச்சி யடையாத நாடுகளில் தொழில் நுணுக்க முன்னேற்றத்தில் பிற் போக்கான நிலையே நீடிக்கின்றது.

பலவகைப் பட்ட மதங்களும் சிக்கனத்திற்கு, கடின உழைப் பிற்கு வகை செய்வதில்லை. இச்சமுதாய மக்கள் உற்பத்திப் பணிகளை மேற்கொள்வதைப் புண்ணியமாகக் கொள்ளாமல் பாபமாகக் கருதுகின்றனர். ஓய்வாக இருப்பதையும், பல மதத் திருவிழாக் களுக்குச்செல்வதையும், மதச் சடங்குகளில் கலந்து கொள்வதையும் இவர்கள் மிக முக்கியமானவைகளாகக் கொள்கின்றனர். இவற் றிற்கான நேரடி உற்பத்திக்குதவாத செலவினங்கள் பொருளா தார முன்னேற்ற முயற்சிகளுக்கு உதவுவதில்லை. முன்னேற்ற மென்பது மனித முயற்சிகளால் பெற முடியாத ஒன்று ; விதியின்

செயல்களுக்கு எதிரே மனிதனால் எதையுமே சாதிக்க முடியாது என மக்கள் கருதுகின்றனர். மதக் கொள்கைகள் பொருளாதார முன்னேற்றத்தைத் தடை செய்கின்றன. அவை பொருளாதார, சமுதாய, அரசியல் அமைப்புக்களை மாற்றும் தன்மை கொண்டிருப்பதால் வளர்ச்சிக்கு வகை செய்வதில்லை. "கிழக்கின் நாகரிகம் வாழ்வோடும், நிரந்தரத் தன்மையோடும் தொடர்புள்ளது; மேற்கின் நாகரிக இயல்புகள் துணிவோடும், முன்னேற்றத்தோடும் தொடர்புள்ளவை" என டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் (Dr. S. Radhakrishnan) குறிப்பிடுகின்றார்.

இந்தியாவில் இவையாவும் அமைந்திருப்பதை நம்மால் உணர முடிகின்றது. பெற்ற கடனைத் திருப்பித்தர இயலாத சிறு விவசாயிகள்கூட திருமணங்கள், மதத் திருவிழாக்கள், மற்ற மதச் சடங்குகள் போன்றவற்றிற்கு அதிகச் செலவுகள் செய்கின்றனர். வளர்ச்சியடைந்த நாடுகளில் மத நடவடிக்கைகளுக்கான செலவு அதிகமெனக் கூற முடியாது. நம் நாட்டில் மிகக் குறைந்த வருவாயைப் பெறுபவர்கள் முதல் மிக அதிக வருவாயைப் பெறுபவர்கள் வரை பெரும்பாலானோர் தங்கள் வருவாயின் பெரும் பகுதியை மதத்திற்காகச் செலவிடுகின்றனர்.

4. பன்னாட்டுச் சக்திகளின் விளைவுகள் (Repercussions of International Forces)

வளர்ச்சியடையாத நாடுகட்கும், வளர்ச்சியடைந்த நாடுகட்குமிடையே நடைபெறும் வாணிபத்தால் ஏற்படும் நன்மைகள் முன்னேற்றமடைந்த நாடுகளுக்கே சென்று சேர்கின்றன. இதை 'உலகம், வளர்ச்கியடையாத நாடுகளைச் சுரண்டும் கோட்பாடகவே' (Theory of World Exploitation of Underdeveloped Countries) குன்னர் மிர்டால் (Gunnar Myrdal), பிரிபிஷ் (Prebisch) மின்ட் (Myint), லூயிஸ் (Lewis), சிங்கர் (Singer) போன்றவர்கள் தந்துள்ளனர்.

வளர்ச்சியடையாத நாடுகள் ஏற்றுமதியின் அளவில் உயர்வையே பெற்று வருகின்றன. உலகச் சந்தையில் இந் நாடுகளின் விற்பனை உயர்ந்து வருகின்றது. ஆனால் இந்நிலை அந்நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெருமளவு உதவுகின்றது எனக் கூற முடியவில்லை. ஏனெனில் இந் நாடுகளில் ஏற்றுமதித் தொழில்கள் வளர்ச்சியடையும்போது பொருளாதாரத்தின் பிற துறைகள் முன்னேற்றம் பெறுவதில்லை. ஏற்றுமதித் தொழில்களுக்குச் சலுகைகள் அளிக்கப்பட்டு அவை முன்னேற்றமடைகின்றன; பிற துறைகளின் முன்னேற்றங்களில் அதிக அக்கறை காட்டப்படாமையால் நாட்டின் பொருளாதார

முன்னேற்றம் சிறப்படைவதில்லை. தவிர, முன்னேறிவரும் நாடுகள் ஏற்றுமதிப் பொருட்களை அதிகம் சார்ந்திருக்கின்ற காரணத்தால் பிற நாடுகளின் தேவை, விலை மாற்றங்கள் உள் நாட்டுப் பொருளாதாரத்தையும் பாதிக்கும். அந்நாடுகளின் பொருளாதாரங்களில் நிலையற்ற தன்மையும், அயல் நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்து நிலையும் நிரந்தரமாகிவிடு கின்றன. பொருளாதாரத்தில் மந்தநிலை நிலவும்போது அயல் நாட்டு வாணிபத்தில் பாதக நிலை ஏற்பட்டு குறைந்த அளவு அந்நியச் செலாவணியை மட்டுமே ஈட்ட முடிகின்றது. உலகச் சந்தையில் வளர்ச்சியடையாத நாடுகளின் ஏற்றுமதிப் பொருட் களுக்குத் தேவைப் பெருக்கம் ஏற்பட்டாலும் அப் பொருட்களின் உற்பத்தியை உடனடியாக உயர்த்த அந் நாடுகளால் முடியாது. ஏனெனில் அந்நாடுகள் வேளாண்மைப் பொருட்களையும், தாதுப் பொருட்களையுமே பிற நாடுகளுக்குப் பெருமளவில் ஏற்றுமதி செய் கின்றன. நெகிழ்ச்சியற்ற அளிப்பைக் கொண்டே வளர்ச்சி யடையாத நாடுகளின் ஏற்றுமதிப் பொருட்கள் அமைந்துள்ளன.

அயல்நாட்டு வாணிபநிலை சாதகமாக இருக்கும்போதும் வளர்ச்சியடையாத நாடுகள் எல்லா நன்மைகளையும் பெறுவ தில்லை. சாதக நிலையைத் தொடர்ந்து வேலைவாய்ப்புக்கள் பெருகுவதில்லை ; உற்பத்தியிலும் உயர்வு ஏற்படுவதில்லை. இதற்குக் காரணம் குறைபாடுகள் உள்ள சந்தைகளும், மூலதனப் பற்றுக் குறையும், போக்குவரத்து செய்தித் தொடர்புகளில் முன்னேற்றம் ஏற்படாமையும் ஆகும். உயர்ந்த ஏற்றுமதியால் கிடைத்த இலாபம் ஊகவணிகத்திலும், ஆடம்பரப் பொருட்களை நுகர் வதிலும், வசதிகள் மிக்க கட்டடங்கள் கட்டுவதிலும் செலவிடப் படுகின்றது. இவை பணவீக்க நிலையை ஏற்படுத்துகின்றன. முதலீட்டுச் செலவுகள் சிறப்பாகச் செய்யப்படுவதில்லை. இந் நிலைகளால் பின்பும் அயல்நாட்டு வாணிபத்தில் பாதக நிலை தோன்றுகின்றது.

பிறநாட்டு முதலீடுகளும் வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதில்லை. அயல் நாட்டு முதலீடுகள் அதிக அளவு ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்தி யிலேயே கவனத்தைச் செலுத்துகின்றன. வேளாண்மைத் துறையில் ஆக்கத்தின் அளவு உயர்வதில்லை ; அத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களின் வாழ்க்கைத் தரமும் தாழ்வாகவே உள்ளது. ஏற்றுமதித் துறைகளிலும் உடல் உழைப்பாளர்களின் உண்மை ஊதியமானது குறைவாகவே இருக்கின்றது. அயல் நாட்டினர் தங்கள் நிர்வாகத்திற்கான ஊதியத்தையும், இலாபத் தொகையையும் உயர்ந்த அளவில் பெறுகின்றனர். "இலாபத்

தொகைகள் வெளி நாடுகளுக்குச் சென்று விடுவதாலும் உள் நாட்டுப் பொருளாதாரத்தில் சேமிக்கும் சக்தியானது குறைந்து விடுகின்றது."[1]

கடந்த எழுபது ஆண்டுகளில் வளர்ச்சியடையாத நாடுகளின் இறக்குமதித்திறன் குறைந்துகொண்டே வந்தது. அடிப்படைத் தொழில்களில் முன்னேற்றத்தைப் பெற முடியாததால் பெருகிய மக்கட் தொகையைப் பராமரிப்பது கடினமானது. மக்கட் தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் உற்பத்திவீதம் குறைவாக இருந்தமைக்குத் தொழில் நுணுக்க முன்னேற்றம் சிறப்பாக இல்லாமையும் ஒரு காரணமாகும். உற்பத்தியை உயர்விக்கும் முயற்சியில் தோல்வி ஏற்பட்டது. வேலையின்மைச் சிக்கலும், பாதக வாணிபச் செலுத்து நிலையும் அமைந்திருந்தன. இறுதியாக, குறைவான மூலதனத் திரட்சியால் பொருளாதார முன்னேற்றம் தடைப்பட்டது. எனவே, படிப்படியாக வளர்ச்சியடையாத நாடுகளில் ஏற்படும் பாதக வாணிப நிலை வளர்ச்சியடைந்த நாடுகளுக்குச் சாதக நிலையைத் தருகின்றது. இதனால் முன்னேற்றமடைந்து வரும் நாடுகளின் உண்மை வருவாய் குறைகின்றது; பொருளாதார முன்னேற்றத்திற்கான திறன் பாதிக்கப்படுகின்றது.

வளர்ந்துவரும் நாடுகளுக்கு வளர்ந்த நாடுகள் தற்போது அளித்துவரும் கடன்கள், உதவிகள் யாவும் அரசியல் நோக்கோடு அளிக்கப்படுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகள் உதவிகளைப் பெற்றபின் எந்த அளவிற்கு தங்கள் அரசியல் கொள்கைகளைப் பின்பற்றுகின்றன என்பதையே இன்றைய உதவி புரியும் வளர்ச்சியடைந்த நாடுகள் ஆராய்கின்றன. பொருளாதார முன்னேற்றம் அந்நாடுகளின் முதல் நோக்கல்ல; தங்கள் அரசியற் கொள்கைகளைப் பரப்புவதைத்தான் முக்கியமானதாக அவை கருதுகின்றன.

நாம் நம் நாட்டிலிருந்து சர்க்கரை, தேயிலை, சணற் பொருட்கள், தோல், மைக்கா, பருத்தித் துணிப் பொருட்கள், பொறியியற் பொருட்கள், சிமெண்ட், காய்கறி எண்ணெய் போன்றவற்றை ஏற்றுமதி செய்கிறோம். பருத்தி, காகிதம், உணவுப் பொருட்கள், இயந்திரங்கள், எண்ணெய்கள், இரசாயனப் பொருட்கள், மருந்துகள் ஆகியவை இறக்குமதி ஆகின்றன. 1951-52-இல் பாதகவாணிப நிலை ரூ. 210·14 கோடி என்ற அளவில் இருந்தது. இது 1968-69–இல் ரூ. 432·36 கோடியாக உயர்ந்தது. 1968-69-இல் ஏற்றுமதி மதிப்பு ரூ. 1353·8 கோடியாகும். இதனை 1973-74இல் ரூ. 1899 கோடியாக உயர்த்தத் திட்டமிடப்டுள்ளது.

[1]Meier and Baldwin, Economic Development, p. 332

# 6. பொருளாதார முன்னேற்றத்திற்கான அடிப்படைத் தேவைகள்
## (Basic Requirements For Economic Development)

முன்னேற்றத்தைப் பெற விழைகின்ற வளர்ச்சியடையாத நாடு அதற்கான அடிப்படைத் தேவைகளைப் பெற்றிருக்க வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திலுள்ள இடர்ப் பாடுகளைத் தவிர்ப்பதின் மூலமாக மட்டும் வளர்ச்சியைப் பெற்றுவிட முடியாது. "பொருளாதார வளர்ச்சியை மேன்மையடையச் செய்யும் காரணிகள்: சிக்கனத்தைச் செயல் படுத்தும் முயற்சி, அறிவியல் வளர்ச்சியை உற்பத்திக்குப் பயன் படுத்துதல், தனியொருவருக்கு அதிக அளவு மூலதனமும் பிற வசதிகளும் ஆகும்."[1]

பொருளாதாரத் தேவைகள் மட்டும் முன்னேற்றத்தைத் தந்து விடமுடியாது. ஏனெனில் பொருளாதார முன்னேற்றம் மனிதச் சக்திகள், சமுதாய நடவடிக்கைகள், அரசியல் நிலைகள் வரலாற்று விபத்துக்கள் போன்றவற்றைக் கொண்டும் அமைகின்றது. எனவே அரசியல், உளவியல், சமுதாய பண்பாட்டுத் தேவைகள் பொருளாதாரத் தேவைகளைப் போலவே முக்கியமானவை. பேராசிரியர் கெயின்கிராஸ் (Prof. Cairncross) குறிப்பிடுவது போல, "முன்னேற்றம் என்பது அதிக அளவுப் பணத்தைக் கொண்டிருக்கும் நிலையல்ல, அல்லது பொருளாதாரக் காரணிகளை மட்டும் கொண்டதல்ல. அது எல்லாவிதமான சமுதாய நடவடிக்கைகளோடும் இணைந்ததாகும்; சட்ட ஒழுங்கை நிலை நிறுத்துவதாகும்; திறமையான வியாபாரங்கள் நடத்துகின்ற நிலைகளைக் கொண்டதாகும். குடும்பத்திலுள்ள தொடர்புகள், கல்வியறிவு, தொழில் நுட்ப அறிவு ஆகியவைகளுக்கு ஏற்பவும் பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்"[2] முன்னேற்றத்திற்கான தேவைகளைப் பல வகைகளில் ஆராயலாம்.

[1]W.A. Lewis, The Theory of Economic Growth, p. 11

[2]A.K. Cairncross, Factors in Economic Development, p. 26

1. உள்நாட்டு அடிப்படை (Indigenous Base)

பொருளாதார முன்னேற்றத்திற்கு ஒரு முக்கிய தேவை உள்நாட்டு அடிப்படையாகும். நாட்டு மக்கள் பொருட்களின் உற்பத்தியில் உயர்வைப் பெற ஊக்கம் கொண்டிருத்தல் வேண்டும். முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்ற விருப்பம் அந்நாட்டில் அமைந்திருக்க வேண்டும்; அவ்விருப்பத்தைப் பிற நாடுகளின்றும் இறக்குமதி செய்ய முடியாது. வெளிநாட்டுச் சக்திகள் உள் நாட்டுச் சக்திகளையும், வசதிகளையும் ஊக்குவிக்க வேண்டும். உள் நாட்டுச் சக்திகளுக்கு அவை உதவ வேண்டுமே தவிர ஒடுக்கி விடக்கூடாது. அயல்நாட்டு உதவி முன்னேற்றத்தைத் தோற்று விக்கவும், ஊக்குவிக்கவும் உதவுமேயன்றி முன்னேற்றத்தை நிரந்தரமாக்க உதவாது. முன்னேற்றத்தின் முக்கியத்துவம் உள்நாட்டில் உணரப்பட்டாலன்றி வளர்ச்சியானது குறைந்த காலத்திற்கே நீடிக்கும். "மனித மனத்தில் முன்னேற்றம் ஏற்படாவிட்டால், பொருளாதார முன்னேற்றம் பெற முடியாத ஒன்று" என பேராசிரியர் கெயின்கிராஸ் (Prof. Cairncross) கூறுகிறார். அதிக அளவிற்கு அயல் நாட்டு உதவியை நம்பியிருப்பது தவறுடையது. வளர்ந்து வரும் நாட்டின் இயற்கை வளங்களை தங்களுடைய நன்மைக்காக அயல்நாட்டு முதலீட்டாளர்கள் பயன் படுத்துகின்றனர். இவ்வித அயல் நாட்டு உதவிகள் வளர்ச்சி யடையாத நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறக் கூடாதென்பதற்காக வளர்ச்சியடைந்த நாடுகள் கொடுக்கும் 'இலஞ்சங்கள்' என பேராசிரியர் பால் பாரன் (Prof. Paul Baran) [1] விளக்குகின்றார். பொருளாதார வளர்ச்சி நிரந்தரமாக நீண்ட காலத்திற்கு நிலைக்க வேண்டுமென்றால் முன்னேற்றச் சக்திகள் உள்நாட்டுப் பொருளாதாரத்தினின்றும் தோன்ற வேண்டும்.

2. சந்தைக் குறைபாடுகளை நீக்குதல் (Removing Market Imperfections)

முன்னேற்றத்திற்கான இரண்டாவது தேவை குறைபாடுள்ள சந்தைகளைக் களைவதாகும். குறைபாடுள்ள சந்தைகள் பொருளா தார முன்னேற்றம் பரவுவதைத் தடை செய்கின்றன. உற்பத்திக் காரணிகளையும் பெயர்ச்சியில்லாதவைகளாகச் செய்து விடுகின்றன. அவற்றை நீக்க சமுதாய, பொருளாதார அமைப்புக்களில் முன்னேற்றமேற்பட வேண்டும். முற்றுரிமை நிறுவனங்கள் ஒடுக்கப்பட வேண்டும். மூலதன, பண அங்காடிகள் விரிவுபடுத் தப்பட வேண்டும். எளிய கடன் வசதிகள் உழுபவர்களுக்கும், சிறு வணிகர்களுக்கும், வியாபாரிகளுக்கும் தரப்படுதல் நன்மைபயக்கும்.

[1]P.A. Baran, The Political Economy of Economic Growth, p. 14.

அவர்கள் சந்தை நிலவரங்களேயும், புதிய உற்பத்தி முறைகளேயும் பற்றி அறிய நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். அமைந்துள்ள வளங்களே மிக அதிக அளவு சிறப்பாகப் பயன்படுத்த முயல வேண்டும். பொருளாதாரத்தை முன்னேற்றமடையச் செய்ய சில அடிப்படை மாற்றங்கள் அவசியமானவைகளாகும்.

"பொருளாதார முன்னேற்றம் முக்கிய நோக்காக இருந்தால் 'முயற்சியையும்', 'மூலதனத்தையும்' மூன்று வகைகளில் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டும் :

(i) பண்டங்களின் உற்பத்தி அளவை உயர்த்த வேண்டும் ;

(ii) உற்பத்தியின் பிரதிநிதிகளாகிய மக்களின் உழைக்கும் தரத்தை உயர்த்த வேண்டும் ;

(iii) "உற்பத்திக்கலேகளில் முன்னேற்றத்தைப் பெற வேண்டும்" எனப் பேராசிரியர் ஷுவல்ட்ஸ் (Prof. Schultz) கூறுகின்ருர்.

அமைப்பு முறைகளில் சிலவித மாறுதல்களேச் செய்வது அவசியமாகிறது. அவற்றின் மூலம் உற்பத்தியின் அளவை உறுதியாக உயர்த்த முடியும்,

வேலே வாய்ப்புக்களின் அளவை உயர்த்துதல், உழைப்பின் உற்பத்தித்திறனே அதிகரிப்பது, மூலதனத்தின் அளவை உயர்த்துவது, புதிய இயற்கை வளங்களேக் கண்டு பிடித்துப் பயன் படுத்துவது, தொழில் நுட்ப முன்னேற்றங்களே அடைவது போன்றவைகளே அவ்வகை அமைப்பு மாற்றங்களாகும். இந் நிலேகள் அமைந்துள்ள சமுதாயங்களில்தான் பழைமை முறைகள் பரிசோதனே முறைகளுக்கு இடமளிக்கும். தொழில் நுட்பக் கண்டு பிடிப்புகளும் ஏற்றுக்கொள்ளப்படும். அச்சமுதாயத்தினர் முன்னேற வேண்டுமென்ற விருப்பத்தோடு வளர்கின்றனர். அவ்வித ஊக்கத்திஞல் உற்பத்தி உயர்வடைகின்றது. கண்டு பிடிப்போ அல்லது கண்டுபிடிப்பில் ஏற்படக் கூடிய முன்னேற்றங் களோ, நுகர்வோரின் புதிய விருப்பங்களோ அமைப்பு முறையில் மாறுதலே ஏற்படுத்தி உள்நாட்டு, வெளிநாட்டுச் சந்தைகளில் விரிவை ஏற்படுத்துபவைகளாகும். கல்வியறிவைப் பரப்புவதின் மூலமாக, சமுதாய-பொருளாதார அமைப்பு முறைகளே மாற்றி யமைக்கலாம். அறிவிற்கு விளக்கம் கொடுப்பது கல்வியாகும் ; கல்வியைப் பரப்புதல் மாற்றங்களுக்கு எதிராக இருக்கும் சமுதாய எதிர்ப்புகளே நீக்கி, சந்தைகளில் உள்ள குறை

பாடுகளையும் களைந்துவிடும். ஜெர்மனி, பிரான்ஸ் போன்ற நாடுகளில் பொருளாதார முன்னேற்றமேற்பட ஒரு காரணமாக தொழில் நுட்பக் கல்வியை விவசாயிகளிடையே பரப்பியது அமைந்தது.

மூலதனத்திரட்சி (Capital Formation)

பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக முக்கியத் தேவையாக இருப்பது மூலதனத்திரட்சியாகும். முன்னேற்றத்திற்குத் திறவு கோலாக இருப்பது மூலதனமே என்றும் சொல்லப்படுகின்றது. பெருகத் தலைப்பட்டால் மூலதனம் நிரந்தரமானதாகவும், தானே திரட்சியடையக் கூடியதாகும் மாறிவிடும். இது மூன்று தொடர் புடைய நிலைகளைக் கொண்டதாகும் :

(1) உண்மையான சேமிப்பின் அளவில் உயர்வு ஏற்படுவது 'சேமிக்கும் திறனைப்' (Power to Save) பொருத்தும், 'சேமிக்கும் விருப்பத்தைப்' (Will to Save) பொருத்தும் அமையும்.

(2) இருக்கக்கூடிய கடன், நிதி நிறுவனங்கள் மக்களின் சேமிப்பை முதலீடுகளுக்குப் பயன்படுத்தும் வகையில் செயலாற்ற வேண்டும்.

(3) சேமிப்புக்கள் நுகர்வுக்குப் பயன்படுத்தப்படாமல் முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படுதல் வேண்டும்.

மூலதனத்திரட்சி 'திறமைத் திரட்சியையும்' (Skill Formation) உள்ளடக்கியதாகும் ; திறமைத் திரட்சி மூலதனத்திரட்சியால் வளர்வதாகும்.

பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான பிற காரணிகள் இல்லாவிடில் மூலதனத்திரட்சி பயனற்றதாகிவிடும். பொருளாதார வளர்ச்சியென்பது தனி ஒருவருக்கான மூல தனத்தின் அளவை அதிகரிப்பது மட்டுமல்ல ; அது பொருளாதார அமைப்புகள், சமுதாய நடவடிக்கைகள் போன்றவைகளின் விளைவுமாகும். வளர்ச்சியடைந்த நாடுகளின் வரலாறு உணர்த்து வது யாதெனில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டி ருந்தபோதுதான் சமுதாய நடவடிக்கைகளில், பொருளாதார அமைப்புகளில் மாற்றங்கள் ஏற்பட்டன என்பதையாகும். முன் னேற்றத்திற்கு முன்பாக சமுதாய நோக்குகள், நடவடிக்கைகளில் எவ்வித முன்னேற்றங்களும், மாற்றங்களும் இந்நாடுகளில் ஏற்படவில்லை.

முன்னேற்றத்திற்குத் தேவையான முதல் தேவை மக்களின் முன்னேற வேண்டுமென்ற விருப்பாகும். அவர்கள் சேமிக்க வேண்டு மென்ற விருப்பத்தைக் கொண்டிருக்க வேண்டும் ; இலாப நோக் கோடு அவர்கள் கடின உழைப்பைத் தருதல் அவசியம். இவ்வாறு

மாற்றங்களைத் தொடங்கி ஏற்கும் சக்தி மக்களிடம் இருந்தால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம்.

வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதனத்திரட்சி வீதம் தேசிய வருவாயில் சுமார் 5 சதவீதமாக இருக்கின்றது ; இதை 12 முதல் 15 வீதத்திற்கு உயர்த்தினால் பொருளாதார வளர்ச்சி விரைவடையும். இவ்விதமான உயர்வீத மூலதனத்திரட்சியைப் பெறுவது கடினமென்று கூற முடியாது. மக்களிடம் சேமிக்க மனமிருந்தால் மூலதனத்திரட்சிக்கு வழியுண்டு. பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) குறிப்பிடுவதாவது, "எந்த ஒரு நாடும் தேசிய வருவாயில் 12 சதவீதம் சேமிக்க இயலாத ஏழை நாடல்ல. வறுமை நிலை, நாடுகள் போரில் ஈடுபடுவதைத் தடை செய்ததில்லை; அல்லது பிறவழிகளில் வீணான செலவுகள் செய்வதையும் தடுத்ததில்லை."[1]

பல வழிகளில் சேமிப்பை அதிகரிக்கலாம். வளர்ச்சியடையாத நாடுகளில் சேமிக்கும் விருப்பமானது குறைவானதாக இருப்பதால் மக்கள் தாங்களாகவே சேமிக்க முன்வரமாட்டார்கள். எனவே இந்நிலையில் கட்டாயச் சேமிப்பைப் (Forced Saving) பெறுவது நன்மை தரும். இது நுகர்வைக்கட்டுப்படுத்தும் நன்மையையும் கொண்டுள்ளது. நுகர்வுக்கட்டுப்பாட்டினால் பெருகும் வசதிகள் மூலதனத் திரட்சிக்கு உதவுகின்றன. கட்டாயச் சேமிப்பின் முறைகள் பற்றாக்குறை நிதியாக்கம் (Deficit Financing), வரி விதிப்புக் கொள்கைகள், கடன் பெறுதல் போன்றவைகளாகும்.

I. வரிவிதிப்பு : கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்தும் நல்ல ஒரு முறை இதுவாகும். புதிய வரிகளை விதித்தும், பழைய வரி விகிதங்களை உயர்த்தியும் தீவிரமாக அரசு அவற்றைச் செயல்படுத்தினால் நுகர்ச்சியின் அளவு குறைந்து விடும். வளர்வீத வரிமுறை, இலாபத் தொகைகளின் மீது வரி போன்றவைகளின் மூலம் ஆக்கமற்ற துறைகளில் சேமிப்பு செலவிடப்படுவது குறைக்கப்படுகின்றது. இம்முறை பணவீக்க நிலையையும் ஏற்படுத்தாது. வரி விதிப்பானது சேமித்து முதலீடு செய்யும் ஊக்கத்தைக் குறைக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கான வரிவிதிப்பு முறை கவனமாகப் பரிசீலிக்கப் படுதல் இன்றியமையாதது. வரிவிதிப்பின் முக்கிய நோக்கு என்னவென்றால், உற்பத்திக்கு உதவாத துறைகளில் பயன்படுத்தப்படும் சேமிப்பை அரசுபெற்று உற்பத்தித் துறைகளில் முதலீடாக்குவதாகும்.

II. பற்றாக்குறை நிதியாக்கம் : இம்முறை மூலதனத்திரட்சிக்கு உதவுகின்ற ஒன்றாகும். பணவருவாயைப் பெருக்கி, உண்மை

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, p. 236.

யான நுகர்வைக் குறைத்து சமுதாயச் சேமிப்பை உயர்த்து வது பற்றுக்குறை நிதியாக்கமாகும். ஆனால் இது பணவீக்க நிலையை ஏற்படுத்தும் தன்மையைக் கொண்டது. எனவே, இது குறைந்த அளவிற்குப் பயன்படுத்தப்படாவிட்டால், மிக அதிக விலை உயர்வுகள் ஏற்பட்டுவிடும். பணவீக்கம் பொருளா தாரத்தில் பல தீய விளைவுகளை ஏற்படுத்திவிடும். விலையுயர்வை சரியான காலத்தில் கட்டுப் படுத்தாவிட்டால் பொருளாதார வளர்ச்சி பல வகைகளிலும் தடைப்படும்.

III. கடன் பெறுதல் : மூலதனத்திரட்சியைப் பெறும் மற்றொரு முறை பொதுமக்களிடம் கடன் பெறுவதாகும். இக்கடன்களை மக்கள் தாங்களாகவும் தரலாம் ; அல்லது அரசு கட்டாயக்கடன் களையும் மக்களிடமிருந்து பெறலாம். வளர்ச்சியடையாத நாடு களில் முதல் முறையின் மூலம் கடன்களைப் பெறுவது கடினம் ; இரண்டாவது முறை மக்களின் குறைந்த சேமிக்கும் திறனால் வெற்றி தருவதில்லை. மூலதனத்திற்கு உயர்ந்த வட்டி வீதங்கள் கிடைக்காமையாலும், வளர்ச்சியடையாத பண அங்காடிகளாலும் தனி மனிதர்களுடைய சேமிப்பு குறைவாகவே உள்ளது.

கடன்களை அதிக அளவிற்குப் பெற சேமிப்பை ஊக்குவிக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படல் வேண்டும். இதற்கு வணிக வங்கிகள், சேமிப்பு வங்கிகள் தொடங்கப்படுதல் அவசியம் ; ஆயுள் காப்புறுதி நிறுவனங்களும் சேமிப்பிற்கு வகை செய்யும். எதிர்கால வைப்புநிதிச் (Provident Fund) சேமிப்புகளையும் கட்டாயமாக்குதல் வேண்டும். சமுதாய பாதுகாப்புத் திட்டங்கள் மூலமாகவும், பரிசுச்சீட்டுகள் நடத்துவதின் மூலமாகவும் சேமிக்கும் பழக்கத்தை மக்களிடம் ஏற்படுத்தலாம். மத்திய வங்கியால் வளர்ச்சியடைந்த மூலதன, பண அங்காடி ஏற்படுத்தப்பட வேண்டும். தேசிய உணர்வை வளர்ப்பதின் மூலமும், கல்வியைப் பரப்புதல், விளம்பரங்கள் செய்தல் ஆகியவற்றாலும் சிறு சேமிப் புக்களையும், அதிக அளவு சேமிப்புக்களையும் பெருக்கலாம்.

ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதியைத் தடைசெய்து, மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வதின் மூலமாகவும் மூலதனச் சேமிப்பைப் பெறலாம். ஆனால் சேமிப்புக்கள் உள் நாட்டில் உற்பத்தி செய்யப்படும் ஆடம்பரப் பொருட்களை வாங்கப் பயன்படுத்தப்படாவிட்டால்தான் இம்முறைகள் நன்மை பயக்கும்.

பேராசிரியர் நர்க்ஸின் (Prof. Nurkse) கருத்துப்படி, மக்கட் தொகை அதிகம் கொண்ட வளர்ச்சியடையாத நாடுகளில் அமைந் துள்ள 'மறைந்துள்ள வேலையின்மையில்' (Disguised Unemployment) சேமிக்கும் சக்தியானது அடங்கியுள்ளது. மறைந்துள்ள வேலையின்

மையில் இருக்கின்ற விவசாயிகள் மொத்த உற்பத்தியின் அளவு உயர உதவுவதில்லை. அவர்கள் இல்லாமலேயே அதே அளவு உற்பத்தியைப் பெற இயலும். உற்பத்திக்குக் குறைந்த அளவில் அவர்கள் உதவுகிறார்கள் ; அல்லது உதவுவதே இல்லையெனவும் கூறலாம். அவர்களுடைய இறுதிநிலை உற்பத்தித்திறன் (Marginal Productivity) மிகக் குறைந்த அளவில் இருக்கும் ; அல்லது அது பூஜ்யம் என்ற நிலையில் கூட அமைந்திருக்கலாம். அவ்வித உற்பத்திக்கு உதவாத உழைப்பாளர்களை நிலத்தினின்றும் நீக்கி வேறு பல சமுதாய மேலமைப்பு 'மூலதனத்திட்டங்களில் (உதாரணமாக சாலைகள், இருப்புப்பாதைப் போக்குவரத்து, வீடு கட்டுதல், நீர்ப்பாசனம் போன்றவை) பயன்படுத்தினால், அந்நிலை மூலதனத்திரட்சிக்கு உதவும். புதிதாகத் தொழில்களில் ஈடுபடுபவர்களுக்கு உற்பத்தியைச் சிறப்பாகச் செய்ய சிறிய கருவிகள் அளிக்கப்படலாம். அக்கருவிகளை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யலாம் ; அல்லது அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யலாம். அவர்களுக்கான உணவு நிலத்தில் ஈடுபட்டிருக்கும் அவர்களின் உறவினர்கள் மூலம் கிடைக்கின்றதெனக் கொள்ளப்படுகிறது. போக்குவரத்துச் செலவுகள் ஏற்படுவதில்லை. அதே அளவு நுகர்வானது தொடர்ந்து நீடிக்கும் எனவும் கருதப்படுகின்றது. இவ்விதத்தில் மறைந்துள்ள வேலையின்மையில் இருக்கக்கூடிய சேமிப்புத்திறனை மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்தலாம்.

ஆனால் இதில் பல விதமான சிக்கல்கள் உள்ளன. புதிதாக வேலையில் ஈடுபடுகின்ற உழைப்பாளர்கள், நிலத்தில் அமைகின்ற விவசாயிகள் என்ற இரு பிரிவினரின் 'நுகரும் விருப்பம்' (Propensity to Consume) பழைய நிலையிலேயே அமையும் என்று கூறமுடியாது. உணவு உபரியைத் திரட்டி பங்கீடு செய்வதிலும் இடையூறுகள் ஏற்படலாம். 'மறைந்துள்ள வேலையின்மையில்' உள்ள உழைப்பாளர்களுக்கு வேறு தொழில்களில் ஈடுபட பயிற்சியளிப்பதும் எளிதான செயல் அல்ல. அவர்களுக்கு ஊதியம் அளித்தலிலும் தடைகள் ஏற்பட வகையுண்டு.

உள்நாட்டு வசதிகளைத்தவிர வெளிநாட்டு உதவிகளையும் பெறலாம். மூலதனம் கடனாகவும், கொடையாகவும் இறக்குமதி செய்யப்படலாம் ; அல்லது ஏற்றுமதியைப் பெருக்கி அதன் மூலமும் வெளிநாட்டு மூலதனத்தைப் பெறலாம். ஆனால் இறக்குமதி செய்யப்பட்ட மூலதனப் பொருட்களைக் கையாள பயிற்சி பெறாத மக்களால் முடிவதில்லை. திறமைக்குறைவான மக்களால் மூலதனப் பொருட்களின் பயன்களை முற்றிலுமாகப் பெற இயலவில்லை. சமுதாயத்தின் பிற்போக்கான நிலை இதற்குக் காரணமாகும் ; தவிர மக்கள் பயிற்சி பெறாதவர்களாகவும், திறமை

குறைந்தவர்களாகவும், கல்வியறிவில்லாதவர்களாகவும் இருக்கின்றனர். ஆகவே, வளர்ச்சியடையாத நாடுகள் வளர்ச்சியடைந்த நாடுகளிடமிருந்து தங்கள் சமுதாய-பொருளாதார நிலைக்குச் சாத்தியமான தொழில் நுட்பத்தை மட்டுமே பெறுதல் அவசியமானதாகும்.

எந்தவித நிபந்தனையுமின்றி வளர்ச்சியடைந்த நாடுகளிடமிருந்து கடன்கள், மானியங்களைப் (Grants) பெறலாம். எல்லாவற்றையும் விட மிகச் சிறந்த வழி பிற நாடுகளுடன் இணைந்து கூட்டு முயற்சியில் ஈடுபடுவதாகும். இதன்மூலம் அயல்நாட்டு முதலீட்டாளர்கள் மூலதனத்தை அளிப்பதோடு, தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளையும் தங்களோடு கொண்டு வருகின்றனர். உள்நாட்டு உழைப்பாளர்களும் நாளடைவில் பயிற்சி பெற்று விடுகின்றனர்.

மூலதனத்திரட்சியே பொருளாதார முன்னேற்றத்திற்குத் திறவுகோலாக அமைகின்றது. மூலதனமும், மூலதனப் பொருட்களும் பல நிலைகளில் உழைப்பிற்கும், பிற ஆக்கக் காரணிகளுக்கும் பதிலியாக இருக்க முடியும். மூலதனத்திரட்சி ஆக்கத்தின் அளவை அதிகரிக்கின்றது ; அதன் மூலம் கிடைக்கின்ற உபரி, முதலீடுகள் செய்ய உதவி, திரும்பவும் அதிக ஆக்கத்திற்கு வழி செய்கின்றது. பிறகு மூலதனத்திரட்சி நிரந்தரமாகி தானே பெருகும் நிலையையும் அடைகிறது.

மூலதனத்திரட்சிக்குத் தடைகளாக உள்ளவை “வறிய நிலை, பணம் பண்டங்களைப் பதுக்கி வைத்தல், வீடுகள் கட்டுதல் போன்றவற்றில் முதலீடு செய்ய விரும்புதல், மூலதன வெளியேற்றம் (Capital Flight), பணவீக்க நிலை, குறிப்பிடத்தக்க நுகர்ச்சி (Conspicuous Consumption) வங்கி முறைகளில் வளர்ச்சியின்மை, மூலதன அங்காடியில் முன்னேற்றமின்மை”[1] ஆகியவை ஆகும். முதலீடுகளை மிக அதிக அளவு உற்பத்தியைத் தரக்கூடிய துறைகளில் பயன்படுத்த வேண்டும்.

பொருளாதார வளர்ச்சியின்மையே சேமிப்பு-வருவாய் வீதத்தைக் குறைத்து விடுகின்றது ; சேமிப்பு-வருவாய் வீதம் குறைவாக இருப்பதால் பொருளாதார வளர்ச்சி தடைப்படுகின்றது. பலவித முறைகளையும் பின்பற்றி வளர்ச்சியடையாத நாடுகள் மூலதனத்திரட்சியைப் பெற்று அதிக அளவு ஆக்கத்தைப் பெற முயல வேண்டும்.

1 P. Kindleberger, Economic Development. pp. 54-55.

4. முதலீட்டுத் திட்ட அளவை (Investment Criterion)

வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதனத்திரட்சியைப் போலவே முக்கியத்துவத்தைக் கொண்டது 'எவ்வகைகளில் முதலீடுகள் செய்யப்படுகின்றன' என்பது பற்றி ஆராய்வதாகும். முதலீட்டு வீதங்களையும், முதலீடுகள் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பதையும் அறிவது கடினமாகின்றது. சமுதாயத்திற்கு மிக அதிக நன்மை பயக்கக் கூடிய முதலீடுகளை மேற்கொள்வது அரசின் கடமையாகும். பல வகைப்பட்ட முதலீட்டுத் திட்ட அளவைகளையும் (Investment' Criteria) அறிவது அவசியமானதாகும்.

(i) சமுதாய இறுதிநிலை உற்பத்தி (Social Marginal Productivity)

முக்கிய முதலீட்டுக் கொள்கையில் ஒன்ருக சமூக இறுதி நிலை உற்பத்தி இருக்கின்றது. சமூக இறுதிநிலை உற்பத்தி உயர்வாக உள்ளவைகளில் முதலீடுகள் செய்யப்பட வேண்டுமென இது கூறுகின்றது. கேலன்சன் (Galenson), லெபன்ஸ்டீன் (Leibensteih), ஹோலிஸ் கெனரி (Hollis Chenery), கான் (Kahn) போன்ற பொருளியலாளர்கள் இது பற்றி விளக்கியுள்ளனர். இம் முதலீட்டுத் தத்துவத்திற்கு வழிகாட்டுபவைகளாகச் சில கொள்கைகள் அமைந்துள்ளன:

*(1)* முதலீடுகள் அதிக அளவு உற்பத்தியைத் தரும் துறைகளில் பயன்படுத்தப்பட வேண்டும். இதனுல் குறிப்பிட்ட அளவு மூலதனத்திற்குக் கிடைக்கும் உற்பத்தி உயர்வாக இருக்கும்.

*(2)* உழைப்பை அதிகத் தேவையாகக் கொண்ட திட்டங்களில் முதலீடுகள் செய்யப்பட வேண்டும். அதாவது, உழைப்பு-முதலீட்டு வீதம் உயர்ந்த அளவில் அமைய வேண்டும்.

*(3)* தெரிந்தெடுக்கப்படும் முதலீட்டுத் திட்டங்கள் உள்நாட்டில் மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டும்.

*(4)* உள்நாட்டுக் கச்சாப் பொருட்களைப் பயன்படுத்தும் முதலீட்டுத் திட்டங்களை மேற்கொள்ள வேண்டும்.

*(5)* உண்மை வருவாய்ப் பகிர்வில் உயர்வைக் கொடுக்கும் முதலீடுகள் மக்களுக்கு நன்மை பயக்கும்.

*(6)* ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்யும் துறைகளிலும், அந்நியச் செலாவணியைப் பெற்றுத் தரும் துறைகளிலும்

முதலீடுகள் செய்யப்படுதல் வேண்டும். அயல் நாட்டு வாணிபத்தில் சாதக நிலையை ஏற்படுத்துவதற்காகவும் மூலதனம் முதலீடாக்கப் படவேண்டும்.

இவ்விதமான கொள்கைகளைப் பின்பற்றுவது எளிதானதல்ல. பொருளாதார வளர்ச்சி என்பது சமுதாய, பொருளாதாரக் காரணிகளை மட்டும் சார்ந்ததல்ல. பழக்க வழக்கங்கள், விருப்பங்கள், தொழில் நுணுக்கம், மக்கட் தொகையின் அளவு, திறன் ஆகிய காரணிகளும் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிப் பவைகளாகும். முதலீட்டுக் கொள்கை இயக்கப் பொருளாதாரத் தின் எல்லா நிலைகளையும் கொண்டு ஆராயப்பட வேண்டும்.

சில வகை முதலீடுகளால் தேசிய வருவாய் உயரும் ; ஆனால் வருவாய்ப் பகிர்வில் அதிக ஏற்றத் தாழ்வுகள் அமைந்திருக்கும். சில திட்டங்களில் முதலீடு செய்யப்படும்போது தேசிய நுகர்வின் அளவும், தலா நுகர்வும் உடனடியாக உயரும் ; வேறு சில திட்டங் களில் இவை நீண்ட காலத்திலேயே உயரும். இவற்றை அள விடுவது கடினமான நிலையைக் கொண்டே அமையும்.

(ii) சமுதாய, பொருளாதார மேலமைப்புக்கள் (Social and Economic Overheads)

முதலீடுகள் செய்யப்படும்போது, தேர்ந்தெடுக்கப்படுகின்ற தொழில்கள் 'புறச்சிக்கனங்கள்' (External Economies) கொண்ட வைகளாக இருக்க வேண்டும். அலென் யெங் (Allyn Young), ரோசன்டீன் ரோடான் (Rosentein Rodan) போன்றவர்கள் புறச் சிக்கனங்கள் கொண்ட தொழில்களைத் தோற்றுவித்து அதன் மூலம் மற்ற தொழில்களின் வளர்ச்சியைப் பெற வேண்டும் என்கின் றனர். குறைந்த வருவாய், குறுகிய சந்தை, முதலீடு செய்ய ஊக்கமின்மை, குறைந்த உற்பத்தி போன்றவற்றை இவ்விதத் தொழில்களில் முதலீடு செய்வதின் மூலம் நீக்கி விடலாம். இதைப் பெற வேண்டுமென்றால், அளிப்பின் பக்கத்திலிருந்து, முதலீடு புறச் சிக்கனங்களை எரிபொருள், இயக்கச்சக்தி போன்றவற்றைப் பெருக்குவதன் மூலமும், கச்சாப் பொருட்கள், கடன், போக்கு வரத்து, பரிசோதனை ஆகியவற்றை அடைவதாலும் பெறலாம். தேவையின் பக்கத்திலிருந்து, மூலதனம் சமுதாய-பொருளாதார அவசியத் துறைகளாகிய கல்விக் கூடங்கள், சாலைகள், இருப்புப் பாதைப் போக்குவரத்து, அணைகள், கட்டடங்கள், மருத்துவ மனைகள் முதலியவற்றில் முதலீடாக்கப்பட வேண்டும். இவ்வகை முதலீடுகள் உற்பத்திச் செலவைக் குறைக்க உதவும் ; உற்பத்தியில் உயர்வைத் தரும் ; சந்தையை விரிவு படுத்தும் ; புதிய தொழில் களைத் தோற்றுவிக்க ஊக்கமளிக்கும்.

இறக்குமதிகளைக் குறைக்கும் தொழில்களிலும், ஏற்றுமதிகளைப் பெருக்கும் தொழில்களிலும் முதலீடு செய்தல் வேண்டும். பொருளாதாரத்தின் முன்னேற்றமடைந்துவரும் 'வளரும் புள்ளிகளில்' (Growing Points) முதலீடு செய்யப்படுவது நோக்கமாக இருத்தல் நன்மை தரும். வளரும் புள்ளிகளின் முன்னேற்றம் பிற துறைகளையும் வளரச் செய்துவிடும். 'சமநிலையில்லாத' (Unbalanced) பொருளாதார வளர்ச்சி இறுதியில் 'சமநிலை' (Balanced) வளர்ச்சியைத் தந்துவிடும்.

(iii) சரிசம வளர்ச்சி (Balanced Growth)

பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளும் தொடர்பு கொண்டுள்ளமையால், குறிப்பிட்ட சில துறைகளின் வளர்ச்சி மட்டும் போதுமானதாகாது. முதலீடுகள் சமநிலை வளர்ச்சிக் கொள்கையின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும். சமநிலை வளர்ச்சிக் கோட்பாடு எல்லாத் துறைகளிலும் ஒரே சமயத்தில் வளர்ச்சி இருக்க வேண்டுமெனக் கூறுகின்றது. பொருளாதாரத்தின் பல துறைகளும் இணக்கமான முறையில் வளர வேண்டும். ஒரு துறை மற்ற துறைகளைக் காட்டிலும் மிகக் குறைந்த வளர்ச்சியைக் கொண்டதாகவோ அல்லது அதிக விரைந்த வளர்ச்சியைக் கொண்டதாகவோ இருக்கக் கூடாது. பல துறைகளும் நெருங்கிய தொடர்புள்ளவைகளாக உள்ளதால் மூலதனம் பரவலாக எல்லாத் துறைகளிலும் முதலீடு செய்யப்பட வேண்டும். அப்போதுதான் எல்லாத் துறைகளும் ஒருங்கே வளர்ச்சியைப் பெற முடியும். பல தொழில்களிலும் முதலீடு செய்யப்பட்டால், சந்தைப் பெருக்கமும் வளர்ச்சியும் ஏற்படும். ஏனெனில், ஒரு சில தொழில்களின் உற்பத்திக்குப் பிற தொழில்களின் பொருட்கள் தேவைப் படுகின்றன.

சமநிலை வளர்ச்சி பலவகைப்பட்ட நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு இடையே சமநிலையை ஏற்படுத்த வேண்டும். சமநிலை நுகர்வுப் பொருட்களின் தொழில்களுக்கு இடையேயும் ஏற்பட வேண்டும். வேளாண்மை, தொழில் இரண்டிற்கும் இடையே சமநிலை வளர்ச்சி ஏற்பட வேண்டும். தொழில் உற்பத்தியைப் பெருக்க வேளாண்மை உற்பத்தியையும் பெருக்குவது அவசியமானது. இரண்டும் ஒன்றோடொன்று நெருங்கியத் தொடர்பு கொண்டவை. தொழில் துறையில் வேலை வாய்ப்புக்களும், உற்பத்தியும் உயர்ந்தால் அவை உணவுப் பொருட்கள், கச்சாப் பொருட்களின் தேவையைப் பெருக்கிவிடும். வேளாண்மைத் துறை இவற்றின் அளிப்பைப் பெருக்க முடியாவிட்டால் பணவீக்க நிலை ஏற்படும். சமுதாய, பொருளாதார

அவசியச் செலவுகளுக்கிடையேயும், நேரடியாக உற்பத்திக்கு உதவுகின்ற முதலீடுகளுக்கிடையேயும் சமநிலை வளர்ச்சி தேவை. இவற்றில் இடப் படுகின்ற மூலதனம் வேளாண்மை, தொழில் துறை வளர்ச்சிக்கு ஊக்கமளிப்பதாக இருக்க வேண்டும்.

உள்நாட்டுத் துறைக்கும் அயல்நாட்டுத் துறைக்கும் இடையே வளர்ச்சியில் சமன்பாடு வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெருமளவு மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வது அவசியமானது. பாதக வாணிபச் செலுத்து நிலையைத் தவிர்க்க இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாக இருக்க வேண்டும். உள்நாட்டு நுகர்வுக்கான உற்பத்திக்கும், ஏற்றுமதிக்கான உற்பத்திக்கும் இடையே சமநிலை இருக்க வேண்டும். உள்நாட்டுத் துறைகளும் சமமாக வளர்ச்சி நிலை பெற வேண்டும்.

(iv) முன்னேற்ற முறைகளைத் தெரிந்தெடுத்தல் (Choice of Techniques)

சரியான உற்பத்தித் தொழில் நுணுக்கங்களும் முதலீட்டு முறைகளில் செல்வாக்கைக் கொண்டுள்ளன. சமுதாய, பொருளாதார நோக்குகளுக்கு ஏற்ப மூலதனம்-செறிந்த (Capital-intensive) உற்பத்தி நுணுக்கங்களைப் பின்பற்ற வேண்டுமா, உழைப்புச் செறிந்த உற்பத்தி நுணுக்கங்களைப் பின்பற்ற வேண்டுமா என்பவை ஆராயப்பட வேண்டும். ஒவ்வொரு திட்டமும் வருமானப் பங்கீட்டில் ஏற்படுத்தும் விளைவுகள், தலாவருமான உயர்வு, சந்தைத் தேவை, தொழிற் சிக்கனங்கள், வாணிப நிலைகள் போன்றவற்றைக் கொண்டு எவ்வித முக்கியத்துவம் வாய்ந்தது என்பது நிர்ணயிக்கப்படுகிறது.

மக்கட்தொகை மிகுந்த வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதனப் பற்றுக்குறை இருப்பதாலும், மறைந்துள்ள வேலையின்மை (Disguised Unemployment) உள்ளதாலும் உழைப்புச் செறிந்த (Labour-intensive) தொழில் நுட்பங்கள் பின்பற்றப் படுதல் வேண்டும். குறைந்த மக்கட் தொகையைக் கொண்டுள்ள நாடுகளில் மூலதனம்-செறிந்த தொழில் நுட்பங்கள் பயன் படுத்தப்பட வேண்டும். நாட்டைக் காக்க உதவும் பாதுகாப்புத் தொழிலிலும், பிற அடிப்படைத் தொழில்களிலும் மூலதனச் செறிவுள்ள உற்பத்தித் தொழில் நுணுக்கங்கள் பின்பற்றப் படலாம். ஏற்றுமதியைப் பெருக்கி அந்நியச் செலாவணியை அதிகமாகப் பெறவும், அத்துறையில் மூலதனச் செறிவு முறை உற்பத்தி அவசியமானதாகும். பல நோக்குக் கால்வாய், பள்ளத் தாக்குத் திட்டங்களில் உழைப்புச் செறிந்த தொழில் நுணுக்கங்களை அதிக அளவு பின்பற்றலாம். மண் எடுப்பதிலும்,

கால்வாய்கள் வெட்டுவதிலும், அணைகள் கட்டுவதிலும் மூலதனத்தைவிட உழைப்பை அதிகம் பயன்படுத்தலாம். ஆனால், மின்சக்தித் திட்டத்திற்கு உழைப்பைவிட மூலதனச் செறிவுள்ள தொழில் நுணுக்கங்களே இன்றியமையாதவைகளாகின்றன.

திட்டமிடுபவர்கள் முன்னேற்றத் தோற்றங்களுக்கு ஏற்ப உற்பத்தித் தொழில் நுணுக்கங்களைப் புகுத்த வேண்டும்.

(v) மூலதன-உற்பத்தி விகிதம் (Capital-Output Ratio)

மூலதன உற்பத்தி விகிதத்தைப் பல பொருளியலறிஞர்களும் முதலீட்டுத் தத்துவமாக ஏற்றுக் கொண்டுள்ளனர். முதலீட்டுத் திட்டங்களை முக்கியத்துவத்திற்கேற்ப தேர்ந்தெடுக்கும் போது, பல திட்டங்களின் மூலதன-உற்பத்தி வீதங்களை ஒப்பிட்டு நோக்கலாம். குறைந்த மூலதன உற்பத்தி வீதங்களைக் கொண்ட திட்டங்களில் முதலீடுகள் செய்யப்படுதல் அவசியம் .உதாரணமாக, முதலீட்டுத்திட்டம் 'A' என்பதில் மூலதன-உற்பத்தி வீதம் 2:1 என்ற நிலையிலும், 'B' என்னும் திட்டத்தில் 6:1 என்ற நிலையிலும் மூலதன-உற்பத்தி வீதம் அமைந்திருந்தால் 'B' என்ற திட்டத்தைக் காட்டிலும் 'A' என்ற திட்டத்திற்கு முதலீட்டில் முக்கியத்துவம் அளிக்க வேண்டும். ஏனெனில் 'A' என்ற திட்டத்தில் குறைவான மூலதன-உற்பத்தி வீதம் அமைந்துள்ளது. மூலதன-உற்பத்தி வீதம் குறைவாக இருந்தால் பொருளாதாரத்தின் வளர்ச்சி வீதம் உயர்வாக இருக்கும்.

இந்த முதலீட்டுக் கொள்கையில், முதலீட்டுத் திட்டங்கள் ஒன்றிற்கொன்று பதிலிகளாக இருக்கின்றன என்று கொள்ளப் படுகின்றது. ஆனால் உண்மையில் எந்த இரண்டு திட்டங்களும் ஒன்றிற்கு மற்றொன்று பதிலியாக அமைவதில்லை. வேளாண்மைத் திட்டங்களும், தொழிற் திட்டங்களும் தொடர்புடையனவேயன்றி அவற்றைப் பதிலிகளாகக் கூற முடியாது.

முதலீட்டுத் திட்டங்களைத் தெரிந்தெடுக்கும் போது வருவாய் உயர்வை ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒப்பிட்டு நோக்க வேண்டும்; மூலதன-உற்பத்தி வீதங்கள் அந்நிலையில் பயனளிக்காதவைகளாகும்.

இதைத்தவிர முக்கியமாகக் கருதத்தக்க உழைப்பு-முதலீட்டு வீதம், முதலீட்டின் விளைவால் ஏற்படும் வருவாய்ப் பங்கீடு போன்றவை வளர்ச்சியடையாத நாடுகளில் அமைந்துள்ளன.

வளர்ச்சியடையாத ஒருநாடு எந்த அளவு மூலதனத்தையும், எந்த வீதத்திலும் முதலீடு செய்யலாம் என்பது முடியாததாகும். 'மூலதனத்தை ஏற்கும் திறன்' (Capacity to Absorb

Capital) குறைவாக இருப்பதாலும் 'முதலீட்டுத்திறன்' (Investment Potential) குறைவாக இருப்பதாலும் இந்நிலை அமைந்துள்ளது. மூலதனத்தை ஏற்கும் திறன் குறைவாக இருக்கின்றமைக்குக் காரணம் பெயர்ச்சியில்லாத உழைப்பு, திறமை, தொழில் நுட்பம் ஆகியவை ஆகும்.

பணவீக்க நிலையைத் தவிர்க்கும், அயல் நாட்டு வாணிபத்தில் பாதக வாணிபச் செலுத்து நிலையை நீக்கும் வழிகளில் முதலீடுகள் செய்யப்பட வேண்டும். பெரும்பகுதி முதலீடுகள் 'பற்றுக்குறை நிதியாக்கத்தின்' மூலம் செய்யப்படுவதால், வளர்ச்சியடையாத நாடுகளில் பணவீக்க நிலை எளிதில் ஏற்படுகின்றது. குறைபாடுகள் உள்ள சந்தைகள் இருப்பதால் பணக்கொள்கைகள் மூலமாகவும், வரிக்கொள்கைகள் மூலமாகவும் பணவீக்கத்தைக் கட்டுப் படுத்துவது கடினமாகிறது. அப்பொருளாதாரங்களில் திறமை குறைந்த, ஆனால் அதிகச் செலவு பிடிக்கும் நிர்வாக அமைப்பு, குறைந்த உற்பத்தித்திறன் ஆகியவைகளும் அமைந்துள்ளன. கல்வி, சுகாதாரம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு போன்ற அவசியத்துறைகளில் முதலீடுகள் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் செய்யப்படுவதால் விலைகள் உயர்வதோடு, திட்டச் செலவுகளும் அதிகரிக்கின்றன. எனவே முதலீடுகளினால் விளையக் கூடிய பணவீக்க நிலையும் கருதப்பட வேண்டும்.

முன்னேற்றமென்பது இறக்குமதி பெருகுகின்ற நிலையால் அந்நியச் செலாவணியையும் அதிகத் தேவையாகக் கொண்டுள்ளது. முதலீட்டு வீதங்கள் ஏற்றுமதி, இறக்குமதித் திறன்களோடு தொடர்பு கொண்டுள்ளன. மூலதனப் பொருட்களையும், உற்பத்திக்குத் தேவையான கச்சாப் பொருட்களையும் மட்டுமே இறக்குமதி செய்ய அனுமதிக்க வேண்டும்; ஆடம்பரப் பொருட்கள், உற்பத்திக்கு உதவாத பொருட்களின் இறக்குமதியைத் தடை செய்ய வேண்டும். இது எப்போது சாத்தியமாகும் என்றால், முதலீடுகள் ஏற்றுமதித் துறைகளின் முன்னேற்றத்திற்குப் பயன் படுத்தப்படும்போது ஆகும்.

ஏற்றுமதி இறக்குமதியைவிட அதிகரித்து அதிக அந்நியச் செலாவணி கிடைத்தால், அதைக் குறைத்து உள்நாட்டின் மற்ற துறைகளில் முன்னேற்றத்தைப் பெற முயற்சிக்கலாம். பொருளாதாரத்தின் ஏற்றுமதி இறக்குமதித் திறன்களுக்கு ஏற்ப முதலீடு செய்யப்பட வேண்டும்.

முதலீடுகளை எந்த ஒரு தனிக் கொள்கையாலும் சரிவரச் செய்ய முடியாது. பலவித முதலீட்டுத் தத்துவங்களை கருத்திற் கொண்டு முதலீடுகள் செய்வதே நன்மையைத் தரும்.

**5. சமுதாய-பண்பாட்டுத் தேவைகள்** (Socio-cultural Requirements)

வளர்ச்சியடையாத நாடுகளில் சமுதாய-பண்பாட்டு நடவடிக்கைகளில் மாற்றங்கள் தேவை. பொருளாதார வளர்ச்சியில் சமுதாயத் தடைகள் இருந்தால் அவை நீக்கப்படுதல் அவசியமாகும். சமுதாய அமைப்புக்களாகிய கூட்டுக் குடும்ப முறை, சாதி முறை, மதக்கொள்கை போன்றவற்றில் புதுமைகளைப்புகுத்தி அவற்றைப் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுமாறு செய்ய வேண்டும். சமுதாய, பண்பாட்டு மாற்றங்களுக்கு மக்களின் எதிர்ப்பு இருப்பதோடு மாற்றங்களை வெறுக்கும் நிலையும் அவர்களிடம் இருக்கின்றது.

"பொருளாதார நலமென்பது (Economic Welfare) சமூக நலமென்பதில் (Social Welfare) ஒரு பிரிவாகும். சமூக நலமே முக்கியமானதாகக் கருதப் படவேண்டும். தேசிய-வருவாயின் உயர்வு சமூக நலனைத் தந்துவிடுமெனக் கூறமுடியாது"[1] என மேயர் (Meier), பால்டுவின் (Baldwin) இருவரும் விளக்குகின்றனர். சமுதாய, பண்பாட்டு முறைகளைத் தெரிந்தெடுத்து மாற்றங்கள் செய்ய வேண்டும். மாற்றங்களைப் படிப்படியாக தோற்றுவிக்க வேண்டும். மாற்றங்களை அறிவுறுத்துதல் முடியுமே தவிர கட்டாயப்படுத்துதல் முடியாததாகும். கல்வியின் மூலமும், மாற்றங்களின் நன்மைகளை நிரூபித்துக் காட்டுவதின் மூலமும் பல நன்மைகளைப் பெறலாம்.

கல்வியறிவைப் பரப்புவதின் மூலமே புதிய முறைகளையும் புதிய உற்பத்தி நுணுக்கங்களையும் மக்களைப் பின்பற்றச் செய்ய முடியும். சிந்திக்கும் ஆற்றலைக் கொடுப்பது கல்வியேயாகும்.

"தொழில் முன்னேற்றம் நாகரிக முன்னேற்றத்திற்கு உதவும். கல்வி வளர்ச்சி ஏற்படாத எந்த ஒரு நாட்டையும் வளர்ச்சியடைந்த நாடு என்று சொல்ல முடியாது. பராமரிப்புப் பண்ணை முறையினின்றும் பணப் பொருளாதாரத்திற்குள் விவசாயிகள் கொண்டு வரப்பட வேண்டும். தொழிற்சாலைகளில் உழைப்பாளர்கள் குறிப்பிட்ட மணி நேரங்கள் ஊதியத்திற்குப் பணியாற்றவேண்டும்; நகரங்கள் வளர வேண்டும் ; வங்கிகளும், வியாபாரத் துறைகளும் பெருகவேண்டும்; பொருளாதாரத்தின் எல்லாப் பிரிவுகளிலும் அறிவியல் முன்னேற்றங்கள் பயன்படுத்தப்பட வேண்டும்." என பேராசிரியர் கெயின்கிராஸ் (Prof. Cairncross) விளக்குகின்றார்.[2]

1 Meier and Baldwin, Economic Development, p. 356.

2 A. K. Cairncross, Factors in Economic Development.

6. நிர்வாகத் தேவைகள் (Administrative Requirements)

தரமான, திறமையுள்ள, நேர்மையான நிர்வாகம் பொருளா தார முன்னேற்றத்திற்கு நிறைவேற்றப்பட வேண்டிய நிபந்தனை யாகின்றது. அரசு உறுதியானதாக இருக்க வேண்டும்; உள்நாட்டு சட்ட ஒழுங்கு நிலைநிறுத்தப்பட வேண்டும். அரசு அயல் நாட்டுத் தாக்குதல்களைச் சமாளிப்பதாகவும் இருத்தல் அவசியம். உறுதியான அரசு அமையாவிட்டால், அரசியற் கொள்கைகளில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்படும். பொருளாதாரத் திட்டங்களைச் செம்மை யாகச் செயல்படுத்த முடியாது. இதனால் முன்னேற்றம் பாதிக்கப் படும்.

திறமையான நிர்வாக அமைப்பு இல்லாவிட்டால் முன்னேற்றத் திட்டங்களைப் பொதுத் துறையிலும் தனியார் துறை யிலும் சிறப்பாகச் செயல்படுத்த முடியாது. முன்னேற்றத்திற்கு முயற்சியும், தியாகமும் தேவைகளாகின்றன. வளர்ச்சியைத் தூண்டும் பல வசதிகளையும் அரசு ஏற்படுத்தித் தர வேண்டும். சட்டம், ஒழுங்கு, நீதி, பாதுகாப்பு போன்றவை அரசால் காக்கப் படுதல் வேண்டும். உழைப்பிற்கேற்ப ஊதியம் பெற வழிமுறைகள் வேண்டும். அரசிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உள்ளது. அரசே முன்னேற்றத் திட்டங் களைத் தீட்டிச் செயல் படுத்துவதால், அரசின் முயற்சியின்றி எந்த ஒரு வளர்ச்சியடையாத நாடும் முன்னேற முடியாது.

இந்திய அரசு உறுதியானதாகவே திகழ்கின்றது. அது பல வகைத் திட்டங்களையும் சிறப்பாகத் தயாரித்துச் செம்மையாகவே செயல்படுத்துகின்றது. நம் நாட்டில் நாம் 'சமதர்ம' (Socialism) முறையைப் பின்பற்றி வளர்ச்சியைப் பெற விழைகின்றோம். வளர்ச்சியடைந்த நாடுகளுக்குப் பல நன்மைகளையும் கொடுக்கும் முதலாளித்துவம்' (Capitalism), இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாடுகளுக்கு நன்மைகளைத் தருவது குறைந்த அளவேயாகும். மிகத் தீவிரமான கொள்கைகளைக் கொண்ட 'பொதுவுடைமைக்கு' (Communism) பின்தங்கிய நாடுகளில் இயல்பாகவே எதிர்ப்பு தோன்றுமாதலாலும், பொருளாதார முன்னேற்றத்தைப் பெறச் சிறந்த அமைப்பு சமதர்மமேயாகும். மேலும், நம் நாட்டில் 'கலப்புப் பொருளாதார' (Mixed Economy) முறையைப் பின்பற்றி அதன்மூலம் விளைந்த தனியார், பொதுத் துறைகளின் முன்னேற்ற நிலையால் சிறப்பான வளர்ச்சியையே நாம் அடைந்து வருகிறோம்.

# 7. சரிசம வளர்ச்சிக் கோட்பாடும் சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாடும்

## (Doctrine of Balanced Growth and Doctrine of Unbalanced Growth)

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும் கருவியாக உள்ளது மூலதனத்திரட்சியாகும். பின்தங்கிய வளர்ச்சியடையாத நாடுகள் மூலதனப் பற்றுக்குறையுள்ளவைகளாக இருக்கின்றன. பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) கருத்துப்படி, ஒரு நாட்டின் பொருளாதாரம் வளராமல் பின்தங்கிய நிலையில் உள்ளமைக்கு மூலதனக் குறைவே அடிப்படைக் காரணமாகும். வளர்ச்சியடையாத நாடுகளின் 'வறுமை வட்டத்திற்கும்' (Vicious Circle of Poverty), குறைவான மூலதனத்திரட்சிக்கும் உள்ள தொடர்பை பேராசிரியர் நர்க்ஸ் விளக்குகின்றார். உற்பத்திப் பொருட்களுக்குத் தேவை குறைவாக உள்ளமையும் 'வறுமை வட்டம்' தோன்ற ஒரு காரணமாகிறது என அவர் கருதுகின்றார். குறைந்த அளவு சேமிப்போடு, குறைந்த அளவுத் தேவையும் மூலதனப் பற்றுக் குறையை ஏற்படுத்துகின்றது. நர்க்ஸின் கருத்துப்படி, தேவையின் பக்கத்தில் வறுமை வட்டமானது பின் தங்கிய நாட்டு மக்களின் குறைவான வாங்கும் திறனில் தொடங்குகின்றது. பெரும்பாலான மக்களின் குறைவான வாங்கும் திறனுக்குக் குறைவான உண்மை வருவாயே காரணமாகும். போதுமான அளவிற்கு மக்களிடையே வாங்கும் திறன் இல்லாத நிலை குறைந்த அளவு தேவையை மட்டுமே தோற்றுவிக்கின்றது. உற்பத்திப் பொருட்களுக்குக் குறைந்த தேவை மட்டுமே இருப்பதால், தொழில் முயல்வோர் முதலீடுகளைச் செய்ய அதிக ஊக்கம் பெறுவதில்லை. உறுதியற்ற சந்தை நிலைகளில் எவ்வித இடர்களையும் ஏற்க அவர்கள் முன் வருவதில்லை. எனவே, பின்தங்கிய பொருளாதாரங்களில் (தேவையின் பக்கத்தில்) மூலதனப் பற்றுக் குறை ஏற்படுகின்றமைக்கு, முதலீடு செய்வதற்கான ஊக்கம் குறைவாக உள்ள நிலையே முக்கியக் காரணமாகும்.

**சந்தையின் அளவும், முதலீடு செய்வதற்கான ஊக்கமும்**

பேராசிரியர் நர்க்ஸ் அறிவுறுத்துவதுபடி, "சந்தையின் அளவு முதலீடு செய்வதற்கான ஊக்கத்திஞல் கட்டுப்படுத்தப்படு கின்றது." பொருளாதார முன்னேற்றத்தில் சந்தையின் அளவு எதைக் குறிக்கின்றதென்ருல், உற்பத்தி செய்கின்ற பொருட்களை மக்கள் வாங்கிப் பயன்படுத்தும் நிலையை ஆகும். வேறு வார்த்தைகளில் கூறிஞல், சந்தையின் அளவு ஒரு நாட்டு மக்களின் வாங்கி நுகரும் திறனைக் கொண்டு அமையும். ஒரு நாடு மக்கட் தொகை மிக்கதாக இருக்கலாம்; ஆனல் அந்நாட்டு மக்களின் வாங்கும் திறன் குறைவாக இருந்தால் சந்தையின் அளவு சிறிய தாகவே இருக்கும். மக்கட்தொகை மிகுதியாக உள்ள இந்தியா போன்ற நாடுகளில் மக்களில் பெரும்பாலோர் குறைவான வாங்கும் திறனைக் கொண்டிருப்பதால் விரிவான சந்தை அமைவ தில்லை.

பரந்த சந்தையானது உற்பத்தியை உயர்த்த வேண்டுமென்ற ஊக்கத்தைத் தொழில் முயல்வோருக்கு அளிக்கின்றது. தனித் தொழில்கள் வளர விரிவடைந்த சந்தைகள் தேவைப்படுகின்றன. தேவைப் பெருக்கம் ஏற்படும்போதுதான், தனியார் துறையில் அமைந்திருக்கும் தொழில் முயல்வோர் உற்பத்திக்கான முதலீட்டை அதிக அளவில் செய்கின்றனர். எனவே, சந்தையின் அளவு பொருளாதார முன்னேற்ற வீதத்தை நிர்ணயிக்கின்றது. உற்பத்தி நடவடிக்கைகளுக்கு அடிப்படையாக அமைவது சந்தை யின் அளவேயாகும்.

இவ்வாறு சந்தையின் அளவிற்கும் பொருளாதார வளர்ச்சிக் கும் உள்ள தொடர்பை மிகப் பழங்காலத்திலேயே 'தொன்மைப் பொருளியலாளர்கள்' (Classical Economists) அறிந்திருந்தார்கள். ஆடம் ஸ்மித் 'நாடுகளின் செல்வம்' (Wealth of Nations) என்ற தன்னுடைய நூலில் தொழில் முன்னேற்றத்திற்கு 'வேலைப்பகுப்பு முறை' உதவுவதாகக் குறிப்பிடுகின்ருர். ஆனல் சந்தையின் அளவால் வேலைப் பகுப்புமுறை கட்டுப்படுத்தப் படுகின்றது. விரிவான சந்தை அமைந்திருக்கும்போது தொழிலில் சிறப்புத் தேர்ச்சி ஏற்படுகிறது. வேலைப் பகுப்பு முறை பயன்படுத்தப்பட்டு, உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன் உயர்வடைகின்றது. அலென் யெங் (Allyn Young) என்பவரும் ஆடம் ஸ்மித்தின் கருத்தை ஆதரித்துள்ளார். ஒரு நாட்டின் தொழில் முன்னேற்றத்திற்குச் சந்தையின் பரந்த நிலையே காரணமாகும் என அவர் குறிப்பிடு கின்ருர். விரிவான சந்தை அமையும்போது பல வகைப்பட்ட தொழில்களும் விரைந்து வளர்கின்றன. எடுத்துக்காட்டாக,

கிரேட் பிரிட்டனை விட அமெரிக்காவில் தொழில் அமைப்பு சிறப்பாக உள்ளமைக்குத் தொழில் தலைமையும், மேன்மையான தொழில் நுட்ப உற்பத்தி முறைகளும் மட்டும் காரணமல்ல. அமெரிக்கர்கள் அதிகச் சுங்க வரிகளை இறக்குமதிப் பொருட்களின் மீது விதித்து, உள்நாட்டுப் பொருட்களுக்கான சந்தையை வளர்த்துக்கொண்டுள்ளார்கள். அமெரிக்காவில் உற்பத்தி செய்த பொருட்களுக்கு அயல் நாட்டுச் சந்தையும் விரிவாக அமைந்துள்ளது.

சிறிய உள்நாட்டுச் சந்தை பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கின்றது. விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற விரிவான சந்தை பெரிதும் உதவுகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் விரிவடையாத சந்தையால் மூலதனத்தை முதலீடாக்கும் ஊக்கம் மக்களிடையே இருப்பதில்லை எனப் பேராசிரியர் நர்க்ஸ் குறிப்பிடுகின்றார். வளர்ச்சியடையாத சந்தையால் தொழில் உற்பத்தியாளர் இலாபத்தைப் பெறும் வகையில் மூலதனத்தைப் பயன்படுத்த முடியாது. இலாபத்தின் அளவு குறைந்தாலும் முதலீட்டு வீதம் பாதிக்கப்படுகின்றது. உதாரணமாக, ஒரு நாட்டில் பெரும்பகுதி மக்கள் மிகவும் வறிய நிலையில் உள்ளதால் காலணிகளைப் பயன்படுத்த முடியாதவர்களாக இருக்கின்றனர் என வைத்துக் கொண்டால், அந் நாட்டில் அதிக முதலீட்டைக் கொண்ட தொழில் நுணுக்கம் மிக்கக் காலணித் தொழிற்சாலையை ஏற்படுத்துவது வெற்றியைத் தராது. ஏனெனில் உற்பத்தி செய்த காலணிகளை வாங்குபவர்கள் அங்கு அதிகமாக அமைந்திருக்க மாட்டார்கள். காலணிகளுக்கான சந்தை அந்நாட்டில் விரிவடையாத நிலையிலேயே இருக்கும். பெருமளவிற்குத் தேவையைக் கொண்ட பொருட்களைப் பேரளவு உற்பத்தியாகச் செய்யலாம். விரிவான சந்தையைக் கொண்ட பொருட்களை பெரிய இயந்திரங்களின் மூலமும் உற்பத்தி செய்யலாம். ஆனால் குறைவான சந்தையைக் கொண்டுள்ள பொருட்களைப் பேரளவு உற்பத்தி முறையில் உற்பத்தி செய்யக்கூடாது. பொருட்களின் தேவைக் குறைவாக இருக்கும்போது, முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளில் முதலீடு செய்ய ஊக்கம் ஏற்படுவதில்லை.

ஒரு நாட்டின் வளர்ச்சியடையாத சந்தை பொருளாதார முன்னேற்றத்தைக் கட்டுப்படுத்துகின்றது. உற்பத்தி செய்யப்படுகின்ற பொருட்களின் தேவை அதிகமாக இருந்தால்தான் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும் என்பது பேராசிரியர் நர்க்ஸின் கருத்தாகும். தொழில் நிறுவனங்களை ஏற்படுத்தப் பொருளாதார ரீதியில் ஊக்கம் அமைந்திருக்க வேண்டும்.

ஒரு உற்பத்தியாளர் பொருளின் தேவைக்கு ஏற்ப ஆக்கப்பணிகளை மேற் கொள்கின்றார். குறைந்த வருவாயைப் பெறுகின்ற ஒரு நாட்டில் சந்தையின் அளவு குறைவாகவே இருக்கின்றது. எனவே, உற்பத்தி நிறுவனங்களால் மூலதனத்தைச் சிறப்பாகப் பயன் படுத்த முடியவில்லை. உற்பத்தியின் அளவு சந்தையின் அள வால் கட்டுப்படுத்தப் படுகின்றது. இதன் காரணமாக, வளர்ச்சி யடையாத உள்நாட்டுச் சந்தை பொருளாதார முன்னேற்றத் திற்குத் தடையாக உள்ளது.

சந்தையின் அளவு எக்காரணியால் நிர்ணயிக்கப்படுகின்றது என்பதைப் பேராசிரியர் நர்க்ஸ் ஆராய்கின்றார். சிறிய நாடாக இருப்பதால் சந்தை விரிவடையாத நிலையில் அமைந்திருக்கும் எனக் கூற இயலாது. ஒரு நாட்டில் சந்தையின் அளவை நிர்ண யிக்கின்ற காரணிகளில் முக்கியமானது உற்பத்தியேயாகும். குறிப் பிட்ட அளவு மக்கட்தொகையைக் கொண்ட ஒரு நாட்டில் பண் டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தி மக்களின் உற்பத்தித் திறனைச் சார்ந்திருக்கின்றது. தேவைப் பெருக்கம் உற்பத்தியா லேயே ஏற்பட்டு விடுகின்றது; சந்தை உற்பத்தியின் அளவைக் கொண்டு அமைகின்றது. எனவே, விரிவான பரந்த சந்தையைப் பெற எல்லா வகையிலும் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும். வாங்கும் திறனானது அதிகரிக்கும்போது உற்பத்தியை உயர்த்து வதற்கான திறனும் உயர்வடைகின்றது.

உற்பத்தித் திறனானது மூலதனம் எவ்வாறு பயன்படுத்தப் படுகின்றது என்பதைப் பொருத்தும் அமையும். மூலதனத்தின் அளவிற்கு ஏற்ப உற்பத்தியின் அளவு அமையுமெனலாம். உற்பத்தி யைப் பெருக்க மூலதனத்தை அதிக அளவில் பயன்படுத்த வேண்டும். அதிக உற்பத்தியானது சந்தையை விரிவடையச் செய்யும். ஆனால் எந்த ஒரு தொழில் முயல்வோரும் வளர்ச்சி யடையாத சந்தை அமைந்திருக்கும்போது அதிக முதலீட்டைச் செய்ய முன் வரமாட்டார். உற்பத்திக்கான மூலதனப் பொருட் களும் சிறப்பாகப் பயன்படுத்தப் படுவதில்லை. குறைந்த வரு வாயைப் பெறுகின்ற மக்களால் தேவை குறைந்த அளவிற்கே அமைகின்றது. தேவைக் குறைவால் உற்பத்தியாளர்கள் அதிக முதலீட்டைச் செய்யத் தயங்குகின்றார்கள். சந்தையின் அளவு உற்பத்தியின் அளவைப் பொருத்து அமையும் என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் தனியொரு தொழிலின் உற்பத்தி, பொருளுக்கான தேவையைப் பெருக்குமெனக் கூற இயலாது. புதி தாகத் தொடங்கப்படுகின்ற ஒரு தொழிலில் நவீன மூலதனப் பொருட்கள் பயன்படுத்தப் பெறுகின்றன என்று வைத்துக் கொண்டால், குறிப்பிட்ட அத்தொழிற் பொருளுக்கான தேவை

அதிகரிக்கும் எனக் கருத முடியாது. உதாரணமாக, காலணிகளைத் தயாரிக்கும் தொழிலானது தொடங்கப்படுகின்றது என வைத்துக் கொள்வோம். அத்தொழிலில் நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள் ஊதியத்திற்காகப் பணிபுரிந்து அதிக வருவாயைப் பெறுகின்றார்கள். தொழிலாளர்கள் அனைவரும் தங்கள் வருவாயை உற்பத்தி செய்த காலணிகளை வாங்கப் பயன்படுத்தினால் காலணித் தொழில் வளர்வதற்கான சந்தை விரிவடையும். ஆனால் அவர்கள் தங்கள் வருவாயை காலணிகளை வாங்கச் செலவழிப்பதில்லை. பிறவகைப்பட்ட தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள அவர்கள் தங்களின் வருவாயைப் பயன்படுத்துகின்றார்கள். இதனால் காலணிகளுக்கான தேவை குறைவாகவே இருக்கின்றது. புதிதாக உற்பத்தி செய்கின்ற பொருட்களுக்கான தேவை குறைவாக உள்ளமைக்குக் காரணம் மக்களின் குறைந்த வாங்கும் திறனேயாகும். உற்பத்திப் பொருட்களுக்கான சந்தை இல்லாமையால் முதலீடு செய்வதற்கான ஊக்கமும் இழக்கப்படுகின்றது. மேற் குறிப்பிடப் பட்டுள்ள உதாரணத்தில் காலணிகளைத் தயாரிக்கும் தொழிலில் முதலீட்டின் அளவு குறைகின்றது. இவ்வாறு சில தொழில்கள் உற்பத்தியைச் செய்யாமலேயே மூடப்படுவதும் உண்டு. "மக்களின் வறிய நிலை முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை இழக்கச் செய்கிறது ; குறிப்பிட்ட சில பொருட்களின் உற்பத்தியில் மூலதனம் சிறப்பாகப் பயன்படுத்தப்படாத நிலையையும் ஏற்படுத்துகிறது," எனப் பேராசிரியர் நர்க்ஸ் குறிப்பிடுகின்றார்.

மேற் குறிப்பிட்டுள்ளபடி வட்டநிலைத் தொடர்புகள் அமைந்துள்ளன. சந்தையை விரிவடையச் செய்ய உற்பத்தியை உயர்த்த வேண்டும். மூலதனச் செறிவு அமைந்திருந்தால்தான் உற்பத்தி உயரும். முதலீட்டின் நிலையைக் கொண்டு மூலதனச் செறிவு அமையும். ஆனால், முதலீட்டிற்கான ஊக்கம் சந்தையின் அளவைப் பொறுத்து இருக்கின்றது. இவ்வட்டத்தை முறிக்கவும் முடிகின்ற வாய்ப்பு உண்டு. ஏதாவது ஒரு நிலையில் இவ்வட்டத்தை முறிப்பதின் மூலம் சிறப்பான முன்னேற்றத்தை உற்பத்தியில் காணமுடியும்.

இது பற்றிய 'சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டை' நர்க்ஸ் தருகின்றார்.

### சரிசம வளர்ச்சி

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் சரிசம வளர்ச்சிக் கொள்கை முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றது. வறுமை வட்டச் சிக்கலானது பின்தங்கிய நாடுகளி

லேயே அமைந்துள்ளது. இவ்வறுமை வட்டச் சிக்கலுக்கான தீர்வைக் காண சிறப்பான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

'சரிசம வளர்ச்சிக் கோட்பாடு' பல நிலைகளில் பல ஆசிரியர்களால் விளக்கப் படுகின்றது. இக் கோட்பாட்டை விளக்குகின்ற ஆசிரியர்களில் முக்கியமானவர்கள் 'ரோடான்' (Rodan), 'நர்க்ஸ்' (Nurkse), 'லூயிஸ்' (Lewis) ஆவர். இக்கோட்பாடு கூறுவது என்னவென்றால், பல்வேறு வகைப்பட்ட பெரிய திட்டங்களில் ஒரே சமயத்தில் முதலீடுகள் செய்யப்பட வேண்டுமென்பதையாகும். இதன் மூலமே தனியாருடைய முதலீட்டுத் திட்டங்களில் வெற்றியைப் பெற இயலும். "தனியொருவகைப் பட்ட உற்பத்திக்கான தனியாரின் முதலீடு விரிவடையாத சந்தையால் பாதிக்கப் படுகின்றது. வளர்ச்சியடையாத சந்தையே குறைவான முதலீட்டிற்குக் காரணமாகின்றது. இக் குறைபாட்டை நீக்க வேண்டுமென்றால் அதிக அளவிற்கு பல வகைப் பட்ட தொழில்களிலும் மூலதனமானது ஒரளவிற்குச் சமமான அளவில் பகிர்ந்து முதலீடாக்கப்பட வேண்டும். இதன் விளைவாக சந்தையானது பெரிதும் விரிவடைய வாய்ப்பு ஏற்படும். மக்கள் ஒன்றிற்கொன்று தொடர்புடைய பல திட்டங்களில், முன்னேற்றமடைந்த சிறப்பான கருவிகளோடு பணியாற்றும்போது பல நன்மைகள் தோன்றுகின்றன. ஒரு தொழிலின் உற்பத்தியாளர்கள் மற்றையத் தொழிகளில் உற்பத்தி செய்த பொருட்களை வாங்குகின்றார்கள்." என நர்க்ஸ் விளக்குகின்றார்.

விரிவடைந்த சந்தையால் உற்பத்தியாளர் பெருமளவிற்கு இடர்களைத் தாங்குவதில்லை; முதலீடு செய்வதற்கான ஊக்கமும் பாதிக்கப்படுவதில்லை. பல துறைகளிலும் முதலீடு செய்யப் பட்டால் வெவ்வேறு வகைப்பட்ட பொருட்களுக்கான தேவையும் பெருகும். பல தொழில்களிலும் பணியாற்றுகின்ற உழைப்பாளர்களின் வருவாய் பெருகுவதால், ஒவ்வொரு பண்டத்திற்குமான சந்தை விரிவடையும். ஆகவே பல வகைப்பட்ட புதிய தொழில்கள் ஒரே சமயத்தில் தொடங்கப் பட வேண்டும். இதன் மூலம் ஒரு தொழில் வேறொரு தொழிலின் வளர்ச்சிக்கு உதவுகின்றது. எல்லாத் தொழில்களின் முன்னேற்றத்திற்கும் பொருட்களுக்கான சந்தை விரிவடைந்திருக்க வேண்டும். விரிவடைந்த சந்தையைப் பெற எண்ணிக்கையில் அதிகமான பல தொழில்கள் அமைந்திருத்தல் வேண்டும். பல வகைப்பட்ட தொழில்கள் ஒரே சமயத்தில் தொடங்கப்படும்போது பொருளாதார நடவடிக்கைகள் ஒன்றோடொன்று தொடர்பு படுகின்றன. இதன் மூலம் வறுமை

வட்டத்தைத் தவிர்க்க முடியும். பொருளாதாரத்தில் ஒருதுறையின் அளிப்பு மற்ருெரு துறையின் தேவையாக அமைகின்றது.

சரிசம வளர்ச்சி சந்தையை விரிவடையச் செய்யவும், முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை உயர்த்தவும் உதவுவதாக நர்க்ஸ் கருதுகின்ருர். முதலீடுகளுக்கான முடிவை எடுக்கும்போது சரிசம வளர்ச்சியைப் பெற முயல வேண்டும். ஒன்றிற்கொன்று தொடர் புடைய பல பொருளாதாரத் துறைகளுக்கிடையே சரிசம வளர்ச்சி ஏற்பட வேண்டும். பெரிய அளவிற்குப் பல துறைகளிலும் முதலீட்டைச் செய்வதின் மூலம் சந்தை விரிவடையும். ஒரு தொழில் மற்ருெரு தொழிலின் பொருளிற்குச் சந்தையை ஏற்படுத்தும். ஒரு தொழிலின் வளர்ச்சி வீதம் மற்ற தொழில்களின் வளர்ச்சி வீதத்தால் கட்டுப்படுத்தப் படுகின்றது. பல வகைப் பட்ட பொருளாதார நடவடிக்கைகளில் மூலதனம் பயன்படுத்தப் படும்போது பொருட்களுக்கான தேவை அதிகரிக்கின்றது ; பொதுவான பொருளாதாரத் திறனின் அளவும் உயர்வாகவே அமைகின்றது. இவ்வகையில் சந்தையை விரிவடையச் செய்யலா மென்பது நர்க்ஸின் கருத்தாகும். ஒரே சமயத்தில் பல தொழில் களிலும் முதலீடுகள் செய்யப்படும்போது மக்களின் வருவாயும், செலவும் அதிகரிக்கின்றன. இதன் காரணமாகச் சந்தை விரிவடை கின்றது. சுருங்கக் கூறிஞல், சந்தையை விரிவடையச் செய்ய பல தொழில்களிலும் ஒரே சமயத்தில் முதலீடு செய்வது உதவு கின்றது. இவ்வாறு சரிசம வளர்ச்சிக்கும், விரிவடைந்த சந்தைக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது.

சரிசம வளர்ச்சியால் பல 'புறச்சிக்கனங்களும்' (External Economies) பெறப்படுகின்றன. புறச்சிக்கனங்களால் உற்பத்தி நிலைகளில் வளர்ந்து செல் விளைவு தோன்றி, விரைவான பொருளா தார வளர்ச்சி ஏற்படுகின்றது. பல வகைப்பட்ட தொழில்களின் பொருட்களுக்கான தேவை அதிகரிக்கின்றது. இதனுல் சந்தையின் மொத்த அளவு விரிவடைகின்றது. பொருட்களை எளிதில் விற்பனை செய்வதற்கான வாய்ப்பு தோன்றுகின்றது. உற்பத்தி யாளர்கள் இடர்களைத் தாங்க வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. இதனுல் உற்பத்தி அதிகரித்து உற்பத்திச் செலவு குறைவடை கின்றது. இவ்வகையில் புறச்சிக்கனங்களை சரிசம வளர்ச்சியால் பெறமுடியும் எனப் பேராசிரியர் ரோடான் குறிப்பிடுகிருர். புறச் சிக்கனங்கள் பெறப்படுவதால் சந்தை விரிவடைந்து முதலீடு செய்வ தற்கான ஊக்கம் அதிகரிக்கின்றது.

நர்க்ஸ் குறிப்பிடுவது போல், "உற்பத்தியின் சரிசம வளர்ச்சி, பெறப்படுகின்ற புறச்சிக்கனங்களால், சந்தையின் அளவை விரிவடையச் செய்கின்றது." பல வகைப்பட்ட தொழில்களும்

தொடங்கப்படும்போது, வெவ்வேறு வகைகளில் புறச்சிக்கனங்கள் கிடைப்பதாக ரோடான் கூறுகின்ருர். ஒரு தொழில் வளரும் போது, அதைச் சார்ந்த உற்பத்தி நிறுவனங்கள் புறச்சிக்கனங்களைப் பெறுகின்றன. உற்பத்திக்கு உதவக்கூடிய வசதிகள் பெருகுகின்றன. போக்குவரத்து வசதிகள் வளர்ச்சியடைகின்றன; தொழிலாளர் களின் திறமை வளர்கின்றது; தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் முன்னேற்றமடைகின்றன. வாணிபத்தின் அளவில் சிறப்பான முன்னேற்றம் ஏற்படுகின்றது. உற்பத்தி சரிசமமாக அதிகரிக்கும்போது புறச்சிக்கனங்கள் பெறப்பட்டு, அதன் மூலம் சந்தை விரிவடைவதாக நர்க்ஸ் கூறுகிருர். பல தொழில்கள் வளரும்போது குறிப்பிட்ட பகுதியில் உள்ள ஒரு தொழிலானது புறச்சிக்கனங்களைப் பெறுகின்றது. இதனுல் மூலப்பொருட்களைப் பெறுவது எளிதாகின்றது. இயக்கச் சக்தி எளிதில் பெறப் படுகின்றது; துணைத்தொழில்களும் எண்ணிக்கையில் பெருகு கின்றன.

நெகிழ்ச்சியுள்ள அளிப்பைக் கொண்டு மூலதனமோ, உழைப்போ அமையும்போது முதலீடு அதிக இலாபத்தைத் தரத்தக்கதாக இருக்குமென நர்க்ஸ், ரோடான் இருவரும் கருது கின்றனர். பொருளாதார முன்னேற்றம் தொடர்ந்து நீடிக்க வளர்ச்சியடைந்த சந்தை அமைந்திருக்க வேண்டும். வளர்ச்சி யடைந்த சந்தையைத் தருவது சரிசம வளர்ச்சி ஆகும். நர்க்ஸ் எண்ணுவதுபடி, சரிசம வளர்ச்சி முதலீட்டுக் கொள்கை பின்தங்கிய நாடுகளின் வறுமை வட்டத்தை உடைக்க உதவும். உற்பத்தி பெருகுவதால் மக்களின் வாங்கும் திறனும் அதிகரிக்கின்றது. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் மக்கள் குறைந்த வருவாயைப் பெறுவதால் அவர்களின் வாங்கும் திறன் தாழ்வாகவே அமைந்திருக்கும். ஆனுல் உண்மையான வருவாய் உயரும் நிலை ஏற்பட்ட பிறகு பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது. முன்னேற்றமென்பது நிரந்தரமாக நீடிக்கும் நிலையும் தோன்றுகின்றது; வறுமை வட்டத்திற்குப் பதிலாகச் செழுமை வட்டமானது வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் இதனுல் ஏற்படுகின்றது.

சரிசம வளர்ச்சியின் மூலமாக பன்னுட்டுச் சிறப்புத் தேர்ச்சியும் ஏற்படுவதாக நர்க்ஸ் கூறுகின்ருர். பன்னுட்டு வாணிபத்தின் அளவை நீண்ட காலத்தில் நிர்ணயிப்பது சந்தையின் அளவே யாகும். உற்பத்தியின் அளவும் பன்னுட்டு வாணிபத்தை நிர்ணயிக்கின்ற காரணிகளில் ஒன்ருகும். சரிசம வளர்ச்சியின் மூலமே பன்னுட்டுச் சந்தையை விரிவடையச் செய்யலாம். அதிக உற்பத்தியைச் செய்வதற்கான ஊக்கமும், அதிக முதலீடு

செய்வதற்கான ஆர்வமும் பெறப் படுகின்றன. பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு சரிசம வளர்ச்சி உதவும் என நர்க்ஸ் குறிப்பிடுகின்றார். சரிசம வளர்ச்சி தேவை, அளிப்பு ஆகிய இரு நிலைகளைக் கொண்டும் ஆராயப் படுகின்றது.

நர்க்ஸின் கருத்து 'அதிக அழுத்தக் கோட்பாட்டோடு' (Theory of the Big Push) தொடர்புடையதாக இருக்கின்றது. சரிசம வளர்ச்சி ஏற்பட மூலதனம் பல வகைப்பட்ட தொழில் களில் ஒரே சமயத்தில் முதலீடாக்கப்பட வேண்டும். ஹிக்கின்ஸ் (Higgins) குறிப்பிடுவதுபடி, தேக்கநிலைப் பொருளாதாரத்தை அதிக வருவாயையும், அதிக உற்பத்தியையும் பெறச் செய்யத் தீவிர முயற்சிகள் தேவைப் படுகின்றன. தனியொரு தொழிலில் மட்டும் அதிக முதலீட்டைச் செய்வது விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவாது. குறைந்த அளவு முயற்சி யானது பரவலாக எல்லாத் துறைகளிலும் மேற்கொள்ளப்படுதல் பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்த உதவும். 'அதிக அழுத்தக் கோட்பாடு' எவ்வாறு முதலீட்டு முறைகள் அமைந் திருக்க வேண்டுமென்பதைக் குறிப்பிடவில்லை. அக்கோட்பாடு 'குறைந்த அளவு முயற்சிகளாவது' (Minimum Efforts) எல்லாத் துறைகளிலும் எடுக்கப்பட வேண்டுமென்று குறிப்பிடுகின்றது. இதன் மூலம் பொருளாதாரத்தில் 'அதிக அழுத்தம்' ஏற்பட்டு முன்னேற்ற நிலைகளில் தோன்றும் தடைகள் நீக்கப்படுகின்றன. பல துறைகளிலும் முதலீடு செய்ய அதிக அளவு மூலதனம் தேவைப்படுகின்றது. சரிசம வளர்ச்சியைப் பெற பொருளா தாரத்தில் 'அதிக அழுத்தம்' எற்படுவது அவசியமாகின்றது.

பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது பல துறைகளிலும் சரிசம வளர்ச்சி ஏற்பட வேண்டும். உதாரணமாக, தொழில் வளர்ச்சியோடு வேளாண்மை வளர்ச்சியும் அவசியமானதாகும். வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் பல உற்பத்தித் துறைகளும் முன்னேற்றத்தைப் பெற வேண்டும். பல துறைகள் உற்பத்தியை அதிகரித்து உயர்ந்த அளவில் அளிக்க வேண்டும். பொருட்களின் அளிப்பில் எவ்வித இடையூறும் ஏற்படக் கூடாது. வேளாண்மையல்லாத துறைகளின் உற்பத்திப் பெருக வேளாண்மை உற்பத்தி அதிகரிக்க வேண்டும். இங்கிலாந்து நாட்டைப் போன்று உணவுப் பொருட்களையும், மூலப்பொருட் களையும் இறக்குமதி செய்து வேளாண்மையல்லாத பிற துறைகளில் உற்பத்தி செய்யும் பொருட்களை ஏற்றுமதி செய்யலாம். வேளாண்மை வளர்ச்சி, தொழில் முன்னேற்றம் ஆகியவற்றில் எது முக்கியமானது என எண்ணுவதைவிட இரண்டின் முன்னேற்றத் திற்குமான முதலீடுகளைச் செய்வது நன்மை பயப்பதாகும்.

வேளாண்மையல்லாத துறைகளில் வேலை வாய்ப்புக்கள் பெருகும் போது வேளாண்மைப் பொருட்களின் தேவை அதிகரிக்கும். வேலை வாய்ப்புக்களைப் பெற்ற உழைப்பாளர்கள் வாங்கும் திறனைக் கொண்டவர்களாகின்றனர். வேளாண்மையில் அமைந்துள்ளவர் களின் உண்மை வருவாயும் உயர்வடைகின்றது. நாட்டின் மொத்த ஆக்கம் அதிகரிக்க இதனால் வாய்ப்பு ஏற்படுகின்றது. வேளாண்மை உற்பத்தி பெருகும் போது விவசாயிகள் உணவுப் பொருட்களை அதிக அளவிற்கு நுகரத் தலைப்படுகின்றார்கள். நகர்ப்புறங்களில் தொழில்கள் வளரத் தொடங்குகின்றமையால் வேளாண்மைத் துறையினின்றும் உற்பத்தி செய்யப்படுகின்ற தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களின் தேவை பெருகுகின்றது. தொழிற் பொருட்களின் தேவை அதிகரிப்பது வேளாண்மை மக்கட் தொகையையே சார்ந்திருக்கின்றது. நாட்டைத் தொழில் மயமாக்கத் தொழிற் பொருட்களுக்கான சந்தை வளர்ச்சியடைந்திருக்க வேண்டும். விவசாயிகளின் வருவாய் பெருகும்போது அவர்கள் தொழிற் பொருட்களை வாங்கத் தொடங்குகின்றார்கள். தயாரிப்புத் தொழில்களின் வளர்ச்சி வேளாண்மை மக்கட்தொகையின் அதிக வருவாயைச் சார்ந்தே அமைந்திருக்கும்.

வேளாண்மையல்லாத துறைகளை வளரச் செய்து, வேளாண் மையில் வளர்ச்சி ஏற்படாவிட்டால் பணவீக்க நிலை தோன்றும். எனவே வேளாண்மைத்துறை, தொழிற்துறை ஆகிய இரண்டின் முதலீட்டிலும் சமநிலை அமைந்திருக்க வேண்டும். ஒரு துறையில் செய்யப்படுகின்ற முதலீடு பிற துறைகளில் எந்த அளவிற்கு நன்மையை அளிக்கும் என்பதை ஆராய வேண்டும். ஒரு துறையின் உற்பத்தித்திறன் பிற பொருளாதாரத் துறைகளையும் சார்ந்திருக் கின்றது. பல துறைகளும் ஒருங்கே வளரும்போது உற்பத்திப் பொருட்களை விற்பனை செய்வது எளிதாகின்றது. சந்தையின் அளவும் விரிவடைகின்றது. பல வகைப்பட்ட பொருட்களும் எளிதில் விற்பனையாகின்றன. ஒரு துறையின் உற்பத்தி பெருகும் போது அதற்கான தேவைப் பெருக்கம் மற்றொரு துறையினின்றும் ஏற்படுகின்றது. இதன் காரணமாக ஒரே சமயத்தில் எண்ணற்ற பலவகைப்பட்ட தொழில்களிலும் முதலீடு செய்வது நன்மையைத் தருகின்றது. எல்லாத் துறைகளிலும் சரிசம வளர்ச்சி ஏற்படுவதும் அவசியமாகின்றது. அதாவது, எல்லாத் துறைகளையும் ஒரே சமயத்தில் வளரச் செய்வது பல நன்மைகளையும் அளிக்கின்றது.

சரிசம வளர்ச்சி என்பது எல்லாத் துறைகளிலும் உற்பத்தி ஒரே அளவில் அதிகரிக்க வேண்டுமென்று பொருள்படாது; அல்லது எல்லாத்துறைகளிலும் முன்னேற்றத்திற்கான வசதிகள்

ஒரே அளவிற்கு அளிக்கப்பட வேண்டுமென்றும் கருதக்கூடாது. பொதுவாகக் கூறுமிடத்து, பொருளாதாரத்தின் பல துறைகளும் சரிசம வளர்ச்சியைப் பெற வேண்டும். ஒரு துறையின் வளர்ச்சி பிற துறைகளின் வளர்ச்சிக்கு உதவ வேண்டும். ஒரு துறை மிக விரைவாக வளர்கின்ற நிலையும், வேருெரு துறை குறைவாக வளர்கின்ற நிலையும் அமைந்திருக்கக் கூடாது. பொருளாதாரத்தின் எந்த ஒரு துறையிலும் உபரி உற்பத்தியோ, பற்ருக்குறை உற்பத்தியோ அமைந்திருக்கக் கூடாது. அதற்கேற்ப பல துறைகளும் சரிசம நிலையில் வளர்க்கப்பட வேண்டும். உற்பத்திப் பொருட்களை விற்பனை செய்வதற்கான சந்தையும் அமைந்திருக்க வேண்டும். நுகர் பொருட்களை உற்பத்தி செய்கின்ற தொழில்களுக்கிடையே மட்டும் சரிசம வளர்ச்சி அமைந்திருத்தல் போதுமானதாகாது. பேராசிரியர் நர்க்ஸின் சரிசம வளர்ச்சிக் கோட்பாடு மூலதனப் பொருட்கள், நுகர் பொருட்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கிடையேயும் சரிசம வளர்ச்சி இருக்க வேண்டுமெனக் குறிப்பிடுகின்றது. இதைப் போன்ற பொருளாதார-சமுதாய நலன்களை அளிக்கக்கூடிய முதலீட்டிற்கும், நேரடியாக உற்பத்திக்கு உதவக்கூடிய முதலீட்டிற்கும் இடையே சமநிலை அமைந்திருக்க வேண்டும்.

## மதிப்பீடு

விரைவான பொருளாதார முன்னேற்றத்தைத் தரத்தக்க 'சரிசம வளர்ச்சிக் கோட்பாடு' எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. நடைமுறைக்கு ஒவ்வாத ஒரு கருத்தாக இது இருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

*(1)* பேராசிரியர் சிங்கர் (Prof. Singer) இக்கோட்பாடு நடைமுறைக்கு ஒத்துவராத ஒன்று எனக் கூறுகின்ருர். வளர்ச்சி யடைந்துவரும் நாடுகளில் பலவகைப்பட்ட உற்பத்தித் தொழில் களையும் ஒரே சமயத்தில் தொடங்குவது எளிதானதல்ல. ஏனெனில் பின்தங்கிய பொருளாதாரங்களில் மூலதனப் பற்ருக் குறை அமைந்திருக்கின்றது; தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் வளர்ந்திருப்பதில்லை; திறமையான தொழிலாளர்களின் உழைப்பைப் பெறுவதும் கடினமாகின்றது. உற்பத்திப் பணிகளில் பயிற்சி பெற்ற உழைப்பாளர்கள் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அமைந்திருப்பதில்லை. மேலாளர்கள், மேற்பார்வை யாளர்கள் ஆகியோருடைய பணிகளும் சிறப்பாகப் பெறப் படுவதில்லை. வளங்கள் அமைந்திருந்தாலும் அவை உற்பத்திக்கு உதவும் வகையில் முற்றிலுமாகப் பயன் படுத்தப் படுவதில்லை. புதிதாக வளங்களைக் கண்டு பிடிப்பதிலும் அதிக ஆர்வம் அமைந்

திருப்பதில்லை. இக்காரணங்களால் சரிசம வளர்ச்சியைப் பின் தங்கிய நாடுகளில் பெறுவது கடினமான நிலையைக் கொண்டிருக்கின்றது. சரிசம வளர்ச்சியைப் பெற மூலதனத்தின் அளிப்பு உயர்ந்த அளவில் இருக்க வேண்டும்; உழைப்பாளர்களிடம் திறமையான உழைப்பு அமைந்திருக்க வேண்டும்; உற்பத்தித் துறைகள் ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாக இருக்க வேண்டும். உழைப்பும், தொழில் நுட்பமும் எல்லாத் துறைகளிலும் சரிசம வளர்ச்சி ஏற்பட பயன்படுத்தப்பட வேண்டும்.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில், மூலதனப் பற்றாக்குறையால் தெரிந்தெடுக்கப்பட்ட சில துறைகளில் மட்டுமே திட்டமிட்டு முதலீடுகள் செய்யப்படுகின்றன. கிடைக்கக்கூடிய குறைந்த அளவு மூலதனம் பொருளாதாரத்தின் அவசியத் தொழில்களில் மட்டுமே முதலீடாக்கப் பெறுகின்றது. முக்கியத்துவத்திற்கு ஏற்ப முதலீடுகள் செய்யப்படுவதால் சரிசம வளர்ச்சியைப் பெறுவது முடியாத ஒன்றாகின்றது. மூலதனப் பற்றாக்குறை அமைந்திருக்கும்போது சரிசம வளர்ச்சியைச் செயல்படுத்துவது முடியாததாகின்றது. "சரிசம வளர்ச்சிக் கோட்பாடு பல பொருளாதாரத் துறைகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருப்பதாகக் குறிப்பிடுகின்றது. ஆனால் ஒரு துறையின் வளர்ச்சி மற்ற துறையின் வளர்ச்சியைப் பாதிக்கின்றது; பல துறைகளுக்கும் இடையே போட்டியானது நிலவுகின்றது," என மார்கஸ் பிளமிங் (Marcus Fleming) குறிப்பிடுகின்றார்.

சரிசம வளர்ச்சியைப் பெறுவதற்குத் தேவையான நிதியை வளர்ச்சிடைந்த நாடுகள் மட்டுமே பெற முடியும். ஒரு நாடு சரிசம வளர்ச்சிக்குத் தேவையான அதிக அளவு மூலதனத்தைக் கொண்டிருந்தால், அந்நாட்டைப் பொருளாதாரத்தில் பின்தங்கிய நாடு எனக் கூற இயலாது. பேரளவு உற்பத்தி முறைகளை நுகர் பொருட்களைத் தயாரிக்கும் தொழில்களில் மட்டும் பின்பற்றினால் பிற தொழில்களில் சிக்கனங்களைப் பெற முடியாது. பின்தங்கிய நாடுகளில் உற்பத்திக்கான வசதிகளின் பற்றாக்குறை சரிசம வளர்ச்சியைப் பெறுவதில் இடையூறாக இருக்கின்றது. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அமைந்துள்ள பல சிக்கல்களில் மூலதனப் பற்றாக்குறையே முக்கியமானதாகும். 'சிங்கர்' கருதுவதுபடி, "ஏழை நாடுகள் பொருளாதாரத்தில் அதிக அழுத்தத்தைப் பெற எண்ணலாம்; ஆனால் அதிக அழுத்தத்தைப் பெறுவதற்குத் தேவையான வசதிகள் ஏழை நாடுகளிடம் இருப்பதில்லை."

சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டிற்காக வாதிடுபவர்கள் மூலதனப் பற்றாக்குறை, திறமை குறைந்த உழைப்பு ஆகியவை அமைந்திருந்தாலும் கூட சரிசம வளர்ச்சியை ஓரளவு பெறலாம்

எனக் கூறுகின்றனர். எச்ச மக்கட்தொகை உள்ள பின்தங்கிய நாடுகளில் 'உழைப்புச் செறிந்த' (Labour-intensive) உற்பத்தி முறைகளைக் கொண்ட தொழில்களை வளர்க்கலாம். ஒரே காலத்தில் உழைப்புச் செறிந்த தொழில்களில் முதலீடுகள் செய்யப் படலாம். இதற்கு குறைந்தபட்ச மூலதனமாவது தேவைப்படுகின்றது. இம் மூலதனத்தை வெளிநாட்டு உதவியாக அயல் நாடுகளிலிருந்து பெறலாம். எனவே மூலதனப் பற்றுக்குறையை ஓரளவு தவிர்க்க உதவுவதாக வெளிநாட்டு உதவி அமைந்திருக்கின்றது. திறமையான உழைப்பைத் தொழிலாளர்கள் அளிக்க கல்வி, பயிற்சி வசதிகளைப் பெருக்க வேண்டும்.

பின்தங்கிய பொருளாதாரங்களில் தொழில் முயல்வோரின் பற்றுக்குறையும், மேலாளர்களின் திறமைக் குறைவும் அமைந்திருக்கின்றன. எனவே, ஒரே சமயத்தில் பலவகைப்பட்ட தொழில்களையும் தொடங்குவது நன்மை தராது. குறைந்த அளிப்பைக் கொண்டுள்ள வசதிகளைத் திரட்டி குறிப்பிட்ட காலத்தில் பல முதலீடுகளைச் செய்து விரைவான முன்னேற்றத்தைப் பெறுவது எளிதானதல்ல.

(2) பலவகைப்பட்ட முன்னேற்றத்தின் நன்மைகளை வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் பெற முடியாது என 'சிங்கர்' கூறுகின்றார். பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் வசதிகளைப் பெருக்குவது கடினமாக இருக்கின்றது. ஒரே சமயத்தில் பல துறைகளிலும் முன்னேற்றத்தைப் பெறுவது கடின நிலையைக் கொண்டுள்ளது. பெரிய அளவில் முதலீடுகளைப் பலதுறைகளிலும் செய்துதான் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்பது அவசியமில்லை. எல்லாத் துறைகளையும், துணைத் துறைகளையும் வளர்த்து அதன் மூலமே பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இயலும் எனக் கருதக் கூடாது. அவ்வாறு செய்வதும் பின்தங்கிய நாடுகளில் முடியாததாகும். சரிசம வளர்ச்சியைப் பெற எண்ணினால் நிர்வாக அமைப்பின் பணிகள் எண்ணிக்கையில் பெருகிவிடும். நிர்வாகத்தில் பலவிதத் தவறுகள் ஏற்படலாம். உற்பத்திக் காரணிகள் சரியான வீதத்தில் இணைக்கப்படாமல் உற்பத்திச் சிக்கனங்களும் கிடைக்கப் பெறுமல் போகலாம்.

(3) சந்தையின் அளவோடு சரிசம வளர்ச்சியைப் பேராசிரியர் நர்க்ஸ் தொடர்பு படுத்தியுள்ளார். சந்தையின் அளவு விரிவடைய முதலீடு செய்வதற்கான ஊக்கம் அமைந்திருக்க வேண்டும். சந்தை விரிவடைய ஒரே சமயத்தில் தொடர்புடைய தொழில்கள் பல தொடங்கப்பட வேண்டுமெனவும் அவர் கூறுகின்றார். முதலீட்டுக் கொள்கையே சரிசம வளர்ச்சியைப் பெற உதவுகின்றது.

தனியொரு உற்பத்தி நிறுவனத்தின் முதலீடு செய்யும் ஊக்கமானது சந்தையின் அளவைப் பொறுத்து அமையும். எனினும் நர்க்ஸ் வெளி நாட்டுச் சந்தையைப் பற்றிக் குறிப்பிடவில்லை. உள் நாட்டுச் சந்தை சிறிய அளவில் அமைந்திருந்து, புதிய முதலீடுகளின் மூலம் பெறப்பட்ட உற்பத்தியை விற்பனை செய்ய இயலாவிட்டால் வெளி நாடுகளில் அப் பொருட்களை விற்பனை செய்யலாம். உள் நாட்டில் உற்பத்திப் பொருட்களுக்குப் போதுமான தேவை இல்லாவிட்டால் வெளி நாடுகளுக்கு அப் பொருட்களை ஏற்றுமதி செய்யலாம்.

(4) சரிசம வளர்ச்சிக் கோட்பாடு பொருளாதாரத்தின் பல துறைகளிலும் மாற்றம் ஏற்படுவதைக் குறிப்பிடுகின்றது. புதிய, தன்னிறைவுப் பொருளாதாரமானது தோன்றுகின்றது; தேக்க நிலைப் பொருளாதாரத்திற்குப் பதிலாக இயக்கநிலைப் பொருளாதாரம் ஏற்படுகின்றது; புதுமையான தொழிற் பொருளாதாரமும் வளர்ச்சியடைகின்றது. ஆனால் 'ஹிர்ச்மேன்' (Hirschman) கூற்றுப்படி, இவற்றையெல்லாம் மட்டும் பெற்றுவிட்டால் பொருளாதார முன்னேற்றத்தை அடைந்துவிட முடியாது. வளர்ச்சியென்பது ஒரு நிலையில் இருக்கும் பொருளாதாரத்தை மாற்றம் பெறச் செய்து, முன்னேற்றமடைந்த நிலைக்குக் கொண்டு வருவதாகும். சரிசம வளர்ச்சிக் கோட்பாடு எவ்வித முறைகளால் வளர்ச்சியடையாச் சமநிலையை முறியடிக்கலாம் என்பது பற்றிக் குறிப்பிடவில்லை; பின்தங்கிய நாடுகளில் அமைந்திருக்கக் கூடிய வறுமை வட்டத்தை எவ்வாறு செழுமை வட்டமாக மாற்றுவது என்பது பற்றியும் இக் கோட்பாடு ஆராயவில்லை. சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டின்படி பழைமைப் பொருளாதாரத்திற்குப் பதில் புதுமைப் பொருளாதாரம் ஏற்படுத்தப்படுகின்றது. பொருளாதாரத்தில் அமைந்திருக்கக்கூடிய தேக்கநிலையானது முற்றிலுமாக மாற்றப்பட்டு, புதுமையான தன்னிறைவுத் தொழிற் பொருளாதாரமானது பெறப்படுகின்றது. ஆனால் இதைப் பொருளாதார வளர்ச்சி எனக் கொள்ள முடியாது என ஹிர்ச்மேன் கூறுகின்றார்.

இந்நிலையில் ஹிர்ச்மேன் கூற்று சரியானது எனக் கருத இயலாது. சரிசம வளர்ச்சியைப் பரிந்துரைப்பவர்கள் ஒரு வகைப்பட்ட பொருளாதாரத்தில் மாற்றங்களைச் செய்து வேறொரு வகைப்பட்ட பொருளாதாரமாக மாற்றவேண்டும் என்பது பற்றிக் குறிப்பிடவில்லை. அவர்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற எல்லாத் துறைகளிலும் ஒரே சமயத்தில் வளர்ச்சி ஏற்பட வேண்டுமெனக் குறிப்பிடுகின்றார்கள். அதன் மூலம் தேவை, அளிப்பு ஆகியவற்றின் நிலைகளில் அமைந்திருக்கக்கூடிய சிக்கல்களைக் களையலாம் எனவும் அவர்கள் கருதுகின்றார்கள். பேராசிரியர்

லூயிஸ், "எல்லாத் துறைகளும் ஒரே சமயத்தில் விரிவடைய வேண்டும்" எனக் குறிப்பிடும்போது ஒரு வகைப்பட்ட பொருளாதாரம் மற்றொரு வகைப்பட்ட பொருளாதாரமாக மாற்றப்பட வேண்டும் என்பது பொருள் அல்ல. எனவே ஹிர்ச்மேன் கருத்து இங்கு தவறுடையதாக அமைகின்றது.

(5) வளர்ச்சியடையாத பொருளாதாரங்களில் சரிசம வளர்ச்சியைப் பெறுவதில் வேறு சில இடர்ப்பாடுகளும் அமைந்துள்ளன. ஆக்கக் காரணிகள் சரியான வீதத்தில் இணைக்கப்படாத காரணத்தால் உற்பத்தியை உயர்ந்த அளவில் பெற முடிவதில்லை. பல பின்தங்கிய நாடுகளில் அதிக அளவு உழைப்பாளர்கள் உற்பத்திப் பணிகளில் ஈடுபடுகின்றார்கள்; ஆனால் குறைந்த அளவு மூலதனம் மட்டுமே உற்பத்திக்காகப் பயன்படுத்தப் படுகின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் தொழிலமைப்புக்களும் சிறப்பாக அமைந்திருப்பதில்லை; திறமையான தொழில் முயல்வோரும் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளனர். நாட்டின் இயற்கை வளங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுவதில்லை ; கண்டுபிடிக்கப் பட்ட வளங்கள் அனைத்தும் முற்றிலுமாக உற்பத்திக்குப் பயன் படுத்தப்படுவதில்லை. இந்நிலைகளின் காரணமாகவே சரிசம வளர்ச்சியை வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் செயல் படுத்துவது மிகவும் கடினமானதாக இருக்கின்றது.

(6) இறுதியாக, சரிசம வளர்ச்சிக்கோட்பாடு வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களுக்கும், வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளைக் கருதுவதாக இல்லை. பயன்படுத்தப்படாத இயற்கை வளங்களால் பொருளாதாரத்தில் வளர்ச்சியடையாத நிலை அமைந்திருக்கின்றது. சில பின்தங்கிய நாடுகளில் வளங்கள் போதுமான அளவிற்கு அமைந்திருப்பதில்லை. வளங்கள் பற்றாக்குறை நிலையில் உள்ளமையால் வளர்ச்சியடையாத பொருளாதாரம் அமைகின்றது. இதனால் சரிசம வளர்ச்சியைப் பெறுவது பின்தங்கிய பொருளாதாரங்களில் கடினமாகின்றது. சரிசம வளர்ச்சியைப் பெற வசதிகள் பெருமளவிற்கு அமைந்திருக்க வேண்டும்.

'மறைந்துள்ள வேலையின்மையும்' (Under-employment) பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் உள்ளமைக்குக் காரணமாகும். முன்னேற்றமடைந்த நாடுகளில் தொழில்கள், இயந்திரங்கள், கருவிகள் யாவுமே தொழில் மந்தக் காலத்தில் செயல்படுகின்றன. உழைப்பாளர்களும், மேலாளர்களும், மேற்பார்வையாளர்களும் அதிக அளவிற்கு வேலையிழப்பதில்லை. மக்களின் நுகரும் பழக்கத்திலும் பெரிய மாறுதல்கள் தோன்றுவதில்லை.

ஆனால் மேம்பாடடைந்து வரும் நாடுகளில் தொழில் மந்தத்தால் பொருளாதாரத்தில் பலவித இடர்ப்பாடுகளும் ஏற்படுகின்றன.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள குறைபாடுகள் சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டில் உள்ளன என்றாலும், முற்றிலும் இக் கோட்பாடு தவறானது எனக் கூற இயலாது. சரிசம வளர்ச்சியைப் பின்தங்கிய நாடுகளில் முழுவதும் பெற முடியாவிட்டாலும்கூட ஓரளவிற்குப் பெற வாய்ப்பு இருக்கின்றது. சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டை ஓரளவு செயல்படுத்தும் வாய்ப்பு மேம்பாடடைந்துவரும் நாடுகளில் உள்ளது. சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டைப் பொருளாதாரத்தின் தெரிந்தெடுக்கப்பட்ட சில பகுதிகளில் பின்பற்றலாம். இதன் மூலம் பொருளாதாரத்தில் உள்நாட்டுச் சமநிலையைப் பெற முடியும். இதற்கு உதாரணமாக இந்தியாவில் அமைக்கப் பட்டுள்ள 'தொழில் எஸ்டேட்டுக்களைக்' (Industrial Estates) கூறலாம். மேலும், பொருளாதாரத்தின் வளர்ச்சி வீதம் குறையக் கூடாது. பொருளாதாரத்தின் பல துறைகளும் ஓரளவிற்காவது ஒருங்கே வளர வேண்டும். எல்லாத் துறைகளும் ஒரே அளவில் வளர வேண்டுமென்பது அவசியமில்லை. வசதிகள் அதிகமாக அமைந்திருக்கின்றன என்பதற்காக ஒரு துறையில் அதிக வளர்ச்சியும், வசதிகள் குறைவாக அமைந்திருக்கின்றன என்பதற் காக மற்றொரு துறையில் குறைவான வளர்ச்சியும் அமைந்திருக்கக் கூடாது. உற்பத்திக்கான எல்லா வசதிகளையும் பெற்றிருக்கின்ற ஒரு தொழிலை மட்டும் வளர்த்தல் போதுமானதாகாது.

சரிசம வளர்ச்சியைப் பெற கீழ்க்கண்டவைகளை ஒரு நாட்டின் பொருளாதாரம் பெற்றிருக்க வேண்டும்: (i) மூலதனம் மிக அதிக அளவிற்குக் கிடைக்க வேண்டும்; (ii) உழைப்பானது வேளாண்மை யினின்றும் தொழிற் துறைக்குப் பெயர்ச்சியடையும் தன்மையைக் கொண்டிருக்க வேண்டும்; (iii) அடிப்படைத் தொழில்களில் உற்பத்தியானது அதிகரிக்க வேண்டும். இவை யாவும் அமைந் திருந்தால் பல தொழில்களும் அதிக இலாபத்தைப் பெற முடியும். ஆனால் இந்நிலைகள் யாவும் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அமைந்திருப்பதில்லை. சில பின்தங்கிய நாடுகளில் உற்பத்திக் காரணிகளில் உழைப்பு பற்றாக்குறை நிலையைக் கொண்டிருக்கின்றது; வேறு சில நாடுகளில் உழைப்பின் அளிப்பு தேவையைவிட மிகவும் அதிகமான அளவிற்கு அமைந் திருக்கின்றது. மூலதனப் பற்றாக்குறை எல்லா மேம்பாடடைந்து வரும் நாடுகளிலும் முக்கியச் சிக்கலாக அமைந்திருக்கின்றது எனக் கூற முடியாது.

சரிசம வளர்ச்சிக் கோட்பாடு கீன்ஸின் 'ஆயத்தநிலைத் தேவைக்' (Effective Demand) கொள்கையை அடிப்படையாகக்

கொண்டு அமைந்திருக்கின்றது. பொருளாதார மந்த நிலையைத் தவிர்க்கப் பல வகைப்பட்ட தொழில்களிலும் முதலீடுகளைச் செய்து பொருளாதாரத்தில் 'அதிக அழுத்தத்தை' (Big Push) ஏற்படுத்த வேண்டுமென கீன்ஸின் கோட்பாடு கூறுகின்றது. வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களில் மந்த நிலையால் பொருளாதார நடவடிக்கைகள் தற்காலிகமாகப் பாதிக்கப்படுகின்றன. வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரங்களில் தொழில்கள் வளர்ந்திருப்பதில்லை; இயந்திரங்களின் உற்பத்தியும் குறைந்த அளவிற்கே அமைந்திருக்கும்; மேலாளர்கள், பயிற்சி பெற்ற பணியாளர்கள் ஆகியோருடைய எண்ணிக்கையும் குறைவாகவே இருக்கும்; தொழில் நுணுக்கத் திறமையும் வளர்ச்சியடைந்திருப்பதில்லை; போதுமான அளவிற்கு மூலதன வசதிகளும் கிடைப்பதில்லை. இக்காரணங்களால் எல்லாத் துறைகளிலும் ஒரே சமயத்தில் முதலீட்டைச் செய்து வளர்ச்சியைப் பெறுவது இயலாததாகின்றது.

வளர்ச்சியடையாத நாடுகளில் அமைந்திருக்கும் 'வறுமை வட்டத்தை' உடைக்கச் சரிசம வளர்ச்சி உதவும் எனச் சொல்லப்படுகின்றது. பொருளாதாரத்தின் பல பிரிவுகளிலும் ஒரே சமயத்தில் முதலீடுகள் செய்யப்பட்டால் சரிசம வளர்ச்சியைப் பெறலாம். பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளும் ஒன்றோடொன்று தொடர்புடையவை என்ற கருத்தின் அடிப்படையில் சரிசம வளர்ச்சிக் கோட்பாடு அமைந்திருக்கின்றது. ஒரு துறையின் வளர்ச்சி மற்றொரு துறையின் உற்பத்திப் பொருட்களுக்கான சந்தையைத் தருகின்றது; பல துறைகளிலும் ஒரே சமயத்தில் முதலீடு செய்யப்படும்போது சந்தையின் அளவு விரிவடைகின்றது. ஒரு துறையின் முன்னேற்றம் பிற துறைகளின் முன்னேற்றத்தாலும் கட்டுப்படுத்தப்படுகின்றது. உதாரணமாக, மூலப்பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில் வளர்ச்சியடையாவிட்டால், அம்மூலப் பொருட்களைப் பயன்படுத்தும் தொழிலின் வளர்ச்சி பாதிக்கப்படும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பொருளாதாரத்தின் பல பிரிவுகளும் ஒருங்கே வளர்ச்சியடைய வேண்டும்.

சரிசம வளர்ச்சியை அடைவதின் மூலம் உற்பத்தித் திறன் முற்றிலுமாகப் பயன்படுத்தப்படுகின்றது. சந்தை விரிவடைவதால் பேரளவு உற்பத்திச் சிக்கனங்கள் கிடைக்கின்றன; விரிவடைந்த சந்தையால் முதலீடு செய்வதற்கான ஊக்கம் அதிகரிக்கின்றது. அளிப்பில் எவ்விதச் சிக்கல்களும் ஏற்படாமல் இருக்கப் பல பொருளாதாரத் துறைகளும் சரிசம வளர்ச்சியைப் பெறவேண்டும். வேளாண்மை, தொழில் ஆகிய இரு துறைகளுக்கும் இடையே வளர்ச்சியில் சமநிலை அமைந்திருக்க வேண்டும். இவ்விரு

துறைகளும் பல வகைகளில் ஒன்றோடொன்று தொடர்பு கொண் டுள்ளன. தொழிற் துறையில் அமைந்துள்ள தொழிலாளர்களின் அதிகரிக்கின்ற உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வது வேளாண் மைத் துறையின் உற்பத்தியேயாகும். மேலும், வேளாண்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பை தொழிற் துறையில் ஈடுபடுத்த லாம். இதனுல் வேளாண்மை வருவாய் அதிகரித்து தொழிற் பொருட்களுக்கான சந்தை விரிவடையும். பேராசிரியர் ஆர்தர் லூயிஸ் (Prof. Arthur Lewis) இதைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

"தயாரிப்புத் தொழிலின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளை எடுக்கும்போது, அதன் மூலம் உற்பத்திச் செய்த பொருட்களுக்கான தேவையைப் பெருக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். தொழில் துறையில் அமைந்துள்ள மக்கட்தொகை குறைவாகவே இருக்கும். இம் மக்கட் தொகை குறைந்த அளவிற்கு மட்டுமே உற்பத்தி செய்த தொழிற் பொருட்களைப் பயன்படுத்த முடியும். எனவே, தொழிற் பொருட்களுக்கான தேவை குறைந்த அளவிலேயே அமைந்திருக் கும். இப்பொருட்களுக்கான தேவை தொழில் துறையல்லாத பிற துறைகளினின்றும் பெறப்படுதல் வேண்டும். தயாரிப்புத்தொழிலில் மட்டும் அதிக மூலதனம் பயன்படுத்தப்பட்டால் வேளாண்மை வளராமல் தேக்க நிலையிலேயே அமைந்திருக்கும். இதனுல் தயாரிப்புத் துறையின் வளர்ச்சி குன்றிவிடும். சமநிலை வளர்ச்சி பொருளாதாரத்தின் பல துறைகளுக்கும் இடையே இருந்தால் தயாரிப்புத் தொழிற் பொருட்களின் தேவை பெருகும். தொழில் களின் வளர்ச்சிக்கு இது இன்றியமையாததாகும். சிறப்பான முன்னேற்றத்தைப் பெற வேளாண்மைக்கும், தொழில் துறைக்கும் இடையே சரிசம வளர்ச்சி ஏற்பட வேண்டும். உள்நாட்டின் நுகர் விற்கான உற்பத்தியைப் பெருக்குவதோடு ஏற்றுமதிக்கான உற்பத்தியையும் உயர்த்த வேண்டும்."

தேவையின் பக்கத்திலிருந்தும் சரிசம வளர்ச்சிக் கோட்பாடு விளக்கப்படுகின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாட்டில் புதிய முயற்சியாகத் தனியான தொழில் ஒன்று தொடங்கப்பட்டால் அது வெற்றியைப் பெறும் எனக் கூறமுடியாது. உற்பத்திப் பொருட்களுக்கான தேவை போதுமான அளவிற்குப் பெருகா மையே இதற்குக் காரணமாகும். மக்கட்தொகை குறைந்த அளவே வாங்கும் திறனைக் கொண்டிருப்பதால் தேவையும் குறைந்த அளவிலேயே அமைந்திருக்கின்றது. ஆனுல் பலவகைப்பட்ட தொழில்களிலும் முதலீடு செய்யப் பட்டால் பொருளாதாரத்தில் 'அதிக அழுத்தம்' ஏற்படும். இதனுல் உற்பத்திப் பெருகுவதோடு தேவையும் பெருகுகின்றது.

சரிசம வளர்ச்சிக் கோட்பாடு பெருமளவு முதலீட்டைப் பல துறைகளிலும் செய்ய வேண்டுமெனக் குறிப்பிடுகின்றது. தனியார் மூலம் பொருளாதாரத்தில் போதுமான மூலதனத்தைப் பெறுவது கடினமானதாகும். எனவே அரசு அதிக அளவு மூலதனத்தை முதலீடு செய்ய முன்வர வேண்டும். முதலீட்டுத் திட்டங்களைத் தெரிந்தெடுத்து மத்திய அரசு திட்டங்களைத் தீட்டுகின்றது. சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டின்படி, அரசு பொருளாதார முன்னேற்றத்தில் முக்கிய பங்கேற்க வேண்டும். அரசின் தீவிரக் கொள்கைகளாலும், நடவடிக்கைகளாலும் ஒரு நாடு பொருளாதார முன்னேற்றத்தை விரைவாகக் குறுகிய காலத்தில் பெற முடியும். அரசு பல விதத் திட்டங்களை மேற்கொண்டு வெவ்வேறு துறைகளின் முன்னேற்றத்திலும் சரிசம வளர்ச்சி ஏற்படுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

பின்தங்கிய நாடுகளில் வறுமை வட்டமே பொருளாதாரம் வளர்ச்சிக் குன்றிய நிலையில் உள்ளமைக்குக் காரணமாகின்றது. நர்க்ஸின் கருத்துப்படி, பின்தங்கிய பொருளாதாரத்தை ஏழை நாடுகள் கொண்டுள்ளமைக்கு மூலதனப் பற்றாக்குறையோடு, வளர்ச்சியடையாத சந்தைகள் முதலீட்டாளர்களுக்கு ஊக்கமளிக்காத நிலையும் காரணமாக அமைகின்றது. மூலதனப்பற்றாக்குறைச் சிக்கல் வளர்ச்சியடையாத எல்லா நாடுகளிலும் அமைந்துள்ள ஒன்றாகும். இச்சிக்கலைத் தீர்க்கப் பல வழிமுறைகளை மேம்பாடடைந்துவரும் நாடுகள் பின்பற்றுகின்றன. ஒரு நாட்டில் போதுமான அளவு மூலதனத்தின் அளிப்பு அமைந்திருந்தால் தொடர்ச்சியாக விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இயலும். ஆனால் அதிக மூலதனத்திரட்சி ஏற்பட்டாலும் கூட பொருளாதார வளர்ச்சி வீதம் உயர்வாக அமைந்திருக்குமெனக் கருதமுடியாது என்பது சில பொருளியலாளர்களின் கருத்தாக இருக்கின்றது. முதலீடு செய்வதற்குப் போதுமான ஊக்கமானது அமைந்திருக்க வேண்டுமென்பது அவர்களுடைய கருத்தாகும்.

வளர்ச்சியடையாத சந்தை தனியொரு தொழில் அமைப்பாளருக்கு முதலீடு செய்யும் ஊக்கத்தை அளிக்காது. ஆனால் மூலதனமானது பரந்த அளவில் ஒன்றோடொன்று தொடர்புடைய பல தொழில்களிலும் முதலீடு செய்யப்பட்டால் விரைவான பொருளாதார வளர்ச்சி ஏற்படுகின்றது; மூலதனத்தின் இறுதி நிலை உற்பத்தியும் கணிசமாக உயர்வடைகின்றது. சரிசம வளர்ச்சியின் மூலமாக சந்தைச் சிக்கல்கள் தீர்க்கப்படுகின்றன; வளர்ச்சியடையாத தேக்கச் சமநிலை நீக்கப் படுகின்றது.

**சரிசம வளர்ச்சியில் அரசின் பங்கு**

பின்தங்கிய பொருளாதாரத்தைக் கொண்ட நாடுகளில் தனித் தொழில் அமைப்பாளர்கள் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை உயர்ந்த அளவில் பெற்றிருக்க மாட்டார்கள். ஆனல், இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகளில் பல தனியார் முதலீட்டினல் முன் னேற்றத்தைப் பெற்றவைகளேயாகும். எனினும், அரசு தனியார் துறைக்கு ஊக்கமளித்தமையும் இந்நாடுகள் பொருளாதார முன் னேற்றத்தைப் பெற்றமைக்கு ஒரு காரணமாக அமைந்திருந்தது. தற்போதைய நிலைகளில், வளர்ச்சியடைந்து வரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கிய பங்கு வகிப்பது அரசே யாகும். ஜப்பானில் அரசு பல தொழில்களைத் தொடங்கி, பிறகு அவற்றை தனியாரிடம் ஒப்புவித்தது. இவ்வாறு ஜப்பானில் தொழில் வளம் பெருக அரசு பெரிதும் உதவியிருக்கின்றது.

சரிசம வளர்ச்சியைப் பெறுவதற்கான நடவடிக்கைகளை அரசு மேற்கொள்வதா; அல்லது தொழில் முயல்வோர் அதற்கான பணி களை மேற்கொள்ளும்படி விட்டுவிடுவதா என்பது ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும். சரிசம வளர்ச்சியைப் பெற விரிவடைந்த சந்தை அமைந்திருக்க வேண்டும். விரிவடைந்த சந்தையே முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை அளிக்கும். அரசின் எல்லா முதலீடு களுமே இலாப நோக்கோடு செய்யப்படுவதில்லை. சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டிற்கும், தனியார் துறை செல்வாக்குப் பெற்றிருக்கின்ற பொருளாதாரத்திற்கும் இடையே நெருங்கியத் தொடர்பானது அமைந்திருக்கின்றது.

சரிசம வளர்ச்சிக் கொள்கையானது மூலதனத்தின் அளிப்பு போதுமான அளவிற்கு அமைந்திருப்பதாகக் கொள்கின்றது. மூலதனம் எவ்வாறு திரட்டப்படுகின்றது, எங்கிருந்து பெறப் படுகின்றது என்பவை பற்றி சரிசம வளர்ச்சிக் கோட்பாடு குறிப் பிடவில்லை. மூலதனத்தைத் திரட்டுவதில் உள்ள சிக்கல்களைப் பற்றியும் அது ஆராயவில்லை. நர்க்ஸின் கூற்றுப்படி, "பெருமளவு மூலதனத்தைக் கொண்டு சரிசம வளர்ச்சியால் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம்." அதிக அளவு உழைப்பின் அளிப்பு அமைந்துள்ள பொருளாதாரத்தில், அதிக மூலதனத்தைப் பயன் படுத்தி முன்னேற்றத்தை அடையலாம் என்பது பேராசிரியர் லூயிஸ் கருத்தாக இருக்கின்றது. பின்தங்கிய நாடுகளில் மூல தனத்தின் அளிப்பு அதிக அளவில் அமைந்திருப்பதில்லை. எனவே அரசு நேரடியாகவோ, மறைமுகமாகவோ உள்நாட்டுச் சேமிப்பைப் பெருக்க முயற்சிகளை எடுக்க வேண்டும். ஆனல் அரசின் இம் முயற்சி கள் நுகர்வைக் கட்டுப்படுத்தி சேமிப்பை உயர்த்த உதவினலும்

தனியார் முதலீட்டிற்கான ஊக்கமானது பாதிக்கப்படுகின்றது என மால்தஸ் கருதினர். இந் நிலையில் அரசு முதலீடுகளைச் செய்ய முன்வருவது அவசியமானதாகும். முதலீட்டுத் திட்டங்கள் வெற்றி பெற மூலதனத்தின் அளிப்பு அதிகமாக இருக்க வேண்டும். ஒன்றோடொன்று தொடர்புடைய பல தொழில்களிலும் ஒரே சமயத்தில் முதலீடு செய்து சரிசம வளர்ச்சியைப் பெறலாம்.

வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மை உற்பத்தி சுய தேவைப் பூர்த்திக்காகவே பெரும்பாலும் செய்யப்படுகின்றது. அதிக விற்பனை உபரியும் வேளாண்மையினின்றும் கிடைப்பதில்லை. வேளாண்மையில் அமைந்துள்ள மக்கட்தொகை குறைவான வருவாயைப் பெறுவதால் பொறிசெய்ப் பொருட்களுக்கான தேவையும் குறைவாகவே இருக்கின்றது. வேளாண்மைப் பொருட்களுக்கான சந்தை வளச்சியடையாத நிலையும் வேளாண்மை மேம்பாடு அடையாமைக்கு ஒரு காரணமாகிறது. இவையே பின்தங்கிய நாடுகளில் வறுமை வட்டம் உள்ளமைக்கு அடிப்படையாக அமைகின்றன. வேளாண்மையில் விற்பனை உபரி ஏற்பட்டாலும்கூட, அவ்வுபரி வேளாண்மையல்லாத துறைகளில் முதலீடு செய்வதற்கான மூலதனத்தைத் தருவதில்லை. "அது விற்பனை உபரியாக இருக்கின்றதே தவிர முதலீட்டிற்கான உபரியாக இருப்பதில்லை." வேளாண்மையல்லாத துறைகளில் நேரடியாக முதலீடு செய்வதற்கான மூலதனம் வேளாண்மை விற்பனை உபரியின் மூலம் பெறப்படுவதில்லை.

விற்பனை உபரி அதிகரித்தாலும் வேளாண்மைத் துறையில் சேமிப்பு பெருகும் எனக் கூற இயலாது. உபரி உற்பத்தியை விற்பனை செய்வதின் மூலம் கிடைக்கக்கூடிய வருவாயைக் கிராம மக்கள் பல வகைப்பட்ட தொழிற் பொருட்களை வாங்கப் பயன் படுத்துவார்கள். வருவாயின் ஒரு பகுதி வேளாண்மைத் துறையிலேயே முதலீடு செய்யப் பயன் படுத்தப்படலாம். எனவே, அதிகரிக்கின்ற வருவாயின் மிகக் குறைவான பகுதியே வேளாண்மையல்லாத பிற துறைகளில் முதலீடு செய்யக் கிடைக்கின்றது. வேளாண்மை உற்பத்தி தன்னிறைவிற்காக மட்டும் மேற்கொள்ளப்படாமல் சந்தைக்காகவும் செய்யப்பட வேண்டும். இதன் மூலம் அதிக வேளாண்மை விற்பனை உபரியைத் தோற்றுவிக்கலாம்; வேளாண்மையல்லாத பிற துறைகளிலும் முதலீட்டின் அளவு அதிகரிக்கும். இதன் காரணமாக மூலதனத்தின் அளிப்பும் அதிகரிக்க வாய்ப்பு உண்டு. வேளாண்மைத் துறையின் வளர்ச்சி வேளாண்மையல்லாத துறைகளின் மூலதனத் தேவையைப் பெருக்கிவிடும்.

சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டின்படி, பெருமளவு மூலதனம் பரவலாகப் பல துறைகளிலும் ஒரே காலத்தில் முதலீடு செய்யப் பட வேண்டும். பரவலாகப் பல துறைகளிலும் முதலீடு செய் யப்படுவதால் தனியொரு உற்பத்தி நிறுவனத்திற்கான மூலதனம் மிகவும் குறைவாகவே இருக்குமெனக் குறை கூறப்படுகின்றது. இதனால் பல உற்பத்தி நிறுவனங்களின் இயக்கநிலை சிறப்பாக அமைந்திருக்குமெனக் கருத முடியாது. முதலீட்டின் அளவு ஒரு நாட்டில் அமைந்திருக்கக்கூடிய வளங்களைப் பொருத்தும், தொழில் நுணுக்க வளர்ச்சியைப் பொருத்தும் அமையும். இவ்வாறு நர்க்ஸ் சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டைப் பல நிலைகளிலும் விளக்கு கின்றார்.

**சரிசமனில்லாத வளர்ச்சி (Unbalanced Growth)**

வளர்ச்சியடையாத நாடுகளில் முதலீட்டுத் திட்டங்களை நிறைவேற்றுவது கடினமானதாக அமைந்திருக்கும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான வழிமுறைகளைக் குறிப்பிடும் கோட்பாடுகளில் சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டைச் சிறப் புடையது எனக் கருதமுடியாது எனப் பேராசிரியர் ஹிர்ச்மேன் (Hirschman) கூறுகின்றார். பல பொருளாதார நடவடிக்கைகளும், வெவ்வேறு முதலீடுகளும் ஒன்றோடொன்று தொடர்பு கொண் டுள்ளன என்பதை அவர் ஒப்புக் கொள்கின்றார். ஆனால் ஒன்றோ டொன்று தொடர்புடைய நடவடிக்கைகளை ஒருங்கே தொடங்க வேண்டுமென்பது அவசியமில்லை என்பது அவருடைய கருத்தாகும். முன்னேற்றமென்பது பின்தங்கிய பொருளாதாரத்தில் மாற்றம் ஏற்படுவதைக் குறிக்கின்றது. எந்நிலையிலிருந்து முன்னேற்றம் தொடங்க வேண்டுமென்பதை சரிசம வளர்ச்சிக் கோட்பாடு விளக்க வில்லை. பின்தங்கிய நாடுகளின் வளர்ச்சியடையாச் சமநிலையை எங்கு, எவ்வாறு முறியடிக்கலாம் என்பது பற்றியும் இக்கோட்பாடு குறிப்பிடவில்லை. தேக்கநிலைப் பொருளாதாரத்தில் அதிக அளவு நவீன தொழில்களை ஏற்படுத்துவதின் மூலம் விரைவான வளர்ச்சி யைப் பெற்றுவிட இயலாது. அவ்வாறு செய்தாலும் அது வெற்றியை அளிக்காது. பின்தங்கிய பொருளாதாரத்தில் பல தொழில்கள் வெவ்வேறு இடங்களில் சிதறிக்கிடத்தல் எவ்வித நன்மையையும் தராது.

சரிசம வளர்ச்சிக் கோட்பாடு பொருளாதாரத் தொடர்பு களைப் பற்றி விளக்குகின்றதே தவிர, பொருளாதார முன்னேற் றத்தைப் பெறுவதற்கான வழிமுறைகளைக் குறிப்பிடவில்லை என ஹிர்ச்மேன் குறை கூறுகின்றார். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில், பல தொழில்களிலும் முன்னேற்றத்தை ஒரே சமயத்தில் பெறுவது இயலாததாகும்; பல தொழில்களையும் ஒரே சமயத்தில் தொடங்கி உற்பத்தியை உயர்த்துவது முடியாததாகும். இவை யாவற்றையும்

பெறுவதற்கான தொழில் நுட்பம் பின்தங்கிய நாடுகளில் அமைந்திருக்காது. தொழில் முயல்வோர், மேலாளர்கள் ஆகியோருடைய எண்ணிக்கையும் குறைவாகவே இருக்கும்; மேலும், அவர்களுடைய திறமையும் உயர்வாக இருக்குமெனக் கூற முடியாது. சரிசம வளர்ச்சியைச் செயல்படுத்த வேண்டுமென்றால் பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் அமைந்திருக்கக் கூடாது. எல்லா வசதிகளையும், வளங்களையும் கொண்ட மேம்பாடடைந்த பொருளாதாரத்தில் மட்டுமே சரிசம வளர்ச்சி பெற வாய்ப்புக்கள் உள்ளன எனலாம்.

சரிசம வளர்ச்சிக் கோட்பாட்டை மறுக்கின்ற ஹிர்ச்மேன் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான 'சரிசமனில்லாத வளர்ச்சி' முறையைப் பற்றி விளக்குகின்றார். தன்னுடைய வாதத்தில் அவர் பல வரலாற்று உண்மைகளைச் சான்றாகத் தருகின்றார். பல நாடுகளின் பொருளாதாரங்களிலும் சில இடங்களில் மட்டும் தனித்து அமைந்திருக்கக்கூடிய தொழில்களின் முன்னேற்றத்தைப் பற்றி அவர் குறிப்பிடுகின்றார். சில பழைமையான துறைகளைக் காட்டிலும் இவை விரைவான வளர்ச்சி வீதத்தைக் கொண்டுள்ளன. 'இயக்கநிலைப் பொருளாதாரங்களின்' (Dynamic Economies) சில துறைகளில் மிக விரைவான வளர்ச்சியும், பிற துறைகளில் வளர்ச்சி குறைவான வேகத்திலும் அமைந்திருப்பதை அறியலாம். சரிசம வளர்ச்சி ஏற்படுவது பொருளாதார முன்னேற்றத்தின் பிற்பட்ட நிலைகளில்மட்டுமே ஆகும். முன்னேற்ற நிலைகளிலேயே சரிசம வளர்ச்சியைப் பெறுவது முடியாததாகும். பொருளாதார முன்னேற்றத்தின்போது சில துறைகளில் சிறப்பான வளர்ச்சியும், வேறு துறைகளில் வளர்ச்சி சிறப்பாக இல்லாமையும் இயல்பானதேயாகும். எல்லாத் துறைகளும் சரிசமமாக வளர வேண்டுமென்பது அவசியமானதல்ல. சில துறைகளை விட வேறு சில துறைகள் விரைவாக வளரும்போது பொருளாதார நடவடிக்கைகள் தீவிரமடைகின்றன. விரைவான முன்னேற்றத்தைப் பெறவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. சில துறைகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் முன்னேறுவதும், வேறு சில துறைகள் மற்றொரு காலத்தில் முன்னேறுவதும் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை அளிக்கின்றன. முதலீட்டாளர்கள் சிறப்பான முடிவுகளை எடுக்க முடிகின்றது. இதன் மூலமாக பலவிதச் சிக்கனங்களும் பெறப் படுகின்றன.

முன்னேற்ற நிலைகளில் உறுதியற்ற தன்மை அமைந்திருப்பதை ஹிர்ச்மேன் உணர்த்துகின்றார். உறுதியற்ற சமநிலை பொருளாதார முன்னேற்றத்தின் போது அமைந்திருப்பது இயல்பானதேயாகும். சிறப்பான முன்னேற்றக் கொள்கையைப் பற்றி

ஹிர்ச்மேன் விளக்குகிருர். எவ்வாறு முன்னேற்றத்தைப் பெறலாம் என்பதற்கான முறைகளையும் அவர் குறிப்பிடுகின்ருர். முன்னேற்றக் கொள்கை நோக்கம் பல துறைகளுக்கும், பல தொழில்களுக்கும் இடையே அமைந்திருக்கக்கூடிய சமனில்லாத நிலையை நீக்குவதும் ஆகும். பல துறைகளின் முன்னேற்றத்தோடு பல தொழில்களின் வளர்ச்சியும் அவசியமாகின்றது. ஆனல் பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது உற்பத்திக் காரணிகள் பல துறைகளிலும் சரியான வீதத்தில் இணைக்கப் படாமல் இருக்க வாய்ப்பு உண்டு. வளர்ச்சியிலும் சமனில்லாத நிலை தோன்றும்; சரிசம நிலை வளர்ச்சிப் பொருளாதாரத்தைப் பெறுவதும் இயலாது. பொருளாதார முன்னேற்றம் சரிசம வளர்ச்சியினின்றும் விலகியே செல்கின்றது. ஒரு தொழிலின் வளர்ச்சி பிற தொழில்களின் வளர்ச்சிக்கான புறச்சிக்கனங்களை ஏற்படுத்துகின்றது. பல தொழில்களும் புறச்சிக்கனங்களால் நன்மைகளை அடைகின்றன. இவ்வாறு ஒரு தொழிலின் முன்னேற்றம் விரிவாக்கப் பணிகளுக்குத் தொடக்கமாக இருக்கின்றது.

இவை யாவும் நடைபெறுகின்றமைக்கு ஒரு குறிப்பிட்ட பொருளின் தேவை பெருகி, அப்பொருளை உற்பத்தி செய்கின்ற தொழில் வளர்கின்றமையே காரணமாக அமைகின்றது. இத் தொழிலின் வளர்ச்சியால் வேருெரு பொருளின் தேவையும் பெருகுகின்றது. கூட்டுத் தேவை கொண்ட பொருட்களில் இந்நிலை இயல்பாகவே ஏற்படுகின்றது. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் ஒரு பொருள் அதிக அளவிற்குக் கிடைக்கும்போது, மற்ருெரு பொருளின் தேவையும் அதிகரிக்கின்றது. அவ்விரு பொருட்களும் 'நிறைவு செய் பொருட்களாக' (Complementary Goods) இல்லாமலும் போகலாம். ஒரு தேவையைப் பூர்த்தி செய்யும் போது பிற தேவைகளும் தோன்றுகின்றன. தேவைக்கு ஏற்பவே பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. விற்பனையைப் பெருக்க உற்பத்தியாளர்களால் பலவித நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் பெறுகின்றன. அவசியத்தின் அடிப்படையிலேயே பல விதமான கண்டுபிடிப்புக்களும் தோன்றுகின்றன. எனவே, தேவையின் பக்கத்தில் சமநிலையைப் பெறுவது முடியாத ஒன்ருகின்றது. ஒரு தொழிலில் முதலீடு செய்யப்பட்டு, அதன் காரணமாக பிற தொழில்களிலும் முதலீடுகள் செய்யப் படுகின்றன. ஒன்ருேடொன்று தொடர்புடைய பல தொழில்களும் வளர்வதால் பல வகைப்பட்ட சிக்கனங்களும் பெறப் படுகின்றன. இவை யாவும் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் ஒன்றிற்கு ஒன்று உதவுபவைகளாக அமைகின்றன.

சரிசம வளர்ச்சிக் கோட்பாடு சிறப்பானதொரு கோட்பாடாகத் தோற்றமளித்தாலும்கூட, அதில் பலவிதச் சிக்கல்கள் அமைந்துள்ளன. சரிசம வளர்ச்சி முறையில் பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றுவது கடினமானதாகும். சோவியத் ரஷ்யா, ஜப்பான், இந்தியா போன்ற நாடுகளில் 'சரிசமனில்லாத வளர்ச்சியே' பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான முறையாகப் பின்பற்றப் பட்டது. இம்முறையின் மூலம் அடிப்படைத் தொழில்கள் முதலில் வளர்க்கப்படுகின்றன; பிறகு, நுகர் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் மேம்படுத்தப் பெறுகின்றன. தற்காலிக இடர்ப்பாடுகளைத் தவிர்க்க உதவுதாக இருப்பது சரிசமனில்லாத வளர்ச்சியாகும். குறுகிய காலத்தில் பல சிக்கல்களைத் தீர்க்கவும் இது உதவுகின்றது. ஆனால் சரிசமனில்லா வளர்ச்சி நீண்ட காலத்திலேயே மிக அதிக அளவு நன்மைகளை அளிக்கின்றது. நீண்ட காலத்தில் ஏற்படக்கூடிய நன்மைகளுக்காக, குறுகிய காலத்தில் தோன்றக்கூடிய குறைபாடுகளைக் கருதக் கூடாது. எதிர்காலத்தில் பல நன்மைகளையும் பெற குறுகிய காலத்திற்குச் சில இடர்ப்பாடுகளை ஏற்பது தவறாகாது. 'சரிசமனில்லாத வளர்ச்சி' மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு முக்கியத்துவம் தருகின்றது. இவ்வகை முதலீடு விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவும் உதவுகின்றது. அடிப்படைத் தொழில்கள் மேம்பாடடைந்த பிறகு நுகர்வு அதிகரிக்கின்றது; நீண்ட காலத்தில் நுகர் பொருட்களின் உற்பத்தியும் பெருகுகின்றது.

முன்னேற்றமடைந்த நாடுகளின் பொருளாதார மேம்பாட்டிற்குச் சரிசமனில்லா வளர்ச்சியே முக்கியக் காரணமாகும். இந்நாடுகளில் சில தொழில்கள் முதல் நிலையில் மிக விரைவாக வளர்ச்சியடைந்தன. இவ்வகைத் தொழில்களின் வளர்ச்சியைத் தொடர்ந்து பிற தொழில்களும் முன்னேற்றமடைந்தன. பொருளாதாரத்தின் வளர்ச்சியடைந்த ஒரு துறை மற்றொரு துறை வளர்ச்சியடைய உதவுகின்றது. ஒரு துறை விரைவாக வளரும்போது பிற துறைகளும் அதைத் தொடர்ந்து வளர்கின்றன. தொழில்களின் வளர்ச்சியில் ஏற்றத் தாழ்வுகள் மிகுதியாக இருந்தாலும்கூட, சரிசமனில்லா வளர்ச்சியே சிறப்புடைய ஒன்றாகக் கருதப்படுகின்றது.

பொருளாதார முன்னேற்றம் சரிசமனில்லா நிலைகளைக் கொண்டது என்பது ஹிர்ச்மேன் கூற்று. சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாட்டை அவர் முன்னேற்றத்திற்கான ஒரு முறையாகத் தருகின்றார். பின்தங்கிய நாடுகளில் தெரிந்தெடுக்கப்பட்ட தொழில்களிலோ, துறைகளிலோ 'அதிக அழுத்தத்தை' (Big Push)

ஏற்படுத்த வேண்டும். இதன் மூலமே வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அமைந்திருக்கக் கூடிய வறுமை வட்டத்தை நீக்க முடியும். பொருளாதாரத்தில் அறிந்தே சரிசமனில்லா நிலைகளை உருவாக்க வேண்டும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு இதுவே சிறந்த வழியாகும். முன்னேற்றத்தைப் பெறுவது எளிதானதல்ல. முன்னேற்ற நிலைகளில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுவது இயல்பு. ஹிர்ச்மேன் கருத்துப்படி, முன்னேற்றமென்பது சரிசமனில்லா நிலைகளைக் கொண்ட சங்கிலியாகும். ஒரு நாட்டுப் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளும் ஒரே சமயத்தில் ஒரே வேகத்தில் வளர்வதில்லை. சில துறைகளில் விரைவான வளர்ச்சியும், வேறு சில துறைகளில் விரைவு குறைந்த வளர்ச்சியும் காணப்படுவதுண்டு. சில துறைகள் மிகவும் பின்தங்கிய நிலையிலும் இருப்பதுண்டு. ஆனால், வளர்ச்சியடைந்த துறைகள் வளர்ச்சியடைந்து வரும் துறைகள் முன்னேற உதவுகின்றன. ஒரு தொழில் மற்றொரு தொழிலின் வளர்ச்சிக்கு வகை செய்கின்றது.

சரிசமனில்லா வளர்ச்சியில் அமைந்திருக்கக்கூடிய முக்கிய நன்மை முதலீடு செய்வதற்கான ஊக்கம் பெருகுவதாகும். வளர்ச்சியடைந்துவரும் துறைகளில் உற்பத்தியாளர்கள் ஊக்கத்தோடு முதலீடு செய்கின்றார்கள். இவ்விதத் துறைகளில் முதலீடுகள் செய்யப்படும்போது, சில சரிசமனில்லா நிலைகள் மாற்றப்படுகின்றன. ஆனால், இதன் மூலம் சரிசமனில்லா நிலைகள் வேறு வகையில் தோன்றுகின்றன. நீண்ட காலத்தில் பல துறைகளிலும் முதலீடு செய்வதற்கான ஊக்கம் அதிகரித்து விடுகின்றது. பின் தங்கிய நாடுகளில் தொழில் முயல்வோருடைய பணிகள் சிறப்பாகப் பெறப்படுவதில்லை. ஹிர்ச்மேன் கூறுவதுபடி, முன்னேற்றத்தைப் பெற நேரடியான உற்பத்தி நடவடிக்கைகளில் முதலீடு செய்யப்படுகின்றது ; அல்லது உற்பத்திக்கு மறைமுகமாக உதவக் கூடிய சமுதாயப் பணிகளில் முதலீடு செய்யப் பெறுகின்றது. போக்குவரத்து, செய்தித் தொடர்பு, இயக்கச் சக்தி, தண்ணீர் வசதி, ஆகியவை இன்றி உற்பத்தி செய்வது இயலாததாகும். இவற்றில் ஏற்படுகின்ற முன்னேற்றம் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்திக்குப் பெரிதும் உதவுகின்றது. நேரடி உற்பத்திப் பணிகளில் முதலீடு செய்வதாலும் ஒரு பொருளாதாரத்தின் உற்பத்தித்திறன் பெருகுகின்றது.

பிற தொழில்களோடு இணைப்புடைய அடிப்படைத் தொழிலில் முதலீடு செய்யப்பட வேண்டுமென்பது ஹிர்ச்மேனின் கருத்தாகும். எவ்விதத் தொழில்களில் முதலீடு முதலில் செய்யப்பட வேண்டுமென்பதற்கு அவர் இவ்வாறு விளக்கம் தருகிறார். ஒரு துறையில் செய்யப்படுகின்ற முதலீடு, பிற துறைகளிலும் முதலீடு

பெருகுவதற்கான ஊக்கத்தை அளிக்கவேண்டும். அதிக அளவு பிற தொழில்களோடு தொடர்புடைய அடிப்படைத் தொழிலைத் தொடங்குவது அவசியமானதாகும். திட்டமிடுபவர்கள் பொருளாதாரத்தில் 'வளரக்கூடிய துறைகளை' அறிந்து அவற்றில் முதலீடு செய்ய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இவ்விதத் துறைகளில் முதலீடு செய்யப் பெற்றால், மேலும் பல துறைகளில் முதலீடு செய்வதற்கான ஊக்கம் அதிகரிக்கும். ஏனெனில், இத் துறைகள் வேறு பல துறைகளோடு அதிக அளவிற்கு இணைப்புக் கொண்டவைகளாக இருக்கின்றன.

**சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாட்டிற்கு மறுப்புக்கள்**

(1) சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாட்டின்படி, பொருளாதாரத்தின் தெரிந்தெடுக்கப்பட்ட சில துறைகளில் அதிக அளவு முதலீடுகள் செய்யப் படுகின்றன. தேசிய வருவாய் உயரும்போது நுகர் பொருட்களின் தேவையையும் அதிகரிக்கின்றது. சரிசமனில்லா வளர்ச்சியாலும், பிற இடர்ப்பாடுகளாலும் நுகர்பொருட்களின் உற்பத்தி பெருகுவதில்லை. நுகர் பொருட்களின் பற்றாக் குறை பொருளாதாரத்தில் பணவீக்க நிலையைத் தோற்றுவிக்கின்றது. பொருட்களின் விலைகள் மிகவும் உயர்வடைகின்றன. சரிசமனில்லா வளர்ச்சி இவ்வித குறைபாட்டைக் கொண்டதாக இருக்கின்றது. பற்றாக்குறையால் கள்ளச் சந்தைகள் தோன்றுகின்றன ; பொருட்கள் பதுக்கப் படுகின்றன ; முற்றுரிமை நிலைகள் நிலவுவதின் மூலம் கொள்ளை இலாபங்கள் உற்பத்தியாளர்களாலும், வணிகர்களாலும் பெறப் படுகின்றன. இந்நிலைகளால் முதலீடுகள் சரியான வகையில் செய்யப்படாமல், முதலீட்டாளர்களும் பாதிக்கப்படுகின்றனர். உற்பத்தித்தியாளர்களுக்கிடையே போட்டி அதிகரித்து அவர்களின் இலாபமும் பெருமளவிற்குப் பாதிக்கப்படும்.

(2) சரிசமனில்லாத வளர்ச்சியால் பொருளாதார முன்னேற்றத்தில் பல தடைகள் தோன்றுகின்றன. உதாரணமாக, தொழில்துறை மேம்பாடடையும்போது வேளாண்மைத்துறை பின் தங்கிய நிலையிலேயே இருப்பது நல்லதல்ல. இதன் காரணமாக ஏற்படும் பணவீக்க நிலை முன்னேற்றத்திற்கு இடையூறாக அமையும். வெளிநாட்டு வாணிபத்தில் வளர்ச்சி தோன்றாமல் 'பாதக அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலை' ஏற்படும். தொழில் துறையின் முன்னேற்றம் வேளாண்மைத்துறையின் வளர்ச்சியைச் சார்ந்திருக்கின்றது. தொழில் துறை முன்னேற்றம் தொழிற் பொருட்களின் தேவைப் பெருக்கத்தையும் பொருத்து அமையும். பெரிய தொழில்களின் வளர்ச்சி தேவைப்பற்றாக் குறையால் பாதிக்கப்படும்.

(3) சரிசமவளர்ச்சிக் கோட்பாட்டில் உள்ள குறை என்ன வென்றால், அது உற்பத்திக் காரணிகள் கிடைப்பருமை கொண் டவை எனக் கொள்ளவில்லை. இதே குறைபாடு ஹிர்ச்மேனின் கோட்பாட்டிலும் அமைந்திருக்கின்றது. வளர்ச்சியடையாத சந்தைகள் முன்னேற்றத்திற்குத் தடையாக அமைகின்றன என நர்க்ஸ் விளக்குகின்றார்; ஹிர்ச்மேன் முதலீடு செய்வதற்கான முடிவுகளை எடுப்பதற்கு முக்கியத்துவம் அளிக்கின்றார். ஆனால் தொழில் முயல்வோர் புதிய துறைகளில் முதலீடு செய்யத் தயங் கலாம். நீண்ட காலத்தில் மட்டுமே இலாபத்தைத் தரக்கூடிய துறைகளிலும் தொழில் அமைப்பாளர்கள் முதலீடு செய்ய விரும்பு வதில்லை. இவை யாவும் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக அமைகின்றன.

**சரிசமவளர்ச்சிக் கோட்பாடும், சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாடும்**

'அதிக அழுத்தக்' (Big Push) கோட்பாட்டின் அடிப்படை யிலேயே இவ்விரு கோட்பாடுகளும் அமைக்கப் பட்டுள்ளன. இரு கோட்பாடுகளும் பின்தங்கிய நாடுகளின் வறுமை வட்டத்தை நீக்கப் பெருமளவிற்கு முதலீடு செய்யப்பட வேண்டுமெனக் கூறு கின்றன. ஆனால் சரிசம வளர்ச்சிக் கோட்பாடு பொருளாதாரத்தின் பல துறைகளிலும் ஒரே சமயத்தில் முதலீடு செய்யப்பட வேண்டுமென்று பரிந்துரைக்கின்றது. சரிசமனில்லா வளர்ச்சிக் கோட்பாடு, முதலீடுகள் ஒரே சமயத்தில் செய்யப்படாமல் படிப்படியாகச் செய்யப்பட வேண்டுமெனக் கூறுகின்றது; மேலும், முதலீடுகள் பல துறைகளிலும் செய்யப்படாமல் தெரிந்தெடுக்கப் பட்ட சில துறைகளில் மட்டுமே செய்யப்பட வேண்டுமெனக் குறிப்பிடுகின்றது.

இந்த இரு கோட்பாடுகளிலும் ஓரளவு உண்மை அமைந் திருக்கிறது. சரிசம வளர்ச்சிக் கோட்பாடு ஒன்றிற்கொன்று உதவக்கூடிய தொழில்களில் ஒரே காலத்தில் முதலீடு செய்ய வேண்டுமெனக் கூறுகின்றது. இதனால் எல்லாத் தொழிற் பொருட் களின் தேவையும் பெருகும். இரண்டாவதாக, இக்கொள்கையின் படி வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் எச்ச உற்பத்தித்திறன் ஏற்படுவது தவிர்க்கப் படுகின்றது. எச்ச உற்பத்தித்திறன் அமைந்திருப்பது சில துறைகளில் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை இழக்கச் செய்யும். ஆனால் சில காலங்களில் சரிசம னில்லா வளர்ச்சி முன்னேற்றத்திற்குத் தடையாக அமை யாமல் பொருளாதார மேம்பாட்டை ஊக்குவிப்பதும் உண்டு. 'சிங்கர்' (Singer) கூற்றுப்படி, "தங்களுக்கிடையே உதவிக்

கொள்ளக்கூடிய தொழிற் திட்டங்களின் இணைப்பால் முதலீட்டினால் கிடைக்கக்கூடிய உற்பத்தியின் அளவு உயர்வடைகின்றது; உற்பத்திப் பொருட்களுக்கான சந்தை இதன் மூலம் கிடைக்கின்றது. முன்னேற்றமடையாத நாடுகளில் வளர்ச்சியடையாத சந்தைகளே மேம்பாடு அடைவதற்குத் தடையாக உள்ளன.''

சரிசமனில்லா வளர்ச்சிக் கொள்கையிலும் உண்மை நிலை அமைந்திருப்பதை அறிய முடிகின்றது. பின்தங்கிய நாடுகளில் இயற்கை வளங்களின் 'கிடைப்பருமை' (Scarcity) அமைந்துள்ளது என்பதையும் இக் கோட்பாடு உணர்த்துகின்றது. இந்நாடுகளில் முன்னேற்றத்தைப் பெறுவதற்கான திறமையும் மக்களிடம் அமைந்திருப்பதில்லை. ஒன்றோடொன்று தொடர்புடைய பல தொழில்களையும் ஒரே சமயத்தில் வளர்ப்பது பல பொருட்களின் தேவையைப் பெருக்க உதவும் என்பது உண்மையான கூற்றேயாகும். ஆனால் வளர்ச்சியடையாத ஒரு நாட்டில் உற்பத்திக்கான வசதிகள் பற்றாக்குறை நிலையில் அமைந்துள்ளன. முன்னேற்றத்திற்குத் தேவையான தொழில் நுட்பமும், திறமையும் சிறப்பான அளவிற்கு வளர்ந்திருப்பதில்லை. எனவே, பின்தங்கிய பொருளாதாரத்தில் முதலீடுகளைப் பெருமளவிற்குப் பல துறைகளிலும் செய்வது இயலாததாகும். எச்ச உற்பத்தித் திறனைத் தோற்றுவிப்பது சில துறைகளில் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை இழக்கச் செய்துவிடும். ஆனால் சில நிலைகளில் சரிசமனில்லா வளர்ச்சி முன்னேற்றத்திற்கு உதவுவதும் உண்டு. சரிசமனில்லா வளர்ச்சி விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவுகின்றது. சரிசமனில்லா வளர்ச்சியால் முன்னேற்றத்தில் அதிக அளவிற்குத் தடைகளும் ஏற்படுவதில்லை. சரிசம வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கும்போது, பொருளாதாரத்தில் இயக்கநிலைக்குப் பதிலாகத் தேக்கநிலையே நீடிக்கும். பலவிதமான இடர்ப்பாடுகளினால் உற்பத்தியின் அளவானது பாதிக்கப்படுகின்றது; உற்பத்தி சிறப்பான அளவிற்கு உயர்வடைவதில்லை.

சரிசமவளர்ச்சியினால் இடர்ப்பாடுகள் ஏற்படுவது போலவே, முன்னேற்றத்திற்கான வாய்ப்புக்களும் மற்றொரு புறத்தில் அமைந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் உலகின் பல நாடுகளிலும் இருப்புப்பாதைகள் அமைக்கப் பட்டன; பல பெரிய தொழில்களும் ஏற்படுத்தப்பட்டன. இதன் மூலமாக புதிய வகைப்பட்ட பல தேவைகள் எண்ணிக்கையில் அதிகமாக உயர்ந்தன. பல வகைப்பட்ட பொருளாதார நடவடிக்கைகளும் ஊக்குவிக்கப்பட்டன. உலகின் பல நாடுகளின் பொருளாதார வரலாறுகளை ஆராயும்போது, சரிசம வளர்ச்சி எந்த ஒரு

நாட்டிலும் அமைந்திருக்கவில்லை. சில துறைகள் விரைவாக வளர்ச்சியடைந்தபோது, வேறு துறைகள் அந்த அளவிற்கு விரைவான வளர்ச்சியைக் கொண்டில்லாத நிலையையும் நம்மால் அறிய முடிகின்றது. சரிசமனில்லா வளர்ச்சியின் மூலமே உலகின் பல நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றன.

## நிறைவுரை

ஒரு நாட்டின் இயற்கை வசதிகளைப் பொருத்தும் முன்னேற்றத்தைப் பெறுவதற்கான கொள்கை அமையுமெனலாம். ஒரு நாடு வளங்கள் இல்லாத வறிய நிலையில் இருந்தால், அக் குறைவான வளங்களைக் கொண்டு பரந்த அளவில் பல துறைகளிலும் முதலீடு செய்வது இயலாது. அவ்வாறு முதலீடுகளைச் செய்தாலும் அதன் மூலம் நன்மைகளைப் பெற முடியாது. மற்றொரு புறத்தில், வசதிகள் பெருமளவிற்கு இருக்கும் ஒரு நாட்டில், அவ்வசதிகளை ஓரிரு தொழில்களில் மட்டும் முதலீடு செய்வதும் தவறானதாகும். "ஐநூறு முட்டைகள் ஒரு கூடையில் இருந்தால் கூடை பிய்ந்து விட ஏதுவுண்டு ; இரண்டு முட்டைகள் ஒரே கூடையில் இருக்கும் போது முட்டைகள் உடைந்து விடவும் வாய்ப்பு உண்டு." ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றக் கொள்கை அந்நாட்டின் வளங்களைக் கொண்டு அமையும். சரிசமவளர்ச்சி, சரிசமனில்லா வளர்ச்சி ஆகிய இரு முறைகளில் ஏதாவது ஒன்றை மட்டும் பின்பற்றுவதைத் தவிர்க்க வேண்டும். சரிசம வளர்ச்சி முறை சிறப்பானதாக இருந்தாலும் கூட, அதை எல்லாக் காலங்களிலும், எல்லா நிலைகளிலும் பின்பற்றி விட முடியாது. சரிசமனில்லா வளர்ச்சி சிறப்பாகக் கருதப்படாவிட்டாலும் கூட, அதைப் பின்பற்றுவது தவிர்க்க முடியாததாகின்றது. பல பின்தங்கிய நாடுகளின் நோக்கம் சரிசம வளர்ச்சியைப் பெறுவதாக இருந்தாலும், இந்நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைச் சரிசமனில்லா வளர்ச்சியின் மூலமே பெற முடியும். சிறப்பாகத் திட்டமிட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறக் கருதினாலும் சரிசம வளர்ச்சியை அடைவது இயலாததாகும். இதற்காகச் சரிசமனில்லா வளர்ச்சியைப் பெறும் வகையில் முதலீடுகள் செய்யப்பட வேண்டுமென்பதும் அவசியமில்லை. திட்டமிடுபவர்கள் பல முதலீட்டுத் துறைகளுக்கும் இடையே தொடர்பு ஏற்படுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பொருளாதாரத்தில் சரிசமனில்லா நிலை அதிக அளவிற்கு ஏற்படக் கூடாது. குறைந்த அளவிலேயே அமைந்திருக்கக்கூடிய வளங்கள் சிறப்பாகவும், சிக்கனமாகவும் பயன்படுத்தப் படுதல் வேண்டும். ஆனால் குறைந்த அளவிற்கு சரிசமனில்லா நிலை ஏற்படுவதை அனுமதிக்கலாம். முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுபவர்கள் சரிசம வளர்ச்சியை அடைய நோக்கம் கொண்டிருந்தாலும், அதைப் பெறுவது இயலாததேயாகும்.

# 8. பொருளாதார வளர்ச்சியின் நிலைகள்
## (The Stages of Economic Growth)

ரோஸ்டாவ் (Rostow) பொருளாதார வளர்ச்சியை ஐந்து நிலைகளாகப் பிரித்து விளக்குகின்றார். ரோஸ்டாவின் கருத்துப்படி, எல்லாப் பொருளாதாரங்களும் கீழ்க்கண்ட ஏதாவது ஒரு நிலையில் அமைந்திருப்பவைகளேயாகும். ரோஸ்டாவ் 'பொருளாதார வளர்ச்சியின் நிலைகள்' என்ற தன்னுடைய நூலில் பொருளாதாரச் சமுதாயத்தின் வளர்ச்சியை ஐந்து நிலைகளாகப் பிரித்திருக்கின்றார். அவையாவன :

1. தொன்மைச் சமுதாய அமைப்பு (The Traditional Society);

2. மேலெழு நிலைக்கு முன்னுள்ள நிலை (The Pre-conditions for Take-off);

3. மேலெழு நிலை (The Take-off) ;

4. முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் நிலை (The Drive to Maturity) ;

5. அதிக அளவு நுகர்வுக் காலம் (The Age of High Mass Consumption).

பொருளாதார இயல்புகளைக் கொண்டு ஒவ்வொரு சமுதாயமும் எந்த நிலையில் உள்ளது என்பதை உணரலாம் என்று ரோஸ்டாவ் குறிப்பிடுகின்றார். எல்லாச் சமுதாயங்களும் மேலே குறிப்பிடப்பட்ட ஐந்து நிலைகளில் ஏதாவது ஒரு நிலையில் அமைந்திருக்கின்றன. அந்நிலைகளைப் பின் வருமாறு சற்று விளக்கமாக ஆராயலாம்.

### 1. தொன்மைச் சமுதாய அமைப்பு (The Traditional Society)

தொன்மைச் சமுதாய அமைப்பில் தனி ஒருவருக்கான உற்பத்தியின் அளவு மிகவும் குறைவாகவே இருக்கும். இச் சமுதாயத்தில் உற்பத்தி முறைகள் பின்தங்கிய நிலையிலேயே

இருக்கின்றன ; எவ்விதமான கண்டுபிடிப்பு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் படுவதில்லை. தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பின்பற்றப் படுவதில்லை. பொருளாதார அமைப்பு உற்பத்தித்திறனைக் குறைந்த அளவிற்குத் தருவதாகவே இருக்கின்றது. ஆனால், இச் சமுதாயம் தேக்க நிலைப் பொருளாதாரத்தைக் கொண்டது என்றும் கூற இயலாது. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கவும், வாணிபத்தை வளர்க்கவும் வாய்ப்புக் கள் உள்ளன; ஆனால், ஒரு குறிப்பிட்ட அளவு வரைதான் தனியொருவருக்கான உற்பத்தியின் அளவைக் கூட்ட முடியும். ஏனெனில், இச் சமுதாயத்தில் நவீன தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பின்பற்றப்படுவதில்லை. சில வகைத் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் அமைந்திருந்தாலும், அவை சரியாகவும் சிறப் பாகவும் கைக் கொள்ளப்படுவதில்லை.

தொன்மைச் சமுதாய அமைப்பில் வேளாண்மை மிக முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றது. மக்கட்தொகையின் பெரும் பகுதி வேளாண்மையைச் சார்ந்திருக்கின்றது. செல்வந்தர்களுக்கும், பெரும்பாலான மக்களுக்கும் வருவாயைத் தருகின்ற முக்கியத் தொழிலாக வேளாண்மை உள்ளது. தேசிய வருவாயின் பெரும் பகுதியும் வேளாண்மை மூலமே பெறப்படுகின்றது. இவ்வகைச் சமுதாயத்தில் ஆட்சியாளர்கள் கோவில்களைக் கட்டுவதற்கும், நினைவுச் சின்னங்களை எழுப்புவதற்கும் அதிக அளவு நிதியைச் செல விடுகின்றனர்கள். போர்களை நடத்தவும் அதிகப் பணமானது செல வழிக்கப் படுகின்றது. இச் சமுதாய அமைப்பில் விஞ்ஞான வளர்ச்சி ஏற்பட்டிருக்காது என்று ரோஸ்டாவ் கூறுகின்றார். விஞ் ஞான வளர்ச்சி ஓரளவு ஏற்பட்டிருந்தாலும், அது முறையாக முன் னேற்றத்தைப் பெறப் பயன் படுத்தப்பட மாட்டாது. தொன் மைச் சமுதாய அமைப்பில் உற்பத்தியின் அளவு குறைவாகவே இருக்கும். உற்பத்தித் திறனைக் குறைவாகக் கொண்டே இச் சமுதாயம் அமைந்திருக்கின்றது. தொழில் நுணுக்க வளர்ச்சி யின்மையே உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தடையாக அமை கின்றது. தொன்மைச் சமுதாயத்தில் ‘கூட்டுக் குடும்ப முறை யானது’ (Joint Family System) அமைந்துள்ளது. எனவே, உழைப் பாளர்களின் பெயர்ச்சியும் அங்கு அமைந்திருப்பதில்லை. சமுதாயப் பழக்க வழக்கங்களும் முன்னேற்றத்திற்கு இடையூறாக இருக் கின்றன. மக்கள் பழைமைவாதிகளாகவும், மூட நம்பிக்கைகளைக் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். பொருளாதார, அரசியல் சக்திகள் ஒரு சில பிரபுக்களின் கைகளில் அடங்கியுள்ளன. தொன்மைச் சமுதாய அமைப்பின் முக்கிய இயல்புகளாக இவை இருக்கின்றன.

2. மேலெழு நிலைக்கு முன்னுள்ள நிலை (The Pre-conditions for Take-off)

ஒரு நூற்றாண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட காலத்தை கொண்டதாக இரண்டாவது நிலை உள்ளது. இந்நிலையில் 'தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற' (Self-sustained Growth) பொருளாதாரம் பெறப் படுகின்றது. முன்னேற்றத்தைப் பெறுவதற்கான அடிப்படைகள் ஏற்படுத்தப் படுகின்றன. இக்காலத்தில் பொருளாதாரம் 'மேலெழு நிலையை' நோக்கிச் செல்கின்றது; நவீன விஞ்ஞான வளர்ச்சியின் நன்மைகள் பெறப் படுகின்றன; குறைந்துசெல் விளைவு நிலை ஓரளவு கட்டுப் படுத்தப் படுகின்றது. 17, 18-ஆம் நூற்றாண்டுகளில் மேற்கு ஐரோப்பாவில் முதன்முதலாக இவ்வித முன்னேற்றச் சூழ்நிலைகள் அமைந்திருந்தன. மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குள் பிரிட்டன் சில தனிச் சிறப்புள்ள வசதிகளைப் பெற்றிருந்தது. பிரிட்டனின் புவியமைப்பும், இயற்கை வளங்களும் வாணிபத்தை வளர்ப் பதற்குச் சாதகமாக இருந்தன. இந்நிலையிலேயே பிரிட்டனில் சமுதாய, அரசியல் அமைப்புக்களில் மாற்றங்கள் தோன்றி விட்டன.

தொன்மைச் சமுதாய அமைப்பில் வேளாண்மையே முக்கியத் தொழிலாக இருக்கின்றது. முன்னேற்றமடையாத உற்பத்தி முறைகள் வேளாண்மையில் பின்பற்றப் படுகின்றன. படிப் படியாகப் பொருளாதாரம் முன்னேற்றமடையத் தொடங்கு கின்றது. முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்ற எண்ணமும் மக்கள் மனதில் எழுகின்றது. சமுதாய வளர்ச்சிக்கும், செல் வாக்கிற்கும் பொருளாதார முன்னேற்றம் தேவையானதென்று உணரப் படுகிறது. தொழில் அமைப்பாளர்கள் தோன்று கின்றார்கள்; சேமிப்புக்கள் பெருகுகின்றன. முதலீட்டாளர்கள் இடர்களைத் தாங்கவும் முன்வருகின்றார்கள். இலாப நோக்கத் தோடு முதலீடுகள் செய்யப் படுகின்றன. சந்தையின் அளவு விரிவடைகின்றது. பொருளாதார முன்னேற்றம் சமுதாய மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றது. புதுமையான பொருளா தார நடவடிக்கைகளுக்கு ஏற்ப கல்வி முறையிலும் மாற்றம் தோன்றுகின்றது. திறமை மிக்கத் தொழில்முயல்வோர் முதலீடு செய்வதில் ஆர்வம் காட்டுகின்றார்கள். இலாபத்தைப் பெற அவர்கள் இடர்களை ஏற்கவும் தயாராக இருக்கின்றார்கள். வங்கிகளும், பிற நிதி நிறுவனங்களும் எண்ணிக்கையில் பெருகு கின்றன. இதனால் சேமிப்புத் திரட்சி ஏற்படுகின்றது; முத லீட்டின் அளவும் உயர்வடைகின்றது. உள்நாட்டு வாணிபமும், வெளிநாட்டு வாணிபமும் வளரத் தலைப்படுகின்றன. போக்கு

வரத்து வசதிகள் முன்னேற்றமடைகின்றன. இதன் காரணமாக மூலப் பொருட்களைத் தேவையான இடங்களுக்கு எடுத்துச் செல்வது எளிதாகின்றது. எளிதான முறையில் வினைமுடிந்த பொருட்களைச் சந்தைகளுக்குக் கொண்டு செல்லவும் முடிகின்றது. ஆனால், தொன்மைச் சமுதாயத்தில் இவ்வித நடவடிக்கைகள் குறைந்த வேகத்திலேயே வளர்ச்சியடைகின்றன. இந்நடவடிக் கைகளை விரைவாக்க அரசியற் காரணிகளும் பயன் படுத்த படலாமென்று ரோஸ்டாவ் கூறுகின்றார். தொன்மைச் சமுதாய அமைப்பு மேலெழு நிலையைப் பெற அரசு பல நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

தொன்மைச் சமுதாய அமைப்பு நிலைக்குப் பிறகு புதிய உற் பத்தி முறைகள் தோன்றுகின்றன. வேளாண்மையில் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் ஓரளவு புகுத்தப் படுகின்றன. இதன் மூலம் பெருகுகின்ற மக்கட்தொகைக்குத் தேவையான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்யலாம். உற்பத்திக்கான முதலீட்டு வீதம் தேசிய வருவாயில் 5 சதவீதம் என்ற அளவிற்கு உயர் வடைகின்றது. புதிய தொழில்கள் நிறுவப் படுகின்றன. தொழில் துறையின் வளர்ச்சி குறைந்த வேகத்தில் அமைகின்றது. இந் நிலையில் சிறப்பாக பொருளாதார அமைப்பில் மாற்றமானது ஏற்படுகின்றது. முதலீட்டு வீதத்தின் உயர்வானது மக்கட் தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் உயர்வாகவே இருக் கின்றது. முதலீட்டு வீதம் கணிசமான அளவிற்கு உயர்வடை கின்றது என்று கூறலாம்.

தொன்மைச் சமுதாயத்தில் மேலெழு நிலைக்கான அடிப் படைகள் ஏற்படுத்தப் படுகின்றன. பொருளாதார, சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் தோன்றுகின்றன. விஞ்ஞானத்தின் பயன்கள் உணரப் படுகின்றன; சாதாரண மக்களும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதின் அவசியத்தை உணர்கின்றார்கள். முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்ற விருப்பமும் அவர்களிடம் தோன்றுகின்றது. இதனால் கல்வியறிவு பரவுகிறது. வாணிப, நிதி நிறுவனங்கள் வளர்ச்சியடைகின்றன. போக்குவரத்து செய்தித் தொடர்பு வசதிகளின் வளர்ச்சியால் வாணிபம் செழிக்கின்றது. சமுதாய மாற்றங்களால் மக்கள் சிறப்பான புதிய கண்ணோட்டத் தைப் பெறுகின்றார்கள். மூடப் பழக்க வழக்கங்கள் குறைவடை கின்றன. புதிய கருத்துக்களும், தொழில் நுணிக்க உற்பத்தி முறை களும் ஏற்றுக் கொள்ளப் படுகின்றன.

எனினும், பொருளாதாரத்தில் புதிய தன்மைகள் இந்நிலையில் தோன்றினாலும் தொன்மைச் சமுதாய அமைப்பே நீடிக்கின்றது.

பல நிலைகளில், புதுமையான நடவடிக்கைகளோடு தொன்மைச் சமுதாய அமைப்பின் இயல்புகளும் இணைந்திருக்கின்றன. குறைந்த அளவு பொருளாதார நடவடிக்கைகளில் மட்டுமே புதுமையான முறைகள் அமைந்துள்ளன.

3. மேலெழு நிலை (The Take-off)

பின் தங்கிய பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளிலும் கடந்த இருபது அல்லது முப்பது ஆண்டுகளாகச் சிறப்பான முன்னேற்றம் பெறப்பட்டு வருகின்றது. பொருளாதார நிலைகளில் பல குறிப்பிடத்தக்க மாற்றங்கள் தோன்றியுள்ளன. மேலெழு நிலைக்குப் பிறகு விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது.

சில நாடுகளில் 'மேலெழு நிலை' தோன்றிய காலத்தை ரோஸ் டாவ் பின் வருமாறு தோராயமாகக் குறிப்பிடுகின்றார் :

| நாடு | | மேலெழு நிலை |
|---|---|---|
| கிரேட் பிரிட்டன் | ... | 1783—1802 |
| பிரான்ஸ் | ... | 1830—1860 |
| பெல்ஜியம் | ... | 1833—1860 |
| அமெரிக்கா | ... | 1843—1860 |
| ஜெர்மனி | ... | 1850—1873 |
| ஸ்வீடன் | ... | 1868—1890 |
| ஜப்பான் | ... | 1878—1900 |
| ரஷ்யா | ... | 1890—1914 |
| கனடா | ... | 1896—1914 |
| அர்ஜென்டினா | ... | 1935— |
| டர்க்கி | ... | 1973— |
| இந்தியா | ... | 1952— |
| சீனா | ... | 1952— |

ஒரு நாடு மேலெழு நிலையை அடைய, கீழ்க்காணும் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டிருத்தல் வேண்டும் :

(i) தேசிய வருவாயில் 5 சதவீதத்திற்கும் குறைவாக இருக்கும் உற்பத்திக்கான முதலீட்டு வீதத்தை 10 சத வீதத்திற்கும் அதிகமாக உயர்த்துவது.

(ii) தயாரிப்புத் துறைகளில் மிகவும் கணிசமான அளவிற்கு முன்னேற்றத்தைப் பெறுவது ; அவற்றில் விரைவான வளர்ச்சி வீதத்தை ஏற்படுத்துவது.

(iii) அரசியல், சமுதாய அமைப்புக்களில் விரைவான மாற்றத்தையும். முன்னேற்றத்தையும் தோற்றுவிப்பது ; புதிய துறைகளின் வளர்ச்சியை விரைவாக்குவது.

இந்நிபந்தனைகளைப் பின்வருமாறு ஆராயலாம் :

**(i) முதலீட்டு வீதத்தை 10 சத வீதத்திற்கு மேல் உயர்த்துவது :**

நாட்டின் மக்கட் தொகைப் பெருக்கத்தின் அளவைவிட தலா வருவாய்ப் பெருக்கத்தின் அளவு உயர்வாக இருக்க வேண்டும். தலா வருவாயை உயர்த்த தேசிய வருவாயில் சுமார் 10 சதவீதம் என்ற அளவிற்கு முதலீடு செய்யப்பட வேண்டும். தேக்கநிலையில் அமைந்துள்ள தலா வருவாயை உயர்வடையுமாறு பொருளாதாரத்தை இயக்க வேண்டியது அவசியமாகின்றது. தலா வருவாய் உயர்வில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட வேண்டும். இவ்வுயர்வு தொடர்ச்சியாக நீடிக்க வேண்டும். தலா வருவாய், மக்கட் தொகைப் பெருக்கம் ஆகிய இரண்டிற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. மக்கட் பெருக்கத்தைவிட வருவாய்ப் பெருக்கம் மிகுதியாக இருக்க வேண்டும். தேசிய வருவாயில் 5 சதவீதத்திற்குக் குறைவாக உள்ள முதலீட்டை 10 சதவீதத்திற்கும் மேலாக உயர்த்த வேண்டும்.

**(ii) முன்னணித் துறைகளின் முன்னேற்றம் (Development of Leading Sectors):**

மேலெழு நிலையைப் பெற பொருளாதாரத்தின் முன்னணித் துறைகளை வளர்க்க வேண்டும். ஏனெனில், வேறு பல துறைகளின் முன்னேற்றமும் இத்துறைகளையே சார்ந்திருக்கின்றது. பொருளாதாரத்தில் மூன்று வகைப்பட்ட முக்கியத் துறைகள் அமைந்துள்ளன :

அடிப்படை வளர்ச்சித் துறைகளில் கண்டு பிடிப்புகளுக்கு வாய்ப்பு இருக்கின்றது. பயன்படுத்தப்படாத இயற்கை வளங்கள் பயன்படுத்தப்படலாம். எனவே, இவ்வகைத் துறைகளின் வளர்ச்சி பிற துறைகளின் வளர்ச்சியைக் காட்டிலும் விரைவாக உள்ளது. இங்கிலாந்தில் பொருளாதார முன்னேற்றத்தின் முதற் சில நிலைகளில் பருத்தி நெசவுத் தொழில் வளர்ச்சியடைந்தது இதற்கு உதாரணமாக அமைகின்றது.

அடிப்படை வளர்ச்சித் துறையைச் சார்ந்த பிற துறைகளிலும் விரைவான முன்னேற்றம் ஏற்படுகின்றது. அடிப்படைத் துறையின் வளர்ச்சியால் இருப்புப்பாதைப் போக்குவரத்து முன்னேற்றமடைவதை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இருப்புப்பாதைப் போக்குவரத்தின் முன்னேற்றம் இரும்பு, எஃகு, நிலக்கரி ஆகிய தொழில்கள் மேலும் வளர உதவுகின்றது. பல தொழில்களும் வளர்ச்சியில் ஒன்றோடொன்று தொடர்பைக் கொண்டுள்ளன.

மக்கட்தொகை, உண்மை வருவாய், தொழில் உற்பத்தி போன்றவை பெருகுவதால் சில தொழில்களின் வளர்ச்சி காக்கப் படுகின்றது. மக்கட்தொகைப் பெருக்கத்தால் உணவுப் பொருட்களின் தேவை அதிகரிக்கின்றது. மக்களின் உண்மை வருவாய் உயர்வடையும்போது உணவின் தேவை பெருகுகின்றது. மக்கட் தொகை பெருகி, உண்மை வருவாய் உயரும்போது வேளாண்மைப் பொருட்களின் தேவையோடு தொழிற்பொருட்களின் தேவையும் அதிகரிக்கின்றது.

(iii) முன்னேற்றத்திற்கான சமுதாய மாற்றங்கள் :

சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் தோன்றுவது 'மேலெழு நிலையைப்' பெறுவதற்கான மற்றொரு நிபந்தனையாகும். விரைவான தொழில் வளர்ச்சியைப் பெற சமுதாய மாற்றங்கள் தேவைப் படுகின்றன. இம் மாற்றங்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சாதகச் சூழ்நிலைகளைத் தோற்றுவிக்க வேண்டும். பொருளாதாரத்தில் வருவாய்ப் பெருக்கம் ஏற்படும் போது, பலவகைப்பட்ட தொழிற் பொருட்களின் தேவையும் அதிகரிக்கின்றது. தொழிற்துறையின் வளர்ச்சி தேவையின் அளவைச் சார்ந்தே அமையும்.

மேலெழு நிலையில் முன்னேற்றத்தைத் தொடர்ச்சியாகப் பெறுவதற்கான அடிப்படைகள் ஏற்படுத்தப் படுகின்றன. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் ஏற்படக்கூடிய சில இடர்ப்பாடுகளும் நீக்கப் பெறுகின்றன. புதுமையான பொருளாதார நடவடிக்கைகள் தோன்றுகின்றன. சமுதாயத்தில் பல விரிவாக்கப் பணிகள் கைக்கொள்ளப் படுகின்றன. பொருளாதார முன்னேற்றத்தில் மேலெழுநிலை முக்கிய தன்மையைக் கொண்டிருக்கின்றது. ஏனெனில், இந்நிலையில்தான் 'தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற' பொருளாதாரம் பெறப்படுகின்றது.

மேலெழு நிலைக் காலத்தில் தொழில்கள் விரைவாக வளர்ச்சியடைகின்றன; இலாபத்தின் அளவும் உயர்வடைகின்றது. இலாபத்தின் ஒரு பகுதி திரும்பவும் முதலீடாக்கப் படுகிறது. 'தயா

ரிப்புத் தொழில்களின்' (Manufacturing Industries) வளர்ச்சி 'மூலதனக் கருவிப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களின்' (Capital Goods Industries) வளர்ச்சிக்கு வகை செய்கின்றது. தொழில்துறையின் முன்னேற்றம் வேளாண்மை வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக அமைகின்றது. நகர்ப்புறங்களைப் போன்றே கிராமப்புறங்களும் வளரத் தொடங்குகின்றன. முதலீடு, வேலை வாய்ப்பு, உற்பத்தி, வருவாய் ஆகியவை அதிகரிக்கின்றன. தொழில் முயல்வோருடைய எண்ணிக்கையும் கூடுகின்றது. இருபது அல்லது முப்பது ஆண்டுகளில் பொருளாதார, சமுதாய, அரசியல் அமைப்புக்களில் மாற்றங்கள் தோன்றுகின்றன. இம் மாற்றங்கள் பொருளாதார முன்னேற்றத்தை உறுதியாகத் தொடர்ந்து நீடிக்கச் செய்கின்றன.

ரோஸ்டாவ் 'மேலெழு நிலை' சுமார் 20 ஆண்டுக்காலத்திற்கு நீடிக்கலாம் என்று மதிப்பீடு செய்துள்ளார். வேளாண்மை, தொழில், வாணிபம், போக்குவரத்து ஆகிய எல்லாத் துறைகளும் ஒருங்கே வளர்ச்சியடைகின்றன. இந்த எல்லாத்துறைகளின் வளர்ச்சியும் ஒன்றையொன்று சார்ந்து அமைந்திருக்கின்றது.

மேலெழு நிலையில் மக்களின் எண்ணங்களில், நோக்கங்களில் கண்ணோட்டங்களில் சிறப்பான மாற்றங்கள் தோன்றுகின்றன. 19-ஆம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டன், அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளில் மேலெழு நிலை தோன்றுவதற்கு முக்கியக் காரணமாக இருந்தது தொழில் நுணுக்க முன்னேற்றமேயாகும். முன்னேற்றமான உற்பத்தி முறைகள் வேளாண்மையிலும், தொழில் துறையிலும் பின்பற்றப் பட்டன. போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சார உற்பத்தி போன்றவற்றின் வளர்ச்சியும் சிறப்பாக இருந்தது. சுருங்கக் கூறினுல், இந்நாடுகள் மேலெழு நிலையில் புதுமைப் பொருளாதாரத்தைப் பெற்றன. சிறப்பான அரசியல் அமைப்பு முறையும் முன்னேற்றத்திற்கு உதவியது எனலாம். இந்நிலையில் சேமிப்பு, முதலீட்டு வீதங்கள் உயர்வடைய வேண்டுமென்று ரோஸ்டாவ் குறிப்பிடுகின்முர்.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் இந்தியப் பொருளாதாரம் 'மேலெழு நிலையை' அடைந்தது எனக் கூறப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

## 4. முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் நிலை (The Drive to Maturity)

பொருளாதார முன்னேற்றத்தின் அடுத்த நிலை 'முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் நிலையாகும்.' இது நீண்டகால வளர்ச்சியை

உறுதியாகத் தொடர்ந்து தருவதாகும். சுமார் 40 ஆண்டுக் காலத்திற்கு மேலாக இது நீடிக்கின்றது. இக்காலத்தில் புதிய தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பின்பற்றப் படுகின்றன. புதிய முன்னணித் தொழில்கள் தொடங்கப் பெறுகின்றன. நிகர முதலீட்டு வீதமானது தேசிய வருவாயில் 10 சதவீதத்திற்கும் மேலாக இருக்கின்றது. புதிய அமைப்புக்கள் தோற்றுவிக்கப்பட்டு, வளர்ச்சி தொடர்ந்து நீடிக்கின்றது. உற்பத்தி நிலைகளில் மிகவும் முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்கங்கள் புகுத்தப் படுகின்றன. மேலெழு நிலை முடிவடைந்து சுமார் 40 ஆண்டுக் காலம் கடந்த பிறகு பொருளாதாரம் முதிர்ச்சியை அடைகின்றது. முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் நிலையில் நிறைவான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் அமைந்துள்ளன. திறமையான தொழில் முயல்வோரும் அதிக எண்ணிக்கையில் செயல்படுகின்றார்கள். பல வகைப்பட்ட பொருட்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலெழு நிலையின் தொடக்கத்திலிருந்து பொருளாதார முதிர்ச்சி நிலையை அடைய சுமார் 60 ஆண்டுக்காலம் பிடிக்கின்றது.

சில நாடுகளில் தொழில் நுணுக்க முன்னேற்றத்தின் முதிர்ச்சிக் காலத்தை ரோஸ்டாவ் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

| நாடு | | ஆண்டு |
|---|---|---|
| கிரேட் பிரிட்டன் | ... | 1850 |
| அமெரிக்கா | ... | 1900 |
| ஜெர்மனி | ... | 1910 |
| பிரான்ஸ் | ... | 1910 |
| ஸ்வீடன் | ... | 1930 |
| ஜப்பான் | ... | 1940 |
| ரஷ்யா | ... | 1950 |
| கனடா | ... | 1950 |

மேலெழு நிலைக்குப் பிறகு ஏற்படுகின்ற, முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் முன்னேற்ற நிலைகளில் ஏற்றத்தாழ்வுகள் தோன்றக் கூடும். பொருளாதார நடவடிக்கைகள் பலவும் புதுமையான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளாலேயே செய்யப்படு

கின்றன. நாட்டின் வளங்கள் சிறப்பாக உற்பத்திக்குப் பயன் படுத்தப் பெறுகின்றன. தேசிய வருவாயில் 10 முதல் 20 சதவீதம் வரை திரும்பவும் முதலீடு செய்யப்படுகின்றது. உற்பத்தியின் வளர்ச்சி வீதமானது மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் உயர்வாக இருக்கின்றது. பொருளாதாரம் முதிர்ச்சியை நோக்கிச் செல்லும் நிலையில் தொழில் நுணுக்க வளர்ச்சியின் எல்லா நன்மைகளும் பெறப்படுகின்றன.

தொழில் நுணுக்க வளர்ச்சியில் முதிர்ச்சியைப் பெற்ற சமுதாயத்தில், உழைப்பாளர்களின் நிலையிலும் மாற்றங்கள் தோன்றுகின்றன. வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்கட் தொகையின் எண்ணிக்கை குறைகின்றது. நகர மக்கட்தொகை யின் எண்ணிக்கையில் பெருக்கம் ஏற்படுகின்றது. திறமை வாய்ந்த உழைப்பாளர்களின் எண்ணிக்கையும் பெருகுகின்றது. இக்காலத்தில் தொழில்களின் நிலையிலும் மாற்றங்கள் ஏற்படு கின்றன. புதிய தொழில்கள் விரிவடையும்போது, பழைய தொழில்கள் எண்ணிக்கையில் குறைவடைகின்றன. பொருளா தாரத்தில் அமைந்துள்ள தொழில் நுணுக்க வளர்ச்சியாலும், தொழில் முயல்வோருடைய திறமையாலும் எவ்வகைப்பட்ட பொருட்களையும் உற்பத்தி செய்யும் நிலை அமைந்திருக்கின்றது. ஆனால், எல்லா வகைப்பட்ட பொருட்களும் உற்பத்தி செய்யப்படு கின்றன என்று கூற முடியாது. பொருளாதார வளர்ச்சியின் நிலை களில் நீண்ட காலத்திற்கு நீடிக்கக் கூடியது முதிர்ச்சியை நோக்கிச் செல்கின்ற நிலையேயாகும்.

### 5. அதிக அளவு நுகர்வுக்காலம் (The Age of High Mass Consumption)

இந்நிலையின் தொடக்கம் பொருளாதாரத்தின் முன்னணித் துறைகள் நீண்ட காலத்திற்குப் பயனை அளிக்கக் கூடிய நுகர் பொருட்களை உற்பத்தி செய்யும்போது ஏற்படுகின்றது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் உலகின் சில நாடுகள் பொரு ளாதார முதிர்ச்சி நிலையைப் பெற்றன. அப்போது அந்நாடுகளில் தனியொருவருக்கான உண்மை வருவாய் அதிகரித்தது. எனவே, மக்கள் பலரும் அதிக அளவு பொருட்களை வாங்க முடிந்தது. உழைப்பாளர்களின் நிலையிலும் மாற்றங்கள் தோன்றின. தொழில் நுணுக்க வளர்ச்சியால், உழைப்பாளர்களும் திறமையானவர் களாக மாறினர். கிராமப்புறங்களில் வசிப்பதைவிட நகர்ப்புறங் களில் வசிப்பதையே மக்கள் விரும்பினர். உழைப்பாளர்கள் தங்களின் பாதுகாப்பிற்காகச் சங்கங்களையும் ஏற்படுத்தினார்கள். தொழிலாளர்களின் சங்கங்கள் அதிக எண்ணிக்கையில் தோற்றுவிக் கப்பட்டன.

பொருளாதார முதிர்ச்சியை அடைவதற்கு முன், மேலை நாடுகள் சமுதாய நலப் பணிகளைப் பெருக்குவதற்காக அதிக முதலீடுகளைச் செய்தன. மக்களின் நலம் காக்கும் அரசின் நடவடிக்கைகளும் பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்துகின்றன. அதிக அளவு நுகர்வுக்காலத்தில், நாட்டின் வளங்கள் நீண்ட காலத்திற்குப் பயனளிக்கும் நுகர் பொருட்களை உற்பத்தி செய்யப் பயன்படுத்தப்படுகின்றன. இந்நிலையை 1920-ஆம் ஆண்டிற்கும் 1929-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் முதன்முதலாக அமெரிக்காவே அடைந்தது. இதைத் தொடர்ந்து, அதிக நுகர்வுக்காலத்தை 1930-ஆம் ஆண்டிற்கும் 1939-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் கிரேட் பிரிட்டன் பெற்றது.

இக்காலத்தில் தலா வருவாய் மிக அதிக அளவிற்கு உயர்ந்து விடுகின்றது. உணவு, உடை, இடம் ஆகிய அவசியத் தேவைகளைத் தவிர, பல வகைப்பட்ட பொருட்களையும், பணிகளையும் நுகரும் திறன் அதிகரிக்கின்றது. நகரங்கள் பலவும் தோன்றுகின்றன. இந்நிலையில் தொழில் நுணுக்கம் முழுமையாக வளர்ந்திருக்கின்றது. மேலும், தொழில் நுணுக்க முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்ற அவசிய நிலை அங்கு அமைந்திருப்பதில்லை. காப்பீட்டுத் திட்டங்களுக்காகவும், பிற சமுதாய நலப்பணிகளுக்காகவும் அதிகச் செலவுகள் செய்யப்படுகின்றன.

ரோஸ்டாவின் பொருளாதார வளர்ச்சி நிலைகளில், மேலெழு நிலைக்கு அதிக மறுப்புக்கள் கூறப் பட்டுள்ளன. கெயின்கிராஸ் (Cairncross), சைமன் குஸ்நெட்ஸ் (Simon Kuznets) போன்ற பொருளியலாளர்கள் ரோஸ்டாவின் மேலெழு நிலைக்கு மறுப்புக்கள் தெரிவித்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### இந்தியாவும் மேலெழு நிலையும் (India and the Take-off Stage)

பொருளாதார முன்னேற்றத்தில் மேலெழு நிலையைப்பற்றிக் குறிப்பிட்டவர் ரோஸ்டாவ் ஆவார். மேலெழு நிலையால் தேக்கப் பொருளாதாரம் 'தன்னைச்சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற' பொருளாதாரமாக மாற்றப் படுகின்றது. இந்நிலையில் நாட்டிலுள்ள வளங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு தலா வருவாய் அதிகரிக்கின்றது. மேலெழு நிலைக்குப் பிறகு பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது. இருபது அல்லது முப்பது ஆண்டுகள் இந்நிலை நீடிக்கின்றது. இக் காலத்தில் பலவிதமான மாற்றங்கள் தோன்றுகின்றன. முதலீட்டு வீதமானது அதிகரிக்கின்றது. தலா ஒருவருக்கான உற்பத்தியின் அளவும் உயர்வடைகின்றது. உற்பத்தி முறைகளில் திடீர் மாற்

றங்கள் தோன்றுகின்றன. வருவாய்ப் பெருக்கம் முதலீட்டை மேலும் ஊக்குவிக்கின்றது.

மேலெழு நிலையை வரையறை செய்வதில் சில சிக்கல்கள் அமைந்துள்ளன. ஆயினும், ஒரு பொருளாதாரம் மேலெழு நிலையைப் பெற கீழ்க்கண்ட மூன்று நிலைகள் அமைந்திருக்க வேண்டும் :

(1) மக்களிடம் 'சேமிக்கும் விருப்பத்தை' (Propensity to Save) ஏற்படுத்தத் தலா வருவாய் உயர வேண்டும். இதனால் முதலீட்டின் அளவும் அதிகரித்து தேசிய வருவாய் உயர்வடையும். தேசிய வருவாய்ப் பெருக்க வீதமானது மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் உயர்வாக இருக்கும். இதன் காரணமாக மூலதனத் திரட்சி தொடர்ச்சியாக அதிகரித்து, உற்பத்திப் பெருக்க வீதமும் அதிகரிக்கும். எனவே மக்கட் தொகைப் பெருக்கத்தினால் எவ்விதத் தீய விளைவுகளும் ஏற்படுவதில்லை.

(2) தலா வருவாய் அதிகரிக்கும் போது சேமிப்பின் அளவும் அதிகரிக்க வேண்டுமென்றால், 'சராசரி நுகரும் விருப்பத்தைக்' (Average Propensity to Consume) காட்டிலும் 'இறுதிநிலை நுகரும் விருப்பமானது' (Marginal Propensity to Consume) குறைவாக இருக்க வேண்டும். 'தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற' பொருளாதாரத்தைப் பெறுவதில் இறுதி நிலைச் சேமிப்பு வீதம் முக்கிய பங்கைக் கொண்டிருக்கின்றது. விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற இறுதிநிலைச் சேமிப்புவீதம் உயர்வாக இருத்தல் வேண்டும்.

(3) பொருளாதார வளர்ச்சி விரைவடையும் போது, தயாரிப்புத் துறைகள் (Manufacturing Sectors) முன்னேற்றமடைகின்றன. அரசியல், சமுதாய அமைப்புக்களிலும் மாற்றங்கள் தோன்றுகின்றன. முன்னேற்றத்திற்கான ஊக்கங்கள் பெறப்படுகின்றன. வளர்ச்சி தொடர்ந்து உறுதியாக நீடிக்கும் நிலையும் ஏற்படுகின்றது.

பல சமுதாயங்களிலும் பொருளாதார முன்னேற்ற மேலெழு நிலை வெவ்வேறு வகைகளில் பெறப்பட்டது. மேலெழு நிலையைப் பெறுவதற்கான இரு நிபந்தனைகளைப் பின் வருமாறு குறிப்பிடலாம்:

முதலாவதாக, மேலெழு நிலையைப் பெற அரசியல், சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் தேவைப் படுகின்றன. மக்கள் பண்பாடுகளிலும், பழக்க வழக்கங்களிலும் மாற்றங்கள் தோன்ற

வேண்டும். இவ்விதமான முக்கிய மாற்றங்களுக்குப் பிறகே மேலெழு நிலை தோன்றுகின்றது.

இரண்டாவதாக, அரசியல், சமுதாய, பண்பாட்டுத் தடைகள் மேலெழு நிலையைப் பெறுவதற்குப் பெரிய இடையூருக அமைந் திருப்பதில்லை. நிலத்தையும் பிற இயற்கை வளங்களையும் சிறப்பாகப் பயன்படுத்தி மக்கள் நலத்தைப் பெருக்கும்போது இவ்விதத் தடைகள் மறைந்து விடுகின்றன.

ரோஸ்டாவ் கருத்துப்படி, ஒரு துறையின் வளர்ச்சி பொருளா தாரத்தின் பிற துறைகளுக்கும் பரவுகின்றது. 18-ஆம் நூற்ருண் டின் இறுதியில் பிரிட்டனில் தொழில் முன்னேற்றம் தொடங்கியது. பருத்தி நெசவுத்தொழில் பிரிட்டனில் முதலில் வளர்ச்சியடைந்த தொழிலாகும். இத்தொழிலின் வளர்ச்சி பொறியியல், இரசாயனத் தொழில்களின் வளர்ச்சிக்கு உதவியது. எனவே, பொருளா தாரத்தில் ஒரு துறையின் வளர்ச்சி மற்ற துறைகளின் வளர்ச் சிக்கும் உதவுகின்றது. பல துறைகளின் வளர்ச்சி தேக்கப் பொருளாதாரத்தை இயக்க நிலைக்கு மாற்றுகின்றது.

மேலெழு நிலைக்கு முன் சேமிப்பு, முதலீட்டு வீதங்கள் குறைவாகவே இருக்கின்றன. எனவே, தேசிய வருவாயின் வளர்ச்சி வீதமும் தாழ்வாகவே உள்ளது. ஆனல், சமுதாயத்திற்குப் போதுமான அளவில் பொருட்கள் உற்பத்தி செய்யப் படுகின்றன. உற்பத்தி அமைப்பு முறையில் மாற்றங்கள் ஏற்படுவதில்லை. மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடையாமல் அதே நிலையிலேயே இருக்கின்றது. நுகர்வின் அளவிலும் உயர்வு தோன்றுவதில்லை. சிறிதளவு முதலீட்டை அதிகரிப்பதும்கூட, பொருளாதாரத்தில் பல கடின நிலைகளைத் தோற்றுவிக்கின்றது.

மேலெழு நிலையைப் பெற வெளிநாட்டு உதவிகளையும் பெற லாம். வெளிநாட்டு உதவியின் மூலம் சேமிப்பு–முதலீட்டு வீதங்களை உயர்த்த முடியும். முதலீட்டின் அளவை அதிகரிக்க வெளிநாட்டு உதவியைப் பெறுவது நல்லதொரு முறையாகும். இதற்கு உதாரணமாகப் பல நாடுகளின் பொருளாதார வரலாறுகளை ரோஸ்டாவ் குறிப்பிடுகின்ருர். 1775-ஆம் ஆண்டிற்கும் 1850-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், அமெரிக்கா ஆகிய நாடுகளில் பொருளா தார மேலெழு நிலை தோன்றியது. முதல் உலகப் போர் தோன்று வதற்கு 20 அல்லது 25 ஆண்டுகள் முன்பிருந்து கனடாவிலும், சோவியத் ரஷ்யாவிலும் மேலெழு நிலை அமைந்திருந்தது. 19-ஆம் நூற்ருண்டின் இறுதியில் ஜெர்மனி, ஸ்வீடன், ஜப்பான் ஆகிய நாடுகளில் மேலெழு நிலை ஏற்பட்டது. இந்தியாவிலும், சீனவிலும்

மேலெழு நிலை 1952-ஆம் ஆண்டிலேயே தொடங்கியது. முன்னேற்றத்திற்கான தொடக்கம் பல நாடுகளிலும் வெவ்வேறு துறைகளினின்றும் பெறப்பட்டது. அமெரிக்கா, ஜெர்மனி, ரஷ்யா போன்ற நாடுகளில் மேலெழு நிலையைப் பெற இருப்புப் பாதைப் போக்குவரத்தின் தொடக்கம் உதவியது. இராணுவம் விரிவாக்கப் பட்டதும், புதுமைப்படுத்தப் பட்டதும் ஜப்பான் மேலெழு நிலையைப் பெறக் காரணமாக இருந்தன.

இந்தியாவின் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் 'தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற' பொருளாதாரம் பெறப்பட்டதென்று திட்டக்குழு குறிப்பிட்டது. இந்நிலையில் வெளிநாட்டு உதவியைப் பெறாமல், உள்நாட்டு வசதிகளைக் கொண்டே பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சூழ்நிலைகள் தோன்றியிருத்தல் வேண்டும். இவ்விதப் பொருளாதாரம் 'தன்னிறைவுப் பொருளாதாரமாக' (Self Sufficient Economy) இருக்க வேண்டுமென்று அவசியமில்லை. மேலெழு நிலையில் வெளிநாட்டு வாணிபம் வளர்கின்றது. ஆனால், இந் நிலையில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வெளிநாட்டு உதவி தேவைப்படுவதில்லை.

இந்தியப் பொருளாதாரம் எந்த அளவிற்கு மேலெழு நிலையைப் பெற்றிருக்கின்றது என்பதைக் கீழ்க்கண்ட நிலைகளின் மூலம் அறியலாம்:

1. உள்நாட்டுச் சேமிப்பும், முதலீடும்

ரோஸ்டாவ் கருத்துப்படி, ஒரு நாடு பொருளாதார மேலெழு நிலையைப் பெற உள்நாட்டுச் சேமிப்பு, முதலீடு தேசிய வருவாயில் 10 சதவீதம் என்ற அளவிற்கு உயர வேண்டும். தேசிய வருவாயில் 10 சதவீதத்திற்குக் குறைவாக முதலீடு செய்யப் பட்டால் பொருளாதார முன்னேற்றம் ஏற்படாது என்றும் கூறயியலாது. ஆனால், இந்த அளவிற்கு அதிகமாக முதலீடு செய்யப்படும்போது தான் பொருளாதாரத்தில் பல வித மாற்றங்கள் தோன்றுகின்றன. முதலீட்டு வீதமானது அதிக வருவாய்ப் பெருக்கத்தை ஏற்படுத்துவதாக இருக்க வேண்டும். வருவாய்ப் பெருக்கம் முதலீட்டு வீதத்தை உயர்த்துவதாக அமைய வேண்டும். மேலெழு நிலையைப் பெற எந்த அளவிற்கு முதலீட்டின் வீதம் அமைந்திருக்க வேண்டும் என்பதை உறுதியாகக் கூற முடியாது. ஏனெனில், இன்றைய மேம்பாடடைந்த நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் பெற்றிருந்த சூழ்நிலைகளைத் தற்பொழுது மேம்பாடடைந்து வரும் நாடுகள் பெற்றிருக்கவில்லை. இரண்டாவதாக, இன்றைய வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் முன்னேற்றத்

தின் தொடக்க நிலையிலேயே பெரிய தொழில்களிலும், சமுதாயத் திற்கு நன்மையளிக்கக் கூடிய பிற துறைகளிலும் அதிக முதலீடு களைச் செய்கின்றன. எனவே, முதலீட்டின் அளவு இந்நாடுகளில் கணிசமான அளவிற்கு உயர்வாக இருப்பதாகவே கருதலாம். மூன்றாவதாக, தற்பொழுது முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் மக்கட்தொகைப் பெருக்க வீதம் மிகவும் உயர்வாக இருக்கின்றது. ஆனால் 19-ஆம் நூற்றாண்டில் மேலை நாடுகளின் மக்கட் தொகைப் பெருக்க வீதம் இந்த அளவிற்கு அதிகமாக அமைந்திருக்கவில்லை. "இக்காரணங்களால், ரோஸ்டாவ் குறிப்பிடுகின்ற முதலீட்டு வீதத்தைக் காட்டிலும் அதிக வீதத்தில் முதலீடு செய்வது அவசிய மாகின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பொருளாதாரத்தில் மேலெழு நிலையைப் பெற தேசிய உற்பத்தியில் சுமார் 15 முதல் 18 சதவீதம் முதலீடு செய்ய வேண்டும்," [1] என்று டாக்டர் பிரைட் சிங் குறிப்பிடுகின்றார்.

1950-51-இல் நம் நாட்டின் முதலீட்டு வீதம் 5½ சதவீதமாக இருந்தது. மூன்றாவது திட்டத்தின் இறுதியில் முதலீட்டு வீதம் சுமார் 14 சதவீதமாக (உள்நாட்டுச் சேமிப்பும், வெளிநாட்டு உதவியும்) உயர்ந்தது. இதில் உள்நாட்டுச் சேமிப்பின் அளவு தேசிய வருவாயில் சுமார் 10½ சதவீதமாக இருந்தது. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் தேசிய வருவாய் சுமார் 42 சதவீதம் அதிகரித்தது; மக்கட்தொகைப் பெருக்கம் சுமார் 21·5 சதவீதம் உயர்வடைந்தது. எனவே, இக்காலத்தில் தலா வருவாய் சுமார் 16 சதவீதம் அதிகரித்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் தேசிய வருவாய் சுமார் 14 சத வீதம் உயர்ந்தது. ஆனால் அதே வீதத்திற்கு மக்கட் தொகைப் பெருக்கமும் அமைந்திருந்ததால் தலா வருவாயில் உயர்வு ஏற்பட வில்லை. இந்தியா மேலெழு நிலையைப் பெறுவதற்குத் தடையாக இருப்பது விரைவான மக்கட்தொகைப் பெருக்கமேயாகும். ஆகவே, மக்கட் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது அவசிய மானதாகும்.

## 2. பொருளாதாரத்தின் முன்னணித் துறைகளை வளர்த்தல்

வேளாண்மையிலும், தொழில் துறையிலும் கணிசமான அளவிற்கு முதலீடுகள் செய்யப் பட்டுள்ளன. ஆனால், குறிப்பிடத் தக்க அளவில் இத்துறைகளில் உற்பத்தி அதிகரிக்கவில்லை. உணவுத் தானியங்களின் உற்பத்தியில் கூட தன்னிறைவைப் பெற முடிய வில்லை. உணவு உற்பத்தியில் தன்னிறைவைப் பெற்று விட்டால்,

[1] Dr. Bright Singh, The Economics of Development, pp. 587-588.

தொழில் துறையில் முதலீட்டின் அளவை மேலும் அதிகரிக்கலாம். இதன் மூலம் பொருளாதார மேலெழு நிலையைப் பெறுவது எளிதாகும். "தொழில் துறையில் அமைப்பாளர்கள் உற்பத்தியைப் பெருக்க வேண்டியதின் அவசியத்தை உணர்ந்திருக்கின்றார்கள். ஆனால், பல தொழிற் கூடங்களில் தேய்வடைந்த பழைய இயந்திரங்களே உற்பத்தியைச் செய்யப் பயன்படுத்தப் படுகின்றன. 'தொழிற் சீரமைப்புத்' (Rationalisation) திட்டங்கள் குறைந்த வேகத்திலேயே நிறைவேற்றப் பெறுகின்றன. அயல்நாட்டுச் செலாவணிப் பற்றாக்குறையினால் இயந்திரங்களையும், கருவிகளையும், பிற உற்பத்திச் சாதனங்களையும் இறக்குமதி செய்ய அரசு எளிதில் அனுமதிப்பதில்லை. நம் நாட்டின் தொழில் முயல்வோர் முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளையும் சிறப்பாகப் பின்பற்றுவதில்லை. இக்காரணங்களால் தொழில் உற்பத்தி குறைவாகவே அமைகின்றது."[1]

இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில், அடிப்படைத் தொழில்களையும் வளர்க்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. மின்சார உற்பத்தி, போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் ஆகியவற்றைப் பெருக்கவும் மொத்த முதலீட்டில் கணிசமான ஒரு பகுதி ஒதுக்கப் பட்டது. இக்கொள்கை மூலதனப் பொருட்களின் உற்பத்தியில் தன்னிறைவைப் பெற உதவும். "நாட்டை விரைவாகத் தொழில் மயமாக்க மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் பெரிய தொழில்கள் நிறுவப் பட வேண்டும். இயக்கச் சக்தியின் உற்பத்தி, போக்குவரத்து வளர்ச்சி ஆகியவையும் தொழில் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன. தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெற இவ்வகை முன்னேற்றங்கள் இன்றியமையாதவைகளாகும்."[2]

### 3. பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமான சமுதாய மாற்றங்கள்

இந்தியாவில் தற்பொழுது புதுமையான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பின்பற்றப் படுகின்றன. தொழில் முயல்வோர் நவீன இயந்திரங்களை உற்பத்திக்குப் பயன் படுத்துகிறார்கள். முன்னேற்றமான புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்தவும் அவர்கள் விரும்புகின்றார்கள். பொருளாதார முன்னேற்றம் வேறு சில காரணங்களால் தடைப் படுகின்றது. இந்திய அரசின் அமைப்பும் அதில் ஒன்றாக உள்ளது. 'சமதர்மபாணிச்

[1] P.C. Jain, Economic Problems of India, 1969, p. 10.

[2] Dr. Bright Singh, The Economics of Development, p. 589.

சமுதாயத்தை' (Socialistic Pattern of Society) அமைப்பது நம்முடைய சீரிய அரசியல் நோக்காக அமைந்திருக்கின்றது. வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள அதிக ஏற்றத்தாழ்வு களைக் குறைக்க அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. இதனுல் தொழில் முயல்வோர் நல்ல பல பொருளாதார வாய்ப் புக்களை இழந்து விடுகின்ருர்கள். தனியார் துறை தொழில்களில் அதிக இலாபம் பெறுவது தடுக்கப் படுகிறது. அரசின் வளர்வீத வரிவிதிப்புக் கொள்கையால் தொழில் அமைப்பாளர்கள் பெறும் இலாபத்தின் அளவு கட்டுப்படுத்தப் படுகின்றது. இதன் காரண மாகத் தனியார் துறையில் முதலீட்டின் அளவு அதிகரிப்பதில்லை. வேளாண்மை வளர்ச்சி, தொழில் முன்னேற்றம் ஆகியவற்ருல் நடுத்தர வகுப்பு மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடைவதில்லை. எனவே, மக்களில் பெரும்பகுதியினர் சேமிப்பதிலும், முதலீடு செய்வதிலும் அதிக விருப்புக் கொண்டவர்களாக இருப்பதில்லை.

இந்தியப் பொருளாதாரம் மேலெழு நிலைக்கு முன்னுள்ள நிலையிலேயே இருப்பதாகச் சொல்லப் படுகின்றது. மேலெழு நிலையை இந்தியா இன்னும் அடையவில்லை. அந்நிலையை அடை வதற்கு முதலீட்டு வீதமானது மேலும் உயர்த்தப்பட வேண்டும். "சேமிப்பு, முதலீடு ஆகியவற்றின் அளவை தேசிய வருவாயில் 15 சதவீதமாக உயர்த்துவதின் மூலமாக மட்டும் மேலெழு நிலையைப் பெற்றுவிட முடியாது. அந்நிலையை அடைய நவீன தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பயன்படுத்தப்பட வேண்டும். மக்களின் நடவடிக்கைகளில் பொதுவான மாற்றம் ஏற்பட வேண்டும். இந்த மாற்றம் பொருளாதார முன்னேற் றத்தைப் பெற சாதகமாக இருக்க வேண்டும். இவ்விதமான பல தீவிர முயற்சிகளின் மூலமே, ஆருவது அல்லது ஏழாவது திட்டக் காலத்திற்குள் இந்தியா தன்னிறைவு பெற்றுத் தானே உறுதி யாகத் தொடர்ந்து வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெற முடியும்."[1]

பேராசிரியர் ரோஸ்டாவ், மேலெழு நிலையைப் பொருளா தாரம் அடைய குறைந்த அளவில் இருக்கக்கூடிய முதலீட்டு வீதத்தை ஆண்டொன்றிற்குத் தேசிய வருவாயில் சுமார் 12 சத வீதமாக உயர்த்த வேண்டும் எனக் குறிப்பிடுகின்ருர். கணிசமான தொழில் துறை வளர்ச்சியும் இன்றியமையாதது என்று அவர் கூறு கின்ருர். பொருளாதாரம் மேலெழு நிலையை அடைந்த பிறகு, முன்னேற்றம் உறுதியாகத் தொடர்ந்து நீடிக்கின்ற நிலை ஏற்படு கின்றது. இந்நிலையில் முதலீட்டிற்குத் தேவையான சேமிப்பும்

[1] P. C. Jain, Planning in India, 1969, p. 11.

போதுமான அளவிற்குச் செய்யப் படுகின்றது. அதன் பிறகு பொருளாதார வளர்ச்சி வீதம் படிப்படியாக உயர்ந்துகொண்டே செல்கின்றது.

துணிவுமிக்க இரண்டாவது திட்டம் தீட்டப்பட்ட போது, முதலீட்டு வீதம் தேசிய வருவாயில் 11 சதவீதமாக உயரும் என எதிர்பார்க்கப் பட்டது; தொழில் துறையிலும் சிறப்பான விரிவாக்கம் அமைந்திருக்குமென்று கருதப்பட்டது. எனவே, இரண்டாவது திட்ட இறுதியில் இந்தியப் பொருளாதாரம் 'மேலெழு நிலையை' அடையும் எனக் கூறப்பட்டது. இரண்டாவது திட்டக்காலத்தில் முதலீட்டு வீதமானது திட்டமிட்ட (தேசிய வருவாயில்) 11 சதவீதத்திற்கும் சற்று அதிகமாகவே உயர் வடைந்தது. ஆனால் தேசிய வருவாயில் சேமிப்பு வீதமானது 8.5 சதவீதமாக மட்டுமே அமைந்திருந்தது. பொருளாதாரம் மேலெழு நிலையைப் பெறுவதற்குத் தேவையான தொழில் அடிப்படையும் சிறப்பாக விரிவடையவில்லை. எனவே, இரண்டாவது திட்ட இறுதியில் இந்தியப் பொருளாதாரம் மேலெழு நிலையை எட்ட வில்லை. ஆனால் மூன்றாவது திட்டம் வரையப்பட்டபோது, பொருளாதாரம் மேலெழு நிலையை அடைந்துவிட்டதாகக் குறிப் பிடப்பட்டது. எனவே, மூன்றாவது திட்டத்தில் 'தன்னிறைவு பெற்றுத் தானே வளர்கின்ற' பொருளாதாரத்தைப் பெறுவது நோக்கமாக அமைந்திருந்தது. ஆகவே, முதலீட்டு வீதத்தைத் தேசிய வருவாயில் 11 சதவீதத்திலிருந்து 14 சதவீதமாகவும், சேமிப்பு வீதத்தைத் தேசிய வருவாயில் 8.5 சதவீதத்திலிருந்து 11·5 சதவீதமாகவும் உயர்த்தத் திட்டமிடப்பட்டது. திட்ட மிட்டபடி சேமிப்பு, முதலீட்டு வீதங்கள் உயர்வடைந்தன. எனவே, பொருளாதாரம் மேலெழு நிலையை அடைந்துவிட்டதாகவும் சொல்லப்பட்டது.

ஆனால், மூன்றாவது திட்டச் சாதனங்களை ஆராயும்போது தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற பொருளாதாரம் தோன்றவில்லை என்பதை அறிய முடிகின்றது.

மூன்றாவது திட்டம் பொருளாதார வளர்ச்சியை ஆண்டொன் றிற்குத் தேசிய வருவாயில் 5 சதவீதம் பெறக் கருதியது. ஆனால், மேலெழு நிலையைப் பெறுவதற்கு இவ்வளர்ச்சி வீதம் போதுமான தாக இல்லை. பொருளாதார வளர்ச்சியானது 9 சதவீதத்திற்கும் மேலாக அமைந்திருக்க வேண்டுமென்று தற்பொழுது கூறப்படு கின்றது. இதையடைய முதலீட்டின் வீதமானது தேசிய வருவாயில் 25 சதவீதமாக இருக்க வேண்டும். ஆனால் திட்டக் காலத்தில் முதலீட்டை 14 சதவீதமாக உயர்த்தத் திட்டமிடப்

பெற்றது. இந்தக் குறியிலக்கையும் கூட மூன்ருவது திட்டத்தில் பெற இயலவில்லை. மூன்ருவது திட்டத்தின் முதல் மூன்ருண்டு களில் தேசிய வருவாய் சுமார் 10 சதவீதம் மட்டுமே அதிகரித்தது. இதைப் போன்றே, சேமிப்பு வீதத்தையும் போதுமான அளவிற்கு உயர்த்த முடியவில்லை. பொருளாதாரத்தின் தொழில் துறையும் சிறப்பான அளவிற்கு வளர்ச்சியடையவில்லை. மூன்ருவது திட்டக் காலத்திற்குப் பிறகு இந்தியப் பொருளாதாரத்தில் 'தொழிற் பின்னிறக்க நிலையும்' (Industrial Recession) தோன்றியது. இதனுல், நாட்டின் தொழில் துறை முன்னேற்றம் தடைப்பட்டது.

மேற் குறிப்பிடப்பட்டவைகளின் மூலம் இந்தியப் பொருளா தாரம் மேலெழு நிலையை அடையவில்லை என்பதை நன்கு உணர லாம். ஆனுல் திட்டமிடுபவர்கள் பொருளாதார மேலெழு நிலை ஏற்பட்டு விட்டதாகக் குறிப்பிட்டுள்ளனர். நேர்மையான, துணி வான முயற்சிகளின் மூலமே எதிர்காலத்தில் இந்நிலையை எட்ட முடியும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இந்நிலை ஏற்படுமென எதிர்பார்க்கலாம்.

தன்னிறைவைப் பெற வேண்டுமென்ற நோக்கமானது மூன்ருவது திட்டத்தில் முதன் முறையாகக் குறிப்பிடப்பட்டது. இத்திட்டக் காலத்தில் செறிவு முறையில் முன்னேற்றத்தைப் பெறக் கருதப்பட்டது. மொத்த முதலீட்டில் வெளிநாட்டு உதவியின் அளவைப் படிப்படியாகக் குறைக்க அரசு நடவடிக்கை களை மேற் கொண்டது. ஐந்தாவது திட்டத்தின் தொடக்கத்தில், பொருளாதாரம் வெளிநாட்டு உதவியின்றித் தன்னிறைவு பெற்றுத் தானே இயங்கும் திறனைப் பெறுமென மதிப்பிடப் பட்டது. வெளிநாட்டு உதவியின்றி இயங்குகின்ற பொருளாதாரம் மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த வேண்டும். பொரு ளாதார வளர்ச்சியைப் பெற உள்நாட்டுத் திறன்கள் பெருக வேண்டும். இறக்குமதிப் பொருட்களின் மதிப்பிற்கு ஈடாக ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பு அமைந்திருக்க வேண்டு மென்பது அவசியமல்ல. பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் வெளிநாட்டுக் கடன்கள் பெறப்படுகின்றன. அக்கடன்களையும், வட்டித் தொகையையும் திருப்பித் தரும் அளவிற்காவது ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பு உயர வேண்டும். தன்னிறைவு பெற்றுத் தானே வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெறும்போது, பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்பு நிலை தோன்றுவது இயல்பானதேயாகும். ஆனுல், வெளிநாட்டு உதவியின் அளவைக் குறைக்க இது உதவுகின்றது. முன்னேற்றமடையாத தேக்கப் பொருளாதாரத்தில் வெளிநாட்டு உதவியின் மூலமே விரைவான வளர்ச்சியைப் பெறமுடியும்.

தன்னைச் சார்ந்து தானே வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெறுவதில் பல இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இந்தியப் பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் உற்பத்தி குறைவாகவே இருந்தது. சேமிப்பு, முதலீட்டு வீதங்களும் தாழ்வாகவே இருந்தன. மூலதனத்திரட்சி குறைவாகவே ஏற்பட்டது. ஏற்றுமதிகளின் அளவு குறைவாக இருந்தது. இந்நிலையில் நாட்டின் வளங்களைச் சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்த முதலீட்டு வீதத்தை உயர்த்துவது அவசியமானதாக அமைந்திருந்தது. உள்நாட்டில் மூலதனத்திரட்சி குறைவாக இருந்ததால், வெளிநாட்டு உதவியைப் பெறுவது தவிர்க்க முடியாததாயிற்று. பொருளாதார முன்னேற்றத்தை உறுதியாகத் தொடர்ந்து பெறுவதற்கான எல்லா வாய்ப்புக்களையும் நன்கு பயன்படுத்த வேண்டுமென்று மூன்றாவது திட்ட அறிக்கை குறிப்பிட்டது. 15 ஆண்டுகளில் தன்னிறைவு பெற்றுத்தானே வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெறுகின்ற நோக்கமும் இவ்வறிக்கையில் குறிப்பிடப் பட்டிருந்தது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், வெவ்வேறு ஆண்டு களில் முதலீட்டின் அளவு எவ்வாறு இருக்குமென மதிப்பிடப் பட்டது. 1955-56-இல் முதலீட்டுவீதம் தேசிய வருவாயில் 7 சதவீத மாகவும், 1960-61-இல் 11 சதவீதமாகவும், 1965-66-இல் 14 சதவீதமாகவும், 1970-71-இல் 16 சதவீதமாகவும் இருக்குமென எதிர்பார்க்கப்பட்டது. அதற்குப் பிறகு, முதலீட்டுவீதம் உயர்வடையாமல் ஒரே நிலையாக அமையுமெனவும் குறிப்பிடப்பட்டது. கடந்த காலத்தில் முதலீட்டின் அளவை உயர்த்தி, பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவிய வெளிநாட்டு உதவியை மூன்றாவது திட்டம் குறிப்பிட்டது. 1960-61-இல் உள்நாட்டுச் சேமிப்பு வீதமானது 8.5 சதவீதமாக இருந்தபோது, முதலீட்டு வீதமானது 11 சதவீதமாக இருந்தது. 1965-66-இல் இவ்வீதங்கள் முறையே 11.5 சதவீதமாகவும் 14 சதவீதமாகவும் இருந்தன. வேறுவகையில் கூறினால், 1960-61-இல் உள்நாட்டுச் சேமிப்பு வீதத்தைக் காட்டிலும் முதலீட்டு வீதம் 27 சதவீதம் அதிக மாகவும், 1965-66-இல் 26 சதவீதம் அதிகமாகவும் இருந்தது. சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் உள்ள இடைவெளியைப் பூர்த்தி செய்ய வெளிநாட்டு உதவியே பயன்படுத்தப் பட்டது.

நான்காவது திட்டம் இந்நிலையை மாற்றியமைத்தது. மூன்றாவது திட்டக் காலத்தில் உற்பத்திக் குறியிலக்குகளை எட்ட முடியவில்லை. திட்டங்களை நிறைவேற்ற பெறப்பட்ட வெளிநாட்டுக் கடன்களையும், வட்டியையும் செலுத்துவது அவசியமாயிற்று. ரூபாய் மதிப்புக் குறைப்பினால் இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்கள், கருவிகள், பிற உற்பத்திச் சாதனங்கள் ஆகியவற்றிற்கான செலவு

அதிகரித்தது. 1960-61-ஆம் ஆண்டின் விலைகளின் அடிப்படையில் 1965-66-ஆம் ஆண்டின் தேசிய வருவாய் ரூ. 15, 930 கோடி என மதிப்பிடப்பட்டது ; ஆனால், மூன்றாவது திட்டக் குறியிலக்கு ரூ.19,000 கோடியாகும். 1965-66-இல் தேசிய வருவாய் குறைவாக இருந்தமைக்கு நாட்டில் நிலவிய பஞ்ச நிலையே முக்கியக் காரண மாகும். 1960-61-ஆம் ஆண்டின் விலைகளின் அடிப்படையில் 1964-65-ஆம் ஆண்டின் தேசிய வருவாய் ரூ. 16, 630 கோடியாக இருந்தது குறிப்பிடத்தக்கது. இப்புள்ளி விவரங்கள் 1970-71-ஆம் ஆண்டில் தேசிய வருவாய்க் குறியிலக்காகிய ரூ. 25,000 கோடியை எட்ட முடியாது என்பதை உணர்த்துகின்றன. இக்குறியிலக்கு மூன்றாவது திட்டத்தில் நிர்ணயிக்கப் பட்டது. நான்காவது திட்டத் தின் திருத்தியமைக்கப்பட்ட அறிக்கை ஐந்தாவது திட்ட இறுதிக்குள் தன்னிறைவைப் பெறுவதை நோக்கமாகக் குறிப்பிடு கின்றது. இந்நோக்கத்தை அடைய உள்நாட்டுச் சேமிப்பு வீதத்தை உயர்த்துவது இன்றியமையாததாகும். 1965-66-இல் உள் நாட்டுச் சேமிப்பு தேசிய வருவாயில் 11.5 சதவீதமாக இருந்தது; 1975-76-இல் உள் நாட்டுச் சேமிப்பை 20 சதவீதமாக உயர்த்தத் திட்டமிடப் பட்டுள்ளது.

நான்காவது, ஐந்தாவது திட்டங்களின் சேமிப்பு, முதலீட்டுக் குறியிலக்குகளை திரு பி. எஸ். லோகநாதன் ஆராய்கின்றார். நான் காவது திட்ட அறிக்கையின்படி முதலீட்டின் அளவு ரூ. 21,350 கோடியாக நிர்ணயிக்கப்பட்டது. இதில் ரூ. 4,700 கோடி வெளி நாட்டு உதவியும், ரூ. 685 கோடி வெளிநாட்டுத் தனியார் மூலதன மும் அடங்குவதாகும். எனவே, உள்நாட்டு மூலதனத்தின் அளவு ரூ. 15, 965 கோடியாக இருக்கும். திட்டமிட்டபடி தேசிய வரு வாயைப் பெற ஐந்தாவது திட்டத்தில் ரூ. 33,500 கோடி முதலீடு செய்யப்பட வேண்டும். இதில் ரூ 3,000 கோடி வெளி நாட்டு உதவியாகவும், ரூ. 1,000 கோடி வெளிநாட்டுத் தனியார் முதலீடாகவும் இருந்தால் உள்நாட்டுச் சேமிப்பின் அளவு ரூ. 29,500 கோடியாக இருக்க வேண்டும்.

திட்டக்குழு ஐந்தாவது திட்ட இறுதிக்குள் சேமிப்பு வீத மானது 20 சதவீதம் என்ற அளவிற்கு உயருமென்று குறிப் பிட்டது. அடுத்த 10 ஆண்டுக் காலத்தில் சேமிப்பு வீதத்தை உயர்த்துவதில் பல தடைகள் தோன்றக் கூடும். 1965-66-இல் சராசரி சேமிப்பு வீதமானது 9 சத வீதமாக இருந்தது. ஐந்தா வது திட்ட இறுதிக்குள் இச்சேமிப்பை இரு மடங்காக்கத் திட்ட மிடப்பட்டுள்ளது. சேமிப்பு, முதலீட்டு வீதங்களை இந்த அளவிற்கு உயர்த்துவது எளிதானதல்ல என்பது சிலருடைய கருத்தாகும். பால் பாரன் (Paul Baran) கருதுவதுபடி, இன்னும் பத்தாண்டுக்

காலத்திற்குள் இந்தியா தன்னைச் சார்ந்து தானே உறுதியாகத் தொடர்ந்து வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெற முடியாது. அவ்வகைப் பொருளாதாரத்தைப் பெற இன்னும் 20 முதல் 30 ஆண்டுக்காலம் பிடிக்குமெனஅவர் குறிப்பிடுகின்றார். இந் நிலைப் பொருளாதாரத்தைப் பெற மேலெழு நிலையைத் தோற்று விக்க வேண்டும். பொருளாதாரம் மேலெழு நிலையை அடைய வெளிநாட்டு உதவிகளைப் பெறலாம். வெளிநாட்டு உதவியைப் பெறுவது தவிர்க்க முடியாததாகின்றது.

வீரா ஆன்ஸ்டி (Vera Anstey) கூறுவதுபோல, "இந்தியாவில் மேலெழு நிலையைப் பெற பொருளாதார வளர்ச்சி உறுதியாகத் தொடர்ந்து நீடிக்க வேண்டும். மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைவிட பொருளாதார வளர்ச்சி வீதம் உயர்வாக இருக்க வேண்டும். உற்பத்திச் சாதனங்கள் பெருக வேண்டும். வருவாய்ப் பெருக்கம் ஏற்பட்டு சேமிப்பு, முதலீட்டு வீதங்களும் உயர்வடைய வேண்டும். பொருளாதாரத்தின் பல துறைகளும் ஒருங்கே வளர வேண்டும். இவை யாவற்றையும் அடைய பெருமளவில் முன்னேற்றத்திற்கான திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டும். திட்டங்களை நிறைவேற்ற கணிசமான அளவில் வெளிநாட்டு உதவியையும் பெறலாம். மேலெழு நிலையைப் பெறுவதில் இவ்விதமான பல சிக்கல்கள் அமைந்துள்ளன. அரசின் தீவிரமான கொள்கைகளின் மூலம் இச்சிக்கல்களுக்குத் தீர்வு காணலாம்."

# 9. பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு

## (The Role of Government in Economic Developmemt)

அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற ஒரு சில நாடுகளைத் தவிர உலகின் பல நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்தை அரசின் தீவிர நடவடிக்கைகளாலேயே பெற்றன. முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் அரசு பலவகைப்பட்ட முதலீடுகளையும் செய்வது அவசியமானதாகும். முன்னேற்ற நடவடிக்கைகளைத் தொடங்குவதும், முன்னேற்றத்தை விரைவு படுத்துவதும் அரசின் முக்கியப் பணிகளாகும். இங்கிலாந்து போன்ற நாடுகளில் கூட பொருளாதார முன்னேற்றத்தில் அரசுகள் அக்கறை கொண்டே அமைந்திருந்தன. பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் முக்கிய பங்கைக் குறிப்பிடும் போது ஆர்தர் லூயிஸ் பின்வருமாறு கூறுகின்றார் : "அரசின் சிறப்பான நடவடிக்கைகளின் மூலமே எந்த ஒரு நாடும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியும். இங்கிலாந்தில் தொழில் வளம் பெருகியமைக்கு மூன்றாவது எட்வர்டு காலத்திலிருந்து தொடர்ச்சியாக அமைந்திருந்த நல்ல ஆட்சியாளர்களின் பணிகளும் காரணமாகும். திறமையான ஆட்சியாளர்களின் ஊக்குவிக்கும் கொள்கை இங்கிலாந்தின் தொழில் முன்னேற்றத்திற்கு உதவியது. இது போன்றே அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் பொருளாதார நடவடிக்கைகளை உருவாக்க அரசு உதவியிருக்கின்றது ; அமெரிக்க அரசின் சட்டங்களும் உதவியிருக்கின்றன." பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுதலை முதலில் தொடங்கிய நாடு சோவியத் ரஷ்யாவாகும். சோவியத் அரசு பொருளாதார முன்னேற்றத்தில் தீவிர அக்கறை கொண்டதாக இருந்தது. அதன் மூலம் ரஷ்யாவின் பின்தங்கிய வேளாண்மைப் பொருளாதாரம் முன்னேற்றமடைந்த தொழிற் பொருளாதாரமாக மாற்றப்பட்டுள்ளது.

பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசின் நடவடிக்கைகள் அவசியமானவை என்பதை இன்று அனைவரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். உலகின் சில நாடுகளில் அரசின் நடவடிக்கைகள் குறைந்த

அளவிலும், பல நாடுகளில் அதிக அளவிலும் அமைந்திருக்கின்றன. அரசியற் கொள்கைகளுக்கு ஏற்ப அரசின் நடவடிக்கைகளின் அளவிலும் வேறுபாடுகள் ஏற்படுகின்றன. சிலவிதத் துறைகளை அரசே ஏற்று நடத்துவது அவசியமாகின்றது. வேறு சில துறைகள் தனியாரிடமும் அமைந்திருக்கின்றன. 'தலையிடாமைக் கொள்கை' (Laissez Faire) செல்வாக்குக் கொண்டிருந்தபோது அரசின் பணிகள் குறைந்த அளவிலேயே அமைந்திருந்தன. சமுதாயத்தின் பொருளாதார, சமூகக் குறைபாடுகளுக்கு அரசு பொறுப்புள்ள தாக அமைந்திருக்கவில்லை. இவ்விதக் குறைபாடுகள் இயற்கையின் பொருளாதார விதிகள் சரியாகச் செயல்படாமையால் தோன்றக் கூடியவை எனக் கருதப்பட்டது. ஆனால், இன்றைய புதுமைப் பொருளாதாரத்தில் அரசு ஒரு முக்கிய அமைப்பாகத் திகழ் கின்றது. இன்று, அரசு பொருளாதாரத்தின் எல்லாத் துறை களிலும் செல்வாக்குக் கொண்டுள்ளது. பொருளாதார முன் னேற்றம் சிறப்பான அரசாட்சியிலேயே அமைந்திருக்கிறது. விரை வான வளர்ச்சியைப் பெற உதவும் தொடக்க நடவடிக்கைகளை அரசே எடுக்க வேண்டும். ஒரு நாட்டின் பொருளாதார முன் னேற்றத்திற்காகத் திட்டமிடுதலையும் அரசே மேற்கொள்கின்றது.

தனியார் முதலீடுகள் இலாப நோக்குடனேயே செய்யப் படுகின்றன. பொருளாதாரத்தின் எல்லாத்துறைகளிலும் முன் னேற்றத்தைப் பெற தனியார் முதலீடுகள் போதுமானதாக இருப்பதில்லை. நாட்டை விரைவாகத் தொழில் மயமாக்கத் தேவையான அதிக அளவு மூலதனத்தை அரசு மட்டுமே பெற முடியும். வரிவிதிப்பு முறையின் மூலமும், பற்றுக்குறை நிதியாக் கத்தின் மூலமும் பெருமளவு மூலதனத்தை அரசு பெற்று பேரளவுத் தொழில்களைத் தொடங்க இயலும். முதலீட்டின் அளவைப் பெருக்க அரசின் பணக் கொள்கையும், நிதிக்கொள்கையும் உதவு கின்றன. பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்விக்க இவ்வித அரசின் கொள்கைகள் சிறப்பாக அமைந்திருக்க வேண்டும். அரசு சமுதாயத்திற்கு உதவக்கூடிய சில அவசியப் பணிகளிலும் முதலீடு செய்கின்றது. இவ்வகைத் திட்டங்களின் அவசிய நிலைகளுக்கு ஏற்ப அரசு முதலீடுகளைச் செய்ய வேண்டும். தனியார் முதலீடு செய்ய முன்வராத துறைகளில் அரசு முதலீடு செய்வது அவசியமானதாகும்.

பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு ஒரு நாட்டில் முன்னேற்றத்திற்கான திட்ட அமைப்பைப் பொருத்தும் அமையும். சில முதலாளித்துவ நாடுகளில் பொருளாதார நட வடிக்கைகள் அதிக அளவிற்குத் தனியார் துறைகளிலேயே அமைந்துள்ளன. அரசு தனியார் துறைகளின் நடவடிக்கைகளைக்

கட்டுப்படுத்தி மேற்பார்வையிடுகின்றது. திட்டமிட்டப் பொருளாதாரத்தில் அரசு நேரடியாகப் பொருளாதார முன்னேற்றப் பணிகளில் ஈடுபடுகின்றது. அரசு சேமிப்பாளராகவும், முதலீட்டாளராகவும், திட்டமிடுபவராகவும் பணியாற்றுகின்றது ; முன்னேற்றத்தைப் பெற முழுமையான திட்டத்தைத் தயாரிக்கின்றது ; திட்டத்திற்கேற்ப பொருளாதாரத்தை நெறிப்படுத்துகின்றது.

உலகின் எந்த ஒரு நாடும் இன்று 'தலையிடாமைக் கொள்கையைப்' பின்பற்றவில்லை. அரசின் நடவடிக்கைகள் பின்தங்கிய நாடுகளில் பெருகியிருப்பது போலவே மேம்பாடடைந்த நாடுகளிலும் அதிகரித்திருக்கின்றன. உலகின் எல்லா அரசுகளும் மக்களின் நலங்காக்கும் அரசுகளாகவே அமைந்துள்ளன. எனவே, பொருளாதாரத் துறைகளில் இன்று அரசின் நடவடிக்கைகள் அதிகரித்துள்ளன. சமீப காலத்தில் சுதந்திரம் பெற்றுள்ள சில வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அரசின் கடமை மிகவும் அதிகமானதாக இருக்கின்றது. இந்நாடுகளில் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது அரசின் தீவிர நடவடிக்கைகளிலேயே அடங்கியுள்ளது. பின் தங்கிய பொருளாதாரங்களில் அமைத்திருக்கக் கூடிய 'வறுமை வட்டத்தை' நீக்குவது அரசின் முக்கியக் கடமையாகும். இன்றைய அரசுகள் பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிடுகின்றன ; முன்னேற்றத்திற்கான தொடக்க நடவடிக்கைகளை எடுக்கின்றன; முன்னேற்றம் தொடர்ந்து நீடிக்கப் பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துகின்றன.

முன்னேற்றமடைந்த நாடுகளிலும்கூட பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் குறுக்கீடு அவசியமானதென உணரப்பட்டு விட்டது. பொருளாதார வளர்ச்சியை நிரந்தரமாக நீடிக்கச் செய்யவும், வளர்ச்சியில் உறுதியான நிலையை ஏற்படுத்தவும் அரசின் தலையீடுகள் இன்றியமையாதவைகளாகின்றன. எனினும், முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளில் அரசின் நடவடிக்கைகள் குறைந்த அளவிற்கே அமைந்துள்ளன. ஏழை நாடுகளின் அரசுகள் மிக அதிக அளவில் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் அரசுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதையே அடிப்படைக் கொள்கையாகக் கொண்டிருக்கின்றன.

ஏழை நாடுகளின் அரசுகள் தொழில் முயல்வோருடைய பணிகளை ஆற்றுகின்றன. வேளாண்மை வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கக்கூடிய சிக்கல்களை அரசு தீர்க்க வேண்டும் ; அடிப்படைத்

தொழில்களை ஏற்படுத்த வேண்டும்; பொருளாதார, சமுதாய நன்மைகளை அளிக்கக்கூடிய துறைகளை மேம்பாடடையச் செய்ய வேண்டும். அரசின் நடவடிக்கைகளால் அதிக அளவு மூலதனத் திரட்சியைப் பெற முடியும். பொதுவாக, பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான அடிப்படை வசதிகளை அரசே ஏற்படுத்த வேண்டும்.

மேலை நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் அரசு பெரும்பங்கு வகித்தது எனக் கூற இயலாது. குறிப்பாக இங்கிலாந்தை இதற்கு உதாரணமாகக் கூறுவதுண்டு பழைய கால அரசுகள் சட்டத்தையும், ஒழுங்கையும் பாதுகாப்பவைகளாகவே அமைந்திருந்தன. பொருளாதார முன்னேற்றப் பணிகளிலும், சமுதாய நலப்பணிகளிலும் அவை குறைந்த அளவிற்கே ஈடு பட்டிருந்தன. இங்கிலாந்தைக் காட்டிலும், அமெரிக்காவின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அமெரிக்க அரசின் நடவடிக்கைகள் பெரிதும் உதவியிருக்கின்றன. ஆனால், இன்றும்கூட அமெரிக்காவில் தனியார் துறையே மிகவும் வளர்ச்சியடைந்ததாக அமைந்துள்ளது. தனியார் துறைகளின் வளர்ச்சியே இந்நாடுகளின் பொருளாதார மேம்பாட்டிற்கு உதவியதெனலாம்.

முன்னேற்றமடைந்த நாடுகளில் பொருளாதார மேம் பாட்டைப் பெற பல தலைமுறைகள் தேவைப்பட்டன. இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் முன்னேற்றத்தைச் சில ஆண்டு களில் பெற விரும்புகின்றன. எனவே, இந்நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசின் பங்கு அவசியமான தாகின்றது. அரசின் தீவிரக் கொள்கைகளின் மூலமே பின்தங்கிய தேக்கப் பொருளாதாரங்களை முன்னேற்றமடைந்த இயக்கப் பொருளாதாரங்களாக மாற்ற இயலும். தற்பொழுது முன்னேற்ற மடைந்த நாடுகளிலும் அரசு பொருளாதார நடவடிக்கைகளில் முக்கியப் பங்கேற்கின்றது. தனியார் சொத்துக்கள் அரசால் காக்கப் படுகின்றன. ஒப்பந்தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப் படுகின்றது. சமுதாய நலப்பணிகளை அரசு மேற்கொள்கின்றது. கல்வி, போக்குவரத்து, செய்தித் தொடர்பு, ஆரோக்கியப் பணிகள் ஆகிய எல்லாவற்றின் முன்னேற்றத்திற்கும் அரசு பாடுபடு கின்றது. பொதுமக்களுடைய நலனைப் பாதிக்கும் முற்றுரிமை நிலைகள் அரசால் கட்டுப்படுத்தப் படுகின்றன. நுகர்வோருடைய நலன்கள் இதன் மூலம் காக்கப் பெறுகின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கு இடையூறாக இருக்கக்கூடிய வாணிபச் சுழல் களும் கட்டுப்படுத்தப் படுகின்றன. வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் அரசு நடவடிக்கைகளை எடுக்கின்றது. பொருளா தார நடவடிக்கைகளைச் சீர்செய்ய நிதிக் கொள்கையும், பணக்

கொள்கையும் உதவுகின்றன. பலவிதமான பொருளாதாரப் புள்ளி விபரங்களைச் சேகரித்து அரசு வெளியிடுகின்றது. தனியார் துறையின் முன்னேற்றத்திற்கு இப்புள்ளிவிபரங்கள் பெரிதும் உதவுகின்றன. தனியார் துறையின் உற்பத்தித் திட்டங்கள் அரசின் புள்ளி விபரங்களின் அடிப்படையில் தயாரிக்கப் படுகின்றன.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அரசுகள் பொருளாதார முன்னேற்றத்தில் மிக முக்கிய பொறுப்புக்களை ஏற்கின்றன. தனியார் முதலீடு செய்யத் தயங்குகின்ற துறைகளை அரசு மேற் கொள்ள வேண்டும். சமுதாயத்திற்கு நன்மையளிக்கக்கூடிய சில துறைகளில் தனியார் சில காரணங்களினால் முதலீடு செய்ய முன் வராமல் இருக்கக்கூடும். அவ்விதத் துறைகளை அரசு முன்னேற்ற மடையச் செய்வது அவசியமானதாகும். பின்தங்கிய நாடுகளில் வளர்ச்சியடையாத துறைகள் மிகுதியாக இருக்கின்றன. இத் துறைகளை வளர்ச்சியடையச் செய்வது அரசின் கடமையாகும். முன்னேற்றமடைந்த நாடுகளில்கூட, தொழில் முயல்வோர் எல்லாத் துறைகளிலும் முதலீடு செய்ய முன்வருவார்கள் எனக் கூறயியலாது.

வளர்ச்சியடையாத நாடுகளில் போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் சிறப்பாக அமைந்திருப்பதில்லை; நீர்ப்பாசன வசதிகள் செவ்வனே செய்யப் பட்டிருப்பதில்லை; மின்சார உற்பத்தி யும் தேவையான அளவிற்குச் செய்யப் படுவதில்லை. இதன் காரணமாக பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் உற்பத்தித் திட்டங்கள் வெற்றியைப் பெறுவதில்லை. போக்கு வரத்து, நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி போன்றவை களின் முன்னேற்றத்திற்காகத் தனியார் முதலீடு செய்ய மாட்டார் கள். பலவிதமான காரணங்களால் தனியார் இத்துறைகளில் முதலீடு செய்யத் தயங்குகிறார்கள். இவற்றில் செய்யப்படும் முதலீட்டிற்குக் கிடைக்கக் கூடிய இலாபம் குறைவாகவே இருக் கின்றது. இத்துறைகளின் மூலம் நன்மைகள் மறைமுகமாகவே கிடைக்கின்றன. சமுதாயத்திற்கு நன்மையளிக்கக் கூடிய இவை நீண்ட காலத்திற்குப் பிறகு மட்டுமே முதலீட்டிற்கான வரு வாயைத் தரக்கூடியவை. மேலும், இத்திட்டங்களில் முதலீடு செய்ய அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. அரசினால் மட்டுமே அந்த அளவிற்கு அதிக மூலதனத்தை எளிதில் பெற முடியும். வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் அமைப்பாளர்கள் மூலதனத்தை நீண்ட காலத்திற்கு இத்திட்டங்களில் முடக்கு வதற்கு விரும்ப மாட்டார்கள். அவர்கள் குறுகிய காலத்திலேயே முதலீட்டிற்கான இலாபத்தை அதிக அளவில் பெற விரும்பு

கின்றார்கள். எனவே, அதற்கேற்ப ஊக வாணிபங்களில் அவர்கள் ஈடுபடுகின்றார்கள். இவ்வகை வாணிபங்களினால் குறுகிய காலத்திலேயே முதலீட்டிற்கான இலாபத்தை மிகுதியாகப் பெற முடிகின்றது. ஆகவே, தனியார் முதலீடு இலாப நோக்குக் கொண்டதாக இருக்கின்றது எனலாம். தனியார் முதலீடு செய்ய விரும்பாத துறைகளை அரசு மேற்கொள்ள வேண்டியது அவசியமாகின்றது.

கல்வி, தொழில் நுட்பப் பயிற்சி வசதிகள், மருத்துவ வசதிகள் ஆகியவற்றைப் பெருக்குவதின் மூலமும் பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெறலாம். தொழில் முயல்வோர் கல்வி முன்னேற்றத்திற்காக முதலீடு செய்ய முன்வருவதில்லை. உழைப்பாளர்களுக்குச் சிறப்பான பயிற்சி வசதிகளும் தனியார் துறையில் செய்து தரப்படுவதில்லை. உழைப்பாளர்களுக்குப் பயிற்சியளிக்க அதிகச் செலவு பிடிக்கின்றது. எனவே, கல்வி வசதிகள், பயிற்சி வசதிகள், ஆரோக்கியப் பணிகள் ஆகியவற்றை அரசே அளிக்க வேண்டும்.

பொதுத் துறையில் நிர்வாகம் சிறப்பாக அமைந்திருப்பதில்லை எனக் குறை கூறப்படுகின்றது. தனியார் துறையில் அமைந்துள்ள ஒரு தொழில் பேரளவில் இருந்தால், அதன் நிர்வாகமும் சிறப்பாக அமையுமெனக் கூற முடியாது. ஏனெனில், பேரளவுத் தொழில்களில் உரிமையாளர் எல்லா உற்பத்தி நிலைகளையும் நேரடியாக மேற்பார்வையிட இயலாது. இப்பேரளவு உற்பத்தித் தொழில்களின் நிர்வாகம் ஊதியம் பெறக்கூடிய நிர்வாகிகளிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கின்றது. இக்காரணங்களால் 'கூட்டுப் பங்கு நிறுவனங்களின்' (Joint Stock Companies) நிர்வாகம் உயர்வாக அமைந்திருப்பதில்லை. இந்நிறுவனங்களின் பங்குதாரர்கள் உற்பத்தி நடவடிக்கைகளில் அதிக அக்கறை கொண்டவர்களாக இருப்பதில்லை. முதலீட்டாளர்களின் அக்கறையின்மையால் இந்நிறுவனங்கள் நல்ல முறையில் செயல்படுவதில்லை. தொழில் அமைப்பாளர்கள் (அல்லது தொழில் தலைவர்கள்) எண்ணிக்கையும் குறைந்து வருகின்றது.

அரசின் துறையிலும் திறமை குறைந்த நிர்வாகம் அமைந்துள்ளது. ஆனால் திறமையான நிர்வாகத்தைப் பெறுவதற்கான வழிமுறைகளும் உள்ளன. அரசியல் நோக்கின்றி, வாணிப நோக்கோடு பொதுத்துறை நிறுவனங்கள் செயல்பட்டால் சிறப்பான முன்னேற்றத்தைப் பெறமுடியும். பொருளாதார, அரசியல், சமூக, மத அமைப்புக்களில் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது அரசின் கடமையாகும். இவ்வகைச் சீர்திருத்தங்களின் மூலம் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம்.

அரசின் செல்வாக்கும், தலையீடும் பொருளாதாரத்தில் எந்த அளவிற்கு இருக்கின்றன என்பதைப் பின்வருபவைகளைக் கொண்டு நன்குணரலாம்:

1. ஒரு நாட்டுப் பொருளாதாரத்தில் பொதுத் துறையின் நிலை;

2. பொதுத் துறையின் மூலமாக தேசிய வளங்கள் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகின்ற நிலை;

3. தேசிய வருவாயில் பொதுத்துறையின் பங்கு; (இதை அரசு அளிக்கின்ற ஊதியங்கள், கூலிகள் ஆகியவற்றின் மூலமும் பொதுத்துறை நிறுவனங்கள் பெறுகின்ற இலாப அளவின் மூலமும் அறியலாம்).

4. தேசியச் செலவில் பொதுத் துறையின் பங்கு.

பல வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அரசின் செலவுகள் படிப்படியாக அதிகரித்து வருகின்றன. இந்நாடுகளில் 1950-ஆம் ஆண்டிற்கும் 1958-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில், தேசியச் செலவில் அரசின் செலவு 13 சதவீதத்திலிருந்து 21 சதவீதமாக உயர்வடைந்துள்ளது. பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் செல்வாக்கு தற்பொழுது பெருகி வருகின்றது.

### அரசின் நடவடிக்கைகள் விரிவடைந்துள்ளமைக்கான காரணங்கள்

உலகின் பல நாடுகளிலும் பல காரணங்களால் அரசின் நடவடிக்கைகள் விரிவடைந்து வருகின்றன. அக்காரணங்களில் முக்கியமானவற்றைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்:

(1) முதலாளித்துவப் பொருளாதாரங்களில் உறுதியற்ற தன்மை நிலவுகின்றது. இந்த அடிப்படைக் குறைபாட்டினால் தனியார் நலம் காக்கப்படும்பொழுது, சமுதாய நலம் பெரிதும் பாதிக்கப்படுகின்றது. இக்குறைபாட்டைக் களைய அரசு பொருளாதார நடவடிக்கைகளில் பலவகைக் கட்டுப்பாடுகளையும் கொண்டு வருகிறது.

(2) தற்கால அரசுகள் மக்களின் நலங் காக்கும் அரசுகளாக இருக்கின்றன. மக்களின் நலத்தைக் காக்க அரசு பெருமளவிற்கு முதலீடுகளைச் செய்வது அவசியமாகின்றது.

(3) போக்குவரத்து, செய்தித் தொடர்பு, கல்வி வசதி, மருத்துவ வசதி, ஆரோக்கிய வசதி போன்றவை பின்தங்கிய பொருளாதாரங்களில் சிறப்பாக வளர்ச்சியடைந்திருப்பதில்லை.

இவற்றை முன்னேற்றமடையச் செய்வதினால் நாட்டின் உற்பத்தித் திறனைப் பெருக்க முடியும். அரசு, இவற்றின் வளர்ச்சிக்காக அதிக அளவு முதலீடுகளைச் செய்கின்றது.

(4) இரண்டாவது உலகப் போரும், அதனால் ஏற்பட்ட விளைவுகளும் உலக நாடுகளுக்குப் பல படிப்பினைகளை உணர்த்தின. ஒரு நாட்டின் அரசியல் உறுதியும், நிரந்தரத் தன்மையும் அந்நாட்டின் பொருளாதார உறுதியையும், நிரந்தரத் தன்மையையும் பொருத்தே அமையும் என அறியப்பட்டது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவேண்டிய அவசியம் உலகின் பல நாடுகளாலும் உணரப்பட்டது. முன்னேற்றத்தைப் பெறுவதற்கு அரசின் நடவடிக்கைகள் அவசியமானவை என்பதும் அறியப் பெற்றது.

(5) விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற சரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட திட்டங்களை நிறைவேற்றுவது இன்றியமையாதது எனப் பல ஏழை நாடுகளும் உணர்ந்தன. எனவே, இந்நாடுகளின் அரசுகள் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றி வருகின்றன.

(6) பின்தங்கிய நாடுகளில் நிலவுகின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கு அரசின் கட்டுப்பாடு அவசியமானதேயாகும். அரசு பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுவதும், பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதும் தவிர்க்க முடியாதவை களேயாகும். வளர்ச்சியடையாத நாடுகளில் நீண்ட காலத்திற்குத் தேக்கப் பொருளாதாரம் அமைந்திருக்கின்றது; சமுதாய அமைப்புக்களில் பல குறைபாடுகள் இருக்கின்றன; மூலதனப் பற்றுக் குறையும் திகழ்கின்றது; தொழில் முயல்வோருடைய எண்ணிக்கையும் போதுமானதாக இருப்பதில்லை; எங்கும், எதிலும் வறிய நிலையே நீடிக்கின்றது; சேமிப்பு குறைந்த அளவிலேயே செய்யப்படுகின்றது; அதிக அளவு முதலீட்டைச் செய்வது அவசியமானதாக இருக்கின்றது; 'வறுமை வட்டத்தை' நீக்குவதற்கான வழி முறைகளைப் பின்பற்றுவதும் தேவையான ஒன்றாகின்றது; பொருளாதாரத்தில் 'அதிக அழுத்தத்தை' ஏற்படுத்துவதும் அரசின் முக்கியப் பணியாகின்றது. இந்நிலைகளின் மூலமாக பொருளாதார முன்னேற்றத்தில் அரசு எந்த அளவிற்கு முக்கியப் பங்கைக்கொண்டிருக்கின்றது என்பதை இனிதுணரலாம்.

### அரசின் பொருளாதாரப் பணிகளும் பிற பணிகளும்

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அரசு பொருளாதார முன்னேற்றத்திற்காகத் திட்டமிட வேண்டும்; பொருளாதார

முன்னேற்ற நடவடிக்கைகளைத் தொடங்க வேண்டும்; பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த வேண்டும்; பொருளாதார முன்னேற்றத்தை நிரந்தரமாக நீடிக்கச் செய்ய வேண்டும். முன்னேற்றமடைந்த நாடுகளில் சில வகைப்பட்ட பணிகளை மட்டுமே அரசு மேற்கொள்கின்றது. இப்பணிகளைக் காட்டிலும் அதிகமான பணிகளைப் பின்தங்கிய நாடுகளின் அரசுகள் மேற்கொள்ளவேண்டியது அவசியமாகும். தனியார் மேற்கொள்ளத் தயங்குகின்ற, இடர் மிகுந்த தொழில்களை அரசு ஏற்று நடத்துதல் வேண்டும்; சேமிப்பைத் திரட்ட நிதி நிறுவனங்களை ஏற்படுத்த வேண்டும்; முதலீடுகளை நெறிப்படுத்த வேண்டும்; முற்றுரிமை நிலையைத் தவிர்ப்பதோடு போட்டி நிலையையும் தவிர்க்க வேண்டும்; வெளி நாட்டுத் தனியார் மூலதனத்தைக் குறைத்து, வெளிநாட்டுப் பொது மூலதனத்தை சற்று அதிகமாகப் பெறலாம்; போதுமான அளவிற்கு வெளிநாட்டுத் தொழில் நுட்பத்தை உள்நாட்டில் பரப்ப வேண்டும்; தேவையான அளவிற்கு வெளிநாட்டுத் தொழில் நுட்ப வல்லுநர்களின் பணிகளையும் பெற வேண்டும்; கண்டு பிடிப்புக்களுக்காகப் பல பரிசோதனை நிலையங்களையும் ஏற்படுத்த வேண்டும். இவ்வகைப்பட்ட பலவான பணிகளையும் மேம்பாடடைந்து வரும் நாடுகளின் அரசுகள் மேற்கொள்ளுதல் நன்மை தருவதாகும்.

அரசு பொதுப் பணிகளை அளித்தலும் அவசியமானதாகும். உள்நாட்டில் சட்டத்தையும், ஒழுங்கையும் பாதுகாக்க வேண்டும். வெளிநாடுகளின் தாக்குதல்களுக்கு ஈடு கொடுக்கும் வகையில் அரசு பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். போக்கு வரத்து, செய்தித் தொடர்பு, நீர்ப்பாசனம், கல்வி, ஆராய்ச்சி, ஆரோக்கியப் பணிகள் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கும் அரசு அதிக முதலீடுகளைச் செய்ய வேண்டும். மக்களுடைய நடவடிக்கைகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவது பல வழிகளிலும் நன்மையைத் தரும். உழைப்பாளர்களைத் திறமையான, தரமான, உண்மையான உழைப்பைத் தருமாறு செய்ய வேண்டும். மக்களிடையே சேமிக்கும் பழக்கத்தை ஏற்படுத்த வேண்டும். குடும்பத்தின் அளவைக் குறைக்க அவர்களைக் குடும்ப நலத் திட்டங்களைப் பின்பற்றுமாறு செய்ய வேண்டும். இன வேறுபாடு, மத வேறுபாடு, மொழி வேறுபாடு ஆகியவற்றைக் களைதல் வேண்டும். வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் அமைந்திருக்கக்கூடிய அதிக அளவு ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க வேண்டும். ஒரு சிலர் பல தொழில்களில் கொள்ளை இலாபம் பெறுவது தடுக்கப்பட வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவக் கூடிய தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் எல்லாத் தொழில்களிலும் புகுத்தப்

பட வேண்டும். "எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும்; எங்கும் இல்லாமை இல்லாத நிலை வேண்டும்; வல்லான் பொருள் குவிக்கும் தனியுடைமை ஒடுக்கப்பட வேண்டும்." சமுதாயத்தில் ஏற்படக் கூடிய இவ்வித மாற்றங்களே பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்த உதவுபவைகளாகும். மக்களுடைய நடவடிக்கைகளிலும், கண்ணோட்டத்திலும் மாற்றங்கள் ஏற்படும்பொழுது விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது.

பொருளாதார அமைப்புக்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பதைப் பொருத்தும் ஒரு நாட்டின் வளர்ச்சி வீதம் அமைந்திருக்கும். உற்பத்தி நிறுவனங்களின் அளவு, போட்டி நிலை, முற்றுரிமை நிலை ஆகியவற்றிற்கு ஏற்பவும் உற்பத்தியின் அளவு அமையும். தனியார் துறை, கூட்டுறவுத்துறை, பொதுத்துறை ஆகியவற்றைப் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுமாறு செய்ய வேண்டும். சட்டம், நீதி, நேர்மை, கடமை ஆகியவை எல்லா நிலைகளிலும் பின்பற்றப்பட வேண்டும். ஒப்பந்தங்கள், நிலச் சீர்திருத்தங்கள், தொழிலமைப்புக்கள், கூட்டுறவு நிறுவனங்கள், தொழிலாளர் சங்கங்கள், முற்றுரிமை, குடும்பச் சொத்து போன்ற பலவற்றைப் பற்றிய சட்டங்கள் உள்ளன. தனியார் நிறுவனங்களுக்கு உதவக் கூடிய, அந்நிறுவனங்களைக் கட்டுப்படுத்தக்கூடிய அரசின் நிர்வாக அமைப்புக்களும் உள்ளன. அரசின் கடன்தரும் நிறுவனங்கள், வேளாண்மை விரிவாக்கத் துறைகள், கூட்டுறவுத் துறைகள் போன்றவைகளை இதற்கு உதாரணமாகக் கூறலாம். பொருளாதார அமைப்புக்கள் முன்னேற்றத்திற்கு உதவுபவைகளாக அமைந்திருக்க வேண்டும்.

உற்பத்தியைப் பெருக்குவதற்கான வசதிகள் வளர்ச்சியடையாத நாடுகளில் குறைவாகவே அமைந்துள்ளன. அவ்வசதிகளைச் சமுதாயத்திற்கு மிகவும் நன்மையளிக்கக்கூடிய வகையில் பயன்படுத்த அரசு நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். விலை நிர்ணயம் இயல்பாகவே சந்தையில் ஏற்படுமாறு அரசு விட்டுவிடக் கூடாது. அரசு தன்னுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி விலைகளின் மீது கட்டுப்பாடுகளைக் கொண்டிருக்க வேண்டும். நாட்டின் இயற்கை வளங்கள் பாதுகாக்கப்பட வேண்டும். இவ்வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தாமல் வீணடிப்பது நல்லதல்ல. சிறிய நகரங்களும், பெரிய நகரங்களும் திட்டமிட்டு அழகாக அமைக்கப்படுதல் வேண்டும். தொழில்கள் மிகவும் அதிக அளவிற்கு ஒரு சில இடங்களில் மட்டும் செறிந்திருத்தல் கூடாது ; பெருமளவிற்குப் பரவலாகத் தொழில்களைத் தொடங்குவதும் நன்மை தராது. அவசியப் பண்டங்களின் உற்பத்தியை அரசு ஊக்குவிக்க வேண்டும் ; ஆடம்பரப் பண்டங்களின் உற்பத்திக்கு அரசு ஆதரவளிக்கக்

கூடாது. பொருளாதாரத்தின் பல துறைகளிலும் சரிசம வளர்ச்சி ஏற்படுமாறு அரசு பார்த்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு துறையிலும் அமைந்திருக்கக்கூடிய பல தொழில்களிலும் சரிசம வளர்ச்சி ஏற்பட அரசு ஆவன செய்ய வேண்டும்.

செல்வப் பங்கீட்டில் அமைந்திருக்கக் கூடிய ஏற்றத்தாழ்வுகளை நீக்க அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். அந்நடவடிக்கைகள் முதலீட்டையும், உற்பத்தியையும் பாதிக்காத வண்ணம் அமைதல் வேண்டும். சரிசம செல்வப் பங்கீட்டைச் செய்யும்போது பொருளாதார முன்னேற்றத்தில் பல இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. உற்பத்தி பாதிக்கப்படாமல் இருக்க வருவாயில் ஓரளவு ஏற்றத்தாழ்வுகள் இருப்பது நல்லது. திறமை, கடின உழைப்பு, கல்வி, இடர்தாங்கும் நிலை ஆகியவைகளுக்கு ஏற்ப வருவாயில் வேறுபாடுகள் இருக்கலாம். சேமிப்பு அதிகரிக்க வேண்டுமென்றால் தேசிய வருவாயின் பெரும்பகுதி அதிகம் 'சேமிக்கும் விருப்பம்' (Propensity to Save) கொண்டவர்களைச் சேர வேண்டும். செல்வந்தர்களே அதிகமாகச் சேமிக்கும் விருப்பம் கொண்டவர்களாக இருக்கின்றனர். சமதர்மச் சமுதாயத்தை அமைக்க விரும்பும் எந்த ஒரு அரசும் இந்நிலையை ஆதரிக்காது. பின்தங்கிய நாடுகளில் தேசிய வருவாயின் குறைவான பகுதி மட்டுமே வறியவர்களைச் சென்றடைகின்றது. இவ்வறியவர்கள் 'நுகரும் விருப்பத்தையே' (Propensity to Consume) மிகுதியாகக் கொண்டுள்ளனர். இவர்களின் வருவாய் படிப்படியாக அதிகரிக்கும்போது நுகர்வின் அளவும் உயர்வடைகின்றது. இதற்குக் காரணம் இவர்களுடைய வருவாய் அவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடப் போதுமானதாக இல்லாத நிலையாகும். திறம் பெறாதத் தொழிலாளர்களும், சிறிய விவசாயிகளும் மிகவும் குறைந்த வருவாயைப் பெறுபவர்களாக இருக்கின்றனர். இவர்களைச் சேமிக்கும் திறன் குறைந்தவர்கள் எனக் கூறலாம்.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் நிலப்பிரபுக்களின் வருவாயைக் குறைப்பது முன்னேற்றத்திற்குத் தடையாக அமையுமெனக் கூறயியலாது. ஏனெனில், அவர்கள் தங்கள் வருவாயின் பெரும் பகுதியை ஆடம்பரப் பொருட்களை வாங்குவதற்குப் பயன்படுத்துகிறார்கள். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான முதலீட்டைச் செய்ய அவர்கள் விரும்புவதில்லை. பொதுவாக, இலாபத்தின் அளவைக் குறைப்பது பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்துவிடும். முதலீடு செய்வதற்கான ஊக்கம் இதனால் பாதிக்கப்படுகின்றது. தனியார்துறை நிறுவனங்களில் முதலீடு செய்வதற்குத் தேவையான நிதியும் போதுமான அளவிற்குக் கிடைப்பதில்லை. மேலை நாடுகள் பொருளாதார முன்னேற்றத்

தைப் பெற்றபோது, கூலிகள் குறைந்த அளவிலும் இலாபங்கள் உயர்ந்த அளவிலும் அமைந்திருந்தன என்பது குறிப்பிடத்தக்க தாகும். சமதர்மச் சமுதாயத்தைப் பெற விரும்பும் நாடுகளின் அரசுகள் வறியவர்களின் நிலையை உயர்த்தப் பாடுபடுகின்றன. எனவே, வறிய நிலையில் உள்ளவர்களின் நுகர்விற்காக இவ்வரசுகள் அதிக அளவுச் செலவினங்களை ஏற்க வேண்டியுள்ளது. ஆனால், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற அரசு தனது வருவாயின் பெரும்பகுதியை உற்பத்தி நோக்கங்களுக்காகவே செலவிடுதல் வேண்டும்.

வாணிப நடவடிக்கைகளில் ஏற்படக்கூடிய 'அலைவுகளைக்' (Fluctuations) கட்டுப்படுத்துவதும் அரசின் கடமைகளில் ஒன்றாகும். வாணிப நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த அரசின் பணக்கொள்கையும், நிதிக் கொள்கையும் பெரிதும் உதவுகின்றன. வசதிகளைச் சிறப்பாகப் பயன்படுத்தவும், வேலைவாய்ப்புக்களைப் பெருக்கவும் அரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் அவசியமானதாகும்.

அரசு முதலீட்டு வீதத்தை உயர்த்த சிறப்பான வழிமுறை களைப் பின்பற்ற வேண்டும். பணவீக்கத்தின் மூலமும், அதிக வரி விதிப்பின் மூலமும் சேமிப்பு வீதத்தை உயர்த்த முடியும். பின் தங்கிய நாடுகளில் பெருமளவிற்கு அமைந்திருக்கக்கூடிய வேலை யின்மையில் அமைந்துள்ளவர்களையும், 'மறைந்துள்ள வேலையின் மையில்' அமைந்துள்ளவர்களையும் மூலதனத்திரட்சியைப் பெறு வதற்குப் பயன்படுத்தலாம். வளர்ச்சியடையாத நாடுகளில் உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்படு கின்றது. இயற்கை வளங்களும் உற்பத்திக்காகச் சிறப்பான முறைகளில் பயன்படுத்தப்படுவதில்லை. அரசு பின்பற்றுகின்ற சிறந்த கொள்கையே பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன் னேற்றத்திற்கு வழி வகுக்கும்.

மேயர், பால்டுவின் (Meier, Baldwin) ஆகிய இருவரும் பொதுவாக அரசின் நடவடிக்கைகள் எந்தெந்தத் துறைகளில் அமைந்திருக்கலாம் என்பதைப் பின்வருமாறு விளக்குகின்றார்கள்:

(1) சரியான அமைப்பு முறைகளை முன்னேற்றமடையச் செய்வதின் மூலம் அரசு சந்தைகளை ஏற்படுத்தலாம். விரிவான, வளர்ச்சியடைந்த சந்தைகள் பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெற உதவுபவைகளாகும்.

(2) எத்துறைகளில் இலாபங்கள் குறைவாகவும், இடர்கள் மிகுதியாகவும் இருக்கின்றனவோ அத்துறைகளை அரசு ஏற்று

நடத்தலாம். இத்துறைகளில் முதலீடு செய்ய தனியார் துறையினர் முன்வர மாட்டார்கள். எனவே, அரசின் நிறுவனங்களை இத்துறைகளில் ஏற்படுத்துவது நன்மை தருவதாகும்.

(3) அரசு நிறுவனங்கள் போற்றப் படவேண்டுமானால், அவற்றின் நடவடிக்கைகள் தனியார் நிறுவனங்களைக் காட்டிலும் சிறப்பாக அமைய வேண்டும். பொதுத்துறை நிறுவனங்களின் முன்னேற்றம் தனியார் துறை நிறுவனங்களை விடச் சிறப்பாக இருத்தல் வேண்டும். தனியார் துறை நிறுவனங்கள் சிறப்பாகச் செயல்படா விட்டால், அவற்றை அரசு ஏற்று செயல்படச் செய்யலாம்.

(4) அரசின் நடவடிக்கைகள் பொருளாதாரத்தில் 'சரிசம வளர்ச்சி' (Balanced Growth) ஏற்படுமாறு அமைய வேண்டும்; பல வகைப்பட்ட புறச்சிக்கனங்களும் பெறப்படுதல் வேண்டும்.

பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு எந்த அளவிற்கு இருக்க வேண்டும் என்பது பற்றிப் பல விதக் கருத்துக்கள் நிலவுகின்றன. மேற் குறிப்பிடப்பட்டுள்ள துறைகளில் அரசின் செல்வாக்கு அதிகமாக இருக்க வேண்டுமென்பதை அனைவரும் ஒப்புக் கொண்டுள்ளனர். ஆனால் வேறு சில துறைகளில் அரசு எந்த அளவிற்கு ஈடுபடலாம் என்பதிலேயே கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. முதலாளித்துவவாதிகள் எல்லாத் துறைகளிலும் அரசின் கட்டுப்பாடு அமைந்திருக்கக்கூடாது; ஒரு சில துறைகளை மட்டுமே அரசு தன்னுடைய உடைமையாக்கிக் கொள்ள வேண்டுமெனக் கருதுகின்றனர். மற்றொரு புறத்தில், பொதுவுடைமை வாதிகள் எல்லா உற்பத்தி நிலைகளையும் அரசே மேற்கொள்ள வேண்டுமெனவாதிடுகின்றனர். சமதர்மத்தைப் பின்பற்றும் இந்தியா போன்ற நாடுகளில் அரசின் துறை, தனியார்த்துறை, கூட்டுறவுத்துறை ஆகிய மூன்றுவகை துறைகளும் அமைந்துள்ளன. தனியார் துறையின் செல்வாக்கு இந்நாடுகளில் படிப்படியாகக் குறைந்து வருகின்றது. கூட்டுறவுத் துறையை வளர்க்க இந்நாடுகளின் அரசுகள் தீவிரமாக முயன்று வருகின்றன. அரசு தனியார் நிறுவனங்களைக் கட்டுப்படுத்தி மேற்பார்வையிடுதல் போதுமானது என்பது சிலருடைய கருத்தாகும். தனியார் நிறுவனங்களைப் பொதுவுடைமையாக்குவதற்கு இவர்கள் எதிர்ப்புத் தெரிவிக்கின்றார்கள். பொருட்களின் விலைகளை அரசு கட்டுப்படுத்துவதையும் சிலர் குறை கூறுகின்றனர். நேரடியாகப் பொருட்களின் விலைகளைக் குறைப்பதையோ அல்லது கூட்டுவதையோ அரசு செய்யக்கூடாது என அவர்கள் கருதுகின்றனர். அரசு தனியார் நிறுவனங்களின் மீது குறிப்பான

சில கட்டுப்பாடுகளைக் கொண்டுவருவதற்கும் எதிர்ப்புத் தெரிவிப் பவர்கள் சிலராவர். ஆனால் வேறு பலர் அரசின் கட்டுப்பாடு களுக்கு ஆதரவு தெரிவிக்கின்றனர். விலைகளின் மீது அரசு செல் வாக்கைக் கொண்டிருப்பதும் அவசியமானது என உணரப் பட்டுள்ளது. அரசு தனித்தொழில் அமைப்பாளர்களை நீக்கி அவர்களுடைய பணிகளை மேற்கொள்ள வேண்டும். முன்னேற்றத் திற்கான திட்டங்கள் வெற்றி பெற வேண்டுமென்றால் அரசு பொரு ளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவது அவசியமான தாகின்றது. சுருங்கக் கூறினால், பின்தங்கிய நாடுகளின் பொருளா தார முன்னேற்றத்தில் அரசு பெரும்பங்கு வகிக்கின்றது.

அரசு கீழ்க்கண்ட பொருளாதாரப் பணிகளை நிறைவேற்று கின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருளாதார முன் னேற்றத்திற்கு இப்பணிகள் பெரிதும் உதவுகின்றன. முன்னேற்றத் தைப் பெறுவதும் இதனால் எளிதாகின்றது.

(1) சமுதாயத்திற்கு நன்மையளிக்கக்கூடிய கல்வி, ஆரோக் கியம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சார உற்பத்தி, நீர்ப்பாசனம் போன்ற பல வசதிகளையும் அரசு செய்து தரு கின்றது. இவ்விதப் பொதுப் பணிகளால் மக்கள் பல நன்மைகளைப் பெறுகின்றார்கள். உற்பத்தித்திறனைப் பல துறைகளிலும் பெருக்க இவ்வசதிகள் உதவுகின்றன. இவ்வகை வசதிகளைப் பெருக்குவதற் காக அரசு செய்கின்ற செலவு பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெறுவதற்கான சாதகச் சூழ்நிலைகளைத் தோற்றுவிக் கின்றது. உதாரணமாக, போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகளின் முன்னேற்றம் சந்தையை விரிவடையச் செய்கின்றது. விரிவடைந்த சந்தையால் உற்பத்தியை உயர்த்த வேண்டுமென்ற ஊக்கம் பிறக்கின்றது. உற்பத்தியாளர்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான முயற்சிகளை மேற்கொள்கின்றார்கள். மின்சார உற்பத்தி நிலையங்களை ஏற்படுத்துவதின் மூலம் இயக்கச் சக்தி பெருமளவிற்குக் கிடைக்கின்றது. நாட்டைத் தொழில் மயமாக்க மின்சார உற்பத்தி மிகவும் இன்றியமையாததாகும். கல்வியறி வைப் பரப்புதலும், மருத்துவ வசதிகளை அளித்தலும் உழைப்பாளர் களின் உற்பத்தித்திறனை உயர்த்த உதவுகின்றன. உற்பத்தித் திறன் உயர்வால் உழைப்பாளர்கள் அதிக வருவாயைப் பெறு வார்கள்.

(2) பொருளாதார முன்னேற்றம் சமுதாய, பண்பாட்டுக் காரணிகளோடு நெருங்கிய தொடர்புடையதாகும். பொருளா தார முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்றால், முன்னேற்றத் தில் விருப்புக் கொண்ட மக்கட்தொகை ஒரு நாட்டில் அமைந்

திருக்க வேண்டும். முன்னேற்றத்தைப் பெற விரும்புகின்ற மக்கட்தொகை ஒரு நாட்டில் அமைந்திருந்தால்தான் எளிதில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும். சில நாடுகளின் விரைவான வளர்ச்சிக்கும், வேறு பல நாடுகளின் குறைவான வளர்ச்சிக்கும் மக்களின் சமுதாய - பண்பாட்டு நடவடிக்கைகளே காரணமாக அமைந்திருந்தன. மக்களின் நாகரிக முன்னேற்றத் தால் மேலை நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாக இருந்தது. இன்றைய வளர்ச்சியடையாத நாடுகளில் சமுதாய மாற்றங்கள் விரைவாக ஏற்படவில்லை. எனவே, விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதும் கடின மாக உள்ளது. பின்தங்கிய நாடுகளில் பெரும்பகுதி மக்கட் தொகை கல்வியறிவற்றதாக இருக்கின்றது. இம் மக்களின் பழக்க வழக்கங்களை மாற்றுவது இயலாததாக உள்ளது. மூட நம்பிக்கை களில் ஊறித் திளைத்த இவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது எளிதானதல்ல. சமுதாய-பண்பாட்டு முன்னேற் றங்களின் மூலமே மக்களின் வருவாயை உயர்த்த முடியும். மேம் பாடடைந்துவரும் நாடுகளில் முன்னேற்றத்தை அடைவதற்குத் தடையாக மக்களின் பழைமையை விரும்பும் தன்மையும் அமைந் திருக்கின்றது. இந்நாடுகளில் சமுதாய, பண்பாட்டு, மத நடவடிக்கைகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற் கான சாதகச் சூழ்நிலையை உருவாக்கித் தரவில்லை. இந் நாடுகளின் அரசுகள் சரியான வகையில் சட்டங்களை இயற்றி மக்களின் நடவடிக்கைகளில் மாற்றங்கள் ஏற்படச் செய்ய வேண்டும். புதிய கண்ணோட்டம் கொண்டவர்களாக மக்களை மாற்ற அரசு தன்னு டைய செல்வாக்கைப் பயன்படுத்த வேண்டியது அவசியமா கின்றது. எடுத்துக்காட்டாக, கிராமத்துறையில் நிலச்சீர்திருத்தங் களின் மூலம் நிலவுடைமைகளை மாற்றியமைக்கலாம். நில வுடைமைக்கு உச்சவரம்பு விதித்து மிச்சமுள்ள நிலங்களை நிலமற்ற விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிக்கலாம். இதனால் கிராம மக்கள் எல்லோருடைய நலனையும் காக்க முடியும். நிலப்பிரபுக்களின் வாழ்க்கை நலன் பெரிதும் பாதிக்கப்படாத போது, பல நிலமற்ற விவசாயிகளின் வாழ்க்கை நலன் காக்கப்படுகின்ற நிலை சமதர்மச் சமுதாயத்தில் தேவையானதேயாகும். இதன் மூலம் சமுதாய நீதியும் காக்கப்படுகின்றது. வேளாண்மை முன்னேற்றத்தில் அமைந்திருக்கக்கூடிய இடர்ப்பாடுகள் நிலச் சீர்திருத்தங்களின் மூலம் நீக்கப்படுகின்றன. அரசு இவ்விதச் சீர்திருத்தங்களைக் கிராமப் பொருளாதாரத்தில் கொண்டுவருவது பல நன்மைகளையும் தருவதாக அமையும். ஏனெனில், வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மக்கட் தொகையின் பெரும்பகுதி கிராமப் புறங்களிலேயே அமைந் திருக்கின்றது. கிராம மக்களின் வாழ்க்கை திருந்தும்போதுதான்

உண்மையான பொருளாதார முன்னேற்றம் எந்த ஒரு நாட்டிலும் ஏற்பட்டதாகக் கொள்ளலாம். அரசின் தீவிர முயற்சிகளால்தான் கிராமப் பொருளாதாரத்தை சீர்திருத்த முடியும்.

(3) அரசு செல்வப்பங்கீட்டில் அமைந்திருக்கக்கூடிய அதிக அளவு ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். இந்நடவடிக்கைகள் உற்பத்தியையும், முதலீட்டையும் பாதிக்காத வகையில் எடுக்கப் படுதல் இன்றியமையாதது. இதற்காக அரசு சரியான நிதிக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். 'வளர்வீத வரி விதிப்பின்' (Progressive Taxation) மூலமாக வருவாயில் அமைந்திருக்கக்கூடிய வேறுபாடுகளை நீக்கலாம். வருமானங்களில் வேறுபாடுகள் அமைந்திருத்தல் பொருளாதாரச் சிக்கலாகவும், சமூகச் சிக்கலாகவும் இருக்கின்றது. சமுதாய ரீதியில் இவ்வேறுபாடுகள் மக்களிடையே அமைதியின்மையைத் தோற்றுவிக்கின்றன ; வகுப்புக் கலவரங்களும் தோன்றுகின்றன. பொருளாதார நிலையில், வருமான வேறுபாடுகள் சேமிப்பையும் முதலீட்டையும் குறைவடையச் செய்கின்றன. ஏனெனில், மேம்பாடடைந்துவரும் நாடுகளில் செல்வந்தர்கள் தங்களின் அதிக வருவாயை முதலீடு செய்வதற்குப் பயன்படுத்துவதில்லை. செல்வந்தர்களின் வருவாயில் பெரும்பகுதி அழகான வீடுகள் கட்டுவதற்கும், நவீன வசதிகளை அவ்வீடுகளில் அமைப்பதற்கும், ஆடம்பரப் பொருட்களை வாங்குவதற்கும் பயன்படுத்தப் பெறுகின்றது. வளர்வீத வரிமுறை, வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் இரு வழிகளில் உதவுகின்றது. ஒரு புறத்தில், வருவாயில் அமைந்திருக்கக்கூடிய ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க இவ்வரி முறை வகை செய்கின்றது. மற்றொரு புறத்தில், செல்வந்தர்களிடமிருந்து உபரி வசதிகளைத் திரட்டவும் வளர்வீத வரிமுறை உதவுகின்றது. இவ்வசதிகளைத் திரட்டுவதின் மூலம் மூலதனத் திரட்சியைப் பெற முடிகின்றது. முதலீட்டின் அளவும் இதனுல் உயர்வடைகின்றது. உற்பத்திப் பெருக அரசின் நிதிக்கொள்கை இவ்வாறு வழிசெய்கின்றது.

(4) பின்தங்கிய நாடுகளில் மூலதனத்திரட்சி வீதம் மிகவும் குறைந்த அளவிலேயே இருக்கின்றது. தலா வருமானக் குறைவும் மூலதனத் திரட்சி வீதம் குறைவாக உள்ளமைக்கு ஒரு காரணமாக அமைகின்றது. குறைந்த அளவு முதலீட்டினுல் பொருளாதாரம் நிரந்தரமாக வளர்ச்சியடையாத நிலையிலேயே இருக்கின்றது. சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்துவதின் மூலமே பொருளாதாரத்தை இயக்கி விரைவான வளர்ச்சியைப் பெறுமாறு செய்யலாம். அரசு பலவிதமான கடமைகளை நிறைவேற்ற வேண்டியுள்ளது. அரசின் சிறப்பான கொள்கைகளினுல்தான் மூலதனத்

திரட்சியை விரைவுபடுத்த முடியும். அரசு பலநிலைகளில் தீவிர முடிவுகளை எடுக்க வேண்டும்; பொருத்தமான நிதிக்கொள்கையைப் பின்பற்றி சேமிப்பு, முதலீடு ஆகியவற்றின் அளவுகளை உயர்த்த வேண்டும். பொருளாதார அமைப்புகளை ஏற்படுத்துவதின் மூலமும், சில அமைப்புக்களை மாற்றியமைப்பதின் மூலமும் மட்டுமே உற்பத்தியை உயர்த்தி சேமிப்பின் அளவைப் பின்தங்கிய நாடுகளில் அதிகரிக்க இயலும். பொருளாதார அமைப்புக்களில் மாற்றங்களைப் பெற அதிக அளவு மூலதனம் தேவைப்படுகின்றது. அதிக அளவு மூலதனத்தைத் திரட்ட அரசால் மட்டுமே முடியும். தனியார் துறையினர் இலாப நோக்கம் கொண்டு செயல்படுவதால் அவர்கள் எல்லாத் துறைகளிலும் முதலீடு செய்யமாட்டார்கள். வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்திக்கான வசதிகள் குறைவாகவே இருக்கின்றன. தனியார் துறையினரும் இவ்வசதிகளைச் சிக்கனமாக, சிறப்பாகப் பயன்படுத்துமாறு அரசு நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். தனியார் துறையின் தவறான முதலீடுகளை அரசு தடுக்கவேண்டும். தேவை குறைந்த தொழில்களில் உற்பத்தி வசதிகள் பயன்படுத்தப்படுவதும் தடுக்கப்பட வேண்டும். தனியார் துறையில் இலாப நோக்கிற்காக அவசியம் குறைந்த பொருட்களும் உற்பத்தி செய்யப்படலாம். பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் இவ்வகைப் பொருட்களின் உற்பத்திக்காகச் செய்யப்படுகின்ற முதலீடுகள் தவிர்க்கப்படவேண்டும். வளர்ச்சியடைந்த பொருளாதாரங்களில் அவசியம் குறைந்த பொருட்களின் உற்பத்தியைக் கட்டுப்படுத்த வேண்டியது தேவையானதல்ல. தனியார் துறையின் மூலதனம் அவசியமான தொழில்களில் பயன்படுத்தப் படவேண்டும். அரசு அதற்கான வழிமுறைகளைப் பின்பற்றுவது அவசியமாகின்றது. அரசின் கொள்கைகளுக்கு ஏற்ப தனியார் நிறுவனங்கள் இயங்குவது இன்றியமையாதது. முக்கியத்துவங்களுக்கு ஏற்ப தனியார் நிறுவனங்களின் முன்னேற்றத்தை அரசு அனுமதிக்கலாம்.

(5) அரசு வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதற்கான வகையில் திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். பொதுப்பணித் துறைகளில் முதலீடு செய்வதின் மூலம் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க வழியுண்டு. பலவகைப்பட்ட பெரிய தொழில்களையும், சிறிய தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் வளர்த்தல் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க உதவும். மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வேலையின்மையோடு 'மறைந்துள்ள வேலையின்மையும்' (Disguised Unemployment) அமைந்திருக்கின்றது. இதன் காரணமாக உற்பத்திக் காரணிகளில் முக்கியமானதாகிய உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை. தேவையைக் காட்டிலும்

உழைப்பின் அளிப்பு மிகவும் அதிகமாக உள்ளமையே வேலையின்மையைத் தோற்றுவிக்கின்றது. உழைப்பின் அளிப்பு கூடிவருகின்றமைக்கு விரைவான மக்கட் பெருக்கமே முக்கிய காரணமாகும். உற்பத்திக்கான வசதிகளின் பெருக்க வீதம் மக்கட் பெருக்க வீதத்தைவிட மிகவும் குறைவானதாக இருக்கின்றது. இந்நிலை மாற வெவ்வேறு துறைகளிலும் பேரளவில் முதலீடுகள் செய்யப்படவேண்டும். அரசினால் மட்டுமே பல துறைகளிலும் பெருமளவு மூலதனத்தை முதலீடு செய்ய முடியும். பொதுத் துறையில் பல உற்பத்தி நிறுவனங்களை ஏற்படுத்துவதோடு, தனியார் துறையின் வளர்ச்சியிலும் அரசு அக்கறை கொண்டதாக இருத்தல் வேண்டும்.

(6) இவை எல்லாவற்றையும்விட அரசு பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளையும் பணக்கொள்கையாலும், நிதிக்கொள்கையாலும் கட்டுப்படுத்த வேண்டும். இக்கொள்கைகள் பின்வரும் நிலைகளைப் பெறுவதற்காகப் பின்பற்றப்படுதல் இன்றியமையாததாகும்.

(i) ஒரு அரசின் வரிக்கொள்கை அவசியம் குறைந்த நுகர்வைக் கட்டுப்படுத்துவதாக அமைந்திருக்க வேண்டும். அக்கொள்கையின் மூலம் சேமிப்பு வீதம் உயர்வடைய வேண்டும். அரசின் வரிவிதிப்பு முறை அதிக வருவாய் பெறுபவர்களிடம் அமைந்திருக்கக் கூடிய எச்ச வாங்கும் திறனை வடிகட்டிப் பெறுவதாக இருத்தல் வேண்டும். அவசியத் தேவைகளையே பூர்த்தி செய்துகொள்ள முடியாத நிலையில் மக்கட் தொகையின் பெரும் பகுதி இருக்கும்போது, ஆடம்பரத் தேவைகளையும் பூர்த்தி செய்து கொள்ளக் கூடிய நிலையில் மக்கட் தொகையின் சிறு பகுதி இருத்தலை பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் அரசு அனுமதிக்க வேண்டியதில்லை. அரசின் சரியான வரிக்கொள்கையின் மூலம் அவசியம் குறைந்த நுகர்வின் அளவைக் கட்டுப்படுத்தலாம். நாளை நல்வாழ்வைப் பெற இன்று அவசியம் குறைந்த நுகர்வைக் கட்டுப்படுத்துவது தேவையானதேயாகும். அரசின் வரிக்கொள்கை ஆடம்பரப் பொருட்களின் விலைகளை உயர்த்துவதாக இருக்க வேண்டும். விலைகளின் உயர்வு இப்பொருட்களின் நுகர்வைக் குறைக்க உதவும். அதே நிலையில் அரசு வேறொன்றையும் அறிந்திருத்தல் வேண்டும். நுகர் பொருட்களை உற்பத்தி செய்யக்கூடிய தொழில்களின் வளர்ச்சி பாதிக்கப்படாத வகையிலும் அரசின் வரிக்கொள்கை அமைய வேண்டும். இப்பொருட்களின் நுகர்வு ஓரளவு கட்டுப்படுத்தப் படவேண்டும். ஆனால் கட்டுப்பாட்டினால் இவ்வகைத் தொழில்களின் வளர்ச்சி பாதிக்கப்படக் கூடாது.

(ii) அரசு நுகர்வைக் கட்டுப்படுத்தி பெறுகின்ற சேமிப்பை உற்பத்தித் துறைகளில் முதலீடாக்க வேண்டும். எல்லாத் துறைகளிலும் உற்பத்தி உயரும் வகையில் அரசின் முதலீடுகள் அமைய வேண்டும். பலவிதத் தீவிர முயற்சிகளின் மூலம் பெறப்பட்ட மூலதனம் மிகச் சிறப்பாக உற்பத்தியை உயர்த்தப் பயன்படுத்தப் படவேண்டும். மேம்பாடடைந்து வரும் நாடுகளில் மூலதன வசதிகள் மிகவும் குறைவாகவே இருக்கின்றன. அக்குறைவான மூலதனம் சிக்கனமாக உற்பத்தித் துறைகளில் முதலீடாக்கப்பட வேண்டும். நாட்டின் மொத்த ஆக்கமானது அதிகரிக்கும் வகையில் முதலீடுகள் தெரிந்தெடுக்கப்பட்ட துறைகளில் செய்யப் படுதல் வேண்டும்.

(iii) பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காக அரசு செய்கின்ற செலவுகள் பணவீக்க நிலையைத் தோற்றுவிப்பதுண்டு. பொருளாதார முன்னேற்றச் செலவுகள் கூடும்பொழுது அரசு வேறு சில நிலைகளுக்காகச் செய்கின்ற செலவுகளைக் குறைத்துக்கொள்ளுதல் அவசியம். முன்னேற்ற முதலீடுகளுக்கான நிதியை அரசு பல வழிகளில் பெறுகின்றது. புதிய வரிகள் விதிக்கப் படுகின்றன ; பழைய வரி வீதங்கள் உயர்த்தப்படுகின்றன. எனினும், வரி வருவாயின் மூலம் மேம்பாடடைந்துவரும் ஒரு நாட்டின் அரசு தேவையான அளவிற்கு நிதியைத் திரட்டிவிட முடியாது. இதனால் பற்றுக்குறை நிதியாக்கம் அரசால் கைக் கொள்ளப்படுகின்றது. நாட்டில் அமைந்திருக்கக் கூடிய பயன் படுத்தப்படாத இயற்கை வளங்களைப் பயன்படுத்தப் பற்றுக்குறை நிதியாக்கம் உதவுகின்றது. ஆனால் அரசு திட்டமிடுகின்ற நிலைக்கு ஏற்ப உற்பத்தி அதிகரிப்பதில்லையாதலால் பணவீக்க நிலை ஏற்படுகின்றது. பொருளாதாரத்தில் குறைந்த அளவு பண்டங்களின் உற்பத்தி ஏற்படும்போது பணத்தின் அளவும், பணத்தின் சுழலும் வேகமும் அதிகரிக்கின்றன. பல பொருட்களின் விலையுயர்விற்கு இதுவே அடிப்படைக் காரணமாகும். பணவீக்க நிலையை அரசு பணக் கொள்கையாலும், நிதிக் கொள்கையாலும் கட்டுப்படுத்தலாம். விலையுயர்வைத் தடுக்க உதவும் உண்மையான தீர்வு உற்பத்தியை உயர்விப்பதேயாகும்.

(iv) நுகர்வோரின் நலனைக்காக்க அரசு விலைக்கட்டுப்பாடுகளைக் கொண்டு வருவதும் அவசியமானதாகும். பற்றுக்குறைப் பொருட்களில் ஊகவாணிபம் ஏற்படுவதைத் தடுக்க விலைக்கட்டுப் பாடுகள் பெரிதும் உதவுகின்றன. அவசியப் பண்டங்களை விற்பனை செய்து அதிக இலாபத்தைப் பெறுகின்ற நிலை தடுக்கப்பட வேண்டும். அரசே சில அவசியப் பண்டங்களின் விலைகளை நிர்ணயிக்கலாம். அரசு நிர்ணயிக்கின்ற விலைகள் நுகர்வோருடைய

நலனைக் காப்பதாக அமைய வேண்டும். அவ்விலைகள் உற்பத்தி யாளர்களை மேலும் உற்பத்தியைப் பெருக்கத் தூண்டும் வகை யிலும் அமைந்திருக்க வேண்டும்.

(v) தேவையான காலங்களில் சில இன்றியமையாத பொருட்களை அரசு பங்கிடு செய்ய வேண்டும். குறைந்த அளவே அளிப்பைக் கொண்டிருக்கும் அவசியப் பொருட்களை அரசு பங்கீடு செய்வது மக்களின் நலனைக் காப்பதாக அமையும். இதன் மூலம் வணிகர்கள் கொள்ளை இலாபம் பெறுவது தடுக்கப்படுகின்றது. போர்க் காலங்களிலும், பஞ்சக் காலங்களிலும் பொருட்கள் பதுக்கப்படும்போது அரசு பங்கீட்டு முறையைக் கைக்கொள் கின்றது. பொருட்களைப் பதுக்கி கள்ளச் சந்தைகளில் அதிக விலைக்கு விற்பது இதனால் கட்டுப்படுத்தப் பெறுகின்றது.

(vi) உற்பத்திக்கான வசதிகள் அவசியப் பண்டங்களின் ஆக்கத்திற்குப் பயன்படுத்தப்பட வேண்டும். ஆடம்பரப் பொருட்களை உற்பத்தி செய்கின்ற துறைகளுக்கு அரசின் ஆதரவு அதிக அளவில் அமைந்திருக்கக் கூடாது. ஆனால் இத் தொழில் நிறுவனங்கள் நசித்து விடாதபடியும் அரசு பார்த்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் இத் தொழில்களைக் காப்பதின் மூலம் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அமைந்திருக்கக் கூடிய வேலை யின்மைச் சிக்கலை ஓரளவு தீர்க்க இயலும். பலவகைப்பட்ட நுகர் பொருட்களின் உற்பத்தியைப் பெருக்குவதின் மூலம் பணவீக் கத்தையும் கட்டுப்படுத்தலாம். அரசு முக்கியத்துவ நிலைகளுக்கு ஏற்ப பல தொழில்களின் வளர்ச்சியையும் பேணிக்காக்க வேண்டும்.

(vii) அயல் நாட்டுச் செலாவணியில் தீவிரக் கட்டுப்பாடுகளை விதிக்க அரசு தயங்கக் கூடாது. மிகவும் அவசியமான நிலைகளுக்கு மட்டுமே அந்நியச் செலாவணி அனுமதிக்கப்பட வேண்டும். அவசியமற்ற நுகர்விற்கு அந்நியச் செலாவணி தவறாகப் பயன் படுத்தப்படுவதை அரசு அனுமதிக்கக் கூடாது. ஆனால் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வது தவிர்க்க முடியாததாகும். இதன் மூலம் நாட்டின் தொழில் வளத்தைப் பெருக்கி வளர்ச்சியடைந்து வரும் ஒரு நாடு ஏற்றுமதியையும் கூட்டலாம். பின்தங்கிய நாடுகள் பலவும் பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்பு நிலையையே கொண்டுள்ளன. எனவே, இந்நாடுகளில் அரசு தீவிர அந்நியச் செலாவணிக் கட்டுப்பாட்டைப் பின்பற்றுவது அவசியமாகின்றது. ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்கவும் அரசு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். பின்தங்கிய நாடுகள் சில வகைப்பட்ட பாரம்பரியப் பொருட்களை மட்டுமே ஏற்றுமதி செய்

கின்றன. இப் பொருட்களுக்கான தேவை அயல்நாட்டுச் சந்தை களில் நெகிழ்ச்சி குறைந்ததாகவே இருக்கின்றது. ஆகவே வளர்ச்சி யடைந்து வரும் நாடுகளின் ஏற்றுமதி முன்னேற்ற நடவடிக்கைகள் வெற்றியைப் பெறுவதில்லை. ஏற்றுமதிகள் பெருக இந்நாடுகள் பலவகைப்பட்ட நுகர் பொருட்களையும் உற்பத்தி செய்ய வேண்டும். நெகிழ்ச்சி நிறைந்த தேவையைக் கொண்ட பொருட் களை ஏற்றுமதி செய்ய அரசு ஆவன செய்தல் அவசியமானதாகும். இவ்வாறு பல வகைகளிலும் அயல்நாட்டு வாணிபத்தில் அரசு அதிகச் செல்வாக்குக் கொண்டதாக இருக்க வேண்டும்.

அரசு பின்பற்றுகின்ற பணக்கொள்கை பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்துவதாக இருக்க வேண்டியது இன்றியமையாததாகும். 'வங்கி வீதத்தை' (Bank Rate) மாறுபடு கின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கேற்ப அரசு மாற்றியமைக்க வேண்டும். 'தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாட்டு முறையும்' (Selective Credit Control) பணவீக்க நிலையைக் குறைக்க உதவும் நல்லதொரு முறையாகும். உற்பத்திக்கு உதவாத நிலைகளில் சேமிப்புச் செலவழிக்கப்படுவது இதன் மூலம் தடுக்கப்படுகின்றது. உற்பத்திப் பணிகளில் சேமிப்பு முதலீடாக்கப்படுவதற்கு இம் முறை உதவுகின்றது.

ஒரு நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடையும்போது, பணத்தின் தேவையும் அதிகரிக்கின்றது. பணத்தின் அளிப்பு அதிகரிக்காவிட்டால், பொருட்களின் தேவை குறைந்து அவற்றின் விலைகளும் தாழ்ந்து விடுகின்றன. மக்கட்தொகை அதிகரிக்கும் போதும் பணத்திற்கான தேவை பெருகுகின்றது. இத் தேவைக்கு ஏற்ப மத்திய வங்கி பணத்தின் அளிப்பை அதிகரிக்க வேண்டும். பணத்தின் அளிப்பு பெருகும்போது பொருட்களின் உற்பத்தியும் பெருகினால்தான் மக்கள் தரமான வாழ்வைப் பெற முடியும்.

### அரசும் விலை நிலைப்பேறுக்கமும்

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற தனியார் துறை, பொதுத்துறை ஆகியவற்றின் முதலீட்டு வீதத்தை உயர்த்த வேண்டும். பெரும்பாலும் அரசு மத்திய வங்கியிடமிருந்து கடனைப் பெற்று முதலீட்டைச் செய்கின்றது. இம் மூலதன மானது முதலீடு செய்யப்படும்பொழுது உற்பத்திக் காரணிகளின் வருவாய் உயர்வடைகின்றது. வணிக வங்கிகளிலும் பணமானது வைப்பு நிதியாக வைக்கப்படுகின்றது. இந்நிலை 'கடன் உற்பத் திக்கு' (Credit Creation) உதவுகின்றது. பணத்தின் அளிப்பு கூடுவதால் பண்டங்களின் தேவை அதிகரிக்கின்றது. ஆனால் அதே காலத்தில் பண்டங்களின் அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக இருப்ப

தால் விலைகள் உயர்வடைகின்றன. குறுகிய காலத்தில் பணத்தின் அளிப்பு அதிகரிக்கும்போது பண்டங்களின் அளிப்பு அந்த அளவிற்கு அதிகரிப்பதில்லை. மிதமான பணவீக்கம் முதலீட்டின் அளவை உயர்த்த உதவும். ஏனெனில் விலைகள் உயர்வடையும் பணவீக்கக் காலத்தில் முதலீட்டாளர்கள் அதிக இலாபத்தைப் பெறுகின்றார்கள். பணவீக்கக் காலத்தில் வருவாய் மறுபகிர்வு ஏற்படுகின்றது. இவ் வருவாய் மறுபகிர்வினால் நன்மையடைபவர்கள் முதலீட்டாளர்களேயாவர். பணவீக்கம் 'கட்டாயச் சேமிப்பையும்' (Forced Saving) ஏற்படுத்துகின்றது. விலைகளின் உயர்வு மூலதனத்திரட்சிக்கு இவ்வாறு உதவுகின்றது. பின்தங்கிய நாடுகளில் முதற்சில நிலைகளில் 'தவழும் பணவீக்கம்' (Creeping Inflation) அமைந்திருக்கும். பிறகு, இது 'ஓடும் பணவீக்கமாகவும்' (Running Inflation), 'தாவும் பணவீக்கமாகவும்' (Galloping Inflation) மாறிவிடும். இதனால் ஒரு நாட்டின் ஏற்றுமதிகள் பெரிதும் பாதிக்கப் படுகின்றன. ஏற்றுமதி குறைவாகவும் இறக்குமதி அதிகமாகவும் இருப்பதால் பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலை தோன்றுகின்றது. இந்நிலையில் ஏற்றுமதியைப் பெருக்க அரசு நாணய மதிப்புக் குறைப்பைச் செய்வது அவசியமாகின்றது. தொடர்ச்சியாகப் பணவீக்கநிலை நீடித்தால் மக்கள் தாங்களாகவே சேமிப்பைச் செய்ய முன்வரமாட்டார்கள் ; கட்டாயச் சேமிப்பின் அளவும் குறைந்துவிடும். விலையுயர்வோடு உழைப்பாளர்களுக்கான ஊதிய உயர்வும் ஏற்பட்டால் உற்பத்திச் செலவு அதிகரிக்கும். பணவீக்கத்தின் காரணமாக நீண்டகால முதலீட்டுத் திட்டங்களின் செலவைக் கணக்கிடுவதும் கடினமாமாகின்றது. இவ்வகையில் பணவீக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கின்றது. அரசு பணக்கொள்கையைச் சிறப்பாகப் பின்பற்றி விலையுயர்வுகளைத் தடுக்க வேண்டும். வங்கி வீதத்தை உயர்த்தியும், 'தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாட்டைப் பின்பற்றியும், 'வெளி அங்காடி நடவடிக்கைகள்' (Open Market Operation) மூலமும் பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்தலாம். ஆனால் வளர்ச்சியடையாத நாடுகளில் பணவீக்கக் கொள்கை சிறப்பான வெற்றியைப் பெறுவதில்லை. ஏனெனில், இந்நாடுகளின் பணச்சந்தை வளர்ச்சி பெறாத நிலையிலேயே இருக்கின்றது. எனவே, பணவீக்க முறையின் மூலமாக பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியைப் பெறும்போது அரசு கவனமாக இருத்தல் வேண்டும். விலைகளின் நிலைகளே ஒரு நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் மாற்றங்களை ஏற்படச் செய்கின்றன. அவ்விலைகளின் மீது அரசு செல்வாக்கைக் கொண்டிருப்பது மிகவும் நன்மையளிப்பதாகும். விலைகளில் மாற்றங்களைச் செய்வதின் மூலம் பொருளாதார நடவடிக்கைகளிலும் மாற்றங்களை ஏற்படுத்தலாம்.

சந்தையில் தேவை அளிப்பிற்கேற்ப விலைகள் இயல்பாகவே நிர்ணயமாகுமாறு அரசு விட்டு விடக்கூடாது. அரசு பொருட்களின் தேவை, அளிப்புக்களைக் கட்டுப்படுத்தி விலைகளின் மீது செல்வாக்கைப் பெறலாம். அல்லது அரசே மக்களின் நன்மை கருதி விலை நிர்ணயம் செய்யலாம். மாறுபடுகின்ற சூழ்நிலைகளுக்கு ஏற்ப பொருட்களின் விலைகளைக் கூட்டவோ, குறைக்கவோ அரசு அதிகாரம் கொண்டதாக இருக்கவேண்டும்.

**அரசின் வேறு சில துணைப் பணிகள்**

அரசு சமுதாய மாற்றங்கள் தோன்றுமாறு செய்ய வேண்டும். 'கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போக' கல்வி வசதிகளைப் பெருக்குவது நன்மை பயக்கும். மக்களின் பழக்க வழக்கங்களில் மாற்றங்கள் தோன்றச் செய்தால் உற்பத்தி உயர வழி பிறக்கும். கூட்டுக் குடும்ப முறைகள் நீக்கப் பெற்று அவற்றின் குறைபாடுகள் களையப் பெறுதல் வேண்டும். கிராம மக்களை நகர்ப்புறங்களுக்குப் பெயர்ந்து செல்லத் தூண்டும் நல்ல பல திட்டங்களை அரசு உருவாக்கவேண்டும். வேலையின்மையையும், மறைந்துள்ள வேலையின்மையையும் நீக்க அரசு சிறு தொழில்களுக்கும், குடிசைத் தொழில்களுக்கும் ஆதரவு அளிக்க வேண்டும். கடன் வசதிகள், உதவித் தொகைகள், இலவச ஆலோசனை வசதிகள், விரிவிதிப்பில் சலுகைகள் ஆகியவற்றை அளித்து சிறிய தொழில்கள் வளர அரசு ஆவன செய்தல் அவசியம். சில சிறிய தொழில்களை அரசே தொடங்கலாம். ஜப்பானில் அரசு பல சிறிய தொழில்களைத் தொடங்கி அவை ஓரளவு வளர்ச்சியடைந்த பிறகு தனியாரிடம் ஒப்புவித்தது. இது போன்றே இன்றைய வளர்ச்சியடைந்து வரும் நாடுகளும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க இம்முறையைப் பின்பற்றலாம். கிராம மக்களுடைய வருவாயை இதனுல் உயர்த்த முடியும். அவர்களிடம் சிக்கன மனப்பான்மை தோன்றுமாறும் செய்ய வேண்டும். கிராம மக்களிடம் புதிய நோக்கங்கள் தோன்ற வேண்டும். புதிய வேளாண்மை உற்பத்தி முறைகளை விவசாயிகள் கைக்கொள்ளுமாறு செய்ய வேண்டும். பொருளாதாரத்தின் பல துறைகளிலும் முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் புகுத்துவதின் மூலமே விரைவான வளர்ச்சியைப் பெற இயலும்.

சமுதாய நீதிக்குட்பட்டச் சட்டங்களை அரசு இயற்ற வேண்டும். அரசின் சட்டங்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு உறுதுணையாக இருக்க வேண்டும். சமுதாயத்திற்கு மிகவும் நன்மையளிக்கத்தக்க வகையில் நாட்டின் உற்பத்தி வசதிகளைப் பயன் படுத்துவது அவசியமானது. பொருளாதாரத்தின்

எல்லாத்துறைகளிலும் சீரான, சரிசமமான வளர்ச்சி ஏற்படுவது நல்லது. உற்பத்தி, முதலீடு ஆகியவை பாதிக்கப்படாமல் வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் அமைந்திருக்கக் கூடிய ஏற்றத் தாழ்வுகள் நீக்கப்பட வேண்டும். பொருளாதார ஏற்ற இறக்கங்களைக் கட்டுப்படுத்துவதும் அரசின் கடமையாகும். வெளிநாட்டு வாணிபத்தைச் சிறப்பாகக் கட்டுப்படுத்தி அந்நியச் செலாவணிச் சிக்கல் ஏற்படாமல் அரசு கவனித்துக் கொள்ள வேண்டும். ஆடம்பரப் பொட்ருகளை இறக்குமதி செய்வதை மேம்பாடடைந்துவரும் நாடுகள் அடியோடு நிறுத்த வேண்டும். அந்நியச் செலாவணியைச் சிக்கனப் படுத்தும் எல்லா நடவடிக்கைகளையும் அரசு மேற்கொள்வது நன்மையைத் தருவதாக அமையும்.

உற்பத்திக் காரணிகளின் பெயர்ச்சி எளிதாக ஏற்பட அரசு பல வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டியது அவசியம். வளர்ச்சியடையாத பொருளாதாரங்களில் உழைப்பு மிகக் குறைந்த அளவே பெயர்ச்சியுடைய காரணியாக இருக்கின்றது. இந்தியா போன்ற பெரிய நாடுகளில் உழைப்பு குறைந்த அளவே பெயர்ச்சி நிலையைக் கொண்டுள்ளமைக்குப் பல காரணங்களைக் கூறலாம். மொழி வேறுபாடுகள், மதவேறுபாடுகள், இன வேறுபாடுகள், பண்பாட்டு வேறுபாடுகள், சமுதாய வேறுபாடுகள், அரசியல் வேறுபாடுகள் ஆகியவை இந்தியா போன்ற நாடுகளில் அமைந்துள்ளன. மேம்பாடடைந்த நாட்டில் மூலதனப் பெயர்ச்சி எளிதானதாக இருக்கின்றது. வெளிநாடுகளிலும் கூட மேம்பாடடைந்த ஒரு நாடு முதலீடுகளைச் செய்கின்றது. பின்தங்கிய நாட்டில் மூலதனத்தின் பெயர்ச்சியும் குறைந்த அளவிற்கே ஏற்படுகின்றது. மேலும், வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மூலதனத்திரட்சியும் போதுமான அளவிற்கு ஏற்படுவதில்லை. பெறப்படுகின்ற குறைந்த அளவு மூலதனமும் சிறப்பாக உற்பத்தியை உயர்விக்கப் பயன்படுத்தப் படுவதில்லை. தொழில் முயல்வோருடைய நிலையை ஆராயும்போது, பின்தங்கிய நாடுகளில் அவர்களுடைய பணி திறமையானது எனக் கருத முடியாது. மேலும் அவர்களின் எண்ணிக்கையும் குறைவாகவே இருக்கின்றது. இடர்களைத் தாங்குகின்ற தொழில் முயல்வோர் மிக அதிக அளவு இலாபத்தைப் பெறுவதில்லை. பெரும்பாலான வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அரசின் நோக்கு ‘சமதர்மச் சமுதாயத்தை’ அமைப்பதாகவே இருக்கின்றது. எனவே, தனியார் கொள்ளை இலாபங்களைப் பெறுவது பல வகைகளிலும் கட்டுப்படுத்தப் படுகின்றது. இதன் காரணமாகவும் ஊக்கம் மிக்க, திறமையான தொழில் அமைப்பாளர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருக்கின்றார்கள். அரசு இந்நிலைகளை எல்லாம் அலசி ஆராய்ந்து தக்க தீர்வுகளை எடுப்பதின் மூலமே பின்தங்கிய நாடுகள் விரைவான பொருளாதார முன்

னேற்றத்தைப் பெற முடியும். எல்லா மக்களும் நல் வாழ்வைப் பெற அரசின் நடவடிக்கைகளே இன்றைய நிலையில் உதவக் கூடியவைகளாகும்.

அரசாங்கத் துறையில் அமைந்திருக்கக்கூடிய தொழில் நிறுவனங்களின் நிர்வாகமும் சிறப்பாக அமையப் பெறுதல் வேண்டும். பணியாளர்கள், மேலாளர்கள், மேற்பார்வையாளர்கள் ஆகியோருடைய பணிகளைச் சிறப்பாகப் பெற்றால்தான் பொதுத்துறை நிறுவனங்களும், தனியார் நிறுவனங்களும் முன்னேற்றத்தைப் பெற முடியும். பல பொதுத் துறை நிறுவனங்கள் வெற்றியைப் பெருமைக்கு ஊழியர்களின் அக்கறையின்மையே முக்கியக் காரணமாகும். திறமைக்கேற்பப் பதவிகளை அரசு அளிக்க வேண்டும். தகுதிக்கேற்பப் பணியாளர்கள் வேலையுயர்வு பெறுமாறு செய்ய வேண்டும். உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனைப் பெருக்கவேண்டுமென்றால் அவர்களுக்குப் பயிற்சியளிக்க அரசு முன்வரவேண்டும். தொழில் நுட்பக் கல்விக்கு மிக அதிக அளவு முக்கியத்துவம் தரப்பட வேண்டும். வேலைவாய்ப்புக்களை அளிக்கக்கூடிய நிலையங்களை அரசு பல இடங்களிலும் அமைக்க வேண்டும். இதன் மூலம் உழைப்பை ஓரளவு பெயர்ச்சி அடையச் செய்யலாம். இவ்வாறு இன்றைய அரசுகளின் கடமை எண்ணிலடங்காதவைகளாக இருக்கின்றன.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அடிப்படைத் தொழில்களையும், பெரிய தொழில்களையும் அரசே தோற்றுவிக்கவேண்டும். ஏனெனில், இத்தொழில்களைத் தொடங்குவதற்கு மிக அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. அதிக மூலதனத்தைப் பெறுவது தனியார் துறைக்கு இயலாததாக இருக்கின்றது. இவ்வகைப் பெரிய தொழில்களை அரசு பிறநாடுகளின் அரசுகளோடு கூட்டு சேர்ந்து நடத்துவதும் உண்டு. இதனால் வெளிநாட்டுத் தொழில் வல்லுநர்களின் பணியைப் பெற முடிகிறது. வெளி நாட்டுத் தொழில் நுட்ப உற்பத்தி முறைகளை உள்நாட்டில் எளிதில் பரப்பவும் வாய்ப்பு தோன்றுகிறது. வெளிநாட்டு மூலதனத்தின் உதவியோடு சில தொழில்கள் தொடங்கப்படுகின்றன. இத்தொழில்களின் வளர்ச்சி நாட்டைத் தொழில்மயமாக்க உதவுகின்றது. உற்பத்திப் பெருகும்போது ஏற்றுமதியின் அளவும் கூடுகின்றது. ஏற்றுமதி கூடுகின்றமையால் அந்நியச் செலாவணியை அதிக அளவிற்கு ஈட்ட முடிகின்றது. இவ்வகையில் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அமைந்திருக்கக்கூடிய பாதக அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலையைத் தவிர்க்கலாம். தனியார் தொழில்களை வளர்க்கவும் அரசு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். அவற்றின் முன்னேற்றத்திற்கான ஊக்கங்களையும் அரசு அளித்தல் அவசியமாகின்றது.

அரசு பல தொழில்களை ஏற்று நடத்துவது வேறு சில நன்மைகளையும் தருகின்றது. பொருளாதாரச் சக்திகள் ஒரு சிலருடைய கையில் அமைந்திருப்பது இதன் மூலம் தடுக்கப் படுகின்றது. முற்றுரிமை நிலைகள் தோன்றுவதைத் தடுக்கவும் சில உற்பத்தி நிறுவனங்கள் பொதுத்துறையிலேயே அமைக்கப்படவேண்டும். ஒரு சிலரிடம் செல்வமும், வருவாயும் பெருமளவு சென்று குவிவதைத் தடுக்க பல தொழில்களையும் அரசுடைமையாக்க வேண்டும்.

அரசின் தலையீட்டிற்கு எதிரான வாதங்கள்

தனியார் துறை நிறுவனங்கள் இலாப நோக்கோடு செயல்படுவதால் அவற்றின் முன்னேற்றம் சிறப்பாக இருக்கின்றது. பொதுத் துறை நிறுவனங்களின் பணியாளர்கள் அதிக ஆர்வத்தோடு தங்கள் பணிகளை ஆற்றுவதில்லை. இதன் காரணமாக மிகச்சில பொதுத் துறை நிறுவனங்களே இலாபத்தைப் பெறுகின்றன. இந்நிலைகளால் குறைந்த அளவில் அமைந்துள்ள உற்பத்தி வசதிகள் ஆக்கத்தை அதிகரிக்கும் வகையில் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை.

வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்திற்கு அரசு பல வழிகளிலும் உதவுகின்றது. எனினும், பொதுத் துறையை விரிவுபடுத்துவது சில தீய விளைவுகளையும் தோற்றுவிக்கின்றது. அவற்றைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

(1) அரசின் பொருளாதாரக் கடமைகள் ஏராளமானவைகளாக இருக்கின்றன. அரசின் கடமைகள் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகின்றன. இதனால் நிர்வாகச் செலவின் சுமையும் அதிகரித்துக் கொண்டிருக்கின்றது. நிர்வாக அமைப்பு பெருமளவிற்கு வளரும்போது, பொதுப் பணிகளின் அளவும் அதிகரித்துக் கொண்டே செல்கின்றது. பெரிய அளவில் நிர்வாகம் செய்யப்படும்பொழுது திறமையான பணிகளைப் பெறுவது முடியாததாகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் குறைபாடு கொண்ட அரசாட்சியையே செய்கின்றன. திறமை குறைந்த அரசியல் அமைப்பும் இந்நாடுகளில் அமைந்திருக்கின்றது. இதன் காரணமாகப் பலவித இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இவ்வித நிலைகளில் அரசின் தலையீடு பொருளாதார முன்னேற்றத்திற்கு நன்மையளிப்பதைவிட தீமையையே விளைவிக்கின்றது எனலாம்.

(2) வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் குறைந்த அளவு வசதிகளையே கொண்டுள்ளன. குறைந்த வசதிகளைக் கொண்ட அரசு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியப் பங்கேற்க முடியாது. மேம்பாடடைந்த நாடுகளின்

அரசுகள் அதிக மூலதனத்தைக் கொண்டிருப்பதால், பலவிதமான முன்னேற்ற நடவடிக்கைகளையும் அவை எளிதில் எடுக்க முடியும்.

(3) பொதுத்துறை நிறுவனங்கள் எண்ணிக்கையில் பெருகும் போது தனியார் துறை நிறுவனங்களின் முன்னேற்றம் பாதிக்கப் படும். நாட்டின் ஜனநாயகம் காக்கப்படாத நிலையும் தோன்றும். பொருளாதார நடவடிக்கைகளில் அரசு தன் சர்வாதிகாரச் சக்தி களைப் பயன்படுத்தித் தலையிடக் கூடும். இதனால் பொருளாதாரத் தில் வளர்ச்சிக் குன்றிய நிலை தோன்றும்.

(4) அரசின் நிறுவனங்களில் கண்டுபிடிப்புக்களுக்கும், புதிய முன்னேற்றமான உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதற்கும் வாய்ப் பில்லை எனக் குறை கூறப்படுகின்றது. தனியார் நிறுவனங்கள் இலாப நோக்கோடு உற்பத்தியைப் பெருக்கவும், உற்பத்திப் பொருட்களின் தரத்தை உயர்த்தவும் புதிய உற்பத்தி முறைகளைக் கைக்கொள்கின்றன.

ஆனால், சோவியத் ரஷ்யாவின் நிலைகளை ஆராயும்போது அவை இதற்கு எதிரான தன்மைகளைக் கொண்டிருக்கின்றன. விஞ்ஞான வளர்ச்சியில் முதன்மையில் இருக்கக் கூடிய உலக நாடு களில் ரஷ்யாவும் ஒன்றாகும். பொது நிர்வாகம் பரிசோதனைகளுக்கு எதிராக அமையுமெனக் கருத முடியாது. பொதுவுடைமை நாடு களிலும் பலவகைப்பட்ட அறிவியல் ஆராய்ச்சிகள் கைக்கொள்ளப் படுகின்றன. மேலும் அரசு அதிக நிதி வசதியைக் கொண்டுள்ளமை யால் ஆராய்ச்சிகளுக்கு அதிகச் செலவுகளைச் செய்ய முடிகின்றது. ஆராய்ச்சிகளை மேற்கொள்வதில் பல இடர்கள் அமைந்துள்ளன. இந்த இடர்களைத் தாங்கும் திறன் அரசிற்கு அதிகமாக இருக் கின்றது. தனியார் துறையினர் இவ்வித இடர்களைத் தாங்க முன் வரமாட்டார்கள். இடர்களைத் தாங்கும் திறனும் அவர்களுக்குக் குறைவாகவே இருக்கின்றது. தனியார் துறை நிறுவனங்களில் தனி ஒருவரோ அல்லது ஒரு சிலரோ உடைமையாளர்களாக இருக் கின்றார்கள். ஆராய்ச்சிகள் வெற்றியைப் பெறாவிட்டால் ஏற்படக் கூடிய நஷ்டங்களைத் தாங்க இவர்களால் முடியாது. சிறிய அளவில் அமைந்திருக்கக் கூடிய தனியார் நிறுவனம் ஆராய்ச்சிகளையும், பரிசோதனைகளையும் மேற்கொள்ளும்போது, அதற்கான செலவு மிகவும் அதிகமானதாக இருக்கின்றது. மேலும், சிறிய அளவில் மூலதனத்தைக் கொண்டிருக்கின்ற தனியார் நிறுவனம் ஆராய்ச்சி களை மேற்கொள்ள அதிக அளவு மூலதனத்தை ஒதுக்க முடியாது. பொதுத்துறை நிறுவனங்கள் பெரிய அளவில் அதிக முதலீட்டைக் கொண்டவைகளாகும். அவை மேற்கொள்கின்ற ஆராய்ச்சிகள் வெற்றியையும் பெறுகின்றன. ஆராய்ச்சிகளுக்காக அதிக

மூலதனத்தை முதலீடாக்குவதும் அவற்றிற்கு எளிதாக இருக்கின்றன. எனவே, பொதுத்துறை நிர்வாகத்தினுல் ஆராய்ச்சிகளின் எல்லா நன்மைகளேயும் பெற முடிகின்றது. பலவித பரிசோதனை முறைகள் மேன்மையான உற்பத்தி வழிகளைத் தோற்றுவிக்கின்றன.

வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குக் கண்டுபிடிப்புக்களும், கண்டுபிடிப்புக்களில் ஏற்பட்ட முன்னேற்றங்களும் பெரிதும் உதவியிருக்கின்றன. ஆனுல், இவ்விதக் கண்டுபிடிப்புக்களை இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் செய்ய வேண்டுமென்பது அவசியமானதல்ல. முன்னேற்றமடைந்த நாடுகளில் அமைந்திருக்கக் கூடிய உற்பத்தித் தொழில் நுட்பங்களை பின்தங்கிய நாடுகள் அப்படியே பின்பற்றலாம். முன்னேற்றமடைந்த நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பல கண்டுபிடிப்புக்களையும் செய்ய வேண்டியிருந்தது. தற்பொழுது, வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் கண்டுபிடிப்புக்களைச் செய்யாமலேயே எளிதில் முன்னேற்றத்தைப் பெற இயலும். மேலும், வளர்ச்சியடைந்த நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற நீண்டகாலம் பிடித்தது. இன்றைய பின்தங்கிய நாடுகள் சில ஆண்டுகளில் முன்னேற்றத்தைப் பெறுவதற்கான வாய்ப்புக்கள் ஏராளமாக உள்ளன. அரசின் சிறப்பான கொள்கைகளிலேயே ஒரு நாட்டின் முன்னேற்றம் அடங்கியிருக்கிறது எனக் கூறலாம்.

ஆனுல், அரசு தேவைக்கு அதிகமான அளவில் பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துகின்றது எனவும் சிலர் குறை கூறுகின்றனர். பின்தங்கிய நாடுகளில் அரசியல் அமைப்புத் திறமையாகச் செயல்படுவதில்லே. இந்நிலே நீடித்தால் அரசு பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவ முடியாது. அரசின் நடவடிக்கைகள் முன்னேற்றத்திற்கு இடையூருகவே அமையும். அரசின் நடவடிக்கைகள் வளர்ச்சிக்கு நன்மையைத் தருவதற்குப் பதில் தீமையைத் தருவதாகவே அமையும். அரசின் ஊழியர்கள் திறமையாகப் பணியாற்றுவதில்லை; ஆனுல் சிறப்பாகப் பணியாற்றுவதற்கான திறமை அவர்களிடம் இருக்கின்றது. அரசின் ஊழியர்கள் நேர்மையற்றவர்கள் என்ற பொதுவான கருத்தும் நிலவி வருகின்றது. மக்களின் ஒரு பகுதியினரே அரசின் ஊழியர்களைக் குறை கூறுவது நம்மை நாமே குறைகூறிக் கொள்வதற்கு ஒப்பானதாகும். பொதுவாக, கணிசமான வருவாயைப் பெறுபவர்கள் ஓரளவு நேர்மையானவர்களாக இருக்கின்றுர்கள். வருவாய் போதுமான அளவில் இல்லாதபோதுதான் நேர்மையற்ற பல நிலேகள் தோன்றுகின்றன எனக் கூறலாம்.

தனியார் துறை நிறுவனங்கள் யாவும் திறமையாகச் செயல் படுகின்றன எனக் கூறயியலாது. இந்நிறுவனங்களின் ஊழியர்களும் நேர்மையானவர்கள் எனக் கருத முடியாது. தனியார் துறை நிறுவனங்களின் நேர்மைக் குறைவு பொது மக்களால் நன்கு உணரப்படுவதில்லை. பொது மக்கள் தனியார் நிறுவனங்களைப் பற்றி நன்கு அறிந்திருப்பதில்லை. இந்நிறுவனங்களின் அன்றாட நடவடிக்கைகளைப்பற்றி அறிய பொதுமக்களுக்கு வாய்ப்பில்லாமல் போய்விடுகின்றது. தனியார் துறை நிறுவனங்களின் ஊழியர்கள் திறமையாகப் பணியாற்றுகின்றமைக்கு அவர்கள் பெறுகின்ற அதிக ஊதியம் ஒரு காரணமாகும். இந்நிறுவனங்கள் திறமையான ஊழியர்களைப் பெற உயர்ந்த அளவு ஊதியங்களை அளிக்கின்றன. தனியார் நிறுவனங்கள் எளிதில் அதிக அளவு ஊதியங்களைப் பணியாளர்களுக்குத் தரமுடியும். ஏனெனில், இந் நிறுவனங்கள் பெருமளவிற்கு இலாபத்தைப் பெறக்கூடிய துறைகளிலேயே ஈடு படுகின்றன. ஆனால், அரசு தனியார் துறை நிறுவனங்கள் முதலீடு செய்யாத, செய்யத் தயங்குகின்ற துறைகளிலும் முதலீட்டைச் செய்கின்றது. அரசின் நிறுவனங்கள் இலாப நோக்குக் கொண்டு செயல்படுவதில்லை. சமுதாய நலனை உயர்த்தக் கூடிய பலவகைப் பட்ட முதலீடுகளையும் அரசு செய்ய வேண்டியுள்ளது. இலாபத்தை அதிக அளவில் பெற வாய்ப்பில்லாத துறைகளிலும் அரசு ஈடுபடு கின்றது. பொது நலத்திற்காக இவ்வித முதலீடுகளை அரசு செய்வது அவசியமாகின்றது. எளிதில் இலாபத்தைத் தரத்தக்க வாணிபத் துறைகளில் அரசு ஈடுபட்டால், திறமையான ஊழியர் களுக்கு உயர்ந்த அளவு ஊதியத்தையும் தர முடியும். இவற்றைத் தவிர, அரசாங்க நிறுவனங்களின் திறமைக்குறைவு பெரிது படுத்தப் படுகின்றது. தனியார் நிறுவனங்களில் திறமைக் குறைவும், நேர்மையற்ற நிலையும் அமைந்திருந்தாலும்கூட அவை மேற்குறிப்பிட்டக் காரணங்களால் பொது மக்களால் நன்கு உணரப்படுவதில்லை.

பொருளாதார முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளைத் தொடங்குவதும், முன்னேற்றத்தைத் தொடர்ச்சியாக நீடிக்கச் செய்வதும் அரசின் கடமையாகின்றது. இந்நிலைகளோடு அரசு பொருளாதார சமத்துவத்தையும், நீதியையும் காக்க வேண்டும். சமுதாயத்தில் அமைந்திருக்கக்கூடிய பொருளாதாரச் சுரண்டல் கள் அடியோடு நீக்கப்படவேண்டும். சமுதாயத்தின் ஒரு வகுப் பினர் பிற வகுப்பினரைச் சுரண்டுவது தடுக்கப்படவேண்டும். பொருளாதார அமைப்புக்கள் சமுதாய நலனைப் பாதிக்கக்கூடிய வகையில் செயல்படுவதைத் தடைசெய்வது அவசியமானது. அரசின் முக்கியமான கடமைகளில் பல உற்பத்தி நிறுவனங்களை

நெறிபடுத்துவதும் ஒரு கடமையாகின்றது. இந்திய அரசின் நோக்கம் சமுதாய, பொருளாதாரச் சுதந்திரத்தை அளிப்பதாக இருக்கின்றது. மக்கள் அனைவருக்கும் சம வாய்ப்பு அளிக்க அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. எல்லா நிலைகளிலும் மக்கள் நீதியைப் பெற அரசு பாடுபடுகின்றது. அதற்கேற்ப நம்முடைய ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள அதிக அளவு ஏற்றத்தாழ்வுகளை நீக்கக் கருதியது. இவ்வித ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதோடு, விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சாதகச் சூழ்நிலைகளை உரு வாக்குவதும் இத்திட்டத்தின் நோக்கமாக அமைந்திருந்தது. எனவே, விரைவான வளர்ச்சியைப் பெற தேசிய அளவில் சமுதாய மாற்றங்களும், சமுதாயப் புரட்சியும் தோன்ற வேண்டும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான அடிப்படைத் தேவைகளாக இவை அமைகின்றன. சமுதாயச் சீர்திருத்தங்களைச் செய்வதற்கும், புதிய பொருளாதார மாற்றங்களை ஏற்படுத்து வதற்கும் அரசிற்கு அதிகச் செலவு பிடிக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான விலை மிகவும் உயர்வான தாகும். சமுதாய நலனைக் கருதி அரசு அதிக விலை கொடுத்தும் முன்னேற்றத்தைப் பெறத் தயங்கக் கூடாது. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற விரைவு நிலை கொண்ட நடவடிக்கைகளை உரிய காலங்களில் அரசு எடுக்க வேண்டும். சமுதாயத்தில் மறு மலர்ச்சியைத் தோன்றச் செய்வது அரசின் கடமையாகும். மக்களைப் புதிய முன்னேற்றமடைந்த நோக்குக் கொண்டவர்களாக மாற்ற வேண்டும். அவர்களை அரசியலறிவு நிரம்பப் பெற்றவர்களாக ஆக்கவேண்டும். உள்ள உறுதி பெற்ற வர்களாக அவர்கள் இருக்க வேண்டும். பரந்த அறிவு பெற்றவர் களாக அவர்கள் இருந்தால்தான் பொருளாதார முன்னேற்றத்தில் ஏற்படக் கூடியத் தடைகளைக் களைய முடியும். அப்பொழுதுதான் முன்னேற்றமான, தொழில் நுணுக்கம் கொண்ட உற்பத்தி முறைகளை அவர்கள் பின்பற்றுவார்கள். உற்பத்தியை உயர்த்த வேண்டுமென்ற விருப்பத்தையும் அவர்கள் பெறுவார்கள். இதன் காரணமாக அவர்களின் வருவாய் உயர்ந்து பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் சிறப்பான வளர்ச்சியைக் காண முடியும்.

பின்தங்கிய நாடுகளில் அரசாட்சியை நடத்தும் கட்சியின் தலையீட்டாலும் பொதுத்துறை நிறுவனங்களின் முன்னேற்றம் பாதிக்கப்படுகின்றது. இதன் காரணமாகப் பொதுத்துறையால் பல நன்மைகளையும் சமுதாயத்திற்கு அளிக்க முடிவதில்லை. அரசியல் காரணங்களுக்காக ஆளும் கட்சியினர் பொதுத்துறை

நிறுவனங்களின் நடவடிக்கைகளில் குறுக்கிடுவது நன்மை தராது. பல அரசின் நிறுவனங்கள் இலாபத்தைப் பெற இயலாமைக்கு இதுவும் ஒரு காரணமாகின்றது.

பொதுவாக, பின் தங்கியப் பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற விரும்புகின்றன. எனவே பொருளாதார நிலைகளில் அரசின் தீவிர ஈடுபாடுகளும், தீவிரக் கொள்கைகளும் இன்றியமையாதவைகளாகின்றன. அரசின் தலையீடுகளைக் குறைப்பது முன்னேற்றத்திற்குத் தடையாகவே அமையும். பல முன்னேற்றமடைந்து வரும் நாடுகள் அரசு பொருளாதார வளர்ச்சியில் முக்கியப் பங்கேற்க வேண்டுமென்பதை உணர்ந்துள்ளன. இன்றைய முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளிலும் அரசின் நடவடிக்கைகள் பெருகி வருகின்றன. பல பொருளாதாரத் துறைகளையும் அரசு இந்நாடுகளில் கட்டுப்படுத்துகின்றது. 1930-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் ஏற்பட்ட பொருளாதாரப் பெருமந்தம் பொருளியலறிஞர்களைப் பெரிதும் சிந்திக்க வைத்தது. முதலாளித்துவப் பொருளாதாரங்களில் அமைந்திருக்கக் கூடிய குறைபாடுகள் அப்போதுதான் உணரப்பட்டன. 1930-இல் தோன்றிய இப் பொருளாதாரப் பெருமந்தம் தனியார் துறை மிக்கச் செல்வாக்கைக் கொண்ட முதலாளித்துவ நாடுகளைப் பாதித்தது. ஆனால் இம்மந்த நிலை சோவியத் ரஷ்யாவின் பொருளாதாரத்தைப் பாதிக்கவில்லையென்பது குறிப்பிடத் தக்கது. ரஷ்ய அரசு பொருளாதார நடவடிக்கைகளில் முழுச் செல்வாக்கையும் கொண்டிருந்தமையே இதற்கு முக்கியக் காரணமாக அமைந்தது. இதற்குப் பிறகு அரசு 'தலையிடாமைக் கொள்கையைப்' பின்பற்ற வேண்டும் என்ற கருத்து பெரும்பாலான பொருளாதார நிபுணர்களால் ஏற்றுக்கொள்ளப் படவில்லை.

பொருளாதார முன்னேற்றத்தைத் தொடங்குவது இன்றைய நிலைகளில் அரசினாலேயே முடிகின்ற ஒன்றாகும். உயர்வான வளர்ச்சி வீதத்தைப் பெறவும் அரசின் நடவடிக்கைகள் உதவுகின்றன. பொருளாதார, சமுதாய நீதிகளைக் காப்பதாகவும் அரசு திகழ்கின்றது. சமுதாய நலனைப் பெருக்கவும் அரசின் சிறந்த கொள்கைகள் அவசியமாகின்றன.

பொருளாதார மேம்பாட்டைப் பெறுவதில் அரசிற்கு இருக்கக் கூடிய முக்கியப் பங்கை இந்திய அரசு உணர்ந்திருக்கின்றது. 1951-ஆம் ஆண்டுமுதல் இந்தியா திட்டமிட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பெற்று வருகின்றது. 'கலப்புப் பொருளாதார' (Mixed Economy) முறை அரசால் பின்பற்றப்படுகின்றது.

இந்தியா ஜனநாயகக் குடியரசாகவும் இருக்கின்றது. 'சம தர்மத்தை' (Socialism) இந்திய அரசு ஏற்படுத்த விரும்புகின்றது. இதற்கு உதவக்கூடிய வகையில் பல தனியார் துறை நிறுவனங் களும் பொதுவுடைமையாக்கப்படுகின்றன. தேசிய உடைமை யாக்குவதின் மூலம் வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் அமைந் திருக்கக்கூடிய பெருமளவு ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க முடியும். மக்கள் அனைவரும் நல்வாழ்வைப் பெற இதுவே சிறந்த வழியாகும். தனியார் துறைக்கு முக்கியத்துவம் தரக்கூடிய முதலாளித்துவக் கொள்கை முன்னேற்றமடைந்த மேற்கு நாடுகளுக்கு மட்டுமே பொருந்துவதாக இருக்கின்றது. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் அரசின் துறைக்கு முக்கியத்துவம் அளிக்கக் கூடிய சமதர்மக் கொள்கையே பொருத்தமுடையது எனலாம். சமதர்மத்தைப் பின்பற்றுகின்ற நாடுகளில் அரசு பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியப் பங்கேற்கின்றது.

### பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான அரசின் நடவடிக்கைகள்

பொருளாதார மேம்பாட்டைப் பெற தற்கால அரசுகளால் பல வகைப்பட்ட நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன. பலவித வழி முறைகளைப் பின்பற்றி இன்றைய அரசுகள் குறுகிய காலத்தில் விரைவான முன்னேற்றத்தைப் பெற விரும்புகின்றன. பொது வாக, அரசின் நடவடிக்கைகளை இரு பெரும் பிரிவுகளாகப் பகுக்க லாம். அவை,

i. நேர்முக நடவடிக்கைகள் ;

ii. மறைமுக நடவடிக்கைகள் ஆகியவைகளாகும்.

### அரசின் நேர்முக நடவடிக்கைகள்

அரசின் நேர்முக நடவடிக்கைகள் பின்வரும் பணிகளை உள்ள டக்கியதாக அமைந்துள்ளன.

1. பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய பல வசதிகளை அரசு ஏற்படுத்துகின்றது. சமுதாயத்திற்கு நன்மை யளிக்கக்கூடிய கல்வி வசதிகள், ஆரோக்கிய வசதிகள் ஆகியவற்றை அளிப்பதும் அரசின் கடமையாகின்றது. பின்தங்கிய நாடுகளில் இவ்வசதிகள் மிகவும் முக்கியத்துவம் கொண்டவைகளாக இருக் கின்றன. மக்களின் தாழ்ந்த நிலையை நீக்கக் கல்வி வசதிகள் பெருக்கப்படுதல் வேண்டும். மருத்துவ வசதிகளை விரிவாக்குவதின் மூலம், உழைப்பு என்ற உற்பத்தியின் முக்கியக் காரணி சிறப்பாகப் பயன்படுத்தப்படும். வாழ்க்கை வசதிகளைப் பெரிதும் கொண்டிருக் காத அதிக அளவு மக்கட்தொகை பொருளாதார முன்னேற்றத்

திற்குத் தடையாக அமையும். மக்களின் வாழ்க்கை நலன்களைப் பெருக்குவதின் மூலம் நாட்டின் மொத்த ஆக்கத்தை அதிகரிக்க முடியும். மக்கட்தொகையின் பின்தங்கிய நிலையை மாற்றுவதின் மூலமே பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றத்தைப் பெற இயலும். கல்வி முன்னேற்றம் பொருளாதார வளர்ச்சியில் புரட்சியையே தோற்றுவிக்கக் கூடியதாகும். இதை மேம்பாடடைந்த பல மேலை நாடுகளின் பொருளாதார வரலாறுகளினின்றும் நன்குணரலாம். இன்றைய நிலையில் கல்வியறிவைப் பரப்புவதின் மூலமே எந்த ஒரு துறையிலும் விரைவான முன்னேற்றத்தைப் பெற முடியும். பெருகிவரும் மக்கட்தொகையைக் கட்டுப்படுத்தவும் மக்களைக் கல்வியறிவு பெற்றவர்களாக ஆக்குதல் அவசியமாகும்.

இதுபோன்றே, பொருளாதார நடவடிக்கைகளை ஊக்குவிக்கக் கூடிய சில பணிகளையும் அரசு மேற்கொள்ளுதல் அவசியம். பொதுப்பணிகள் பலவற்றை அரசு மேற்கொள்வதின் மூலம் பலவித நன்மைகளும் ஏற்படுகின்றன. அரசு சாலைகளையும், இருப்புப் பாதைகளையும் அமைக்க வேண்டும். மின்சார உற்பத்தியைப் பெருக்குவது நாட்டைத் தொழில் மயமாக்க உதவும். போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகளினால் எல்லாப் பொருளாதாரத் துறைகளும் நன்மையடைகின்றன. வேளாண்மை விளை பொருட்களை சந்தைகளில் கொண்டு சென்று நல்ல விலைக்கு விற்பனை செய்ய போக்குவரத்து வசதிகள் தேவைப்படுகின்றன. பெரிய தொழில்கள், சிறிய தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கும் இவ்வசதிகள் எந்த அளவிற்கு முக்கியத்துவம் கொண்டுள்ளன என்பதை விளக்க வேண்டியதில்லை. பொருளாதார நடவடிக்கைகளை விரைவாக இயக்குவிக்க இவ்வசதிகளைப் பெருக்குவது மிகவும் இன்றியமையாததாகும்.

தவிர, நீர்ப்பாசன வசதிகளை முன்னேற்றமடையச் செய்வதும் அரசின் முக்கியப் பணியாகும். இதன் மூலமே வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கு வாய்ப்புள்ளது எனலாம். தனியொருவருக்கான வேளாண்மை உற்பத்தியையும், ஒரு ஏக்கருக்கான உற்பத்தியையும் உயர்த்த அரசு பல வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டும். பல பின்தங்கிய நாடுகளும் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளன. பிற துறைகளின் முன்னேற்றம் வேளாண்மை வளர்ச்சியையே சார்ந்திருக்கின்றது. பெரும்பாலான மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளமையால், அவர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவது அவசியமாகின்றது. விவசாயிகளின் வாழ்க்கை நிலை திருந்த வேண்டுமென்றால், வேளாண்மை உற்பத்தியை உயர்ந்த அளவில்

பெறுவது இன்றியமையாததாகின்றது. அரசு வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க எளிய கடன் வசதிகள், விற்பனை வசதிகள் கிட்டங்கி வசதிகள், காப்புறுதி வசதிகள் ஆகியவற்றை அளித்தல் வேண்டும். வேளாண்மை நடவடிக்கைகள் திறம்பட வேண்டுமென்றால், விவசாயிகளின் நிலை திருந்த வேண்டும்; ஆனால் விவசாயிகளின் நிலையைத் திருத்த வேளாண்மை நடவடிக்கைகளை அவர்கள் திறம்படச் செய்ய வேண்டும்.

2. சில பொருளாதார அமைப்புக்களிலும், நிர்வாக அமைப்புக்களிலும் மாற்றங்களைக் கொண்டு வருவது அரசின் கடமையாகும். நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதின் மூலம் பின் தங்கியப் பொருளாதாரங்களில் வேளாண்மை உற்பத்தியை உயர்த்த ஏராளமான வாய்ப்புக்கள் உள்ளன. வேளாண்மை வளர்ச்சிக்குக் குத்தகை முறைகளில் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதும் நன்மை தருவதாகும். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் நிலமற்ற விவசாயிகள் எண்ணற்றவர்களாக இருக்கும்போது, பெரிய அளவில் நிலவுடைமைகளைக் கொண்டவர்கள் மிகவும் குறைவான எண்ணிக்கையில் இருக்கின்றனர்கள். இந்நிலையில் நிலவுடைமைக்கு உச்சவரம்பு கொண்டுவருதல் அவசியமாகின்றது. உச்ச வரம்பினால் கிடைக்கக் கூடிய எச்ச நிலங்களை நிலமற்ற விவசாயிகளுக்கு அளிக்க வேண்டும். நிலவுடைமையாளர்களே நேரடியாக வேளாண்மை நடவடிக்கைகளில் ஈடுபடும்போதுதான் உற்பத்தியைப் பெருக்க முடியும். சிலரிடம் உடைமையாக உள்ள அதிகப் பரப்பளவு கொண்ட நிலத்தைச் சிறப்பாக உற்பத்திக்குப் பயன் படுத்த நிலச் சீர்திருத்தங்கள் தேவைப்படுகின்றன. ஆனால் பல மேம்பாடடைந்துவரும் நாடுகளிலும் சிறப்பாக நிலச் சீர்திருத்தங்கள் செயல் படுத்தப் படுவதில்லை. இந்தியாவின் நிலையை ஆராயும்போது, பல மாநிலங்களிலும் பல வகைகளில் நிலச் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்படுகின்றன. எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியான நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது இன்றியமையாததாகும். நிலமற்றவர்கள் நன்மையைப் பெறத் தக்க வகையிலும், உற்பத்தியை உயர்த்தத்தக்க நிலையிலும் நிலச் சீர்திருத்தங்கள் செயல்படுத்தப்பட வேண்டும்.

வேளாண்மையில் இவ்வித நடவடிக்கைகள் எடுக்கப்படுவது போல தொழில் துறையிலும் சில விதக் கட்டுப்பாடுகள் அரசினால் எடுக்கப்படவேண்டும்; கூட்டுப்பங்கு நிறுவனங்கள் முன்னேற்றமடைய நெறிப்படுத்தப்பட வேண்டும். முற்றுரிமை நிலைகள் நுகர்வோருடைய நிலையைப் பாதிக்கக்கூடியவை. இந்நிலைகளைக் களையவும் அரசு நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் கூட்டுறவுத் துறை நன்கு வளர்க்கப்பட

வேண்டும். ஆனால் பல காரணங்களால் கூட்டுறவுத் துறை இந் நாடுகளில் முன்னேற்றமடைவதில்லை. சமுதாய நலன் உயர்ந்த அளவில் பெறப்பட வேண்டுமென்றால் அரசு சரியான கொள்கை களைப் பின்பற்ற வேண்டும்.

மூலதன, பணச்சந்தைகளும் வளர்ச்சியடையாத நாடுகளில் மாற்றியமைக்கப்பட வேண்டும். பின் தங்கிய நாடுகளில் பணச் சந்தை வளர்ச்சியடையாததாக இருக்கின்றது. இதன் காரண மாகவே இந்நாடுகளில் அரசின் பணக்கொள்கை வெற்றி பெறுவ தில்லை. எனவே அரசு வளர்ச்சியடைந்த பணச்சந்தையைப் பெறு வதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். வங்கிகள், காப்புறுதி நிறுவனங்கள் ஆகியவற்றை அரசு எண்ணிக்கையில் பெருகுமாறு செய்யவேண்டும். அரசின் மத்திய வங்கி எல்லா பண, நிதி நிறுவனங்களையும் கட்டுப்படுத்தத்தக்க அதிகாரங்களைக் கொண்டிருக்க வேண்டும்.

3. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கக் கூடிய சந்தைக் குறைபாடுகளை நீக்குவது அரசின் முக்கியப் பணி களுள் ஒன்றாகும். மக்களின் நலங்காக்கச் சந்தைக் குறைபாடுகளைக் களைவது அவசியமாகும். உழைப்பாளர்களுக்குப் பயிற்சி வசதிகள் அளிக்கப்படுதல் வேண்டும். திறமையான உழைப்பாளர்களைப் பெற பயிற்சி வசதிகளே உதவுபவைகளாகும். தொழில் நுட்ப வல்லுநர்களின் எண்ணிக்கையும் பெருக்கப்பட வேண்டும். உற் பத்தித் திறனையும், உற்பத்தியளவையும் உயர்த்த இவை பெரிதும் உதவும். நாட்டின் மொத்த ஆக்கத்தை அதிகரிக்க இவை வகை செய்கின்றன. அதிக அளவு முதலீட்டைச் செய்தால்தான் இவ் வசதிகளைப் பெருக்க இயலும். இவற்றின் முன்னேற்றகுத் தனி யார் முதலீடு செய்ய முன்வரமாட்டார்கள். இவ்வசதிகளைப் பெருக்குவதின் மூலம் நீண்ட காலத்திலேயே நன்மையைப் பெற முடியும். மேலும் பெருமளவு மூலதனத்தை முதலீடு செய்யத்தக்க நிலையில் உள்ளது அரசேயாகும்.

தொழில் வளர்ச்சிக்கும், வாணிப வளர்ச்சிக்கும் அடிப்படை யாகத் தேவைப்படுவது நிதி வளர்ச்சியேயாகும். நிதி வளர்ச்சி ஏற் படும் வகையில் அரசு பல வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டும். தொழில் முன்னேற்றத்திற்கு நிதி உதவியை அளிக்கக்கூடிய நிதி நிறுவனங்கள் அரசால் அமைக்கப்பட வேண்டும். வேளாண்மை வளர்ச்சிக்குக் கடன் அளிக்கும் வகையில் பல வங்கிகளையும் அரசு தூண்ட வேண்டும். சிறிய தொழில்களின் வளர்ச்சிக்காகவும் எளிய வட்டியில் கடன்கள் அளிக்கப் படுதல் அவசியமாகின்றது. இந்தியாவில் கடன் வசதிகளைப் பெருக்குவதற்காக 'தொழில் நிதிக்

கழகம்' (Industrial Finace Corporation), 'மாநிலநிதிக் கழகங்கள்' (State Finance Corporations), 'தேசியதொழில் முன்னேற்றக்கழகம்' (National Industrial Development Corporation), தேசிய சிறு தொழில்கள் கழகம் (National Small Industries Corporation) இந்தியத் தொழில் அபிவிருத்தி வங்கி (Industrial Development Bank of India), இந்திய யூனிட் டிரஸ்ட் (Unit Trust of India) ஆகிய நிதி நிறுவனங்கள் அரசின் ஆதரவோடு ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் மூலமே நம் நாட்டில் தொழில் வளர்ச்சிக்குத் தேவை யான கடன் வசதிகள் பெருக்கப்பட்டு வருகின்றன. ஆனால் இந்தியாவில் வேளாண்மை நிதிச் சிக்கல் தீர்க்கப்படாமலேயே இருக்கின்றது. வேளாண்மைக் கடன் வசதிகளை அளிக்கவே நாட்டின் முக்கிய பதினான்கு வங்கிகள் தேசியவுடைமையாக்கப் பட்டன. நம் நாட்டில் வணிக வங்கிகளின் வளர்ச்சி குறிப்பிடத் தக்க வகையில் அமைந்துள்ளது. வணிக வங்கிகளை வேளாண்மைத் துறைக்குக் கடன் அளிக்குமாறு செய்வது இன்றியமையாததாகும். இதன் மூலமே வேளாண்மை நிதிச் சிக்கலைத் தீர்க்க இயலு மெனலாம்.

4. நேரடியாக அரசு தொழில் நடவடிக்கைகளில் ஈடுபடுவதின் மூலமும் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்தலாம். தொழில் வளத்தைப் பெருக்குவது அரசின் முக்கியக் கடமையாகும். எந்த ஒரு நாடும் தொழில் முன்னேற்றத்தைப் பெறாமல் பொருளாதாரத்தில் விரைவான வளர்ச்சியைப் பெற முடியாது. இதைப் பல முன்னேற்றமடைந்த நாடுகளின் பொருளாதார வரலாற்றினின்றும் அறியலாம். இங்கிலாந்தில் தொழிற்புரட்சி ஏற்படுவதற்கு முன்பு வேளாண்மைப் புரட்சி தோன்றியது. வேளாண்மைப் புரட்சி தோன்றியிருந்தபோது இங்கிலாந்து நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சியடைந்த ஒன்றாகக் கருதப்படவில்லை. தொழிற்புரட்சிக்குப் பின்னரே ஆங்கிலேயர்கள் மிகவும் தரமான வாழ்வைப் பெற்றார்கள். பொரு ளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் உற்பத்தி உயர்வடைந்தது. செல்வ நாடாக இங்கிலாந்து மாறியமைக்குத் தொழிற் புரட்சியே முக்கியக் காரணமாகும். அமெரிக்காவிலும் தொழிற்புரட்சி 1860-ஆம் ஆண்டிற்குப் பிறகு ஏற்பட்டது. வளமான, வளர்ச்சி யடைந்த பொருளாதாரத்தை அமெரிக்கா இதற்குப் பிறகே பெற்றது எனலாம். சோவியத் ரஷ்யாவில் 'பாட்டாளிகளின் சர்வாதிகாரம்' (Dictatorship of The Proletariat) அமைந்த பிறகு பல தொழில் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. பல வகைப் பட்ட அடிப்படைத் தொழில்களும், பெரிய தொழில்களும் ஐந்தாண்டுத்திட்டங்களின் மூலமாகவும், ஏழாண்டுத்திட்டத்தின்

மூலமாகவும் வளர்க்கப்பட்டன. ரஷ்யா தொழில்மயமான பொருளாதாரத்தைப் பெற்ற பிறகே உலக வல்லரசு நாடுகளுள் ஒன்றாகக் கருதப்பட்டது. வளர்ச்சியடைந்தப் பொருளாதாரத்தைப் பெற தொழில் முன்னேற்றம் இன்றியமையாதது என்பதை இவற்றின் மூலம் நன்குணரலாம்.

ஒரு நாட்டுப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாக இருப்பவை சில அடிப்படைத் தொழில்களும், பெரிய தொழில்களுமாகும். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் இத்தொழில்கள் தனியார் துறையால் ஏற்று நடத்தப்படுவதில்லை. இத்தொழில்களைத் தொடங்குவதற்கான மூலதனமும் மிகவும் அதிகமாகத் தேவைப்படுகின்றது. தனியார் துறையால் மிக அதிக அளவு மூலதனத்தைத் திரட்ட முடிவதில்லை. எனவே இவ்வகைத் தொழில்களை அரசே தொடங்கி நடத்துவது அவசியமாகின்றது. பொதுத் துறையில் இத் தொழில்கள் நிறுவப்படாவிட்டால் பிற பொருளாதாரத் துறைகளின் வளர்ச்சியும் குன்றி விடுகின்றது. அரசு சில பெரிய தொழில்களோடு சிறிய தொழில்களையும் தொடங்கலாம். தனியார் தொழில்களின் வளர்ச்சிக்குப் பொதுத் துறைத் தொழில்கள் வழிகாட்டியாக இருக்க வேண்டும். தொழில் முயல்வோருடைய எல்லா பணிகளையும் அரசு பொதுத்துறை நிறுவனங்களில் செய்ய வேண்டும். பொருளாதார முன்னேற்றம் நீடித்து நிலைக்கும்வரை அரசு இவ்விதமான பல பணிகளையும் ஆற்ற வேண்டியுள்ளது.

குடியரசுப் பொருளாதாரத்தில் பொதுத்துறை முன்னேற்றத்தில் முக்கியப் பங்கு கொண்டிருக்கின்றது. இந்தியாவிலும் பொதுத் துறையை வளர்ப்பதின் மூலம் சமதர்மத்தைப் பெற அரசு நோக்குக் கொண்டுள்ளது. இதற்கான திட்டங்களும் சிறப்பான வகையில் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. மேம்பாடடைந்த நாடுகளைக் காட்டிலும், மேம்பாடடைந்துவரும் நாடுகளில் அரசு பொருளாதார முன்னேற்றத்தில் மிக முக்கிய நிலையைக் கொண்டிருக்கிறது.

### அரசின் மறைமுக நடவடிக்கைகள்

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டி அரசு சில மறைமுக நடவடிக்கைகளையும் எடுக்கின்றது. இந் நடவடிக்கைகளின் மூலம் பல பொருளாதார நிலைகளின் மீதும் அரசு செல்வாக்குக் கொண்டதாக இருக்கின்றது. மறைமுக நடவடிக்கைகள் கீழ்க்கண்ட இரு வகைக் கொள்கைகளின் மூலம் எடுக்கப்படுகின்றன. அவை,

(i) பணக்கொள்கை ;

(ii) நிதிக் கொள்கை ஆகிய இரண்டுமாகும்.

பணக் கொள்கை

வங்கிகளின் வங்கியாக, அரசின் வங்கியாக இருக்கக்கூடிய மத்திய வங்கி சரியான பணக் கொள்கையைப் பின்பற்றுவது பொருளாதார முன்னேற்றத்தை எளிதாகப் பெற உதவுகின்றது. முன்னேற்றத் திட்டங்கள் வெற்றியடைய பணக் கொள்கை வழி வகுக்குன்றது. வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் பணக் கொள்கை பின்வரும் முக்கிய நோக்கங்களைக் கொண்டதாக இருக்கின்றது.

(i) விலை நிலைப் பேறுக்கம் (Price Stabilization) ;

(ii) சேமிப்புக்களைத் திரட்டுதல் ;

(iii) பொருளாதார வளர்ச்சியை முன்னேற்றமடையச் செய்தல்.

மூலதனத்திரட்சிக்கு அதிக அளவு சேமிப்புக்கள் தேவைப்படுகின்றன. சேமிப்புக்கள் உற்பத்திப் பணிகளில் முதலீடாக்கப்பட வேண்டும். சேமிப்புக்களைப் பெருக்க பல நிதி நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும். நிதி நிறுவனங்களைப் பண நிறுவனங்கள் தொடங்கி அவற்றின் மீது கட்டுப்பாட்டையும் செலுத்தலாம். பொதுவாக, சேமிப்பு பெருக வருவாய் அதிகரிக்க வேண்டும். தலா வருவாய் உயர்வாக உள்ள வளர்ச்சியடைந்த நாடுகளில் சேமிப்பு வீதமும் உயர்வாக இருக்கின்றது. பின்தங்கிய நாடுகளில் தலா வருவாய் மிகவும் குறைவாக உள்ளது. இதற்கு முக்கியக் காரணம் குறைந்த அளவு உற்பத்தியும் அதிக அளவு மக்கட்தொகையுமாகும். இந்நாடுகளில் மக்கட் பெருக்கத்தைக் குறைத்து உற்பத்தியைப் பெருக்குவது அவசியமாகும். இதன் மூலமே இந்நாடுகள் தலா வருவாயை உயர்த்த முடியும். சேமிப்பும் இதனால் அதிகரித்து, முதலீட்டின் அளவும் உயர்வடையும். உற்பத்தியை உயர்த்த இந்நிலை வழிவகுக்கும்.

பணத்தின் அளிப்பை அதிகரிப்பதும், கடன் பெருக்கமும் முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றும்போது அவசியமாகின்றன. ஆனால் இவற்றின் மூலம் விலைகளில் அதிக ஏற்ற இறக்கங்கள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். விலை நிலைப்பேறுக்கத்தைப் பெறுவதை அரசு முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். 'தாவும் பணவீக்கம்' (Galloping Inflation) பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும். இந்நிலையில் விலைகளின் போக்கைக் கட்டுப்படுத்துவது அரசின் கடமையாகும்.

இவ்வகையில் அரசின் பணக்கொள்கை விலைநிலைப் பேருக்கத்தைப் பெறுவதாக இருக்க வேண்டும்.

## நிதிக் கொள்கை

விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும் நல்லதொரு கருவியாக அரசின் நிதிக் கொள்கை அமைந்திருக்கின்றது. நிதிக் கொள்கைகளின் மூலம் அரசு சேமிப்பாளராக அமைகின்றது; முதலீட்டாளராக மாறுகின்றது. நிதிக் கொள்கைகள் விலைகளைக் கட்டுப்படுத்த உதவுகின்றன. அரசு 'வருவாய் மறுபகிர்வு' (Income Redistribution) செய்யவும் நிதிக் கொள்கைகள் உதவி புரிகின்றன.

பொதுத்துறைத் திட்டங்களுக்குத் தேவையான நிதிவசதிகளைப் பெற அரசின் நிதிக் கொள்கை வழிவகுக்கின்றது. அதிக வருவாய் பெற அரசு புதிய வரிகளை விதிக்கலாம்; பழைய வரி வீதங்களை உயர்த்தலாம். உதாரணமாக, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்திய அரசு மொத்தச் செலவில் 73 சத வீதத்தை வரவு-செலவுத்திட்ட வசதிகளின் மூலமே பெற்றது.

நிதிக் கொள்கையினால் சில வகைப்பட்ட முதலீடுகளை ஊக்குவிக்கலாம். அவசியம் குறைந்த துறைகளில் முதலீடு செய்யப்படுவதைத் தடுக்கலாம். அரசின் விரிவிதிப்பு முறை இவ்வகையில் பெரிதும் உதவுகின்றது. அவசியப் பண்டங்களின் உற்பத்தியில் அதிக வரிகள் விதிக்கப்படுவதில்லை. உற்பத்தியாளர்கள் உற்பத்தியைப் பெருக்க இந்நிலை ஊக்கத்தை அளிக்கின்றது. ஆனால் அவசியம் குறைந்த பொருட்களின் மீது அதிக அளவில் வரிகள் விதிக்கப்படுகின்றன. இதனால் இப்பொருட்களின் விலைகள் அதிகரித்து நுகர்வு குறைக்கப்படுகின்றது. தேவையின் அளவு சுருங்குகின்றமையால் உற்பத்தியின் அளவும் குறைகின்றது. இதற்குச் சான்றாக ஆடம்பரப் பொருட்களின் மீது விதிக்கப்படுகின்ற 'ஆயத் தீர்வையைக்' (Excise Duty) கூறலாம். அரசின் வரிக் கொள்கை ஆடம்பரப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களின் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படாத வகையில் அமைய வேண்டும். நிதிக்கொள்கை அரசிற்குத் தேவையான நிதியைப் பெற்றுத் தரத்தக்கதாக இருக்கவேண்டும்; நுகர்வோருடைய நலனைக் காக்க வேண்டும்; உற்பத்தியாளர்களுக்கு உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தைக் கொடுப்பதாக இருத்தல் வேண்டும்.

நேரடிக் கட்டுப்பாடுகளை விதிப்பதின் மூலமும் உற்பத்தி வசதிகள் சிறப்பாகப் பயன்படுத்தப்படும். அரசின் இவ்வித

மான நடவடிக்கைகளால் 'ஊக வாணிபத்தைக்' (Speculation) கட்டுப்படுத்தலாம்; ஆடம்பரப் பொருட்களின் நுகர்வையும் குறைக்கலாம்.

குறைந்த சேமிப்பைக் கொண்டுள்ள வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் வரிவிதிப்பு கட்டாயச் சேமிப்பாக அமைகின்றது. முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்ற அரசு பொதுக் கடன்களை உள்நாட்டிலிருந்தும், வெளிநாடுகளிடமிருந்தும் பெறுகின்றது. மக்கள் தாங்களாகவே சேமிக்கும் பழக்கமும் இதனுல் ஏற்படுகின்றது. பின்தங்கிய நாடுகளில் போதுமான அளவு நிதியைப் பெற முடியாமையால் அரசு 'பற்றுக் குறை நிதியாக்கத்தையும்' பின்பற்றுகின்றது.

அரசு நிதிக் கொள்கையின் மூலமாக அதிக வருவாய் பெறுபவர்கள் மீது வளர்வீத வரிகளை விதிக்கின்றது. இதன் மூலம் கிடைக்கின்ற வரி வருவாய் வறியவர்களின் வாழ்க்கை நிலை திருந்த செலவிடப் படுகின்றது. நாட்டின் செல்வப்பங்கீட்டில் அமைந்திருக்கக் கூடிய ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்கவும் அரசின் வரிக் கொள்கை உதவுகின்றது. வருவாயில் அமைந்திருக்கக்கூடிய அதிக வேறுபாடுகளும் நிதிக் கொள்கையின் மூலம் நீக்கப் படுகின்றன.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள பல நிலைகளினின்றும் வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் அரசு எந்த அளவிற்குப் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கியப் பங்கேற்கின்றது என்பதை உணரலாம். சமதர்மத்தைப் பின்பற்றும் இந்தியா போன்ற நாடுகளில் அரசு பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றது.

# 10. மூலதனத் திரட்சிக்கு உள்நாட்டுச் சேமிப்பின் பங்கு

## (The Role of Domestic Savings For Capital Formation)

### 1. சேமிப்பின் முக்கியத்துவம் (Importance of Savings)

பொருளாதார முன்னேற்றத்தின் முக்கிய நோக்கம் முதலீட்டுச் சாதனங்களை அதிகரித்து வேளாண்மை, தொழில் போன்ற பல துறைகளிலும் உற்பத்தியை உயர்த்துவதாகும். மூலதனம் சாலைகள், இருப்புப்பாதைகள், மருத்துவ மனைகள், கல்விக் கூடங்கள் ஆகியவற்றைத் தோற்றுவிக்கவும் தேவையானது. சுருங்கக் கூறின், முன்னேற்றமானது சமுதாய, பொருளாதாரத்தின் அவசிய வசதிகளை ஏற்படுத்தித்தர முயலுகின்றது. மூலதனத்திரட்சி அதிகமாக இருந்தால்தான் இவற்றைப் பெற இயலும்.

சமுதாயத்தின் குறைந்த அளவு உற்பத்தியும், வருவாயும் நுகர்வுக்காகப் பயன்படுத்தப் படுகின்றது. மிகுதி வருவாயானது சேமிக்கப்பட்டு மூலதனச் சாதனங்களில் முதலீடு செய்யப்படுகின்றது. உயர்ந்தவீத சேமிப்பால்தான் விரைந்த வீத மூலதனத் திரட்சியைப் பெற முடியும். சேமிப்பானது உற்பத்தித் துறைகளில் செலுத்தப்பட வேண்டும். உள்நாட்டுச் சேமிப்பின் மூலமாக வளர்ந்து வரும் நாடுகளின் பணவீக்க நிலைகளில் உள்ள தீங்குகளைக் குறைக்கலாம். "பொருளாதார வளர்ச்சியில் உள்ள முக்கியச் சிக்கல் சேமிப்பு விகிதத்தை 5 சதவீதத்திலிருந்து 12 சதவீதமாக உயர்த்துவதாகும்," எனப் பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) குறிப்பிடுகின்றார். பொருளாதார முன்னேற்றத்திற்கான கதவைத் திறக்கும் திறவுகோலாக மூலதனத்திரட்சி உள்ளது. அம்மூலதனத் திரட்சி அதிக அளவில் உள்நாட்டுச் சேமிப்பு வீதத்தைப் பொருத்தே அமைகின்றது.

### 2. சேமிக்கும் வழிமுறைகள் (Sources of Savings)

வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் தாங்களே சேமிக்கும் அளவானது குறைவானதாகும். மக்களுடைய வருவாய் குறை

வாக இருப்பதும், நுகரும் விருப்பமானது (Propensity to Consume) அதிகமாக இருப்பதுமே சேமிப்புக் குறைவிற்குக் காரணமாகும். சர்வதேச அறிக்கையின்படி (United Nations Report) 90 சதவீத மக்கட் தொகை வளர்ச்சியடையாத நாடுகளில் வசிக்கின்றது. அந் நாடுகளில் சராசரித் தலா உற்பத்தி 1963–இல் 200 டாலர்கட்குக் குறைவாகவும் உள்ளது. அவற்றில் மூன்றில் இரு பகுதி நாடுகளில் சராசரித் தலா உற்பத்தி 100 டாலர்கட்கும் குறைவாகும்.

இந்தியா, தாய்லாந்து, இலங்கை போன்ற நாடுகளின் குறைந்த வருவாய் பெறும் இல்லங்களில் சேமிப்பே ஏற்படுவ தில்லை. இந்தியாவில் பம்பாயின் உழைப்பாளர் குடும்பங்களிலும் சேமிக்கப்படுவதில்லை. பிலிபைன்ஸிலும் இதே நிலையே திகழ் கின்றது. எனினும் மிக அதிக வருவாய் பெறும் வகுப்பினரும் உள்ளனர். நிலப்பிரபுக்கள், ஊக வணிகர்கள், வியாபாரிகள் போன்ற பிரிவினர் தங்கள் வருவாயின் பெரும்பகுதியை 'குறிப் பிடத்தக்க' நுகர்விற்குப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் தங்கள் சேமிப்பை உற்பத்திக்கு உதவாத துறைகளில் செலவழிக்கின்றனர். நவீன வசதிகள் கொண்ட வீடுகள் கட்டவும், வளர்ச்சியடைந்த நாட்டவரின் நாகரிக வாழ்வைப் பின்பற்றி ஆடம்பர வாழ்வு வாழவும் தங்கள் சேமிப்பின் பெரும்பகுதியைச் செலவு செய்கின் றனர். உயர்ந்த வருவாய் பெறும் இப்பிரிவு மக்கள் குறைந்த அளவிற்கு மட்டுமே தங்கள் சேமிப்பை முதலீட்டுத் திட்டங்களில் ஈடுபடுத்துகிறார்கள்.

சேமிப்புக்கள் ஊகவணிக நோக்கங்களுக்காகவும், தங்கம், நகைகள் போன்றவற்றை வாங்கவும், பண்டங்களையும் பண்டங் களையும் பதுக்கி வைக்கவும் அவர்களால் பயன்படுத்தப்படுகின்றன. சேமிப்பை ஆண்டொன்றிற்கு 30 முதல் 100 சதவீத வட்டியைத் தரும் கடன்களைத் தரவும் பயன்படுத்துகின்றனர்.

குறைந்த அளவிற்கு மட்டுமே செல்வர்கள் இருக்கின்றனர். மக்கட் தொகையில் பெரும்பகுதியினர் வேளாண்மையைச் சார்ந்த வர்களாகவே இருக்கின்றனர். எண்ணிலடங்கா விவசாயிகளை கொண்டு ஒரு வளர்ச்சியடையாத நாடு திகழ்கிறது. நகர்ப்புறங் களில் உள்ள தொழிலாளர்களின் வருவாயும், கிராமப்புறங்களில் உள்ள விவசாயிகளின் வருவாயும் ஒரே அளவில் இருந்தால் அதிகச் சேமிப்பைச் செய்பவர்கள் விவசாயிகளே ஆவர். "விவசாயிகட்குச் சிக்கனமாக இருக்கத் தெரியும்; ஏனெனில் அழிவின் விளிம்பிற்கு எவ்வளவு அருகாமையில் உள்ளோம் என்பதை அவர்கள் அறிவார்கள்.''

இவர்களைப் போலவே லேவாதேவிக்காரர்களும் அதிக அளவு சேமிக்கின்றனர். நுகர்வைவிட மிக அதிக வருவாயை அவர்கள் பெறுகின்றமையால் சேமிப்புவீதம் உயர்வாக உள்ளது.

சில வளர்ச்சியடையாத நாடுகளின் கிராமச்சேமிப்புகள் நகர்ப்புறங்களிலிருந்தும், பிற நாடுகளிலிருந்தும் கிடைக்கின்றன. கிராமங்களைச் சேர்ந்தவர்கள் நகர்புறங்களில் பணியாற்றிப் பணம் அனுப்புகின்றனர். அது போன்றே அயல் நாடு செல்பவர்களும் தங்களைச் சார்ந்திருப்பவர்கட்கு அங்கிருந்து பணம் அனுப்பு கின்றனர்.

ஊதியம் பெற்றுவாழும் நடுத்தர வகுப்பினர் குறைந்த அளவிற்கு மட்டுமே சேமிக்கின்றனர். ஏனெனில், அவர்கள் சேமிப்பை விடச் செலவழிப்பதிலேயே விருப்பு கொண்டுள்ளனர். குறைந்த வருவாயும் இந்நிலைக்குக் காரணமாகும். 'குறிப்பிடத் தக்க நுகர்விலும்' (Conspicuous Consumption) தங்கள் சேமிப்பைச் செலவு செய்கின்றனர். தங்கள் குழந்தைகளுக்குக் கல்வியளிப் பதிலும், வீடு கட்டுவதிலும், பிற ஆடம்பரப் பொருட்கள் வாங்கு வதிலும் தங்கள் வருவாயின் பெரும் பகுதியை இழக்கின்றனர். சிலர் தங்களின் தற்போதைய நுகர்வைப் பிற்காலத்திற்குத் தள்ளி வைப்பதாலும், அச்சேமிப்புகள் உற்பத்திக்கு உதவும் முதலீடு களாக ஆக்கப்படமாட்டா.

தொழில் நிறுவனங்களின் அளிக்கப்பட்ட இலாபத்தி லிருந்தும், அளிக்கப்படாத இலாபத்திலிருந்தும் சேமிப்பு ஏற்படு கின்றது. இலாபத்தைப் பெறும் பிரிவினர் அதிகம் சேமித்து ஆக்கத்துறைகளில் முதலீடு செய்கின்றனர். வேளாண்மை, தொழில் துறைகளில் மூலதனத்திரட்சிக்கு இவர்கள் உதவு கின்றனர்.

உள்நாட்டில் மூலதனத்தைத் திரட்டுவதில் இருவிதச் சிக்கல்கள் உள்ளன.

(1) முதலாவதாக, வியாபாரச் சேமிப்புக்களை அதிகரித்து அவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டும்.

(2) இரண்டாவதாக, தனிப்பட்டவர்களின் சேமிப்புக்களை அதிக அளவு ஊக்குவித்து அச்சேமிப்புக்களை உற்பத்தித் துறை களில் முதலீடாக்க வேண்டும்.

சர்வதேச அறிக்கையின்படி 1954 முதல் 1964 வரை சேமிப்பு வீதம் அதிக அளவிற்குத் தனியார் துறைகளிடமிருந்தே கிடைத்தது. எனினும் வளர்ச்சியடையாத நாடுகளில் தனியார்

சேமிப்பு போதுமானதாக இல்லை. தேசிய சேமிப்புவீதம் உயர வேண்டுமென்றால் சேமிப்பு வசதிகள் யாவும் தனியார் துறையிட மிருந்தே வரவேண்டும்.

மூலதனத்திரட்சியில் அரசின் பங்கும் மிக முக்கியமானதாகும். தேசிய வருவாயில் அரசின் சேமிப்பின் பங்கு அதிகமாக இருத்தல் வேண்டும். பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) குறிப்பிடுவதாவது, "தேசிய வருவாய் குறைவாக உள்ள வளர்ச்சியடையாத நாடு களில் அரசின் பங்கு தேசிய வருவாயில் சுமார் 5 சதவீதமாகும்; வளர்ச்சியடைந்த நாடுகளில் இது சுமார் 10 சதவீதமாக இருக்கும்."

அரசின் சேமிக்கும் திறன் வளர்ச்சியடையாத நாடுகளில் அவற்றின் மக்களிடம் இருப்பதைப் போலவே குறைவாக இருக்கும். அரசு குறைந்த அளவே வருவாயைப் பெறும்போது அதனுடைய நிர்வாகச் செலவுகள் அதிகமாக இருக்கும்.

3. சேமிப்பை அதிகரிக்கும் முறைகள் (Measures to Augment Savings)

சேமிப்பை அதிகரிப்பதில் இருவித சிக்கல்கள் உள்ளன. அவை, முதலாவதாக, வருவாயைக் குறைவாகப் பெறும் மக்களின் சேமிக்கும் விருப்பத்தை எவ்வாறு அதிகரிப்பது என்பதும்,

இரண்டாவதாக, வளர்ச்சியடையாத நாட்டில் சேமிப்பை எவ்வாறு மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்துவது என்பது மாகும்.

'சிறு சேமிப்பு இயக்கங்களின்' (Small Savings Drives) மூலம் முதல் சிக்கலை ஓரளவிற்குத் தீர்க்க முடியும். பழக்கத்தின் மூலம் பெறத் தக்கச் சேமிப்பைப் பிரச்சாரத்தின் மூலம் அறிவுறுத்திப் பெறலாம். சேமிப்பின்மூலம் சேமிப்பாளர்களும், அவர்களின் குடும்பத்தினரும் நன்மையைப் பெற முடியுமென்று அறிவுறுத்தப் படவேண்டும். சேமிப்புக்கள் அவர்களின் குழந்தை கட்குக் கல்வியளிக்கவும், திருமணம் செய்து வைக்கவும், வீடு கட்டவும் உதவும்; அவசர காலத்திலும், முதிய காலத்திலும், உடல்நலக் குறைவு உள்ளபோதும் கூட சேமிப்புகள் நன்மைகளைத் தரும் என்பது உணர்த்தப்பட வேண்டும். ஆனால் செலவிடப் படாத சேமிப்பு கையில் வைத்திருக்கக் கூடிய பணமாகவும், தங்க மாகவும், நகையாகவும் முடக்கப்படுகின்றது.

சிறு சேமிப்பை மக்களிடம் பெருக்க காப்புறுதி நிறுவனங்கள், பென்ஷன் திட்டங்கள், பிராவிடென்ட் பண்டுத் திட்டங்கள் போன்றவை அதிக அளவில் தொடங்கப்பட வேண்டும். கிராமப்

புறங்களில் சிறு சேமிப்பு வங்கிகள், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவற்றின் மூலமும் சேமிப்பைப் பெருக்கலாம். அஞ்சலகங்கள் சிறு சேமிப்பை ஏற்படுத்துவதில் உதவுகின்றன. சேமிப்பிற்கு அதிக வட்டிவீதம் கிடைக்கப் பெற்ருல் சேமிப்பின் அளவு உயரும். அரசின் பத்திரங்களை வாங்குவதில் வரிவிலக்கு அளித்தல், சேமிப்புக்களில் பரிசு முறைகளை ஏற்படுத்துதல் முதலியவற்றின் மூலமாகவும் சேமிப்புக்களுக்கு ஊக்கமளிக்கலாம்.

குறிப்பிட்ட கிராம முன்னேற்றத் திட்டங்களோடு அரசின் கடன் பத்திரங்களை தொடர்பு படுத்தலாம். கிராமச் சேமிப்பைப் பெற்று அத்தொகை பெறப்பட்ட இடத்திலேயே முன்னேற்றப் பணிகட்குச் செலவிடப்பட வேண்டும். "குறிப்பிட்ட வளர்ச்சித் திட்டங்களுக்காக கிராமக் கடன் பத்திரங்கள் (Rural Debentures) வெளியிடப்பட வேண்டும். கிராமவாசிக்கு நேரடி பயனைத் தருவதாக அத்திட்டங்கள் இருத்தல் அவசியம். தன்னுடைய சேமிப்பு 'கடன் பத்திரங்களால்' தன் மாவட்டத்திற்கோ, மாநிலத்திற்கோ நன்மையைத் தருகின்றது என்ற உணர்வை அவருக்கு ஏற்படுத்த வேண்டும்," என ரிசர்வ் வங்கி நியமித்த 'கிராமக் கடன் புள்ளிவிவரச் சேகரிப்புக் குழு' (The Rural Credit Survey Committee) தன் அறிக்கையில் கூறியது.

கிராமச் சேமிப்பையும் கிராம முன்னேற்றத்திட்டங்களையும் இணைப்பதே வளர்ச்சிக்கு வழிகாட்டும் திட்டமாகும். இவ்வாறு கிராமச் சேமிப்புக்களைத் திரட்டி விரைவான முன்னேற்றத்தைப் பெறலாம்.

சேமிப்பைப் பெற உதவும் மற்ருெரு முறை பதுங்கிக் கிடக்கும் தங்கத்தைத் திரட்டுவதாகும். இம்முறைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப் படாவிட்டாலும், மூலதனத்திரட்சிக்கு உதவும் நிலையைக் கொண்டது இதுவாகும். அரசு மக்களிடமிருந்து தங்கத்தைப் பெற்று தங்கப் பத்திரங்களை அளிக்க வேண்டும். அதற்காக அரசு அளிக்க வேண்டிய வட்டி வீதமும் உயர்வாக இருக்க வேண்டும். தாங்களாகவே மக்கள் தங்கத்தையும், நகைகளையும் தங்கப் பத்திரங்களில் முதலீடு செய்யத் தயங்குவர். குறிப்பிட்ட அளவு தங்கத்திற்கு மேல் பதுக்கி வைப்பது சட்டத்தின் மூலம் தடை செய்யப்பட வேண்டும். தனியாரின் தங்க வாணிபம் சீர்படுத்தப் படவேண்டும். சுத்தமான தங்கத்தை நகைகள் செய்யப்பயன் படுத்துவதையும் தடை செய்தல் நல்லது. இம்முறைகளைத்தவிர தங்கம் கடத்தப்படுவதும் தடுக்கப் படுதல் அவசியமாகும். பன்னாட்டு விலையில் உள் நாட்டில் தங்கம் விற்கப் பட்டால்தான் இம்முறைகள் வெற்றி பெறும். இம்முறை நம் நாட்டில் சிலகாலம் தீவிரமாகச் செயல் படுத்தப் பட்டாலும் வெற்றியைப் பெறவில்லை.

நகைகளை 22 காரட் சுத்தத் தங்கத்தில் செய்வதற்குத் தடை விதிக்கப்பட்டது; 14 காரட் தங்கத்தில் நகைகள் செய்ய மட்டுமே அனுமதி இருந்தது. இது தவிர மக்களிடமிருந்து தங்க யிருப்புக்களைப் பெற தங்கப் பத்திரங்களும் வெளியிடப்பட்டன. இம்முறையிலும் குறைந்த அளவு வெற்றியே கிட்டியது. "சேமிப் பிற்கும் தேசிய வருவாய்க்கும் உள்ள வீதம் இலாபத்திற்கும் தேசிய வருவாய்க்கும் உள்ள வீதத்திஞல் செயல் படுத்தப் படுகின்றதென" பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) [1] வாதிடு கின்ருர்.

வருவாய்ப் பங்கீட்டில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும் போது மக்கள் தாங்களே சேமிக்கும் அளவு தேசிய வருவாயில் அதிக மிருக்கும். இலாபங்கள் தேசிய வருவாயில் அதிக அளவாக இருந்தால்தான் மக்கள் தாங்களே சேமிக்கும் சேமிப்பின் அளவும் உயர்வடையும். வருவாய்ப் பகிர்வில் ஏற்றத் தாழ்வுகள் இருந்தால்தான் உயர்ந்த வருவாய் பெறும் நிலப்பிரபுக்கள், வணிகர்கள் போன்ருேர் குறைந்த அளவாவது தாங்களே சேமித்து முதலீட்டிற்கு உதவுவார்கள். இலாபம், வட்டி, வாரவருவாய் போன்றவை தேசிய வருவாயில் குறைந்த பங்கையே கொண்டிருந் தாலும், வளர்ச்சியடையாத ஒரு நாட்டில் சேமிப்பை 5 சதவீதத் திலிருந்து 12 சதவீதத்திற்கு இலாப வீதங்களை உயர்த்துவதன் மூலம் பெற முடியும் என லூயிஸ் (Lewis) நம்புகின்ருர்.

தேசிய வருவாயில் இலாபத்தின் பங்கை மூலதனத் துறையை விரிவாக்குவதன் மூலம் உயர்த்தலாம்.

முதலாவதாக, சில சட்ட பூர்வமான உறுதிகள் தனி முத லீட்டாளர்களுக்கு அவர்களின் ஊக்கத்தைக் காக்க அளிக்கப்பட வேண்டும்.

இரண்டாவதாக, தனியார் துறைகள் கடன் பெறுவதில் உள்ள நுணுக்கங்களில் மாற்றங்களை ஏற்படுத்தி மூலதன இழப்பிஞல் ஏற்படும் இடரைக் குறைக்க வேண்டும். இதற்கான தொழில் வங்கிகள், அரசின் நிதி நிறுவனங்கள் தொடங்கப்பட வேண்டும்.

மூன்ருவதாக, முதலீட்டு வாய்ப்புக்கள் இலாபகரமானதாக இருந்தால் மூலதனத்துறை (Capitalist Sector) விரைந்து வளர்ச்சியடையும். முன்னேற்றத்தின் ஆரம்ப நிலைகளில் உற்பத்தி உயர்ந்தால் இலாப அளவும் உயரும். உழைப்பிற்கான ஊதியக்

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, pp, 227-229,

குறைவாலும், தொழில் நுணுக்க முன்னேற்றத்தாலும், விரிவடைந்த சந்தையாலும், கண்டு பிடிப்புக்களாலும், போக்குவரத்து செய்தித் தொடர்பு முன்னேற்றங்களாலும் உற்பத்தியை உயர்விக்கலாம்.

உற்பத்திக்கான முதலீடுகள் பெருக்கமடைந்து இலாபம் அதிகமாகக் கிடைத்தால் மூலதனத்திரட்சியும் உயர்வாக இருக்கும். குறைந்த நிலையிலுள்ள விலையுயர்வுகளும் முன்னேற்றத்திற்கு உதவும். குறைந்த அளவு பணவீக்க நிலை இலாபத்தையும், பிற வருவாய்களையும் உயர்த்தும். எனவே இலாபம் உயரும் போது முதலீடுகள் உயர்ந்து மூலதனத் திரட்சியும் அதிக அளவில் ஏற்படும். அமைப்பு, தொழில் நுணுக்க மாற்றங்களாலும், குறைந்த அளவு பணவீக்க நிலையின்றியே இலாபத்தை அதிகரிக்கலாம். பேராசிரியர் லூயிஸ் கூறுவது போல, "ஏழை நாடுகள் குறைந்த அளவு சேமிக்கின்றமைக்கு அவற்றின் ஏழ்மை நிலை காரணமல்ல; அதற்குக் காரணம் மூலதனத் துறைகள் சிறியவைகளாக இருக்கின்றமையேயாகும்." அவை இலாபத்தைப் பெருக்குவதன் மூலம் மூலதனத் திரட்சியைப் பெற முடியும். தனியாரின் இலாபத் தொகைகளை அரசின் கொடைகள் (Subsidies), வரித்தள்ளுபடிகள், போதுமான கச்சாப் பொருட்களை அளித்தல், மூலதனச் சாதனங்களைக் கொடுத்தல், அரசு உற்பத்திப் பொருட்களை வாங்குதல், இறக்குமதியைத் தடை செய்தல், தொழிற் சங்கங்களைக் கட்டுப்படுத்துதல், ஊதியங்களைக் கட்டுப் படுத்துதல் போன்றவைகளின் மூலம் அதிகம் பெறச் செய்யலாம்.

ஆனால் பேராசிரியர் டி. ஆர். கட்கில் (prof. D. R. Gadgil) கருதுவது என்னவென்றால், "இலாபத்தை உயர்த்தி சேமிப்பைப் பெற்று மூலதனத் திரட்சியை அடைவது சமுதாயத்திற்கு நன்மை தரும் முதலீடுகளைத் தராது. இலாபத்தை நோக்காகக் கொண்ட முதலீட்டாளர்கள் மக்களின் நலத்திற்கு உதவும் முதலீடுகளைச் செய்வார்கள் எனக் கூறமுடியாது."

வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் தாங்களாகவே சேமிக்கும் விருப்புக் கொண்டவர்கள் இல்லையாதலால், அரசு தன் வரிக்கொள்கை, பணக்கொள்கைகள் மூலம் மூலதனத்தைத் திரட்ட வேண்டும். அரசு வரிகளை உயர்த்துவதன் மூலமாகவும், நிர்வாகச் செலவுகளைக் குறைத்தலின் மூலமாகவும், ஏற்றுமதித் துறையை விரிவாக்கம் செய்வதின் மூலமாகவும், பொதுக் கடன்கள், கட்டாயச் சேமிப்புக்களைப் பெறுவதின் மூலமாகவும் தன் வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம். தவிர, பொதுத் துறைகளைச் சிறப்பாக நடத்தி அதிக இலாபங்கள் பெறுவதின் மூலமும் அரசு தன்னுடைய சேமிப்பை அதிகரித்துக் கொள்ளலாம்.

உள்நாட்டு மூலதனத்திரட்சி உயர்வடைய தனியார் சேமிப்பு அதிகரிக்க வேண்டும்; தொழில் வியாபாரத் துறைகளின் சேமிப்பு உயர வேண்டும்; அரசின் வருவாய் அதிகரித்து சேமிப்பில் மேம்பாடு ஏற்பட வேண்டும்.

நம் நாட்டில் வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்களில் பலர் சேமிப்பதில்லை. நிலப்பிரபுக்கள் சேமிக்கும் திறனைக் கொண்டிருந் தாலும், அச்சேமிப்பைச் சிறப்பாக ஆக்கப்பணிகளுக்குப் பயன் படுத்துவதில்லை. அதிக வட்டி வீதத்திற்குக் கடன் அளிக்கவும், வீடு கட்டவும், ஆடம்பரப் பொருட்கள் வாங்கவும் தங்கள் சேமிப்பை அவர்கள் பயன் படுத்துகின்றனர். நகர்ப்புறத் தொழி லாளர்கள் சேமிக்கும் திறனை விவசாயிகளைக் காட்டிலும் சற்று அதிகமாகக் கொண்டிருந்தாலும், அவர்களிடம் சேமிக்கும் விருப்ப மில்லை. ஊதியம் பெற்று வாழும் நடுத்தரக் குடும்பத்தினரும் சேமிக்கும் திறனைக் குறைவாகக் கொண்டிருப்பதாலும், நுகரும் விருப்பத்தை அதிகம் கொண்டிருப்பதாலும் சேமிப்பைக் குறை வாகவே செய்கின்றனர். தொழில் துறையில் ஈடுபட்டுள்ள தொழில் முயல்வோர் அதிக அளவு சேமித்து, அச்சேமிப்பைத் திரும்பவும் ஆக்க முதலீடுகளாக்குகின்றனர். மாநில அரசுகளும், மத்திய அரசும் வருவாய்க் குறைவால் பற்றுக்குறை நிதியாக்கத் தின் மூலமாகத் தங்கள் முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றி வருகின்றன.

# 11. சேமிப்புத் திறனில் 'மறைந்துள்ள வேலையின்மை'

## (Disguised Unemployment As a Saving Potential)

மக்கட்தொகை அதிகமுள்ள வளர்ச்சியடையாத நாடுகளில் கிராமப்புறங்களின் 'மறைந்துள்ள வேலையின்மை' மூலதனத் திரட்சிக்கு உதவும் என மாரிஸ் டாப் (Maurice Dobb),[1] ராக்னர் நர்க்ஸ் (Ragnar Nurkse)[2] இருவரும் தங்கள் ஆய்வுக் கட்டுரைகளில் விளக்கியிருக்கின்றனர். வளர்ச்சியடையாத நாடுகளின் மறைந்துள்ள வேலையின்மை 'மறைந்துள்ள சேமிக்கும் திறனைக்' (Disguised Saving Potential) கொண்டுள்ளதென நர்க்ஸ் குறிப்பிடுகிறார். வளர்ச்சியடையாத நாடுகள் மறைந்துள்ள வேலையின்மையால் பல இடர்களைக் கொண்டுள்ளன.

வேளாண்மையில் அமைந்துள்ள உற்பத்தி முறைகளை அதே நிலையில் கொண்டு, நிலத்தின் பெரும்பகுதி உபரி உழைப்பை நீக்கி விட்டாலும் கூட அதே அளவு உற்பத்தியின் அளவைப் பெற முடியும். எச்ச உழைப்பாளர்களைக் கால்வாய்கள், நீர்ப்பாசனம், சாலைகள், இருப்புப் பாதைகள், வீடுகள், தொழிற்சாலைகள், கல்வி, ஆரோக்கியம், சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், பயிற்சித் திட்டங்கள் போன்ற மூலதனத் துறைகளை முன்னேற்றப் பயன் படுத்தலாம். இவ்வழியில் 'கிராமப்புற மறைந்துள்ள வேலையின்மை' (Rural under employment) மூலதனத்திரட்சிக்கு உதவும்.

சேமிக்கும் திறனாக மறைந்துள்ள வேலையின்மையைத் திரட்டுவதில் உள்ள சிக்கலை நர்க்ஸ் இரு பிரிவுகளாகப் பிரிக்கின்றார் : (1) முதலாவதாக, மூலதனத்திட்டங்கட்கு மாற்றப்பட்ட உபரி மக்களுக்கு உணவளித்தல் ;

[1] Some Aspects of Econmic Development, Three Lectures delivered at the Delhi School of Economics in 1951.

[2] Ragnar Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, Chap. II

(2) இரண்டாவதாக, புது உழைப்பாளர்கட்குப் பணியாற்றக் கருவிகளை அளித்தல்.

(i) உபரி மக்களுக்கு உணவளிக்கும் சிக்கல்
(The Problem of Feeding the Surplus Population)

இச்சிக்கலை ஓரளவிற்குச் சேமிப்பின் மூலமாகவும், வரிவிதிப்பின் மூலமாகவும், வெளி மூலதனத்தை இறக்குமதி செய்வதின் மூலமாகவும் தீர்க்கலாம். தற்பொழுது 'உற்பத்திக்கு உதவாத (Unproductive) உபரி உழைப்பாளர்களை 'உற்பத்திக்கு உதவும் (Productive) உழைப்பாளர்கள் காத்து வருகின்றனர். உற்பத்திக்கு உதவும் உழைப்பாளர்கள் 'உண்மையான சேமிப்பைச்' (Virtual Saving) செய்கின்றனர். ஏனெனில், அவர்களின் நுகர்வைவிட உற்பத்தி உயர்வாக உள்ளது. ஆனால், இச்சேமிப்பு 'உற்பத்திக்கு உதவாத' உழைப்பாளர்களுக்கு உணவளிக்கப் பயன்படுத்தப் படுவதால் வீணடிக்கப்படுகிறது. இவ்வித உற்பத்திக்கு உதவாத உழைப்பாளர்களின் உற்பத்தியின் பங்கு பூஜ்யம் என்ற நிலையில் இருக்கும், அல்லது மிக மிகக்குறைவாக இருக்கும்.

நிலத்தில் உழைத்திடும் ஆக்க விவசாயிகள் மூலதனத்திட்டங்களில் உழைப்பைத் தந்திடும் உழைப்பாளர்களுக்குத் தொடர்ந்து உணவளித்தால் சேமிப்பு ஏற்படும். உபரி உழைப்பானது நிலத்தினின்றும் நீக்கப்பட்டு மூலதனத் திட்டங்களில் பயன்படுத்தப் பட்டால் விவசாயத்தைத் தரமுள்ள முறைகளைப் பின்பற்றி உற்பத்தியைப் பெருக்கலாம். நிலத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் உற்பத்தித் திறனும் உயரும். அறிவியல் சாகுபடி முறைகள், பேரளவு உற்பத்தி, உற்பத்திச் சிக்கனங்கள் முதலியவற்றைப் பின்பற்றி ஒரு ஏக்கருக்கான உற்பத்தியையும் (Yield per Acre), தனி ஒருவருக்கான உற்பத்தியின் அளவையும் (Yield per Person) உயர்வாகப் பெறலாம். வேளாண்மைத் துறையில் உள்ளவர்களின் தலா வருவாய் அதிகரிப்பதால் சேமிக்கும் திறனை அவர்கள் பெறுகிறார்கள். நிலத்தினின்றும் வெளியேற்றப்பட்டு மூலதனத் திட்டங்களில் பணியாற்றுபவர்களின் ஊதியம் பெறுகின்ற நிலையால் அவர்களாலும் சேமிக்க இயலுகின்றது. இவற்றால் தொழில் உற்பத்தி பெருகுவதோடு, வேளாண்மை உற்பத்தியும் அதிகரிக்கின்றது. உற்பத்தி உயர்வால் வருவாய் உயர்ந்து சேமிக்கும் திறனும் மேம்பாடடைகின்றது.

உபரி உழைப்பை உழுதல் தொழிலினின்றும் நீக்கி அவர்கட்குத் தேவையான உணவை வேளாண்மைத் துறையினின்றும் திரட்டி அளிக்க வேண்டும். அவ்வாறு செய்யாவிடில் சேமிப்பு

வீதத்தில் உயர்வைக் காண முடியாது. இம்முறையில் சிலவித இடர்ப்பாடுகளும் ஏற்படுகின்றன.

(1) புதிதாக வேலையில் அமர்த்தப்பட்டவர்கள் முன்பு வேளாண்மையில் அமைந்திருந்தபோது செய்த உணவின் நுகர்வை விட அதிக உணவின் நுகர்வைச் செய்வார்கள். அவர்களின் வருவாய் உயர்கின்ற காரணத்தினால் அதிக அளவு நுகர்வைச் செய்ய அவர்களால் முடிகின்றது.

(2) நிலத்தில் மிகும் விவசாயிகளும் முன்பிருந்ததை விட அதிக நுகர்வை மேற் கொள்கின்றனர்.

(3) வேளாண்மைப் பண்ணைகளிலிருந்து மூலதனதிட்டங்கள் அமைந்துள்ள இடங்களுக்கு உணவை எடுத்துச் செல்லப் போக்குவரத்துச் செலவுகள் ஏற்படுகின்றன.

பிற துறைகளின் சேமிப்புக்களின் மூலம் இக் குறைபாடுகளைத் தவிர்க்கலாமென நர்க்ஸ் கூறுகின்றார். உணவுப்பற்றுக்குறை இருந்தால், வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருட்களை இறக்குமதி செய்யலாம். நடவடிக்கைகள் சிறப்பாகத் தீவிரமாக இருத்தல் அவசியமாகும். விவசாயிகளின் நுகர்வுப் பொருட்களின் மீது 'மறைமுக வரிகள்' (Indirect Taxes) விதிக்கப்படலாம். வேளாண்மைப் பொருட்களாக வரிகள் நில உடைமையாளர்களிடமிருந்து பெறப்பட வேண்டும். அவர்கள் பெறும் வாரத்தின் மீதான வரியும் விளை பொருளாகப் பெறப்படலாம். இதன் மூலம் உணவு உபரியைத் திரட்டமுடியும். அரசு தன்னுடைய நடவடிக்கைகளின் மூலம் சமுதாயத்தில் கூட்டுச் சேமிப்பை ஏற்படுத்தலாம். மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ள சேமிப்புத்திறனைத் திரட்ட இவ்வழி முறைகளைப் பின்பற்றலாம்.

(ii) கருவிகளுக்கான நிதியைப் பெறுவதில் சிக்கல்
(The Problem of Financing of Tools)

புது முதலீடுகளின் உழைப்பாளர்கட்குத் தேவையான உற்பத்திக் கருவிகளைப் பெற நிதி அவசியமாகிறது. பிற நாடுகளிடமிருந்து இக் கருவிகளை இறக்குமதி செய்து கொண்டாலும், இவற்றிற்கானச் சேமிப்பு உள் நாட்டில் செய்யப்பட வேண்டும். சில மக்கட்தொகை அடர்த்தியுள்ள வேளாண்மைப் பொருளாதாரங்களில் உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப் படாதது போலவே மூலதனமும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை. பல இடங்களில் சிதறிக் கிடக்கும் சிறிய நிலத் துண்டுகளில் சாகுபடி செய்ய பல வகைப் பட்டக் கருவிகளும், திறனற்ற கால் நடைகளும் பயன்படுத்தப் படுகின்றன. இச் சிறிய நிலத்துண்டுகள்

இணைக்கப்பட்டால் முன்னேற்றமடைந்த சிறு கருவிகளைக் கொண்டு சிறப்பான சாகுபடியைச் செய்யலாம். வேளாண்மை தவிர பிற துறைகளில் புதிதாக ஈடுபட்டுள்ளவர்கள் தங்களுக்குத் தேவையான சிறு கருவிகளைத் தாங்களே உற்பத்தி செய்து கொள்ளலாம். நாட்டின் ஏற்றுமதிப் பொருட்களுக்குப் பதிலாக இவ்விதக் கருவிகள் வெளிநாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்யப்படலாம். உள் நாட்டு உற்பத்திக்குச் சாதகமான கருவிகளை மட்டுமே இறக்குமதி செய்ய வேண்டும். அவை எளிதாகப் பயன் படுத்தத்தக்க நிலையில் இருக்கவேண்டும். முன்னேற்றத்தின் முதல் சில நிலைகளிலிருக்கும் நாடுகளில் சிறு கருவிகளையும், சாதனங்களையும் பயன்படுத்துவதே பொருத்தமுடையதாகும் எனப் பேராசிரியர் நர்க்ஸ்(Prof. Nurkse) குறிப்பிடுகிறார்.

மாரிஸ் டாபின் (Marice Doble) கருத்தைச் சுருங்கக் கூறினல், "கிராமத்தினின்றும் 'கைகள்' நிர்மாணப்பணிகள் நடைபெறும் இடங்கட்குச் செல்லும்; அக்கைகளோடு வாய்களும் செல்கின்றன. குறைந்த வாய்களே கிராமங்களில் உணவைப் பெற மிகுந்திருப்பதால் அவற்றின் நுகர்வில் குறைவில்லாமலேயே நிர்மாணப் பணிகளில் ஈடுபட்டுள்ளவர்கட்குத் தேவையான உணவை எளிதில் திரட்டலாம்."

பொருளாதார முன்னேற்றத்தை 'மறைந்துள்ள வேலையின்மையில்' அமைந்துள்ள சேமிப்புத்திறனைப் பயன்படுத்திப் பெறலாம். மாரிஸ் டாப் (Maurice Doble), நர்க்ஸ் (Nurkse) இருவரும் எச்ச மக்கட்தொகை கொண்ட வளர்ச்சியடையாத நாடுகளில் மூலதனத்திரட்சியை இம் முறையின் மூலம் பெற முடியுமென்று உறுதியாக நம்புகின்றனர்.

### இக் கருத்தின் வரையறைகள் (Limitations of this Concept)

இக்கருத்தைப்பற்றி பொருளியலாளர்கட்கிடையே வேறுபாடான எண்ணங்கள் உள்ளன. வளர்ச்சியடையாதக் குடியரசுப் பொருளாதாரங்களுக்கு எந்த அளவு இக் கருத்து பயன்படுத்தத் தக்கது என்பதை அவர்கள் வினவுகின்றனர். மறைந்துள்ள வேலையின்மையின் சேமிக்கும் சக்தியைப் பெறுவதில் சில சிக்கல்கள் எழுகின்றன.

(1) புதிதாக மூதலீட்டுத் துறைகளில் ஈடுபடும் உழைப்பாளர்களின் 'நுகரும் விருப்பம்' (Propensity to Consume), வேளாண்மைச் சாகுபடிகளில் ஈடுபடும் விவசாயிகளின் நுகரும் விருப்பம் இரண்டும் அதே அளவிலேயே அமைந்திருக்குமென நர்க்ஸ் கருதுகின்றார். அதற்குப் பேராசிரியார் குரிஹாரா (Prof.

Kurihara) அளிக்கும் மற்றொரு விளக்கம் என்னவென்றால், 'மறைந்துள்ள வேலையின்மையில்' இருந்த உழைப்பாளர்களை மூலதனத் துறைகளில் மாற்றம் செய்தால் மொத்தப் பொருளதாரத்தின் நுகரும் விருப்பமும் அதிகரிக்கும் என்பதாகும். நுகர்வுப் பொருட்களை (Consumer Goods) உற்பத்தி செய்யும் தொழில்கள் தொடங்கப் படுவதால், மூலதனப் பொருட்களின் (Capital Goods) உற்பத்தி பாதிக்கப் படுகின்றது.

(2) உபரி உணவுப் பொருட்களைத் திரட்டி பங்கீடு செய்வதில் உள்ள இடர்ப்பாடுகளையும் நர்க்ஸ் கருதத் தவறி விட்டார். புதிய மூலதனத்திட்ட உழைப்பாளர்களின் உணவு, நிலங்களில் சாகுபடி செய்யும் விவசாயிகளிடமிருந்து திரட்டப்பட வேண்டுமென அவர் கூறுகின்றார். எவ்வாறு இவ்வுணவுப் பொருட்கள் திரட்டப்பட்டு அளிக்கப்படுவது என்பதுதான் சிக்கலைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு நில உடைமையாளரும் எந்த அளவிற்கு விளைபொருட்களை அளிக்கவேண்டும், அவர் தர மறுத்தால் எவ்வகை நடவடிக்கை எடுப்பது போன்ற இடர்கள் அங்குள்ளன.

(3) உபரி உழைப்பை நீக்குவதன்மூலம் வேளாண்மைத் துறையின் 'விற்பனைக்கான உபரியின்' (Marketable Surplus) அளவை அதிகரிக்க முடியுமென்பதும் ஐயத்திற்குரியதேயாகும். இந்நிலையில் பேராசிரியர் கால்டரின் (Prof. Kaldor) கருத்து என்னவென்றால், வளர்ச்சியடையாத நாடுகளில் விவசாயிகள் இலாப நோக்கு அதிகமின்றித் தன்னிறைவிற்காகவே உற்பத்தியை மேற்கொள்கின்றனர். இதைத் தவிர, வேளாண்மைத் துறையில் இருப்பவர்களின் எண்ணிக்கைக் குறைவால் தொழிற் பொருட்களுக்காக தேவையும் குறையும். உபரி உழைப்பாளர்களின் குறைவால் 'விற்பனைக்கான உபரியும்' குறையும்.[1]

(4) மறைந்துள்ள வேலையின்மையிலுள்ளவர்களைத் திரட்டி புதிய மூலதனத்திட்டங்களுக்கு அனுப்புவதும் கடினமாகும். அவர்கள் தங்கள் குடும்பங்களோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளனர். தங்கள் உறவினர்களைப் பிரிந்து புதிய தொழில்களுக்குச் செல்ல அவர்கள் துணிவதில்லை. இந்தியாவில் வேளாண்மைத் துறையினின்றும் சென்று சிலர் படைகளில் சேர்ந்துள்ளனர்

(5) புதிய தொழில்களில் ஊதியமளிக்கவேண்டிய சிக்கல்கள், மூலதனத்திரட்சியால் தொழிலாளர்கள் தாங்களே நிதியை முதலீடாக்குகின்ற நிலை ஏற்பட்டு தோன்றமாட்டா என நர்க்ஸ் கூறு

[1] N Kaldor, Essays on Economic Stabilty and Growth.

கின்றார். ஆனால் உண்மையில் ஊதியமளிக்கப்பட்டால்தான் உழைப்பாளர்கள் புதிய தொழில்களை நாடிச் செல்வர். ஊதியம் அளிக்காமல் உழைப்பைப் பெறுவது கடினமானதாகும். "உழைப்பைக் கட்டாயப் படுத்தி பெறுகின்ற நாடுகளில் உழைப்பை ஊதியமின்றிப் பெறுவது முக்கியமானதாக இருக்கலாம்; ஆனால் இதைப் பல நாடுகளில் குறைந்த அளவே செயல்படுத்தலாம்" எனப் பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) குறிப்பிடுகின்றார்.

(6) இத்தீவிர நடவடிக்கைகளை சர்வாதிகார நாடுகளிலும், பொதுவுடைமை நாடுகளிலும் மேற்கொள்ள வாய்ப்புக்கள் உள்ளன; ஆனால், வளர்ச்சியடையாத குடியரசு நாடுகளில் இவற்றைச் செயல்படுத்துவது கடினமானதாகும். இம்முறை சீன நாட்டில் பெரும் வெற்றியைத் தந்துள்ளது. அங்கு மக்கள் மூலதனத் திட்டங்களில் உழைப்பைத்தரக் கட்டாயப் படுத்தப்பட்டு, அவர்களின் பராமரிப்பு (Subsistence) அளவிலேயே அவசியப் பொருட்கள் அவர்களுக்கு அளிக்கப்படுகின்றன. பேராசிரியர் நர்க்ஸ் இதை ஏற்றுக் கொள்கிறார். உள் நாட்டு வசதிகளைப் பயன்படுத்தி சேமிப்பை மூலதனத்திரட்சிக்குப் பெறுவதில் வளர்ச்சியடையாத நாடுகளில் பல தடைகள் உள்ளன சேமிப்பைத் திரட்டுவது கட்டாய முறைகளைத் தீவிரமாக மேற்கொண்டாலன்றி முடியாததாகும்.

(7) உபரி உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித்தருவதில் பல தடைகள் இருக்கின்றன. உபரி உழைப்பாளர்களைப் பயன்படுத்துவது 'நிரந்தர மூலதனத்தின்' (Fixed Capital) பற்றாக்குறையினால் அதிகம் பாதிக்கப்படுவதில்லை; 'சுழலும் மூலதனத்தின்' (Circulating Capital) பற்றாக்குறையினாலேயே பாதிக்கப்படுகின்றது. புதிதாக வேலையில் அமர்த்தப்பட்ட உழைப்பாளர்கள் ஊதியம் அளிக்கப் படுகின்றனர். அவர்களின் நுகர்வுப் பொருட்களின் தேவை அதனால் அதிகரிக்கின்றது. நுகர்வுப் பொருட்களின் உற்பத்தி அதே நிலையில் இருப்பதால் விலைகள் உயர்கின்றன. வெளிநாடுகளிலிருந்தும் நுகர்வுப் பொருட்கள் இறக்குமதி செய்யப்படுவதால் பாதக வாணிபச் செலுத்து நிலை ஏற்படுகின்றது. அதன் விளைவால் இறக்குமதி, ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு அதிகப் பணம் உள் நாட்டில் புழக்கத்தில் இருப்பதால் பொருட்களின் விலைகள் மேலும் அதிகரிக்கின்றன.

(8) திறமையற்ற, பயிற்சி பெறாத உழைப்பைப் பயன்படுத்தினால் முதலீட்டுத் தொழில்களின் உற்பத்தியில் சிறப்பான உயர்வு இருக்காது.

(9) மூலதனத்திரட்சி விகிதம், பெருகும் மக்கட்தொகையால் பாதிக்கப் படுவதையும் நர்க்ஸ் விளக்க மறந்து விடுகின்றார். 'உற்பத்திக்கு உதவாத' உழைப்பாளர்களின் தொகை அதிகரித்துக் கொண்டே செல்கிறது. எந்த அளவிற்குச் சேமிக்கும் திறனைத் தோற்றுவித்தாலும் அது போதுமானதாக இருப்பதில்லை. மறைந்துள்ள வேலையின்மையில் இருப்பவர்களை புதிய மூலதனத் திட்டங்களுக்கு மாற்றினாலும் கூட, மக்கட்தொகைப் பெருக்க வீதம் மூலதனச் சேமிப்பு வீதத்தைக் காட்டிலும் உயர்வாகவே அமைகின்றது.

(10) 'உற்பத்திக்கு உதவாத' உழைப்பாளர்களைப் போக்குவரத்து, செய்தித் தொடர்பு, நீர்ப்பாசனம், கால்வாய் போன்றவற்றை முன்னேற்றப் பயன் படுத்தலாம் என நர்க்ஸ் கூறுகிறார். இவ்வித வசதிகளால் உற்பத்தி உயரும் என்பது உண்மை. ஆனால் இவ்வித முன்னேற்றத்தோடு உற்பத்தியை உடனடியாக அளிக்கக்கூடிய, உற்பத்திக்கு நேரடியாக உதவக்கூடிய இரும்பு எஃகுத் தொழில் கருவிகள், இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் ஆகியவையும் தோற்றுவிக்கப்பட வேண்டும்.

(11) உபரி உழைப்பை வேளாண்மையினின்றும் நீக்கினால் உற்பத்திக் குறைவு ஏற்படாது என்பதைப் பேராசிரியர் ஷுல்ட்ஸ் (Prof. Schultz) ஏற்றுக் கொள்ளவில்லை. எந்த ஒரு ஏழை நாட்டிலும் 5 சத வீத வேளாண்மை மக்கட்தொகையைக் கூட உற்பத்தியில் குறைவு ஏற்படாமல் வேளாண்மையினின்றும் பிற துறைகளுக்கு மாற்ற முடியுமா என்பது ஐயமே.

மறைந்துள்ள வேலையின்மையின் சேமிப்புச் சக்தியை மூலதனத் திரட்சியாக எச்ச மக்கட்தொகையுள்ள வளர்ச்சியடையாத நாடுகளில் பெறுவதில் பல சிக்கல்கள் உள்ளன. குடியரசு முறையைப் பின்பற்றும் நாடுகளில் இதைப் பெறுவது மேலும் கடினமாகிறது. வளர்ச்சியடையாத நாடுகளின் தலா உற்பத்தி வேளாண்மையில் குறைவாக உள்ளமைக்கு 'மறைந்துள்ள வேலையின்மையும்' ஒரு காரணமாகும்.

**ஒரு உண்மை நோக்கு (A Realistic View)**

மறைந்துள்ள வேலையின்மையை நீக்குவதின் மூலம் உறுதியாக நிலம், மூலதனம், வேலைவாய்ப்பு ஆகியவற்றை அதிக அளவில் பெறலாம்; தொழிற் சிக்கனங்களைப் பெற்று எல்லாத் துறைகளிலும் ஆக்கத்தை அதிகரிக்கலாம்.

ஊதிய அளிப்புச் சிக்கலைத் தவிர்க்க மூன்று முறைகளைப் பேராசிரியர் குஷ்ரோ (Prof. Khusro) தந்துள்ளார்.

(1) மறைந்துள்ள வேலையின்மையிலுள்ள உழைப்பாளர்கள் மூலதனச் சாதனங்களைத் தங்கள் இருப்பிடங்களுக்கு அருகாமையிலேயே அமைத்துக்கொள்ளலாம். அவர்கள் தங்களுக்குத் தேவையான உணவை அவ்விடங்களிலிருந்தே பெறுகின்றனர். இதனால் உணவுப் பொருட்களின் விலைகள் உயர்வதில்லை. தாங்களே முதலீட்டைச் செய்து உற்பத்தியையும் தாங்களே மேற்கொள்வதால் ஊதியம் அளிக்க வேண்டுமென்றச் சிக்கல் எழுவதில்லை.

(2) மூலதன நிர்மாணப் பணிகளில் மறைந்துள்ள வேலையின்மையில் உள்ளவர்கள் கிராமங்களிலேயே பணியாற்றலாம். அவர்களுக்கு ஊதியம் அளிக்கப்படலாம். தங்களின் உணவுகளை, முன்பு பெற்றத் தங்கள் இல்லங்களிலேயே பெறுகின்றனர். ஊதியத்தை உணவுப் பொருட்களைத் தவிர்த்துப் பிற பொருட்களை வாங்கப் பயன் படுத்துகின்றனர். அப்பொருட்களின் விலைகள் உயர்வதால் உற்பத்தியும் உயர்கின்றது.

(3) கிராமங்களுக்கு வெளியே மூலதனத் திட்டங்களில் மறைந்துள்ள வேலையின்மையிலுள்ள உழைப்பாளர்களை அமைத்து ஊதியம் வழங்கலாம். அவர்கள் ஊதியங்களை உணவுப் பொருட்களை வாங்கப் பயன்படுத்தும்போது அவற்றின் விலைகள் உயரும். இறுதியில், உணவைப் பெருக்கும் மூலதனம் ஊதியமாக அளிக்கப்படுகிறது ; உணவு உற்பத்தியின் பெருக்கம் ஊதியமளிக்க உதவும்.

உதாரணமாக, இந்தியாவின் மூலதன நிர்மாணத் திட்டங்களுக்கு இறக்குமதியாகும் (பொதுச் சட்டம் 480) உணவுப் பொருட்களைப் பயன்படுத்தலாம்.

மூலதனத் திட்டங்களில் ஈடுபடுத்தப்படும் உழைப்பாளர்களின் உற்பத்தித்திறன் உயர்வாக இருக்க வேண்டும். முதலில் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்திவிட்டாலும்கூட உற்பத்தித்திறன் குறைவாக இருந்தால் உற்பத்தி பாதிக்கப்பட்டு மேலும் மேலும் வேலை வாய்ப்புக்கள் பெருகுவது தடைப்படுகின்றது. விற்பனைக்குரிய உபரியைப் பெருவாரியாகப் பெற்று, இலாபத் தொகையை அதிகம் அடைந்து தொழிலின் முன்னேற்றத்திற்கு அத்தொகை பயன்படுத்தப் படவேண்டும்.

வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்களின் இறுதிநிலை உற்பத்தி நம் நாட்டில் உயர்த்தப்பட வேண்டும். இந்தியாவில் மறைந்துள்ள வேலையின்மை அமைந்துள்ளதால் இறுதிநிலை உற்பத்தி மிகக் குறைவு எனக் கூறலாம் ; அல்லது பூஜ்யம் என்ற நிலையில் உள்ளது எனவும் கருதலாம். சிலரின் கருத்துப்படி, இந்தியாவில்

வேளாண்மையில் அமைந்துள்ள சுமார் 70 சதவீத மக்கட் தொகையில் குறைந்தது 25 முதல் 30 சதவீத மக்கட்தொகை வெளியேற்றப்பட்டு பிற தொழில்களில் ஈடுபடுத்தலாம். அதன் மூலம்தான் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் நாம் முன்னேற்றத்தைப் பெறலாம்.

பொதுவாகவே, வேளாண்மை பிற்போக்கான தொழிலாகும். மேலும் வேளாண்மையில் அதிக மக்கட்தொகை அமைந்துள்ளது. எல்லா நாடுகளின் புள்ளி விவரங்களும் உணர்த்துவது என்ன வென்றால், தொழில்துறையில் ஈடுபட்ட ஒரு தொழிலாளியின் உற்பத்தி விவசாயி ஒருவரின் உற்பத்தியைவிட அதிகமாகவே உள்ளது என்பதாகும். உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளைக் கொண்டிருந்தாலும் வேளாண்மை குறைந்த அளவு வேலை வாய்ப் புக்களையே அளிக்கக் கூடியதாக உள்ளது. நிலம், நீர்ப் பாசனம், மூலதனம் போன்றவை பற்றாக்குறையைக் கொண்டிருப் பதாலும், பழைய உற்பத்தி முறைகள் பின்பற்றப்படுவதாலும் 'மறைந்துள்ள வேலையின்மை' விளைவாகிறது. இவ்வகை மறைந் துள்ள வேலையின்மையில் உள்ளவர்களின் இறுதிநிலை உற்பத்தி மிக மிகக் குறைவாக உள்ளது; சில நிலைகளில் 'பூஜ்யம்' என்ற நிலையிலும் இருக்கும். இவர்களின் உழைப்பை உற்பத்திப் பணி களில் ஈடுபடுத்தினால் இவர்கள் சேமிக்கும் சக்தியைப் பெறுகின் றனர். நிலத்தில் மிகுதியாக உள்ள விவசாயிகளின் வருவாயும் பெருகி சேமிக்கும் சக்தியை அடைகின்றனர். இதன் விளைவாக நாட்டின் மொத்த ஆக்கமே அதிகரிக்கும்.

மறைந்துள்ள வேலையின்மை வளர்ச்சியடையாத நாடு களிலேயே பெரிதும் தோன்றுகிறது. இந்நிலைக்கு 'ஆயத்த நிலைத் தேவைப்' (Effective Demand) பற்றாக்குறை காரணமல்ல; உற்பத்திச் சாதனங்களின் பற்றாக்குறையே வளர்ச்சியடையாத நாடுகளில் மறைந்துள்ள வேலையின்மையைத் தோற்றுவிக்கின்றது.

அதிக மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபட்டுள்ளதால் ஏற்படும் மறைந்துள்ள வேலையின்மை, சில நிலைகளில் தொழில் நுணுக்க முன்னேற்றத்தாலும், இயந்திரமயமாக்குதலினாலும், நல்விதைகளைப் பயன்படுத்ததுலினாலும், கால்வாய்கள், நீர்ப்பாசன வசதிகளைப் பெறுவதாலும், புதிய கருவிகளைப் பயன்படுத்துதலினா லும் ஏற்படும் எனப் பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) குறிப்பிடு கிறார்.

விவசாயிகளின் வருவாய் குறைவாக உள்ளமைக்கு வேறொரு காரணமும் உள்ளது. வேளாண்மை பருவ காலத் தொழிலாக உள்ளதால், தொழில் துறைகளைப் போலன்றி, ஆண்டு முழுதும்

வேலை வாய்ப்புக்கள் இருப்பதில்லை. விவசாயிகள் ஆண்டொன்றில் பல மாதங்கள் வேலையின்றி இருக்கின்றனர். இயற்கை உற்பத்திக்கு ஒத்துழைத்தால்தான் உற்பத்தியின் அளவைச் சிறப்பாகப் பெற இயலும்.

நம் நாட்டில் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆண்டொன்றிற்குச் சராசரி 3 முதல் 6 மாதங்கள்வரை வேலையின்றி இருக்கின்றனர். கிராமப்புறங்களின் வேலையின்மையும், மறைந்துள்ள வேலையின்மையும் கீழ்க்காணும் காரணங்களால் ஏற்படுகின்றன.

(1) மக்கட்தொகையின் விரைவான வளர்ச்சி.

(2) கிராமப் பகுதிகளில் துணைத் தொழில்கள் (Subsidiary Occupations) இல்லாத நிலை.

(3) வேலைவாய்ப்புகளை அளிக்கக் கூடிய வேளாண்மையல்லாத துறைகளின் வளர்ச்சியில் போதா நிலை.

(4) குறைந்த அளவுள்ள நிலவுடைமைகள் சில காலத்திற்கே வேலைவாய்ப்பை அளிக்கின்றன.

(5) குடிசைத் தொழில்களின் படிப்படியான வளர்ச்சி குன்றிய நிலை.

(6) வேளாண்மைப் பொருளாதாரத்தின் குறைந்த அளவே இலாபத்தைத் தரும் தன்மை. எழுத்தறிவின்மை, கிராம வாழ்க்கையின் தனியியல்புகள், கிராமக்கடன் நிலைகள் போன்றவைகளே குறைந்த வேளாண்மை இலாபத்திற்குக் காரணங்களாகும்.

தீர்வு முறைகள் (Remedial Measures)

வேளாண்மையில் 'வேலை நிறைவைப்' (Full Employment) பெறுவது முடியாததாகும். தொழில்களின் வளர்ச்சியாலும் வேலைவாய்ப்புக்களை மிக அதிக அளவு பெருக்க முடியாது; ஏனெனில், தொழில் நுணுக்கக் கருவிகள் உற்பத்தி முறைகளில் பயன்படுத்தப் படுகின்ற காரணத்தால் மறைந்துள்ள வேலையின்மையைக் குறைக்க சில வழிமுறைகளைக் கடைப்பிடிக்கலாம் :

(1) நகர்ப்புறங்களில் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்த வேண்டும். கிராமங்களிலும், நகரங்களிலும் கால்நடைப் பண்ணைகள், கோழிப் பண்ணைகள், பால் பண்ணைகள் போன்றவை ஏற்படுத்தப் படலாம்.

(2) நாடு சமநிலை முன்னேற்றத்தை எல்லா இடங்களிலும் பெற தொழில்கள் பரவலாக அமைக்கப்பட வேண்டும். இதற்காக

மறைந்துள்ள வேலையின்மையில் இருப்பவர்களை சாலைகள், மின்சார வசதிகள், கால்வாய்கள், அணைகள், இருப்புப் பாதைகள், செய்தித் தொடர்பு வசதிகள் போன்றவைகளை அமைக்கப் பயன் படுத்தலாம். இவற்றின் மூலம் நிலம், நீர்ப்பாசனம், போக்கு வரத்து போன்றவற்றிற்கான செலவுகள் குறைவாகப் பிடிக்கும்.

(3) உழைப்புச் செறிந்த தொழில்களைத் தொடங்கி வேலை வாய்ப்புக்களைப் பெறலாம். குறைந்த காலத்திலேயே உற்பத்தி யைப் பெற்று பயனளிக்கக் கூடிய சிறு தொழில்களைத் துவங்கலாம்.

(4) வேளாண்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பைக் காடுகளை அழிப்பதற்கும், தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றவும், சிறு நீர்ப்பாசனத் திட்டங்களை முன்னேற்றமடையச் செய்யவும் பயன்படுத்தலாம்.

(5) முன்னேற்றமடையாத பகுதிகள், காட்டுப் பிரதேசங்கள், சுரங்கப் பகுதிகள் அமைந்துள்ள இடங்களுக்கு போக்குவரத்து வசதிகளை மேம்படுத்திஞல் உபரி உழைப்பாளர்கள் நல்வாழ்விற் காக இந்த இடங்களை நாடிச் செல்வார்கள். இதன் மூலம் மக்கள் அடர்த்தி அதிகமுள்ள இடங்களிலிருந்து நீர்ப்பாசனம், புதிய நிலங்கள் அமைந்துள்ள பகுதிகளுக்குக் குடியேறுவார்கள்.

(6) அறிவியல் அடிப்படையில், பலவகைப்பட்ட சிறிய காதி, கிராமத் தொழில்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும். புதிய திறமைகள் வளர்க்கப்பட்டுப் பல புதிய நுகர்வுப் பொருட்களை அவற்றின் மூலம் உற்பத்தி செய்யும் சிறு தொழில்கள் கிராமங் களிலும், சிறு நகரங்களிலும் ஏற்படுத்தப்பட வேண்டும்.

(7) கிராமங்களைத் தொழில் மயமாக்கிப் பகுதி நேர வேலை வாய்ப்புக்களையும் அளிக்கலாம். கிராமச் சூழ்நிலைகட்கு ஏற்ற சிறு தொழில்கள் அமைதல் நல்லது. அவற்றில் முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் பின்பற்றி மக்களின் தேவைக்கு ஏற்பப் பொருட்களை உற்பத்தி செய்தல் வேண்டும்.

இவ்வாறு வேலைவாய்ப்புக்களை வளர்க்கும் திட்டங்களைச் செயல்படுத்த வேண்டும். கல்வி முறையை உற்பத்திக்கு உதவும் வகையில் மாற்றிடல் அவசியம். தொழில் வளர்ச்சிக்கான திட்டங்களை விரைவு படுத்த வேண்டும். தொழில் நுணுக்க முன்னேற்றத்தாலும் உற்பத்தித்திறனைப் பெருக்க முயலவேண்டும். வீணுகும் உழைப்பைப் பயன்படுத்தி எதிர்கால வளர்ச்சியை நாம் அடையலாம்.

# 12. மூலதனத் திரட்சிக்கு விற்பனை உபரியின் பங்கு

## (Marketable Surplus As a Source of Capital Formation)

வளர்ச்சியடையாத பொருளாதாரங்கள் குறைந்த உற்பத்தி, வருவாய், சேமிப்பு, முதலீடு ஆகியவைகளைக் கொண்ட வேளாண்மையைச் சார்ந்துள்ளன. பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மை உற்பத்தியும், உற்பத்தித்திறனும் மேம்பாடு அடைதல் அவசியமானதாகும். மேலும் வேளாண்மை முன்னேற்றத்தைக் குறைந்த அளவு மூலதனத்தைக் கொண்டே பெற்று விடலாம். உற்பத்திக் காரணிகளை முன்னேற்றமடைந்த தொழில் நுணுக்க வளர்ச்சியின் மூலம் சிறப்பாகப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கலாம். அதிக வேளாண்மை உற்பத்தி விற்பனை உபரியைப் பெருக்கி, வருவாய்ப் பகிர்வை வேளாண்மையைச் சார்ந்தவர்களுக்குச் சாதகமாக்கிவிடும். இவ்வகையில் வளர்ந்த வேளாண்மை வருவாயை மூலதனத் திரட்சிக்குப் பயன்படுத்தலாம்.

இச் சிக்கல் இருவித நிலைகளைக் கொண்டுள்ளது.

முதலாவதாக, உற்பத்தி உபரியை வேளாண்மைத் துறையினின்றும் வேளாண்மையற்றப் பிற துறைகட்குத் திருப்புவதின் மூலம் விற்பனையை உபரியை உயர்த்தலாம்.

இரண்டாவதாக, வேளாண்மை மக்கட்தொகையை மேலும் சேமிக்கத் தூண்ட வேண்டும்.

விற்பனை உபரியைப் பெருக்க வேளாண்மை மக்கட்தொகை வேளாண்மைப் பொருட்களை அதிக அளவில் நுகர்வதைத் தடுக்க வேண்டும். பெரும்பகுதி விவசாயிகள் 'பராமரிப்பு' (Subsistence) நிலையிலோ அல்லது அதற்கும் குறைவான நிலையிலோ இருப்பதால் பெருகும் நுகர்வைத் தடுப்பது கடினமாகிறது. உபரி வேளாண்மை மக்கட்தொகை அல்லது மறைந்துள்ள கிராம வேளாண்மையிலுள்ள மக்கட்தொகை நிர்மாணத் துறைகளிலும், தொழில் துறைகளிலும் ஈடுபடும் வரை இது நடைபெற முடியாத ஒன்றாகும்.

இரண்டாவதாக, வேளாண்மை மக்கட்தொகை அதிக அளவு பொறிசெய்ப் பொருட்களை நுகர்வது தடுக்கப்பட வேண்டும். வேளாண்மை உபரியானது அதிகரிக்கும்போது 'நுகரும் விருப்பமும்' (Propensity to Consume) அதிகரிக்கின்றது. அவர்கள் அவசிய உணவுப் பண்டங்களைப் பெற்றுவிடுவதால் பொறிசெய்ப் பொருட்களை (Manufactured Goods) நுகரும் விருப்பம் தோன்றுகின்றது. நேரடியாக பொறிசெய்ப் பொருட்களின் நுகர்வதைத் தடைசெய்வது சர்வாதிகாரநிலை அமைந்துள்ள நாடுகளில் மட்டுமே நடைபெறக் கூடியதாகும்.

வேளாண்மை உபரி பெருகி அதன்மூலம் பொறிசெய்ப் பொருட்களுக்கு ஏற்படும் தேவைப் பெருக்கம் பொருளாதாரத்தின் தொழில் துறையில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றது. தொழில் துறையின் உற்பத்தி வேளாண்மை மக்கட்தொகையின் தேவைக்கு ஏற்ப பெருக்கமடைய புதிய உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். விவசாயிகளின் நுகர்விலும் மாற்றங்கள் ஏற்படுகின்றன. நாட்டை மேலும் தொழில் மயமாக்க இந்நுகர்வின் மாற்றம் நிதியைத் தருவதாக அமைதல் வேண்டும், மூலதனப் பொருட்களின் துறை நுகர்வுப் பொருட்களின் துறை வளர்ச்சியால் பாதிக்கப்படுகின்றது. அதைப் போன்றே பொதுத் துறையின் வளர்ச்சி (Public Sector) தனியார் துறையின் (Private Sector) வளர்ச்சியால் இடர்ப்படுகின்றது. தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெறுவது இதனால் தடைப்பட்டு, பொருளாதார வளர்ச்சி வீதம் குறைவான அளவிலேயே அமைகிறது. மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் துறை (Capital Goods Sectar) நிதிப் பற்றுக்குறையால் தடைப்படுகிறது. வேளாண்மை உபரியைப் பெருக்கி அதன் மூலம் முன்னேற்றத்திற்கான நிதியைப் பெறுவது நாட்டைத் தொழில்மயமாக்க உதவும் எனக் கூறலாம்.

தனியார் நிறுவனங்களின் நுகர்வுப் பொருள் உற்பத்தி உயர்வால் அத்துறையால் வேளாண்மைத் துறையின் விற்பனை உபரியானது திரட்டப்படுகின்றது. தவிர, நுகர்வுப் பொருள் உற்பத்தித்துறை பெரிய தொழில்களின் அடிப்படைப் பொருட்களின் தேவையையும் கொண்டுள்ளதாக மாறுகின்றது. பொருத்தமான வரிக்கொள்கைகளின் மூலம் நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யும் துறைக்குக் (Consumer Goods Sector) கிடைக்கும் இலாபங்களைத் திரட்ட வேண்டும். அரசின் நிதிக்கொள்கைகளின் மூலமாகப் போதுமான நிதி தனியார் நுகர்வுப் பொருட்களின் துறையினின்றும் கிடைக்காவிடில், அரசே நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களை ஏற்படுத்த முன்வர வேண்டும்.

பெருகிவரும் விற்பனை உபரியை வடிகட்டி முன்னேற்றத் திற்குப் பயன்படுத்த விவசாயிகளை வேளாண்மை-சார்ந்த (Agro-based) தொழில்களைத் தொடங்க ஊக்குவிக்கலாம். இதன் மூலம் வேளாண்மையில் அமைந்துள்ள 'மறைந்துள்ள வேலையின்மை' பல வேலை வாய்ப்புக்களின் மூலம் நீக்கப்படலாம். தேவையான வசதி களும், கல்வி, பயிற்சி போன்றவைகளும் வேளாண்மை-சார்ந்த தொழில்களில் மக்களை ஈடுபடுத்த அங்கு அமைந்துள்ளன எனக் கொள்ளப்படுகின்றது. கருவிகளும், இயந்திரங்களும்கூட இருக் கின்றன எனக் கருதப்படுகின்றது.

வேளாண்மை முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனத் தையும் விற்பனை உபரியின் மூலம் கிடைத்த வருவாயினின்றும் பெறலாம். அதன் மூலம் நல்விதைகள், உரங்கள், பூச்சிமருந்துகள் போன்றவற்றிற்கானச் செலவைச் சரி செய்யலாம். எந்திரக் கலப்பைகள் (Tractors) வாங்கவும், குழாய்க் கிணறுகள் (Tubewells) அமைக்கவும் தேவையான மூலதனம் விற்பனை உபரி மூலம் பெறப் படலாம். மேலும் அரசே வேளாண்மைச் சாதனங்களை நியாய விலைக்கு விவசாயிகளுக்கு விற்பனை செய்யலாம். இவற்றின் மூலம் வேளாண்மை உற்பத்தி திரும்பவும் அதிகரித்து விற்பனை உபரியில் உயர்வு அதிக அளவில் ஏற்படும்.

விற்பனை உபரியைத் திரட்ட, கிராம மக்கள் தாங்களே சேமிக்க வேண்டும்; அல்லது சேமிப்புத் தூண்டப்படுதல் வேண்டும். அரசும் அவர்களிடமிருந்து சேமிப்பை வரிவிதிப்பின் மூலம் பெற லாம். இதற்காக நிலவரியை உயர்த்தலாம்; அல்லது வேளாண்மை வருவாய் வரியை விதிக்கலாம். இந்த இருவித முறைகளையும் இணைத்துப் பயன்படுத்தி அதிகரிக்கும் வேளாண்மை வருவாயை அரசு பெறலாம். வேளாண்மை நிலவரி ஜப்பானின் பொரு ளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவியது. அரசின் முக்கிய வருவாயாக நிலவரி இருந்தது. பொதுவான நிலவரியில் 80 முதல் 90 சதவீத வரியைத் தருவதாக அது அமைந்திருந்தது. வளர்ச்சியடையாத நாடுகள் ஜப்பானைப் பின்பற்றி முன்னேற்றத் தைப் பெற அதிகரிக்கும் வேளாண்மை உபரியைத் திரட்ட லாம்.

வேளாண்மை, செய்ப்பொருட்களுக்கிடையே வாணிப நிலை மாற்றப்பட்டுத் திருந்த சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

(1) பொதுவாக விலையுயர்வுகள் ஏற்படும்போது, 'விலைக் கட்டுப்பாட்டின்' (Price Control) மூலம் வேளாண்மைப் பொருட்

களின் விலையுயர்வு வீதத்தை பொறிசெய்ப் பொருட்களின் விலையுயர்வு வீதத்தைவிடக் குறைக்க வேண்டும்.

(2) ஆடம்பரப் பொருட்களைக் கிராம மக்கள் அதிகம் விரும்புவதால், அவற்றின்மீது வரிகள் விதிக்கப்படலாம்.

(3) தொழில்களுக்குக் காப்பளித்து உள்நாட்டுத் தொழில் உற்பத்திப் பொருட்களின் விலையுயர்வை அனுமதிக்கலாம்; வேளாண்மை பொருட்களின் விலைகள் உலக விலைகளின் அளவில் அமையலாம்.

(4) கிராமவாசிகளின் நுகர்வில் நுழைகின்ற பொறிசெய்ப் பொருட்களின் வாணிபத்தை அரசே மேற்கொள்ளலாம்.

முதலாவது, மூன்றுவது முறைகளின் மூலம் நகரத் தனியார்த் துறைகள் முன்னேற்றமடையும். அவை பெறுகின்ற அதிக இலாபத் தொகையைத் திரட்ட அரசு தீவிர வரிக்கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். இரண்டாவது, நான்காவது முறைகள் அரசுக்கு முன்னேற்றச் செலவுகளுக்குத் தேவையான நிதியை நேரடியாகத் தருகின்றன.

விற்பனை உபரியைத் திரட்டுவதில் உள்ள தடைகள்

எந்த அளவிற்குப் பொருளாதாரத்தின் வேளாண்மைத் துறையில் விற்பனை உபரி அமைந்துள்ளது என்பதை நிர்ணயிப்பது கடினம். இதுபற்றி இருவிதமான கருத்துக்கள் தோன்றியுள்ளன. "விலைகள் உயர்வாக இருக்கும்போது குறைந்த அளவு விற்பனை உபரியே விற்கப்படுகின்றது; விலைகள் குறையும் போது அதிக அளவு விற்பனை உபரி விற்கப்படுகின்றது," என்பது ஒரு கருத்து. சந்தைக்குக் கொண்டுவரப்படும் உணவுத் தானியங்களின் அளவு விலையுயரும் காலங்களில் குறைவாகவும், விலை குறையும் காலங்களில் அதிகமாகவும் அமையும்.

இரண்டாவது கருத்து இந்திய நிலையையும் உணர்த்துவதாகும். விவசாயிகள் அதிக அளவு 'விலை உணர்வைக்' (Price Consciousness) கொண்டுள்ளதால் உயர்ந்த இலாபத்தைப் பெற விற்பனை உபரியை அறுவடையில்லாத காலங்களில் விற்பனை செய்யக் கொண்டுள்ளனர்.

முதற் கருத்து இந்தியாவைப் பொறுத்த அளவில் தவறுடைய தாகவே இருக்கின்றது. பல காலங்களில் சந்தைக்கு வருகின்ற பொருட்களின் அளவைக் கருதும் போது இரண்டாவது கருத்தை யும் ஏற்றுக் கொள்ள இயலாது. உதாரணமாக பஞ்சாப் மாநிலத்

தில் சந்தைக்கு வருகின்ற மொத்த கோதுமையில் 50 முதல் 60 சத வீத கோதுமை ஏப்ரல் முதல் ஜூன் மாதம் வரை விற்பனைக்காகச் சந்தைக்கு வருகின்றது; ஆனால் 30 முதல் 35 சதவீத கோதுமை மட்டுமே அக்டோபர் முதல் மார்ச் மாதம் வரை வருகின்றது. இதனால் எந்த அளவிற்கு விற்பனை உபரி அமைந்திருக்கிறது; அதை எந்த வகைகளில் மூலதனத்திரட்சிக்குப் பயன் படுத்தலாம் என்பனவற்றை அறிவது கடினமாகிறது.

நேர்முகவரிவிதிப்பு முறையில் (Direct Taxation) வேளாண்மை உபரிகளைத் திரட்டுவது வளர்ச்சியடையாத நாடுகளில் கடின மாகின்றது. வேளாண்மை வருவாய்களைக் கணக்கிடுவது கடின மானதால் வரி ஏய்ப்புக்கள் (Tax Evasions) செய்யப் படுகின்றன. சிறப்பான முறைகளில் வரி வசூலித்தல் நிர்வாகத் திறமையையும், நேர்மையையும் கொண்டு அமையும்.

வேளாண்மை உபரியை வடிகட்டிப் பெறுவதில் அரசியல் சிக்கல்கள் சிலவும் உள்ளன. சமதர்ம நோக்குள்ள அரசுகள் வேளாண்மை வருமான வரிகளை நடுத்தர, பெரிய விவசாயிகளின் மீது விதிக்கின்றன. சிறு விவசாயிகளின் மீது நில வரிகளை விதிப்பதையும் அவை விரும்புவதில்லை. வளர்ச்சியடையாத நாடுகளின் வலதுசாரி அரசியல் கட்சியினர் இவ்விதத் தீவிர நட வடிக்கைகட்கு எதிரான கருத்துக்களைக் கொண்டுள்ளனர். இதிலுள்ள உண்மையை புள்ளி விவரங்களின் மூலமாக இனிது உணரலாம். 'சமதர்மத்தை' நோக்காகக் கொண்டுள்ள அரசைக் கொண்டுள்ள நம் நாட்டில் 1939–ல் மாநில அரசுகளின் மொத்த வரி வருவாயில் 20 சதவீதம் நிலவரியின் மூலம் பெறப்பட்டது; அது 1954-ல் 9 சதவீதமாகக் குறைந்து விட்டது. இன்று சில மாநிலங்களில் நில வரியை நீக்கும் நடவடிக்கைகள் எடுக்கப் கின்றன; ஒரு சில மாநிலங்கள் நில வரியை நீக்கி விட்டன.

சில சமயங்களில் அரசின் தீவிர நடவடிக்கையின்மையாலும், வரி விதிப்பு முறைகளில் உள்ள குறைபாடுகளாலும் வேளாண்மை உபரிகளைத் திரட்டுவது கடின நிலையைத் தருகின்றது. இந்தியாவின் எழு மாநிலங்களில், நிலவரி 1939–ஆம் ஆண்டிற்கும் 1952–ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 60 சதவீதம் மட்டுமே உயர்ந்தது. இதே காலத்தில் முக்கிய வேளாண்மைப் பொருட் களின் மொத்த விற்பனை விலைகள் 550 சதவீதம் அதிகரித்தன. இது எதைக் காட்டுகின்றது என்றால், வேளாண்மை வருவாய் விலை யுயர்வுகளால் அதிக அளவு உயர்ந்துள்ள நிலையைக் காட்டுகிறது. எனினும், அவர்களிடமிருந்து பெறப்படுகின்ற நிலவரியின் அளவு மிகக் குறைவானதேயாகும். நம்முடைய பல திட்டங்களிலும்

வேளாண்மை முன்னேற்றத்திற்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப் பட்டது. அரசிடமிருந்து பலவித சலுகைகளையும் பெற்றது வேளாண்மைத் துறையாகும். ஆயினும் பிற துறைகளைக் காட்டிலும் குறைவாகவே வேளாண்மைத் துறையினின்றும் வரிகள் பெறப்படுகின்றன. பல வசதிகளையும் திட்டங்களின் மூலம் பெற்ற வேளாண்மை, முன்னேற்றத் திட்டங்கட்கு குறைந்த வரி வருவாயை மட்டுமே அரசுக்கு அளிக்கிறது. குறைந்த வசதிகளைப் பெற்ற பொருளாதாரத்தின் பிற துறைகள் அரசின் வரி வருவாயில் பெரும் பகுதியை அளிக்கின்றன. நல்ல வரி விதிப்பின் மூலம் சிறு விவசாயிகளைப் பாதிக்காமலேயே அதிக வரி வருவாயை மாநில அரசுகள் வேளாண்மையினின்றும் பெற முடியும். அதிக அளவு வரியைச் செலுத்தும் திறனைக் கொண்டுள்ளதாக இன்று வேளாண்மைத்துறை வளர்ந்துள்ளது.

வளர்ச்சியடையாத நாடுகளில் 40 முதல் 60 சதவீத தேசிய வருவாயைத் தருவது வேளாண்மையே என்பதை எவரும் மறுக்க இயலாது. பொருளாதார வளர்ச்சி நிரந்தரமானதாக, நிச்சயமானதாக இருக்க வேண்டுமென்றால் வேளாண்மையில் உற்பத்தி உபரி தோன்ற வேண்டும்; அவ்வுபரியை மூலதனத்திரட்சிக்குப் பயன் படுத்த வேண்டும். சோவியத் ரஷ்யா, சீனு, ஜப்பான் போன்ற நாடுகளில் இம்முறையைப் பின்பற்றி வெற்றி கண்டுள்ளனர். சோவியத் ரஷ்யா முன்னேற்றத்தின் முதல் சில நிலைகளில் இருந்த போது, வேளாண்மைப் பொருட்களைக் குறைந்த விலைக்குக் கட்டாயமாகத் திரட்டி தொழில்களின் வளர்ச்சிக்குப் பயன் படுத்தினர். சீன நாட்டில் வேளாண்மை உபரியை அதிகம் பெற, நிலச் சாகுபடியில் உழைப்பைக் கட்டாயமாக்கிப் பயன்படுத்தியது சீன அரசு. சாகுபடியாளர்கட்குப் பராமரிப்பு அளவிலேயே உணவு போன்ற அவசியப் பண்டங்கள் அளிக்கப்பட்டன

வளர்ச்சியடைந்து வரும் நாடுகளின் அரசுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேளாண்மை விற்பனை உபரியை மூலதனத்திரட்சி பெறப் பயன்படுத்தலாம் என்பதை உணர்ந்து அதற்கேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மை 'விற்பனை உபரியே' அந்நாடுகளைத் தொழில் மயமாக்க உதவுகின்றது என மாரிஸ்டாப் (Mawrice Dobb)[1] குறிப்பிடுகின்றார். விற்பனை உபரி என்பது குடும்ப நுகர்வு, கூலிகளைப் பொருட்களாகத் தருதல், கால்நடைகளுக்கான தீவனம், விதைகள் போன்றவை நீங்கலாக

1. Mawrice Dobb, on Economic Theory and Socialism.

விவசாயியிடம் விற்பனைக்குத் தயாராக உள்ள உற்பத்தியின் மிகுதி எனலாம். வாணிப வேளாண்மை (Commercial Agriculture) இலாப நோக்கோடு உள்ளதால் உற்பத்தி அனைத்துமே விற்பனை செய்யப் படுகின்றது.

வேளாண்மை விற்பனை உபரி வேளாண்மையல்லாத துறைகளாலும், நகர மக்களாலும் உணவுப் பொருட்களாகவும், கச்சாப் பொருட்களாகவும் பயன்படுத்தப் படுகின்றது. ஒரு நாட்டில் தொழில்கள், நகரங்கள் பெருகும் போது வேளாண்மை விற்பனை உபரிக்கான தேவை அதிகரிக்கும். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி விற்பனை உபரியை உயர்த்துவதின் மூலம் விவசாயிகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவலாம்.

முன்னேற்றத்திற்கு விற்பனை உபரி வேறொரு வகையிலும் உதவுகிறது. விற்பனை உபரியின் மூலம் அதிக வருவாயைப் பெற்ற விவசாயிகள் தொழில் நுகர்வுப் பொருட்களை நுகர்வதில் ஈடுபடுகின்றனர். அத்தொழில்கள் உற்பத்தியைப் பெருக்குகின்றன. வேலை வாய்ப்புகள் அதிகரிக்கின்றன, தொழில் வருவாய் உயர்வால் வேளாண்மை விற்பனை உபரிக்கான தேவை மேலும் அதிகரிக்கின்றது.

வேளாண்மை விற்பனை உபரியை ஏற்றுமதி செய்து அதற்கு ஈடாக மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்யலாம். நாட்டைத் தொழில் மயமாக்க இது உதவும். அந்நியச் செலாவணியைப் பெற வகை செய்கிறது. 1930 முதல் 1939 வரை வேளாண்மை உபரியை ரஷ்யா ஏற்றுமதி செய்து, நாட்டைத் தொழில் மயமாக்க பிற நாடுகளிலிருந்து மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்தது. பிற துறைகளின் முன்னேற்றத்திற்கான நிதியைப் பெறவும் வேளாண்மை விற்பனை உபரி திரட்டப்பட்டது.

தொழிலாளர்கட்குத் தேவைப்படுகின்ற பொருட்களில் இன்றியமையாதவை உணவுப் பொருட்களாகும். இவ்வுணவுப் பொருட்கள் வேளாண்மை விற்பனை உபரியின் மூலமாக அளிப்பில் அதிகரிக்கப்படாவிடில் தொழில் மயமாதல் தடைபடும்.

குறைந்த அளவு மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தால் இறுதிநிலை உற்பத்தியானது உயர்வாக இருக்கும். இதனால் மொத்த உற்பத்தியின் அளவிலும் உயர்வு ஏற்படும்.

சாகுபடி நிலங்களில் அளவு அதிகமாக இருந்தால் விற்பனை உபரியும் உயர்வாக இருக்கும். சந்தைக்கான உற்பத்தியை மேற்கொண்டாலும், வணிகப் பொருட்களின் உற்பத்தியை கைக்கொண்டாலும் விற்பனை உபரி அதிகரிக்கும்.

நிலப் பிரபுக்களின் உணவு நுகர்வு விற்பனை உபரியைக் குறைக்காது. அவர்கள் வணிகப் பொருட்களை இலாப நோக்கோடு உற்பத்தி செய்வார்கள். மேலும் அவர்கள் முன்னேற்றமடைந்த சாகுபடி முறைகளையும், அறிவியல் சாகுபடி முறைகளையும் பின் பற்றி உற்பத்தியை உயர்வாகப் பெறுகின்றனர். அதிக முதலீட்டையும் நிலங்களில் இடுவதால் நல்ல வருவாயைப் பெற வாய்ப்பு ஏற்படுகின்றது. சிறிய அளவு நிலங்களை உடைமையாகக் கொண்டவர்களைக் காட்டிலும் பெரிய அளவு நிலவுடைமைகளைக் கொண்டவர்கள் விற்பனை உபரியை அதிகம் பெறுகிறார்கள்.

நம் நாட்டில், விலைகளின் மாற்றங்கள் வேளாண்மைப் பொருட்களின் உற்பத்தியில் மாற்றங்களை ஏற்படுத்துவதில்லை. விலையுயர்வால் உற்பத்தியை உடனேயே பெருக்குவதும் முடியாதது. விலைகள் குறையும்போது சந்தைகளுக்கு வருகின்ற பொருட்களின் அளவும் குறைவதில்லை. தொழில்களில் விலைமாற்றங்களுக்கு ஏற்றவாறு உற்பத்திகளின் அளவுகளை மாற்ற இயலும். வேளாண்மையில் இந்நிலை அமைந்திருக்கவில்லை. வேளாண்மைப் பொருட்களின் விலை குறையும்போது அளிப்பு அதிகரிக்கிறது; விலை உயரும்போது மேலும் விலையுயர்வு ஏற்படும் என்ற எண்ணத்தால் விவசாயிகள் குறைவான அளிப்பையே செய்கின்றனர்.

**விற்பனை உபரியைக் கணக்கிடுவதில் உள்ள இடர்ப்பாடுகள்**

(1) பெரும்பாலான விவசாயிகள் தங்கள் கடன்களைத் தீர்க்கவும், பிற செலவுகளுக்காகவும் அறுவடை முடிந்தவுடனேயே பொருட்களை விற்பனை செய்து விடுகின்றனர். மேலும் தங்கள் நுகர்வு, விதைகள் போன்றவற்றிற்குக் கூடப் பொருட்களைச் சேமித்து வைத்துக்கொள்ளாமல் விளை பொருட்களை விற்றுவிடுகின்றனர். எனவே அவர்கள் விற்பனை செய்கின்ற பொருட்களின் அளவைக் கொண்டு உண்மையான விற்பனை உபரியை அளவிட முடியாது.

(2) விற்பனையில் சுமார் 65 சதவீதம் கிராமங்களிலேயே நடைபெறுகிறது. எந்த அளவிற்குப் பொருட்கள் உண்மையில் விற்பனை செய்யப்படுகின்றன என்பதை அறிய இயலாது.

(3) பொருட்கள் விற்பனைக்காகச் சந்தைக்கு வராமல் விற்பனை வரியைத் தவிர்க்க நேரடியாக நுகர்வோரைச் சென்றடைகின்றன. குறிப்பாக இந்தியாவில் பஞ்சாப், உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் இந்நிலை அமைந்துள்ளது.

(4) ஒரு ஆண்டிற்கான விற்பனை உபரியை அறிவதும் கடினமாகின்றது. ஏனெனில் சில விவசாயிகள் ஓராண்டிற்கு மேலாகவும்

பொருட்களைச் சேமித்து வைத்திருந்து பிறகு விற்பனைக்குக் கொண்டு வருகின்றனர்.

இக்காரணங்களால் விற்பனை உபரியைக் கண்டறியும் புள்ளி விவரங்கள் குறைவாகவே உள்ளன; அப்புள்ளி விவரங்களையும் சரியானவை எனக்கொள்ள முடியாது.

**விற்பனை உபரியை உயர்த்தி மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்தும் முறைகள்**

இந்தியாவில் தொழில்கள், நகரங்கள் பெருகிவருவதால் இனிவரும் ஆண்டுகளில் வேளாண்மை விற்பனை உபரிக்கான தேவை பெருகும்; ஆனால் வேளாண்மை உற்பத்தி அந்த அளவிற்கு பெருகுமா என்பது ஐயத்தையே தருகின்றது. உற்பத்தியைப் பெருக்கி, விற்பனை உபரியை அதிகம் பெறத் தக்கத் திட்டங்கள் நம் நாட்டில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

போலந்து, ரஷ்யா, சீனா, ஜப்பான் போன்ற நாடுகளில் தொழில்களின் வளர்ச்சி வேளாண்மையைச் சார்ந்துள்ளது என்பதை உணர்ந்து, அதற்கேற்ப வேளாண்மை முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. வேளாண்மை விற்பனை உபரியைப் பயன்படுத்தித் தொழில் முன்னேற்றத்தை விரைவாக்கினார்கள்.

ரஷ்யாவில் வேளாண்மை உற்பத்தி கூட்டுப் பண்ணை முறையாலும், அரசின் பண்ணை முறையாலும் உயர்த்தப்பட்டது. வேளாண்மைப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டு மூலதனப் பொருட்கள் இறக்குமதியாயின. குறிப்பிட்ட குறைந்த விலைகளில் எந்த அளவிற்குப் பொருட்கள் விவசாயிகளால் அளிக்கப்பட வேண்டுமென்பது நிர்ணயிக்கப்பட்டது. கட்டாயமாகப் பொருட்களை அளிக்க வேண்டியிருந்தாலும், உற்பத்தி உயர இது ஊக்கத்தை அளித்தது. போலந்தின் அரசும் கட்டாய தானிய வரிகளை விதித்து வசூலித்தது.

ஜப்பானின் வேளாண்மை உற்பத்தியில் உரங்களையும், முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளையும் பயன்படுத்தியமையால் உயர்வு ஏற்பட்டது. ஆனால் தொழில் முன்னேற்றத்திற்கான மூலதனத்திரட்சியின் பெரும்பகுதி நிலவரியின் மூலமாகவே பெறப்பட்டது.

பொதுவுடைமைச் சீன நாட்டில் வேளாண்மைக் கூட்டுறவுகள் உற்பத்திப் பெருக்கத்தைத் தந்தன. குறிப்பிட்ட விலைகளில் இக் கூட்டுறவுகளிடமிருந்து அரசு பொருட்களை வாங்கியது. இதைத்

தவிர வேளாண்மை வரி பொருளாகப் பெறப்பட்டது. விவசாயி களிடமிருந்து விளைபொருட்களைப் பெற்று நுகர் பொருட்கள் தரப் பட்டன.

இம்முறைகள் யாவற்றையும் இந்தியாவில் பின்பற்ற முடியாது. ஏனெனில், இங்கு அரசியற் கொள்கைகளும், நிர்வாக அமைப்பு முறைகளும் அந்நாடுகளின்றும் வேறுபட்டுள்ளன. இந்தியச் சிக்கல்களும் பிற நாடுகளின் சிக்கல்களினின்றும் வேறுபாடுள்ள இயல்புகளைக் கொண்டுள்ளன. எனவே வேளாண்மை விற்பனை உபரியை மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்தும் முறைகள் பிறநாடு களில் பின்பற்றப்பட்ட முறைகளைப் போன்று அமைந்திருக்க முடியாது.

(1) முதலாவதாக, அதிக வேளாண்மை ஆக்கம் இருந்தால் தான் உயர்ந்த 'விற்பனை உபரியைப்' பெற இயலும். எனவே உற்பத்தியைப் பெருக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். நீர்ப்பாசன வசதிகள், கடன் வசதிகள், நல்ல கருவிகள், விதைகள், இரசாயன உரங்கள், வேளாண்மைக் கருவிகள், நிலச் சீர்திருத்தங்கள் போன்றவற்றை வேளாண்மைத் துறையில் முன்னேற்றமடையத் தக்கவகையில் பயன்படுத்தி அதிக ஆக்கத்தை அடையலாம். உணவுப் பொருட்களை உற்பத்தியில் உயர்த்த உதவும் எல்லா வசதிகளும் விற்பனை உபரியை அதிகம் பெற உதவுமெனலாம்.

(2) இரண்டாவதாக, விவசாயிகளைக் குறைந்த அளவு நுகரவும், அதிக அளவு சேமிக்கவும், விற்பனை செய்யவும் தூண்டும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இந்நிலையை ஏற்படுத்த விவசாயிகள் நுகர்வுப் பொருட்களை வாங்கும்படி செய்ய வேண்டும். கல்வி, செய்திப் பத்திரிக்கைகள், புத்தகங்கள், வானொலிப் பெட்டிகள், துணிகள் போன்றவற்றின் நுகர்வில் அவர்களை ஈடுபடுத்த வேண்டும். இவற்றிற்கெல்லாம் அதிக வருவாய் தேவை யாதலால், விவசாயிகள் சில வணிகப் பொருட்களையும் உற்பத்தி செய்யத் தொடங்குவார்கள். வேளாண்மையல்லாத துறைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களின் தேவையை விவசாயிகள் கொண்டிருக்க வேண்டும். அதன் மூலம் விவசாயிகள் அதிக அளவு விற்பனை உபரியைப் பெறத் தூண்டப்படுகின்றனர். கூட்டுறவு விற்பனை முறையாலும், சேமிப்புக் கிடங்குகளாலும், பிற விற்பனை வசதிகளாலும் விற்பனை உபரியை அதிகம் பெறலாம்.

(3) மூன்றாவதாக, அசோக் மேத்தா குழுவின் (Ashok Mehta Committee) பரிந்துரையின்படி வேளாண்மைக் கடன் வசதிகளையும், வேளாண்மைப் பொருட்களின் விற்பனையையும் கூட்டுறவுக்களின்

மூலம் இணைக்கலாம். தேவையான காலங்களில் உறுப்பினர்களுக்கு இக் கூட்டுறவுகள் கடனளித்து அக்கடனை விளைபொருளாகத் திரும்பப் பெறலாம். இம்முறையை உணவுத் தானியங்களின் உபரி உள்ள மாநிலங்களில் முயன்று பார்க்கலாம்.

(4) நான்காவதாக, 'ஒழுங்குபடுத்தப் பெற்ற சந்தைகள்' (Regulated Markets) அமைக்கப்பட்டு, இச் சந்தைகளுக்கே கிராமப்புறங்களிலிருந்து வேளாண்மை விற்பனை உபரிகள் வருதல் வேண்டும். நிறுவை, அளவு முறைகளைச் சீர்திருத்தி, வேளாண்மைப் பொருட்களைத் தரம் பிரித்து நேர்மையான விற்பனை முறையில் இச் சந்தைகள் ஈடுபட வேண்டும். தன்னுடைய விளைபொருளுக்கு நியாயமான விலை கிடைப்பதால், மேலும் உற்பத்தியைப் பெருக்க அவர் உந்தப்படுகின்றார்.

(5) ஐந்தாவதாக, விலைகளை ஒழுங்குபடுத்தி சந்தைக்கு வரும் வேளாண்மைப் பொருட்களின் அளவைப் படிப்படியாக உயர்த்த வேண்டும். இதில் இருவித வேறுபாடுள்ள கருத்துக்கள் நிலவுகின்றன. அதிக விலை நிர்ணயம் செய்தால், விற்பனை உபரி வேளாண்மைப் பொருட்களில் குறைந்துவிடுமென்பது ஒரு கருத்தாகும். ஆனால் இந்திய நிலையில் உயர்ந்த விலை நிர்ணயமே அதிக விற்பனை உபரியைத் தருமென்பது வேறொரு கருத்தாகப் பலராலும் தரப்படுகின்றது. உயர்ந்த விலை விவசாயிகளை அதிக உற்பத்திக்கும், விற்பனைக்கும் தூண்டுகின்றது. ஆனால் அதிக விலைகள் பணவீக்க நிலையை ஏற்படுத்திவிடும். விவசாயிகளின் அதிக நுகர்விற்கும் அதிக வழி வகுக்கும். மற்றொரு புறத்தில் விலைக் குறைவு ஏற்பட்டால், வேளாண்மை உற்பத்தி குறையும். வேளாண்மை விலை பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்தி, தொழிற் பொருட்களின் விலையை உயர அனுமதிப்பதால் விற்பனை உபரியின் அளவை அதிகரிக்கலாம்.

(6) ஆறாவதாக, உணவுத் தானியங்களைக் கட்டாயமாகப் பெறுவதின் மூலமும் விற்பனை உபரியை உயர்த்தலாம். விலைகளை ஒழுங்குபடுத்தி விளைபொருட்களின் கொள்முதலை அரசு மேற்கொள்ள வேண்டும். அரசின் தீவிர நடவடிக்கைகள் மூலம் நுகர்வைக் கட்டுப்படுத்தி, உபரி உணவுத் தானியங்களைத் திரட்டலாம்; நகரப் பகுதிகளுக்குத் தேவையான உணவுப் பொருட்களையும் எளிதாகப் பெறலாம்.

(7) ஏழாவதாக, நுகர்வைக் கட்டுப்படுத்தி விற்பனை உபரியைப் பெருக்க வரி முறையையும் அரசு பின்பற்றலாம். உதாரணமாக நிலவரி, வேளாண்மை வருமானவரி போன்றவற்றை உயர்த்த

லாம். இது நுகர்வைக் கட்டுப்படுத்தி, அதிக விற்பனை உபரியை விற்பனைக்குச் சந்தைகளுக்குக் கொண்டுவரத் தூண்டும். வரி செலுத்த இங்குப் பணத்தேவை ஏற்பட்டு உற்பத்தியும், விற்பனையும் உயர்கின்றன.

(8) இறுதியாக, விவசாயிகள் உணவுப் பொருட்களின் உற்பத்தியைத் தவிர்த்து, வணிகப் பொருட்களின் உற்பத்தியை மேற்கொள்ளாமல் அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் அவசியம். எடுத்துக்காட்டாக, வளர்ந்துவரும் பொருளாதாரத்தைக் கொண்ட இந்தியாவில் வணிகப் பொருட்களாகிய பருத்தி, சணல், கரும்பு, புகையிலை, எண்ணெய் வித்துக்கள் போன்றவைக்குத் தேவை பெருகி விலைகளும் அதிகரித்தால், விவசாயிகள் அப்பொருட்களையே உற்பத்தி செய்ய முன்வருவார்கள். அவர்கள் தங்கள் நுகர்வுக்குத் தேவையான அளவு மட்டுமே உணவுப் பொருட்களை உற்பத்தி செய்து, பின்பு வணிகப் பொருட்களின் உற்பத்தியில் ஈடுபடுவார்கள். இந்நிலை விவசாயிகள் தங்களுக்குத் தேவையான உணவைப் பெறவும், முன்னேற்றமடைந்த துறைகளின் (குறிப்பாகத் தொழில்கள்) பொருட்களைப் பெறவும் உதவும். இதன்மூலம் உணவுப் பொருட்களின் உற்பத்தி குறைந்து விற்பனை உபரியும் குறைவடையும். இவ்விதச் சீர்கேடுகளைத் தவிர்க்கும் நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும்; இந்நிலைகளைத் தராத வகையில் உணவுப்பொருட்களின் விலைகள் நிர்ணயிக்கப்பட வேண்டும். இந்தியாவில் நகரங்களும், தொழில்களும் பெருகி வருவதால் நகர மக்களுக்கும், தொழிலாளர்கட்கும் தேவையான உணவை அளிக்க அதிக உணவு விற்பனை உபரி அவசியமானது. உணவு உபரி குறைந்தால் தொழில் முன்னேற்றம் தடைப்படுமெனலாம்.

சோவியத் ரஷ்யாவின் தானியங்கள், ஜப்பானின் பட்டு, க்யூபாவின் சர்க்கரை, ஸ்விடனின் மாப் பொருட்கள், மலேயாவின் ரப்பர் போன்றவை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, அதன்மூலம் தேவையான மூலதனப் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன. குறைந்த வருவாயைக் கொண்ட வேளாண்மைப் பொருளாதாரங்களில் வேளாண்மை விற்பனை உபரி பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்த உதவும். பெரும்பாலான வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மைத் துறையே மிகப் பெரிய துறையாக அமைந்திருக்கிறது. எனவே பொருளதார முன்னேற்றத்தில் பெரும்பங்கு ஏற்பதற்கு அதுவே தகுதியுடையதாகும்.

**இந்தியாவில் விற்பனை உபரி குறைவாக உள்ளமைக்கான காரணங்கள் (Causes of Low Marketable Surplus in India)**

பொருளாதார முன்னேற்றத்தை தடை செய்யும் குறைந்த அளவு விற்பனை உபரி இந்திய வேளாண்மையில் அமைந்துள்ளமைக்குப் பல காரணங்கள் உள்ளன. சாகுபடி சாதகமாக இல்லாத காரணங்களால் வறுமை, பட்டினி போன்ற நிலைகள் தோன்றுகிறன. அக்காலங்களில் விற்பனை உபரி மிகக்குறைவாகவோ, அல்லது விற்பனை உபரியே தோன்றாத நிலையோ ஏற்படுகின்றன. விற்பனை உபரி நம் நாட்டில் குறைவாக உள்ளமைக்கான முக்கிய காரணங்களைப் பின் வருமாறு விளக்கலாம்.

(1) குறைந்த உற்பத்தி (Low Productivity)

உற்பத்தியைக் காட்டிலும் நுகர்வு குறைவாக இருந்தால் உபரி தோன்றும். இந்தியாவில் வேளாண்மை உற்பத்தி குறைவாக உள்ளது. நீர்ப்பாசன வசதிகளின் குறைவு, பழைய உற்பத்தி முறைகள், மூலதனப் பற்றாக்குறை, முன்னேற்றமடையாத கருவிகளைப் பயன்படுத்துதல், உரங்களைக் குறைந்த அளவே பயன்படுத்துதல் போன்றவைகளே குறைந்த உற்பத்திக்கு முக்கியக் காரணங்களாகின்றன. உற்பத்திக் குறைவாக உள்ளதால், உற்பத்தி உபரியும் குறைந்த அளவிலேயே அமையும்.

(2) மழை பெய்தலின் நிலையற்ற தன்மையும், போதாத நிலையும் (Uncertain and Inadequate Rainfall)

உற்பத்தியை நிர்ணயிக்கின்ற முக்கியக் காரணிகளில் மழையும் ஒன்றாகிறது. சாதக மில்லாத மழையாலும் உற்பத்தி உயர்வதில்லை. இதனால்தான் "பருவகாலங்களின் சூதாட்டமே இந்திய வேளாண்மை" எனச் சொல்லப்படுகின்றது. மழைப்பற்றாக் குறையால்குறைந்த வேளாண்மை உற்பத்தி ஏற்பட்டு குறைந்த விற்பனை உபரியே கிடைக்கின்றது. சில காலங்களில், நாட்டின் சில பகுதிகளின் உற்பத்தி மிகுதி மழைப் பொழிவினாலும் பாதிக்கப் படுவதுண்டு.

(3) பராமரிப்புப் பண்ணை முறை (Subsistence Farming)

இந்தியாவில் மக்கள் வேளாண்மையை வாழ்வின் பற்றுக் கோலாகக் கருதுகின்றனர் ; வாணிப நோக்கோடு அவர்கள் சாகுபடியில் ஈடுபடுவதில்லை. இதுவே பராமரிப்புப் பண்ணை முறை என அழைக்கப்படுகிறது. சந்தையில் அதிக பொருட்களை விற்று வருவாயைப் பெருக்குவது அவர்கள் நோக்கமல்ல. தங்களுடைய தேவைகளின் அளவிற்கேற்றவாறே அவர்கள் உற்பத்தி செய்கின்றனர்.

இலாபத்தை அதிகமாகப் பெற வேண்டுமென்ற நோக்கே அங்கு பெரும்பாலும் அமைந்திருப்பதில்லை. இந்திய விவசாயிகட்கு விற்பனை உபரியைப் பெற வேண்டுமென்ற எண்ணமே இருப்பதில்லை. வாணிப வேளாண்மையின் மூலமே அதிக உபரியை வேளாண்மையில் பெறமுடியும்.

## (4) கிராமங்களிலேயே விற்பனை (Sales in the Villages)

ரிசர்வ் வங்கி நியமித்த 'கிராமக் கடன் புள்ளிவிவரச் சேகரிப்புக் குழுவின் அறிக்கையின்படி' (The Rural Credit Survey committee Report) மொத்த விற்பனையில் 65% கிராமங்களிலேயே செய்யப் படுகின்றது. பெற்ற கடன்களைத் திருப்பித்தரவும் உற்பத்தியின் பெரும்பகுதி சிறு விவசாயிகளால் பயன்படுத்தப்படுகிறது. சிறிய விவசாயிகளின் உணவிற்காகவும், விதைகளுக்காகவும் பெரிய விவசாயிகள் தானியங்களைக் கடனாக அளிக்கின்றனர். இதனாலும் விற்பனை உபரியில் குறைவு ஏற்படுகின்றது. உணவு தானியங்களின் மொத்த உற்பத்தியில் விற்பனைஉபரி மூன்றில் ஒரு பங்கேயாகும். அரிசி, கோதுமை, மற்ற உணவுத் தானியங்களின் விற்பனை உபரி அவற்றின் மொத்த உற்பத்தியின் அளவுகளில் முறையே 33.1%, 35%, 25% ஆகும். சாதாரண விவசாயிகள் தரம் குறைந்த அரிசி, கோதுமைத் தானியங்களை நுகர்வதால் அவற்றின் விற்பனை உபரி சற்று உயர்வாக உள்ளது.

## (5) கூட்டுக் குடும்பமுறை (Joint Family System)

இந்தியச் சமுதாய வாழ்வு இணைந்த குடும்ப முறையைக் கொண்டது. ஒரு குடும்பத்தில் ஒருவரோ அல்லது ஒரு சிலரோ உழைக்க, அவர்களைச் சார்ந்து ஒரு பெரிய குடும்பமே அமைந்துள்ளது இந்தியா போன்ற ஒரு சில நாடுகளின் தனியியல்பாகும். உழைப்பாளர்களைச் சார்ந்துள்ளவர்கள் எவ்வேலையிலும் ஈடுபட்டிருப்பதில்லை ; அல்லது அவர்கள் 'மறைந்துள்ள வேலையின்மையில்' அமைந்துள்ளனர். இவர்கள் வேளாண்மைப் பொருட்களை நுகர்வதில் பங்கு கொள்வதால் விற்பனை உபரிக் குறைவு ஏற்படுகின்றது.

## (6) மத நம்பிக்கை (Religious Faith)

இந்திய விவசாயிகள் ஆன்மிக நம்பிக்கை அதிகம் கொண்டவர்கள். பொருட்களைச் சேர்ப்பதும், செல்வங்களை அடைவதும், வருவாயை அதிகமாகப் பெறுவதும் பரிசுத்தமான வாழ்வைக் கொடுக்க மாட்டா எனக் கருதுகின்றனர். உலக இன்பங்களைத் துறந்து வாழ்கின்ற வாழ்வே மீண்டும் நற்பிறவியெடுக்க உதவும் என்பது போன்ற பல மூட நம்பிக்கைகள் கொண்டு அவர்கள்

இருக்கின்றனர். நல்ல வாழ்க்கைத் தரத்தைப் பெற வேண்டு மென்று விரும்பாமல், பழைய முறை உணவு, உடை, இடம் போன்றவற்றிலேயே விருப்பு கொண்டு வாழ்கின்றனர். இந்நிலைகள் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கத்தை அவர்களுக்கு அளிப்பதில்லை. மேலும், உற்பத்தியின் பெரும் பகுதியை தருமத் திற்காகவும், அன்பளிப்பாகவும் கொடுக்கின்றனர். கிராமக் கோவிலுக்கும் உற்பத்தியின் ஒரு பகுதி செல்கின்றது. இவற்றால் இந்தியாவில் குறைந்த விற்பனை உபரியைப் பெறுவதே முடிகின்ற ஒன்றாகின்றது.

(7) பரந்த அறிவு வளர்ச்சியின்மை (Limited Mental Horizon)

வளர்ச்சியடையாத நாடுகளின் விவசாயிகள் பரந்த அறிவைக் கொண்டிருப்பதில்லை. அறியாமையாலும், உளவியல், பண்பாட்டுக் காரணிகளாலும், பழக்க வழக்கங்களாலும் அவர் களின் விருப்பங்கள் மிகக் குறைவாகவே உள்ளன. எளிய வாழ்க்கை எளிய, குறைந்த உற்பத்தியையும் அல்லது உபரியே இல்லாத உற்பத்தியையும் தருகின்றது.

(8) பயனற்றச் சமுதாயச் சடங்குகள் (Wasteful Social Ceremonies)

விற்பனை உபரியின் பெரும்பகுதி சமயச் சடங்குகட்கும், விருந்துகட்காகவும், தருமங்கட்காவும், பிச்சைக்காரர்கள், சந்நி யாசிகட்கு உணவளிப்பதற்காகவும், புண்ணியத்தலங்கள் என்று சொல்லப்படுகின்ற இடங்கட்கு யாத்திரை செல்லவும் செலவழிக் கப்பட்டு விடுகின்றது. கடவுளின் அருளாலேயே நல்ல அறு வடை கிடைக்கின்றது என இந்திய விவசாயிகள் கருதுகின் றனர். உற்பத்திக் குறைகின்ற காலங்களில் தங்களுடைய தவறு களாலேயே கடவுளின் அருள் கிட்டாமல் உற்பத்தி குறைவடை கின்றதெனத் தவறாகக் கருதுகின்றனர். கடவுளின் அருளைத் திரும்பப் பெற மேலும் மதச் செலவுகளை வீணே மேற் கொள் கின்றனர். வேளாண்மையே வாழ்வின் ஒரே வழியாக இருப் பதாலும், அதில் சமயக் கொள்கைகள் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதாலும், ஆக்கத்திற்கு உதவாதவைகளில் அதிக செலவு செய்யப் படுவதாலும் குறைந்த விற்பனை உபரியே தோன்றுகின்றது.

(9) ஓய்வில் விருப்பம் (Preference for Leisure)

சீதோஷ்ண நிலையை வெப்பமாகக் கொண்டுள்ள வளர்ச்சி யடையாத நாடுகளில் மக்கள் இயற்கையிலேயே சோம்பலைக் கொண்டவர்களாக உள்ளனர். செல்வத்தையும், வருவாய் உயர்

வையும் முக்கியமானவைகளாகக் கருதாமல் ஓய்வையே பெரிதும் விரும்புகின்றனர். இதன் விளைவு உற்பத்திக் குறைவாகும். குறைந்த உற்பத்தியால் விலையுயர்வு ஏற்படுவதால், குறைவான அளவு பொருட்களை விற்பதின் மூலமே அதிக வருவாயைப் பெற அவர்களால் முடிகின்றது. உழைப்பைச் சிறப்பாகப் பயன்படுத்த இது தடை செய்கின்றது. 'வருமானத்திற்கான தேவை நெகிழ்ச்சியானது' (Elasticity of Demand for Income) குறைவாகவே உள்ளது. பராமரிப்பிற்காக அவர்கள் உழைக்கின்றனர்; நல் வாழ்வைப் பெற வேண்டுமென்ற எண்ணமே அவர்களுக்கு இருப்பதில்லை. அதனால்தான் அவர்களால் குறைந்த அளவு விற்பனை உபரியை மட்டுமே பெற முடிகின்றது.

## (10) பதுக்குதல் (Hoarding)

கிராம வாசிகள் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகட்குத் தேவையான உணவுத் தானியங்களைக் கையிருப்பாகச் சேமித்து வைக்கின்றனர். இது பற்றாக்குறைக் காலங்களில் காப்பளிக்கும் என்று எண்ணுகின்றனர்; குறைந்த உற்பத்தியை மட்டுமே பெறும் காலங்கட்கு உதவும் என்று நினைக்கின்றனர். எதிர்காலத்தில் விலையுயர்வு ஏற்படும் என்ற இலாப நோக்கும் சிறிதளவு உள்ளது. உற்பத்தியில் பெறும் பகுதி இவ்வாறு பதுக்கப் படுவதாலும், சேமித்து வைக்கப் படுவதாலும் விற்பனை உபரி குறைவாகவே உள்ளது.

## (11) விற்பனைக் குறைகள் (Defective Marketing)

விற்பனை முறைகளின் குறைகளும் விற்பனை உபரியைக் குறைத்து விடுகிறது. இந்தியா போன்ற வளர்ச்சியடையாத நாடுகளில் பகிர்வு முறைகள் சிறப்பாகச் செயல் படுவதில்லை. போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் போதுமான அளவில் அமைந்திருப்பதில்லை. விவசாயிகளைச் சுரண்டி வாழும் தரகர்கள் எண்ணிக்கையில் மிகுதியாக உள்ளனர். விவசாயிகள் சந்தைக்குச் செல்வதையே விரும்பாமல் தவிர்ப்பதால் விற்பனை உபரி குறைவடைகிறது.

## (12) உணவுக்கான தேவையில் அதிக வருமானத் தேவை நெகிழ்ச்சி (High Income Elasticity of Demand for Food)

சமீபகால அதிக விலை உயர்வினால் விவசாயிகள் அதிக உணவின் நுகர்வில் ஈடுபடுகின்றார்கள். பிற தொழிற் பொருட்களைப் பெறுவதற்குத் தேவையான வருவாயைக் குறைந்த அளவுப் பொருட்களை விற்பதின் மூலமாகவே அவர்களால் பெற முடி

கின்றது. உணவுத் தானியங்கட்கான தேவையின் வருமானத் தேவை நெகிழ்ச்சி நகர்ப்புறங்களைவிட கிராமப் புறங்களில் உயர்வாக உள்ளது. இதுவும் விற்பனை உபரியைக் குறைக்கின்றது.

(13) பணவீக்கம் (Inflation)

விலையுயர்வுகளாலும் விற்பனை உபரியின் அளவு பாதிக்கப் படுகின்றது. பொதுவாக, விலை உயரும் போது உற்பத்தியாளர்கள் சந்தையில் அதிக பொருட்களை விற்பனை செய்வார்கள். ஆனால் இந்தியா போன்ற நாடுகளில் இது நடைபெறுவதில்லை. விலை உயரும் போது, விற்பனைக்காகக் குறைந்த அளவு பொருட்களே சந்தைக்குக் கொண்டு வரப்படுகின்றன. இதற்குக் காரணம் மேலும் விலையானது உயரும் என்ற எண்ணமாக இருக்கலாம். அல்லது அவர்களின் உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளப் போதுமான பணத்தைக் குறைந்த அளவுப் பொருட் களை விற்பதின் மூலமாகவே அவர்கள் பெற்றுவிட முடிகின்றது. விலையானது குறையும் போது, மேலும் விலைக்குறைவு ஏற்படு மென்ற பயத்தினால் சந்தைக்கு அதிக அளவுப் பொருட்கள் விற்பனைக்குக் கொண்டு வரப்படுகின்றன. விவசாயிகளிடம் உள்ள உண்மையான விற்பனை உபரி மிகக் குறைவான அளவினதேயாகும். விலைகள் குறையும் போது, தங்களுடைய அவசியத் தேவைகளைச் சமாளிக்க அதிக அளவு பொருட்களை விற்பனை செய்வது அவசிய மாகின்றது. விலை உயர்வு ஏற்படும் காலங்களில் வேளாண்மையைச் சார்ந்தவர்கள் அதிக நுகர்வில் ஈடுபடுகின்றனர்; ஏனெனில், பிற தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள குறைந்த அளவுப் பொருட் களை விற்பனை செய்வதே போதுமானதாகின்றது. சமீப காலங் களில் ஏற்பட்ட விலையுயர்வுகளால் விற்பனை உபரியானது பாதிக்கப்பட்டுள்ளது.

(14) தன்னிறைவு (Self-Sufficiency)

முன்னேற்றமடையாத மிகப்பல இந்தியக் கிராமங்களில், இன்று கூட தன்னிறைவுக்காகவே வேளாண்மை உற்பத்தி மேற் கொள்ளப்படுகிறது. கிராமங்களின் எல்லாத் தேவைகளும் கிராமப் பொருட்களின் மூலமாகவே பூர்த்தி செய்து கொள்ளப் படுகின்றன. தன்னிறைவே கிராமவாசிகளின் முக்கிய நோக்கமாக அமைந்துள்ளது. எனவே 'விற்பனை உபரி' ஏற்பட வாய்ப்பே ஏற்படுவதில்லை. உபரி ஏற்பட்டாலும் அதை விற்பனை செய்ய வசதிகள் இல்லாமையால், உற்பத்தியை உயர்த்த விவசாயிகள் ஊக்கம் பெறுவதில்லை. இந்நிலையின் விளைவும் குறைந்த விற்பனை உபரியே.

தீர்வுகள் (Remedies)

மேற் குறிப்பிட்டுள்ள விற்பனை உபரிக் குறைவிற்கான காரணங்களை ஆராய்ந்து, அக்குறைகளை நீக்கினால் விற்பனை உபரியின் அளவை அதிகரிக்கலாம். கீழ்க்காணும் சில முக்கிய முறைகளின் மூலமாகவும் அதிக உபரியைப் பெறலாம்.

(1) **பொதுக்கல்வி** (General Education)

கல்வியறிவைப் பரப்புவதின் மூலமாக, மக்களிடம் நல்ல வாழ்க்கைத் தரத்தைப் பெற வேண்டுமென்ற எண்ணத்தைப் ஏற்படுத்தலாம். அதிக அளவு உற்பத்தியைப் பெருக்குவதே நல் வாழ்விற்கு வகை செய்யும் என்பதை விவசாயிகளுக்கு உணர்த்த வேண்டும். மேலும் அவர்களின் ஆன்மீக வாழ்விலும் பல நன்மைகளும் ஏற்படும். உற்பத்தி உயர்வால் மற்றவர்களுக்கு உதவலாம்; அதிக தருமங்களைச் செய்யலாம்; சன்னியாசிகளுக்கு உணவளிக்கலாம்; தலயாத்திரைகட்குச் செல்லலாம். சரியான கல்வியின் மூலம் தவறான ஆன்மீக மத நோக்குகளைத் தவிர்க்கலாம். "நாகரிக முன்னேற்றமடையாத நாட்டை நாகரிக முள்ளதாக மாற்றுவது கடினமானது. சரியான விருப்பங்களைத் தெரிந்தெடுத்து அதற்கேற்ப கடின உழைப்பைக் கொண்டு அச்செல்வங்களை உற்பத்தி செய்ய வேண்டுமென" மால்தஸ் கூறுகிறார். விவசாயி களின் பலவகை விருப்பங்களும் தோன்றும் போதுதான் வேளாண்மை விற்பனை உபரி உயர்வடையும். தன்னிறைவுக்கான உற்பத்தியைத் தவிர்க்கா விட்டாலும், வேலைப் பகுப்பு முறை பின்பற்றப் படாவிட்டலாம், புதிய விருப்பங்கள் தோன்றா விட்டாலும், வணிக நோக்கோடு உற்பத்தி மேற் கொள்ளப் படா விட்டாலும் விற்பனை உபரி அதிகரிக்காது.

(2) **நுகர்வைக் கட்டுப்படுத்துதல்** (Curtailing Consumption)

பொருட்களைக் கட்டாயக் கொள்முதல் செய்வதின் மூலமும், வரி விதிப்பின் மூலமும் வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர் களின் நுகர்வைக் கட்டுப்படுத்தலாம். சாதாரணமாக, உற் பத்தியைப் பெருக்குவதின் மூலம் விற்பனை உபரியை அதிகம் பெறலாம். உற்பத்தியைப் பெருக்காமலேயே, நுகர்வைக் கட்டுப் படுத்தி விற்பனை உபரியை உயர்ந்த அளவில் பெற முடியும்.

"நிலவரியை உயர்த்துவதின் மூலம் அரசின் வரி வருவாயை அதிகமாகப் பெறுவதோடு, நகர வரிவிதிப்பிற்கும் கிராம வரி விதிப்பிற்கும் இடையே சம நிலையும் ஏற்படும்," என டாக்டர் கே. என். ராஜ் (Dr. K. N. Raj) கருத்து தெரிவிக்கிறார். விவசாயி

களின் மீதான அதிக வரி விதிப்பு, அவர்களை அதிகப் பொருட்களைச் சந்தைக்குக் கொண்டு வரச் செய்யும்.

(3) விலையை ஒழுங்குப் படுத்துதல் (Price Regulation)

சந்தைக்குப் பொருட்கள் அதிக அளவில் வரும் வகையில் விலைகள் ஒழுங்குப் படுத்தப்பட வேண்டும். விலையுயர்வினால் விற்பனை உபரி குறையும் போது, விலையைக் குறைத்துச் சமநிலைப் படுத்த வேண்டும். சோம்பலைக் கொண்ட விவசாயிகள் அதிக ஓய்வை விரும்புகின்றனர். இதனால் விலையுயர்வு அவர்களின் உற்பத்தியைக் குறைக்கும். பணவீக்க நிலையைத் தடுத்து விற்பனை உபரியை அதிக அளவில் விவசாயிகளிடமிருந்து பெறுவது அவசியம் வேளாண்மைப் பொருட்களின் விலை உயர்வு வீதம் பிற தொழிற் பொருட்களின் விலை உயர்வு வீதத்தை விட குறைவாக இருக்க வேண்டும். விவசாயிகள் அப்போதுதான் அதிக உற்பத்தியைப் பெற தீவிர முயற்சிகளோடு சாகுபடியில் ஈடுபடுவார்கள்.

(4) இறுதியாக, விவசாயிகளைச் சந்தைக்கு வரும்படிச் செய்ய முன்னேற்றமடைந்த விற்பனை வசதிகள் தேவை. போக்குவரத்து வசதிகள், சந்தை நிலவரங்களை விவசாயிகட்கு அறியச் செய்தல், கிட்டங்கிகளை ஏற்படுத்துதல், நிறுவை, அளவு முறைகளைச் சீர்திருத்துதல், கடன் அளித்தல், நேர்மையற்ற முறையில் விற்பனை நடைபெறுவதைத் தடை செய்தல், ஒழுங்கு படுத்தப் பெற்ற சந்தைகளை ஏற்படுத்துதல் போன்றவைகளின் மூலமாகச் சிறந்த விற்பனை வசதிகளைப் பெற முடியும். இதில் மிக முக்கிய மானது, கூட்டுறவுக் கடன், கூட்டுறவு விற்பனை, கூட்டுறவுக் கிட்டங்கி ஆகிவற்றிற்கிடையே தொடர்பை ஏற்படுத்துவதாகும்.

இவையாவும் வேளாண்மை உற்பத்தியை அதிகரித்து அதிக விற்பனை உபரியைப் பெற உதவும். உயர்வடைந்த வேளாண்மை விற்பனை உபரி மூலம் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் விரைவான முன்னேற்றத்தைப் பெற முடியும்.

# 13. வளர்ச்சியடையாத நாட்டின் பணக்கொள்கை

## (Monetary Policy in an Underdeveloped Country)

### விளக்கமும் முக்கியத்துவமும் (Meaning and Importance)

பண ஆட்சியாளர்கள் பணத்தைப்பற்றியவைகளில் பலவகைக் கொள்கைகளைக் கொண்டுள்ளனர். மாறுகின்ற பொருளாதாரச் சூழ்நிலைகட்கும், தேவைகட்கும் ஏற்றவாறு பணக் கொள்கைகளில் மாற்றங்கள் செய்யப்படுகின்றன. பணக்கொள்கை பல வகைகளில் நிர்வகிக்கப்படுகின்றது. பின்வருபவை அதில் முக்கியமானவைகளாகும்.

(i) நிதி நிறுவனங்களைக் கட்டுப்படுத்துதல்.

(ii) காகிதப் பணத்தைப் பெறுவதின் மூலமும், அளிப்பதின் மூலமும் பணநிலைகளில் மாற்றங்கள் செய்தல்.

(iii) காகிதப் பணத்தைப் பெறுவதிலும், அளிப்பதிலும் வட்டி வீதங்களை நிர்ணயித்தல்.

(iv) கடன்பத்திரங்கள், பங்குகள் போன்றவைகளின் விலையை நிலைப்படுத்தல்.

(v) பண சம்பந்தமான பொறுப்பு, கடமை போன்றவற்றை ஏற்றல்.

பொருளாதார முன்னேற்றத்தை விரைவாக்கப் பணக் கொள்கை பல வழிகளில் உதவுகின்றது. பணவீக்கத்தைக் கட்டுப் படுத்தவும், அயல் நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்து நிலையைத் தவிர்க்கவும், பண அளவு, கடன் அளவுகளைக் கட்டுப் படுத்தவும் பணக்கொள்கை பயன்படுத்தப் படுகின்றது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது வாணிபத்தின் அளவு பெருகுகின்றது; மக்கட்பெருக்கம் அதிகரிக்கின்றது. பணத் துறையும் விரிவடைகின்றது. மாறுபடுகின்ற பொருளாதார நிலைகட்கு ஏற்ப நெகிழ்ச்சியுள்ள கடன் அளிப்பு (Elastic Credit Supply) அவசியமாகிறது.

பணக்கொள்கை பலவிதப் பணிகளைப் பெறுவதற்காகப் பயன் படுத்தப்படுகின்றது. அப்பணிகளில் சிலவற்றை டாக்டர் ஜே. டி. சேத்தி (Dr. J. D. Sethi) குறிப்பிடுகின்றார் :

"(1) பொருத்தமான வட்டிவீத நிலையின் நன்மையைப் பெறவும், அந்த நன்மையைச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ளவும் ;

(2) பணத் தேவைக்கும் அளிப்பிற்கும் இடையே சரியான சமநிலையை ஏற்படுத்தவும் பணக்கொள்கை உதவும்.

(3) வளர்கின்ற பொருளாதாரத்திற்கு கடன் வசதிகள் செய்வதும், கடனை மிக அதிக அளவு பெருகாமல் கட்டுப்படுத்து வதும், கடனை கடன் தேவையின் அவசிய நிலைக்கு ஏற்றவாறு அளிப்பதும்;

(4) நிதி நிறுவனங்களை ஏற்படுத்துவதும், சிறப்பாக அவற்றைப் பணியாற்றும்படி செய்வதும், அவற்றை முன்னேற்ற மடையச் செய்வதும்.

(5) கடன் நிர்வாகமும், அதனுடைய சிறப்பான பணிகளும் நல்ல பணக்கொள்கையால் கிடைக்கின்றன."[1]

## பணக்கொள்கையின் முக்கிய தன்மைகள் (Main Features of Monetary Policy)

வளர்ச்சியடையாத நாட்டின் பணக்கொள்கையின் தன்மைகளைப் பலவகைகளில் விளக்கலாம்.

### I. நிதி நிறுவனங்களை ஏற்படுத்துவதும், விரிவடையச் செய்தலும் (Creation and Expansion of Financial Institutions)

வளர்ச்சியடையாத நாட்டில், பணக்கொள்கையின் பல நோக்கங்களில் பண, கடன் முறைகளை முன்னேற்றமடையச் செய்தல் முக்கிய ஒன்றாகும். கடன் வசதிகளைத் தரக்கூடிய பல வங்கிகள், நிதி நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும். இவை மக்களைத் தாங்களாகவே சேமிக்கத் தூண்டி, அச் சேமிப்புக்களை உற்பத்தித் துறைகளில் முதலீடாக்கும்படி செய்ய வேண்டும். வளர்ச்சியடையாத நாடுகளில் வங்கிகள் அதிக அளவில் நகர்ப் புறங்களிலேயே அமைந்துள்ளன. அவை பெரிய தொழில்கட்கும், வாணிப நிறுவனங்கட்கும், தோட்டப் பயிர்ப் பண்ணைகட்கும்

[1] J. D. Sethi, Problems of Monetary Policy in an Under-developed Country, P. 94.

மட்டுமே பெரிதும் கடன் அளிக்கின்றன. இதைத் தவிர்க்க கிராமப்புறங்களிலும் வங்கிகளின் கிளை நிறுவனங்கள் தொடங்கப் படவேண்டும். அவை விவசாயிகட்குக் கடன் அளிக்க வேண்டும்; சிறு வணிகர்கட்கும் வியாபாரிகட்கும் கூட கடன் தருதல் அவசியம். பணக்கொள்கை சிறப்பானதாக இருக்க மத்திய வங்கி சிறப்பாகப் பணியாற்ற வேண்டும் ; அது அதிக அதிகாரங்களைக் கொண்ட தாகவும் இருக்க வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் குறுகிய காலக் கடன்களை மட்டுமே வணிக வங்கிகள் அளிக்கின்றன. கிராமப் பகுதி களில் கடன் வசதிகளே பெரும்பாலும் அமைந்திருப்பதில்லை, கிராம மக்கள் 'வட்டிக்குப் பணம் கடன் கொடுப்பவரிடமே, (Money-Lender) அதிக வட்டி வீதத்திற்குக் கடன் பெற வேண்டி யுள்ளது. பங்குகள், கடன்பத்திரங்கள் விற்கக் கூடிய சந்தைகள் சிறப்பாக அமைக்கப்பட்டிருப்பதில்லை. அவை முன்னேற்ற மடைந்தும் இருப்பதில்லை. இக் குறைபாடுகளைத் தவிர்க்க நாட்டின் மத்திய வங்கி முக்கிய பங்கேற்று, நல்ல பணக்கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

அரசின் நிதிப்பதிலாளியாக (Fiscal Agent) மத்திய வங்கி செயல்படுகின்றது ; பொதுக்கடனையும் நிர்வகிக்கின்றது. அது அரசின் கடன்பத்திரங்களை வெளியிடுகின்றது ; அல்லது வணிக வங்கிகளின் மூலமாகவும் வெளியிடப்படுகின்றன. வளர்ச்சியடை யாத நாட்டில் முன்னேறாத 'உண்டியல் சந்தையும்' (Bill Market) இருப்பதால், கடன்பத்திரங்களின் சந்தை மத்திய வங்கியால் அமைக்கப்பட வேண்டும்.

விவசாயிகளுக்கு குறுகிய கால, மத்தியகால, நீண்டகாலக் கடன்களைக் குறைந்த வட்டிக்கு அளிக்க நிதியமைப்புக்கள் ஏற்படுதல் வேண்டும். இதன் மூலம்தான் கிராமத்தின் 'வட்டிக்குப் பணம் கடன் கொடுப்பவர்களைக்' குறைக்கலாம். மத்திய வங்கியின் உதவியோடு 'கூட்டுறவுக் கடன் சங்கங்களை' (Co-Operative Credit Societies) அமைத்தல் கிராமவாசிகட்குப் பல நன்மைகளையும் அளிக்கும்.

பல வசதிகளையும் கொண்டுள்ள மத்திய வங்கி 'தொழில் வங்கிகளையும்' (Industrial Banks) ஏற்படுத்த உதவலாம் ; நிதிக் கழகங்களையும் (Financial Corporations) தோற்றுவிக்கலாம்.

மத்திய வங்கி பணச் சந்தையின் (Money Market) காப்பாள ராகவும் திகழ்கின்றது. அதனிடம் வணிகவங்கிகளைக் கட்டுப் படுத்தும் அதிகாரங்கள் போதுமானவைகளாக உள்ளன. 'மத்திய

வங்கி வணிக வங்கிகளைக் கட்டுப்படுத்துவதே பணக்கொள்கையின் முக்கிய ஆயுதமாகும்'. அது வங்கிகளை நீண்டகாலக் கடன்களையும், மத்தியகாலக் கடன்களையும் அளிக்கத் தூண்டும்.

இந்தியாவின் ரிசர்வ் வங்கி, 1949 ஆம் ஆண்டின் வங்கிக் கம்பெனிகளின் சட்டப்படி (Banknig Companies Act), வணிக வங்கிகளைக் கட்டுப்படுத்த அதிக அதிகாரங்களைக் கொண்டதாக உள்ளது. இச் சட்டத்தில் சில சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டாலும் மத்திய வங்கியின் அதிகாரங்கள் அதிகமாகவே உள்ளன.

சுதந்திரம் அடைந்த பின்பு இந்திய ரிசர்வ் வங்கி, நாட்டில் நிதிநிறுவனங்களை ஏற்படுத்துவதிலும், மேம்படுத்துவதிலும், சிறப்பாகப் பணியாற்றச் செய்வதிலும் தன்னுடைய நல்ல கொள்கையினால் வெற்றியைப் பெற்றுள்ளது. வேளாண்மை, தொழில் முன்னேற்றங்கட்குத் தேவையான நீண்டகால, மத்தியகால, குறுகிய காலக் கடன்களை அளிக்கும் நிதிநிறுவனங்களை அது ஏற்படுத்தியது. தொழில் நிதியைப் பெருக்க 'தொழில் நிதிக்கழகம்' (Industrial Finance Corporation), 'மாநில நிதிக்கழகங்கள், (State Finance Corporations), 'தேசிய தொழில் முன்னேற்றக் கழகம்' (National Industrial Development Corporation), 'தொழிற் கடன் முதலீட்டுக் கழகம்' (Industrial Credit and Investment Corporatoin), 'தேசிய சிறு தொழில்கள் கழகம்' (National Small Industries Corporation), 'இந்திய தொழில் அபிவிருத்தி வங்கி' (Industrial Development Bank of India) ஆகிய நிதி அமைப்புகளை ஏற்படுத்த ரிசர்வ் வங்கி உதவியது. ஏற்றுமதியாளர்கட்குக் கடன் வசதியளிக்க 'ஏற்றுமதிக் கடன், காப்புக் கழகம்' (Export Credit and Guarantee Corporation) அமைக்கப்பட்டது.

1955-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் முதல் நாள் 'இந்தியாவின் இம்பீரியல் வங்கி' (Imperial Bank of India) தேசியமயமாக்கப்பட்டு 'இந்தியாவின் அரசு வங்கி' (State Bank of India) என அழைக்கப்பட்டது. இது அரசு உடைமையாகக் கொண்ட வணிக வங்கியாகும். நாடு முழுதும் வங்கி வசதிகளை பெருக்க இது உதவியது. குறிப்பாக கிராமப் பகுதிகளிலும் வங்கி வசதிகள் இதனால் ஏற்பட்டன. 1967 டிசம்பர் திங்களில் ரிசர்வ் வங்கிகளின் மீது 'சமூகக் கட்டுப்பாட்டைக்' (Social Control) கொண்டு வந்தது. அதன் மூலம் விவசாயிகட்கும், சிறு தொழில்கட்கும் கடன் வசதிகளைத் தர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. 1969 ஜூலைத் திங்களில் இந்திய அரசு 50 கோடி ரூபாய் மூலதனத்திற்கு மேல் வைத்திருந்த 14 வங்கிகளை நாட்டுடைமையாக்கியது. வங்கித்தொழிலில் அமைந்திருந்த முற்

றுரிமை நிலையைத் தவிர்க்கவும், கிளை வங்கிகளைப் பல கிராமங்களில் ஏற்படுத்தவும், வைப்பு நிதிகளை இலாப நோக்கின்றி பொருளாதார முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தவும் இவ் வணிக வங்கிகள் நாட்டுடைமையாக்கப் பட்டன. இந்நடவடிக்கை, பொதுமக்களின் சேமிப்பை முன்னேற்றத்திற்குச் சிறப்பாகப் பயன்படுத்தி முன்னேற்ற வேகத்தை விரைவு படுத்துமெனலாம்.

இந்திய ரிசர்வ் வங்கி 'மாநிலக் கூட்டுறவு வங்கிகட்கு' (State Co operative Banks) கடன் அளிக்கின்றது. ரிசர்வ் வங்கி கூட்டுறவுத் துறைக்குத் தருகின்ற கடனை இவற்றின் மூலமாகவே தருகின்றது. 'முதல்நிலைக் கடன் சங்கங்களின்' (Primary Credit Societies) நிதி நிலையில் இதனால் முன்னேற்றம் ஏற்படுகின்றது.

1952-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களுக்கு முன் இந்தியாவில் உண்டியல் சந்தை' (Bill Market) அமைந்திருக்கவில்லை. 1952-இல் இந்திய ரிசர்வ் வங்கி உண்டியல் சந்தையைத் தொடங்கியது. இப்போது இத்திட்டம் எல்லாவகை வங்கிகளிலும் அமைந்திருக்கின்றது. இத்திட்டத்தின்படி, ரிசர்வ் வங்கி 'வாக்குறுதிப்பத்திரங்கள்' (Promisory Notes) கருவூல உண்டியல்கள் (Treasury bills), ஏற்றுமதி உண்டியல்கள் (Export Bills) போன்றவற்றிற்கு எதிராகக் கடன்களை வழங்குகின்றது.

ஆனால் பண, நிதி நிறுவனங்கள் மட்டும் அடிப்படை முன்னேற்றத்தை நேரடியாகத் தருமெனக் கூறமுடியாது. முன்னேற்றத்திற்கு அடிப்படையாகத் திகழ்வது தொழில்களாகும்; தொழில் முயல்வோர்களும் முன்னேற்றத்திற்கு உதவுகின்றனர். அடிப்படை முன்னேற்றத்தைப் பெற்ற பிறகு, பணக்கொள்கை மேலும் விரைவான முன்னேற்றதைப் பெற உதவும்.

## II. சரியான வட்டி வீதக் கொள்கை (A Suitable Interest Rate Policy)

வளர்ச்சியடையாத நாட்டில் வட்டிவீதம் மிக உயர்வாகவே உள்ளது. பொருளாதாரத்தின் பல துறைகளிலும் நீண்ட கால, குறுகிய காலக் கடன்களிடையே வட்டிவீதத்தில் அதிக வேறுபாடு இருக்கிறது. வளரும் பொருளாதாரத்தில், உயர்ந்த வட்டி வீதம் பொதுத்துறை, தனியார் துறைகளில் முதலீட்டில் குறை வைத்துத் தருகிறது. வளர்ச்சிக்கு அது ஒரு தடையாகவே அமைகின்றது எனலாம்.

குறைந்த வட்டிவீதம், வேளாண்மையிலும், தொழில் துறையிலும் தனியார் முதலீட்டை ஊக்குவிக்க உதவும். வளர்ச்சி

யடையாத நாட்டில் வாணிபத்தில் ஈடுபட்டிருப்பவர்களும் குறைந்த சேமிப்பையே செய்ய முடிகின்றது. இந்நிலையில் குறைந்த வட்டியில் மூலதனம் கிடைக்கப் பெற்றால்தான் அவர்கள் வங்கி அல்லது மூலதனச் சந்தையிலிருந்து கடன் பெற்று முதலீடு செய்வார்கள்.

பொதுத்துறை முதலீட்டை ஊக்குவிக்கவும் 'குறைந்த வட்டி வீதக் கொள்கை' (Low Interest Rate Policy) அவசியமானது. குறைந்த வட்டிவீதக் கொள்கையை 'மலிவுப் பணக்கொள்கை' (Cheap Money Policy) எனவும் கூறலாம். இது மக்களிடமிருந்து மலிவாகக் கடன் பெற உதவுகிறது ; பொதுக் கடனைத் திருப்பித் தருவதற்கான செலவும் குறைகிறது ; பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியாக்கம் செய்யவும் வகை செய்கிறது. மலிவுப்பணம் அயல் நாட்டு முதலீட்டாளர்களை முதலீடு செய்யத் தூண்டுமெனலாம்.

ஒரு வளர்ச்சியடையாத நாட்டின் குறைந்த வட்டிவீதக் கொள்கை தீமைகளைக் கொண்டிராமல், நன்மைகளைக் கொண்டுள்ளது எனக் கூற முடியாது. சில தீமைகளையும் அது கொண்டுள்ளது. ஊக வணிக நோக்கிற்காக (Speculative Purposes) கடன் பெறப்பட்டு முதலீடு செய்யப்படுவதை இது ஊக்குவிக்கின்றது. உற்பத்தி முதலீட்டிற்கான நிதி அளவில் குறைகின்றது. முதலீட்டாளர்கள் இலாப நோக்கு கொண்டவர்கள். குறைந்த வட்டிவீதத்தைத் தரும் அரசின் கடன்பத்திரங்களை அவர்கள் வாங்குவதில்லை. குறைந்த வட்டிவீதம் ஒரு பொருளாதாரத்தின் சேமிப்பு வளர்ச்சியைத் தடை செய்கிறது.

ஊக வணிகத்திற்கான கடன்களும், முதலீடுகளும் குறைய, மத்திய வங்கி 'பேதங்காட்டும் வட்டிவீதங்களின் கொள்கையைப்' (Policy of Discriminatory Interest Rates) பின்பற்றவேண்டும். அவசியமற்ற உற்பத்திக்கு உதவாத கடன்களுக்கு அதிக வட்டியையும், உற்பத்திக்குப் பயன் படுத்தப்படும் கடன்களுக்கு குறைந்த வட்டியையும் வசூலிக்கலாம். இதனால் வளர்ச்சியடையாத நாட்டில் சேமிப்புகள் 'வட்டி-நெகிழ்ச்சியைக்' (Interest-Elastic) கொண்டுள்ளன எனக் கூற இயலாது. இவ்வகைப் பொருளாதாரங்களில் வருவாயின் அளவு குறைவாக இருப்பதால், உயர்ந்த வட்டிவீதம் 'சேமிக்கும் விருப்பத்தை' (Propensity to Save) உயர்த்தும் என்று கூற முடியாது.

பொருளாதார வளர்ச்சியைப் பொறுத்த அளவில், வளரும் நிலையில் வளர்வீதத்தில் விலை உயர்வு இருப்பது தவிர்க்க இயலாதது. பணத்தின் மதிப்பு குறைகிறது; சேமிக்கும் விருப்பம் மேலும் குறை

கிறது. இந்நிலைகள் வட்டிவீத உயர்வை ஏற்படுத்துகின்றன. இது பணவீக்க நிலையைத் தருகின்றது. அப்போது பணவீக்க நிலையைத் தவிர்க்க, வட்டிவீதத்தை உயர்த்துவது பல தீமைகளை விளைவித்து விடும். சிறப்பான கட்டுப்பாடுகள் இல்லாவிடில், 'மலிவுப் பணக்கொள்கை' இவ்வாறு விலை உயர்வுகளைத் தரும் பணவீக்க நிலையை ஏற்படுத்தும். குறைந்த வட்டிவீதக் கொள்கைக்கு உதவுவது நிலையான விலை அளவேயாகும்.[1]

இந்தியாவின் பணக்கொள்கை மேற்கண்ட முறைகட்கு ஏற்ப பின்பற்றப்பட்டு வருகிறது. இந்தியாவின் ரிசர்வ் வங்கி பணவீக்கக் காலங்களில் 'கடினப் பணக் கொள்கையைப்' (Dear Money Policy) பின்பற்றுகிறது. பொருளாதார மந்த காலங்களில் 'மலிவுப் பணக் கொள்கை' கைக்கொள்ளப் படுகிறது. 1935-ஆம் ஆண்டிற்குப் பின் முதன் முறையாக நவம்பர் 1951-ஆம் ஆண்டில் வங்கி வீதம் (Bank Rate) 3 சத வீதத்திலிருந்து $3\frac{1}{2}$ சத வீதத்திற்கு உயர்த்தப் பட்டது. இரண்டாவது, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டங்களின் முன்னேற்றச் செலவுகளால் பணவீக்க நிலை ஏற்பட்டது. பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த வங்கி வீதம் மே 1957-இல் $3\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து 4 சதவீதமாக உயர்த்தப் பட்டது; ஜனவரி 1963-இல் $4\frac{1}{2}$ சதவீதத்திற்கும், செப்டம்பர் 1964-இல் 5 சதவீதத்திற்கும், பிறகு பிப்ரவரி 1965-ல் 6 சதவீதத்திற்கும் உயர்த்தப் பட்டது. இதோடு, விலைக் கட்டுப்பாடுகள் (Price Controls) கொண்டுவரப் பட்டன. பல வேளாண்மைப் பொருட்களும், தொழிற் பொருட்களும் விலைக்கட்டுப்பாடுகளுடன் விற்பனை செய்யப் பட்டன.

1966-67-இன் பிற்பகுதியில் சில தொழில்களில் மந்த நிலை தோன்றியது. அதை நீக்க அரசு ரூபாய் மதிப்புக் குறைப்பை ஜூன் 1966-இல் செய்தது. பிற தீர்வு முறைகளும் பின்பற்றப் பட்டன. இத்தீர்வுகளும், முறைகளும் வெற்றியை அளிக்காத காரணத்தால் இந்திய ரிசர்வ் வங்கி மார்ச் 1968-இல் வங்கி வீதத்தை 6 சதவீதத்திலிருந்து 5 சதவீதமாகக் குறைத்தது. இதைத் தொடர்ந்து கட்டுப்பாடுகள் தளர்த்தப் பட்டன. உதாரணமாக இரும்பு, நிலக்கரி, காகிதம், உரங்கள் போன்றவற்றிலிருந்த கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டதால் தொழில் முன்னேற்றம் மீண்டும் பெறப்பட்டது.

இந்திய ரிசர்வ் வங்கி செப்டம்பர் 1964-ஆம் ஆண்டிலிருந்து மாறுபடுகின்ற பொருளாதாரச் சூழ்நிலைகட்கு ஏற்ப 'வேறுபாடுள்ள

[1] J. D. Sethi, Problems of Monetary Policy in an Underdeveloped Country, pp. 94-97.

வட்டி வீதங்களைப் பின்பற்றி வருகிறது. ரிசர்வ் வங்கி நிர்ணயிக்கின்ற வேறுபாடுள்ள வட்டி வீதங்கள் கடனைப் பெறுகின்ற வங்கிகளின் 'நிகர நீர்மை வீதத்தோடு' (Net Liquidity Ratio) தொடர்பைக் கொண்டுள்ளன. பிப்ரவரி 1965-இல் ஒரு வங்கி, ரிசர்வ் வங்கியிடமிருந்து, 30 சதவீதம் அல்லது அதற்கு மேலாக நிகர நீர்மை வீதத்தைக் கொண்டிருந்தால் கடனை வங்கி வீதத்திற்குப் பெற முடிந்தது. நிகர நீர்மை வீதமானது குறையும் போது, வங்கிகள் வங்கி வீதத்தைக் காட்டிலும் அதிக வட்டியை ரிசர்வ் வங்கிக்கு தாங்கள் பெற்ற கடனுக்காக அளிக்க வேண்டியிருந்தது. அயல்நாட்டு வங்கிகள், பெரும் வங்கிகளின் கடன் கொடுக்கும் வட்டி வீதத்திற்கு உச்ச வரம்பு கொண்டு வரப்பட்டு, அது 10 சதவீதமாக அமைந்தது. அக்டோபர் 1966-இல் இத்திட்டத்தில் வேறு சில மாற்றங்களையும் கொண்டு வந்தது. இந்திய ரிசர்வ் வங்கி, மாறுபடுகின்ற பொருளாதாரத்தின் தேவைகட்கு ஏற்ப இணக்கமான, வேறுபாடுள்ள வட்டி வீதக் கொள்கையைப் பின்பற்றி வருகிறது. பொருளாதார நடவடிக்கைகளில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றமையால், இவ்விதக் கொள்கை இன்றியமையாததாகும்.

## III. கடன் நிர்வாகம் (Debt Management)

மேம்பாடடைந்து வரும் ஒரு நாட்டின் பணக்கொள்கையின் முக்கிய பணிகளுள் 'கடன் நிர்வாகமும்' ஒன்றாகும். அது சரியான காலத்தில் அரசின் கடன் பத்திரங்களை வெளியிடவும், அவற்றின் விலையை நிலைப்படுத்தவும், பொதுக்கடன் பணிகட்கான செலவைக் குறைக்கவும் முயல்கின்றது. மத்திய வங்கியே அரசின் கடன் பத்திரங்களை விற்பதிலும் வாங்குவதிலும் ஈடுபடுகின்றது. பொதுக் கடன் அமைப்பு முறைகளிலும் மத்திய வங்கி மாற்றங்களைச் செய்கிறது. கடன் நிர்வாகத்தின் முக்கிய நோக்கம், பொது மக்களிடமிருந்து அரசு பெறுகின்ற கடனின் அளவைப் படிப்படியாக பெருக்குவதாகும். பொதுக்கடனின் சுமையைக் குறைக்க, குறைந்த வட்டி வீதத்தையே அரசின் கடன் பத்திரங்களுக்கு அளிக்க வேண்டும்.

அரசின் கடன் பத்திரங்களை அதிக அளவிற்குப் பரப்ப, குறைந்த வட்டி வீதக் கொள்கை அவசியமானது. குறைந்த வட்டி வீதம் அரசின் கடன் பாத்திரங்களின் விலையை உயர்த்தும் மக்களும் அவற்றை விரும்பி வாங்குவார்கள். அரசின் பொதுக் கடன் திட்டங்களும் வெற்றி பெறும். பொதுக்கடனைத் திருப்பித் தரும்போதும், குறைந்த வட்டி வீதமானது நன்மையைத் தரும். கடன் பத்திரங்களுக்கான தேவை வளர்ச்சியடையாத நாடுகளில்

குறைவாக உள்ளன. அவற்றின் தேவையைப் பெருக்குவதற்காக நடவடிக்கைகள் அரசினால் எடுக்கப்பட வேண்டும். பொதுக்கடன் நிர்வாகம் அரசின் கடன் பத்திரங்களின் தேவையைப் பெருக்கு தாக அமைய வேண்டும்.

பொதுக்கடன் நிர்வாகம் சிறப்பாக அமைய வேண்டும். பணக் கொள்கை நன்றாக அமைய அதுவே உதவும். இவையிரண்டும் சிறப்படைய முன்னேற்றமடைந்த பண, மூலதனச் சந்தைகள் இருக்க வேண்டும். அச்சந்தைகளில் நீண்ட கால, குறுகிய காலக் கடன்பத்திரங்கள் இருத்தல் அவசியம். வளர்ச்சியடையாத நாட்டில், இக்காரணிகள் சிறப்பாக அமையாவிட்டால், பொதுக் கடன் நிர்வாகத்தை வெற்றியோடு மேற்கொள்ள முடியாது. எனினும், நம் நாட்டில் இந்திய ரிசர்வ் வங்கி மெச்சத்தக்க வகையில் பொதுக்கடனை நிர்வகித்து வருகின்றது. அது மத்திய அரசிற் காகவும், மாநில அரசுகட்காகவும் கடன் பத்திரங்களை வெளியிட்டு மூலதனத்தை திரட்டுகின்றது. அது சமுதாயத்தின் சேமிப்பைத் திரட்ட உதவுகிறதெனலாம்.

## IV. பணத்தேவையையும் பண அளிப்பையும் ஒழுங்குபடுத்துதல் (Adjustment Between Demand for and Supply of Money)

பணக் கொள்கையே பணத்தின் தேவையையும், பணத்தின் அளிப்பையும் சரிப்படுத்தும் முக்கிய கருவியாகும். இரண்டிற்கும் இடையே சமநிலையில்லாவிடில், அதை விலையின் அளவிலிருந்து அறிந்து கொள்ளலாம். பணத்தின் அளிப்பில் பற்றாக்குறை இருந் தால் அது வளர்ச்சியைப் பாதிக்கும். அதிக அளவு பணத்தின் அளிப்பு பண வீக்கநிலையை ஏற்படுத்தும்.

பொருளாதாரம் முன்னேறிவரும்போது, பணத்தின் தேவை யானது படிப்படியாக அதிகரிக்கும் ; பண்ட மாற்றுத் துறைகள் பண மாற்றுத் துறைகளாக மாறும் ; விலைகள் உயரும் ; வேளாண்மை, தொழில் துறைகளில் உற்பத்தி உயரும். ஊக வணிக நோக்கத்திற்காகவும், வாணிபத்தை மேற் கொள்வதற் காகவும் பணத்தின் தேவை அதிகரிக்கும். பணத்தேவையின் அளவைக் காட்டிலும் பண அளிப்பை அதிகம் செய்யவேண்டும். அதிகரித்த பண அளிப்பு ஊக வணிகத்திற்குப் பயன்படுத்தப் பட்டால் பணவீக்கம் ஏற்படும். அது பொருளாதார வளர்ச்சிக்கு நல்லதல்ல. எனவே ஊக வணிக நடவடிக்கைகள் கட்டுப்படுத்தப் படவேண்டும். விலைகளில் உயர்வு ஏற்படாவண்ணம் பணத்தின் அளிப்பு, கடன் ஆகியவை கட்டுப் படுத்தப்படுதல் அவசியம். முதலீட்டையும், உற்பத்தியையும் பாதிக்காத வகையில் விலைகள் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

## V. கடன் கட்டுப்பாடு (Credit Control)

கடனை மேற்பார்வை செய்வது பணக் கொள்கையின் நோக்க மாகிறது. கடன் கட்டுப்பாட்டின் மூலம் உற்பத்தி, முதலீடுகளின் மீது செல்வாக்கைப் பெற முடியும். இதற்கு 'அளவுக் கடன் கட்டுப் பாடு' (Quantitative Credit Control), 'தரக் கடன் கட்டுப்பாடு' (Qualitative Credit Control) இரண்டும் பயன்படுத்தப்பட வேண்டும். வளர்ச்சியடையாத நாடுகளின் வணிக வங்கிகள் நெகிழ்ச்சியுள்ள பணவீதத்தைக் கொண்டுள்ளன. வணிக வங்கிகள், குறைந்த வட்டி வீதத்தால் அரசின் பத்திரங்களிலும் அதிக முதலீடு செய்வதில்லை. வணிகவங்கிகள் அரசின் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கு பதில், தங்கள் மிகுதிச் சேமிப்பை தங்கம், அந்நியச் செலாவணி, பணம் ஆகியவைகளாக வைத்துள்ளன.

வளர்ச்சியடையாத நாடுகளில் வங்கி வீதக் கொள்கை கடன் கட்டுப்பாட்டில் சிறப்பான வெற்றியைத் தருவதில்லை. அதிக அதிகாரங்களைக் கொண்ட மத்திய வங்கி, வங்கிவீதத்தை மாற்றுவதின் மூலம் சந்தை வீதத்தின் மீது செல்வாக்கைப் பெற லாம். முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில், வணிக வங்கிகள் அதிகப் பணச் சேமிப்பைக் கொண்டுள்ளதால், அதிகக் கடனையும் அவை ஏற்படுத்த முடிகின்றது. மத்திய வங்கி கட்டாயச் சேமிப்பு வீதத்தை உயர்த்தி அதன் மூலம் வணிக வங்கிகளைக் கட்டுப் படுத்தலாம்.

தரக் கடன் கட்டுப்பாடு முறைகள் அளவுக் கடன் கட்டுப் பாட்டு முறைகளை விட வெற்றியை தருபவை. கடனைப் பங்கிடுவதிலும், முதலீட்டு முறைகளை நிர்ணயிப்பதிலும் அவை உதவுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளில் சேமிப்பு அதிக அளவில் தங்கம், நகைகள், வீடுகள், நுகர் பொருட்கள் ஆகியவற்றின் மீது முதலீடு செய்யப்படுகின்றது. வேளாண்மை, தொழில், சுரங் கங்கள், தோட்டப் பயிர்கள் ஆகியவற்றின் ஆக்கத்திற்கான முத லீடு குறைவாகவே அமைகின்றது. "தேர்வுக் கடனளிப்புக் கட்டுப் பாட்டு முறைகள்' (Selective Credit Control Measures) ஆக்க மற்ற பணிகட்குக் கடன் கிடைப்பதைத் தடை செய்கின்றன. அவற்றின் மூலம் உணவுத் தானியங்கள், கச்சாப் பொருட்கள் போன்றவற்றின் விற்பனைகளில் ஏற்படும் ஊக வணிகத்தைத் தடை செய்யலாம். அவை பொருளாதாரத்தின் சில பகுதிகளில் மட்டும் அமைந்துள்ள விலையுயர்வுகளையும் தடுக்க வகை செய்யும். அயல்நாட்டுப் பணத்திற்குச் சமமான உள்நாட்டுப் பணத்தை இறக்குமதியாளர்கள் முன்தொகையாகச் செலுத்த வேண்டுமென் பதாலும் இறக்குமதிகளுக்கான தேவை குறைந்துவிடும். இதன்

மூலம் வங்கிகளின் சேமிப்பும் குறைந்துவிடும். இதற்குக் காரணம் வங்கிகளின் வைப்பு நிதிகள் மத்திய வங்கிக்கு மாற்றப்படு கின்ற நிலையாகும். 'தேர்ந்தெடுக்கப்பட்ட கடன் கட்டுப்பாட்டு முறைகள்' பல வகைகளில் பின்பற்றப்படலாம். நுகர்வோர்க் கடனைச் சரிசெய்யலாம் ; கடனைப் பங்கிடும் செய்ய முடியும்.

அளவுக் கடன் கட்டுப்பாடு, தரக் கடன் கட்டுப்பாடு என்ற இரு முறைகளில் இரண்டாவது முறையே சிறப்பான வெற்றியைத் தரத் தக்கது. தரக் கடன் கட்டுப்பாட்டு முறைகளோடு,

(i) இயந்திரச் சாதனங்கள், மற்ற தேவையான பொருட் களின் மீது நேரடிக் கட்டுப்பாடு ;

(ii) மூலதனக் கட்டுப்பாடு ;

(iii) வேறுபடுத்தப்பட்ட வரிகள் ;

(iv) இறக்குமதி, ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள்

போன்றவைகளும் மேற் கொள்ளப்பட வேண்டும்.

பொருட் சந்தைகளின் மீது நேரடியான கட்டுப்பாடுகளைப் பின்பற்றுதல், பொதுவான கட்டுப்பாட்டுக் கொள்கைக்கு வெற்றி யைத் தரும்.

மேற் குறிப்பிடப்பட்டுள்ள முறைகளைப் பின்பற்றியே இந்தியா வின் பணக்கொள்கை அமைந்துள்ளது. பலவிதமான அளவு, தரக்கடன் கட்டுப்பாட்டு முறைகளால் பணத் தேவைக்கும், அளிப் பிற்குமிடையே சம நிலையைப் பெற நடவடிக்கைகள் எடுக்கப்படு கின்றன. நிதிக் கொள்கையும், பிற முறைகளும் கூட பின்பற்றப் படுகின்றன.

பணத்தின் அளிப்பைப் பெருக்குவது வளர்ச்சியடைந்துவரும் இந்தியப் பொருளாதாரத்தில் தவிர்க்க முடியாதது. எவ்விதச் சிறந்த முயற்சிகளை அரசு மேற் கொண்டாலும் விலைகளின் உயர் வதை தடுத்தலும் கடினமானதே. பணஅளவின் உயர்வுக்குச் சம மாக நிகர தேசிய வருவாயின் உயர்வு இல்லாவிட்டால், விலையில் அதிகரிப்பு ஏற்படும். அந்நிலையில் கடன் கட்டுப்பாடு கடினமான முயற்சி ஆகிறது. எடுத்துக்காட்டாக, முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் பணத்தின் அளவு 13 சதவீதம். அதிகரித்த போது தேசிய வருவாய் 18 சதவீதம் உயர்ந்தது. அதன் விளைவாக, மொத்த விற்பனை விலைகள் (Wholesale Prices) 22 சதவீதம் குறைந்தன. இரண்டாவது திட்டக்காலத்தில் பணஅளிப்பு 30 சதவீதம் அதிகரித்தபோது தேசிய வருவாய் 19.5 சதவீதப் மட்டுமே உயர்ந்தது. அதன் விளைவு 30 சதவீதவிலை உயர்வாகும்.

இந்நிலை மேலும் சீர்குலைந்தது மூன்றாவது திட்டத்தில் எனலாம். பண அளிப்பு உயர் அளவாகிய 61.8 சதவீதம் அதிகரித்தது. தேசிய வருவாயின் உயர்வு 14.3 சதவீதமே ஆகும். விலை உயர்வு 36.4 சதவீதம் என்ற அளவில் இருந்தது.

எனினும், இப் பொருளாதார மந்தநிலை 1968-69 ஆம் ஆண்டிலிருந்து மாறத்தொடங்கியது. பொருளாதாரத் துறைகள் எல்லாவற்றிலும் நாம் முன்னேற்றமடைந்து வருகின்றமைக்கு முக்கிய காரணம் வேளாண்மையில் பெற்றுவருகின்ற வளர்ச்சியாகும். உற்பத்திக்குச் சாதகமான இயற்கைக் காரணிகளால் வேளாண்மையில் இன்று நாம் பெருவெற்றியைப் பெற்று வருகிறோம். அவ்வடிப்படைத் துறையின் வளர்ச்சி பிற துறைகளின் முன்னேற்றத்திற்கு உதவுகிறது.

மேற் குறிப்பிடப்பட்டுள்ள புள்ளிவிவரங்களைக் கொண்டு இந்திய ரிசர்வ் வங்கி தன் 'பணக்கொள்கையில்' வெற்றியையே பெறவில்லை என்ற முடிவுக்கு வருவது தவறானது. மாறுபட்டு வந்த பொருளாதார நிலைகட்கு ஏற்ப பல்வேறு காலங்களிலும் எல்லா வகைப்பட்ட கடன் கட்டுப்பாட்டு முறைகளையும் ரிசர்வ் வங்கி பின்பற்றியது. இந்தியாவில் ரிசர்வ் வங்கியின் பணக்கொள்கை வெற்றி பெறுமைக்கு, பொருளாதார முன்னேற்றத்தின் குறைந்த வளர்ச்சி வீதமே காரணமாகும்.

இந்தியாவில் வங்கி வசதிகளும் சேமிப்பு நிறுவனங்களும் முன்னேற வேண்டும்; வேளாண்மை, தொழில் கடன் அமைப்புக்களில் மாற்றம் தேவையானதாகும். பணச்சந்தை முன்னேற்றப்பட்டு நன்கு இணைக்கப்படுதல் அவசியமானது. மத்திய வங்கியின் சிறப்பான வளர்ச்சி, பதுக்கலைத் தவிர்த்தல், பணச் சீர்திருத்தங்கள் போன்றவற்றை உடனடியாக மேற் கொள்ள வேண்டும். இவ்விதக் குறைகள் தவிர்க்கப்பட்டால்தான் பணக்கொள்கை பின்தங்கிய நாடுகளில் சிறப்பான முன்னேற்றத்தைப் பொருளாதாரத்தில் நிர்மாணிக்கும். இவ்வித முயற்சிகள் வெற்றி பெறுவிட்டால் பொருளதார வளர்ச்சி பெரிதும் தடைப்படும்.

பணக்கொள்கை வளர்ச்சியடையாத நாடுகளில் சிறப்பான வெற்றிகளைக் கொண்டதாக அமைவதில்லை. ஆயினும், பணக்கொள்கை பல வகைகளிலும் இவ்வாறு சிறப்பாகப் பின்பற்றப்படாமல் இருந்தால் ஏற்படக் கூடிய பொருளாதாரத் தாழ்வு நிலைகளை ஓரளவு நீக்கவாவது பணக்கொள்கை உதவுகிறது. இந்தியா போன்ற மேம்பாடடைந்து வரும் நாடுகளில் வங்கிகள் எண்ணிக்கையில் பெருக வேண்டும்; பராமரிப்புப் பொருளாதாரம் பணப் பொருளாதாரமாக முற்றிலும் மாற்றப்பட வேண்டும்.

கடன் வசதிகள் விவசாயிகட்கும், சிறு வணிகர்கட்கும், சிறு தொழில்களை நடத்துபவர்கட்கும், குறைந்த வட்டி வீதத்தில் அளிக்கப்பட வேண்டும். பணச் சந்தையின் பல பிரிவுகளும் முன்னேற்றப்பட வேண்டும். சேமிக்க வேண்டும் என்ற உணர்வை மக்கள் பெற்று வங்கிகளைப் பயன்படுத்தும் பழக்கம் அவர்கட்கு ஏற்பட வேண்டும். மத்திய வங்கி மேலும் பல புதிய நடவடிக்கை களையும், புதுமுறைப் பணக் கொள்கைகளையும் கடைப் பிடிக்க வேண்டும். மக்கட்தொகையின் பெரும்பகுதி உள்ள கிராமப் புறங்களை வங்கிகளோடு தொடர்பு படுத்த வேண்டியது இன்றி யமையாதது. இவற்றின் மூலமாகத்தான் பணக்கொள்கையை இந்திய ரிசர்வ் வங்கி வெற்றியைத் தரும் வகையில் பின்பற்ற முடியும். அப்போதுதான் பணக்கொள்கையின் முக்கிய நோக்கங் களாகிய,

(i) மாற்று வீதங்களின் நிலைப் பேருக்கம் (Stability of Exchange Rates) ;

(ii) விலை நிலைப்பேருக்கம் (Price Stability) ;

(iii) நடு நிலைப்பணம் (Neutral Money) ;

(iv) வருமான நிலைப்பேருக்கம் (Income Stabilisation) ;

(v) வேலை நிறைவு (Full Employment) ;

(vi) பொருளாதார முன்னேற்றம் (Economic Development); ஆகிய யாவற்றையும் நம் நாட்டில் நாம் பெற முடியும்.

# 14. வளர்ச்சியடையாத நாடுகளில் நிதிக்கொள்கை

## (Fiscal Policy in Under-developed Countries)

### 1. நிதிக்கொள்கையின் இயல்பு (Nature of Fiscal Policy)

வரி விதிப்பு முறைகளைப் பின்பற்றுவதற்கே நிதிக்கொள்கை என்று பெயர். முன்னேற்றத்தை நிலைப்படுத்த பொதுக் கடன், பொதுச் செலவு ஆகியவை அரசால் கைக்கொள்ளப்படுகின்றன. சமீப காலத்திலேயே நிதிக்கொள்கையைப் பின்பற்றி பொருளாதார முன்னேற்றத்தைப் பெறும் முறைகள் மேற்கொள்ளப் பட்டன. கீன்ஸ் பிரபுவின் (Lord Keynes) நிதிக்கொள்கையின் ஆய்வு முன்னேற்றமடைந்த நாடுகட்கே பொருந்துவதாகும். முன்னேற்றமடைந்த பொருளாதாரங்களில் வளர்ச்சி வீதத்தை நிலைப்படுத்த நிதிக்கொள்கை உதவுகிறது. வளர்ச்சியடையாத பொருளாதாரத்தைப் பொறுத்த அளவில், மூலதனத்திரட்சி வீதத்தை விரைவு படுத்த நிதிக்கொள்கை பயன்படுகிறது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இது ஒரு கருவியாக அமைகிறது. கீன்ஸின் ஆய்வில், நிதி முறைகள் சேமிப்பைக் குறைப்பதற்கும், நுகரும் விருப்பத்தை அதிகரிக்கவும் பயன் படுத்தப்படுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளில் இவ்விதச் சிக்கல்கள் இருப்பதில்லை. அவ்வகைப் பொருளாதாரங்களில் சேமிக்கும் விருப்பமானது மிகக் குறைவாக உள்ளது; நுகரும் விருப்பமானது மிக அதிகமாக உள்ளது. அந்நாடுகளின் தேவை எதுவென்றால் நுகரும் விருப்பத்தைக் குறைத்து, சேமிக்கும் விருப்பத்தை உயர்த்துவதாகும். கீன்ஸின் ஆய்வு, வளர்ச்சியடை யாத நாடுகளில் குறைந்த அளவிற்கு மட்டுமே பயன்படுத்தத்தக்க ஒன்றாக உள்ளது. "கீன்ஸின் கருத்து சேமிப்பிற்கு எதிராகவும், செலவழிப்பதை ஆதரித்தும் அமைந்துள்ளது. ஆனால் இக்கருத்து வளர்ச்சியடையாத நாடுகளில் கெடுதலையே தரும்," என நர்க்ஸ் கூறுகின்றார்.[1]

[1] Ragnar Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, P. 148.

2. நிதிக்கொள்கையின் முக்கியத்துவம் (Importance of Fiscal Policy)

வளர்ச்சியடையாத நாடுகளில் இயக்கநிலை கொண்டதாக நிதிக்கொள்கை இருக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற, உண்மையிலேயே பரந்த அளவில் பயனைத் தருவதாக நிதிக் கொள்கையைப் பின்பற்றுவது மிக முக்கியமானதாகும். நர்க்ஸின் (Nurkes) வார்த்தைகளில், "நிதிக்கொள்கை வளர்ச்சியடையாத நாடுகளின் மூலதனத்திரட்சியில் ஒரு புதிய முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது."[1] அந்நாடுகளில் தலா வருவாயும், தலா சேமிப்பும் மிக மிகக் குறைவாக உள்ளன. குறைந்த அளவில் உள்ள செல்வர்களும் 'குறிப்பிடத்தக்க நுகர்வில்' (Conspicuous Consumption) ஈடுபடுகின்றனர். சேமிப்பின் பெரும்பகுதி பெரிய கட்டடங்கள் கட்டுவதிலும், நகைகள், தங்கம், ஊக வணிகம் போன்றவைகளில் முதலீடு செய்யப்படுகின்றது. இவை யாவும் உற்பத்தியைத் தரும் முதலீடுகள் அல்ல. நிதிக்கொள்கை உற்பத் திக்கு உதவாத துறைகளில் முதலீடு செய்யப்படும் மூலதனத்தை உற்பத்தித் துறைக்கு மாற்றுகின்றது.

சேமிப்பு வீதம் உயர்வதையே ஒரு நாட்டின் வளர்ச்சியை நிர்ணயிக்கின்ற ஒன்று என நர்க்ஸ் கருதுகின்றார். 'இறுதிநிலை சேமிக்கும் விருப்பம்', வளர்ந்துவரும் நாட்டில், உயர வேண்டு மென அவர் கூறுகிறார். உயர்ந்த சேமிப்பு வீதத்தை அரசின் செலவினங்களாலும், சமுதாய, பொருளாதார அவசிய வசதிகளை ஏற்படுத்துவதின் மூலமாகவும், வங்கிகள், கடன் நிறுவனங்கள், புதிய தொழில்கள் போன்றவற்றைத் தொடங்குவதின் மூலமாக வும் உயர்த்தலாம். வேலைவாய்ப்பு, உற்பத்தி, வருவாய் ஆகிய வற்றை அதிகரிக்க வேண்டும்.

மக்கள் தாங்களே சேமிக்கும் அளவு மிகக் குறைவு. கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்த வரிவிதிப்பே அதிக நன்மையளிக்கும் ஒரு கருவியாகும். வரிவிதிப்பு 'குறிப்பிடத்தக்க நுகர்வையும்' குறைய வகை செய்யும். வருவாய் அதிகம் கொண்ட வகுப்பினரின் அநாவசியமான செலவுகளையும் குறைக்கும். பயன்படுத்தப்படாத வசதிகளை அரசு மூலதனத்திரட்சிக்குப் பெற நிதிக்கொள்கையில் மிக முக்கியமானது வரிவிதிப்பு ஆகும். ஐக்கிய நாடுகளின் வரிகள் மற்றும் நிதிக்கொள்கைகள் பற்றிய அறிக்கையில் (The U. N. Report on Taxes and Fiscal Policy) குறிப்பிடப்பட்டிருப் பதாவது, "குறைந்த அளவு உற்பத்தியைக் கொண்ட வளர்ச்சி

[1] Nurkse–Problems of Capital Formation is Underdeveloped Countries, P. 143.

யடையாத நாடுகளில், சேமிப்பை உயர்த்தி பொருளாதார முன்னேற்றத் திட்டங்கட்குப் பயன்படுத்தப்பட வேண்டும்; மேலும், அச்சேமிப்பு பொதுத் துறை, தனியார் துறை முதலீட்டை அதிகரிக்கவும் பயன்பட வேண்டும்."

வளர்ச்சியடையாத பண, மூலதனச் சந்தைகள் இருப்பதால், வளர்ச்சி பெறாத ஒரு நாட்டில் பணக்கொள்கை தனித்தியங்கிச் சிறப்பாக வெற்றி பெற முடியாது. பணக்கொள்கையோடு நிதிக் கொள்கையும் பின்பற்றப்பட்டால் மூலதனத்திரட்சி வேகத்தை அதிக்கரிக்கலாம்.

மேம்பாடு அடைந்துவரும் நாடுகளின் முன்னேற்றத் திட்டங் களிலும் நிதிக்கொள்கை முக்கிய பங்கைக் கொண்டுள்ளது. திட்டங் களில் பணம் பயன்படுத்தப்பட்டு உண்மையான வளர்ச்சி பெறப் படுகின்றது. நிதித்திட்டம் சிறப்பாக அமைந்தால்தான் திட்டத்தின் மூலம் நல்ல வளர்ச்சியைப் பெற முடியும். நிதிக்கொள்கை பணவீக்கத்தை ஏற்படுத்தாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். அரசின் செலவுகளின் விதமானது பொருளாதார வளர்ச்சி வீதத்தைவிட குறைவாக இருப்பது நல்லது. படிப்படியான குறைந்த அளவு விலையுயர்வுகள் முன்னேற்றத்தை விரைவாக்கும்.

## 3. நிதிக்கொள்கையின் நோக்கங்கள் (Objectives of Fiscal Policy)

பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் நிதிக்கொள்கையின் நோக்கங்கள் பலவாக இருக்கின்றன.

### (1) முதலீட்டு வீதத்தை உயர்த்த (To Increase the Rate of Investment)

நிதிக்கொள்கையின் முக்கிய நோக்கம் பொருளாதாரத்தின் பொதுத் துறை, தனியார் துறைகளில் முதலீட்டு வீதத்தை முன்னேற்றமடையச் செய்வதாகும். நுகர்வைக் கட்டுப்படுத்தி சேமிப்பு வீதத்தை உயர்த்த முடியும். சில வித முதலீடுகளை நிதிக் கொள்கை ஊக்குவிக்க வேண்டும்; வேறு சில வித முதலீடுகளுக்கு நிதிக்கொள்கையின் ஆதரவு இருக்கக் கூடாது.

முதலாவதாக, அரசு முதலீட்டு வீதத்தை உயர்த்த விரும் பினால் அது திட்டமிட்ட முதலீட்டுக் கொள்கையைப் பொதுத் துறையில் பின்பற்ற வேண்டும். தனியார் துறை முதலீட்டிலும் இது உயர்வைத் தரும் என நம்பலாம். தனியார் தாங்களே சேமிக்கும் நிலை இல்லாததால், வளர்ச்சியடையாத நாடுகளில் நிதி வசதிகள் மிகக் குறைவாகவே உள்ளன. இதனால் முதலீடுகளின்

அளவு மிகத் தாழ்வாகவே உள்ளது. 'குறிப்பிடத்தக்க நுகர்வைத்' தடை செய்யும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டால் சில வசதிகளை முன்னேற்றத்திற்குப் பெறலாம். உற்பத்திக்கு உதவாத துறைகளில் சேமிப்பு செல்வத்தையும் தவிர்க்கலாம். "பொதுத் துறை, தனியார் துறைகட்குத் தேவையான அயல்நாட்டு மூலதனமும் போதுமான அளவு கிடைப்பதில்லை. இதற்கான தீர்வு உயர்ந்த சேமிப்பு அளவைப் பெறுவதாகும். 'இறுதிநிலைச் சேமிக்கும் விருப்பம்' (Marginal Propensity to Save) அதிகமாக இருந்தால் சேமிப்பு வீதம் உயர்ந்த நிலையை அடையும். அதிகச் சேமிப்பை ஏற்படுத்த பொதுமக்களிடமிருந்து கட்டாயக் கடன்களை அரசு பெறவேண்டும். பொது நிதியின் வரிவிதிப்பாலும் மூலதனத் திரட்சியைப் பெருக்கலாம்."[1]

டாக்டர் ஆர். என். திரிபாதி (Dr. R. N. Tripathy)[2] கீழ்க்காணும் முறைகளை அரசு பின்பற்றி சேமிப்பு வீதத்தை உயர்த்தலாம் எனவும், முன்னேற்றத்திற்குத் தேவையான நிதியைப் பெறலாம் எனவும் கருதுகின்றார்.

(i) நேரடிக் கட்டுப்பாடுகள் (Direct Physical Controls);

(ii) அமைந்திருக்கக் கூடிய வரிகளின் வீதங்களை உயர்த்துவது (Increase in the Rates of Existing Taxes);

(iii) புது வரிகளை விதித்தல் (Imposition of New Taxes);

(iv) பொது நிறுவனங்களின் உபரியைப் பெறுவது (Surplus From Public Enterprises);

(v) பணவீக்கத்தை ஏற்படுத்தாத நிலையில் பொதுக் கடனைப் பெறுதல் (Public Borrowing of a non - Inflationary Nature)

(vi) பற்றுக்குறை நிதியாக்கம் (Deficit Financing).

நுகர்வைக் கட்டுப்படுத்துவதிலும், உற்பத்திக்கு உதவாத முதலீடுகளைத் தவிர்ப்பதிலும் நேரடிக் கட்டுபாடுகள் நல்ல பயனை அளிக்கக் கூடியவை. இவற்றை நிர்வகிப்பது வளர்ச்சியடையாத நாட்டில் கடினமானதென்றாலும், நேரடிக் கட்டுப்பாடுகள் நிதிக் கொள்கையை சிறப்பாகப் பயன்படுத்த உதவும்.

[1] Nurkse-Problems of Capital Formation in underdeveloped countries, p. 148.

[2] Dr. R. N. Tripathy-Public Finance in underdeveloped countries p. 56.

புதிதாக வரிகளை விதித்தலும், பழைய வரி வீதங்களை உயர்த்துதலும் முன்னேற்ற நிலையில் மிக முக்கியமானவைகளாகும். நுகர்வைக் கட்டுப்படுத்த வளர்வீத வருமான வரிகள் (Progressive Income Taxes), ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதிக் கட்டுப்பாடு, ஆடம்பர இறக்குமதிப் பொருட்களின் மீது அதிகத் தீர்வை, உள்நாட்டில் ஆடம்பரப் பொருட்கள், வசதிப் பொருட்கள் உற்பத்திக்குத் தடை விதிப்பது, ஆடம்பரப் பொருட்களின் மீது அதிக ஆயத் தீர்வைகள் (Excise Duties) விதிப்பது போன்றவை நல்ல பயனை அளிப்பவைகளாகும். உற்பத்திக்கு உதவாத முதலீடுகளில் பயன்படுத்தப்படும் சேமிப்பை உற்பத்திக்கு முதலீடு செய்ய, பண்ணைவரி (Estate Duty), செல்வ வரி (Wealth Tax), செலவு வரி (Expenditure Tax), அன்பளிப்பு வரி (Gift Tax) போன்ற வரிகள் விதிக்கப்படலாம்.

வளர்ச்சியடையாத நாடுகளின் பொதுத் துறை நிறுவனங்களில் உபரி போதுமானதாக இருப்பதில்லை. பல நிறுவனங்கள் இலாபத்தையே பெறுவதில்லை எனவும் கூறலாம். அவற்றின் உற்பத்திச் செலவு அதிகமாக இருப்பதாலேயே அவற்றால் அதிக இலாபத்தைப் பெற முடிவதில்லை. இவை பொருளாதார முன்னேற்றத்தின் முதல் சில நிலைகளில் ஏற்படக்கூடிய சிக்கல்களாகும். மேலும் இந்நாடுகளில் பொதுத் துறை நிறுவனங்கள் குறைந்த எண்ணிக்கையில் அமைந்திருப்பதாலும் உபரியை அதிகம் பெற வாய்ப்பு ஏற்படுவதில்லை.

எல்லா முறைகளையும் விட, வரிவிதிப்பே கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்த உதவும் முக்கிய சாதனமாகும். வளங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப் படாமையால், வளர்ச்சியடையாத நாடுகளில் பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்கத்தை ஏற்படுத்துகின்றது. மூலதனச் சந்தை வளர்ந்தில்லாத காரணத்தால், பொதுமக்களிடமிருந்து கடன் பெறுவதன் மூலமும் குறைந்த மூலத்தனத்தையே அரசு பெற முடிகின்றது. மேலும், இது வட்டி வீதத்தை உயர்த்தி விடுவதால் முதலீடு பெருமளவிற்குப் பாதிக்கப்படுகிறது.

"தனியார் துறையின் முதலீட்டை வளர்ச்சியடையச் செய்ய நிதிச்சலுகைகள் அளிக்கப்படலாம். நிதி வசதிகள், அந்நியச் செலாவணி வசதிகள், வரி விடுமுறை (Tax Holiday) முன்னேற்றத் தள்ளுபடிகள், உதவிக்கொடை (Subsidy), முதலீட்டுத் தேய்மானப், படிகள் போன்றவை தரப்பட வேண்டும்" என டாக்டர் ஆர். என். திரிபாதி (Dr. R. N. Tripathy) [1] கூறுகிறார்.

[1] Ibid, p. 51.

(2) சமுதாய நன்மைக்கான முதலீட்டை ஊக்குவித்தல்
(To Encourage Socially Optimal Investment)

நிதிக்கொள்கை சமுதாயத்திற்கு நன்மையை அளிக்கக்கூடிய துறைகளில் முதலீடுகள் செய்யப் படுவதை ஊக்குவிக்க வேண்டும். அரசின் கடமை சமூக, பொருளாதார அவசிய முன்னேற்றங்களில் முதலீடு செய்வதாகும். உத்தம முதலீட்டு முறைகள் நாட்டின் நலனில் அரசினால் செய்யப்பட வேண்டும். போக்குவரத்து, செய்தித் தொடர்பு, ஆறுகள், மின்சக்தி வளர்ச்சி, நிலப்பாதுகாப்பு போன்றவைகட்கான முதலீடு பொருளாதார முன்னேற்றத்தின் அவசியச் செலவு எனப்படுகிறது. கல்வி, பொதுச் சுகாதாரம், தொழில் நுட்பப் பயிற்சி வசதிகள் போன்றவைகட்கான முதலீடு சமூக முன்னேற்றத்திற்கான அவசியச் செலவு எனக் கூறப்படு கின்றது. இவ்விருவகை முதலீடுகள் புறச் சிக்கனங்களைத் (External Economies) தருகின்றன. அவற்றின் மூலம் சந்தை விரிவாக்கம் பெருகின்றது. உற்பத்தி உயர்வதால் உற்பத்திச் செலவு குறைகின்றது.

இவற்றிற்கான மூலதனம் மிக அதிக அளவில் தேவைப் படுவதால், தனியார் நிறுவனங்கள் அம்மூலதனத்தை அளிக்க மாட்டா. மேலும் இவ்வித முன்னேற்ற முதலீடுகளில் இலாபத்தை உடனடியாகப் பெற முடியாது. முதலீட்டிற்கான வருவாய் நேரடியாகவும் கிடைப்பதில்லை. தனியார் துறையினர் உடனடி இலாபத்தையே விரும்புவர். எனவே சமுதாய, பொருளாதார அவசிய வசதிகளைப் பெருக்குவதை அரசு தன் கடமையாகக் கருத வேண்டும். அவற்றின் முன்னேற்றம் வேளாண்மை, சிறு தொழில் கள், பெரிய தொழில்கள் ஆகிய எல்லாவற்றின் வளர்ச்சியையும் தரும். பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளின் வளர்ச்சியே மூலதனத்திரட்சி வீதத்தை விரைவு படுத்தும். இவ்வசதிகளை ஏற்படுத்துவது சமூக இறுதி நிலை உற்பத்திக் (Social Marginal Productivity) கொள்கைக்கு ஒத்ததாகவும் உள்ளது; தனியார் முதலீட்டின் இறுதிநிலை உற்பத்தியை உயர்த்துகிறது. அகச் சிக்கனங்கள் ஏற்படுத்துவதால், தனியார் மூலதனம் உற்பத்தித் துறைகளில் முதலீடு செய்யப்படுகின்றது.

பன்னாட்டு உறுதியின்மை நிலையில் பொருளாதார உறுதி நிலையை உயர்வித்தல் (Promoting Economic Stability in the Face of International Instability)

நிதிக்கொள்கை பொருளாதார உறுதி நிலையை கருதத்தக்க அளவில் ஏற்படுத்தவும், அவ்வுறுதி நிலையை உயர்த்தவும் உதவ வேண்டும். உள்நாட்டின் பொருளாதார உறுதிநிலை, குறுகிய

காலத்தில் உலக நாடுகளின் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் மூலம் பாதிக்கப்படும். வளர்ச்சியடையாத நாட்டில் பிற நாடுகளின் ஏற்றத்தாழ்வும் எளிதில் பரவி விடும். வளர்ச்சியடையாத பொருளாதாரத்தின் இயல்புகள் அவ்வாறு அமைந்துள்ளன. வளர்ச்சியடையாத ஒரு நாடு அடிப்படைப் பொருட்களை ஏற்றுமதி செய்து, பொறி செய் பொருட்களையும், முதலீட்டுப் பொருட்களையும் இறக்குமதி செய்கின்றது. உலகச் சந்தையில் வேளாண்மைப் பொருட்களுக்கும் தாதுப் பொருட்களுக்கும் விலைகளில் குறைவு ஏற்பட்டால் அந்நாட்டில் அயல்நாட்டு வாணிபத்தில் பாதகநிலை ஏற்படுகின்றது. அந்நிய செலாவணி வருவாயிலும் குறைவு ஏற்படுகின்றது. இவற்றால் தேசிய வருவாய் குறையும்.

வளர்ச்சியடையாத நாடுகள் தேவையில் நெகிழ்ச்சியைக் கொண்டில்லாத வேளாண்மை, தாதுப் பொருட்களை ஏற்றுமதி செய்கின்றன. இப்பொருட்களின் அளிப்பிலும் நெகிழ்ச்சியில்லாத நிலையே உள்ளது. தேவை பெருகும் போது இவற்றின் உற்பத்தியை உடனடியாக உயர்த்த முடியாது. ஆகவே, இவ்வகைப் பொருட்களில் விலை உயர்வு ஏற்பட்டாலும், அந்த நன்மையை வளர்ச்சியடையாத நாடுகள் பெற இயலாது. மேலும், இப்பொருட்களில் விலைகள் அயல் நாடுகளில் குறைந்தால், அதிக அளவு பொருட்களை ஏற்றுமதி செய்தால்தான் வளர்ச்சியடையாத நாடு தேவையான அந்நியச் செலாவணியைப் பெற முடியும். உலகச் சந்தையில் ஏற்படக் கூடிய செழிப்பு நிலையின் நன்மைகளையும் வளர்ச்சியடையாத நாடு பெற முடிவதில்லை. அயல் நாட்டு வாணிபம் சாதக நிலையை அடைந்தாலும், அதைத் தொடர்ந்து உற்பத்தி பெருகுவதில்லை; வேலை வாய்ப்புக்கள் அதிகரிப்பதில்லை. அதற்குப் பதிலாக, ஏற்றுமதி மூலம் பெற்ற வருவாய்கள் 'குறிப்பிடத்தக்க நுகர்விலும்', ஊக வணிகத்திலும், பெரிய வீடுகள் கட்டுவதிலும் பயன்படுத்தப் படுகின்றன. அவை பொருளாதாரத்தில் பணவீக்க நிலையைத் தோற்றுவிக்கின்றன.

உள்நாட்டு, வெளிநாட்டுச் சக்திகளுக்கிடையே, பொருளாதார உறுதி நிலையைப் பாதுகாக்க கடினமான பங்கை நிதிக்கொள்கை ஏற்கிறது. பிற நாடுகளின் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் உள் நாட்டில் பரவாமல் தடுக்க ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் விதிக்கப்பட வேண்டும். உலகச் சந்தை விலைகளில் உயர்வு ஏற்படும்போது ஏற்றுமதியாளர்கள் பெறும் இலாபத் தொகையைக் குறைக்க ஏற்றுமதி வரிகள் விதிக்கப்படலாம். ஆனால், அதிகரித்த வாங்கும் திறனைத் தடை செய்ய இறக்குமதியாகின்ற நுகர்வுப் பொருட்கள், மற்றும் ஆடம்பரப் பொருட்கள் மீது அதிக இறக்குமதி வரிகள் விதிப்பது அவசியமானது. ஆடம்பரப் பொருட்

களின் இறக்குமதிக் கட்டுப்பாட்டில்தான் நிதிக் கொள்கையின் வெற்றி அடங்கியுள்ளது. இறக்குமதி, ஏற்றுமதித் தீர்வைகளை இவ்வாறு உள் நாட்டு சேமிப்பை அதிகரித்து மூலதனத்திரட்சியைப் பெற பயன்படுத்தலாம். உலக சந்தையில் மந்தநிலை நிலவும்போது, ஏற்றுமதிவருவாய் பாதிக்கப்படுகிறது. ஏற்றுமதிப் பொருட்களின் துறை பெருமளவிற்கு முன்னேற்றத்தில் தடைபடுகின்றது. அவ்வித காலங்களில் அரசு பொதுப்பணித் திட்டங்களை (Public Works Programmes) 'பற்றுக்குறை நிதியாக்கத்தின் (Deficit Financing) மூலம் மேற்கொள்ள வேண்டும். ஆனால் வலிமை குன்றிய பொருளாதாரத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலமாக 'வாங்கும் திறன்' (Purchasing Power) செலுத்தப்படுகிறது. அதன் விளைவு நுகர்வுப் பொருட்களின் விலையுயர்வு ஆகும். குறுகிய காலத்தில் 'நெகிழ்ச்சியில்லாத அளிப்பைக்' கொண்டிருப்பதால்தான், நுகர்வுப் பொருட்களின் விலை உயர்வு ஏற்படுகின்றது.

நீண்ட காலத் தோற்றத்தைக் கருத்திற் கொண்டு நிதிக் கொள்கை வரையப் படுதல் வேண்டும். பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் சமநிலை வளர்ச்சி தேவை. பலவகைப்பட்ட முன்னேற்றங்களும் அங்கு ஏற்படுதல் அவசியம். பன்னாட்டுப் பொருளாதார நடவடிக்கைகளின் விளைவுகட்கு ஏற்றாற்போல் உள் நாட்டில் நடவடிக்கைகள் மேற் கொள்ளப்படுதல் வேண்டும். தொழில் பின்னிறக்க (Recession) காலங்களில் உபரி வரவு-செலவுத்திட்டதையும், மந்த காலங்களில் பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டதையும் தயாரித்தல் நன்மைதரும். இவ்விதமான நிதிக் கொள்கைகளோடு, பணக்கொள்கைகளும் சரியான முறைகளில் எடுக்கப்பட வேண்டும்.

## (4) பணவீக்கத்தைத் தடுத்தல் (To Counteract Inflation)

வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் எளிதில் ஏற்படக் கூடிய பணவீக்க நிலைகளைத் தடுக்கும் நடவடிக்கைகள் நிதிக் கொள்கையால் மேற் கொள்ளப்பட வேண்டும். அவ்விதப் பொருளாதாரத்தில், எப்போதும் உண்மையான சமநிலையானது வளங்களின் தேவைக்கும், அளிப்பிற்கும் இடையே இருக்காது. பொருளாதாரத்தில் வாங்கும் திறன் செலுத்தப் படுகின்றமையால், அளிப்பில் அதிக மாறுதல் ஏற்படாமல் தேவை பெருகுகின்றது. இவ்வித நெகிழ்ச்சியற்ற அளிப்பிற்கு குறைபாடுகள் உள்ள சந்தைகளும், அவசியப் பொருட்களை அளிப்பதில் உள்ள இடையூறுகளும், பொருளாதார அமைப்பு முறையின் மாறுத நிலையும் காரணங்

களாகின்றன. இவை பொருளாதாரத்தில் பணவீக்க நிலையையும் ஏற்படுத்துகின்றன.

பணவீக்க நிலையால், பொருளாதாரத்தின் அமைக்கப்பட்டுள்ள துறைகளில் ஊதிய உயர்வை உழைப்பாளர்கள் வேண்டுகின்றார்கள். ஊதிய உயர்வால் உற்பத்திச் செலவு அதிகரித்து, மேலும் விலையுயர்வு ஏற்படக் காரணமாகிறது. பொருளாதாரத்தின் நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யும் துறையைப் புறக்கணித்து, பெரிய முதலீடுகள் மூலதனப் பொருட்களின் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டால் பணவீக்க நிலை மேலும் மோசமான நிலையை அடைகின்றது.

பொருளாதாரத்தின் பணவீக்க நிலைகளைத் தவிர்க்க நேர்முக வரிகள் (Direct Taxes) வளர்வீத முறையில் விதிக்கப்பட வேண்டும். பொருட்களின் வரிகளும் நல்ல பயனை அளிக்கக்கூடியவைகளாக உள்ளன. பண வருவாயில் ஏற்பட்ட உயர்வை வடிகட்டிப் பெற இவ்வரிகள் உதவும். பணவீக்கத்தால் பணவருவாயில் உயர்வு ஏற்படுகின்றது. ஆனால், எவ்வகையிலும் வரி அமைப்பு முறை தனியார் முதலீட்டைப் பாதிக்காத நிலையில் இருப்பது இன்றியமையாதது. நிதிக் கொள்கையின் நோக்கம் பணவீக்க நிலையைக் கட்டுப் படுத்துவது மட்டுமல்லாமல், பொதுவிலைகளில் அதிக மாற்றமில்லா நிலையைப் பெறுவதுமாகும்.

அரசின் நிதிக்கொள்கை வெற்றியைப் பெற, பொருளாதார அமைப்புக்களில் உள்ள இணக்கமற்ற நிலை மாற்றப் படவேண்டும். பொருளாதாரத்தின் பல துறைகளின் முன்னேற்றத்தையும் திட்டமிட்டுப் பெற வேண்டும். அவசியப் பொருட்களின் மீது கட்டுப்பாடுகள் தேவை. அரசே அப்பண்டங்களை வாங்கி விற்பனை செய்யலாம். சில அவசியப் பண்டங்களின் உற்பத்திக்கு உதவிக் கொடை (Subsidy) அளிக்கப்படலாம். பொருளாதாரத்தில் அமைந்துள்ள நுகர்வுப் பொருட்களின் தொழில்கட்கு காப்பளிக்கலாம். இவை எல்லாவற்றையும் விட, நிதிக் கொள்கையோடு பணக் கொள்கையும் பின்பற்றப் படுவது மிக அவசியமானதாகும். பணக்கொள்கை வேறு வகைப்பட்ட சில நன்மைகளைத் தரும். கடன் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தவும், அதிகரித்த வாங்கும் திறனைத் திரட்டவும், தனியார் சேமிப்பை ஊக்குவிக்கவும் பணக் கொள்கை பெரிதும் உதவும். வளர்ச்சியடையாத நாட்டில் பணவீக்கத்தை நீக்க நிதிக் கொள்கைகளும், பணக்கொள்கைகளும் மேற் கொள்ளப்பட வேண்டும். ஆனால், அவை பொருளாதார வளர்ச்சியின் நோக்கங்களுக்கும், பொருளாதார வளர்ச்சியின் உறுதித் தன்மைக்கும் ஊறு விளைவிக்கா வண்ணம் அமைய வேண்டும்.

(5) தேசிய வருவாயை அதிகரிக்கவும், மறுப்பகிர்வு செய்யவும் (To Redistribute and Increase National Income)

இறுதியாக, நிதிக் கொள்கை தேசிய வருவாயைப் பெருக்க வேண்டும். அத்தேசிய வருவாய் அதிக அளவு மக்களின் வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் இன்றி மறுப்பகிர்வு செய்யப்படவேண்டும். வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் இல்லாதது போலவே செல்வத்திலும், நுகர்வின் அளவிலும், தரத்திலும் அதிக வேறுபாடுகள் நிலவக்கூடாது. செல்வ, வருமான வேறுபாடுகளைக் களைய வேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தத் தேவையில்லை. வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் சமுதாயப் பிளவுகளையும், பிரிவுகளையும் ஏற்படுத்தும். பொருளாதார, அரசியல் நிலைகளில் நிலையற்றதன்மையும் ஏற்படுவதால் முன்னேற்றம் தடைபடும்.

ஒரு புறத்தில் ஒருசில செல்வர்கள் பணத்தில் புரளுகின்றனர். தங்களின் அதிக வருவாயை 'குறிப்பிடத்தக்க நுகர்விலும் புது வகைப் பொருட்களின் மீதும், பெரிய வீடுகள் கட்டுவதிலும், தங்கம் வாங்கவும், ஊக வணிகத்தில் ஈடுபடவும் செலழிக்கின்றனர். மறுபுறத்தில், பெரும் பகுதி மக்கள் வறுமையில் வாடுகின்றனர்; வருவாய்க் குறைவினுல் பல இன்னல்கட்கிடையே உழலுகின்றனர். இவ்வித ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதே நிதிக் கொள்கையின் நோக்கமாக இருக்க வேண்டும். தவருகப் பயன்படுத்தப்பட்ட வளங்கள் சரியாகப் பயன்படுத்தப்படவேண்டும். சேமிக்கப்பட்ட மூலதனம் உற்பத்திக்கு உதவும் வகையில் முதலீடு செய்யப்படவேண்டும்.

அதிக மக்கட்தொகையின் உண்மை வருவாய் உயரவேண்டும். குறைந்த அளவு மக்கள் பெற்றுக் கொண்டிருக்கும் அதிக வருவாய் குறைக்கப்படுதல் தேவையானது. இவ்வாறு வருவாய் மறுப்பகிர்வில் முக்கிய பங்கை நிதிக்கொள்கை ஏற்கிறது. பொருளாதார சமூக முன்னேற்றத்திற்கான அவசியத் தேவைகளில் அரசு நேரடியாக முதலீடு செய்ய வேண்டும். அப்போதுதான் நாட்டின் மொத்த ஆக்கம் அதிகரிக்கும்; வேலைவாய்ப்புகள் பெருகும்; உண்மை வருவாயில் உயர்வு தோன்றும். பெருவாரியான மக்களின் பொருளாதார நிலைகளில் முன்னேற்றம் ஏற்படும்; அவர்களுடைய வாழ்க்கைத் தரத்திலும் உயர்வு ஏற்படும். பொருளாதாரத்தின் பல துறைகளிலும் சமநிலை வட்டார வளர்ச்சித் திட்டங்களை அரசு மேற்கொள்ள வேண்டும். இக்கொள்கையின் மூலம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும்; வருவாய்களில் உள்ள வேறுபாடுகளையும் குறைக்கலாம்.

உயர்ந்த வருவாய் அளவுகளைக் குறைக்க, அதிக அளவு வளர்வீத வரி அமைப்பு முறை பின்பற்றப்பட வேண்டும். அவ்வித வரிவிதிப்பு முறையில் வருமானவரி (Income Tax), செல்வ வரி (Wealth Tax), செலவு வரி (Expenditure Tax), பண்ணைவரி (Estate Duty) போன்றவை அடங்கியிருத்தல் வேண்டும். குறிப்பிடத்தக்க நுகர்வில் மக்களை ஈடுபடுத்துகின்ற பொருட்களின் மீது மிக அதிக வரி விதிப்பு இருத்தல் அவசியமானதாகும். ஆனால் இவ்வித வரிகளால் நாட்டின் தொழில் முயல்வோருடைய ஊக்கம் பாதிக்கப்படக்கூடாது. வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில்முயல்வோர் குறைந்த அளவிலேயே இருப்பர். அக்குறைந்த அளவினரின் ஊக்கத்தைக் காத்து, தனியார் முதலீட்டை அதிகரிப்பதே பொருளாதார வளர்ச்சிக்கு உதவும். நேர்முக வரிகளைச் செயல்படுத்துவதும், வசூலிப்பதும் கடினமான ஒரு சிக்கலாகவே அமைகின்றது.

முன்னேற்றமடைந்து வரும் நாடுகளில் அரசியல் சக்திகள் வரிவிதிப்பு முறையில் தங்கள் செல்வாக்கினால் எவ்வித மாற்றங்களையும் செய்து விடுகின்றன. மக்களிடமும் வரிகளை நேர்மையாகச் செலுத்த வேண்டுமென்ற எண்ணம் இருப்பதில்லை. சிறப்பான, நேர்மையான வரிவிதிப்பவர்களும், வரிவசூலிப்பவர்களும் அங்கு அமைந்திருப்பதில்லை. இக்காரணங்களால், இந்நாடுகளில் நிதிக்கொள்கையை நல்லமுறையில் பயன்படுத்தி, வருவாய் மறுபகிர்வைச் சிறப்பாகச் செய்ய முடிவதில்லை. எனினும், வருவாய்களில், செல்வப்பங்கீடுகளில் உள்ள வேறுபாடுகளைக் களைவது மட்டும் நிதிக்கொள்கையின் நோக்கமல்ல. தேசிய வருவாய் உயர்வையும் அது அளிக்க வேண்டும். தேசிய வருவாயின் உயர்வு சிறப்பான வருவாய் மறுபகிர்வைச் சார்ந்துள்ளது. இவ்வித இரு நோக்கங்களையும் நிறைவேற்ற நிதிக்கொள்கை மட்டும் உதவாது. வளர்ச்சியடையாத ஒரு நாட்டில் வரிவிதிப்பு, வரி வசூலிப்பு முறைகள் சிறப்பாக அமைவதில்லை. "பொது நிதியின் அடிப்படை நோக்கம் தனியார்களுக்கு இடையே வருவாய் பகிர்வில் மாற்றங்கள் ஏற்படுத்துவதல்ல; மூலதனத்திரட்சிக்கு உதவும் உயர்ந்த தேசிய வருவாயே அதன் நோக்கமாகும். பொது நிதியின் நோக்கம் பொருளாதார முன்னேற்றத்தைப் பொருத்ததாகும்." என்று பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse)[1] குறிப்பிடுகின்றார்.

நிதிக்கொள்கை இவ்வித நோக்கங்களில் வெற்றி பெறுவது (i) பொது வரி வருவாயை எந்த அளவிற்குப் பெருக்க முடியும்

1. Ragner Nurkse, Problems of capital Formation in underdeveloped countries, p.147.

என்பதை பொருத்தும் ; (ii) அவ்வருவாய், பொதுச் செலவு களில் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பொருத்தும் அமையும். சில முக்கிய நிதிமுறைகள் மூலம் அரசு தன்னுடைய வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாம். உபரி வரவு–செலவுத் திட்டத்தின் மூலமும், மக்களிடமிருந்தும், வங்கிகளிடமிருந்தும் கடன் பெறுவதன் மூலமும், வரிவிதிப்பு முறையாலும் இவ்வசதிகளை அரசு பெறலாம். இம்முறைகள் யாவும் பொருளாதார உறுதிக்கும், முன்னேற்றத்திற்கும் உதவவேண்டும்.

## 4. வரிவிதிப்பே நிதிக் கொள்கையின் முக்கிய சக்திவாய்ந்த கருவி (Taxation as the most effective instrument of Fiscal Policy)

எல்லா முறைகளையும்விட, வரிவிதியே நிதிக்கொள்கையின் சிறப்பான முறையாகும். உபரி வரவு - செலவு திட்டத்தை அதிக விலைகளாலும், வரிவீதங்களாலும் பெறமுடியும். மக்களிடமிருந்து கடன்பெறுவது வட்டிவீத உயர்வைத் தந்து முதலீட்டின் அளவைக் குறைத்துவிடும். வங்கிகளிடமிருந்து கடன் பெறுவது விலை உயர்வுகளை ஏற்படுத்தும். நாட்டின் வரிவிதிப்பு முறையைச் சார்ந்தே நிதிக்கொள்கை அமையும். "அரசு சேமிப்பைத் தூண்ட வரிவிதிப்பு முறையை மேற்கொள்கிறது ; பெருகிய சேமிப்பு பொதுத் துறை, தனியார் துறை, கலப்பு நிறுவனத் துறை போன்ற வற்றில் முதலீடு செய்யப்படுகிறது."[1]

தனியார் நுகர்வைக் கட்டுப்படுத்தி, பொருளாதார முன் னேற்றத்திற்கான வசதிகளை அரசிடம் மாற்றி முதலீட்டின் அளவை அதிகரிக்க உதவுவது நிதிமுறையில் முக்கியமான வரி விதிப்புக் கருவியாகும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெற, வரிவிதிப்பு முறை கீழ்க்கண்ட நோக்கங்களைக் கொண்டு அமைய வேண்டும்.

"(i) நுகர்வைக் குறைத்து வசதிகளைப் பெருக்கி முதலீட்டில் பயன்படுத்தப்பட வேண்டும் ;

(ii) சேமிக்கும், முதலீடு செய்யும் ஊக்கத்தை உயர்த்த வேண்டும் ;

(iii) பொது முதலீட்டைச் செய்ய, வசதிகள் பொதுமக்களிட மிருந்து அரசின் கைகளுக்கு மாற்றப்பட வேண்டும் ;

(iv) முதலீட்டு முறைகளில் மாற்றங்கள் செய்ய வேண்டும் ;

(v) பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டும் ;

1. Meier and Baldwin - Economic Development, p. 386.

(vi) இவை எல்லாவற்றையும்விட தேசிய உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; தேசிய வருவாயில் உயர்வு வேண்டும்."[2]

இவ்வித வரிவிதிப்பு நோக்கங்களைக் கொண்டே நிதிக் கொள்கை பெரும்பாலான நாடுகளில் செயல்படுத்தப்படுகின்றது. வரிவிதிப்பு முறையானது இந்நோக்கங்களை அடைவதற்கு ஏற்றாற் போல் மேற்கொள்ளப்படுவதில்தான் சிக்கல்கள் ஏற்படுகின்றன. மாறுபட்டு வரும் பொருளாதார நிலைகளுக்கு ஏற்றவாறு வரி விதிப்பு முறைகளிலும் மாற்றங்கள் செய்யப்பட வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் வரிவிதிப்பிற்கான வாய்ப்புக் கள் குறைவாகவே உள்ளன. பல வகைப்பட்ட வரிகளை விதிப்பதற்கு முன் பலவிதமான நிலைகளை ஆராய வேண்டும். முதலாவதாகவும், முக்கியமானதாகவும் நாட்டின் வரி செலுத்தும் திறன் கணக்கிடப்பட வேண்டும். வரிகளை விதித்து வசூலிப்பதில் நேர்மையான நிர்வாகத் திறமை போன்றவையும் கருதப்படுதல் அவசியமானதாகும். வரியைச் செலுத்துவதால் மக்களின் நலன் ஓரளவு பாதிக்கப்பட்டாலும் சமுதாய நலனைப்பெற அரசு அதிக வரிவிதிப்பை மேற்கொள்ளலாம்.

## 5. வளர்ச்சியடையாத நாட்டிற்கான வரிவிதிப்புக் கொள்கைகள் (Canons of Taxation for an underdeveloped Country)

மேம்பாடடைந்து வரும் நாடுகளில், வரிகள் வரிவிதிப்புக் கொள்கைகளைக் கருத்தில் கொண்டு விதிக்கப்பட்ட வேண்டும். வளரும் பொருளாதாரத்தின் சிக்கல்களுக்கு ஏற்றவாறு ஆடம் ஸ்மித்தின் (Adam Smith) வரிவிதிப்பு கொள்கைகளாகிய, நியாய நிலை (Equity), உறுதிநிலை (Certainty), வசதிநிலை (Convenience), சிக்கனநிலை (Economy) போன்றவை பின்பற்றப்படுதல் வேண்டும். பொருளாதாரச் சிக்கல்களை நீக்கும் வகையில் வரிவிதிப்பு முறை அமைய வேண்டியது அவசியம்.

ஒரு நல்ல வரிவிதிப்பு முறை கீழ்காணும் நிலைகளைக் கொண்டு அமைவது நன்மை பயக்கும்.

(i) வரிவிதிப்பு முறையால் குறைந்த அளவிற்கு மட்டுமே உற்பத்தி பாதிக்கப்படலாம்.

(ii) அது அதிக அவசியத் தேவையில்லாத நுகர்வைக் குறைக்க வேண்டும்.

(iii) பயன்படுத்தப்படாத பொருளாதார உபரியைத் திரட்டி, உற்பத்தி முதலீடுகள் செய்ய வரிவிதிப்பு முறை உதவ வேண்டும்.

2. Raja J. Chelliah - Fiscal policy in underdeveloped countries p. 55.

(iv) ஒவ்வொருவருடைய வரியளிக்கும் திறனுக்கும் ஏற்ற வாறு வரிவிதிப்பு செய்து பொருளாதார வளர்ச்சியைப் பெற முயற்சி செய்தல் நல்லது.

(v) பொருளாதார வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தி முன்னேற்றத்தைப் பெற அது உதவ வேண்டும்.

(vi) வருவாய்ப் பெருக்க வீதத்திற்கு ஏற்றாற்போல் நுகர்வுப் பெருக்க வீதம் அதிகரிக்கக் கூடாது.

(vii) வரிவிதிப்பு வருவாய்-நெகிழ்ச்சியுள்ளதாக (Income Elastic) இருத்தல் வேண்டும். தேசிய வருவாய் உயரும் போது, தேசிய வருவாயில் வரிவிதிப்பின் பங்கு அதிகரிக்க வேண்டும்.

(vii) வரிவிதிப்பு வருவாய்-நெகிழ்ச்சியுள்ளதாக (Income Elastic) இருத்தல் வேண்டும். தேசிய வருவாய் உயரும்போது, தேசிய வருவாயில் வரிவிதிப்பின் பங்கு அதிகரிக்க வேண்டும். இதன் மூலம் 'கடன் பணவீக்க நிலையின்' (Credit-Inflation) தவிர்க் கலாம். பொருளாதாரத்தின் உறுதியான வளர்ச்சிக்கும் அது வகை செய்யும்.

(viii) வரிமுறை சம நிலைக் கொள்கையைக் கொண்டிருத்தல் அவசியமானது. பொருளாதார முன்னேற்றத்தின் சுமைகள் சம நிலை எல்லா நிலை மக்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். செல்வர்களும், வறியவர்களும் தங்கள் சக்திகட்கு ஏற்றவாறு வரிகளைச் செலுத்தி முன்னேற்றத்திற்கு உதவவேண்டும். ஒரே வருவாய் நிலையில் உள்ளவர்களிடமிருந்து சமநிலையில் வரிகள் வசூலிக்கப்பட வேண்டியது தேவையானது.

(ix) வரிவிதிப்பு முறை பண வீக்கநிலையை ஏற்படுத்தக் கூடாது.

(x) வரிமுறை சிக்கனக் கொள்கையைக் கொண்டதாக அமைதல் வேண்டும். வசூலிப்பதற்கு அதிக செலவு பிடிக்காத வரிகள் விதிக்கப்படலாம். வரி வருவாயோடு ஒப்பிடும் போது வரி வசூலித்தலுக்கான செலவு குறைவாகவே இருக்க வேண்டும்.

இவ்வித வரி விதிப்புக் கொள்கைகளைக்கொண்ட, எண்ணிக்கை யில் அதிகமான வரிகளைத் தெரிந்தெடுத்து விதிப்பதில்தான் பல சிக்கல்கள் எழுகின்றன. வரி விதிப்புக் கொள்கை ஒன்றைக் கொண்ட ஒரு வரி, பிறகொள்கைகளைக் கொண்டில்லாமல் இருக்கலாம். "எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்யக்கூடிய வரி ஒன்றைக் கண்டு பிடிப்பது கருவூல அதிகாரிக்குக் கடினமாக உள்ளது. ஆனால் கார் பொறியாளர் ஒருவர் வேகமாகச்

செல்லக் கூடியதும், பாதுகாப்புள்ளதும், விலைக்குறைவானதுமாகிய கார் ஒன்றை உற்பத்தி செய்வது எளிதானதேயாகும்". எந்த ஒரு வரியும் வரி விதிப்புக் கொள்கைகள் யாவற்றையும் பூர்த்தி செய்ய இயலாது. அரசியல் நோக்கங்களால் சில வரிகள் நீக்கப்படவும் வாய்ப்பு உண்டு. வளர்ச்சியடையாத நாடுகளில் வருவாய் மிகக் குறைவாகக் கொண்ட மக்கட்தொகையே மிகுதியாக உள்ளதால், அதிக வருவாயை அரசு பெறுவது கடினமாகிறது. மறைமுக வரிகளே (Indirect Taxes) அதிக வருவாயைத் தரத்தக்க நிலைகளைக் கொண்டிருப்பதால், வருவாய்க் குறைவுள்ள மக்களும் வரிவிதிப்பு முறையால் வளர்ச்சியடையாத நாடுகளில் பாதிக்கப்படு கின்றனர்.

## 6. வரி அமைப்பு (Tax Structure)

பொருளாதார முன்னேற்றத்திற்கு, முன்னேற்றமடைந்து வரும் பொருளாதாரத்தில் வரிக்கொள்கை அதிக அளவில் உதவு கின்றது. வரிக்கொள்கை சேமிப்பைத் திரட்டி உற்பத்திக்கான முதலீடுகளைச் செய்ய உதவவேண்டும். வரிவிதிப்பு முறை வளர்வீத அளவில் சேமிப்பையும், முதலீட்டையும், ஊக்குவிப்பதாக அமைதல் அவசியமானதாகும். அம்முறை வரிவிதிப்புக் கொள்கைகளைப் பூர்த்தி செய்வதாக அமைய வேண்டும்.

### வேளாண்மை வரிகள் (Agricultural Taxes)

வளர்ச்சியடையாத நாட்டில் கிராமப் பொருளாதாரமே பெரிய அளவில் அமைந்துள்ளது. எனவே, பொருளாதார வளர்ச்சிக்கு வேளாண்மை வரிவிதிப்பு முறை எவ்வகையில் உதவுகிறது என்பது ஆராயப்பட வேண்டிய ஒன்று. விவசாயிகளின் வருவாயில் ஒரு பகுதி மூலதனத் திரட்சிக்காகப் பெறப்படுதல் வேண்டும். வேளாண்மையில் நிலவரி சொத்துவரியாக உள்ளது. வேளாண்மை வருவாய் வரியும் (Agricultural Income Tax) விதிக்கப்பட வேண்டிய ஒன்று. 1914-ஆம் ஆண்டிற்குமுன் ஜப்பானில் அதிக நிலவரிகள் விதிக்கப்பட்டு, அவ்வரிகள் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பயன் படுத்தப்பட்டன. "விவசாயிகளின் ஒரு ஏக்கருக்கான உற் பத்தியைப் பெருக்க கடினமான முறைகள் கைக்கொள்ளப்பட்டன. அதற்கு சமமான, உறுதியான வரிவிதிப்பு முறை அதிகரித்த உற் பத்தியை வடிக்கட்டி அரசின் கஜானுக்களுக்கு அளித்தது."[1]

நிலவரியை எளிதில் நிர்வகிக்கலாம். நில உடைமையாளர் களின்மீது வளர்வீத முறையில் அது விதிக்கப்படலாம். இதன் மூலம்

[1] Lewis, The Theory of Economic Growth, p.244

சேமிப்புக்கள் பதுக்குவதிலும், ஊகவணிகத்திலும், வீடுகட்டுவதிலும் ஈடுபடுத்தப்படுவதைத் தடுக்க முடியும். வளர்வீத வேளாண்மை வருவாய் வரியே நிலவரி முறையில் மிகச்சிறந்த ஒன்ருகும். இது சமநிலைக் கொள்கையைப் பூர்த்தி செய்கிறது. கிராமசேமிப்பைத் திரட்ட உதவும் முக்கியமான கருவி இதுவாகும். உற்பத்தி உயர்விற்கான ஊக்கத்தையும் இது தடைசெய்யாது.

வேளாண்மை வருவாய் வரி, வருவாய்-நெகிழ்ச்சியைக் (Income-Elastic) கொண்டதாகவும் உள்ளது. முன்னேற்றமடைந்து வரும் பொருளாதாரங்களில் பணவீக்க நிலைகள் ஏற்படுவதால், வளர்வீத வேளாண்மை வருவாய் வரி மூலம் அரசு தன்னுடைய வருவாயை அதிக அளவில் பெறலாம். பணவீக்க நிலைகள் தோன்றும்போது வேளாண்மைப் பொருட்களின் விலைகளில் அதிகரிப்பு ஏற்படுவதால், வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர்கள் அதிக வருவாய் பெற்று வரியளிக்கும் திறனைப் பெற்றிருக்கின்றனர். ஆனுல் வேளாண்மை வருவாயைக் கணக்கிடுவது கடினமானதாகும். இதற்குக் காரணம் வேளாண்மையில் ஈடுபட்டுள்ள பலரும் கல்வியறிவு இல்லாதவர்களாக இருக்கின்றனர். உற்பத்தி, செலவு பற்றிய கணக்குகளை அவர்கள் வைத்திருப்பதில்லை.

முன்னேற்றமடையாத பொருளாதாரங்களில் நிலவரி முறையானது சிறப்பாகப் பின்பற்றப்பட்டு, கிராம வருவாய்கள் பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்தப் படவேண்டும். இதையடைய வருமானவரி, சொத்துவரி, மூலதனவரி இலாபவரி (Capital Gains Tax) போன்ற பல வரிகள் விதிக்கப்படலாம். பயன்படுத்தப்படாத நிலங்களின் மீதும் வரிவிதிப்பு செய்யலாம். அவ்வாறு செய்தால் அந்நிலங்கள் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

நிலவரி முறையில் சில முக்கிய நிலைகள் கவனமாகக் கருதப்படவேண்டும்.

(i) பராமரிப்பு நிலைகட்குக் குறைவான நிலையை விவசாயிகட்கு நிலவரி முறை அளிக்கக் கூடாது.

(ii) அவ்வரி முறை உழைப்பதற்கான ஊக்கத்தை, சேமிப்பதற்கான ஊக்கத்தை, முதலீடு செய்வதற்கான ஊக்கத்தைக் குறைக்கக் கூடாது.

(iii) நிலப்பிரபுக்கள் இவ்வரிகளை குத்தகைகாரர்கள்மீது மாற்ற முடியாத வரிவிதிப்பு முறை அமைய வேண்டும்.

(vi) மிகக் குறைந்த வருவாயைக் கொண்ட சிறு விவசாயிகள், குத்தகைதாரர்கள் மீது வரிகள் விதிக்கப்படக் கூடாது.

(v) நிலவரி முறை வளர்வீத முறையிலும் அமைய வேண்டும்.

வருமான வரி (Income Tax)

வளர்வீத வருவாய் வரியும் பொருளாதார முன்னேற்றத்திற் கான வசதிகளைத் திரட்டுவதில் முக்கிய பங்கைக் கொண்டுள்ளது. சமநிலையில் இந்த வரி அமைப்பு முறை அமைந்துள்ளது. வருவாய், செல்வப் பங்கீடுகளில் உள்ள வேறுபாடுகளை ஓரளவு இது குறைக் கின்றது. வரிகள், நிதிக்கொள்கை மீதான ஐக்கிய நாடுகளின் அறிக்கை (United Nations Report on Taxes and Fiscal Policy) குறிப்பிடுவதாவது : "இன்றைய வரி விதிப்பின் பொருளாதார நோக்கங்கள் வளர்வீத வரிவிதிப்பையும், வரிவிதிப்பின் சமநிலைக் கொள்கையையும் கொண்டு அமைந்துள்ளன. நிகர வருவாய் மீதும், செல்வங்களின் மீதும் அதிக அளவு வளர்வீத முறையில் வரிவிதிப்புக்கள் செய்யப்படுகின்றன." ஆனால் வளர்ச்சியடையாத நாடுகளில் இவை அதிக வரி வருவாயை அரசுக்கு அளிக்குமெனக் கூற முடியாது. வருமானவரியை வளர்ச்சியடையாத பொருளா தாரங்களில் வருவாயாக அரசு பெறுவதைச் சில காரணிகள் கட்டுப்படுத்துகின்றன :

(i) வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் பணப் புழக் கத்தை அதிகம் கொண்டில்லாத கிராமத்துறையே பெரிதாக உள்ளது.

(ii) இக் கிராமங்களில் உள்ள பெரும்பாலான மக்கள் மிகக் குறைந்த வருவாயைப் பெறுவதால், அதன்மீது வரி விதிக்க முடியாது.

(iii) கல்வியறிவு பெற்றவர்களும் மிகக் குறைந்த அளவிலேயே உள்ளனர்.

(iv) உற்பத்தி, வருவாய் சம்பந்தமான கணக்கு வழக்கு களையும் நேர்மையாக அவர்கள் வைத்திருப்பதில்லை.

(v) உண்மையான வருவாய் மறைக்கப் படுகின்ற நிலையோடு, நேர்மையாக வரி செலுத்தும் நிலையும் அமைந்திருப்பதில்லை.

(vi) அரசியல் கருத்துக்களும், செல்வாக்குகளும் அமைந் துள்ளன.

(vii) வெளிப்படையான, நேர்மையான, திறமையான வரி விதிப்பு நிர்வாகம் அமைவதில்லை.

வருமான வரி விதிப்பில் முக்கியமாக ஒன்று கருதப்பட வேண்டும். வருமான வரி உழைப்பதற்கான, சேமிப்பிற்கான, முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை இழக்கும்படிச் செய்யக் கூடாது. செல்வர்கள் 'குறிப்பிடத்தக்க நுகர்வில்' ஈடுபட்டாலும், 'மூலதன வெளியேற்றம்' (Capital Flight) ஏற்பட்டாலும், பதுக்குதல், ஊக வணிகம் போன்றவை நிகழ்ந்தாலும் அவற்றின் மீது மிக அதிக அளவு வரிகள் விதிக்கப்படவேண்டும். இவை அவர்களுடைய 'ஊக்கத்தை' (Incentive) அதிக அளவு பாதிக்கமாட்டா. டுங்கன் பிளாக் (Duncan Black) குறிப்பிடுவதுபோல, "வரி விதிப்பு, வருவாய் அதிகம் பெறுபவர்களின் ஆடம்பரப் பொருட்களுக்கான செலவைக் குறைக்கும்; அதன் மூலம் கிடைத்த தொகையை ஏழைகளின் நன்மைக்காகச் செலவிடலாம்."[1]

வருமானவரி சேமிக்கவும், சேமித்ததை ஆக்கத் துறைகளில் முதலீடு செய்யவும் உதவுகின்றது. ஆனால், மிக அதிக அளவு வருமான வரி அவர்கட்கு 'ஊக்கத்தை' அளிக்காததால் பொருளாதார முன்னேற்றம் தடைபடுகின்றது. பொதுவாக, தனி ஒருவரின் மீதான வருமானவரி சேமிப்பு, முதலீட்டிற்கான ஊக்கத்தை இழக்கவே செய்கின்றது. அதனால்தான் பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse)[2] பின்வருமாறு கூறுகின்றார். "உழைக்கும் ஊக்கத்தைக் காக்கவும், சேமிக்கும் விருப்பத்தை அதிகரிக்கவும் வரிவிதிப்பு தனியார் வருமானத்தின்மீது இருக்கக் கூடாது; ஆயத்தீர்வைகள் அவசியப் பொருட்களின் மீது விதிக்கப்படலாம்." இவ்வாறு செலவுகளின்மீது வரி விதிப்பைச் செய்தால், வரியைச் செலுத்துபவர்கள் தாங்கள் வரியைச் செலுத்துகிறோம் என்ற உணர்வை அதிகம் பெற மாட்டார்கள்.

### 'மரண வரி' (Death Duty) அல்லது 'பண்ணை வரி' (Estate Duty)

மரணவரி அல்லது பண்ணைவரி என்பது குறிப்பிட்ட அளவு மதிப்பிற்கு மேல் சொத்தைக் கொண்டுள்ளவர்கள் இறந்தபின் விதிக்கப்படுகின்றதாகும். 'வளர்வீதத் தன்மையை' (Progressivity) வரிவிதிப்பு முறையில் இது அதிகம் ஏற்படுத்துகிறதெனலாம்; முன்னேற்றத்திற்கான நிதியைப் பெறுவதில் இதுவும் ஓரளவு உதவுகிறது. வருவாய், செல்வப் பங்கீட்டில் உள்ள வேறுபாடுகளைக் குறைப்பதிலும் நல்ல பயனை அளிக்கிறது. மரணவரி பொருளாதார சமநிலையை ஏற்படுத்துவதோடு, சமுதாய நீதியையும் நிலைபெறச் செய்கிறது. இதை நிர்வகிப்பது எளிதானது; வருமான

1 Duncan Black, The Incidence of Income Taxes, p. 223.

2 Ragnar Nurkse, Problems of Capital Formation in under-developed countries, p. 170.

வரியோடு ஒப்பிடும்போது 'வரி ஏய்ப்பு' (Tax Evasion) செய்வதும் 'மரணவரியில்' கடினமானது. குறைந்த வருவாயைப் பெறும் வகுப்பினர் மரணவரியால் அதிக அளவு பாதிக்கப்படமாட்டார்கள். பெருமளவு வருவாயைக் கொண்ட செல்வர்களே வளர்வீத வரிமுறையால் பாதிக்கப்படுவார்கள். செல்வத்தைச் சேமிப்பவர்கள் மரணவரியால் சேமிக்கும் ஊக்கத்தை இழக்கின்றனர்; அவர்களின் நுகரும் விருப்பம் அதிகரிக்கின்றது. செல்வச் சேமிப்பை மரணவரி ஊக்கமிழக்கச் செய்கிறது. ஆனால் இது மறைமுகமாக அவர்களுக்கு உதவுகிறது எனலாம். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் நலனுக்காகச் சேமிக்கின்றனர். அவர்கள் தங்கள் குழந்தைகளின் கல்விக்காகவும், ஆரோக்கியத்திற்காகவும் முதலீடு செய்வதால் அது ஆக்கப்பணிக்கு மறைமுகமாக உதவுகின்ற ஒன்றேயாகும். ஆனால் சில பொருளியலறிஞர்கள் இக்கருத்தைத் தவறுடையது என்று சொல்கின்றனர். மரணவரி சேமிப்பவரால் கொடுக்கப்பட வேண்டியதல்ல ; சேமிப்பவரின் சந்ததியினரால் எதிர்காலத்தில் அது தரப்பட வேண்டும். மரணவரி ஒருவரைத் தன் ஆயுட்காலத்தில் செல்வத்தை அனுபவிக்க அனுமதிக்கிறது. அதிக அளவு அவர் சேமித்தால் அவருடைய சந்ததியினர் உயர்வான மரணவரியைச் செலுத்த வேண்டி வரும். எனவே மரணவரி முன்னேற்றத்திற்கான நிதியைத் தருகிறது. சமநிலையில் செல்வப் பகிர்வைச் பெய்வதால், சமூக நீதியை நிலை நாட்டி சமுதாய நோக்கங்களை இது நிறைவேற்றுவதாகக் கூறலாம்.

மரண வரியோடு 'அன்பளிப்பு வரியையும்' விதிப்பது நன்மையைத் தரும். ஏனெனில், அன்பளிப்பு வரி விதிப்பின் மூலம் சொத்துக்களை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றுவதில் அதிக ஊக்கம் ஏற்படாது. சட்டபூர்வமாக மரண வரியை ஏய்ப்பதை இது தடை செய்கிறது. அரசின் வரிவருவாயில் இவ்வரியும் ஒரு முக்கிய நிலையைக் கொண்டுள்ளது.

செலவு வரி (Expenditure Tax)

பேராசிரியர் கால்டர் (Prof. Kaldor) முதன்முறையாக செலவு வரியை வளர்ச்சியடையாத நாட்டில் பின்பற்றலாம் என்று தன்னுடைய 'இந்திய வரிச் சீர்திருத்தம்' (Indian Tax Reform) என்ற தன் அறிக்கையில் குறிப்பிட்டார். வளரும் நாடுகளில், கால்டரின் கருத்துப்படி வருமான வரியைவிட செலவு வரியே சிறந்தது. வரி விதிப்பின் சமநிலைக் கொள்கையின்படியும், பொருளாதார விளைவுகளிலும், நிர்வாகச் சிறப்புக்களிலும் செலவு வரி பல சிறப்புக்களைக் கொண்டுள்ளது. செலவே வரிசெலுத்தும் திறனை (Taxable Capacity) அளவிட உதவும் சிறந்த முறை என செலவு வரிக்காக கால்டர்

பரிந்துரைக்கிறார். வளர்வீத செலவு வரியே வளர்வீத வருமான வரியைக் காட்டிலும் 'சமத்துவ நிலைத்தன்மையை' (Degree of Equity) அதிகம் கொண்டுள்ளது. சமுதாயத்தின் உயர்நிலை வகுப்பினரின் ஆடம்பரச் செலவுகளைக் குறைக்கும் நிலையை செலவுவரி கொடுக்கிறது. வாழ்க்கைத்தரங்களில் உள்ள மிகுந்த வேறுபாடுகளைக் குறைக்கவும் இது உதவுகின்றது.

செலவு வரி சேமிப்பையும் பெருக்குகின்றது. செல்வர்களை அதிக அளவு சேமிக்கத் தூண்டுகின்றது. பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nhrkse)[1] எழுதுவதுபோல, "சேமிக்கும் ஊக்கத்தை நிலைபெறச் செய்ய வரிவிதிப்பு வருமானங்களின் மீது இல்லாமல் செலவினங்களின் மீது இருக்க வேண்டும்." செலவு வரியைத் தவிர்க்க அதிக வருவாய் பெறுபவர்கள் தங்கள் செலவுகளைக் குறைப்பதால் சேமிப்பு அதிகரிக்கிறது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மூலதனத்திரட்சி வீதத்தை உயர்த்த உதவுவது செலவு வரி. மேலும், செலவுவரி பின்பற்ற எளிதானது. நிர்வகிக்க எளிதான இவ்வரி முறை பரவலானதும் ஆகும். 'வரி ஏய்ப்பு' (Tax Evasion) செய்வதும் செலவு வரியில் முடியாது எனலாம். இறுதியாக, பொருளாதாரம் முன்னேறும் நிலையில் பணவீக்கநிலை ஏற்படும். செலவுவரி 'குறிப்பிடத்தக்க நுகர்வைக்' குறைப்பதால் பணவீக்க நிலை தடுக்கப்படுகின்றது. நுகர் பொருட்களின் விலைகள் அதிக அளவிற்கு உயர்வதில்லை.

ஆனால், சில நிலைகளால் செலவு வரியில் வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில், சேமிப்பு அதிகரிக்கும் எனக் கூற முடியாது. அவ்வாறு சேமிப்பு ஏற்பட்டாலும், அச்சேமிப்பு உற்பத்திக்கு உதவாத துறைகளில் பயன்படுத்தப்பட மாட்டா என்று கருத இயலாது. வரிவிதிப்பு நிர்வாகத்தைச் சிறப்பாகச் செயல்படுத்தும் பணியாளர்களும் முன்னேற்றமடைந்துவரும் நாட்டில் இருக்க மாட்டார்கள்.

தேவையில்லாத செலவுகளைக் குறைத்து சேமிப்பைப் பெருக்கி விடுவதால் செல்வர்கள் மேலும் உயர்ந்த செல்வ நிலையை அடைவர். செல்வத்திலும், வருவாயிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளில் வேறுபாடு மிக அதிகமாகவே இருக்கும். வருமான வரிக்குப் பதிலாக செலவு வரியைப் பின்பற்றினால் இந்நிலையே ஏற்படும். மேம்பாடடைந்து வரும் பொருளாதாரத்தில் செலவுவரி மிகச் சிலரை மட்டுமே பாதிக்கும். ஏனெனில், உயர்ந்த வருவாயைப் பெறுபவர்கள் மிகக் குறைந்தவர்களே. அரசுக்கு அதிக அளவு வரி வருவாயைத்

[1] Ibid. P.146

தருவதாகவும் செலவு வரி அமையாது. இக்காரணங்களால்தான் 1958-இல் புகுத்தப்பட்ட இச்செலவுவரி 1962-இல் நீக்கப்பட்டது. முதன் முறையாகச் செலவு வரியை விதித்த நாடு இந்தியாவே யாகும்.

செல்வ வரி (Wealth Tax)

வருமான வரியோடு சொத்துக்களின் மீது செல்வ வரியையும் விதிக்க வேண்டும். வளர்ச்சியடையாத நாடுகளின் சொத்துரிமை களில் அதிக வேறுபாடுகள் உள்ளன. வீதாச்சார சொத்து வரி (Proportional Property Tax) வளர்வீத வருமான வரியைக் காட் டிலும் சொத்துரிமைகளின் வேறுபாடுகளை நீக்குவதில் பெரிதும் உதவுகின்றது. வரிவிதிப்பில் 'வரியளிக்கும் சக்திக்கு' (Ability to Pay) ஏற்ப வரிகள் வசூலிக்கப்படுகின்றன. இச்செல்வ வரியால், சேமிப்பு செல்வங்களை வாங்குவதிலும், செல்வங்களை நிர்மாணிப் பதிலும் பயன்படுத்தப்படுவதில்லை.

சொத்துக்களைச் சேமிப்பதைக் குறிப்பிட்ட அளவுகளுக்கு மேல் தடைசெய்வதாக செல்வ வரி அமைகிறது. வருவாயை மறைத்தாலும், சொத்துக்களை மறைப்பது கடினமாகையால் வரி ஏய்ப்பு (Tax Evasion) முடியாத ஒன்றாகிறது. அரசிற்கு அதிக அள வில் வரி வருவாயைத் தருபவைகளாக வருமான வரியும், சொத்து வரியும் உள்ளன. இதிலுள்ள கடினமான சிக்கல் சொத்துக்களை மதிப்பிடுவதும், தனியார் செல்வங்களை மதிப்பிடுவதுமாகும்.

மூலதன இலாப வரி (Capital Gains Tax)

முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் வருவாய்களில் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க மூலதன இலாப வரி உதவு கின்றது. தனியாரின் மீதான வருமான வரியின் மூலமாக மட்டும் இந்த ஏற்றத்தாழ்வுகளை நீக்க முடியாது. ஏற்றத்தாழ்வுகளை நீக்கு வதோடு பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான நிதி வசதியையும் இவ்வரி அளிக்கிறது. தனியார் பங்குகள், கடன் பத்திரங்கள், கட்டடங்கள், நிலம், இயந்திரங்கள், மற்றும் பல சொத்துக்களை விற்பனை செய்யும்போது கிடைக்கப் பெறும் இலாபத்தொகை மீது 'மூலதன இலாப வரி' விதிக்கப்படுகிறது. மூலதன இலாபங்கள் கிடைப்பது போலவே மூலதன இழப்புக் களும் ஏற்பட வகை உண்டு. வருவாய் மீதான நேரான வரிவருமான வரியாகும். உடைமையை விற்று அதன் மூலம் கிடைத்த இலாபத் தின் மீது விதிக்கப்படுவது 'மூலதன இலாப வரி' எனப்படும்.

வளர்ச்சியடையாத நாடுகளில், பங்குகளின் மீது இவ்வரி விதிக்கப்படுவதைவிட பெரிய வீடுகளை விற்பதின்மூலம் கிடைக்

கின்ற இலாபத் தொகைகளின் மீது இவ்வரி விதிக்கப்படலாம். பங்குகள், கடன்பத்திரங்கள் மீது மூலதன இலாப வரி விதித்தால், அது முதலீட்டிற்கான மூலதனத்தின் அளவைக் குறைத்து விடும். முன்னேற்ற மடைந்துவரும் பொருளாதாரத்தில், இவ்வரியின் மூலம் பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்தலாம் ; பெருமளவு ஊக வணிகத்தைத் தடுக்கலாம் ; நகரங்களில் கட்டடங்கள் கட்டப்படுவதில் அமைந்துள்ள ஊக வணிகத்தையும் நீக்கலாம். பொருளாதார முன்னேற்றத்தின் முதற் சில நிலைகட்குப் பின் மூலதனம் அதிக அளவிற்குக் கிடைக்கப் பெறும். அரசின் முன்னேற்ற நோக்கங்கட்கான வரி வருவாயை மூலதன இலாப வரி மூலம் பெறலாம்.

## இலாபங்களின் மீது வரிவிதிப்பு (Taxation of Profits)

மேம்பாடடைந்துவரும் பொருளாதாரத்தில் மூலதனத் திரட்சியை அளவு இலாபங்களின் மீதான வரிவிதிப்பின் மூலம் அடைய முடியும். லூயிஸ் குறிப்பிடுவது போல, "பொருளாதார வளர்ச்சி தேசிய வருவாயில் இலாபத்தின் பங்கை அதிகரிக்கும் ; முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் அதிக இலாபத்தைப் பெறுபவர்கள் குறைந்த அளவிலேயே இருப்பார்கள்."[1] பெருகும் நுகர் பொருட்களின் தேவைக்கு ஏற்ப அளிப்பு இல்லாமையால், அப்பொருட்களின் விலைகள் உயர்வடையும். அதன்விளைவாக இவ்வகை நுகர் பொருட்களின் உற்பத்தியாளர்கள் அதிக அளவு இலாபத்தைப் பெறுவர். இவ்விலாபங்கள் பங்குதாரர்கட்கு இலாப பங்குத் தொகைகளாக (Dividends) அளிக்கப்படுவதால், அதன் மூலம் பங்குதாரர்களின் வருவாய்களின் உயர்வும் ஏற்படும்; அது மேலும் குறைந்த அளவு அளிப்பைக் கொண்டுள்ள நுகர்ச்சிப் பொருட்களின் தேவையை அதிகரித்துவிடும். இந்நிலையால் தான் வளர்ச்சியடையாத நாடுகளின் அரசு இலாபங்களின் மீது வரிவிதிப்பு செய்கின்றன.

இலாபங்கள் வரிகளின் மூலம் அரசினால் பெறப்படாவிட்டாலும், தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களின் கூலி உயர்வை பெறுவதில் வெற்றி அடைந்து விட்டாலும் பணவீக்க நிலை மேலும் தீவிரமடையும். வெளிநாட்டு நிறுவனங்கள் அதிக இலாபங்களைப் பெறும்போது இவ்வரி மேலும் அதிகரிக்கப்படும். வெளிநாட்டு நிறுவனங்கள் மிக அதிக இலாபங்களைப் பெற்றுத் தங்கள் நாடுகட்கு அவ்விலாபங்களை மாற்றும் போது, வளர்ச்சியடையாத நாட்டிற்கு அயல் நாட்டு செலுத்து நிலையில் பாதக நிலை ஏற்படுகின்றது. மிக

[1] W. A. Lewis, The Theory of Economic Growth p. 400.

அதிக அளவு இலாபங்களின் மீதான வரி முன்னேற்றத்திட்டங் கட்கான நிதியைத் தருகிறது. தேசிய வசதிகளைப் பெறவும், பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்தவும் இவ்வரிவிதிப்பு முறை உதவுகிறது.

அதிக வளர்வீத முறையில் இலாபங்களின் மீது வரிவிதித்தல் சேமிக்கும் ஊக்கத்தையும், முதலீடு செய்யும் ஊக்கத்தையும் இழக்கச் செய்து விடுகிறது. தனியாரின் சேமிப்பு குறைவதோடு, நிறுவனங்களின் சேமிப்பும் குறைகிறது. இதனால் முதலீட்டிற்கான நிதிவசதிக் குறைவு ஏற்படுகிறது. தொழிலாளர் சங்கங்களின் நட வடிக்கைகளால் கூலியுயர்வையும் உழைப்பாளர்கள் பெற முடியும். அதிக அளவு இலாபங்களின் மீதான வரியானது பணவீக்க நிலையை ஏற்படுத்தும். இலாபங்களின் மீதான அதிக அளவு வரிவருவாய் அரசால் உற்பத்தித் துறைகளில் முதலீடு செய்யப்படாவிட்டால் அந்நிலை பொருளாதார முன்னேற்றத்தைக் குலைத்துவிடும். தொழில் நிர்வாகத்தினர் வருவாயைப் பெற அனுமதிக்காவிட்டாலும் வளர்ச்சி தடைபடும். இலாபமே அவர்களுக்கு நோக்கமாகும். இலாபத்தை வரிவிதிப்பின் மூலம் குறைத்து விட்டால், உற்பத்தி யில் அவர்கள் ஊக்கத்தோடு ஈடுபடமாட்டார்கள்.

பல முன்னேற்றமடைந்துவரும் இந்தியா, கொலம்பியா, சிலி (chlie) போன்றவைகளின் பொருளாதாரங்களில் தனியார் துறை கட்கு நிதி ஊக்கங்கள் அளிக்கப்பட்டு அவை அதிக இலாபங்களைப் பெறுகின்றன. இலாபங்களின் மீது வரிவிதிப்பு செய்து அரசுகள் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொள்கின்றன. திட்ட வளர்ச்சி யாலும், பொதுவான பொருளாதார முன்னேற்றத்தாலும் நிறு வனங்கள் விரிவடைகின்றன. அவை பெறுகின்ற இலாபமும் அதி கரிக்கின்றது. எனவே அதிகரித்த இலாபத்தின் மீது வரிவிதிப்பு செய்து அரசு முன்னேற்றத் திட்டங்கட்கு நிதிவசதி பெறுவது சரியான ஒன்றேயாகும்.

மறைமுக வரிவிதிப்பு (Indirect Taxation)

மறைமுக வரிகள் அல்லது பண்டங்களின் வரிகள் அதிக அளவு நிதியை அரசுக்குத் தருவதால் வளர்ச்சியடையாத நாட்டில் அவை முக்கிய நிலையைக் கொண்டுள்ளன. எல்லாநாடுகளிலும் முன்னேற் றத்திற்காக நிதிவசதிகள் அரசுகட்குத் தேவைப்படுகின்றன. எல்லா மக்களும் வளர்ச்சிக்கு வசதியளிக்க வரியளிக்க வேண்டியது அவசியமானது. சமுதாயத்தின் எல்லா பிரிவினர்களும் தர வேண்டியவைகளாக பண்டங்களின் வரிகள் உள்ளன. ஆயத்தீர்வை கள் (Excise Duties) பண்ட வரிகள் (commodity Taxes) எனப்படு கின்றன. குறைந்த அளவில் ஆயத்தீர்வை விதிக்கப்பட்டாலும்,

அது அரசுக்கு அதிக வருவாயைத் தரும். உதாரணமாக, நெருப்பு பெட்டியின் மீதான சிறிய அளவு ஆயத்தீர்வை அதிக வருவாயை அரசுக்குத் தரும். இந்த ஆயத்தீர்வையானது வாங்குவோருக்குப் பெரிய சுமையாக அமைவதில்லை; அவர்கள் இத்தீர்வையைச் செலுத்துகின்றோம் என்பதையே உணர்வதில்லை. ஆயத்தீர்வை வரி விதிக்கப்பட்ட பொருளின் விலையோடு சேர்க்கப்பட்டு விடுகிறது. குறைந்த அளவு தீர்வையானது சேர்க்கப்படுவதால் விலையிலும் சிறிதளவு உயர்வே ஏற்படுகின்றது. இது பற்றி நுகர்வோர் அதிக அக்கறை கொள்வதில்லை.

மறைமுக வரிகள் மக்களால் உணரப்படாமையால், அவர்கள் சேமிக்கும் ஊக்கத்தை இழப்பதில்லை. எல்லோருடைய நன்மைக்காகவும் பண்டங்களின் மீது வரிகள் விதிக்கப்பட வேண்டும். முன்னேற்றத்திற்கான நிதியை அளிக்கின்றோம் என்ற உணர்வு எல்லா வரி அளிப்பவர்கட்கும் ஏற்படுகின்றது. சமத்துவ நிலையிலும் இவ்வரிகள் விதிக்கப்படுகின்றன. சமுதாயத்தின் எல்லா பிரிவு மக்களும் இவ்வரிகளைச் செலுத்துவது தவிர்க்க முடியாததாகின்றது. சாதாரண நுகர்வுப் பொருட்களின் மீது குறைந்த அளவு வரிகளும், ஆடம்பரப் பொருட்களின் மீது அதிக அளவு வரிகளும், விதிக்கப்படுகின்றன. மக்களின் நலனைப் பாதிக்காத வகைகளில் தான் மறைமுக வரிகள் விதிக்கப்படுகின்றன. வெவ்வேறு வரி வீதங்கள் பல வகைப் பண்டங்களின் மீது அவற்றின் அவசியத் தன்மைகட்கு ஏற்றவாறு விதிக்கப்படுகின்றன.[1]

பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்தி அதிக அளவு பண்டங்களின் மீதான வரிகள் விதிக்கப்பட வேண்டும். முன்னேற்றமடைந்து வரும் பொருளாதாரத்தில் குறைந்த வருவாயைக் கொண்டவர்கள் இறுதிநிலை நுகர்வின் விருப்பத்தை (Marginal Propensity to Consume) ஒன்றிற்குச் சமமாகக் கொண்டுள்ளனர். மக்களுடைய வருவாய் பெருகும் போது, நுகர்விற்கான செலவும் வருவாய் அதிகரிக்கின்ற அதே அளவே உயர்கின்றது. வருவாய் எந்த அளவிற்கு அதிகரித்தாலும், அதிகரித்த வருவாய் யாவும் நுகர்விலேயே செலவிடப்படுகின்றன. இந்த நுகர்வானது கட்டுப்படுத்தப்படாவிட்டால், உற்பத்திப் பொருட்கள் அனைத்துமே நுகரப்பட்டுவிடும். மூலதனத்திரட்சியைப் பெறுவதற்கான உபரி உற்பத்தி அங்கு அமைந்திருக்காது. அதிக அளவு பண்டங்களின் வரிவிதிப்பு நுகர்வைக் குறைக்கும். இவ்வரிகளால் பண்டங்களின் விலைகள் உயர்வதால் நுகர்வு குறைகிறது. அவசியமற்ற பொருட்கள், ஆடம்பரப் பொருட்கள் போன்றவற்றின் உற்பத்தி

[1] Raja J. Chelliah, Fiscal Policy in Underdeveloped Countries, p. 85.

யும், நுகர்வும் கட்டுப்படுத்தப்படுகின்றன. இவ்வகையில் பண்டங்களின் மீதான வரிகள் முதலீட்டு வீதத்தை உயர்த்துகின்றன.

பண்டங்களின் விலைகள் அவற்றின் விலைகளை உயரச்செய்கின்றன. வரியின் அளவைக் காட்டிலும் அதிக அளவிலும் விலை உயர்வு ஏற்படலாம். இது உழைப்பாளர்களின் ஊதியங்களில் உயர்வை ஏற்படுத்தும். வருவாய் உயர்வால் மறுபடியும் இவ்வகைப் பண்டங்களின் நுகர்வில் அவர்கள் ஈடுபடுவார்கள். எனவே, இவ்வித வரிகள் பண்டங்களின் நுகர்வை அதிகரிக்கின்றன என்றும் சொல்லப்படுகின்றது.

முன்னேற்றத்திற்கான நிதியை அளிப்பதில் இறக்குமதி வரிகளும் முக்கிய பங்கு வகிக்கின்றன. இறக்குமதி செய்யப்படுகின்ற ஆடம்பரப் பொருட்களின் மீது அதிக இறக்குமதி வரிகள் விதிக்கப்பட்டால் ஆடம்பரப் பொருள்களின் நுகர்வு குறைக்கப்படும். "உள்நாட்டு ஆடம்பரப்பொருட்களின் நுகர்வும், உற்பத்தியும் கட்டுப்படுத்தப்பட வேண்டியது அவசியமானதாகும். வளர்ச்சியடையாத நாடுகளின் மக்கள் பிற நாடுகளின் முன்னேற்றமடைந்த நுகர்வு முறையைப் பின்பற்ற விரும்புகின்றனர். ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதிக் கட்டுபாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன. இவ்விதக் கட்டுப்பாடுகளால்தான் நுகர்வுப் பொருட்களின் நுகர்வு ஓரளவு குறைக்கப்பட்டு, முதலீட்டுப் பொருட்களின் இறக்குமதி அதிகரிக்கின்றது. ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதி கட்டுப் படுத்தப்படாவிட்டால் மூலதனத் திரட்சி உயர்வடையாது." [1]

பொருளாதார முன்னேற்றத்தின் ஆரம்ப நிலைகளில், உள்நாட்டுத் தொழில்களை அயல் நாட்டுப் போட்டியினின்றும் காக்கவும் இறக்குமதி வரிகள் விதிக்கப்படுகின்றன. பணவீக்க நிலையுள்ள காலங்களிலும், அயல் நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்துநிலை உள்ள காலங்களிலும் இறக்குமதிக் கட்டுப்பாடுகள் கைக்கொள்ளப்படுகின்றன. இறக்குமதி வரிகளின் மூலம் அதிக வருவாயும் அரசுக்குக் கிடைக்கிறது. ஆனால் வளர்ச்சியடையாத நாடு முன்னேறத் தொடங்கியபின், இறக்குமதி வரிகளின் மூலம் கிடைத்த அரசின் வருவாய் குறைகிறது. அந்நாட்டின் வாணிப முறைகளிலும் பலவித மாற்றங்கள் ஏற்படுகின்றன. அடிப்படைக் கச்சாப் பொருட்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன ; மூலதனப் பொருட்களின் இறக்குமதியும் பெருகுகின்றது. ஆடம்பர நுகர்வுப்

1. Nurkse, Problems of Capital Formation in underdeveloped countries, p. 119.

பொருட்களின் இறக்குமதி குறைவதால், இறக்குமதி வரி வருவாயும் அரசிற்குக் குறைகின்றது.

பல வளர்ச்சியடையாத நாடுகள் வேளாண்மைப் பொருட்களையும், தொழில் கச்சாப் பொருட்களையும் அதிக அளவில் ஏற்றுமதி செய்கின்றன. தேசிய வருவாயின் பெரும்பகுதி இவற்றின் ஏற்றுமதியின் மூலம் பெறப்படுகிறது. எனவே, ஏற்று மதித் தீர்வைகளும் (Export Duties) முன்னேற்றத்திற்கான நிதியைப் பெறுவதில் ஓரளவு உதவுகின்றன.

முன்னேற்றமடைந்து வரும் நாடுகளில் 'நேர்முக வரிவருவாயின் தேவை நெகிழ்ச்சி' (Elasticity of the Direct Tax Receipt) மிகக் குறைவாக உள்ளது. வேறு வார்த்தைகளில் கூறினால், நேர்முக, வரிகளின் வரி வருவாய், தேசிய வருவாய் பெருகும்போது அதே விகிதத்திலேயே அதிகரிக்காது. எடுத்துக் காட்டாக, ஜி. எஸ். சகோடாவின் (G. S. Sahota) கணிப்பின்படி, இந்தியாவில் நேர்முக வரிகளின் தேவை நெகிழ்ச்சி 0.674 என்ற அளவில் மட்டுமே உள்ளது. இதன் காரணமாகத்தான், மறைமுக வரிகள் முன்னேற்ற நோக்கங்களுக்காக அதிக அளவில் விதிக்கப்படுகின்றன. முன்னேற்றத் திட்டங்களுக்கான நிதியைப் பெறுவதில் இவ்வரிகள் முக்கிய நிலையைக் கொண்டுள்ளன.

நிதிக்கொள்கையில் பற்றுக்குறை நிதியாக்கத்தைக் காட்டிலும் மறைமுக வரிமுறை சிறந்த தெனவும் கருதப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தத்தக்க நிதியை நேரடியாக அரசின் கஜானாவிற்கு மறைமுக வரிமுறை அளிக்கிறது. பற்றுக்குறை நிதியாக்கம் தற்காலிக நிவாரணத்தை தொழில் உற்பத்தியாளர்கட்கும், வியாபாரிகட்கும் அளித்தாலும் பணவீக்க நிலையின் தீமைகள் படிப்படியாகத் தோன்றக்கூடும். மறைமுக வரிகளில் சமத்தவ நிலையானது பாதுகாக்கப் படுவதில்லை. பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதிச் சுமையை, வருவாய் அதிகம் பெறுபவார்கள் முதல் குறைந்த வருவாய் பெறுபவர்கள் வரை எல்லோரும் ஏற்க வேண்டியுள்ளது. மறைமுக வரிகளில் வரி ஏய்ப்புகளுக்கு வாய்ப்பில்லாததால், அவ்வரிகளை அவர்கள் கொடுத்தே ஆக வேண்டியுள்ளது.

வரிக்கொள்கை பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனத் திரட்சியைப் பெறுவதில் முக்கிய பங்கேற்கின்றது. அதிக வரிவிதிப்பு முன்னேற்றத்திற்கான நிதியை பெற அவசியமானது. வரிவிதிப்பு இல்லாவிடில் திரட்டப்படத்தக்க வசதிகள் வீணடிக்கப்படும். சேமிப்புகள் சிறப்பான வகைகளில் உற்பத்திக்கு உதவாத நிலை உருவாகும். மற்றொரு புறத்தில் குறைந்த வரிகள்

தனி முதலீட்டாளர்கட்கு ஊக்கத்தை அளிக்கின்றன. வேளாண்மை வளர்ச்சியும், தொழில் முன்னேற்றமும் சிறப்படைகின்றன. எனினும், வரிவிதிப்பின் மூலம் அரசு நிதியைப்பெற்று முன்னேற்றப் பணிகளில் பயன்படுத்தினால், பொருளாதார வளர்ச்சிவீதம் மிக உயர்ந்த அளவில் அமையும். மறைமுகவரிகள், வரிவிதிப்பின் சமத்துவக் கொள்கையைக் கொண்டிருக்கவில்லை எனக் குறை கூறப்பட்டாலும், அதிக வருவாயைக் கொண்டு நுகர்வை அதிகம் செய்பவர்களே இவ்வரிகளால் பாதிக்கப்படுவார்கள்.[1]

நேர்முக வரிகளில் வரி ஏய்ப்புகளுக்கு வாய்ப்பு உண்டு. இந்தியா போன்ற மேம்பாடடைந்துவரும் நாடுகளில் நேர் முகவரிகளின் மூலம் குறைந்த வரி வருவாயை மட்டுமே அரசு பெறமுடியும். மறை முக வரிகளே அதிகம் கொண்டிருந்தும், குறைந்த வரி வருவாயையே அரசு கொண்டுள்ளது. நேர்முக வரிகளே மட்டும் அதிகம் நம்பி இருந்தால், இக்குறைந்த அளவு வருவாயைக் கூட அரசு பெற இயலாது. பணவீக்க நிலையும் ஏற்படுவதால், திட்டச் செலவுகள் அதிகரிக்கின்றன. பெருகிவருகின்ற நிதித்தேவையைச் சமாளிக்க, நேர்முக வரிகளோடு மறைமுக வரிகளையும் பின்பற்றி திட்டங்களில் முதலீடு செய்ய அரசு அதிக நிதியைப் பெற முயலவேண்டும். முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில், மறைமுக வரிகள் அரசுகளின் வரிவருவாய்களில் பெரும் பகுதியே அளிக்கின்றன.

## 7. பொருளாதார முன்னேற்றத்திற்கான கருவியாக பொதுக்கடன் (Public Borrorwing as an Instrument of Economic Development)

வளர்ச்சியடையாத நாடுகளின் மூலதனத்திரட்சிக்கு பொதுக் கடன் ஒரு முக்கிய முறையாகத் திகழ்கின்றது. வரிவிதிப்பை விட இது சிறந்த முறை என்றும் சொல்லப் படுகின்றது. கட்டாயச் சேமிப்பை வரிவிதிப்பு ஏற்படுத்துகிறது. பொதுக்கடன் மக்களின் விருப்பத்தோடு பெறப்படுகிறது. வரியைச் செலுத்துவர் திரும்ப வரித்தொகையைப் பெறமுடியாது. எனவே, வரி செலுத்துவதில் எவருக்குமே அதிக விருப்பம் இருப்பதில்லை. கடனை அளிப்பவர் குறிப்பிட்ட ஒப்பந்த காலத்திற்குப்பின் வட்டியோடு அப்பணத்தைத் திரும்பப் பெறலாம். வரிவிதிப்பைப் போலன்றி பொதுக் கடன் பெறுவது சேமிக்கும் ஊக்கத்தையும், முதலீடு செய்யும் ஊக்கத்தையும் குறைக்காது. கடனுக்கான வட்டியும் அளிக்கப் படுவதால் சேமிக்கும் விருப்பம் அதிகரிக்கின்றது.

[1] W.W. Heller, U. N. Taxation and Fiscal Policy in underdeveloped countries, p. 10

உபரிப் பணத்தை மக்களிடமிருந்து திரட்டுவதால் பொதுக் கடன் பணவீக்கத்திற்கு உதவுவதில்லை. வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில், மக்களிடமிருந்து பெறுகின்ற கடன்திட்டம் உற்பத்திக்கு உதவாத துறைகளிலிருந்து மூலதனத்தை உற்பத்தித் துறைகளுக்கு மாற்றுகின்றது. வீடுகள், தங்கம், நகைகள் போன்றவைகளின் மீதான உற்பத்திக்கு உதவாத முதலீடு அளவில் குறைகின்றது.

வளர்ச்சியடையாத நாடுகளில் மக்கள் தங்களாகவே அரசிற்குக் கடனளிக்க முன்வரமாட்டார்கள். அதற்குக் காரணம் அவர்களுடைய குறைந்த வருவாய், குறைந்த சேமிப்பு, அதிக நுகரும் விருப்பம் ஆகியவை ஆகும். மக்கட்தொகையில் பெரும்பகுதி இவ்வாறு குறைந்த வருவாயையே கொண்டுள்ளது. குறைந்த அளவே உள்ள செல்வர்கள் அரசுக்குக் கடன் அளிப்பதில் அதிக ஆர்வம் கொண்டிருப்பதில்லை. ஏனெனில், அதைக் காட்டிலும் அதிக இலாபத்தைத் தருவதாக உள்ள ஊகவணிகம், வீடுகள், தங்கம் வாங்குதல் போன்றவற்றில் ஈடுபடுகின்றனர்.

அமைக்கப்பட்டுள்ள பண, மூலதனச் சந்தைகள் இல்லாமையால் அரசு தேவையான அளவு கடனை மக்களிடமிருந்து பெற முடிவதில்லை. வங்கிகளும் நிதி நிறுவனங்களும் குறைவாகவே உள்ளன. கடன்பத்திரங்களைப் பற்றி அறிந்திருப்பவர்களும் குறைந்த எண்ணிக்கையில் தான் உள்ளனர். அரசின் நிதி உறுதித் தன்மையில் மக்களுக்கு, நம்பிக்கை இருப்பதில்லை. எனினும் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்ட பிறகு, வருவாயும் சேமிப்பும் அதிகரிக்கின்றன. உள் நாட்டுக் கடனையும் பெற முடிகிறது. சிறு சேமிப்புக்களைப் பெறுவதின் மூலமும், பொதுக் கடனுக்கு அதிக வட்டி வீதத்தை அளிப்பதின் மூலமும் மூலதனத்தைப் பெறலாம்.

(1) முதலாவதாக, சேமிப்புக்கள் உற்பத்திக்கு உதவாத வீடுகள், தங்கம், நகைகள் போன்றவைகளை வாங்குதலில் பயன் படுத்தப் படுவதை அரசு தடுத்தல் வேண்டும். ஆடம்பரப் பொருட்கள் வாங்கப் படுவதும் தடை செய்யப் படுதல் அவசியமானதாகும். இதை கல்வி, விளம்பரம், அறிவுறுத்தல் போன்றவற்றின் மூலம் அடையலாம்.

(2) இரண்டாவதாக, மக்களிடமிருந்து சேமிப்பைப் பெறுவதற்கான நிறுவனங்கள் நாடு முழுதும் பல இடங்களிலும் அமைக்கப்படுதல் அவசியம். வணிக வங்கிகள், காப்புறுதி நிறுவனங்கள், சேமிப்பு வங்கிகள், சமுதாயக் காப்பு நிறுவனங்கள் போன்றவற்றைத் தொடங்குதல் சேமிப்பைத் தூண்ட உதவும்.

(3) மூன்ருவதாக, அரசின் கடன்பத்திரங்கள் அதிகம் விற்கப் படுதல் வேண்டும். தனியார் கடன்பத்திரங்கள் கொண்டுள்ள அதிக வட்டி வீதத்தை அரசின் கடன் பத்திரங்களும் அளிக்க வேண்டும். பல வகைப்பட்ட அரசின் கடன் பத்திரங்களும் வெளியிடப்படலாம். கடன்பத்திரங்களை எளிதில் மாற்றும் வசதி களும் அமைந்திருப்பது தேவையானது. தங்கத்தைப் பெற்றுக் கொண்டு, அதன் மதிப்பிற்குச் சமமான தங்கக்கடன் பத்திரங்கள் அளிக்கப்பட வேண்டும். அப்பத்திரங்களின் வட்டி வீதங்களும் உயர்வாக இருத்தல் அவசியமானது.

(4) இறுதியாக, அரசின் நிதி, அரசியல் உறுதித் தன்மையை மக்கள் உணர்ந்தால்தான் உள்நாட்டுப் பொதுக்கடனை வெற்றி கரமாகப் பெறலாம். உண்மை வருவாய் உயர்ந்து, பணவீக்கநிலை இல்லாமல் இருந்தால் அரசு மக்களிடமிருந்து கடனை எளிதாகப் பெற இயலும்.

இவ்வித முறைகளால் முன்னேற்றத்திற்குத் தேவையான நிதியைப் பெறமுடியாவிடில், உள்நாட்டுக் கடனைக் கட்டாயமாக்க லாம். வசதிகளைத் திரட்டி மூலதனத்தைப் பெற அரசு தீவிரக் கொள்கைகளை மேற்கொள்ள வேண்டும். வளர்ச்சியடையாத நாடு களில் கட்டாயமாகப் பொதுக்கடனைப் பெறுதல் தவிர்க்க முடியாதது. ஏனெனில் மக்கள் தாங்களாகவே கடனை அளிக்க முன்வர மாட்டார்கள் ; வரிவிதிப்பின் மூலமாகவும் முன்னேற்றத் திட்டங்கட்குத் தேவையான நிதியைப் பெற இயலாது.

சமுதாயத்தின் சில பிரிவினர் தங்கள் வருவாயின் பெரும் பகுதியை உற்பத்திக்கு உதவாத துறைகளில் பயன் படுத்து கின்றனர். சில குறிப்பிட்ட முன்னேற்றத் திட்டங்களின் மூலம் சில பகுதி மக்கள் நன்மையடைகின்றனர். இவ்வித நன்மைகளைப் பெறுபவர்கள், அரசின் கடன்பத்திரங்களை வாங்குதைக் கட்டாய மாக்கலாம். பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) கட்டாயக் கடனைக் பெறுவதின் பயனை விளக்குகிருர்: "பொதுவாக மக்கள் நுகர்வைத் தவிர சொத்துக்களைச் சேமிக்கும் விருப்பமும் கொண்டுள்ளார். இதனுல் வரி விதிப்போடு கட்டாயக் கடனையும் பெறவேண்டும். வரி விதிப்போடு கட்டாயக் கடனைப் பெறுவது கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்துகிறது. வரிவிதிப்பின் மூலமாக உழைப்பின் ஊக்கமும் உற்பத்தியின் அளவும் பாதிக்கப்படலாம். பொது மக்களிடமிருந்து கடனைப் பெறுவதில் இவ்விதத் தடைகள் ஏற்படுவதில்லை."[1]

[1] Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, p. 170

முன்னேற்றமடையாத நாட்டில் இம்முறையின் மூலம் நிரந்தரமாக நிதியைப் பெற முயலக் கூடாது. குறிப்பிட்ட சில முன்னேற்றத் திட்டங்களுக்காகக் குறுகிய காலத்திற்கு மட்டும் பொதுக் கடனை உள் நாட்டிலிருந்து திரட்டலாம். கட்டாயமாகக் கடனைப் பெறுவதை இறுதியாகத் தவிர்த்து மக்கள் தாமாகவே கடனைத்தர முன்வரச் செய்ய வேண்டும். இந்தியாவில் இம்முறையில் கடனைப்பெறுவதில் அரசு பெரு வெற்றியை அடைந்துள்ளது.

பொருளதார முன்னேற்றத்தில் பொதுச் செலவின் பங்கு
(Role of Public Expenditure in Economic Development)

அரசின் மூலதனத்திரட்சி வெற்றியடைய, பொதுச் செலவின் நிர்வாகம் திறம்பட அமைய வேண்டும். வீணான, அதிகமான நிர்வாகச் செலவுகள் குறைக்கப் படுதல் அவசியமானது. நிர்வாகத் திறமையில் முன்னேற்றம் தேவை. பொது நிறுவனங்கள் திறமையோடு நடத்தப்பட்டு உற்பத்திச் செலவைக் குறைத்து அதிக இலாபத்தைப் பெறுதல் வேண்டும். அந்நிறுவனங்களில் வீணான செலவினங்களும், ஆடம்பரமான செலவினங்களும் முற்றிலும் நீக்கப்படுதல் வேண்டும். அரசின் செலவுகள் பொருளாதாரத்தின் வேளாண்மை, தொழில் துறைகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்த வேண்டும். கடன்கள், கொடைகள், வரிவிலக்குகள், உதவித் தொகைகள் அளிப்பதின் மூலம் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம். சமுதாய, பொருளாதார அவசிய முன்னேற்றங்களாகிய கல்வி, நீர்ப்பாசனம், சக்தி, போக்குவரத்து, மருத்துவ வசதி போன்றவற்றின் வளர்ச்சியும் வேளாண்மை, தொழில் மேம்பாட்டிற்கு உதவுமெனலாம்.

இவ்வித வசதிகள் உற்பத்தியைப் பெருக்க உதவுவதோடு, சந்தையின் அளவை விரிவடையச் செய்கின்றன ; உற்பத்திச் செலவையும் குறைக்கின்றன. அடிப்படைத் தொழில்களும், பெரிய தொழில்களும் உற்பத்தியைத் தொடங்க நீண்டகாலம் பிடிப்பதால், அவற்றை முன்னேற்றமடையச் செய்வது அரசின் கடமையாகும். அரசு கடினமான முறைகளைப் பின்பற்றிப் பெறுகின்ற மூலதனத்தைச் சிறப்பாகப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியை விரைவாக்க வேண்டும். இக் காரணங்களால் பொருளாதார முன்னேற்றத்தில் பொதுச் செலவின் பங்கு முக்கியமானதாக உள்ளது.

பேராசிரியர் குரிஹாரா (Prof. Kurihara)[1] கருதுவது போல அரசின் நிதிக்கொள்கை சேமிக்கவும், முதலீடு செய்யவும்,

[1] K K. Kurihara-The Keynesian Theory of Economic Development

புதிய கண்டுபிடிப்புக்களைப் பயன்படுத்தவும், வருவாயை மறுப் பங்கீடு செய்யவும் உதவுகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் தனியார் ஊக்கத்தை உயர்த்தவும், தனியார் சேமிப்பு, தனியார் கண்டுபிடிப்புக்களை அதிகரிக்கச் செய்யவும் நிதிக்கொள்கை செயல் படுத்தப் பட வேண்டும்.

'சேமிப்பாளராக' அரசும் தன் வருவாயில் ஒரு பகுதியைச் சேமிக்க வேண்டும். அரசு உபரி வரவு-செலவுத் திட்டத்தைத் தீட்ட வேண்டும். அதைக் கீழ்க்கண்டவற்றின் மூலம் பெறலாம் :

(i) அரசின் சராசரிச் செலவு செய்யும் விருப்பத்தைக் குறைக்க வேண்டும் ; அல்லது

(ii) அரசின் 'சராசரி வரிவிதிக்கும் விருப்பத்தை' (Average Propensity to Tax) உயர்த்த வேண்டும்.

சேமிப்பாளராக அரசு இவற்றை மேற்கொள்ள வேண்டும்.

'முதலீட்டாளராக' அரசு தன் திறனைப் பயன்யடுத்தி விரை வான முன்னேற்ற வீதத்தைப் பின்வரும் முறைகளினால் பெற முடியும் :

(i) முதலீட்டின் சாரசரி உற்பத்தியைப் பெருக்க வேண்டும். முன்னேற்றமடையாத பொருளாதாரத்தைப் பொறுத்த அளவில், உபரி வரவு செலவுத்திட்டம் பெறத்தக்க ஒன்றேயாகும். தனியார் சேமிப்போடு அரசும் சேமிப்பது அரசின் நிதிக் கொள்கை யில் அடங்குவதாகும்.

(ii) அரசு சராசரி வரி வீதத்தை உயர்த்தி நுகர்வோரின் செலவின் வீதத்தைக் குறைக்கலாம். அதன்மூலம் அரசிற்கு முத லீட்டிற்கான மூலதனமும் கிடைக்கும்.

(iii) அரசின் சராசரி நுகரும் விருப்பத்தைக் குறைத்து, நுகரும் அளவில் தாழ்வை ஏற்படுத்தி முதலீட்டிகான நிதியை அரசு பெறலாம்.

அரசு 'புதிய கண்டுபிடிப்பாளராக' கண்டுபிடிப்புக்களுக்காக நிதிகளை ஒதுக்குகின்றது. புதிய கண்டு பிடிப்புக்களால் உற்பத்தியை உயர்த்தி உற்பத்திச் செலவைக் குறைக்கலாம். மூலதனத்தின் அளவையும் உற்பத்தித்திறனையும் உயர்த்தி வளர்ச்சி வீதத்தை அதிகரிக்கலாம். குறிப்பிட்ட சில தொழில் நிறுவனங்கட்டு புதிய கண்டுப்பிடிப்புகளைச் செய்ய உதவித் தொகைகள் வழங்கப்பட வேண்டும். இதன் மூலம் குறைந்த அளவு மூலதனத்தைக் கொண்டு அதிக உற்பத்தியைப் பெறமுடியும். தொழில் நுணுக்கக்

கருவிகளைப் பயன்படுத்தி உற்பத்தியின் அளவையும், தரத்தையும் உயர்த்தலாம்.

வருவாய் மறு பங்கீட்டாளராக (Income Redistributor) அரசு பல வகைப்பட்ட வரிகளை விதிக்கிறது. வருவாய் நிலைகட்கு ஏற்ப வரிகள் அமைகின்றன. அதிக வருவாயைப் பெறுபவர்கள் மீது அதிக வரிச்சுமையானது அமைந்துள்ளது. வரிவிதிப்புக் கொள்கையின் மூலமாக வருவாய் வேறுபாடுகளைக் களையலாம்; செல்வப்பங்கீட்டில் உள்ள ஏற்றத்தாழ்வுகளையும் நீக்குகின்றது. சமதர்மச் சமுதாயத்தை அமைக்க வரிவிதிப்புக் கொள்கை பெரிதும் உதவும். இயற்கை வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தி நாட்டின் மொத்த ஆக்கத்தை அதிகரிக்க முடியும். வரிவிதிப்பின் மூலமே திட்டச் செலவுகளின் பெரும்பகுதி பெறப்படுகின்றது. ஒரு சிலரிடமே செல்வம் சேர்வதைத் தடுக்கவும் இது உதவுகின்றது. எனினும் அரசின் வரிவருவாயில் அதிக அளவு மறைமுக வரிகளின் வாயிலாகவே பெறப்படுகின்றது. மறைமுக வரிகள் எல்லா பிரிவு மக்களையும் ஒரே வகையில்தான் பாதிக்கிறது. நேர்முக வரிகள் வளர்ச்சியடைந்த நாடுகளின்தான் அதிக வரிவருவாய் அரசிற்குத் தருகின்றன.

அரசின் நிதிக்கொள்கைக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உள்ளது. அரசின் வரிவிதிப்பு முறைகள், செலவு முறைகள் முன்னேற்றத்திட்டங்களில் செயல்படுத்தப்பட்டு வளர்ச்சி வீதத்தில் உயர்வைப் பெற கைக் கொள்ளப்படுகின்றன. வரிவிதிப்பின் மூலமாகப் போதுமான வருவாயை அரசு பெற முடியாமையால் அயல்நாட்டுக் கடன் பெறப்படுகிறது; பற்றுக்குறை நிதியாக்கமும் பின்பற்றப்படுகிறது. பணவீக்கநிலையால் திட்டச்செலவுகள் அதிகரித்திருப்பதால், அதிக நிதி தேவைகளை கொண்டவைகளாக இன்றைய வளர்ச்சி யடைந்து வரும் நாடுகள் இருக்கின்றன.

# 15. வரிவிதிப்பில் உள்ள சில சிக்கல்கள்
(Some problems of Taxation)

ஒரு அரசின் வரிவிதிப்புக் கொள்கைக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது. வரி விதிப்பு முறையில் சிலவிதமான சிக்கல்கள் தோன்றுகின்றன. அச் சிக்கல்களைத் தவிர்த்து சிறந்த வரிக்கொள்கையைப் பின்பற்றுவது அரசின் கடமையாகும். மேம்பாடடைந்துவரும் பொருளாதாரங் களில் இவ்விதச் சிக்கல்கள் எழுவது இயல்பானதேயாகும். விரை வான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இவ்விதச் சிக்கல்கள் களையப்படுதல் வேண்டும். இச்சிக்கல்கள் பின்வரும் மூன்று வகைகளில் அமைகின்றன. (i) வரிதாங்கும் திறன் (Taxable Capacity) ; (ii) வரிவிதிப்பும், பணவீக்கமும் (Taxation and Inflation) ; (iii) வரிவிதிப்பும், மூலதனத்திரட்சியும் (Taxation and Capital Formation). இவற்றை விளக்கமாக ஆராய்வது அவசிய மானதாகும்.

## I. வரி தாங்கும் திறன் (Taxable Capacity)

தனி மனிதனின் வரி செலுத்தும் திறனைக் கணக்கிடுவது கடினமானது. ஒரு பொருளாதாரத்தின் வரி தாங்கும் திறனைக் கணக்கிடுவது அதைவிடக் கடினமானதாக அமைகின்றது. "முழுமையான வரிதாங்கும் திறன் என்பது ஒரு மாயை ; பொது நிதியியலின் விவாதங்களிலிருந்து அது முற்றிலுமாக நீக்கப்பட வேண்டும்," என்று பேராசிரியர் டால்டன் (Prof. Dalton) குறிப்பிடு கின்றார். வரிதாங்கும் திறனைத் துல்லியமாக அளவிட முடியாது ; ஆனால் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகளின் வரி தாங்கும் திறனை ஒப்பிட்டு நோக்குவதால் நன்மை ஏற்படும் என்று பின்ட்லே ஷிராஸ் (Findlay Shirras) கூறுகின்றார். வரிதாங்கும் திறனை ஒப்பிடுவதால் தோன்றும் நன்மையை பேராசிரியர் டால்டனும் ஒப்புக்கொள்கின்றார். வரிதாங்கும் திறனைப் பற்றிய வரையறைகள் பல பொது நிதியியல் வல்லுநர்களாலும் வெவ்வேறு வகைகளில் தரப்பட்டுள்ளன. பின்ட்லே ஷிராஸ் கூற்றுப்படி, 'அதிகத் துன்பத்தை ஏற்காமல் நாட்டு மக்கள் பொது நிர்வாகச்

செலவிற்கு அளிக்கும் உச்ச அளவுப் பணமே வரிதாங்கும் திறனாகும்.'' கடினமான தொல்லைகளைத் தாரத அளவிற்கு மக்கள் மீது சுமத்தப்படக் கூடிய அளவு வரிவிதிப்பே வரிதாங்கும் திறன் என்று டால்டன் குறிப்பிடுகின்றார். சர் ஜோசையா ஸ்டாம்ப் (Sir Josiah Stamp) வரையறை செய்வதுபடி, ''மகிழ்ச்சியற்ற மோசமான வாழ்க்கை நிலையை அடையாமல், மக்கள் பொது நிர்வாகத்திற்கு அளிக்கக்கூடிய குறைந்த அளவுத் தொகையே வரி தாங்கும் திறனாகும்.'' வரிதாங்கும் திறனைப்பற்றி இவ்வாறு பல வரையறைகள் பொருளியலாளர்களால் தரப்பட்டுள்ளன. மக்களிடமிருந்து எந்த அளவிற்கு வரிப் பணத்தைப் பெறலாம் என்பதை வரிதாங்கும் திறன் உணர்த்துகின்றது ; சமுதாயத்தின் பொருளாதார நலத்தைப் பெருக்க எந்த அளவிற்கு வரிகளை உயர்த்தலாம் என்பதையும் அது அறிவுறுத்துகின்றது. மேலே குறிப்பிடப்பட்ட வரையறைகளின் மூலம் வரிதாங்கும் திறனைத் துல்லியமாகக் கணக்கிட இயலாது. ஆனால் வரிதாங்கும் திறனை அறிவதின் மூலம் பல நன்மைகளைப் பெற முடியும்.

வரிதாங்கும் திறன் என்பது ஒரு நாட்டில் மாறாத நிரந்தரத் தன்மை கொண்டது என்றும் கூற முடியாது. பல பொருளாதாரக் காரணிகளால் இத்திறனானது வெவ்வேறு காலங்களில் மாறுபடக் கூடும்.

### வரிதாங்கும் திறனை நிர்ணயிக்கும் காரணிகள்

ஒரு பொருளாதாரத்தின் வரிதாங்கும் திறனைக் கணக்கிடப் பல காரணிகளும் ஆராயப்படுதல் வேண்டும். காரணிகளின் மாற்றங்கள் வரிதாங்கும் திறனிலும் மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றன. வரிதாங்கும் திறனைப் பாதிக்கும் முக்கியக் காரணிகளைப் பின்வருமாறு விளக்கலாம் :

#### (1) மக்கட்தொகையின் அளவு

வரிதாங்கும் திறனானது ஒரு நாட்டு மக்கட்தொகையின் அளவைச் சார்ந்து அமைகின்றது. மக்கட்தொகை விரைவாகப் பெருகும்போது மக்களின் வரிதாங்கும் திறன் குறைகிறது. ஆனால் வளர்ச்சியடைந்த நாடுகளில், மக்கட்தொகை பெருகும்போது அரசு அதிக வரி வருவாயைப் பெறுவதற்கான வாய்ப்பு தோன்றுகிறது. வரிதாங்கும் திறனைக் கணக்கிடும்போது, மக்கட்தொகையின் அளவோடு மக்களின் வாழ்க்கைத்தரமும் ஆராயப்படுதல் வேண்டும். தேசிய வருவாய் உயராமல் மக்கட்தொகை உயரும் போது வரிதாங்கும் திறன் குறைவடைகின்றது.

(2) செல்வ, வருவாய்ப் பங்கீடுகள்

நாட்டின் செல்வமும், வருவாயும் சமமாகப் பங்கிடப்பட்டிருந் தால், மக்களின் வரிதாங்கும் திறன் குறைவாக இருக்கும். வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் அதிக ஏற்றத்தாழ்வுகள் அமைந்திருந்தால், வரிதாங்கும் திறன் உயர்வாக அமையும். ஆனால் வரிதாங்கும் திறனை அதிகரிக்க, வருமான, செல்வப் பங்கீடுகளில் வேறுபாடுகளை அனுமதிப்பது தவறானது. வருமான ஏற்றத்தாழ்வு களும், ஒரு சிலரிடத்தில் செல்வம் குவிதலும் அரசிற்கு அதிக வரி வருவாயைத் தருவதில்லை என்று சிலர் குறிப்பிடுகின்றனர்.

(3) வரிவிதிப்பு முறை

நேர்முக, மறைமுக வரிகளின் மூலம் அரசு வருவாயைப் பெறு கின்றது. "அரசின் வரி விதிப்பு முறை ஒரு சிலரின் மீது மட்டும் சுமையாக அமையக் கூடாது ; ஆனால் பலர்மீதும் குறைந்த அளவு வரிகளை விதிக்கலாம்," என்று சர் ஆர்தர் யெங் குறிப்பிடுகின்றார். வரிவிதிப்பு முறை அரசிற்கு அதிக வருவாயைத் தருவதாக இருக்க வேண்டும். வெவ்வேறு வகைப்பட்ட நேர்முக, மறைமுக வரிகளால் அரசு அதிக வருவாயைப் பெறலாம்.

(4) வரி விதிப்பின் நோக்கம்

நாட்டின் பாதுகாப்பிற்காகவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காகவும் விதிக்கப்படுகின்ற வரிகளை மக்கள் மனமுவந்து செலுத்துகின்றனர். சமுதாயத்தின் மேட்டுக் குடியினருக்கு மட்டும் நன்மையளிக்கக்கூடிய செலவுகளைச் செய் வதற்காக அரசு வரிகளை விதித்தல் பலராலும் விரும்பப்படுவ தில்லை. அரசின் பொதுச் செலவுகள் சமுதாயத்தின் பெரும் பகுதி யினருக்கு நன்மையளிப்பதாக அமையவேண்டும். நன்மையைப் பெறுகின்ற மக்கள் வரிகளைச் செலுத்தவும் விருப்புக்கொள் கின்றார்கள். வரிவிதிக்கும் நோக்கம் வரி செலுத்துபவர் களுக்கு உணர்த்தப்பட வேண்டும். கல்வி, மருத்துவம் போன்ற வசதிகளைப் பெருக்க வரி வருவாய் செலவிடப்பட்டால், மக்களின் வரி செலுத்தும் திறனும் அதிகரிக்கும். உற்பத்திக்கு உதவாத பணிகளுக்காக அரசின் வரி வருவாய் செலவிடப்படுதல் வரி செலுத்தும் திறனைக் குறைவடையச் செய்யும்.

(5) வரி செலுத்துபவர்களின் உள்ள நிலை

அவசரக் காலங்களிலும், போர்க் காலங்களிலும் மக்கள் அதிக வரி செலுத்த முன் வருகிறார்கள். நாட்டின் பாதுகாப்பு பாதிக்கப் படும்போது வரிதாங்கும் திறன் அதிகரிக்கின்றது. சில அவசியப்

பொருட்களின் மீது வரிகள் விதிப்பதை மக்கள் விரும்புவதில்லை. வரிதாங்கும் திறனைப் பாதிக்கும் முக்கியக் காரணியாக வரி செலுத்துபவர்களின் உள்ள நிலை அமைகின்றது. அரசின் கொள்கைகளில் நம்பிக்கைக் கொண்ட மக்கள் அதிக வரிகளைச் செலுத்த முன்வருகின்றார்கள். மக்களின் நலனைப் பெருக்குவதற்காக அரசு நடவடிக்கைகளை எடுக்கும்போது எளிதில் வரி வருவாயை அதிகரிக்க முடியும். மக்களின் ஒத்துழைப்பைக் கொண்ட அரசே சிறப்பாகச் செயல்படுகின்றது.

(6) வருமானத்தின் அளவு

மக்களின் வருவாய் உயரும்போது, அவர்களின் வரி தாங்கும் திறனும் உயருகின்றது. மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைவிட, வருவாய்ப் பெருக்க வீதம் அதிகமாக இருத்தல் அரசிற்கு மிகுதியான வரி வருவாயைத் தருவதாக அமையும். பொதுவாக, தேசிய வருவாய் அதிகரிக்கும்போது வரி தாங்கும் திறனும் கூடுகின்றது. மக்களின் வருவாயில் உறுதியற்ற நிலை அமைந்திருத்தல், வரி தாங்கும் திறனைக் குறைத்துவிடும். இந்நிலையில் மேலும் வரி வீதங்களை உயர்த்துவதும், புதிய வரிகளை விதிப்பதும் இயலாததாகின்றது.

(7) பணவீக்கம்

பணவீக்கக் காலத்தில் பணப்புழக்கம் அதிகரிக்கின்றது. இக்காலத்தில் மக்களின் வருவாய் அதிகரித்தாலும், அவர்களின் வரி செலுத்தும் திறன் கூடுவதில்லை. பலவகைப்பட்ட பண்டங்களின் விலைகளும் உயர்வடைகின்றன. விலைகள் உயர்வடையும் பணவீக்கக் காலத்தில் பணத்தின் வாங்கும் திறன் குறைவடைகின்றது. எனவே, மக்களின் வரி செலுத்தும் திறனும் குறைந்தே காணப்படுகின்றது.

(8) வாழ்க்கைத்தரம்

தேசிய வருவாயும், தலா வருவாயும் உயரும்போது மக்களின் வாழ்க்கைத்தரமும் உயர வேண்டும். இதன் மூலம் வரிதாங்கும் திறன் அதிகரிக்கும். தரமான வாழ்வை மக்கள் பெறும்போது மறைமுக, நேர்முக வரிகளின் மூலமாக அரசு அதிக வரி வருவாயைப் பெற முடியும்.

வரிதாங்கும் திறனை அளவிட இவ்விதமான பல காரணிகளையும் ஆராய்வது அவசியமானதாகும். இவ்வாறு பல காரணிகளையும் ஆராய்வதின் மூலம், மக்களின் வரி செலுத்தும் திறனை ஓரளவு அறிய முடியும்.

## இந்தியாவில் வரிதாங்கும் திறன் (Taxable Capacity in India)

பிற நாடுகளில் உள்ளது போன்றே, இந்தியாவிலும் வரி தாங்கும் திறனைக் கணக்கிடுவது கடினமாக இருக்கின்றது. அதிக அளவு வரிகளை விதிக்கின்ற நாடுகளுள் இந்தியாவும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. வரிதாங்கும் திறனைக் கணக்கிடுவது எளிதல்ல என்றாலும், கோலின் கிளார்க் (Colin Clark) 'மக்கள் நலனும் வரி விதிப்பும்' என்ற நூலில் வரிதாங்கும் திறன் தேசிய வருவாயில் 25 சதவீதமாக இருக்க வேண்டுமென்று கூறுகின்றார். இந்தியாவில் வரி வருவாய் தேசிய வருவாயில் 8·5 சதவீதம் என்ற அளவில் மட்டுமே அமைந்துள்ளது. ஆனால் அமெரிக்கா, ஜெர்மனி போன்ற மேம்பாடடைந்த நாடுகளில் வரி தாங்கும் திறன் தேசிய வருவாயில் 30 சதவீதத்திற்கும் மேலாக இருக்கின்றது.

இந்திய மக்களின் வரி செலுத்தும் திறன் மிகவும் குறைவானது என்று சொல்லப்படுகின்றது. குறைந்த வரிதாங்கும் திறனைக் கொண்ட அவர்கள் அதிக வரிகளைச் செலுத்துகின்றார்கள் என்றும் கருதப்படுகின்றது. ஆனால் இக்கருத்து தவறுடையதாகும். தற்பொழுது அரசு வரி விதிப்பின் மூலம் குறைந்த வருவாயை மட்டுமே பெறுகின்றது. தேசிய வருவாயில் சுமார் 8·5 சதவீதம் மட்டுமே வரி வருவாயாகப் பெறப்படுகின்றது. முன்னேற்றமடைந்த நாடுகளில் இவ்வீதமானது மிகவும் உயர்வாக உள்ளது. இந்தியாவில் தேசிய வருவாயும், தலா வருவாயும் அதிகரித்து வருகின்றன. குடியரசு நாட்டில் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் பல தடைகள் ஏற்படுகின்றன. வருவாயிலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் களைய வேண்டியது அவசியமாகின்றது. இதனால் வரிதாங்கும் திறனும் குறைவடைகிறது. மக்களின் நலம் காக்கும் அரசு சாமானியர்களின் நிலை உயரப் பாடுபடுகின்றது. பொதுநலத்தைப் பெருக்குவதற்காக அரசு மேற்கொள்ளும் சில நடவடிக்கைகள், குறுகிய காலத்தில் மக்களின் வருவாயை உயர்த்துவதில்லை. எனவே மக்களின் வரி செலுத்தும் திறனானது குறைவாகவே இருக்கின்றது.

பொருளாதாரம் முன்னேற்றமடையும்போது, மக்களின் சேமிக்கும் விருப்பமும் (Will to Save), சேமிக்கும் திறனும் (Power to Save) அதிகரிக்கின்றன. இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் வரிகள் உயர்த்தப்படுகின்றன. ஆனால், வரிகளின் உயர்வு முதலீட்டின் அளவை அதிகரித்து உற்பத்தியைப் பெருக்க உதவியிருக்கின்றது. நம் நாட்டில் நேர்முக, மறைமுக வரிகளின் மூலம் வரி வருவாயைப் பெருக்குவதற்கான வாய்ப்புக்கள் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் 'ஆயத்தீர்வைகளின் (Exise Duties) மூலம் அரசு மேலும் அதிக வருவாயைப் பெறவேண்டும். ஆயத்

தீர்வைகள் பெரும்பாலான பொருட்களின் மீது விதிக்கப்படுவ தில்லை. எனவே இத்தீர்வைகளை அளிப்பவர்கள் குறைந்த அளவிலேயே இருக்கின்றார்கள். சில நிலைகளில் வரி வீதங்கள் மிகவும் உயர்வாக இருப்பதால் 'வரி ஏய்ப்பு' (Tax Evasion) செய்யப்படுகிறது. பேராசிரியர் கால்டர் (Prof. Kaldor) வருமான வரியை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடுகின்றார். பிற நேர்முக வரிகளாகிய 'சொத்துப்பேறு வரிகள்' (Inheritance Taxes) மூலமும், 'செலவு வரி' (Expenditure Tax) மூலமும் அரசு அதிக வருவாயைப் பெறலாம். இக்காரணங்களால், இந்தியாவில் வரிதாங்கும் திறன் குறைவாக உள்ளது என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது. விரை வான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற படிப்படியாகப் புதிய வரிகளை விதிப்பதிலும், பழைய வரி வீதங்களை உயர்த்து வதிலும் தவறில்லை எனலாம்.

எனினும், இந்தியாவில் மக்களின் வரி செலுத்தும் திறன் குறைவாக இருக்கிறது என்பதற்கான காரணங்களும் பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றன :

1. இந்தியா வளர்ச்சியடைந்து வரும் ஏழை நாடாகும். மக்களில் பெரும்பாலோர் மிகக் குறைந்த வருவாயை மட்டுமே பெறுகின்றனர். குறைந்த வருவாயைப் பெருபவர்கள் வரிதாங்கும் திறனைக் குறைவாகக் கொண்டுள்ளனர். செல்வம் மிக்க இந் நாட்டில் உற்பத்திக்கான இயற்கை வளங்கள் சிறப்பாகப் பயன் படுத்த படுவதில்லை. குறைந்த உற்பத்தியால் மக்கள் தாழ்ந்த வருவாயைப் பெறுகின்றார்கள்.

2. இந்தியாவின் முக்கியத் தொழில் வேளாண்மையாகும். பெரும்பகுதி மக்கட்தொகை வேளாண்மையிலேயே ஈடுபட்டிருக் கின்றது. வேளாண்மை உற்பத்தியாளர்களே உற்பத்திப் பொருட் களில் சுமார் 37 சதவீதத்தை நுகர்ச்சிக்குப் பயன்படுத்துகின்றார்கள். எனவே சந்தைகளில் அதிக அளவிற்கு வேளாண்மைப் பொருட்கள் விற்பனை செய்யப்படுவதில்லை. இதன் காரணமாகவும் அரசு வேளாண்மைத் துறையினின்றும் அதிக வரி வருவாயைப் பெற முடிவதில்லை.

3. நம் நாட்டின் பெரிய தொழில்களில் பல பொதுத் துறையிலேயே அமைந்துள்ளன. தனியார் துறையில் சிறிய அளவுத் தொழில் நிறுவனங்களே செயல்படுகின்றன. எனவே இந் நிறுவனங்களின் இலாபத்திலிருந்து பெறப்படும் வரி வருவாய் குறைவாகவே இருக்கின்றது. தொழில் வளம்மிக்க முதலாளித்துவ நாடுகளில் இவ்வகை வரி வருவாய் மிகவும் உயர்வாகப் பெறப்படு கிறது.

4. இந்தியா பன்னாட்டு வாணிபத்திலும் பின் தங்கிய நாடாக உள்ளது. இதனால் சுங்கத் தீர்வைகள் (Customs Duties) குறைந்த அளவிற்கே பெறப்படுகின்றன. தொழிற் காப்புக் கொள்கையால் அரசு மிக அதிக அளவு இறக்குமதி வரிகளை விதிக்கிறது. இதன் காரணமாக இறக்குமதி கட்டுப்படுத்தப்பட்டு சுங்கவரி வருவாயும் குறைகிறது. பாதக அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலையைத் தவிர்க்க அரசு ஏற்றுமதிப் பெருக்க நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. ஏற்றுமதியை ஊக்குவிக்க ஊக்கத் தொகைகள் அளிக்கப்படுகின்றன. ஏற்றுமதிப் பொருட்களின் மீது மிகக் குறைந்த அளவு சுங்க வரிகளே விதிக்கப்படுகின்றன. வெளிநாட்டு வாணிபத்தை வளர்ப்பதின் மூலமே அரசு சுங்க வரிகளின் மூலம் அதிக வருவாயைப் பெற முடியும்.

5. நம் நாட்டில் வரி ஏய்ப்பு அதிக அளவில் பரவலாகக் காணப்படுகின்றது. பேராசிரியர் கால்டர் இந்தியாவில் வரி வருவாய் குறைவாக உள்ளமைக்கு இதுவும் ஒரு காரணம் என்று தன்னுடைய அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார். வரிவிதிப்பு முறையிலும், வரி வசூலிப்பு முறையிலும் உள்ள குறைபாடுகளை நீக்குவதின் மூலம் வரி ஏய்ப்பைக் குறைக்கலாம்.

வரிதாங்கும் திறனை மக்கள் தாழ்வாகக் கொண்டிருந்தாலும் புதிய வரிகளை விதிப்பதும், பழைய வரி வீதங்களை உயர்த்துவதும் வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் தவிர்க்க முடியாதவை களாகும். இந்தியத் திட்டங்கள் வெற்றியடைய அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. இம்மூலதனத்தைத் திரட்ட அரசு வரி விதிப்பை முக்கிய முறையாகக் கொண்டுள்ளது. திட்டங்களை நிறைவேற்றியதின் மூலம் தேசிய வருவாயும், தலா வருவாயும் உயர்ந்து வருகின்றன. இந்நிலை மக்களின் வரி செலுத்தும் திறனை அதிகரித்து வருவதைக் குறிக்கின்றது. 1952–ஆம் ஆண்டின் 'வரி விதிப்பு விசாரணைக் குழுவின்' (Taxation Enquiry Commission) தலைவராக இருந்த ஜான் மத்தாய் இது பற்றிக் குறிப்பிட்டிருக் கிறார். "அரசின் வரி வருவாய் பொதுச் செலவுகளுக்கான பயன் படுத்தபடுகின்றது. பொதுச் செலவுகள் வரி செலுத்தும் திறனை உயர்த்துபவைகளாக அமையும்," என்று அவர் கூறுகின்றார். திறமையான, நேர்மையான, சிக்கனமான ஆட்சிமுறையால் வரி விதிப்பதன் எல்லா நன்மைகளேயும் பெற முடியும்.

## II. வரி விதிப்பும், பணவீக்கமும் (Taxation and Inflation)

அரசின் வரிவிதிப்பு முறைகளுக்கும், பொருட்களின் விலை களுக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது. வரி விதிப்பால் பணவீக்கநிலை தோன்றும் என்பது ஒருசாராருடைய கருத்தாகும்.

வரிவிதிப்பின் அளவு குறிப்பிட்ட நிலைக்குமேல் உயர்த்தப்பட்டால் பணவீக்கம் ஏற்படும் என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள். வரி விதிப்பு முறை பணவீக்க நிலையைப் பொருளாதாரத்தில் தோற்று விக்காது என்பது மற்றொரு சாரருடைய கருத்தாக உள்ளது. அதிக வரி விதிப்பின் மூலம் பணவீக்க நிலை ஏற்படுமா ஏற்படாதா என்பதை விளக்கமாக ஆராய்வது அவசியமானதாகும்.

பணமுறைக்கும், வரிவிதிப்பிற்கும் உள்ள தொடர்பு

பணத்தின் அளவும், பணத்தின் சுழலும் வேகமும் அதிகரிக்கும் போது பணவீக்க நிலை தோன்றுகின்றது. வரிவிதிப்பிற்கும், பண வீக்கத்திற்கும் உள்ள தொடர்பை அறிய ஒரு புறத்தில் வரிவிதிப் பிற்கும் பணமுறைக்கும் உள்ள தொடர்பையும், மறுபுறத்தில் வரிவிதிப்பிற்கும் 'பண்டங்களின் அளிப்பு நெகிழ்ச்சிக்கும்' (Elasticity of Supply of Commodities) உள்ள தொடர்பையும் ஆராய வேண்டும். வரிவிதிப்பால் பணப்பெருக்கம் ஏற்பட்டு பண்டங்களின் தேவை அதிகரிக்கின்றது. வரிவிதிப்பால் சில பொருட்களின் உற்பத்தி பாதிக்கப்படுவதால் அளிப்பு குறைவடை கின்றது. வரிவிதிப்பு முறை பொருட்களின் தேவை, அளிப்பு ஆகியவற்றில் மாற்றங்களைத் தோன்றச் செய்கின்றது.

பண ஓட்டத்தை (Monetary Stream) வரிவிதிப்பு பாதிக் கின்றது. வரிவிதிப்பு முறை வரிசெலுத்துபவர்களின் வாங்கும் திறனைக் குறைக்கிறது. இதனால் மொத்தத் தேவையின் அளவும் குறைவடையும். ஆனால் அரசின் வரிவருவாய் பல வழிகளில் செலவிடப்படுகிறது. பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்துதுவதற் காக அரசு வரி வருவாயைச் செலவு செய்யாமல் வைத்திருக்கலாம். புழக்கத்தில் இருக்கக்கூடிய பணத்தின் அளவு இதன் மூலம் குறைக் கப்படுகின்றது. இந்நடவடிக்கையால் பண ஓட்டம் தடைப்பட்டு பணவாட்டமும் தோன்றலாம். அரசின் செலவினங்களும் பணவீக்க நிலையோடு தொடர்பு கொண்டுள்ளன. எனவே பணவீக்க நிலை அரசின் வரிவிதிப்புக் கொள்கையோடு, அரசின் செலவுக் கொள் கையைச் சார்ந்தும் அமையும்.

அரசு அதிக வரிகளை விதித்து அதிகச் செலவுகளைச் செய்யும் போது பணப்புழக்கமானது மிகுதியடையும். இதற்குக் காரணமாக அரசின் நேரடி நடவடிக்கை அமைகின்றது. இதைத்தவிர 'கீன்ஸின் முடுக்கி, பெருக்கி விளைவுகளாலும்' (Keynesian Accelerator and the Multiplier Effects) பணப்புழக்கம் அதிகரிக்கின்றது. குறிப்பிட்ட அளவிற்கு மேல் வரிவிதிப்பைச் செய்வது பணவீக்கத் தை ஏற்படுத்துகிறது. மக்களிடமிருந்து பணமானது வரியாகப்

பெறப்படுவதால் இப்பணவீக்கம் தோன்றுவதில்லை. பெறப்பட்ட வரிவருவாய் அரசால் முழுமையாகச் செலவிடாமையே பண வீக்கத்திற்குக் காரணமாகிறது.

முதலாளித்துவச் சமுதாயத்தில், முதலீடு செய்வதற்காகத் தொழில் முயல்வோர் பணத்தேவையைக் கொண்டுள்ளனர். இலாப நோக்குடன் இம்முதலீடுகள் செய்யப்படுகின்றன. அரசின் வரிக் கொள்கை தொழில் முயல்வோரின் முதலீட்டு முடிவுகளின் மீது செல்வாக்கு கொண்டுள்ளது. ஏனெனில் இலாப வீதத்திற்கும் வரிவிதிப்பு முறைக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. அரசின் வரிவிதிப்பு முறைகளுக்கு ஏற்ப முதலீடுகள் அமைகின்றன. வரிவிதிப்பு முறை முதலீடுகளை ஊக்குவிப்பதாக இருந்தால் பண வீக்க நிலை தோன்றுகிறது. அரசின் வரிக்கொள்கை மூலம் அவசியம் குறைந்த துறைகளில் முதலீடு செய்யப்படுவதைத் தடுக்கலாம். சரியான வரிக்கொள்கையை அரசு பின்பற்றினால் அவசியம் குறைந்த முதலீட்டின் அளவைக் குறைக்கலாம். பண வீக்க நிலைக்கு எதிராகவும் அரசு வரிவிதிப்பின் மூலம் நடவடிக்கைகளை எடுக்கலாம்.

வரிவிதிப்பின் மூலமாக பண ஓட்டத்தை விரைவு படுத்தலாம்; பண ஓட்டத்தைக் கட்டுப்படுத்தவும் வரிவிதிப்பு முறையினால் முடியும். அரசு வரிவருவாயைக் கூட்டவோ, குறைக்கவோ இயலும். செலவினங்களைக் குறைப்பதும், கூட்டுவதும் அரசின் கொள்கைக்கு ஏற்ப அமையும். வரிவிதிப்பால் பணவீக்கம் ஏற்படுகின்றமைக்கு, சேமிப்பில் ஏற்படுகின்ற குறைவும் ஒரு காரணமாகின்றது. அரசின் அதிகச் செலவு அதிக முதலீடு, அதிக பண வருவாயைப் பெருக்கம், ஆகியவையும் 'வரிவிதிப்பினால் தூண்டப்படுகின்ற பணவீக்க நிலையைத்' (Tax-induced Inflation) தோற்றுவிக்கின்றன. பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தவும் அரசின் வரிக் கொள்கை உதவுகின்றது.

## இந்தியாவில் வரிவிதிப்பும், பணவீக்கமும்

இந்தியப் பொருளாதாரத்தில் சில பொருட்களின் அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது. இப்பொருட்களின் அளிப்பை அதிகரிக்க அரசு சற்று வேறுபட்ட வரிக்கொள்கையைப் பின்பற்றலாம். அரசின் வரிவருவாய் அதிக அளவில் உற்பத்தியைப் பெருக்குவதற்காகப் பயன்படுத்தப்பட வேண்டும். நம் நாட்டில் வரிவிதிப்பாலும் பணவீக்க நிலை அமைந்துள்ளது எனலாம். அரசின் வரிவிதிப்பு முறையால் பொருளாதாரத்தில் பணஓட்டமானது அதிகரிக்கின்றது. ஆனால் உண்மை வருவாய் வளர்ச்சி குறைந்த வேகத்திலேயே அதிகரிக்கின்றது. வரி விதிப்பால்

மட்டும் இந்தியாவில் பணவீக்க நிலை அமைந்திருக்கின்றது எனக் கூற முடியாது. திட்டமிட்டுப் பொருளாதார வளர்ச்சியை நாம் பெற்று வருகிறோம். திட்டச்செலவுகளும் படிப்படியாக அதிகரித்து வருகின்றன. மூலதனத்தைத் திரட்ட அரசு வரிவிதிப்பு, பற்றாக்குறை நிதியாக்கம், பொதுக்கடன் போன்ற பல முறைகளைக் கைக்கொள்கின்றது. பணவீக்கம் ஏற்படுவதற்கு இவை யாவுமே காரணமாக அமைகின்றன.

## 111. வரிவிதிப்பும், மூலதனத்திரட்சியும் (Taxation and Capital Formation)

[சிறப்பாக வளர்ச்சியடைந்த, வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரங்களைப் பற்றியது]

### வளர்ச்சியடைந்த பொருளாதாரமும், வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரமும்

வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தில் தலா வருவாய் அதிகமாக இருக்கின்றது. மக்கள் தரமான வாழ்வைப் பெற்றிருக்கின்றார்கள். பெரும்பாலான மக்கள் உற்பத்தித்திறன் மிக்கவர்களாக இருக்கின்றனர். இதன் காரணமாகவேத் தலா வருவாய் ஆண்டு தோறும் அதிகரித்து வருகின்றது. வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரத்தில், தலா வருவாயின் அளவு குறைவாக உள்ளது. மக்கட் தொகையின் பெரும் பகுதி தாழ்வான வாழ்க்கைத்தரத்தையே கொண்டிருக்கின்றது. மக்களின் உற்பத்தித் திறனும் குறைவாகவே அமைந்துள்ளது. ஆப்பிரிக்கா போன்ற ஒரு சில வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் போதா மக்கட் தொகை உள்ளது. ஆனால் பல வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் மிகுதியான மக்கட் தொகையையே கொண்டுள்ளன. இந்நாடுகளில் தலா வருவாய் குறைவாக உள்ளமைக்கு மிகும் மக்கட் தொகையும் ஒரு காரணமாகும்.

### மூலதனத்திரட்சியில் வரிவிதிப்பின் பங்கு

மூலதனம் சமுதாயத்தின் உற்பத்தித்திறனைப் பெருக்க உதவுகின்றது. உற்பத்தி தொடர்ந்து நீடிக்க மூதலீடுகள் செய்யப்படுகின்றன. வரிவிதிப்பின் மூலம் மூலதனத் திரட்சி ஏற்படுகின்றது. இம்மூலதனம் உற்பத்திச் சாதனங்களைப் பெருக்க பயன்படுத்தப்படுகிறது உலகின் வளர்ச்சியடைந்த நாடுகளில், மக்களின் வரி செலுத்தும் திறன் அதிகமாக இருக்கின்றது; வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வரி செலுத்தும் திறன் குறைவாகவே உள்ளது. தேசிய வருவாயில் அரசின் வரிவருவாய்

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளைக் காட்டிலும் வளர்ச்சியடைந்த நாடுகளில் மிக அதிக அளவில் அமைந்திருக்கின்றது. மக்கள் அதிக வருவாயைப் பெறுகின்ற காரணத்தால் அதிக வரி செலுத்தும் திறனைக் கொண்டிருக்கின்றார்கள். அரசு வரி விதிப்பின் மூலம் எளிதில் தேவையான அளவு மூலதனத்தைப் பெறுகின்றது.

வளர்ச்சியடைந்த நாடுகளில் போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள், மின்சார உற்பத்தி, மருத்துவ வசதி, சுகாதார வசதி போன்றவை பெரிதும் பெருகியுள்ளன. இவ்வசதிகளைப் பெருக்கத் தேவையான மூலதனத்தைப் பெற இந்நாடுகளின் அரசுகள் வரிவிதிப்பு முறையையே பின்பற்றின. பொருளாதார சமுதாய நன்மைகளைத் தரக் கூடிய சில துறைகளில் அரசே முதலீடு செய்ய வேண்டும். இவ்விதத் துறைகள் வளர்ச்சியடைய அரசின் வரிவருவாயே பெரிதும் உதவியது. இந்நாடுகளில், மக்கள் அதிக வருவாயைப் பெறுபவர்களாக இருக்கின்றார்கள். எனவே அவர்களின் வரி செலுத்தும் திறனும் உயர்வாக அமைகின்றது. சில நாடுகள் இத்துறைகளை வளர்க்கப் பொதுக் கடன்களையும் பெற்றன, எனினும், இக் கடன்கள் அரசின் வரி வருவாயின் மூலம் தீர்க்கப் பட்டுவிட்டன.

வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தில், தனிமனிதர்களின் சேமிக்கும் விருப்பமும் சேமிக்கும் திறனும் அதிக வரி விதிப்பினால் பாதிக்கப் படுகின்றன. அதிக இலாபத்தைப் பெற வாய்ப்புக்கள் இருக்கும் போதுதான், மக்களின் சேமிக்கும் விருப்பமும் முதலீடு செய்யும் விருப்பமும் அதிகரிக்கின்றன. அரசின் வரிவிதிப்பால் பொருட்களின் விலைகள் கூடுகின்றன. இதனால் தேவை குறைந்து உற்பத்தியும் பாதிக்கப்படுகின்றது. மேம்பாடடைந்த நாடுகளில் நேர்முக வரிகளின் மூலம் அரசு அதிக வருவாயைப் பெற முடியும். ஏனெனில் இந்நாடுகளில் பெரும்பாலான மக்கள் அதிக வருவாய்ப் பெறுபவர்களாக உள்ளனர். இப்பொருளாதாரங்களில் தேசிய வருவாய் விரைவாக அதிகரிக்கின்றது. மூலதனத்திரட்சிக்குத் தேசிய வருவாய்ப் பெருக்கம் உதவுகின்றது. சேமிப்பும், முதலீடும் எளிதான வகையில் விரைவாகப் பெருகுகின்றன.

வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரங்களில், மக்களின் வரி செலுத்தும் திறனானதுக் குறைவாக உள்ளது. எனவே மூலதனத் திரட்சிக்கு வரி விதிப்பு முறை அதிக அளவிற்கு உதவுவதில்லை. மக்களின் வருவாய் மிகவும் குறைவாக இருக்கின்றது. குறைந்த அளவுச் சேமிப்பையே அவர்கள் செய்கின்றார்கள். அவர்களின் நுகர்வின் அளவும் குறைவாகவே உள்ளது. இக்காரணங்களால் அரசு வரி விதிப்பின் மூலம் அதிக வருவாயைப் பெற இயலவில்லை.

குறைந்த அளவு மக்கட்தொகையே நேர்முக வரிகளைச் செலுத்துவ தாக இருக்கின்றது. உதாரணமாக, நம் நாட்டின் மொத்த மக்கட் தொகையில் ஒரு சதவீதத்தினரே வருமான வரி செலுத்த வேண்டி யவர்களாக இருக்கின்றனர். மிக அதிக வருவாய் பெறுபவர்கள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளனர். நடுத்தர வகுப்பினர் அதிக எண்ணிக்கையில் இருக்கின்றனர். ஆனல் அவர்களின் வரி செலுத்தும் திறனும் குறைவாகவே உள்ளது. குறைந்த வருவாய்ப் பெறுகின்ற அவர்களால் சேமிக்க முடிவதில்லை. மறைமுக வரி களின் மூலமும் அரசு அதிக வருவாயைப் பெற இயலாது, ஏனெனில், பெரும்பாலான மக்களின் வாங்கும் திறன் குறைவாக உள்ளது. மக்கள் 'பராமரிப்பு மட்ட' (Subsistence Level) நிலை யிலேயே வாழ்கின்றனர்கள்.

மேம்பாடடைந்து வரும் நாடுகளில், வரி விதிப்பு வருவாயிலும் செல்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க உதவு கின்றது. வளர்வீத வரி முறையால் செல்வந்தர்களின் தேவை யற்ற நுகர்வுக் கட்டுப் படுத்தப்படுகிறது. இவ்வரி முறை மூலதனத் திரட்சியைப் பெற வகை செய்கின்றது. அரசு அம் மூலதனத்தை உற்பத்தியைப் பெருக்கும் வகையில் முதலீடு செய்ய லாம். அரசின் வரி விதிப்புக் கொள்கை தனியார் துறையின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கக் கூடாது. தனியார் துறையின் மூலதனத்திரட்சி அரசின் வரிக் கொள்கையால் உயர்வடைய வேண்டும்; பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் உற்பத்தி, சேமிப்பு, முதலீடு, வேலை வாய்ப்பு ஆகியவை பெருகும் வகையில் வரி விதிப்பு முறை அமைந்திருத்தல் அவசியமானதாகும்.

வளர்ச்சியடைந்து வரும் நாட்டில், பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் பணப்புழக்கம் அமைந்திருப்பதில்லை. மக்களின் வருவாயை மதிப்பிடுவது இதனால் இயலாத நிலையைக் கொண்டிருக்கின்றது. கிராமப் புறங்களில் பண்டமாற்று முறையும் பின்பற்றப் படுகிறது. கிராம மக்கள் பெரும்பாலும் பண்டங் களையே சேமிக்கின்றனர்கள். பணப்புழக்கம் அமைந்திருக்கும் துறை களிலும் கூட, அரசு வரி வருவாயைப் பெருக்குவதற்கான வாய்ப்புக் கள் குறைவாகவே இருக்கின்றன. ஏனெனில், இத்துறைகளில் அதிகச் செல்வத்தையும் உயர்ந்த வருவாயையும் கொண்டுள்ள வர்கள் குறைந்த எண்ணிக்கையிலேயே உள்ளனர். பொருளா தாரத்தில் பொதுவாக வறிய நிலையே திகழ்கின்றது. எனவே தேசிய வருவாயில் அரசு பெறுகின்ற வரி வருவாயின் பங்கு மிகவும் மிகவும் குறைவாகவே உள்ளது. 'வறுமை வட்டம்' (Vicious Circle of Poverty) அமைந்திருப்பதால் முதலீட்டிற்கான ஊக்கங் களும் சிறப்பாக அமைந்திருப்பதில்லை. இந்நிலை பல பொருட்களின்

அளிப்பும் தேவையும் குறைவாக உள்ளமைக்குக் காரணமாக அமைகின்றது.

சமீப காலமாக இந்தியாவின் தேசிய வருவாய் உயர்ந்து வருகின்றது. தலா வருவாயும் படிப்படியாக அதிகரித்து வருகிறது. இதன் காரணமாக மக்களின் வரி செலுத்தும் திறன் அதிகரிக்கும். எனவே, இவ்வகையில் மூலதனத் திரட்சியைப் பெற வரி விதிப்பு முறை உதவும். முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் அரசின் வரி வருவாய் உற்பத்தியின் அளவைப் பெருக்குவதற்குப் பயன் படுத்தப்பட வேண்டும். தொழிற் சீரமைப்பு முறைகளால் நாட்டின் உற்பத்தித்திறனைப் பெருக்கலாம். இதனால் மக்களின் வருவாய் அதிகரிக்கும். அவர்களின் வரி செலுத்தும் திறன் உயர் வடைவதால் மூலதனத் திரட்சியும் ஏற்படுகின்றது. அரசின் வரி விதிப்புக் கொள்கை அவசியம் குறைந்த நுகர்வைக் கட்டுப்படுத்து வதாக அமைய வேண்டும். சரியான வரி விதிப்புக் கொள்கையின் மூலம் முதலீட்டின் அளவைப் பல மடங்கு பெருக்கலாம்.

# 16. வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் விலைக்கொள்கை

## (Price Policy in a Developing Economy)

**முன்னுரை**

பொருளாதார முன்னேற்றப் போக்கில் விலைகளின் உயர்வு தோன்றுகின்றது. பொருட்களின் தேவைக்கும் அளிப்பிற்கும் இடையேயும், உற்பத்திக் காரணிகட்கு இடையேயும் சமநிலையில்லாத நிலை முன்னேற்றத் திட்டங்களில் தவிர்க்க முடியாதவைகளாகும். பண்டங்கள், பணிகளின் தேவை முதலீடுகளால் பெருகுகின்றது. பெரிய அளவில் முதலீடுகள் செய்யப் படுகின்றமையால் பண வருவாய்கள் தோன்றுகின்றன. தேவையை இழுக்கின்ற பிற காரணிகள் உயர்ந்து செல்லும் நிர்வாகச் செலவுகள், பாதுகாப்புச் செலவுகள், உற்பத்திக்கு உதவாத செலவுகள், மக்கட்தொகைப் பெருக்கம் ஆகியவையாகும். ஆனால் தேவைக்கு ஏற்ப அளிப்பைச் செய்ய முடிவதில்லை. ஏனெனில் வளர்ச்சியடையாத நாடுகளில் முதலீட்டுத்திட்டங்கள் வளர்ச்சியடைய நீண்டகாலம் பிடிக்கும். திறமைக் குறைவு, பின்தங்கிய தொழில் நுட்பம், சந்தைக் குறைபாடுகள், மற்றுமுள்ள பல தடைகள் நுகர்பொருட்களின் அளிப்பைக் கட்டுப்படுத்துகின்றன. இவ்வாறு தேவைக்கும் அளிப்பிற்கும் இடைவெளி இருப்பதால் விலைகளில் உயர்வு ஏற்படுகின்றது.

விலைக்கொள்கை என்பது விலை உயர்வைக் கட்டுப்படுத்தி சமநிலையில் வைத்திருக்க வேண்டுமென்பது பொருளல்ல. பல வகைப் பண்டங்கள் மற்றும் பணிகளின் ஒரே அளவு விலைமாற்றங்களை அனுமதிக்கலாம். மேலும், விலைகள் ஆக்கக் காரணிகளையும் குறிப்பிடுகின்றன எனலாம். திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தில் விலைக்கொள்கை பற்றிக் குறிப்பிடும்போது, டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ், (Dr. V. K. R. V. Rao)[1] முக்கியமான பொரு

[1] Dr. V. K. R. V. Rao, Essays in Economic Development, ch. 6

ளாதார இயக்கத்தில் 'விலை' சில பணிகளைக் கொண்டுள்ளது என்கிறார். விலையின் முக்கிய பணி ஆக்கக் காரணிகட்கு இடையேயும், பண்டங்களின் தேவைக்கும் அளிப்பிற்கும் இடையேயும் சமநிலையை ஏற்படுத்துவதாகும். விலைமாற்றங்கள் சில பொருளாதாரப் பணிகளையும் புரிகின்றன. ஒரு சில பொருட்களின் விலைகள் உயர்ந்தால் பொதுவிலையானது உயரும் எனக் கூற முடியாது. தனிப்பட்ட விலைகளின் உயர்வு பொதுவிலையில் உயர்வை ஏற்படுத்தாமல் தாழ்ந்து விடுவதும் உண்டு. தனிப்பட்ட விலைகளின் உயர்வு அதிக உற்பத்தி வளங்களைக் கொண்டு வரலாம்; அல்லது உற்பத்தித் திறனின் அளவானது அதிகரிக்கலாம். பொதுவான விலையுயர்வைத் தடுக்க மொத்த உற்பத்தியைப் பெருக்கி அதிகரிக்கின்ற பண்டங்களின் தேவையைப் பூர்த்தி செய்யவேண்டும்.

ஆனால் வளர்ச்சியடையாத ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றப் போக்கு மெதுவாகவே ஏற்படுகின்றது. மொத்த உற்பத்தியில் அதிக அளவைப் பெற நீண்டகாலம் தேவைப் படுகிறது. எனவே எல்லாப் பொருட்களின் விலைகளிலும் உயர்வு ஏற்படுகிறதெனலாம். எனினும் எல்லா விலையுயர்வுகளும் சமுதாயத்திற்கு நன்மை தருவன அல்ல எனக் கருத முடியாது. தனிவிலையோ அல்லது பொதுவிலையோ உற்பத்தியை அதிகரிக்கத் தவறிவிட்டாலோ, தேவையைக் குறைக்க முடியாவிட்டாலோ சமுதாயத்திற்கு தீமைகளை விளைவிக்கும். தேவைப் பொருட்களைத் தேவையான அளவில் ஆக்க வசதிகளைப் பயன்படுத்தி அதிக அளவில் உற்பத்தி செய்ய முயல வேண்டும். விலைகளில் இணக்கத் தன்மை இருந்தால்தான் இதைப் பெற இயலும். மற்றொரு புறத்தில், விலைக் கொள்கை அடிப்படை நுகர்வுப் பொருட்களின் விலையை நிலைப்படுத்த வேண்டும். அப்போதுதான் வளர்ச்சியடையாத நாட்டின் நீண்டகால முதலீட்டுத் திட்டங்களின் மூலம் ஏற்படும் பணவீக்க நிலையைத் தவிர்க்கலாம். "ஆனால், கடினமான நிலையான பொது விலை பொருளாதார வளர்ச்சிக்குச் சுமையாக இருக்கும்; அது போன்றே அதிக விலையுயர்வும் வளர்ச்சிக்குத் தடையாக அமையும்."[1] நிலையான விலையான பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும். உயரும் விலையானது வருவாயையும், முதலீட்டையும் குலைத்துவிடும். சரியானதும், பொருத்தமானதுமான விலைக் கொள்கை அடிப்படை நுகர் பொருட்களின் உற்பத்தியையும், மூலதனப் பொருட்களின் உற்பத்தியையும் அதிகரிக்கும்.

டாக்டர். ராவ் (Dr. Rao)[2] கருத்துப்படி, "பொருளாதார முன்னேற்றத்திற்குச் சரியாகக் கொள்ளப்படும் விலைக் கொள்கை

[1] Dr. V. K. R. V. Rao. Essays in Econmic Development, p. 146.
[2] Ibid,,

சிற்றியல் பேரியல் நிலைகளைக் (Micro and Macro Aspects) கருத வேண்டும்." பேரியல் நிலையில், பணத்தை உருவாக்கி அதைப் பயன்படுத்தும் நிலைகட்காகப் பணக்கொள்கையும்' நிதிக் கொள்கையும், கைக் கொள்ளப்படுகின்றன, பண, நிதிக் கொள் கைகளில் ஒழுங்கை நிலைநாட்ட விலைக்கொள்கை பெரிதும் உதவுமென இந்தியாவின் மூன்றாவது திட்ட அறிக்கை (The Indian Third Plan Report) கூறுகின்றது.[1] பணக்கொள்கை அரசின் செலவுகளும், அதன் விளைவாக ஏற்பட்ட வருவாய்ப் பெருக்கமும் தவறான திசைகளில் செல்வதைத் தடுக்கவேண்டும். குறிப்பாக, ஊக வாணிபத்திற்காக பொருட்களை வைத்திருப்பதும், சேமித்து வைத்திருப்பதும் தடுக்கப்பட வேண்டும். பொருத்தமான வட்டி வீதமும், தெரிந்தெடுக்கப்பட்ட கடன் கட்டுப்பாட்டுக் கொள்கை யும் நன்மை பயக்கும் நிலையைத் தருவனவாகும். நிதிக் கொள்கை யோடு பணக்கொள்கையும் நிச்சயமாகப் பயன் படுத்தப்படுதல் வேண்டும். அதிகரித்த வாங்கும் திறனை ஒழுங்குபடுத்த பணக் கொள்கை வங்கிகளின் மூலம் செயல் படுத்தப்படுகிறது ; அரசு தன்னுடைய நிதிக் கொள்கை மூலம் அதிகரித்த வாங்கும் திறனை ஒழுங்குபடுத்த முயலுகின்றது. இரண்டு கொள்கைகளும் சமுதா யத்தின் சேமிப்பை அதிகரிக்க உதவுகின்றன.

குறிப்பாக நிதிக்கொள்கை வரிவிதிப்பு முறைகளின் மூலம் வருவாயைக் குறைக்க முயலுதல் வேண்டும். அது நுகர்வைக் கட்டுப்படுத்த உதவுதோடு, சேமிப்பைத் திரட்டவும் பெரிதும் உதவுகின்றது. தவிர உண்மையான வசதிகளை சமுதாயத்திட மிருந்து அரசிற்கு மாற்றித் தருகின்றது. இதனால் அதிக வாங்கும் திறன் தோற்றுவிக்கப்படாமல், பெறப்பட்ட நிதி வசதியைக் கொண்டு பொது முதலீட்டுத்திட்டங்கள் மேற் கொள்ளப் படுகின்றன.

விலைக் கொள்கை, தன் சிற்றியல் நிலையில் நேரடியானதும் அவசியமானதுமாகிய நிலையை முன்னேற்றத் திட்டங்களில் கொண்டுள்ளது. அது மூலதனப் பொருட்களின் உற்பத்தியோடு நுகர் பொருட்களின் உற்பத்தியையும் பெருக்க முயல வேண்டும். முதலீடுகளால் அதிகரித்த அதிக நுகர்வை ஈடு செய்ய நுகர் பொருட்களின் உற்பத்தி பெருகவேண்டும். முதலீடுகள் அடிப்படை நுகர்வுப் பொருட்களின் உற்பத்திகாகப் பயன்படுத்தப்பட்டால் பணவீக்க நிலையைத் தவிர்க்கலாம். இவ்விதக்கொள்கை வசதி களை நுகர்பொருட்களின் உற்பத்திக்கு முதலீடு செய்யத் தூண்டு கின்றது.

[1] Third Five-year Plan, Govt. of India, p. 127.

விலை இயக்கம் ஊக்கியாகவும், நிலைநிறுத்தியாகவும் செயல்படவேண்டும். பல வகைப் பொருட்களின் உற்பத்திக்காக வெவ்வேறு வகை விலைக்கொள்கைகள் அமைதல் நன்மை தரும். நேரடிக் கட்டுப்பாடுகளும் விலைக் கொள்கை சிறப்பாகச் செயல்பட உதவும். அரசின் வாணிபத்தின் மூலம் மொத்த விலைகளும் சில்லறை விலைகளும் கட்டுப்படுத்தப்படலாம். அடிப்படை நுகர்பொருட்களாகிய உணவுத்தானியங்கள், துணி, எண்ணெய் போன்றவைகளின் விற்பனையை அரசு மேற்கொள்ளலாம். இவ்வகைப் பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்தி விட்டால், பொதுவான மொத்த விலைகளிலும் அதிக உயர்வு ஏற்படாது.

பொருத்தமான வேளாண்மை விலைக்கொள்கை முன்னேற்றத்திற்கான திறவு கோலாக வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் இருக்கிறது. வேளாண்மை விலைகள் தேவை, அளிப்பு நிலைகட்கு ஏற்ப மாறும் தன்மை கொண்டவை. வளர்ச்சியடையாத நாடுகளின் தேசிய வருவாயில் சுமார் 50 சதவீதம் வேளாண்மையினின்றும் கிடைப்பதால், பொதுவான விலை அளவும் வேளாண்மைப் பொருட்களின் விலையைச் சார்ந்தே அமையும். வேளாண்மை விலைக் கொள்கை வேளாண்மைப் பொருட்களின் விலைகளில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டும், அதிக உற்பத்திக்குப் பின் உற்பத்தியாளருக்கு இழப்பு ஏற்படாதவகையில் விலைக்குறை ஏற்படக்கூடாது. அது போன்றே உற்பத்தி குறைந்தால் விலை அதிகரித்து நுகர்வோர் பாதிக்கப்படக் கூடாது. வேளாண்மை உற்பத்தி, பகிர்வு போன்ற முறைகளை உள்ளடக்கியதாக விலைக்கொள்கை பரந்த முறையில் அமைய வேண்டும். உற்பத்தியை ஊக்குவிக்க நிலச் சீர்திருத்தங்கள் தேவையானவை. குறுகிய, நீண்டகாலக் கடன்கள், உரங்கள், நல்விதைகள், கருவிகள் போன்றவற்றை எளிய முறைகளில் அளிக்க வேண்டும். வேளாண்மை இயற்கைக் காரணிகளையே சார்ந்திருக்கும் நிலை மாற்றப்பட வேண்டும். சிறந்த நீர்ப்பாசன வசதி முன்னேற்ற வேளாண்மைக்கு இன்றியமையாததாகும்.

முக்கிய வேளாண்மைப் பொருட்களுக்கு அதிக அளவு விலைகளும், குறைந்த அளவு விலைகளும் நிர்ணயிக்கப்பட வேண்டியது அவசியமானதாகும். குறைந்த அளவு விலையானது (Minimum Price) உற்பத்தியாளருக்கு ஊக்கத்தை அளிக்கத் தக்கதாய் அமைய வேண்டும். பல வகைப்பட்ட வேளாண்மைப் பொருட்கள் உள்ளன. அவற்றின் உற்பத்திச் செலவுகள் இடத்திற்கு இடம் வேறுபடலாம். அதையெல்லாம் கருதி விலையானது நிர்ணயம் செய்யப் படுதல் அவசியம். ஒரே பொருளின் விலையானது வெவ்வேறு இடங்களில் சற்று வேறுபாடு கொண்டதாக அமையலாம். அதிக அளவு

விலைகள் (Maximum Prices) உற்பத்தியாளர்களால் உற்பத்திப் பொருட்களின் தரத்திற்காகப் பெறப்படுகின்றன. வெற்றிகரமான விலைக்கொள்கை அரசு வேளாண்மைப் பொருட்களைச் சேமித்து வைப்பதிலும் உள்ளது. அரசு உணவுத் தானியங்களை வாங்கு வதிலும், விற்பதிலும் ஈடுபடவேண்டும். இவ்வகை வாங்குதல் விற்றல் போன்ற நடவடிக்கைகள் அரசினாலும் அரசின் நிறுவனங் களாலும் மேற்கொள்ளப்படலாம். விவசாயிகளை கூட்டுறவு நிறுவனங்களோடு நெருங்கிய தொடர்பு படுத்த வேண்டும். மொத்த விற்பனை வாணிபத்தை ஒழுங்கு படுத்த வேண்டும். சில பொருட் களின் வாணிபத்தை அரசே ஏற்று நடத்தல் நன்மை தரும். அரசும், கூட்டுறவு நிறுவனங்களும் வேளாண்மைப் பொருட்களின் பங்கீட்டில் பெருமளவு ஈடுபடலாம். சில்லறை வாணிப நிலைகளிலும் அவை நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் மிகச் சிறந்தது. விலைகளைச் சம நிலைப்படுத்த இவை உதவுமெனலாம். இட வேற்றுமைகள், கால வேறுபாடுகள், ஆகியவற்றால் ஏற்படும் விளைவுகளின் ஏற்றத்தாழ்வுகளை விலைக்கொள்கை மூலம் தவிர்க் கலாம். முக்கியமாக இன்றியமையாத நுகர்ப் பொருட்களின் விலைகளில் உயர்வு ஏற்படாமல் கட்டுப்படுத்த வேண்டும்.

அவசியமில்லாத நுகர்வுப் பொருட்களாகிய வசதிப் பொருட்கள், ஆடம்பரப் பொருட்களின் விலைகள் சந்தைகளில் தேவை அளிப்பிற்கேற்ப நிர்ணயம் ஆக அனுமதித்து விடலாம். விலை உயர்வானது இப்பொருட்களில் அனுமதிக்கப்படலாம். ஆனால் அப்பொருட்களின் மீது அதிக வரி விதிப்பு செய்யவும் வேண்டும்.

தனிப்பட்ட முறைகளின் மூலமாக நிலக்கரி போன்ற தொழில் மூலப்பொருட்கள், இரும்பு, சிமெண்ட் ஆகியவற்றின் விலைகள் ஒழுங்குப்படுத்தப்பட வேண்டியது அவசியமானது. வேளாண்மைப் பொருட்களின் விலையை ஒழுங்குப் படுத்துவதின் மூலம் தொழில் பொருட்களின் விலையை ஒழுங்குபடுத்தலாம். அதைப் போன்றே தொழில் மூலப் பொருட்களின் விலைகளைக் கட்டுப்படுத்துவதின் மூலம் தொழில் பொருட்களின் விலையையும் கட்டுப்படுத்தலாம். பணவீக்க நிலையைத் தடுக்க எல்லாவகையிலும் விலைக்கொள்கை முயலுதல் அவசியம்.

ஏற்றுமதிப் பொருட்களின் விலை உள் நாட்டில் உயர்ந்தால் அதை அனுமதிக்கலாம். உள் நாட்டு நுகர்வைக் குறைக்க விலையுயர்வு உதவும். விலையுயர்வு உற்பத்திக்கான முதலீடுகளைச் செய்வதற்கும் ஊக்கத்தைத் தரும். ஆனால் விலையை உற்பத்தி யாளருக்கு அதிக அளவு இலாபத்தைத் தராத வகையில் நிர்ணயம்

செய்ய வேண்டும்; அதே நிலையில் விலை நிர்ணயத்தையும், கட்டுப் பாடுகளையும் கைக்கொண்டு அரசு உற்பத்தியை உயர்த்தும் வகையில் செயல்படுதல் இன்றியமையாதது.

மற்ெறாரு 'சிற்றியல் விலைக் கொள்கை' (Mirco Price Policy) ஏற்றுமதிப் பொருட்களின் விலைகளை உள் நாட்டில் நுகர்வோர்க்கு உயர்த்துகின்றது. இதன் மூலமாக அதிக அளவு அந்நியச் செலவாணியை ஈட்ட முடியும். உதாரணமாக, இந்தியாவில் சர்க்கரை விலை நிர்ணயம் இக்கொள்கையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது.

கலப்பு நிலை வளர்ச்சியடையாப் பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நம் நாட்டில் பொதுத் துறைகளும், தனியார் துறைகளும் பொருளாதார முன்னேற்றத்தில் முக்கிய பங்கேற் கின்றன. பொது நிறுவனங்கள் தங்கள் விலைக் கொள்கையால் அதிக இலாபத்தைப் பெற முயல வேண்டும். ஆனால் சமுதாய நலனும் அங்கு காக்கப் படுதல் அவசியமானது. பொது மக்களின் சேமிப்பைப் பெருக்கவும் அவ்விலைக் கொள்கை உதவ வேண்டும்.

தனியார் துறையும் இதைப் போன்றே முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. ஏனெனில் நுகர் பொருட்களை அதிக அளவில் உற்பத்தி செய்வது தனியார் துறையேயாகும். விலைகளின் உயர்வு தொழில் முயல்வோரை ஊக்குவித்து அதிக மூதலீடுகள் செய்யப் படும். மேலும் விலைகளின் உயர்வு அதிக வருவாயை வாரத்தைப் பெறுகின்ற மக்களிடமிருந்து திறமை மிக்க தொழில் முயல்வோர் அடைய உதவும். ஆனால் விலைஉயர்வு மெதுவாக, படிப்படியாக ஏற் பட வேண்டும். விலைக் கொள்கை உற்பத்தியையும், பங்கீட்டையும் சிறப்பாகச் செய்ய உதவ வேண்டும். விலைக் கொள்கையின் மூல மாக வருவாய், சேமிப்பு, முதலீடுகளில் உயர்வு ஏற்பட்டு பொரு ளாதார முன்னேற்றம் விரைவு படுத்தப்படுதல் அவசியமான தாகும்.

ஊதிய வருவாய்களும் விலைகளும் நெருங்கிய தொடர்புடை யவை. விலைகள் உயரும்போது அதிக ஊதியத்தைப் பெற உழைப் பாளர்கள் முயல்கின்றனர். அவர்கள் ஊதிய உயர்வைப் பெற்ற வுடன், நுகர் பொருட்களின் அளிப்பு அதே நிலையில் இருக்கும் போது தேவை பெருகுகிறது. ஊதியத்தைக் குறைப்பது இந் நிலையில் சரியான கொள்கையாகாது. அவசிய நுகர் பொருட்களின் விலைகள் அதிகமாக இருக்கும் போது கூலியைக் குறைப்பது உற்பத் தியின் அளவையும், உற்பத்தித்திறனையும் பாதித்துவிடும். முன் னேற்றத்தை முழுமையாகப் பெற கூலிக்கொள்கையைப் பின் பற்றுவது இந்நிலையில் நன்மை பயக்கும். கணக்கிடப்பட்ட,

படிப்படியான கூலி உயர்வு, விலையுயர்வினுல் ஏற்படும் கூலி உயர்வின் திடீர் அதிகரிப்பைவிடச் சிறந்ததாகும். குறைந்த அளவு நுகர்வின் அளவைக் காட்டிலும் சராசரி கூலியானது குறைவாக இருக்கக் கூடாது. இவ்வகைக் குறைந்த கூலி பெறும் துறைகளில் உயர்வான கூலி நிர்ணயிக்கப் படலாம். உற்பத்தியின் உயர்வுக்கு ஏற்றவாறு கூலி உயர்வை அளித்தலும் நல்ல முறையாகும். ஆனல் உற்பத்திக்கு ஏற்ப ஊதியம் வழங்கப்பட்டு ஊதியத்தை ஒழுங்கு படுத்தமுடியாத காரணத்தால் விலைகளைக் கட்டுப் படுத்துவதும் கடினமாகின்றது. இதற்கு, தொடர்ச்சியான அவசிய நுகர்பொருட்களின் அளிப்பு நியாயமான விலைகளில் அமைந்திருக்க வேண்டும். ஆகவே விலைக் கொள்கை உற்பத்திச் செலவுகள், விலைகள், கூலிகள் இவற்றில் அதிக உயர்வு ஏற்படாமல் இருக்கும்வண்ணம் செயலாக்க படுதல் நல்லது.

வளர்ச்சியடையாத நாடுகளின் விலைக் கொள்கை சிறப்பான முறையில் அமைந்திருந்தால்தான் வேளாண்மை, தொழில் உற்பத்திகள் உயர்வடையும். சேமிப்பு பெருகி முதலீடுகள் அதிகரிக்கும். வேலைவாய்ப்புக்கள் ஏற்பட்டு, வருவாய்ப் பெருக்கமும் ஏற்பட சாதக நிலைகள் உருவாகும். விலைக் கொள்கை செல்வ, வருவாய்ப் பங்கீடுகளிலும் உள்ள வேறுபாடுகளைக் களையவேண்டும். சமதர்மப் பாதையில் சென்று கொண்டிருக்கும் இந்தியப் பொருளாதாரத்தில் விலைக்கொள்கை முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. விலை நிர்ணயம், கட்டுப்பாடுகள், பங்களவு முறைகள் போன்றவற்றின் மூலம் சமுதாயத்தின் தாழ்ந்த நிலையில் உள்ள வருவாய்க் குறைந்தவர்கள் பல நன்மைகளையும் பெறுகின்றனர். சந்தையில் நிலவும் தேவை, அளிப்பு நிலைகட்கு ஏற்ப, விலை நிர்ணயம் ஏற்படுவதை எல்லா ஏழை நாடுகளும் தடுத்தே ஆக வேண்டும். உற்பத்தி குறைவாக உள்ள நிலையில், மக்கட்தொகைப் பெருக்கத்தால் தேவை பல மடங்கு உயரும்போது விலைகள் அதிகரித்துவிடும். அந்நிலையில் அரசு விலைக் கொள்கையைச் சிறப்பாகப் பயன் படுத்துவது இன்றியமையாததாகும்.

### இந்தியாவில் விலையேற்றமும் விலைக்கொள்கையும்

நம் நாட்டில் பலவிதமான சிக்கல்கள் அமைந்திருந்தாலும் விலையேற்றத்தையே 'சிக்கல்களின் சிக்கல்' எனக் கருதலாம். பல பொருளாதாரச் சிக்கல்கட்கும் காரணமாக இருக்கும் விலையேற்றத்தைத் தனியாகத் தீர்ப்பது கடினமானது. பொருட்களின் உற்பத்தியை அதிகரித்து தேவையைக் குறைப்பதாக விலைக் கொள்கை அமைய வேண்டும்.

திட்டக்காலத்திற்கு முன் விலைகள்

இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த பிறகு பணவீக்க நிலையானது குறைந்துவிடுமெனக் கருதப்பட்டது. போர்க் காலத்திலேயே மிக அதிக விலையுயர்வுகள் ஏற்பட்டன எனக் கூற லாம். போர் முடிந்த பின்பும் விலைகள் குறையவில்லை. 1951-ஆம் ஆண்டின் முற்பகுதிவரை விலைகள் உயர்ந்த நிலையிலேயே இருந்தன. 1952-ஆம் ஆண்டின் தொடக்கத்திலிருந்துதான் விலைகள் குறையத் தொடங்கின. அக்காலத்தில் தொடர்ந்து விலை யுயர்வு ஏற்பட்டமைக்குப் பல பொருளாதார, அரசியற் காரணங்கள் அமைந்திருந்தன. உயர்ந்த உற்பத்தியைப் பெற முடிந்தாலும், போக்குவரத்து வசதிகள் முன்னேற்றமடையாத நிலையால் பங்கீட்டு முறைகள் சிறப்பாக அமையவில்லை. பல இடங்களில் பற்றுக்குறை ஏற்பட்டமைக்கு இதுவும் ஒரு காரண மாகும்.

பாகிஸ்தான் பிரிவினைக்குப்பின் புனரமைப்புப் பணிகள் மேற் கொள்ளப்பட்டன. காஷ்மீர் சண்டையாலும், உள்நாட்டில் பொது வாக நிலவிய அமைதியின்மையாலும் அரசின் செலவுகள் அதிகரித்தன. முன்னேற்றச் செலவுகளோடு, பாதுகாப்புச் செலவும் உயர்ந்ததால் அரசு காகிதப் பணத்தை வெளியிட்டு அச் செலவுகளைச் செய்தது. அதன் விளைவாலும் விலையுயர்வு ஏற்பட்டது. 1947-இல் விலைகளின் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டமை யாலும், 1951-ஆம் ஆண்டு 'கொரியப் போரினாலும்' (Korean war) விலைகள் மிக உயர்ந்த அளவை அடைந்தன.

1951-ஆம் ஆண்டுவரை விலைகளின் உயர்வுக்கான முக்கிய காரணங்களாவன :

(1) அதிக அளவுப் பணம் தொடர்ந்த பணவீக்கத்தைக் கொடுத்தது. 1938-39-இல் ரூ. 182 கோடியாக இருந்த பணத்தின் அளிப்பு 1945-46-இல் ரூ. 1,163 கோடியாக அதிகரித்தது.

(2) உற்பத்திக் குறைவால் குறைந்த அளவு பொருட்களை மட்டுமே பெற முடிந்தது. குறைந்த உற்பத்திக்குக் காரணம் தேய்மானம் அடைந்த பழைய கருவிகளைப் பயன்படுத்தியமை, போக்குவரத்து வளர்ச்சியின்மை, சமுதாயச் சச்சரவுகள், உழைப் பாளர் குழப்பங்கள், பதுக்குதல், இறக்குமதிக் கட்டுப்பாடுகள், இந்திய-பாகிஸ்தான் வாணிப முறிவு ஆகியவைகளாகும்.

(3) செப்டம்பர், 1949-இன் ரூபாய் நாணய மதிப்புக் குறைப்பு.

(4) கொரியப் போரைத் தொடர்ந்து அமெரிக்கா, மற்றும் சில வளர்ச்சியடைந்த நாடுகள் பல பொருட்களையும் சேமித்து கையிருப்பாக வைத்துக் கொண்ட நிலை ஆகியவையாகும்.

முதல் திட்டக்காலத்தில் விலைகள்

அரசு பின்பற்றிய தீர்வு முறைகளாலும், சாதகமான பன்னாட்டுப் பொருளாதாரச் சூழ்நிலைகள் இருந்தமையாலும் விலைகள் குறைவடைந்தன. சிறிய அளவிலேயே முதல் ஐந்தாண்டுத் திட்டம் அமைந்தது. பணத்தின் அளிப்பும் ரூ. 196 கோடி என்ற குறைந்த அளவிற்கே அதிகரிக்கப்பட்டது. உணவு உற்பத்தி 1950-51-இல் 54. 9 மில்லியன் டன்களாக இருந்தது. 1955-56-இல் இது 66. 9 மில்லியன் டன்களாக உயர்ந்தது. இந்நிலை வேளாண்மை முன்னேற்றம் கணிசமாக இருந்ததையே உணர்த்து கின்றது. ரூ. 420 கோடி அளவிற்கு மேற்கொள்ளப்பட்ட பற்றுக் குறை நிதியாக்கம் பணவீக்கத்தைத் தரவில்லை. இத்திட்டக் காலத்தில் மொத்த விற்பனை விலைகளின் குறியீடு 19·3% குறை வடைந்தது. வேளாண்மை முன்னேற்றத் திட்டங்களை மேற் கொள்ள கடன் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டது. சாதகத் தட்ப வெப்ப நிலைகளும் வேளாண்மை உற்பத்தியை அதிகம் பெற உதவின. உணவுப் பண்டங்களின் விலைகள் 25·9% குறைந்தன; தொழில் மூலப்பொருட்களின் விலை 31·9%, பொறிசெய்ப் பொருட்களின் விலை 3·6% குறைவடைந்தன. ஆனால் முதல் திட்டத்தின் இறுதியாண்டில் பணவீக்க நிலை மீண்டும் தோன்றியது. அந்த ஆண்டில் முதலீட்டு வசதிகளைக் காட்டிலும் அதிகமான செலவுகள் பற்றுக்குறை நிதிமுறையால் ரூ. 292 கோடி என்ற அளவிற்குச் செய்யப்பட்டன.

இரண்டாவது திட்டக்காலத்தில் விலைகள்

முதல் திட்டத்தைவிட மிகப் பெரிய திட்டமாக இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டம் அமைந்தது. பொதுத் துறையில் முதலீடாக்கப்பட்ட பணத்தின் அளவு ரூ. 4,800 கோடியாக இருந்தது. இது முதல் திட்ட பொதுத்துறை முதலீட்டைவிடச் சுமார் $2\frac{1}{2}$ மடங்கு அதிகமானதாகும். பற்றுக்குறை நிதியாக்கம் ரூ. 948 கோடி என்ற அளவிற்குக் கைக்கொள்ளப்பட்டது. முதல் திட்டத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவு ரூ. 420 கோடியே ஆகும். பணத்தின் அளிப்பும் ரூ. 196 கோடியிலிருந்து ரூ. 704 கோடிக்கு உயர்ந்தது. இது 260 சதவீத உயர்வாகும். உணவுத் தானியங்களின் உற்பத்தி 13 மில்லியன் டன்னிகள் அதிகரித்து 81 மில்லியன் டன்னிகள் என்ற அளவை எட்டினாலும், பணவீக்க நிலையைத் தடுக்க முடியாமற் போய்விட்டது. முதலீட்டுச்

செலவுகள் உயர்ந்தமையால்தான் விலையுயர்வுகள் ஏற்பட்டன. மொத்த விற்பனை விலைகளின் குறியீடு 32.4% அதிகரித்தது. உணவுப் பண்டங்களின் விலைகள் 33.4%, தொழில் மூலப் பொருட்களின் விலைகள் 46.4%, பொறிசெய்ப் பொருட்களின் விலைகள் 24.2% அதிகரித்தன. இரண்டாவது திட்டக் காலத்தில் ஏற்பட்ட விலைகளின் உயர்வுக்கான அடிப்படைக் காரணம் அதிகரித்த முதலீட்டிற்கேற்ப உற்பத்தி பெருகவில்லை என்பதே யாகும். குறிப்பாக, பண வருவாய் விரைவாக பெருகியபோது, வேளாண்மை உற்பத்தி அதிகரிக்கவில்லை. தேவைக்கும் அளிப்பிற்கு மிடையே சமநிலை இல்லாத காரணத்தால் விலைகளைக் குறைக்க அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் வெற்றியைப் பெறவில்லை. 1953-54-ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்ட பொது விலைக் குறியீட்டு எண் 1960-61-இல் 125 ஆக உயர்ந்தது.

## மூன்ருவது திட்டக்காலத்தில் விலைகள்

இரண்டாவது திட்டம் பணவீக்க நிலைகளுக்கிடையே தொடங் கப்பட்டது போலவே, மூன்ருவது திட்டமும் விலையுயர்வுகளுக் கிடையே தொடங்கியது. திட்டக் குழுவினுலும் (Planning Commission) சிறப்பான விலைக்கொள்கையானது தரப்படவில்லை. மேம்பாடடைந்து வரும் இந்தியப் பொருளாதாரத்தில் விலையுயர்வு களைத் தடுக்க நல்ல விலைக்கொள்கை பின்பற்றப்பட வேண்டும். 1962-ஆம் ஆண்டின் சீனப் படையெடுப்பாலும், 1965-இன் பாகிஸ்தானின் ஊடுருவலாலும் பல தடைகள் பொருளாதார முன்னேற்றத்தில் ஏற்பட்டன. இதனுல் பாதுகாப்புச் செலவுகள் கூடின. நிதிப் பற்ருக்குறையால் பற்ருக்குறை நிதிமுறை பின் பற்றப் பட்டது. இத்திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளிலேயே பற்ருக்குறை நிதியின் குறியளவாகிய ரூ. 550 கோடியைக் கடந்து, ரூ. 66 கோடி அதிகம் செலவிடப்பட்டது. பணத்தின் அளிப்பு திட்ட காலத்தின் முதல் நான்கு ஆண்டுகளிலேயே ரூ. 1,211 கோடி என்ற அளவை எட்டியது. இக்காரணிகள் விலைகளின் உயர்வுக்கு மேலும் அழுத்தத்தைத் தந்தன. உணவு உற்பத்தியில் கிட்டாத வெற்றி விலையுயர்வை மேலும் அதிகமாக்கியது. வேளாண்மையின் தேக்க நிலை தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களின் பற்ருக் குறை நிலையையும் தந்தது.

ஆனுல், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலாண் டாகிய 1961-62 இல் விலைகளில் நிலையான தன்மை நிலவியது. விலைகளின் பொதுக் குறியீட்டெண் 2 புள்ளிகளே அதிகரித்தது. அதற்குப் பிறகு, விலைகள் உயர்வடையத் தொடங்கிவிட்டன. பொதுவிலைக் குறியீட்டெண் 1962-ஆம் ஆண்டிற்கும் 1963-ஆம்

ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 7% அதிகரித்தது; 1963-64 ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் விலையுயர்வு 10% ஆக அதிகரித்தது. இத்திட்டத்தின் இறுதி இரண்டாண்டுகளின் விலையுயர்வுகள் மிக அதிக அளவை அடைந்தன. பொதுக் குறியீட்டெண் (அடிப்படை: 1952-53 = 100) 1964-65-இல் 152.7 ஆகவும், 1965-66-இல் 165.1 ஆகவும் உயர்ந்தது; 1961-62-இல் இது 125 என்ற அளவில் அமைந்திருந்தது.

பொதுவிலைக் குறியீட்டெண் 1965-இல் 8.7%, 1966-இல் 13.7% அதிகரித்தது. 1967-இல் மிக உயர்ந்த அளவாகிய 15.3% அதிகரிப்பை அடைந்தது. எல்லாப் பொருட்களும் இணைந்த குறியீட்டெண் மார்ச் 1966 முதல் மிக விரைவாக அதிகரித்து வருகிறது. அக்டோபர் 1967-இல் அக் குறியீட்டெண் 221 என்ற அதிக அளவை அடைந்தது (அடிப்படை: 1952-53 = 100).

இவ்வகை அதிகரித்த விலைகளின் நிலைக்கு பொருளாதார வளர்ச்சி குறைந்த வீதத்தில் ஏற்பட்டதே காரணமாகும். வேளாண்மையின் தேக்கநிலையும், அதன் விளைவால் ஏற்பட்ட குறைந்த தொழில் வளர்ச்சி வீதமும் பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்துவிட்டன. மற்றொரு பக்கத்தில், அரசின் அதிகரித்த செலவுகளும், தனியார் முதலீடுகள் பெருகியமையும் தேவைகளைப் பொருளாதாரத்தில் பெருக்கிவிட்டன.

திட்ட காலத்தில் விலைகளின் நிலைகள் இவ்வாறு அமைந்திருந்தன. இனி, இவ்விலையுயர்வுகளுக்கான காரணங்களை ஆராய்வது அவசியமாகும்.

**விலையுயர்வுகளுக்கான காரணங்கள்**

ஆண்டுக்காண்டு பெருகும் முதலீடுகளாலும், வேளாண்மை உற்பத்தி குறியிலக்குகளை எட்டாத நிலையும் பணவீக்க நிலையைத் தருகின்றன. உற்பத்திக்கு உதவாத செலவினங்கள் விலைகளின் உயர்வுக்குக் காரணங்களாகின்றன. மக்கள் தாங்களாகவே சேமிக்கும் வீதம் குறைவாகவே உள்ளது. சேமிப்பு தேவையின் அளவிற்கேற்ப பெருகவில்லை. இந்நிலையால் பற்றுக்குறை நிதிமுறை பின்பற்றப்படுகின்றது. பொதுத்துறையில் இந்நிதி [illegible] படுத்தப் படுகின்றது. தனியார் துறைகளுக்குத் தேவையான நிதி வங்கிக்கடன் மூலம் கிடைக்கின்றது. பொருளாதாரத்தில் அதிக அளவில் கணக்கில் வராத பணமும் உள்ளது. அதைக் கொண்டிருப்பவர்கள் பொருட்களையும், பணிகளையும் எந்த விலைக்கும் வாங்கத் தயாராக உள்ளனர். பணவருவாய் பெருகும் அளவிற்கு

வேளாண்மை, தொழிற் பொருட்களின் உற்பத்தி பெருகுவதில்லை. உற்பத்திச் செலவும் அதிகரிப்பதால் குறைந்த அளவு உற்பத்தியை அதிகச் செலவில் மட்டுமே பெற முடிகின்றது. உற்பத்திச் செலவு அதிகரிப்பதற்கு வரிவிதிப்பும் ஒரு காரணமாகும். பெருகும் தேவையின் அளவானது விலையுயர்வின் அளவில் வெளிப்படுவதாகக் கூறலாம். உற்பத்தியாளர்களும் கணிசமான அளவு பதுக்குதலைச் செய்கின்றனர். இந்நிலையாலும் உணவுத் தானியங்களின் விலைகள் மேலும் உயர்ந்து விடுகின்றன.

விலையுயர்வுக்கான காரணங்களை 'தேவையின்' பக்கத்தில் செயல்படுவன என்றும், 'அளிப்பின்' பக்கத்தில் செயல்படுவன என்றும் இருவகைகளாகக் கூறலாம்.

தேவையின் பக்கத்தில் விலையுயர்வுக்குக் காரணங்கள் :

(1) திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியால் முதலீடு பெருகி வருகின்றது. கடந்த 18 ஆண்டுகளில் ரூ. 30,000 கோடிக்கு மேல் முதலீடு செய்யப்பட்டுள்ளது. இந்நிலையால் மூலதனப் பொருட்களின் தேவை பெருகி விலைகளும் உயர்ந்துள்ளன.

(2) அரசின் செலவினங்களும் அதிகரித்துள்ளன. நம் ஐந்தாண்டுத் திட்டங்களே அரசின் அதிகச் செலவிற்குக் காரணமாகும். ஆண்டுதோறும் அரசின் செலவு படிப்படியாக அதிகரித்து வருகிறது. சான்றாக, 1950-51-இல் ரூ. 5,413 கோடி செலவிடத் திட்டமிடப்பட்டது

(3) பற்றுக்குறை நிதியாக்கத்தை அரசு பின்பற்றியதாலும் விலைகளின் உயர்வு ஏற்பட்டுள்ளது. முதல் திட்டத்தில் ரூ. 532 கோடியும், இரண்டாவது திட்டத்தில் ரூ. 948 கோடியும், மூன்றாவது திட்டத்தில் ரூ. 1,150 கோடியும் பற்றுக்குறை நிதியாக்கம் செய்யப்பட்டது. நான்காவது திட்டத்தில் ரூ. 850 கோடி பற்றுக்குறை ஏற்படுமெனக் கணக்கிடப்பட்டுள்ளது.

(4) பணத்தின் அளிப்பு அதிகரித்து வருகின்றது. 1951 முதல் 1966 வரை ரூ. 24,370 மில்லியன் பணத்தை அரசு வெளியிட்டுள்ளது. இதனாலும் தேவை பெருகி விலை அதிகரிக்கின்றது.

(5) ஊக வாணிபம் செய்பவர்கள் இலாப நோக்கோடு பண்டங்களைத் தேக்கி வைத்துக் கொள்கின்றனர். இதனால் பற்றுக்குறை ஏற்பட்டு விலைகள் உயர்கின்றன.

(6) வரி ஏய்ப்பு செய்யப் படுவதாலும், கறுப்புப் பணத்தாலும் விலைகள் அதிகரிக்கின்றன. நம் நாட்டில் ஆண்டொன்

றிற்குச் சுமார் ரூ. 300 கோடி வரி ஏய்ப்பு செய்யப்படுகின்றது. இப்பணம் யாவும் அதிகவிலையிலும் பல பொருட்களை வாங்கப் பயன்படுத்தப்படுகின்றது.

(7) மக்கட்தொகைப் பெருக்கமும் விலைவுயர்வுக்குக் காரணமாகிறது. ஆண்டுதோறும் ஒரு கோடிக்கும் அதிகமான மக்கட் தொகை பெருக்கம் ஏற்படுகிறது. பொருட்களின் உற்பத்தி இந்த அளவுற்கு விரைவாக அமைந்திருக்கவில்லை. நுகர்வு அதிகரிப்பதால் தேவைகளும், விலைகளும் உயர்ந்து விடுகின்றன.

(8) கடனளவும் அதிகரித்து வருகின்றது. வங்கிகளின் வளர்ச்சி, கூட்டுறவுச் சங்கங்களின் முன்னேற்றம் இவற்றால் கடன் அளவு கூடுகின்றது. இக்கடன்கள் உற்பத்திக்கு மட்டும் பயன் படுத்தப் படாமல், நுகர்வுக்கும் செலவிடப்படுகின்றமையால் விலை உயர்வுகள் ஏற்படுகின்றன.

அளிப்பின் பக்கத்தில், பண்டங்களின் அளிப்பு எதிர்பார்த்த அளவு அதிகரிக்காமைக்கான காரணங்கள் :

(1) வேளாண்மை உற்பத்தி குறியிலக்குகளுக்குக் குறைவாகவே இருந்தமையால் உணவுப் பற்றுக்குறையோடு, தொழில் மூலப்பொருள் பற்றுக்குறையும் ஏற்பட்டது.

(2) தொழில்களின் குறைந்த விகித வளர்ச்சியால் நுகர் பொருட்களின் உற்பத்தியும் தேவைக்கேற்ப பெருகவில்லை. மேலும், நுகர் பொருட்களின் உற்பத்திக்கு திட்டங்களில் முக்கியத்துவம் அளிக்கப் படவில்லை. பெரிய அடிப்படைத் தொழில்களின் வளர்ச்சியே அரசின் நோக்காக அமைந்தது.

(3) தொழில் உற்பத்தியும் சிறப்பான அளவிற்கு உயரவில்லை. நீண்ட காலத்தில் உற்பத்தியைத்தந்து பயனளிக்கக்கூடிய தொழில்கள் தொடங்கப்பட்டதும் இதற்குக் காரணமாகும்.

(4) உற்பத்தி குறைவாக இருந்த நிலையில் இலாப நோக்கோடு ஊக வணிகர்கள் உற்பத்திப் பொருட்களைப் பதுக்கினர்.

இவை யாவற்றையும் விட விலைவுயர்வுக்கான அடிப்படைக் காரணம், பொருட்களின் மொத்த அளிப்பு தேவைக்குக் குறைவாக இருந்தமையாகும். பெரும்பாலான அத்தியாவசியமான பொருட்கள் வேளாண்மையைச் சார்ந்துள்ளன. வேளாண்மைப் பொருட்களின் விலைவுயர்வு பிற பொருட்களின் விலைவுயர்வுக்கு வித்திடுகின்றது.

விலைவுயர்வைத் தடுக்கும் தீர்வுகள்

அரசு தன் விலைக்கொள்கையின் மூலம் விலைகளைக் கட்டுப் படுத்த முயல்கின்றது. இதற்காக பணக்கொள்கையும், நிதிக் கொள்கையும் பின்பற்றப்படுகின்றன. விலையுயர்வைக் குறைக்க கீழ்க்கண்ட முறைகள் கைக்கொள்ளப்படுகின்றன :

(1) உணவின் அளிப்பைப் பெருக்கும் நடவடிக்கைகள் : குறுகிய காலத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்க இய லாது. எனவே, பெருமளவிற்கு அமெரிக்கா போன்ற நாடுகளி னின்றும் உணவுத்தானியங்கள் இறக்குமதி செய்யப்படுகின்றது.

(2) அரசின் முயற்சிகள் பொருட்களின் அளிப்பை அதி கரிக்கவும், அவற்றிற்கான அதிகத் தேவையைக் குறைக்கவும் மேற் கொள்ளப்படுகின்றன.

(3) உள்நாட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்க நடவடிக் கைகள் திட்டங்களின் மூலம் எடுக்கப்பட்டுள்ளன.

(4) உணவுப்பகிர்வு சீர்படுத்தப்பட்டு, நியாய விலைக் கடை களின் மூலம் பற்றுக்குறை பகுதிகளில் உணவுப்பங்கீடு செய்யப் படுகின்றது.

(5) மாநிலங்களுக்கிடையே உணவுத்தானியங்களின் வாணி பம் தடை செய்யப் பட்டுள்ளது.

(6) உணவு வாணிபத்தில் பலவிதக் கட்டுப்பாடுகள் விதிக் கப்பட்டுள்ளன. மாநில அரசுகளும் உணவுப் பொருட்களை உற்பத்தி யாளர்களிடமிருந்து வாங்கி பங்கீடு செய்கின்றன.

(7) அரசு காகிதப்பண வெளியீட்டைக் குறைத்து வேறு முறைகளில் கடன், சேமிப்பு, முதலீடு போன்றவற்றைப் பெருக்க முயற்சி செய்கின்றது.

(8) அரசின் நிதிக் கொள்கை ஆக்கத்தைப் பாதிக்காமல் சேமிப்பைப் பெருக்கி, நுகர்வைக் கட்டுப்படுத்தும் வரி விதிப்பு முறையைக் கொண்டதாக அமைந்துள்ளது. இதற்காக வருவாய் வரிச்சலுகைகள் சில நிலைகளில் அளிக்கப்படுகின்றன. வெவ்வேறு வகைக் கடன் பத்திரங்களும் வெளியிடப்படுகின்றன.

(9) சில பொருட்களின் விலைகள் அரசால் நிர்ணயிக்கப்படு கின்றன. உற்பத்தியாளரும், நுகர்வோரும் பாதிக்கப்படாத வகையில் விலை நிர்ணயம் செய்யப் படுகின்றது. இதற்கு உதாரண மாக மருந்துகளின் விலைகளைச் சமீபத்தில் அரசு கட்டுப்படுத்திய தைக் கூறலாம்.

(10) நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மூலமாகவும் நியாமான விலைக்குப் பொருட்கள் விற்பனை செய்யப் படுகின்றன.

(11) சில பொருட்களின் பங்கீட்டில் கட்டுப்பாடுகள் அரசால் விதிக்கப்பட்டுள்ளன. இன்றியமையாத பொருட்களில் இந்நிலை அமைந்துள்ளது. விலைக் கட்டுப்பாடுகள் சில பொருட்களில் பின்பற்றப்படுகின்றன.

(12) அதிக இலாபத்தைக் குறைக்கவும், பதுக்குதலைத் தடுக்கவும் முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டுள்ளன.

(13) அரசே சில நிலைகளில் வாணிபத்தை மேற்கொள்கிறது.

(14) நுகர் பொருட்களின் உற்பத்தியைப் பெருக்க ஊக்கங்கள் அளிக்கப்படுகின்றன. இதற்காக வரிச்சலுகைகளும் தரப் படுகின்றன.

(15) கறுப்புப் பணத்தை வெளிக் கொணரவும், வரி ஏய்ப்புக்களைத் தவிர்க்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

இவ்வகை நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டாலும், விலைகளைக் கட்டுப்படுத்துவதில் அரசிற்கு வெற்றி கிட்டவில்லை. ஏனெனில், 1953-54-ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்ட பொதுவிலைக் குறியீட்டெண் 1960-61-இல் 125 ஆகவும், 1965-66-இல் 165 ஆகவும் அதிகரித்தது. 1961-62-ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்ட விலைகளின் குறியீட்டெண் மே 1970-இல் 179 ஆக உயர்ந்துவிட்டது. கறுப்புச் சந்தை வியாபாரிகள் கறுப்புப் பணம் அதிகம் கொண்டுள்ளதால் வசதியுள்ளவர்களாக உள்ளனர். பதுக்குதலைத் தடுப்பதும் இதனால் கடினமாகிறது.

**விலைகளின் உயர்வால் ஏற்படும் விளைவுகள்**

மிக அதிக அளவு விலைவுயர்வால் ஏற்படும் முக்கிய விளைவுகளாவன :

(1) விலைவுயர்வு ஊதிய உயர்வையும், கச்சாப் பொருட்களின் விலைகளில் உயர்வையும் தந்துவிடுகின்றது. இதனால் முதலீட்டிற்கான மூலதனத்தின் அளவும் அதிகமாகத் தேவைப் படுகின்றது. அரசின் திட்டங்களை மேற்கொள்வதற்கும் அதிகச் செலவு (பணவீக்கத்தினால்) பிடிக்கின்றது.

(2) விலைவுயர்வால் அந்நிய முதலீட்டாளர் உள் நாட்டில் முதலீடு செய்யத் தயங்குவார். உறுதியின்மை நிலவும் நிலைகளால் அயல் நாட்டு மூலதனம் முதலீட்டிற்குக் கிடைக்காது. அதிக இலா

பத்தைப் பெறும் வாய்ப்பிருந்தால்தான் அந்நிய முதலீட்டாளர்கள் முதலீடு செய்ய முன் வருவார்கள்.

(3) உற்பத்திச் செலவு அதிகரிக்கின்ற காரணத்தால் உலகச் சந்தைகளில் குறைந்த விலைகளில் பொருட்களை விற்பது கடினமாகிறது. உள்நாட்டின் பற்றுக்குறைநிலையால் இறக்குமதிகளும் அளவில் அதிகரிக்கின்றன. இந்நிலைகளால் அயல்நாட்டுச் செலுத்துநிலை பாதகமாகி விடுகிறது. இதனால் வங்கித் துறையில் உள்ள அந்நியச்செலாவணியின் அளவும் குறைகிறது. முதல் திட்டத் தொடக்கத்தில் ரூ. 860 கோடி என்ற அளவில் இருந்த அந்நியச் செலாவணி மார்ச் 1665-இல் ரூ. 94 கோடியாகக் குறைந்து விட்டது.

(4) அதிக விலைவுயர்வு மக்களின் வாழ்க்கைத்தரத்தைக் குறைத்து விடுகின்றது. குறைந்த வருவாய் பெறுபவர்கள், நிலையான வருவாய் பெறுபவர்களின் வாழ்க்கை நலன் பெரிதும் பாதிக்கப்படுகின்றது.

(5) பணவீக்கம் 'கூலி சுழற்சியையும்' (Wage Spiral) தருகிறது.

(6) வருவாய், செல்வப்பங்கீடுகளை விலைவுயர்வு சிறப்பாகச் செயல்படுத்த முடியாமற் செய்து விடுகின்றது.

(7) விலைவுயர்வு பதுக்குதலுக்கு ஊக்கமளிக்கிறது. வீணான ஆடம்பரச் செலவுகளை அதிக வருவாய் பெறுபவர்கள் செய்கின்றனர்.

பணவீக்க நிலை நாட்டின் உள்நாட்டு, வெளிநாட்டுச் சமநிலைகளைப் பாதிக்கின்றது. உள்நாட்டில் பணத்தின் வாங்கும் திறன் குறைந்து விடுகின்றது. வளங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்படும் வகையில் முதலீடுகள் செய்யப்படுவதில்லை. வருவாய்ப்பங்கீடு ஏற்றத் தாழ்வுகளைக் கொடுக்கின்றது. பணியாற்றும் ஊக்கம், சேமித்து முதலீடு செய்யும் ஊக்கம் இவையிரண்டும் இழக்கப்படுகின்றன.

புறநிலைகளில், விலைவுயர்வினால் இந்தியத் தொழில்கள் போட்டியிடும் திறனை உலகச் சந்தைகளில் இழந்துவிட்டன. இந்திய ரூபாயின் மாற்றுமதிப்பும் குறைந்தது. ஏற்றுமதியை விட இறக்குமதி அதிகரித்தது. இதனால், இரண்டாவது முறையாக 1966 ஜூன் மாதம் 5-ஆம் தேதி ரூபாய் மதிப்புக் குறைப்பு செய்யப்பட்டது. விலையுயர்வால் நம் நாட்டின் பொருளாதார வளர்ச்சி பெரிதும் தடைபடுகின்றது.

**சமீப கால விலை நிலை**

**1967-68-இல் சிறிதளவு விலைக்குறைவு**

அக்டோபர் 1967 முதல் வரவேற்கத்தக்க நிலையில் விலைக் குறைவு ஏற்பட்டது. 1967-ஆம் ஆண்டின் முதற்பகுதியில் விலைகள் 10·4% அதிகரித்தன ; ஆனால் அவ்வாண்டின் பிற்பகுதி யில் 10·5% விலைகளில் குறைவு ஏற்பட்டது. அக்டோபர் 14, 1967-இல் 224% என்ற அளவில் இருந்த குறியீட்டெண் மார்ச் 30, 1968-இல் 200.6 என்ற அளவிற்குக் குறைந்து விட்டது. இவ்விலைக் குறைவிற்கு வேளாண்மை உற்பத்தியின் உயர்வே முக்கிய காரணமாகும். 1967-68-இன் உணவுத் தானியங்களின் உற்பத்தி மிக அதிக அளவாகிய 95.6 மில்லியன் டன்கள் என்ற நிலையை அடைந்தது.

**1968-69-இல் விலை மாறுமை**

1968-69-இல் இந்தியப் பொருளாதாரத்தில் விலைகளில் மாறுத நிலையான தன்மை ஏற்பட்டது. பிப்ரவரி 1968-இல் 205.6 என்ற நிலையில் இருந்த விலைக்குறியீட்டெண் ஓராண்டிற்குப் பின் 205·8 என்ற அளவிற்கு மட்டுமே உயர்ந்தது. இவ்விலை நிலைக்குக் காரணமாக தேவைக்கு ஏற்ப அளிப்பு ஏற்பட்டதைக் குறிப்பிடலாம். இதன் விளைவாக, விலைக்கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன ; சில பொருட்களின் விலைக்கட்டுப்பாடுகள் முற்றிலுமாக நீக்கப்பட்டன.

**விலைக்குறைவிற்கான காரணங்கள்**

(1) மற்றெல்லாக் காரணிகளையும் விட உணவு உற்பத்தி பெருகியதும், பொருளாதாரத்தின் முன்னேற்றமும் விலைக் குறைவைத் தந்தன.

(2) அரசு முன்னேற்றச் செலவுகளைக் குறைக்க முயன்றது. அவசியமற்ற, உற்பத்திக்குதவாத செலவுகள் குறைக்கப்பட்டன. அரசின் அதிகச் செலவுகளைக் குறைத்தால் தான் விலைகளில் மாறுத நிலையைப் பெற இயலும்.

(3) மத்திய அரசு புதிதாக ரூ. 118 கோடிக்கு வரிவிதிப்பு செய்தது ; மாநில அரசுகள் ரூ. 14 கோடி புதிதாக வரிவிதிப்பு செய்தன. இதனால் மக்கள் பணவருவாய் மூலம் பெற்ற வாங்கும் திறன் வரி விதிப்பின் மூலம் திரட்டப்பட்டது.

(4) 1967-68-இல் தேசிய ஆக்கம் 8.9% அதிகரித்தது.

(5) பண அளிப்பின் பெருக்க வீதம் 1967-ஆம் ஆண்டை விட 1968-இல் குறைவடைந்தது.

இந்நிலையானது வேளாண்மை உற்பத்தி பெருகிக் கொண்டிருந்தால்தான் நீடிக்கும். தொழில்களின் 'பின்னிறக்கத்தினின்றும்' (Recession) இந்தியப் பொருளாதாரம் மாறி 'மீட்சி' (Revival) நிலையை நோக்கிச் செல்கின்றது. விலைவுயர்வு ஏற்படாமல் தடுக்க, பற்றுக்குறை நிதியாக்க முறையை பாதுகாப்பு அளவுகளைக் கருத்திற்கொண்டு பின்பற்ற வேண்டும்.

**இந்தியாவில் வேளாண்மைப் பொருட்களின் விலைகளில் நிலைப் பேறுக்கத்தை ஏற்படுத்துதல் (Stabilisation of Agricultural Prices in India)**

**விலைகளை மாறுத நிலைப்படுத்துதலின் அவசியம்**

இந்தியா போன்ற வேளாண்மை நாடுகளில் வேளாண்மைப் பொருட்களின் விலைகள், நாட்டின் விலை அமைப்பில் முக்கிய நிலையைக் கொண்டுள்ளன. குறிப்பாக உணவுத் தானியங்களின் விலைகள் மற்ற பொருட்களின் விலைகளிலும் பிரதிபலிக்கின்றன. வேளாண்மைப் பொருட்களின் விலைகள் பொருளாதாரத்தின் விலை அமைப்பையே பாதிக்கும் தன்மை கொண்டவைகளாக உள்ளன.

குறுகிய காலத்தில் பொருட்களின் அளிப்பிற்கும் தேவைக்குமிடையே சமநிலையில்லாத காரணத்தால் விலைகளில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றன. இவ்வேறுபாடுகளைக் களைய நடவடிக்கைகள் எடுக்கப்படுதல் வேண்டும். விலைவுயர்வினுல் ஏற்படும் தீயவிளைவுகளை நீக்க சரியான காலங்களில் அரசு பண, நிதிக்கொள்கைகளைப் பின்பற்றி சிறப்பான விலைக்கொள்கையைக் கைக்கொள்ள வேண்டும்.

பின்வரும் காரணங்களால் வேளாண்மைப் பொருட்களின் விலைக்குறைவு சில அபாயகரமான நிலைகளைத் தோற்றுவித்து விடும்:

(1) வேளாண்மைப் பொருட்களின் விலைக்குறைவால், விவசாயிகளின் வருவாய்களில் குறைவு ஏற்படும். விவசாயிகள் தங்கள் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெற முடியாதவர்களாகின்றனர். முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளையும், உரங்களையும் பயன்படுத்த அவர்கள் முன்வருவதில்லை. இவற்றுல் உற்பத்திச் செலவைக் குறைப்பதும் முடியாத ஒன்றுகின்றது. தவிர, விவசாயிகள் வாரம், வரி, வட்டி போன்றவைகளையும் அளிக்க

வேண்டியுள்ளதால் அவர்களின் நிகரவருவாய் (Net Income) குறைந்த அளவிலேயே அமைகின்றது. விலைகளின் குறைவு மேலும் அவர்களின் வருவாயைப் பாதித்துவிடும். வேளாண்மை நாடாகிய இந்தியாவில் பெரும்பகுதி மக்கட்தொகை வேளாண்மைத் துறையிலேயே அமைந்துள்ளது. வேளாண்மை விலைகள் குறைவடைந்தால் மக்கள் பெருமளவில் பாதிக்க படுவார்கள்; அரசின் வருவாயிலும் குறைவு ஏற்படுமென்று கூறலாம்.

(2) வேளாண்மைப் பொருட்களின் விலை மிகக்குறை வடைந்துவிட்டால், விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கத்தை இழக்கின்றனர். இதனால் வேளாண் மைப் பொருட்களின் அளிப்பில் குறைவு ஏற்பட வாய்ப்புண்டு. இதைத் தவிர, விலைக்குறைவால் கிராம மக்களின் வாங்கும் சக்தி யானது குறைந்துவிடும். இது தொழிற் பொருட்களின் தேவையில் குறைவைத் தரும்.

இக்காரணங்களால், விவசாயிகள் நியாயவிலையைப் பெற உறுதியளிக்கப்பட வேண்டும். விலைகள் மிகக் குறைவடையும் நிலைகள் தோன்றும்போது குறைந்த பட்ச விலையானது நிர்ணயிக்கப்படுதல் இன்றியமையாதது. குறிப்பிட்ட குறைந்த அளவிற்குக் கீழ் வேளாண்மைப் பொருட்களின் விலையை குறையவிடக் கூடாது. அந்நிலையில்தான் விவசாயிகள் நிலத்தில் அதிக முதலீடு செய்ய முன்வருவார்கள். முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகள் அவர்களால் கைக்கொள்ளப்பட்டு உற்பத்தி யும் அதிகரிக்கும்.

**வேளாண்மைப் பொருட்களின் அதிக விலையுயர்வும் நன்மை தராது**

பொதுவாக, இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடு களில் வேளாண்மைப் பொருட்களின் விலைகள் குறைவடைவதில்லை. மாறாக விலைகளின் உயர்வைக் கட்டுப் படுத்துவதே அந்நாடுகளின் முக்கிய சிக்கல்களுள் ஒன்றாக அமைகிறது.

(1) உணவின் அதிக விலை

பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது மக்களுடைய வருவாய் அதிகரிப்பதோடு அவர்களின் உணவிற்கான தேவையும் பெருகுகின்றது. உற்பத்தி வேளாண்மையில் உயர்ந்தாலும், உணவின் தேவை பெருகும் அளவிற்கு அதிகரிப்பதில்லை. உண வின் அளிப்பிற்கும் தேவைக்குமிடையே இடைவெளி ஏற் படுகிறது. வளர்ச்சியடையாத நாடுகளில் உணவுப்பொருட் களுக்கான வருவாய்த் தேவை நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும்.

உற்பத்தியைப் பெருக்க அதிக அளவு முதலீடுகள் செய்யப்பட்டாலும், வேளாண்மை உற்பத்தி உயராத காரணத்தில் விலைவுயர்வுகள் ஏற்படுகின்றன. தொழில் நகரங்கள் பெருகி வருகின்றமையாலும், மக்கட் தொகைப் பெருக்க வீதம் அதிகமாக இருக்கின்றமையாலும் உணவின் தேவை அதிகரித்து வருகின்றது. எனினும் திட்ட முதலீட்டுச் செலவுகள் பெருகியமையே விலைவுயர்வைத் தந்தமைக்கு முக்கியக் காரணமாகும். முன்னேற்றத்தின் முதற் சில நிலைகளில் உணவுத் தானியங்களின் தேவை பெருகியதால் விலை அதிகரிப்பு ஏற்பட்டது.

(2) உணவுப் பொருட்களின் விலைகள் மிக உயர்ந்தமையால் மக்களின் வாழ்க்கைச் செலவு அதிகரித்தது. நுகர்வோரும், தாழ்ந்த நிலையிலுள்ள மக்களும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். விலையுயர்வின் அளவிற்கு ஏற்ப அவர்களின் வருவாய் அதிகரிக்கவில்லை.

(3) வேளாண்மைப் பொருட்களின் விலைகள் உயரத் தலைப்பட்டால், அது பொருளாதாரத்தில் 'சுழலும் பணவீக்கத்தை' (Spiral Inflation) ஏற்படுத்திவிடும். உழைப்பாளர்களின் வாழ்க்கைச் செலவுகள் உயர்வதால் அவர்கள் அதிக ஊதியத்திற்காகச் செயல்படுகின்றனர். ஊதிய உயர்வால் பொறிசெய்ப் பொருட்களின் உற்பத்திச் செலவு அதிகரித்து விலை உயர்வு ஏற்படுகின்றது. சில வேளாண்மைப் பொருட்கள் தொழில் உற்பத்திக்குத் தேவையான கச்சாப் பொருட்களாக இருக்கின்றன. அவ்வேளாண்மைப் பொருட்களின் விலைகள் உயர்வடைந்தால், தொழிற் பொருட்களின் உற்பத்திச் செலவும் அதிகரிக்கின்றது. எரிகின்ற நெருப்பில் எண்ணெயை ஊற்றுவது போல வேளாண்மை, தொழிற் பொருட்களின் விலையுயர்வோடு பதுக்குதலும் செய்யப்படுகின்ற நிலை மேலும் அதிக விலையுயர்வுக்கு வழி வகுக்கின்றது. இது 'செலவு-அழுத்தப் பணவீக்கம்' (Cost-push Inflation) எனப்படும். இவ்வகை 'சுழலும் பணவீக்கம்' நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு நன்மை பயக்காது.

(4) உயரும் வேளாண்மைப் பொருட்களின் விலைகள் பெரும்பாலான விவசாயிகளுக்கு நன்மையைத் தராது என்றும் கூறலாம். விவசாயிகளில் அதிகமானவர்கள் சிறு துண்டு நிலங்களிலேயே சாகுபடி செய்கின்றனர். அவர்கள் தங்களின் குறைவான உபரி உற்பத்தியை அறுவடையான உடனேயே குறைந்த விலை நிலவும் போது விற்பனை செய்து விடுகின்றனர். அவர்கள் தொழிற் பொருட்களுக்கு அதிக விலை கொடுக்க வேண்டியுள்ளது. பயிர்ச் சாகுபடியை மேற்கொள்ளும் போது வேளாண்மைப் பொருட்களையும் விதை விதைப்பிற்காக அதிக விலையில் வாங்குகின்றனர்.

(5) உயர்ந்த நிலையில் உள்ள விவசாயிகளே அதிக அளவு விற்பனைக்கான உபரியாகக் கொண்டுள்ளமையால், உயர்வான வருவாயைப் பெறுபவர்கள் அவர்களேயாவர். வேளாண்மைப் பொருட்களின் விலைவுயர்வால் கிடைத்த வருவாயை தங்கம், நகைகள் போன்றவற்றை வாங்குவதில் செலவிடுகின்றனர். அவர்கள் நில விற்பனை, வாங்குதல் போன்ற ஊக வாணிபத்தையும் கைக்கொள்கின்றனர். ஆடம்பர வாழ்வை மேற்கொண்டு 'குறிப்பிடத் தக்க நுகர்வை' மேற் கொள்கின்றனர். உயர்ந்த வருவாய் ஆக்கமற்ற துறைகளில் செலவிடப் படுகின்றது. எனவே, விலைகளின் உயர்வு மூலதனத் திரட்சிக்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும் உதவுவதில்லை.

வேளாண்மைப் பொருட்களின் அதிக விலைவுயர்வைப் போன்றே விலைக்குறைவும் பொருளாதார வளர்ச்சிக்கு நன்மை தருவதில்லை. வேளாண்மை பொருட்களின் விலைகளில் உள்ள நிலையற்ற தன்மையும், அதிக ஏற்றத்தாழ்வுகளும் நீக்கப்படுதல் வேண்டும். உற்பத்திச் செலவின் அதிகரிப்பிற்கேற்ப விலையுயர்வு ஏற்படுவதை அனுமதிக்கலாம். விலைகளின் அதிகரிப்போ, குறைவோ உற்பத்தியாளர்களையோ, நுகர்வோரையோ பாதிக்காமல் அமைய வேண்டும். விலைக் கொள்கையை அரசு அதற்கேற்பச் செயல் படுத்துதல் அவசியமானதாகும்.

**வேளாண்மைப் பொருட்களின் விலைகளை ஒழுங்குபடுத்தும் முறைகள்**

**(1) முழு விலைக்கட்டுப்பாடு**

விலைகளைச் சமநிலைப்படுத்த 'பங்களவு முறையையும்' (Rationing) அரசின் உணவுக் 'கொள்முதல்' (Procurement) முறையையும் பின்பற்றலாம். இம்முறைகள் நம் நாட்டில் 1953-ஆம் ஆண்டிற்கு முன் பின்பற்றப்பட்டன. ஆனால் அவ்வித முழுக்கட்டுப்பாட்டு முறை இப்போது அமைந்துள்ள சூழ்நிலைகளுக்குப் பொருந்தாது. அதற்கான காரணங்களையும் குறிப்பிடலாம்:

(i) முற்றிலும் பங்களவு முறைகளைப் பின்பற்ற அரசு பல நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும். பங்களவு முறைகளில் அளிக்கத் தேவையான பொருட்களைப் பெறுவதில் பல இடர்ப்பாடுகள் அமைந்துள்ளன.

(ii) அரசு வேளாண்மைப் பொருட்களைக் கொள்முதல் செய்வதை விவசாயிகள் விரும்ப மாட்டார்கள். அரசின் கொள் முதல் முறையால் விவசாயிகளுக்கு நன்மை கிடைத்தாலும், கட்டாய முறைகளை அவர்கள் விரும்புவதில்லை. உற்பத்தி பாதிக்கப் பட்டு, விற்பனை உபரியின் அளவும் குறைந்துவிடும்.

(iii) கறுப்புச் சந்தையும் அதைச் சார்ந்த தீய விளைவுகளும் ஏற்படும்.

(iv) இத்திட்டத்தின் மூலம் அரசின் செலவு அதிகரிக்கும்.

(v) மக்கள் விலைக்கட்டுப்பாடுகள், பங்களவு முறைகள், கொள்முதல் முறைகள் எவற்றையும் விரும்புவதில்லை.

(vi) திறமையான, நேர்மையான நிர்வாக அமைப்பு ஏற்படுவது கடினமானதாகையால் முழுக்கட்டுப்பாடுகளின் கொள்கையைச் செயல் படுத்துவது முடியாததாகின்றது.

*(2)* கையிருப்பு முறைகள் (Buffer Stock Operations)

இவ்வகைக் கையிருப்பு முறைகளைப் பற்றி விளக்கும் போது, 'அசோக மேத்தா உணவுத் தானியங்கள் விசாரணைக்குழு' (The Ashok Mehta Foodgrains Enquiry Committee)குறிப்பிட்டதாவது:

"எளிய முக்கிய நோக்கத்தைக் கொண்டதாக கையிருப்பு முறைகள் உள்ளன. குறிப்பிட்ட பகுதியில் விலைகள் குறைவடையத் தொடங்கும்போது 'கையிருப்பு அமைப்புகள்' நியாயமான விலைகளில் அப்பொருட்களை வாங்கத் துவங்க வேண்டும். அது போன்றே விலைகள் உயர்வடையத் தொடங்கும் போது, இவ்வமைப்பு நியாயமான விலைகளில் பொருட்களை விற்பனை செய்ய வேண்டும். இந்த அமைப்பு விற்பனை விலை, வாங்கும் விலை இரண்டையும் மாறுபடுகின்ற சூழ்நிலைகளுக்கு ஏற்ப நிர்ணயம் செய்து கொள்ள வேண்டும்."

வழிக்காட்டும் கொள்கைகள்

கையிருப்பு அமைப்பு முறைகளில் முக்கியமாக மூன்று கருத்துக்கள் ஆராயப்படுதல் அவசியமானதாகும்.

(i) உணவுப் பொருட்களின் விலை மீது செல்வாக்குள்ள முறைகளைக் கையிருப்பு அமைப்பு பின்பற்ற வேண்டும். சரியான நேரத்தில் நடவடிக்கை எடுக்கப்படுதல் இதற்கு இன்றியமையாதது. 'வெளி அங்காடி நடவடிக்கை' (Open Market Operation) மூலம் பற்றுக்குறை இடங்களில் நிலவும் விலையுயர்வைத் தடுக்கலாம். பொருட்கள் கிடைக்காத இடங்களில் விற்பனையை இவ்வமைப்பு மேற்கொள்ளுதல் அவசியம். வடக்கு பீஹாரிலும், கிழக்கு உத்தரப் பிரதேசத்திலும், ராஜஸ்தானின் சில பகுதிகளிலும் இந்நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன. இப்பகுதிகளில் உற்பத்தி சிறிதளவு குறைந்தாலும் ஊக வாணிபத்தாலும், பதுக்குதலாலும் அதிக விலை உயர்வு ஏற்படுகின்றது.

நாட்டின் பிற பகுதிகளைவிட இப்பகுதிகளின் விலை உயர்வாகவே இருக்கும். சரியான சமயத்தில் கையிருப்பு அமைப்பு முறையைப் பின்பற்றி விலையைக் குறைக்காவிட்டால், விலைவுயர்வு பிற பகுதிகளுக்கும் பரவிவிடும். பல கோடிக்கணக்கான ரூபாய் முதலீடு செய்து மேற் கொள்ளப்பட்ட திட்டங்கள் விலையுயர்வால் பாதிக்கப்படும்.

(ii) கையிருப்பு அமைப்பு முறைகளைத் திட்டமிட்டுச் செயல்படுத்த வேண்டும். அதன் மூலம் நிலவுகின்ற விலை உற்பத்தியாளருக்கு உற்பத்தியைப் பெருக்கும் ஊக்கத்தை அளிக்க வேண்டும். மேலும், அவ்விலை நுகர்வோரின் நலனைப் பாதிக்காத வகையிலும் அமைதல் தேவையானது. செலவுநிலைக்கு ஏற்ப பொருட்களின் விலைகள் அமைதல் அவசியம். இதற்காக விலை சிறிது அதிகரிப்பதையும் அனுமதிக்கலாம். இது உற்பத்திக்கு ஊக்கத்தைத் தந்து விற்பனை உபரி பெருகும். உணவுப் பற்றுக் குறை காலங்களில் விலைவுயர்வு ஏற்படும்போது சேமிப்பில் உள்ள கையிருப்பை விற்பனை செய்ய வேண்டும். விலைக் கொள்கையின் நோக்கம் பாதிக்கப்படாமல், உற்பத்தியாளரின் ஊக்கமும் குறையாத வகையில் விலை நிர்ணயிக்கப்படல் வேண்டும்.

உணவு உற்பத்தி பெருகி, சில காலங்களில் கையிருப்பைப் பகிர்வது தேவையில்லாத ஒன்றாகவிடும். இம்முறையில் உள்ள முக்கிய நன்மை உணவுத் தானியங்களை அரசு சேமித்து வைத்துள்ள நிலையாகும். இதனால் உற்பத்தியாளர்கள், ஊக வணிகர்களின் பதுக்குதல் நடவடிக்கைகள் தடுக்கப்படுகின்றன. அரசு உணவுத் தானியங்களின் சேமிப்பைக் கொண்டுள்ளதை அறிந்தால் விற்பனையாளர்கள் அதிக அளவு விலைவுயர்வைச் செய்யமாட்டார்கள்; மக்களும் உணவுத் தானிய இருப்பு இருக்கிறதென்ற மன நிறைவோடு இருப்பார்கள்.

(iii) குறைந்த அளவு விலை விவசாயிக்கு உறுதி செய்யப்பட வேண்டும். குறைந்த அளவு விலையை நிர்ணயம் செய்யும்போது விவசாயினுடைய வருவாய், உற்பத்திச் செலவுகள் போன்றவற்றைக் கருத்திற் கொள்ள வேண்டும். உற்பத்திச் செலவைக் கணக்கிடும்போது உரங்கள், கருவிகள், விதைகள் போன்றவற்றிற்கான செலவுகளையும் கருத வேண்டும். அதைப்போன்றே துணிகள், மண்ணெண்ணெய், உணவுத்தானியங்கள் போன்ற விவசாயினுடைய நுகர்விற்கான செலவும் கணக்கிடப்பட வேண்டும். கையிருப்பு அமைப்பு முறையைப் பின்பற்றி குறைந்த பட்ச விலையானது அரசால் உறுதிசெய்யப்பட்டால், விலைகளின் ஏற்றத் தாழ்வுகளைப் பற்றி கருதாமல் விவசாயிகள் ஊக்கத்தோடு உற்பத்தியைப் பெருக்க விழைவார்கள்.

கையிருப்பு அமைப்பு முறைகளை மேற்கொள்வதில் சில இடர்ப்பாடுகளும் அமைந்துள்ளன :

(i) உணவுத்தானியங்களை வாங்கிச் சேமித்து கையிருப்பாக வைத்துக் கொள்ள அதிக நிதியை அரசு பெற்றிருக்க வேண்டும். பல்வேறு காரணங்களால் அதிக நிதி வசதியைப் பெறுவது மிகக் கடினமாகிறது.

(ii) உணவுத்தானியங்களைச் சேமித்து வைக்கும் கிடங்குகளை அமைப்பது பல தடைகளைத் தருகின்றது. சுமார் 2 மில்லியன் டன்களுக்கு மேலாக இருப்பு வைத்துக் கொள்ளத்தக்க கிடங்கு வசதி நம் நாட்டில் இல்லை.

(iii) இத்திட்டத்தை அமைத்து நிர்வகிக்கத் திறமையான நிர்வாகிகளைப் பெறுவது கடினம்.

(iv) இம்முறை குறிப்பிட்ட உயர்ந்த அளவு, தாழ்ந்த அளவு விலைகளுக்கிடையே வாங்குதல், விற்றல் போன்றவற்றைச் செய்கின்றது. இவ்வாறு உயர்ந்த அளவு, தாழ்ந்த அளவு விலைகளை நிர்ணயிப்பதிலும் பல சிக்கல்கள் உள்ளன.

இவ்விதச் சிக்கல்களைத் தீர்த்தால்தான், விலைகளில் ஏற்படக் கூடிய அதிக அளவு ஏற்றத்தாழ்வுகளை நீக்கி சமநிலை விலையைப் பெற முடியும்.

## இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்திற்கான விலைக்கொள்கை

நம் நாட்டின் சமீப கால விலையுயர்வுகளுக்கான காரணங்களில் மிக முக்கியமான மூன்றைக் குறிப்பிடலாம் :

(i) அரசின் நேரடி உற்பத்திக்கு உதவாத செலவினங்கள் ;

(ii) கணக்கில் வராதபணம் (Unaccounted Money) ;

(iii) செலவு அழுத்தப் பண வீக்கம் (Cost-push Inflation).

மிக அதிக விலையுயர்வு பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்து விடும் என உறுதியாகக் கூறலாம். விலைக்குறைவும் முன்னேற்றத்தைத் தடுத்து விடும். எனினும், இந்தியாவில் இப்போது அதிக விலையுயர்வுகளே ஏற்பட்டிருப்பதால், விலைக் கட்டுப்பாடுகளை மேற்கொள்ளுதல் அவசியமானதாகும். நம்முடைய நோக்கம் பொருளாதார முன்னேற்றத்தை உறுதியோடு பெறுவதாகும். இதைப் பெற விலைகளின் ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்ப உரிய காலங்களில் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

மூன்ருவது திட்ட அறிக்கை (The Third Plan Report) வேளாண்மை, தொழில் துறைகளில் நம் நாட்டில் பெருகியுள்ள உற்பத்தித் திறனைக் குறிப்பிட்டது. மூன்ருவது திட்டத்தை நிறைவேற்றத் தேவையான நிதியைப் பெற 'பற்ருக்குறை நிதியாக்கத்தைக்' குறைந்த அளவிலேயே பின்பற்றுதல் அவசியமானது ; விலைகளின் உயர்வைத் தடுப்பதும் இன்றியமையாதது என அவ்வறிக்கையில் சொல்லப்பட்டது.

முதலாவதாக, வேளாண்மை முன்னேற்றத்திற்கு மிக அவசியமான பருவமழையில் உறுதியின்மையே நிலவுகின்றது.

இரண்டாவதாக, திட்டங்களில் நுகர்வைக் கட்டுப்படுத்த மேற்கொள்ளப்பட்ட முறைகள் வெற்றி பெறவில்லை.

மூன்ருவதாக, முன்னேற்றத் திட்டங்களில் சமநிலை வளர்ச்சியைப் பெறக் கருதப்பட்டது. ஆனுல், பல காலங்களில் உறுதியற்ற சமநிலையில்லாத வளர்ச்சியே ஏற்பட்டது.

இக்காரணங்களால் விலை நிலைகளை நன்கு ஆராய்ந்து, அதற்கேற்ப சரியான விலைக்கொள்கையை அரசு பின்பற்றுவது விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுமெனலாம்.

விலைக்கொள்கை என்பது பணக்கொள்கையையும், நிதிக் கொள்கையையும் பயன்படுத்தி விலையைக் கட்டுப்படுத்தும் முறையாகும்.

நிதிக்கொள்கை 'தேவை-இழுப்புப் பணவீக்கத்தை' (Demand-pull Inflation) நீக்க வேண்டும். இதற்கு அரசின் நிதிக்கொள்கை மக்களிடமுள்ள அதிக அளவு வாங்கும் திறனைத் திரட்டவேண்டும். சிறப்பான வரி விதிப்பு முறை இவ்வகையில் உதவும். சேமிப்புச் செய்வதில் பொதுத்துறை நிறுவனங்களும் பங்கேற்க வேண்டும். இலாபத்தை அதிகம் பெறத்தக்க நிலையில் அவை உற்பத்தியைச் செய்தல் அவசியம். உற்பத்தித்திறனேடு தரமும் அந்நிறுவனங்களில் அமைந்திருத்தல் வேண்டும்.

பணக்கொள்கை நிதிக்கொள்கையோடு பின்பற்றப்பட வேண்டிய ஒன்று. வங்கிகளின் 'கடன் உற்பத்தியை' (Credit Creation) ஒழுங்குபடுத்த பணக்கொள்கை உதவும். உள்நாட்டுப் பற்ருக்குறை நிலைகளைத் தவிர்க்க 'வாணிபக்கொள்கையும்' (Commercial Policy) பின்பற்றப்பட வேண்டும். தேவையான விளைவுகளைப் பொருளாதாரத்தில் பெற பண, நிதிக் கொள்கைகள் அரசால் சிறப்பாகச் செயல் படுத்தப்படுதல் இன்றியமையாததாகும்.

சில துறைகளில் அரசின் நேரடிக் கட்டுப்பாடுகள் அவசிய மானவைகளாக உள்ளன. பலவித பண்டங்களின் விலைகளுக் கிடையே தொடர்பு அமைந்திருத்தல் அவசியமானது. அவ்விலைகள் குறைந்த, நிரந்தர வருவாய் பெறுபவர்களைப் பாதிக்காத வகை யிலும் நிலவ வேண்டும்.

அவசியத் தேவைப் பொருட்களின் விலையுயர்வைத் தடுத்தல் வேண்டும். ஆனால் வசதிப் பொருட்கள் மற்றும் ஆடம்பரப் பொருட்களின் விலையுயர்வை ஓரளவு அனுமதிக்கலாம்.

விலைகளின்மீது அரசு கட்டுப்பாட்டைக் கொண்டிருக்க, பற்றாக் குறை நிதி முறையை குறைந்த அளவில் பயன்படுத்த வேண்டும். திட்டமற்ற செலவுகளையும், உற்பத்திக்கு உதவாத செலவு களும் குறைத்தல் அவசியமானது. அவசியப் பண்டங்களின் மீது அதிக வரிவிதிப்பு செய்வது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. குறைந்த வருவாய் பெறுபவர்களின் நலன் பாதிக்கப்படாத வகை யில் வரி விதிப்பு முறை அமைய வேண்டும். மத்திய, மாநில அரசு களின் வரவு-செலவுத் திட்டங்கள் இவற்றைக் கருத்திற் கொண்டு தீட்டப்படுதல் நன்மை தருவதாகும்.

வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் பொருத்தமான விலைக்கொள்கை இரு நோக்கங்களைக் கொண்டுள்ளது. அவை யாவன :

(i) சிறப்பான பொருளாதார வளர்ச்சியைப் பெறுவது ;

(ii) விலைகளை ஒழுங்குபடுத்துதல்.

இந்நோக்கங்களைக் கொண்ட விலைக்கொள்கை பின் வரும் நிலை களை ஆராய்ந்து அதற்கேற்ப செயல்படுத்தப்பட வேண்டும்.

(1) விலைநிலைகளில் உள்ள மிக அதிக அளவு ஏற்றத்தாழ்வு களை நீக்கி விலைகளைச் சமநிலைப்படுத்த வேண்டும்.

(2) வளங்களைத் திரட்டி பொருளாதார வளர்ச்சிக்குப் பயன் படுத்துதல் வேண்டும்.

(3) இயற்கை வளங்களின் பயன் பெற வேண்டிய ஒன்றாகும். பல வகை முதலீடுகளும் உற்பத்தியை உயர்விக்கும் வகையில் இருத்தல் இன்றியமையாதது.

(4) விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற, உற்பத்தியை அதிகரிக்கத் தூண்டும் ஊக்கமானது உற்பத்தியாளர் களுக்கு அளிக்க வேண்டும்.

(5) குறைந்த வருவாய் பெறும் தாழ்ந்த நிலையில் உள்ள மக்களின் நலன் பாதிக்கப் படாத வகையில் விலைக்கொள்கை அரசினால் பின்பற்றப்படுதல் நல்லது.

தீவிர நடவடிக்கைகள் உரிய காலத்தில் எடுக்கப்படாவிடில், பெருகும் முதலீடுகளால் வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் விலையுயர்வு மிக அதிக அளவில் அமைந்திருக்கும். விலையுயர்வைத் தடுக்க,

(i) பொருத்தமான நிதிக்கொள்கை ;

(ii) சரியான வருவாய்க் கொள்கை ;

(iii) சரியான விலைக் கொள்கை ஆகிய யாவும் அரசினால் சிறப்பாகச் செயல்படுத்தப்பட வேண்டும்.

பொருத்தமான நிதிக்கொள்கை அரசின் செலவைக் குறைத்து அதிக வருவாயைத் தர வேண்டும். சரியான வருவாய்க் கொள்கை செல்வமும், வருவாயும் ஒரு சிலரிடம் குவிந்திருத்தலைத் தடுத்தல் வேண்டும். சரியான வட்டிவீதக் கொள்கை சேமிப்பையும், முதலீட்டையும் அதிகரிக்க வேண்டும். விலைக் கொள்கையைப் பின்பற்றும் போது கீழ்க்கண்ட அடிப்படை நிலைகள் ஆராயப்பட்டு, அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுக்கப்படுதல் இன்றியமையாதது.

(1) குறைந்த அளவு நுகர்பொருட்களின் அளிப்பே இருப்பதால் நுகர்வோருடைய செலவு கட்டுப்படுத்தப்பட வேண்டும். அவர்களின் நுகர்பொருட்களுக்கான தேவையைக் குறைத்தல் அவசியம்.

(2) உணவுத் தானியங்களின் விலைகள் உற்பத்தியாளர்களுக்கு ஊக்கத்தைத் தரவேண்டும். நுகர்வோரும் நியாய விலைகளில் பொருட்களைப் பெறுதல் வேண்டும்.

(3) தேவையான துறைகளில் முன்னேற்றத்தைப் பெற விலைக் கொள்கை உதவுதல் இன்றியமையாதது. விலைகளின் நிலைகள் உற்பத்திக்கு உதவும் துறைகளில் முதலீடு செய்யத் தூண்டும் வகையில் அமைதல் வேண்டும்.

(4) கணக்கில் வராத கறுப்புப்பணத்தை வெளிக் கொண்டு வரும் நிலையில் விலைகளை அமைத்தல் நலம் தருவதாகும்.

(5) உணவுப்பொருட்களின் நுகர்விற்காக வாங்குதல் விற்றல், உணவு உற்பத்தி, பகிர்வு போன்றவை சிறப்பாகச் செய்யப்படுதல் வேண்டும். அவற்றைச் சிறப்பாகச் செய்ய உதவும் வகையில் விலைக் கொள்கை அமைதல் நலம்.

(6) பன்னாட்டு விலைகளின் அளவிற்கும் உள்நாட்டு அளவிற்கும் வேறுபாடுகளைத் தவிர்க்க வேண்டும்.

(7) உணவுத் தானியங்களின் விலைகளைக் கட்டுப்படுத்த தனி நடவடிக்கைகள் எடுக்கப்படுதல் அவசியம். அதைப்போன்றே அதிக அளவு நுகரப் படுகின்ற பொறிசெய்ப் பொருட்கள், தொழில் கச்சாப் பொருட்கள் ஆகியவற்றின் விலைகளும் கட்டுப்படுத்தப் படுதல் வேண்டும்.

(8) இவையாவற்றையும் விட பொதுவான விலையில் அதிக உயர்வு ஏற்படுவது தடுக்கப்படுதல் இன்றியமையாதது.

பணவீக்க நிலையானது 1966-67-இல் 'தாவும் பணவீக்கம்' (Galloping Inflation) என்று கருதத்தக்க அளவிலும், 1967-68-இல் 'ஓடும் பணவீக்கம்' (Running Inflation) என்று சொல்லத்தக்க அளவிலும் அமைந்திருந்தது. இவ்வகைப் பணவீக்க நிலைகள் அரசின் உறுதியையும் குலைத்துவிடுபவைகளாகும். பணக்கொள்கை, நிதிக்கொள்கை, கூலிக்கொள்கை, இலாபக்கொள்கை, விலைக் கொள்கை ஆகிய எல்லாக் கொள்கைகளும் அரசால் பின்பற்றப்பட வேண்டும். பொருளாதார வளர்ச்சி வீதத்தை விரைவு படுத்து வதே விலைக்கொள்கையில் தலையாய நோக்காகும். விலைக்கொள்கை பொருளாதார வளர்ச்சி, சமத்துவம், சமுதாய நீதி ஆகிய யாவற்றையும் பெறுமாறு அரசினால் செயல் படுத்தப்பட வேண்டும்.

# 17. பொருளாதார முன்னேற்றத்தின் கருவியாக பற்றுக்குறை நிதியாக்கம்

## (Deficit Financing as an Instrument of Economic Development)

### I. விளக்கம்

பொது வரி வருவாயை விட பொதுச் செலவை அரசு அதிகம் மேற்கொள்கின்ற நிலையை 'பற்றுக்குறை நிதியாக்கம்' எனலாம். புதிதாகத் தோற்றுவித்த பணத்தின் மூலமாக பற்றுக்குறை நிதியாக்கத்தை மேற்கொள்ளலாம். வளர்ச்சியடையாத நாடுகளில் பற்றுக்குறை நிதியாக்கம் பல வகைகளில் மேற்கொள்ளப் படுகின்றது. எனினும், இந்நாடுகளில் பொதுமக்களிடமிருந்து அரசு பெற்ற கடன் பற்றுக்குறை நிதியாக்கத்தில் அடங்காது. மக்களிடம் தாங்களே சேமிக்கும் வழக்கம் அமைந்திருப்பதில்லை. அதற்குக் காரணம் மக்களின் மிகக் குறைந்த வருவாயும், அவர்களின் அதிக நுகரும் விருப்பமும் ஆகும். மக்கள் தாங்களே சேமிக்கும் மூலதனத்தை மட்டும் முதலீட்டிற்குப் பயன்படுத்தினால் உண்மை வருவாய் வளர்ச்சி தடைப்படும். பற்றுக்குறை நிதியாக்கம் இக் குறையைத் தவிர்த்து, மக்களிடமிருந்து கட்டாயச் சேமிப்பைத் தருகின்றது. தவிர, அரசின் வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக் குறை ஏற்பட்டு, அதை பொது மக்களிடமிருந்து கடன்பெற்று சரி செய்தால் அதைப் பற்றுக்குறை நிதியாக்கம் எனக் கொள்ளக் கூடாது. ஏனெனில், அமைந்திருக்கின்ற வசதிகளே மூலதனத் திரட்சிக்குப் பெறப்படுகின்றன. வேறு வார்த்தைகளில் கூறினால், மக்களிடம் உள்ள சேமிப்பையே பற்றுக்குறையைச் சரிசெய்ய பொதுக்கடனாக அரசு பெறுவதால், அதைப் பற்றுக்குறை நிதியாக் கம் எனக் கருதக்கூடாது என்ற கருத்து நிலவி வருகின்றது. பற்றுக் குறை நிதியாக்கத்தின் மூலம் அரசின் வருவாயைக் காட்டிலும் அரசின் செலவு அதிகமாக இருக்கின்றது.

தற்கால வளர்ந்துவரும் நாடுகளில் அரசுகளின் வரவுகளும் செலவுகளும் சமமாக இருப்பதில்லை; வரவுகளைவிட செலவுகள் மிகுந்தே இருக்கின்றன. பொதுநிதிக்கொள்கையில் வரவுக்கு

அதிகமாக இருக்கும் செலவைப் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் சரிசெய்கின்ற நிலை நிலவுகின்றது.

பின் தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு பற்றுக்குறை நிதிமுறை தவிர்க்க முடியாதது என்பதற்கான காரணங்கள் சிலவற்றைக் கூறலாம்:

(1) வளர்ச்சியடையாத நாடுகளில் பயன்படுத்தப்படாத இயற்கைவளங்கள் அமைந்துள்ளன. அவற்றைப் பயன்படுத்தித் தலா வருவாயை அதிகரிக்க பற்றுக்குறை நிதிமுறை உதவும்.

(2) இந்நாடுகளில் உற்பத்தித்திறனை உயர்த்த உதவும் ஒரே வழி தேசிய வருவாயில் 15 முதல் 20 சதவீத பெரிய அளவு முதலீட்டை மேற்கொள்வதாகும்.

(3) குறைந்த நுகர்வின் அளவு இருப்பினும், சேமிக்கும் திறனும் தேசிய வருவாயில் 5 சதவீதத்திற்கும் குறைவாக உள்ளது.

(4) அதிக முதலீடுகள் செய்யப்படாவிடில் வளர்ச்சியடையாத நாடுகள் வறுமையிலேயே வாட வேண்டும். பொளருாதார முன்னேற்றத்தைப் பெற சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்துதல் அவசியமாகும்.

(5) மேம்பாடடைந்துவரும் நாடுகளில் சிறிய அளவு முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான நிதி வசதியைக்கூட அதிக வரி விதிப்பாலும், உள்நாட்டுக் கடன், வெளிநாட்டுக் கடன் ஆகியவற்றாலும் பெற இயலுவதில்லை.

(6) அரசின் வருவாய்க்கும் செலவிற்கும் இடையே ஏற்படும் இடைவெளியைக் காகிதப்பணத்தை அச்சிட்டு புழக்கத்திற்குப் பயன் படுத்தி சரிசெய்யலாம். இம்முறையைப் பொருளியலறிஞர் கீன்ஸ் (Keynes) முன்னேற்றத் திட்டங்களுக்கு உதவும் ஒரு முக்கிய நிதி முறையாகக் கருதுகின்றார்.

(7) 'புதிதாக உருவாக்கப்பட்ட பணம்' உடனடியாகப் பலனளிக்கக்கூடிய வேளாண்மை மற்றும் குடிசைத் தொழில்களில் முதலீடு செய்யப்பட்டால் முன்னேற்றத்திற்குப் பற்றுக்குறை நிதி முறை பெரிதும் உதவும்.

(8) பற்றுக்குறை நிதியாக்கம் தவிர்க்க முடியாதது. ஏனெனில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதும் வளர்ச்சியடையாத நாடுகளில் தவிர்க்க முடியாததாகும். ஆனால் பிறவகை நிதிக பொருளாதார வளர்ச்சிக்குப் போதுமான அளவில் கிடைக்கா

காரணத்தால், பற்றுக்குறை நிதிமுறையைப் பின்பற்றவேண்டியது அவசியமாகின்றது.

பொருளாதார முன்னேற்றத்திற்கான மிக முக்கியமான நிதியைப் பெறும் முறைகளில் பற்றுக்குறை நிதியாக்கமும் ஒன்றாகும். பற்றுக்குறை நிதியாக்கம் என்பது குறிப்பிட்ட காலத்தில் அரசின் மொத்த வருவாய்க்கு அதிகமாக மொத்தச் செலவு இருக்கின்றபோது 'புதிதாக உருவாக்கப்படும் பணத்தின்' (Created Money) மூல்மாகப் பற்றுக்குறையைச் சரிசெய்வதைக் குறிக்கின்றது. பொதுவாக, பற்றுக்குறை நிதியாக்கம் என்பது பொதுநிதியில் ஏற்படும் பற்றுக்குறையைக் கடந்த காலச் சேமிப்பு, கடன், புதிய பணம் ஆகியவற்றின் மூலம் சரி செய்வதைக் குறிப்பதாகும்.

அரசு வரிகள் மூலமாகவும், மற்ற வருவாய்களின் மூலமாகவும் தன் செலவினங்களை மேற்கொள்கின்றது. போர்க்காலங்களிலும், விரைவான பொருளாதார வளர்ச்சி கருதி மேற்கொள்ளப் படுகின்ற திட்ட காலங்களிலும் அரசின் செலவுகள் கூடுகின்றன. போர்க் காலங்களில் பாதுகாப்புச் செலவுகள் ஏற்படுகின்றன. திட்ட காலங்களில் வரிவிதிப்பின் மூலமும், கடன்களின் மூலமும் தேவையான நிதியைப் பெற முடியாத காரணத்தால், பற்றுக் குறை நிதியாக்கம் ஏற்கப்படுகின்றது. இம்முறையால் பண வீக்கம் ஏற்பட்டு விலை உயர்வுகள் தோன்றுகின்றன. அதிக அளவு பணத்தின் அளிப்பே இதற்குக் காரணம். அரசு இப்பண வீக்கநிலை ஏற்படாமல் 'புதிதாக உருவாக்கப்பட்ட பணம்' உற்பத்தியை உயர்விக்கும் வகையில் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்ற வேண்டும்:

அரசு புதிதாக உருவாக்கும் பணத்தைத்தவிர, மத்திய வங்கி யிடமிருந்தும் கடன் பெற்று பற்றுக்குறை நிதி நிலையைச் சரி செய்யலாம். பற்றுக்குறை நிதியைக் கீழ்க்கண்ட முறைகளில் ஒன்றின் மூலமோ அல்லது அதற்கு மேற்பட்டவைகளாலோ பெறலாம்:

(1) பணமிகுதியைத் திரும்பப் பெறுதல் (Withdrawal of Cash-balances) ;

(2) மத்திய வங்கியிடமிருந்து கடன் பெறுதல் (Borrowing from the Central Bank) ;

(3) வணிக வங்கிகளிடமிருந்து கடன் பெறுதல் (Borrowing from the Commercial Banks) ;

(4) நோட்டடிப்பு முறையைக் கைக்கொண்டு புதிய பணத்தை உருவாக்குவது (Creating New Money by Resorting to the Printing Press). பற்றுக்குறை நிதியாக்கத்தின் நோக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்காக அதிக பண அளிப்பைப் பெறுவதாகும்.

II. பற்றுக்குறை நிதியாக்கத்தின் முக்கியத்துவம் (Importance of Deficit Financing)

(1) வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கான மிகப் பயனுள்ள முறை பற்றுக்குறை நிதியாக்கம் ஆகும். சமுதாய, பொருளாதார அமைப்புக் காரணிகளால் வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் தனியார் முதலீடு குறைந்த அளவிலேயே அமைந்திருக்கும். அதிக அளவு நிகர முதலீட்டு வீதத்தைத் திரட்டுவது அரசின் கடமையாகும். பொது முதலீட்டிற்கான நிதிவசதிகள் போதுமான அளவில் கிடைக்காததால், பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்றுவது அவசியமாகின்றது.

(2) பொருளாதார, சமுதாய அவசியத் தேவைகளின் நிர்மாணங்களில் பற்றுக்குறை நிதியாக்கம் பின்பற்றப்படலாம். சாலைகள் இருப்புப்பாதைகள், இயக்க சக்தி திட்டங்கள், பள்ளிகள், மருத்துவமனைகள் போன்றவை அமைக்கப்பட வேண்டும். சமுதாயத்திற்குப் பயன்படும் மூலதனம் அமைப்பு முறையில் உள்ள கடின நிலைகளை நீக்குகின்றது. இதனால் உற்பத்தியின் அளவும் உயர்வடையும். இதைத்தவிர, வளர்ச்சியடையாத நாடுகளின் வரிவிதிப்பு முறைகள் திறம்படச் செயல்படமாட்டா. மூலதனத் திரட்சிக்குத் தேவையான சேமிப்பும் அங்கு ஏற்படுவதில்லை. பற்றுக்குறை நிதியாக்கம் பணவருவாயைத் தருவதால், சமுதாயத்தின் சேமிப்பு அதிகரிக்கின்றது. கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்தும் முக்கிய கருவியாக பற்றுக்குறை நிதியாக்கம் அமைகின்றது.

(3) பற்றுக்குறை நிதியாக்கம் கடன் பெருக்கத்தைத் தருவதால் விலைகள் அதிகரிக்கின்றன. விலைகளின் உயர்வால் பணம் மதிப்பை இழக்கின்றது. அதனால் கட்டாயச் சேமிப்பும் ஏற்படுகின்றது. பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பணவீக்க நிதியாக்கமெனலாம். கட்டுப்படுத்தப்பட்ட வழியில் மிகவும் பயனளிக்கக் கூடிய நிலையைப் பற்றுக்குறை நிதியாக்கம் வளர்ச்சியடையாத நாடுகளில் கொண்டுள்ளது. மேலும், அம்முறையை மட்டுமே அதிக அளவிற்குப் பயன்படுத்துதல் தவிர்க்க முடியாததாகின்றது. வேறு வழிகளில் அரசின் வருவாயைப் பெருக்குவது கடினமானது. பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) கருதுவதாவது, மூலதனத்

திரட்சிக்கான பணவீக்கம் காலப்போக்கில் தன்னைத் தானே அழித்துக் கொள்ளும் நிலையைக் கொண்டது. அது மூன்று நிலைகளைக் கொண்டுள்ளது :

"முதல் நிலையில், பணவீக்கத்தால் விலை உயர்வுகள் ஏற்பட்டு வருவாய் மறுப்பகிர்வு ஏற்படும்.

இரண்டாவது நிலையில், தனியார் சேமிப்புகள் அதிகரித்து முதலீடுகள் செய்யப்படுகின்றன.

மூன்றாவது நிலையில், விலைகள் குறைவடைகின்றன. இதற்குக் காரணம் மூலதனத் திரட்சி ஏற்பட்டு, நுகர்வுப் பொருட்களின் உற்பத்தி உயர்வடைந்து அவை அதிக அளவிற்குச் சந்தைக்குச் செல்வதாகும்.

இம் மூன்று நிலைகளிலும், முதல் நிலையே கடினமானதாகும்." [1]

(4) பற்றுக்குறை நிதியாக்கம் தொழில் முயல்வோரின் வருவாயை அதிகரிக்கின்றது. அவர்கள் அதிக சேமிக்கும் விருப்பத்தைக் (Propensity to Save) கொண்டவர்கள். பணவீக்கக் காலங்களில் ஊதியங்களும், இதர 'மாறுத செலவுகளும்' (Fixed Costs) விலையுயர்வின் அளவைப் போன்று அதிகரிப்பதில்லை. இதனால் அதிக இலாபம் பெறப்பட்டு அதிக மூலதனத் திரட்சிக்கும் முதலீட்டிற்கும் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் அதே சமயத்தில், பணவீக்கம் 'மாறுத வருவாய் பெறுபவர்களின்' (Fixed Incomists) உண்மை வருவாயைக் குறைப்பதால், அவர்களின் சேமிக்கும் விருப்பமும் குறைகிறது. இப்பிரிவு மக்களின் சேமிக்கும் விருப்பத்தின் குறைவு, பிற பிரிவு மக்களின் அதிகரித்த சேமிக்கும் விருப்பத்தால் எளிதில் ஈடு செய்யப்படுகிறது. "பணவீக்கத்தால் உண்மை வருவாய் மறுப்பகிர்வு செய்யப்படுகின்ற நிலை, சராசரி சேமிக்கும் விருப்பத்தை அதிகரித்து உற்பத்தித் திறனின் வளர்ச்சி வீதத்தைப் பொருளாதாரத்தின் எல்லா நிலைகளிலும் உயர்வு படுத்தும்." [2] இறுதிநிலைச் சேமிக்கும் விருப்பத்தில் வேறுபாடுகள் இருப்பினும், பற்றுக்குறை நிதியாக்கத்தைக் கைக்கொள்வதால் சேமிப்பு வீதம் அதிகரித்து அதிக அளவு மூலதனத்திரட்சி பெறப்படுகின்றது.

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, p. 405.

[2] K Kurihara, The Keynesian Theory of Economic Development, p. 150.

(5) பற்றுக்குறை நிதியாக்கம் பணக்கொள்கையோடும், நிதிக் கொள்கையோடும் நெருங்கிய தொடர்பைக் கொண்டதாகும். இம்முறையே பணக்கொள்கையாகவும், நிதிக்கொள்கையாகவும் செயல்படுகின்றது எனலாம். பணவீக்க நிலை இருக்கும்பொழுது வரிவிதிப்பின் மூலம் கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்தி ஒரு நிதி முறையாக பற்றுக்குறை நிதியாக்கம் அமைகிறது. பற்றுக்குறை வரவு - செலவுத் திட்டத்தில் புதிய பணம் உருவாக்கப்படும் முறை பணக்கொள்கையாகிறது.

(6) பற்றுக்குறை நிதியாக்கம் எப்போதும் விரிவாக்க விளைவுகளைக் கொண்டது. பொருளாதாரம் முன்னேற்றமடையும் போது, முதலீட்டு வீதம் விரைவடைகிறது. முதலீட்டு வீதம் அதிகரிக்கும் போது பணத்தின் அளிப்பும் அதிகமாகத் தேவைப் படுகிறது.

(i) முதலீடு உயரும் போது, உற்பத்திப் பொருட்களின் அளவு முன்பிருந்த நிலையைக் காட்டிலும் அதிகரிப்பதால் பேரங் களுக்கான (Transactions) பணத்தின் அளிப்பு அதிகம் தேவை கொண்டுள்ளது.

(ii) பொருளாதாரம் முன்னேற்றமடையும் போது, பணத்தை அதிகம் பயன்படுத்தாத துறை படிப்படியாக பணத்தை அதிகம் பயன்படுத்தத் தொடங்குகின்றது. இதனாலும் பணத்தின் தேவை அதிகரிக்கின்றது.

(iii) தொடர்ச்சியான பொருளாதார முன்னேற்றம் மக் களுக்கு அதிக வருவாயைத் தருகின்றது. அதிக வருவாய் அதிகப் பொருட்களின் தேவையையும், அதிகப் பணத் தேவைய்யையும் ஏற்படுத்துகின்றது.

(iv) அயல் நாட்டு உதவி உயர்வால் இறக்குமதி உபரி ஏற்பட்டு, அதன் விளைவாலும் பணத்தின் தேவை அளவில் அதிகரிக்கின்றது.

அரசு பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம், எல்லா நிலை களிலும் அதிகரிக்கின்ற பணத்தின் தேவையைப் பெற முடியும். எனவே, பற்றுக்குறை நிதியாக்கக் கொள்கை மூலதனத்திரட்சிக் கான முக்கியக் கருவியாக வளர்ச்சியடையாத நாடுகளில் இருக்கிறது.

## III. பற்றுக்குறை நிதியாக்கமும் பணவீக்கமும்
## (Deficit Financing and Inflation)

பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் பற்றுக்குறை நிதி யாக்கத்தில் நன்மைகள் மட்டுமே உள்ளன எனக் கூறமுடியாது.

அதனால் சில இடர்களும் தோன்றுகின்றன. பற்றுக்குறை நிதியாக்கத்தினால் விளைகின்ற பணவீக்கத்தில் பல இடையூறுகள் இருக்கின்றன. அரசு புதிதாக உருவாக்கிய பணத்தை மூலதனத் திட்டங்களில் முதலீடு செய்கின்றது. இத்திட்டங்களில் ஈடுபட்டுள்ள மக்களின் வருவாய் அதிகரிப்பதால் அவர்களின் நுகரும் விருப்பமும் தீவிரமடைகின்றது. சந்தைகளில் உள்ள குறைபாடுகளாலும், எந்திரச் சாதனங்களை முற்றிலும் பயன்படுத்தாத நிலையாலும் குறைந்த நெகிழ்வுள்ள உணவு அளிப்புக்களாலும் நுகர்வுப் பொருட்களின் அளிப்பு பணப் பெருக்க வீதத்தின் அளவிற்குக் குறைவாக உள்ளது. இக் காரணிகள் நுகர்வுப் பொருட்களின் விலைகளில் உயர்வைத் தருகின்றன. இவ்விலைகளின் உயர்வைக் கட்டுப்படுத்தாவிட்டால், பணவீக்கநிலை பொருளாதாரத்தின் எல்லாப் பிரிவுகளிலும் தோன்றிவிடும். சரியான நேரத்தில் நுகர் பொருட்களின் விலை உயர்வைத் தடுக்க வேண்டும்.

பற்றுக்குறை நிதியாக்கம் விலைகளில் உயர்வைத் தரும் என்பதை மறுக்க இயலாது. ஆனால் எல்லா விலைகளின் உயர்வையும் பணவீக்க நிலையாகக் கொள்ள முடியாது. குறைந்த அளவு விலையுயர்வுகள் படிப்படியாக ஏற்பட்டால் அவை தீமை பயக்க மாட்டா. விலையுயர்வுகள் மிக அதிக அளவில் அமைந்திருந்தால் பல தீமைகளும் பொருளாதாரத்தில் விளையும். பணக்கொள்கை, நிதிக் கொள்கைகளைப் பயன்படுத்தி இவ்விலையுயர்வுகளைத் தடை செய்ய வேண்டும். ஆனால் அதிக அளவு விலையுயர்வுகளை கட்டுப்படுத்துவது கடினமானதாகும்.

எஸ். கே. கோஷ் (S.K.Ghosh) கூறுவதுபோல, "உண்மையான மூலதனத்தைப் பெருக்கவும், தொழில் நுணுக்க உற்பத்தியை முன்னேற்றமடையச் செய்யவும் விலையுயர்வுகள் எந்தப் பொருளாதாரத்திலும் தோன்றலாம். தொடர்ந்து இல்லாத மிதமான விலைகளின் உயர்வு பொருளாதார முன்னேற்றத்தின் போக்கில் நன்மை பயக்கும் விளைவுகளை ஏற்படுத்தும். உதாரணமாக, இந்நிலை நிதியைப் பெறுவதற்கான ஊக்கங்களைக் கொடுக்கும். தனியார் முதலீடும் இதனால் அதிகரிக்கும். பணத்தின் மதிப்பில் குறைவு தொடர்ச்சியாக ஏற்படக்கூடாது."[1]

வளர்ச்சியடையாத நாடுகளில் மிதமான பணவீக்கநிலைகூட பல தீய விளைவுகளைப் பொருளாதாரத்தில் தோற்றுவிக்கக்கூடிய பணவீக்கநிலையாக மாறிவிடுகின்றது. எனவே இந்நாடுகளில் பண

1 S. K. Ghosh, Deficit Financing for Development and Inflationary Pressure, p.2.

வீக்கத்தினால் பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவது குறைந்த அளவிலேயே ஆகும். பொருளாதார வளர்ச்சிக்கு பணவீக்கநிலை அவசியமானதுதான். ஆனால், தேவையான அளவு பணவீக்கத்தை விட அதிக அளவு பணவீக்கநிலையே நிலவுகின்றதால் பல தீய விளைவுகள் ஏற்படுகின்றன.

பேராசிரியர் ஹேபர்லர் (Prof. Haberler) கருதுவதாவது, "ஏழைநாடுகளும், பின்தங்கிய நாடுகளும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தை வளர்ச்சியடைந்த நாடுகளைப் போல பெற வேண்டுமென்ற விருப்பத்தினால் தங்களுடைய வசதிகளுக்கும் மேலாகச் செலவு செய்யத் தூண்டப்படுகின்றன."[1]

அளவுக்கு அதிகமான பற்றாக்குறை நிதியாக்கம் பணவீக்க நிலையையே ஏற்படுத்தும். ஆனால், புதிதாக உருவாக்கப்பட்ட பணம் 'விரைவில் பயனளிக்கக்கூடிய திட்டங்களில்' (Quick-Yielding Projects) முதலீடாக்கப்பட்டால் குறுகிய காலத்திலேயே உற்பத்தி உயரும். இதனால், விலை உயர்வு குறைந்த அளவிற்கே ஏற்படும். அதைபோன்றே நுகர் பொருட்களின் உற்பத்திக்குப் பணம் செலவிடப்பட்டால் பற்றாக்குறை நிதியாக்கம் பணவீக்கத்தைத் தராது. மக்களின் வாங்கும் திறனுக்கு ஏற்றாற்போல் தேவையான நுகர் பொருட்களின் அளிப்பு அமைந்திருக்கும். மாறாக, உருவாக்கப்பட்ட பணத்தை நீண்ட காலத் திட்டங்களுக்குப் பயன்படுத்தினாலும், மூலதனப் பொருட்களை உருவாக்க முயன்றாலும் பணவீக்கம் ஏற்படும். அத்திட்டங்களுக்கு அதிக மூலதனம் தேவைப்படுவதோடு, உற்பத்தியைத் தொடங்குவதற்கும் நீண்ட காலம் பிடிக்கின்றது. உற்பத்தி அதிகரித்த பண அளிப்பிற்குப் பின் தங்கிவிடுகின்றது.

மூலதனத்திரட்சிக்கான பணவீக்கக் கொள்கை வளர்ச்சியடையாத நாடுகளில் வெற்றிபெற, அதிகப்பண வருவாயைப் பெறும் மக்கள் நுகர்பொருட்களின் விலையுயர்வு ஏற்படும்போதும் தொடர்ந்து சேமிக்க வேண்டும். பேராசிரியர் மின்ட் (Prof. Myint) கருதுவதுபோல, வளர்ச்சியடையாத பொருளாதாரங்களில் நுகர் பொருட்கள் மிகவும் பற்றாக்குறை நிலையில் இருப்பதாலும், இறுதி நிலை நுகரும் விருப்பம் சற்றேறக் குறைய ஒன்றிற்குச் சமமாக இருப்பதாலும் பணவீக்கநிலை அதிக நன்மை பயக்காது.

அரசினால் மேற்கொள்ளப்படுகின்ற பற்றாக்குறை நிதியாக்கம் விலைகளின் உயர்வையும், பணவீக்கத்தையும் ஏற்படுத்துவதற்கான

1. Haberler, The Quest for Stablity in Stability and Progress of World Economy, (Ed) D.C. Hague, p. 174.

காரணங்களை டாக்டர் வி.கே.ஆர். வி. ராவ் (Dr V. K.R.V. Rao) விளக்குகின்றார்:

(1) காகிதப் பணப்புழக்கம் விரிவடைவதால் பணத்தின் அளிப்பு அதிகரிப்பதோடு கடனும் பெருகுகின்றது.

(2) பண்டங்களும் பணிகளும் குறைந்த அளிப்புகளையே கொண்டுள்ளமையால் பணவீக்கநிலை ஏற்படுகின்றது. அதிகரித்த பணவருவாயைத் திரட்டுவதும் கடினமாகின்றது.

(3) அரசின் அதிகச் செலவின் மூலம் பெறப்பட்ட மக்களின் அதிக வருவாய் அரசினால் திரட்டப்படுவதில் சில சிக்கல்கள் உள்ளன. அரசு விற்கக்கூடிய கடன் பத்திரங்கள் அமைந்திருப்பதில்லை.

(4) உற்பத்தித் திறனை உயர்த்துவதற்கு மேற்கொள்ளப் படுகின்ற பெரு முயற்சிகள் வெற்றி பெறுவதில்லை. நேர் மையான, திறமையான பொது நிர்வாகமும் அமைந்தில்லாத காரணத்தால் அரசின் முதலீடுகளிலும் குறைந்த ஆக்கத்தையே பெற முடிகிறது. அதிகரிக்கப்பட்ட அரசின் செலவுகளால் உயர் வடைந்த வாங்கும் சக்திக்கு அதிகமான உற்பத்தியானது பெறப் படுவதில்லை.

இக் காரணங்களால், பொருளாதார முன்னேற்றத்திற்காக அரசினால் பற்றுக்குறை நிதியாக்கம் பின்பற்றப்பட்டாலும், அது பண வீக்க நிலைகளை ஏற்படுத்தும் இயல்புகளைக் கொண்டுள்ளது எனக் கூறலாம்.

## IV. பணவீக்க நிதியின் எதிரிடை விளைவுகள் (Adverse Effects of Inflationary Finance)

(1) பற்றுக்குறை நிதியாக்கம் பணவீகக நிதியாக்கமாக மாறும்போது, அதைக் கைக்கொள்வதின் நோக்கமே நிறைவேறு வதில்லை. தொடர்ச்சியான விலை உயர்வு பொருளாதார முன் னேற்றத்திற்கு ஊறு விளைவிப்பதாகும். முன்னேற்றத்திற்கான நிதிகளைப் பெறும் முறைகளில் இப்பணவீக்க நிதி பொருளாதார, சமுதாய நீதிகளில் ஏற்கத்தக்கதல்ல. பொருளாதார வளர்ச்சியை விரைவு படுத்தும் இம் முறை பல இடர்ப்பாடுகளையும் கொண்டுள்ள மையால், கவனமாக மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்.

(2) பணவீக்கம் மக்களைத் தாங்களே சேமிக்கும் நிலையைக் கொடுப்பதில்லை. அரசு கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்துவ திலும் வெற்றி பெறுவதில்லை. விலைகள் உயர்வடைந்து வருவதால், மக்கள் முன்பு சேமித்த அளவுகூட பணவீக்கத்தால் சேமிக்க இயலுவதில்லை. மாறுத வருவாய் பெறுபவர்கள் (Fixed Incomists)

குறைந்த உண்மை வருவாயை மட்டுமே பெறுவர். அவர்கள் குறைந்த அளவு சேமிப்பையே செய்வார்கள் ; சேமிப்பே முடியாமலும் போகலாம்.

(3) மூலதனத்திரட்சி மக்களின் நுகர்வு குறைக்கப்படுவதால் பெறப்படுகின்றது. மக்களின் உண்மையான நுகர்வின் இழப்பானது, சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பால் கிடைக்கும் நன்மையை விட அதிகமாகவே அமைகின்றது. எனவே, வீணான முறையில் கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்தும் முறை இது எனவும் சொல்லப் படுகின்றது. பணவீக்கம் நுகர்வைக் குறைக்க உறுதியாக உதவுகின்றது. சமுதாய நல நோக்கில் இந்நுகர்வுக் கட்டுப்பாடு நன்மை தருவதில்லை. சமுதாய நலனின் இழப்பிலேயே கட்டாயச் சேமிப்பு பணவீக்கத்தால் ஏற்படுத்தப் படுகின்றது.

(4) தவிர, பணவீக்கத்தின் காரணமாக சமுதாயத்தின் சில பிரிவினர் பல நன்மைகளையும் பெறும்போது, மற்ற பிரிவினர் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். இதன் விளைவாக ஏற்படும் வருவாய் மறுபகிர்வில் அதிக வருவாயை தொழில் முயல்வோர் அடைகின்றனர். நிலையான வருவாய் பெறுபவர்கள் பணவீக்கத்தால் எவ்வித நன்மையையும் அடைவதில்லை. இதனால் வருவாய், செல்வப் பங்கீடுகளில் அதிக ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன.

(5) பொருளாதார முன்னேற்றம் வேறொரு வகையிலும் தடைப்படுகிறது. வளர்ச்சியடையாத நாடுகளின் மக்கள் வளர்ச்சியடைந்த நாடுகளின் நாகரிக வாழ்வைப் பின்பற்றத் துவங்குகின்றனர். சமுதாயத்தின் உயர் நிலையில் உள்ள அதிக வருவாய் பெறுபவர்கள் சேமிப்பை மேற்கொண்டாலும், அச்சேமிப்பை ஆடம்பர வாழ்க்கை வாழ்வதிலேயே செலவிடுகின்றனர். பேராசிரியர் ஹிக்கின்ஸ் (Prof. Higgins) எழுதுவதாவது, "அதிக விலையுயர்வு நடுத்தர வகுப்பினரைப் பாதிக்கிறது; உழைப்பாளர்களுக்கு மேலும் வறிய நிலையைத் தருகிறது. ஊக வணிகர்கள் (Speculators), கறுப்புச் சந்தை வியாபாரிகள் (Black marketeers) கொள்ளை இலாபத்தைப் பெறுகின்றனர். இதன் விளைவாக சமுதாய முரண்பாடுகள் தோன்றி இடதுசாரி அல்லது வலதுசாரி அரசியல் கட்சி ஆட்சியை மேற்கொள்கின்றது. அரசின் நிலையற்ற தன்மையும் வளர்ச்சியடையாத நாடுகளில் இருக்கின்றது. மிகையான பணவீக்க நிலைக்கு இதுவும் ஒரு காரணமாகும்."[1]

(6) பணவீக்க நிலை தவறான வகை முதலீட்டை மேற்கொள்ளவும் செய்துவிடும். விலைகளின் உயர்வு, சேமிப்பை அதிக

1 Benjamin Higgins, Economic Development—Problems, Principles and Policies, p.464.

இலாபத்தைத்தரும் துறைகளிலேயே முதலீடு செய்யத் தூண்டு கின்றது. அம்முதலீடுகள் உற்பத்திக்கு உதவாதவைகளாகவும் இருக்கும். உதாரணமாக, அதிகரித்த பண வருவாய் கட்டடங்கள் கட்டுவதற்கும், தங்க நகைகள் வாங்குவதற்கும், விலையுயர்ந்த கற்கள், வெளி நாட்டுச் சொத்துக்கள் போன்றவைகளை உடைமை யாகப் பெறுவதற்கும், ஆடம்பரப் பொருட்களை வாங்குவதற்கும் பயன்படுத்தப்படும். ஊக வணிக நோக்கங்களுக்காகவும் மூலதனம் பயன்படுத்தப்படுகிறது. ஆகவே, பணவீக்கம் பொருளாதார வளர்ச்சிக்கு உதவாத முதலீடுகளையே ஊக்குவிக்கிறதெனலாம்.

(7) பணவீக்க நிலை, எதிர்காலத்தின் உறுதியின்மையால் முதலீட்டுத் தீர்மானங்களைப் பெரிதும் பாதித்து விடுகின்றது. பணவீக்கத்தின் தொடக்க நிலைகளில் தொழில் முயல்வோரின் ஊக்கம் காக்கப்படுகின்றது. விலைகள் உயரும்போது உற்பத்திச் செலவுகள் அவ்விகிதத்திற்கு உயர்வதில்லை. எனவே, அதிக இலாபங்களைப் பெற அவர்களால் முடிகின்றது. விலைகளில் உயர்வு தொடர்ந்து இருக்குமெனக் கருத முடியாது. எதிர்காலத்தின் உறுதியின்மையால் முதலீடு குறைவடைந்து பொருளாதார வளர்ச்சிக்கு அது பகையாகின்றது.

(8) பொருளாதார முன்னேற்றத்தையே பணவீக்கம் தடை செய்துவிடும். விலையளவின் உயர்வால், முன்னேற்றத் திட்டங்களுக் கான செலவும் உயர்கின்றது. அதிகச் செலவுகளால் பற்றுக்குறை நிதியாக்கத்தையும் பெருமளவு அரசு பயன்படுத்த வேண்டி யுள்ளது. ஆரம்ப நிலைகளிலேயே விலையுயர்வுகள் தடுக்கப்படா விட்டால், பணவீக்கம் நிரந்தரத் தன்மை பெற்றுவிடும். அதிகப் பணம் குறைந்த பண்டங்களைத் தொடர்ந்து, இறுதியாகப் பணத் திட்டத்தில் சீர்குலைவை ஏற்படுத்திவிடும்.

(9) தனியார் நிறுவனத்தைப் பொறுத்தவரை, தொடர்ச்சி யான விலைகளின் உயர்வு உற்பத்திச் செலவை அதிகரிக்கும். இந் நிலையில் விலைகளின் உயர்வு கட்டுப்படுத்தப்படாவிட்டால், இலாபங்கள் குன்றி முதலீடுகளும் குறைந்துவிடும். இதனால், பணவீக்கம் முன்னேற்றத்திற்கு அதிக அளவில் உதவ முடியாமற் போய்விடுகின்றது.

(10) இவற்றைத்தவிர, பணவீக்கநிலை அயல்நாட்டு வாணிபத் தில் பாதகச் செலுத்து நிலையையும் தோற்றுவிக்கும். உள்நாட்டின் வருவாய் உயர்வாலும், விலைகளின் அதிகரிப்பாலும் மக்கள் அயல் நாட்டுப் பொருட்களை அதிகம் விரும்பிப் பெறுகின்றனர். இதன் விளைவு 'மூலதன-வெளியேற்றமாகும்' (Capital-Flight). அயல் நாடுகளோடு ஒப்பிடும்போது, உள்நாட்டில் விலையின் அளவு அதிக

மாக இருப்பதால் ஏற்றுமதியைப் பெருக்குவதும் கடினமாகிறது. வெளிநாட்டு முதலீட்டாளர்களும் பணவீக்க நிலையால் அந்நாட்டில் முதலீடு செய்ய முன்வரமாட்டார்கள். இதனால், அப்பொருளாதாரம் வெளிநாட்டு மூலதனத்தின் பணிகளை இழக்கின்றது. உற்பத்திச் செலவின் உயர்வால் வெளிநாட்டு மூலதனம் அதிக அளவிற்கு முதலீடு செய்யப்படுவதில்லை. இவை யாவும் அந்நியச் செலாவணி இருப்பில் குறைவைத் தந்துவிடுகின்றன. வளர்ந்துவரும் நாடுகளின் முன்னேற்றத்திற்கான அந்நியச் செலாவணி இருப்பின் அவசியத்தை அதிகம் வலியுறுத்துவது தேவையற்றதாகும்.

இவை யாவற்றையும் தொகுத்துக் கூறும்போது, "வளர்ச்சியடையாத நாடுகளில் பணவீக்கம் சில அபாயங்களைக் கொண்டுள்ளது. ஊக வணிகம், மற்றும் அவசியமற்ற பேரங்களை பணவீக்கம் ஊக்குவிப்பதால் பொருளாதார வளர்ச்சிக்கு அது தடையாக உள்ளது; உள்நாட்டில் சேமிப்பை அது ஊக்குவிப்பதில்லை; வெளிநாட்டு முதலீடும் பாதிக்கப்படுகின்றது; அயல்நாட்டு வாணிபத் தொடர்புகளில் தடைகளை ஏற்படுத்துகிறது; பொதுவாக பொருளாதாரத்தின் உற்பத்தித்திறன் குறைந்துவிடுகின்றது."[1]

## V. பற்றுக்குறை நிதியாக்கத்தின் பாதுகாப்பான அளவுகள் (Safe Limits of Deficit Financing)

பற்றுக்குறை நிதியாக்கம் குறிப்பிட்ட நன்மை பயக்கும் எல்லையைக் கடந்துவிட்டால்தான் பணவீக்கம் தோன்றும். குறைந்த, தேவையான அளவுகளில் இம்முறை பயன்படுத்தப்பட்டால் விலையுயர்வுகள் குறைந்த அளவிற்கே ஏற்படும். விலைகளைக் கட்டுப்படுத்த மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகளும் வெற்றியைப் பெற இயலும். ஆனால் எந்த அளவு வரை பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பயன்படுத்தலாம் என்பதை அறிவது கடினமானது. இம்முறையின் மூலம் பணவீக்கம் ஏற்படாமல் மூலதனத் திரட்சியைப் பெற முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

(1) பற்றுக்குறை நிதியாக்கத்தின் 'பாதுகாப்பான அளவு' (Safe Limit) பொருளாதார வளர்ச்சி வீதத்தைக் கொண்டு அறியலாம். பொருளாதார வளர்ச்சிவீதம் புதிதாகப் பொருளாதாரத்தில் செலுத்தப்படுகின்ற பணத்தின் வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால் பணவீக்கநிலை ஏற்படாது. உதாரணமாக, பொருளாதார வளர்ச்சி ஆண்டொன்றிற்கு 8%

[1] U. N. Methods of Financing Economic Development in Under-developed Countries, p. 20.

எனவும், பொருளாதாரத்தில் பணத்தின் அளிப்பு ரூ. 100 கோடி எனவும் வைத்துக்கொண்டால், ஒவ்வொரு ஆண்டும் ரூ. 80 கோடி பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்றலாம். அதன் மூலம் பொருளாதாரத்தில் எவ்விதத் தீய விளைவுகளும் ஏற்பட மாட்டா. இந்த அளவிற்குப் புதிதாக உருவாக்கப்பட்ட பணத்தை பொருளாதாரத்தில் செலுத்தாவிட்டால் பணப்புழக்கப் பற்றுக்குறை தோன்றும். எனவே, பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது பணப்புழக்கத்தையும் படிப்படியாக அதிகரிக்க வேண்டும்.

(2) மேம்பாடடைந்து வரும் பொருளாதாரத்தில் பற்றுக் குறை நிதியாக்கத்தின் 'பாதுகாப்பான அளவைக்' காட்டிலும் சற்று அதிக அளவு பணத்தின் அளிப்பு இருந்தாலும் பணவீக்கம் ஏற்படாது. சான்றாக, முன் குறிப்பிடப்பட்டுள்ள உதாரணத்தில், பணத்தின் அளிப்பு ஆண்டொன்றிற்கு 9% இருந்தாலும் பணவீக்க நிலை தோன்றாது. அதிகரித்த பண அளிப்பை முன்னேற்றத் திட்டங்களுக்குப் பயன்படுத்தலாம்.

(3) பண்டமாற்று முறைகள் அமைந்துள்ள பொருளாதாரத்தின் துறைகள் பணமாற்று முறைகளை மேற்கொண்டாலும் அதிக அளவு பண அளிப்பு பணவீக்கத்தைத் தராது.

(4) பற்றுக்குறை நிதியாக்கம் மூலதனத்திரட்சியைத் தரும் கருவியாக எப்போது வெற்றியோடு அமையுமென்றால், அம் முறையின் விளைவால் அதிகரித்த வருவாயைக் கடனாகவும், வரியாகவும் திரட்ட முடியும்போது எனலாம். பேராசிரியர் லூயிஸ் குறிப்பிடுவதாவது, "பணவீக்கத்தை நீக்க அரசு விரும்பினால் அது தன்னுடைய அதிக அளவு செலவுகளைச் செய்த பின்பு, சேமிப்பைப் பெற சேமிப்பைப் பதுக்குபவர்களை எதிர்பார்க்கக் கூடாது. அரசு வரிவிதிப்பின் மூலம் சேமிப்பைப் பெறலாம் அல்லது தன் கடன் பத்திரங்களுக்கு அதிக வட்டி வீதங்களைக் கொடுத்து முன்னேற்றத்திற்கான மூலதனத்தைப் பெறுவதோடு பணவீக்கத்தையும் தடுக்கலாம்."[1]

(5) பற்றுக்குறை நிதியாக்கத்தின் வெற்றி பொருளாதாரத்தில் விலைகளையும், ஊதியங்களையும் கட்டுப்படுத்துவதில் அடங்கியுள்ளது. ஊதிய உயர்வுகளைத் தடுக்க விலைகளைக் கட்டுப்படுத்த வேண்டும். விலை உயர்வுகள் ஏற்படாமல் தடுப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுதல் அவசியமானது. நுகர்வுப் பொருட்களின் பங்கீட்டையும் கட்டுப்படுத்த வேண்டும். இதைத் தொடர்ந்து மத்திய வங்கி 'கடன்-தடை' (Credit Curb), 'கடன் ஒழுங்கு

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, p. 233.

படுத்துதல்' (Credit Regulation) போன்றவற்றையும் பின்பற்ற வேண்டும்.

(6) அரசு 'இறக்குமதி உபரியைப்' (Import Surplus) பெற நடவடிக்கைகள் எடுத்தாலும், பற்றுக்குறை நிதியாக்கத்தால் பண வீக்கம் ஏற்படுவதைத் தடுக்கலாம். இவ்வாறு செய்ய அரசு மத்திய வங்கியிடம் உள்ள தன் பண இருப்புக்குப் பதிலாக அந்நியச் செலாவணியைப் பெற்று இறக்குமதி செய்யலாம். இறக்குமதிப் பொருட்கள் எந்திரச் சாதனங்களாகவும், தொழில் கச்சாப் பொருட்களாகவும், உணவு தானியங்களாகவும் இருக்க லாம். இந்தியாவில் இவ்வகைப் பொருட்களே இறக்குமதி செய்யப்படுகின்றன.

(7) பற்றுக்குறை நிதியாக்கம் குறைந்த அளவு பண்டங்களை அதிகப் பணமானது பின் தொடரும்போது பணவீக்கத்தைத் தரும். பணத்தின் அளிப்பிற்கும் பண்டங்களின் அளிப்பிற்கும் உள்ள இடைவெளி குறைக்கப்பட்டால், பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்கத்தைத் தராது. இதன் காரணமாகத்தான், பொரு ளாதார முன்னேற்றத்தின் ஆரம்ப நிலைகளில், குறுகிய காலத்தில் உற்பத்தியைத் தரக்கூடிய நிறுவனங்கள் தொடங்கப்பட வேண்டும். நுகர் பொருட்களின் அளிப்பையும் விரைவாக இதன் மூலம் பெறமுடியும்.

(8) "பணவீக்கநிலை தொழில் நிறுவனங்களின் இலாபத்தைப் பெருக்கும்; வாணிபத்தின் இலாபமும் அதிகரிக்கும்; அரசின் வரி வருவாய் பெருகும். முன்னேற்றத்திற்கான மூலதனத்தை உபரி வரவு-செலவுத் திட்டத்தின் மூலமும், தொழில் நிறுவனங்கள் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்தளித்த இலாபங்களை வரி விதிப்புச் செய்வதின் மூலமும் பெற முடியும்," எனப் பேராசிரியர் குரிஹாரா (Prof. Kurihara)[1] கூறுகின்றார்.

(9) இறுதியாக, பற்றுக்குறை நிதியாக்கத்தின் 'பாதுகாப்பான அளவு' (Safe Limit) மக்களின் நிலையைக் கொண்டும் அமையும். இம்முறையால் ஏற்படும் விளைவுகளுக்கு மக்கள் எவ்வாறு ஆதரவு தருகிறார்கள் என்பதைக் கொண்டும், அவர்களின் தியாக மனப் பான்மையைக் கொண்டும் பொருளாதார வளர்ச்சிக்கும் பற்றுக் குறை மூலதனத்தைப் பயன்படுத்தலாம். இது சம்பந்தமாக டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் (Dr. V. K. R. V. Rao) அறி வுறுத்துவதாவது, "பற்றுக்குறை நிதியாக்கம் ஏற்படுத்தும் விலை

[1] K. K. Kurihara, The Keynesian Theory of Economic Development, p. 149.

விளைவுகளைக் குறைக்க பொதுமக்களின் ஒத்துழைப்பு தேவையானது. பொதுவாக, பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்கத்தோடு தொடர்புபடுத்திச் சொல்லப்படுகிறது. மூலதனத்திரட்சிக்குப் பற்றுக்குறை நிதியாக்கம் அவசியமானது என்பதை மக்கள் உணர்ந்திருப்பதோடு, அரசின் கொள்கைகளை நிறைவேற்றவும் அவர்கள் உதவ வேண்டும் ''[1]

கவனமாகப் பயன்படுத்துவதிலேயே பற்றுக்குறை நிதியாக்கத்தின் வெற்றி அடங்கியுள்ளது. இம்முறையைச் சிறப்பாகப் பயன் படுத்தினால் பொருளாதார முன்னேற்றத்திற்கு இது பெரிதும் உதவும். தீயைக் கட்டுப் படுத்தாமல் விட்டு விட்டால் நாசம் விளையும்; தீயைக் கட்டுப்பாடு கொண்டு பயன் படுத்தினால் ஒளியோடு வேறு பல நன்மைகளையும் பெறலாம். அது போன்றே பற்றுக்குறை நிதியாக்கத்தைக் கட்டுப்பாட்டோடு கைக்கொள்ளா விடில் பொருளாதாரச் சீர்குலைவுகள் பல தோன்றும்; அதைக் கட்டுப்பாட்டோடு பயன் படுத்தினால் பொருளாதாரத்தின் எல்லா துறைகளும் முன்னேற்றமடையும்.''[2]

## VI. இந்தியாவின் பற்றுக்குறை நிதியாக்கம் (Deficit Financing in India)

இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களில் பற்றுக்குறை நிதியாக்கம் ஒரு கருவியாக முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றத் தேவையான நிதி போதாத நிலையில் இம்முறை பயன் படுத்தப் படுகின்றது. உள்நாட்டு, அயல்நாட்டுப் பணவசதிகள் பற்றாத காரணத்தால், இதைப் பின்பற்றுவது தவிர்க்க முடியாத ஒன்றானது. திட்டங்களை மேற்கொள்ளத் தேவையான நிதிக்கும், உண்மையில் கிடைத்த நிதிக்கும் உள்ள இடைவெளி பற்றுக்குறை நிதியால் சரிசெய்யப் பட்டது.

இந்தியாவில் பொருளாதார சிக்கல்களில் ஒன்றாக பற்றுக்குறை நிதியாக்கம் இருக்கின்றது. காகிதப் பணத்தின் மூலம் மட்டும் பற்றுக்குறை நம் நாட்டில் ஈடு செய்யப்படுவதில்லை. பற்றுக்குறை நிதியாக்கத்திற்காக ரிசர்வ் வங்கியில் உள்ள ரொக்க இருப்பு பயன்படுத்தப்படுகிறது. கருவூல உண்டியல்கள் வெளியிடப் படுகின்றன. வங்கிகளிடமிருந்தும் கடன் பெறப்படுகின்றது. எனினும், காகிதப்பண அளவின் அதிகரிப்பே பணவீக்க நிலைக்கு நம் நாட்டில் காரணமாகிறது.

1 D. V. K. R. V. Rao, Essays in Economic Development, p. 140.

2 K. Bhattacharya, Indian Plans, p. 82.

போர்த்தேவைகளுக்காக இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் இந்தியாவில் பற்றுக்குறை நிதியாக்கம் பின்பற்றப்பட்டது; காகிதப்பணம் வெளியிடப்பட்டது. 1938-39-இல் 191 கோடி ரூபாய் காகிதப்பணப் புழக்கம் இருந்தது. 1945-46 - இல் இது 1163 கோடி ரூபாயாக அதிகரித்தது. இதே காலத்தில் கடன் அளவு 116 கோடி ரூபாயிலிருந்து 301 கோடி ரூபாயாக உயர்ந்தது. இக்காரணங்களால் விலைகளின் குறியீட்டு எண் இக்காலத்தில் 245 என்ற அளவிற்கு உயர்ந்தது.

பொருளாதார மேம்பாட்டைப் பெற பல ஐந்தாண்டுத் திட்டங்களும் நம் நாட்டில் நிறைவேற்றப்பட்டன. நம் நாட்டின் வளங்களையும், மனித உழைப்பையும் பயன்படுத்தி முன்னேற பற்றுக்குறை நிதிமுறையும் பின்பற்றப்பட்டது. மூலதனத் திரட்சிக்காகவும், வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் அரசு அம்முறையை மேற்கொண்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பற்றுக்குறை நிதி 290 கோடி ரூபாய் என நிர்ணயிக்கப் பட்டது. ஆனால் உண்மையான பற்றுக்குறை நிதியின் அளவு இக்காலத்தில் 532 கோடி ரூபாய் என்ற அளவில் அமைந்தது. வேளாண்மை உற்பத்தி மிகச் சிறப்பாக உயர்ந்தமையாலும், அதைத் தொடர்ந்த தொழில் முன்னேற்றத்தாலும் விலைகள் அதிகம் உயரவில்லை.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 1200 கோடி ரூபாயாகப் பற்றுக்குறை நிதியாக்கம் இருக்குமெனக் கணக்கிடப்பட்டது. உண்மையில் இதன் அளவு 948 கோடி ரூபாய் என்ற நிலையைக் கொண்டிருந்தது. இரண்டாவது திட்ட காலம் முதற்கொண்டே பணவீக்கம் நம் நாட்டுப் பொருளாதாரத்தின் நிரந்தர இயல்பாகவே இருந்து வருகிறது. இத்திட்ட காலத்திலிருந்துதான் எல்லாவகைப் பொருட்களின் விலைகளும் மிகப்பல மடங்கு உயர்ந்தன.

மூன்றாவது திட்ட காலத்தில் பற்றுக்குறை நிதியாக்கம் 550 கோடி ரூபாயாக இருக்குமெனக் கணக்கிடப்பட்டது. போர் நிலைகளால் பாதுகாப்புச் செலவு அதிகரித்தமையால், இத்திட்ட காலத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவு 1150 கோடி ரூபாயாகவும் உயர்ந்தது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்ட பற்றுக்குறை நிதிமுறையின் அளவு 850 கோடி ரூபாயாக இருக்குமென மதிப்பிடப்பட்டுள்ளது.

நம் நாட்டின் வளர்ச்சித் திட்டங்களை நிறைவேற்றத் தேவையான நிதியை வரி விதிப்பின் மூலமாகவும், கடன் மூலமாகவும் மட்டும் பெற முடிவதில்லை. மேம்பாடடைந்துவரும் இந்தியா

போன்ற நாடுகளில் பற்றுக்குறை நிதிமுறை தவிர்க்க இயலாத ஒன்றாகும். பொருளாதார முன்னேற்றமடைந்தபிறகு, இம் முறையின் மூலம் செய்யப்பட்ட முதலீடுகளின் உற்பத்தி பெருகு வதால் அரசின் வரவுகளையும், செலவுகளையும் சமன் செய்து விடலாம்.

பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவிய பற்றுக்குறை நிதியாக்கம் எதிர்பார்த்த வேலை வாய்ப்புக்களை அதிக அளவு பெருக்கவில்லை. உற்பத்தியின் அளவுகளும் குறியிலக்குகளை எட்ட வில்லை. இந்த நிதி முறையால் இந்தியப் பொருளாதாரத்தில் சில பாதக விளைவுகள் ஏற்பட்டன:

(1) மக்களின் சேமிப்பு வளராமையால், பண்டங்களின் தேவை பெருகியுள்ளது.

(2) பற்றுக்குறை நிதி முறை பணவீக்கத்தைத் தந்துள்ளது. உணவுத் தானியங்களின் பற்றுக்குறை, நுகர்வுப் பொருட்களின் உற்பத்தி உயராத நிலை இவற்றால் விலைகள் அதிகரித்தன.

(3) வங்கிகள் எண்ணிக்கையில் அதிகரித்துள்ளமையால் வங்கிக் கடன்கள் உயர்ந்துள்ளன. பணவீக்க நிலைக்கு இதுவும் ஒரு காரணமாகும்.

(4) பணவீக்கத்தால் திட்டச் செலவுகள் அதிகரித்துள்ளன. இதன் காரணமாக பற்றுக்குறை நிதியளவு திட்டமிட்ட அளவைக் காட்டிலும் அதிகரித்துள்ளது.

(5) எதிர்பார்த்த அளவிற்கு முதலீடுகள் அதிகரிக்கவில்லை.

(6) ஊக வணிகம் பெருகியுள்ளது.

(7) மாறாத வருவாய் கொண்டவர்கள் பணவீக்கத்தால் பாதிக்கப் பட்டுள்ளனர்.

(8) வேளாண்மைப் பொருட்களின் விலையுயர்வு இருந்தாலும் உற்பத்தி சிறப்பான அளவை எட்டவில்லை.

(9) கள்ளச்சந்தை வியாபாரிகள் பெருகியுள்ளனர். விலை உயர்வு உற்பத்தியாளர்களால் பெறப்படுவதில்லை. உற்பத்தி விலைக் கும் விற்பனை விலைக்கும் இடையே அதிக இடைவெளி உள்ளது. நுகர்வோர் அதிக விலைக்குப் பொருட்களைப் பெறும்போது, அவ்விலை உற்பத்தியாளருக்குச் செல்வதில்லை. உற்பத்தி செய்பவர் களுக்கும் நுகர்வோருக்கும் இடையில் உள்ள தரகர்களே கொள்ளை இலாபம் அடைகின்றனர்.

(10) வருவாய், செல்வப் பங்கீடுகளில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்படவில்லை. வறியவர்கள் வருவாயில் முன்னேற்றத்தைப் பெறாத நிலையும், செல்வர்கள் எளிதில் வருவாயைப் பெருக்கிக் கொள்ளத்தக்க நிலையும் அமைந்துள்ளன.

இவ்வித பாதக விளைவுகள் நம் பொருளாதாரத்தில் பற்றுக் குறை நிதி முறையின் மூலம் ஏற்பட்டாலும், கணிசமான முன்னேற்றத்தைத் தந்த நீதி முறை இது எனக் கூறலாம். இந்நிதி முறை பின்பற்றப்படாமலிருந்ததால், இப்போது நாம் பெற்றுள்ள பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றிருப்போமா என்பது ஐயத்திற்குரிய ஒன்றேயாகும்.

பற்றுக்குறை நிதி முறையைப் பணவீக்கம் ஏற்படாமலும் பின்பற்றலாம். பாதுகாப்பான அளவோடு இம்முறை கைக் கொள்ளப்பட்டால் விலையுயர்வுகள் ஏற்படமாட்டா. கீழ்க் கண்டவற்றைக் கருதி பற்றுக்குறை நிதிமுறை பயன்படுத்தப் பட்டால் பணவீக்க நிலை ஏற்படாது.

(1) உற்பத்தி உயர்வு

பணப்பற்றுக்குறை நிலையைத் தவிர்க்க, பெருகும் உற்பத்திக்கு ஏற்ப பணத்தின் அளிப்பும் அதிகரிக்க வேண்டும். ஆனால் உற்பத்தி வீதத்தைவிட பண அளிப்பு வீதம் அதிகமாக இருக்கக்கூடாது.

(2) மக்கட்தொகைப் பெருக்கம்

மக்கட்தொகை அதிகரிக்கும்போது, பணத்திற்கான தேவையும் பெருகுகிறது. பணத்தேவையின் அளவிற்கு ஏற்ப அதன் அளிப்பு அமைய வேண்டும். பண அளிப்பு தேவையைவிட அதிகமாக இருந்தால் விலையுயர்வுகள் ஏற்படும்.

(3) பராமரிப்புப் பொருளாதாரத்திலிருந்து மாற்றுப் பொருளா தாரத்திற்கு மாறுதல்
(Subsistence Economy to Exchange Economy)

வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்தி தன்னிறைவிற் காகவே செய்யப்படுகின்றது. உழைப்பாளர்கள் உற்பத்தியின் பெரும் பகுதியை தங்கள் நுகர்ச்சிக்கே பயன்படுத்துகின்றனர். சந்தையில் பொருட்களை விற்பனை செய்வது குறைந்த அளவே யாகும். ஆனால் பொருளாதாரம் வளரும்போது இவ்வகைப் பரா மரிப்புப் பொருளாதாரம் மாற்றுப் பொருளாதாரமாக மாறுகிறது. பண்டங்களைச் சந்தைகளில் மாற்றத் தேவையான பணத்தின்

தேவை இதனால் அதிகரிக்கிறது. பற்றுக்குறை நிதி முறை மூலம் பொருளாதாரத்தில் செலுத்தப்படுகின்ற பணத்தின் அளிப்பு தேவையைவிட அதிகமாக இருந்தால் பணவீக்க நிலை ஏற்படும்.

(4) பண்டமாற்று முறை மறைந்து பண மாற்று முறை விரிவடைதல்

முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில், பொருட்கள் பணத்தின் உதவி இன்றியே 'பண்டமாற்று முறையில்' மாற்றிக் கொள்ளப் படுகின்றன. வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தைப் பெறும்போது, பண்டமாற்றுப் பொருளாதாரமாக மாறுகிறது. எனவே பணத்தின் தேவையும் அதிகரிக்கிறது. பணவீக்கத்தைத் தவிர்க்க தேவைக்கு ஏற்ப 'புதிதாக உருவாக்கப்பட்ட பணம்' பொருளாதாரத்தில் புழக்கத்தில் அமைந்திருக்க வேண்டும்.

(5) முதலீட்டிற்கு அதிகமாக சேமிப்பு இருத்தல்

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பணத்தைப் பதுக்குதல் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. உற்பத்திக்கு உதவாத வகையில் பணம் மக்களால் சேமிக்கப்பட்டு பதுக்கப்படுகின்றனது. பதுக்கப்படுகின்ற பணத்தின் அளவிற்கு ஏற்ப புதிய பணம் புழக்கத்தில் ஈடுபடுத்தப்பட்டால் பணவீக்கம் ஏற்படாது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது, பணத்தைப் பதுக்குதல் நன்மை தராது என்பதை மக்கள் உணர்கின்றனர். ஆனால் இச்சேமிப்பு இலாபகரமான முதலீட்டு வாய்ப்புக்கள் இல்லாத காரணத்தால் சரியாகப் பயன்படுத்தப் படுவதில்லை.

(6) ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் அதிகமாக இருத்தல்

பழைய அந்நியச் செலாவணி இருப்பு ஏற்றுமதியை விட இறக்குமதி அதிகமாக இருக்கும்போது பயன் படுத்தப்படலாம் அல்லது அயல் நாட்டுக் கடன்களைப் பெறலாம். அதிகரித்த இறக்கு மதிப் பொருட்களுக்கு ஏற்ப பணத்தின் அளிப்பு அமைந்திருந்தால் பணவீக்க நிலை தோன்றாது.

பற்றுக்குறை நிதிமுறையால் பணவீக்க நிலை ஏற்படுவது பல காரணிகளைச் சார்ந்துள்ளது.

(1) உற்பத்தியின் நெகிழ்வுத்தன்மை (Elasticity of Production)

உற்பத்தியின் நெகிழ்ச்சி உயர்வாக இருந்தால் உற்பத்தி அதிகரிக்கும்; பற்றுக்குறை நிதியாக்கத்தால் விலைகளின் உயர்வு குறைவாகவே இருக்கும். ஆனால் வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்தியில் நெகிழ்ச்சியின்மையே நிலவுகின்றது. உற்பத்தி

உயராத காரணத்தால், பற்றுக்குறை நிதியாக்கம் இந்நாடுகளில் அதிகவிலை உயர்வுகளைத் தருகின்றது.

(2) முதலீட்டின் இயல்பு

'புதிதாக உருவாக்கப்பட்ட பணம்' நுகர்ச்சிக்கான பொருட்களை உற்பத்தி செய்யும் திட்டங்களில் முதலீடு செய்யப்பட்டால் பணவீக்கம் தோன்றாது. புதிதாகத் தொடங்கப்பட்ட நிறுவனங்கள் தொழிலாளர்களுக்கு உடனடியாக ஊதியத்தை அளித்தாலும், சிறப்பான உற்பத்தியைத் தொடங்குமெனக் கருத முடியாது. உழைப்பாளர்களின் வருவாய் உயர்ந்து, அவர்களின் தேவை பெருகும் அளவிற்கு அப்பொருட்களின் உற்பத்தி குறுகிய காலத்தில் அதிகரிக்காது. அதன் விளைவே பணவீக்கநிலை. மற்றொரு புறத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட பணம் மூலதனப் பொருட்களின் உற்பத்திக்கு முதலீடு செய்யப்பட்டால், அது அதிக அளவு பணவீக்க நிலையை ஏற்படுத்தும். நுகர்வுப்பொருட்களின் உற்பத்தி மூலதனப் பொருட்களின் உற்பத்தியால் பாதிக்கப் படுகிறது. குடிசைத் தொழில்கள், சிறு தொழில்கள் குறைந்த மூலதனத் தேவையையே கொண்டுள்ளவை. தேவையான பொருட்களை உடனடியாகக் குறுகிய காலத்திலும் உற்பத்தி செய்து விடலாம். பற்றுக்குறை நிதியாக்கம் இம் முறையால் அதிக வேலைவாய்ப்புக்களைஏற்படுத்தித் தரும். விலைகளின் உயர்வையும் நுகர் பொருட்களின் உற்பத்தியால் தடுத்துவிடலாம்.

(3) கடன் ஆக்கம்

பொதுவாக, குறைந்த அளவு பற்றுக்குறை நிதியாக்கமே அதிக பணத்தின் அளிப்பைக் கடன் பெருக்கத்தின் மூலம் தந்து விடும். கடன் முறைகள் அதிகம் தோன்றிவிடுவதால் 'உருவாக்கப்பட்ட புதிய பணம்' அதிகப் பணத்தின் அளிப்பை ஏற்படுத்தி விடும். குறைந்த உற்பத்தியை அதிகப்பணம் பின்தொடரும்போது விலை உயர்வு தோன்றி விடுகிறது.

(4) தொழிலாளர் சங்கங்களின் திறன்

விலைகளின் உயர்வு ஏற்படும்போது, உழைப்பாளர்கள் ஊதிய உயர்வை வேண்டுகின்றனர். தொழிலாளர் சங்கங்களின் நடவடிக்களால் உழைப்பு அதிக ஊதியத்தைப் பெறுகின்றது. ஊதிய உயர்வும் பணவீக்க நிலைக்கு ஒரு காரணமாக அமைகின்றது.

இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்திற்கான கருவியாக பற்றுக்குறை நிதியாக்கம் பயன்படுத்தப்பட்டாலும், குறைந்த

அளவு வெற்றியே அதன் மூலம் நமக்குக் கிடைத்தது. மிக விரைவான முன்னேற்றத்தைப் பெறக் கருதி மேற்கொள்ளப்படும் திட்டங்களினுல் ஏற்படும் பொருளாதாரச் சீர்குலைவுகளுக்குப் பதிலாக, மெதுவான ஆனுல் நிச்சயமான முன்னேற்றத்திலுல் ஏற்படக்கூடிய நன்மைகளே விரும்பத் தக்கனவாகும். உலகின் இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகள், பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலைகளில் பற்ருக்குறை நிதியாக்கத்தைப் பயன்படுத்தியே வெற்றி கண்டன. ஆனுல் அம்முறையின் மூலம் அவர்கள் பெற்ற முன்னேற்றத்தை, இந்நாளில் நம் நாட்டில் நாம் பெற முடியவில்லை. மேம்பாடடைந்துவரும் இன்றைய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைக் குறுகிய காலத்தில் பெற வாய்ப்புக்கள் உள்ளன. மேம்பாடடைந்த நாடுகளின் அனுபவங்களைக் கருத்திற் கொண்டு வளர்ந்துவரும் நாடுகள் பண, நிதிக் கொள்கைகளைப் பின்பற்றலாம். தொழில் நுணுக்க முன்னேற்றங்களின் நன்மையை அடையலாம். பிறநாடுகளின் முன்னேற்றக் கொள்கைகள் யாவற்றையும் பின்பற்றி வளர்ச்சியடைந்துவரும் நாடு முன்னேற்றத்தைப் பெற முடியாது. அக்கொள்கைகளில் சிலவற்றை மட்டுமே சாதகமாக முன்னேற்றத்திற்காக வளர்ச்சியடைந்துவரும் நாடு பின்பற்ற இயலும். ஏனெனில், வளர்ச்சியடைந்த பொருளாதாரத்திற்கும் வளர்ச்சியடையாத பொருளாதாரத்திற்கும் இடையே இயல்புகளில் பல வேறுபாடுகள் உள்ளன. பற்ருக்குறை நிதியாக்கத்தையும் தன் பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறே மேம்பாடடைந்துவரும் நாடு பின்பற்ற வேண்டும்.

# 18. சமுதாய-பொருளாதார அமைப்பு முறையும் பொருளாதார முன்னேற்றமும்

வளர்ச்சியடையாத நாடுகளில், மக்களின் சமுதாய-பண்பாட்டு நடவடிக்கைகளில் மாற்றங்களை ஏற்படுத்துவது பொருளாதார முன்னேற்றத்திற்கான முக்கிய தீர்வுகளில் ஒன்றாகும். பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவாத நிலையில் அச்சமுதாயங்களில் மத, பண்பாட்டு முறைகள் அமைந்திருக்கும். பலவித அமைப்பு முறைகள் தனிபொருவரின் நடவடிக்கைகட்கு ஊக்கத்தை அளிக்கமாட்டா. திறுவனங்களுக்கிடையே போட்டி மனப்பான்மையும் அந்நாடுகளில் அமைந்திருப்பதில்லை. பொருளாதாரம் வளர்ச்சியடைய சாதி, உறவு முறைகள், மத நம்பிக்கைகள், இணைந்த குடும்பமுறை போன்றவைகளில் மாறுதல் தேவையானது. சமுதாய நடவடிக்கைகள், அமைப்புக்கள் யாவற்றிலும் முன்னேற்றம் அவசியமானது.

'ஐக்கிய நாடுகளின் அறிக்கை' (The United Nations Report) இவ்வித மாற்றங்கள் தேவை என்பதை பின்வருமாறு உணர்த்துகிறது: "கடுமையான மாற்றங்கள் இன்றி விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற இயலாது. காலத்திற்கு ஒவ்வாத தத்துவங்கள் களையப்படுதல் வேண்டும்; பழைய சமுதாய அமைப்புக்கள் துண்டிக்கப்பட வேண்டும். சாதி, இன முறைகள் நீக்கப்பட வேண்டும். முன்னேற்றத்திற்கு ஏற்ப தங்களை மாற்றிக் கொள்ளாத மக்கள் வசதியான வாழ்க்கையைப் பெற முடியாது. பல வளர்ச்சியடையாத நாடுகளில் பொருளாதார, அரசியல் அதிகாரங்கள் ஒரு சிலரிடம் குவிந்துள்ளன. குறைந்த எண்ணிக்கையில் உள்ள இவ்வகுப்பினர் தங்கள் செல்வங்களையும், உரிமைகளையும் பாதுகாக்கவே பெரிதும் முயல்கின்றனர். பொருளாதார முன்னேற்றம் அவர்களின் முக்கிய நோக்கமாக இருப்பதில்லை. இந்நிலைகள் மாற சமுதாயப் புரட்சி (Social Revolution) தேவையானதாகும். அதன் மூலமே அதிகாரங்களையும், வருவாய்களையும் எல்லா மக்களுக்கும் சமநிலையில் பங்கீடு செய்ய இயலும்."[1] ஆனால்

[1] U. N. Measures for Economic Development of Underdeveloped Countries, p. 13.

'சமுதாயப்புரட்சி' என்பது தற்பொழுதுள்ள சமுதாய அமைப்பு முறைகளை முற்றிலும் நீக்கிவிடுவதல்ல. மாற்றங்களில் படிப்படியான முன்னேற்றம் வேண்டும். விரைவான சமுதாய மாற்றங்களை மக்கள் விரும்பமாட்டார்கள். அம்மாற்றங்களின்மீது அவர்கள் வெறுப்பையே கொள்வார்கள். அமைதியின்மை, கலகம் போன்றவைகளும் தோன்ற வழி ஏற்படும். இந்நிலைகள் பொருளாதார வளர்ச்சியைப் பாதித்துவிடும் தன்மைகளைக் கொண்டவை.

"இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே பொருளாதார முன்னேற்றமடைந்த ஐரோப்பிய நாடுகளில், சமுதாய அமைப்பு முறைகளில் மாற்றம் ஏற்பட பத்து நூற்றாண்டுகள் பிடித்தன. எனவே, அவ்விதச் சமுதாய மாற்றங்களைப் பெறுவதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கின்றன என்று கூறலாம்."[1] எந்தச் சமுதாயமும் விரைவான பண்பாட்டுக் கலாச்சார மாற்றங்களைப் பெற விரும்பினால், அதன் மூலம் மாற்றங்களில் அக்கறையின்மையும், சில காலங்களில் மாற்றங்களை எதிர்த்துப் புரட்சிகளும் தோன்றலாம். சமுதாய அமைப்பு முறைகளின் மாற்றங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுமென்றாலும், வளர்ச்சியடைந்த நாடுகளின் சமுதாய முறைகளின் மாற்றங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பிறகே பெறப்பட்டன. "பொதுவாக, மெதுவான ஆனால் உறுதியான முன்னேற்றம் அரசியல், சமுதாய, பொருளாதார நிலைகளில் நன்மையைத் தரும். விரைவான முன்னேற்றத்தைப் பெற எடுக்கப்படும் முயற்சிகள் பொருளாதார நோக்கில் நன்மை பயக்காதவைகளேயாகும். ஏனெனில், அந்த அளவிற்கு விரைவான சமுதாய அமைப்பு முறைகளில் மாற்றம் தோன்றுவதில்லை."[2]

### அமைப்புமுறை மாற்றங்கள்

அமைப்புமுறை மாற்றங்களின் மூலமாக மட்டும் பொருளாதார மாற்றம் ஏற்பட்டுவிடாது. பொருளாதார மாற்றம் மூலதனத்திரட்சி, தொழில் நுணுக்க முன்னேற்றம் போன்றவைகளாலும் ஏற்படலாம். அமைப்புமுறை மாற்றங்கள் பொருளாதாரக் காரணங்களால் தோன்றுவதில்லை. பொருளாதாரக் காரணிகள் இல்லாத மதக்கொள்கைகள், அரசியல் அமைப்பு ஆகியவற்றால் அமைப்புமுறை மாற்றங்கள் தோன்றுகின்றன. பொருளாதாரக் காரணிகளும், அமைப்பு முறை மாற்றங்களும் வெவ்

[1] H. F. William and J. A. Buttrick (Ed) - Economic Development, Principles and Patterns, p. 357.

[2] P. T. Bauer and B. S. Yamey, Economics of Underdeveloped Countries, pp. 70-71.

வேறு நிலைகளைக் கொண்டுள்ளன. ஆனால் இவ்விரண்டும் தொடர்புடையன எனலாம். அமைப்புமுறையின் மாற்றங்கள் பொருளாதார வளர்ச்சிக்குப் பல வகைகளிலும் உதவுகின்றன. அம் மாற்றங்களினால் வேலைப்பகுப்பு முறைகள் அதிக அளவில் பின்பற்றப்படுகின்றன. வாணிபம் விரிவடைகின்றது; பொருளாதார வாய்ப்புக்கள் நன்கு பயன்படுத்தப்படுகின்றன. ஊக்கமான உழைப்பு மூலம் அதிக உற்பத்தியையும் பெறலாம். மாற்றங்கள் ஏற்படத் தொடங்கிவிட்டால் அந்நிலை தொடர்ந்து நீடிக்கும். சமுதாய அமைப்புக்களில் இம்மாற்றங்கள் ஏற்பட்டால் மக்கள் புதிய வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வார்கள். பொருளாதார வாய்ப்புக்களின் முன்னேற்றம் மேற்கு ஐரோப்பாவில் சீர்திருத்தங்களைக் கொடுத்ததா, அல்லது மாறுபடுகின்ற மதக் கருத்துக்கள் பொருளாதார முன்னேற்றத்தைத் தந்தனவா என்பதை அறிவது கடினமானதாகும்.[1]

புதிய வாய்ப்புகள் பல வழிகளில் கிடைக்க வகையுண்டு. "புதிய கண்டுபிடிப்புக்கள் புதிய பண்டங்களை உற்பத்தி செய்ய உதவும்; அல்லது உற்பத்திச் செலவைக் குறைத்துவிடும். புதிய சாலைகள், புதிய கப்பல் போக்குவரத்து மார்க்கங்கள், செய்தித் தொடர்பு வசதிகளில் முன்னேற்றம் போன்றவை வாணிபத்தை மேற்கொள்ளும் நிலைகளில் நன்மை அளிக்கின்றன. ஒரு நாட்டில் வெளி நாட்டினர் வருவதாலும் புதிய வாணிபங்கள் தோன்றுகின்றன. அவர்களின் முதலீட்டினால் புதிய வேலை வாய்ப்புகளும் ஏற்படுகின்றன." இவ்வகைப் புதிய வாய்ப்புகள் அமைப்பு முறைகளில் மாற்றங்களை ஏற்படுத்துவன. இம்மாற்றங்கள் படிப்படியாகத் தோன்றுபவை. மாற்றங்கள் கண்டுபிடிப்பாளர்களால் தோற்றுவிக்கப்படுகின்றன. பழைய முறைகளில் மாற்றங்களை ஏற்படுத்தி புதிய முறை முதலீடுகளும் செய்யப்படுகின்றன.

இப்புதிய கண்டுபிடிப்பாளர்கள் நகர்ப்புறங்களில் உள்ளவர்களால் அரசியல், சமுதாயச் சக்திகளுக்கு எதிராக அவர்கள் இயங்குகின்றனர். அதிக, புதிய வாய்ப்புக்களைப் பொருளாதாரத்தில் ஏற்படுத்தி, இறுதியாக பழைய நம்பிக்கைகளையும், நிறுவனங்களையும் மாற்றுவதில் வெற்றி பெறுகின்றனர். வெளி நாட்டினருடன் கொள்கின்ற தொடர்பும் சமுதாயத்தின் பழைய முறைகளை மாற்ற உதவும்.

இந்தியாவில் 19-ஆம் நூற்றாண்டில் மக்களின் குடும்ப வாழ்க்கையில் மாற்றங்கள் ஏற்பட்டன. சமுதாயத்தின் பழைய

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, pp. 142-44.

நிலைகளில், முறைகளில், அமைப்புக்களில் தளர்வு ஏற்பட்டது. இதற்குக் காரணமாக அமைந்தவை பலவாகும். மேலை நாட்டுக் கல்விமுறை பரப்பப்பட்டது ; இருப்புப் பாதைப் போக்குவரத்து வளர்ந்தது ; பல தொழில்களும் தோற்றுவிக்கப்பட்டன. சமுதாய நடவடிக்கைகளில் புதிய மாற்றமே ஏற்பட்டதெனலாம். அதன் விளைவாகவே தேசிய விடுதலைப் போராட்ட இயக்கமும் செயல் பட்டு வெற்றி கண்டது.

இவை எல்லாவற்றையும்விட, சமுதாய அமைப்பு முறைகளில் மாற்றங்கள் ஏற்பட அரசும் ஒரு முக்கிய நிலையைக் கொண் டுள்ளது. அரசு சமூகப் பழக்கங்கள், மதக் கொள்கைகளில் புதிய சீர்திருத்தங்களைப் புகுத்தலாம், கல்விமுறை, நிலத்தைப் பயன் படுத்தும் முறைகளில் முன்னேற்றத்தைப் பெற அரசின் சீர்திருத் தங்கள் பெரிதும் உதவும். அரசு சட்டத்தையும், ஒழுங்கையும் நிலை நாட்டலாம் ; பொது மக்களுக்கு அதிக நன்மையளிக்கும் வசதிகளை ஏற்படுத்தலாம் ; புதிய தொழில்களைத் தொடங்கலாம். இவற்றின் மூலம் பொருளாதார வளர்ச்சியைத் தொடங்கி அரசு தேசிய வருவாயோடு தலா வருவாயையும் உயர்த்த முடியும்.

## பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு (The Role of State in Economic Development)

மேம்பாடடைந்து வரும் நாட்டில், முன்னேற்ற காலத்தில் ஏற்படும் தடைகளைத் தவிர்க்க அரசு தீவிர நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். வளர்ச்சியடையாத பொருளாதாரத்தின் இயல்புகள் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பதால், அரசு அத்தடைகளை நீக்க முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. வளர்ச்சி யடையாத நாட்டின் அரசு பொருளாதார நடவடிக்கைகளைக் கண்காணிப்பது மட்டும் போதாது. பொருளாதார சக்திகளை அவற்றின் போக்கிற்கு அனுமதித்தால் பல சீர்கேடுகள் முன்னேற்ற மடையாத பொருளாதாரத்தில் ஏற்படும். வளர்ச்சியடையாத பொருளாதாரத்தின் சிக்கல்களை அரசு நீக்கி, பொருளாதாரச் சக்திகளை தன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருதல் வேண்டும்.

தனியார் நிறுவனங்கள் பொருளாதார நிலைகளைக் கட்டுப் படுத்துவது இயலாத ஒன்றாகும். கட்டுப்படுத்துவதற்குத் தேவை யான அதிகாரங்களும் அவைகளிடம் இருப்பதில்லை. மேலும், பல தனியார் உடைமை நிறுவனங்களே அரசின் தீவிரக் கட்டுப்பாட் டிற்குள் இருப்பதாகவும் கூறலாம். பல அதிகாரங்களையும்,

வசதிகளையும் கொண்டுள்ள காரணத்தால் அரசின் நடவடிக்கையே வளர்ச்சியடையாத நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இன்றியமையாததாகும்.

நாட்டின் பின்தங்கிய நிலையை மாற்ற விரைவான சமுதாய பொருளாதாரச் சீர்திருத்தங்கள் தேவை. முன்னேற்றத்தின் முதற்சில படிகளில் பொருளாதாரம் இருக்கும்போது, முதலீடுகள் புறச் சிக்கனங்களை (External Economies) முன்னேற்றமடையச் செய்யும் வகையில் அமைய வேண்டும். சமுதாயத்திற்கும், பொரு ளாதாரத்திற்கும் நன்மையளிக்ககூடிய அவசிய முன்னேற்றங்களில் முதலீடுகள் செய்யப்படுதல் வேண்டும். கல்வி, போக்குவரத்து, செய்தித்தொடர்பு, மருத்துவ வசதி போன்றவைகளின் முன்னேற் றத்திற்கு அரசு அதிக மூலதனத்தை ஒதுக்குதல் அவசியமானது. தனியார் துறைகள் இந்நடவடிக்கைகளை மேற்கொள்ளமாட்டா. ஏனெனில், இடர்கள் அதிகமுள்ள இவற்றில் குறைந்த இலாபத் தையே பெற முடியும்.

பொருளாதார வளர்ச்சி நிலையில், பல துறைகளின் முன் னேற்றங்களிலும் சமநிலையானது அமைந்திருக்க வேண்டும். அப்போதுதான் தேவைக்கு ஏற்ப பொருட்களின் அளிப்பைப் பெற முடியும். அச்சமநிலையைப் பெற அரசின் கட்டுப்பாடுகளும், ஒழுங்குபடுத்தும் நடவடிக்கைகளும் தேவையானது. உற்பத்தியின் மீது கட்டுப்பாடுகளை விதிப்பது அவசியமானது ; அதைப் போன்றே பண்டங்களின் பகிர்விலும் நுகர்விலும் கட்டுப்பாடுகள் விதிக் கப்பட வேண்டும். இவற்றை நிறைவேற்ற நேரடிக் கட்டுப் பாடுகளோடு பணக்கொள்கையும், நிதிக்கொள்கையும் அரசு பின் பற்றுதல் அவசியமாகின்றது.

வளர்ச்சியடையாத நாடுகளில் பரவியிருக்கின்ற சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும், பொருளாதார வேறுபாடுகளையும் நீக்க வேண்டியது இன்றியமையாதது ஆகும். குன்னர் மிர்டால் (Gunnar Myrdal) குறிப்பிடுவதாவது, "சமுதாயத்தில் அமைந் துள்ள பெரிய வேறுபாடுகளை நீக்க மக்களின் மனநிலையில் மாற்றங்கள் தோன்றி உயர்வான கொள்கைகள் பரவுதல் வேண்டும். அரசியல், சமுதாய நிலைகளில் மாற்றம் ஏற்பட நடவடிக்கைகளை மேற்கொள்வது அரசின் தலையாய கடமை யாகும்." [1] அரசின் பரவலான நடவடிக்கைகள் பொருளாதாரத் தையே ஊடுருவும் சக்தி கொண்டவை. பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) கருத்துப்படி, " அரசு சமுதாய நலத் திட்டங்களை

[1] Gunnar Myrdal, Economic Theory and Underdeveloped Regions, p.811.

மேற்கொள்ள வேண்டும்; பொருளாதார அமைப்புக்களைத் தொடங்க வேண்டும். மக்களின் நடவடிக்கைகளில் மாற்றங்கள் ஏற்படுத்தப்படுதல் அவசியமானது; நாட்டின் வளங்களைப் பயன்படுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுதல் தேவையானது. வருவாய் மறுபகிர்வு செய்ய வேண்டும்; பணத்தின் அளவைக் கட்டுப்படுத்த வேண்டும். விலைகளின் ஏற்றத்தாழ்வுகளை நீக்க வேண்டும்; முதலீட்டின் அளவை அதிகரித்து வேலை வாய்ப்புகளைப் பெருகக வேண்டும்." இவ்வகைச் சிக்கல்களை நீக்க வேண்டியது அரசின் முக்கிய பணியாகின்றது. விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு இது உதவும்.

(அ) பொதுப்பயன் பணிகள் (Public Utility Services)

வளர்ச்சியடையாத நாடுகளில் பொது நன்மைப் பணிகளை பெரும்பாலும் அரசுகளே மேற்கொள்கின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கான அடிப்படை வசதிகளாகிய இருப்புப்பாதைப் போக்குவரத்து, சாலைப் போக்குவரத்து, செய்தித்தொடர்பு, நீர்ப்பாசனம், மின்சக்தி உற்பத்தி ஆகியவற்றை வளரச்செய்வது அரசேயாகும். இவற்றிற்கான முதலீடுகள் அதிக அளவில் தேவைப் படுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளின் தனியார் நிறுவனங் கள் இவ்வித அடிப்படை வசதிகளை முன்னேற்றமடையச் செய்யத் தேவையான அதிக மூலதனத்தைக் கொண்டிருப்பதில்லை. மேலும், இவ்வகை முதலீடுகள் பல இடர்களைக் கொண்டவை; நீண்ட காலத்திலேயே நன்மையளிக்கக் கூடியவை. அதிக இலாபங்களைத் தருவதாகவும் இவை அமைய மாட்டா. இக்காரணங்களால் அரசே பொது நன்மைப் பணிகளை மேற்கொள்ள வேண்டும்.

தனியார் துறையில் இவ்விதப் பணிகள் அமைந்திருந்தால், தனியார் துறையினர் முற்றுரிமை நிலையை ஏற்படுத்திக் கொள் வார்கள். சில அவசியப் பொருட்களையும், பணிகளையும் பெற மக்கள் அதிக விலையைக் கொடுக்கவும் வேண்டும். இந்நிலையைப் பயன்படுத்தி தனியார் துறையினர் அப்பொருட்களுக்கும், பணி களுக்கும் அதிக விலையை நிர்ணயித்து விடுவார்கள். மக்களின் வாழ்க்கை நலன் இதனால் பாதிக்கப்படும். அரசே பொதுநலப் பணிகளை உடைமையாகக் கொண்டு நிர்வகித்து வருதல் அவசிய மானது.

முக்கியத்துவ நிலைகளுக்கு ஏற்ப இப்பொதுநன்மைப் பணிகளை அரசு முன்னேற்றமடையச் செய்ய வேண்டும். உடனடியாக நீர்ப் பாசன வசதிகள் தேவைப்பட்டால், முதலில் 'சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள்' (Minor Irrigation Projects) மேற்கொள்ளப்படுதல்

முக்கியமானது. ஆறுகளின் இடையே அணைகளைக் கட்டுவதைவிட, சிறிய நீர்பாசனத் திட்டங்கள் உடனடி நன்மைகளை அளிப்பவை களாகும்.

பொது நன்மைப் பணிகள் எல்லாவற்றையுமே அரசு மேற் கொள்ள வேண்டுமென்பது அவசியமில்லாதது. தனியார் நிறுவனங் கள் சிலவற்றையும் இப்பணிகளைச் செய்வதில் அனுமதிக்கலாம். குறிப்பிட்டதொரு திட்டத்தை அரசு அங்கீகரிக்க, தனியார் நிறுவனம் அதை நிறைவேற்றலாம். அதற்காக அரசு நிதிவசதி களைச் செய்து தரலாம்; நிர்மாணப் பணிகளில் பல வசதிகளையும் அளிக்க முன் வரலாம். ஆனால், அதனுடைய நிர்வாகம் அரசினுல் கட்டுப்படுத்தப்பட வேண்டும். சிறப்பான நிர்வாகத்திற்கு அரசின் தீவிரக் கட்டுப்பாடுகள் இன்றியமையாதவை. முக்கியத்துவ நிலைக்கு ஏற்ப சமுதாய நலப்பணிகளை அரசோ அல்லது தனியார் நிறுவனங்களோ மேற்கொள்ளுதல் வேண்டும்.

நம் நாட்டின் போக்குவரத்து, செய்தித்தொடர்பு வசதிகள் அரசின் உடைமையாகக் கொள்ளப்பட்டு வளர்க்கப் படுகின்றன. பெரிய நாடாகிய இந்தியாவில் இருப்புப்பாதை போக்குவரத்து, விமானப் போக்குவரத்து ஆகியவையும் அரசுடைமையாக உள்ளன. முக்கியத்துவத்தைக் கொண்டுதான் அவை அரசின் உடைமைகளாக இருக்கின்றன. சாலைப் போக்குவரத்து பொது வுடைமையிலும், தனியார்வுடைமையிலும் உள்ளது. ஆனால், சாலைப் போக்குவரத்தின் எல்லா நிலைகளிலும் அரசின் கட்டுப்பாடு கள் உள்ளன. சாலைப்போக்குவரத்தில் தனியாரும் ஈடுபட்டுள்ள மைக்கு வேறொரு காரணத்தைக் கூறலாம். இப்போக்குவரத்தில் ஈடுபட தனியாருக்கு மிக அதிக மூலதனம் தேவையில்லை. இருப்புப் பாதை, விமானப் போக்குவரத்துக்களைத் தனியார் மேற் கொள்வது கடின நிலையைத் தருகின்றது. ஏனெனில், இப்போக்கு வரத்துக்களுக்கு மிக அதிக முதலீடுகள் தேவைப்படுகின்றன.

(ஆ) கல்வி (Education)

ஏழைநாடுகளின் பின்தங்கிய மக்களை முன்னேற்ற கல்வியறிவு வளர்க்கப்பட வேண்டும். மக்களின் உற்பத்தித்திறனைப் பெருக்கவும், புதிய கண்டுபிடிப்புக்களைச் செய்யவும் கல்வி வளர்ச்சி முக்கிய மானது. மக்கள்வள முன்னேற்றத்திற்காகக் கல்வி, ஆரோக்கியம் இவ்விரண்டிலும் அரசு முதலீடு செய்வது வேண்டற்பாலது. உற்பத்தியைச் செய்கின்ற மக்களின் திறன் பெருக வேண்டும். பொருளாதார முன்னேற்றம் கல்வியின்றி முடியாததாகிவிடும். பேராசிரியர் குன்னர் மிர்டால் கூறுவதாவது, "எழுத்தறிவில்லாத மக்கட் தொகையை அதிகம் கொண்டு நாட்டின் முன்னேற்றத்

திட்டங்களைத் தொடங்குவது நன்மை தராது."[1] நாட்டின் வளர்ச்சிக்கு மக்களின் திறன் இன்றியமையாதது. திறமை குறைந்த உழைப்பாளர்கள் நீண்ட நேரம் தங்கள் உழைப்பைத் தந்தாலும் குறைவான தலா வருவாயை மட்டுமே பெறமுடியும். பயிற்சியில்லாத, எழுத்தறிவில்லாத மக்களால் தொழில் நுணுக்கம் மிக்க எந்திரங்களைக் கையாள்வது கடினமாகிறது. கல்வி முன்னேற்றம், பயிற்சி முறை போன்றவற்றில் முதலீடு செய்து உற்பத்தியை அதிகம் பெற முடியும்.

எல்லா முன்னேற்றத் திட்டங்களிலும் கல்வி வளர்ச்சியே அவசியமானதும், அவசரமானதும் ஆகும். சான்றாக, ஈராக் நாட்டிற்கான உலக வங்கியின் குழு' (The International Bank's Mission to Iraq) ஈராக்கில் கல்வியைப் பரவலாக வளர்க்கவும், அடிப்படைக் கல்வியை அடுத்த 15 ஆண்டுகளில் படிப்படியாகக் கட்டாயமாக்கவும், வயது வந்தவர்களின் கல்விக்காகத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கவும் பரிந்துரைத்தது. இதைப் போன்ற மற்றொரு குழு நைஜீரியாவில் (Nigeria) கல்வி வளர்ச்சி ஏற்பட்டு இருந்தாலும், கல்வியின் வளர்ச்சி வீதத்தை உயர்த்த வேண்டுமெனக் கூறியது. அக்குழு தொழில்நுட்பக் கல்வியைப் பரப்பவும், உயர்நிலைக் கல்வியின் அவசியத்தையும் அறிவுறுத்தியது. வேளாண்மை, கால்நடை அறிவியல், காடுகள் போன்றவற்றோடு ஆராய்ச்சி தொடர்புபடுத்தப்பட வேண்டுமெனவும் அது கூறியது.

பொதுக்கல்வி முன்னேற்றத்தின் மூலம் திறமையான உழைப்பின் அளிப்பைக் கூட்டி நாட்டின் உற்பத்தித்திறனை அதிகரிக்கலாம். பலவகைப்பட்ட கல்வித் திட்டங்கள் பரவலாகப் பின்பற்றப்பட வேண்டும். அடிப்படை, உயர்நிலை, பல்கலைக்கழகக் கல்வி முறைகள் அமைந்திருத்தல் அவசியம். தவிர, பயிற்சி நிலையங்கள் தொழில் நுட்ப அறிவை வளர்க்க ஏற்படுத்தப்பட வேண்டும். ஆசிரியர்கள், மருத்துவர்கள், தொழில் வினைஞர்கள், வேளாண்மை நிபுணர்கள், பொறியியல் நிபுணர்கள் எண்ணிக்கையில் பெருக வேண்டும். பயிற்சி பெற்ற திறமையான நிர்வாகிகளும் உற்பத்தியின் உயர்விற்கு உதவுவார்கள். "இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் முன்னேற்றத்தைப் பெற மக்களின் திறன் சிறப்பாகப் பயன்படுத்தப்பட வேண்டும். மக்களின் வளத்தை முற்றிலுமாகப் பயன்படுத்த கல்வி வளர்ச்சிக்கான அடிப்படைத் திட்டங்கள் அவசியமானவை," என மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கை[2] குறிப்பிடுகின்றது. கல்வி போன்ற பலவகைப்

[1] Gunnar Myrdal, An International Economy, p. 186.

[2] Third Five Year Plan, Government of India.

பட்ட, பரவலான துறைகளில் முதலீடு செய்வது வளர்ச்சியடையாத நாடுகளில் அரசினுல் மட்டுமே அதிக அளவில் செய்யப்படுகின்றது.

கல்வியைப் பரப்புவதின் முக்கிய நோக்கம் சமுதாயத்தில் மாற்றங்களை ஏற்படுத்துவதாக இருத்தல் இன்றியமையாதது. சமூகப் பண்பாட்டு, கலாச்சார நிலைகளில் புதுமை புகுத்தப்பட வேண்டும். புதிய அறிவும், திறமையும் கற்பிக்கப்பட வேண்டும். புதியமுறை வளர்ச்சிக்கான ஊக்கிகள் உற்பத்தியின் அளவை அதிகரிக்கும். எவ்வகைக் கல்விமுறைகள் மிக அவசியமானவைகளாகவும், அவசரத் தன்மை கொண்டவைகளாகவும் இருக்கின்றனவோ அவற்றின் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் தருதல் நன்மை பயக்கும். கல்வியின் முன்னேற்றத்திற்கான முதலீடு உடனடி நன்மையைத் தராது. உற்பத்தியின் அளவை உடனடியாகப் பெருக்க இம்முறையால் முடியாது. ஆனுல், கல்வி வளர்ச்சிக்கான முதலீடு நீண்ட காலத்தில் மிக விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும். உதாரணமாக, அமெரிக்காவின் கல்வி வளர்ச்சியே இன்று அந்நாட்டை உலகின் தலைசிறந்த செல்வ நாடுகளுள் ஒன்ருக மாற்றியுள்ளது.

வளர்ச்சியடையாத நாடுகளில் கல்வி வளர்ச்சிக்கான முதலீடு பல நன்மைகளைத் தருகின்றது. இதன் மூலம் உற்பத்தி உயர்வடைகின்றது. முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் மருத்துவர்கள், பொறியியலாளர்கள், ஆசிரியர்கள், நிர்வாகிகள், வேளாண்மை நிபுணர்கள் ஆகியோரின் பணி அதிக அளவு பொருட்களின் உற்பத்திக்கு உதவும். இதனுல் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவும் முடியும்.

ஆனுல், நிதிவசதி குறைந்த வளர்ச்சியடையாத நாடுகளில் கல்வி வசதிகளைப் பெருக்க வாய்ப்புகள் குறைவாகவே உள்ளன. எனவே, முக்கியத்துவ நிலைகளுக்கு ஏற்ப பலவகைப்பட்ட கல்வி முறைகளும் வளர்க்கப்பட வேண்டும். சில பொருளியலறிஞர்கள் கல்வியை நுகர்வுப் பணியாகவும், வேறு சிலர் முதலீட்டுப் பணியாகவும் கருதுகின்றனர். நேரடியாக உற்பத்தியை உயர்த்த கல்வியின் வளர்ச்சிக்கான முதலீடு உதவும்.

நம் நாட்டில் 'வேளாண்மை விரிவாக்க அலுவலர்களால்' (Agricultural Extension Officers) வேளாண்மையில் ஈடுபட்டுள்ள தனியாருவருக்கான உற்பத்தியும், ஒரு ஏக்கருக்கான உற்பத்தியும் கூடியுள்ளன எனலாம். எல்லா மாநிலங்களிலும் வேளாண்மை விரிவாக்கம் பெருவிடினும் பஞ்சாப், ஹரியாஞு, ஆந்திரா, மேற்கு உத்தரப் பிரதேசம், மஹாராஷ்டிரம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்

களில் மிகச்சிறப்பான வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. தொழில் நிலையைக் குறிக்கும்போது, பயிற்சி பெற்ற பொறியியலாளர்கள் இருந்தும் தொழில்களின் வளர்ச்சி மிக விரைவாக இல்லாமையால் வேலையின்மை நிலவுகின்றது. அதிக முதலீட்டைத் தேவையாகக் கொண்ட பொறியியற் கல்வியின் பணியை நாம் சிறப்பாகப் பயன் படுத்திக் கொள்ளவில்லை.

வளர்ச்சியடையாத நாட்டில் பொருளாதாரம் வளரும்போது வேளாண்மையின் முக்கியத்துவம் குறையும். வேளாண்மையில் உள்ள அதிக மக்கட்தொகை தொழிற் துறைக்கு மாற்றப்படும். கிராமப்புறங்களில் 'மறைந்துள்ள வேலையின்மையில்' (Disguised Unemployment) உள்ளவர்கள் தொழில்களில் ஈடுபட பயிற்சிகள் அளிக்கப்பட வேண்டும். உழைப்பிற்குப் பயிற்சியளித்தலின் மூலமே உழைப்பின் பெயர்ச்சியும் ஏற்படும்; திறமை குறைந்த உழைப்பாளர்களும் திறமை மிக்கவர்களாக மாறுவர்.

அணைகளைக் கட்ட அதிக மூலதனம் தேவைப்படுகிறது. அது போன்றே மருத்துவர்கள், பொறியியலாளர்கள், ஆசிரியர்கள், நிர்வாகிகள், வேளாண்மை விரிவாக்க நிபுணர்கள் ஆகியோருக் கான கல்வி, பயிற்சி வசதிகளுக்கும் அதிக மூலதனம் தேவையா கிறது. இவற்றின் மீதான முதலீடு நேரடியாக உற்பத்தியை உயர்த்த உதவும். ஆனால், பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) விவசாயிகளை எழுத்தறிவு பெற்றவர்களாக மாற்றுவது உற் பத்தியை நேரடியாக உயர்த்த உதவாது எனக் கூறுகிறார். அவர் மேலும் குறிப்பிடுவதாவது, "விவசாயிகளை கல்வியறிவு பெறச் செய்ய ஒதுக்கப்படும் மூலதனம் அதிக இலாபத்தைத் தராது. ஏனெனில், அக்கல்வியறிவைக் கொண்டு அவர்கள் அதிக புத்தகங்களையும், செய்திப் பத்திரிக்கைகளையும் மட்டுமே படிக் கின்றனர். ஆனால், சிலவற்றை அவர்கள் முன்னைவிட நன்கு உணர்கின்றனர்."[1]

ஆனால், பேராசிரியர் கால்பிரெய்த் (Prof. Galbraith) இவ்வகை முதலீடு உற்பத்திக்கு உதவும் எனக் கருதுகின்றார். விவசாயிகள் கல்வியறிவு நிரம்பியவர்களாக இருக்க வேண்டுமெனவும், அதற்காக அதிக முதலீடு செய்யப்படுதல் அவசியமெனவும் அவர் வாதிடுகின்றார். அவருடைய வார்த்தைகளில் கூறும்போது, "விவசாயிகள், மற்றும் உழைப்பாளர்களின் கல்வியறிவின்மையை நீக்குதல் அவசியமானது. வேளாண்மை வளர்ச்சிக்கு விவசாயிகள் கல்வியறிவு பெற்றிருத்தல் இன்றியமையாதது. உலகின் எப்பகுதி

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, p. 183.

யிலும் எழுத்தறிவில்லாத விவசாயிகள் முன்னேற்றமடைந்த வேளாண்மையைச் செய்யவில்லை; உலகின் எப்பகுதியிலும் கல்வியறிவு பெற்ற விவசாயிகள் முன்னேற்றமடைந்த வேளாண்மையைச் செய்யாமல் இல்லை.'' கல்வியே அதிக உற்பத்தியைத் தரும் முதலீடு எனலாம். முடிவில் அவர் கூறுவதாவது, "கல்வி என்பது நுகர்வுப் பணியானாலும், உற்பத்திக்கு உதவும் முதலீடு எனவும் கூறலாம்; இவ்வகை முதலீடு அதிக முக்கியத்துவத்தைக் கொண்டதாகும்.''[2] நீண்ட காலத்தில் பயனளிக்கக்கூடிய கல்வி வளர்ச்சி, அதிக மூலதனத்தை முதலீட்டிற்குத் தேவையாகக் கொண்டதாலும், அரசால் முதலீடு செய்யப்படுதல் வேண்டும். கல்வி மேம்பாட்டினால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம் என்பதை வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறுகள் உணர்த்துகின்றன.

திறமையான உழைப்பைப் பெற அடிப்படைக் கல்வியாவது அளிக்கப்பட வேண்டும். உடனடி பொருளாதார முன்னேற்றத்திற்கு நீண்டகாலக் கட்டாயக்கல்வி பயனளிக்காது; நீண்ட காலத்தில் மட்டுமே கல்வி முதலீடுகள் பலனளிப்பவை. ஆனால், குறுகிய காலங்களில் உழைப்பாளர்களுக்குப் பயிற்சியளித்தல் உற்பத்தியைப் பெருக்க உதவுமெனலாம். கல்வி கற்ற பலர் பெருமை தரக்கூடிய பணிகளில் ஈடுபடவே விரும்புகின்றனர். இதனால், வளர்ச்சியடையாத நாடுகளில் கல்வி கற்றவர்களிடையே வேலையின்மைச் சிக்கல் தோன்றுகிறது.

நிர்வாக அறிவும், திறமையும் கொண்டவர்களே கல்வி நிறுவனங்கள் தருதல் வேண்டும். திறமையான நிர்வாகம் அமையாவிடில் முன்னேற்றத் திட்டங்களின் நோக்கங்களை நிறைவேற்ற முடியாது. இவற்றிற்கேற்ப கல்வி முறைகள் பின்பற்றப் படுதல் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளின் வளர்ச்சிக்கும் உதவும்.

### (இ) பொது ஆரோக்கியமும், குடும்பநலத் திட்டமும் (Public Health and Family Planning)

கல்வி பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவது போலவே பொது ஆரோக்கியமும் நன்மை தருவதாகும். உழைப்பின் உற்பத்தித் திறனையும், சக்தியையும் அதிகரிக்க ஆரோக்கியநிலை அவசியமானது. மக்களைப் பீடிக்கும் நோய்கள் மருத்துவ வசதிகளால் நீக்கப்பட வேண்டும். மக்கள் சத்துள்ள உணவைப் பெற அரசு ஆவன செய்ய வேண்டும். கிராமப் புறங்களில் மருத்துவ

[2] J. K. Galbraith, Economic Development in Perspective, pp. 46-49,

மனைகளை ஏற்படுத்துதல் பொது ஆரோக்கியத்தைக் காக்க உதவும். நல்ல வீட்டு வசதிகள், சேரி ஒழிப்பு, கால்வாய்த் திட்டங்கள், குடிநீர் வசதிகள், சுகாதார நடவடிக்கைகள் ஆகியவற்றின் மூலம் மக்கள் ஆரோக்கிய வாழ்வைப் பெறுவர்.

உண்மைத் தலாவருவாயை உயர்த்துவதிலும் மக்களின் ஆரோக்கியம் உதவும். மக்கள் திறமையான உழைப்பைத் தருவது முன்னேற்றத்தை எளிதாக்கும். மக்கட்தொகைப் பெருக்கமும் தேவைப் பெருக்கத்தை அளித்து உற்பத்தியை ஊக்கு விக்கும். ஆரோக்கிய நிலை உயர்வதால் இறப்பு விகிதம் குறைந்து பிறப்பு விகிதம் அதிகரிக்கும். வளர்ச்சியடையாத நாடுகளில், இரண்டாவது உலகப் போருக்குப்பின் இறப்பு விகிதம் மிக அதிக அளவில் குறைந்தாலும் பிறப்பு விகிதத்தில் அதிகக் குறைவு ஏற்படவில்லை. இதன் காரணமாகவே, இந்நாடுகளில் மக்கட் தொகைப் பெருக்கம் மிக அதிகமாக உள்ளது. "மக்கட் தொகைப் பெருக்கம் ஆண்டொன்றிற்கு 1 சதவீதமாக இருந்தால், 50 ஆண்டுகளில் அம்மக்கட்தொகை மூன்றில்-இரண்டு மடங்கு பெருகி விடும்; மக்கட்தொகைப் பெருக்கம் ஆண்டொன்றிற்கு 3 சதவீத மாக இருந்தால் சுமார் 23 ஆண்டுகளில் மக்கட்தொகை இரு மடங்காகிவிடும்."[1]

அரசு கல்வி, பொதுநன்மைப் பணிகளின் வளர்ச்சிக்கு உதவுவது போலவே, பொது ஆரோக்கிய வளர்ச்சிக்கும் வகை செய்ய வேண்டும். கிராமப்புறங்களிலும், நகரப்பகுதிகளிலும் சுகாதார வசதிகள் அரசால் செய்து தரப்படுதல் இன்றியமை யாதது. தேங்கி நிற்கும் கழிவு நீர்கள் வடிக்கப்பட வேண்டும். தொற்று நோய்கள் கட்டுப்படுத்தப் படுதல் வேண்டும். தாய்-சேய் நலவிடுதிகள், மகப்பேறு மனைகள், குழந்தை நல இல்லங்கள், குடும்ப நலத்திட்டங்கள் போன்றவற்றை அதிக அளவில் அரசு ஏற்படுத்துதல் நன்மை பயப்பதாகும். எல்லாவற்றையும்விட, மருத்துவத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நல்ல பயிற்சி யளித்தல் அவசியமானது. இவ்விதத் திட்டமிட்ட முயற்சிகளை அரசு மேற்கொள்வதே சாலப் பொருத்தமுடையது.

வளர்ச்சியடையாத நாடுகளில் பொது ஆரோக்கியம் உழைப் பின் உற்பத்தித்திறனை அதிகரிப்பதால், பயன்படுத்தப்படாத வளங்களைப் பயன்படுத்தியும் ஆக்கத்தின் அளவை அதிகமாகப் பெறலாம். இந் நாடுகளில் மக்கட்தொகை விரைவாகப் பெருகுவ தால், குடும்பநலத் திட்டங்களை மேற்கொள்வது தவிர்க்கமுடியாத தாகும். இறப்பு விகிதம் குறைவதைப் போலவே, பிறப்பு

[1] Meier and Baldwin, Economic Development, p. 377.

விகிதமும் குறைக்கப்படாவிட்டால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இயலாது. முன்னேற்றத்திட்ட முயற்சிகள் மக்கட்தொகை வேகமாகப் பெருகினால் வெற்றியை அளிக்கமாட்டா.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் இறப்பு விகிதமானது முன்னமேயே குறைந்துள்ளது. தற்பொழுது இந்நாடுகளில் எடுக்கப் படவேண்டிய தீர்வு மக்கட்தொகைப் பெருக்கவீதம் ஆண்டொன்றிற்கு ஆயிரத்திற்கு நாற்பது என்றிருக்கும் நிலையை மாற்றி, ஆயிரத்திற்கு இருபது என்று மக்கட் தொகைப் பெருக்கவீதம் அமைய வேண்டும் என்பதேயாகும். விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதே எல்லா நாடுகளின் எண்ணமாகவும் இருக்கின்றது. எனினும், விரைவான வளர்ச்சியைப் பெற, அதிக உயர்வான தலா வருவாயை அடைய, மக்களின் வாழ்க்கைத் தரத்தில் மேம்பாடு ஏற்பட மக்கட்தொகைப் பெருக்கம் கட்டுப் படுத்தப்பட வேண்டும். மக்கட்தொகை பெருகுவதைக் குறைக்க குடும்பநலத் திட்டங்களை மேற்கொள்வதே தலையாய வழியாகும்.

டாக்டர் ஸ்டீபென் எங்க் (Dr. Stephen Enke) என்பவரின் கணக்கெடுப்பின்படி, வளர்ச்சியடையாத நாடுகளில் பிறக்கின்ற ஒரு குழந்தை தன் வாழ்நாள் முழுதும் செய்கின்ற உற்பத்தியை விட, அக்குழந்தை வாழ்நாள் முழுதும் செய்கின்ற நிகர நுகர்வு சுமார் 125 டாலர்கள் அதிகமாக இருக்கும். மக்கட்தொகை மிக்க வளர்ச்சியடையாத நாடுகளில் பிறக்கின்ற ஒரு குழந்தை பொருளாதார ரீதியில் சுமையாகவே உள்ளது.

மக்கட்தொகைப் பெருக்கத்தைக் குறைப்பதன் மூலம் தலா வருவாயை அதிகரிக்கலாம். தலா வருவாயின் உயர்வு பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதை எளிதாக்கிவிடும். மக்கட் தொகைப் பெருக்கத்தை நகர்மயமாக்குதலின் மூலமாகவும், தொழில் மயமாக்குதல் மூலமாகவும் கட்டுப்படுத்தலாம். வாழ்க்கைத்தரம் உயரும்போது பிறப்பு வீதம் குறைவடைவது இயல்பு. சமுதாயப் பண்பாட்டு மாற்றங்களும் மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த இன்றியமையாதவை. ஆனால், இவ்வித மாற்றங்கள் ஏற்பட நீண்ட காலம் பிடிக்கும். வளர்ச்சியடையாத நாடுகளில் வயதில் குறைந்தவர்கள் விகிதம் மொத்த மக்கட்தொகையில் அதிகமாகவே இருக்கும். இந்நாடுகளிலின்றும் மக்களை வேறு நாடுகளுக்குக் குடியேற்றம் செய்வதும் முடியாத நிலையைக் கொண்டுள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளும், பிறநாடுகளும் திறமையுள்ள பணியாளர்களை குடியிறக்கம் செய்வதையே அனுமதிக்கின்றன. வளர்ச்சியடையாத நாடுகளின்

மக்களில் பெரும்பாலோர் திறமையற்ற உழைப்பைத் தரத்தக்க நிலையிலேயே உள்ளனர். இந்நாடுகளில் பிறப்பு, இறப்பு வீதங்களுக்கிடையே உள்ள வேறுபாட்டை நீக்க பிறப்பு வீதத்தைக் குறைப்பது அவசியமானது.

குடும்பநலத் திட்டம் பிறப்பு வீதத்தைக் குறைக்க பெரிதும் உதவும். இந்தியா போன்ற வளர்ச்சியடையாத நாடுகளில் முதன் முறையாக அரசால் குடும்பநலத் திட்டங்கள் மேற்கொள்ளப் பட்டன. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலேயே மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டியதின் அவசியத்தை அரசு உணர்ந்து விட்டது. முதல் ஐந்தாண்டுத்திட்ட அறிக்கை இதுபற்றிக் குறிப்பிட்டதாவது, "மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த பிறப்பு வீதத்தைக் குறைக்க வேண்டும்; நாட்டின் பொருளாதாரத் தேவைகளுக்கு ஏற்ப மக்கட்தொகை ஒழுங்கு படுத்தப்பட வேண்டும். பெரும்பாலான மக்கள் குடும்பநலத் திட்டங்களை மேற்கொள்வதின் மூலமாகவே இதை அடையலாம். குடும்பநலத் திட்டங்களின் மூலம் பணிகளையும், மக்களுக்குத் தேவையான ஆலோசனைகளையும் அளிக்கலாம். இத்திட்டங்கள் தீங்கில்லாதவைகளாக, திறமையுள்ளவைகளாக, எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கவைகளாக இருக்க வேண்டும். தாயின் நலத்தைக் காக்கவும், குழந்தைகளை நல்ல முறைகளில் முன்னேறச் செய்யவும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் இன்றியமை யாதவை. இவ்விதக் குடும்பநலத் திட்டங்களோடு பொது ஆரோக்கியத் திட்டங்களும் பின்பற்றப்பட வேண்டும்."

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் மேலும் இதுபற்றி வலியுறுத்துவதாவது, "திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது முக்கிய நோக்கமாகிறது. நகர்ப்புறங்களிலும், கிராமப்புறங்களிலும் கல்வி முன்னேற்றத்தின் மூலமாகவும், தீவிர நடவடிக்கைகள், அரிய ஆலோசனைகள் மூலமாகவும் பிறப்பு வீதத்தைக் குறைக்க குடும்ப நலத் திட்டங்கள் கைக்கொள்ளப்பட வேண்டும். நாடு முழுதும் பின்பற்றத்தக்க இயக்கமாக இது அமைந்தால் தனி மனிதர்களும் குடும்பங்களும், சமுதாயமும் நல்வாழ்வைப் பெற முடியும்."[1]

குடும்பநலத் திட்டம் பின்வருபவைகளை உள்ளடக்கியதாக இருத்தல் இன்றியமையாதது:

(1) குடும்ப நலத்திட்டங்களைப் பற்றி மக்களுக்குப் போதிப்பது நல்லது. திருமணம், ஆண்-பெண் உறவு, குழந்தை வளர்ப்பு

1 Third Five-year Plan, Govt. of India, p. 675.

போன்றவற்றைப் பற்றித் தெளிவிய அறிவை மக்களி பெற்றிருக்க வேண்டும். இவற்றைச் சமுதாய அமைப்புக்கள், வானொலி, திரைப்படங்கள், இலக்கியங்கள் மூலம் பரப்பலாம்.

(2) குடும்பநலத் திட்டப் பணிகள் அதிக அளவில் கைக்கொள்ளப்படுதல் அவசியமானது. குடும்பத் திட்டப் பணிகளை மருத்துவ, ஆராக்கியப் பணிகளோடு இணைத்துவிடலாம். தொழில்கள் அமைந்திருக்கும் இடங்களிலும், கிராமப் பகுதிகளிலும் குடும்ப நலத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும். கிராம மக்களுக்கு நலத் திட்டங்களைப் பற்றி எடுத்துரைக்க 'நகர்ந்து செல்லும் குழுக்கள்' (Mobile Units) நன்மை பயப்பவைகளாகும். குடும்ப நலத்திட்ட நிலையங்கள் இலவச ஆலோசனைகளை அளிக்க வேண்டும். 'கருத்தடை' (Birth Control) முறைகளைப் பற்றி மக்கள் நன்கு அறிந்திருத்தல் அவசியம். குழந்தைப் பேற்றைப் பற்றிய அறிவை பெற்றோர்கள் பெறவேண்டும். "பாதுகாப்பு மாத்திரைகள்", "லூப் வளையங்கள்", "பாதுகாப்பு நாட்கள்" ஆகியவற்றை அறிந்து பயன்படுத்தினாலும் பிறப்பு விதம் குறைவடையும். அரசின் நிதி உதவியோடு கருத்தடைச் சாதனங்கள் குறைந்த விலைகளில் விற்பனை செய்யப்பட வேண்டும்.

(3) குடும்பநலத் திட்டப் பணியாளர்களுக்குப் பயிற்சியளிக்கும் நிலையங்களை அதிகமாகத் தோற்றுவித்தல் அவசியமானது.

(4) மருத்துவம், மக்கட்தொகைக் கட்டுப்பாடு போன்றவற்றில் ஆராய்ச்சித் திட்டங்கள் விரிவாக்கப் படுதல் வேண்டும்.

(5) கருத்தடைக் கருவிகள் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யப்படுதல் வேண்டும். அவற்றின் அளிப்பு குடும்பநலத் திட்டங்கள் பெருகுவதற்கு ஏற்ப அதிகரித்தல் அவசியம். அவை எளிய, விலை குறைவான, பாதுகாப்பான கருத்தடைக் கருவிகளாகவும் இருக்க வேண்டும்.

(6) டாக்டர் ஸ்டீபென் எங்க் (Dr. Stephen Enke) கருத்துப்படி வளர்ச்சியடையாத நாட்டில் ஒரு குழந்தையின் பிறப்பைத் தடுப்பதற்கான செலவு சுமார் 125 டாலர்களாகும். அவர் பிறப்பு வீதத்தைக் குறைக்க இரு ஆலோசனைகளைக் கூறியுள்ளார்: முதலாவதாக, கருத்தரிக்காமலிருக்கும் பெண்களுக்கு உதவித் தொகைகள் அரசால் அளிக்கப்பட வேண்டும். இரண்டாவதாக, இரண்டு குழந்தைகளுக்குமேல் இல்லாத ஆண்களுக்கும் அரசு உதவித் தொகைகள் வழங்கலாம். அவர்களின் மனைவிகளின் சம்மதத்திற்குப் பின் இலவசக் கருத்தடை அறுவை சிகிச்சை அவர்களுக்கு அளிக்கப்

படலாம். வளர்ச்சியடையாத நாடுகளின் மக்களில் பெரும் பகுதியினர் வறியவர்களாக இருப்பதால், இவ்வித ஊக்க முறைகளின் மூலமாகப் பெரும் வெற்றியை பிறப்பு வீதத்தைக் குறைப்பதில் பெறமுடியும்.

இந்தியாவில் இலவசக் கருத்தடை அறுவை செய்து கொள்பவர்களுக்கு ஊக்கத்தை அளிக்க உதவிப்பணமாக 25 ரூபாய் அளிக்கப்படுகிறது. அதோடு ஊதியத்தோடு ஒரு வார விடுமுறையும் பணியாளர்களுக்குத் தரப்படுகிறது. டாக்டர் ஸ்டீபென் எங்க் குறிப்பிட்ட முதல் முறையை நம் நாட்டில் வேறு ஒரு வகையில் பின்பற்றலாம். குறைந்தது 10 ஆண்டுகளுக்கு பிறப்பைத் தடுக்கும் 'லூப் வளையங்களைப்' பொருத்திக் கொள்ளும் பெண்களுக்கு பண உதவித் தொகைகள் வழங்கப் படலாம். நம் நாட்டில் ஆண்கள் பயன்படுத்தும் 'நிரோத்' போன்ற 'இரப்பர் பாதுகாப்பு உறைகள்' அரசின் உதவியோடு மிகக் குறைந்த விலையில் விற்கப்படுகின்றன. விளம்பரத்திற்காகச் சில மருத்துவ மனைகளில் இலவசமாகவும் அளிக்கப் படுகின்றன.

(7) இறுதியாக, பிறப்பு வீதத்தைக் குறைப்பதில் உள்ள சமுதாய இடையூறுகள் நீக்கப்பட வேண்டும். மணம் செய்யும் வயது உயர்த்தப்பட வேண்டும். பெண்களும் கல்வியறிவு பெற்றவர்களாக மாற வேண்டும். அவர்களுக்கான வேலை வாய்ப்புக்களும் நகர்ப்புறங்களில் அளித்தல் அவசியமானது.

குடும்பநலத் திட்டங்களை ஆதரிப்பவர்களில் சிலர் வளர்ச்சியடையாத நாடுகளில், 'சட்ட பூர்வமாகக் கருச்சிதைவை' (Legal Abortion) அங்கீகரிப்பதை வலியுறுத்துகின்றனர். இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த பின் பத்து ஆண்டுகளில் கருச்சிதைவை சட்டபூர்வமாக ஜப்பான் அரசு ஏற்றுக் கொண்டமையால் ஜப்பானில் பிறப்பு வீதம் பாதிக்கு மேல் குறைந்து விட்டது. சட்ட பூர்வமான கருச்சிதைவின் மூலம் ஜப்பானில் பிறப்பு வீதம் 66 சதவீதம் குறைவடைந்துள்ளதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

இந்தியாவில் ஜப்பானின் முறைகளை முற்றிலுமாக ஏற்க இயலாது. ஏனெனில், ஜப்பான் ஒரு வளர்ச்சியடைந்த நாடு. வளர்ச்சியடையாத நாடுகளில் சமுதாய, மதப்பழக்க வழக்கங்கள் இவ்வகை முன்னேற்றமடைந்த முறைகளைப் பின்பற்றுவதில் பல சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றன. சாதாரணக் கருத்தடைச் சாதனங்களைப் பயன்படுத்தவும் மக்கள் தயங்குகின்றனர். சட்ட பூர்வமான கருச்சிதைவிற்கு மக்கள் எதிர்ப்பும் அதிகமாக இருக்கும். அரசு இதைத் தீவிரமாக நிறைவேற்றினாலும், அரசியல் அமைப்பின் உறுதி பாதிக்கப்படலாம். பலவித மதச்சார்புடைய

மக்கள் கருச்சிதைவைப் பாவமெனத் தவமுகக் கருதுகின்றனர். தாயின் நலத்திற்கு கருச்சிதைவு ஊறு விளைவிக்கும் என்ற அவர் களின் கருத்தை எவரும் மறுக்க இயலாது. வேறு பல எளிய, பாதுகாப்பான பிறப்புக் கட்டுப்பாட்டு முறைகள் இருக்கின்றமை யால் எந்த ஒரு அரசும் கருச்சிதைவை சட்ட பூர்வமாக அங்கி கரிக்கத் தயங்கவே செய்யும்.

பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis) கருதுவதுபடி, அதிகப் பிறப்பு வீதத்தின் அபாயங்களை மக்களிடம் உணர்த்தச் சமுதாயத் தலைவர்கள் முற்படுதல் வேண்டும். இதன் மூலமாக மத, சமுதாய பழக்க வழக்கங்கள் அதிகப் பிறப்பு வீதத்திற்கு எதிரிடையாக மாறும். இதன் வாயிலாகக் கல்வி முன்னேற்றத்தையும், மக்களின் வாழ்க்கைத்தர உயர்வையும் பெறலாம். பெண்களும் குறைந்த அளவு குழந்தைகளைப் பெறுவதில் உள்ள நன்மைகளை உணர்வார் கள். இதற்காக, பிறப்புக் கட்டுப்பாட்டு முறைகளை மக்கள் பின் பற்றும் வகையில் பரந்த விளம்பரங்கள் செய்யப்படுதல் இன்றியமையாததாகும். எல்லா இடங்களிலும் நடவடிக்கைகள் ஒரே சமயத்தில் எடுக்கப்படுதல் அவசியமானதாகும்.

மக்கட்தொகைப் பெருக்கத்தைக் குறைத்து பல நன்மைகளை யும் பெற அரசு கருத்தடைச் சாதனங்களை முதலில் இலவசமாக அளிக்க முன்வரலாம். மக்கள் அவற்றைப் பயன்படுத்தி நன்மைகளை உணர்ந்த பின் அரசு இலவசமாக அளிப்பதைத் தவிர்க்கலாம். கருத்தடை வசதிகள் எளிதில் தேவையான காலங் களில் கிடைக்க வேண்டும். குடும்பநலத் திட்டங்களின் மீது மக்களுக்கு விருப்பு ஏற்படத் தேவையான நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும். பிறப்பு வீதத்தைக் குறைப்பதின் மூலமே மக்களின் ஆரோக்கியத்தைக் காக்க முடியும். திறமையான, தரமான உழைப்பை மக்கள் தர அவர்களின் ஆரோக்கிய நிலை அவசியமானதாகும்.

### (ஈ) வேளாண்மை முன்னேற்றம் (Agricultural Development)

அரசின் முக்கிய பணிகளில் கல்வி, ஆரோக்கியம், பொது நலம் போன்றவை தவிர, வேளாண்மை முன்னேற்றமும் முக்கிய நிலை யைக் கொண்டுள்ளது. இவற்றோடு அரசின் நிதிக் கொள்கையும், பணக்கொள்கையும் சிறப்பாகச் செயல்படுத்தப்பட வேண்டும். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க பலவகைப்பட்ட கொள் கைகள் பின்பற்றப் படலாம் ஆனால், குறைந்த வேளாண்மை உற் பத்திக்கான காரணங்களை ஆராய்ந்து அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். உற்பத்தியை உயர்த்த ஒரு ஏக்கருக்

கான உற்பத்தியை (Yield Per Acre) அதிகரித்து, சாகுபடிக்கு ஏற்ற நிலங்களும் உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட வேண்டும்.

அதிக வேளாண்மை உற்பத்தியைப்பெற உற்பத்தி முறைகளில் மாற்றங்களும், தொழில் நுணுக்க முன்னேற்றங்களும், உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனில் உயர்வும் ஏற்படுதல் அவசியமாகிறது. தொழில்நுணுக்கக் கருவிகளைப் பயன்படுத்த பயிற்சி முறைகளும் தேவைப் படுகின்றன. புதிய கருவிகளும், எந்திரங்களும் உற்பத்தி நிலைகளில் பயன்படுத்த வேண்டும். நிலச் சீர்திருத்தங்களும் உற்பத்தி உயர வழியை ஏற்படுத்தும்

தொழிற்கல்வியின் மூலமாக சாகுபடியில் முன்னேற்ற முறைகள் பின்பற்றப்படும் ; விவசாயிகளின் உற்பத்தித்திறனும் அதிகரிக்கும். விஞ்ஞான ஆராய்ச்சிகள் மூலம் நல்விதைகளையும், உரங்களையும் பெறலாம். கால்நடைப் பராமரிப்பாலும், விவசாயிகள் அதிக வருவாயைப் பெற வாய்ப்புண்டு. வேளாண்மை விரிவாக்கப் பணிகள் மேற்கொள்ளப் படுதல் வேண்டும். நிலவளத்தைக் காத்தல், பயிர்களை அழிக்கும் பூச்சிகளைக் கொல்லும் மருந்துகளைப் பயன்படுத்துதல், நில முன்னேற்றம், இயந்திரமயமாக்கல், பயிற்சி வசதி போன்றவற்றின் மூலமாக அதிக ஆக்கத்தை வேளாண்மையினின்றும் பெறலாம். அடிப்படைக் கல்வியின் மூலமே விவசாயிகள் மாற்றங்களை ஏற்றுக் கொள்வார்கள். உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற ஊக்கமும் அவர்களுக்கு ஏற்படும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மை முக்கிய தொழிலாக இருப்பதோடு, தேசிய வருவாயில் பாதிக்கு மேல் அதிலிருந்தே கிடைக்கின்றது. இருப்பினும், இந்நாடுகளில் வேளாண்மை பின்தங்கிய நிலையிலேயே இருக்கின்றது. பெரும் பகுதி மக்கட்தொகை ஈடுபட்டுள்ள இத்துறை தேசிய வருவாயில் அதிக அளவைத் தருகின்றது எனக் கூறமுடியாது. ஏனெனில், பிற துறைகளில் குறைந்த மக்கட்தொகையே ஈடுபட்டிருந்தாலும், அவற்றின் மூலம் கிடைக்கக்கூடிய தேசிய வருவாய் சுமார் 50 சதவீதம் என்ற அளவில் உள்ளது. சான்றாக, இந்தியாவில் 70% மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர் ; ஆனால் வேளாண்மை மூலம் தேசிய வருவாயில் சுமார் 50% மட்டுமே கிடைக்கின்றது. இதற்கு அடிப்படைக் காரணம் ஒரு ஏக்கருக்கான உற்பத்தி மிகக் குறைவாக இருப்பதேயாகும். நிலங்கள் துண்டுகளாகச் சிதறிக் கிடத்தலும், கடன்வசதிகள் போதா நிலையும், நீர்ப்பாசன வசதிகள் முன்னேறாமையால் பருவ மழையை நம்பியிருக்க வேண்டிய நிலையும், பழைய கருவிகளைக் கொண்டு உற்பத்தி செய்கின்றமையும், நிலத்தில் அதிக மக்கள் அமைந்துள்ளமையும், அதிக வாரமும்,

குத்தகை உறுதியின்மையும், விவசாயிகளின் வறிய நிலையும் குறைந்த வேளாண்மை உறபத்தியையே தருகின்றன.

முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் விவசாயிகள் எதையும் அறியாதவர்களாகவும், எழுத்தறிவில்லாதவர்களாகவும், வறியவர் களாகவும் உள்ளனர். சிறப்பான அமைப்பு முறையைச் சாகுபடி யில் பெற அவர்களால் முடிவதில்லை. நிலத்தில் முன்னேற்றத்தை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணமே அவர்களுக்கு இருப்பதில்லை. அவர்களின் வாழ்க்கை முறைகள் யாவும் பண்பாட்டுப் பழக்க வழக்கங்களாலேயே அமைகின்றன. எனவே, அரசு தன் நடவடிக்கைகள் மூலமாக நிலச்சீர்திருத்தங்களைக் கொண்டுவர வேண்டும். வேளாண்மை முன்னேற்றத்திற்கான திட்டங்களை வகுக்க வேண்டும். திட்டங்களின் வெற்றி வேளாண்மை உற்பத்தி உயர்வையே சார்ந்திருக்கும். அதிக வேளாண்மை உற்பத்தி உணவில் தன்னிறைவு பெறத் தேவையாகிறது. தொழில்களின் முன்னேற்றத்திற்கான கச்சாப்பொருட்களை அளிக்க வேளாண்மை உற்பத்தி பெருக வேண்டும். முன்னேற்றத்திற்கான வசதிகளைப் பெறவும், விலைகளின் உயர்வைத் தவிர்க்கவும், நாட்டின் இயற்கை வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தவும், பயன்படுத்தப் படாத மனித உழைப்பை ஆக்கப்பணிகளில் ஈடுபடுத்தவும் வேளாண்மைத்துறை வளர்ந்து உற்பத்தி உயர வேண்டும்.

முன்னேற்றமடைந்த கருவிகளின்மூலம் உற்பத்தி செய்யப் பட்டால், தனியொருவருக்கான உற்பத்தியின் அளவு அதிகமாக இருக்கும். 'செறிந்த முறைச் சாகுபடி' (Intensive Cultivation) மூலம் ஒரு ஏக்கருக்கான உற்பத்தியின் அளவையும் அதிகரிக்க லாம். வளர்ச்சியடையாத நாடுகளில் எந்திரமயமாக்குதல் மூலமாக வேளாண்மையில் வேறு சில சிக்கல்களும் தோன்று கின்றன. 'மறைந்துள்ள வேலையின்மையில்' அமைந்துள்ள அதிக வேளாண்மை மக்கட்தொகை வேலையின்மையால் பாதிக்கப்படும். ஆகவே, இந்தியா போன்ற நாடுகளில் சிறிய விவசாயிகளுக்கான சிறிய கருவிகளே வேளாண்மை முன்னேற்றத்திற்குப் பொருத்த மானவைகளாகும். இதன் மூலம் உற்பத்தியைப் பெருக்க முடி வதோடு, வேலையின்மைச் சிக்கல் வேளாண்மையில் தோன்றுமலும் தவிர்த்து விடலாம்.

உழைப்புச் செறிந்த (Labour-intensive) உற்பத்திமுறைகளைப் பின்பற்றுவது வேளாண்மையில் வேலையின்மையைத் தவிர்க்க உதவும். உழைப்பைச் சேமிக்கும் (Labour-saving) எந்திரங்களைப் பயன்படுத்துவது வேளாண்மையினின்றும் பல உழைப்பாளர்களை வெளியேற்றுவதால் ஊதியம் உயர்வடையும். வேளாண்மை

யல்லாத பிற துறைகளில் வேலைவாய்ப்புக்கள் பெருகியபின் உழைப்பைச் சேமிக்கும் கருவிகளை வேளாண்மையில் பயன்படுத்தலாம். தொழில் துறைகள், பொதுப்பணித் துறைகள் போன்றவைகளில் வேலை வாய்ப்புக்கள் ஏற்படுத்தப்படலாம். உழைப்பின் பெயர்ச்சி வேளாண்மைத் துறையினின்றும் பிற துறைகளுக்குச் செல்ல இவை உதவும். இக்காரணங்களால்தான் வேளாண்மையும், தொழில் துறையும் ஒன்றையொன்று சார்ந்துள்ளவை எனச் சொல்லப்படுகின்றது.

உழைப்புப் பற்றுக்குறையும், நிலம் அதிகமுள்ள நிலையும் கொண்ட நாடுகளில் எந்திரமயமாக்கி தனியொருவரின் உற்பத்தியை உயர்த்தலாம். மிக முன்னேற்றமடைந்த நாடுகளில் இருந்து தொழில் நுட்பக் கருவிகளை இறக்குமதி செய்து, வேளாண்மை வளர்ச்சியை முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் பெற வேண்டுமென்பது அவசியமில்லை. ஆனால், வளர்ச்சியடையாத நாடுகளின் விவசாயிகள் எந்திரங்களை வாங்கிப் பயன்படுத்த அவர்களின் வறிய நிலை இடமளிப்பதில்லை. மரக்கலப்பைகளுக்குப்பதில் இரும்புக் கலப்பைகளை விவசாயிகள் பயன்படுதலாம். சிறிய விதை விதைக்கும் கருவிகள், மற்றும் சில சிறிய சாகுபடிக் கருவிகளைக் கொண்டே உற்பத்தியின் அளவைக் கணிசமாக உயர்த்த முடியும். மக்கட்தொகைமிக்க வளர்ச்சியடையாத நாடுகளில் முற்றிலும் வேளாண்மையை எந்திரமயமாக்குவதைவிட சிறிய கருவிகளைப் பயன்படுத்துவதே பல வழிகளிலும் நன்மை தருவதாகும்.

நிலவுடைமை முறைகளில் (Land Tenure Systems) சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதும் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க உதவும். நிலவுடைமைகளில் மாற்றங்களை ஏற்படுத்தி குத்தகை முறைகளிலும் மாறுதல்கள் செய்ய வேண்டும். அதிக வாரத்தை நிலவுடைமையாளர்கள் பெறுவதைத் தடை செய்தல் அவசியமாகும். வேளாண்மையை முக்கிய தொழிலாகக் கொண்ட நாட்டில் இவ்விதச் சீர்திருத்தங்கள் இன்றியமையாதவை. நிலத்தில் உள்ள சிக்கலைத் தீர்த்தால்தான் பொருளாதார சமுதாய, அமைப்புக்களில் மாற்றங்களை ஏற்படுத்த முடியும்.

பேராசிரியர் ஸ்ரீமன் நாராயண் (Prof. Shriman Narayan)[1] கிராம அளவில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை கீழ்வருமாறு தந்துள்ளார் :

(1) நீர்ப்பாசன வசதிகளை முற்றிலும் பயன்படுத்தி, நன்மையைப் பெற சிறு வாய்க்கால்களையும் நல்ல நிலையில் பாதுகாக்க

[1] Prof. Shriman Narayan, Trends in Indian planning, pp. 42-43.

வேண்டும். குறைகள் இருப்பின் பழுதுபார்க்கப்பட்டு நீர்ப்பாசன வசதிகள் சிறப்பாக அமைந்திருத்தல் அவசியம்.

(2) பலவகைப் பயிர்களைச் சாகுபடி செய்யும் நில அளவு கூட வேண்டும்.

(3) வெவ்வேறு வகை நல்ல விதைகள் பயன்படுத்தப்பட வேண்டும். அவற்றை விவசாயிகள் அறியச்செய்தல் அவசியமானது.

(4) உரங்களின் அளிப்பு அதிக அளவில் இருத்தல் வேண்டும். அவற்றின் விலைகள் உயர்வாக இருத்தல் கூடாது.

(5) கலப்பு உரங்களும், பசுமை உரங்களும் பயன்படுத்தப் படுதல் வேண்டும்.

(6) பயிர்ப் பாதுகாப்பு, நிலவளப் பாதுகாப்பு, வடிகால் வசதி, நிலங்களை இணைத்தல் போன்ற முன்னேற்றமான வேளாண்மை முறைகள் கைக்கொள்ளப்படுதல் அவசியம்.

(7) கிராமத்தில் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் மேற் கொள்ளப்பட வேண்டும். இத்திட்டங்களைத் தனியாரும் மேற் கொள்ளலாம்; அல்லது சமுதாயக்கூட்டு முயற்சியாலும் அவற் றைச் செய்யலாம்.

(8) முன்னேற்றமடைந்த வேளாண்மைக் கருவிகளைப் பயன் படுத்தும் திட்டம் அமைதல் உற்பத்தியை உயர்த்த உதவும்.

(9) பழங்கள், காய்கறிகள் போன்றவற்றின் உற்பத்தியையும் பெருக்கி விவசாயி அதிக வருவாயைப் பெறலாம்.

(10) கோழிப்பண்ணை, மீன் பிடித்தல், பால்பண்டங்கள் தயாரித்தல் ஆகியவற்றாலும் அதிக வருவாயை விவசாயிகளால் பெற முடியும்.

(11) கால்நடைப் பராமரிப்பு கிராமங்களில் முன்னேற்றம் பெற வேண்டும். நல்லின பசுக்கள், எருதுகள், காளைகள் விவசாயி களுக்குப் பணியாற்றுவதோடு, அதிக வருவாயைத் தரவும் செய்கின்றன.

(12) கால்நடைப் பராமரிப்பிற்கான தீவனங்கள் பயிர்செய்யப் படலாம். கிராமத்திற்குத் தேவையான எரிபொருட்களையும் உற்பத்தி செய்யலாம்.

கிராம உற்பத்தி உயர்விற்கான முயற்சிகள் வெற்றியடைய அரசு விவசாயிகளின் தேவைகளை உடனுக்குடன் பூர்த்திசெய்தல்

வேண்டும். விவசாயிகளும் தங்களுக்கிடையே கூட்டுறவுச் சங்கங்களை அமைத்துக் கொண்டு உற்பத்தி, விற்பனை, வாங்குதல் ஆகிய எல்லா நிலைகளிலும் நன்மையை அடையலாம். விவசாயிகளுக்கும் அரசுக் கும் இடையே நெருங்கிய தொடர்பை ஏற்படுத்துவதாக 'சமுதாய வளர்ச்சித் திட்டம்' (Community Development Programme) அமைய வேண்டும். சமுதாய வளர்ச்சித் திட்ட முறைகளில் நாம் அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பின்பற்றி வருகின்றோம். சமுதாய வளர்ச்சித் திட்டம் பல வழிகளில் வேளாண்மை உற்பத்தியைக் கூட்ட உதவு கின்றது. சிறந்த சாகுபடி முறையைப் பின்பற்றவும், நல்விதைகள் உரங்கள் ஆகியவற்றை அளிக்கவும் இத்திட்டம் வழி வகுக் கின்றது. சாலை வசதிகள், நீர்ப்பாசன வசதிகள், செய்தித்தொடர்பு வசதிகள், கிராமப் புறங்களில் சுகாதார ஆரோக்கியப் பணிகள் ஆகியவைகளையும் அது அளிக்கின்றது. வேளாண்மையைச் சார்ந்த சிறு தொழில்களை வளர்க்கவும் இது உதவும்; மீன் பிடிப்பு, கோழிவளர்ப்பு, பால் பண்டங்கள் உற்பத்தி ஆகியவற்றில் முன் னேற்றம் ஏற்படவகை செய்கின்றது. இவை யாவற்றையும்விட கிராம மக்களின் நோக்கிலேயே இது நல்லதொரு மாற்றத்தைத் தோற்றுவிக்கிறது. அவர்களின் சிந்திக்கும் ஆற்றல் வளர வகை ஏற்படுகிறது. பசி, நோய், அறியாமை, அழுக்குடைமை, வேலை யின்மை போன்றவைகளை எதிர்க்கும் ஆற்றலும் விவசாயிகளுக்கு ஏற்படுகின்றது.

விவசாய முன்னேற்றம் சிறப்பான நிர்வாகத்திலும், அமைப்பு முறையிலும் அமைந்துள்ளது. இந்தியாவில் இதைப்பெற சமுதாய வளர்ச்சித் திட்டம் தொடங்கப்பட்டது. அமைப்பு முறையில், சமுதாய வளர்ச்சித் திட்டம் 300 கிராமங்களைக் கொண்டு 500 சதுர மைல் பரப்பளவைக் கொண்டதாக சுமார் 2 இலட்சம் மக்களை உள்ளடக்கியதாக உள்ளது. ஒவ்வொரு சமுதாய வளர்ச்சித் திட்டமும் மூன்று வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு வட்டாரமும் 100 கிராமங்களைக் கொண்டதாகவும், 150 மைல் முதல் 170 சதுர மைல் பரப்பளவு கொண்டதாக, 60,000 முதல் 70,000 மக்களை உள்ளடக்கியதாகவும் இருக்கும். வட்டார அளவில் சமுதாய வளர்ச்சித் திட்ட நிர்வாகத்தை 'வட்டார வளர்ச்சி அலுவலர்' (Block Development Officer) செய்கிறார். ஒவ்வொரு வட்டாரமும் 2500 முதல் 3500 மக்களை உள்ளடக்கிய தாக 4 முதல் 5 கிராமங்களைக் கொண்டதாகப் பிரிக்கப்படும். வட்டார வளர்ச்சி அலுவலரே பஞ்சாயத்து இராஜ்ய அமைப்பில் 'பஞ்சாயத்து ஒன்றிய ஆணையாளராகவும்' (Panchayat Union Commissioner) பணியாற்றுகின்றார். இவருடைய கட்டுப் பாட்டிற்குள் விரிவாக்க அலுவலர் (Extension Officer), கிராம நிலைகளில் 'கிராம சேவக்குகளும்' (Gram Sevakas) செயல்

படுகின்றனர். கிராம சேவக்குகள் கல்வி, பயிற்சி, விரிவாக்கம் போன்றவைகளை மக்களிடம் பரப்ப உதவுகின்றனர். அவர்கள் அரசிற்கும் மக்களுக்கும்இடையே தொடர்பை ஏற்படுத்துகின்றனர். விவசாயிகளின் மனைவிமார்களுக்கு உதவ 'கிராம சேவகிகளும்' (Gram Sevikas) பணி செய்கின்றனர். இவர்கள் பயிற்சி பெற்ற பெண்களாவர். வேளாண்மை முன்னேற்றத்திற்குத் தேவையான வசதிகளும், நிதி உதவிகளும் அரசால் அளிக்கப்படுகின்றன. நாளடைவில் கிராம மக்கள் தங்கள் சுயமுயற்சியால் உற்பத்தி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

வேளாண்மை முன்னேற்றத் திட்டங்கள் வெற்றியடைய அரசு நிலச்சீர்திருத்தங்களை நிறைவேற்றுதல் அவசியமாகும். நிலச் சீர்திருத்தங்களின் இரு முக்கிய நோக்கங்களை இந்தியத் திட்டக் குழு (Indian Planning Commission) குறிப்பிட்டது :

(i) வேளாண்மை உற்பத்தி உயர்விற்குத் தடையாக உள்ளவைகளை நீக்க வேண்டும். இதற்கு பழைய வேளாண்மை அமைப்பு முறையில் மாற்றம் தேவை. வேளாண்மைப் பொருளாதாரத்தை விரைவாக முன்னேற்றமடையச் செய்து அதிக அளவு உற்பத்தியையும், உற்பத்தித் திறனையும் பெற்று விடலாம்.

(ii) வேளாண்மைப் பொருளாதாரத்தில் உள்ள நீதிக்குப் புறம்பான சுரண்டல்களைக் களைய வேண்டும். உழுபவனுக்கு உறுதியளித்து சமுதாயத்தில் அவனுக்குச் சமநிலை அளிக்கப்பட வேண்டும். கிராம மக்களுக்கு முன்னேற வாய்ப்புக்கள் ஏற்படுத்தித் தருதல் வேண்டும்.

முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நிலச் சீர்த்திருத்தங்களின் இயல்புகளாக சில அமைந்திருந்தன. அவையாவன :

*(1)* நிலக்குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்கள்.

*(2)* அரசிற்கும், நிலத்தில் உண்மையாக உழைப்பவர்களுக்கும் இடையே உள்ள நடுவர்களை நீக்குவது.

*(3)* நில உச்ச வரம்பை நிர்ணயித்தல் (Ceiling on Land Holdings).

*(4)* வேளாண்மை புனரமைப்பை துண்டு நிலங்களை இணைப்பதன் மூலமும், கூட்டுறவுப் பண்ணைகளின் (Co-operative Farming), கூட்டுறவு கிராம நிர்வாகத்தின் (Co-operative Village Management) மூலமும் பெறுதல்.

இந்த இயல்புகளைக் கீழ்க்கண்டவாறு சற்று விளக்கமாக ஆராயலாம்:

(1) திட்டங்களின் வாயிலாக நிலக்குத்தகைமுறை சீர் திருத்தப்படுகிறது. நான்காவது ஐந்தாண்டுத்திட்ட அறிக்கை அத்திட்ட காலத்தில் கீழ்க்காணும் சீர்திருத்தங்கள் செய்யப்படு மெனக் குறிப்பிடுகின்றது :

(i) குத்தகை நிலங்களைத் திரும்பப் பெற முடியாமல், நிலை யான குத்தகைக்கு விடுதல்.

(ii) குத்தகையாளர்கள் விரும்பி நிலத்தைத் திருப்பித் தரும் போது, அரசு அல்லது உள்ளாட்சி மன்றங்கள் நில உடைமை யாளர்கள் அதைப்பெறாத வகையில் வேறு யாருக்காவது ஒதுக்க வேண்டும்.

(iii) பண்ணைகளில் வீடுகள் கட்டி வாழும் குத்தகையாளர் களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும்.

(iv) பாதுகாப்புச் சட்டங்கள் துணைக் குத்தகையாளர் களுக்கும் செயல்படுத்தப்படுதல் வேண்டும்.

(v) தவறான வழிகளில் குத்தகையாளர்களை வெளியேற்று பவர்களுக்குத் தண்டனை அளிக்கப்படுதல் வேண்டும்.

நிலக்குத்தகை முறை நம் நாட்டில் பல காலமாக இருக்கிறது. நிலத்தை உடைமையாகக் கொண்டவர்கள் ஒரு சிலராகவும், அதைச் சாகுபடி செய்பவர்கள் வேறு சிலராகவும் உள்ளனர். நிலமற்ற விவசாயிகள் எண்ணிக்கையில் அதிகமாக உள்ளனர். நிலத்தின் தேவை பெருகி குத்தகையும் அதிகரிக்கின்றது. நிலக் குத்தகை முறையை நெறிப்படுத்த பல சட்டங்கள் இயற்றப் பட்டன. நாட்டின் பல மாநிலங்களிலும் நியாய அளவு குத்த கையை வரையறுக்கும் சட்டங்களும், குத்தகையாளர்கள் நிலத்தை வாங்க வாய்ப்பளிக்கும் சட்டங்களும், குத்தகையாளர்கள் நிலை யான உற்பத்திப் பணிகளை மேற்கொள்ள இழப்பீட்டுத் தொகை பெறுவதற்கான சட்டங்களும் கொண்டுவரப் பட்டன. நிலக்குத் தகை இதன் மூலம் நெறிப்படுத்தப்பட்டது.

குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்களின் மூலம் குத்தகையாளர் களுக்குப் பாதுகாப்பு கிடைத்தது. நியாய வாரமானது நிர்ணயிக்கப் பட்டது. கூலியாட்களுக்குக் குறைந்த அளவு கூலியை நிர்ணயிக்கும் சட்டங்களும் கொண்டு வரப்பட்டன. குத்தகையாளரிடம் உள்ள நிலமானது நிலவுடைமையாளரின் சொந்தச் சாகுபடிக்குத் திரும்பப்

பெறப்படலாம்; அவ்வாறு திரும்பப் பெறும்போது குறிப்பிட்ட அளவு நிலக்குத்தகையாளரின் சாகுபடிக்கு அளிக்கப்பட வேண்டும். வாரத்தைத் தவருமல் கொடுத்துவரும் குத்தகையாளரிடமிருந்து நிலத்தைத் திரும்பப் பெற இயலாது. இவ்வித நன்மைகள் குத்தகையாளருக்கு அளிக்கப்படுகின்றமையால் அவர் ஊக்கத்தோடு உற்பத்தியைப் பெருக்குகின்ருர்.

குத்தகையாளர்கள் நிலத்தை வாங்கும் உரிமையைப் பெற்றிருந்தாலும்,அவர்கள் குறைந்த வருவாயைக் கொண்டுள்ளமையால், நிலத்தை உடைமையாகப் பெற முடிவதில்லை. குத்தகையாளர்கள் நில உடைமையாளர்களாக மாறினுல்தான் உற்பத்தியில் உண்மையான உயர்வு ஏற்படும். இதனுல்தான், மூன்ருவது ஐந்தாண்டுத்திட்டம் தன்னுடைய பரிந்துரையில் மாநில அரசுகள் நிலவுடைமைகளைப் பெற்று அவற்றைக் குத்தகையாளர்களுக்கு மாற்றலாம் ; குத்தகையாளர்கள் நிலங்களின் விலையை ஆண்டு தோறும் சிறிது சிறிதாகச் செலுத்தி நிலவுடைமையாளர்களாக மாறலாம் எனக் கூறியது.

வாரங்களைப் பொறுத்த வரையில் வளர்ச்சியடையாத நாடுகளில் அவை பழக்க அளவிலேயே அமைகின்றன. . மேலும், அவை பணமாக அளிக்கப்படாமல், உற்பத்திப் பொருட்களின் ஒரு பகுதியாகத் தரப்படுகின்றது. இந்தியாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் உற்பத்தியில் $\frac{1}{4}$ முதல் $\frac{1}{5}$ பங்கை நியாய வாரமாக நிர்ணயம் செய்தது.

நிலகுத்தகைச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்துவதில் வளர்ச்சியடையாத நாடுகளில் சில இடையூறுகள் உள்ளன:

முதலாவதாக, குத்தகையாளர்கள் சட்டங்களின் மூலம் அவர்களுக்குக் கிடைத்த உரிமைகளை அறியாதவர்களாக உள்ளனர்.

இரண்டாவதாக, சட்டத்தின் மூலம் தங்கள் உரிமைகளைக் காத்துக் கொள்ள அவர்கள் தயங்குகின்றமைக்கு நிலப்பிரபுக்களின் அச்சுறுத்தும் நிலையும் ஒரு காரணமாகும். மேலும், குத்தகையாளர்கள் கடனை அவர்களிடமிருந்து பெற்று திருப்பித்தர முடியாத நிலை ஏற்படுகின்றமையால், தங்கள் சட்ட உரிமைகளைப் பெறுவதற்குத் தயங்குகின்றனர்.

இறுதியாக, சட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள அதிக செலவு செய்ய வேண்டியது அவசியமாகிறது. நீண்ட காலம் பிடிக்கும் இந்நடவடிக்கைகளை மேற்கொள்ள வறிய குத்தகையாளர்களால் முடிவதில்லை.

இக்காரணங்களால், மாநில அரசுகள் தீவிர கொள்கைகளைப் பின்பற்றி நிலகுத்தகைச் சீர்திருத்தங்களை விரைவில் செயல்படுத்த வேண்டும்.

(2) வேளாண்மையில் தீர்க்கப்படாமல் உள்ள சிக்கல் நிலவுடைமை ஆகும். வேளாண்மையில் நேரடியாக ஈடுபடாதவர்கள் அதிக அளவு இலாபத்தைப் பெறும்போது, நிலத்தைச் சாகுபடி செய்பவர்கள் குறைந்த இலாபத்தையே பெறுகின்றனர். குத்தகையாளர்கள் உற்பத்தியை உயர்த்தினுல், அதற்கேற்ப குத்தகையின் அளவையும் அதிகமாக நிலவுடைமையாளருக்குக் கொடுக்க வேண்டும். இதனுல், உற்பத்தியை உயர்த்த வேண்டுமென்ற ஊக்கத்தை அவர்கள் இழந்து விடுகின்றனர். விவசாயிகளுக்கும் அரசிற்கும் இடையே நேரடித் தொடர்பானது இருத்தல் அவசியமாகிறது.

விவசாயிகள் நிலத்தை உடைமையாகப் பெற்ருல்தான் ஊக்கத்தோடு உற்பத்தியில் ஈடுபடுவார்கள். நிலப்பிரபுக்கள் குத்தகையாளர்களைச் சுரண்டுவதாகவும் சொல்லப்படுகின்றது. நிரந்தர வேளாண்மை முன்னேற்றங்களைச் செய்ய குத்தகையாளர்கள் முன்வருவதில்லை. நிலப்பிரபுக்களை நீக்குவதின் மூலமே குத்தகையாளர்களின் நிலையை உயர்த்த முடியும். வேளாண்மை உற்பத்தியும் உயர்வடையும். ஆனுல், அரசு இதை மேற்கொள்வதில் சில இடர்ப்பாடுகள் இருக்கின்றன. இதை மேற்கொள்ள அதிக நிதி வசதி அரசிற்குத் தேவைப்படுகின்றது. நிலப்பிரபுக்களிடமிருந்து நிலங்களைப்பெற அவர்களுக்கு 'இழப்பீட்டுத்தொகை' அரசால் அளிக்கப்பட வேண்டும். வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் இழப்பீட்டுத் தொகைகளை அளிப்பதற்குத் தேவையான நிதிநிலையைக் கொண்டிருப்பதில்லை. இந்தியாவின் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டமும் அரசின் நிதிவசதிக் குறைவால்தான் இழப்பீட்டுத் தொகைகளை நிலப்பிரபுக்களுக்கு அளித்து, நிலவுடைமைகளை குத்தகையாளர்களுக்கு மாற்றுவது கடினமாகிறது எனக் குறிப்பிட்டது. இவ்வித கடின நிலைகள் அமைந்திருப்பதால்தான், வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் நிலச்சீர்திருத்தங்களை மேற்கொள்வது உடனடி வெற்றியை அளிப்பதில்லை.

(3) நில உச்சவரம்பை நிர்ணயித்தல்

அதிக அளவு நிலத்தை உடைமையாகக் கொண்டவர்கள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளனர்; நிலமற்ற விவசாயிகள் மிக அதிக எண்ணிக்கையில் இருக்கின்றனர். ஒருவர் உச்ச நிலையில் எந்த அளவிற்கு நிலத்தை வைத்துக்கொள்ளலாம் என்பதை

வரையறை செய்வதை பொருளியலாளர்களும், அரசியல் தலைவர்களும் வலியுறுத்தினர். இவ்வாறு வரையறை செய்து அதை அரசு நிறைவேற்றினால்தான், நிலச்சீர்திருத்தங்கள் வேளாண்மை உற்பத்தியை உயர்த்த உதவுமென அவர்கள் கருதினர்.

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நில உச்சவரம்புச் சட்டம் எந்த மாநிலத்திலும் இயற்றப்படவில்லை. ஆனால், இரண்டாவது திட்ட காலத்திற்குள் 15 மாநில அரசுகள் நில உச்சவரம்புச் சட்டங்களை இயற்றிவிட்டன. நில உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பதற்கான காரணங்கள் பல சொல்லப்படுகின்றன :

(1) எல்லா விவசாயிகளும் தங்களுடைய உடைமையாக குறைந்த அளவு நிலத்தையாவது பெற்றிருக்க விரும்புகின்றனர். அவர்களிடம் மிகுதியான 'நிலப் பசியானது' (Land Hunger) உள்ளது. 'உழுபவனுக்கே நிலத்தை உடைமையாக்க வேண்டுமென்பது' இன்றைய அரசின் கருத்தாக அமைந்து, அது முற்றிலுமாகச் செயல்படுத்தப்படவில்லை. விவசாயிகளின் நிலப் பசியைத் தீர்க்க நில உச்ச வரம்பு நிர்ணயிக்கப்பட்டு, அதற்குமேல் இருக்கும் நிலத்தை அவர்களுக்கு பிரித்தளிக்க வேண்டும்.

(2) நில உச்சவரம்பின் மூலம் உற்பத்தியையும் பெருக்கலாம். வேலையின்மை நம் நாட்டில் இருப்பதாலும், நிலத்தின் அளவை மக்கள் விகிதத்தோடு ஒப்பிடும்போது மிகக் குறைவாக இருப்பதாலும், வேளாண்மையை முற்றிலும் எந்திரமயமாக்க முடியாததாலும் 'செறிந்த முறைச் சாகுபடியை' (Intensive Cultivation) மேற்கொள்வதே சிறந்ததாகும். நில உச்சவரம்பு சிறு நிலவுடைமைகளைத் தோற்றுவிக்கும். அவற்றில் செறிந்த முறைச் சாகுபடி முறைகளைப் பின்பற்றி ஆக்கத்தை அதிகரிக்கலாம்.

(3) சமதர்மத்தை நிலைநாட்டவும் நில உச்சவரம்பு உதவும். மிகுதியான நிலத்தைக் கொண்டவர்களிடமிருந்து நிலத்தைப் பெற்று, நிலமற்றவர்களுக்கு அளித்தல் சமதர்மத்தை ஏற்றுக்கொண்டுள்ள ஒரு நாட்டில் இன்றியமையாதது. சமுதாயத்தில் உள்ள செல்வப் பங்கீட்டின் ஏற்றத்தாழ்வுகளை நீக்குதல் சமதர்மத்தின் ஒரு நோக்கமாகும். பலர் வாடும்போது, சிலர் மட்டும் வாழ சமதர்மம் அனுமதிக்கக்கூடாது.

(4) நிலத்தை சரியான வழிகளில் பயன்படுத்தவும் நில உச்சவரம்பு உதவும். உச்சவரம்பின் மூலம் கிடைத்த உபரி நிலத்தை கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்கப் பயன்படுத்தலாம். நில உச்சவரம்பைச் செயல்படுத்துவதற்கு முன்பிருந்த உற்பத்தி

யைக் காட்டிலும், உச்சவரம்பைச் செயல்படுத்திய பின்பு உற்பத்தி உயரும்.

(5) மக்கள் வருவாய்களில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கவும் நில உச்சவரம்பு நிர்ணயம் உதவும். பல வளர்ச்சியடையாத நாடுகளில் பெரும்பகுதி மக்கட்தொகை வேளாண்மைத் துறையிலேயே அமைந்துள்ளது. இந்நிலையில் அதிக அளவு நிலத்தைக் கொண்டவர்களும், குறைந்த அளவு நிலத்தைக் கொண்டவர்களும், நிலமற்றவர்களும் இருந்தால் வருவாய்களில் அவர்களுக்கிடையே வேறுபாடுகள் அமைந்திருக்கும். இவ்வேறுபாடுகளைக் களைய நிலத்தை ஓரளவு சமமாகப் பங்கிட அரசு முயல வேண்டும். அதற்கு நில உச்சவரம்பு பெருமளவு உதவுகின்றது.

நில உச்சவரம்பிற்கு எதிரிடையான கருத்துக்களும் நிலவுகின்றன. எனினும், சமதர்மச் சமுதாயத்தை ஏற்படுத்த உதவும் முக்கிய முறைகளில் இதுவும் ஒன்றாகத் திகழ்கின்றது. சரியாகப் பயன்படுத்தப்படாத, நிலப்பிரபுக்களிடம் உள்ள நிலங்களைப் பெற்று, நிலமற்ற விவசாயிகளிடம் அளித்தால் உற்பத்தி உயரும் என உறுதியாகக் கூறலாம். ஆனால், அதிக அளவு முதலீடு செய்து திறமையாக நிர்வகிக்கப்படுகின்ற காபி, தேயிலை, இரப்பர், பழத்தோட்டங்கள், சர்க்கரைத் தொழிற்சாலைகளின் கரும்புப் பண்ணைகள், தனித்தேர்ச்சி பெற்ற கால்நடைப் பண்ணைகள் ஆகியவைகளின்மீது உச்சவரம்பு விதித்தால் உற்பத்தி பாதித்து விடும். எனவே, இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இவற்றிற்கு உச்சவரம்பினின்றும் விலக்களிக்கப் பரிந்துரைத்தது.

நில உச்சவரம்பு நிர்ணயம் நம் நாட்டில் அதிக வெற்றியைப் பெறவில்லை. ஏனெனில், இது சட்டமாக்கப்பட்டுச் செயல்படுத்தும் முன் நிலவுடைமையாளர் தன் குடும்ப உறுப்பினர்கள் மீது உடைமையை சட்ட அடிப்படையிலேயே பதிவு செய்துவிடுகின்றார்; அல்லது வேறு சில உறவினர்களும் நிலத்தைப் பெறுகின்றனர். நிலமற்ற விவசாயிகளுக்கு நிலத்தை அளிப்பதிலும் சில சிக்கல்கள் உள்ளன. அவர்கள் சாகுபடியை மேற்கொள்ளத் தேவையான விதைகள், உரங்கள், கருவிகள் போன்றவைகளும் அளிக்கப்பட வேண்டும். அவர்களுக்குத் தேவையான நிதியையும் அரசு அளித்தல் தவிர்க்க முடியாதது. இதற்குத் தீர்வாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் கூட்டுறவுப் பண்ணைமுறைகளைத் தொடங்கலாமென்று ஆலோசனை கூறியது. எந்த அளவிற்கு நில உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட வேண்டும், எந்த அளவிற்கு இழப்பீட்டுத் தொகை நிலவுடைமையாளர்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென்பதையும் கணக்கிடுவது கடினமாகிறது.

இந்தியாவில் நிலச்சீர்திருத்தங்கள் எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியாக பின்பற்றப்படவில்லை. நில உச்சவரம்பு நிலைகளிலும் மாநிலங்களுக்கிடையே வேறுபாடுகள் உள்ளன. நிலத்தின் வளம் மாறுபடுகின்ற காரணத்தினால் இவ்வேறுபாடுகள் இருக்கின்றன எனப்படுகின்றது. ஆயினும், எல்லா மாநிலங்களிலும் ஒரேவிதமான நிலச்சீர்திருத்தங்களை மேற்கொள்வதே சிறப்பான வேளாண்மை முன்னேற்றத்திற்கு உதவும்.

இந்தியாவின் பல மாநிலங்களிலும் நில உச்சவரம்புச் சட்டங்கள் இயற்றப்பட்டு அவை செயல்படுத்தப்படுகின்றன. மாநில அரசுகள் இதுவரை சுமார் 20 லட்சம் ஏக்கர் நிலத்தை உச்சவரம்பின் மூலம் பெற்று பகிர்ந்தளித்துள்ளன. இதுவரை தமிழ்நாட்டில் 20,000 ஏக்கரும், மேற்கு வங்காளத்தில் 7.77 இலட்சம் ஏக்கரும், ஜம்மு-காஷ்மீரில் 4.5 இலட்சம் ஏக்கரும், உத்தரப் பிரதேசத்தில் 2.23 இலட்சம் ஏக்கரும், மஹாராஷ்டிரத்தில் 1.63 இலட்சம் ஏக்கரும், மத்தியப் பிரதேசத்தில் 67,000 ஏக்கரும், குஜராத்தில் 39,000 ஏக்கரும், அஸ்ஸாமில் 34,000 ஏக்கரும் நில உச்சவரம்பு விதிப்பின் மூலம் கிடைத்துள்ளன.

உச்சவரம்பின் மூலமாக எதிர்பார்த்த நன்மைகள் கிடைக்கவில்லை. இதற்கு முக்கிய காரணம் நில உச்சவரம்புச் சட்டங்களை நிறைவேற்றுவதிலும், செயல்படுத்துவதிலும் ஏற்பட்ட கால தாமதமேயாகும். சட்டங்கள் நிறைவேற்றப்படுமுன் நிலப்பிரபுக்கள் நிலங்களை தங்கள் குடும்பத்தினர் மீதோ, உறவினர் மீதோ எழுதிவைத்து விடுகின்றனர். எனவே, உச்சவரம்பைச் செயல்படுத்துவதில் அரசு தீவிரமான, திறமையான நடவடிக்கைகளை கால தாமதமின்றி எடுக்க வேண்டும்.

(4) இறுதியாக, நம் நாட்டின் வேளாண்மை வளராத நிலையில் உள்ளமைக்கு நிலங்களை உட்பிரிவுப்படுத்தலும், துண்டாடப்படுதலும் ஒரு காரணமாகும். நிலங்களை உட்பிரிவு படுத்துதலை சட்டங்களின் மூலமாகத் தடுக்க வேண்டும். துண்டாடப்பட்ட நிலங்களை ஒருங்கிணைக்கவும் சட்டங்கள் நிறைவேற்றப்படலாம். கூட்டுறவுப் பண்ணை முறைகளையும் விவசாயிகள் பின்பற்ற தீவிர நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும்.

இவற்றின் மூலமாகவே வேளாண்மை புத்தாக்கம் பெற்று, புதிய நல்வாழ்வை விவசாயிகளுக்கு அளிக்க முடியும். இந்தியாவில் நிலங்கள் உட்பிரிவுபடுத்தப்பட்டு பல இடங்களிலும் சிதறிக் கிடக்கின்றன. இதற்குக் காரணமாக மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக இருப்பதைக் கூறலாம். பரம்பரை நிலச்சொத்துரிமை இருப்பதால் குடும்ப நிலையானது குடும்பத்தினரிடையே பிரித்

தளிக்கப்படுகின்றது. நிலத்தை உடைமையாகக் கொண்டிருப் பவர்களுக்குச் சமுதாயத்தில் தனி மதிப்பு அமைந்துள்ளதால், எல்லோரும் நிலவுடைமையைப் பெற விரும்புகின்றனர். பணவீக்க நிலையால் நிலத்தின் மதிப்பும் உயர்ந்துகொண்டே செல்கின்றது.

அதிக மக்கட்தொகை கொண்ட வளர்ச்சியடையாத நாடு களில் இந்நிலையே அமைந்துள்ளது. 'நிலவுடைமை ஒருங்கிணைப்பின்' (Consolidation of Land Holdings) மூலமும், நிலவுடைமை ஒருங் கிணைப்பு வசதிகள் மூலமும், காலச் சேமிப்பு, நில முன்னேற்றம், உழைப்புச் சிக்கனம், மற்றும் சில வசதிகள் மூலமும் வேளாண்மை யில் அதிக ஆக்கத்தைப் பெற முடியும். நிலவுடைமை ஒருங் கிணைப்பைச் செய்ய திறமையான, நேர்மையான, நிதிவசதி கொண்ட அமைப்பு முறை அவசியமானது. நிலவுடைமையாளர் களைக் கட்டாயப்படுத்துவதின் மூலமே இதைப் பெறலாம். நம் நாட்டில் கட்டாய நிலவுடைமை ஒருங்கிணைப்பு நல்ல வெற்றி யைப் பெற்றுள்ளது. இனி நிலங்கள் துண்டாடப்படுவதைத் தடுக்க, குறிப்பிட்ட குறைந்த அளவிற்குக் கீழ் நிலங்களை உட்பிரிவு படுத்தக் கூடாது என அரசு தடைவிதிக்க வேண்டும்.

இந்தியாவில் கூட்டுறவுப் பண்ணை முறை நல்ல நிலக்கொள் கையாகும். ஆனால், வளர்ச்சியடையாத எந்த ஒரு நாட்டிலும் இதை வெற்றிகரமாக நிறைவேற்றுவது கடினமாகும். மக்களின் சமுதாயநோக்கு இவ்வித மாற்றத்திற்கு இடமளிப்பதில்லை. மக்கள் இவ்வித அடிப்படை மாற்றத்தை விரும்ப மாட்டார்கள். இதன் மூலம் உற்பத்தி பாதிக்கப்படவும் வாய்ப்புண்டு. இதைத் தவிர்க்க முதலில் 'சேவை கூட்டுறவுச் சங்கங்கள்' (Service Co-operatives) வேளாண்மைக் கருவிகளையும், விதைகளையும், உரங்களையும் அளிக்க வேண்டும். படிப்படியாக கூட்டுறவு முறை உழுதல், விதை விதைத்தல், அறுவடை செய்தல், விற்பனை செய்தல் போன்ற வேளாண்மையின் எல்லா நிலைகளுக்கும் விரிவுபடுத்தப் படலாம்.

அரசு நிலச்சீர்திருத்தங்களைச் செய்வதோடு, வேளாண்மை விளைபொருட்களின் விலைகளில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளையும் கட்டுப்படுத்த வேண்டும். விலைகளை நிலைப்படுத்த அரசு நட வடிக்கைகளை மேற்கொள்ளுதல் அவசியமானது. விலைகளை நிலைப் படுத்துதல் என்பது விலைகளைக் குறைத்தல் என கருதக் கூடாது. வேளாண்மைப் பொருட்களின் விலைகள் குறைந்தால், விவசாயிகள் ஊக்கத்தை இழந்து விடுவார்கள். உற்பத்தி பாதிக்கப்படும். எனவே, உற்பத்தி பாதிக்கப்படாத வகையில் விலைகள் சிறிது உயர்ந்து செல்ல அரசு அனுமதிக்கலாம். விலைகள் மிகக்குறைவடையும் நிலை ஏற்படும் போது, அரசு குறைந்த பட்ச விலைகளையாவது விவசாயி கள் தங்கள் விளைபொருட்களுக்குப் பெற உறுதியளிக்க வேண்டும்.

உத்தம அளவில் (Optimum Holding) நிலங்கள் அமைந்திருந்தால், உற்பத்தியின் அளவை அதிக உயர்வுபெறச் செய்யலாம். நிலக்குத்தகை முறையில் மூன்று சிக்கல்கள் அமைந்துள்ளன என்று ஐக்கிய நாடுகளின் அறிக்கை (United Nations Report) கூறுகின்றது. அவையாவன :

(i) குத்தகையாளர்கள் உற்பத்தியைப் பெருக்குவதில் குறைந்த ஊக்கத்தையே கொண்டுள்ளனர். அதிக உற்பத்தியை அவர்கள் செய்தாலும், எவ்விதச் செலவையும் ஏற்காத நிலவுடைமையாளருக்கு அதிகரித்த உற்பத்தியின் ஒரு பகுதி அளிக்கப்படுகின்றது.

(ii) உற்பத்தியின் பெரும் பகுதியை நில உடைமையாளருக்கு அளிக்க வேண்டியுள்ளதால், பராமரிப்பு அளவிலேயே குத்தகையாளர் விளைபொருட்களைப் பெறுகிறார். முதலீடு செய்வதற்கான மூலதனம் அவரிடம் இருப்பதில்லை.

(iii) நிலமானது செல்வமாக அமைந்துள்ளது ; மூலதனச் சேமிப்பு உற்பத்திக்கான முதலீடாக்கப்படுவதில்லை.

குத்தகையாளர்களால் வாரமானது பண்டங்களாக அளிக்கப்படுகிறது. வாரம் பணமாக அளிக்கப்பட்டால் குத்தகையாளர்கள் அதிக உற்பத்தியைச் செய்ய ஊக்கம் பெறுவர். வேளாண்மைப் பொருட்களின் விலைகள் உயர்ந்துகொண்டே செல்கின்ற காரணத்தால் அவர்கள் வாரத்தை எளிதில் செலுத்தி விடலாம். மேலும் உற்பத்தியை அதிகரித்தால் அதிக பண வருவாயைப் பெறலாம் என்ற ஊக்கமும் அவர்களுக்கு ஏற்படும்.

எகிப்தில் 1952-ஆம் ஆண்டின் நிலச்சீர்திருத்தின்படி நில உச்ச வரம்பு நிர்ணயிக்கப்பட்டு, அதன்மூலம் கிடைத்த நிலங்கள் நில மற்றவர்களுக்கு அளிக்கப்பட்டன. குத்தகையாளர்கள் நிலவுடைமையாளர்களுக்குக் கொடுக்க வேண்டிய குத்தகையின் அளவும் அரசால் நிர்ணயிக்கப்பட்டது. நிலவுடைமையைக் கொண்டவர்களே உற்பத்தியைச் செய்தால்தான் 'விற்பனை உபரியை' (Marketable Surplus) அதிகரிக்கலாம்.

சோவியத் ரஷ்யாவின் கூட்டுப் பண்ணை (Collective Farming) முறையும், அரசின் பண்ணை (State Farming) முறையும் உற்பத்தியை உயர்த்த பெரிதும் உதவியுள்ளன. அவ்வித பெரிய மாற்றங்களை இன்றைய வளர்ச்சியடையாத பல நாடுகளில் கொண்டு வருதல் கடினமானது. சோவியத் ரஷ்யாவில் பொதுவுடைமைக் (Communism) கொள்கை பின்பற்றப்படுகின்றமையால் அரசின்

நடவடிக்கைகள் தீவிரமாக உள்ளன. எல்லாக் கொள்கைகளிலும் ரஷ்ய அரசு வெற்றியையும் பெறமுடிகிறது. ஆனால், குடியரசு முறையை கைக்கொண்டுள்ள பல முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில், தீவிரமான அரசின் நடவடிக்கைகளையும், பெரிய மாற்றங்களையும் மக்கள் விரும்ப மாட்டார்கள்.

இந்தியாவில் நாம் சமதர்ம (Socialism) முறையைப் பின் பற்றி 'கலப்புப் பொருளாதார முறையையும்' (Mixed Economy) ஏற்றுக்கொண்டுள்ளோம். குடியரசு முறையில் ஆட்சி அமைந்தி ருப்பதாலும், மக்களை அரசு கட்டாயப்படுத்துதல் கடினமாகிறது. புரட்சிகரமான மாற்றங்கள் வேளாண்மையிலோ, தொழில் துறை யிலோ வளர்ச்சியடையாத நாடுகளில் ஏற்படாமைக்கு அரசியல் கொள்கைகளும் காரணமாகின்றன.

பெரிய அளவில் அமைந்துள்ள நிலவுடைமையில் கூலிக்குப் பணியாற்றுகின்ற உழைப்பாளரின் உற்பத்தித்திறனைவிட, சிறிய நிலவுடைமையில் உடைமையாளரே பணியாற்றினால் அவரின் உற் பத்தித்திறன் உயர்வாக இருக்கும். இதனால் ஆசிய நாடுகளிலும், இலத்தீன் அமெரிக்க நாடுகளிலும் நிலச்சீர்திருத்தங்கள் மூலம் பெரிய நிலப்பண்ணைகள் பகுக்கப்பட்டு சிறிய குடும்பப் பண்ணை களாக (Family Holdings) மாற்றப்பட்டுள்ளன.

நிலச்சீர்திருத்தங்கள் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. உலக நாடுகளில் அரசியல் கொள்கைகளும், அமைப்புக்களும் மாறுபடு கின்ற காரணத்தால்தான் நிலச்சீர்திருத்தங்களிலும் வேறு பாடுகள் அமைந்துள்ளன. சமுதாய அமைப்பிற்கு ஏற்றவாறும் அவை மாறுபடுகின்றன. நிலவுடைமை ஒருவரின் சந்ததியினருக்குச் செல்வதைத் தடுத்தால் நிலங்கள் உட்பிரிவு படுத்தப்படுதலையும், துண்டாடப்படுதலையும் தவிர்க்கலாம். ஒருவரிடமே அதிக பரப் பளவுள்ள நிலம் உடைமையாக இருப்பதையும் தடைசெய்ய வேண்டும்.

அரசின் கால்வாய்த் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலமும் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கலாம். சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் உள்ள இடங்களில் இவ்வசதிகளைச் செய்தல் இன்றி யமையாதது. இத்திட்டங்களை அரசு மேற்கொள்வதின் மூலம் வேளாண்மையில் உள்ள 'மறைந்துள்ள வேலையின்மையை' நீக்க லாம். 'பலநோக்கு நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்கள்' (Multi-Purpose River Valley Projects), வெள்ளத்தடுப்பு, மின்சார உற்பத் தியைப் பெருக்குதல் போன்றவைகளும் அதிக உற்பத்திக்கு உதவு பவைகளாகும். முன்னேற்றமடைந்த சாகுபடி முறைகளைப் பின்

பற்றுவதற்கு முன், சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் வேளாண்மை உற்பத்திக்கு எடுத்துக்கொள்ளப்படுதல் வேண்டும். உதாரணமாக, இந்தியாவின் மூன்று பலநோக்குத் திட்டங்களால் 1656-57-ஆம் ஆண்டிற்குள் 6 மில்லியன் ஏக்கர் புதிய நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி கிடைத்தது. பாகிஸ்தானில் இரண்டு நீர்ப்பாசனத் திட்டங்கள் 48,00,000 ஏக்கர் புதிய நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவர உதவின. ஒரு நாட்டில் சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் யாவும் பயன்படுத்தப்பட்டால்தான் உயர்ந்த உற்பத்தியை பெற முடியும்.

ஆசியா, ஆப்பிரிக்கா, இலத்தீன் அமெரிக்கா போன்ற நாடுகளில் சாகுபடிக்கு ஏற்ற, ஆனால் சாகுபடியில் இல்லாத நிலங்கள் ஏராளமாக உள்ளன. 'உலக வங்கியின் குழுவும்' (International Bank Mission) மலேயாவில் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளத்தக்க நிலங்கள் உள்ளதாகக் குறிப்பிட்டது. பல நாடுகளிலும் நீர்ப்பாசன வசதிகள் பெருக்கமடையாத காரணத்தால்தான் சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள்யாவும் வேளாண்மை உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுவதில்லை. நில அரிப்பு, நிலத்தின் உப்புத்தன்மை ஆகியவற்றை நீக்கியும் அதிகச் சாகுபடி நிலங்களைப் பெறலாம்.

வேளாண்மைப் பொருட்களின் விற்பனைமுறை திருத்தப்பட வேண்டும். பொருட்களைச் சேமிக்க 'கிட்டங்கி' வசதிகள் தேவை. தரகர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட வேண்டும். இந்நிலைகளில் கூட்டுறவு முறைகள் விவசாயிகளுக்குப் பெரிதும் நன்மை பயக்கும். நல்ல வேளாண்மைப் பொருட்களின் விற்பனை முறைக்கு முன்னேற்றமடைந்த போக்குவரத்து வசதிகள் தேவை. வேளாண்மை விரிவாக்கப் பணிகளும் உற்பத்தியை உயர்த்த உதவும் லேவாதேவிக்காரர்கள் பெறும் அதிக வட்டி வீதமானது கட்டுப்படுத்தப் படவேண்டும். இதன் மூலம் விவசாயிகளின் கடன் சுமையை அதிக அளவு குறைக்கலாம்.

இந்தியா, பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளின் திட்டங்களிலும் வேளாண்மைக்கே முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இந்தியாவில் 'சமுதாய வளர்ச்சித் திட்டமும்' (Community Development Programme), பாகிஸ்தானில் 'கிராம வேளாண்மை, தொழில் வளர்ச்சித் திட்டமும்' (Village Agricultural and Industrial Development Programme) வேளாண்மையை மேலும் முன்னேற்றமடையச் செய்ய மேற்கொள்ளப்பட்டன. 1954-55 முதல் 1959-60 வரை இலங்கை அரசின் முன்னேற்றத் திட்டச் செலவுகளில் 37 சதவீதம் வேளாண்மைக்காகச் செலவிடப்பட்டது. இப்போது சாகுபடியில் அமைந்துள்ள நிலத்தில் மூன்றில் இரு பகுதி

தேயிலை, இரப்பர், தேங்காய் போன்றவை உற்பத்தி செய்யப்படுகின்றன. உணவு உற்பத்திக்குப் போதுமான நிலம் அங்கு அமைந்திருக்கவில்லை. 1957-இல் ஏற்றுமதிப் பயிர்களின் உற்பத்தியைப் பாதிக்காமல் உணவு உற்பத்திக்கான நிலத்தை 25 சதவீதம் உயர்த்தத் திட்டமிடப்பட்டது. நீர்ப்பாசன வசதிகள் புதிய நிலங்களுக்குச் செய்து தரப்பட்டன.

மலேயாவில் அரசின் முதலீட்டுத் திட்டத்தில் 1955 முதல் 1959 வரை முதலீட்டின் அளவில் 25% வேளாண்மைக்கு ஒதுக்கப்பட வேண்டுமென உலக வங்கிக் குழு பரிந்துரைத்தது. வளர்ச்சியடையாத நாடுகள் முன்னேற்றத்தைப் பெற நிலவளம், கனிவளம், வனவளம், மக்கள்வளம் ஆகிய எல்லாவற்றையும் முற்றிலும் பயன்படுத்த வேண்டும். ஜமைக்காவில் (Jamaica) உற்பத்தியைப் பெருக்கவும், 'மறைந்துள்ள வேலையின்மையை' நீக்கவும் பத்தாண்டுத் திட்டத்தின் மூலம் வேளாண்மை முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. நிலவளத்தைக் காக்கவும், நீர்ப்பாசன வசதிகளுக்காகவும் அரசு புதிய கொள்கைகளைக் கைக்கொண்டது.

'உருக்வே' (Uruguay) நாட்டிற்கான உலக வங்கியின் குழு வேளாண்மை, கால்நடை முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டுமென கருத்து தெரிவித்தது. உற்பத்திச் செலவைக் குறைக்கவும், போக்குவரத்து வசதிகளை வளர்க்கவும், விற்பனை வசதிகளைப் பெருக்கவும் அக்குழு பரிந்துரைத்தது. காடுகளை அழிக்கவும், வேளாண்மைப் பொருட்களைச் சேமிக்கும் வசதிகளையும் ஏற்படுத்த வேண்டுமென அது கூறியது. ஈராக் (Iraq) நாட்டிற்கான குழு 1952 முதல் 1957 வரை அரசின் மொத்தச் செலவுகளில் 40 சதவீதம் வெள்ளக் கட்டுப்பாட்டிற்கும், நீர்ப்பாசன வசதிகளுக்கும், வடிகால் வசதிகளுக்கும், தானியச் சேமிப்பு வசதிகளுக்கும், வேளாண்மை வங்கியை ஏற்படுத்தவும், வேளாண்மை எந்திரங்கள் வாங்கவும், நிர்வாகத்திற்கும் செலவிடப்பட வேண்டுமென தன் பரிந்துரையில் குறிப்பிட்டிருந்தது. நைஜீரியாவிற்கான (Nigeria) குழு விரிவாக்கம், ஆராய்ச்சி, கணக்கெடுப்பு போன்றவற்றை வேளாண்மையில் மேற்கொள்ளப்பட வேண்டுமெனக் கூறியது. விஞ்ஞான அடிப்படையில் வேளாண்மை மேற்கொள்ளப்பட வேண்டுமெனவும், பயிர்களில் ஏற்படக்கூடிய நோய்களைத் தடுக்கவும், உற்பத்தியை ஊக்குவிக்கும் நடவடிக்கைகளும் பின்பற்றப்படுதல் அவசியமென அக்குழு கருத்து தெரிவித்தது.

இவ்வித நிலைகளில் சமுதாய பொருளாதார அமைப்பு முறைகள் அரசால் மாற்றப்படுகின்றன. அம்மாற்றங்களின் மூலம் பொருளா

தார முன்னேற்றம் பெறப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றத்தில் அரசின் பங்கு மிக முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. அரசின் கொள்கையும், அமைப்பு முறையுமே முன்னேற்றத்தைப் பெற பெரிதும் உதவுகின்றன. அரசு இலாப நோக்கின்றி பல பொதுநலப் பணிகளைச் செய்கிறது. கல்வி வளர்ச்சிக்கான நடவடிக்கைகளை மேற்கொள்கிறது; பொது ஆரோக்கியத்தைக் காத்து குடும்பநலத் திட்டங்களை நிறைவேற்றுகிறது. எல்லா பொருளாதாரத் துறைகளின் முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக உள்ள வேளாண்மை வளர்ச்சிக்கும் அரசு உதவுகிறது. அரசின் பண, நிதிக் கொள்கைகள் ஒரு நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த எவ்வித முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளன என்பதை வலியுறுத்துவது அவசியமில்லாததாகும்.

முடிவுரை

வளர்ச்சியடைந்த மேலைநாடுகளின் முன்னேற்றத்தில் அரசு முக்கிய நிலையை வகித்தது எனக்கூற இயலாது. குறிப்பாக, இங்கிலாந்தின் பொருளாதார முன்னேற்றத்தில் அரசுக்குப் பெரும் பங்கு உண்டு எனக்கருத முடியாது. சட்ட ஒழுங்கை நிலை நிறுத்தும் அரசுகளாக அவை இருந்தன. அவற்றால் பொருளாதார, சமுதாய அவசிய வசதிகளும் செய்து தரப்பட்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்கு அரசின் நடவடிக்கைகள் பெரிதும் உதவியுள்ளன. எனினும், வளர்ச்சிக்கான தொடக்கம் தனியார் துறையிடமிருந்தே ஏற்பட்டது. வளர்ச்சியடைந்த நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் பல தலைமுறைகளுக்குப் பிறகுதான் பெறப்பட்டது.

இன்றைய வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அரசின் கொள்கைகளின் மூலம், வளர்ச்சியடைந்த நாடுகள் பல தலைமுறைகளுக்குப் பிறகு பெற்ற முன்னேற்றத்தை, சில ஆண்டுகளில் பெற்று விடலாம். தற்பொழுது வளர்ச்சியடைந்த நாடுகளிலும் அரசின் நிலை அவசியமானதாகவே கருதப்படுகின்றது. அரசு பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துகிறது. தனியார் சொத்துக்களைக் காக்கின்றது. பொதுநலப் பணிகளாகிய கல்வி, போக்குவரத்து, செய்தித்தொடர்பு, ஆரோக்கிய வசதிகள் போன்றவற்றை அளிக்கின்றது. முற்றுரிமை நிலைகளைக் கட்டுப்படுத்துகின்றது. நுகர்வோரின் நலன்கள் காக்கப்படுகின்றன. வாணிகச் சுழல்கள் தடுக்கப்படுகின்றன. நிதி, பணக் கொள்கைகளின் மூலம் பொருளாதார நடவடிக்கைகள் சீர்ப்படுத்தப் படுகின்றன. வேலை வாய்ப்புக்கள் மக்களால் பெறப்படுகின்றன. புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டு, அச்சிட்டு வெளியிடப்படுகின்றன. தனியார் துறையில் உற்பத்தித் திட்டங்களை வகுக்க இவை உதவுகின்றன.

சில முக்கிய பணிகளை அரசு அளிப்பது தவிர்க்க முடியாதது. ஏனெனில், அப்பணிகளைத் தனியார் துறைகள் அளிப்பதில்லை. பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் போக்கு வரத்து, செய்தித்தொடர்பு, நீர்ப்பாசனம், மின்சாரம் போன்ற வசதிகள் தேவையான அளவிற்குக் கிடைப்பதில்லை. இவற்றில் முதலீடு செய்யவும் தனியார் தயங்குவர். இம்முதலீடுகளின் மூலம் குறைந்த இலாபத்தையே பெற இயலும். இம்முதலீடுகள் மறைமுகமாக சமுதாயத்திற்கு நன்மை பயப்பன. அதிக அளவு மூலதனத் தேவைகளைக் கொண்டவைகளாகவும் இவை இருக் கின்றன. மிகக்குறைந்த முதலீட்டாளர்களே அதிக மூலதனத்தைக் கொண்டிருப்பர். இவ்வகை முதலீடுகளின் மூலம் கிடைக்கும் இலாபமும் நீண்டகாலத்திற்குப் பின்னரே பெறத்தக்கது. வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் முயல்வோர், தங்கள் மூலதனத்தை நீண்ட காலத்தில் இலாபத்தைத் தரக்கூடிய துறை களில் முதலீடு செய்ய மாட்டார்கள். வியாபாரம், வீடு கட்டுதல், ஊக வாணிபம் போன்றவற்றில் முதலீடு செய்து கொள்ளை இலாபத்தை அவர்கள் பெறுகின்றனர். குறைந்த அளவு இலாபத்தை நீண்ட காலத்தில் தரத்தக்க முதலீடுகளைச் செய்ய அவர்கள் ஊக்கம் பெறுவதில்லை. எனவே, இவ்வகை முதலீடுகளைச் செய்வது அரசின் கடமையாகும்.

பண மூலதனத்தை விட மக்கள் மூலதனம் பொருளாதார வளர்ச்சிக்கு மிகுந்த பலனளிக்கக் கூடியது. கல்வி, பயிற்சி, ஆரோக்கியம் ஆகியவற்றின் மூலம் உழைப்பின் உற்பத்தித் திறனைப் பெருக்கலாம். தொழில் முயல்வோர் கல்வி, மருத்துவம் போன்ற வைகளின் முன்னேற்றத்திற்கு முதலீடு செய்ய மாட்டார்கள். அதனால் அரசு கல்வி, ஆரோக்கியம், பயிற்சி போன்றவை முன்னேற முதலீடு செய்தல் வேண்டும்.

தனிமனிதன் தொழில் முறையிலும் (Sole Proprietorship), கூட்டாளி முறையிலும் (Partnership), கூட்டுப்பங்கு நிறுவனத் திலும் (Joint-stock Company) உள்ள குறைபாடுகளை நீக்க அரசின் நடவடிக்கைகள் அவசியமாகின்றன. மக்களின் நன்மையைக் கருதி 'கூட்டுறவு அமைப்புக்களும்' (Co-operative Organizations), 'அரசின் நிறுவனங்களும்' (State Enterprises) தொடங்கப்படுகின்றன.

பொருளாதார, அரசியல், சமுதாய, மதச் சீர்திருத்தங்களை ஏற்படுத்தி அவற்றை நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்த அரசின் சிறப்பான கொள்கைகள் இன்றியமையாதவைகளாகும்.

ஒரு நாட்டின் அரசு உள்நாட்டில் சட்டம் ஒழுங்கை நிலை நிறுத்துவதோடு, அண்டை நாடுகளின் தாக்குதல்களினின்றும்

நாட்டைக் காப்பதும் முக்கியமானது. மக்கள் உண்மையான உழைப்பைத்தர அரசு அவர்களை ஊக்குவிக்க வேண்டும். சேமிப்பு, சிக்கனம் போன்றவற்றை அவர்களிடம் ஏற்படுத்த வேண்டும். உற்பத்தி பாதிக்கப்படாமல் செல்வ, வருவாய்ப் பங்கீடுகளில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் களைய வேண்டும்; உற்பத்திக் காரணிகளைப் பெயர்ச்சியுடையவைகளாக மாற்ற வேண்டும்; புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்த வேண்டும். பொருளாதார அமைப்புக்களும் சமுதாய அமைப்புக்களும் எதிரிடையாக இருந்தால் பொருளா தார முன்னேற்றத்தைப் பெற முடியாது.

அரசின் விலைக் கொள்கைகள் நுகர்வோருக்கும், உற்பத்தி யாளர்களுக்கும் நன்மை தருவதாக அமைதல் அவசியமாகும். இயற்கை வளங்கள் காக்கப்பட்டு நன்கு பயன்படுத்துதல் வேண்டும். நகரங்கள் திட்டமிட்டு அமைக்கப்படுதல் நல்லது; ஆடம்பரப் பொருட்களின் உற்பத்திக்கான முதலீடுகளைக் குறைக்க லாம். தொழில்கள் சில இடங்களில் மட்டும் செறிந்திருக்காமல், நாடு முழுதும் பரந்திருக்க வேண்டும். அவசியப் பொருட் களின் உற்பத்திக்கான முதலீடுகள் அரசால் ஊக்குவிக்கப்படுதல் வேண்டும். பொருளாதாரத்தின் பல துறைகளின் வளர்ச்சி யிலும் சமநிலை தேவையானதாகும். உதாரணமாக, தொழில் முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளித்து வேளாண்மைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படாவிட்டால், தொழில் வளர்ச்சி தடைப்படும். ஏனெனில், பொருளாதாரத்தின் பல துறைகளும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன.

சமதர்ம நோக்கைக் கொண்ட ஒரு நாட்டில் குடியாட்சி அமைந்திருந்தால், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது கடினமானது. சமதர்மச் சமுதாயத்தில் எல்லோருடைய வருவாயும் சமமாக இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. திறமை, கல்வி, கடின உழைப்பு, இடர்தாங்கும் திறன், விருப்பம் ஆகியவற்றிற்கு ஏற்ப ஊதிய வருவாய் வேறுபாடுகள் அமைந் திருக்கலாம். சேமிப்பு பெருக வேண்டுமென்றால், 'சேமிக்கும் விருப்பம்' (Propensity to Save) அதிகம் கொண்டுள்ள செல்வர் களிடம் அதிக வருவாய் செல்ல வேண்டும்; 'நுகரும் விருப்பம்' (Propensity to Consume) அதிகம் கொண்டுள்ள குறைந்த வருவாய் பெறுபவர்களிடம் சேமிப்பு அதிகம் ஏற்படாது. ஆனால், அரசு இந்நிலையை ஆதரித்தால் எல்லா மக்களும் சமமான வாழ்க்கைத் தரத்தைப் பெற முடியாது. அரசு குறைந்த வருவாய் பெறுபவர் களின் உண்மை வருவாயை உயர்த்தி, அவர்களுடைய 'சேமிக்கும் விருப்பத்தை' அதிகரிக்க வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் நிலப்பிரபுக்களின் வருவாயைக் குறைத்தல் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்காது. ஏனெனில், அவர்கள் தங்கள் வருவாயின் பெரும்பகுதியை உற்பத்திக்குதவாத ஆடம்பரப் பொருட்களையே வாங்கப் பயன்படுத்துகின்றனர். ஆனால், இலாபத்தைக் குறைத்தால் பொருளாதார முன்னேற்றம் தடைபடும். இலாபத்தின் அளவிற்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு. இலாபத்தின் அளவைக் குறைத்தால் தனியார் ஊக்கத்தோடு முதலீடு செய்யமாட்டார்கள். வளர்ச்சியடைந்த நாடுகளில் ஊதியத்தைக் கட்டுப்படுத்தி, இலாபத்தை அதிகரித்து, அதன் மூலமே விரைவான பொருளாதார முன்னேற்றத்தை அவர்கள் பெற்றனர்.

சமதர்மச் சமுதாயத்தை அமைக்கும் நாட்டில், அரசின் செலவினங்களின் பெரும்பகுதி வறியவர்களின் நுகர்வுக்காகவே செலவிடப்படுகின்றது. ஆனால், விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெற, உற்பத்தித் துறைகளில் அரசின் மூலதனம் முதலீடாக்கப்பட வேண்டும். நாட்டில் அமைந்திருக்கக் கூடிய எல்லா உற்பத்தி வசதிகளையும் பயன்படுத்த அரசு ஆவன செய்தல் தேவையானது.

அரசு முதலீட்டு வீதத்தை உயர்த்த வேண்டும். வரிவிதிப்பு முறையாலும், பணவீக்கத்தாலும் சேமிப்பு வீதத்தை அதிகரிக்கலாம். வேலையின்மை, 'மறைந்துள்ள வேலையின்மை' நிலைகளை மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்தலாம். உழைப்பாளர்களுக்குப் பயிற்சியளிக்க தனியார் நிறுவனங்கள் அதிக அளவு முன்வராத காரணத்தால், அரசு அப்பணியை ஏற்க வேண்டும்.

ஆனால், மேம்பாடடைந்துவரும் நாடுகளில் அரசின் அமைப்பு பொதுவாக நேர்மையற்றதாக உள்ளது. எனவே, அரசு தன் நடவடிக்கைகளினால் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இராமல், சமுதாயத்திற்கான அவசியப் பணிகளை மட்டும் மேற்கொண்டால் போதுமானது என்று கூறுவோரும் உண்டு. மேலும், வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் குறைந்த நிதி வசதிகளைக் கொண்டவைகளாகவே உள்ளன. எனவே, பொருளாதார முன்னேற்றத்திலும் அவை முக்கிய பங்கேற்க முடியாது.

### பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் தலையீட்டிற்கு எதிரிடையான வாதங்களின் ஆய்வு

சோவியத் ரஷ்யாவின் விஞ்ஞான முன்னேற்றத்தை ஆராயும் போது, அரசின் நிர்வாகம் கண்டுபிடிப்புகளிலும், பரிசோதனைகளிலும் பெருமளவு வெற்றியைத் தரவில்லை என்றே கூறத்

தோன்றுகிறது. அமெரிக்கா மற்றும் பல ஐரோப்பிய நாடுகளோடு ஒப்பிடும்போது இவ்வாறு இருப்பினும், பல அறிவியல் சாதனைகளை ரஷ்யர்கள் இன்று செய்து வருகின்றமைக்கு ரஷ்ய அரசும் ஒரு காரணமாக அமைகின்றது.

பொதுவாக, தனியார் துறையைக் காட்டிலும் அரசு அதிக நிதி வசதியை கொண்டுள்ளது. எனவே, அது ஆராய்ச்சிகளிலும், பரிசோதனைகளிலும் அதிகச் செலவு செய்ய முடிகின்றது. பல வித இடர்களைத் தாங்கும் சக்தியும் பொது நிர்வாகத்தில் அமைந்துள்ளது. தனியொருவர் இவ்வித இடர்களைத் தாங்க முன் வர மாட்டார். தனியார் துறைகளில் பரிசோதனைகளுக்கும், ஆராய்ச்சிகளுக்கும் வாய்ப்புகள் குறைவாக உள்ளன. வளர்ச்சி யடைந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஆராய்ச்சி கள், பரிசோதனைகள் மூலம் பெறப்பட்ட கண்டுபிடிப்புகள் பெரிதும் உதவி உள்ளன. எனவே, வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் பல கண்டுபிடிப்புகளைப் பெற ஆராய்ச்சிகளுக்கு ஊக்கமளிக்க வேண்டும். ஆனால், இன்றைய மேம்பாடடைந்துவரும் நாடுகள் வளர்ச்சியடைந்த நாடுகளின் கண்டுபிடிப்புகளையும், தொழில் நுட்ப உற்பத்தி முறைகளையும் மட்டும் பின்பற்றி வருகின்றன.

அரசின் பணியாளர்கள் திறமையற்றவர்களாகவும், நேர்மை யற்றவர்களாகவும் இருப்பதாகக் குறை கூறப்படுகின்றது. அரசின் ஊழியர்கள் திறமையற்றவர்கள் எனக் கருத முடியாது. தனியார் துறைகளில் நேர்மை ஓரளவு நிலைத்திருக்கிறது. நேர்மை ஓரளவு இருக்கின்றமைக்கு ஊழியர்கள் பெறும் உயர்ந்த ஊதியமும் ஒரு காரணமாகும். தனியார் துறைகள் அதிக இலாபத்தைப் பெறும் நிலைகளையே கொண்டுள்ளன. எனவே, தனியார் நிறு வனங்கள் அதிக ஊதியத்தையும் ஊழியர்களுக்கு அளிக்க முடி கின்றது. மேலும், தனியார் நிறுவனங்களில் ‘கையூட்டுகள்’ அளிக்கப் படுவதில்லை எனக் கூற இயலாது. தனியார் நிறுவனங்கள் பெறும் கையூட்டுகள் பொதுமக்களுக்கு விளம்பரமாவதில்லை. ஏனெனில், ஒரு குறிப்பிட்ட தனியார் நிறுவனத்தோடு மக்கள் யாவரும் தொடர்பு கொண்டிருக்க மாட்டார்கள். அரசிற்கும், மக்களுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு யாவரும் அறிந்ததே. அரசு அதிக இலாபத்தைப் பெற இயலாத துறைகளில் இலாப நோக்கில்லாமல் ஈடுபடுவதால், அதிக ஊதியத்தை ஊழியர்களுக்குக் கொடுக்க முடிவதில்லை. ஆனால், அதிக இலாபத்தைத் தரும் வாணிபங்களை மேற் கொள்ளும் போதும், அத்துறை ஊழியர்களுக்கு அதிக ஊதி யத்தை அளிப்பதில்லை. அதன் காரணமாகத் திறமையான உழைப் பையும் ஊழியர்களிடமிருந்து பெறமுடிவதில்லை. அரசின் நிறுவன ஊழியர்களின் திறமையற்ற பணிகள் எளிதில் எல்லோராலும்

உணரப்படுகின்றன. தனியார் நிறுவன ஊழியர்கள் திறமையற்ற பணிகளைத் தந்தாலும் அது பலராலும் உணரப்படுவதில்லை.

தனியார் துறை பொருளாதாரத்தில் இலாப நோக்கு அமைந்துள்ளது. பொதுத்துறை நிறுவனங்களில் இலாப நோக்கானது அமைந்திருக்கவில்லை. தனியார் நிறுவனங்களில் ஒரு சில நன்மைகள் இருப்பினும், அவற்றை மட்டுமே வளர்ப்பது வளர்ச்சியடையாத நாடுகளில் நன்மை தராது. பொது நிறுவனங்களையும், கூட்டுறவு இயக்கங்களையும் தொடங்குவதன் மூலமே வருவாயிலும், செல்வத்திலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்க முடியும். இந்நிலையில் விரைவான வளர்ச்சி வீதத்தைப் பெற பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் தலையீடு தவிர்க்க இயலாதது. வளர்ச்சியடைந்த நாடுகளின் அரசின் பணிகளைவிட வளர்ச்சியடையாத நாடுகளின் அரசின் பணிகள் பலவகைகளில் முக்கியத்துவம் பெற்றுள்ளன. பின்தங்கிய நாடுகளில் அரசின் தீவிரக் கொள்கைகளும், நடவடிக்கைகளும் இன்றி விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியாது.

# 19. வாணிபக் கொள்கையும், பொருளாதார முன்னேற்றமும்

## (Commercial Policy and Economic Development)

வளர்ச்சியடையாத நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு சிறந்த வாணிபக் கொள்கை அவசியமாகின்றது. விரைவான முன்னேற்றத்தைப் பெற வாணிபக் கொள்கை உதவும். பல பின் தங்கிய நாடுகள் வெளிநாட்டு வாணிபத்தைக் கட்டுப்படுத்தி பொருளாதார வளர்ச்சியைப் பெறுகின்றன. வெளிநாட்டு வாணிபத்திற்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு. இரு நாடுகள் வாணிபத்தில் ஈடுபடும்போது, அவ்விரு நாடுகளின் பொருளாதார நடவடிக்கைகளும் பாதிக்கப்படுகின்றன. வெளிநாட்டு வாணிபத்தின் மூலம் பெறப்படும் தேசிய வருவாயின் வீதம் அதிகமாக இருத்தல் நல்லது. இங்கிலாந்து நாட்டில் தொழிற் புரட்சி முதலில் தோன்றியமைக்கு, அது தொழிற் பொருட்களை அதிக அளவு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ததும் ஒரு காரணமாகும். தொழில் பொருள்களின் ஏற்றுமதி மதிப்பு அதிகரித்து இறக்குமதி மதிப்பு குறைந்தமையால், இங்கிலாந்து செல்வ நாடாக மாறிற்று. அமெரிக்காவைவிட அதிக வளர்ச்சி வீதத்தைக் கொண்டுள்ள ஜப்பான் வெளிநாட்டு வாணிபத்தை நம்பியே உள்ளது. இயற்கை வளங்கள் இல்லாத நாடு ஜப்பான். பிற நாடுகளிலிருந்து கனிப்பொருட்களை இறக்குமதி செய்து, உலகின் தலைசிறந்த தொழில் நாடுகளுள் ஒன்றாக ஜப்பான் மாறிவிட்டது. ஆனால், சோவியத் ரஷ்யா-அதிக அளவு வெளி நாட்டு வாணிபத்தை மேற்கொள்ளாமலேயே பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவிட்டது. அது உலகிலேயே மிகப் பெரிய நாடு என்பதும் அதற்கு ஒரு காரணமாகிறது.

வாணிபக் கொள்கை பல வழிகளில் பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்துகின்றது:

(i) வாணிபக் கொள்கை வளர்ச்சியடையாத நாட்டின் வாணிபத்தின் மூலம் பல நன்மைகளையும், இலாபங்களையும் தருகின்றது ;

(ii) மூலதனத்திரட்சி வீதத்தை அதிகப்படுத்துகின்றது ;

(iii) நாட்டைத் தொழில் மயமாக்க உதவுகின்றது ;

(iv) அயல்நாட்டுச் செலுத்துநிலையில் (Balance of Payments) சமநிலையை ஏற்படுத்துகின்றது.

பன்னாட்டு வாணிபத்தில் அரசு பின்பற்றும் வாணிபக் கொள்கை காப்புக் கொள்கையாக அமைந்திருக்கிறது. காப்புக் கொள்கையை (Protectionist Policy) அரசு பின்பற்றுகின்றமைக் கான பல வாதங்கள் தரப்படுகின்றன.

(1) வாணிபநிலை வாதம் (The Terms of Trade Argument)

வெளிநாட்டு வாணிபம் வளர்ச்சியடையாத நாட்டில் சாதக மாக இருந்தால் தேசிய வருவாய் பெருகும். வெளிநாட்டு வாணிபத்தால் வளர்ச்சியடையாத நாடு பல நன்மைகளைப் பெறு கிறது. ஒரு நாடு, 'சுங்கவரிக் கொள்கை' (Tariff Policy) மூலம் இறக்குமதிப் பொருட்களின் விலையை அதிகரித்து ஏற்றுமதிப் பொருட்களின் விலையை வெளிநாட்டினருக்குக் குறைக்கலாம். இதன் மூலம் இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியைக் கூட்ட லாம். பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியையும் இது அளிக்கும். ஏற்றுமதியின் மூலம் வருவாய் பெருகும்போது, அவ்வருவாயை பெருமளவு மூலதனப் பொருட்களை (Capital Goods) இறக்குமதி செய்யப் பயன்படுத்த வேண்டும்.

ஒரு நாட்டின் வாணிபநிலை திருந்தினால் மூலதனத்திரட்சி ஏற்பட்டுவிடும் எனக் கருத முடியாது. ஏற்றுமதிகளின் வாயிலாகக் கிடைத்த அதிக வருவாய் சேமிக்கப்படாமல் உள்நாட்டு, வெளி நாட்டுப் பொருட்களை வாங்கவும் பயன்படுத்தப்படலாம். சேமிப்பு மட்டும் போதுமானதாகாது. சேமிப்பானது, மூலதனப் பொருட்களை வாங்குவதில் முதலீடு செய்யப்பட வேண்டும்.

இந்நிலையை அடைய 'சுங்கவரிக் கொள்கை' பின்பற்றப்பட வேண்டும். இக்கொள்கைக்கு நெகிழ்ச்சியில்லாத தன்மை வெளி நாடுகளில் இருந்தால் வெற்றியைப் பெற முடியும். வேறு வார்த்தைகளில் விளக்கினால், ஒருநாடு சுங்கவரிக் கொள்கையால் ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்க விரும்பினால், வேறொரு நாடும் அதைப் போன்ற கொள்கையையே கொண் டிருக்கும். இக் காரணத்தால்தான் உலகின் பல நாடுகளுக் கிடையேயும் வாணிப ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்படுகின்றன.

சுங்கவரிக் கொள்கை பிற நாடுகளின் ஒத்துழைப்பின்றியே வெற்றி பெற ஒரு நாடு முற்றுரிமை நிலையைப் பெற்றிருக்க

வேண்டும்; அல்லது ஒரே பொருளை உற்பத்தி செய்கின்ற சில வளர்ச்சியடையாத நாடுகள் இணைந்து முற்றுரிமையை ஏற்படுத்திக் கொள்ளலாம். இது அதிக அளவிற்கு வெற்றியை அளிக்காது என்றே கூறலாம். ஏனெனில், வளர்ச்சியடைந்த நாடுகள் மிகக் குறைந்த அளவு பொருட்களை மட்டுமே பிற நாடுகளிடமிருந்து இறக்குமதி செய்கின்றன. பல பொருட்கள் உள்நாட்டிலே குறைந்த விலையில், தரமான நிலையோடு முன்னேற்றமடைந்த ஒரு நாட்டில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

வளர்ச்சியடையாத நாடுகளின் பொருட்களுக்கு வளர்ச்சி யடைந்த நாடுகளில் தேவை நெகிழ்ச்சியுள்ளதாகவே இருக்கும். எனவே, வளர்ச்சியடையாத நாடுகள் குறைந்த அளவு ஏற்றுமதியை மட்டுமே செய்ய முடிகிறது. இறக்குமதிப் பொருட்களின் விலையும் அதிகமாக இருப்பதால், இறக்குமதியும் குறைந்த அளவே செய்யப் படுகிறது. வெளிநாடுகளில் தேவை நெகிழ்ச்சியுள்ளதாக இருந்தால் சுங்கவரி விதிப்பு வெளிநாட்டு வாணிப அளவைச் சுருங்கச் செய்துவிடும். தேவை, அளிப்பு விலைத்தேவை நெகிழ்ச்சிகள் வாணிப நிலையைப் பாதிக்கும் தன்மை கொண்டவை.

"வாணிபத்தால் ஏற்படும் நன்மை குறுகிய காலத்திற்கு மட்டுமேயாகும்; நீண்ட காலத்தில் ஒரு நாட்டின் சுங்கவரிக் கொள்கைக்கு எதிர் நடவடிக்கையாக பிற நாடுகளும் சுங்கவரிக் கொள்கையைக் கடைப்பிடிக்கின்றன. அந்நாடுகளின் தேவை நெகிழ்ச்சிகள் மாறலாம்; இறக்குமதி, ஏற்றுமதி வரிகள் மாற்றப் படலாம்; உள் நாடுகளில் வருவாய் மறுபகிர்வு செய்யப்பட லாம்."[1]

### (2) சேமிப்பு-வீத வாதம் (The Savings-Ratio Argument)

உள்நாட்டுச் சேமிப்பைப் பெருக்கி முதலீடுகளை ஊக்கு விப்பதின் மூலம் பல நன்மைகளையும் பெறலாம். அது மூலதனத் திரட்சியைக் கொடுக்கின்றது. நுகர் பொருட்களின் இறக்குமதி யைக் குறைத்து உள்நாட்டுச் சேமிப்பைப் பெருக்கலாம். இறக்குமதியைக் குறைக்க நேரடிக் கட்டுப்பாடுகளையும், இறக்குமதி வரிகளையும் விதிக்கலாம். நுகர் பொருட்களின் மீதான செலவு எந்த அளவு குறைக்கின்றதோ, அந்த அளவிற்கு சேமிப்பின் அளவு அதிகரிக்கின்றது. அதிகரித்த சேமிப்பு மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தப் படுகின்றது. மூலதனத்திரட்சி ஏற்பட, நுகர்பொருட்களின் இறக்குமதியைக் குறைத்து அதே

[1] Meier and Baldwin, Economic Development, p. 404.

மதிப்பின் அளவிற்கு மூலதனப் பொருள்களின் இறக்குமதியை அதிகரிக்கவேண்டும்.

இறக்குமதிக் கட்டுப்பாடுகள் நுகர்வோரின் செலவைக் குறைத்தல் வேண்டும். இறக்குமதி நுகர்பொருட்களுக்குப் பதிலாக உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட நுகர்பொருட்கள் வாங்கப்பட்டால் அதுவும் நன்மை விளைவிக்காது. உள்நாட்டு நுகர்பொருட்களின் அளிப்பைவிட தேவை பெருகி, அதன் மூலம் விலையுயர்வும் அதிக உற்பத்திச் செலவும் தோன்றுகின்றன. பணவீக்கநிலை உள்நாட்டில் அமைகின்றது. இதையே பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) தன்னுடைய வார்த்தைகளில் கூறுகின்றார்: "நுகர் பொருட்களின் இறக்குமதி தடுக்கப்படும்போது, உள்நாட்டு நுகர்பொருட்களின் அளிப்பைக் காட்டிலும் தேவை பெருகி விலைகளின் அளவில் உயர்வு ஏற்படுகின்றது."[1] இதைத்தவிர, உள் நாட்டு முதலீடுகளின் அளவிலும் குறைவு ஏற்படத் துவங்கி, அம் மூலதனமானது உள்நாட்டு நுகர்பொருட்களை வாங்கப் பயன் படுத்தப்படலாம். இதனால், உள்நாட்டில் முதலீட்டு நிர்மாணப் பணிகள் பாதிக்கப்படுகின்றன. ஆனால், பணவீக்க நிலை ஏற்பட்ட பின் கட்டாயச் சேமிப்பு பெருகுகின்றது. மக்கள் தாங்களாகவே சேமிக்கும் வீதமும் அதிகரிக்கின்றது. இதன் விளைவால், மூலதனத் திரட்சி ஏற்பட்டு மூலதனப் பொருட்கள் இறக்குமதி செய்யப்படலாம்.

இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் மூலம் ஆடம்பரப் பொருட் களின் நுகர்வு கட்டுப்படுத்தப்பட வேண்டும். உள் நாட்டிலும் இவ்வகைப் பொருட்களின் உற்பத்தி கட்டுப்படுத்தப்படுதல் அவசியமானது. இவற்றை அரசு மேற்கொள்ளாவிடில், உள் நாட்டுச் சேமிப்புக்கள் ஆக்கமற்ற நுகர்வில் செலவு செய்யப்படும். எனவே, பொருளாதாரம் முன் கதவின் வழியாகப் பெற்ற மூலதனம் பின் கதவு வழியாகச் சென்றுவிடுகின்றது. ஏற்றுமதி மூலம் ஏற்பட்ட மூலதனம், நுகர்பொருட்களின் நுகர்வைக் கட்டுப் படுத்தப்படாமையால் வீணடிக்கப்படுகின்றது. பொருளாதார வளர்ச்சி இப்படித்தான் ஏற்படுமென்பதை மறுக்க முடியாது. பலவித இடர்ப்பாடுகளுக்கு இடையே வளர்ச்சி ஏற்படுகின்றது.

சேமிப்பு-வீத வாதம் இறக்குமதிக் கட்டுப்பாடுகளை நுகர் பொருட்களின்மீது விதிப்பது ஏற்றுமதியைப் பாதிக்காது என்று கூறுகிறது. ஆனால், அரசு சில தொழில்களுக்குக் காப்பு அளித்தால், ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களும்

[1] R. Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, p. 112.

காப்பளிக்கப்பட்ட தொழில்களில் ஈடுபட ஊக்கம் ஏற்படும். இதனால் ஏற்றுமதியின் அளவு பாதிக்கப்படும். நுகர்பொருட்களின் இறக்குமதித் தடை, ஏற்றுமதிக்கான பயிர்களை உற்பத்தி செய்ய விவசாயிகளுக்கு ஊக்கத்தைத் தராது. இறக்குமதிக் கட்டுப்பாடுகள் விலைகளையும், உற்பத்திச் செலவுகளையும் உயர்த்திவிடுவதால் ஏற்றுமதிப் பொருட்களின் விலைகளும் அதிகரிக்கின்றன. ஏற்றுமதியின் அளவு இதனால் குறைவடைகின்றது.

(3) வெளிநாட்டு முதலீட்டு வாதம் (The Foreign Investment Argument)

வளர்ச்சியடையாத நாட்டின் 'தொழிற்காப்புக் கொள்கை' நேரடியான வெளிநாட்டு முதலீட்டைப் பெற்று மூலதனத் திரட்சிக்கு உதவுகின்றது. இறக்குமதிக் கட்டுப்பாடுகளைத் தவிர்க்க, தொழிற்சாலைகளை சுங்கவரி விதிக்கும் நாடுகளிலேயே தொடங்குவது வெளிநாட்டு உற்பத்தியாளர்கள் செய்கின்ற ஒன்றாகும் வெளிநாட்டு உற்பத்தியாளர் ஒரு கிளை நிறுவனத்தை சுங்கவரி விதிக்கும் நாட்டில் தொடங்குவார். சுங்கவரிச் சுவரின் மூலம் வினைமுடிந்த பொருட்களின் இறக்குமதி தடை செய்யப்படும் போது, இறக்குமதி வரியில்லாத கச்சாப் பொருட்களையும் தேவையான எந்திரபாகங்களையும் இறக்குமதி செய்து கொள்வர். சமீப காலத்தில் இந்தியாவில் செய்யப்பட்ட வெளிநாட்டுத் தொழில் முதலீடுகள் யாவும் இத்தகையன ஆகும். நேரடியான வெளிநாட்டு முதலீடு, வளர்ச்சியடையாத நாடுகளில் செய்யப் படுகின்றமைக்குத் தடையாக இருப்பது, உள்நாட்டில் அம் முதலீட்டுப் பொருட்களுக்குத் தேவை குறைவாக உள்ள நிலையாகும். இந்நாடுகளில் உள்நாட்டுச் சந்தை மிகச் சிறியதாகவே இருக்கும். விரிவடைந்த உள்நாட்டுச் சந்தை வெளிநாட்டு மூலதனத்திற்கு அதிக ஊக்கத்தை அளிக்கும்.

(4) இளந்தொழில் பாதுகாப்பு வாதம் (The Infant Industry Argument)

பின்தங்கிய நாடுகளில் புதிதாகத் தொடங்கப்படும் இளந் தொழில்களுக்குப் பாதுகாப்பு அவசியமாகின்றது. தொழில் வளர்ச்சிக்குப் பாதுகாப்பு தேவையாகின்றது. லிஸ்டின் (List) 'இளந்தொழில் பாதுகாப்பு வாதம்' வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில்களின் முன்னேற்றத்தை விரைவு படுத்த 'தொழிற்காப்புக் கொள்கை' உதவும் எனக் கூறுகின்றது. மேன்மையடையாத பொருளாதாரங்களில், வெளிநாட்டுப் போட்டி தவிர்க்கப் பட்டால், சில தொழில்களின் முன்னேற்றத்தை மிகச்சிறப்பாகப் பெற முடியும். தற்பொழுது சில வசதிக்குறைவுகளின் காரண

மாக உற்பத்திச் செலவுகள் உயர்வாக உள்ளன. சில அடிப்படை வசதிகளே இல்லாத காரணத்தால் இந்நிலை அமைந்துள்ளது. நாளடைவில் இச்சிக்கல்களைத் தீர்த்து விட்டால் உற்பத்திச் செலவுகளைக் குறைத்து விடலாம். மேலும், உற்பத்தியை பேரளவில் மேற்கொள்ளும் போது, ஓர் அலகிற்கான ஆக்கச் செலவு மிகக் குறைந்து விடும்.

நாட்டைத் தொழில் மயமாக்குதலினுல் விளையக்கூடிய நன்மைகள் தற்போதுள்ள அதிக விலையுயர்வுகளையும் நீக்கிவிடும். இளந் தொழில்கள் வளரும் நிலைவரை வெளிநாட்டுப் போட்டியினின்றும் பாதுகாக்கப்பட வேண்டும். பெருமளவில் வேளாண்மைப் பொருளாதாரம் அமைந்துள்ள நாட்டில் தொழில் பாதுகாப்பு தேவை. நாடு தொழில் மயமாக்கப்பட்டு, வேளாண்மையின் முக்கியத்துவம் குறைந்து விட்டால் தொழில் பாதுகாப்பை நீக்கிவிடலாம். வேளாண்மைப் பொருளாதாரம் தொழிற் பொருளாதாரமாக மாறும் வரை தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கலாம். பேராசிரியர் குன்னர் மிர்டால் (Prof. Gunnar Myrdal) வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டிய சில சிறப்பான காரணங்களைத் தருகிறுர் :

(i) தொழில்களின் புதிய அளிப்பிற்கு ஏற்பத் தேவையை பெருக்குவது கடினமானது.

(ii) உபரி உழைப்பானது வளர்ச்சியடையாத நாடுகளில் பயன்படுத்தப்படாமல் உள்ளது.

(iii) தொழிற்பாதுகாப்பின் மூலம் புறச்சிக்கனங்கள் (External Economies) பெறப்பட்டு தனியார் முதலீடுகள் அதிகரிக்கும். அவர்கள் பெறும் இலாபமும் அளவில் பெருகும்.

(iv) உள்நாட்டு விலைகளின் ஏற்றத்தாழ்வுகளில் மிகுந்த வேறுபாடுகள் உள்ளன. தொழில்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் இந்நிலையை நீக்க 'தொழில் பாதுகாப்பு' தேவையாகின்றது.[1]

வளர்ச்சியடையாத நாட்டின் 'இளமையான பொருளாதாரத்திற்கு' (Infant Economy) தொழிற் பாதுகாப்பு இன்றியமையாதது.

ஆனுல், பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) கருதுவதுபோல, பொருளாதார முன்னேற்றத்தைப்பெற இளந்தொழில்களின் பாதுகாப்பு மட்டும் ஒரு கருவியாக அமைய முடியாது. மூலதன

[1] Gunnar Myrdal, An International Economy - Problems and Prospects, p. 272.

அளிப்புச்சிக்கல் இவ்வாதத்தில் ஆராயப்படவில்லை. இளந்தொழில்களின் பாதுகாப்பு அத்தொழில்கள் தொடங்கப்பட்ட பிறகுதான் அளிக்கப்பட வேண்டும். சுங்கவரிக்காப்பு இளந்தொழிலை ஏற்படுத்தத் தேவையான மூலதனத்தின் அளிப்பை அதிகரிக்காது. ஆனால், பாதுகாப்பு அளிக்கப்பட்ட தொழிலில் முதலீடு செய்வதற்கான ஊக்கம் ஏற்படும்.

இளந்தொழில் பாதுகாப்பு இறக்குமதி-பதிலிப்பொருட்களின் (Import-substitutes) தேவை பெருகுவதற்கு மட்டுமே உதவுகின்றது. இறக்குமதி-பதிலிப்பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களின் முன்னேற்றம் பொருளாதாரத்தில் 'சமநிலை வளர்ச்சியைத்' தராது. பொருளாதாரத்தின் முழுமையான வளர்ச்சி ஏற்படாத காரணத்தால், இறக்குமதி - பதிலிப்பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் குறைந்த அளவு மூலதனமே முதலீடாக்கப்படும். இறக்குமதிக் கட்டுப்பாடுகளை அதிக அளவில் ஏற்படுத்துவதை பேராசிரியர் நர்க்ஸ் ஆதரிக்கவில்லை. பாதுகாப்புக் கொள்கையால், உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் இறக்குமதி-பதிலிப்பொருட்களின் விலையானது அதிகரிக்கும். இதனால், மக்களின் உண்மை வருவாய் குறைந்து விடும். [1]

இளந்தொழிலானது தொடங்கப்பட்ட பிறகு, அத்தொழில் சில நிலைகளைக் கொண்டிருந்தால்தான் பாதுகாப்பு அளிப்பது நன்மை தரும். பாதுகாப்பு இன்றி ஒரு இளந்தொழில் வளர்வது கடினமானது. எனினும், காப்பளிக்கப்பட்டபின் அத்தொழில் தன்னுடைய கால்களிலேயே நிற்கக்கூடிய வளர்ச்சியைப் பெற்று விட வேண்டும். நீண்ட காலத்தில் பாதுகாப்பை நீக்கி விட்டாலும் வெளிநாட்டுத் தொழில்களோடு போட்டியிடத்தக்க ஆற்றலை அது பெறுதல் அவசியமாகும். எல்லாவற்றையும் விட, அத்தொழில் உற்பத்தியில் திறமையையும் அனுபவத்தையும் பெற்று உற்பத்திச் செலவுகளைக் குறைக்க வேண்டும். தொழில் தொடங்கிய ஆரம்ப நிலையில் இழப்புக்கள் ஏற்படலாம். ஆனால், நீண்ட காலத்தில் செலவுகளில் சிக்கனத்தைப் பெறுதல் வேண்டும். குறைந்த விலையில் பொருட்களை விற்பனை செய்தல் தேவைப் பெருக்கத்தை ஏற்படுத்தி அத்தொழில் விரிவடைய உதவும்.

இளந்தொழிலுக்கு எவ்வளவு காலம் பாதுகாப்பு அளிப்பது என்பதைத் தீர்மானிப்பதும் கடினமாகின்றது. "இதைப்பற்றித் தீர்மானங்கள் எடுக்க உள்நாட்டுத் தேவை அளிப்பு நிலைகளைப் பற்றி மட்டும் கருதாமல் உலகின் தேவை அளிப்பு நிலைகளைப்

[1] R. Nurkse, Problems of Capital Formation in Underdeveloped Countries, pp. 105-108.

பற்றியும் கருதவேண்டும். இவற்றைத் தவறாகக் கணித்துவிட்டால் பேரிழப்புக்களும் ஏற்படும். பாதுகாப்பளிக்கப்பட்ட தொழில்கள் தோல்வியடையக் கூடாது. அரசு ஒரு காவல்-நாயைப் போன்று பாதுகாப்பளித்த தொழில்களின் உற்பத்தியையும், உற்பத்தித் திறனையும் காக்க வேண்டும். வளர்ச்சியடையாத நிலையில் ஒரு இளந்தொழில் இருந்து வந்தாலும், வேலைவாய்ப்புக்களை அது அளிப்பதால் அரசு அதைப் பாதுகாத்தல் அவசியமானது," என டாக்டர் லக்டாவாலா (Dr. Lakdawala) [2] வலியுறுத்துகின்றார்.

நீண்ட காலத்தில் இளந்தொழில்களின் செலவுகளில் மாற்றங்கள் ஏற்படலாம். புறச்சிக்கனங்களிலும் மாறுதல் தோன்றலாம். இளந்தொழில்கள் எவை என்பதை அறிவதும் கடினமாகிறது. எனவே, தொழில் உற்பத்திப் பொருட்களின் மீதும் அவற்றின் மதிப்பிற்கேற்ப வரி விதிக்கப்படலாம். பல தொழில்களின் வளர்ச்சி அரசின் வரி விதிப்புக் கொள்கையையே சார்ந்துள்ளது. அரசின் வரிக்கொள்கை தொழில்களின் வளர்ச்சியைத் தந்து, நுகர்வோரின் நலனைக் காக்க வேண்டும்.

(5) புறச்சிக்கனங்களின் வாதம் (External Economies Argument)

ஒவ்வொரு புதிய தொழிலுக்கும் அளிக்கப்படுகின்ற பாதுகாப்பு புறச்சிக்கனங்களைத் தோற்றுவிப்பதால் பல நன்மைகளையும் பெற முடியும். சேமிப்பு பல வகைப்பட்ட முதலீட்டு வாய்ப்புக்களில் செலவிடப்படுகின்றது. புறச்சிக்கனங்களின் வளர்ச்சி சமுதாய நன்மையைத் தருகின்றது. புறச்சிக்கனங்களுக்கும் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. வளர்ச்சியடையாத நாட்டில் தொழில் காப்புக் கொள்கையால் புறச்சிக்கனங்கள் தோன்றுகின்றன. தொழில் வளரும்போது பொருளாதாரத்தின் பல வசதிகளும் பெருகுகின்றன.

புறச்சிக்கனங்கள் இருவகைகளில் தோன்றுகின்றன ; அவற்றை முதலாவதாக, தொழில் நுட்பச்சிக்கனங்கள் என்றும் ; இரண்டாவதாக, பணசம்பந்தமான (Pecuniary) புறச்சிக்கனங்கள் எனவும் பிரிக்கலாம். இவ்விதச் சிக்கனங்கள் ஏற்படுகின்றமைக்குக் காரணம், பல உற்பத்தியாளர்களும் பல நடவடிக்கைகளில் சார்ந்திருக்கின்ற நிலையாகும். தொழில்நுட்ப புறச்சிக்கனங்கள் அமைந்துள்ளமைக்கு ஒவ்வொரு தொழிலும் பிற தொழில்களைச் சார்ந்திருக்கின்ற நிலையே காரணமாகிறது. ஒரு தொழில் நிறுவனத்தின்

[2] D. T. Lakdawala, Commercial Policy and Economic Growth in Trade Theory, p. 31.

உற்பத்தி அதனுடைய உற்பத்திக் காரணிகளைக் கொண்டு மட்டும் செய்ய முடியாதது. வேறு சில தொழில் நிறுவனங்களைச் சார்ந்தும் அத்தொழில் நிறுவனம் உற்பத்தியை மேற்கொள்கின்றது. இவ் வித்த் தொடர்புகள் இருப்பதால் தொழில் நிறுவனங்களின் உற்பத்தி பாதிக்கப்படலாம்.

ஒரு தொழிலின் உற்பத்திச்சக்தி பெருகும் போது, உற்பத்திப் பொருட்களின் விலைகள் குறைவடைகின்றன. ஆனால், அத்தொழில் பயன்படுத்துகின்ற உற்பத்திக் காரணிகளின் விலைகள் உயர்கின்றன. அதிக முதலீட்டின் மூலதனமாக உற்பத்திச் சக்தியைப் பெருக்க முடியும். பண சம்பந்தமான புறச்சிக்கனங்கள் பல வகைகளில் தேவைப்படுகின்றன. ஒரு உற்பத்தியாளரின் இலாபமானது, பிற உற்பத்தியாளர்களின் நடவடிக்கைகளால் பாதிக்கப்படலாம். பண்டங்களின் விலைக்குறைவு நுகர்வோருக்கு நன்மையளிக்கிறது. உற்பத்திக்காரணிகளின் விலையுயர்வு அவற்றை அளிப்பவர்களுக்கு இலாபத்தைத் தருகின்றது. இவ்வித புறச்சிக்கனங்களைத் தொழில் நிறுவனங்கள் பெற்றால் அவை அதிக இலாபத்தைப் பெற வாய்ப்புண்டு.

வளர்ச்சியடையாத நாடுகளின் ஏற்றுமதித் தொழில்களில் முதலீடு குறைவாகவே இருக்கும். இறக்குமதிப் பொருட்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய அதிக முதலீடுகள் செய்தல் நாட்டிற்கு நன்மை பயப்பதாகும். பாதுகாப்பளிக்கப்பட்ட தொழிலினால் வேறு சில தொழில்களும் புறச்சிக்கனங்களைப் பெற்று உற்பத்திச் செலவைக் குறைக்கும் நிலை ஏற்படுகின்றது. எனவே, பாதுகாப்பைப் பெறாத தொழில்களும் அதிக இலாபத்தைப் பெற முடிகின்றது. முதலீட்டையும், உற்பத்தியையும் அதிகரிக்காம லேயே இலாபத்தைப் பெற அவைகளால் முடிகிறது. இவ்வகையில் பாதுகாப்பு அளிக்கப்பட்ட தொழிலினால் மற்றொரு தொழிலின் இலாபம் அதிகரிக்கிறது. ஆனால், அதிக இலாபத்தைப் பெறுகின்ற அத்தொழில் மேலும் முதலீட்டின் அளவைப் பெருக்குவதில்லை. அதிக முதலீட்டைச் செய்யாமலேயே உயர்ந்த இலாபத்தைப் பெறுகின்ற நிலை இதற்குக் காரணமாகிறது.

பாதுகாப்பு அளிக்கப்படுகின்ற தொழில்கள் அதிக இலாபத் தைப் பெறுகின்றன. அத்தொழில்களின் வளர்ச்சியால் ஏற்பட்ட புறச்சிக்கனங்கள் பிற தொழில்களின் வளர்ச்சிக்கும் உதவுகின்றன. தொழில்களுக்குப் பாதுகாப்பு அளித்தல் சமுதாயத்திற்கு நன்மை யளிக்கும் என்றே கூறலாம். பல தொழில்களின் வளர்ச்சியும் திட்ட மிட்டு இணைக்கப்பட்டால் முதலீட்டிற்கான இலாபத்தொகையும்

அதிகமாகக் கிடைக்கும். நுகர்வோருக்கு நன்மையளிப்பதாகவும் அது முடியும்.

பேராசிரியர் மிர்டாலின் (Prof. G. Myrdal) கருத்துப்படி புறச் சிக்கனங்கள் ஏற்றுமதித் தொழில்களிலும் இறக்குமதிப் போட்டித் (Import-competing) தொழில்களிலும் அமைந்துள்ளன. ஏற்றுமதி தொழில்களின் புறச்சிக்கனங்களால் வெளிநாட்டு நுகர்வோர் நன்மையடைகின்றனர். இறக்குமதித் தொழில்களின் புறச்சிக்கனங்களால் உள்நாட்டு நுகர்வோர் பயனடைகின்றனர். ஆனால், இவ்விரு வகைத் தொழில்களின் மூலமும் ஒரு நாடு விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும். இறக்குமதிப் போட்டித் தொழில்களில் ஏற்றுமதித் தொழில்களைவிட அதிக முதலீடு செய்தல் தேசிய நோக்கில் நன்மை தருமென சிட்டாவ்ஸ்கி (Scitovsky) கூறுகின்றார்.

(6) காரணி மறுபகிர்வு வாதம் (Factor Re-distribution Argument)

வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மையின் விலைகள் செலவுகளின் அளவிற்கும், தொழில்களின் விலைகள்-செலவுகளின் அளவிற்கும் இடையே மிகுந்த இடைவெளி இருப்பது தொழில்களின் முன்னேற்றத்தைத் தடுக்கிறது. வேளாண்மையைவிட தொழில் அதிக ஆக்கத்தை தருவதென்பதால் அதற்கு அரசால் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டுமென்ற கருத்தை பேராசிரியர் லூயிஸ் (Prof. Lewis), மிர்டால் (Myrdal) இருவரும் கொண்டுள்ளனர். மக்கட்தொகைமிக்க வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் துறையில் பண ஊதியமானது உயர்வாக உள்ளது. கூட்டுக்குடும்ப முறையாலும் (Joint Family System), மறைந்துள்ள வேலையின்மையாலும் (Concealed Unemployment) வேளாண்மைத் துறையில் தொழில் துறையை விடக் குறைந்த ஊதியமே தரப்படுகின்றது. கிராமப்புறங்களில் வேலையின்றி இருப்பவர்களோ அல்லது மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளவர்களோ அதிக ஊதியத்தை அளித்தால்தான் தங்கள் உழைப்பை நகர்புறங்களின் தொழில் துறைகளில் அளிக்க முன்வருவார்கள்.

சமுதாய நோக்கோடு ஆராய்ந்தால், கிராமப்புற மறைந்துள்ள வேலையின்மையில் இருப்பவர்களின் உற்பத்தி மிகக் குறைவானது. அவர்களின் இறுதிநிலை உற்பத்தி வேளாண்மையில் மிகக் குறைவாகும். சில நிலைகளில் இறுதிநிலை உற்பத்தி பூஜ்யம் என்ற அளவிலும் அல்லது எதிர் வீதத்திலும் அமையும். எனவே, தொழில்களைப் பாதுகாப்பது வேளாண்மையில் அமைந்துள்ள

உபரி உழைப்பைப் பயன்படுத்தவும் வகை செய்யும். தொழில்களின் வளர்ச்சி வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்தித்தரும்.

குன்னர் மிர்டால் கருத்துப்படி, வளர்ச்சியடையாத நாடுகளில் தொழில் துறைகளின் ஊதியத்திற்கும், வேளாண்மைத்துறையின் ஊதியத்திற்கும் அதிக வேறுபாடு இருத்தல் கூடாது. ஆனல், அவ்வித ஊதிய வேறுபாடு இருக்கின்றமையால்தான் தொழில்களுக்குக் காப்பளிப்பது இன்றியமையாததாகின்றது. வேளாண்மை தொழில் துறையைவிட ஆக்கம் குறைந்தது. உண்மை வருவாயை உயர்த்தி மக்களுக்கு நன்மையளிக்க உற்பத்திக்காரணிகள் மறுபகிர்வு செய்யப்படுதல் வேண்டும். அதற்கு உதவுவதாக தொழில் காப்புக் கொள்கை அமைகின்றது.

மேம்பாடடையாத நாடுகளின் வேளாண்மைத் துறையில் மறைந்துள்ள வேலையின்மை அமைந்திருக்கிறது. கிராமப்புறங்களில் உள்ள உபரி உழைப்பை வேளாண்மையினின்றும் தொழில் துறைக்கு மாற்றவேண்டும். அதன்மூலம் உழைப்பு முற்றிலுமாக உற்பத்திக்காகப் பயன்படுத்தப்படும். நாட்டின் உண்மை வருவாயைப் பெருக்க இது உதவும். தொழில் வளர்ச்சியின் வாயிலாகவே வேளாண்மையில் உள்ள உபரி உழைப்பை சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்தலாம். இதற்காக உள்நாட்டுத் தொழில்களை வெளிநாட்டுப் போட்டியினின்றும் காக்கவேண்டும். தொழிற் காப்புக் கொள்கை இவ்வகையில் பெரிதும் உதவும்.

ஆனல், மறைந்துள்ள வேலையின்மையை நீக்க தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்பது அவசியமில்லை. அவ்வாறு செய்தால்தான் உபரி உழைப்பை வேளாண்மையிலிருந்து தொழில் துறைக்கு மாற்ற முடியும் என்று கருதவேண்டியதில்லை. நர்க்ஸ் (Nurkse), இச்சிக்கலைத் தவிர்க்க, உபரி உழைப்பானது மூலதனத் திட்டங்களில் (Capital Projects) பயன்படுத்தப்பட வேண்டுமெனக் கூறுகின்றார். இதற்கான தீர்வு தொழில்களைக் காத்தலில் இல்லை. சமுதாய அமைப்புமுறைகளில் மாற்றங்களை ஏற்படுத்தி உழைப்பின் பெயர்ச்சியை ஏற்படச் செய்ய வேண்டும்.

பொருளாதார வளர்ச்சிக்கு தொழில் முன்னேற்றம் இன்றியமையாதது என்பதை எவரும் மறுக்க இயலாது. ஒரு நாடு ஏழ்மை நிலையில் உள்ளமைக்கு வேளாண்மை காரணமல்ல ; அந்நாட்டின் வேளாண்மை உற்பத்திக் குறைவே பொருளாதாரத்தை வளராத நிலையில் வைத்துள்ளது. உண்மையிலேயே விரைவான பொருளாதார வளர்ச்சியைப்பெற, தொழில் முன்னேற்ற வேகத்தைப் போன்றே வேளாண்மை முன்னேற்ற வேகமும் அமைந்திருக்க வேண்டும். பெருகிவரும் மக்களுக்கு உணவளிக்க வேளாண்மை

உற்பத்தியை உயர்த்துதல் அவசியமானது. உள்நாட்டுத் தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களையும் அது அளிக்கும். வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்வதின் மூலம் 'அந்நியச் செலாவணியையும்' ஈட்டலாம். இவை எல்லாவற்றையும் விட, அதிக வேளாண்மை உற்பத்தி மூலதனத்திரட்சி வீதத்தை விரைவு படுத்தும்.

தொழில் முன்னேற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டால் வேளாண்மை வளர்ச்சி குன்றிவிடும். ஏற்றுமதியின் அளவும் குறைந்துவிடும். இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் இதற்கு உதாரணமாக அமைகின்றது. அத்திட்டத்தில் தொழில் முன்னேற்றத்திற்கு முதல் முக்கியத்துவம் அளித்து திட்டம் நிறைவேற்றப் பட்டமையால் தோல்வி ஏற்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்ட வெற்றிக்கு வேளாண்மை வளர்ச்சியே அடிப்படையாக அமைந்தது. அத்திட்டக் காலத்தில் கணிசமான தொழில் முன்னேற்றமும் பெறப்பட்டது. எனவே, அடிப்படைத் தொழிலாகிய வேளாண்மையே நாட்டின் வறிய நிலைக்குக் காரணம் எனக் கருதக் கூடாது. ஏழ்மை நிலையோடு தொடர்புடையது வேளாண்மை ; ஆனால் வேளாண்மை ஏழ்மை நிலையைத் தந்து விடாது.

(7) அயல் நாட்டுச் செலுத்துநிலை வாதம் (The Balance of Payments Argument)

வளர்ச்சியடைந்துவரும் நாட்டில் வாணிபக் கொள்கையின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாக இருப்பது பாதக அயல் நாட்டுச் செலுத்துநிலையை நீக்குவதாகும். மேம்பாடடைந்துவரும் நாடுகளில் அவசிய நுகர்பொருட்களையும், மூலதனப் பொருட்களையும் இறக்குமதி செய்ய அந்நியச் செலாவணி அதிக அளவிற்குத் தேவைப் படுகிறது. முன்னேற்றத் திட்டங்களின் இலக்குகளை அடைய மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வது தவிர்க்க இயலாதது. எந்த ஒரு நாடும் இறக்குமதிக்கு ஈடாக ஏற்றுமதி செய்தல் வேண்டும். ஆனால், வளர்ச்சியடையாத நாட்டின் ஏற்றுமதித்திறன் குறைவாக உள்ளது. நாணய மதிப்புக் குறைப்பும் ஏற்றுமதியைப் பெருக்க பெருமளவில் உதவாது. வெளிநாடுகளின் உதவிகளும், கொடைகளும் போதுமானதாக இருப்பதில்லை. இக்காரணங்களால் பாதகவாணிபச் செலுத்துநிலையே தொடர்கின்றது.

பாதக வெளிநாட்டு வாணிப நிலையைத் தவிர்க்க ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்க வேண்டும். இதற்கு இறக்குமதி ஏற்றுமதிகளில் அரசின் முழுக்கட்டுப்பாடும் அவசிய

மானது. அப்போதுதான் முடிந்த அளவிற்கு ஏற்றுமதியைப் பெருக்கி, இறக்குமதியையும் மிகக்குறைந்த அவசிய அளவிற்குத் தாழ்த்திவிடலாம். இவ்விரு நோக்கங்களைக் கொண்டதாக வாணிபக் கொள்கை அமைய வேண்டும். இறக்குமதியைத் தடை செய்தல் திட்டமிட்ட வளர்ச்சிக்குத் தேவையான அந்நியச் செலாவணியைத் தர உதவும். நுகர்பொருட்களின் இறக்குமதி குறைக்கப் பட்டு, அதற்குப்பதிலாக ஆக்கத்திற்கு உதவும் மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்ய வேண்டும். நுகர்பொருட்களின் இறக்குமதியைக் குறைக்க உள்நாட்டிலேயே அப்பொருட்களை உற்பத்தி செய்ய முதலீடுகள் தேவைப்படுகின்றன. ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்கின்ற தொழில்களிலும் அதிக முதலீடு செய்யப் படுதல் வேண்டும். இந்நடவடிக்கைகளின் மூலம் தேவையான அந்நியச் செலாவணியைக் குறுகிய காலத்தில் பெற்றுவிட முடியும்.

வளர்ச்சியடையாத நாடுகள் உணவுப் பொருட்களை இறக்குமதி செய்வதுமுண்டு. வேளாண்மை வளர்ச்சியைப் பெற்று உணவு இறக்குமதியின் அளவைக் குறைக்கலாம். மேலும், இந்நாடுகள் வேளாண்மைப் பொருட்களையே பெரிதும் ஏற்றுமதி செய்கின்றன. வேளாண்மையின் விரிவாக்கம், இவ்வகையில் ஏற்றுமதியைப் பெருக்கவும் உதவும். இதன்மூலம் தொழில் முன்னேற்றமும் ஏற்படுமென்பதைக் கூறுவது தேவையில்லாதது. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான அந்நியச் செலாவணியை வேளாண்மைப் பொருட்களின் ஏற்றுமதியின் மூலம் பெறலாம்.

எனினும், வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் 'ஏற்றுமதி முன்னேற்றத்தைப்' (Export Promotion) பெறுவது கடினமான நிலையைக் கொண்டுள்ளது. இந்நாடுகள் கச்சாப் பொருட்களையும், வேளாண்மைப் பொருட்களையும் மட்டுமே அதிக அளவில் உற்பத்தி செய்கின்றன. எனவே, இப்பொருட்களுக்கான சந்தை போட்டியுள்ளதாகவும், அளவில் சிறியதாகவும் உள்ளது. இப்பொருட்களின் உற்பத்திச் செலவு அதிகமாக இருத்தலும் சிக்கலை ஏற்படுத்துகின்றது. மேம்பாடடைந்துவரும் பொருளாதாரத்தில் விலைகளையும், செலவுகளையும் உயர்வடையும்போது தடுக்க இயலாது. விலைகளின் உயர்வும் முன்னேற்றத்திற்கு அவசியமானது. உலகச் சந்தைகளில் பல நாடுகளுக்கிடையே பொருட்களை விற்பதில் கடுமையான போட்டியானது நிலவுகின்றது. குறைந்த விலையில், தரமான பொருட்களை மட்டுமே உலகச் சந்தைகளில் விற்பனை செய்ய முடிகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் உற்பத்திச் செலவு அதிகரிப்பதால் விலையுயர்வும் ஏற்பட்டு உலகச் சந்தைகளில் விற்பனை செய்வது முடியாததாகின்றது. இக் காரணங்களாலும் இந்நாடுகள் ஏற்றுமதியில் முன்னேற்றத்தைப் பெறமுடிவதில்லை,

ஏற்றுமதி முன்னேற்றம் என்பது நீண்டகால பிரச்சினையாகும். வாணிப ஒப்பந்தங்கள், ஏற்றுமதி வரிகளைக் குறைத்தல், கொடைகள், உதவித் தொகைகள், தொழிற் கண்காட்சிகள், ஏற்றுமதிக் காப்புறுதி, பங்களவுமுறை போன்றவை குறுகிய காலத்தில் ஏற்றுமதி முன்னேற்றத்திற்கு உதவும் வழிமுறைகளாகும். இம்முறைகளை ஏற்றுமதி செய்யத்தக்க பொருட்களில் பின்பற்றினாலும், அவை எந்த அளவிற்கு ஏற்றுமதி முன்னேற்றத்திற்கு உதவும் என உறுதியாகக் கூற இயலாது. எனினும், நீண்டகாலத்தில், ஏற்றுமதி பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் முக்கிய காரணிகளில் ஒன்றாகின்றது. ஏற்றுமதி அந்நியச் செலாவணியை ஈட்ட உதவுகின்றது. ஏற்றுமதி செய்யத்தக்க பொருட்களின் உற்பத்தியில் அதிக முதலீடு செய்யப்படவேண்டும். உற்பத்திக்கான பல வசதிகளையும் ஏற்றுமதித் துறைகள் பெற்றிருக்க வேண்டும். ஏற்றுமதி முன்னேற்றத்திற்குத் தரமான ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்தி இருத்தல் இன்றியமையாதது. தரக் கட்டுப்பாட்டோடும் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட வேண்டும். அதிக அளவு உற்பத்தியையும் ஏற்றுமதித் துறைகள் செய்தல் தேவையானதாகும்.

பேராசிரியர் மிர்டால் (Prof. Myrdal) இதுபற்றிக் குறிப்பிடுகின்றார்: "வளர்ச்சியடையாத நாடுகள் பழக்கத்தில் உள்ள ஏற்றுமதிகளை மட்டும் செய்வது கூடாது. புதுவகை ஏற்றுமதிகளைச் செய்ய அவை முயல வேண்டும். உலகச் சந்தையில் நெகிழ்ச்சியுள்ள தேவைகளைக் கொண்ட பொருட்களை ஏற்றுமதி செய்ய வேண்டும். அதிகத் தேவையில்லாத பொருட்களின் ஏற்றுமதியை நீக்கிவிடலாம்; அல்லது குறைத்துவிடலாம். எதிர்காலத்தில் தேவை பெருக்கம் ஏற்படாது என்ற நிலையில் உள்ள ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்தியையும் குறைத்துவிடலாம். அயல் நாடுகளில் அதிகத் தேவையுள்ள பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டும். வருமான, விலைத்தேவை நெகிழ்ச்சிகள் அதிகம் கொண்ட பொருட்களையும் உற்பத்தி செய்யலாம்."[1]

வளர்ச்சியடையாத நாடுகள் ஏறத்தாழ ஒரே வகைப் பொருட்களையே ஏற்றுமதி செய்கின்றன. எனவே, இந்நாடுகளுக்கிடையே போட்டி நிலவுகிறது. மேலும், சில பொருட்களின் விற்பனையில் இந்நாடுகளோடு வளர்ச்சியடைந்த நாடுகளும் போட்டியிடுகின்றன. நர்க்ஸ், மிர்டால் போன்றவர்கள் கருத்துப்படி வளர்ச்சியடையாத நாடுகளுக்கிடையே பொருள்களை உலகச் சந்தையில்

1 G. Myrdal, An International Economy-Problems and Prospects, p. 254.

விற்பதில் கூட்டு மனப்பான்மை தேவை. பன்னாட்டு வாணிபத்தை கூட்டு முறையில் அவை செய்தால் வளர்ச்சியடையாத நாடுகளின் 'பொதுச் சந்தையானது' (Common Market) உருவாகும். இதன் மூலமாகவே இந்நாடுகளின் விற்பனையைப் பெருக்க முடியும். இம் முறையால் 'பேரம் பேசும் சக்தி' (Bargaining Power) பின்தங்கிய நாடுகளுக்குப் பெருகுகின்றது.

'சே' (Say) என்பவரின் சந்தை விதியாகிய 'அளிப்பு அதனுடைய தேவையைத் தோற்றுவித்துவிடும்' என்பது ஒரு நாட்டில் ஏற்படுவதைவிட பல நாடுகளுக்கிடையே ஏற்பட வாய்ப்பு உண்டு. வளர்ச்சியடையாத நாடுகள் தங்கள் பொருட்களை உலகச் சந்தையில் விற்பனை செய்ய, அவைகளுக்கிடையே பொதுச் சந்தை ஏற்படுதல் நன்மை தரும். ஒரு நாட்டின் அளிப்பு மற்றொரு நாட்டின் தேவையைப் பூர்த்தி செய்யும்.

மூன்று காரணிகளால் வளர்ச்சியடையாத நாடுகளில் பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலை தோன்றுகின்றது. அவை,

(i) உள்நாட்டுப் பொருளாதாரத்தின் அதிகப் பணவீக்கநிலை;

(ii) உலகப் பொருளாதாரத்தில் மந்தநிலை;

(iii) வெளிநாட்டுக் கடன்களைத் திருப்பித்தர வேண்டிய நிலை ஆகியவைகளாகும்.

வளர்ச்சியடையாத ஒரு நாடு பொருளாதார வளர்ச்சியடைந்த நிலையை நோக்கி நகரும்போது பணவீக்க நிலை ஏற்படுவது இயல்பு. வருவாய் உயர்வும், விலை உயர்வும் இறக்குமதியை ஊக்குவிக்கும்; ஏற்றுமதியைப் பெருக்குவது கடினமாகின்றது. இதனால், அந்நியச் செலாவணி வசதிகளில் பாதிப்பு ஏற்படுகின்றது. வாணிபக்கொள்கை சாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையை ஏற்படுத்துவதில் பெரிதும் உதவும். வாணிபக் கொள்கையின் மூலம் ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்கலாம்.

அவசியப் பொருட்களையும், உள்நாட்டுத் தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களையும் மட்டும் இறக்குமதி செய்ய இறக்குமதிப் பங்களவுகள் (Import Quotas), அனுமதி வழங்குதல் (Licensing), அரசின் வாணிபம் (State Trading) போன்ற முறைகளைப் பின்பற்றலாம். செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Control), ஏற்றுமதி முன்னேற்றம் (Export Promotion) போன்ற தீர்வுகளும் நிலையைத் திருந்தச் செய்யும். பணவீக்க நிலையைக் குறைக்க வாணிபக்கொள்கை மட்டும் போதுமானதல்ல.

பொருத்தமான பண, நிதிக் கொள்கைகளால்தான் விலையுயர்வு களைப் பெருமளவு தடுக்க முடியும்.

அயல்நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கல்கள் உலகப் பொருளா தாரத்தின் மந்த நிலையாலும் (Depression) தோன்றலாம். வளர்ச்சி யடையாத நாடுகள் சில ஆதாரப் பொருட்களை மட்டுமே ஏற்றுமதி செய்கின்றன. மந்தநிலை நிலவும்போது ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பு குறைந்து விடுவதால், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பற்றாக்குறை ஏற்படுகின்றது. வாணிபக் கொள்கை ஏற்றுமதியை ஊக்குவித்து, இறக்குமதிக்குத் தடைவிதித்து அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சமநிலையை ஏற்படுத்தலாம். உள்நாட்டின் விலைகளில் அதிக அளவு ஏற்றத்தாழ்வுகள் இருந்தால், உள்நாட்டில் வருவாயை நிலைப்படுத்த வேண்டும். விலைகளை நிலைப்படுத்த அரசு 'கையிருப்பு தானியச் சேமிப்பு முறையை' பின்பற்றலாம். பன்னாட்டுப் பண்டக் கட்டுப்பாட்டு ஒப்பந்தங்களும், அரசின் விற்பனைக் கழகங்களும் விலைகளைக் கட்டுப்படுத்த உதவும்.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் வெளிநாட்டு முதலீட்டின் இலாபத்திற்கான பங்கைத் திருப்பித்தர அந்நியச் செலாவணி தேவைப்படுகிறது. இந்நிலையிலும் வாணிபக் கொள்கை சிக்கலைத் தீர்க்க உதவுகிறது. ஏற்றுமதி மூலதனம் அளித்த நாடு களுக்கு அதிகரிக்கப்பட்டு, இறக்குமதி கட்டுப்படுத்தப்படுகிறது. ஆகவே, அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சமநிலையை ஏற்படுத்த எளிதான முறையை வாணிபக் கொள்கை தருகின்றது.

வெளிநாட்டு வாணிபத்தைச் சீர்படுத்துவது வாணிபக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமாகும். வெளிநாட்டு வாணிபத்தை ஒழுங்குபடுத்தாமல், பொருளாதார முன்னேற்றத் தின் சாலையில் வளர்ச்சியடைந்துவரும் நாடு தொடர்ந்து செல்ல முடியாது. மூலதனத்திரட்சி வீதத்தைப் பெருக்க தொழிற் காப்புக்கொள்கை அவசியமாகிறது. தொழிற் காப்புக்கொள்கை தொழில் முன்னேற்றத்தையும் தருகிறது; சமநிலையில்லாத அயல் நாட்டுச் செலுத்துநிலையைத் திருத்தவும் உதவுகிறது.

வளர்ச்சியடையாத நாடுகள் கட்டுப்பாடுள்ள வாணிபக் கொள்கையைப் பின்பற்றுவதா, கட்டுப்பாடுகளைக் குறைவாகக் கொண்ட வாணிபக் கொள்கையைப் பின்பற்றுவதா என்பதில் பொருளியலாளர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. பேராசிரியர் மிர்டாலின் (Prof. Myrdal) நோக்கு, "வளர்ச்சியடை யாத நாடுகளின் இறக்குமதிக் கட்டுப்பாடுகள் இறக்குமதித் தேவைகளை ஒரு சில பொருட்களினின்றும் வேறு சில மூலதனப்

பொருட்களுக்கு மாற்றுகின்றன. கட்டுப்பாடுகள் எவ்வகையிலும் மொத்த இறக்குமதியின் அளவைக் குறைக்கமாட்டா," என்பதாக உள்ளது. இறக்குமதிக் கட்டுப்பாடுகளும், ஏற்றுமதி உதவித் தொகைகளும் உலக வாணிபத்தின் அளவில் குறைவைத் தருவதில்லை. வெளிநாட்டு வாணிபத்தைக் கடுமையான முறைகளில் கட்டுப்படுத்தினாலும் உலக வாணிப அளவில் குறைவு ஏற்படாது. வளர்ச்சியடைந்த நாடுகள் வாணிபக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி வளர்ச்சியடையாத நாடுகளின் வெளிநாட்டு வாணிப முன்னேற்றத்திற்கு உதவ வேண்டும். வளர்ச்சியடைந்த நாடுகளும் ஏற்றுமதியைப் பெருக்க ஏற்றுமதி உதவித்தொகைகளையும், இறக்குமதிக் கட்டுப்பாடுகளையும் மேற்கொள்கின்றன. இதனால், பின்தங்கிய நாடுகளின் வெளிநாட்டு வாணிபம் பெரிதும் பாதிக்கப்படுகிறது.[1]

"தொழிற்காப்பு வாணிபக் கொள்கை பின்பற்றப்படும்போது உற்பத்திப் பணிகள் சிறப்பாகச் செய்யப்படுவது இல்லை; வெளிநாட்டு முதலீடு ஏற்படுவதையும் அது தடைசெய்யும்," என மேயர் (Meier), பால்டுவின் (Baldwin) இருவரும் கருதுகின்றனர். தளர்த்தப்பட்ட வாணிபக் கொள்கையைப் பின்பற்ற பொருளாதாரத்தின் வளர்ச்சிவீதம் சிறப்பாக இருக்க வேண்டும். வளர்ச்சியடையாத நாடு பன்னாட்டு வாணிபத்தின் நன்மைகளைப் பெறாவிட்டால் வறுமையிலேயே உழல வேண்டி வரும்.[2]

நல்ல முறையில் பின்பற்றக் கூடிய தொழிற் காப்புக்கொள்கை நாட்டின் வளங்களை முற்றிலும் பயன்படுத்த உதவும்; பல வகைகளிலும் பொருளாதாரத் துறைகளை மேம்படுத்த வகை செய்யும். இந்நிலையே இறுதியாக வெளிநாட்டு வாணிபத்திலும் முன்னேற்றத்தைத் தரும்.

ஒரு வளர்ச்சியடையாத நாடு, பொருளாதார முன்னேற்றம், வெளிநாட்டு வாணிபம் என்ற இரண்டில் முன்னேற்றத்தையே பெரிதும் விரும்ப வேண்டும். பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்த உதவும் எளிய வழியாக வாணிபக்கொள்கை அமைகிறது. பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) கூறுவதுபோல, "வேலைவாய்ப்புக்களைப் பெருக்க வாய்ப்பிருந்தால், இறக்குமதிகளைத் தடை செய்வது எளிய முறையாகும். குறைந்த அளவு

[1] G. Myrdal, Economic Theory and Underdeveloped Regions, pp. 94–97.

[2] Meier and Baldwin, Economic Development, p. 409.

முன்னேற்றமடைந்துள்ள நாடுகளில் சுங்க வரிகளை விதித்து வசூலிப்பதும் எளிதானதே. இளந்தொழில்களுக்குக் காப்பளிக்க வேண்டுமென்றாலும், அவற்றிற்கு உதவித்தொகை அளிப்பதைவிட இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவது எளிதானது. வாணிபக் கொள்கை மிகச் சிறப்பான நிலைகளைத் தராதென்றாலும், எதிரிடை விளைவுகள் தீவிரமாக அமைவதில்லை. உள்நாட்டில் நுகர்பொருட்களின் தேவையைக் குறைக்கவும் வாணிபக்கொள்கை உதவுகிறது. ஒருவகையில் இது நிதிக்கொள்கையாகவும் செயல்படுகிறது."[3]

பண, நிதிக் கொள்கைகளுக்கு அடுத்தபடியாக பொருளாதார முன்னேற்றத்திற்கு பெரிதும் உதவக் கூடியது வாணிபக் கொள்கையாகும். உலகின் எந்த ஒரு நாடும் வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபடாமல் விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற இயலாது. பல நன்மைகளையும் அளிக்கக்கூடிய வகையில் இறக்குமதி ஏற்றுமதிகளைக் கட்டுப்படுத்துவதே வாணிபக் கொள்கையாகும். வெளிநாட்டு வாணிபம் இன்றி வளர்ச்சியடையாத நாடுகள் முன்னேற்றத்தைப் பெறமுடியாது. வெளிநாட்டு வாணிபம் சாதகமாக அமைய வாணிபக் கொள்கை உதவுகிறது.

வாணிபக்கொள்கைக்கும், ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. வாணிப நிலையைக் கட்டுப்படுத்துவதே வாணிபக் கொள்கையின் நோக்கமாகும். இறக்குமதி மதிப்பும், ஏற்றுமதி மதிப்பும் சமமாக இருந்தால் வாணிபக் கொடுப்பல் நிலை (Balance of Trade) ஏற்படும். ஏற்றுமதி மதிப்பு இறக்குமதி மதிப்பைக் காட்டிலும் அதிகமாக இருந்தால், அது 'சாதக வாணிப இருப்பு நிலை (Favourable Balance of Trade) எனப்படும். இறக்குமதி மதிப்பு ஏற்றுமதி மதிப்பைவிட அதிகமாக இருந்தால், அது 'பாதக வாணிப இருப்பு நிலை (Unfavourable Balance of Trade) எனப்படும். அயல்நாட்டுச் செலுத்து இருப்பு நிலையில் (Balance of Payments) ஏற்றுமதி, இறக்குமதிகளில் காணப்படாத பற்று, வரவு இனங்கள் சேர்க்கப்படுகின்றன. நாடுகளுக்கிடையே பண்டங்களோடு பணிகளும் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. வேறு சில கொடுக்கல், வாங்கல் நிலைகளும் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் அமைந்துள்ளன. உதாரணமாக, கப்பல் கட்டணங்கள் வெளி நாட்டுக் கடனுக்கான வட்டி, காப்பீட்டுச் செலவு, தூதரகச் செலவு போன்றவைகளும் அயல் நாட்டுச் செலுத்துநிலையின் கொடுக்கல், வாங்கல்களில் சேர்க்கப்படுபவைகளாகும்.

[3] R. Nurkes, Problems of Capital Formation in Underdeveloped Countries, pp. 118-119.

### செலுத்துநிலைச் சமன்கேட்டைத் திருத்தும் வழிகள்

எந்த ஒரு நாடும் நிரந்தரமாக சாதகச் செலுத்துநிலையைப் பெற்றிருக்க முடியாது. செலுத்துநிலையில் ஏற்படும் சமன்கேடு காலப் போக்கில் தானே சீர் பெறும். ஆனால், நீண்ட காலம்வரை அரசு பொறுத்திருக்காமல் சாதகச் செலுத்துநிலையைப் பெற பல நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். பணவாட்டம் (Deflation), செலாவணி மதிப்புக் குறைப்பு (Exchange Depreciation), பண 'மதிப்புக் குறைப்பு' (Devaluation), அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடு (Exchange Control), இறக்குமதிக் கட்டுப்பாடு, ஏற்றுமதி முன்னேற்றம் போன்ற முறைகளால் செலுத்துச் சமநிலைக்கேட்டைத் திருத்தலாம். ஒரே ஒரு முறையை மட்டும் பின்பற்றி வெற்றி பெற முடியாது. சூழ்நிலைகளுக்கு ஏற்ப பல வழி முறைகளும் பின்பற்றப்பட வேண்டும்.

### இந்தியாவின் வெளிநாட்டு வாணிபமும் வாணிபக் கொள்கையும்

சுயாட்சி பெறுவதற்கு முன் இந்தியா வினைமுடிந்த நுகர் பொருட்களை இறக்குமதி செய்து மூலப்பொருட்களை ஏற்றுமதி செய்தது. 1930 வரை சாதக அயல்நாட்டு வாணிப நிலையை நாம் கொண்டிருந்தோம். இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் பெருந் தொழில்கள் வளரத் தலைப்பட்டமையால் மூலப்பொருட்களின் இறக்குமதி அதிகரித்து வினைமுடிந்த பொருட்களின் இறக்குமதி குறைந்தது; இங்கிலாந்து நாட்டோடு நெருங்கிய வாணிபத் தொடர்பு இருந்தது. அமெரிக்காவோடு வாணிபம் வளர்ந்தமையால் சாதக வாணிப நிலையே இருந்தது.

சுயாட்சியடைந்த பிறகு இறக்குமதி பல காரணங்களால் அதிகரித்தது. அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளோடு வாணிபம் பெருகியது. திட்டங்களினால் மூலதனப் பொருட்களின் இறக்குமதி கூடியது. படிப்படியாக பாதக வாணிப நிலையே வளர்ந்து வருகிறது. 1951-52-இல் 210.14 கோடி ரூபாய் இருந்த பாதக வாணிப நிலை, 1968-69-இல் 432-36 கோடி ரூபாயாக உயர்ந்தது. தற்பொழுது பல நாடுகளோடு வாணிப ஒப்பந்தங்களை இந்தியா செய்து கொண்டுள்ளது. 1968-69-இல் ரூ.1353·8 கோடி மதிப்புள்ள பொருட்களை ஏற்றுமதி செய்தோம். 1973-74-இல் இதை ரூ. 1899 கோடி என்ற அளவிற்கு உயர்த்தத் திட்டமிடப்பட்டுள்ளது.

ஏற்றுமதி அதிகம் பெருகாமைக்கான காரணங்கள்:

(1) பணவீக்கத்தினால் விலைகள் உயர்ந்து விடுவதால் வெளி நாடுகளின் தேவை குறைகின்றது. ஏற்றுமதிப் பண்டங்களின்

விலையுயர்வினால் ஏற்றுமதியைப் பெருக்க முடியவில்லை. நம்நாட்டில் 102 சதவீதம் பணவீக்கம் ஏற்பட்டமையே விலையுயர்விற்குக் காரணமாகும்.

(2) அயல்நாட்டுப் போட்டிகள் அதிகரித்து வருகின்றன. சணல், தேயிலை, எண்ணெய் வித்துக்கள் போன்ற பாரம்பரியப் பொருட்களையே நாம் ஏற்றுமதி செய்கிறோம். இவ்வகைப் பொருட்களின் விற்பனையில் வளர்ச்சியடையாத நாடுகளுக்கிடையே போட்டி நிலவுகின்றது.

(3) ஏற்றுமதிப்பொருட்கள் வேளாண்மை உற்பத்தியைச் சார்ந்தும் உள்ளன. வேளாண்மை உற்பத்தி பெருகாமையால் ஏற்றுமதி அதிகரிக்கவில்லை. மக்கட்தொகை பெருகி வருவதால் ஏற்றுமதி உபரியும் குறைந்து விடுகிறது. உற்பத்தியின் பெரும் பகுதி உள்நாட்டிலேயே நுகரப்படுகிறது.

(4) ஏற்றுமதி உற்பத்தியாளர்களும் தீவிரமாக ஏற்றுமதி நடவடிக்கைகளை மேற்கொள்வதில்லை. ஏற்றுமதி வரிகள், கட்டுப் பாடுகள் போன்றவை ஏற்றுமதியின் அளவைக் குறைத்தன. ஏற்றுமதிப் பொருட்கள் உயர்ந்த தரத்தைக் கொண்டில்லாமை யாலும் ஏற்றுமதியாளர்கள் ஏற்றுமதியின் அளவை அதிகரிக்க முடியவில்லை.

(5) இந்திய அரசு இறக்குமதிப் பொருட்களுக்கு சுங்க வரி விதிப்பதைப் போலவே, பிற நாடுகளும் இந்தியப் பொருட்களின் மீது சுங்கவரிகளை விதிக்கின்றன. நமது ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்திச் செலவே அதிகமாக இருக்கும் போது, சுங்க வரி விதிப்பினால் மேலும் விலை உயர்ந்து விடுகின்றது.

(6) நம் நாட்டில் தொழில் முன்னேற்றம் ஏற்படாமை யால் பாரம்பரியமான, தேவைநெகிழ்ச்சியற்ற ஏற்றுமதிப் பொருட்களே ஏற்றுமதியாகின்றன. பலவகைப்பட்ட புதிய தொழிற் பொருட்களின் தேவைநெகிழ்ச்சி மிகுந்ததாக உள்ளது. அவ்வகைப் பொருட்களை நாம் ஏற்றுமதி செய்ய வேண்டும்.

(7) ஏற்றுமதியாளர்களிடம் நேர்மையற்றநிலை நிலவி வருகிறது. தரமான பொருட்களை நல்ல விளம்பரங்களோடு அவர்கள் அளிப்பதில்லை. முந்திரி ஏற்றுமதி பாதிக்கப்பட்டதும், 'பிளீடிங் மதராஸ்' துணியின் தேவைக் குறைவும் ஏற்றுமதியாளர் களின் நேர்மைக் குறைவினால் எனலாம்.

(8) பொருளாதாரத்தின் பல துறைகளும் முன்னேறி யிருக்கவில்லை. அரசின் எல்லாத் துறைகளும் இணைந்து செயலாற்று மையாலும் ஏற்றுமதி பெருகியிருக்கவில்லை.

(9) நம் நாட்டின் ஏற்றுமதிப் பொருட்களுக்குப் பதிலிகள் பல நாடுகளிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சணல், மைக்கா, இன்டிகோ போன்ற தொழில்கள் பதிலிப் பொருட்களின் கண்டு பிடிப்பால் பாதிக்கப்பட்டுள்ளவை.

(10) உற்பத்திப் பொருட்களுக்கு உள்நாட்டிலேயே உயர்ந்த விலை கிடைப்பதால், உற்பத்தியாளர்கள் ஏற்றுமதி செய்ய விரும்புவதில்லை. திட்டங்களை நிறைவேற்ற 'பற்றாக்குறை நிதியாக்கம்' பின்பற்றப்பட்டமை உள்நாட்டில் விலையுயர்வுக்குக் காரணமாகும்.

(11) நமது திட்டங்களிலும் ஏற்றுமதிக் கொள்கைக்கு முக்கிய இடமளிக்கப்படவில்லை. மூன்றாவது திட்டத்தில்தான் தெளிவான ஏற்றுமதிக் கொள்கை தேவையென உணரப்பட்டது.

(12) பிற நாடுகளின் தொழில் வளர்ச்சிக்கு ஈடாக நாம் நம் நாட்டில் தொழில் வளர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை. உலகச் சந்தையில் இந்தியப் பொருட்களுக்கு நிலையான சந்தை இருப்ப தில்லை. உதாரணமாக, பாகிஸ்தானின் சணல் ஆலைகள் சமீப காலத்தில் தொடங்கப்பட்டமையால் சணல் பொருட்களின் உற்பத்தி அங்கு தரமாக உள்ளது. நம் நாட்டின் சணல் ஆலைகள் மிகப் பழங்காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவை. உற்பத்திச் செலவைக் குறைப்பதும், தரமான உற்பத்தியைப் பெறுவதும் இதனால் கடினமாகின்றது.

திட்டக்காலத்தில் இறக்குமதி பெருகியமைக்கான காரணங்கள்

(1) திட்டங்களின் தொழில் முன்னேற்றதிற்கான முதலீடு செய்ய இயந்திரத் தளவாடங்களை இறக்குமதி செய்யவேண்டி யிருந்தது. வளர்ச்சியடையாத நாடுகளில் இவ்வித முன்னேற்ற முதலீடுகளைச் செய்ய மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வது இன்றியமையாதது.

(2) இறக்குமதி செய்யப்படுகின்ற பொருட்களை நம் நாட்டிலேயே உற்பத்தி செய்ய நாம் முயலவில்லை. பொறியியல் துறையை வளர்த்து இயந்திரங்களையும், கருவிகளையும், கனரகப் பொருட்களையும், போர்த்தளவாடங்களையும் உற்பத்தி செய்து அவற்றின் இறக்குமதியைக் குறைக்க வேண்டும்.

(3) உள்நாட்டின் சேமிப்பு வீதம் பெருகாமையால் அந்நிய முதலீட்டை எதிர்பார்க்க வேண்டியுள்ளது.

(4) வேளாண்மையை முக்கிய தொழிலாகக் கொண்டிருந் தும், உணவுப் பொருட்களை உணவுப் பற்றாக்குறையினால்

இறக்குமதி செய்து வருகிறோம். உணவுப் பொருட்களை இறக்குமதி செய்வதில் மதிப்புமிக்க அந்நியச் செலாவணியும் வீணடிக்கப் படுகிறது. உணவில் தன்னிறைவைப் பெற்று விட்டால், தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனப் பொருட்களை அதிக அளவில் இறக்குமதி செய்யலாம்.

(5) சீனப் படையெடுப்பாலும், பாகிஸ்தானின் ஊடுருவல் காரணமாகவும் போர்த்தளவாட இறக்குமதி பெருகிவிட்டது.

(6) இரசாயன உரங்கள், இரசாயனப் பொருட்கள், நெட்டிழைப்பருத்தி, பெட்ரோல், போக்குவரத்துச் சாதனங்கள், எந்திரங்கள் பராமரிப்பிற்குத் தேவையான தனிபாகங்கள் ஆகிய வற்றின் இறக்குமதியும் கூடியுள்ளது. மூலப்பொருட்களின் இறக்குமதி இல்லாவிடில் தொழில் வளர்ச்சி குன்றிவிடும்.

(7) உள்நாட்டில் வரிவருவாய், மற்றும் பல நிதிவசதிகள் திட்டங்களை நிறைவேற்றப் போதுமானதாக இல்லை. எனவே, வெளிநாட்டுக் கடன்கள் பெறப்பட்டன. அக்கடன்களுக்கான வட்டி, தவணை போன்றவைகளும் அதிகரித்துள்ளன.

(8) மேம்பாடடைந்துவரும் பொருளாதாரத்திற்குத் தேவை யான 'பராமரிப்பு இறக்குமதி' (Maintenance Imports) இரண்டாவது திட்டத்திலிருந்து பெருகியது. கப்பல் கட்டணங்கள் அதிகரித்து, மூலப்பொருட்களின் தேவை கூடியமையாலும் அந்நியச் செலாவணித் தேவை அதிகரித்தது.

1947-ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்தியாவில் தொடர்ந்து பாதகச் செலுத்துநிலையே அமைந்துள்ளது. ஆனால் 1949-இன் ரூபாய் மதிப்புக் குறைப்பாலும், 1950-இல் கொரியப் போர் தொடங்கியதாலும் 1950-51-இல் மட்டும் செலுத்துநிலைச் சாதக மாக இருந்தது. முதல் திட்டக் காலத்தில் பற்றுக்குறை செலுத்து நிலை ரூ. 42 கோடியாகும். இது இரண்டாவது திட்டத்தில் ரூ. 1,772 கோடியாகவும், மூன்றாவது திட்டத்தில் ரூ. 2,600 கோடி யாகவும் உயர்ந்துவிட்டது.

ஏற்றுமதியைப் பெருக்கி, இறக்குமதியைக் குறைக்க இந்தியா 1949, செப்டம்பர் 19-ஆம் நாள் முதன் முதலாக ரூபாயின் மதிப்பை 30.5% குறைத்தது. நாணய மதிப்புக் குறைப்பு பல உலக நாடுகளாலும் பின்பற்றப்படுகின்ற முறையாகும். வளர்ச்சி யடைந்த நாடுகளும் இம்முறையைப் பின்பற்றுகின்றன. வளர்ச்சி யடையாத நாடுகள் பெரும்பாலும் பாதகச் செலுத்துநிலையைக் கொண்டுள்ளமையால், அதைத் தவிர்க்க உதவும் ஒரு முறையாக

நாணய மதிப்புக் குறைப்பு அமைகிறது. ஆனால், நாணய மதிப்புக் குறைப்பால் முன்னேற்றமடைந்த நாடுகளுக்குக் கிடைக்கும் வெற்றி முன்னேற்றமடைந்துவரும் நாடுகளுக்குக் கிடைப்பதில்லை.

1960-ஆம் ஆண்டிற்கும் 1970-ஆம், ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் சுமார் 26 நாடுகள் நாணய மதிப்புக் குறைப்புச் செய்தன. இவற்றில் இம்முறையின் முழுப்பயனையும் பெற்ற நாடுகள் பெல்ஜியம், பிரான்ஸ் இரண்டுமேயாகும். இந்தோனேசியாவின் நாணய மதிப்புக் குறைப்பு பெரிய தோல்வியையே தந்தது. இந்தியாவில் இரண்டாவது முறையாக 1966 ஜுன் 5-ஆம் நாள் ரூபாயின் மதிப்பு 36.5% குறைக்கப்பட்டது. எனினும், எதிர்பார்த்த பலன்கள் கிட்டவில்லை. நாணய மதிப்புக் குறைப்பின் வெற்றி கீழ்க்கண்டவற்றைப் பொறுத்து அமையும்:

(1) ஒரு நாடு நாணய மதிப்புக்குறைப்பு செய்ததைத் தொடர்ந்து உலகில் வேறு சில நாடுகள் நாணய மதிப்பிறக்கம் செய்தல் கூடாது.

(2) உள்நாட்டில் உற்பத்திச் செலவிலும், விலையிலும் மாற்றங்கள் ஏற்படாமல் அரசு பார்த்துக் கொள்ள வேண்டும். உற்பத்திச் செலவு உயர்ந்து விலைகள் அதிகரித்தால் ஏற்றுமதியைப் பெருக்க இயலாது.

(3) நாணய மதிப்புக்குறைப்பு செய்த பிறகு அரசு சீரிய பணத்துறை நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

(4) ஏற்றுமதிப் பொருட்களின் தேவை வெளிநாடுகளில் நெகிழ்ச்சிமிக்கதாக இருத்தல் வேண்டும். நெகிழ்ச்சியற்ற தேவையைக் கொண்ட பொருட்களை ஏற்றுமதி செய்து, ஏற்றுமதி வாணிபத்தைப் பெருக்க முடியாது.

இந்தியாவின் பொருளாதாரச் சிக்கல்களில் முக்கியமாகத் தீர்க்கப்பட வேண்டிய சிக்கலாக பாதகச் செலுத்துநிலை உள்ளது. பாதகச் செலுத்துநிலையைக் குறைக்க ஸ்டெர்லிங் நிதி பயன்படுத்தப்பட்டது. வெளிநாட்டுக் கடன்கள் பெற்றும் பாதகச் செலுத்துநிலை சமாளிக்கப்படுகிறது. சூழ்நிலைகளுக்கு ஏற்ப பங்களவுகள் நிர்ணயிக்கப்படுகின்றன; இறக்குமதி அனுமதிகள் வழங்கப்படுகின்றன.

வளர்ச்சியடையாத நாடுகளின் தொழிற்காப்பு முறைகளைப் பல வகைகளில் பின்பற்ற முடியும். அவற்றில் முக்கியமானவை;

(i) இறக்குமதித் தீர்வைகள் (Import Duties);

(ii) இறக்குமதிப் பங்களவுகள் (Import Quotas);

(iii) நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் (Exchange Controls);

(iv) அரசின் கொடைகள் (Bounties);

(iv) இறக்குமதி அனுமதி (Import Licence) ஆகியவையாகும்.

குவிப்பு (Dumping) முறையின் மூலமாகவும் வெளிநாட்டுச் சந்தைகளைப் பெறலாம். உபரிப் பொருட்களை விற்பனை செய்யவும், பிறநாடுகளின் போட்டியைத் தவிர்ப்பதற்கும் இம்முறை பின்பற்றப்படுகிறது. உள்நாட்டு விற்பனைவிலையைவிட வெளிநாட்டில் குறைவான விலைக்கு விற்பனை செய்வது 'குவிப்பு' முறை ஆகும். வெளிநாட்டுத் தொழில்களைத் தாழ்த்தி, நீண்ட காலத்தில் அத்தொழிற்பொருட்களின் தேவையை அதிகம் பெறவும் இம்முறை சில நாடுகளால் கையாளப்பட்டது. வளர்ச்சியடைந்த நாடுகளே பெருமளவில் இவ்விதக் குவிப்பு முறையைப் பின்பற்றுகின்றன. தற்பொழுது உலகின் பல நாடுகளிலும் 'குவிப்புத் தடுப்புத் தீர்வைகள்' (Anti Dumping Duties) விதிக்கப்படுதலால் 'குவிப்பு' முறை பெரிதும் குறைந்து விட்டது.

இன்றைய நிலையில் வாணிப ஒப்பந்தங்கள் இன்றி பன்னாட்டு வாணிபம் நடைபெறுவது கடினமாகின்றது. இவ்வகை ஒப்பந்தங்கள் மிகப் பழங்காலம் முதற்கொண்டே உலகநாடுகளுக்கிடையே ஏற்படத் துவங்கின. அவற்றில் முக்கியமான ஒன்றாக 'இம்பீரியல் சலுகை' அமைந்திருந்தது. 1932-இல் ஆங்கில அரசைச் சார்ந்த நாடுகள் (இந்தியா உட்பட) கனடாவின் ஒட்டாவா நகரில் கூடி ஒப்பந்தத்தின் மூலம் 'இம்பீரியல் சலுகையை' ஏற்படுத்தினர். இச்சலுகையைப் பெற்ற உறுப்பு நாடுகள் தங்களுக்குள் இறக்குமதிச் சலுகைகளை அளித்துக் கொண்டன. இச்சலுகை மூலம் அதிக நன்மை பெற்றது இங்கிலாந்து நாடேயாகும். இதில் அங்கம்வகித்த நாடுகளில் பல சுயாட்சி பெற்றுவிட்டமையால் இன்று அது 'காமன்வெல்த் சலுகை' என அழைக்கப்படுகிறது. தற்பொழுது இம்முறை சிறப்பாகச் செயலாற்றவில்லை என்றே கூறலாம்.

இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளின் வெளிநாட்டு வாணிபம் பெருக 'சுங்கவரி வாணிபப் பொது ஒப்பந்தம்' (General Agreement on Tariff and Trade - GATT) பெரிதும் உதவுகின்றது. வாணிபத் தடைகளையும், சுங்கவரிகளையும் குறைக்கும் நோக்கோடு 1947-இல் 23 நாடுகள் பங்கேற்ற ஜெனிவா மாநாட்டின் விளைவால், 1947-ஆம் ஆண்டு அக்டோபர் 30-ஆம் தேதி முதல் இச்

சுங்கவரி வாணிபப் பொது ஒப்பந்தம் செயலாக்கப் படுகின்றது. தற்பொழுது இவ்வொப்பந்தத்தின்கீழ் இந்தியா உட்பட சுமார் 35 நாடுகள் உள்ளன. இந்தியாவின் ஏற்றுமதிகளில் பாதிக்குமேல் இவ்வொப்பந்தத்தின் மூலமே அங்கம் வகிக்கும் நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றது. தடை குறைந்த வாணிபத்தைத் தருவதாக இம்முறை உள்ளது. இதன் மூலம் வளர்ச்சி குன்றிய நாடுகள் இறக்குமதி ஏற்றுமதிகளைக் கட்டுப்படுத்தி அயல்நாட்டுச் செலுத்துநிலையைப் பாதுகாத்துக் கொள்ள முடிகின்றது. 1967-இல் இந்தியா உட்பட 46 உலகநாடுகள் ஜெனிவாவில் கூடி அவற்றிற்கிடையே சுங்கவரிச்சலுகையைப் பெற 'கென்னடி உடன்பாட்டைச்' (Kennedy Round Pact) செய்து கொண்டன. சுங்கவரிக் குறைப்பிற்கு உதவுவதாக இவ்வுடன்பாடு அமைந்துள்ளது.

### வாணிபப் போக்கு

இரண்டாவது உலகப் போருக்குப் முன் இந்தியா ஸ்டெர்லிங் நாடுகளோடு நெருங்கிய வாணிபத் தொடர்பு கொண்டிருந்தது. போருக்குப்பின் காமன்வெல்த் நாடுகளோடும், பிற உலகநாடுகளோடும் சமமான வாணிபத்தைக் கொண்டிருந்தது. ஆனால், 1955-56-இல் இறக்குமதியில் 44% மட்டுமே காமன்வெல்த் நாடுகளிலிருந்து இறக்குமதியானது. எந்திரப் பொருட்கள் அமெரிக்காவிடமிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. திட்டக்காலத்தில் அமெரிக்காவுடன் இந்தியாவின் வாணிபத் தொடர்பு நெருக்கமடைந்தது. தேயிலை, வாசனைப் பொருட்கள், தோல், தோற்பொருட்கள், சணல், சணற் பொருட்கள் ஆகியவற்றை அமெரிக்காவிற்கு ஏற்றுமதி செய்கிறோம். அமெரிக்காவிடமிருந்து எந்திரங்கள், எந்திர பாகங்கள், மருந்துப்பொருட்கள், உணவுப்பொருட்கள், இரசானப்பொருட்கள், டிராக்டர்கள் போன்றவை இறக்குமதியாகின்றன. அமெரிக்கவோடு சாதக வாணிப நிலையை நாம் பெற்றிருக்கவில்லை.

இந்தியாவின் இறக்குமதியை மூன்று பிரிவாகப் பிரித்தால், முதலாவதாக, உணவு இறக்குமதியின் அளவு படிப்படியாகக் குறைந்து வருகிறது. இரண்டாவதாக, மூலப்பொருட்களின் இறக்குமதி குறையாமலிருக்கின்றமைக்கு நம்நாட்டின் தொழில் முன்னேற்றமே காரணமாகும். மூன்றாவதாக, மூலதனப் பொருட்களின் இறக்குமதி அதிக அளவில் இருந்தாலும், வினைமுடிந்த நுகர் பொருட்களின் இறக்குமதி குறைந்து வருகிறது. நுகர்பொருட்களின் இறக்குமதிகளுக்குத் தடைவிதிக்கப் படுவதாலும், அவற்றை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்வதாலும் இறக்குமதிக் குறைவு ஏற்பட்டுள்ளது.

முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த திட்டங்களுக்கு மட்டுமே இறக்குமதி அனுமதிக்கப்பட வேண்டுமென்ற வாணிபக் கொள்கை அரசால் பின்பற்றப்பட்டது. ஏற்றுமதியைப் பெருக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1949-ஆம் ஆண்டின் ரூபாய் மதிப்புக் குறைப்பாலும், 1950-ஆம் ஆண்டு தொடங்கிய கொரியப் போராலும், 1950-51-இல் இந்தியாவின் இறக்குமதி ரூ. 150 கோடியாகக் குறைந்தது. ஏற்று மதி மதிப்பு ரூ. 600 கோடி என்ற அளவில் இருந்தது. 1956-இல் ஏற்றுமதி ரூ. 629 கோடி என்ற அளவிற்கு மட்டுமே உயர்ந்த போது, இறக்குமதி ரூ. 1,101 கோடி என்ற அளவிற்கு உயர்ந்து விட்டது.

1957-ஆம் ஆண்டு இறக்குமதிக் கட்டுபாட்டுக் கொள்கை கொண்டுவரப்பட்டது. இயந்திரங்கள், மூலப்பொருட்கள், தொழில் பராமரிப்பிற்கான பொருட்கள் தவிர மற்றவற்றின் இறக்குமதி கட்டுப்படுத்தப்பட்டது. பலவிதக் கட்டுப்பாடுகள் அமைந்திருந்தும் 1957-இல் ஏற்றுமதி மதிப்பு ரூ. 622 கோடி யாக உயர்ந்தது. 1965-ஆம் ஆண்டிற்குப்பின் அந்நியச் செலா வணிப் பற்றுக்குறை உணரப்பட்டது. 1966-67-ஐ விட 1967–68-இல் ஏற்றுமதி அதிகரித்தது. 1967-68-இல் ஏற்றுமதி ரூ. 1,180 கோடி என்ற அளவிலும், இறக்குமதி ரூ. 1970 கோடி என்ற அளவிலும் இருந்தன.

1957-ஆம் ஆண்டின் 'ஏற்றுமதி முன்னேற்றக்குழு' (Export Promotion Committee) ஏற்றுமதியைப் பெருக்க பல பரிந்துரைகளை வழங்கியது :

1. வேளாண்மை உற்பத்தி பெருக வேண்டும்.
2. உள்நாட்டு நுகர்வைக் குறைத்தாவது, ஏற்றுமதியைப் பெருக்க வேண்டும்.
3. விலை உயர்வு கட்டுப்படுத்தப்பட வேண்டும்.
4. புதுவகைப் பொருட்களை ஏற்றுமதி செய்து, புதிய சந்தை களையும் பெற வேண்டும்.
5. ஏற்றுமதிப் பொருட்களின் புதிய பயன்களை அறிய ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப் படவேண்டும்.
6. ஏற்றுமதிக் கடன் வசதிகளை வங்கிகள் அளிக்க வேண்டும்.
7. ஏற்றுமதிப் பொருட்களுக்கு வெளி நாடுகளில் விளம்பரங் கள் செய்ய வேண்டும்.

8. தரப்பரிசோதனைகளை மேற்கொண்டு தரக்கட்டுப்பாட்டோடு ஏற்றுமதி செய்யப்பட வேண்டும்.

9. இந்தியக் கப்பல்களையே ஏற்றுமதிகளில் பயன்படுத்த வேண்டும்.

இவைத்தவிர, 1962-இல் அரசு அமைத்த 'முதலியார் குழு' (Mudaliar Committee) ஏற்றுமதியின் அளவையும், மதிப்பையும் அதிகரிக்க வேறு சில ஆலோசனைகளைக் கூறியது:

(i) ஏற்றுமதியாளர்களுக்கு சலுகைகள் வழங்கப்பட வேண்டும். அவர்களுக்கு வருமான வரிச்சலுகையும் வழங்கப் படலாம்.

(ii) ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு மூலப்பொருட்கள் தட்டுப்பாடு இல்லாமல் கிடைக்க வழி செய்யவேண்டும்.

(iii) இரயில்வே போக்குவரத்துச் சலுகைகள் ஏற்றுமதியாளர்களுக்கு அளிக்கப்பட வேண்டும்.

(iii) ஏற்றுமதியாளர்களுக்குத் தேவையான எந்திரங்கள், மூலப்பொருட்கள் ஆகியவற்றை எளிதில் இறக்குமதி செய்ய அனுமதிக்க வேண்டும்.

ஏற்றுமதியைப் பெருக்க பல முன்னேற்றக் குழுக்கள் அமைக்கப்பட்டன. 'ஏற்றுமதி இழப்பீட்டுக் கழகம்' (Export Risks Insurance Corporation) ஏற்படுத்தப்பட்டது. வெளிநாடுகளில் கண்காட்சிகளும், பொருட்காட்சிகளும் நடத்தப்பட்டன. ஜப்பானில் நடைபெற்ற உலகப் பொருட்காட்சியாகிய எக்ஸ்போ '70-இல் இந்தியாவும் சிறப்பாகப் பங்கேற்றதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் தளர்த்தப் பெறுகின்றன; ஏற்றுமதி வரி, ஆயவரி போன்றவற்றில் சலுகைகள் வழங்கப்படுகின்றன. போக்குவரத்து வளர்ச்சியாலும், இறக்குமதிச் சலுகைகளாலும் ஏற்றுமதி உற்பத்தியாளர்கள் பயனடைகின்றனர்.

1962 முதல் 1969 வரை முதலியார் குழுவின் பரிந்துரைகளின்படி இறக்குமதிக் கொள்கை பின்பற்றப்பட்டது. ஒவ்வொரு ஆண்டும் 'இறக்குமதி அனுமதி' (Import Licence) வழங்கும் முறை வழக்கிற்கு வந்தது. 'அரசின் வாணிபக் கழகம்' (State Trading Corporatoin) நிறுவப்பட்ட பின் ஏற்றுமதி பெருகியது.

மூன்றாவது திட்டத்தில் ஏற்றுமதிக் கொள்கை முக்கியமானதாகக் கருதப்பட்டு செயல்படுத்தப்பட்டது. மூன்றாவது திட்டத்தின் ஏற்றுமதிக் கொள்கை பின்வருமாறு அமைந்தது:

(1) ஏற்றுமதிப் பொருட்களுக்கு அதிக இலாபம் கிடைக்க வகை செய்ய வேண்டும்.

(2) ஏற்றுமதியைப் பெருக்க உள்நாட்டு நுகர்வையும் கட்டுப் படுத்த வேண்டும்.

(3) ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்திச்செலவைக் குறைக்க வேண்டும்.

(4) ஏற்றுமதியின் அளவை உயர்த்த பொதுமக்கள், வணி கர்கள், தொழிலதிபர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பைப் பெற வேண்டும்.

(5) புதிய பொருட்களை ஏற்றுமதி செய்து, புதிய சந்தை களையும் பெறுதல் வேண்டும்.

(6) ஏற்றுமதியாளர்களுக்குக் கடன், காப்புறுதி வசதிகள் செய்து தரப்பட வேண்டும்.

1656-ஆம் ஆண்டிற்குப்பின் ஆடம்பர நுகர் பொருட்களின் இறக்குமதி பலவிதத் தடைகளாலும், கட்டுப்பாடுகளாலும் குறைந்து வருகிறது. எனினும், இவ்வகைப் பொருட்கள் கள்ளச் சந்தைகளில் வெளிநாடுகளினின்றும் கடத்தப்பட்டு விற்கப்படு கின்றன. இதைத்தடுக்க அரசு நடவடிக்கைகளை எடுத்து வரு கின்றது. ஏற்றுமதிக்கான அனுமதி எளிதாக வழங்கப்படு கிறது. ஏற்றுமதி வரிசலுகைகளும் அளிக்கப்படுகின்றன. மூலப் பொருட்கள், முதலீட்டுப் பொருட்கள் தாராளமாக இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படுகின்றன. அவசியமற்ற செலவுகளைக் குறைக்க செலாவணிக் கட்டுப்பாடும் உள்ளது.

ஏற்றுமதியை உயர்த்த உள்நாட்டு விலைகளில் அதிக உயர்வு ஏற்படக் கூடாது. விலைகளின் உயர்வைத் தடுக்க 'ரிசர்வ் வங்கி' பணக்கொள்கையையும், அரசு நிதிக்கொள்கையையும் பின்பற்று கின்றன ஏற்றுமதிப் பொருட்களின் தரத்தை நிலை நிறுத்த தேஷ்முக் குழுவின் ஆலோசனையின்படி 'அரசின் வாணிபக்கழகம்' 1956-இல் நிறுவப்பட்டது. பல உலக நாடுகளோடும் இது வாணிபம் செய்து வருகின்றது. நடுத்தர, சிறு தொழில்களின் பொருட்களை ஏற்றுமதிசெய்ய உதவும் திட்டம் 1962-இல் கொண்டுவரப்பட்டது. இதன் மூலம் நெகிழ்ச்சியுள்ள தேவையைக் கொண்ட நுகர்பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இது 'ஏற்றுமதி முன்னேற்றத்திற்கு' உதவும். ஜப்பானின் அதிவிரைந்த பொருளாதார வளர்ச்சி வீதத்திற்கு வெளிநாட்டு வாணிபமே பெரிதும் உதவுகின்றது. இயற்கை வளங்களைக் கொண்டில்லாத ஜப்பான் மூலப்பொருட்களை இறக்குமதி செய்து

வினைமுடிந்த பொருட்களை ஏற்றுமதி செய்கிறது. மேலும், ஜப்பான் ஏற்றுமதி செய்யும் பொருட்களின் பெரும் பகுதி சிறு தொழில்களால் உற்பத்தி செய்யப்படும் நுகர்பொருட்களேயாகும். இந்தியாவும் அம்முறையைப் பின்பற்றி, சிறு தொழில்களை வளர்த்து தேவை நெகிழ்ச்சிமிக்க நுகர்பொருட்களை ஏற்றுமதி செய்தல் ஏற்றுமதியில் முன்னேற்றத்தைத் தரும்.

### இரண்டாவது ரூபாய் மதிப்புக்குறைப்பு

அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சாதக நிலையை ஏற்படுத்த 1966-ஆம் ஆண்டு ஜூன் 6-ஆம் நாள் ரூபாயின் மதிப்பு 36. 5 % குறைக்கப்பட்டது. இதனுடைய முக்கிய நோக்கமாக ஏற்றுமதியின் அளவையும், மதிப்பையும் பெருக்குவது அமைந்தது. ரூபாயின் மதிப்புக் குறைப்பால், டாலரின் விலை ரூ. 4. 76 லிருந்து ரூ 7. 50 ஆக உயர்ந்தது பவுன் மதிப்பு ரூ. 13. 3 லிருந்து ரூ. 21-ஆக உயர்ந்தது; அயலகச் செலாவணியின் மதிப்பு 57. 5 % கூடியது.

### ரூபாய் மதிப்புக் குறைப்பிற்கான காரணங்கள்

(1) தொடர்ந்து செலுத்துநிலை பாதகமாக இருந்து வந்தது. ஏற்றுமதி பெருகாததோடு, இறக்குமதியின் அளவு அதிகரித்ததால் அயலகச் செலாவணியின் இருப்பு குறைந்துவிட்டது.

(2) தொழில் முன்னேற்றத்திற்கான திட்டங்களினால் எந்திரங்களும், மூலப்பொருட்களும் இறக்குமதி செய்யப்பட்டன. மக்கட்தொகைப் பெருக்கத்தால் உணவு இறக்குமதியும் தவிர்க்க முடியாத ஒன்றாகியது.

(3) மிகைமதிப்பில் ரூபாய் இருந்ததெனவும் கூறலாம். ஏனெனில், தொடர்ந்து அந்நியச் செலவாணிப் பற்றாக்குறை இருந்தது ; இந்திய ரூபாயின் மாற்றுமதிப்பு சட்டப்படி ஒன்றாகவும், சந்தையில் வேறொன்றாகவும் இருந்தது.

(4) பணவீக்க நிலையாலும் ஏற்றுமதி கூடவில்லை. சுதந்திரமடைந்தபின் விலைகள் 102% உயர்ந்துள்ளன. முதல் திட்டக் காலத்தில் விலையுயர்வு 18% இருந்தது. விலைகள் இரண்டாவது திட்டக் காலத்தில் 30%, மூன்றாவது திட்டத்தின் இறுதியில் 50% உயர்ந்தன. மிகுதியான விலையுயர்வுக்கு அதிகப் பணப்புழக்கமும், தேவைக்குக் குறைந்த உற்பத்தியும் காரணங்களாகின்றன. 1962-க்கும் 1966-க்கும் இடைப்பட்ட காலத்தில் விலைகள் 29% அதிகரித்தன. விலையுயர்வால் உற்பத்திப் பொருட்கள் உள்நாட்டிலேயே விற்பனை செய்யப்பட்டன. உற்பத்திச் செலவு அதிகரித்தமையால் வெளிநாட்டுச் சந்தைகளைப் பெறமுடிவதில்லை.

(5) ஏற்றுமதி வளராமல், இறக்குமதி பெருகியமையால் அயலகச் செலவாணிப் பற்றுக்குறை தோன்றியது. 1964-65-இல் பற்றுக்குறை ரூ. 789.9 கோடி என்ற அளவில் இருந்தது. இதனால் பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund), 'உலகவங்கி' (International Bank for Reconstruction and Development) ஆகிய நிறுவனங்களிடமிருந்து அரசு கடன் பெற்றது.

(6) ஏற்றுமதி முன்னேற்றத்திற்காகவும், இறக்குமதிக் கட்டுப் பாட்டிற்காகவும் அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் நன்மை பயக்கவில்லை. எனவே, ரூபாய் மதிப்புக் குறைப்பு செய்வது தவிர்க்க முடியாததாகிவிட்டது.

ரூபாய் மதிப்புக்குறைப்பிற்கு ஆதரவாகவும், எதிரிடையாகவும் கருத்துக்கள் நிலவுகின்றன. இம்முறையை ஆதரிப்பவர்கள் ரூபாய் மதிப்புக் குறைப்பால் சாதகச் செலுத்துநிலை தோன்றும் என்றனர். இம்முறையைக் குறை கூறியவர்கள், அமெரிக்கா மற்றும் சில நாடுகளின் தூண்டுதலால் நாணய மதிப்புக் குறைப்பு கைக்கொள்ளப்பட்டது என்று கூறினர். இதனால், விலைகளில் உயர்வு ஏற்பட்டு திட்டச் செலவு அதிகரிக்கும் எனவும் கருத்து தெரிவித்தனர். ஏற்றுமதியைக் கூட்ட நாணய மதிப்புக்குறைப் போடு, வேளாண்மை உற்பத்தி பெருக வேண்டும்; மூலப்பொருட் களின் அளிப்பு அதிகரிக்க வேண்டும் என்றும் கருதினர்.

இந்திய ரூபாய் மதிப்புக்குறைப்பால் சாதகச் செலுத்து நிலை ஏற்படவில்லை. எதிர்பார்த்த விளைவுகளும் தோன்றவில்லை. வெளி நாட்டு மூதலீடு பெருகவில்லை. ஆனால், உணவுப் பொருட்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. பணவீக்க நிலை அமைந்துள்ளது. கடன் சுமைகளும் பெருகியுள்ளன.

நம்நாட்டின் பொருளாதாரம் பல துறைகளிலும் வளராத நிலையே நாணய மதிப்புக் குறைப்பின் தோல்விக்குக் காரணமாகும். பிற உலக நாடுகளும் தொழிற்காப்புக் கொள்கையைப் பின்பற்றி சுங்கவரிகளை விதித்தமையால் இந்தியாவின் ஏற்றுமதி அளவும், மதிப்பும் உயரவில்லை. அப்போது அடைந்திருந்த பொருளாதாரச் சூழ்நிலைகளில் நாணய மதிப்புக்குறைப்பு அவசியமானதாக உணரப்பட்டது; ஆனால் அதன் மூலம் எதிர்பார்த்த பலன்களைப் பெற முடியவில்லை.

நாணய மதிப்புக்குறைப்பு செய்யப்பட்டதோடு ஏற்றுமதி யைப் பெருக்க ஏற்றுமதி அபிவிருத்தி ஆலோசனைக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டன. ஏற்றுமதி உற்பத்தியாளர்களுக்கு ஊக்க மளிக்க 'இறக்குமதித் தனிச்சலுகை முறையும்' (Import Entitle-

ment) கொண்டுவரப்பட்டது. பல வணிக வங்கிகளும் ஏற்றுமதி யாளர்களுக்கு 'கட்டுக்கடன்' (Packing Credit) அளிக்கின்றன.

இந்திய வெளிநாட்டு வாணிபம் 'இருமுக வாணிப ஒப்பந்தத் தால்' சோவியத் ரஷ்யாவோடும் மற்றும் பல சமதர்ம நாடு களோடும் வளர்ந்து வருகின்றது. ஆக்கத்திற்கு உதவாத வகையில் மக்களிடம் உள்ள தங்கத்தைத் திரட்டி அயல்நாட்டுக் கடனைத் தீர்க்க எடுக்கப்பட்ட முயற்சிகள் வெற்றி பெறவில்லை. இறக்குமதி யளவைக் குறைக்க 'அரிமைச் செலாவணி' (Hard Currency) நாடுகளின் இறக்குமதிப் பொருட்களின்மீது உயர்வீத சுங்கவரிகள் விதிக்கப்படுகின்றன.

இவ்வாறு பல இயல்புகளைக் கொண்டதாக இந்திய வாணிபக் கொள்கை அமைந்துள்ளது. இந்தியாவின் வெளிநாட்டு வாணிபத் தைப் பெருக்கி, சாதகச் செலுத்துநிலையைப் பெற அரசு வாணிபக் கொள்கையைப் பல வழிகளிலும் மாற்றியமைத்து வருகின்றது. அரசின் நடவடிக்கைகள் வெற்றியை அளிக்காவிட்டாலும், தோல்வியை அடையவில்லை என்று கூறலாம். இவ்வித வாணிபக் கொள்கையை அரசு பின்பற்றி இருக்காவிடில் இந்த அளவிற்காவது இந்திய அயல்நாட்டு வாணிபம் வளர்ந்திருக்குமா என்பது ஐயமே. நாட்டைத் தொழில்மயமாக்க வெளிநாட்டு வாணிபம் உதவியது. அதன் விளைவால், பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலை அமைந் துள்ளது. தொழில்களை மேலும் மேன்மையடையச் செய்து தொழிற்பொருட்களை ஏற்றுமதி செய்தால் சாதக வாணிபச் செலுத்துநிலையை நாம் பெறமுடியும்.

### இந்திய அரசின் வாணிபக் கொள்கை

இந்தியாவின் வெளி வாணிபக் கொள்கை ஏற்றுமதி வருவாயை மிகுதிப்படுத்துவதாகவும், இறக்குமதியை முடிந்த அளவு குறைப் பதாகவும் அமைந்துள்ளது. முன்னேற்றத்திற்கும், நாட்டின் பாது காப்பிற்கும் தேவையான இறக்குமதிகளே அனுமதிக்கப்படு கின்றன. அயலகச் செலவணிப் பற்றாக்குறை ஏற்பட்டதால் 1964-65- இல் மேலும் பல இறக்குமதிக் கட்டுப்பாடுகள் கொண்டு வரப்பட்டன. 10% இறக்குமதி வரி விதிக்கப்பட்டது. ஏற்றுமதி யின் பக்கத்தில், பல ஏற்றுமதி முன்னேற்றத் தீர்வுகள் எடுக்கப் பட்டன. 1964-65-இல் பல புதிய திட்டங்கள் ஏற்றுமதியைப் பெருக்க மேற்கொள்ளப்பட்டன. பன்னாட்டுச் சந்தைகளில் இந்திய ஏற்றுமதிப் பொருட்களுக்குப் போட்டியிடும் திறன் இருக்க வேண்டுமென்பது உணரப்பட்டது.

இந்திய வாணிபக் கொள்கையில் சமீப காலமாக சில முக்கிய இயல்புகள் அமைந்துள்ளன:

I. இறக்குமதிகளின்மீது தீவிரக் கட்டுப்பாடுகள்

இரண்டாவது உலகப்போர்க் காலத்தில் இறக்குமதிக் கட்டுப் பாடுகளைத் தவிர்க்க இயலாது இருந்தது. போர் முடிந்த பின்பும் கட்டுப்பாடுகள் இருந்தமைக்கான சில காரணங்கள் அமைந் திருந்தன:

(i) அயல்நாட்டுச் செலுத்துநிலை பாதகமாக இருந்ததால் இறக்குமதிக் கட்டுப்பாடுகளை விதிப்பது அவசியமாயிற்று.

(ii) டாலர் செலாவணிப் பற்றாக்குறை அதிகம் ஏற்பட்டது. டாலர் மற்றும் அரிமைச் செலாவணி (Hard Currency) கொண்ட நாடுகளின் இறக்குமதிப் பொருட்களைத் தடை செய்ய கட்டுபாடு கள் பின்பற்றப்பட்டன.

(iii) மூலதனப் பொருட்கள், கச்சாப் பொருட்கள், உணவுப் பொருட்கள் போன்றவற்றை இறக்குமதிசெய்ய அவசியமற்ற நுகர் பொருட்களின் இறக்குமதி தடை செய்யப்பட வேண்டிய தாயிற்று.

(iv) உள்நாட்டுத் தொழில்களை வெளிநாட்டுப் போட்டி யினின்றும் காக்க இறக்குமதிக் கட்டுப்பாடுகள் அவசியமாயின.

அரசிற்கு இறக்குமதிக் கட்டுப்பாட்டுக் கொள்கை பற்றி ஆலோசனை கூற 'இறக்குமதி ஆலோசனைக் குழு' (Import Advisory Council) அமைக்கப்பட்டது.

உள்நாட்டுத் தொழில்களின் வளர்ச்சிக்கு அந்நியச் செலா வணி வசதிகளுக்கு ஏற்ப இறக்குமதிப் பொருட்களின் பங்களவுகள் நிர்ணயிக்கப்படுகின்றன. பங்களவுகள் சிலவற்றில் குறைக்கப் பட்டுள்ளன; வேறு சிலவற்றில் முற்றிலும் நீக்கப்பட்டுள்ளன. இறக்குமதி அனுமதிகளும் வழங்கப்படுகின்றன. அக்டோபர் 1962 முதல் மார்ச் 1963 வரை தீவிர சிக்கன முறைகள் இறக்குமதியில் கையாளப்பட்டு பாதுகாப்புத் தேவைப் பொருட்கள் மட்டும் இறக்குமதி செய்யப்பட்டன. இதனால், கணிசமான அளவிற்கு பங்களவு இறக்குமதிகளில் குறைவு ஏற்பட்டது.

II. ஏற்றுமதி அபிவிருத்தி (Export Promotion)

ஏற்றுமதியை அதிகரிக்க தீவிர முயற்சிகள் எடுக்கப்பட்டன. 1949-இல் அரசு 'கோர்வாலா ஏற்றுமதி அபிவிருத்திக் குழுவை' (Gorwala Export Promotion Committee) நியமித்தது. மற்றொரு ஏற்றுமதி அபிவிருத்திக்குழு 1957-இல் ஏற்படுத்தப்பட்டது. இக்குழுக்களின் பரிந்துரைகள் ஏற்றுமதியைப் பெருக்க பெரிதும்

உதவின. ஏற்றுமதிக் கட்டுப்பாட்டுக் கொள்கை பற்றி ஆலோசனை கூற 'ஏற்றுமதி ஆலோசனைக் குழு' (Export Advisory Council) நியமிக்கப்பட்டது. ஏற்றுமதியை ஊக்குவிக்கப் பல ஏற்றுமதி வரிகள் குறைக்கப்பட்டன; சில ஏற்றுமதி வரிகள் நீக்கப்பட்டன. ஏற்றுமதியைப் பெருக்க ஏற்றுமதி குழுக்களும் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டன. ஏற்றுமதியை எந்தெந்த வழிகளில் அதிகரிக்கலாம் என்பதை ஆராய அவை வெளிநாடுகள் சென்றன. டாலர், மற்றும் அரிமைச் செலாவணி நாடுகளுக்கு அதிக ஏற்றுமதி செய்ய ஊக்கமளிக்கப்பட்டது. டாலர் பற்றுக்குறை இருந்தமையால் இவ்வாறு செய்யப்பட்டது. டாலர் செலாவணி கொண்ட நாடுகளோடு பாதகச் செலுத்துநிலையை இந்தியா கொண்டிருந்தாலும், அந்நாடுகளுக்கு அதிக ஏற்றுமதி செய்ய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பருத்தி நெசவுத்துணிகள், பட்டு, செயற்கைப்பட்டு, தோல், புகையிலை, பிளாஸ்டிக் பொருட்கள், பொறியியற் பொருட்கள் போன்றவற்றிற்கான ஏற்றுமதி அபிவிருத்திக் குழுக்கள் தனித்தனியே அமைக்கப்பட்டன.

ஏற்றுமதி உற்பத்திக்கான கச்சாப் பொருட்கள்மீது இறக்குமதி வரிகள் குறைக்கப்பட்டன. ஏற்றுமதிப் பொருட்களின் மீதான ஆயத்தீர்வைகள் திருப்பித் தரப்பட்டன. தரக் கட்டுப்பாட்டிற்காக, ஏற்றுமதி செய்வதற்கு முன் தரப்பாகுபாடுகள் கட்டாயமாக்கப்பட்டன. குறிப்பாக வேளாண்மைப் பொருட்களாகிய புகையிலை, கச்சா கம்பளி, சந்தனக்கட்டை, எண்ணெய் ஆகியவற்றில் தரக்கட்டுப்பாடுகள் செய்யப்படுகின்றன. ஏற்றுமதிப் பொருட்களை எடுத்துச் செல்ல இரயில், கப்பல் வசதிகள் செய்து தரப்பெறுகின்றன. 'ஏற்றுமதி இழப்பீட்டுக்கழகம்' (Export Risks Insurance Corporation) ரூ. 5 கோடி அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்துடன் 1957-இல் தொடங்கப்பட்டது. சாதாரணமாக வணிகக் காப்புறுதி நிறுவனங்கள் ஏற்காத பணிகளை இக்கழகம் ஏற்று ஏற்றுமதியைப் பெருக்க உதவுகின்றது. அரசு உடைமையாகக் கொண்ட ஏற்றுமதி இழப்பீட்டுக் கழகம் ஏற்றுமதியாளர்களுக்கு சில இடர்களைக் கொண்ட ஏற்றுமதியைச் செய்யவும் ஊக்கமளிக்கிறது.

இந்தியாவின் வெளிநாட்டு வாணிப முன்னேற்றத்திற்காக 1957-இல் 'வெளி நாட்டு வாணிபக் கழகமும்' (Foreign Trade Board), 'ஏற்றுமதி அபிவிருத்தி இயக்குநரகமும்' (Directorate of (Export Promotion) தொடங்கப்பட்டன. இந்தியப் பொருட்களுக்கு வாணிப விளம்பரங்களைச் செய்ய 'கண்காட்சிகளின் இயக்குநரகமும்' (Directorate of Exhibitions) இருக்கின்றது. ஏற்றுமதி அபிவிருத்திக் குழுக்களின் பிரதிநிதிகள் அயல் நாடுகள்

சென்று ஏற்றுமதியைப் பெருக்கும் வாய்ப்பை ஆராய்கின்றனர். தொழில்-வாணிப நல்லெண்ணத்தை வளர்க்கும் குழுக்களும் வெளி நாடுகளுக்கு அனுப்பபடுகின்றன. இந்தியப் பொருட்களுக்கான சந்தையை உலகில் விரிவுபடுத்த இக்குழுக்கள் உதவுகின்றன.

சமீப காலத்தில் ஏற்றுமதியைப் பெருக்க தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இம்முயற்சிகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம். அவை:

(1) ஏற்றுமதியாளர்களுக்கு எந்திரங்கள், கச்சாப் பொருட்கள், எந்திர பாகங்கள் ஆகியவற்றை ஏற்றுமதிக்கு ஈடாக இறக்குமதி செய்துகொள்ள ஊக்கத் திட்டங்கள்.

(2) ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்ய பயன் படுத்தப்பட்ட பண்டங்களின் மீதான வரித்தொகையைத் திருப்பித்தரும் திட்டம்.

(3) ஏற்றுமதிப் பொருட்களின் மீதுள்ள கட்டுப்பாடுகளைத் தளர்த்துதல்.

(4) ஏற்றுமதியைப் பெருக்க வாணிப ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளுதல் ஆகியவையாகும்.

சில பொருட்களை ஏற்றுமதி செய்ய தனித்திட்டங்கள் வரையப்பட்டன. ஏற்றுமதி உற்பத்திக்காகக் கச்சாப் பொருட்களின் இறக்குமதியும் தளர்த்தப்பட்டது. வரி ஊக்கங்களும் விரிவு படுத்தப்பட்டுள்ளன. ஏற்றுமதிப் பொருட்களின் விலையை நிலைப் படுத்தும் நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன. 'ஏற்றுமதி இழப்பீட்டுக் கழகத்தின்' பணிகள் விரிவாக்கப்பட்டன. பலவகைப்பட்ட புதிய பொருட்களை ஏற்றுமதி செய்ய 'அரசின் வாணிபக் கழகம்' முயற்சிகளை மேற்கொண்டுள்ளது.

மூன்றுவது திட்டக்காலத்தில் ஏற்றுமதியை அபிவிருத்தி செய்யும் இலட்சியத் திட்டத்தைத் 'திட்டக்குழு' தயாரித்து அளித்தது. மாற்றியமைக்கப்பட்ட ஏற்றுமதி இலக்கு ரூ. 3,700 கோடி முதல் ரூ. 3,800 கோடி வரையாகும். ஏற்றுமதித் தொழில்களின் தனித்தனியான ஏற்றுமதி இலக்குகள் 'பன்னாட்டு வாணிபத் துறையால்' (Department of International Trade) தயாரிக்கப் பட்டன. ஏற்றுமதியை உயர்த்த எடுக்கப்பட்ட முயற்சிகளில் முக்கியமானவைகள் சில இருந்தன. அவையாவன:

(i) தரக்கட்டுப்பாட்டைச் செயல்படுத்த, கப்பல்களில் ஏற்றுவதற்குமுன் தரப்பரிசோதனைகள் செய்யப்படுகின்றன.

(ii) ஏற்றுமதி அபிவிருத்திக் குழுக்களின் நேரடிச் சிபாரிசுகளின் மூலம், ஏற்றுமதிக்கான ஊக்குவிக்கும் அனுமதிகள் வழங்கப்படுகின்றன.

(iii) புதிய பல பொருட்களுக்கான ஏற்றுமதி ஆலோசனைக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

(iv) பல பொருட்களின் மீதிருந்த ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டுள்ளன.

ஏற்றுமதியாளர்களுக்கு நிதி ஊக்கங்களை அளிக்க 'மத்திய ஆயத் தீர்வைத்' (Central Excise Duty) தள்ளுபடி செய்யப்படுகிறது. ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்யப் பயன்படும் பொருட்களை இறக்குமதி செய்யும்போது விதிக்கப்படும் சுங்கவரிகள் திருப்பித் தரப்படுகின்றன. ஏற்றுமதியாளர்களுக்கான கடன் வசதிகளை ரிசர்வ் வங்கி, அரசின் வங்கி (State Bank), மறுநிதிக் கழகம் (Refinance Corporation) போன்றவை அளிக்கின்றன.

ஜனவரி 1964-இல் 'ஏற்றுமதிக் கடன், காப்புக் கழகம்' (Export Credit and Guarantee Corporation) ஏற்படுத்தப்பட்டு, முன்பிருந்த 'ஏற்றுமதி இழப்பீட்டுக் கழகம்' இதோடு இணைக்கப்பட்டது. ஏற்றுமதியில் உள்ள வாணிப, அரசியல் இடர்களை இது ஏற்கின்றது. ஏற்றுமதியாளர்களுக்குக் கடன் வசதிகளை அளிக்க வங்கிகளுக்கும் இது உறுதியளிக்கின்றது. ஏற்றுமதி இழப்பீட்டுக் கழகத்தின் பணிகளும் அதிகரிக்கப்பட்டுள்ளன. கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் இந்திய வாணிபத்தை விரிவுபடுத்த 'அரசின் வாணிபக் கழகம்' முயற்சிகளை மேற்கொண்டுள்ளது.

ஏற்றுமதி அபிவிருத்திக்கு ஏற்றுமதி நிதி தேவைப்படுகிறது. இந்தியப் பொருட்களின் உற்பத்திச் செலவுகள் உயர்ந்த அளவில் உள்ளன. இதனால், உயர்ந்த விலைகளிலேயே பொருட்களை விற்பனை செய்ய முடிகின்றது. போட்டியிடத்தக்க தரமான பொருட்களையும் இந்தியா ஏற்றுமதி செய்யவில்லை. இக்காரணங்களால் எளிய கடன் வசதிகள் அதிக அளவில் தேவைப்படுகின்றன.

III. இருமுக வாணிப ஒப்பந்தங்கள் (Bilateral Trade Agreements)

புதிய நோக்கங்களோடு இருமுக வாணிப ஒப்பந்தங்களைப் பல நாடுகளோடும் இந்தியா செய்து வருகின்றது. அவசியமான பொருட்களை இறக்குமதி செய்யவும், பலவகைப்பட்ட புதிய பொருட்களை ஏற்றுமதி செய்யவும் இவ்வகை ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்படுகின்றன. இதனால், 'அயல்நாட்டுச் செலாவணியில்' கடினநிலை ஏற்படாமல் தவிர்க்க தீர்வுகள் எடுக்கப்படுகின்றன.

சில ஒப்பந்தங்கள் புதுப்பிக்கப்படுகின்றன. தன்னிறைவைப் பெற்றுவிட்ட சில பொருட்களின் இறக்குமதி ஒப்பந்தங்கள் நீக்கப் படுகின்றன. ஏற்றுமதிஉபரியுள்ள பொருட்களுக்கான புதிய ஒப்பந்தங்களும் பிற நாடுகளோடு செய்யப்படுகின்றன. இருமுக வாணிப ஒப்பந்தங்களின் மாற்றங்கள் பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையை நீக்கும் வகையில் செய்யப்படுகின்றன. ஏற்றுமதிக்கான புதிய சந்தைகளையும் இவ்வொப்பந்தங்களினால் பெறமுடிகிறது.

## IV. அரசின் வாணிபம் (State Trading)

அரசு உடைமையாகக் கொண்ட 'அரசின் வாணிபக் கழகம்' (State Trading Corporation), அங்கீகரிக்கப்பட்ட ரூ. 1 கோடி மூலதனத்துடன் மே 1956-இல் தொடங்கப்பட்டது. இதன் மூலம் அரசு வெளிநாட்டு வாணிபத்தில் நேரடியாக ஈடுபடத் துவங்கியது. இதனுடைய முக்கிய நோக்கம் இந்திய வெளிநாட்டு வாணிபத்தில் உள்ள இடைவெளிகளைச் சரிசெய்வதாகும். ஏற்றுமதிக்கும், இறக்குமதிக்கும் உள்ள மிகுந்த வேறுபாட்டைக் களைய இது செயல் படுகின்றது.

'பொதுவுடைமை நாடுகளில்' (Communist Countries) வெளிநாட்டு வாணிபத்தை அரசே ஏற்று நடத்துகிறது. இந்தியாவில், சமீப காலம்வரை தனியாரே வெளிநாட்டு வாணிபத்தைச் செய்து வந்தனர். எனவே, பொதுவுடைமை நாடு களோடு இந்தியாவின் வாணிபம் குறைவாகவே இருந்தது. அரசின் வாணிபக் கழகம் இக்குறையை நிவர்த்தி செய்துவிட்டது. இக்கழகம் அயலகச் செலாவணிஇருப்பில் கடினநிலை தோன்றாத வாறு செயல்படுகின்றது. எஃகு, சிமெண்ட், தொழிற்பொருட் களை இது இறக்குமதி செய்து, அதற்குப் பதிலாக வேறு பொருட்களை ஏற்றுமதி செய்கின்றது.

அரசின் வாணிபக்கழகத்தின் முக்கிய நோக்கங்களாகக் பின் வருபவை திகழ்கின்றன:

(1) நீண்ட கால அடிப்படையில் ஏற்றுமதிகளை அபிவிருத்தி செய்வது;

(2) இருக்கின்ற சந்தையை விரிவுபடுத்துவதும், புதிய சந்தைகளைப் பெறுவதும்;

(3) பல வகைப் பொருட்களை ஏற்றுமதி செய்தல்;

(4) அரசு வெளிநாட்டு வாணிபத்தைச் செய்யும் நாடுகளோடு வாணிபத்தொடர்பை அதிகப்படுத்துதல்;

(5) பொருளாதார, தொழில் முன்னேற்றங்களுக்குத் தேவையான இறக்குமதிகளின் அளிப்புற்கும், தேவைக்கும் உள்ள இடைவெளியைக் குறைத்தல் ;

(6) தனியார் ஈடுபட முடியாத இறக்குமதி ஏற்றுமதித் துறைகளில் ஈடுபடுவது;

(7) குறைந்த அளிப்புள்ள பொருட்களை உள்நாட்டில் பகிர்ந்தளிப்பது; விலையை நிலைப்படுத்தவும் இது உதவுகின்றது.

(8) மத்திய அரசின் ஆணையின்படி சிலவகைப் பொருட்களை இறக்குமதி அல்லது ஏற்றுமதி செய்தல். பொதுமக்களின் நன்மைக் காகச் சில பொருட்கள் நாட்டில் சில பகுதிகளில் பகிர்ந்தளிக்கப் படும்.

(9) மத்திய அரசு 'உணவுத் தானிய கையிருப்பு முறையையும்' (Buffer Stock Operations) இதனிடம் செயல்படுத்த ஒப்படைத் துள்ளது.

(10) பொதுவாக, எல்லாவகைப் பண்டங்களின் வாணிபத்தி லும் ஈடுபடுதல். பாரம்பரியமான பொருட்களின் ஏற்றுமதியோடு புதிய பொருட்களையும் ஏற்றுமதி செய்ய அரசின் வாணிபக் கழகம் முயல்கின்றது. இதற்காக இது பல பண்டமாற்று ஒப்பந்தங்களையும் பிறநாடுகளோடு செய்துள்ளது.

ஏற்றுமதிப்பொருட்களின் விலையைக் குறைக்க விலை உதவியும் (Price Support) ஏற்றுமதியாளர்களுக்கு அரசின் வாணிபக் கழகம் அளிக்கிறது. சிறுதொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்களின் பொருட்களுக்கு தற்பொழுதுள்ள சந்தையை விரிவுபடுத்தவும், புதிய சந்தைகளை ஏற்படுத்தித்தரவும் இது உதவுகின்றது. அது கச்சாப்பொருட்கள், கடன், தொழில்நுட்ப ஆலோசனை, விளம்பரம், விற்பனை போன்ற வசதிகளையும் சிறுதொழில்களுக்குத் தருகின்றது. வெளிநாடுகளில் இவ்வகைப்பொருட்களின் விற்பனை இதனால் பெருகி வருகின்றது.

மதிப்பீடு

இந்தியாவின் வாணிபக்கொள்கை தொழில் முன்னேற்றத்திற் காகச் செய்யப்பட்ட நிலைகளில் நன்மையைத் தந்துள்ளது. பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையே இன்னும் அமைந்திருப்பதால், இந்தியாவின் வாணிபக் கொள்கையை வெற்றியைப் பெற்ற ஒன்று எனக் கூறயியலாது. வாணிபக் கொள்கையில் தவறுள்ளது என்று கருத முடியாது, பொருளாதார வளர்ச்சி வீதத்தை விரைவு

படுத்தும் போது, அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பாதக நிலை அமைவது இயல்பானதாகும். ஏற்றுமதி நிர்வாகங்கள் சிறப்பாக அமையாத நிலையும், ஏற்றுமதித் திட்டங்கள் சரிவர செயல் படுத்தப்படாமையும் ஏற்றுமதியின் அளவைக் குறைந்த நிலையி லேயே வைத்துள்ளன.

வளர்ச்சியடைந்த நாடுகள் வாணிபக்கொள்கையின் மூலம் ஏற்றுமதியைப் பெருக்குவதில் வெற்றியைப் பெருகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளின் வாணிபக்கொள்கை தீவிரமாக ஏற்றுமதியை அதிகரித்து இறக்குமதியைக் குறைப்பதாக இருந் தாலும், அது வெற்றியளிப்பதில்லை. வளர்ச்சியடையாத பொருளா தாரமே வாணிபக்கொள்கை வெற்றியைப் பெற முடியாமைக்குக் காரணமாக உள்ளது. ஆனால், வளர்ச்சியடைந்த பொருளா தாரத்தைப்பெற வாணிபக்கொள்கை பெரிதும் உதவும்.

# 20. இந்தியாவில் அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கல்

## (Foreign Exchange Crisis in India)

பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபட அயல்நாட்டுச் செலாவணி இருப்பைத் தேவையாகக் கொண்டே உலகின் எல்லா நாடுகளும் அமைந்திருக்கின்றன. பாதக வாணிப இருப்புநிலையைத் தீர்க்கவும் அந்நியச் செலாவணி தேவைப்படுகின்றது. இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் இங்கிலாந்து நாட்டோடும், பிற நாடுகளோடும் இந்தியாவின் வாணிபம் வளர்ந்தது. அமெரிக்காவோடு இந்தியா மேற்கொண்ட வாணிபத்தின் அளவு இரண்டாவது உலகப் போருக்குப்பின் அதிகரிக்கத் தொடங்கியது. இந்திய ரிசர்வ் வங்கியிடம் ஸ்டெர்லிங் இருப்புக்களும், டாலர் இருப்புக்களும் அதிகரித்தன. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அந்நியச் செலாவணி பொருளாதார முன்னேற்றத்தைப்பெற மிக அவசியத் தேவையைக் கொண்டிருக்கின்றது. பொதுவாக பின்தங்கிய நாடுகளில் இறக்குமதியின் அளவு ஏற்றுமதியின் அளவைக் காட்டிலும் அதிகமாக இருக்கின்றது. ஏனெனில், முன்னேற்றத் திட்டங்களுக்காக இயந்திரங்கள், கருவிகள், மூலப்பொருட்கள் ஆகியவை பெருமளவிற்கு இறக்குமதி செய்யப்படுகின்றன. போக்குவரத்து முன்னேற்றத்திற்கான சாதனங்களும், மின்சாரப் பொருட்களும், வேறுவகைப்பட்ட மூலதனப் பொருட்களும் இறக்குமதியாகின்றன. ஆனால், இவ்வகைப்பட்ட இறக்குமதிப் பொருட்களின் மதிப்பிற்கு ஈடாக ஏற்றுமதியைச் செய்ய பின்தங்கிய நாடுகளால் முடிவதில்லை. இந்தியாவில் அந்நியச்செலாவணியின் தேவை மிக அதிகமாக இருக்கின்றமைக்கு முன்னேற்றத்திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றமை முக்கியக் காரணமாக அமைகின்றது. தவிர சீனப்படையெடுப்பாலும், பாகிஸ்தானின் ஊடுருவலாலும் நாட்டின் பாதுகாப்புச்செலவு அதிகரித்தது. இந்நிலையாலும், அந்நியச் செலாவணியின் தேவை மேலும் கூடியது.

**அந்நியச் செலாவணி இருப்பில் குறைவு**

இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் அந்நியச் செலாவணிச் சிக்கல் எழவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்

முதல் ஆண்டில் 'கொரியப் போரினால்' (Korean War) நம்முடைய ஏற்றுமதி வருவாய்கள் கணிசமாக உயர்ந்தன. இத்திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் சில தொடக்கநிலைத்தடைகள் பொருளாதாரத்தில் தோன்றின. ஏனெனில், அக்காலத்தில் இரும்பு உருக்குத் தொழிற்சாலைகளும், வேறு பல பெரிய தொழிற்சாலைகளும் நிறுவப்பெற்றன. எதிர்பார்த்ததைவிட குறைவான வேகத்திலேயே தொழிற்துறையில் முதலீடுகள் செய்யப்பட்டன. ஸ்டெர்லிங் இருப்பையும், பிற அந்நியச் செலாவணி இருப்பையும் அரசு இம்முதலீடுகளுக்காகப் பயன்படுத்தவில்லை. ஏப்ரல் 1951-இல் தொடங்கப்பட்ட முதல் திட்டக்காலத்தில் ரூ. 290 கோடி அந்நியச்செலாவணி தேவைப்படுமென திட்டமிடப் பெற்றது. ஆனால், உண்மையில் முதல் ஐந்தாண்டுத்திட்டக் காலத்தில் ரூ. 121 கோடிக்குச் சமமான அந்நியச் செலாவணி மட்டுமே பயன்படுத்தப்பட்டது. எனவே, இத்திட்டக் காலத்தில் அந்நியச் செலாவணி குறைந்த அளவே பயன்படுத்தப்பட்டதால் அந்நியச் செலாவணிச் சிக்கல் அமைந்திருக்கவில்லை.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பெரிய தொழில்களை ஏற்படுத்துவதற்கும், முன்னேற்றமடையச் செய்வதற்கும் முக்கியத்துவம் அளித்தது. இத்தொழில் திட்டத்தை நிறைவேற்ற மூலதனப் பொருட்கள் அதிக அளவிற்கு இறக்குமதி செய்யப்பட்டன. இரண்டாவது திட்டக்காலத்தில் அந்நியச்செலாவணிப் பற்றுக்குறை ரூ. 1,000 கோடி என்ற அளவிற்கு இருக்குமெனத் திட்டமிடப்பட்டது. இதில் ரூ. 200 கோடி மதிப்புள்ள அந்நியச் செலாவணி இருப்பைப் பயன்படுத்தக் கருதப்பட்டது. வெளிநாட்டவரின் முதலீடு சுமார் ரூ. 100 கோடிக்குச் செய்யப்படுமெனக் கணக்கிடப் பெற்றது. எனவே, நிகர அந்நியச்செலாவணித்தேவை ரூ. 800 கோடி என்ற அளவில் அமையுமெனத் திட்டமிடப் பட்டது. அதிக அளவு இறக்குமதிகளால், இரண்டாவது திட்டத்தின் முதல் $1\frac{1}{2}$ ஆண்டுகளிலேயே பெருமளவு அந்நியச் செலாவணி இருப்பு பயன்படுத்தப்பட்டு விட்டது. இக்காலத்தில் இந்திய ரிசர்வ் வங்கியின் அந்நியச் செலாவணி இருப்பில் ரூ. 396 கோடிக்குக் குறைவு ஏற்பட்டது. 1956-இல் அந்நியச் செலாவணியின் குறைவு வீதம் ரூ. 15 முதல் 20 கோடியாக இருந்தது. 1957-இல் இவ்வீதம் ரூ. 40 முதல் 45 கோடியாக உயர்ந்தது. இரண்டாவது திட்டக்காலத்திலிருந்துதான் அந்நியச் செலாவணியில் அதிக அளவு பற்றுக்குறை ஏற்பட்டது.

அந்நியச்செலாவணித்தேவை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் ரூ. 2030 கோடி இருக்குமெனக் கணக்கிடப் பட்டது. இதில் பொதுத்துறைக்கு ரூ. 1520 கோடியும்,

தனியார் துறைக்கு ரூ. 510 கோடியும் தேவைப்படுமெனக் கருதப்பட்டது. இத்தொகையில் தொழில் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான கருவிகள், இயந்திரங்கள், பிற உற்பத்திச் சாதனங்கள் ஆகியவற்றை இறக்குமதி செய்ய ரூ. 1900 கோடி தேவைப்பட்டது. மூலதனப் பொருட்களை ஓரளவு உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய ரூ. 200 கோடி மதிப்புள்ள இயந்திரங்களும், கருவிகளும் தேவைப்பட்டன. தொழில்துறைக்குத் தேவையான மூலப்பொருட்களை இறக்குமதி செய்ய ரூ. 3650 கோடி தேவைப்பட்டது. எனவே, மொத்த அந்நியச்செலாவணித் தேவை ரூ. 5750 கோடியாக இருந்தது. அந்நியச்செலாவணி இருப்பிலிருந்து இத்தொகையைப் பெற அரசு விரும்பவில்லை. ஆகவே, ஏற்றுமதியை ரூ. 3700 கோடி என்ற அளவிற்குப் பெருக்கவும், வெளிநாட்டு உதவியை ரூ. 2600 கோடி என்ற அளவிற்கும் பெற அரசு திட்டமிட்டது. மொத்த இறக்குமதித் தொகையில் பொதுச் சட்டம் 480 (P. L. 480) மூலம் கிடைத்த ரூ. 600 கோடி மதிப்புள்ள இறக்குமதி சேர்க்கப்படாதது குறிப்பிடத் தக்கதாகும்.

ரூ. 3700 கோடி மதிப்புள்ள பொருட்களை ஏற்றுமதி செய்ய வேண்டுமென அரசு திட்டமிட்டிருந்தது. ஆனால், ஏற்றுமதியைத் திடீரென அதிகரிக்க முடியவில்லை. படிப்படியாக ஏற்றுமதி பெருகத்தலைப்பட்டது. 1964-65-இல் மொத்த இறக்குமதிகள் அதிகரித்தமையால் அந்நியச்செலாவணி இருப்பு மேலும் குறைவடைந்தது. கீழ்க்கண்ட அட்டவணையின் மூலமாக அந்நியச் செலாவணி இருப்பில் எவ்வாறு குறைவு ஏற்படுகின்றது என்பதை அறியலாம்.

இந்தியாவின் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு

| ஆண்டு | | கோடி ரூபாயில் |
|---|---|---|
| 1951-52 | ... | 786.99 |
| 1960-61 | ... | 303.61 |
| 1963-64 | ... | 305.81 |
| 1964-65 | ... | 249.68 |
| ஜனவரி 1965 | ... | 228.55 |
| ஏப்ரல் 1965 | ... | 250.10 |
| ஜூலை 1965 | ... | 231.50 |
| ஏப்ரல் 1966 | ... | 211.21 |

மேற்குறிப்பிடப்பட்டுள்ள அட்டவணையினின்றும் முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் அந்நியச்செலாவணிச்சிக்கல்

அமைந்திருக்கவில்லை என்பதை உணரலாம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இடைக்காலத்திலிருந்து அந்நியச் செலாவணிச் சிக்கல் வளரத்தொடங்கியது. இரண்டாவது திட்டத்தின் இறுதியில் (1960-61) அந்நியச் செலாவணி இருப்பு ரூ. 303.61 கோடியாகக் குறைந்துவிட்டது. ஜனவரி 1965-இல் இருப்பு ரூ. 228.55 கோடி என்ற நிலைக்கும், ஏப்ரல் 1966-இல் ரூ. 211.21 கோடி என்ற அளவிற்கும் குறைந்துவிட்டது.

**அந்நியச்செலாவணிச் சிக்கலுக்கான காரணங்கள்**

இந்தியாவில் அந்நியச்செலாவணிச் சிக்கல் அமைந்துள்ளமைக்கு முக்கியமாக ஐந்து காரணங்களைக் கூறலாம். அவை யாவன: (1) அதிக அளவு மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்தல்; (2) பாதுகாப்புச் செலவு; (3) மூலப்பொருட்களின் பற்றுக்குறை; (4) உணவுத் தானியங்களின் இறக்குமதி; (5) நுகர் பொருட்களின் தேவைப் பெருக்கம். இவற்றைப் பின் வருமாறு சற்று விளக்கமாக ஆராயலாம்.

(1) அதிக அளவு மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்தல் (Heavy Imports of Capital Goods)

திட்டங்களை நிறைவேற்ற அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. நாட்டைத் தொழில் மயமாக்க மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்வது அவசியமானதாகும். ஒவ்வொரு திட்டத்திலும் அரசு செய்கின்ற முதலீட்டின் அளவு மிகவும் அதிகரித்துக் கொண்டே செல்கின்றது. முதலீட்டு வீதம் மிக அதிகமாக இருந்ததால், முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டக்காலங்களிலும் மூலதனப் பொருட்கள் பெருமளவிற்கு இறக்குமதி செய்யப் பெற்றன. முதல் திட்டத்தின் இறுதியாண்டில் மூலதனப் பொருட்கள் ரூ. 61.9 கோடி என்ற அளவிற்கு இறக்குமதியாயின. இரண்டாவது திட்டத்தின் முதல் ஆண்டில் இறக்குமதியின் மதிப்பு ரூ. 129.9 கோடியாக உயர்ந்துவிட்டது. வெளிநாடுகளில் பணவீக்க நிலை நிலவிய காரணத்தாலும் இறக்குமதி செய்யப்பட்ட முதலீட்டு, முன்னேற்றப் பொருட்களின் விலைகள் கூடியிருந்தன. சூயஸ் கால்வாய் மூடப்பட்டுவிட்டமையால் இறக்குமதிப் பொருட்களின் போக்குவரத்துச் செலவும் அதிகரித்தது. இதைப் போன்றே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலும் அயல் நாட்டுச் செலாவணி இருப்பு பெருமளவு பயன்படுத்தப்பட்டது. குறிப்பாக 1964-65-இல் அந்நியச் செலாவணி இருப்பில் அதிகக் குறைவு ஏற்பட்டது. திட்டக்காலத்தில் பல பெரிய தொழில்கள் நிறுவப்பெற்றன. அவற்றை நிறுவுவதற்குத் தேவையான

மூலதனப் பொருட்கள் வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அந்நியச் செலாவணிச் சிக்கல் தோன்றியமைக்கு இது ஒரு முக்கியக் காரணமாகத் திகழ்ந்தது.

(2) பாதுகாப்புச் செலவு

நாட்டின் பாதுகாப்புச் செலவாலும் அந்நியச் செலாவணிச் சிக்கல் தீவிரமடைந்தது. தேசிய பாதுகாப்புக் கல்லூரி புது டெல்லியில் 1960-இல் ஏற்படுத்தப்பட்டது. நாட்டின் பாதுகாப்பிற்கான தளவாடங்களும், கருவிகளும் உற்பத்தி செய்யப்பட்டன. சீனப்படையெடுப்பாலும், பாகிஸ்தானின் தாக்குதலாலும் பல வகைப்பட்ட போர்க்கருவிகள் இறக்குமதி செய்யப்பெற்றன. விமானப்படை பலப்படுத்தப்பட்டது; இராணுவத்திற்கான செலவு அதிகரித்தது; கப்பற்படையும் விரிவாக்கம் செய்யப் பட்டது. பாதுகாப்பிற்கான பொருட்களை உற்பத்தி செய்யவும், உற்பத்தியைப் பெருக்கவும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் மேற் கொள்ளப்பட்டன. 1962-ஆம் ஆண்டின் நடுவில் இந்திய அரசு 'பாதுகாப்பு ஆராய்ச்சி, முன்னேற்றக் கவுன்சிலை' (Defence Research and Development Council) ஏற்படுத்தியது. வெடிமருந்து, போர்க்கருவிகள் ஆகியவற்றை உற்பத்திசெய்யும் தொழிற் சாலைகள் தொடங்கப்பட்டன. செய்தித்தொடர்பு வசதிக்கான பொருட்களும் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டன. நம் நாட்டில் பாதுகாப்புச் செலவு கூடியமைக்கு 1965-ஆம் ஆண்டில் பாகிஸ்தானின் ஊடுருவலும் முக்கியக் காரணமாக இருந்தது. ஐந்தாண்டு பாதுகாப்புத் திட்டம் நிறைவேற்றப்பட்டாலும் அந்நியச் செலாவணித் தட்டுப்பாடு ஏற்பட்டது. இவ்வாறு நாட்டின் பாதுகாப்பிற்கான போர்க்கருவிகளை இறக்குமதி செய்யவும், உள்நாட்டில் இக்கருவிகளை உற்பத்தி செய்யவும், தொழிற்சாலைகளை நிறுவவும் அந்நியச் செலாவணி அதிக அளவிற் குத் தேவைப்பட்டது.

(3) தொழில்களுக்கான மூலப் பொருட்களின் பற்றுக்குறை

ஐந்தாண்டுத் திட்டங்களினால் பல பெரிய தொழில்களும், சிறிய தொழில்களும் தோற்றுவிக்கப்பட்டன. ஆனால், இவற்றில் சில தொழில்களுக்குத் தேவையான மூலப்பொருட்களின் உற்பத்தி போதுமானதாக இல்லை. எனவே, பிற நாடுகளின்றும் மூலப்பொருட்களை இறக்குமதி செய்வது அவசியமாயிற்று. நம்முடைய ஏற்றுமதி பெருகாமையால் இம்மூலப்பொருட்களை இறக்குமதி செய்யத் தேவையான அந்நியச் செலாவணியைப் பெறுவது கடினமாக இருந்தது. பருத்தி நெசவுத் தொழிலுக்குத் தேவையான நீண்ட இழைப் பருத்தியானது அமெரிக்காவிலிருந்து

இறக்குமதி செய்யப்பட்டது. பாகிஸ்தானில் இருந்து சணல் நெசவுத்தொழிலுக்குத் தேவையான கச்சாச்சணல் இறக்குமதி யானது. இவ்வாறு சிலவகைப்பட்ட தொழில்களைத் தொடங்குவது மூலப்பொருட்களின் இறக்குமதித் தேவையையும் தோற்று விக்கின்றது. சமீபகாலத்தில், தொழில்களுக்கான மூலப்பொருட் களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய அரசு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.

(4) உணவுத் தானியங்களின் இறக்குமதி

இந்தியாவில் மக்கட்தொகை பெருக்க வீதம் உணவு உற்பத்தி வீதத்தைவிட அதிகமாக இருப்பதால் உணவுப்பற்றுக்குறை அமைந்திருக்கிறது. உணவுப் பற்றுக்குறையைத் தவிர்க்க உணவுத் தானியங்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. வேளாண்மை நாடாகிய இந்தியா உணவில் தன்னிறைவு அடையவில்லை என்பது விந்தையான ஒன்றேயாகும். நீர்ப்பாசன வசதிகள் செய்யப்பட்டும், நல்விதைகளும் உரங்களும் பயன்படுத்தப் பட்டும் உணவு உற்பத்தி போதுமானதாக இருக்கவில்லை. உணவுத் தானியங்களின் உற்பத்திக் குறியிலக்குகளை திட்டக்காலங்களில் எட்டமுடியவில்லை. இதன் விளைவாக, ஒவ்வொரு ஆண்டும் உணவுத் தானியங்கள் பெருமளவிற்கு இறக்குமதி செய்யப்படுகின்றன. இதைப் பின்வரும் அட்டவணையின் மூலம் நன்குணரலாம்.

உணவுத் தானியங்களின் இறக்குமதி

| ஆண்டு | | ஆயிரம் மெட்ரிக் டன்கள் |
|---|---|---|
| 1956 | ... | 1,443 |
| 1961 | ... | 3,495 |
| 1962 | ... | 3,640 |
| 1963 | ... | 4,5[illegible]6 |
| 1964 | ... | 6,266 |

உணவுத் தானியங்களின் இறக்குமதிக்காக அரசு அதிக அளவிற்குச் செலவு செய்கின்றது. 1951-52-இல் ரூ. 228கோடியும், 1957-58-இல் ரூ. 152 கோடியும், 1964-இல் ரூ.213 கோடியும் உணவுத் தானியங்களின் இறக்குமதிக்காகச் செலவிடப்பட்டது. 1965-இல் போதுமான அளவிற்கு மழைப்பொழிவு இல்லாமை யால் நாட்டின் பல பகுதிகளிலும் வேளாண்மை உற்பத்தி பாதிக்கப் பட்டது. எனவே, உணவுப்பற்றுக்குறையைத் தவிர்க்க அதிக அளவிற்கு இறக்குமதி செய்வது தவிர்க்க முடியாததாயிற்று. பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலை ஏற்பட்டமைக்கு

உணவுப்பொருட்களின் இறக்குமதி ஒரு காரணமாக அமைந்தது. இறக்குமதி செய்யப்பெற்ற பொருட்களுக்கான கப்பற்கட்டணங் களும் அதிகரித்திருந்தன. உணவுத்தானியங்களின் இறக்குமதி பெருகியமையும் அந்நியச் செலாவணிச் சிக்கலுக்கான காரணங் களில் ஒன்றாக இருந்தது.

## (5) நுகர் பொருட்களின் தேவைப் பெருக்கம்

மக்களின் வருவாய் ஓரளவு உயர்ந்தமையால் அவசியப் பண்டங்களின் தேவையும், பிற வகைப்பட்ட நுகர் பண்டங்களின் தேவையும் அதிகரித்தன. உதாரணமாக, பருத்தித் துணிப் பொருட்களின் தேவை மிகவும் உயர்வடைந்தது. பெரிய நகரங் களும், சிறிய நகரங்களும் எண்ணிக்கையில் பெருகி வருகின்றன. மக்கட்தொகைப் பெருக்கமும் விரைவாக ஏற்படுகின்றது. மக்கட் தொகைப் பெருக்க விதத்திற்கு ஏற்ப உணவு உற்பத்தியின் பெருக்க வீதம் அமையவில்லை; நுகர் பொருட்களின் உற்பத்தியின் அளவும் அதிகரித்திருக்கவில்லை. இக்காரணங்களால், பலவகைப் பட்ட இறக்குமதிகள் எண்ணிக்கையில் பெருகின. கச்சாப் பருத்தி, புகையிலை, உயர்ந்தரக நெசவிற்கான நூல்கள் போன்ற பலவும் இறக்குமதியாயின. ஆகவே, நுகர் பொருட்களின் தேவைப் பெருக்கமும் அந்நியச் செலாவணிச் சிக்கல் ஏற்படக் காரண மாயிற்று.

## இந்தியாவில் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடு

இரண்டாவது உலகப் போர் தொடங்கியபோது செப்டம்பர் 4, 1939-இல் முதன் முதலில் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடு கொண்டு வரப்பட்டது. பாதகச் செலுத்துநிலை வெளிநாட்டு வாணிபத்தில் ஏற்படாமல் இருப்பதற்காக இக்கட்டுப்பாடு பின் பற்றப்பட்டது. ஸ்டெர்லிங் நாடுகள் அல்லாத பிற நாடுகளோடு தான் வெளிநாட்டு வாணிபம் மேற்கொள்ளப் பெற்றது. போர்ச் சாதனங்களே பெருமளவிற்கு இறக்குமதியாயின. இவ்வகை நாடுகளோடு வாணிபம் செய்தமை இந்தியாவிற்கு நல்ல வருவாயைத் தந்தது. இந்திய ரிசர்வ் வங்கியிடம் டாலர் இருப்பு அதிகரித்தது; ஸ்டெர்லிங் இருப்பும் உயர்வடைந்தது.

போர் முடிவடைந்த பிறகு, அந்நியச் செலாவணிக் கட்டுப் பாடு தளர்த்தப்பட்டது. ஸ்டெர்லிங் பகுதியோடும் வாணிபம் வளர்ந்தது. இறக்குமதிகளின் தேவையும் மிகுதியாக அதிகரித்தது. 1947-இல் 'இறக்குமதிகள், ஏற்றுமதிகள் கட்டுப்பாட்டுச் சட்டம்' (Imports and Exports Control Act) கொண்டு வரப்பட்டது. இதன் மூலம் இறக்குமதிகளும், ஏற்றுமதிகளும் ஒழுங்குபடுத்தப்

பட்டன. சில வகைப்பட்ட பொருட்களுக்கு இறக்குமதி அனுமதி வழங்கப்பட்டபோது, அதற்கான அந்நியச் செலாவணியும் தரப் பட்டது. ஏற்றுமதிப் பொருட்களின் மூலம் பெறப்பட்ட அந்நியச் செலாவணி அரசால் அடையப் பெற்றது.

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு அந்நியச் செலாவணி யில் பலவிதமான கட்டுப்பாடுகள் கொண்டுவரப்பட்டன. 'அந்நியச் செலாவணி ஒழுங்குப்படுத்தும் சட்டம்' (Foreign Exchange Regulation Act) மார்ச் 25, 1947-ஆம் ஆண்டிலிருந்து செயல்படுத்தப்பட்டது. இறக்குமதி, ஏற்றுமதிகளுக்கு அரசின் அனுமதியைப் பெறுவது அவசியமாயிற்று. இந்திய ரிசர்வ் வங்கி செலாவணிக் கட்டுப்பாட்டு நிர்வாகத்திற்காகத் தனி பிரிவைத் தோற்றுவித்தது. அதிக அளவு அந்நியச் செலாவணியைப் பெறு வதற்கான நடவடிக்கைகள் அரசால் மேற்கொள்ளப்பட்டன. சுங்க வரிவிதிப்பு முறையும் அந்நியச் செலாவணிக் கட்டுப் பாட்டிற்கு உதவுகின்ற ஒன்றாகும்.

### அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தவிர்ப்பதற்கான தீர்வுகள்

அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தவிர்ப்பதற்காக நம் நாட்டில் பலவகையான தீர்வுகள் எடுக்கப்பட்டன. ரிசர்வ் வங்கிச் சட்டத்தில் திருத்தம் கொண்டுவரப்பட்டது. ஏற்றுமதிப் பெருக்கத்திற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இறக்குமதி நாட்டுடைமையாக்கப்பட்டது. உணவு உற்பத்தியைப் பெருக்க பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. இறக்குமதியைக் குறைத்து, ஏற்றுமதியைப் பெருக்க அரசு பல வழிகளைப் பின் பற்றியது.

### ரிசர்வ் வங்கிச் சட்டத் திருத்தம்

அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்க 1956-இல் ரிசர்வ் வங்கிச் சட்டத்தில் திருத்தம் கொண்டுவரப்பட்டது. அயல் நாட்டுச் செலாவணிச் சிக்கல் தீவிரமடைந்ததால் அக்டோபர் 31, 1957-இல் மற்றொரு அவசரத் திருத்தமானது செய்யப்பட்டது. அயல்நாட்டுச் செலாவணி, தங்கம் ஆகியவற்றின் இருப்பை அதிக அளவிற்கு ரிசர்வ் வங்கி கொண்டிருக்க, ரிசர்வ் வங்கிச் சட்டத்தில் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் அயல்நாட்டுச் செலாவணியின் இருப்பும், தங்கத்தின் இருப்பும் அதிக அளவில் இருப்பது அவசியமானதாகும். முன்னேற்றப் பணிகளை மேற்கொள்ள இவ்வகை இருப்புக்கள் தேவைப்படுகின்றன. இந்தியா போன்ற மேம்பாடடைந்து வரும் நாடுகளில் அயலகச் செலாவணி இருப்பு மிகவும் அவசிய

மானதாக அமைந்திருக்கின்றது. இருப்பு விதிகளில் அடிக்கடி மாற்றங்களைச் செய்யக் கூடாது. அவசர நிலைகள் ஏற்படும்போது கூட, பெரிய அளவு மாற்றங்களைச் செய்வது நன்மை தராது. அடிக்கடி மாற்றங்களைச் செய்தால் மக்கள் அரசின் மீது கொண்டிருக்கின்ற நம்பிக்கையை இழப்பார்கள். அரசின் அயல்நாட்டுச் செலாவணி இருப்புக்கொள்கையில் மாற்றங்களைச் செய்வது பொருளாதார முன்னேற்ற நிலைகளில் பல தடைகளை ஏற்படுத்தும். இந்திய ரிசர்வ் வங்கித் திருத்தச் சட்டம் 1957-இல் நிறைவேற்றப் பட்டது. அதன் மூலம் அரசு அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்க முயன்றது.

### ஏற்றுமதிப் பெருக்கம்

ஏற்றுமதியைப் பெருக்க ஏ. டி. கோர்வாலா (A. D. Gorewala) தலைமையின்கீழ் 1949-இல் 'ஏற்றுமதி முன்னேற்றக்குழு' (Export Promotion Committee) அமைக்கப்பட்டது. முக்கியமான பரிந்துரைகளை இக்குழு தந்தது. ஆனால், இப்பரிந்துரைகளைச் செயல் படுத்தியபிறகும் ஏற்றுமதியில் சிறப்பான முன்னேற்றம் ஏற்பட்டது எனக்கூற இயலாது. ஏற்றுமதிப் பொருட்களின் மொத்த மதிப்பு 1950-51-இல் ரூ. 601.71 கோடியாக இருந்தது. 1961-62-இல் இது ரூ. 684.29 கோடியாகவும், 1963-64-இல் ரூ. 802.41 கோடியாகவும் உயர்ந்தது. ஆனால், 1964-65-இல் ஏற்றுமதி மதிப்பு ரூ. 637.95 கோடியாகக் குறைந்து விட்டது.

பின்வரும் காரணிகளே ஏற்றுமதிப் பெருக்க நடவடிக்கைகள் வெற்றி பெறுமைக்குக் காரணங்களாக அமைகின்றன:

(i) பணவீக்கநிலை பொறிசெய்ப் பொருட்களின் உற்பத்திச் செலவை அதிகரிக்கச் செய்தது.

(ii) பலவகைப்பட்ட ஏற்றுமதி வாணிபம் வளர்க்கப்பட வில்லை.

(iii) அடிப்படை மூலப்பொருட்களின் ஏற்றுமதி உபரியில் குறைவு ஏற்பட்டது.

(iv) புதிய வகை பொருட்களை ஏற்றுமதி செய்வதில் குறைந்த அளவு முன்னேற்றமே பெறப்பட்டது.

(v) வேளாண்மை உற்பத்தியில் தேக்கநிலை அமைந்திருந்தது.

(vi) சில நாடுகள் இந்தியப் பொருட்களின் மீது அதிக அளவிற்கு இறக்குமதி வரிகளை விதித்தன.

ஏற்றுமதியின் அளவை அதிகரிக்க வேறு சில குழுக்களும் அமைக்கப்பட்டன. இவ்வகையில் முதலியார் குழுவின் பரிந்துரைகள் குறிப்பிடத்தக்கவைகளாகும். மே 1962-இல் 'வாணிபக்குழு' (Board of Trade) அமைக்கப்பட்டது. ஏற்றுமதியைப் பெருக்கும் வழிமுறைகளை ஆராய இக்குழுக்கள் ஏற்படுத்தப் பெற்றன. ஏற்றுமதிப் பொருட்களின் தரத்தை உயர்ந்த தரக் கட்டுப்பாடு முறைகள் பின்பற்றப்பட்டன. ஏற்றுமதியாளர்களுக்கான கடன் வசதிகளும், காப்புறுதி வசதிகளும் தரப்பட்டன. ஏற்றுமதி ஓரளவு பெருகியமைக்கு இந்நவடடிக்கைகளே முக்கியக் காரணமாகும்.

ஏற்றுமதி பெருமளவிற்கு அதிகரிப்பதற்கான சுமுகச் சூழ்நிலை இன்றும் உருவாகவில்லை. மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு அமைந்திருக்கவில்லை. மூலப் பொருட்கள் மாநிலங்களுக்கிடையே பெயர்ந்து செய்வதில் பல கட்டுப்பாடுகள் மாநில அரசுகளால் விதிக்கப்பட்டுள்ளன. சர்டோனல்டு மேக்டாகல் (Sir Donald Macdougall) கருதுவதுபடி, ஆண்டொன்றிற்கு ரூ. 100 கோடி மதிப்புள்ள மூலப்பொருட்களை இறக்குமதி செய்தால் தொழில் உற்பத்தி 15 முதல் 20 சதவிதம் அதிகரிக்கும். இதனால், ஏற்றுமதி பலமடங்கு உயர வாய்ப்பு ஏற்படும். தொழில் உற்பத்திக்குத் தேவையான மூலப்பொருட்களை இறக்குமதி செய்வதில் அரசு அதிகக் கட்டுப்பாடுகளை விதிப்பதில்லை. இவ்வகை இறக்குமதிகளின் மீது அதிக வரிகள் விதிக்கப்படுவதில்லை. தொழில்களின் வளர்ச்சிக்கு இதனால் சாதகச் சூழ்நிலை ஏற்படுகின்றது.

ஏற்றுமதிகளின் மூலம் வருவாய் பெருக ஏற்றுமதித் தொழில்கள் வளர்க்கப்பட வேண்டும். அத்தொழில்களில் அமைந்திருக்கக் கூடிய பல சிக்கல்கள் தீர்க்கப்பட வேண்டும். தரமான பொருட்களை குறைந்த செலவில் உற்பத்தி செய்து, குறைந்த விலையில் அயல் நாட்டுச் சந்தைகளில் விற்பனை செய்ய முயல வேண்டும். வழக்கமாக ஏற்றுமதி செய்யும் பொருட்களோடு புதிய வகைத் தொழிற் பொருட்களையும் ஏற்றுமதி செய்வது நன்மை பயப்பதாகும். இந்தியா ஏற்றுமதி செய்கின்ற பொருட்களுக்கு உலகச் சந்தையில் தேவை குறைவாகவே இருக்கின்றது. நெகிழ்ச்சியற்ற தேவையைக் கொண்ட பொருட்களையே இந்தியா அதிக அளவிற்கு ஏற்றுமதி செய்கின்றது. நெகிழ்ச்சி நிறைந்த தேவையைக் கொண்ட புதிய தொழிற்பொருட்களையும் இந்தியா ஏற்றுமதி செய்தால் ஏற்றுமதிப் பெருக்க நடவடிக்கைகளில் சிறப்பான வெற்றியைப் பெற இயலும்.

வெளிநாட்டுச் சந்தைகளில் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்குப் போட்டியாக வளர்ச்சியடைந்த நாடுகளும் பொருட்களை

விற்பனை செய்கின்றன. முன்னேற்றமடைந்த நாடுகளின் தரமான பொருட்கள் குறைவான விலைக்குக் கிடைக்கின்ற காரணத்தால் அவற்றின் தேவை பெருகுகின்றது. அப்பொருட்களோடு வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருட்கள் போட்டியிட முடிவதில்லை. இதன் காரணமாகவும் முன்னேற்றமடைந்துவரும் நாடுகளின் ஏற்றுமதிப் பெருக்க நடவடிக்கைகள் வெற்றி பெறுவதில்லை.

## இறக்குமதிகளின் சீரமைப்பு

நான்காவது திட்டத்தின் இறக்குமதிக் குறியீடு ரூ. 7,500 கோடி என்ற அளவில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நாட்டின் பாதுகாப்புச் செலவு கூடிவருவதால், இறக்குமதி மதிப்பு மேலும் உயரும் எனச் சொல்லப்படுகின்றது. அரசு அவசியப் பொருட்களின் இறக்குமதியை மட்டுமே அனுமதிக்கிறது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்ற நுகர்பொருட்களின் அளவு பெரிதும் குறைவடைந்துள்ளது. இறக்குமதி செய்வதற்குப் பதிலாக உள்நாட்டிலேயே சில பொருட்களை உற்பத்தி செய்யலாம். இந்திய அரசு மூலதனப் பொருட்களை எளிதில் இறக்குமதி செய்ய அனுமதிக்கின்றது ; அந்நியச் செலாவணி இவ்வகை இறக்குமதிகளுக்கு எளிதில் அளிக்கப்படுகின்றது. இறக்குமதிப் பதிலிகளைப் பற்றி பரிந்துரைக்க டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. இவ்வகையில் உள்நாட்டின் பலவகைப்பட்ட நுகர்பொருட்களின் உற்பத்தி பெருகி வருவது குறிப்பிடத்தக்கதாகும். இறக்குமதிக் கட்டுப்பாடுகளாலும், இறக்குமதிப் பொருட்களுக்குப் பதிலாக அவற்றை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்வதாலும் அந்நியச் செலாவணிச் சிக்கல் ஓரளவிற்குத் தீர்க்கப்படுகின்றது.

## உணவு உற்பத்திப் பெருக்கம்

பெருகிவருகின்ற மக்கட்தொகையால் உணவுப்பொருட்களை இறக்குமதி செய்வது தவிர்க்க முடியாததாகின்றது. உணவு இறக்குமதியைக் குறைக்க உள்நாட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும். உணவுப்பொருட்களின் இறக்குமதியால் அதிக அளவு அந்நியச் செலாவணியை நாம் இழக்கின்றோம்; உணவுப் பொருட்களை இறக்குமதி செய்வதற்கான போக்குவரத்துச் செலவையும் ஏற்க வேண்டியுள்ளது. உணவு உற்பத்தியில் தன்னிறைவைப் பெற்றால்தான், மதிப்புமிக்க அந்நியச்செலாவணியை நம்மால் சேமிக்க முடியும். அச்செலாவணியைக் கொண்டு மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்து நாட்டை மேலும் தொழில் மயமாக்கலாம். இந்தியாவில், வேளாண்மை

உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புக்கள் ஏராளமாக உள்ளன. உற்பத்தியானது படிப்படியாக அதிகரித்துக் கொண்டு வருவதையும் நம்மால் உணர முடிகின்றது. நாட்டின் எல்லா மாநிலங்களிலும் பசுமைபுரட்சி தோன்றினுல் உணவில் தன்னிறைவைப் பெறுவது எளிதானதேயாகும். உணவு உற்பத்தியைப் பெருக்க அரசு பல தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் வேளாண்மைத் துறைக்கு முதல் முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. இதன் மூலம் எதிர் காலத்தில் உணவு உற்பத்தி பல மடங்கு பெருகி அந்நியச் செலாவணிச் சிக்கல் தீர்க்கப்பட வாய்ப்பு இருக்கின்றது.

## அயல்நாட்டுச் செலாவணி உதவி

இந்தியா நேசநாடுகளிடமிருந்து அந்நியச் செலாவணியை உதவியாகப் பெறுகின்றது. ஜுன் 1961-இல் இவ்வாறு 2,286 மில்லியன் டாலர் (ரூ. 1,089 கோடி) உதவியாகப் பெறப்பட்டது. பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலையை ஓரளவு தீர்க்க இது பயன்படுத்தப்பட்டது. மார்ச் 1965 வரை வெளிநாட்டு உதவி ரூ. 5,208. 5 கோடி என்ற அளவிற்குக் கிடைக்கப்பெற்றது. இதில் ரூ. 3,731.6 கோடி மட்டுமே பயன்படுத்தப்பட்டு இருந்தது. திட்டக்குழுவின் கருத்துப்படி நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ரூ. 4,700 முதல் ரூ. 4, 800 கோடிவரை அந்நியச்செலாவணி தேவைப்படும். உலக வங்கி, சோவியத் ரஷ்யா, அமெரிக்கா, பிற ஐரோப்பிய நாடுகள் ஆகியவைகளிடமிருந்து இத்திட்டக் காலத்தில் வெளிநாட்டு உதவி பெறப்படும்.

இந்தியாவில் திட்டங்களை நிறைவேற்ற வெளிநாடுகள் பெரிதும் உதவியிருக்கின்றன. வெளிநாடுகளின் அரசுகளோடு பன்னாட்டு நிதி நிறுவனங்களும் நம் நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கு உதவியுள்ளன. எனவே, இந்தியாவின் அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கல் வெளிநாடுகளின் கடன்களாலும் உதவிகளாலும் தீர்க்கப்படுகின்றது. இவ்வுதவிகளைச் சிறப்பாக உற்பத்திப் பணிகளில் பயன்படுத்தினுல், ஏற்றுமதியைப் பெருக்கி எளிதில் அந்நியச் செலாவணியை ஈட்ட முடியும். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் வளர்ச்சியடைந்த நாடுகளின் உதவி சிறப்பான நிலையைக் கொண்டிருக்கின்றது.

நவம்பர் 1962-இல் இந்திய அரசு வெளிநாட்டுச் செலாவணி இருப்பை அதிகரிக்க 'தங்கப்பத்திரங்களை' வெளியிட முடிவு செய்தது. தங்கப்பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்ட தங்கத்தின் மதிப்பு ஒரு தோலாவிற்கு ரூ. 62.50 ஆக (அல்லது 10 கிராமிற்கு

ரூ. 53.58 ஆக) அமைந்திருந்தது. 15 ஆண்டுகளுக்கு மேலாக முதலீடு செய்யப்பட்ட தங்கத்திற்கு வட்டி வீதம் $6\frac{1}{2}$ சதவீதமாக இருந்தது. ஜனவரி 9, 1963-இல் அரசு 'தங்கக் கட்டுப்பாட்டு விதிகளைக்' (Gold Control Rules) கொண்டு வந்தது. இவ்விதிகளின் படி தங்க ஆபரணங்களை 14 கேரட்டிற்குள்தான் செய்ய வேண்டுமெனக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டது. சுத்தமான தங்கத்தில் நகைகள் செய்வது இதனால் தடுக்கப்பெற்றது. நகையல்லாத தங்கத்தை 50 கிராமிற்கு மேலாக வைத்திருப்பவர்கள் ஒரு மாதத்திற்குள் அரசிடம் தெரிவிக்கவேண்டுமெனவும் உத்தரவிடப் பட்டது. இவ்வித நடவடிக்கைகளின் மூலம் தங்கத்திற்கான உள்நாட்டுத் தேவை குறைந்து, தங்கத்தின் சந்தைவிலை பன்னாட்டு விலையின் அளவிற்குக் குறைந்துவிடுமென எதிர்பார்க்கப் பட்டது. தங்கத்தை வெளிநாடுகளிலிருந்து கடத்தி வருவதையும் இதனால் தடுக்க முடியுமெனக் கருதப்பெற்றது. ஆனால், மக்களில் பெரும்பாலானோர் தங்களிடமுள்ள தங்க இருப்பைப் பற்றி அரசிடம் அறிவிக்கவில்லை. அரசின் கொள்கை உள்நாட்டில் தங்கத்தின் விலையைக் குறைப்பதில் வெற்றி பெறவில்லை.

அந்நியச் செலாவணி இருப்பை வலுப்படுத்த மேற்குறிப்பிடப் பட்ட பல வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. டாக்டர் லோகநாதன் கூற்றுப்படி, அந்நியச் செலாவணி மிக அவசியமானவைகளுக்கு மட்டுமே பயன்படுத்தப்படுதல் வேண்டும். இந்தியாவில் அந்நியச் செலாவணி அவசியம் குறைந்தவைகளுக்கும் பயன் படுத்தப்படுகின்றது. மூலதனப் பொருட்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்து அவற்றின் இறக்குமதியைக் குறைத்து, அந்நியச் செலாவணியை மிச்சம் பிடிக்கலாம். கூட்டுறவுத் துறையில் இவ்வகைத் தொழில்கள் தொடங்கப்படலாம். ஏற்றுமதிப் பெருக்கத்தில் இன்னும் நாம் வெற்றியைப் பெறவில்லை. ஏற்றுமதிப் பெருக்கத்திட்டங்கள் வெற்றியடைய அரசு மேலும் பல தீவிர நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். வெளிநாட்டு வாணிபத்தை வளர்க்க வாணிப அமைச்சகம் ஏற்படுத்தப்பட்டது. ஏற்றுமதி முன்னேற்றத்திற்காக பல குழுக்களும் அமைக்கப்பெற்றன. தீவிரமான ஏற்றுமதிப் பெருக்கக் கொள்கையின் மூலமே அந்நியச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்க இயலும். இந்தியாவின் தொழில் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது போதுமான அளவு ஏற்றுமதி அதிகரிக்காத நிலையாகும். பாரம்பரியப் பொருட்களை ஏற்றுமதி செய்வதும், உற்பத்தித் தரம் குறைவாக இருப்பதும், உற்பத்திச் செலவு அதிகமாக அமைந்திருப்பதும் ஏற்றுமதி பெருகாமைக்குக் காரணங்களாகும். திறமை குறைந்த நிர்வாகம் குறைந்த அளவு உற்பத்தியையே எல்லாத் துறைகளிலும் தருகின்றது. உலகச்சந்தையில் நம்முடைய ஏற்றுமதிப் பொருட்

கள் போட்டியிடத்தக்க வகையில் உயர்வான தரத்தையும், குறைவான விலையையும் கொண்டிருத்தல் அவசியமானதாகின்றது. ஏற்றுமதியைப் பெருக்கி அந்நியச் செலாவணியை மிகுதியாகப் பெற அயல்நாடுகளின் அரசுகளோடும், தனியாரோடும் இணைந்து உள்நாட்டில் புதிய தொழில்கள் பல தொடங்கப்படுதல் வேண்டும்.

இந்தியாவில் நுகர்வின் அளவு குறைவாக இருக்கின்றது. அவசியப் பண்டங்களிலும்கூட பற்றுக்குறை அமைந்துள்ளது. எனவே, பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வெளிநாட்டு உதவி பெறப்படுகின்றது. இவ்வுதவியைத் திருப்பித் தருகின்ற நிலையில் உள்ள இடையூறுகளால் அந்நியச் செலாவணிச் சிக்கல் தோன்றுகின்றது. ஏற்றுமதி பெருகாமல் இறக்குமதி பெருகும் போது, பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலை ஏற்படுகின்றது. ஆனால், முன்னேற்ற நிலைகளில் அந்நியச் செலாவணிப் பற்றுக்குறை அமைந்திருப்பது இயல்பானதேயாகும். நமது நாட்டில் நுகர் பொருட்களை உற்பத்தி செய்யக்கூடிய தொழில் நிறுவனங்களின் உற்பத்தித்திறன் குறைவாகவே இருந்தது. சுதந்திரமடைவதற்கு முன் கச்சாப்பொருட்கள் ஏராளமான அளவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன ; மூலதனப் பொருட்களின் இறக்குமதியும் குறைவாகவே இருந்தது. எனவே, அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சிக்கல் அப்போது அமைந்திருக்கவில்லை. திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தைக் கைக்கொண்டபிறகு தொழில்கள் பல ஏற்படுத்தப்பட்டன. அதன்பிறகே அந்நியச் செலாவணிச்சிக்கல் தோன்றியது.

வளர்ச்சியடைந்துவரும் ஒரு நாடு மூன்று நிலைகளைக் கடந்து செல்லவேண்டும். அவையாவன : இறக்குமதி நிலை, இறக்குமதிப் பொருட்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யும் நிலை, ஏற்றுமதி நிலை ஆகியவைகளாகும். முதல் இரண்டு நிலைகளிலும் இறக்குமதியைத் தவிர்ப்பது இயலாததாகும். இம் மூன்று நிலைகளையும் இணைக்க இந்திய அரசு முயன்று வருகின்றது. டாக்டர் ஜே. டி. சேத்தி கூறுவதாவது, "இந்தியாவில் இறக்குமதியின் மூலம் மூலதனப் பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன ; இறக்குமதிப் பதிலிப் பொருட்கள் உள்நாட்டிலேயே உற்பத்தியாகின்றன ; ஏற்றுமதிப் பொருட்களை உற்பத்தி செய்யக்கூடிய தொழில்கள் வளர்க்கப்படுகின்றன." இந்தியாவில் மேற்குறிப்பிடப்பட்டுள்ள மூன்று நிலைகளையும் ஒருங்கே பின்பற்றும் நிலையானது இறக்குமதியைப் பெருக்கியிருக்கின்றது ; ஆனால், அதே அளவிற்கு ஏற்றுமதியானது பெருகியிருக்கவில்லை.

**அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தீர்ப்பதற்காக அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள்**

அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தீர்ப்பதற்காகப் பல வகைப்பட்ட நடவடிக்கைகளும் அரசால் எடுக்கப்பட்டுள்ளன. முதலில், பொருளியலாளர்கள் ரூபாய் மதிப்புக் குறைப்புச் செய்ய வேண்டுமெனக் கருதினார்கள். ஆனால், அரசு அப்போது அவ்வாறு செய்ய விரும்பவில்லை. ஏற்றுமதியைப் பெருக்கி, நுகர் பொருட்கள், அவசியம் குறைந்த பொருட்கள் ஆகியவற்றின் இறக்குமதியைக் குறைத்து, அந்நியச் செலாவணியைப்பெற அரசு விரும்பியது. அயல்நாட்டு உதவியும் அந்நியச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்கப் பெறப்பட்டது. அந்நியச்செலாவணிச் சிக்கல் தோன்றிய உடனேயே, தீவிர இறக்குமதிக் கட்டுப்பாட்டுக் கொள்கை பின் பற்றப்பட்டது.

அந்நியச் செலாவணிச் சிக்கலினால், திட்டக்குழு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் திருத்தியமைத்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும் அந்நியச் செலாவணிச் சிக்கல் நீடித்தது. மூன்றாவது திட்டக்காலத்தில் ஏற்றுமதியை ரூ. 3700 கோடி என்ற அளவிற்கு உயர்த்த வேண்டுமெனத் திட்டமிடப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் ஏற்றுமதியின் மூலம் ரூ. 3053 கோடி பெறப்பட்டது. ஏற்றுமதி வருவாயைப் பெருக்க எல்லா வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டுமென திட்டக்குழு கருதியது. ஏற்றுமதியை உயர்விக்க முக்கியமாக இரு நிலைகளைப் பின்பற்ற வேண்டுமென திட்டக்குழு அறிவுறுத்தியது :

முதலாவதாக, உற்பத்தியைப் பெருக்குவதின் மூலம் ஏற்றுமதி உபரியைத் தோற்றுவிக்க வேண்டும். ஏற்றுமதியை அதிகரிக்க உள்நாட்டின் நுகர்வையும் கட்டுப்படுத்துவது அவசியமானதாகும்.

இரண்டாவதாக, வெளிநாட்டுச் சந்தைகளில் போட்டியிடத் தக்க வகையில் ஏற்றுமதிப் பொருட்களில் விலைகள் அமைந்திருக்க வேண்டும். ஏற்றுமதிப் பொருட்களின் நுகர்வைக் கட்டுப்படுத்துவதோடு, அவற்றின் உற்பத்தியை அதிகரித்து உற்பத்திச் செலவைக் குறைக்க வேண்டும்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்திலேயே அயல்நாட்டுச் செலுத்துநிலை பாதகமாக இருந்தது. இத்திட்டக் காலத்தில் அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பற்றாக்குறை ரூ. 1919 கோடி என்ற அளவிற்கு அமைந்திருந்தது. உணவுப் பொருட்களின் இறக்குமதியும் பெருகியது ; பிறவகைப்பட்ட இறக்குமதிகளும்

அதிகரித்தன. போதுமான அளவிற்கு ஏற்றுமதியும் பெருகவில்லை. எனவே, அரசு பிற நாடுகளினின்றும் உதவி பெறுவது அவசியமா யிற்று. பாதக வெளிநாட்டு வாணிபத்தோடு, அயல்நாட்டுக் கடன்களும் பெறப்பட்டதால் அந்நியச் செலாவணிச் சிக்கல் மேலும் தீவிரமடைந்தது. 'பன்னாட்டு பண நிதியினின்றும்' (I.M.F.) கடன் வாங்கப் பெற்றது. 1965-இல் வெளிநாட்டு உதவி தற்காலிமாக நிறுத்தி வைக்கப்பட்டமையால் நிலைமை மேலும் மோச மடைந்தது. உணவுத்தானியங்களின் இறக்குமதி பெருகியமை இந்நிலையை மிகவும் கடினமாக்கியது.

இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலங்களில் அந்நியச் செலாவணிப் பற்றாக்குறை ஏற்பட்டமைக்கான பொது வான காரணங்களைப் பின் வருமாறு தொகுத்துக் கூறலாம்:

(1) இந்தியாவில் சில வகைப்பட்ட பொருட்கள் மட்டுமே அதிக அளவிற்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. நெசவுப் பொருட் கள், தேயிலை, சணல் போன்றவை மட்டுமே பெருமளவிற்கு ஏற்றுமதி யாகின்றன. பலவகைப்பட்ட பொருட்களை நாம் ஏற்றுமதி செய்யவில்லை. பாரம்பரியப் பொருட்களை மட்டும் ஏற்றுமதி செய்கின்ற நிலை மாற வேண்டும். இந்தியாவினின்றும் ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருட்கள் அயல்நாட்டுச் சந்தைகளில் நெகிழ்ச்சி குறைந்த தேவையையே கொண்டுள்ளன.

(2) ஏற்றுமதிப் பொருட்களின் விலைகளில் அதிக அளவிற்கு 'ஏற்ற இறக்கங்கள்' (Fluctuations) காணப்படுகின்றன. ஏற்றுமதி யின் அளவிலும் உறுதியற்ற தன்மை அமைந்துள்ளது. இந்நிலை களின் காரணமாக ஏற்றுமதியைப் பெருக்குவது எளிதாக அமைந் திருக்கவில்லை.

(3) மேம்பாடடைந்த நாடுகளின் புதிய கண்டுபிடிப்புகளா லும் பின்தங்கிய நாடுகளின் ஏற்றுமதி பாதிக்கப்படுகின்றது. சான்றாக, பருத்தி, சணல், கம்பளி போன்றவைகளுக்குப் பதிலி யாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள செயற்கை இழைகளைக் குறிப்பிட லாம். சமீப காலமாக இவ்வகை பதிலிப்பொருட்களை பல வளர்ச்சியடைந்த நாடுகளும் குறைந்த செலவில் உற்பத்தி செய்வது இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் ஏற்று மதியைப் பாதிக்கின்றது.

(4) 'வாணிப மாற்று வீதம்' (Terms of Trade) பொறி செய்ப்பொருட்களை ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்கே சாதகமாக அமைகின்றது. இந்தியா வேளாண்மை பொருட்களையே அதிக அளவிற்கு ஏற்றுமதி செய்கின்றது. எனவே, வாணிப மாற்றுவீதம்

நமக்கு சாதகமாக அமைந்திருக்கவில்லை. இதைத்தவிர, வளர்ச்சியடைந்த நாடுகள் பின்தங்கிய நாடுகளின் ஏற்றுமதிப் பொருட்களின் மீது சுங்கவரிகளை விதிக்கின்றன ; பலவிதமான வாணிபக் கட்டுப்பாடுகளையும் ஏற்படுத்துகின்றன.

(5) பாரம்பரியப் பொருட்களாக இல்லாத ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்திச் செலவு இந்தியாவில் உயர்வாக உள்ளது. வெளிநாட்டுச் சந்தைகளில் இப்பொருட்களைக் குறைந்த விலைகளில் விற்க இயலாமையால் ஏற்றுமதியின் அளவு அதிகரிப்பதில்லை.

(6) வளர்ச்சியடைந்த நாடுகளுக்கிடையே வெளிநாட்டு வாணிப தொடர்புகள் மிகவும் சிறப்பாக அமைந்திருக்கின்றன. ஆனால், உலக மக்கட்தொகையில் $\frac{2}{3}$ பகுதியைக் கொண்டுள்ள மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வெளிநாட்டு வாணிபம் வளர்ந்திருக்கவில்லை. இந்நாடுகளில் உற்பத்தி குறைவாக உள்ளமையால் இவற்றின் வாங்கும் திறனும் தாழ்வாகவே இருக்கின்றது.

(7) பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவரும் நாடுகளில் உள்நாட்டுத் தேவைகள் பெருகுவதால், ஏற்றுமதி உபரியின் அளவு குறைவடைகின்றது. இந்தியாவில், மக்களின் வருவாய் படிப்படியாக அதிகரித்து வருகின்றமையால், தேவையும் பெருகிக் கொண்டிருக்கின்றது. இந்நிலையில் சில ஏற்றுமதிப் பொருட்களும் உள்நாட்டிலேயே நுகரப்படுகின்றன. ஏற்றுமதியின் அளவு இதனால் சுருங்குகிறது.

(8) இந்திய வேளாண்மையில் தேக்கநிலையே நீடிக்கின்றது. இயற்கைக்காரணிகள் சாதகமாக இல்லாமையும், தொழில் உற்பத்தி குறைந்த வீதத்திலேயே உயர்வடைகின்றமையும் தேக்க நிலைக்குக் காரணங்களாக அமைகின்றன. ஆகவே, ஏற்றுமதிப் பொருட்களின் அளிப்பைப் பெருக்குவது கடினமாக உள்ளது.

(9) பின்தங்கிய நாடுகள் தொழில்வளத்தைப் பெற பலவகைப்பட்ட மூலதனப் பொருள்களை இறக்குமதி செய்வது இன்றியமையாததாகும். இவ்வகை இறக்குமதிப் பொருட்களுக்கு ஈடாக ஏற்றுமதியைப் பெருக்க இயலாமையால் பின்தங்கிய நாடுகளில் அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கல் எழுகின்றது.

(10) இந்தியா ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிய பொழுது வெளிநாடுகளினின்றும் கடன்களைப் பெற்றது. இக்கடன்களுக்கான வட்டியையும், அசலையும் கொடுக்க அந்நியச் செலாவணி தேவைப்படுகின்றது. ஆண்டுதோறும் வெளிநாட்டுக் கடனிற்

கான தொகையை அளிக்க வேண்டியுள்ள நிலையும் அந்நியச் செலாவணிச் சிக்கலை மேலும் தீவிரமடையச் செய்கின்றது.

*(11)* இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலங் களில் உணவுப் பொருட்களின் இறக்குமதி அளவு அதிகரித்தமை யும் இந்தியாவில் பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலைக்குக் காரணமாக அமைந்தது. பேராசிரியர் ஆர்தர் லூயிஸ் கூறுவதுபடி, "தனியொரு மனிதனுக்கான வேளாண்மை உற்பத்தியில் தேக்கநிலை இருந்தால் தொழில் முன்னேற்றம் பாதிக்கப்படும் ; பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையும் தோன்றும்."

*(12)* இறுதியாக, சீன, பாகிஸ்தானியப் படையெடுப்பினால் நாட்டின் பாதுகாப்புச் செலவுகள் கூடின. இந்தியாவிற்கும் பாகிஸ்தானிற்கும் போர் நடந்தபோது அமெரிக்கா தன்னுடைய உதவியை நிறுத்திவிட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் அந்நியச் செலாவாணிச் சிக்கல் தீவிரமடைந்தமைக்கு இதுவும் ஒரு காரணமாக அமைந்தது.

அந்நியச் செலாவணிச் சிக்கலைத் தீர்ப்பதற்காக அரசு ஜூன் 1966-இல் ரூபாய் மதிப்புக் குறைப்பைச் செய்தது. ஆனால், எதிர் பார்த்த அளவிற்கு வெற்றி கிடைக்கவில்லை. நாணய மதிப்புக் குறைப்பு வெற்றி பெற பணவீக்கநிலை கட்டுப்படுத்தப்பட வேண்டும். உள்நாட்டில் விலைகள் குறையாவிட்டால் பணத்தின் மாற்று மதிப்பு மேலும் குறைவடையும். ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்திச்செலவு குறைவாக இருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால்தான் உலகச்சந்தையில் பொருட்களைக் குறைந்த விலைக்கு விற்பனை செய்ய முடியும். நாம் நம்முடைய ஏற்றுமதி முன்னேற்ற நடவடிக்கைகளில் வெற்றி பெறவில்லை என்றே கூற வேண்டும். இதற்கு அடிப்படைக் காரணம், பல துறைகளிலும் குறைந்த அளவு உற்பத்தி பெறப்படுவதேயாகும். ஏற்றுமதியின் அளவு உற்பத்தித்திறனை பொறுத்தே அமையும். மேலும், அந்நியச் செவாணியைச் சிக்கனமாகப் பயன்படுத்துவதும் அவசிய மாகின்றது. இறக்குமதி செய்யப்படுகின்ற மூலதனப்பொருட் களும், மூலப்பொருட்களும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுதல் வேண்டும். உழைப்பாளர்களுடைய உற்பத்தித் திறனைப் பெருக்கு வதும் நன்மை தருவதாகும். இறக்குமதிப் பொருட்களை உள் நாட்டிலேயே உற்பத்தி செய்வது அந்நியச்செலாவணியை மிச்சம்பிடிக்க உதவும்.

இந்தியாவில் அமைந்திருக்கக் கூடிய 'பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலை' தற்காலிகமானதல்ல. நம்முடைய வெளி

நாட்டு வாணிபத்தின் ஏற்றுமதி, இறக்குமதிகளுக்கு இடையே அமைந்துள்ள இடைவெளியை நீக்குவது அவசியமானதாகும். நாம் வாணிபத் தொடர்பு கொண்டுள்ள நாடுகளோடு ஒப்பந்தங்கள் செய்து கொள்வதின் மூலம் ஏற்றுமதியைப் பெருக்க வாய்ப்பு உண்டு.

மேம்பாடடைந்துவரும் ஒரு பொருளாதாரத்தில் அந்நியச் செலாவணிச் சிக்கல் தோன்றுவது இயல்பானதேயாகும். பொருளாதார முன்னேற்றநிலைகளில் இவ்வித இடர்ப்பாடுகள் ஏற்படுவதுண்டு. தொழில் முன்னேற்றத்தைப் பெற வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் அந்நியச் செலாவணிச் சிக்கலை ஏற்பது தவிர்க்க முடியாதது. பொருளாதாரம் விரைவாக முன்னேற்றமடைய மூலதனப் பொருட்களின் இறக்குமதி தேவைப்படுகின்றது. இதனால், அந்நியச் செலாவணிச்சிக்கல் தோன்றினாலும் விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற வாய்ப்பு ஏற்படுகின்றது.

இந்தியாவில் அந்நியச் செலாவணிச்சிக்கல் குறுகிய காலச் சிக்கலாக அமைந்திருக்கவில்லை. இனி வரும் ஆண்டுகளிலும் இச் சிக்கல் நீடிக்கும் எனக் கருதப்படுகின்றது. இக்காலத்தில் வெளி நாட்டு உதவியைப் பெறுவது அவசியமானதாகும். ஆனால், தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெறுவதும் நம்முடைய நோக்கமாக உள்ளது. இன்னும் பத்து ஆண்டுகளிலாவது முதலீடுகள் அனைத்தும் நம்முடைய உற்பத்தியிலிருந்தே செய்யப்பட வேண்டும். பல துறைகளிலும் உற்பத்தியைக் கூட்டி, சேமிப்பை அதிகரித்து, மூதலீட்டை உயர்வடையச் செய்வது இன்றியமையாததாகும். ஓரளவிற்கு வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுவது தவறாகாது. ஆனால், இனி வரும் ஆண்டுகளில் வெளிநாட்டு உதவியைப் படிப்படியாகக் குறைக்க வேண்டும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்த பிறகு இந்நிலை தோன்ற வாய்ப்புக்கள் உள்ளன. அடிப்படைத் தொழில்களைச் சிறப்பாக வளர்ச்சியடையச் செய்தபிறகு, பிற நாடுகளை நாம் அதிக அளவிற்குச் சார்ந்திருப்பது அவசியமில்லை. நம்முடைய தொழில்களுக்குத் தேவையான மூலப்பொருட்களையும் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய வேண்டும். இவ்வகைப் பொருட்களைப் பெற பிற நாடுகளை நாம் நம்பியிருக்கக் கூடாது.

பாகிஸ்தானின் ஊடுருவல் காரணமாக விளைந்த போரினால் இந்தியா பலவிதமான இன்னல்களையும் ஏற்கவேண்டியிருந்தது. ரூபாய் மதிப்புக்குறைப்பினால் எவ்வித நன்மையையும் பெற முடியவில்லை. எனவே, தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெறுவதே சிறந்த வழி என அப்போது உணரப்பட்டது. நான்காவது

ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்றுமதி முன்னேற்றத்திற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இறக்குமதிப் பொருட்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. வெளிநாட்டு மூலதனமும் ஏற்றுமதியை பெருக்கு வதற்காகவே பயன்படுத்தப்படும். உள்நாட்டில் இறக்குமதிப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களும் நிறுவப்படும். வேளாண்மை, தொழில் ஆகிய இரு பெரும் துறைகளிலும் சிறப்பான வளர்ச்சியைப் பெறுவதின் மூலம் அயல்நாட்டுச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்கலாம்.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றத் தேவை யான மூலதனத்தை உள்நாட்டிலேயே பெருமளவிற்குத் திரட்ட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இதன் மூலமாக உள்நாட்டில் பொருட்களின் விலையுயர்வைக் கட்டுப்படுத்தலாம். பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்திவிட்டால் விரைவான வளர்ச்சி யை எல்லாத் துறைகளிலும் பெறுவது எளிதானதாகும். நான் காவது திட்டக்காலத்தில் வெளிநாட்டு உதவியின் அளவு குறைக் கப்படும். இத்திட்டத்தில் ஏற்றுமதியை ஆண்டுதோன்றும் 7 சத வீதம் அதிகரிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இக்குறியிலக்கு வெற்றி பெற்றால் அந்நியச்செலாவணிச் சிக்கலைத் தீர்ப்பது எளி தாகும். நாம் ஏற்றுமதி செய்யக்கூடிய பொருட்களின் தேவை நெகிழ்ச்சியுடையதாக இருக்க வேண்டும். புதிய பல நுகர் பொருட் களையும் குறைந்த செலவில் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய வேண்டும். அவற்றின் விலை குறைவாகவும், தரம் உயர்வாகவும் இருத்தல் இன்றியமையாததாகும்.

# 21. பொருளாதார முன்னேற்றத்தில் வெளிநாட்டு மூலதனத்தின் பங்கு

## (The Role of Foreign Capital in Economic Development)

வளர்ச்சியடையாத நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்திற்கு மூலதனத்தை இறக்குமதி செய்வதென்பது புதிதானதல்ல. உலகின் வளர்ச்சியடைந்த நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் வெளிநாட்டு மூலதனத்தைச் சார்ந்தே அமைந்திருந்தன. 17, 18-ஆம் நூற்றுண்டுகளில் இங்கிலாந்து வளர்ச்சிப் பணிகளுக்காக ஹாலந்திடம் உதவி பெற்றது. அமெரிக்காவின் வியத்தகு முன்னேற்றம், ஐரோப்பாவின் பணம் 19-ஆம் நூற்றுண்டில் பயன்படுத்தப் பட்டதின் விளைவேயாகும். முன்னேற்றத்தை விரைவாக்க ஐரோப்பியர்களும் அமெரிக்காவிற்குக் குடிபெயர்ந்தார்கள். சோவியத் ரஷ்யாவின் பொருளாதார வளர்ச்சிக்கும் இந்நிலை பொருந்துகிறது. மேற்கு ஐரோப்பா 1890 முதல் 1914 வரை மூலதன அளிப்பைச் செய்தமையால் ரஷ்யப் பொருளாதாரம் வலுப்பெற்று வளர்ந்தது. ரஷ்யப் பொருளாதார முன்னேற்றம் அக்டோபர் புரட்சிக்குப்பின் மிக விரைவாக இருந்ததென்றுலும், அவ்விரைந்த வளர்ச்சியின் தொடக்கம் முதல் உலகப் போருக்கு முன்பாகவே தோன்றிவிட்டது.

பொருளாதார வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் இங்கிலாந்து உட்பட மேற்கு ஐரோப்பிய நாடுகள் குறைந்த அளவே வெளிநாட்டு மூலதனத்தைப் பயன்படுத்தின என்ற கருத்தும் உணர்த்தப் படுகின்றது. ஆனுல், இக்கருத்தைச் சரியானதென ஏற்க முடியாது. உண்மையில் இந்நாடுகள் காலனி நாடுகளைச் சுரண்டி, தங்களுக்குத் தேவையான வசதிகளை அந்நாடுகளின் அனுமதியின்றியே பெற்றன. பணமாகப் பெருமல் பண்டங்களாக இந்நாடுகள் மூலதனத்தைப் பெற்றன என்று கூறுவது பொருந்தும். இந்நிலை பொருளாதார முன்னேற்றத்தைப் பெற அந்நாடுகளுக்கு உதவியது.

உள்நாட்டில் போதுமான சேமிப்பும், முதலீடும் வளர்ச்சி யடையாத நாடுகளில் ஏற்படுவதில்லை. அப்போது பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்த அயல்நாட்டு மூலதனம் பெரிதும் உதவும். இந்தியாவின் தொழில் முன்னேற்றத்திற்கு வெளிநாட்டு மூலதனம் அதிக அளவு உதவியுள்ளது. 19-ஆம் நூற்றுண்டிலும், 20-ஆம் நூற்றுண்டின் தொடக்ககாலத்திலும் முதலீட் டாளர்கள் தொழில்களில் தங்கள் மூலதனத்தை முதலீடு செய்யத் தயங்கினர். சேமிப்பு வீதம் குறைந்த அளவிலும், தொழில் நுணுக்க முன்னேற்றம் ஏற்படாத நிலையிலும் இருந்தமையால் வாணிபம் செய்யவந்த கிழக்கிந்திய கம்பெனியைச் சார்ந்த ஆங்கிலேயர்கள் முதலீடு செய்ய முன்வந்தனர். காபி, தேயிலை, சணல், நிலக்கரி, சர்க்கரை போன்ற பெரிய தொழில்கள் வளர்ந்தமைக்கு ஆங்கிலேயரின் மூலதனமே காரணமாகும்.

1947-ஆம் ஆண்டிற்குப்பின் திட்டங்களை நிறைவேற்ற வெளி நாட்டு மூலதனம் பெறப்பட்டது. வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுமல் எந்த ஒரு வளர்ச்சியடையாத நாடும் விரைவான தொழில் முன்னேற்றத்தைப் பெற இயலாது. எடுத்துக்காட்டாக, இன்றைய வளர்ச்சியடைந்த நாடாகிய சோவியத் ரஷ்யாவையே கூறலாம். ரஷ்யா உலகின் பிற நாடுகளைப்போல பொருளாதார முன்னேற்றத்திற்கு வெளிநாட்டு மூலதனத்தை அதிகம் பயன் படுத்தவில்லை. எனினும், கட்டாயமாக அரசு வேளாண்மைப் பொருட்களைத் திரட்டி ஏற்றுமதி செய்து, அதற்கு ஈடாகத் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான எந்திரங்கள், கருவிகள் போன்றவற்றை இறக்குமதி செய்தது. இவ்வகை எந்திரங்களும், கருவிகளும் மற்றும் பல மூலதனப் பொருள்களும் வெளிநாடுகளில் உற்பத்தி செய்யப்பட்டவையே. இவற்றை இறக்குமதி செய்த ரஷ்யா வெளிநாட்டு மூலதனத்தைத் தொழில் முன்னேற்றத்தைப் பெற இறக்குமதி செய்தது எனலாம்.

பல நன்மைகளையும் கொண்ட வெளிநாட்டு மூலதனத்தை நாட்டின் பொருளாதாரம் வெளிநாட்டவரால் பாதிக்கப்படாமல் பயன்படுத்தலாம். நாட்டின் சுதந்திரநிலை வெளிநாட்டு மூலதனத் தைப் பெறுவதால் எவ்வகையிலும் பாதிக்கப்படக்கூடாது. வளர்ச்சியடையாத நாடுகளின் தொழில் முன்னேற்றத்திற்கு இறக்குமதி மூலதனம் உதவுவதால், அது அந்நாடுகளின் பொருளா தாரங்களில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. மேலும், மேம்பாடடையாத நாடுகளின் முதலீட்டு வீதம் குறை வாக உள்ளது. வெளிநாட்டு முதலீடு இன்றி இந்நாடுகள் தேவை யான மூலதன வசதிகளைப் பெற முடிவதில்லை. அந்நியச்

செலாவணியை அதிகம் ஈட்டமுடியாத நாடுகளாக இவை உள்ளன. ஏனெனில், ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்க இவற்றால் முடிவதில்லை.

முன்னேற்றத்திற்குத் தேவையான அந்நியச் செலாவணியை வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பல வழிகளில் பெறலாம். இறக்குமதிகளைக் குறைத்தும், ஏற்றுமதிகளைப் பெருக்கியும், வெளி நாடுகளிடமிருந்து கடன்களை, கொடைகளைப் பெற்றும் அயலகச் செலாவணியைப் பெறமுடியும். வளர்ச்சியடையாத நாடுகள் இறக்குமதிகளைக் குறைக்கும்போது பணவீக்கநிலை தோன்றலாம். இந்நாடுகளில் ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதி தடை செய்யப்படுகின்றது. ஆனால், இவற்றின் உற்பத்தியை உள்நாட்டில் மேற்கொள்வது அவசியமாகிறது. உள்நாட்டில் நுகர்பொருட் களின் அளவு குறைவாக இருப்பதாலும், அவற்றின் இறக்குமதி குறைக்கப் படுவதாலும் விலையுயர்வு தோன்றுகிறது.

மேம்பாடடைந்துவரும் நாடுகள் ஏற்றுமதியைப் பெருக்கு வதில் பல தடைகளை ஏற்க வேண்டியுள்ளது.

1. முதலாவதாக, அரசின் கொள்கைக்கு ஏற்ப ஏற்றுமதியின் அளவை அதிகரிக்க முடியாது; உலகச் சந்தை நிலையைப் பொறுத்தே அது அமையும். உலகச்சந்தை நிலைகளில் வளர்ச்சியடையாத நாடுகள் குறைந்த செல்வாக்கையே பெற்றுள்ளன. உலகச் சந்தையில் விலைக்குறைவு ஏற்படும்போது ஏற்றுமதியைப் பெருக்க எடுக்கப்படும் எந்த நடவடிக்கையும் வெற்றி தராது.

2. இரண்டாவதாக, ஏற்றுமதியை அதிகரிக்கும் முயற்சிகள் படிப்படியாக நீண்ட காலத்தில் மட்டுமே வெற்றியைப் பெறு கின்றன. ஏற்றுமதியைப் பெருக்குவது தொழிலாளர்களின் திறமை, தொழில்நுணுக்க உற்பத்திமுறை, புதிய தொழில்கள், நிர்வாகத்திறமை, வேளாண்மை உற்பத்தி ஆகியவற்றைச் சார்ந்து அமையும். உழைப்பின் உற்பத்தித்திறனை அதிகரித்தும், உற்பத்திச் செலவைக் குறைத்தும் ஏற்றுமதியின் அளவை அதிகரிக்கலாம். இவ்வித நிலைகள் யாவும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்ற பிறகே ஏற்படுகின்றன. ஆனால், பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பொருளாதார அமைப்பு முறைகளில் மாற்றங்கள் தேவை; மாற்றங்களைப்பெற அந்நியச் செலாவணி அவசியமாகிறது.

3. மூன்றாவதாக, இறக்குமதியைத் தடை செய்வதைவிட ஏற்றுமதி உபரியைப் பெறுவதில் பல இழப்புக்கள் தோன்று கின்றன. உழைப்பை அதிகம் பயன்படுத்தி உற்பத்தியான

பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மேலும், அதிக அளவு மதிப்புள்ள ஏற்றுமதிப் பொருட்களுக்குக் ஈடாக குறைந்த அளவு மதிப்புள்ள பொருட்களையே இறக்குமதி செய்ய முடிகின்றது. ஏற்றுமதி உபரியை மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தலாம். அது உற்பத்தியை உயர்த்த உதவும். ஆனால், ஏற்றுமதி உபரியைப் பெற நுகர்வோர் தங்கள் நுகர்வைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியநிலை ஏற்படு கின்றது. பிறகு அதிக நுகர்வை மேற்கொள்ள, அப்பொழுதுள்ள நுகர்வு குறைக்கப்பட்டு மூலதனப் பொருட்கள் இறக்குமதியா கின்றன. இதை ஒரு வகையில் சேமிப்பு என்றும் கூறலாம்.

4. இறுதியாக, ஏற்றுமதி உபரியே பணவீக்கநிலையைத் தருகிறது. அது பொருட்களின் அளிப்பைக் குறைத்து பணத்தின் அளிப்பை அதிகரிக்கின்றது. எனவே, இதை உள்நாட்டின் அதிகரித்த சேமிப்பிற்கும், வரிகளுக்கும் பதிலியாகக்கொள்ள இயலாது.

## வெளிநாட்டு முதலீட்டின் வகைகள் (Types of Foreign Investment)

வெளிநாட்டு மூலதனத்தை தனியார் மூலதனம் (Private Capital) எனவும், பொது மூலதனம் (Public Capital) எனவும் பிரிக்கலாம். வெளிநாட்டுத் தனியார் மூலதனம் நேரடி, மறைமுக முதலீடுகளாகச் செய்யப்படலாம்.

நேரடி முதலீட்டைச் செய்கின்ற வெளிநாட்டு நிறுவனங்கள், முதலீட்டைப் பெற்ற நாட்டில் அம்முதலீட்டினால் ஏற்பட்ட சொத்துக்களின் மீது கட்டுப்பாட்டைக் கொண்டுள்ளன. நேரடி முதலீடுகள் பலவழிகளில் செய்யப்படலாம். முதலீடு செய்கின்ற வெளிநாட்டு நிறுவனத்தின் கிளை நிறுவனமாக அது அமையலாம். ஒரு நிறுவனத்தைத் தொடங்கும்போது முதலீடு செய்கின்ற நாடு அதிக முலதனத்தைச் செலுத்துவதாக அமையலாம். முதலீட்டைச் செய்கின்ற நாட்டின் நிறுவனம் முழு நிதியையும் அளித்து ஒரு நிறுவனத்தை வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுகின்ற நாட்டில் அமைக்கலாம். சில தனிப்பட்ட நோக்கங்களுக்காக முதலீட்டைப் பெறும் நாட்டில் கழகங்களும் (Corporations) அமைக்கப்படு கின்றன முதலீடு செய்கின்ற நாடுகள் இக்கழகங்களை அழைக் கின்றன. முதலீட்டைச் செய்கின்ற நாட்டவர் நிரந்தரமான சொத்துக்களையும் முதலீடு செய்யப்படுகின்ற நாடுகளில் ஏற்படுத் திக்கொள்ளலாம்.

மாற்றத்தக்கக் கடன் பத்திரங்களைக் கொண்டும் மறைமுக முதலீடுகள செய்யபபடுகின்றன. முதலீட்டைப் பெறுகின்ற

நாட்டின் அரசே இப்பத்திரங்களை வெளியிடலாம் ; அல்லது வெளியிடப்படுகின்ற பத்திரங்களுக்கு உறுதியளிக்கலாம். பங்குகளையும், பாதுகாப்பான கடன் பத்திரங்களையும் வெளிநாட்டு மூலதனத்தைப் பெற விற்பனை செய்யலாம். பங்குகளையும், கடன் பத்திரங்களையும் கொண்டிருந்தாலும் நிறுவனத்தைக் கட்டுப்படுத்த முடியாது. பங்குதாரர்கள் இலாபத்தில் பங்கு பெறும் உரிமையை மட்டுமே பெற்றவராவர்.

சமீப காலங்களில் 'பலமுக மறைமுக முதலீடுகள்' (Multilateral Indirect Investments) செய்யப்பட்டு வருகின்றன. வளர்ச்சியடையாத நாட்டின் ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்கு நிதியைப் பெற 'பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி' (International Bank for Reconstruction and Development) கடன் பத்திரங்களை விற்று உதவுகின்றது. இந்தியாவில் 'பொது வெளிநாட்டு மூலதனம்' (Public Foreign Capital) கீழ்க்கண்ட பலவழிகளில் பெறப்படுகிறது:

(i) 'இருமுக அரிமைக் கடன்கள்' (Bilateral Hard Loans): இது ஆங்கில அரசால் இந்திய அரசுக்கு பவுன் கடன்கள் அளிப்பதைக் குறிக்கும்.

(ii) 'இருமுக இலக்குக் கடன்' (Bilateral Soft Loans): அமெரிக்கா பொதுச்சட்டம் 480 (Public Law 480)-இன் கீழ் இந்தியாவிற்கு உணவுத் தானியங்களை விற்பனை செய்வது இதற்கு உதாரணமாக அமைகிறது.

(iii) 'பலமுகக் கடன்கள்' (Multilateral Loans): கொழும்புத் திட்டம்' (Colombo Plan), 'இந்திய உதவி இணைப்பு' (Aid India Club) போன்றவற்றின் உறுப்பு நாடுகள் கடனளிக்கின்றன. இப்பிரிவில் ஐக்கிய நாடுகளின் கடனளிக்கும் நிறுவனங்களையும் சேர்க்கலாம். 'உலகவங்கி' (IBRD), 'பன்னாட்டு நிதிக் கார்பொரேஷன்' (International Finance Corporation), 'பன்னாட்டு, வளர்ச்சி சங்கம்' (International Development Association) 'பொருளாதார வளர்ச்சிக்கான ஐக்கிய நாடுகளின் சிறப்பு நிதி', (SUNFED–Special United Nations Fund for Economic Development), 'ஐக்கிய நாடுகளின் தொழில் நுணுக்க உதவிக்கான விரிவாக்கத்திட்டம்' (UNEPTA-United Nations Enlarged Programme of Technical Assistance) ஆகியவையும் இப்பிரிவில் அடங்குவதாகும்.

கடந்த 10 ஆண்டுகளில் சுமார் 80 பில்லியன் டாலர் வெளிநாட்டு மூலதனமாக வளர்ச்சியடையாத நாடுகளுக்குச் சென்றது.

இதில் சுமார் 30 பில்லியன் டாலர் தனியார் வெளிநாட்டு மூலதனமாக அமைந்திருந்தது.

### வெளிநாட்டு மூலதனத்தின் முக்கியத்துவம்

உள்நாட்டில் போதுமான சேமிப்பு ஏற்படாமையாலும், குறைந்த அளவு சேமிப்பும் முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படாத நிலையாலும் அயல்நாட்டு மூலதனம் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப்பெற இன்றியமையாதது. நாட்டைத் தொழில் மயமாக்க வெளிநாட்டு மூலதனம் உதவுகின்றது. அது அதிக அளவு வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்தித் தருகின்றது. சமுதாயத்தின் அவசிய வசதிகளுக்கான முதலீட்டிற்கும் வெளிநாட்டு மூலதனம் வகை செய்கின்றது. இருப்புப்பாதை, சாலைப் போக்குவரத்துக்களை வளர்க்கவும், கால்வாய்கள் வெட்டவும், மின்சாரத்திட்டங்களை ஏற்படுத்தவும் அது உதவுகிறது; இவற்றில் விரைவான முன்னேற்றத்தைப் பெற உதவுவது வெளிநாட்டு மூலதனமே.

வெளிநாட்டு மூலதனம் பணத்தையும், எந்திரச் சாதனங்களையும் மட்டும் அளிக்காமல் உற்பத்தி முறைகளில் தொழில் நுணுக்கங்களையும் புகுத்த உதவுகின்றது. வெளிநாட்டு மூலதனத்தைக் கொண்டு பயன்படுத்தப்படாத இயற்கை வளங்களை ஆக்கத்தை உயர்த்தப் பயன்படுத்தலாம். வளர்ச்சியடையாத நாட்டின் பகுதிகளை இதன் மூலம் வளர்ச்சியடையச் செய்யலாம்.

தொழில்களை முதலில் தொடங்கும்போது தோன்றக்கூடிய இடர்களும், இழப்புக்களும் வெளிநாட்டு மூலதனத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. உள்நாட்டுத் தொழில் நிறுவனங்கள் வெளிநாட்டு நிறுவனங்களோடு இணையவும் அது வாய்ப்பை ஏற்படுத்தித் தருகிறது; அயல்நாட்டுப் பாதகச் செலுத்துநிலையைச் சமாளிக்கவும் உதவுகிறது; கச்சாப் பொருட்கள், உணவுப் பொருட்கள், மூலதனப் பொருட்கள் ஆகியவற்றை இறக்குமதி செய்யத் தேவையான அந்நியச்செலாவணியையும் அளிக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்கு வெளிநாட்டு மூலதனம் பயனை அளிக்கிறது. வெளிநாட்டு மூலதனத்தைப் பயன்படுத்தாவிடில் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் டணவீக்கம் தோன்றி மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் பாதிக்கப்படும். வெளிநாட்டு மூலதனம் ஒரு நாட்டின் பொதுத்துறையையும், தனியார் துறையையும் வலுப்படுத்துகின்றது. வளர்ச்சியடைந்த புதுமையான சமுதாயத்தை உருவாக்குவதில் வெளிநாட்டு மூலதனத்திற்குப் பெரும் பங்கு உண்டு.

**வெளிநாட்டு மூலதனத்தினுல் ஏற்படும் நன்மைகள்**

இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, பர்மா, மற்றும் சில வளர்ச்சியடையாத தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் வெளிநாட்டு மூலதனம் சிறப்புமிக்க பல நன்மைகளைத் தருகின்றது :

(1) உள்நாட்டில் மூலதனத் திரட்சியை வெளிநாட்டு மூலதனம் ஏற்படுத்துகிறது. சேமிப்பு விகிதம் நாளடைவில் வளரத் தொடங்குகிறது. வெளிநாட்டு மூலதனத்தால் கிடைக்கப் பெற்ற இலாபத்தின் ஒரு பகுதி உள்நாட்டிற்கே கிடைப்பதால் சேமிக்கும் திறன் மக்களிடையே பெருகுகின்றது.

(2) வெளிநாட்டு மூலதனம் என்பது பிற நாடுகளிடமிருந்து பணத்தை மட்டும் பெறுவதாகாது. புதிய தொழில் முறைகள், விஞ்ஞானக் கருத்துக்கள், நிர்வாகத் திறமை, தொழில்நுட்ப அறிவு போன்றவையும் இறக்குமதி செய்யப்படுகின்றன.

(3) தொழில்களைத் தொடங்கும்போது ஏற்படக்கூடிய இழப்புக்களை வெளிநாட்டு மூலதனம் ஏற்கின்றது. தொழில்கள் வளர்ச்சியடைந்த பிறகு உள்நாட்டு மூலதனமும் அதோடு சேர்க்கப்படலாம்.

(4) வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் சேமிப்பு விகிதம் குறைவாகவே இருக்கும். இந்நாடுகளில் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான மூலதனத்திரட்சி ஏற்படாமையால் வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுவது அவசியமாகின்றது.

(5) பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான சில அடிப்படை வசதிகள் பெருக வேண்டும். போக்குவரத்து வசதிகள், நீர்ப்பாசனம், மருத்துவ வசதி, செய்தித்தொடர்பு வசதி, மின்சார உற்பத்தி போன்றவற்றை மேம்படுத்த அதிக மூலதனம் தேவைப்படுகிறது. வளர்ச்சியடையாத நாடுகளில் அதிக மூலதனத்தை நீண்ட காலத்தில் மட்டுமே கடினமான வழிமுறைகளைப் பின்பற்றி திரட்டமுடியும். ஆனுல், வெளிநாட்டு மூலதனத்தின் பயனுல் இவற்றின் முன்னேற்றத்திற்கான திட்டங்களை உடனடியாக மேற்கொள்ளலாம்.

(6) நாட்டின் செல்வங்களைப் பெருக்கவும் வெளிநாட்டு மூலதனம் உதவும். ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் இந்தியாவின் இருப்புப் பாதை போக்குவரத்து வெளி நாட்டு மூலதனத்தால் அமைக்கப்பட்டது. பல அணைத் திட்டங்கள், மின்விசைத் திட்டங்கள், பெரியதொழில்கள், அடிப்படைத் தொழில்கள் ஆகியவற்றைத் தொடங்குவற்கு வெளிநாட்டு மூலதனம் பயன்படுத்தப்பட்டது.

நம் நாட்டின் உற்பத்தியைப் பெருக்க உதவும் சாதனங்களாக, நாட்டின் செல்வங்களாக அவை திகழ்கின்றன.

(7) மேம்பாடடைந்துவரும் நாடுகளில் மக்கட்தொகைப் பெருக்கம் அதிகமாக இருப்பதோடு, பெரும்பகுதி மக்கட் தொகை மிகக்குறைந்த வருவாயை மட்டுமே பெறுகின்றது. இந்நாடுகளின் அரசுகள் புதிய வரிவிதிப்புகளைச் செய்வது கடின மாகின்றது ; பழைய வரி வீதங்களை உயர்த்துவதும் முடியாத நிலை யைக் கொண்டிருக்கின்றது. தொழில் முன்னேற்றத்திற்குத் தேவை யான நிதியை வரிவிதிப்பின் மூலம் பெறமுடிவதில்லை.

வெளிநாட்டு மூலதனத்தில் இவ்வித நன்மைகளைத்தவிர சில தீமைகளும் அமைந்துள்ளன.

வெளிநாட்டு மூலதனத்தினுல் ஏற்படக்கூடிய தீய விளைவுகள்

(1) மூலதனத்தைப் பெறுகின்ற நாட்டின் வளங்கள் மூல தனத்தை அளிக்கின்ற நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத் தப்படலாம். சுதந்திரமடைவதற்கு முன் இந்தியாவில் ஆங்கிலே யர்கள் இருப்புப்பாதைகளை அமைத்தது இலாப நோக்கோடு ஆகும். நம் நாட்டின் கச்சாப்பொருட்கள் இங்கிலாந்தின் தொழில் உற்பத்திக்காகப் பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு இந்தியா போன்ற பல காலனி நாடுகளின் வளங்கள் காலனி ஆதிக் கத்தைக் கொண்டு இருந்த நாடுகளின் நன்மைக்கே பயனளித்தன.

(2) வெளிநாட்டு மூலதனத்தை ஏற்றுக்கொள்ளும் நிலை யால் ஒரு நாட்டின் சுதந்திரம் பாதிக்கப்படலாம். தொழில் துறை யில் செல்வாக்கைப் பெற்று அரசியலைக் கைப்பற்ற ஒரு நாடு முயற்சி செய்யலாம். சுதந்திரமான பொருளாதாரக் கொள்கை களைப் பின்பற்றுவதும் கடினமாக இருக்கக்கூடும்.

(3) பாதுகாப்புத் தொழில்கள் (Defence Industries), முக்கியத் தொழில்கள் (Key Industries) ஆகியவற்றில் அயல் நாட்டு மூலதனத்தைப் பயன்படுத்துவது பல இடர்களைத் தோற்று விக்கும். நாட்டின் பொருளாதார வளர்ச்சியை எதிர்காலத்தில் குன்றச் செய்துவிடும்.

(4) வெளிநாட்டு முதலீட்டாளர்கள் உள்நாட்டில் தொழில் கள் வளர்வதைப் பல வழிகளிலும் தடுப்பார்கள். தங்கள் தொழில் நிறுவனங்களின் முன்னேற்றம் பாதிக்கப்படுமெனக் கருதி பல இடையூறுகளைப் புதிதாகத் தோன்றும் தொழில் நிறுவனங்களுக்குத் தருவார்கள்.

(5) வெளிநாட்டு மூலதனத்தைக் கொண்ட நிறுவனங்களில் சிறந்த வேலைவாய்ப்புக்கள் வெளிநாட்டவருக்கே அளிக்கப்படுகின்றன. உள்நாட்டில் உழைப்பாளரின் உற்பத்தித்திறனை உயர்த்துவதிலோ, தொழில்நுட்ப அறிவைப் பரப்புவதிலோ, உழைப்பாளரின் திறமையை வளர்ப்பதிலோ வெளிநாட்டு நிறுவனங்கள் அதிக ஆர்வம் கொள்வதில்லை. தொழில் இரகசியங்கள் காக்கப்படுகின்றன. அந்நிறுவனங்கள் இலாப நோக்கோடு செயல்படுபவைகளாகும். முதலீடு செய்யப்பட்டுள்ள நாட்டின் பொருளாதார முன்னேற்றம் அவற்றின் எண்ணமாக அமைவதில்லை.

இவ்விதக் குறைபாடுகளும் வெளிநாட்டு மூலதனத்தில் உள்ளன. பொருளாதாரக்கொள்கைகள் எல்லாவற்றிலுமே நன்மை தீமைகள் அமைந்துள்ளன. வெளிநாட்டு மூலதனத்தில் உள்ள நன்மைகள் பலவாக இருப்பதாலும், வேறு வழிகளில் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான நிதிவசதியைப் பெற இயலாத காரணத்தாலும், வளர்ச்சியடையாத நாடுகளில் வெளிநாட்டு மூலதனம் முக்கிய நிலையைக் கொண்டுள்ளது.

## வெளிநாட்டுத் தனியார் முதலீடு (Private Foreign Investment)

### I. வெளிநாட்டுத் தனியார் முதலீட்டின் தன்மை

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிநாட்டுத் தனியார் மூலதனம் ஐரோப்பாவினின்றும் பின்தங்கிய நாடுகளுக்கு மறைமுக முதலீடுகளாகச் செய்யப்பட்டது. குறைந்த வருவாய் கொண்ட அந்நாடுகளில் 1920 முதல் 1930 வரை நேரடி முதலீடுகள் ஏற்றுமதி உற்பத்திக்காகவே பெரிதும் பயன்படுத்தப் பட்டன. உள்நாட்டுச் சந்தைக்கான உற்பத்தியைச் செய்ய இம் மூலதனம் அதிக அளவு அளிக்கப்படவில்லை. ஆனால், இரண்டாவது உலகப்போருக்குப்பின் தனியார் முதலீட்டில் 50 சதவீதத்திற்கு மேல் நேரடியாகவே செய்யப்பட்டன. நேரடித் தனியார் முதலீடு மூலப்பொருட்களாகிய இரும்புக்கனி, பண்படாத எண்ணெய், மாங்கனீசு, நிலக்கரி, செம்பு போன்றவைகளின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்டது. மின்சார உற்பத்திக்கும் வெளிநாட்டு மூலதனம் நேரடியாக முதலீடாக்கப்பட்டது. மிகக்குறைந்த அளவிற்கு மட்டுமே தொழில் உற்பத்திக்கும், பகிர்வுக்கும் நேரடித் தனியார் மூலதனம் கிடைத்தது.

ஒரு நாட்டின் பொருளாதாரம் ஓரளவு வளர்ந்த பிறகே வெளிநாட்டவர் நேரடியாகத் தங்கள் மூலதனத்தை நுகர்

பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் முதலீடாக்க முன் வருகின்றனர். தொழில்மயமான நாட்டிலும், விரிவான சந்தை உள்ள நாட்டிலும் நேரடித் தனியார் முதலீடு நுகர்பொருட்களின் உற்பத்திக்காகச் செய்யப்படுகிறது. இன்றும் வளர்ச்சியடையாத நாடுகள் ஏற்றுமதி செய்யக்கூடிய பாரம்பரியப் பொருட்களின் உற்பத்திக்காகவே வெளிநாட்டுத் தனியார் முதலீடு செய்கின்றனர். மிகப் பழங்காலந்தொட்டே இருந்துவந்த இந்நிலையில் பெரிய மாற்றம் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. 1960-ஆம் ஆண்டிற்கும், 1965-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 'பொருளாதாரக் கூட்டுறவு, முன்னேற்ற அமைப்பு' (OECD-Organization for Economic Co-operation and Development) நாடுகளின் (ஜப்பான் உட்பட) எல்லாவகை நிகரத் தனியார் மூலதனம் 3,160 மில்லியன் டாலரில் இருந்து 4,233 மில்லியன் டாலராக உயர்ந்தது.

## II. நேரடித் தனியார் முதலீட்டின் நன்மைகள்

மறைமுகத் தனியார் முதலீட்டைவிட நேரடி வெளிநாட்டுத் தனியார் முதலீடு சில தனிச் சிறப்பியல்புகளைக் கொண்டுள்ளது. எனவே, நேரடி முதலீட்டிற்கே முதல் முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது.

1. வெளிநாட்டு முதலீடு நேரடியாகச் செய்யப்படும்போது முன்னேற்ற விஞ்ஞானம், தொழில்நுட்பம், புதுமையான அமைப்புமுறை ஆகிய யாவும் வளர்ச்சியடையாத நாடுகளில் வளரத் தொடங்குகின்றன.

2. நேரடி முதலீடுகளைப் பெறுகின்ற ஒரு மேம்பாடடைந்து வரும் நாட்டின் தொழில் முயல்வோர் பின்தங்கிய நாடுகளில் முதலீடு செய்யத் தூண்டப்படுகின்றனர். சான்றாக, இந்தியத் தொழில் நிறுவனங்கள் வெளிநாட்டு மூலதனத்தைப் பெற்று வந்தாலும், அவை கென்யா, உகாண்டா, நேபாளம், எதியோப்பியா போன்ற நாடுகளில் முதலீடு செய்து வருகின்றன. வெளிநாட்டு மூலதனத்தைப் பெறும் ஒரு நிறுவனம் பொருளாதார ரீதியில் பல வசதிகளையும் பெற்றுவிடுவதால், வெளிநாடுகளில்கூட அதனால் முதலீடு செய்ய முடிகிறது.

3. நேரடி வெளிநாட்டு மூலதனத்தைப் பெற்ற நிறுவனம் பல துணைத்தொழில்களைத் தோற்றுவிக்கும் திறனைப் பெற்றுவிடுகின்றது. பிறநாட்டுத் தொழில் நிறுவனங்களோடு இணையவும் அதற்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. வெளிநாட்டு மூலதனத்தைக் கொண்ட நிறுவனம் உள்நாட்டு நிறுவனத்திற்கு இரு வழிகளில் ஊக்கமளிக்கின்றது : நேரடியாக பயிற்சி, அனுபவம், பணம், உழைப்பு ஆகியவற்றை நன்கு பயன்படுத்தி உள்நாட்டு நிறுவனத்

தின் வளர்ச்சியை விரைவுபடுத்துகின்றது. மறைமுகமாக போக்குவரத்து, வாணிபம் போன்ற துணைப்பணிகளை மேற்கொள்வதும் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகின்றது. வெளிநாட்டு நிறுவனங்கள் இவற்றை மேம்படுத்துகின்றன. இவ்வசதிகளை உள்நாட்டு நிறுவனங்களும் பயன்படுத்திக் கொள்கின்றன.

4. மறைமுக வெளிநாட்டு முதலீட்டைக் காட்டிலும் நேர்முக வெளிநாட்டு முதலீடு அதிக மூலதனத்தைத் தரத்தக்கது. இம்முதலீடுகளில் இலாபங்களின் பெரும்பகுதி வேறு பல தொடர்புடைய தொழில்களின் முன்னேற்றத்திற்கும், விரிவாக்கப் பணிகளுக்கும் பயன்படுத்தப்படுகின்றது. பல நிறுவனங்கள் புதுமைப்படுத்தப்படுகின்றன. மறைமுக வெளிநாட்டு முதலீடு குறைந்த அளவு மூலதனத்தையே அளிக்க வல்லது.

5. நேரடி வெளிநாட்டு மூலதனம் சிறப்பான ஆக்கத்தைப் பெருக்கத்தக்க துறைகளில் முதலீடு செய்யப்படுகின்றது. எனவே, கடன்பெறும் நாட்டின் உற்பத்தித்திறன் இதனால் உயர்வடைகிறது. உயர்ந்த உற்பத்தியைப் பெற்றபின் உள்நாட்டின் தொழில்கள் வெளிநாட்டு மூலதனம் இன்றியே தொடங்கப்படலாம்.

6. அயல்நாட்டுச் செலுத்துநிலையிலும் அதிகச் சுமையை நேரடி வெளிநாட்டு மூலதனம் ஏற்படுத்துவதில்லை. உள்நாட்டுத் தொழில்மந்த காலங்களில் தொழில் நிறுவனங்களின் இலாபம் குறைந்துவிட்டால் குறைந்த அளவு இலாபத்தின் பங்குத் தொகையே வெளிநாட்டு நேரடி முதலீட்டாளர்களால் பெறப்படுகின்றது. ஆனால், மறைமுக வெளிநாட்டு மூலதனத்திற்கு குறிப்பிட்ட தொகையானது (நிறுவனங்களின் இலாபம் குறைவடைந்த போதும்) அளிக்கவேண்டியது அவசியமாகிறது. இந்நிலையால் பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலை தோன்ற வாய்ப்பு உண்டு.

7. வளர்ச்சியடையாத நாடுகளில் புதிய தொழில் நிறுவனங்களைத் தொடங்கி இலாபத்தைப் பெற நீண்டகாலம் பிடிக்கின்றது. மேலும், தொடக்கக்கால உற்பத்தி நிலைகளில் குறைந்த அளவு இலாபத்தையே பெற இயலும். எனவே, நேரடி வெளிநாட்டு மூலதனத்திற்கு இலாபத்திற்குத் தக்கவாறு பங்குத்தொகை பெறப்படுகின்றது. மறைமுக வெளிநாட்டு மூலதனத்திற்கு இலாபமே பெறப்படாவிட்டாலும், குறிப்பிட்ட தொகையானது கொடுக்கப்பட்டே ஆகவேண்டும். இதனால் வளர்ச்சியடைந்துவரும் தொடக்க நிலைகளில் மறைமுக வெளிநாட்டு முதலீடுகள் பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையை மேலும் வலுப்படுத்துகின்றன.

8. பொதுவாக, வெளிநாட்டு முதலீடு நேரடியாகச் செய்யப்படும் துறைகள் வேளாண்மையும், மூலப்பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களும் ஆகும். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் இவ்வகைப் பொருட்களே ஏற்றுமதி செய்யப்படுவதால் அயல் நாட்டுச் செலுத்துநிலை பாதிக்கப்படுவதில்லை. வெளிநாட்டு நேரடி முதலீடுகள் வளர்ச்சியடையாத நாடுகளின் ஏற்றுமதித் துறைகளிலேயே செய்யப்படுகின்றன. இந்தியா போன்ற மேம்பாடு அடைந்துவரும் நாடுகளில் வெளிநாட்டு வாணிபத்தைச் சாதகமாக்க, அல்லது பாதகமில்லாமல் பாதுகாக்க நேரடி வெளி நாட்டு மூலதனம் உதவுகிறது. சிலவகை பொறிசெய்ப் பொருட்களும் உள்நாட்டு நுகர்வுக்காக உற்பத்தி செய்யப்படுகின்றன. அவை அயல்நாட்டுச் சந்தைகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

ஆனால், மறைமுக வெளிநாட்டு முதலீடுகள் குறைந்த அளவு வட்டி வீதங்களைக் கொண்டவைகளாகும். இதன் மூலம் அதிக உற்பத்தியைப் பெற்று இலாபத்தை அதிகரிக்க வேண்டுமென்ற ஊக்கமானது தோன்றும். மேலும், பெறப்பட்ட மறைமுக வெளி நாட்டு மூலதனத்திற்கு, குறிப்பிட்ட தொகை நட்டத்தை அடையும்போதும் தரப்படவேண்டுமாதலால், இவ்வகை மூலதனம் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறதெனலாம். எனினும், நேரடி வெளிநாட்டு மூலதனமே மறைமுக வெளிநாட்டு மூலதனத்தைக்காட்டிலும் பல நன்மைகளை வளர்ச்சியடையாத ஒரு நாட்டிற்கு அளிக்க முடியும்.

## III. வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுவதில் உள்ள தடைகள்

வெளிநாட்டுத் தனியார் முதலீட்டைப் பெறுவதில் சில காரணிகள் இடையூறாக உள்ளன. வளர்ச்சியடையாத நாடுகளில் பொருளாதாரத் தடைகள் இருப்பதோடு அரசியல், பண்பாட்டுத் தடைகளும் உள்ளன. அவ்விதத் தடைகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம்:

(1) விரிவு அடையாத உள்நாட்டுச்சந்தை மூலதனத்திற்கான இலாபத்தை அதிக அளவு அளிப்பதில்லை.

(2) இலாபத்தை வெளிநாட்டுத் தனிமுதலீட்டாளர்கள் பெறுவதிலும் தடைகள் விதிக்கப்படுகின்றன. மூலதனத்தையும், இலாபத்தையும் முற்றிலும் மறுக்கக்கூடிய வாய்ப்பும் உண்டு. இவ்வித இடர்கள் இருப்பதால் வெளிநாட்டு முதலீட்டாளர்கள் வளர்ச்சியடையாத நாடுகளில் முதலீடு செய்யத் தயங்குகின்றனர்.

(3) போக்குவரத்து, மின்சாரம், செய்தித்தொடர்பு போன்ற அவசிய அடிப்படை வசதிகளும் முன்னேறாத நிலையில் உள்ளன. கடன் முறையும், வங்கிகளின் வளர்ச்சியும் மேம்பாடடைந்துவரும் நாடுகளில் சிறப்பாக முன்னேற்றமடைந்திருப்பதில்லை. இந்நிலைகளாலும் வெளிநாட்டு மூலதனம் தேவையான அளவிற்கு வளர்ச்சியடையாத நாடுகளில் கிடைப்பதில்லை.

(4) வெளிநாட்டு நிறுவனங்களின் வருவாய்க்கு உச்சவரம்பு விதிக்கப்படுகின்றது. நாட்டின் நலனைக் கருதி இலாபத்தின்மீது தனிப்பட்ட அதிக வரி விதிக்கப்படுகின்றது. அரசு அயல்நாட்டுத் தொழில் நிறுவனங்களைத் தீவிரமாகக் கட்டுப்படுத்துகின்றது. உள்நாட்டு உழைப்பாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதையும், நிர்வாகிகளுக்கு நிர்வாகத் திறமைபெற பயிற்சி அளிக்கவும் அரசு அந்நிறுவனங்களைக் கட்டாயப்படுத்துகின்றது. இவ்வித இடர்ப்பாடுகள் அமைந்திருப்பதாலும் வெளிநாட்டவர்கள் தங்கள் மூலதனத்தை முதலீடாக்கத் தயங்குகின்றனர்.

(5) வளர்ச்சியடையாத நாடுகளில் சில தொழில்கள் உள்நாட்டு நிறுவனங்களுக்காக ஒதுக்கப்படுகின்றன. பல உலகநாடுகளும் சமதர்மக் கொள்கையைப் பின்பற்றியே பொருளாதார முன்னேற்றத்தைப் பெற விழைகின்றன. உள்நாட்டுத் தனியார் நிறுவனங்கள் படிப்படியாக தேசிய உடைமையாக்கப்படுகின்றன. வெளிநாட்டு முதலீட்டாளர்கள் தங்கள் நிறுவனங்களும் நாட்டுடைமையாக்கப்படும் என்ற அச்சத்தைக் கொள்கின்றனர். தேசிய உடைமையாக்கப்படுமென்ற அச்சம் உள்ள நாட்டில் வெளிநாட்டு முதலீடு அதிகம் இருக்காது. அமைந்திருக்கக்கூடிய வெளிநாட்டு மூலதனமும் முதலீட்டாளர்களால் திரும்பப் பெறப்பட்டு, தேசிய உடைமையாக்கப்படுமென்ற அச்சம் இல்லாத நாடுகளில் முதலீடாக்கப் படுகின்றது. இதனால், வளர்ச்சியடையாத நாடுகளில் 'மூலதன வெளியேற்றம்' (Capital Flight) ஏற்பட வாய்ப்பு உண்டு. ஆப்பிரிக்கா, இலத்தீன் அமெரிக்கா, மேற்கு ஆசியா மற்றும் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் பல வெளிநாட்டுத் தொழில் நிறுவனங்கள் தேசிய உடைமையாக்கப்பட்டாமை வெளிநாட்டு முதலீட்டாளர்களுக்குத் தீக்கனவாக அமைகின்றது.

(6) அயலகச் செலாவணிக் கட்டுப்பாடுகள் தீவிரமாகச் செயல்படுத்தப் படுவதால் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்திற்கு அதிக இலாபத்தொகை கிடைப்பதில்லை. தொழில் நிறுவனங்களின் நிர்வாகம் இதனால் பாதிக்கப்படுகின்றது. வெளிநாட்டு நிறுவனங்கள் தங்களுக்குத் தேவையான மூலதனப் பொருட்களையும் உடனடியாகப் பெறமுடிவதில்லை.

(7) உள்நாட்டு நீதிமன்றங்களும், வெளிநாட்டு நீதிமன்றங்களும் சட்ட முறைகளில் வேறுபடுகின்றன. வெளிநாட்டு முதலீட்டாளர்கள் சிலவற்றைப் புரிந்து கொள்ள இயலாமல் போய் விடுகின்றது.

(8) அரசியல், பொருளாதார நிலைகளில் உறுதியற்ற தன்மை அமைந்துள்ளது சீனு, சோவியத் ரஷ்யா போன்ற பொதுவுடைமை நாடுகளின் செல்வாக்கு இன்று வளர்ச்சியடையாத நாடுகளில் மிகுதியாக உள்ளது. இது உறுதியற்ற நிலையை உணர்த்துவதாக முதலீட்டாளர்கள் கருதுகின்றனர். இதனுல், நம்பிக்கையின்மை வெளிநாட்டு மூலதனத்தை அளிப்பவர்களிடம் தோன்றுகின்றது. வளர்ச்சியடையாத நாடுகள் பல உற்பத்தி நிறுவனங்களையும் நாட்டுடைமை ஆக்குவதில் தவறு ஏதும் கிடையாது. தனியார் துறைக்கு அதிக முக்கியத்துவம் அளித்தால் செல்வ, வருமானப் பங்கீடுகளில் சமநிலையை என்றுமே காண முடியாது. முன்னேற்றமடைந்த நாடுகளுக்கு உதவும் முதலாளித்துவக் கொள்கை, பின்தங்கிய நாடுகளில் எவ்வித நன்மையையும் எல்லா மக்களுக்கும் அளித்துவிட இயலாது.

இவ்விதக் காரணங்களால், வளர்ச்சியடையாத நாடுகளில் தனியார் வெளிநாட்டு மூலதனம் அதிக முக்கியத்துவத்தைக் கொண்டிருப்பதில்லை. வெளிநாடுகளின் அரசுகளால் அளிக்கப்படுகின்ற மூலதனமே அதிக அளவு பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுகிறது.

## IV. வெளிநாட்டுத் தனியார் முதலீடு பற்றிய மதிப்பீடு

வளர்ச்சியடையாத நாடுகள் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தில் கட்டுப்பாடுகளைப் பின்பற்றுவது தவருகாது. ஆப்பிரிக்க, ஆசிய, இலத்தீன் அமெரிக்க நாடுகளின் தேசிய உணர்வையே அவை பின்பற்றும் தேசிய உடைமையாக்கும் கொள்கைகள் உணர்த்துகின்றன. அரசியல் ஆதிக்கத்தின் மூலம் பொருளாதாரச் சுரண்டல்கள் ஏற்படுமென்ற அச்சத்திஞல், இன்றைய பின்தங்கிய நாடுகள் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை அதிகம் விரும்புவதில்லை. பல நாடுகளின் பொருளாதார வரலாறுகளும் இதையே தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன. 18-ஆம் நூற்றூண்டில், பெரும்பாலான ஆசிய ஆப்பிரிக்க நாடுகள் (ஜப்பான் தவிர) வெளிநாட்டு மூலதனத்தால் தங்கள் பொருளாதாரச் சுதந்திரத்தையே இழந்துவிட்டநிலை இருந்தது. அவை ஒரு வகையில் காலனி நாடுகளைப் போன்று காட்சியளித்தன என்றும் கூறலாம்.

வெளிநாட்டு மூலதனம், மூலதன இறக்குமதி செய்து கொண்ட நாட்டின் இயற்கை வளங்களைச் சுரண்டி தாய்நாட்டைச் செல்வமுடையதாக்கப் பயன்படுத்தப்பட்டது. நேரடித் தனியார் முதலீடு பல கனிப்பொருட்களின் உற்பத்திக்காகவே செய்யப் பட்டது. பெரிய தொழில்களும், அடிப்படைத் தொழில்களும் வளர்க்கப்படவில்லை. இதனால், பொருளாதாரத்தின் பல துறை களின் வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வுகள் இருந்தன. வெளிநாட்டு மூலதனத்திற்குக் கிடைத்த அதிக அளவு இலாபம் முதலீட்டாளர் களின் சொந்த நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தப் பட்டது. வெளிநாட்டு மூலதனத்தைப் பெற்ற நாட்டில் உண்மை யான வளர்ச்சி பெறப்படவில்லை. கடனைப் பெற்ற நாடுகள் பெரு மளவில் நன்மைகளைப் பெற்றன எனக் கூற இயலாது. இக்காரணங் களால் வளர்ச்சியடையாத நாடுகள் வெளிநாட்டுத் தனியார் மூல தனத்தில் அதிக ஈடுபாடு கொள்வதில்லை. இந்தியாவில் இவ்வுணர்வு சுதந்திரமடைவதற்கு முன்பே தோன்றிவிட்டது. கிழக்கிந்தியக் கம்பெனியின் தோற்றம் அரசியல் சுதந்திரத்தை இழக்கச் செய்ததுபோல, பொருளாதாரச் சுதந்திரத்தையும் இழக்கச் செய்துவிடும் என உணரப்பட்டது. 1942-ஆம் ஆண்டிலேயே மகாத்மா காந்தி எழுதியதாவது, "அமெரிக்க உதவி என்பது என்னவென்று எங்களுக்குத் தெரியும். ஆங்கில ஆட்சியோடு அமெரிக்க ஆட்சியும் ஏற்படுமெனக் கூறயியலாவிட்டாலும், இறுதி யில் அமெரிக்கச் செல்வாக்கை இங்கு ஏற்படுத்திவிடும்"[1] என் பதாகும்.

இவ்வாறு வெளிநாட்டுத் தனியார் முதலீட்டை மிகப்பழங் காலம் முதற்கொண்டு இன்றுவரை வளர்ச்சியடையாத நாடுகள் அதிக அளவு விரும்புவதில்லை. இரண்டாவது உலகப்போர் முடிந்த பிறகு வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தின் செல்வாக்கு மிகவும் தாழ்ந்து விட்டது. இதுபற்றி பேராசிரியர் லூயிஸ் எழுதுவதாவது, "வளர்ச்சியடையாத நாடுகள் வெளிநாட்டு மூலனத்தைப் பெறு வதில் தேவையில்லாத எச்சரிக்கையைக் கொண்டுள்ளன. ஐக்கிய நாடுகள் அதிக நிதிநிறுவனங்களைத் தோற்றுவித்து, மூலதனத்தைச் செலுத்தி அதன் மூலம் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு நிதி வசதியை அளிக்கலாம். இதனால், எந்த ஒரு நாடும் மூலதனத்திற் காக பெரிய நாடுகளைச் சார்ந்திருக்க வேண்டியதில்லை."[2]

வெளிநாடுகளின் ஆதிக்கம் வளர்ச்சியடையாத நாடுகளின் வெளிநாட்டு மூலதனத்தினால் ஏற்படும்போது பல தீமைகளும்

[1] Quoted in 'Foreign Aid and India's Economic Development' V.K.R.V Rao and Dharam Narain, p. 69.

[2] W.A. Lewis, The Theory of Economic Growth, p.259.

தோன்றுகின்றன. இரண்டாவது உலகப்போர் முடிவடைந்த பிறகு பல வளர்ச்சியடையாத நாடுகளும் சுதந்திரத்தைப் பெற்றுத் தனி நாடுகளாக உருவெடுத்தன. இன்றைய மேம்பாடடைந்து வரும் நாடுகள் திட்டமிட்டப் பொருளாதார முன்னேற்றத்திற்கு வெளிநாட்டு மூலதனம் தேவை என்பதை உணர்ந்துள்ளன. எனினும், அவை வெளிநாட்டு மூலதனத்தை ஒழுங்குபடுத்தி அதன் மூலம் அதிக அளவு நன்மையைப் பெற நடவடிக்கைகளை மேற் கொள்கின்றன. இவ்வித மாற்றங்களை உணர்ந்தே வெளிநாட்டு நிறுவனங்கள் அமைந்துள்ளன. இக்காரணங்களால் வெளிநாட்டு மூலதனத்தின் அளவு வளர்ச்சியடையாத நாடுகளில் சுருங்கி விடு கின்றது.

மூலதனப் பற்றுக்குறை உள்ள நாடுகள் வெளிநாட்டுத் தனி முதலீட்டாளர்களுக்கு ஊக்கமளிக்க முன்வர வேண்டும். வெளி நாட்டு மூலதனத்திற்குப் பாதுகாப்பு அளித்தல் அவசியமானது. வெளிநாட்டு முதலீட்டாளர்கள் அதிக இலாபத்தைப் பெற வாய்ப்பிருந்தால்தான் முதலீடு செய்ய முன்வருவார்கள். ஆனால், வளர்ச்சியடையாத நாடுகளில் சமதர்மக்கொள்கையே பெரிதும் பின்பற்றப்படுவதால், அதிக இலாபத்தை வெளிநாட்டு முதலீட் டாளர்கள் பெறுவதை அவை அனுமதிப்பதில்லை. இன்றைய நிலையில் வெளிநாட்டு மூலதனத்தைக் கொண்டு ஒரு நாட்டைச் சுரண்டுவதென்பது இயலாததாகும். ஏனெனில், எந்த ஒரு நாடும் வெளிநாட்டு மூலதனத்தைச் சுரண்ட அனுமதிப்பதில்லை. வெளி நாட்டு மூலதனம் பொருளாதார வளர்ச்சியைப் பெற உதவுகின்ற கருவி என்றே உலகின் பல நாடுகளும் கருதுகின்றன.

## V. வெளிநாட்டுத் தனியார் முதலீட்டை ஊக்குவிக்கும் முறைகள்

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை ஊக்குவிக்க கீழ்க்கண்ட முறைகள் பின்பற்றப் படலாம்:

(1) வளர்ச்சியடையாத நாடுகளின் அரசுகள் வெளிநாட்டு நிறு வனங்ககளுக்கு முதலீட்டு வாய்ப்புக்களைப்பற்றி அறியச்செய்ய வேண்டும். இத்தகவல்களை அயல்நாட்டு வாணிபப் பிரதிநிதிகளின் மூலம் பரப்புதல் வேண்டும். வளர்ச்சியடைந்த நாடுகளில் இருந்தே வெளிநாட்டு மூலதனத்தை அதிகம் பெறமுடியுமென்பதால், அந் நாடுகளுக்கு முதலீட்டு வாய்ப்புக்கள் பற்றிய தகவல்களைப் பரப் புதல் நல்லது.

வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுவதற்கு ஏற்ற சாதகச் சூழ் நிலைகளைப் பொருளாதாரத்தில் ஏற்படுத்த வேண்டும். அரசின்

உறுதி நிலையும், சொத்துக்களுக்கும் வாழ்விற்கும் பாதுகாப்புள்ள நிலையும் ஒரு நாட்டில் அமைந்திருந்தால்தான் வெளிநாட்டு மூல தனத்தை அதிக அளவு பெற முடியும். உள்நாட்டின் பாதுகாப்பும், அரசின் உறுதி நிலையும் எந்த அளவிற்கு ஒரு நாட்டில் தொடர்ந்து நீடிக்கும் என உறுதி கூறமுடியாது. ஆனால், வெளிநாட்டு நிறு வனங்களுக்குக் காப்புறுதி வசதிகள் அளிக்கப்படலாம். வெளி நாட்டினரின் வாழ்விற்கும், சொத்திற்குமான பாதுகாப்பை அரசு எளிதில் அளிக்கலாம். இதற்காக, மூலதனத்தைக் கடன் பெறும் நாடுகளின் அரசுகள் காப்புறுதி நிறுவனங்களைத் தொடங்க வேண்டும். முதலீட்டைச் செய்கின்ற நாடுகளின் அரசுகளும் காப்புறுதி வசதிகளில் பங்கேற்கலாம். அங்கீகரிக்கப்பட்ட வெளி நாட்டு முதலீடுகளின் இடர்களுக்கு எதிராக இவ்வரசுகள் காப் புறுதி செய்து கொள்ளலாம்.

(3) வளர்ச்சியடையாத நாடுகள் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தைப் பெற, இலாபங்களை மாற்றிக்கொள்ளத்தக்க வசதி களை அளிக்கவேண்டும். மூலதனத்தின் முழு அளவு, இலாபத்தின் பங்குத்தொகை, வட்டி போன்றவற்றையும் அயல்நாட்டுச் செலுத்துநிலைக்கு ஏற்ப மாற்றும் வசதிகள் செய்துதரலாம். குறிப் பிட்ட காலம்வரை இவ்வித மாற்றங்களைச் செய்துகொள்ளலாம் என்ற நியதி இருக்கவேண்டும். கடன்பெறும் நாடும் இவ்வித மாற்றங்களுக்கு உறுதியளிக்கலாம். இதைவிடச் சிறந்த முறை கடனைப் பெறும் நாடும், அளிக்கும் நாடும் மூலதன மாற்றங்கள் குறித்து 'இருமுக உடன்படிக்கைகள்' (Bilateral Treaties) செய்து கொள்வதாகும்.

(4) மூலதனத்தைக் கடன்பெறும் நாடுகளின் அரசுகள், வெளிநாட்டு நிறுவனங்களின் உற்பத்திச் செலவுகளைக் குறைக்க அடிப்படை வசதிகளைச் செய்து தரலாம். போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சாரம் மற்றும் பொதுமக்களுக்கு மிக்க பயனை அளிக்கக்கூடிய அவசிய வசதிகள் போன்றவற்றை மேம்படுத்தினால் வெளிநாட்டு முதலீட்டாளர்கள் முதலீடு செய்ய ஊக்கம் பெறு வார்கள். ஆனால், இவ்வசதிகளைப் பெருக்குவதற்கான மூலதனம் அதிகமாகத் தேவைப்படுகின்றது. நிதிவசதி குறைந்த வளர்ச்சி யடையாத நாடுகளின் அரசுகள் படிப்படியாக இவ்வசதிகளை வளர்ப்பது மிக அவசியமானதாகும். இதைப்போன்றே திறமை குறைந்த தொழிலாளர்களின் நிலையை நீக்க தொழில்நுட்பக் கல்வியைப் பரவலாக்க வேண்டும்.

(5) வரி ஊக்கங்கள் அளிப்பதின் மூலமாகவும் வெளிநாட்டு மூலதனத்தைக் கவர முடியும். மூலதனத்தை ஏற்றுமதி செய்யும்

நாடுகளும், மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாடுகளும் வரிச்சலுகைகளை அளிக்கலாம். ஆனால், மூலதனத்தை ஏற்றுமதிசெய்யும் நாடுகள் பெரும்பாலும் வளர்ச்சியடைந்த நாடுகளாக இருப்பதால், வரிச்சலுகைகள் அளிப்பது அவற்றிற்கு எளிதாகின்றது. மேலும், இந்நாடுகளின் அரசுகள் அதிக வரிவருவாயைக் கொண்டவைகளாகவும் உள்ளன. வரிச்சலுகைகளை அளிப்பதின் மூலம் ஏற்படக்கூடிய வரிஇழப்பை ஏற்கும் திறனும் இந்நாடுகளுக்கு இருக்கின்றது.

கடன் அளிக்கும் நாடுகளின் வரி ஊக்கங்கள் பலவகைகளில் தரப்படுகின்றன:

(i) இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா ஆகிய நாடுகளில் இருப்பது போன்ற 'வரிக்கடன் திட்டம்' (Tax Credit System) ;

(ii) 'இரு முறை வரிவிதிப்பைத்' (Double Taxation) தவிர்க்க மூலதனத்தைப் பெறுகின்ற நாடுகளும், மூலதனத்தைப் தருகின்ற நாடுகளும், செய்து கொள்கின்ற இருமுக ஒப்பந்தங்கள் (Bilateral Agreements) ;

(iii) வெளிநாட்டு வியாபார வருவாய்களின் மீதான எல்லா வரிகளையும் நீக்குதல் ;

(iv) வெளிநாட்டு முதலீட்டிற்கான வியாபாரச் செலவுகளை அனுமதித்தல்.

மூலதனத்தை இறக்குமதி செய்யும் நாடுகளும் சில வரி ஊக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம். பின்வருவன அவற்றுள் முக்கியமானவைகளாகும் :

(i) வெளிநாட்டு நிறுவனங்களின் தொடக்க முதலீட்டிற்குப் பின் குறிப்பிட்ட காலத்திற்கு 'வரி விடுமுறை' (Tax Holiday) அளிக்கலாம்.

(ii) புதிய மூலதன முதலீடுகளின் மீது முன்னேற்றத் தள்ளுபடி செய்யலாம்.

(iii) பகிர்ந்தளிக்கப்படாத இலாபங்களின்மீது தள்ளுபடி தரலாம்.

(iv) புதிய முதலீடுகளுக்குத் தேய்மானப் படிகளை (Depreciation Allowances) அதிகமாகத் தரலாம்.

இம்முறைகளைப் பின்பற்றி மூலதனத்தைப் பெறும் நாடுகளும், அளிக்கும் நாடுகளும் வரி ஊக்கங்களை அளித்தால் வெளிநாட்டு மூலதனத்தின் அளவை அதிகரிக்க முடியும்.

(6) மூலதனத்திற்குப் பாதுகாப்பு இருந்தால்தான் முதலீட்டாளர்கள் தங்கள் மூலதனத்தை அளிக்க முன்வருவார்கள் என்பது வெளிப்படை. எனவே, வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் அரசுகள், வெளிநாட்டு மூலதனத்தைப்பெற குறிப்பிட்ட தொழில் நிறுவனங்களை குறிப்பிட்ட காலம்வரை தேசியவுடைமை ஆக்குவதில்லை என்ற உறுதியை அளிக்கவேண்டும். அவ்வாறு தேசியவுடைமை ஆக்கப்பட்டாலும், நியாயமான இழப்பீட்டுத் தொகை நிறுவனங்களின் உடைமையாளர்களுக்குத் தரப்படுதல் அவசியமாகும். உடனடியாக அளிக்கப்படவேண்டிய அத்தொகை உடைமையாளர்களும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருக்க வேண்டும். இழப்பீட்டுத்தொகையை நிர்ணயிக்க பன்னாட்டு நீதிமன்றம் நிரந்தரமாக அமைக்கப்படலாம் என்ற கருத்து நிலவி வருகிறது. ஆனால், இதை எல்லா உலகநாடுகளும் ஏற்றுக் கொள்ளும் என உறுதியாக நம்பமுடியாது.

இழப்பீட்டுத்தொகையை அளிப்பதின் எளிமையான முறை மூலதனத்தை அளித்த நாடும், பெற்ற நாடும் 'இருமுக ஒப்பந்தங்கள்' செய்து கொள்வதாகும். மூலதனத்தைப் பெற்ற நாட்டில் தனியார் நிறுவனங்களின் நிலை, பாதுகாப்பு ஆகியவற்றிற்கு ஏற்ப இழப்பீட்டுத் தொகை நிர்ணயிக்கப்படலாம். அமெரிக்கா இவ்வித ஒப்பந்தங்களைப் பல வளர்ந்துவரும் நாடுகளோடும் செய்து கொண்டுள்ளது. முதலீட்டாளர்களுக்கு நம்பிக்கைதரும் வகையில் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் அரசுகள் உறுதியளித்தல் இன்றியமையாதது.

(7) வளர்ச்சியடையாத நாடுகளில் 'கூட்டு முயற்சிகள்' (Joint Ventures) மூலம் தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய மூலதனத்தைப் பெறலாம். 'கூட்டு நிறுவனங்கள்' (Joint Enterprises) பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் ஏற்படுத்தப் படலாம். வெளிநாட்டு முதலீட்டாளர்கள் அரசின் நிறுவனத்தோடு அல்லது தனியார் நிறுவனத்தோடு இணைந்து செயல்படலாம். இவ்வாறு கூட்டு முயற்சி முறையில் கூட்டு நிறுவனங்களாக இணைந்தால், நாட்டுடைமை ஆக்கப்படலாம் என்ற அச்சத்தையும் தவிர்க்கலாம்.

வெளிநாட்டினர் மூலதனத்தில் ஒரு பகுதியை அளிக்கலாம். தொழில்நுணுக்க அறிவைப் பரப்பலாம். இயந்திரங்களையும், கருவிகளையும் அளிக்க முன்வரலாம். மூலதனத்தில் வெளிநாட்ட

வரிகள் பெரும்பகுதியைக் கொண்டிருக்க முடியாது. உயர்ந்த அளவில் 49 சதவீத மூலதனத்தை மட்டுமே அவர்கள் அளிக்க லாம்; அல்லது மொத்தப் பங்குகளில் 49 சதவீதத்திற்கும் குறை வான பங்குகளையே அயல்நாட்டினர் கொண்டிருக்க முடியும். வெளிநாட்டினர் உள்நாட்டு உழைப்பாளர்களுக்குப் பயிற்சி வசதிகளை ஏற்படுத்தி அவர்களின் உற்பத்தித்திறனை உயர்த்து கின்றனர். புதிய கண்டுபிடிப்புக்களின் உற்பத்தி முறைகளைப் பயன்படுத்தி உற்பத்தியை உயர்த்துகின்றனர். பலவகைப்பட்ட கூட்டு நிறுவனங்கள் வளர்ச்சியடையாத நாடுகளில் தற்பொழுது பெருகி வருகின்றன. குறிப்பாக ஆசிய, ஆப்பிரிக்க, இலத்தீன் அமெரிக்க நாடுகளில் இம்முறை பரவியுள்ளது. இந்தியாவிலும் கூட்டு முயற்சியில் பல தொழில்கள் சிறப்பான உற்பத்தியை தரத்தோடு மேற்கொண்டுள்ளன. மருந்துப் பொருட்கள் தயாரிப்பில் 'ஸ்க்யுப்-சராபாய்' (Squibb-Sarabhai) நிறுவனமும், கார்கள் தயாரிப்பில் 'டாடா-மெர்சிடெஸ்-பென்ஸ்' (Tata-Mercedes-Benz) அமைப்பும், சைக்கிள்கள் தயாரிப்பில் 'சென்-ரெலே' (Sen-Releigh) நிறுவனமும், பஸ்கள் லாரிகள் தயாரிப்பில் 'அஷோக்-லேலாண்ட்' (Ashok-Leyland) நிறுவனமும் கூட்டு முயற்சியில் உற்பத்தியைச் செய்பவைகளாகும். இவற்றின் தரமான உற்பத்தி கூட்டு முயற்சியின் பயனேயாகும்.

நம்நாட்டில் சிறு தொழில்களை இவ்விதக் கூட்டு முயற்சியின் அடிப்படையில் வளர்க்கலாம். இவ்வகையில் நாட்டின் வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தி வேலையின்மையைத் தவிர்க்கவும் இது உதவும். இந்தியப் பொருட்களின் தரத்தை வெளிநாட்டுத் தொழில்நுட்பத்தால் வளர்த்து ஏற்றுமதியையும் பெருக்கலாம்.

(8) உற்பத்தியின் பல நிலைகளும் பிரிக்கப்பட்டு, சில உற்பத்தி நிலைகளை வெளிநாட்டு நிறுவனங்களுக்கு அளிக்கலாம். வேறு சில உற்பத்தி நிலைகளை உள் நாட்டிலேயே மேற்கொண்டு, இறுதி உற்பத்தி நிலையையும் உள்நாட்டிலேயே செய்து முடிக்கலாம்; அல்லது உற்பத்தியின் எல்லா நிலைகளையும் ஒரு வெளிநாட்டு நிறுவனத்திடம் ஒப்படைக்கலாம். அந்நிறுவனம் வசதிகளுக்கு ஏற்ப உற்பத்தியின் சில நிலைகளைத் தன் சொந்த நாட்டிலும், வேறு சில நிலைகளை முதலீடு செய்யப்பட்டுள்ள நாட்டிலும் செய்ய லாம். இந்தியாவில் இவ்வாறு சில மருந்துப்பொருட்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் உள்ளன. இங்கிலாந்து நாட்டின் மருந்து தயாரிக்கும் நிறுவனங்களாகிய மே அன்ட் பேகர் (May & Baker), பூட்ஸ் (The Boots), ஐ. சி. ஐ., (I. C. I.) ஆகியவை கிளை நிறுவனங்களை பம்பாயில் அமைத்துள்ளன. மருந்து உற்பத்தி

இங்கிலாந்தில் செய்யப்பட்டு, பம்பாயில் வகைப்படுத்தப்பட்டு விற்பனைக்குத் தயார் செய்யப்படுகின்றது. இதைப் போன்றே கார்கள், ஸ்கூட்டர்கள் போன்றவற்றின் பாகங்கள் இறக்குமதி செய்யப்பட்டு, இந்தியாவில் அவை இணைக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன. குறிப்பிட்ட தொழில்களை அரசு நாட்டுடைமை யாக்காது என்ற உறுதியளிக்கப்பட்டால்தான், வெளிநாட்டினர் அக்குறிப்பிட்ட தொழில்களுக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்ய முன்வருவார்கள். இந்தியாவில் இவ்வித வெளி நாட்டு நிறுவனங்கள் பல தொழில்களிலும் இயங்கி வருகின்றன. வெளிநாட்டு நிறுவனங்கள் சில சலுகைகளைப் பெறுகின்றன. எந்த அளவிற்கு இந்திய நிறுவனங்களுக்கு அரசு ஊக்கங்களை அளிக்கின்றதோ, அதே அளவிற்கு ஊக்கங்களை வெளிநாட்டு நிறு வனங்கள் அரசிடமிருந்து பெறுகின்றன. வளர்ச்சியடையாத நாடுகளின் நன்மைக்காக இவ்வித முறையையும் பின்பற்றி பல தொழில்களை வளர்க்கலாம்.

(9) மேற்குறிப்பிட்ட பலவகைத் தீர்வுகளை மேற்கொண் டாலும், முதலீட்டிற்குச் சாதகமான சூழ்நிலைகளை வளர்ச்சியடை யாத நாடுகளில் ஏற்படுத்தினால்தான் வெளிநாட்டு மூலதனத்தை அதிக அளவில் பெறமுடியும். மூலதனத்தையும், வட்டியையும் எளிதில் மாற்றிக்கொள்ளத்தக்க வசதிகள் அமைந்திருக்கவேண்டும். வெளிநாட்டு மூலதனத்தைப் பற்றிய தெளிவான கொள்கையை அரசு பின்பற்றுதல் அவசியமாகும். வெளிநாட்டு முதலீட்டாளர் களுக்கு அரசின் இக்கொள்கை பற்றிய எந்த ஐயப்பாடும் எழக் கூடாது.

(10) வெளிநாட்டு முதலீட்டின் அளவை அதிகரிக்க அரசு வேறுசில சலுகைகளையும் வெளிநாட்டு நிறுவனங்களுக்கு அளிக்க வேண்டும். புதிய வெளிநாட்டுத் தொழில் நிறுவனத்தின் உற்பத்திக்குத் தேவையான இயந்திரங்கள், கருவிகள், கச்சாப் பொருட்கள் ஆகியவற்றின் இறக்குமதிகளின்மீது சுங்க வரிகள் விதிப்பதைத் தவிர்க்கலாம். குறிப்பிட்ட காலம்வரை தனிச் சலுகையை அந்நிறுவனத்திற்கு அரசு வழங்கலாம். வெளிநாட்டு நிறுவனங்களுக்கு சட்ட ஆலோசனைகள் அளிக்கப்படலாம். தொழி லாளர்களை வேலைக்கு அமர்த்துவதிலும், தொழிலுக்கான இடத் தைத் தெரிந்தெடுப்பதிலும், மூலதனத்தை மேலும் பெருக்கு வதிலும் அரசு ஆலோசனைகளைக் கூறலாம். தொழிலில் அமைந் துள்ள சிக்கல்களைத் தீர்க்கவும் அரசு உதவ வேண்டும்.

உள்நாட்டு முதலீடுகளுக்குத் தரப்படும் எல்லா சலுகைகளும் வெளிநாட்டு நிறுவனங்களுக்கும் தரப்பட வேண்டும். மூலதனத்

தைப் பெறுகின்ற நாட்டில் அரசின் கொள்கை இவ்வாறு ஒரே மாதிரியாக அமைதல் அவசியமானது. வரிவிதிப்புக் கொள்கை உள்நாட்டு முதலீட்டாளர்களேயும், வெளிநாட்டு முதலீட்டாளர் களேயும் ஒரே அளவில் பாதிக்குமாறு அமைய வேண்டும். ஊக்கம், உரிமை, சொத்து, வாழ்வு ஆகிய யாவற்றிற்கும் பாதுகாப்பு அளித்தல் அரசின் கடமையாகும். உள்நாட்டினருக்கு அளிக்கப்படும் எல்லாவகைப் பாதுகாப்பு வசதிகளும் வெளிநாட்டினருக்கும் அளிக்கப்பட வேண்டும். நிர்வாக, தொழில்நுட்ப வல்லுநர்களேயும், மேலாளர்களேயும் வேலைக்கு அமர்த்துவதில் எவ்விதக் கட்டுப்பாட்டையும் அரசு விதிக்கக்கூடாது. வெளிநாட்டு நிறுவனங்களின் தொழில் நுணுக்க வல்லுநர்கள் வெளிநாட்டிலிருந்து வருவதையும் அரசு தடுத்தல் கூடாது. அவர்களுக்குத் தேவையான எல்லா வசதிகளும் செய்துதரப்படுதல் வேண்டும். வெளிநாட்டு நிறுவனங்கள் உள் நாட்டுத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி தருவது அவசியமாகிறது.

பலவித ஊக்கங்களாகிய உடன்படிக்கைகள், உறுதியளித்தல், நிதிமுறைகள், சட்டத் தீர்வுகள், முதலீட்டு வசதிகள் போன்றவை வெளிநாட்டுத் தனியார் முதலீட்டை அதிகம் ஏற்படுத்துமெனக் கூறமுடியாது. உண்மையில், வெளிநாட்டு முதலீட்டாளர்களின் சாதகமான அனுபமும், இலாபத்தை அதிகம் பெறும் வாய்ப்பும் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை பெற உதவும். வளர்ச்சியடையாத நாடுகளில் பல தொழில்களின் வளர்ச்சிக்கு வெளிநாட்டுத் தனியார் மூலதனம் பெரிதும் நன்மை பயக்கும். எனினும், பல மேம்பாடடைந்துவரும் நாடுகளும் வெளிநாட்டு அரசுகளிடமிருந்து மூலதனத்தைப் பெறுகின்றன. பல பன்னாட்டு நிதி நிறுவனங்களும் பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்குக் கடனளிக்கின்றன. வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தின் செல்வாக்கு படிப்படியாகக் குறைந்து வருகின்றது. ஆயினும், அதனுடைய பணி சிறப்புமிக்க ஒன்றாகும்.

# 22. வெளிநாட்டுப் பொது முதலீடு
## (Public Foreign Investment)

I. வெளிநாட்டுப் பொது முதலீட்டின் முக்கியத்துவம்

வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை விட, பொது மூலதனம் பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்த பெரிதும் உதவும். வளர்ச்சியடையாத நாடுகளின் நிதித்தேவை மிக அதிக அளவினதாகும். வெளிநாட்டுத் தனியார் மூலதனம் அந்நிதித் தேவையில் குறைந்த பகுதியை மட்டுமே அளிக்க இயலும். மேலும், தனியார் மூலதனம் கல்வி, ஆரோக்கியம், மருத்துவ வசதி, தொழில்நுட்பப் பயிற்சி, ஆராய்ச்சி ஆகியவற்றின் வளர்ச்சிக்காக முதலீடாக்கப்படுவதில்லை. இவ்விதத் திட்டங்கள் மறைமுகமாகப் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும். நீண்டகாலத்தில் பொருளாதாரத்தின் உற்பத்தித்திறனை உயர்விக்கும். இவற்றின் முன்னேற்றத்திற்கான முதலீட்டின் மூலம் உடனடி நன்மைகளைப் பெற முடியாது. அதிக இலாபத்தைத் தருவதாகவும் இவை அமைவதில்லை. எனவே, இத்திட்டங்களை மேற்கொள்ள வளர்ச்சியடைந்த நாடுகளிடமிருந்து கடன்களையும், கொடைகளையும் பெறுவது அவசியமாகின்றது.

மேலும், வளர்ச்சியடையாத நாடுகளின் இவ்வித அடிப்படை வசதிகள் இருந்தால்தான், வெளிநாட்டுத் தனியார் தங்கள் மூலதனத்தை முதலீடு செய்ய முன்வருவார்கள். இத்திட்டங்களை நிறைவேற்றுவதில் பல இடர்கள் அமைந்துள்ளன. இந்த இடர்களை ஏற்று இத்துறைகளில் முதலீடு செய்ய தனியுரிமை நிறுவனங்கள் முன்வருதில்லை. இதனால், குறைந்த இலாபத்தை மெதுவாகத் தருகின்ற இவ்வகை முதலீடுகளை வெளிநாட்டுப் பொது மூலதனத்தின் மூலமாகச் செய்யவேண்டும். இவ்வாறு பெறப்பட்ட கடனை முன்னேற்றத் திட்டங்களின் தேவைக்கேற்ப பயன்படுத்திக் கொள்ளலாம். வெளிநாட்டுத் தனியார் மூலதனம் குறிப்பிட்ட தொழில்களைத் தொடங்குவதற்காகப் பெறப்படுகின்றது. எல்லாவித முன்னேற்றப் பணிகளுக்கும் தனியார் மூலதனத்தைப் பயன்படுத்த முடியாது.

உலகின் பல நாடுகளும் "ஏழ்மை எங்கு இருந்தாலும் அது எங்கணும் உள்ள செழிப்பிற்கு ஆபத்தாக விளையும்" (Poverty anywhere is a danger to prosperity everywhere) என்பதை உணர்ந்துள்ளன. "செழிப்பு எங்கு இருந்தாலும் அது எங்கணும் பகிரப்பட வேண்டும்" (Prosperity anywhere must be shared everywhere) என்பதையும் எல்லா நாடுகளும் ஏற்றுக்கொள்கின்றன. எனினும், இதை நன்கு உணர்ந்திருப்பவை சமதர்மக் கொள்கையைப் பின்பற்றுகின்ற நாடுகளும், பொதுவுடைமை நாடுகளுமாகும் வளர்ச்சியடைந்த நாடுகள் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு உதவவேண்டுமென்ற பரந்தநோக்கு அமைந்துள்ளது. ஆனால், எல்லா முன்னேற்றமடைந்த நாடுகளும் இந்த நோக்கை ஒரே அளவில் கொண்டுள்ளன எனக்கூற முடியாது. இந்நாடுகள் பன்னாட்டுக் கொள்கைகளின் அடிப்படையால் தூண்டப்படுகின்றன. அரசியல் நோக்கிற்காகவே இவை பின்தங்கிய நாடுகளுக்கு நிதிவசதியை அளிக்கின்றன. முதலாளித்துவ நாடுகளும் பொதுவுடைமை நாடுகளும் தங்கள் அரசியற்கொள்கை பிற நாடுகளிலும் பின்பற்றப்பட வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் கடன்கள் மற்றும் கொடைகளை அளிக்கின்றன. இது குறித்து டாக்டர் வி.கே.ஆர்.வி. ராவ் குறிப்பிடுவதாவது, "சோவியத் ரஷ்யாவும், பிற பொதுவுடைமை நாடுகளும் வளர்ச்சியடையாத நாடுகளுக்குக் கடனளிக்கத் தொடங்கிய பிறகுதான், மேலை நாடுகளும் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு எவ்வித நிபந்தனையுமின்றி உதவுவதில் ஆர்வம் கொண்டன."[1] இதற்கு எதிரான கருத்தை அமெரிக்கப் பொருளியலாளர் பேராசிரியர் சி.பி. கின்டில்பெர்கர் (Prof. C.P.Kindleberger) தருகிறார்: "தற்போது வளர்ச்சியடையாத நாடுகள் முன்னேற்றத்திற்கான உதவியை எதிர்நோக்குகின்றன. இவ்வித உதவிக்கான நோக்கங்கள் வளர்ந்துள்ளன. வளர்ச்சியடைந்த நாடுகளுள் அமெரிக்கா சுதந்திர உலகு என்று சொல்லப்படுகின்றவைகளின் முன்னேற்றத் திட்டங்களுக்கு சில வகைகளில் பொருளாதார உதவிகளை அளித்துள்ளது. 1946-ஆம் ஆண்டிற்குப் பிறகும் சோவியத் ரஷ்யாவிலும், செஞ்சீனாவிலும் இவ்வித உதவும் நோக்கங்கள் எழவில்லை."[2]

வளர்ச்சியடையாத நாடுகளில் வெளிநாட்டு உதவி கடன்களாகவும், கொடைகளாகவும் பல நாடுகளாலும் அளிக்கப்படுகின்றன. பன்னாட்டு நிதிக்கழகங்களும் கடன்வசதிகளை அளிக்கின்றன.

[1] Dr. V.K.R.V. Rao and Dharam Narain, Foreign Aid and India's Economic Development p.72.

[2] Prof. C P. Kindleberger, Economic Development, pp. 298-99.

II. அரசின் அமைப்புக்கள் (Governmental Agencies)

வளர்ச்சியடைந்த நாடுகள் அளிக்கின்ற கடன்கள், கொடைகளில் ஆறில்-ஐந்து பங்கு இருமுக ஒப்பந்தங்களின் மூலமே பின் தங்கிய நாடுகளுக்குச் செல்கின்றன. இவை பெரும்பாலும் பண உதவியாகவே தரப்படுகின்றன. அமெரிக்கா வெளிநாட்டு மூல தனத்தை அளிப்பதில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது. அமெரிக்கா கடன்களையும், மான்யங்களையும் பல வகைகளிலும் அளிக்கின்றது.

அமெரிக்கா

'ஐக்கிய நாடுகளின் பன்னாட்டு முன்னேற்ற நிறுவனம்' (U.S. Agency for International Development-USAID), 'பொதுச்சட்டம் 480' (Public Law 480), 'ஏற்றுமதி இறக்குமதி வங்கி' (Export-Import Bank) போன்றவற்றின் மூலமாக அமெரிக்கா கடன்களையும், கொடைகளையும் கொடுத்து வருகின்றது. ஐக்கிய நாடுகளின் பன்னாட்டு முன்னேற்ற நிறுவனம் உதவிமானியங்களையும் (Grants), நீண்டகால முன்னேற்றக் கடன்களையும் தருகின்றது. சமுதாய வளர்ச்சி, பயிர்ப்பாதுகாப்பு, கைவினைப் பயிற்சி, பால்பண்ணை முன்னேற்றம், உயர்கல்வி, மலேரியா பெரியம்மை ஒழிப்பு ஆகியவைகளுக்குக் கொடை அளிக்கின்றது. இந்திய முன்னேற்றத்திட்டங்களுக்காக ஜூன் 1969 வரை ரூ. 2,167·43 கோடி என்ற அளவிற்கு 48 கடன்களை இது அளித்துள்ளது. 40 ஆண்டுகளில் இக்கடன்களைத் திருப்பிதரவேண்டும். ஆண்டொன்றிற்கு ஒரு சதவிகித வட்டி முதல் 10 ஆண்டுகளுக்குத் தரவேண்டும். மிகுதி உள்ள 30 ஆண்டுகளின் வட்டி விகிதம் ஆண்டொன்றிற்கு 2.5 சதவிகிதமாகும்.

அமெரிக்க அரசு பொதுச்சட்டம் 480-ன் கீழ் (அமைதிக்காக உணவு-Food for Peace) பல வளர்ச்சியடையாத நாடுகளுக்கும் வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்கிறது. இத்திட்டத்தின் கீழ் கோதுமை, அரிசி, பருத்தி, பால் பௌடர், சோளம் போன்றவை ஏராளமான அளவில் ஏற்றுமதியாகின்றன. இந்த அளிப்புக்களின் ஒரு பகுதி இலவசமாகத் தரப்படுகிறது. மிகுதி உள்ளவற்றிற்கு உள்நாட்டுப் பணம் தரப்படவேண்டும். இந்தியா ரூபாயை அளித்து இவற்றைப் பெறுகின்றது. இத்தொகையில் 80.2% முன்னேற்றத் திட்டங்களுக்காக இந்தியாவிலேயே அமெரிக்க அரசால் செலவிடப்படுகின்றது. மிகுதியுள்ள தொகையில் 13.2% அமெரிக்கத் தூதரகங்களை நடத்தச் செலவிடப் பெறுகின்றது. எஞ்சி இருக்கின்ற 6.6% தனியார் துறைக்குக் கடனளிப்பதற்காக 'ஐக்கிய நாடுகளின் பன்னாட்டு முன்னேற்ற நிறுவனத்

திடம்' (USAID) தரப்படுகின்றது. இந்நிறுவனத்திடமிருந்து இரு வகைத் தொழில்கள் கடன் பெறுகின்றன :

(i) உள்நாட்டில் அமைக்கப்பட்டுள்ள அமெரிக்கத் தொழில் நிறுவனங்கள் அல்லது அவற்றின் கிளை நிறுவனங்கள்; அல்லது அமெரிக்கத் தொழில் நிறுவனத்தோடு தொடர்பு கொண்டுள்ள உள்நாட்டு நிறுவனங்கள்.

(ii) உள்நாட்டுத் தொழில் நிறுவனங்கள் அமெரிக்க நிறுவனங்களோடு இணைந்திருக்காவிட்டாலும், அமெரிக்க வேளாண்மைப் பொருட்களை விற்பனைசெய்வதில் அவை உதவவேண்டும். உதாரணமாக, உள்நாட்டில் அமைந்துள்ள தனியார் கிட்டங்கிகள் (Warehouses), தானியங்களைப் பாதுகாக்கும் மாவு மில்கள் போன்றவற்றைக் கூறலாம்.

1968 வரை பொதுச்சட்டம் 480-இன் கீழ் இந்தியா இறக்குமதி செய்த பொருட்களின் மதிப்பு ரூ. 3,165.90 கோடியாகும். இத் தொகை ரூபாயாகவே அளிக்கப்பட்டது.

1934-இல் நிறுவப்பட்ட ஏற்றுமதி-இறக்குமதி வங்கி (Exim-Bank) அமெரிக்க ஏற்றுமதியைப் பெருக்கும் நோக்குடையதாகும். இதற்காக இவ்வங்கி ஏற்றுமதிக் கடன்களையும், உறுதிகளையும் அளிக்கின்றது. தனியார் நிறுவனங்களுக்கும், அரசுகளுக்கும் இது கடன் வசதிகளைச் செய்து தருகின்றது. இதுகொடுக்கக் கூடிய முக்கியவகைக் கடன்களாவன : மூலதனப் பொருட்களையும், நுகர்பொருட்களையும் ஏற்றுமதி செய்ய ஏழாண்டுகளில் திருப்பித்தரத்தக்க ஏற்றுமதிக்கடன்கள், 5 ஆண்டுகள் முதல் 10 ஆண்டுகள் வரையான, குறிப்பிட்ட முன்னேற்ற முதலீட்டிற்கான உறுதியளிக்கப்பட்ட கடன்கள் ஆகியவை ஆகும். ஆண்டொன்றிற்கு 5.25 முதல் 6 சதவிகித வட்டி கொண்ட இக்கடன்களை டாலர்களில் தரலாம். அரசியல், வாணிப இடர்களுக்கு எதிராக அமெரிக்க ஏற்றுமதியாளர்களுக்கு இது ஏற்றுமதி உறுதிகளை அளிக்கின்றது. இவ்வங்கி இந்தியாவின் 26 கடன்களை அங்கீகரித்து ரூ. 346.05 கோடி கடனளித்துள்ளது.

அமெரிக்காவில் சமீப காலத்தில் தொடங்கப்பட்ட பிறிதொரு அமைப்பு 'அமைதி அணிகள்' (Peace Corps) ஆகும். அமைதி அணிகளின் நோக்கம், வளர்ச்சியடையாத நாடுகளின் கிராமப் புறங்களுக்கு அமெரிக்க இளைஞர்களையும் பெண்களையும் அனுப்பி, விவசாயிகளுக்குத் தொழில்நுணுக்க உதவியை கிராம வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் அளிப்பதாகும். 30 மில்லியன் டாலர்களுடன் இத்திட்டம் 1961-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது.

தற்பொழுது இத்திட்டத்தின் ஆண்டுச் செலவு அமைதி அணிகளின் மூலமாக சுமார் 100 மில்லியன் டாலர்கள் என்ற அளவிற்கு உயர்ந்துள்ளது.

ஜுன் 1969 வரை இந்தியா பெற்றிருக்கும் மொத்தக் கடன்களும், கொடைகளும் ரூ. 6,788.48 கோடியாகும்.

**இங்கிலாந்து**

வளர்ச்சியடையாத நாடுகளின் முன்னேற்றத்திற்காக இங்கிலாந்தும் பல வழிகளில் உதவுகின்றது. கொழும்புத் திட்டத்திற்கு இது உதவுவதோடு, இரண்டாவது உலகப் போர்க்காலத்தில் இந்தியா, பாகிஸ்தான் போன்ற காமன்வெல்த் நாடுகள் சேமித்த ஸ்டெர்லிங் இருப்புக்களைத் திருப்பித் தருகின்றது. இது 'காலனி முன்னேற்றக் கழகத்தாலும்' (Colonial Development Corporation), 'காமன்வெல்த் முன்னேற்ற நிதி நிறுவனத்தாலும்' (Commonwealth Development Finance Company) தரப்படுகின்றது. இவை காலனி நாடுகளிலும், காமன்வெல்த் நாடுகளிலும் குறிப்பிட்ட திட்டங்களை முன்னேற்றுவதற்கான கடன்களைத் தருகின்றன. 5 முதல் 6 சதவிகித வட்டி கொண்ட இக்கடன்களை 25 ஆண்டுகளில் திருப்பித்தரலாம். ஆனால், முதல் 7 ஆண்டுகளுக்கு அசல், வட்டி எதையும் தரவேண்டிய அவசியமில்லை. 1965-66-இல் இந்தியாவிற்கு வட்டி விலக்களித்து இங்கிலாந்து மூன்று கடன்களை அங்கீகரித்து ரூ. 28.6 கோடி கடன் அளித்தது. இங்கிலாந்தின் இவ்விரு நிதிநிறுவனங்களும் தனியார் துறைக்கும் கடனளிக்கின்றன. இங்கிலாந்து நாட்டின் தொழில் நிறுவனத்தோடு இணைக்கின்ற தொழில் நிறுவனங்களுக்கும், முன்னேற்றத் திட்டங்களில் பொது நிறுவனங்களோடு இணைக்கின்ற தனியார் நிறுவனங்களுக்கும் இவை கடன்வசதிகளைச் செய்துதருகின்றன. மே 1968 வரை இந்தியா இங்கிலாந்திடமிருந்து பெற்றிருக்கும் தொகையானது ரூ. 620 கோடி என்ற அளவில் அமைகிறது. இது கொழும்புத் திட்டத்தின்கீழ் அளிக்கப்பட்ட கொடைகளைத் தவிர்த்து ஆகும்.

**ஜெர்மனி**

ஏழை நாடுகளுக்கு உதவும் நோக்கத்தோடு, அமெரிக்க முறைகளைப் பின்பற்றி பிற முன்னேற்றமடைந்த நாடுகளும் நிதி நிறுவனங்களை அமைத்துள்ளன. ஜெர்மனி நாடு 'புனரமைப்பு வங்கியை' (The Bank for Reconstruction) ஏற்படுத்தியுள்ளது. இதன் மூலமாக ஜெர்மனி வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்கு 1954 முதல் 1964 வரை அதிக அளவு

மூலதனத்தை அளித்துள்ளதோடு, பல வழிகளில் பெருமளவுக் கொடைகளையும் வழங்கியுள்ளது. மே 1968 வரை இந்தியா மேற்கு ஜெர்மனியிடமிருந்து கொடைகள் தவிர ரூ. 802 கோடி கடனுகப் பெற்றுள்ளது. 20 ஆண்டுகளுக்குள் திருப்பித்தர வேண்டிய இக்கடன்களின் வட்டி விகிதம் 5 சதவிகிதத்திற்கும் குறைவானதே.

### கனடா

வளர்ச்சியடையாத நாடுகளின் முன்னேற்றத்திற்காகக் கனடா கொடைகளையும், நீண்ட காலக்கடன்களையும், மத்திய காலக் கடன்களையும் அளித்து வருகின்றது. மத்திய காலக் கடன்கள் சிறிது வாணிப நோக்கோடு 6 சதவிகித வட்டியில் 10 முதல் 20 ஆண்டுகளுக்குத் தரப்படுகின்றன. 'சிறப்பு முன்னேற்றக் கடன் திட்டத்தின்' மூலம் (Special Development Loan Programme) நீண்டகாலக் கடன்கள் $\frac{3}{4}$ முதல் 1 சதவிகித வட்டியில் தரப்படுகின்றன. இக்கடன்களை 40 முதல் 50 ஆண்டுகளில் திருப்பித் தரலாம். கொழும்புத் திட்டத்திலும் கனடா அங்கம் வகிக்கின்றது. 1958-ஆம் ஆண்டின் கனடா நாட்டின் கோதுமைக் கடன் 4.25 சதவிகித வட்டியைக் கொண்டதாக இருந்தது. மே 1968 வரை கனடா ரூ. 501 கோடி அணுச்சக்தி, மின்சார நிலையங்களின் முன்னேற்றத்திற்காகக் கடனுக அளித்துள்ளது.

### சோவியத் ரஷ்யா

ரஷ்யா அளிக்கக்கூடிய கடன்கள் மிகக் குறைந்த வட்டி விகிதங்களைக் கொண்டவை. $2\frac{1}{2}$ சதவிகித வட்டியைக் கொண்ட இக்கடன்களை அதிக அளவில் 12 ஆண்டுகளுக்குள் திருப்பித் தருதல் வேண்டும். உள்நாட்டுப் பணமாகவும் கடன்கள் திருப்பி அளிக்கப்படலாம் ; அல்லது ஏற்றுமதிப் பொருட்களாகவும் கடன்களைத் திருப்பித்தரலாம். குறைந்த அளவு வளர்ந்துள்ள நாடுகளின் பொதுத்துறைகளுக்கு சோவியத் அரசு உதவுகின்றது. மின்சாரத் திட்டங்கள், சுரங்கத் தொழில், பிறவகை பெரிய தொழில்கள் ஆகியவற்றை பொதுத்துறையில் வளர்க்க ரஷ்யா உதவியளிக்கிறது. இயந்திரச் சாதனங்களையும், கருவிகளையும், தொழில் நுணுக்க அறிவையும் இது அளிக்கின்றது. கொடைகள் மிகக் குறைந்த அளவிற்கே அளிக்கப்படுகின்றன. தொழில் நுணுக்கப் பயிற்சிகளையும் மூலதனத்தைப் பெறுகின்ற நாடுகளின் உழைப்பாளர்களுக்குத் தருகின்றது.

இந்தியாவின் இரும்பு-எஃகுத் தொழில் வளர்ச்சிக்கு ரஷ்யா பெருமளவில் உதவியுள்ளது. மத்தியப் பிரதேசத்தில் பிலாய் (Bhilai), பீஹாரில் பொகாரோ (Bokaro) இரும்பு-எஃகு உருக்கும்

தொழிற்சாலைகளையும், துர்காபூரில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலையும், பராணியில் (Barauni) எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிலையும், நெய்வேலியில் பழுப்பு நிலக்கரியைப் பயன்படுத்தி மின்சார உற்பத்தி செய்யும் தொழிலையும், ஹார்டுவாரில் (Hardwar) பெரிய மின்சாரத் திட்டத்தையும் ஏற்படுத்த உதவியது ரஷ்யாவாகும். குஜராத் மாநிலத்தில் 'கொயாலி' (Koyali) என்னுமிடத்தில் மற்றொரு எண்ணெய் சுத்திகரிப்புச் சாலையை ஏற்படுத்தி உள்ளது. சோவியத் உதவியால் தற்பொழுது மருந்துத் தொழில், நுண் கருவிகள் உற்பத்திசெய்யும் இரு தொழில் நிறுவனங்கள், மின்சாரத் திட்டங்கள் ஆகிய யாவும் தொடங்கப்பட்டு வருகின்றன. மே 1968 வரை இந்தியா ரஷ்யாவிடமிருந்து பெற்ற மொத்த உதவி ரூ. 1,032 கோடியாகும்.

பிறநாடுகள்

சோவியத் ரஷ்யா தவிர பிற பொதுவுடைமை நாடுகளும் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு உதவிவருகின்றன. சீனு, ல்கேரியா, செக்கோஸ்லோவாக்கியா, போலந்து, ஹங்கேரி, ருமேனியா, யூகோஸ்லாவியா, கிழக்கு ஜெர்மனி போன்ற நாடுகளே அவையாகும். இவை வளர்ச்சியடையாத நாடுகளுக்கு அளிக்கின்ற கடனின் அளவு அதிகரித்து வருகின்றது. இந்நாடுகள் 1954-இல் அளித்த கடன் அளவு 3.4 பில்லியன் டாலர்கள் ஆகும். இது 1965-இல் 7.7 மில்லியன் டாலர்களாக உயர்ந்துவிட்டது. 1954 முதல் 1960 வரை 65 சதவிகிதக் கடன்கள் ஆசிய நாடுகளுக்கே அளிக்கப்பட்டன ; 16 சதவிகிதமும் ஆப்பிரிக்க நாடுகளுக்குத் தரப்பட்டன. 1959-ஆம் ஆண்டிற்கும், 1965-ம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 46 சதவிகிதக் கடன்கள் ஆப்பிரிக்க நாடுகளுக்கும், 41 சதவிகிதம் ஆசிய நாடுகளுக்கும், 13 சதவிகிதம் இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கும் அளிக்கப்பட்டன.

1954-ஆம் ஆண்டிற்கும் 1965-ஆம் ஆண்டிற்கும் இடையே 4.8 பில்லியன் டாலர்கள் என்ற அதிக அளவிற்கு சோவியத் அரசு வளர்ச்சியடையாத நாடுகளுக்குக் கடனளித்திருந்தது. மே 1968 இறுதிவரை பொதுவுடைமை நாடுகளாகிய சோவியத் ரஷ்யா ஹங்கேரி, செக்கோஸ்லோவாக்கியா, போலந்து, யூகோஸ்லாவியா ஆகிய ஐந்து நாடுகளிடம் இருந்து இந்தியா ரூ. 1,374 கோடி என்ற அளவிற்கு உதவி பெற்றது.

## III. உலக அமைப்புக்களும், பிரதேச நிறுவனங்களும் (World Organizations and Regional Bodies)

சில பிரதேச நிறுவனங்களும் வளர்ச்சியடையாத நாடுகளின் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன. சர்வதேச சங்கத்தின் (U. N. O)

அமைப்புக்களாகிய 'இலத்தின் அமெரிக்காவிற்கான பொருளாதாரக்குழு' (Economic Commission for Latin America), 'ஆசிய, தூரக்கிழக்கு நாடுகளுக்கான பொருளாதாரக் குழு' (Economic Commission for Asia and Far East), 'ஆப்பிரிக்காவிற்கான பொருளாதாரக்குழு' (Economic Commission for Africa) ஆகியவை முக்கிய நிலைகளைக் கொண்டுள்ளன. இவற்றைத் தவிர, 'கொழும்புத் திட்டம்' (Colombo Plan), 'அமெரிக்காவிற்கான முன்னேற்ற வங்கி' (IDB-Inter-American Development Bank), 'ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம்' ((European Economic Community), 'இந்திய உதவிச் சங்கம்' (Aid India Club), 'அமெரிக்க மாநிலங்களின் அமைப்பு' (Organization of American States), 'ஐரோப்பியக் கூட்டுறவு, முன்னேற்ற அமைப்பு' (Organization for European Co-operation and Development) போன்றவைகளும் வெளிநாட்டு முதலீடுகளைப் பல நாடுகளுக்கிடையே பரப்புகின்றன.

ஐக்கிய நாடுகளின் பல பிரதேசக் குழுக்களும் தனித்தனியே ஆண்டொன்றிற்கு ஒரு மில்லியன் டாலர்கள் நிதிவசதியைப் பெற்றிருக்கின்றன. பெரிய பொருளாதாரத் திட்டங்களை இவற்றால் மேற்கொள்ள முடியாவிட்டாலும், சிறிய தொழில் நுணுக்க உதவிகளை அளிப்பதில் இவை பெரிதும் உதவுகின்றன.

கொழும்புத் திட்டம் (The Colombo Plan)

வளர்ச்சியடையாத நாடுகளின் தொழில்நுணுக்கத் துறையில் ஆசியாவிலேயே பெரிய கூட்டு முயற்சியாகிய 'கொழும்புத் திட்டம்' அதிக அளவில் உதவுகின்றது. இங்கிலாந்து, கனடா, ஆஸ்திரேலியா, ஜப்பான், நியூசிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளால் 1950-ஆம் ஆண்டில் தென்-கிழக்கு ஆசிய நாடுகளுக்கு உதவ தொடங்கப்பட்டது. இது முன்னேற்றத் திட்டங்களுக்குக் கடன்கள், கொடைகள், தொழில் நுட்ப உதவிகள் ஆகிய யாவற்றையும் அளிக்கிறது. உறுப்பு நாடுகளுக்கு இது பயிற்சி வசதிகளை அளிக்கின்றது. தொழில் வல்லுநர்களையும் பின்தங்கிய நாடுகளுக்கு அனுப்புகின்றது.

1966-67-இல் இத்திட்டத்தின் தொழில்நுட்ப உதவிச் செலவு 48 மில்லியன் பவுன்களாகும். உறுப்பு நாடுகளால் 5,956 புதிய பயிற்சி இடங்கள் அவ்வாண்டில் அமைக்கப்பட்டன ; அதில் 2,639 இடங்களை அமைத்துத் தந்தது அமெரிக்காவாகும். 1965-ஆம் ஆண்டிற்கும் 1967-ஆம் ஆண்டிற்கும் இடையே இந்தியா 199 கொழும்புத்திட்ட வல்லுநர்களையும், ரூ. 1.32 கோடி மதிப்புள்ள சாதனங்களையும் பெற்றது. பயிற்சித் திட்டத்தினால் அதிக நன்மை

யைப் பெற்றது இந்திய நாடாகும். 1966-67-இல் 40 இந்திய பயிற்சி பெற்ற வல்லுநர்கள் ஆசிய நாடுகளின் பல துறைகளிலும் பணியாற்றி உள்ளார்கள்.

தற்பொழுது இத்திட்டத்தின்கீழ் 22 நாடுகள் அங்கம் வகித்து தொழில் ஒத்துழைப்பை அவைகளுக்குள் அளித்துக்கொள்கின்றன. 1960-ஆம் ஆண்டுவரை இத்திட்டம் நிறைவேற்றப்படுவதாக இருந்தது. ஆனால் இது 1966-ஆம் ஆண்டுவரை நீடிக்கப்பட்டது. தொடர்ந்து நவம்பர் 20, 1964-இல் மேலும் 5 ஆண்டுகளுக்கு-1971 வரை நீடிக்கவேண்டுமென்று முடிவெடுக்கப்பட்டது. 15 ஆண்டு களுக்குள் இத்திட்டத்தைத் தொடங்கிய 6 நாடுகளும் உறுப்பு நாடுகளுக்கு 14,864 மில்லியன் டாலர்களை வழங்கியுள்ளன. கொழும்புத் திட்டம் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் முன்னேற்றத் திட்டங்களுக்கு அதிக உதவி அளிக்கிறது. பேராசிரியர் கால்பிரெய்த் (Prof. Galbraith) இது பற்றிக் குறிப்பிடுவதாவது, "இத்திட்டத்தில் பங்கு கொள்கின்ற நாடுகளின் கூட்டு முயற்சி யால் உதவி பல நாடுகளாலும் பெறப்படுகின்றது. இத்திட்டத் தின் நோக்கமாவது, முன்னேற்ற நிலைகளைக் கருதி உதவியளிப்ப தாகும். வளர்ச்சியடைந்த நாடுகள், வளர்ச்சியடையாத நாடுகள் என்ற பாகுபாடுகள் கருதுப்படுவதில்லை; எல்லா நாடுகளும் இத் திட்டத்தில் பங்கேற்கலாம்."

'அமெரிக்க மாநிலங்களின் அமைப்பு' (Organization of American States-OAS) 1960-இல் தொடங்கப்பட்டது. 'அமெரிக்கா விற்கான முன்னேற்ற வங்கி' (Inter-American Development Bank) குறைந்த அளவு வளர்ச்சி அடைந்துள்ள உறுப்பு மாநிலங்களுக்கு உதவ அமைக்கப்பட்டது.

'ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம்' (European Economic Community-EEC), 'ஐரோப்பிய முதலீட்டு வங்கியையும்' (European Investment Bank), 'ஐரோப்பிய முன்னேற்ற நிதியையும்' (European Development Fund) ஏற்படுத்தியது. உறுப்புநாடு களுக்கும், வெளிநாடுகளுக்கும் முன்னேற்றத்தில் உதவ இவை தொடங்கப்பட்டன. உறுப்பு நாடுகளோடு தொடர்பு கொண்ட பிற நாடுகளுக்கும் உதவி அளிக்கப்படுகின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் வெளிநாட்டு உதவி 1958-இல் தொடங்கப்பட்ட 'இந்திய உதவிச் சங்கத்தின்' (Aid India Club) மூலமாகவும் பெறப்படுகின்றது. உதவியை அளிப் பதற்குக் கூட்டு முயற்சியாக இது தொடங்கப்பட்டது. உலக வங்கியின் முயற்சியால் தொடங்கப்பட்ட இச்சங்கம் இந்திய

ஐந்தாண்டுத் திட்டங்களுக்கான உதவியைப் பெறுவதில் பெரிதும் உதவுகின்றது. இக்கூட்டுச் சங்கத்தில் அமைந்துள்ள நாடுகள் அமெரிக்கா, இங்கிலாந்து, கனடா, மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ், ஜப்பான், ஆஸ்திரியா, பெல்ஜியம், இத்தாலி, நெதர்லாந்து ஆகியவையாகும். இவற்றைத் தவிர, 'பன்னாட்டு முன்னேற்றச் சங்கமும்' (International Development Association), 'உலக வங்கி' (World Bank) ஆகிய இரண்டும் இதில் பங்கேற்கின்றன. இந்தியாவின் திட்டமிட்ட வளர்ச்சிக்கு இக்கூட்டுச் சங்கம் பயனளிக்கின்றது. இதைப் போன்றே பாகிஸ்தானின் முன்னேற்றத்திற்கான மற்றொரு கூட்டு உதவிச் சங்கமும் அமைந்துள்ளது.

இந்திய உதவிச் சங்கத்தை 'இந்திய உதவி ஆலோசனைக் குழு' என அழைப்பது பொருத்தமுடையதாகும். இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்குழு மூலதனத்தைக் கடனாக அளிக்க விரும்பும் நாடுகளைக் கூட்டு சேர்த்து கடனை ஒழுங்கு செய்ய இக்குழு உதவுகிறது.

ஆசிய அபிவிருத்தி வங்கி (Asian Development Bank)

ஆசிய நாடுகளின் புனரமைப்பிற்குக் கடனளிக்க 1966-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 19-ஆம் நாள் மணிலாவில் 'ஆசிய அபிவிருத்தி வங்கி' தொடங்கப்பட்டது. உலக வங்கியில் 107 நாடுகள் அங்கம் வகிக்கின்றன. எல்லா நாடுகளின் மூலதனத் தேவையையும் பூர்த்தி செய்வது உலக வங்கியால் இயலாதது. இக்காரணத்தால் ஆசிய நாடுகளின் வளர்ச்சிப் பணிகளுக்கான மூலதனத்தைப் பெற ஆசிய அபிவிருத்தி வங்கி ஏற்படுத்தப்பட்டது. இவ்வங்கியின் செலுத்தப்பட்ட மூலதனம் 1000 மில்லியன் டாலர்களாகும். இதில் அங்கம் வகிக்கும் நாடுகளை பிரதேச அங்க நாடுகள், பிரதேசத்திற்கு அப்பாற்பட்ட அங்க நாடுகள் என இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

ஆசிய அபிவிருத்தி வங்கி தொடங்கப்பட்டபோது 11 பிரதேச அங்க நாடுகளும், 23 பிரதேசத்திற்கு அப்பாற்பட்ட நாடுகளும் இருந்தன. தற்பொழுது 32 பிரதேச அங்க நாடுகளும், 13 பிரதேசத்திற்கு அப்பாற்பட்ட நாடுகளும் இதில் உள்ளன. அங்கம் வகிக்கும் நாட்டின் பங்களவில் 50 சதவிகிதம் தங்கத்திலும் மிகுதியை அந்நாட்டின் பணத்திலும் செலுத்த வேண்டும். ஐந்து தவணைகளில் பங்களவு செலுத்தப்படலாம். பிரதேசத்திற்கு அப்பாற்பட்ட நாடுகள் பங்களவு தவிர நன்கொடைகளையும், கடன்களையும் அளிக்கலாம்.

இவ்வங்கி கடன் பெறுகின்ற நாட்டின் கடன் மீட்கும் திறனை ஆராய்ந்து கடன் வழங்குகிறது. புள்ளிவிவரங்களைச் சேகரித்து வெளியிடவும் இவ்வங்கி உதவுகின்றது. வேளாண்மை, பொறியியல், பொருளாதாரப் புள்ளிவிவரங்களை இது பெரிய அளவில் சேகரித்துள்ளது. ஆசிய அபிவிருத்தி வங்கி ஆசிய நாடுகளின் வளர்ச்சிக்காக உலக வங்கியோடு ஒத்துழைத்துச் செயல்படுகிறது. உலகவங்கி அளிக்கும் மூலதனமானது ஆசிய நாடுகளுக்குப் போதுமானதாக இல்லாத காரணத்தால் ஆசிய அபிவிருத்தி வங்கி ஏற்படுத்தப் பட்டது. தென்-கிழக்கு ஆசிய நாடுகளின் வளர்ச்சிக்கு இவ்வங்கி உதவுகின்றது. முன்னேற்றத் திட்டங்களுக்கு நிதி வசதியைத் தருவதாக இது உள்ளது. இவ்வங்கியின் தலைமையகம் டோக்கியோவில் உள்ளது.

பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி (International Bank for Reconstruction and Development - IBRD)

உலகின் செல்வநாடுகள் வறிய நாடுகளுக்கு உதவாவிட்டால் உலகில் தீர்க்கமுடியாத பல சிக்கல்கள் தோன்றும். இன்றைய நிலையில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் வளர்ச்சியடையாத நாடுகளுக்குக் கடனாகவும், நன்கொடையாகவும், நேரடி முதலீடாகவும் மூலதனத்தை அளித்து வருகின்றன. மூலதனத்தை அளிப்பதோடு உற்பத்தி முறைகள் திருந்த தொழில்நுணுக்கப் பயிற்சிகளையும் இவை அளிக்கின்றன. வெளிநாட்டுப் பொறியாளர்கள், தொழில் வல்லுநர்கள், விஞ்ஞானிகள் ஆகியோரின் பணிகளை பின்தங்கிய நாடுகள் பெறமுடிகிறது. ஆசிய, ஆப்பிரிக்க, இலத்தீன் அமெரிக்க நாடுகள் பின்தங்கிய நாடுகளாக உள்ளன. இந்நாடுகளில் மூலதனத்திரட்சி மிகக்குறைவாக உள்ளது. இவற்றின் முன்னேற்றத் திட்டங்களுக்கு உதவ நிதியானது தனியாராலும், அரசுகளாலும், பன்னாட்டு நிதி நிறுவனங்களாலும் தரப்படுகின்றது. இவ்வகையில் அதிக அளவு உதவக்கூடிய ‘பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி’ வாஷிங்டனில் உள்ளது. இவ்வங்கியோடு இணைந்த ‘பன்னாட்டு நிதிக் கார்ப்பரேஷன்’ (International Finance Corporation), ‘பன்னாட்டு வளர்ச்சிக் சங்கம்’ (International Development Association) ஆகியவையும் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு நிதியளிப்பதில் உதவுகின்றன. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளாகிய இந்தியா, பாகிஸ்தான், எகிப்து, துருக்கி, மெக்ஸிகோ, நெதர்லாந்து ஆகிய நாடுகளும் இவைகளில் அங்கம் வகிக்கின்றன.

பன்னாட்டுப் புனரமைப்பு வங்கியை உலகவங்கி என்றும் அழைக்கலாம். இவ்வங்கி 1944-ஆண்டு அமெரிக்காவின் பிரெட்டன்

உட்ஸ் நகரில் நடந்த மாநாட்டில் உருவாக்கப்பட்டு, 1946-ஆம் ஆண்டு ஜூன் மாதம் வாஷிங்டனில் செயல்படத் துவங்கியது. தொடக்கப்பட்டபோது 44 உலக நாடுகள் அங்கம் வகித்தன. தற்பொழுது 107 உறுப்பு நாடுகளைக் கொண்டதாக இவ்வங்கி உள்ளது. இவ்வங்கியில் உறுப்பினராகச் சேர வேண்டுமானால் ஐக்கிய நாடுகள் சபையில் அங்கம் வகிப்பது அவசியமானதாகும். ஆனால், ஐக்கிய நாடுகள் சபையில் உறுப்பு நாடுகளாக உள்ள 133 நாடுகளும் உலகவங்கியில் அங்கம் வகிக்கவில்லை. ரஷ்யாவும், மற்றும் பல பொதுவுடைமை நாடுகளும் உலக வங்கியில் சேரவில்லை.

1946 - ஆம் ஆண்டு தொடங்கப்பட்டபோது உலக வங்கியின் மூலதனம் 10 மில்லியன் டாலர்கள் ஆகும். ஆனால் 1959 - ஆம் ஆண்டிற்குள்ளாகவே மூலதனம் இருமடங்காகப் பெருகிவிட்டது. இவ்வங்கியில் அதிகப் பங்குகளைக் கொண்டிருக்கும் நாடுகள் முறையே அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ், இந்தியா ஆகியவைகளாகும். வங்கியின் அலுவல்கள் ஆளுநர் சபையால் மேற்கொள்ளப் படுகின்றன. ஒவ்வோர் அங்கம் வகிக்கும் நாட்டிற்கும் ஒரு நிரந்தர ஆளுநரையும், ஒரு மாற்று ஆளுநரையும் ஆளுநர் சபையில் கொள்ள உரிமை உண்டு. இதைத்தவிர, 20 உறுப்பினர்களைக் கொண்ட நிர்வாக இயக்குநர் சபையும் உண்டு. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ், இந்தியா ஆகிய நாடுகளுக்கு ஆளுநர் சபையில் நிரந்தர இடமுண்டு.

பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், இரண்டாவது உலகப் போரினால் சீர்குலைந்த நாடுகளின் புனரமைப்பிற்கும் நீண்ட காலக்கடனை இது அளிக்கின்றது. சிறப்பான திட்டங்களுக்கும், நல்ல நிலையில் பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளுக்கும் மட்டுமே கடன்களை இது தருகின்றது. குறிப்பிட்ட திட்டத்திற்குத் தரப்படும் கடன் அதை நிறைவேற்றவே செலவிடப்பட வேண்டும். ஒரு நாட்டின் கடன் தீர்க்கும் சக்தியை அறிந்தும் கடன் அளிக்கப்படுகிறது. திட்டத்தின் இயல்பை வங்கியின் பொருளாதார நிபுணர்கள் ஆராய்வர்.

இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உலக வங்கி பல வழிகளில் கடன் அளித்துள்ளது; 34 வகைக் கடன்களைச் சுமார் 108 கோடிடாலர் அளவிற்குப் பெற்றிருக்கிறோம். இக்கடன்கள் இரயில்வே போக்குவரத்து, ஆகாயவிமானப் போக்குவரத்து, துறைமுகங்களின் விரிவாக்கம், நிலக்கரிச்சுரங்க வளர்ச்சி ஆகியவற்றிற்காகப் பயன்படுத்தப்பட்டன. பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்கு இலாப நோக்கின்றி உலக வங்கி உதவுகிறது. உலக வங்கியின் சேவை வளர்ச்சியடையாத நாடுகளுக்குத் தேவையாகின்றது.

உலக வங்கி குறிப்பிட்ட திட்டத்திற்குக் கடன் அளிப்பதையே விரும்புகின்றது. ஒரு நாட்டின் பலவகை முன்னேற்றங்களுக்கான மொத்தக் கடனை அது அளிக்க முன்வருவதில்லை. ஒரு நாட்டு அரசின் உறுதியோடு அந்நாட்டுத் தனியார் நிறுவனத்திற்கும் கடன் தருகின்றது. 1966-67-இல் இவ்வங்கி 35 வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்கு 8.77 மில்லியன் டாலர்கள் கடனளித்தது. இதுவரை இவ்வங்கி பலநாடுகளுக்கும் மொத்தம் சுமார் 10,500 மில்லியன் டாலர்கள் கடனாக வழங்கியுள்ளது. மின்சாரத்திட்டங்கள், தண்ணீர்வசதி, போக்குவரத்து, செய்தித்தொடர்பு போன்றவற்றின் வளர்ச்சிக்கு உதவியுள்ளது. பலவகை வேளாண்மைத் திட்டங்களும் இதனால் பயனடைந்துள்ளன. தொழில் நுணுக்க உதவியை ளித்து வளர்ச்சியடையாத நாடுகளின் உற்பத்தித் திறனைப் பெருக்கியுள்ளது. ஒரு நாட்டின் தனியார் வேறொரு நாட்டில் முதலீடு செய்ய இவ்வங்கி ஊக்கமளிக்கின்றது. வெளிநாட்டுச் செலாவணியில் சமநிலை ஏற்படவும், பன்னாட்டு வாணிபத்தில் சமன்பாடான வளர்ச்சி தோன்றவும் நடவடிக்கைகளை எடுக்கிறது.

உலக வங்கி தொடங்கப்பட்டபொழுது உலகப்போரால் சீர்குலைந்த நாடுகளின் புனரமைப்பிற்கு உதவியது. 1947-ஆம் ஆண்டு மே மாதம் முதல் ஆகஸ்டு வரை பிரான்ஸ், நெதர்லாந்து, டென்மார்க், லக்ஸம்பர்க் ஆகிய நாடுகளுக்கு 497 மில்லியன் டாலர் கடன் வழங்கியது. அதற்குப்பின் பின்தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் கவனம் கொண்டது. உலக வங்கி முதலீட்டு நிதிநிறுவனங்களோடு போட்டியிடாமல், அவற்றிற்கு உதவியாகச் செயல்படுகின்றது. முதலீட்டைப் பெருக்க எல்லா நாடுகளிலும் நிதிநிறுவனங்களை அமைக்க உதவுகின்றது.

உலக வங்கியில் அங்கம் வகிக்கின்ற நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கான புள்ளிவிவரங்களைச் சேகரித்துத் தருகின்றது. அவற்றின் திட்டமிட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளை அளிக்கின்றது. வளர்ச்சியடையாத நாடுகளின் நூலகங்களுக்கு பொருளாதார வளர்ச்சிபற்றிய புத்தகங்களை வழங்குகின்றது. உலக வங்கி நேரடியாகத் தனியார் துறைக்கு உதவ இயலாது. எனவே, தனியார் துறைக்கு மூலதனம் அளிக்கப் 'பன்னாட்டு நிதிக் கழகத்தைத்' (International Finance Corporation) நிறுவியுள்ளது.

உலகவங்கியிடமிருந்து மிகுதிக் கடன்பெறும் நாடு இந்தியாவே ஆகும். உலக வங்கியை ஏற்படுத்திய நாடுகளுள் இந்தியாவும் ஒன்றாகும். இந்திய இருப்புப்பாதைப் போக்குவரத்து முன்னேற்

றத்திற்காக 1949-இல் உலக வங்கி 32.8 மில்லியன் டாலர் கடனளித்தது. இதுவரை இந்திய இரயில்வே 500 மில்லியன் டாலர் கடன் பெற்றுள்ளது. அரசின் உடைமையில் இருப்புப்பாதைப் போக்குவரத்து, மின்சாரம், பன்னாட்டு வங்கி வளர்ச்சி, துறைமுகங்கள், வேளாண்மை, பலநோக்குத் திட்டங்கள் போன்றவைகளுக்குக் கடன் அளிக்கின்றது. தனியார் துறையில் இரும்பு எஃகு, நிலக்கரித் தொழில்களுக்கும் உதவுகின்றது.

## பன்னாட்டு நிதிக்கழகம் (International Finance Corporation)

இக்கழகம் உலக வங்கியுடன் இணைந்த ஒன்றேயாகும். பின்தங்கிய நாடுகளின் தனியார் தொழில்களுக்கு நேரடியாகக் கடனளிக்கவும், அத்தொழில்களில் முதலீடு செய்யவும் இது ஏற்படுத்தப்பட்டது. 1956-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டபோது 31 நாடுகள் அங்கம் வகித்தன ; தற்பொழுது 83 உறுப்பு நாடுகளைக் கொண்டதாக பன்னாட்டு நிதிக்கழகம் உள்ளது. இக்கழகத்திற்கு அதிக நிதிவசதியை அளிக்கும் நாடுகள் அமெரிக்காவும், ஜெர்மனியுமாகும். இக்கழக மூலதனத்தின் அளவு 100 மில்லியன் டாலராகும். இது கொண்டுள்ள தனி இயல்பு, நேரடியாகத் தொழில்களில் முதலீடு செய்யும் நிலையாகும். அரசின் உறுதி அளித்தல் இல்லாமலேயே தனியார் நிறுவனங்களுக்குக் கடன் அளிக்கப்படுகின்றது.

பன்னாட்டு நிதிக்கழகம் தனியார் நிறுவனங்களின் பங்குகளை வாங்குகின்றது ; அல்லது கடன் அளிக்கின்றது. நல்லநிலையில் உள்ள இலாபகரமான தனியார் தொழில்களுக்கும், பிறவழிகளின் மூலம் தேவையான மூலதனத்தைப் பெறஇயலாத தொழில்களுக்கும் இது மூலதனத்தை அளிக்கிறது. இந்நிறுவனங்கள் கடனைப்பெற திறமையான நிர்வாகத்தைக் கொண்டவைகளாவும் இருத்தல் இன்றியமையாதது.

இதுவரை பன்னாட்டு நிதிக்கழகம் 35 நாடுகளின் தொழில்களுக்கு உதவி அளித்துள்ளது. மின்சாரக் கருவிகள், சிமெண்ட், காகிதம், போக்குவரத்து, கார் பாகங்கள், உர உற்பத்தி, பஞ்சாலை ஆகிய தொழில்கள் வளர நிதியுதவி அளித்திருக்கின்றது. 17 உலக நாடுகளில் அபிவிருத்திக்கழகங்களை நிறுவ கடன் கொடுத்துள்ளது. இந்தியத் தொழில் நிறுவனங்கள் இதுவரை 27 மில்லியன் டாலர் நிதிஉதவியை இதன் மூலமாகப் பெற்றுள்ளன. இந்தியத் தொழில்களில் இக்கழகத்தின் மூலம் அதிக நன்மையடைந்தவை தேயிலைத் தொழிலும், வெடிமருந்துத் தொழிலுமாகும். பின்தங்கிய நாடுகளின் தனியார் தொழில்களில் நேரடியாக முதலீடு செய்யும்

பன்னாட்டு நிதிக்கழகம் தொழில் வளர்ச்சியடைய பெரிதும் உதவுகின்றது.

**பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்** (International Development Association)

சில குறிப்பிட்ட துறைகளுக்கு மட்டுமே உலக வங்கி நிதி உதவி அளிக்கிறது. எளிய வட்டி விகிதத்தில் உலக வங்கி கடன் தருவதில்லை. கல்வி வளர்ச்சி, சேரி ஒழிப்பு, சாலைகள் அமைத்தல் போன்ற பணிகள் சமுதாயத்திற்கு நேரடியாகப் பயனளிப்பவை யானாலும், இவற்றின் முதலீட்டிற்கு உலக வங்கி கடன் அளிப்ப தில்லை. உலக வங்கி வளர்ச்சியடைந்த செல்வ நாடுகளிடம் 6 சத விகித வட்டிக்குக் கடன்பெற்று உறுப்பு நாடுகளுக்கு $7\frac{1}{2}$ சத விகித வட்டிக்குக் கடன் அளிக்கின்றது. 'பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்' வாஷிங்டனில் 1960-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தொடங்கப் பட்டது. 1000 மில்லியன் டாலர் அனுமதிக்கப்பட்ட மூலதனத் தைக்கொண்டு துவங்கப்பெற்ற இச்சங்கம் உலகவங்கியோடு இணைந்த ஒரு அமைப்பாகும்.

பன்னாட்டு வளர்ச்சிச் சங்கத்தில் தற்பொழுது 97 நாடுகள் அங்கம் வகிக்கின்றன. இது வழங்கும் கடனை சலுகையுள்ள கடன் என அழைக்கலாம். இதற்கு வட்டி வசூலிக்கப்படுவதில்லை. சேவைச்செலவிற்காக மட்டும் $\frac{3}{4}$ சதவிகிதம் வட்டித்தொகை பெறப்படுகின்றது. கடனைத் திருப்பித் தருவதிலும் பல சலுகைகள் தரப்படுகின்றன. கடன் அளித்த முதல் 10 ஆண்டு களுக்குத் தவணைப்பணத்தைச் செலுத்த வேண்டியதில்லை. தரப்பட்ட கடனை 25 முதல் 50 தவணைகளில் திருப்பித்தரலாம். இது பெரும்பாலும் பின்தங்கிய நாடுகளுக்கே கடன் அளிக்கின்றது. சாலைகள் அமைத்தல், கால்வாய்கள் வெட்டுதல், கிணறுகள் வெட்டுதல், சேரிகள் ஒழிப்பு, மின்சார வசதி போன்றவற்றிற்கு இது அதிக அளவில் கடன் வழங்கியுள்ளது.

இச்சங்கம் வழங்கும் கடன்கள் குறிப்பிட்ட திட்டங்களுக்கே பயன்படுத்தப்பட வேண்டுமென்பதில்லை. சமுதாய வளர்ச்சிக்கென எவ்வகைச் செலவையும் மேற்கொள்ளலாம். இச்சங்கத்தில் அங்கம் வகிக்கும் நாடுகளின் சமுதாய முன்னேற்றத்திற்கு இது பெருமளவில் உதவியிருக்கிறது. அந்நாடுகளில் மக்களின் வாழ்வை நலம் பெறச் செய்துள்ளது. இந்தியாவிற்கு பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம் 19 வகைக் கடன்களைக் கொடுத்துள்ளது. இதன் மூலம் சுமார் 675 மில்லியன் டாலர் உதவியை நாம் பெற்றுள்ளோம்.

இவ்வாறு உலக வங்கியால் மேற்கொள்ள முடியாத சிலபணி களை பன்னாட்டு நிதிக்கழகமும், பன்னாட்டு வளர்ச்சிச் சங்கமும்

மேற்கொண்டு வளர்ச்சி குன்றிய நாடுகளின் தொழில் முன்னேற்றத்திற்கு உதவிவருகின்றன. பாதக அயல்நாட்டுச் செலுத்து நிலை அதிகம் ஏற்படாத வகையில் முன்னேற்றத்திற்கான நிதியை வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு 'பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்' அளிக்கின்றது. இவ்வகை முன்னேற்றத்திற்கான கடன்கள் 50 ஆண்டுகளில் திருப்பித்தரத்தக்க வகையில் வட்டியின்றித் தரப்படுகின்றது.

அமெரிக்காவின் ஏற்றுமதி–இறக்குமதி வங்கி (Export-Import Bank of U.S.A.)

வாஷிங்டனில் அமைந்துள்ள இவ்வங்கி அமெரிக்க உடைமையானது. அமெரிக்கப் பொருளாதார பெருமந்தக் காலத்தில் ஏற்றுமதியை ஊக்குவிக்க இது 1934-ஆம் ஆண்டு தொடங்கப் பட்டது. 1000 மில்லியன் டாலர் மூலதனத்தில் அமெரிக்க அரசால் இது ஏற்படுத்தப்பட்டது; பொதுவுடைமை நாடுகள் தவிர பிற நாடுகளுக்குக் கடன் வழங்குகிறது. கொடுக்கப்படும் கடன்களுக்கு அமெரிக்கப் பொருட்களாகப் பெறவேண்டும். இதன் மூலம் வளர்ச்சியடையாத நாடுகள் அமெரிக்காவிடமிருந்து இயந்திரங்கள், கருவிகள், தளவாடங்கள், ஆயுதங்கள் பெறுகின்றன. அமெரிக்காவின் உபரிஉற்பத்தி வெளிநாடுகளுக்கு இவ்வங்கிப் பணியின் மூலம் செல்கின்றது. அமெரிக்க நிறுவனங்களின் தொழில் நுணுக்கப் பணிகளைப் பெறவும் ஏற்றுமதி-இறக்குமதி வங்கி கடனளிக்கின்றது.

இது தொடங்கியகாலம் முதற்கொண்டு பின்தங்கிய நாடுகளாகிய ஆசிய, ஆப்பிரிக்க, இலத்தீன்-அமெரிக்க நாடுகளுக்கு சீரிய முறையில் உதவி அளித்துள்ளது. பிற நாடுகளின் முன்னேற்றத்திற்கு இதன் உதவிகள் கிடைத்தாலும், அமெரிக்காவின் நலனைக்கருதியே இவ்வங்கி தொடங்கப்பட்டது. உற்பத்தி செய்யப்பட்ட பல அமெரிக்கப் பொருட்களுக்கும் இதன்மூலம் தேவைப் பெருக்கம் ஏற்பட்டுள்ளது.

ஐக்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய வேறு இரு முக்கிய அமைப்புக்களும் உள்ளன. அவையாவன :

(i) 'ஐக்கிய நாடுகளின் தொழில்நுட்ப உதவியின் விரிவான திட்டம்' (United Nations Expanded Programme of Technical Assistance- UNEPTA);

(ii) 'பொருளாதார முன்னேற்றத்திற்கான ஐக்கிய நாடுகளின் தனிநிதி' (Special United Nations Fund for Economic Development - SUNFED) ஆகியவையாகும்.

SUNFED ஜனவரி 1959-இல் ஏற்படுத்தப்பட்டது. தொழில் நுட்பக்கல்வி, உழைப்பாளர்களுக்கான பயிற்சி, செய்முறை ஆராய்ச்சிகள், கணக்கெடுப்புகள் போன்ற முதலீடு செய்யப்படுகின்றமைக்கு முன் ஏற்படுத்தத் தேவையான வசதிகளுக்குக் கொடைகள் அளிக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தில் ஏற்படக் கூடிய தடைகளையும் இது நீக்க உதவுகின்றது. உழைப்பின் திறமையை வளர்க்கவும், தொழில்களின் உற்பத்தித் திறனை அதிகரிக்கவும் இது பலவித வசதிகளை ஏற்படுத்தித் தருகின்றது. UNEPTA 'தனிநிதியை' (SUNFED) விட பழைய திட்டமாகும். தனிநிதியைப் போன்றதே ஆனாலும் இது கடன் அளிக்காமல் தொழில்நுட்ப உதவியைத் தருகிறது. இது இந்தியாவின் முன்னேற்றத் திட்டங்களுக்காக 1950 முதல் 1963 வரை ஆலோசனை உதவிக்காகவும், தொழில்நுட்பப் பயிற்சி வசதிகளுக்காகவும் 23 மில்லியன் டாலர் செலவிட்டது.

மேற்கண்ட நிதி நிறுவனங்களைத் தவிர வேறு சில பன்னாட்டு வாணிபத்தை வளர்க்கும் அமைப்புக்களும், நிதிவசதிகளை அளிக்கும் அமைப்புக்களும் உள்ளன. அவை ஸ்டெர்லிங் பிரதேசம், ஐரோப்பிய பொதுச்சந்தை, ஐரோப்பியப் பொருளாதார ஒத்துழைப்பு நிறுவனம், ஐரோப்பியச் சொத்துக்கள் ஐக்கியம், பெனுலக்ஸ் பொருளாதார ஐக்கியம், ஐக்கிய நாட்டுத் தொழில் அபிவிருத்தி மாநாடு, கென்னடிச் சுழல் உடன்பாடு, சுங்கவரி வாணிபப் பொது ஒப்பந்தம் ஆகியவையாகும்.

மேம்பாடடைந்துவரும் நாடுகள் வெளிநாட்டு வாணிபத்தை மேற்கொண்டு, அதன் மூலம் கிடைக்கும் அந்நியச் செலாவணியைக் கொண்டு திட்டமிட்ட வளர்ச்சியைப் பெறுவது நல்லது. வெளிநாட்டு உதவியை எப்போதுமே சார்ந்திருத்தல் கூடாது. அயல்நாட்டு உதவியை அதிகம் பெறாமல், அயல்நாட்டு வாணிபத்தைப் பெருக்கி முன்னேற்றத்தைப் பெறவேண்டுமென்ற கருத்து முன்னேற்றமடைந்துவரும் நாடுகளுக்கிடையே நிலவிவருகின்றது.

### IV. பொருளாதார முன்னேற்றத்திற்கான வெளிநாட்டு உதவியின் அளவை நிர்ணயிக்கும் காரணிகள் (Factors Determining the Amount of Foreign Aid for Economic Development)

வளர்ச்சியடையாத நாடுகளுக்குச் செல்லும் வெளிநாட்டு உதவியின் அளவு பல காரணிகளையும் சார்ந்துள்ளது :

1. முதற் காரணி கிடைக்கக்கூடிய நிதிகளைப் பற்றியதாகும். வளர்ச்சியடைந்த நாடுகள் ஏற்றுமதி செய்வதற்குரிய மூலதன உபரி இருத்தல் வேண்டும். ஆனால், இந்நாடுகளில் உபரி மூலதன

மானது மிக அதிக அளவில் அமைந்திருக்குமெனக் கூறியியலாது. அமெரிக்காவைத்தவிர பிறநாடுகள் மிகக்குறைந்த மூலதனத்தை மட்டுமே அளிக்கத்தக்க நிலையில் உள்ளன. வளர்ச்சியடையாத நாடுகளுக்கு ஆண்டுதோறும் மிக அதிக அளவுக் கடன் தேவைப்படு கின்றது. அமெரிக்காவை நீக்கிவிட்டால், பிற நாடுகள் ஆண் டொன்றிற்கு சுமார் 10.15 பில்லியன் டாலர் என்ற அளவிற்கு மட்டுமே கடன் கொடுக்கத்தக்க நிலையில் உள்ளன. முன்னேற்ற மடைந்த கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளும் தங்கள் முன்னேற்றத் திட்டங்களுக்கு அமெரிக்காவிடமிருந்தும், இங்கிலாந் திடமிருந்தும் கடன் பெறுகின்றன. எனினும், வளர்ச்சியடைந்த செல்வ நாடுகள் உபரி மூலதனத்தைத் திரட்டி வளர்ச்சியடையாத நாடுகளின் மூலதனத் தேவைகளை அளித்தல் அவசியமானதாகும். இதற்கு பன்னாட்டு அளவில் அமைந்துள்ள நிதிக்கழகங்கள் உதவுகின்றன. இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் முன்னேற்றம் பன்னாட்டு நிறுவனங்கள் அளிக்கக்கூடிய நிதியுதவி யைப் பொறுத்தே அமையும்.

2. பொருளாதார முன்னேற்றத்திற்கான வெளிநாட்டு உதவியின் அளவு இயற்கை வளங்கள், பிற வசதிகள் ஆகியவற்றைப் பொறுத்தும் அமையும். வெளிநாட்டு மூலதனத்தைச் சிறப்பாகப் பயன்படுத்தி பொருளாதார முன்னேற்றத்தைப்பெற, மக்கள் வளமும், இயற்கை வளமும் நிரம்பப் பெற்றதாக ஒரு நாடு இருத்தல் வேண்டும். வளங்கள் இல்லாத நாடுகளில் வெளிநாட்டு மூலதனம் முன்னேற்றத்திற்குப் பெருமளவில் உதவமுடியாது. வளங்களின் குறைவான நிலை முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும். மேலும் மக்கள் வளம், இயற்கை வளம் குறைந்த நாட்டில் பெறப்பட்ட வெளிநாட்டு மூலதனத்தைச் சிறப்பாகப் பயன்படுத்த இயலாது. ஆனால், இயற்கை வளங்கள் குறைந்த நாடுகள் ஜப்பானைப் போன்று விரைந்த பொருளாதார முன்னேற் றத்தைப்பெற குறைந்த வாய்ப்பே உண்டு. திறமை குறைந்த உழைப்பாளர்களைத் திறமைமிக்க உழைப்பாளர்களாக பயிற்சியின் மூலம் மாற்றிவிடலாம். ஆனால், மக்கட்தொகை மிகக் குறை வாக உள்ள நாட்டில் எவ்வகையிலும் அதிவிரைவான வளர்ச்சி யைப் பெற இயலாது. ஆக்கத்தின் மிக முக்கியக் காரணியாகிய உழைப்பு போதுமான அளவில் இல்லாவிடில் விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட முடியாத ஒன்றாகிவிடும்.

3. மூன்றாவதாக, வெளிநாட்டு மூலதனத்தை ஏற்கும் திறனைக் கொண்டதாக ஒரு நாட்டின் பொருளாதாரம் அமைய வேண்டும். எந்த அளவிற்கு வேண்டுமானாலும் வெளிநாட்டு மூலதனத்தை ஏற்கும் சக்தி எந்தப் பொருளாதாரத்திற்குமே

இருப்பதில்லை. இதுபற்றி 'பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி' அதனுடைய நான்காவது ஆண்டு அறிக்கையில் குறிப்பிட்டதாவது: "முன்னேற்றத்துறையில் வங்கிநிதியளிப்பதில் பணப் பற்றாக்குறை முக்கியத் தடையாக அமையவில்லை ; உடனடியாக நிறைவேற்றத்தக்க சிறப்பாகத் தயாரிக்கப்பட்டதும், சிறப்பாகத் திட்டமிடப்பட்டதுமான திட்டங்கள் இல்லாமையே வங்கி நிதியளிப்பதில் தடையாக உள்ளது." திட்டங்களைத் தொடங்கினால் மட்டும் போதாது ; அவை தொடங்கப்பட்டு உற்பத்தியைத் தரத்தக்கவைகளாகவும் இருக்க வேண்டும்.

வளர்ச்சியடையாத நாடுகளின் மூலதனத்தை ஏற்கும் திறன் அந்நாடுகளின் வளங்களைப் பொறுத்ததாகும். சில வளங்கள் வசதிகள் இன்மையால் பயன்படுத்தப்படாமலேயே இருக்க வகையுண்டு. வளர்ச்சியடையாத நாடுகள் மூலதனத்தை ஏற்கும் திறனைப் பெருக்க, முதலீட்டுத் திட்டங்களை மேற்கொள்வதற்குமுன் சரியான, போதுமான அளவிற்கு வசதிகளை மேம்பாடு செய்துகொள்ள வேண்டும். இவ்வசதிகளைப் பெருக்கிக்கொள்ள பன்னாட்டு நிதி நிறுவனங்களின் உதவியை நாடலாம். SUNFED போன்றவை இவ்வகை வசதிகளை மேம்பாடு செய்யும் நிதி நிறுவனங்களாகும். எல்லாவற்றையும்விட வெளிநாட்டு உதவி சரியான காலத்தில் முற்றிலுமாகப் பயன்படுத்தப்பட வேண்டியது இன்றியமையாதது.

ஒரு நாட்டில் மூலதனத்தை ஏற்கும் திறன் கீழ்க்கண்ட காரணிகளைச் சார்ந்து அமையுமென பேராசிரியர் ஹிக்கின்ஸ் குறிப்பிடுகின்றார். அவை சிலவகை பயன்படுத்தப்படாத சக்தி ; தொழில் நுணுக்க முன்னேற்றத்திற்கான வாய்ப்புகள் ; சிறப்பாகத் திட்டப்பெற்ற முன்னேற்றத்திட்டம் ; குறைந்த அளவு உள்நாட்டு நிதிவசதிகள் ; விரைவாகவும், திறமையாகவும் திட்டங்களை நிறைவேற்றும் நிர்வாகிகள் ; மக்களின் ஆதரவைக் கொண்டு இணைந்த உறுதியான அரசு ; கலாச்சார மாற்றத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் இணக்கமான சமுதாயம் ; வேளாண்மையினின்றும் தொழில் துறைக்குச் செல்லவிரும்பும் மக்கள் ; தீவிரமான கல்வித்திட்டமும், உயர்ந்த அளவு கல்வியறிவும், தொழில் நுணுக்க அறிவும், முன்னேற்ற எண்ணமும் கொண்ட மக்கள் ஆகியவைகளாகும்.[1]

4. நான்காவது காரணியாக அமைவது, மூலதனத்தைப் பெறுகின்ற நாட்டின் திருப்பித் தருகின்ற திறனாகும். இது ஒரு

1 Benjamin Higgins, Economic Development – Principles, Problems and Policies, p. 619-20.

முக்கியமான பிரச்சினையாக அமைகின்றது. வளர்ச்சியடையாத நாடுகள் கடன் பெறுகின்ற அதிக அளவு நிதிகளைத் திருப்பித் தருவது சுமையாக இருக்கின்றது. அந்நாடுகளின் வறிய நிலையே இதற்குக் காரணமாகும். இந்நாடுகளின் 'கடன் மீட்கும் திறன் ஏற்றுமதித் திறனைச் சார்ந்தும், அந்நியச் செலாவணியை அதிக அளவு பெருக்குகின்ற நிலையைக் கொண்டும் அமையும். இது குறித்து டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ், நாராயண் இருவரும் கூறுவதாவது, "குறுகிய காலத்தில் மூலதனத்தைத் திருப்பித் தருகின்ற திறன் முதலீடுகளின் தன்மையைப் பொறுத்தும், அந்நியச் செலாவணி பயன்படுத்தப்பட்ட நிலையைக் கொண்டும் அமையும். அவை ஏற்றுமதிப் பெருக்கத்தையோ, இறக்குமதிக் குறைவையோ தரலாம். கடன் மீட்கும் திறன் நீண்ட காலத்தில் பொருளாதாரத்தின் மொத்த உற்பத்தித் திறனைக் கொண்டும், வரிவிதிப்பு முறைகள், விலைகள் போன்றவற்றைப் பொறுத்தும் அமையும். வரிமுறை போதுமான நிதிவசதியை அளிப்பதாக இருக்கவேண்டும். நாட்டின் வசதிகள் ஏற்றுமதிப் பெருக்கத்திற்கோ அல்லது இறக்குமதிக் குறைப்பிற்கோ பயன் படுத்தப்படுவது அவசியமானது."

எளிய முறையில் திருப்பித்தரத்தக்க நீண்டகாலக் கடன்களை மீட்பது எளிதானதாகும். நீண்ட காலத்தில் கடன்பெற்ற நாடுகள் யாவுமே உற்பத்தியை உயர்த்தி விடுவதால் கடனைத் திருப்பித் தருவது எளிதாகின்றது. பொதுவாக, சமுதாய அவசியத் தேவைகளாகிய கல்வி, பொது ஆரோக்கியம், சமுதாய வளர்ச்சித் திட்டம், ஆராய்ச்சி ஆகியவற்றின் முன்னேற்றத்திற்குக் கொடைகள் அளிக்கப்படுகின்றன. வேறுவகைப்பட்ட தொழில் துறைகளுக்குக் கடன்கள் தரப்படுகின்றன. கடனைப்பெற்ற நாடுகள் மூலதனத்தைச் சிறப்பாக உற்பத்திப் பணிகளில் ஈடுபடுத்தி அதிக உற்பத்தியைப் பெறவேண்டும். அதிக உற்பத்தியே கடனைத் தீர்க்க உதவும் ஒரே வழி.

5. இறுதியாக, மூலதனத்தைக் கடனாகப் பெற்ற நாட்டிற்கு முன்னேற வேண்டுமென்ற விருப்பும், முயற்சியும் இருத்தல் இன்றியமையாததாகும். இது பொருளாதார முன்னேற்றத்தில் வெளிநாட்டு உதவியின் அளவை நிர்ணயிக்கும் ஒரு காரணி ஆகும். வெளிநாடுகளினின்றும் பெறப்பட்ட மூலதனமானது பயனளிக்க வேண்டுமென்றால் மூலதனத்தைப் பெற்ற நாட்டில் முன்னேற்றத் திற்கான முயற்சி இருக்கவேண்டும். வெளிநாட்டு மூலதனம் ஒரு நாட்டின் முன்னேற்றமடைய வேண்டுமென்ற விருப்பத்தைத் திரட்ட உதவுதல் அவசியமாகும். மூலதனத்திரட்சியைப்

போன்றே இவ்வகை 'விருப்பத்திரட்சியும்' அதிக முதலீட்டிற்கு ஊக்கமளித்து உற்பத்தியின் அளவை உயர்த்த உதவும்.

## V. இந்தியாவில் வெளிநாட்டு மூலதனம்

ஒரு நாட்டின் தொழில் முன்னேற்றத்திற்கும், அந்நாட்டின் அரசு பின்பற்றும் தொழிற்கொள்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஏப்ரல் 6, 1948-ஆம் ஆண்டின் தொழிற் கொள்கையில் வெளிநாட்டு மூலதனத்தைப்பற்றிய இந்திய அரசின் கொள்கை கூறப்பட்டது. பின்வரும் நிலைகளை அது உணர்த்தியது :

"(1) தேசிய நலனைக் கருதி வெளிநாட்டு மூலதனத்தையும், நிறுவனங்களையும் கவனமாக ஒழுங்குபடுத்த வேண்டும். முக்கிய உடைமைகளும், கட்டுப்பாடுகளும் இந்தியர்களிடம் இருத்தல் அவசியம். வெளிநாட்டு வல்லுநர்களை மாற்ற உள்நாட்டு மக்களுக்குத் தொழில்நுட்பப் பயிற்சி அளிக்கவேண்டும்.

(2) தொழிற் கொள்கையைப் பின்பற்றுவதில் வெளிநாட்டு நிறுவனங்களுக்கும் இந்திய நிறுவனங்களுக்கும் இடையே எவ்விதப் பாகுபாடும் செய்யப்பட மாட்டாது.

(3) நாட்டின் அந்நியச் செலாவணி நிலைக்கு ஏற்ப மூலதனத்தையும், இலாபத்தையும் பெற வெளிநாட்டு நிறுவனங்களுக்கு வசதிகள் அளிக்கப்படும்.

(4) தேசிய உடைமையாக்கினால் சமமான, நியாயான இழப்பீட்டுத் தொகை வழங்கப்படும்."

இத்தொழிற் கொள்கையை அரசு இன்றும் பின்பற்றி வருகின்றது. வெளிநாட்டினருக்கு முதலீடு செய்ய வசதிகள் அளிக்கப்படுகின்றன. கூட்டு முயற்சியிலும் சில நிறுவனங்கள் தொடங்கப்பட்டுள்ளன. இவை யாவும் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையெனக் கருதப்படுகின்றது. மேலும், இவ்வகை நிறுவனங்கள் அதிக அளவு மூலதனத் தேவையைக் கொண்டவைகளாகவும், முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளைப் பின்பற்றத் தேவையானவைகளாகவும் இருக்கின்றன. இவை ஏற்றுமதிப் பொருட்களையும், இறக்குமதிப் பொருட்களையும் உற்பத்தி செய்பவைகளாக உள்ளன. இந்தியத் தொழில் முயல்வோருக்குப் பயிற்சி அளிப்பவைகளாகவும், தொழில் நுணுக்க அறிவை உழைப்பாளர்களுக்குத் தருபவைகளாகவும் அவை அமைகின்றன. மேலும், அந்நியச் செலாவணியை ஈட்டித் தருபவைகளாகவும் அவை இருக்கின்றன.

உள்நாட்டு நிறுவனத்தோடு இணைந்த வெளிநாட்டு நிறுவனம் தொழில்நுட்ப உதவியை அளிப்பதற்கும், கண்டுபிடிப்பு உரிமைகளை வெளிப்படுத்துவதற்கும், உற்பத்தியில் புதிய முறைகளைப் புகுத்துவதற்கும் 'உரிமைப்பங்கு' (Royalty) பெறுகின்றது. வெளிநாட்டு முதலீட்டாளர்கள் பெறும் இந்திய வருவாய் மீது விதிக்கப்படும் அதிக பட்ச வரி 70 சதவிகிதமாகும். ஆனால், சிலவற்றிற்கு வரிவிலக்கும் அளிக்கப்படுகின்றது. தொழிற்சாலைகளில் இயந்திரங்களை நிறுவுவதற்கான உதவியைச் செய்யும்போதும், இந்தியத் தொழிலுக்கு வெளிநாடுகளிலிருந்து உற்பத்திப் பணிகளுக்கான பொருட்களை வாங்கும்போதும், உள்நாட்டு நிறுவனத்தோடு இணைந்த வெளிநாட்டு நிறுவனம் உற்பத்திச் செலவின் அளவிலேயே பொருட்களை விற்பனை செய்யும்போதும் வரிவிலக்குகள் தரப்படுகின்றன. 'உரிமை அனுமதி' (Licence) வழங்கப்படும்போது தொழில் அமைச்சகம் வெளிநாட்டு நிறுவனம் உள்நாட்டு நிறுவனங்களோடு போட்டியிடாததாக இருக்க வேண்டுமெனக் கருதுகின்றது. ஆடம்பரப் பொருட்களின் உற்பத்திக்கும் உரிமை அனுமதி அளிக்கப்படுவதில்லை. முற்றிலும் வெளிநாட்டிலேயே உற்பத்தி செய்யப்பட்டு, விற்பனைக்கான ஆயத்தங்களை உள்நாட்டில் செய்வதையும் தொழில் அமைச்சகம் அனுமதிப்பதில்லை.

1962-ஆம் ஆண்டின் இறுதியில் இந்திய நிறுவனங்களில் பயன்படுத்தப்பட்ட வெளிநாட்டு மூலதனம் ரூ. 735.5 கோடி என்ற மதிப்பைக் கொண்டதாக இருந்தது. இதில் வெளிநாட்டுத் தனியார் முதலீடு ரூ.625.5 கோடி என்ற அளவிற்கும், வெளிநாடுகளின் அரசுகள் அளித்த மூலதனம் ரூ. 110 கோடி என்ற அளவிற்கும் இருந்தன. வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை அதிகம் அளித்த நாடாக இங்கிலாந்து இருந்தது. அளித்த மூலதனம் ரூ.482.8 கோடியாகும். அமெரிக்காவின் தனியார் முதலீடு ரூ 79.4 கோடியாகவும், பிற நாடுகளின் பங்கு ரூ. 63.3 கோடியாகவும் இருந்தன. 1959-ஆம் ஆண்டிற்கும் 1962-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தைப் பெறுவதில் வேறுபாடுகள் இருந்தன. 1959-இல் ரூ. 25.9 கோடியும், 1960-இல் ரூ. 63.2 கோடியும், 1961-இல் ரூ 35.6 கோடியும், 1962-இல் ரூ.38.7 கோடியும் வெளிநாட்டுத் தனியார் மூலதனமாகப் பெறப்பட்டன.

இந்திய அரசு வெளிநாட்டுத் தனியார் மூலதனத்திற்குச் சாதகச் சூழ்நிலைகளை ஏற்படுத்தித் தந்தாலும், போதுமான அளவு மூலதனம் இதன்மூலம் கிடைப்பதில்லை. 'தொழில் முன்னேற்றத்திற்கும், வாணிபத்திற்குமான இந்திய-ஜப்பான் கூட்டுக்குழு'

(The India - Japan Joint Committee on Trade and Industrial Development) சமீபத்தில் இந்தியாவில் ஜப்பானின் முதலீடு அதிகம் இல்லாமைக்கும், பொதுவாக வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை இந்தியா அதிகஅளவில் பெற முடியாமைக்கு மான காரணங்களை பின்வருமாறு தந்தது :

(1) அந்நியச் செலாவணி பற்றாக்குறையும், பொருட்களின் விலைகள் தொடர்ச்சியாக உயர்ந்துவருகின்ற நிலையும் புதிய முயற்சி களைக் கொண்ட முதலீடுகளுக்குப் பொருளாதாரத் தடைகளாக உள்ளன.

(2) இந்திய ரூபாய் நாணய மதிப்புக் குறைப்பு மறுபடியும் செய்யப்படும் என்ற அச்சம் அமைந்துள்ளது.

(3) வரிவிதிப்பு விகிதங்கள் உயர்வாக உள்ளன. குறிப்பாக 'உரிமைப் பங்கின்' மீதான 50 சதவிகித வரியைக் கூறலாம்.

(4) இறக்குமதிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியும் இறக்கு மதி செய்யத் தேவையான பொருட்களும், பாகங்களும் கிடைப் பதில்லை.

(5) வெளிநாட்டவர்கள் வியாபார நோக்கங்களோடு நீண்ட காலம் இந்தியாவில் தங்குவதற்கான அனுமதியைப் பெறுவதும் கடினமாக உள்ளது.

(6) வியாபாரச் சட்டங்களையும், ஒழுங்கு முறைகளையும் அறிந்து கொள்ளத் தேவையான அடிப்படை விவரங்களும் கிடைப் பதில்லை.

இவற்றின் காரணமாக ஜப்பான், மற்றும் பிறநாடுகளின் தனியார் மூலதனமானது இந்தியாவிற்கு அதிக அளவில் கிடைப் பதில்லை. மேலே குறிப்பிடப்பட்டுள்ள சிக்கல்களை முடிவுக்குக் கொண்டுவருவதன் மூலமே வெளிநாட்டுத் தனியார் மூலதனத்தை பெருமளவில் பெற இந்தியாவால் முடியும்.

இவ்விததனியார் முதலீடுகளைத்தவிர, வெளிநாட்டு உதவி பன்னாட்டு அரசுகளின் கடன், கொடை அளிப்புகளின் மூல மாகவும் பெறப்படுகின்றது. பெரும்பகுதி கடனாகவும், குறிப்பிட்ட குறைந்த அளவிற்குக் கொடையாகவும் வெளிநாட்டு உதவி இந்தியாவிற்குக் கிடைக்கின்றது. பன்னாட்டு நிதி நிறுவனங்களும் அதிக அளவு மூலதனத்தை நமது திட்டங்களை நிறைவேற்றத் தந்துள்ளன. இந்தியாவின் திட்டமிட்ட வளர்ச்சியில் வெளிநாட்டு உதவியின் பங்கு குறிப்பிடத்தக்தாக உள்ளது.

முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களின் மொத்த முதலீட்டின் அளவில் ஐந்தில் ஒரு பகுதி வெளிநாட்டுஉதவியின் மூலம் பெறப்பட்டது. முதல் ஐந்தாண்டுத்திட்டத்தில் இந்தியா ரூ.201.67 கோடி என்ற அளவிற்கு வெளி நாட்டு உதவியைப் பயன் படுத்தியது. இரண்டாவது திட்டத்தில் ரூ.1432.22 கோடியும், மூன்ருவது திட்டத்தில் ரூ.2423 கோடியும் வெளிநாட்டு உதவி பயன்படுத்தப்பட்டது. முதல் இரண்டு 'ஆண்டுத் திட்டங்களிலும்' (Annual Plans) பயன்படுத்தப்பட்ட வெளிநாட்டு உதவியின் அளவு ரூ. 1779 கோடியாகும். மூன்ருவது ஆண்டுத்திட்டத்தின் வெளிநாட்டு உதவிக்கான குறியிலக்கு ரூ.876 கோடியாக நிர்ணயிக்கப்பட்டது.

நான்காவது ஐந்தாண்டுத்திட்டத்தில் வெளிநாட்டு உதவியின் அளவு ரூ.2514 கோடி என நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது ஐந்தாண்டுத்திட்ட வெளிநாட்டு உதவியைவிடச் சுமார் இரு மடங்கு அதிகமான உதவியை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் பெற்ருேம். இரண்டாவது திட்டத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களில் 27 சதவீதம் வெளிநாட்டு உதவியின் மூலம் பெறப்பட்டது. மூன்ருவது திட்டக்காலத்தில் இது 37 சதவீதமாக உயர்ந்தது. அரசின் வருவாய்க் கண்ணேட்டத்தில் கூறும்போது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வெளிநாட்டு உதவியின் மூலம் பெறப்பட்டதொகை அரசின் வருவாயில் 29 சதவீதமாக இருந்தது. இரண்டாவது திட்டத்தில் இது 20 சதவீதமாக மட்டுமே அமைந்திருந்தது. நம் நாட்டில் வெளிநாட்டு உதவி தலா ஒருவருக்கு மிகக் குறைந்த அளவிலேயே கிடைக்கின்றது. மூன்ருவது திட்டக்காலத்தில் இதன் அளவு ரூ. 6.33 என்ற நிலையிலிருந்து ரூ 9.71 என்ற நிலக்கு உயர்ந்தது. இது மற்ற பின்தங்கிய நாடுகள் பெறுகின்ற தலா ஒருவருக்கான வெளிநாட்டு உதவியைக் காட்டிலும் குறைவானதாகும். இக்குறைந்த நிலக்கு விரைவான மக்கட்தொகைப் பெருக்கமே முக்கிய காரணமாகும்.

மே 31, 1968 வரை இந்தியா பெற்ற அயல் நாட்டு உதவி ரூ.11,896 கோடியாகும். இதில் ரூ 9,892 கோடி செலவிடப்பட்டு விட்டது. பெறப்பட்ட கடன்கள் வெளிநாட்டுப் பணத்தில் திருப்பித் தரப்படலாம். உள்நாட்டுப்பணம் அல்லது ஏற்றுமதிப் பொருட்கள் மூலமாகவும் கடன்களை அளித்த நாடுகளுக்குக் கடன்களைத் திருப்பி அளிக்கலாம். மே 31, 1968 வரை உலக வங்கியும், பன்னுட்டு வளர்ச்சிச் சங்கமும் (International Development Association) ரூ. 1422 கோடி கடன் அளித்தன. அத்தொகையானது சாலைகள், மின்சாரத்திட்டங்கள், துறைமுகங்கள், இரும்பு உற்பத்தி, இருப்புப்பாதைப் போக்குவரத்து, நீர்ப்பாசனம்,

செய்தித் தொடர்பு வசதிகள், நிலக்கரித்தொழில், வேளாண்மை இயந்திரங்களின் இறக்குமதி போன்றவற்றிற்குச் செலவிடப் பட்டது.

ஜூன் 1969 வரை அமெரிக்கா அளித்த உதவி ரூ.788.48கோடி என்ற அளவில் இருந்தது. இவ்வுதவியானது வேளாண்மை, கல்வி, ஆரோக்கியம், போக்குவரத்து, நிலக்கரித் தொழில், ஆகாய விமானப் போக்குவரத்து, இரயில்வே மற்றும் வாகனங்களின் திட்டங்கள், இரசாயன அலுமினியத் தொழில்கள், அணு, நீர், விசை மின்சக்திகளின் உற்பத்தி ஆகியவற்றிற்குப் பயன்படுத்தப் பட்டது. ரஷ்யாவின் கடன்களில் ஏற்றுமதிப் பொருட்களாக அளிக்க வேண்டியவை அதிகமானவைகளாகும். மே 31, 1968 வரை சோவியத் ரஷ்யா ரூ 1032 கோடி கடன்களை அளித்துள்ளது. இக்கடன்கள் 'பிலாய்', 'பொகாரோ' எஃகுத் தொழில்களை அமைக்கவும், எண்ணெய் சுத்திகரிப்புச் சாலைகள், பெரிய இந்திரங்கள் அமைப்பு, மருந்துகள் உற்பத்தி மற்றும் பல முன்னேற்றத்திட்டங் களுக்கும் செலவழிக்கப்பட்டன.

அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி, சோவியத் ரஷ்யா, நார்வே, கொழும்புத் திட்ட நாடுகள் ஆகியவற்றிடமிருந்து இந்தியா கொடைகளைப் பெற்றுள்ளது. மார்ச் 31, 1967 வரை கொழும்புத் திட்டத்தின் மூலம் ரூ. 382.49 கோடியும், அமெரிக்காவிடமிருந்து ரூ. 269 20 கோடியும் கொடைகளாக இந்தியாவிற்கு அளிக் கப்பட்டன. ஐக்கிய நாடுகளின் தனி நிதி (SUNFED) அளித்த கொடையாகிய 40 மில்லியன் டாலர்கள் தவிர்த்து இந்தியா பெற்றுள்ள மொத்தக் கொடைகளின் அளவு ரூ. 671.55 கோடி யாகும். ஏப்ரல்1951 முதல் மே 1968 வரை பலநாடுகளிடமிருந்து இந்தியா பெற்றுள்ள வெளிநாட்டு உதவியின் அளவு பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளது:

**இந்தியாவின் முன்னேற்றத்திற்கு உதவியளிக்கும் முக்கிய நாடுகள்**
**(ஏப்ரல் 1951 முதல் மே 1968 வரை)**

| நாடு | உதவியளிக்கும் நாடு அங்கீகரித்த மூலதன அளவு (கோடி ரூபாயில்) | இந்தியா பயன் படுத்திய மூலதன அளவு (கோடி ரூபாயில்) |
|---|---|---|
| அமெரிக்கா ... | 6,361 | ... 5,847 |
| மேற்கு ஜெர்மனி ... | 802 | ... 688 |
| இங்கிலாந்து ... | 260 | ... 553 |
| சோவியத் ரஷ்யா ... | 1,032 | ... 546 |
| கனடா ... | 501 | ... 385 |
| ஜப்பான் ... | 232 | ... 254 |
| பிரான்ஸ் ... | 156 | ... 67 |
| ஆஸ்திரேலியா ... | 57 | ... 54 |
| செக்கோஸ்லோவாக்கியா ... | 99 | ... 44 |
| நெதர்லாந்து ... | 52 | ... 37 |
| யூகோஸ்லாவியா ... | 94 | ... 26 |
| போலந்து ... | 65 | ... 21 |
| இத்தாலி ... | 153 | ... 20 |
| ஸ்விட்ஜர்லாந்து ... | 36 | ... 20 |
| ஆஸ்திரியா ... | 21 | ... 14 |
| பெல்ஜியம் ... | 21 | ... 10 |
| நார்வே ... | 9 | ... 9 |
| டென்மார்க் ... | 14 | ... 7 |
| நியூசிலாந்து ... | 6 | ... 5 |
| ஸ்வீடன் ... | 7 | ... 3 |
| ஹங்கேரி ... | 25 | ... ... |
| பல்கேரியா ... | 11 | ... ... |
| **பன்னாட்டு நிதி நிறுவனங்கள்:** | | |
| உலகவங்கி ... | 756 | ... 650 |
| பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம் ... | 666 | ... 632 |
| மொத்தம் ... | 11,896 | 9,892 |

வெளிநாட்டு உதவியைப் பெறுவதில் உள்ள முக்கியச் சிக்கல் கடன்சுமை பெருகுகின்ற நிலையாகும். கடனைத் திருப்பித்தர இயலாதநிலை, மேலும் முன்னேற்றத்திற்கான கடனைப் பெற முடியாத நிலையை ஏற்படுத்துகிறது. ஏற்றுமதிகளின் மூலம் பெறப்பட்ட வருவாய்ப் பெருக்கமும் கடனைத் திருப்பித்தர போதுமானதாக இருப்பதில்லை. அதிக வெளிநாட்டு உதவியைப் பெறும்போது அதிக ஏற்றுமதியைச் செய்வதும் அவசியமாகின்றது. ஆனால், எவ்விதத் தீவிர முயற்சிகளாலும் கடனைத் திருப்பித் தருவதற்குத் தேவையான நிதியைப் பெறும் அளவிற்கு வளர்ச்சியடையாத நாடுகளில் ஏற்றுமதி பெருகுவதில்லை. வெளிநாட்டுப் பொது மூலதனத்தின் அளவில் 8 சதவீதம் வட்டியாகத் தரவேண்டிய நிலை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 19 சதவீதமாக உயர்ந்தது. வெளிநாட்டுத் தனியார் மூலதனத்திற்கான இலாபத்தையும் கணக்கிட்டால், இந்தியா கொடுக்க வேண்டிய கடனுக்கான வட்டி மிக உயர்ந்த அளவில் அமையும். 1969-ஆம் ஆண்டிற்கும், 1974-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் நாம் அளிக்க வேண்டிய வெளிநாட்டுக் கடனுக்கான தொகை ரூ. 2,280 கோடியாகும். இதைத்தவிர 'பன்னாட்டுப் பணநிதிக்கு' (International Monetary Fund - IMF) இந்தியா இக்காலத்தில் கடனுக்காக அளிக்க வேண்டிய தொகை ரூ 280 கோடியாகும். இந்நிலையில் இவ்வித அதிக அளவு வெளிநாட்டுக் கடன்கள் பாதகச் செலுத்துநிலையை மேலும் மோசமடையச் செய்யும். கடன்களுக்காகச் செலுத்த வேண்டிய தொகைகளே இந்தியாவின் அயல் நாட்டுச்செலுத்து நிலையில் பாதக நிலையை மேலும் தீவிரமாக்குமெனலாம்.

திட்டங்களை மேற்கொள்ளும் நிலையால் வெளிநாட்டுக் கடனின் சுமையானது பெருகி வருகின்றது. இக்கடனைத் திருப்பித் தருவதில் உள்ள கடினநிலை ஒவ்வொரு திட்டத்திலும் உணரப்படுகின்றது. இந்தியா பெறுகின்ற வெளிநாட்டுக் கடனில் உள்ள குறை என்னவென்றால், பெரும்பகுதிக் கடனை மூலதனம் அளித்த நாட்டின் பணத்தில் திருப்பித்தர வேண்டுமென்பதாகும். தவிர, சிலவகைக் கடன்கள் குறிப்பிட்டத் திட்டங்களுக்கு மட்டுமே தரப்படுகின்றன. கடனை அளிக்கின்ற நாடு அக்கடனை தன்னுடைய உற்பத்திப் பொருட்களாகவும் தருகின்றது. இந்நிலையால் கடன் பெறுகின்ற நாட்டின் பொருட்களை வாங்கும் செலவு 30 சதவீதம் அதிகரிப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. கடனைப் பெறுகின்ற நாடு தரமான பொருட்களை குறைந்த விலைக்குப் பெற முடிவதில்லை. கருவிகளையும், பொருட்களையும் அனுப்புவதில் காலதாமதம் ஆகின்றது. இதனால் முன்னேற்றத் திட்டங்களை நிறை

வேற்றுவது தடைப்படுகின்றது. மேலும், அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்தை முற்றிலுமாகப் பயன்படுத்த முடியாத நிலை இதனால் ஏற்படுகிறது. மேற்கண்ட அட்டவணையின் மூலமாகவே இவ்விதச் சிக்கல் இந்தியாவில் அமைந்துள்ளது என்பதை உணரலாம். இந்தியா மே 1968 வரை பெற்ற வெளிநாட்டு உதவியாகிய ரூ 11,896 கோடியில் செலவிடப்பட்டுள்ள தொகை ரூ. 9,892 கோடி ஆகும்.

ஜூலை 1965-இன் 'முன்னேற்ற உதவிக்குழு' (Development Assistance Committee) வளர்ச்சியடையாத நாடுகளின் வெளி நாட்டுக் கடன் சுமையைக் குறைக்க கீழ்க்கண்ட வழிமுறைகளைப் பின்பற்றலாமென்று கருத்து தெரிவித்தது :

(i) கடனைத் திருப்பித் தருவதற்கான காலத்தை நீடிப்பது ;

(ii) கடன்களைப் புதிப்பித்து எளிய முறைகளில் அளிப்பது ;

(iii) வெளிநாட்டு உதவியின் அளவில் 70 முதல் 80 சத வீதத்தைக் கொடையாகத் தருவது ;

(iv) 3 சதவீத வட்டி கொண்ட நிபந்தனையற்ற கடன்களை 25 ஆண்டுகளில் திருப்பித்தரத் தக்கவகையில் கொடுப்பது ; முதல் 7 ஆண்டுகளுக்கு கடன்களைத் திருப்பித்தரத் தேவையில்லாத நிலையை ஏற்படுத்துவது.

சமீப காலத்தில் இந்தியாவிற்குக் கடனளிக்கும் நாடுகளில் இங்கிலாந்தும், கனடாவும் வட்டியில்லாத கடன்களையும், வட்டிக் குறைவான கடன்களையும் அளித்து வருகின்றன. இந்தியாவின் கடன் சுமையைக் குறைக்க உதவும் இந்நாடுகளைப் பிறநாடுகளும் பின்பற்றலாம். 1966-ஆம் ஆண்டுவரை கனடா அது அளித் திருந்த கடனைத் தள்ளுபடி செய்துவிட்டது. 1965-66-இல் இங்கிலாந்து மூன்றுவித வட்டியில்லாத கடன்களை ரூ. 28.6 கோடி என்ற அளவிற்கு அளித்துள்ளது.

மேம்பாடடைந்த நாடுகளின் கடன் அளிக்கின்ற நிலை பின் தங்கிய நாடுகளின் வளர்ச்சிக்கு மட்டும் உதவுவது கிடையாது ; வளர்ச்சியடைந்தநிலை மேம்பாடடைந்த நாடுகளில் நிலைத்திருக் கின்றமைக்குக் காரணம் அவை அளிக்கின்ற கடனுமாகும். வளர்ச்சி குன்றிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவுவது அவற்றின் முதல் நோக்கமாக இருப்பதில்லை. அந்நாடுகள் தங்களின் வளர்ச்சி நிலைக்கவும், விரிவுபட்டு விரைவு படவும் வளர்ச்சியடையாத நாடுகள் உதவும் என்பதை உணர்ந்தே உள்ளன.

இந்தியா சுதந்திரமடைவதற்கு முன் இங்கிலாந்து நாட்டினர் இங்கு பெருமளவு முதலீட்டைச் செய்தனர். அரசின் தொழிற் பாதுகாப்புக் கொள்கையில் நன்மைபெற்ற பல வெளிநாட்டு நிறுவனங்கள் இருந்தன. இந்நிலையில் வெளிநாட்டு மூலதனத் திற்கு நல்ல வரவேற்பு இந்தியாவில் இக்காலத்தில் இருந்தது எனலாம். 1914-இல் இந்தியாவில் இருந்த வெளிநாட்டு மூலதனத்தின் அளவு 29.8 கோடிபவுன் ஆகும். 1932-33-இல் இது 83.1 கோடிபவுனுக அதிகரித்தது. 1947-இல் நாடு சுதந்திர மடைந்தபொழுது வெளிநாட்டு முதலீட்டின் மதிப்பு ரூ. 940.62 கோடி எனவும், கடன் பத்திரங்களின் மதிப்பு ரூ. 102. 53 கோடி எனவும் கணக்கிடப்பட்டது. வெளிநாட்டு மூலதனத்தை எந்நாட் டினரும் விரும்புவதில்லையென்ருலும், வளர்ச்சியடையாத நாடு களின் முன்னேற்றத்திற்கு அது தவிர்க்க முடியாதது.

1947-ஆம் ஆண்டிற்குப்பின் சுதந்திர அரசு கட்டுப்பாடு களோடு வெளிநாட்டு உதவியைப் பெறத் தொடங்கியது. இந்தியா பெறுகின்ற வெளிநாட்டு உதவியில் 61.4 சதவீதம் கடனுகவும், 7.6 சதவீதம் கொடை அல்லது மானியமாகவும் (Grant), 31 சதவீதம் அமெரிக்கப் பொதுச் சட்ட உதவியின் மூலமும் பெறப் படுகின்றது.

1951 முதல் 1966 வரை இந்தியா பெற்ற வெளிநாட்டு உதவி ரூ. 4,514 கோடியாகும். இதில் 54 சதவீத உதவியை அளித்தது அமெரிக்காவாகும்; உலகவங்கி 12.8 சதவீதமும், மேற்கு ஜெர்மனி 7.6 சதவீதமும், இங்கிலாந்து 6.5 சதவீதமும், ரஷ்யா 6.2 சதவீத மும், ஜப்பான் 2.5 சதவீதமும் அளித்தன. இந்தியாவிற்குக் கிடைத்த மூலதனம் முற்றிலும் பயன்படுத்தப்படவில்லை என் பதைக் கீழ்க்கண்ட அட்டவணையின் மூலம் அறியலாம் :

| திட்டம் | பெறப்பட்ட வெளி நாட்டு உதவி (கோடி ரூபாயில்) | பயன்படுத்தப் பட்ட வெளி நாட்டு உதவி (கோடி ரூபாயில்) |
|---|---|---|
| முதல் ஐந்தாண்டுத் திட்டம் ... | 381.8 ... | 202 |
| இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ... | 2,551.1 ... | 1,432 |
| மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் ... | 5,872.6 ... | 4,514 |

வெளிநாட்டுத் தனியார் முதலீட்டின் அளவு மிகக் குறைவான அளவிலேயே உள்ளது. இங்கிலாந்தும், அமெரிக்காவும் இதில்

பெரும்பங்கைக் கொண்டுள்ளன. ஆங்கிலேயர் ஆதிக்கத்தின் கீழிருந்த நாடாகையால் இன்னும் இந்தியாவில் இங்கிலாந்தின் தனியார் மூலதனமே அதிக அளவில் உள்ளது.

திட்டங்களை நிறைவேற்ற வெளிநாட்டு மூலதனம் தேவை யென்பதை அரசு உணர்ந்துள்ளது. வெளிநாட்டு மூலதனம் இயந்திரங்கள், கருவிகள், தளவாடங்கள் போன்ற தொழில் வளர்ச்சிக்குத் தேவையான பொருட்களைப் பெறவே பயன்படுத்தப் படுகின்றது. தனியார் முதலீட்டைவிட வெளிநாடுகளின் பொதுக் கடனையே இந்திய அரசு விரும்புகின்றது.

வெளிநாட்டு மூலதனத்தைப் பெற்றமையால் இந்தியப் பொருளாதாரத்தில் சில விளைவுகள் ஏற்பட்டுள்ளன. சிறப்பான முன்னேற்றம் நம்முடைய பொருளாதாரத்தில் ஏற்பட வெளி நாட்டு மூலதனம் உதவி உள்ளது. அவையாவன :

(1) அயலகச் செலாவணிப் பற்றுக்குறை நிலையைத் தீர்க்க வெளிநாட்டு மூலதனம் உதவியது. நம் நாட்டின் ஏற்றுமதியைப் பெருக்கி அதன் மூலம் அந்நியச் செலாவணியைப் பெற்று திட்டங்களை மேற்கொள்வது எளிதானதன்று. வளர்ச்சி யடையாத நாடு முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்து தொழில் முன்னேற்றத்தைப் பெற வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுதல் தவிர்க்க இயலாதது.

(2) வெளிநாட்டு மூலதனத்தைப் பயன்படுத்தியமையால் இந்தியாவில் முதலீட்டு வீதமானது உயர்ந்துள்ளது. 1951-இல் தேசிய வருவாயில் 5 சதவீதமே முதலீடு செய்யப்பட்டது; 1961-இல் இது 11 சதவீதமாக உயர்ந்து விட்டது. வெளிநாட்டு மூலதனத்தினால் மேற்கொள்ளப்பட்ட முதலீடுகளால் தேசிய ஆக்கம் அதிகரித்தது. மக்களுடைய வருவாயும், அரசின் வருவாயும், பெருகின. இதன் விளைவால் சேமிப்பு வீதமும், முதலீட்டு வீதமும் ஓரளவு உயர்ந்தன எனலாம். வளர்ச்சியடை யாத நாடுகளில் தேசிய வருவாயில் 15 முதல் 20 சதவீதம் முதலீடு செய்யப்பட்டால்தான் விரைவான பொருளாதார வளர்ச்சி ஏற் படும். நம்நாட்டில் முதலீட்டு வீதம் திருந்தியமைக்குக காரணம் வெளிநாட்டு முதலீட்டின் மூலம் நாம் பெற்ற தொழில் முன்னேற்ற மேயாகும். தொழில் தொடங்கத்தேவையான மூலதனப் பொருட் கள் வெளிநாட்டுக் கடன்களாகப் பெறப்பட்டன.

(3) உழைப்பாளர்கள் பயிற்சிபெறவும் வெளிநாட்டு உதவி இன்றியமையாததாகும். நம் நாட்டின் திறமைகுறைந்த உழைப் பாளர்களை திறமைமிக்கவர்களாக மாற்றவும், தொழில் நுணுக்க

அறிவு பரவவும் அது உதவியுள்ளது. தொழில் உற்பத்தி முறைகளில் சீரிய முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. உற்பத்திப் பொருட்களின் அளவையும், தரத்தையும் உயர்த்த தொழில் நுணுக்கப் பயிற்சிகள் உதவியுள்ளன.

(4) பெருகுகின்ற மக்கட்தொகைக்குத் தேவையான உணவுப் பொருட்களை இறக்குமதி செய்யவும் வெளிநாட்டு உதவி தேவையாகிறது. வேளாண்மைப் பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்தவும் உணவுத்தானியங்களின் இறக்குமதி உதவுகின்றது. வேளாண்மை நாடாகிய இந்தியா உணவுத்தானியங்களை இறக்குமதி செய்து மதிப்புமிக்க அந்நியச் செலாவணியை வீணடிக்கின்றது எனக் குறை கூறப்படுகின்றது. உணவு இறக்குமதியைக் குறைக்கவே திட்டங்களில் வேளாண்மைக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது.

(5) வேளாண்மை வளர்ச்சிக்குத் தேவையான நீர்ப்பாசன வசதிகளும் வெளிநாட்டு உதவியால் பெறப்பட்டன. அணைகள் கட்டப்பட்டன ; பல மின்திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இது வேளாண்மைக்கு உதவியதோடு, தொழில் மேம்பாட்டிற்கும் நன்மையைத் தந்தது. வேளாண்மையில் அமைந்திருந்த நிலங்களுக்கான நீர்ப்பாசன வசதிகள் இதன் மூலம் கிடைத்தன. வேளாண்மை உற்பத்தி கூடியதோடு, மின்சார உற்பத்தி தொழில் துறைகளின் இயக்கச் சக்தியாகவும் பயன்படுத்தப்பட்டது.

(6) நம்நாட்டில் அமைந்துள்ள பல இரும்பு-எஃகு உற்பத்தி நிறுவனங்களும் வெளிநாட்டு உதவியால் தொடங்கப்பட்டவைகளேயாகும். அடிப்படைத் தொழிலாகிய இதன் முன்னேற்றம் பிற தொழில்களின் மேம்பாட்டிற்கும் உதவியது. வெளிநாட்டு மூலதனத்தின் உதவியால் இந்தியாவில் அமைக்கப்பட்டுள்ள இரும்பு-எஃகு உற்பத்தி நிறுவனங்கள் ரூர்கேலா, பிலாய், துர்க்காபூர் ஆகிய இடங்களில் அமைந்துள்ளன. இவ்வித பெரிய தொழில்களை வளர்ச்சியடைந்த நாட்டின் உதவியின்றித் தொடங்குவது கடினமானது. இதற்கு இந்தியா விலக்காக அமையவில்லை.

(7) நமது நாட்டின் போக்குவரத்து வளர்ச்சிக்கு வெளிநாட்டு மூலதனம் அதிக அளவு உதவியுள்ளது. ஆங்கிலேயருடைய ஆட்சிக்காலத்தில் வெளிமூலதனத்தால் இருப்புப்பாதைப் போக்குவரத்து வளர்ந்தது. தற்பொழுதும் சாலைப்போக்குவரத்து, துறைமுக முன்னேற்றம், இருப்புப்பாதைப் போக்குவரத்து, ஆகாயவிமானப் போக்குவரத்து ஆகியவற்றை மேம்படுத்த பன்னாட்டு நிதிநிறுவனங்களிடமிருந்து கடன் பெற்றுவருகிறோம். போக்குவரத்து வளர்ச்சி ஏற்பட்டால்தான் வாணிபம் வளரும்.

வாணிப வளர்ச்சியால் வேளாண்மை வளர்ந்து, தொழில்கள் மேன்மையடைய வாய்ப்பு ஏற்படும். எனவே, பல வகைகளிலும் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் போக்குவரத்து நம் நாட்டில் வெளிநாட்டு மூலதனத்தால் வளர்ந்தது ; வளர்ந்தும் வருகின்றது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் இந்தியா திருப்பித்தர வேண்டிய கடனின் அளவு ரூ.500 கோடியாகவும், வட்டியின் அளவு ரூ.600 கோடியாவும் இருக்கின்றன. இவ்விரண்டையும் சேர்த்து நாம் பிற நாடுகளுக்குக் கொடுக்க வேண்டிய தொகை ரூ 1,100 கோடியாகும். இந்த அளவில் அதிகக் கடன்களைத் திருப்பித்தர வேண்டிய நிலையினுல், திட்டங்களின் முன்னேற்றத்தினுல் ஏற்படுகின்ற நன்மையை நம்மால் பெற முடிவதில்லை. இந்தியா எந்த ஒரு தனி நாட்டின் அரசியற் கொள்கையையும் பின்பற்றவில்லை. நடுநிலைமை வகிக்கும் நாடுகளில் ஒன்ருக இந்தியா இருப்பதால்தான் இந்த அதிக அளவிற்கு வெளிநாட்டு உதவியை பெற முடிகின்றது. முதலாளித்து நாடுகள் ஒரு புறத்தில் நம்முடைய நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவ. மற்ருெரு புறத்தில் இந்தியா பொதுவுடைமை நாடுகளுடன் கொண்டுள்ள வெளிநாட்டு வாணிபத் தொடர்பும் பெருகி வருகின்றது. பொதுவுடைமை நாடுகள் இந்தியாவிற்கு அளித்து வருகின்ற உதவியின் அளவும் அதிகரித்துள்ளது. இதற்குக் காரணம் நாம் பின்பற்றுகின்ற சிறப்பான 'சமதர்மம்' (Socialism) என்ற அரசியற் கொள்கையும், நாம் ஏற்றுக் கொண்டுள்ள 'கலப்புப் பொருளாதார' (Mixed Economy) முறையுமாகும்.

முதலீடுகள் செய்வதற்கான துறைகள் இந்தியாவில் ஏராளமாக உள்ளன. மக்கட்தொகைமிக்க வளர்ச்சியடைந்துவரும் இந்தியாவில் மூலதனத்தைத் தவிர எல்லா ஆக்கக்காரணிகளும் மலிவாகக் கிடைக்கின்றன. மூலதனப்பற்ருக்குறை நிலையைத் தவிர்க்க, உள்நாட்டு மூலதனத்தோடு வெளிநாட்டு மூலதனத்தையும் பயன்படுத்துவது விரைந்த முன்னேற்றத்தைப் பெறுவதற்கான ஒரு வழியாகும். பயன்படுத்தப்படாத எல்லா வளங்களையும் சிறப்பாகப் பயன்படுத்த வெளிநாட்டு மூலதனம் பெரிதும் உதவும். நம் நாட்டில் முதலீட்டின் மூலம் பெறத்தக்க இலாபம் அதிக அளவிலேயே உள்ளது. சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்த உதவிய வெளிநாட்டு உதவி இந்தியாவில் மேலும் வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்தவும், அதிக தேசிய ஆக்கத்தையும், உயர்ந்த தலா வருவாயையும் பெறுகின்ற நிலையையும் தோற்றுவிக்க உதவுமெனலாம்.

# 23. பொதுக்கடனும் பொருளாதார முன்னேற்றமும்

பொதுக்கடன் முறை மிகச் சமீப காலத்தில் தோன்றிய ஒன்றேயாகும். பதினெட்டாம் நூற்றூண்டிற்கு முன் பொதுக் கடன் முறையானது அமைந்திருக்கவில்லை. தற்பொழுது உலகின் பல நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பொதுக் கடனைப் பெறுகின்றன. அரசின் வரி வருவாயும், பிற வருவாய் களும் போதுமானவைகளாக இல்லாமையால் பொதுக்கடன் பெறப்படுகின்றது. அதிக அளவில் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்றுவதும் பணவீக்க நிலையைப் பொருளாதாரத்தில் ஏற் படுத்திவிடும். அரசு வங்கிகளிடமிருந்தும், வாணிப நிறுவனங் களிடமிருந்தும், தனியாரிடமிருந்தும் கடன் பெறுகின்றது. உள் நாட்டுக் கடனோடு, வெளிநாட்டுக் கடனும் பெறப்படுகின்றது. ஆனால், அரசின் செலவினங்களில் பெரும்பகுதி வரி வருவாயின் மூலமே செய்யப்படுகிறது. சாதாரண காலங்களில் அரசின் வரி வருவாய் செலவினங்களுக்குப் போதுமானதாக உள்ளது. போர்க் காலங்கள், பொருளாதார முன்னேற்ற திட்டக் காலங்கள் ஆகிய வற்றில் அரசு அதிக மூலதனத் தேவையைக் கொண்டிருக்கின்றது. இம்மூலதனத் தேவையை நிறைவேற்ற மூன்று முறைகளை அரசு பின்பற்றலாம் :

முதலாவதாக, காகிதப் பணத்தை அச்சிட்டு புழக்கத்தில் விடலாம். ஆனால், இதன் மூலம் பணத்தின் வாங்கும் திறனானது குறைந்து விடுகின்றது ; பணவீக்க நிலை தோன்றுகின்றது. விலை யுயர்வினால் செல்வந்தர்களைக் காட்டிலும் வறியவர்களே பெரிதும் பாதிக்கப்படுகின்றார்கள். இம் முறையின் மூலம் அரசு வருவாயை அதிக அளவிற்குப் பெறுவது தொழில், வாணிபம் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும். பொருளாதாரத்தில் தீய விளைவுகள் ஏற்படாத வகையில் இம்முறை குறைந்த அளவில் பின்பற்றப்பட வேண்டும்.

இரண்டாவதாக, ஒரு அரசு தன் சொத்துக்களை விற்பதின் மூலமும் வருவாயைப் பெறமுடியும். ஆனால், இதன் மூலம் அதிக

மூலதனத்தைப் பெற இயலாது. இன்றைய நிலையில் உலகின் பல நாடுகளும் சமதர்ம முறையைப் பின்பற்றி வருகின்றமையால், தேசியவுடைமையாக்கும் நிலையையே காண முடிகின்றது. அரசுகளின் சொத்துரிமைகள் இன்று பெருகி வருகின்றன. சொத்துக்களை விற்பனை செய்வதில் எந்த அரசும் ஆர்வம் கொள்வதில்லை. அதிகச் சொத்துரிமைகளைப் பெறவே உலகின் பல அரசுகளும் முயலுகின்றன.

மூன்றாவதாக, பொதுக்கடனைப் பெறுவது அரசின் முக்கிய வருவாயாகத் திகழ்கின்றது. பொதுக்கடன் முறையின் மூலம் உள்நாட்டுக் கடனும், வெளிநாட்டுக் கடனும் பெறப்படுகின்றன. திட்டமிட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பெறும் நாடுகளில் பொதுக்கடன் முறை சிறப்பு பெற்று விளங்குகின்றது. அரசின் செலவானது வருவாயைக் காட்டிலும் அதிகரிக்கும்போது இம்முறை பின்பற்றப்படுகின்றது. அரசாங்கம் குறுகியகால கடன்களையும், நீண்டகால கடன்களையும் பெறுகிறது. இவ்வாறு பெறப்படுகின்ற பொதுக்கடன் சிக்கனமாக செலவிடப்படுகிறது. பொருளாதாரத்தில் மந்தநிலை தோன்றுகின்றபோதும், மக்களின் வரி செலுத்தும் திறன் குறைவாக இருக்கின்றபோதும், போர் நிலை ஏற்படுகின்றபோதும் அரசு அதிக நிதித்தேவையைக் கொண்டதாக உள்ளது. இந்நிலைகளால் அரசின் வருவாய் செலவிற்குப் போதுமானதாக இருப்பதில்லை. பொருளாதார முன்னேற்றத்திற்காக முதலீடு செய்வது இதனால் தடைப்படுகின்றது. பொருளாதாரப் புனரமைப்புத் திட்டங்களை மேற்கொள்ள பொதுக் கடனைப் பெறுவது நன்மை தருவதாக அமைகின்றது.

பேராசிரியர் டெய்லர் குறிப்பிடுவது போன்று, "பொதுக்கடன் என்பது அரசு பெறுகின்ற வருவாய் இல்லாத வரவு ஆகும்." பொதுக்கடன் மூலமாக அரசு தன்னுடைய நிதித்தேவையைப் பூர்த்தி செய்து கொள்கின்றது. பொதுமக்களிடமிருந்தும், வெளிநாட்டு அரசுகளிடமிருந்தும், பணத்துறை நிறுவனங்களிடமிருந்தும் அரசாங்கத்தால் பொதுக்கடன் பெறப்படுகின்றது. பொதுக்கடனை உள்நாட்டுக் கடன், வெளிநாட்டுக் கடன் என இரு வகைகளாகப் பிரிக்கலாம். உள்நாட்டில் மக்களிடமிருந்தும், வங்கிகளிடமிருந்தும் பெறப்படுவது உள்நாட்டுக் கடனாகும். வெளிநாடுகளின் அரசுகளிடமிருந்தும், பன்னாட்டு நிதி நிறுவனங்களிடமிருந்தும் பெறப்படுவது வெளிநாட்டுக் கடனாகும். மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்யவும், அயலகச் செலாவணிச் சிக்கலைத் தீர்க்கவும், வெளிநாட்டு நிபுணர்களின் பணியைப் பெறவும் வெளிநாடுகளின்றும் கடன் பெறப்படுகின்றது.

**அரசின் கடன்களும் வரிவிதிப்பும் - ஓர் ஒப்பீடு**

அரசின் உள்நாட்டுக் கடன்களும், வரி விதிப்புக்களும் சில நிலைகளில் ஒரே இயல்புகளைக் கொண்டிருக்கின்றன. இரு வகை அரசின் வருவாய்களும் பொதுமக்களிடமிருந்தே பெறப்படுகின்றன. இவற்றால் உள்நாட்டின் மொத்தப்பணத்தின் அளவில் எந்த மாறுபாடும் ஏற்படுவதில்லை. வசூலிக்கப்படும் வரியானது மக்களிடம் நேரடியாக திருப்பித் தரப்படுவதில்லை. ஆனால், அரசால் மக்களிடமிருந்து பெறப்படுகின்ற கடன்கள் திருப்பித் தரப்படுகின்றன. அரசின் பத்திரங்களில் முதலீடு செய்பவர்களுக்குக் குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பணமானது திருப்பித் தரப்பட்டுவிடுகின்றது. மக்களிடமிருந்து பெறப்பட்ட பணம் திருப்பித் தரப்படுவதால் பணத்தின் அளவில் எவ்வித மாற்றமும் ஏற்படுவதில்லை. வருமானத்திலிருந்து தரப்படுகின்ற வரியானது நுகர்வைப் பாதிக்கின்றது ; அது சேமிப்பின் அளவையும் பாதித்து விடுகின்றது.

**உள்நாட்டுக் கடனும், வெளிநாட்டுக் கடனும்**

கடனைப்பெற தனி ஒருவரோ அல்லது ஒரு அரசோ அதிகம் விரும்புவதில்லை. தவிர்க்க முடியாத நிலைகளால் கடன் பெறப்படுகின்றது. பெற்ற கடனானது சில காலம் கழித்துத் திருப்பித் தரக் படுகின்றது கடனைப் பெறும்போது ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தின் வாங்கும் திறனானது அதிகமாக உள்ளது ; ஆனால், அதே அளவு பணத்தின் வாங்கும் திறனானது கடனைத் திருப்பித் தரும் போது குறைந்து விடுகின்றது. இது பணவீக்க நிலையால் கடன் பெறுபவர்கள் அடையக் கூடிய நன்மையாகும். எனினும், கடனைப் பெறுபவர் திருப்பித் தரவேண்டிய நிலையில் இருக்கின்ற காரணத்தால் அவரின் பிற பொருட்களையும், பணிகளையும் வாங்கும் திறனானது குறைகிறது. இதைப் போன்றே பொதுக்கடன் பெறப்படும்போது நாட்டின் வாங்கும் திறன் அதிகரிக்கின்றது ; பொதுக் கடன் திருப்பித் தரப்படும்போது நாட்டின் வாங்கும் திறன் குறைகின்றது.

உள்நாட்டுக் கடன் என்பது உள்நாட்டில் மக்களிடமிருந்து பெறுகின்ற கடனைக் குறிப்பதாகும். வெளிநாட்டுக் கடன் என்பது ஒரு நாடு மற்றொரு நாட்டிற்கு கடன்பட்டிருப்பதைக் குறிக்கின்ற ஒன்றாகும். உள்நாட்டுக் கடன் உள்நாட்டவர்களிடமிருந்தும், வெளிநாட்டுக் கடன் வெளிநாட்டவர்களிடமிருந்தும் பெறப்படுகின்றன. அரசு மக்களிடமிருந்து பணத்தைக் கடனாகப் பெறும் போது வாங்கும்திறனை அரசு பெறுகின்றது. வெளிநாட்டுக் கடன்

உள்நாட்டுக் கடனிலிருந்து வேறுபட்டதாகும். பொதுக்கடன் சமுதாயத்திற்குச் சுமையாக அமையுமெனக் கூறப்படுகின்றது. ஆனால், பொதுக்கடன் உற்பத்திப் பணிகளில் பயன்படுத்தப் படுவதால் நாட்டின் மொத்த ஆக்கம் அதிகரித்து மக்கள் தரமான வாழ்வைப் பெறுவார்கள். நன்மையைத் தருகின்ற பொதுக் கடனின் சுமையை மக்கள் ஏற்பது பொருத்தமுடையதேயாகும். ஆயினும், உள்நாட்டுக் கடனை உண்மையான சுமையெனக் கூற இயலாது. உள்நாட்டுக் கடனைத் திருப்பித்தர அதிக வரி விதிப்பு முறையைப் பின்பற்றலாம். இது குறைந்த வருவாயைப் பெறுபவர்களின் நலனைப் பாதித்துவிடும். அதிக அளவில் அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்பவர்கள் செல்வந்தர்களாகவே உள்ளனர். வரிகள் செல்வந்தர்கள்மீது மட்டும் விதிக்கப்படுவ தில்லை. ஏழைகளும் அரசின் வரிவிதிப்புக்களால் பாதிக்கப்படு கின்றனர்.

வெளிநாட்டுக் கடனைப் பெறுவது உண்மையான சுமையான தாகும். அயல்நாட்டுச் செலாவணியை அதிகம் பெறுவதின் மூலமே வெளிநாட்டுக் கடனைத் தீர்க்க முடியும். இதற்கு இறக்கு மதியின் அளவைக் குறைத்து ஏற்றுமதியின் அளவைப் பெருக்க வேண்டும்.

### பொதுக்கடனும், தனியார் கடனும்

தனியார் கடனைப் பெறுவதிலும், அரசு கடனைப் பெறுவதிலும் ஒற்றுமை வேற்றுமைகள் அமைந்துள்ளன. சில வசதிகளைப் பெருக்கிக்கொள்ள தனியார் கடன் பெறுகின்றனர். அரசும் நிதிவசதியைப் பெருக்கிக்கொள்ளக் கடன் பெறுகின்றது. தனியார் கடனாலும், பொதுக்கடனாலும் நிதியானது ஒரு பயனில் இருந்து மற்றொரு பயனிற்கு மாற்றப்படுகின்றது.

தனியார் கடன் பெற்று அதைச் சிறப்பாகப் பயன்படுத்தி இலாபத்தைப் பெறுவிட்டால் கடனைத் திருப்பித்தர இயலாது. இதைப்போன்றே அரசும் கடனைப் பெற்றால் இலாபகரமான துறைகளில் அதைப் பயன்படுத்த வேண்டும் ; உற்பத்தித் திட்டங் களுக்குக் கடனானது செலவிடப்பட வேண்டும். இதன் மூலமே அரசு அதிக வருவாயைப் பெற்று, பொதுக் கடனைத் திருப்பித் தருவது எதிர்காலத்தில் எளிதானதாகும்

தனியொருவர் கடனைப் பெறுவது அவரின் நலத்திற்காகவே ஆகும். சமுதாய நலனைப் பெருக்குவதற்காக அரசு கடன் பெறுகின்றது. தனியார் கடனில் கடன் பெற்றவரே கடன் சுமையை ஏற்கின்றார் ; அவரே அக்கடனைத் திருப்பித் தர

வேண்டியவராகின்றார். அரசு பெறுகின்ற கடன் வரிவசூலிப் பதின்மூலம் திருப்பித் தரப்படுகின்றது. அதாவது, பொதுக்கடன் சுமையை சமுதாய மக்கள் அனைவரும் ஏற்கின்றனர். ஏனெனில், வரிகளைத் தருபவர்கள் சமுதாயத்தின் மக்களேயாவர். பொதுக் கடனை அரசிற்கு அளித்தவர்களும் வரிகளைச் செலுத்துகின்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

தனியார் கடனில், கடனைப்பெற்றவர் செய்கின்ற செலவினால் கடனை அளித்தவருக்கு எவ்வித நன்மையும் ஏற்படாது. பொதுக் கடன் அரசாங்கத்தால் பெறப்பட்டு, அப்பணம் சமுதாய முன் னேற்றத்திற்காகச் செலவிடப்படுகின்றது. எனவே, இதில் கடன் அளித்தவரும் நன்மைகளைப் பெறுகின்றார். அரசாங்கத்திற்கு ஒருவர் கடன் அளிப்பது அவருக்கே அளித்துக்கொள்கின்ற கடன் போன்றதாகும்.

அரசிற்குக் கடன் தருகின்றமையில் தனியார் பல நன்மைகளை யும், சில இன்னல்களையும் ஏற்கின்றார்கள். அரசு செலவழிக்கின்ற பணத்தின் மூலமாக இவர்களும் நன்மையடைகின்றார்கள். இவர் களே அரசின் கடனைத் தீர்க்க வரிகளைக் கொடுக்கவேண்டியுள்ள மையால் சில இன்னல்களையும் பெறுகின்றார்கள். அரசு பெறு கின்ற கடனுக்காக அசலோடு வட்டியும் திருப்பித் தருகின்றது. எனவே, தனியார் கடனுக்கும், பொதுக்கடனுக்கும் இடையே அடிப்படையிலேயே வேறுபாடு உள்ளது.

பொதுக்கடனுக்கும், தனியார் கடனுக்கும் வேறு சில முக்கிய வேறுபாடுகளும் இருக்கின்றன. அரசு கடனை உள்நாட்டில் பெறுவ தோடு, பிற வெளிநாடுகளினின்றும்கூட பெறமுடியும். பொது வாக, தனியார் ஒருவர் உள்நாட்டிலேயே கடனைப் பெறுகின்றார். மேலும், தனியொருவர் உற்பத்திக்காகவும், நுகர்விற்காகவும் கடன் பெறலாம். பெறப்படுகின்ற கடன் ஆக்கப்பணிகளில் பயன் படுத்தப்படலாம் ; அல்லது நுகர்விற்காகவும் செலவழிக்கப்பட லாம். ஆனால், அரசு பொதுவாக உற்பத்திப் பணிகளை மேற் கொள்ளத் தேவைப்படும் நிதிக்காகவே கடனைப் பெறுகிறது. இதைத்தவிர, தனியார் கடனின் வட்டி அதிகமாகவும், அரசு பெறுகின்ற கடனின் வட்டி குறைவாகவும் உள்ளன. ஏனெனில், அரசு கடனைத் திருப்பித்தரும் திறனைக் கொண்டிருக்கின்றது என்ற நம்பிக்கை மக்களிடம் அமைந்திருக்கின்றது. தனியார் கடனை வசூலிப்பதில் சில இடர்ப்பாடுகள் அமைந்துள்ளன. இதன் காரணமாகவே தனியார் கடன் அதிக வட்டியைப் பெறுகின்றது.

இவை எல்லாவற்றையும் விட அரசு மிக அதிக அளவிற்குக் கூட கடனைக் குறைந்த வட்டியில் பெறமுடிகிறது. அரசு நிரந்தர

மான அமைப்பாக உள்ளதால் இவ்வாறு செய்ய முடிகின்றது. அரசு மக்களிடமிருந்து கட்டாயக் கடன்களைப் பெறலாம். தனியார் கடன்களைக் கட்டாயப்படுத்திப் பெற இயலாது. தனியார் கடனைப் போன்றே பொதுக்கடன் பெறப்பட்டாலும், மேற் குறிப்பிடப்பட்டுள்ள வேறுபாடுகள் இவ்விரண்டிற்கும் இடையே அமைந்துள்ளன.

**பொதுக்கடன் பெறப்படுகின்றமைக்கான காரணங்கள்**

அரசு பொருளாதார முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்ற கடனைப் பெறுவது நன்மை பயக்கும். தவிர்க்க முடியாத, முக்கியக் காலங்களில் மட்டுமே அரசு கடனைப் பெறுகின்றது.

1. **பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டம் :** பொதுவாக அரசின் வருவாயைக் காட்டிலும் செலவானது அதிகமாக இருக்கின்ற காரணத்தால் கடன் பெறப்படுகின்றது. வரவு-செலவுத் திட்டத்தில் பற்றுக்குறை ஏற்படும்போது அரசின் கருவூலத்தில் மூலதன இருப்பானது அமைந்திப்பதில்லை. அரசின் ஓராண்டுச் செலவு அதன் ஓராண்டு வருவாய்க்குச் சமமாக இருக்க வேண்டுமென சொல்லப் படுகின்றது. ஆனால், இந்நிலையைப் பெறுவது எளிதானதாக இருப்பதில்லை. வெள்ளம், பஞ்சம் போன்ற நிலைகள் தோன்றினால் அரசின் செலவானது அதிகரிக்கின்றது. அரசு பெறுகின்ற குறுகிய காலக்கடன்கள் இந்நிலைகளைத் தவிர்ப்பதற்கே பயன்படுத்தப் படுகின்றன.

2. **போர் நிலை :** உலகின் பல நாடுகளும் பாதுகாப்பிற்காக அதிகம் செலவிடுகின்றன. போர் நிலை தோன்றும்போது அரசு அதிகச் செலவுகளை ஏற்க வேண்டியுள்ளது. அப்போது அரசின் வருவாய் போர்ச்செலவிற்குப் போதுமானதாக இருப்பதில்லை. எனவே, பொதுக்கடனைப் பெறுவது தவிர்க்க முடியாததாகின்றது. உலக நாடுகளின் வரலாற்றை ஆராய்ந்தால் போர்களுக்காக அரசுகள் அதிகக் கடன்கள் வாங்கியதை அறிய முடிகின்றது. நாட்டில் நெருக்கடி நிலைகள் தோன்றும்போது தற்கால அரசுகள் கடன்களைப் பெறுகின்றன. போர்க்காலத்தில் மிக அதிக அளவு வரிவிதிப்பைச் செய்வது உற்பத்திப் பெருக்கத்தைப் பாதித்து விடும். மேலும், அரசு வரிவிதிப்பின்மூலம் வருவாயைப் பெறுவதைவிட, பொதுக்கடனைப் பெறுவது எளிதானதாகும். உலகின் பல நாடுகளிலும் பொதுக்கடனின் அளவு அதிகரித்தமை முதல் உலகப் போர்க்காலத்திலும், இரண்டாவது உலகப் போர்க் காலத்திலும் என்று கூறலாம். பொதுமக்களும் போர்க்காலத்தில் அரசிற்குக் கடன் அளிக்க முன்வருகின்றனர்.

3. பொருளாதார மீட்சி : விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது பொருளாதாரத்தில் ஏற்படும் மந்த நிலையாகும். பொருளாதார மந்த காலத்தில் அரசு அதிக முதலீடு செய்வது அவசியமானதாகும். பற்றுக்குறை நிதியாக்கத்தால் ஓரளவு மூலதனத்தை முதலீட்டிற்காக அரசு பெறுகின்றது. பணவீக்க நிலை தோன்றாமல் இருக்க பெருமளவு பொதுக்கடனும் அரசால் திரட்டப்படுகின்றது. பொருளாதார மந்த நிலையைத் தவிர்க்க பொதுக்கடனும் உதவுகிறது. மந்த காலத்தில் விரைவான பொருளாதார நடவடிக்கைகள் ஏற்படுவதில்லை. வேலையின்மைச் சிக்கல் தோன்றுகின்றது; உற்பத்தியின் அளவும் குறைகின்றது. வேலையின்மையும், பொருளாதார மந்த நிலையும் பண்டங்களின் தேவையிலும், பணிகளின் தேவையிலும் குறைவு ஏற்படுகின்றமையால் தோன்றுகின்றன. கீன்ஸ் போன்ற பல பொருளியலறிஞர்கள் பொருளாதார மந்த காலத்தில் பொதுக்கடனைப் பெற்று அரசு அதிக முதலீடுகளைச் செய்யவேண்டுமென கூறுகின்றனர். வரி வருவாயை உயர்த்தும் கருத்திற்கு அவர்கள் ஆதரவு தெரிவிக்கவில்லை. வரி விதிப்பினால் மக்களுடைய வருவாய் குறைந்துவிடும். இந்நிலை பொருட்களின் தேவையைக் குறைத்துவிடுமெனலாம். பொதுக்கடனைப் பெறுவது பொருளாதாரத்தில் இவ்விதத் தீயவிளைவுகளை ஏற்படுத்தாது. மேலும், மக்கள் உற்பத்திக்குப் பயன்படுத்தாத மூலதனத்தையே அரசிற்குக் கடனாக அளிக்கின்றனர். எனவே, பொதுக்கடனைப் பெற்று அதன் மூலம் வேலையின்மையையும், பொருளாதார மந்த நிலையையும் தீர்ப்பது நியாயமானதேயாகும்.

4. திட்டமிட்டப் பொருளாதார முன்னேற்றம் : இன்றைய உலகின் பல நாடுகளும் திட்டமிட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முனைகின்றன. மக்களின் உண்மை வருவாயை உயர்த்தவும், நாட்டின் மொத்த ஆக்கத்தின் அளவை அதிகரிக்கவும், வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்கவும் திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. முன்னேற்றமடைந்துவரும் நாட்டில் அரசின் செலவினங்கள் கூடுகின்றன. சாலைகள் அமைத்தல், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குதல், மின்சார உற்பத்தி, செய்தித் தொடர்பு வசதிகள் போன்றவற்றைப் பெற அரசு அதிக மூலதனத் தேவையைக் கொண்டிருக்கின்றது. அதிக அளவு வருவாயை அரசு வரிவிதிப்பின் மூலமாக மட்டும் பெற்றுவிட முடியாது. ஆகவே, இவ்வகைத் திட்டங்களை நிறைவேற்ற அரசு பொதுக் கடனைப் பெறுகின்றது. அரசு பலவிதமான பொதுப் பணிகளிலும் ஈடுபட வேண்டியுள்ளது. எனவே, பொருளாதார முன்னேற்ற நோக்கத்தோடு, பொதுப்பணிகளில் ஈடுபடவும் அரசு கடன்

பெற வேண்டியுள்ளது. மேம்பாடடைந்த நாடுகளும்கூட பொதுப் பணித்துறைகளில் அதிக முதலீடு செய்கின்றன. சாலைப் போக்கு வரத்து, இருப்புப்பாதைப் போக்குவரத்து, பிற பொதுப்பணிகள் ஆகிய யாவும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவுபவைகளாகும். வளர்ச்சியடையாத நாடுகள் இயற்கை வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்த பொதுக்கடன் உதவுகின்றது இதன் மூலமே பல முன்னேற்றப் பணிகளுக்கான நிதியானது பெறப்படுகின்றது. இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் சமீப காலத்தில் பொதுக்கடனின் அளவு அதிகரித் துள்ளமைக்கு இதுவே காரணமாகும்.

5. **அயல் நாட்டுச் செலுத்துநிலை :** பாதக அயல்நாட்டுச் செலுத்துநிலையைத் தீர்க்கவும் வெளிநாட்டுக் கடன்கள் பெறப் படுகின்றன. பன்னாட்டுப் பண நிதி, ஏற்றுமதி-இறக்குமதி வங்கி போன்ற பன்னாட்டு நிதி நிறுவனங்கள் அயல்நாட்டுச் செலுத்து நிலையை சமன் செய்யக் கடன் தருகின்றன. வளரும் நாடுகள் பாதக அயல் நாட்டுச் செலுத்து நிலையைக் கொண்டிருக்கின்றன. இப்பாதக வெளிநாட்டு வாணிப நிலையைத் தவிர்க்கவும் பொதுக்கடன் பெறப் படுகின்றது.

6. **வழி வகைக்கடன்** (Ways and Means Advance) : இவ் வகைக்கடன் தற்காலிகமாகப் பெறப்படுகிறது. வரிவிதிப்பி னால் பெறப்படும் வருவாய் கருவூலத்திற்குச் செல்வதற்கு முன் ஏற்படும் செலவுகளைச் சரிசெய்ய மத்திய வங்கியிடமிருந்து வழி வகைக் கடன் பெறப்படுகின்றது.

7. **பழைய கடன்களைத் திருப்பியளித்தல் :** பெரும்பாலான கடன்கள் தீர்க்கப்படாமல் மாற்றியமைக்கப்படுகின்றன. பொது வாக பொதுக்கடன் தற்காலிக நிலைகளுக்காகவே வாங்கப்படும். பின்பு பெறப்படும் அரசின் வருவாயினின்றும் இக்கடன் திருப்பித் தரப்படும். பல நாடுகளிலும் போர்க்காலங்களில் அதிக அளவிற்குப் பொதுக்கடன் பெறப்படுகின்றது. சில குறிப்பிட்ட திட்டங்களை நிறைவேற்றவும் பொதுக்கடன் உதவுகின்றது. இவ்வாறு பொதுக்கடன் வாங்கப்படாவிட்டால், இயற்கை வளங் களைச் சிறப்பாகப் பயன்படுத்த இயலாது. தற்காலிகமாகப் பெறப்படும் கடன்கள் நிரந்தரக் கடன்களாக மாறி விடுகின்றன. அரசு பழைய கடன்களைத் தீர்க்க புதிய பொதுக்கடன்களைப் பெறு கின்றது. பொதுக்கடன் இவ்வகைகளில் அரசிற்குப் பல வழிகளி லும் உதவுகின்றது.

**பொதுக்கடனைப் பெறும் முறைகள்**

அரசு இரு வழிகளில் கடன் பெறலாம். அரசு பெறுகின்ற கடனை உள்நாட்டுக் கடன், வெளிநாட்டுக் கடன் என இரு வகை

களாகப் பிரிக்கலாம். உள்நாட்டில் அரசு தனியாரிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும், வணிக வங்கிகளிடமிருந்தும், மத்திய வங்கியிடமிருந்தும் கடன் பெறலாம். வெளிநாட்டுக் கடன் தனியாரிடமிருந்தும், வங்கிகளிடமிருந்தும், பன்னாட்டு நிதி நிறுவனங்களிடமிருந்தும், அயல்நாட்டு அரசுகளிடமிருந்தும் பெறப் படுகின்றது. இம்முறைகளைப் பின்வருமாறு ஆராயலாம்:

## I. தனியாரிடமிருந்து கடன் பெறுதல்

அரசு பத்திரங்களை வெளியிட்டு அதன் மூலம் மக்களிடமிருந்து கடன் பெறலாம். இதனால், நிதியானது தனியாரிடமிருந்து அரசிற்குச் சென்று சேர்கின்றது. தனியார் தங்களுடைய நுகர்வைக் கட்டுப்படுத்தி அரசின் கடன் பத்திரங்களை வாங்கலாம்; அல்லது தங்கள் தொழில் நிறுவனங்களிலோ, வாணிபத்திலோ ஈடுபடுத்தியுள்ள மூலதனத்தை அரசின் கடன் பத்திரங்களை வாங்கப் பயன்படுத்தலாம். ஆனால், தனியார் தங்கள் நுகர்வைக் கட்டுப்படுத்திக் கடன் அளிப்பது குறைவாகவே அமையும். பொதுவாக, அரசு கடன் பத்திரங்களின் மூலம் பொதுக் கடனைப் பெறுவதால் நுகர்வின் அளவு குறைக்கப்படும்; வாணிபப் பெருக்கமும் தடைப்படும். நுகர்வு குறையாமலும், வாணிப வளர்ச்சி தடைப்படாமலும் பொதுக்கடன் பெறப்படுவது இன்றியமையாததாகும். மக்கள் பயன்படுத்தாமல் வைத்திருக்கின்ற மூலதனத்தை அரசு கடனாகப் பெற முயலவேண்டும்.

## II. வங்கியல்லாத பிற நிதிநிறுவனங்களிடமிருந்து கடன் பெறுதல்

தனியாரிடமிருந்து கடன் பெறுவதோடு அரசு காப்புறுதி நிறுவனங்கள், சிறுசேமிப்பு வங்கிகள், டிரஸ்டுகள் ஆகியவற்றிடமிருந்தும் கடன் பெறலாம். இவற்றை அரசின் கடன் பத்திரங்களை வாங்குமாறு செய்யலாம். இவ்வித வங்கியல்லாத பிற நிதி நிறுவனங்களும் அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய விரும்புகின்றன. இந்நிறுவனங்கள் அரசிற்குக் கடன் அளிப்பதால் எவ்வித இடரையும் ஏற்க வேண்டியதில்லை. ஆனால், சில நிதி நிறுவனங்கள் வட்டி வீதம் குறைவாக உள்ளமையால் அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய விரும்புவதில்லை. இடர் மிகுதியாக இருந்தாலும் முதலீட்டின் மூலம் அதிக வட்டியைப் பெறவே அவை விரும்புகின்றன. இதன் மூலம் அரசிற்குக் கிடைக்கும் கடனின் அளவானது அதிகமாக இருக்குமெனக் கூற இயலாது.

### III. வணிக வங்கிகளிடமிருந்து கடன் பெறுதல்

தனியாரும், வங்கியல்லாத பிற நிதி நிறுவனங்களும் தங்கள் சொந்த நிதியினின்றும் அரசின் கடன் பத்திரங்களைப் பெற வேண்டியுள்ளது. ஆனால், வணிக வங்கிகள் 'வங்கிக் கடன் செலாவணிச் சிருட்டியின்' (Credit Creation) மூலம் அதிக வாங்கும் திறனைப் பெற்று அரசின் கடன் பத்திரங்களை வாங்கலாம். இவ் வங்கி முறையில் பண இருப்பைக் காட்டிலும் பல மடங்கு அதிக மான அளவிற்குக்கூடக் கடன் பெறமுடியும். வணிக வங்கிகள் 'வங்கிக் கடன் செலாவணிச் சிருட்டியின்' மூலம் அரசின் பத்திரங் களைப் பெறலாம்.

### IV. மத்திய வங்கியிடமிருந்து கடன் பெறுதல்

ஒரு நாட்டின் மத்திய வங்கியும் அரசிற்குக் கடன்களை அளிக் கின்றது. வணிக வங்கி முறையில் எவ்வாறு புதிய வாங்கும் திறனானது ஏற்படுத்தப்படுகின்றதோ அது போன்ற முறையே மத்திய வங்கி முறையிலும் அமைகின்றது. அரசின் பத்திரங்களை மத்திய வங்கி வாங்கி அரசின் கணக்கில் அப்பணத்தைச் சேர்க் கின்றது. இக்கணக்கினின்றும் கடன்களை அளித்தவர்களுக்கும் பணம் திருப்பித் தரப்படுகிறது. தனியாரிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும் கடனைப் பெறும்போது நிதியானது தனியார் துறையினின்றும் அரசின் துறைக்கு மாற்றப்படுகின்றது.

### V. பிற முறைகளில் கடன் பெறுதல்

ஒரு நாட்டின் அரசு உள்நாட்டில் கடன் பெறுவதோடு வெளி நாடுகளிடமிருந்தும் கடன் பெறலாம். வெளிநாட்டுக் கடன் போர்ச் செலவிற்காகவும், அல்லது நாட்டைப் பாதுகாக்க உதவும் கருவிகளை வாங்கவும், முன்னேற்றத் திட்டங்களை மேற்கொள்ளவும், பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்பு நிலையைத் தீர்க்கவும் பயன் படுத்தப்படுகின்றது. பழைய காலங்களில் குறிப்பிட்ட சில திட்டங்களை நிறைவேற்ற பொதுக் கடன்கள் திரட்டப்பட்டன. எடுத்துக் காட்டாக, இருப்புப் பாதைப் போக்குவரத்து முன் னேற்றத்திற்காகத் தனியாரிடமிருந்தும், வங்கிகளிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும் கடன்கள் பெறப்பட்டன. இம்முறை களைத் தவிர சமீப காலத்தில் வேறு இரண்டு முறைகளின் மூல மாகவும் கடன்கள் அரசால் பெறப்படுகின்றன. அவையாவன:

(i) 'பன்னாட்டு நாணய நிதி' (International Monetary Fund), 'பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி' (International Bank for Reconstruction and Development), 'பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்' (International Development Association), 'பன்னாட்டு நிதிக் கழகம்' (International Finance Corporation) போன்ற

பன்னாட்டு நிதி நிறுவனங்கள் பாதக அயல்நாட்டு செலுத்து இருப்பு நிலையைத் தீர்க்க குறுகியகாலக் கடன்களை அளிக்கின்றன ; நீண்ட காலக் கடன்களை பொருளாதார முன்னேற்றப் பணிகளை மேற்கொள்ளவும் தருகின்றன.

(ii) பொருளாதார முன்னேற்றத் திட்டங்களை மேற்கொள்ள அயல்நாட்டு அரசுகளின் கடன்களும் பெறப்படுகின்றன.

முன்னேற்றமடைந்துவரும் இந்தியா போன்ற நாடுகளில் சமீப காலமாக வெளிநாட்டுக் கடன்களைப் பெறுவது அவசியமானதாக அமைந்திருக்கிறது. இவ்வாறு பல முறைகளிலும் உள்நாட்டு, வெளிநாட்டுப் பொதுக்கடன்கள் பெறப்படுகின்றன.

## பொதுக்கடனால் ஏற்படும் பொருளாதார விளைவுகள்

'வேக்னர்' (Wagner) போன்ற பொருளியலாளர்களின் கருத்துப்படி அரசு நடப்புச் செலவிற்குத் தேவையான நிதியை வரி விதிப்பின் மூலம் பெறவேண்டும்; முதலீட்டுச் செலவிற்கான நிதியை பொதுக்கடனின் மூலம் பெறவேண்டும் என்பதாகும். ஆனால் தற்போது இக்கருத்து மாறி வருகின்றது. மாறுபடுகின்ற பொருளாதார சூழ்நிலைகளுக்கு ஏற்ப வரிவிதிப்பு, பொதுக்கடன் ஆகியவற்றின் மூலம் பெறப்பட்ட வருவாயை அரசு எதற்கும் பயன்படுத்தலாம் என்ற கருத்து நிலவுகின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்குத் தேவையான நிதியை வரிவிதிப்பின் மூலமும், பொதுக் கடனின் மூலமும் பெறவேண்டியது தவிர்க்க முடியாதது. அரசு வரி விதிப்பு, பொதுக் கடன் ஆகியவற்றின் மூலம் பெறுகின்ற வருவாயில் சில வேறுபாடுள்ள இயல்புகள் அமைந்துள்ளன.

(i) வரிவிதிப்பில் பொதுமக்களிடமிருந்து நிதியானது கட்டாயமாக அரசாங்கத்தால் பெறப்படுகின்றது. பொதுக் கடனில் விரும்புபவர்கள் மட்டுமே அரசாங்கத்திற்கு நிதியளிக்கின்றனர்கள். கட்டாயமாகக் கடன் அளிக்கவேண்டுமென்ற நிலை அரசு பெறுகின்ற பொதுக்கடனில் அமைந்திருப்பதில்லை.

(ii) வரிகளைச் செலுத்துவதின் மூலம் வரி செலுத்துபவர்களின் செல்வநிலை குறைகின்றது. பொதுக்கடனை அளிப்பதின் மூலம் அளிப்பவர்களின் செல்வ நிலை குறைவடைவதில்லை. செல்வத்தின் நிலையானது, அமைப்பானது மட்டுமே மாறுபடுகின்றது எனலாம்.

(iii) பொதுக்கடனின் மூலம் நிதியாக்கம் செய்வது பொருளாதாரத்தில் விரிவாக்க நிலைகளை ஏற்படுத்துகின்றது. ஆனால், வரி

விதிப்பு முறையால் நுகர்வின் அளவானது குறைக்கப்படுகின்றது. மேலும், பொதுக்கடன் என்பது மக்கள் விருப்பத்தோடு கொடுக்கின்ற ஒன்றாகும். பொதுக்கடன் மக்களின் சேமிப்பிலிருந்து தரப்படுகிறது. எனவே, பொதுக்கடனை அளிப்பதினால் நுகர்வு குறைவடைவதில்லை. பொதுக்கடனை அளிப்பதால் மக்களின் செல்வ நிலை பாதிக்கப்படுவதில்லை. ஆகவே, கடன் அளிப்பவர்கள் எவ்விதத்திலும் ஊக்கத்தை இழப்பதில்லை. வரிவிதிப்பால் மக்களின் செல்வநிலையானது குறைவடைகின்றது. வரி செலுத்துபவர்கள் தங்கள் ஊக்கத்தை இழக்கின்றனர்.

## I. பொதுக்கடனும் நுகர்வும்

பொதுவாக, அரசு பெறுகின்ற கடனின் மூலம் நுகர்வானது பாதிக்கப்படாது. ஏனெனில், அரசிற்குக் கடன் அளிப்பது கடன் அளிப்பவர்களின் விருப்பத்தின் அடிப்படையிலேயே அமைகின்றது. சேமிப்பின் ஒரு பகுதியே அரசிற்குக் கடனாகத் தரப்படுகின்றது. ஆனால் போர்க்காலங்களிலும், அவசர நிலை தோன்றுகின்ற காலங்களிலும் மக்கள் அரசிற்குக் கடன் அளிப்பதைக் கட்டாயமாக்கலாம். இதனால், தனியாருடைய நுகர்வானது குறைவடையும் நிலை ஏற்படுகின்றது. மக்கள் பொதுக்கடனை அளிக்க அரசு சில ஊக்கங்களைத் தரலாம். அரசின் கடன் பத்திரங்களை அதிக வட்டி வீதத்திற்கு விற்பனை செய்யலாம். வேறு சில சிறப்பான நன்மைகளையும் கடன் பத்திரங்களை அதிகம் விற்பனை செய்வதற்காக அளிக்கலாம். இதனால், தனியார் அரசின் கடன் பத்திரங்களை வாங்குவதற்கு முன்வருவார்கள். அவர்களின் சேமிப்பு பெருகும். நிதி நிறுவனங்களும் அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தைப் பெறுகின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, பொதுக்கடன் நுகர்வின் அளவைக் குறைப்பதில்லை.

## II. பொதுக்கடனும் முதலீடும்

அரசின் கடன்பெறும் நிலையால் தனியாருடைய முதலீட்டின் அளவு சுருங்குகின்றது. எனினும், இது அரசின் முதலீட்டினால் ஈடுசெய்யப்படுகின்றது. வணிக வங்கிகளிடமிருந்தும், மத்திய வங்கியிடமிருந்தும் அரசு கடன் பெற்றால் அது முதலீட்டின் அளவைப் பாதிக்காது. ஆனால் தனியாரிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும் கடன் பெற்றால் அது தனியார் முதலீட்டைப் பாதித்துவிடும். உதாரணமாக, அரசின் கடன் பத்திரங்களுக்கு அதிக வட்டி வீதமானது கொடுக்கப்பட்டால், பிற தொழில் நிறுவனங்களின் பங்குகளின் தேவை குறையும். இதன் காரணமாகக் ‘ கூட்டுரிமைப்பங்குகள் ’ (Stocks), பங்குகள் ஆகியவற்றின்

விலை குறைந்துவிடும். சிலகாலங்களைத்தவிர, அரசு கடன் பெறுவது தனியாரின் முதலீட்டைப் பாதிப்பதில்லை. அரசு பெறும் கடன் மறைமுகமாக முதலீட்டைப் பாதிக்கவும் வகையுண்டு. பொதுக் கடனை அரசு மிக அதிக அளவில் பெற்று விட்டது என்றால், அரசு அதிக வரிகளை விதிக்கக்கூடுமென்ற அச்சத்தால் பொது மக்கள் தங்கள் முதலீட்டின் அளவைக் குறைத்துக் கொள்கின்றார்கள். அரசு பெற்ற கடனைச் செலவிடும்போது, பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் தேவை அதிகரிக்கின்றது; அளிப்பு அதே நிலையிலேயே இருக்கின்றது. இதனால், விலையுயர்வு ஏற்படுகின்றது; இலாபத்தின் அளவும் பெருகுகின்றது. பொதுக் கடன் பொருளாதார நடவடிக்கைகளை விரிவுபடுத்தி விரைவு படுத்துகின்றது.

## III. பொதுக்கடனும் வருவாய்ப் பகிர்வும்

அரசு பெற்ற கடன் நிதியைச் செலவுசெய்வது மக்களின் உண்மையான வருவாயை உயர்த்தும். குறைவான வருவாயைப் பெறுபவர்களுக்கு பல நன்மைகளையும் அளிக்க அரசு முதலீடுகளைச் செய்கின்றது. மக்கள் பெறுகின்ற வருவாய்களில் உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்க நடவடிக்கைகள் எடுக்கப் படுகின்றன. வருவாயில் மறுபகிர்வு செய்யப்படுகின்றது. அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தவர்களுக்கு வட்டி அளிக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது. சமதர்மச் சமுதாயத்தைப் பெற பொதுக்கடனும் உதவுகிறது. வருவாய், செல்வம் ஆகிய வற்றை மறுப்பங்கீடு செய்யப் பொதுக்கடன் வழி வகுக்கும். சமுதாயத்தின் தாழ்ந்த நிலையில் உள்ள மக்களின் வாழ்வின் தரம் உயர பொதுக்கடன் உதவுகின்றது.

## IV. வெளிநாட்டுக் கடன்களால் ஏற்படும் விளைவுகள்

வெளிநாட்டுக் கடன்கள் நுகர்வு, முதலீடு ஆகியவற்றின் மீது சாதகமான செல்வாக்கைக் கொண்டுள்ளன. வெளிநாட்டுக் கடன்கள் ஏற்றுமதிகளின் அளவை உடனடியாகப் பெருக்க முடியாமையால் பெறப்படுகின்றன. இவ்வெளிநாட்டுக் கடன்கள் பல இறக்குமதிப் பொருட்களில் முதலீடு செய்யப்படுகின்றன. நுகர்பொருட்கள் இறக்குமதி செய்யப்பெற்றால், உள்நாட்டில் பண்டங்களின் பற்றுக்குறை நீங்கி பணவீக்க நிலை ஏற்படாது. வெளிநாட்டுக் கடன்கள் இயந்திரங்கள், மூலப்பொருட்கள், தொழில் நுணுக்கம் ஆகியவற்றை இறக்குமதி செய்யப் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. இதனால், பொருளாதாரம் விரைவாகத் தொழில் மயமாகின்றது. வெளிநாட்டுக் கடன்கள் போருக்காகச் செலவிடப்பட்டாலும், நாட்டின் படைபலத்தை

அதிகரித்து புதிப்பிக்கப் பயன்படுத்தப்பட்டாலும் பொருளாதார வளர்ச்சி வீதம் உயர்வடையாது. இவ்வாறு பெற்ற கடன்களுக்கு வட்டி அளிக்கவேண்டும்; குறிப்பிட்ட காலத்தில் அசலையும் அளித்தல் வேண்டும். ஏற்றுமதியைப் பெருக்குவதின் மூலமே வெளிநாட்டுக் கடன்களை எளிதில் தீர்க்க முடியும். ஏற்றுமதியைப் பெருக்குவது தவிர்க்க முடியாததாக இருப்பதால், உள்நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படும். வெளிநாட்டுக் கடன்களில் ஒரு சில தீமைகள் இருந்தாலும், நன்மைகள் எண்ணிலடங்காதவைகளாகும்.

## உள்நாட்டு, வெளிநாட்டுக் கடன்கள்

பொதுவாக, உள்நாட்டுப் பொதுக்கடன்களே முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றன. ஆனால், சமீப காலத்தில் பல மேம்பாடடைந்துவரும் நாடுகளும் பெருமளவிற்கு வெளிநாட்டுக் கடன்களையே பெற்று வருகின்றன. உலக வங்கி போன்ற பன்னாட்டு நிதி நிறுவனங்களிடமிருந்தும், அயல்நாட்டு அரசுகளிடமிருந்தும் கடன்கள் பெறப்படுகின்றன. சில காலங்களில் பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலையை நீக்கவும் வெளிநாட்டுக் கடன்கள் வாங்கப் பெறுகின்றன. பெரும்பாலான அயல்நாட்டுக் கடன்கள் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்காகவே பெறப்படுகின்றன. முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் வெளிநாட்டுக் கடன்கள் இன்றியமையாத நிலையைக் கொண்டுள்ளன. இந்நாடுகள் முன்னேற்ற நிலைகளில் இயந்திரங்களையும், கச்சாப் பொருட்களையும் இறக்குமதி செய்வது அவசியமாகின்றது. ஆனால், இந்நாடுகளால் இறக்குமதிக்குச் சமமாக ஏற்றுமதியைச் செய்ய முடிவதில்லை. எனவே, வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் பாதக அயல்நாட்டு செலுத்து இருப்புநிலை தொடர்ந்து நீடிக்கின்றது. நாணய மாற்றுவீதச் சிக்கல்களும் தோன்றுகின்றன. உள்நாட்டுக் கடன்களாலும், வெளிநாட்டுக் கடன்களாலும் ஏற்படுகின்ற சுமைகளைப் பின்வருமாறு விளக்கலாம்.

### உள்நாட்டுக் கடன்களின் சுமை

உள்நாட்டுக் கடனில் சமுதாயம் நேரடியான பணச்சுமையைப் பெறுவதில்லை. வட்டியை அரசு கடனுக்காக அளிப்பதும், வரியை மக்கள் அரசிற்கு அளிப்பதும் வாங்கும் திறனானது அரசிடமிருந்து மக்களுக்கும், மக்களிடமிருந்து அரசிற்கும் மாற்றப்படுவதையே குறிக்கின்றது. அரசின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்பவர்கள் சமுதாயத்தின் ஒரு பிரிவினராக இருக்கின்றனர். வரிகளைச் செலுத்துபவர்கள் சமுதாயத்தின் வெவ்வேறு பிரிவில் அமைந்

துள்ளனர். அவர்கள் பெறுகின்ற வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்திருக்கின்றன. எனவே, பலவகைப்பட்ட சமுதாய மக்களிடையே வருவாய்ப் பகிர்வில் மாற்றங்கள் தோன்றுகின்றன.

உள்நாட்டுக்கடன் சுமையாக அமைவதில்லை என்பது தவறான கருத்தாகும். முதல் நிலையில், கடன் பெறப்படுகின்றமைக்கான நோக்கம் கருதப்பட வேண்டும். உற்பத்திப் பணிகளை மேற்கொள்ளத் தேவையான நிதியானது கடனாகப் பெறப்படுதல் நன்மை பயப்பதாகும். இக்கடனை முதலீட்டினால் கிடைக்கும் இலாபத்தின் மூலம் திருப்பித்தந்துவிடலாம். ஆனால், போர்க் காலங்களில் பெறப்படுகின்ற கடனை வரிவருவாயின் மூலமே தீர்க்க வேண்டியுள்ளது. ஆக்கமற்ற பணிகளுக்குக் கடன் பெறப்படுவது பெரிய சுமையாகவே அமைகின்றது; ஆக்கப் பணிகளுக்குக் கடன் பெறப்படுவது சுமையாக அமைவதில்லை. வரி விதிப்பால் ஏற்படுகின்ற சுமையானது அரசு கடனுக்காக அளிக்கின்ற வட்டித் தொகையால் குறைக்கப்படுகின்றது என்றும் கூறப்படுகின்றது.

இரண்டாவதாக, பொதுக்கடனால் ஏற்படும் உண்மையான சுமை எப்பிரிவு மக்கள் கடன்பத்திரங்களை வைத்திருக்கின்றார்கள், அவர்கள் எந்த அளவிற்கு வட்டித் தொகையைப் பெறுகின்றார்கள், எப்பிரிவு மக்கள் வரிகளைச் செலுத்துகின்றார்கள் என்பவற்றைப் பொறுத்து அமையும். பெரும்பான்மையான நிலைகளில் அரசின் கடன்பத்திரங்களை வைத்திருப்பவர்கள் அதிக வருவாய் பெறுபவர்களாக இருக்கின்றனர். வரிகளைச் செலுத்துபவர்கள் செல்வந்தர்களோடு வறியவர்களும் ஆவார்கள். எனவே, சமுதாயத்தில் பொதுக்கடனால் நிகரச் சுமையானது தோன்றுகின்றது.

மூன்றாவதாக, பொதுக்கடனைத் திருப்பித்தருதல் உண்மையான சுமையாக அமைகின்றது. முன்பு பலருடைய நன்மைக்காக பெறப்பட்டப் பொதுக்கடனைத் தீர்க்க அரசு புதிய வரிகளை விதிக்கின்றது; பழைய வரிகளை உயர்த்துகின்றது. பழைய கடன்களைத் தீர்க்கப் புதிதாகப் பலர் வரிகளைச் செலுத்த வேண்டியுள்ளது. அரசு கடனைத்திருப்பித்தர புதிய உற்பத்தி நிறுவனங்களின் மீது வரிவிதிப்புச் செய்கிறது. இதனால் இந்நிறுவனங்கள் அதிக இலாபத்தைப் பெறுவது தடைப்படுகின்றது.

நான்காவதாக, போர்க்காலங்களில் அரசு கடனைப் பெறும் போது அதிக விலையுயர்வால் பணத்தின் மதிப்பு குறைவாகவே இருக்கும். போர் முடிவடைந்தபின் பொதுவாக விலைகள் குறையத்தலைப்படுகின்றன. எனவே, அரசின் கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் வட்டியைப் பெறுகின்றபோது உண்மையான வருவாயைப் பெறுகின்றார்கள்.

இறுதியாக, பொதுக்கடன் திருப்பித் தரப்படும்போதும், கடனுக்கான வட்டித்தொகையானது தரப்படும்போதும் வரி விதிப்பு முறைகள் மாற்றப்படுகின்றன. இதனால் மக்கள் சேமிக்கும் திறனையும், சேமிக்கும் விருப்பத்தையும் இழக்கின்றார்கள். சமுதாயத்திற்கு நன்மையளிக்க வேண்டுமென்றால் வளர்வீத வரி முறைகள் பின்பற்றப்பட்டுக் குறுகிய காலத்தில் பொதுக்கடன் தீர்க்கப்பட வேண்டும். உற்பத்தி பாதிக்காத வகையில் பொதுக் கடன் அரசால் திருப்பித் தரப்பட வேண்டும். கடனைத் திருப்பித் தரும் நிர்வாகம் சிறப்பாக அமைதல் அவசியமானதாகும். அப்போதுதான் பொதுக்கடனின் எல்லா நன்மைகளையும் பெற முடியும் ; சில குறைபாடுகளையும் தவிர்க்க இயலும்.

மேற்குறிப்பிடப்பட்டுள்ளவைகளினால், உள்நாட்டுக் கடனில் உள்ள சுமைகளை அறிய முடிகின்றது. ஆகவே, உள்நாட்டுக்கடன் பொருளாதாரத்தில் சுமையை ஏற்படுத்தாது எனக் கூறுவது தவறுடையதாகும்.

### வெளிநாட்டுக் கடன் சுமை

ஒரு வகையில் வெளிநாட்டுக் கடன் சுமை உள்நாட்டுக் கடன் மையைப் போன்று உள்ளது எனலாம். அரசு கடனைத் திருப்பித்தர அதிக வரிவிதிப்பைச் செய்கின்றது. உள்நாட்டுக் கடனில் அரசு அளிக்கின்ற வட்டியும், திருப்பித் தருகின்ற அசலும் உள்நாட்டில் மக்களால் பெறப்படுகின்றன ; வெளிநாட்டுக் கடனில் இவை வெளிநாட்டினரால் பெறப்படுகின்றன. வெளிநாட்டுக் கடனில் மொத்தப் பணச் சுமையானது மிகுதியாக இருக்கின்றது. அயல்நாட்டுச் செலாவணியை ஈட்டி வெளிநாட்டுக் கடனைத் தீர்க்க வேண்டியுள்ளது. அயல்நாட்டவருக்கு அயல் நாட்டுச் செலாவணியை அளிப்பது அவசியமாகிறது. அயல் நாட்டுச் செலாவணியைப் பெற ஏற்றுமதியைப் பெருக்க வேண்டும். சாதக வாணிப இருப்புநிலையைப் பெறுவது அவசியமாகிறது. வெளிநாட்டுக் கடன்களுக்கான வட்டியை அளிக்கவும், கடன்களைத் திருப்பித்தரவும் வேண்டுமானால் ஏற்றுமதிப் பொருட்களின் மதிப்பானது இறக்குமதிப் பொருட்களின் மதிப்பைவிட அதிகமாக இருத்தல் வேண்டும்.

உள்நாட்டுக் கடன் பொருளாதாரத்தில் பெரிய சுமையை ஏற்படுத்துவதில்லை. இதன் மூலம் தேசிய வருவாயானது மறுபகிர்வு செய்யப்படுகின்றது. வெளிநாடுகளிலிருந்து கடனைப் பெறுவதால் பொருளாதாரத்தில் சில தீய விளைவுகள் ஏற்படலாம். வெளிநாட்டுக் கடனையும், வட்டியையும் தரும்போது தேசிய வருவாயில் குறைவு ஏற்படும். பொன்னின் தேவையானது

அதிகரிக்கின்றது ; அந்நியச் செலாவணி வசதிகளில் குறைவு தோன்றுகின்றது. உண்மையில் வெளிநாட்டுக்கடன் பல நன்மைகளை வளர்ச்சியடையும் பொருளாதாரத்திற்குத் தருகின்றது. வெளிநாட்டுக் கடனின் மூலம் இயந்திரங்கள், மூலப் பொருள்கள், மற்றும் சில அவசியப் பொருட்கள் ஆகியவை இறக்குமதி செய்யப் படுகின்றன. கடன் பெறப்படும்போதே அதற்கு ஈடான பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுவதில்லை. கடனைப் பெற்ற பிறகு குறிப்பிட்ட காலம் கழித்து உற்பத்தியைப் பெருக்கும் திறனைக் கொண்டதாகப் பொருளாதாரம் மாறிவிடுகின்றது. இறக்குமதியைவிட ஏற்றுமதியை அதிகரிக்கும் திறனைப் பொருளாதாரம் பெற்றுவிடுகின்றது. இதனால் பொருளாதாரம் முன்னேற்றம் அடைவதோடு, வெளிநாட்டுக் கடனும் எளிதில் தீர்க்கப்பட்டுவிடுகின்றது. வெளிநாட்டுக் கடனால் ஒரு நாட்டில் எவ்விதத் தாழ்வுநிலையும் ஏற்படுவதில்லை; வெளிநாட்டுப் பொருட்களும், உள்நாட்டுப் பொருட்களும் மாற்றப்படுகின்றன.

போருக்காக வெளிநாட்டுக் கடன் பெறப்பட்டால் அது பொருளாதாரத்தில் சுமையை ஏற்படுத்துவதாகவே கூறலாம். போருக்காகப் பெறப்படும் வெளிநாட்டுக் கடனால் உள்நாட்டில் உற்பத்தித்திறனை உயர்த்த முடியாது. அந்நாட்டில் ஏற்றுமதித் திறனைப் பெருக்குவதும் எளிதாக இருக்காது. ஏற்றுமதி உபரியின் அளவு குறைவாகவே இருக்கும். இவ்விதக் கடனைத் திருப்பித் தருவது கடினமாகின்றது. எனவே, இவ்வகையில் போருக்காகப் பெறப்படும் வெளிநாட்டுக் கடன் பொருளாதாரத்தில் நேரடிச் சுமையை ஏற்படுத்துகின்றது.

வெளிநாட்டுக் கடனால் கடனைப் பெற்ற நாடுகளில் சில இன்னல்கள் தோன்றுகின்றன. வெளிநாட்டுக் கடனைத் தீர்க்க ஏற்றுமதி உபரியைப் பெருக்கத் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதனால் இறக்குமதியின் அளவும் குறைக்கப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்கு சில வகைப்பட்ட இறக்குமதிப் பொருட்களும் இன்றியமையாதவைகளாக இருக்கின்றன. இவ்வகைப் பொருட்களை இறக்குமதி செய்வது குறைக்கப்படுவதால் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது கடினமாகின்றது. மிக அவசியமான காலங்களில் மட்டும் வெளிநாட்டுக் கடனைப் பெறுவது நன்மை தருவதாகும். உள்நாட்டின் வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தி உற்பத்தியை உயர்த்த வெளிநாட்டுக் கடனைப் பெறலாம். இதன் மூலம் நாட்டின் மொத்த ஆக்கமானது அதிகரிப்பதோடு, ஏற்றுமதிப் பொருட்களின் உற்பத்தியையும் பெருக்கலாம். இம்

முறையால் வெளிநாட்டுக் கடன் எதிர்காலத்தில் பொருளாதார சுமையைத் தோற்றுவிக்கும் எனக் கூறயியலாது.

மேம்பாடடைந்துவரும் நாடுகள் வெளிநாட்டுக் கடனைப் பெற்று சமூதாய, பொருளாதார 'மேலமைப்புச் செலவுகளைச்' (Overheads) செய்யலாம். அடிப்படைத் தொழில்களை வளர்ப் பதின் மூலமும் வெளிநாட்டுக் கடனை எளிதில் திருப்பித்தர முடியும். முன்னேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ள வெளிநாட்டுக் கடனைப் பெறுவது சுமையாக அமைவதில்லை. அதை ஒரு இலாபகர மான முயற்சி என்றே குறிப்பிடலாம். இந்நிலையில் வெளிநாட்டுக் கடனும் உள்நாட்டுக் கடனைப் போன்று முன்னேற்றப் பணிகளுக் காகவே பெறப்படுகின்றது. சில குறைபாடுகளைக் கொண்டிருந் தாலும் வெளிநாட்டுக் கடன் உள்நாட்டுக் கடனைவிட பல நிலைகளில் முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கின்றது எனக் கூறலாம்.

அதிகரிக்கும் பொதுக்கடனால் ஒரு நாடு திவாலாகிவிடும் என்ற கருத்து நிலவி வருகின்றது. இதில் பாதியளவு உண்மையும், பாதியளவு உண்மையற்ற நிலையும் உள்ளதாகக் கருதலாம். உள் நாட்டுக் கடனால் எந்த ஒரு அரசும் திவாலாகும் எனக் கூற முடியாது. காகிதப் பணத்தை அச்சிடுவதின் மூலமும், அதிக வரி விதிப்பைச் செய்வதின் மூலமும் உள்நாட்டுக் கடனைத் தீர்த்துவிட முடியும். அரசு அதிக 'மூலதன மதிப்பு வரியை' (Capital Levy) விதிப்பதின் மூலம் விரைவாக உள்நாட்டுக் கடனைத் தீர்க்கலாம். 'கடன் மறுப்பு' (Repudiation) பெரும்பாலும் இன்றைய அரசு களால் செய்யப்படுவதில்லை. உள்நாட்டுக் கடனை மறுப்பதைத் தவறானது எனக்கொள்ள முடியாது. ஏனெனில், அரசிற்குக் கடனளித்து அதன் மூலம் வட்டி வருவாயைப் பெறுபவர்கள் அரசு விதிக்கின்ற வரிகளைச் செலுத்த வேண்டியவர்களாகின்றனர். அரசு கடனிற்கான வட்டியைத்தர வரிகளை விதிக்க வேண்டியது தவிர்க்க முடியாத ஒன்றாகின்றது.

வெளிநாடுகளிலிருந்து பெறப்படுகின்ற கடனைத் தீர்க்க ஏற்றுமதி உபரியானது பெருக வேண்டும். ஏற்றுமதியைப் பெருக்கமுடியாத நிலைகளில் வெளிநாட்டுக் கடனைத் திருப்பித் தருவது கடினமாகின்றது. எனவே, கடனைத் திருப்பித் தருவதற்கு அதிக காலம் தேவைப்படுகின்றது. வெளிநாட்டுக் கடன்கள் தற்போது மறுக்கப்படுவதில்லை. அவ்வாறு வெளிநாட்டுக் கடன் மறுப்பைச் செய்கின்ற நாடு உலக நாடுகளிடையே செல்வாக்கை இழந்துவிடும். திரும்பவும் பொதுக்கடனைப் பெறுவது கடன் மறுப்பைச் செய்த நாட்டிற்கு முடியாததாக மாறிவிடுகின்றது.

பொதுவாக மதிப்பீடு செய்யும்போது உள்நாட்டுக் கடன் வெளிநாட்டுக் கடன் இரண்டுமே நன்மை பயப்பவைகளாகும். ஆனால், சமுதாயத்தின் மீது சில சுமைகளை இவை ஏற்படுத்து கின்றன. மக்கள் நேரடியாகவும், மறைமுகமாகவும் பொதுக் கடனால் பாதிப்படுகின்றனர்.

**கடன்மீட்சி முறைகள்** (Redemption of Public Debt)
**(உள்நாட்டுக் கடன்)**

அரசுகள் பொதுக்கடன்களை நிரந்தரமாகக் கொண்டிருக் கின்றன. அக்கடன்களை அவ்வப்போது திருப்பித் தருதல் மக்களிடையே அரசின் மீதுள்ள நம்பிக்கை உயர உதவும். அரசுகள் பொதுக்கடன்களைப் பெற்றும், திருப்பித் தந்தும் வருகின்றன. பொதுக்கடன் கீழ்க்கண்ட பல வகைகளில் தீர்க்கப் படுகின்றது. அரசு பொதுக்கடனுக்கான வட்டியை அளிப்ப தோடு அசலையும் திருப்பித் தருகின்றது. அரசின் பொதுக் கடன் கொடுக்கவேண்டிய நிலை உயரும்போது மக்களின் மீது அதிக வரி விதிப்புக்கள் செய்யப்படுகின்றன என்ற கருத்து நிலவி வருகின்றது. விரைவாகக் குறுகிய காலத்தில் பொதுக் கடனை தீர்ப்பது நன்மை பயக்கும். உற்பத்திப் பணிகளில் பொதுக் கடன் அரசால் பயன்படுத்தப்படும்போது கடனைத் திருப்பித் தருவது எளிதாகின்றது. எனவே, இவ்வித ஆக்கப்பணிகளில் ஈடுபடுத்தப்பெற்ற பொதுக்கடனை நீண்ட காலத்தில்கூட திருப்பித் தரலாம். ஆக்கமற்ற துறைகளில் ஈடுபடுத்தப்பட்ட பொதுக் கடனைக் குறுகிய காலத்தில் தீர்ப்பது அவசியமாகின்றது. ஏனெனில், இவ்வகைப்பட்ட அரசின் செலவுகளால் உற்பத்தி யானது உயர்ந்து அரசிற்கு வருவாய் கிடைப்பதில்லை. அரசு கடனைத் திருப்பித்தருவதில் பல முறைகளைப் பின்பற்றுகின்றது. பொது வாக, தற்கால அரசுகள் கடன் மறுப்பைச் செய்வதில்லை.

(1) கடன் மறுப்பு (Repudiation of Debt)

கடன் மறுப்பு என்பது பொதுக்கடனைப் பெற்ற ஒரு அரசு வட்டியையோ அல்லது அசலையோ திருப்பித்தர மறுக்கின்ற நிலையைக் கொண்டதாகும். பழைய காலங்களில் மன்னர்கள் நாடுகளை ஆண்டுவந்தபோது இவ்வித கடன் மறுப்பு முறைகள் அமைந்திருந்தன. தற்போதுள்ள அரசுகள் பொதுக்கடனை மறுப்பது எளிதானதன்று. கடன் மறுப்பு அரசின் மதிப்பை யும், செல்வாக்கையும் குலைத்துவிடும்; உள்நாட்டில் புரட்சி, குழப்பம் போன்றவைகளையும் ஏற்படுத்திவிடும். ஒவ்வொரு ஆண்டும் அரசு கடனில் ஒரு பகுதியைத் திருப்பித் தருவது சாலச்

சிறந்ததாகும். ஆனால், பலவிதக் காரணங்களால் அரசு பொதுக் கடனை மீட்பது கடின நிலையைக் கொண்டதாக அமைகின்றது. இன்று உலகின் பல அரசுகளும் பொதுக்கடனை ஆண்டுதோறும் மீட்பதில்லை. கடனை மீட்க மறுக்கின்ற நிலைக்கே கடன் மறுப்பு என்று பெயர். கடனை மறுத்த அரசின்மீது மக்கள் நம்பிக்கை யிழப்பார்கள். ஆகவே, கடன் மறுப்பை இன்றைய அரசுகள் செய்வதில்லை. எனினும், தவிர்க்க முடியாத நிலைகளில் உள்நாட்டுக் கடனையும், வெளிநாட்டுக் கடனையும் அரசுகள் மறுப்பதுண்டு. உதாரணமாக, உள்நாட்டில் நிதிப்பற்றுக்குறை ஏற்படலாம். திவாலாகும் நிலை தோன்றும்போது உள்நாட்டுக் கடன் மறுக்கப் படுவதுண்டு. அந்நியச் செலாவணித் தட்டுப்பாடு மிகுதியாக ஏற்படும்போது வெளிநாட்டுக் கடனும் மறுக்கப்படலாம். உள் நாட்டுக் கடனை மறுப்பது பலவிதக் குழப்பங்களைத் தோற்று விக்கும்; அரசிற்குக் கடன் அளித்தவர்கள் புரட்சி நடவடிக்கை களில் ஈடுபடுவார்கள். அரசிற்கு எதிரான சக்தி உருவாக இது வழி வகுக்கும். சில காலங்களில் வெளிநாட்டுக் கடனை மறுப்பது வேறு வகைகளில் பொருளாதார முன்னேற்றத்திற்கு இடையூறாக அமையும். கடன் மறுப்பு என்ற முறையை அரசு தவிர்க்க வேண்டியது அவசியமாகும். கடன் மறுப்பை பொதுக்கடனைத் தீர்க்க உதவும் முறை என்றே கருதக் கூடாது.

### (2) கடன்களின் மாற்றம் (Conversion of Loans)

கடன் மீட்சி முறைகளில் கடன்களை மாற்றுவதும் ஒன்றாகும். இம்முறையில் பழைய கடன் புதிய கடனாக மாற்றம் பெறு கின்றது. ஒரு கடனை மீட்க மற்றொரு கடனை எழுப்புவது 'மாற்றம்' எனப்படுகின்றது. குறிப்பிட்ட ஒரு கடனைத் திருப்பித்தர வேண்டிய இறுதிக்காலம் வரும்போது அக்கடன் பத்திரங்களுக்குப் பதிலாகப் புதிய கடன் பத்திரங்கள் தரப்படுகின்றன. இவ்வித மாற்றங்களை கடனை அளித்தவர்கள் ஏற்க சற்று அதிக வட்டி வீதத்திலும் புதிய கடன் பத்திரங்கள் விற்கப்படுவதுண்டு. சில அரசுகள் புதிய கடன் பத்திரங்களின் மூலம் கிடைக்கும் வட்டிக்கு வரி விலக்கு அளிக்கின்றன. இவ்விதக் கடன்களின் மாற்றம் செய்யப்படுகின்றமைக்கான காரணங்கள் சிலவும் அமைந்துள்ளன.

முதலாவதாக, கடனை மீட்க வேண்டிய காலத்தில் அரசிடம் தேவையான நிதிவசதி இல்லாமல் இருக்கலாம்.

இரண்டாவதாக, அரசு பெற்ற பொதுக்கடனிற்காக அதிக வட்டி வீதத்தை அளித்து வரலாம். அவ்வட்டி வீதத்தைக் குறைப் பதற்காகவும் பழைய கடன் புதிய கடனாக மாற்றப்படுகின்றது.

கடன்களின் மாற்றத்தினால் பொதுக்கடனின் அளவு மாறு படுவதில்லை. கவனமாக ஆராயும்போது கடன்களின் மாற்றம் கடனின் அளவைக் குறைப்பதில்லை என்பதை அறியலாம். எனவே, இம்முறையையும் பொதுக்கடனை மீட்கும் உண்மையான முறை எனக்கருத இயலாது.

(3) கடன்கழிவு நிதி (Sinking Fund)

பொதுக்கடனைத் தீர்க்கும் முறைகளில் இது சிறப்பானதாகும். இதன் மூலம் அரசு முறையாகக் கடனைத் திருப்பித்தருகின்றது. ஆண்டுதோறும் அரசின் வரவு-செலவுத் திட்டத்தில் கடனை மீட் பதற்காக ஒதுக்கீடு செய்யப்படுகின்றது. இதன் மூலமாக பொதுக்கடனைத் திருப்பித் தருவதற்கான நிதி படிப்படியாகத் திரட்டப் பெறுகின்றது. தனிப்பட்ட ஒரு கடனிற்காகவும் கழிவு நிதி ஏற்படுத்தப்படுவதுண்டு. எல்லாவிதக் கடன்களையும் தீர்ப் பதற்கான கழிவு நிதியும் தோற்றுவிக்கப்படுவதுண்டு. இவை முறையே 'சிறப்புக்கழிவு நிதி' என்றும், 'பொதுக்கழிவு நிதி' என்றும் அழைக்கப்படுகின்றன. உதாரணமாக, ஒரு அரசு 10 ஆண்டு களில் திருப்பித்தரத்தக்க ரூ. 20 கோடிக் கடனை சாலை அமைப்பிற்காகப் பெறுகின்றது என வைத்துக்கொள்ளலாம். சில புதிய வரிகளின் மூலம் கிடைக்கின்ற வருவாய் கடனைத் தீர்ப் பதற்காக ஏற்படுத்தப்படுகின்ற கழிவு நிதியில் சேர்க்கப்படுகின்றது. முதலீட்டினால் கிடைக்கக்கூடிய வருவாயும், வரிவருவாயும் 10 ஆண்டுகளில் கடனை மீட்கப் பயன்படுத்தப்படுகின்றன. குறிப் பிட்டக்காலத்தில் கடனும் தீர்க்கப்பட்டு விடுகின்றது. இதில் உள்ள ஒரு குறைபாடு என்னவென்றால், அரசு இக்கடன்கழிவு நிதியை வேறு சில பணிகளுக்காகவும் செலவிட வாய்ப்பு இருக் கின்றது. இதனால், கடன்கழிவு நிதி எதற்காக ஏற்படுத்தப் பட்டதோ அந்நோக்கமானது நிறைவேறுவதில்லை.

தற்காலத்தில் பல நாடுகளின் அரசுகளும் ஆண்டுதோறும் இவ் விதக் கடன்கழிவு நிதிகளை சேமிப்பதில்லை. ஆனால், ஒவ்வொரு ஆண்டும் கடனைத் திருப்பித் தருவதற்காகக் குறிப்பிட்ட அளவு நிதி யானது ஒதுக்கப்படுகின்றது. இவ்வொதுக்கப்பட்ட நிதி அந்தந்த ஆண்டுகளிலேயே கடனை மீட்கப் பயன்படுத்தப் பெறுகின்றது. இவ்வகைக் கடன் கழிவு நிதியின் தொடக்கம் இங்கிலாந்து நாட்டின் பிரதமராக இருந்த சர் வால்போல் என்பவரால் 1714-ஆம் ஆண்டு ஏற்பட்டது.

(4) மூலதன மதிப்பு வரி (Capital Levy)

பொதுக்கடனை மீட்பதற்காக மூலதனமதிப்பு வரி விதிக்கப் படுவதும் உண்டு. பொதுவாக இவ்வரி போர்க் காலத்திற்குப் பிறகு

விதிக்கப்படுகின்றது. போர் முடிவடைந்தவுடன் இவ்வரி வசூலிக்கப் படுகின்றமைக்குச் சில காரணங்களைப் பின்வருமாறு விளக்கலாம் :

(i) போர்க்காலத்தில் அரசு பொதுக்கடனை அதிக அளவில் பெறுகின்றது. போரில் ஈடுபடும்போது அரசிற்கு அதிகச் செலவினங்கள் தோன்றுகின்றன. எனவே, போர் முடிவடைந்தபிறகு பொதுக்கடனின் அளவு மிக உயர்வாக உள்ளது.

(ii) போருக்காகப் பெறப்பட்ட பொதுக்கடன் உற்பத்தியை உயர்த்த உதவுவதில்லை. இதனால், இக்கடனைத் தீர்க்க போர் முடிவடைந்த பிறகு அரசு அதிக வரிகளை விதிக்க வேண்டியுள்ளது. அதிக அளவு வரிகளைப் பல ஆண்டுகளுக்குத் தொடர்ச்சியாகப் பெறுவதைவிட, மூலதன மதிப்பு வரியை விதித்துக் கடனைத் தீர்ப்பது நன்மை பயக்கும்.

(iii) போர்க்காலத்தில் ஏற்படுகின்ற பணவீக்க நிலையால் வியாபாரிகளும், உற்பத்தியாளர்களும், ஊக வணிகர்களும் கொள்ளை இலாபத்தைப் பெறுவார்கள். எனவே, மூலதன மதிப்பு வரியை அளிப்பது அவர்களுக்கு எளிதானதாகவே இருக்கும். மிக அதிக வருவாயைப் பெறுகின்ற அவர்கள் போர்க்காலத்தில் ஏற்படும் பொதுக்கடன் சுமையைத் தீர்க்க உதவுவது பொருத்தமானதேயாகும்.

(iv) பொதுக்கடனைத் தீர்க்க அரசு மூலதனமதிப்பு வரியை விதிக்கின்றது. உயர்வான வருவாய் பெறுபவர்களின் நிலை மூலதனமதிப்பு வரியால் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில், கடனை அரசிற்கு அளித்தவர்கள் அதிக வருவாய் பெறுபவர்களாகவே இருக்கின்றனர். அரசு மூலதனமதிப்பு வரியால் பெறும் வருவாயை பொதுக்கடனைத் தீர்க்கவே பயன்படுத்துகின்றது. கடனை அளித்த அதிக வருவாய் பெறுபவர்களையே அரசின் மூலதன மதிப்பு வரி வருவாய் சென்றடைகின்றது.

மூலதன மதிப்பு வரியின் மூலம் பொதுக் கடனை மீட்பது 'கடன் கழிவு நிதி' முறையை விடச் சிறந்தது. இதற்குக் காரணம் மூலதன மதிப்பு வரி ஒரே முறையில் வசூலிக்கப்படுகின்றது. 'கடன் கழிவு நிதி' முறையில் வரிகள் ஆண்டுதோறும் அதிக அளவில் விதிக்கப்படுகின்றன. பொதுக்கடனைத் திருப்பித்தருவதற்கான எளிய முறை மூலதன மதிப்பு வரி முறையாகும். இல்லாவிடில் பொதுக்கடனைத் தீர்க்க உயர்ந்த அளவு வரிகளை விதிப்பது தவிர்க்க முடியாததாகின்றது. இம்முறையில் உள்ள குறைபாடு அரசு அடிக்கடி மூலதன மதிப்பு வரி விதிப்பைச் செய்ய தூண்டப்படலாம் என்பதாகும்.

பொதுக்கடன் மீட்சிக்காக விதிக்கப்படும் தனிவரி என இதைக் கூறலாம். பல ஐரோப்பிய நாடுகள் போர்க்காலக் கடன்களைத் திருப்பித்தர மூலதன மதிப்பு வரியை விதித்தன. போர்க்காலங் களில் சொத்துக்களின் மதிப்பு உயர்கின்றது ; மக்களின் வருவாயும் அதிகரிக்கின்றது. ஆகவே, போர்க்காலக் கடனைத்தீர்க்க மூலதன மதிப்பு வரி விதிப்பது நியாயமானது என தொன்மைப் பொருளி யலறிஞர் பேராசிரியர் ரிக்கார்டோ கூறுகின்றார். ஆனால், இவ்வித வரிவிதிப்பால் சேமிப்பு விதமானது பாதிக்கப்படுகின்றது என் பதை மறுத்தல் இயலாது.

(5) பங்கு அங்காடிகளில் பத்திரங்களை வாங்குதல் (Buying up Loans)

அரசு கடனைத் திருப்பித்தர பங்கு அங்காடிகளில் கடன் பத்திரங்களை வாங்கும் முறையையும் பின்பற்றலாம். சில காலங் களில் இதன்மூலம் அதிக அளவு இலாபத்தைப் பெறவும் வாய்ப்பு ஏற்படும். பங்கு அங்காடிகளில் ஈடுபட அரசிடம் அதிக மூலதனம் அமைந்திருக்க வேண்டும். இவ்வாறு அங்காடிகளிலிருந்து கடனைப் பெற்று பொதுக்கடனை அரசு மீட்கலாம். ஆனால், அரசிற்கு உபரி வருவாய் கிடைக்கும்போதுதான் பத்திரங்களைப் பங்கு அங்காடி களிலிருந்து வாங்க முடியும். இதைப் பொதுக்கடனைத் தீர்க்கும் முறை எனக் கூறமுடியாது. ஏனெனில், கடன் பத்திரங்கள் பங்கு அங்காடிகளிலிருந்து வாங்கப்படுகின்றன.

(6) எச்ச வரவு-செலவுத் திட்டம் (Surplus Budget)

பொதுக்கடனைத் திருப்பித்தர ஒவ்வொரு ஆண்டும் அரசு வரவு செலவுத் திட்டத்தில் எச்சத்தைத் தோற்றுவிக்கலாம். இம்முறை யில் படிப்படியாகக் கடனை மீட்க வகையுண்டு. இது எளிதான முறையாகவும் உள்ளதெனலாம். ஆனால், பெரும்பாலான அரசுகள் இம்முறையைப் பின்பற்றுவதில்லை என்றே கூறவேண்டும். பரிசுச் சீட்டு முறைகளை மேற்கொண்டும் பொதுக்கடனைத் தீர்க்கலாம். ஆண்டுதோறும் கடனை மீட்பது எளிதானதாகவும் அமைகின்றது.

(7) பற்றுக்குறை நிதியாக்கம் (Deficit Financing)

பொதுக்கடனைத் தீர்க்கப் புதிய பணத்தை உருவாக்குவதும், வங்கிகளின் கடன் அளவைப் பெருக்குவதும் சரியான முறைகள் அல்ல. ஆயினும், சில காலங்களில் பற்றுக்குறை நிதியாக்கம் கடனைத் திருப்பித்தர பயன்படுத்தப்படுகின்றது. இதனால் பண வீக்க நிலை ஏற்பட்டு பொருளாதார முன்னேற்றம் பாதிக்கப்படும். அதிகரிக்கப்படுகின்ற பணப்புழக்கத்தைத் தொடர்ந்து குறுகிய காலத்தில் உற்பத்திப் பெருகாமையே இந்நிலைக்குக் காரணமாகும்,

## வெளிநாட்டுக் கடன் மீட்சி (Redemption of External Debt)

வெளிநாட்டுக் கடனைத் திருப்பித்தர அந்நியச் செலாவணி சேமிக்கப்பட வேண்டும். ஏற்றுமதி உபரியை உயர்விப்பதின் மூலமே அதிக அந்நியச் செலாவணியைப் பெற முடியும். வெளி நாட்டுக்கடன்கள் கவனமாக உற்பத்தித் துறைகளில் முதலீடாகக் கப்பட வேண்டும். மேலும், இம்முதலீடுகள் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ ஏற்றுமதியைப் பெருக்குவதாக அமைய வேண்டும். ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருட்கள் வெளி நாட்டவரால் ஏற்றுக் கொள்ளத் தக்கவைகளாக இருக்க வேண்டும். ஏற்றுமதிப் பொருட்களுக்கு அயல்நாடுகளில் அதிகத் தேவை அமைந்திருக்க வேண்டும். தற்காலிகமாகப் பொதுக்கடனைத் தீர்க்க பழைய கடன்களுக்குப் பதிலாகப் புதிய கடன்களைப் பெற லாம். உள்நாட்டுக் கடனைவிட வெளிநாட்டுக் கடனே உண்மை யான சுமையை ஏற்படுத்துகின்றது. வெளிநாட்டுக் கடனைத் தீர்க்க ஏற்றுமதியின் அளவை அதிகரித்து அந்நியச் செலாவணியைச் சேமிக்கவேண்டும். உள்நாட்டின் தங்கத்தைத் திரட்டி அயல்நாடு களில் விற்பனை செய்தும் கடனின் ஒரு பகுதியைத் திருப்பித்தர லாம். தற்காலிகமாக, கடன் மறு ஒழுங்கு செய்யப்படலாம்; கடனை மீட்க ஒப்பந்தங்களும் மேற்கொள்ளப்படலாம்.

வெளிநாடுகளிலிருந்து கடனைப் பெறும்போது கடன் மீட்சிக் கென ஒப்பந்தங்கள் செய்துகொள்வது அவசியமானதாகும். கடனைப் பெறுகின்ற நாடு ஒப்பந்தத்தின்படி ஆண்டுதோறும் கடனை அளித்த நாட்டிற்குக் குறிப்பிட்ட பண்டங்களைக் குறிப்பிட்ட அளவுகளில் ஏற்றுமதி செய்யவேண்டும். வெளி நாட்டுக் கடன்களை எளிதில் தீர்க்க உதவும் முறைகளில் இதுவும் ஒன்றாகும். மேம்பாடடைந்துவரும் நாடுகளுக்கு வெளி நாட்டுக் கடன்கள் பல வழிகளில் உதவுகின்றன. வளர்ச்சி யடைந்துவரும் ஒரு நாட்டில் தொழில்கள் பெருகவும், தொழில் நுட்பம் பரவவும், விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டு உற்பத்தி அதிகரிக்கவும் வெளிநாட்டுக் கடன்கள் வழி வகுக்கின்றன. வெளிநாட்டுக் கடன்களை மீட்பதற்கென உள் நாட்டில் உள்ள கனிச் சுரங்கங்கள், எண்ணெய்க் கிணறுகள் போன்ற இயற்கை வளங்களை விட்டுக்கொடுத்து 'உரிமைப் பங்கு' (Royalty) பெறுவது நல்லதல்ல. இந்தோனேசியா இவ் விதக் கடன் மீட்சியைச் செய்தமையால் பலவித இன்னல் களுக்கும் உள்ளானது குறிப்பிடத் தக்கதாகும்.

### போர்க்காலக் கடன்

போர்க்காலங்களில் வரி விதிப்பின் மூலம் நிதியானது திரட்டப் படுகின்றது; பொதுக்கடன் மூலமும் செலவிற்கான நிதியானது

பெறப்படுகின்றது. தொன்மைப் பொருளாதார நிபுணராகிய டேவிட் ரிக்கார்டோ போர்க்காலங்களில் பொதுக்கடனைப் பெறுவதைவிட வரிவிதிப்பு முறையே சிறந்தது எனக் கருதினார். போர் முடிவடைந்த பிறகு பணச்சிக்கல்கள் வரிவிதிப்பு முறையில் தோன்றாது ; வரி விதிப்பால் விலைகளின் உயர்வு கட்டுப்படுத்தப் படும் என்று அவர் கூறினார். போர்க்காலங்களில் அதிக வரிகளை மக்கள் அளிக்கின்றமையால் அவர்களிடையே தேசிய மனப் பான்மையானது வளரும் என்றும் அவர் விளக்கினார். போர்க் காலச் செலவுகள் பொதுக்கடனைப்பெறும் அளவிற்கு அதிகமாக இருக்காது என்றும் ரிக்கார்டோ கருதினார்.

போர்க்காலங்களில் வரி விதிப்பினால் அரசு வருவாயைப் பெருக்கிக் கொள்வதில் சில நன்மைகள் அமைந்துள்ளன. எனினும், வரி விதிப்பினால் உடனடியாக தேவையான காலத்தில் அரசு வருவாயைப் பெறுவது கடினமானதாகும். வரிகளைச் சட்டங்களை நிறைவேற்றி விதிப்பதற்கும், வரிகளை வசூலிப்பதற்கும் கால தாமதம் ஏற்படலாம். உள்நாட்டில் வரிகளைப் புதிதாக விதிப் பதாலும், பழைய வரிகளை உயர்த்துவதாலும் குழப்பங்கள் தோன்றாமல் இருக்கவேண்டும். அதிகரிக்கப்படுகின்ற வரிகளால் மக்கள் அரசின் மீது வெறுப்புக் கொள்ளவும் செய்வார்கள். ஆகவே, போருக்கான செலவு முழுவதையும் அரசு வரி முறையின் மூலம் பெற முயலக்கூடாது.

பொதுக்கடனைப் பெறுவதின் மூலமும் போருக்கான நிதி யானது பெறப்படுதல் வேண்டும். பொதுக்கடனை நீண்ட காலத்திலும்கூடத் திருப்பித்தர முடியும். எனவே, போர்ச் செல வின் சுமையானது நீண்ட காலத்தில் தீர்க்கப்படலாம். அதிகச் சுமையானது குறுகிய காலத்தில் மக்களின்மீது இம்முறையால் சுமத்தப்படுவதில்லை. போர்ச் செலவிற்கான நிதியை விரைவாகத் திரட்டவும் இம்முறை உதவுகின்றது. தவிர, பொதுக்கடனானது மக்களின் சேமிப்பிலிருந்து பெறப்படுகின்றது. மக்களின் நுகர்வின் அளவானது பாதிக்கப்படுவதில்லை. வரி விதிப்பு முறையால் மக்களின் நுகர்வு குறைக்கப்படுகின்றது. இதனால், உற்பத்திக் காரணிகள் செயலிழக்கின்றன. உற்பத்தியின் அளவு குறைய இது அடிப்படையாக அமையும். போர்க் காலங்களில் மக்களி டையே ஒருமைப்பாடு அமைந்திருப்பதாலும், தேசிய உணர்வு நிறைந்திருப்பதாலும் பொதுக்கடனைத் திரட்டுவது எளிதாகின்றது.

வரிவிதிப்பு முறையாலும், பொதுக்கடன் முறையாலும் போதுமான நிதியைப் போர்க்காலங்களில் பெற முடிவதில்லை. எனவே, பற்றாக்குறை நிதியாக்கமும் பின்பற்றப்படுகின்றது.

போர்க்காலங்களில் புதிய காகிதப் பணமானது உருவாக்கப்படு கின்றது. வங்கிகளில் கடன்களின் அளவும் இதனால் உயர் வடைகின்றது. பணவீக்கநிலை பொருளாதாரத்தில் தோன்ற காகிதப்பண வெளியீடு காரணமாக அமைகின்றது. பொருளா தார முன்னேற்ற நிலைகளில் இடையூறுகளைத் தருகின்ற பற்றுக் குறை நிதியாக்கத்தை அரசு குறைந்த அளவிலேயே பின்பற்ற வேண்டும்.

கட்டாயச் சேமிப்பின்மூலம் போர்க்காலங்களில் நிதியானது பெறப்பட வேண்டுமென்பது கீன்ஸின் கருத்தாகும். போர்க்காலங் களில் நிதியைப்பெற தேசியப் பாதுகாப்புப் பத்திரங்களை விற்பனை செய்யலாம். அல்லது மக்களிடையே இருக்கின்ற தங்கத்தைப் பெற அரசு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். தங்கக் கடன் பத்திரங்களை வெளியிட்டுப் போருக்கான நிதியைப் பெற இந்திய அரசு மேற்கொண்ட முயற்சி குறிப்பிடத்தக்கதாகும். உற்பத் திக்கு உதவாத, மக்களிடம் சேமிப்பாக உள்ள தங்கத்தை அரசு கட்டாய முறைகளில் பெறவும் முயற்சிகளை எடுக்க வேண்டும். இந்தியாவில் கட்டாயச்சேமிப்பின் மூலம் அரசிற்கு அதிக வருவாய் கிடைக்கின்றது.

போர்க்காலங்களில் மேற்குறிப்பிடப்பட்டுள்ள முறைகளில் ஏதாவது ஒன்றைப் பின்பற்றி மட்டும் தேவையான அளவு நிதியை அரசு பெற்றுவிட முடியாது. பல முறைகளையும் பின்பற்றினால் தான் போர்ச் செலவிற்குத் தேவையான நிதியைப் பெற இயலும். மக்களின் வரிதாங்கும் திறனுக்கேற்ப அரசின் வரிவிதிப்புக் கொள்கை அமைய வேண்டும். பற்றுக்குறை நிதியாக்கத்தையும் பணவீக்கநிலை ஏற்படாத வகையில் பின்பற்றவேண்டும். கட்டாயச் சேமிப்பு போர்க்காலங்களில் அரசு தேவையான நிதியைப் பெற உதவும் நல்லமுறையாகும். போர்க்கால நிதியானது பொதுக் கடனின் மூலமும் திரட்டப் பெறுகின்றது. பெறப்படுகின்ற பொதுக்கடனை ஆண்டுதோறும் அரசு நிதி ஒதுக்கீட்டின் மூலமாகத் திருப்பித்தர முயலவேண்டும். பொதுக்கடன் சுமை அதிகரிக்காமல் இருக்க இது உதவும்.

### பொருளாதார முன்னேற்ற நிதிகளாக வரி, கடன், பற்றுக்குறை நிதியாக்கம்

ஒவ்வொரு அரசும் பல வழிகளில் வருவாயைப் பெறுகின்றது. அரசின் செலவிற்குத் தேவையான நிதி பல வழிமுறைகளால் பெறப்படுகின்றது. அப்பலவகைப்பட்ட வழி முறைகளிலும் வரி, கடன், பற்றுக்குறை நிதியாக்கம் ஆகியவை முக்கியமான நிலை யைக் கொண்டிருக்கின்றன. அரசின் வருவாய் நடைமுறைச் செல

விற்காகவும், முன்னேற்றச் செலவிற்காகவும் பயன்படுத்தப்படு கின்றது. கல்வி, ஆரோக்கியம், நிர்வாக அமைப்பு, பாதுகாப்பு போன்றவற்றிற்காக நடைமுறைச் செலவு செய்யப்படுகின்றது. இச்செலவு பொதுவாக எல்லாக் காலங்களிலும் செய்யப்படு கின்ற ஒன்றாகும். இச்செலவிற்கான வருவாய் பெரும்பாலும் வரி விதிப்பின் மூலம் பெறப்படுகின்றது. நடப்புச் செலவிற்கான வருவாயை அரசு வரிவிதிப்பால் பெறவேண்டுமென்பதைப் பல பொருளியலாளர்களும் ஒப்புக்கொண்டுள்ளனர். நடப்புச் செல விற்காகப் பொதுக்கடனைப் பெறுவது தவறானதாகும். அவ்வாறு பெற்றால் பின்பு அரசு புதிய வரிகளை விதிக்க வேண்டிவரும்; பழைய வரிகளையும் உயர்த்துவது தவிர்க்க முடியாததாகிவிடும். பொதுக்கடனின் அளவு அதிகரித்துக் கொண்டே செல்லும்போது அசலையும், வட்டியையும் திருப்பித்தருவது கடினமாகிவிடும். எனவே, நடப்புச் செலவிற்கான நிதியை அரசு வரிவிதிப்பின் மூலமே பெற வேண்டும்.

எல்லாக் காலங்களிலும் அரசு வரிவிதிப்பின் மூலமே நிதியைப் பெறவேண்டுமென்பது நியதியல்ல. போர்க்காலங்களில் செல விற்குத் தேவையான நிதியை அரசு வரிவிதிப்பால் மட்டும் பெற்றுவிட முடியாது. போர்க்காலங்களில் அரசிற்கு அதிகச் செலவுகள் தோன்றுகின்றன. குறிப்பிட்டக் காலத்தில் வசிக்கின்ற மக்கள் அரசின் நடைமுறைச் செலவினால் பல நன்மைகளைப் பெறு கின்றார்கள். எனவே, அக்குறிப்பிட்டக் காலத்தில் அவர்களின் மீது வரிவிதிப்புச் செய்தல் பொருத்தமானதேயாகும். நடைமுறைச் செலவிற்காக அரசு அவர்களின் மீது வரிவிதிப்புச் செய்வது தவறாகாது.

நடைமுறைச் செலவைத் தவிர அரசு முதலீட்டுச் செலவையும் செய்கின்றது. இம்முதலீட்டுச் செலவினால் சாலைகள், இருப்பு பாதைகள், பிறவகைப் போக்குவரத்துச் செய்தித்தொடர்பு வசதிகள், நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி போன்ற நிரந்தர மான சொத்துக்கள் பொருளாதாரத்தில் உருவாக்கப் பெறு கின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுகின்றமையால் ‘முதலீட்டுச் செலவுகளை’ (Capital Expenditures) ‘முன்னேற்றச் செலவுகள்’ (Developmental Expenditures) எனவும் குறிக்கலாம். முன்னேற்றச் செலவிற்கு மிக அதிக மூலதனமானது தேவைப்படு கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு அணையைக் கட்டப் பல கோடிக் கணக்கான ரூபாய் தேவையாகின்றது. இரண்டாவதாக, முதலீட்டுச் செலவானது நிரந்தரமான செல்வமாக உருவெடுக்க நீண்ட காலம் பிடிக்கின்றது. மூன்றாவதாக, முதலீட்டுச் செலவின் மூலம் ஏற்படக்கூடிய நன்மைகளை உடனடியாகப் பெற்றுவிட முடி

யாது. சில ஆண்டுகள் சென்ற பிறகுதான் முதலீட்டுச் செல்வினால் ஏற்படக்கூடிய நன்மைகளைப் பெற இயலும். நன்மைகளை அளிக்கத் தொடங்கிய பிறகு முதலீட்டுச் செலவின் பயன் பல தலைமுறைகளுக்கு நீடிக்கின்றது.

இவ்வித நன்மைகளைத் தரத்தக்க முதலீட்டுச் செலவிற்கான நிதியைப் பெறுவது இன்றியமையாததாகின்றது. முதலீட்டுச் செலவிற்கான நிதியை கடன்களின் மூலம் மட்டுமே பெறவேண்டுமென்பது பழைய காலங்களில் பொருளியலாளர்களின் கருத்தாக அமைந்திருந்தது. வருங்காலத் தலைமுறையினருக்கே நன்மை பயப்பதாக முதலீட்டுச் செலவுகள் அமைகின்றன; ஆகவே, அவற்றிற்கான நிதியைக் கடன் மூலமே பெறுதல் வேண்டும் ; நன்மையைப் பெறப் போகின்ற வருங்காலச் சந்ததியினரே கடன் சுமையை ஏற்க வேண்டும் என்பது அவர்களின் கூற்றாக இருந்தது. எனவே, முன்னேற்றச் செலவிற்கான மூலதனத்தைப் பெற கடன் முறையே சிறந்தது.

ஆனால், சமீப காலத்தில் இதுபற்றி பொருளியலாளர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டுள்ளது. பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியைப்பெற வரிவிதிப்பு முறையே சிறந்ததெனக் கருதப்படுகின்றது. சோவியத் ரஷ்யா முன்னேற்றத் திட்டங்களுக்கான நிதியை வரிவிதிப்பின் மூலமே பெற்றதைச் சில பொருளாதார நிபுணர்கள் குறிப்பிடுகின்றனர். பொருளாதார முன்னேற்ற நிலைகளில் ரஷ்யாவில் மூலதனச் சேமிப்பு பெருமளவிற்கு வரி விதிப்பு முறையின் வாயிலாகவே பெறப்பட்டது. இந்தியாவில் 'வரிவிதிப்பு விசாரணைக் குழுவும்' (Taxation Enquiry Commission) வரி விதிப்பின் மூலம் முன்னேற்றத்திற்குத் தேவையான நிதியைப் பெறலாம் எனப் பரிந்துரைத்துள்ளது. தவிர, உபரி வரவு-செலவுத் திட்டத்தினாலும் முன்னேற்றப் பணிகளை அரசு மேற்கொள்ளலாம். இதனால் சமுதாயத்தின்மீது மிகுதியான வரியானது சுமத்தப்படுவதில்லை ; மக்கள் நுகர்வின் அளவு குறைக்கப்படுவதில்லை. மக்களிடமிருந்து அரசு கடனைப் பெறும்போது அவர்களின் நுகர்வு கட்டுப்படுத்தப்படுகின்றது. பொதுக்கடனே மக்களின்மீது சுமையை ஏற்படுத்துகின்றது எனலாம்.

முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்ற வரிவிதிப்பு முறையே சிறந்தது என்பதற்குக் கீழ்க்கண்ட காரணங்கள் சொல்லப்படுகின்றன :

(1) முதலாவதாக, பின் தங்கிய நாடுகளில் மூலதனத்திரட்சி மிகக் குறைவாக உள்ளது. எனவே உற்பத்தி, வருவாய் ஆகியவை

களின் அளவும் தாழ்வாகவே இருக்கின்றது. இதன் காரணமாக மூலதனத் திரட்சியைப் பெற்று முதலீட்டின் அளவைக் கூட்ட வரி விதிப்பை ஒரு கருவியாகப் பயன்படுத்த வேண்டும்.

(2) இரண்டாவதாக, உள்நாட்டுக் கடனையும், வெளி நாட்டுக் கடனையும் ஒரு குறிப்பிட்ட அளவு வரைதான் பெற இயலும். ஆகவே, வேறு வகைப்பட்ட நிதி வசதிகளைப் பெறுவது அவசியமாகின்றது. அந்நிதி வசதிகளில் ஒன்றாகவே வரிவிதிப்பு முறை அமைகின்றது.

(3) மூன்றாவதாக, உற்பத்தியைப் பெருக்க முதலீடு தேவைப் படுகின்றது. முதலீட்டின் அளவை அதிகரிக்க மக்களின் நுகர்வு கட்டுப்படுத்தப்பெற்று சேமிப்புப் பெருக வேண்டும். பொதுக் கடன், வரிவிதிப்பு ஆகிய இரு முறைகளாலும் நுகர்வானது கட்டுப்படுத்தப் படுகின்றது. பொதுக்கடனைப் பெறுவதோடு, வரிவிதிப்பு முறையையும் பின்பற்றினால்தான் தேவையான நிதியை எளிதில் பெறமுடியும். மக்கள் தங்களின் சேமிப்பில் ஒரு பகுதியைக் கடனாகத் தருவதால் நுகர்வு பொதுக்கடனில் கட்டுப் படுத்தப்படமாட்டாது என்பது ஒரு சாராருடைய கருத்தாகும்.

(4) வரிவிதிப்பால் பெற்ற வருவாயை அரசு திருப்பித்தர வேண்டியதில்லை. அரசு பொதுக்கடனை வட்டியோடு திருப்பித்தர வேண்டியது அவசியமாகிறது. எனவே, பொதுக்கடனைத் தீர்க்க வேண்டிய நிலை அரசிற்கு ஒரு சுமையாக அமைகின்றது. வரி வருவாயின் மூலம் நிறைவேற்றப்பட்ட திட்டங்களினால் நன்மை யைப் பெற முடிகின்றது. அவ்வித நன்மையைப் பெற்றமைக்காக எவ்விதத் தொகையையும் அரசு கொடுக்க வேண்டியிருப்பதில்லை.

இக்காரணங்களால் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான நிதியை வரிவிதிப்பாலும், கடன்களினாலும் பெற லாம் என்பது அறியப்படுகின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் முன்னேற்றத்திற்கான நிதியானது பற்றாக்குறை நிதியாக்கத்தின் மூலமும் பெறப்படு கின்றது. ஒரு அரசின் வருவாயானது செலவைக் காட்டிலும் குறைவாக இருக்கும்போது பற்றாக்குறை நிதியாக்கம் பின்பற்றப் படுகிறது. இம்முறையில் அரசின் பற்றாக்குறை நிதி நிலையானது காகிதப் பண வெளியீட்டால் ஈடு செய்யப்படுகின்றது. மத்திய வங்கியிடமிருந்து அரசு கடன் பெறுவதும் பற்றாக்குறை நிதியாக்க முறைகளில் ஒன்றேயாகும். அரசின் செலவானது வருவாயைவிட அதிகமாக இருக்கும்போது பொதுக்கடன் வாங்கப்படுகின்றது. பொதுக்கடனின் மூலம் போதுமான வருவாய் அரசிற்குக் கிடைக்

காதபோது காகிதப் பணம் அச்சிடப் பெறுகின்றது ; மத்திய வங்கியிடமிருந்தும் கடன் பெறப்படுகின்றது. பொதுவாக, அரசு மத்திய வங்கியிடமிருந்து நிதியை வேண்டும்போது, அந்நிதியை மத்திய வங்கி காகிதப்பணத்தை அச்சிட்டே வழங்குகின்றது. மத்திய வங்கி அரசின் வங்கியாக இருப்பதால் அரசின் கொள்கையே மத்திய வங்கியிலும் செயல்படுத்தப்படுகிறது.

தற்பொழுது பல பொருளியலறிஞர்களும் பின்தங்கிய நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பற்றுக்குறை நிதியாக்கம் பெரிதும் உதவும் எனக் குறிப்பிடுகின்றனர். பற்றுக் குறை நிதியாக்கத்தைப் பின்பற்றுவதால் பணத்தின் அளவும், அளிப்பும் அதிகரிக்கின்றன. இதனுல் உழைப்பின் தேவை பெருகு கின்றது ; பிற வளங்களும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. பணவீக்க நிலையைத் தவிர்க்க உதவும் நிதிக்கொள்கையாகவும் பற்றுக்குறை நிதியாக்கம் திகழ்கின்றது. எனினும், பொருளாதார முன்னேற்றத்தைப்பெற இம்முறையை மிகக்கவனமாகப் பின் பற்றவேண்டும். பற்றுக்குறை நிதியாக்கம் பணவீக்க நிலையைத் தோற்றுவிக்குமாதலால் அரசு கட்டுப்பாடுகளை விதிப்பது அவசிய மாகின்றது. பற்றுக்குறை நிதியாக்க முறையால் மிக அதிக அளவிற்குக் காகிதப்பணத்தை அச்சிட்டு வெளியிடும்போது பணத்தின் மதிப்பானது மிகவும் குறைந்துவிடும். பற்றுக்குறை நிதியாக்கம் தீயைப் போன்றது ; அது நல்ல பணியாளராகவும், தீய தலைவனுகவும் அமைந்திருக்கின்றது. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் பற்றுக்குறை நிதியாக்கமானது கவனமாகக் கணிசமான அளவில் பின்பற்றப்படும்போது சிறந்ததொரு முன்னேற்றத்திற் கான நிதியாக அமைகின்றது.

முன்னேற்றத்திட்டங்களை நிறைவேற்றுவதற்கான நிதி வேறொரு வழியிலும் பெறப்படுகின்றது. பெரும்பாலான முன் னேற்றமடைந்துவரும் நாடுகளில் அரசு பல தொழில்களை உடைமையாகக் கொண்டிருக்கின்றது. இத்தொழில்களில் முற் றுரிமை நிலையானது அமைந்திருப்பதால் அதிக அளவு இலாபம் அரசிற்குக் கிடைக்கின்றது. இந்த இலாப வருவாயும் முன்னேற்றத் திட்டங்களுக்கான நிதியாக அரசால் பயன்படுத்தப் படுகின்றது.

## வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் பொதுக்கடன்

தொன்மைப் பொருளியலாளர்கள், 'புதுச் சம்பிரதாயக் கருத்துடையோர்' (Neo-classical School) ஆகியோருடைய கருத்துப்படி அரசு நடைமுறைச் செலவுகளை வரிவருவாயின் மூலம் செய்ய வேண்டும். முதலீட்டுச் செலவுகளைச் செய்யப் பொதுக்

கடன்களைப் பெற வேண்டும். ஆனால் இக்கருத்து சமீப காலமாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. வரிவிதிப்பினால் பெறப்படுகின்ற வருவாயின் மூலமும் அரசு முதலீட்டுச் செலவுகளைச் செய்யலாம் என தற்பொழுது சொல்லப்படுகின்றது. அரசின் நிதிக்கொள்கை மாறுபடுகின்ற பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப இயக்க நிலை கொண்டதாக அமைய வேண்டும். முன்னமேயே குறிப் பிட்டுள்ளபடி, அரசின் முதலீடு குறிப்பிட்டக்காலத்தில் தாமத மின்றி செய்யப்பட வேண்டும். முதலீட்டிற்குப் பொதுக்கடனைப் பெறுவது மட்டும் போதுமானதாக இருப்பதில்லை. எனவே, வரி வருவாயை அரசு முதலீட்டுத் திட்டங்களுக்குப் பயன்படுத்துவதும் சரியானதேயாகும். தொன்மைப் பொருளியலாளர்களின் கருத்துப்படி, முதலீட்டுச் செலவிற்கு அரசு பொதுக்கடனை மட்டுமே பயன்படுத்த வேண்டுமென்பது விளக்கப்படுகின்றது. முன்னேற்ற மடைந்துவரும் நாடுகளில் இம்முறையைப் பின்பற்றுவது எளி தானதாக இல்லை. இம்முறையைப் பின்பற்றுவதால் பொருளா தார முன்னேற்றம் ஏற்படுவதற்குப் பதிலாக முன்னேற்றப் பாதைகளில் பல தடைகளே தோன்றும்.

பொதுக்கடனைக் குறுகிய காலத்திற்குப் பெறலாம்; நீண்ட காலத்திற்கும் பெறலாம். முன்னேற்றத்திற்காகப் பெறப்படு கின்ற கடன்கள் பொதுவாக நீண்டகாலக் கடன்களாகவே இருக் கின்றன. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மக்கள் தாங்களாகவே சேமித்துத் தாங்களாகவே கடனை அளிக்க முன்வருவதில்லை. எனவே, உள்நாட்டுக் கடனைப்பெறும் வாய்ப்பு குறைந்த அளவே உள்ளது. இதற்குக் காரணங்களாக பலவற்றைக் கூறலாம். பின்தங்கிய மக்கட்தொகைமிக்க நாடுகளில் தலா வருவாய் மிகக் குறைவாக இருக்கின்றது. பெரும்பகுதி மக்கட்தொகை குறைவான வருவாயை மட்டுமே பெறுகின்றது. வருவாய்க் குறைவால் சேமிக்கும் திறனும் குறைவாகவே உள்ளது. விவசாயி களும், நடுத்தர வகுப்பினரும் மிகக் குறைந்த அளவிற்கு மட்டுமே சேமிக்கின்றனர். குறைந்த வருவாயைப் பெறுபவர்களின் வருவாய் அதிகரிக்கும்போது அவர்கள் அதிக நுகர்விலும் ஈடுபடுகின்றார்கள். குறைந்த எண்ணிக்கையில் உள்ள செல்வந்தர்கள் தங்கள் அதிக வருவாயின் ஒரு பகுதியைச் சேமிக்கின்றனர். ஆனால், இவர் களுடைய சேமிப்பு பொதுவாக அரசிற்குக் கிடைப்பதில்லை. அரசு வங்கிகளிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும் தேவையான நிதியைப் பெறலாம். வங்கிகள் தங்கள் நிதியின் ஒரு பகுதியைப் பாதுகாப்பாக வைத்திருக்கக் கருதி அரசின் பத்திரங்களில் முதலீடு செய்கின்றன. அரசின் பத்திரங்கள் குறைந்த வட்டி வீதத்தை மட்டுமே அளிப்பவை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு சில நிதி நிறுவனங்களும், காப்புறுதி நிறுவனங்களும், முதலீட்டு டிரஸ்டு

களும் தங்களின் சேமிப்பை அரசின் பத்திரங்களில் முதலீடாக்கு கின்றன. ஆனால், பின்தங்கிய பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளில் வங்கி முறை வளர்ந்திருப்பதில்லை ; நிதி நிறுவனங்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவாகவே இருக்கின்றது. முக்கிய நிலையைக் கொண்டவைகளாகவும் இவை அமைந்திருப்பதில்லை.

பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் உள்நாட்டுப் பொதுக்கடன் அதிக முக்கியத்துவத்தைக் கொண்டிருக்காவிட்டாலும், பிறகு அதிக முக்கியத்துவத்தைக் கொண்டதாக அது மாறிவிடுகின்றது. பொருளாதார வளர்ச்சி வீதம் உயர்வடையும்போது வருவாய் அதிகரிக்கின்றது ; சேமிப்பும் கூடுகின்றது. அரசு மக்களிடையே சேமிக்கும் விருப்பத்தை ஏற்படுத்த கல்வியறிவைப் பரப்பவேண்டும். வரி விலக்குகள், வரிச்சலுகைகள், பிரச்சாரங்கள் ஆகியவற்றின் மூலமாக மக்களிடையே சேமிக்கும் விருப்பத்தைத் தூண்டலாம். வளர்ச்சி பெற்ற வங்கி முறையை அடைவதும், நன்கு அமையப்பெற்ற பண, மூலதனச் சந்தையை அடைவதும் சேமிப்பு வீதத்தை உயர்த்த உதவுபவைகளாகும். அரசே இவற்றைப் பெறுவதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். இவ்வகை நிறுவனங்கள் சேமிப்பைத் திரட்டி முதலீட்டின் அளவை அதிகரிக்க உதவுகின்றன.

நிதி நிறுவனங்கள் வளர்ச்சியடையும்வரை அரசு முன்னேற்றத்திற்கான திட்டங்களை மேற்கொள்ளாமல் இருக்க இயலாது. வளர்ச்சியடைந்த பணச்சந்தை அதிக சேமிப்பு வீதத்தை அளிக்க உதவும். ஆனால் பணச்சந்தை, வங்கி முறை ஆகியவை வளர்ச்சியடையும் வரை அரசு முதலீடு செய்யாமல் பொறுத்திருக்க முடியாது. பொருளாதார முன்னேற்றத்தைப்பெற திட்டங்களை மேற்கொள்வது அவசியமாகின்றது. எனவே, அரசு முன்னேற்றத்திற்கான நிதியை வேறு வழிகளில் பெறுகின்றது. வரிவிதிப்பு, கட்டாயக் கடன், பணவீக்கக் கொள்கை போன்றவை மூலம் அரசு நிதியைப் பெருக்கிக் கொள்கின்றது. மக்கள் வரிச்சுமையை ஏற்பதால் கட்டாயக் கடனை அரசு பெறக்கூடாது என்ற கருத்தும் கூறப்படுகின்றது. பொதுக்கடன் மக்களாலேயே தரப்பட்டால் அதை அரசு ஏற்கலாம்.

## வெளிநாடுகளிலிருந்து பொதுக்கடன் பெறுதல்

மேம்பாடடைந்துவரும் ஒரு நாடு வெளிநாட்டுக்கடனை மூன்று வழிகளில் பெறலாம். வெளிநாட்டுத் தனியாரிடமிருந்தும், வெளிநாட்டு அரசுகளிடமிருந்தும், பன்னாட்டு நிதி நிறுவனங்களிடமிருந்தும் வெளிநாட்டு மூலதனத்தைப் பெற முடியும். பழைய காலங்களில் வெளிநாட்டுத் தனியார் மூலதனம் அதிக அளவில்

பெறப்பட்டது. தற்பொழுது முன்னேற்றத்திட்டங்களை நிறை வேற்றுவதற்கான நிதி மிக அதிக அளவில் தேவைப்படுகின்றது. உலகின் பல நாடுகளிலும் வெவ்வேறு வகைப்பட்ட அரசியற் பொருளாதாரக் கொள்கைகள் பின்பற்றப்படுகின்றன. எனவே, வெளிநாட்டுத் தனியார் மூலதனம் தற்பொழுது செல்வாக்கை இழந்து வருகிறது. மேலும், அரசின் பத்திரங்களில் முதலீடு செய்ய வெளிநாட்டுத் தனியார் தயங்குகின்றனர். அரசின் பத்திரங்களில் முதலீடு செய்வதை அவர்கள் அபாயகரமானது எனக் கருதுகின்றனர். அரசியலில் நிலையற்றபோக்கு பின்தங்கிய நாடுகளில் காணப்படுகின்றது. ஆளும் அரசியற் கட்சிகள் மாறும் போது ஒரு கட்சி அளித்த வாக்குறுதியை மற்றொரு கட்சி மாற்ற லாம். ஒரு அரசியற் கட்சி ஆட்சியில் இருந்தபோது பெற்ற கடனைப் புதிதாக ஆட்சிக்கு வந்த மற்றொரு அரசியற் கட்சி கொடுக்க மறுக்கலாம். பொருளாதாரநிலைகளிலும் நிலையற்ற போக்கே காணப்படுகிறது. இக்காரணங்களால் வெளிநாட்டுத் தனியார் அரசின் கடன்பத்திரங்களை வாங்குவதற்கு விரும்பு வதில்லை.

இரண்டாவது உலகப்போர் முடிவடைந்த பிறகு மேம்பாட டைந்த நாடுகள் பின்தங்கிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதில் ஆர்வம் கொண்டன. இன்றைய நிலையில் வெளிநாட்டுக் கடன்களை அளிப்பவை அயல் நாடுகளின் அரசுகளேயாகும். வெளிநாட்டு அரசுகளின் கடன்களே மிக அதிக அளவு முக்கியத்துவத்தைச் சமீப காலத்தில் பெற்றிருக்கின்றன. இதைத்தவிர, பன்னாட்டு நிதி நிறுவனங்களாகிய ‘உலகவங்கி’ (World Bank), பன்னாட்டு நிதிக்கழகம்’ (International Finance Corporation), ‘பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்’ (International Development Association), ‘அமெரிக்காவின் ஏற்றுமதி-இறக்குமதி வங்கி’ (Export-Import Bank of USA) போன்றவைகளிட மிருந்து பின்தங்கியநாடுகள் முன்னேற்றத்திற்கான கடன்களைப் பெறுகின்றன. ஆனால், இவ்வகைப் பன்னாட்டு நிதி நிறுவனங்கள் சில கட்டுப்பாடுகளுடன் கடன்களை அளிக்கின்றன. இக்கட்டுப் பாடுகளை ஏற்க முடியாத நிலையிலும் சில வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் உள்ளன.

வளர்ச்சியடைந்த நாடுகள் கடன் அளிப்பதால் சில நன்மைகள் ஏற்படுகின்றன. குறைந்த அளவே வளர்ச்சியடைந்துள்ள நாடு களில் மந்தநிலை தோன்றும்போது மேம்பாடடைந்த நாடுகள் கடன்களையும், மானியங்களையும் (Grants) அளித்தல் பன்னாட்டுப் பொருளாதாரத்தில் நிலைத்தன்மையைத் தோற்றுவிக்கும். உதாரண மாக, வளர்ச்சியடைந்த நாடுகள் மந்தக்காலத்தில் சேமிப்பை

அதிக அளவில் கொண்டிருக்கின்றன. அதோடு 'சாதக வாணிப இருப்பு நிலையையும்' (Favourable Balance of Trade) அவை கொண்டுள்ளன. இதே காலத்தில், வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் அரசுகள் பொருளாதார முன்னேற்றத்தை நிலைநிறுத்த நிதித்தேவையைக் கொண்டுள்ளவைகளாக இருக்கின்றன. பின் தங்கிய நாடுகளில் அரசுகளின் நிதியில் குறைவு ஏற்படுகின்றது. ஏற்றுமதிப் பொருட்களின் விலையில் குறைவு தோன்றுகின்றமையே இதற்குக் காரணமாகும். இதனால், வளர்ச்சிக் குன்றிய நாடுகள் தேவையான அளவிற்கு மூலதனப் பொருட்களை முன்னேற்றமடைந்த நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய முடியவில்லை. இந்நிலையால் முன்னேற்றமடைந்த நாடுகளின் தொழில் வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகள் பின் தங்கிய நாடுகளுக்குக் கடன்களை அளிக்கும்போது இருவகைப் பட்ட நாடுகளுக்கும் நன்மைகள் தோன்றுகின்றன. வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதாரத்தில் நிலையான உறுதித் தன்மை ஏற்படுகின்றது ; வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதோடு வேலையின்மை சிக்கலும் ஓரளவிற்குக் குறைக்கப்படுகின்றது.

வெளிநாட்டுக் கடனைப் பெறுகின்ற நாடுகளில் தொழில்நுட்பம் வளர்கின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான தொழில்நுட்பத்தை உள்நாட்டு மூலதனத்தினால் பெறமுடியவதில்லை. பொதுவாக நோக்குமிடத்து, வெளிநாட்டுக் கடன் உள்நாட்டுக் கடனைவிடச் சுமையாகத் தோன்றுகின்றது. ஏனெனில், வெளிநாட்டுக் கடனை ஏற்றுமதியின் மூலமும், அந்நியச் செலாவணியின் மூலமும் மட்டுமே தீர்க்க இயலும். சில காலங்களில் தங்கத்தைக் கொடுத்தும் வெளிநாட்டுக் கடன் மீட்கப்படுகின்றது. வெளிநாட்டுக் கடனைத் திருப்பித்தரும்போது தேசிய வருவாயின் அளவு பாதிக்கப்படுகின்றது. எனவே, வெளிநாட்டுக் கடன்களைப் பெறும்போது பல வகைப்பட்ட நிலைகளும் ஆராயப் படல் வேண்டும். உள்நாட்டில் விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வெளிநாட்டுக் கடன்களைப் பெறுவதைத் தவிர்க்க முடியாது என்பதைப் பல பொருளியலார்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

முதலாவதாக, பெறப்படுகின்ற வெளிநாட்டுக் கடன் பொருளாதார முன்னேற்றத்தைத் தூண்ட நேரடியாக பயன்படுத்தப் பட வேண்டும். இதன் மூலம் தேசிய வருவாய் அதிகரிக்கும். அரசின் வரிவருவாயும் உயர்வடையும். ஆகவே, எதிர்காலத்தில் அசலையும், வட்டியையும் வெளிநாட்டுக் கடனை மீட்கும்போது அளித்தல் எளிதாகின்றது.

இரண்டாவதாக, வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலை சாதகமாக மாறும்வகையில் வெளிநாட்டு மூலதனம் முதலீடு செய்யப்படுதல் வேண்டும். வெளிநாட்டுக் கடனை பொருட்களை ஏற்றுமதி செய்வதின் மூலமோ அல்லது வெளிநாட்டுப் பணத்தின் மூலமோ மட்டும்தான் தீர்க்க முடியும். வெளிநாட்டுக் கடனைப் பெற்ற நாடு ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்க வேண்டும். ஆனால், பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்றால் சில வகைப்பட்ட இறக்குமதிகளின் அளவைக் குறைக்க இயலாது.

உள்நாட்டின் வசதிகளைக் கொண்டு திட்டமிட்டு விரைவான வளர்ச்சியைப் பெறமுடியாதபோது மட்டுமே வெளிநாட்டுக் கடனைப் பெறவேண்டும். இதற்குக் காரணம் வெளிநாட்டுக் கடனின் மொத்தச் சுமையானது உள்நாட்டுக் கடன் சுமையைவிட அதிகமாக இருப்பதேயாகும்.

உள்நாட்டு வசதிகள் போதுமான அளவில் கிடைக்காதபோது மட்டுமே பின்தங்கிய பொருளாதாரத்தைக் கொண்ட ஒரு நாடு வெளிநாட்டுக் கடனைப் பெறுதல் வேண்டும். பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலையை நீக்கவும் வெளிநாட்டுக் கடன் பெறப் படுகின்றது. வான் பிலிப்ஸ் (Van Phillips) குறிப்பிடுவதுபோல, "உள்நாட்டிலுள்ள பொருளாதாரக் குறைபாடுகளே பாதக வெளி நாட்டுச் செலுத்துநிலையைத் தருகின்றன; வெளிநாட்டுக் கடனின் மூலம் உள்நாட்டிலுள்ள பொருளாதாரக் குறைபாடு களைக் களைய முடியும் எனக் கருத இயலாது." வெளிநாட்டுக் கடன்கள் ஏற்றுமதியைப் பெருக்கும் துறைகளில் மட்டுமே முதலீடாக்கப்பட வேண்டுமெனக் கூறுதல் தவறானதாகும். வெளி நாட்டுக் கடன்களின் மூலம் ஏற்றுமதியை அதிகரித்து இறக்குமதி யைக் குறைத்து சாதக அயல்நாட்டு வாணிபச் செலுத்து இருப்பு நிலையைப் பெறவேண்டுமென்பது அவசியமல்ல. முன்னேற்றத் திற்கான அடிப்படைத்தேவை ஏற்றுமதியின் அளவை அதிகரிப்ப தோடு, நாட்டின் மொத்த ஆக்கத்தை உயர்த்துவதுமாகும். குறைவான காலத்திற்கு அமைந்திருக்கக்கூடிய பாதக அயல் நாட்டுச் செலுத்துநிலையும் பொருளாதார முன்னேற்றத்தைப் பாதிக்கக் கூடியதாக அமைவதுண்டு.

குறுகிய காலத்தில், வளர்ச்சியடைந்துவரும் ஒரு நாடு வெளி நாட்டு உதவியைப் பெறலாம். வெளிநாட்டுக் கடனைப் பெறுவது அவசியமானதாகவும் அமைகின்றது. வரி விதிப்பின் மூலம் குறிப் பிட்ட அளவுவரைதான் வருவாயை அரசு பெருக்கிக்கொள்ள முடியும். பின்தங்கிய நாட்டில் உள்நாட்டுக் கடனையும் குறைந்த

அளவிற்கு மட்டுமே பெற முடிகின்றது; பணவீக்கக்கொள்கை யைப் பின்பற்றுவதும் நன்மை தராது. வெளிநாடுகளிலிருந்து நன்கொடைகளும், மானியங்களும் பெறப்படுகின்றன. இவற்றோடு வெளிநாட்டுக் கடன்களின் மூலமும் தேவையான நிதியைக் குறுகிய காலத்திற்குப் பெறலாம். உறுதி மிக்க பொருளாதார வளர்ச்சியைப் பெறுவதே முன்னேற்றமடைந்துவரும் நாட்டின் முக்கிய நோக்கமாக அமைகின்றது. பொதுக்கடனைப் பெற்று முதலீடாக்கப்படும்போது இந்நோக்கமானது நிறைவேற வேண்டும். முன்னேற்றத்திற்காகப் பொதுக்கடனைப் பெறலாம். பெறப் படுகின்ற கடன் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு கடனைத் திருப்பித் தருகின்ற நிலை ஏற்படுதல் வேண்டும். ஆனால், அதிகச் சுமையை ஏற்படுத்துகின்ற வெளிநாட்டுக் கடன்கள் மிக அவசியமான காலங்களில் மட்டுமே பெறப்படுதல் நன்மை பயப்ப தாகும்.

## இந்தியப் பொதுக்கடன் (The Indian Public Debt)

இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்களை மேற்கொண்ட பிறகு பொதுக்கடனின் அளவு படிப்படியாக அதிகரித்து வருகின்றது. திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சிக்கு மூலதனம் அதிக அளவில் தேவைப்படுகின்றது. இந்தியா பலவித இயற்கை வளங் களையும் கொண்ட நாடு. வேளாண்மை வளர்ச்சிக்கான நிலம் உயர்ந்த உற்பத்தியைப் பெறும் வகையில் பயன்படுத்தப்பட வில்லை. உழைப்பின் அளிப்பு ஏராளமாக இருப்பினும் முற்றிலும் அதை உற்பத்திப் பணிகளில் ஈடுபடுத்த முடியவில்லை. வளர்ச்சி குன்றிய நிலைக்கு மூலதனப் பற்றாக்குறையே முக்கியக் காரண மாகும். சேமிப்பு, முதலீட்டு வீதங்கள் உயராமையே பொரு ளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு அரசு வரிமுறையின் மூலம் போதுமான வருவாயைப் பெற முடிவதில்லை. எனவே, தேவை யான மூலதனத்தைப் பெற அரசு பொதுக்கடனையும் பெறு கின்றது.

மத்திய அரசு பொதுக்கடனைப் பெறுவது போல மாநில அரசு களும் பெறுகின்றன. பொதுவாக, மாநில அரசுகள் வெளிநாடு களிலிருந்து கடன் பெறுவதில்லை. மத்திய அரசு மட்டுமே உள் நாட்டுக் கடனோடு வெளிநாட்டுக் கடனையும் பெறுகின்றது. மாநில அரசுகள் மத்திய அரசிடமிருந்தும், பொதுமக்களிடமிருந்தும் கடன் வாங்குகின்றன. மத்திய அரசு பல வழிகளில் பொதுக் கடனைத் திரட்டுகின்றது. இந்தியாவில் அஞ்சலகங்கள் மூலம் மக்களிடமிருந்து சேமிப்பு பெறப்படுகின்றது. பலவகைப்பட்ட

வங்கிகளின் மூலமாகவும் மக்களிடமுள்ள சேமிப்புக்கள் பெறப்படுகின்றன. மத்திய அரசு தேவையான பொதுக்கடனின் ஒரு பகுதியைக் 'கருவூல உண்டியல்கள்' (Treasury Bills) மூலமாகவும், மத்திய வங்கியிடமிருந்து 'வழிமுறைக் கடன்கள்' (Ways and Means Advances) மூலமாகவும் அடைகின்றது. முக்கியமாக அதிக அளவு பொதுக்கடனைத் திரட்ட கணிசமான வட்டியைத் தருகின்ற கடன்பத்திரங்களை அரசு வெளியிடுகின்றது. இவ்வாறு பெருமளவிற்குப் பொதுக்கடனைப் பெற மத்திய அரசிற்குப் பல வழிமுறைகள் அமைந்துள்ளன. பெறப்படுகின்ற இக் கடன்கள் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பல துறைகளிலும் முதலீடு செய்யப் பெறுகின்றன.

இந்திய அரசின் நிதித்தேவை முழுவதையும் வரிவிதிப்பினால் பெற இயலவில்லை. அரசு அதிக அளவிற்கு வரிவிதிப்பைச் செய்தால் அது மக்களுக்கு சுமையாக அமையும். போர்க்காலங்களிலும், நாட்டைத் தொழில் மயமாக்குவதற்கு மூலதனப் பொருட்களை இறக்குமதிசெய்யும் காலங்களிலும் பொதுக் கடனைப் பெறுவது தவிர்க்க முடியாத ஒன்றாகின்றது. கடந்த காலத்தில், பிற உலக நாடுகளைப் போல, இந்திய அரசும் கடனைப் பெற்றது. தற்பொழுதும் உள்நாட்டுக் கடன், வெளிநாட்டுக் கடன் ஆகியவை பெறப்பட்டு வருகின்றன. மாநில அரசுகளும் குறிப்பிட்ட வரையறைகளுக்குட்பட்டு உள்நாட்டுக் கடனைப் பெறுகின்றன. மத்திய அரசின் அனுமதியோடுதான் இக்கடன் பெறப்படுகின்றது.

### சுதந்திரமடைவதற்கு முன் இந்தியாவின் பொதுக்கடனளவு

1792-இல் இந்தியாவின் பொதுக்கடன் ரூ. 70 இலட்சம் என்ற அளவிலேயே இருந்தது. இந்திய அரசு கிழக்கிந்திய நிறுவனத்திடமிருந்து ஆட்சிப் பொறுப்பை 1858-இல் ஏற்றபோது பொதுக் கடனின் அளவு ரூ. 10 கோடியாக உயர்ந்திருந்தது. ஆனால் இக் கடனில் படிப்படியாகக் குறைவு சிலகாலத்தில் ஏற்பட்டது. ஆங்கிலேய ஆதிக்கத்தின் துவக்கக்காலத்தில், அரசு போர்ப் பணிகளுக்கே பொதுவாகக் கடன் வாங்கியது. வெளிநாடுகளில் நடந்த போர்களுக்கான நிதி இந்தியாவினின்றும் கடனாகத் திரட்டப்பட்டது. இங்கிலாந்தில் ஏற்பட்ட சிலவகைச் செலவினங்களுக்குத் தேவையான நிதி இந்தியாவிலிருந்து பெறப்பட்டது. முதல் உலகப் போர்க்காலத்தில் இந்தியா ஆங்கிலேய அரசிற்கு 100 மில்லியன் பவுன் அன்பளிப்பாகக் கொடுத்தது. 1916-இல் இந்தியாவின் பொதுக் கடன் ரூ. 3.1 கோடி என்ற அளவில் மட்டுமே அமைந்திருந்தது. ஆனால், அதற்குப்பிறகு கடனளவு மீண்டும் அதிகரிக்கத்

தொடங்கியது. 1924-ஆம் ஆண்டிற்குள்ளாகவே பொதுக்கடன் ரூ. 257.7 கோடியாக வளர்ந்துவிட்டது.

ஆரம்பக் காலங்களில் பொதுக்கடன் உற்பத்திப்பணிகளிலேயே செலவிடப்பட்டது. மூலதனச் செலவுகள் இருப்புப் பாதைகள் அமைப்பதிலும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதிலும் செய்யப்பெற்றன. இவற்றிற்கான கடன்கள் அதிக வட்டி வீதத்தில் இங்கிலாந்து நாட்டிலிருந்து வாங்கப்பட்டது. இவ்வித வசதிகளைப் பெருக்கும்போது பல நிலைகளில் வீணான செலவுகள் தோன்றின. 1914-ஆம் ஆண்டிற்கு முன்பாகவே அரசு ஆக்கப் பணிகளுக்கு மட்டுமே கடனைப் பெறுகின்ற கொள்கையைக் கைக்கொண்டது. வரவு-செலவுத் திட்டங்களில் ஏற்படுகின்ற உபரிப் பணமானது உற்பத்திக்கு உதவாத கடனைத் திருப்பித்தர பயன் படுத்தப் பட்டது. 1924-ஆம் ஆண்டில் அரசு ஒவ்வொரு ஆண்டும் பொதுக்கடனைத் திருப்பித்தர ரூ. 4 கோடி ஒதுக்கவேண்டுமெனத் திட்டமிடப் பட்டது. இந்திய அரசு 1939-இல் ரூ. 1,206 கோடி என்ற அளவிற்குப் பொதுக்கடனைக் கொண்டிருந்தது. இதில் உள்நாட்டுக் கடன் ரூ. 736 கோடி ; அயல் நாட்டுக்கடன் ரூ. 470 கோடி ஆகும். இரண்டாவது உலகப்போர்க்காலத்தில் பொதுக் கடனின் அளவு மேலும் கூடியது. 1945-46-இல் இந்தியப் பொதுக் கடனின் அளவு ரூ. 2,308 கோடியாகும்.

இந்தியா சுதந்திரமடைந்தபிறகு பொருளாதார வளர்ச்சியை அரசு திட்டமிட்டுப் பெற விரும்பியது. திட்டங்கள் நிறைவேற்றப் பட்டமையாலும் கடனளவு கூடியுள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் மொத்த நிதித்தேவை ரூ. 1963 கோடியாக இருந்தது. இதில் ரூ. 752 கோடி வரி வருவாயின் மூலம் கிடைத்தது. சிறு சேமிப்பின் மூலம் ரூ. 394 கோடியும், கடனாக ரூ. 205 கோடியும் பெறப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து கிடைத்த உதவி ரூ. 188 கோடியாக இருந்தது. எதிர்பார்த்த அளவிற்குச் சற்று குறைவாகவே அரசு பொதுக்கடனைப் பெறமுடிந்தது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் உள்நாட்டுக் கடனின் மூலம் ரூ. 1,180 கோடியும், வெளிநாட்டுக் கடனின் மூலம் ரூ. 1,090 கோடியும் பெறப்பட்டன. இத்திட்டக் காலத்தில் உள் நாட்டில் கடனை அதிகமாகப் பெற வேண்டுமெனக் கருதப்பட்டது. சிறு சேமிப்பைப் பெருக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அதிகக் கடனைப்பெற தீவிர முயற்சிகள் எடுக்கப்பட்டாலும் கடனுக்கான வட்டி வீதத்தை அரசு உயர்த்தவில்லை. இரண்டாவது திட்டக்காலத்தில் மத்திய அரசும், மாநில அரசுகளும் பெற்ற நிகரக்கடன் ரூ. 780 கோடியாகும். சிறுசேமிப்புத்திட்டத்தின்

மூலம் ரூ. 400 கோடி கிடைத்தது. எனவே, உள்நாட்டுக்கடன் மூலம் ரூ. 1,180 கோடி பெறப்பட்டது; வெளிநாட்டுக் கடன் மூலம் ரூ. 1,090 கோடி கிடைத்தது. சற்றேறக்குறைய திட்டமிட்டபடி பொதுக்கடன் பெறப்பட்டுவிட்டது. பரிசுப்பத்திரத் திட்டம் ஏப்ரல் 1960-இல் தொடங்கப்பெற்றது. சிறு சேமிப்பின் அளவு அதிகரித்தமைக்கு இது காரணமாக அமைந்தது. பரிசுப் பத்திரங்களுக்கு வட்டி எதுவும் அளிக்கப்படவில்லை. ஆயினும், மக்களிடமிருக்கும் சூதாட்ட மனப்பான்மை பரிசுப்பத்திரங்களை வாங்கத் தூண்டியது. இது வெற்றியைப் பெற்ற திட்டமாக சில காலம் இருந்தது.

மூன்றாவது திட்டக்காலத்தில் உள்நாட்டுக் கடனாக ரூ. 1,400 கோடியும், வெளிநாட்டுக்கடனாக ரூ. 2,200 கோடியும் கிடைக்குமெனக் கணக்கிடப்பட்டது. உள்நாட்டுக் கடனாகிய ரூ. 1,400 கோடியில் சந்தைக் கடனாக ரூ. 800 கோடியும், சிறு சேமிப்பால் ரூ. 600 கோடியும் பெற திட்டமிடப்பட்டது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் வெளிநாட்டு உதவி ரூ. 3,830 கோடி கிடைக்குமென எதிர்பார்க்கப்படுகின்றது. இதில் 'பொதுச் சட்டம் 480' (P.L.480) மூலம் ரூ. 380 கிடைக்குமெனச் சொல்லப்படுகின்றது.

இந்தியா பெறும் வெளிநாட்டு உதவியில் பெரும்பங்கு அமெரிக்காவிடமிருந்து கிடைக்கின்றது. சோவியத் ரஷ்யா, இங்கிலாந்து ஆகிய நாடுகளும் பெருமளவிற்குக் கடனளித்து வருகின்றன. கனடா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளும் இந்தியாவிற்குக் கடன் தருகின்றன. உலகவங்கி, 'பன்னாட்டு வளர்ச்சிச் சங்கம்' (International Development Association) ஆகிய பன்னாட்டு நிதி நிறுவனங்களும் முன்னேற்றத் திட்டங்களுக்கான கடன்களைத் தந்துவருகின்றன.

1969-70-ஆம் ஆண்டின் வரவு-செலவுத் திட்டத்தின்படி மத்திய அரசின் உள்நாட்டுக் கடன் ரூ. 7,254 கோடியாகவும் வெளிநாட்டுக்கடன் ரூ.6,570 கோடியாகவும் இருந்தன. மற்ற பொறுப்புக்களின் அளவு ரூ. 4,341 கோடியாக இருந்தது. எனவே, மத்திய அரசின் மொத்தப் பொறுப்புத்தொகை ரூ. 18,165 கோடியாகும். சீனா, பாகிஸ்தானியப் படையெடுப்பின் காரணமாக பாதுகாப்புச் செலவுகள் அதிகரித்தன. பொதுக்கடன் அளவு கூடியமைக்கு இது ஒரு முக்கியக் காரணமாக அமைந்தது.
சமீப காலத்தில் சோவியத் ரஷ்யா அளித்துவரும் கடனின் அளவு அதிகரித்து வருகின்றது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் பிற்பகுதியிலிருந்து இந்தியாவின் பல முன்னேற்றத்

திட்டங்களுக்கும் ரஷ்யா உதவிக் கொண்டிருக்கின்றது. சிறு சேமிப்பின் வளர்ச்சியும் சிறப்பாக அமைந்துள்ளது. சிறு சேமிப்புத் திட்டங்களுக்கு அரசு அதிக முக்கியத்துவம் தருகின்றது. இதனால், குறைவான வருவாய் பெறுபவர்களிடையேயும், நடுத்தர வருவாய் பெறுபவர்களிடையேயும் சேமிக்கும் விருப்பம் வளர்ந்துள்ளது. மேலும், சமுதாயத்தின் இப்பிரிவு மக்கள் சிறு சேமிப்பின் மூலம் நாட்டு முன்னேற்றத்தில் பங்கு கொள்கின்றோம் என்ற மனநிறைவையும் பெறுகின்றனர்.

### மாநில அரசுகளின் கடன்

மத்திய அரசைப் போன்றே மாநில அரசுகளும் முன்னேற்றத்திற்கான முதலீடுகளைச் செய்கின்றன. அவை பெறுகின்ற கடனின் அளவு கூடிவருகின்றது. மாநில அரசுகள் கடனின் பெரும் பகுதியை மத்திய அரசிடமிருந்தே வாங்குகின்றன. 1951-52-இல் மாநில அரசுகள் ரூ. 445 கோடி என்ற அளவிற்கே கடனைப் பெற்றிருந்தன. ஆனால், 1968-69-இல் இக்கடன் அளவு ரூ. 7,032 கோடி என்ற அளவிற்கு மிகவும் உயர்ந்து விட்டது. 1968-69-இல் மாநில அரசுகளின் கடனில் 80 சதவீதம் மத்திய அரசிடமிருந்து பெறப்பட்டது. ஆனால், 1951-52 இல் பொதுக்கடனில் சுமார் 50 சதவீதம் மட்டுமே மத்திய அரசிடமிருந்து வாங்கப்பட்டது. சந்தைக் கடன்களின் மூலமாகவும் மாநில அரசுகளின் பொதுக் கடனில் ஒரு பகுதி பெறப்படுகின்றது.

### பொதுக்கடன் கொள்கையும், சிக்கல்களும்

தீர்க்க முடியாத அளவிற்குப் பொதுக்கடனின் அளவு அதிகரித்து வருகின்றது என்பது சிலருடைய கருத்தாக அமைந்துள்ளது. 1951-இல் ஒரு இந்தியனின் சராசரிப் பொதுக்கடன் ரூ. 87 மட்டுமே ஆகும்; 1967-இல் இது ரூ. 245 ஆக உயர்ந்துவிட்டது. போர்க்காலத்தில் பெறப்பட்ட கடன்கள் மிகவும் குறைந்த 3 சதவீத வட்டியைத் தந்தவைகளேயாகும். போர்ச்செலவு அதிகரித்தமையாலும், பொதுக்கடனின் சுமையைக் குறைக்கவும் அரசு கடனிற்குக் குறைவான வட்டியையே அளித்தது. அரசு கடனிற்கான வட்டியை அதிகமாக அளிப்பதின் மூலமே தேவையான அளவு நிதியைப் பெற இயலும் என்பது ஒரு சாராருடைய கருத்தாக இருக்கின்றது. ஆனால், அரசு பின்பற்றுகின்ற பொதுக்கடன் கொள்கை சரியானதே என்றும் கருதப்படுகின்றது. இந்தியா வறுமைமிக்க, வருவாய் குறைந்த வளர்ச்சியடைந்துவரும் நாடாகும். இங்கு மக்களில் பெரும்பகுதியினர் குறைந்த சேமிக்கும் திறனைக் கொண்டவர்களாக இருக்கின்றனர். அரசு வாங்குகின்ற கடனிற்கான வட்டிவீதத்தை உயர்த்துவதின் மூலம்

மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியுமெனக் கூறுமியலாது. வட்டிவீதம் குறைவாக உள்ளமையால் மக்கள் அரசிற்குக் கடனைக் குறைந்த அளவிலேயே தருகின்றனர் என்றும் கருத இயலாது.

வெளிநாட்டுக் கடன்களும் வட்டிவீதத்தைப் பெரிதும் கருதித் தரப்படுகின்றன எனக் கூறமுடியாது. வட்டியைத்தவிர, வேறு சில முக்கிய நோக்கங்களுக்காகவே வெளிநாட்டுக் கடன்கள் தரப்படுகின்றன. மேலும், அதிக வட்டிவீதத்தில் கடனைப் பெறுவதால் பல நன்மைகளையும் பெற இயலாது. தொழிற்துறை நிறுவனங்களின் முதலீட்டுச் செலவு மிகவும் அதிகரித்துவிடும். இதனால் முதலீட்டு வீதமானது குறைந்துவிடும். இக்காரணங்களால் அரசு பின்பற்றுகின்ற பொதுக்கடன் கொள்கை பொருத்தமானதே என்று கருத வேண்டியுள்ளது.

போருக்கு முன்பாகத் தரப்பட்ட 3 சதவீத வட்டியையே பொதுக்கடனுக்குத் தருதல் தவறானது என்பது சிலருடைய வாதமாகும். போருக்குப் பிறகு பலவிதமான பொருளாதார மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. எனவே, சிலவகைக் கடன்களின் வட்டிவீதத்தை உயர்த்துவது அவசியமாயிற்று. சமீப காலத்தில் சில வகைப்பட்ட கடன்களின் வட்டிவீதம் $3\frac{1}{2}$ சதவீதம் முதல் 4 சதவீதமாக உயர்த்தப்பட்டது. சிறு சேமிப்புக்களுக்குச் சுமார் 4 சதவீத வட்டியானது தரப்படுகின்றது. இவ்வட்டி வீத உயர்வு பல நன்மைகளையும் தருமெனச் சொல்லப்படுகின்றது. ஆனால், இதை உயர்வான வட்டி வீதம் எனவும் கருத முடியவில்லை. இரண்டாவது திட்டக் காலத்தில் அரசின் சிறு சேமிப்புத் திட்டங்களின் மூலம் திட்டமிட்டபடி கடனைப் பெற இயலவில்லை. குறைவான வட்டிவீதமும், குறைவான சிறு சேமிப்புமே இதற்கு அடிப்படைக் காரணங்களாக அமைந்தன. ஆகவே, கடனுக்கான வட்டியை மேலும் உயர்த்த வேண்டும்மென்ற கருத்து நிலவி வருகின்றது.

மாநில அரசுகளைவிட மத்திய அரசு கடன்களைப் பெறுவது எளிதாக இருக்கின்றது. மத்திய அரசு பொதுக்கடனுக்கான வட்டியையும் சற்று அதிகமாக அளிக்கமுடியும். மாநிலங்கள் கடனைப் பெறும்போது அவை அளிக்கக்கூடிய வட்டி வீதங்களும் வேறுபடுகின்றன. சில மாநில அரசுகள் கடனுக்கான வட்டியை அதிகமாக அளிக்கின்றன ; வேறு சில மாநில அரசுகள் குறைவான வட்டியை மட்டுமே தரத்தக்கநிலையில் இருக்கின்றன. பொதுவாக மாநில அரசுகள் கடனைப் பெறுவதற்கான சூழ்நிலைகள் சாதகமாக அமைவதில்லை. எனவே, மத்திய அரசுக்கடன், மாநில அரசுகளின் கடன் என்ற வேறுபாடு நீக்கப்படவேண்டுமென்பது சிலருடைய

கருத்தாகும். எல்லாக் கடன்களும் மத்திய அரசால் திரட்டப்பட வேண்டும். மாநில அரசுகளின் கடன் தேவைக்கேற்ப, மத்திய அரசால் பெறப்பட்ட கடன் பிரித்துக் கொடுக்கப்படலாம். மாநிலஅரசுகள் தங்கள் கடன் தேவையை மத்திய அரசிடம் அறிவிக்கலாம். அக்கடனைப் பெற்றுத்தர மத்திய அரசு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

இந்தியாவில் அமைந்திருக்கக்கூடிய பொருளாதாரச் சூழ்நிலைகளாலும், மக்களின் பழக்கவழக்கங்களாலும் அரசு பொதுக் கடனைப் பெறுவதில் சிறப்பான வெற்றியை அடைய முடியவில்லை. மக்களில் பெரும்பாலோர் வறிய நிலையிலேயே வாழ்கின்றனர். அவர்களுடைய நுகரும் விருப்பமும் அதிகமாக அமைந்துள்ளது. எனவே, வருவாய் உயரும்போது சேமிப்பு வீதம் அதற்கேற்ப அதிகரிப்பதில்லை. மேலும், மக்கள் தங்கள் சேமிப்பை தங்கம், வெள்ளி, ஆபரணங்கள் ஆகியவற்றை வாங்கப் பயன்படுத்துகின்றனர். இவ்வித மதிப்புமிக்க உலோகங்கள் வெளிநாடுகளிலிருந்தும் கடத்தி வரப்படுகின்றன. நாட்டின் சேமிப்பு இந்நிலையால் பெரிதும் பாதிக்கப்படுகின்றது. அரசு முன்னேற்றப் பணிகளுக்காகக் கடன் பெறுவதைப்போன்றே தனியார் துறையும் முதலீட்டிற்காகக் கடனைப் பெறுகின்றது. ஆகவே, கடனைப் பெறுவதில் இவற்றிடையே போட்டி நிலவுகின்றது. அரசு திட்டமிடுகின்றபடி பொதுக்கடனைப் பெற முடியாமைக்கு இதுவும் ஒரு காரணமாக இருகின்றது. விளம்பரங்கள், பிரச்சாரங்கள் ஆகியவற்றின் மூலமாக மக்களிடம் சேமிக்கும் விருப்பத்தைப் பெருக்கி அரசு பொதுக்கடனை அதிக அளவில் பெற முயற்சிகளை எடுக்க வேண்டும். சேமிக்கும் விருப்பத்தைப் பெருக்க அரசு பல ஊக்கங்களை அளித்தல் நன்மைதரும். இதற்காகவே பரிசுப்பத்திரத் திட்டம் ஏப்ரல் 1960-இல் தொடங்கப்பட்டது. ஆனால், மக்கள் சில காலமே இத்திட்டத்தில் ஆர்வம் கொண்டவர்களாக இருந்தனர். இதை வெற்றியை அளித்த திட்டம் எனக் கருத இயலாது. அரசு வெளியிடுகின்ற கடன் பத்திரங்களுக்கான வட்டி வீதமானது நாட்டின் பொருளாதார நிலைகளுக்குத் தக்கவாறு அமைதல் வேண்டும்.

'இரண்டாவது நிதிக்குழு' (The Second Finance Commission) மத்திய அரசு மாநில அரசுகளுக்குக் கடன் அளிப்பதுபற்றி ஆராய்ந்தது. அக்குழுவின் பரிந்துரையின்படி மத்திய அரசு மாநில அரசுகளுக்கு அளித்த கடன்களுக்கான வட்டிவீதங்களில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன. மாநில அரசுகள் கடன்களைத் திருப்பித் தருவதில் உள்ள முறைகளில் மாற்றங்கள் கொண்டுவரப்பட்டன. ஆண்டொன்றிற்குச் சுமார் ரூ. 5 கோடி கடன் பெறப்

பட்டால், அதற்கான வட்டிவீதம் குறைவாக இருக்கவேண்டு மென நிதிக்குழு கருதியது. எதிர்காலத்தில் ஒரு ஆண்டிற்கு மத்தியகாலக் கடன், நீண்டகாலக் கடன் ஆகிய இரு கடன்களே அளிக்கப்படுதல் வேண்டும். இக்கடன்களை மத்திய அரசு எந்த வட்டி வீதத்திற்குக் கடனைப் பெற்றதோ அதே வட்டி வீதத்திற்கு மாநில அரசுகளுக்கு அளிக்க வேண்டுமென 'இரண்டாவது நிதிக் குழு' பரிந்துரைத்தது. இப்பரிந்துரைகளின் அடிப்படையில் 1957-58 வரை தரப்பட்டிருந்த கடன்களின் வட்டிவீதம் குறைக்கப் பட்டது. தொழில், வாணிப நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்டக் கடன்களின் வட்டிவீதத்தில் எவ்வித மாற்றமும் செய்யப்பட வில்லை. மின்சார உற்பத்தி நிறுவனங்கள், மின்சார விரிவாக்கப் பணிகள் ஆகியவற்றிற்காகத் தரப்பட்ட கடன்களின் வட்டி வீதம் ஆண்டொன்றிற்கு 4 சதவீதமாகும். பிற கடன்களுக்கான வட்டி வீதம் 3 சதவீதமேயாகும். மார்ச் 1958-ஆம் ஆண்டிற்குப் பிறகு அளிக்கப்பெற்ற கடன்களுக்கு 'இயல்பான வட்டிவீதம்' (Normal Rate of Interest) வசூலிக்கப்பட்டது. அதாவது மத்திய அரசு எந்த வட்டிவீதத்தில் பொதுக்கடனைப் பெற்றதோ அதே வட்டிவீதத்தில் மத்திய அரசு மாநில அரசுகளுக்குக் கடன் தந்தது.

மாநில அரசுகளின் வரிவருவாய் குறைந்த அளவிலேயே உள்ளது. ஆக்கப் பணிகளுக்கும், ஆக்கமற்ற ஆனால் ஆக்கத்திற்கு உதவுகின்ற பணிகளுக்கும் மாநில அரசுகள் கடன் பெறுகின்றன. ஆனால், இக்கடனைத் திருப்பித்தருவது வருவாய்க் குறைவால் மாநில அரசுகளுக்குக் கடினமாகவே இருக்கின்றது. கடனை மீட் பதற்காக இவை மேலும் கடன்களைப் பெறுகின்றன. கடந்த காலத்தில் மாநில அரசுகள் குறிப்பிட்டக் காலத்தில் வட்டியைக் கூட முறையாகச் செலுத்தவில்லை. ஆயினும், தேவையான அளவு கடனை அவற்றால் பெறமுடிகின்றது.

### பொதுக்கடன் சுமையும், விளைவுகளும்

சமீப காலத்தில் இந்தியாவின் உள்நாட்டுக் கடனும், வெளி நாட்டுக் கடனும் அளவில் கூடியுள்ளன. திட்டங்களை நிறைவேற்ற வெளிநாட்டுக் கடன் மிகுதியாகப் பெறப்பட்டது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் இந்தியா ரூ. 637 கோடி வெளி நாட்டுக் கடனையும், வெளிநாட்டுக் கடனுக்கான வட்டியாக ரூ. 436 கோடியும் கொடுக்க வேண்டும். கடனுக்காகவும், வட்டிக் காகவும் அயல்நாடுகளுக்கு நாம் ரூ. 62 இலட்சம் நாள்தோறும் கொடுக்க வேண்டியுள்ளது. உள்நாட்டுக் கடனைவிட வெளிநாட்டுக் கடன் உண்மையான சுமையாக அமைகின்றது. பொருளாதார முன்னேற்றம் விரைவடைய வெளிநாட்டுக் கடன் இன்றியமை

யாததாகும். ஆனால், அளவிற்கு அதிகமாக வெளிநாட்டுக் கடனைப் பெறுவது நாட்டின் பாதுகாப்பிற்கு நல்லதல்ல. வெளி நாட்டுக் கடனைக் கணிசமான அளவு பயன்படுத்திப் பொருளா தாரத்தை வளர்ச்சியுறச் செய்யவேண்டும்.

பொதுக்கடன் தீர்வு

குறைந்த வட்டி விதத்திலேயே இந்திய அரசு பொதுக் கடனைப் பெற முயற்சிகளை மேற்கொள்கின்றது. இதனால் தேவை யான அளவு கடனைப் பெறமுடிவதில்லை. நம் நாட்டில் உள் நாட்டுக் கடன் சுமை குறைவாக உள்ளமைக்குக் குறைவான வட்டி அரசால் அளிக்கப்படுவது முக்கியக் காரணமாகிறது. கடனுக்கான வட்டியை உயர்த்தி அதிகக் கடனைப் பெற அரசு முயல வேண்டும். இதன் மூலம் மக்கள் சேமிக்கும் விருப்பத்தைப் பெறுவார்கள். ஓரளவு வருவாய் உயர்ந்திருப்பதால் மக்களைச் சேமிக்கத் தூண்ட சற்று வட்டியை அதிகரிப்பது நன்மை தருவதாகும். வருவாய் உயர்வால் அதிகரித்துள்ள மக்களின் சேமிக்கும்திறனை அரசு மூலதனத்திரட்சிக்குப் பயன்படுத்திக் கொள்ளுதல் அவசியமான தாகும்.

இந்தியாவில் அமைந்துள்ள வரிமுறையானது சேமிப்பை ஊக்குவிப்பதாக இருக்கவில்லை எனக் கூறப்படுகின்றது. மிகுதி யான மக்கட்தொகை குறைவான வருவாயை மட்டுமே பெறுவ தால் சேமிக்கும்திறன் நம் நாட்டில் தாழ்வாகவே உள்ளது. சேமிக்கும்திறனைப் பெற்றவர்களிடமிருந்து பொதுக்கடனைப் பெற அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். ஆக்கத்திற்கு உதவாத துறைகளில் மக்கள் சேமிப்பை முதலீடாக்குவதைத் தடுக்க வேண்டியது அவசியமானதாகும்.

பொருளாதார முன்னேற்ற நிலைகளில் மத்திய அரசும், மாநில அரசுகளும் கடனைப் பெறுவது தவிர்க்க முடியாதது. உற்பத்தியை உயர்த்தி, சேமிப்பு முதலீட்டு விதங்களை அதிகரித்து தரமான வாழ்வை மக்களுக்குத் தர பொதுக்கடன் உதவுகிறது. வளர்ச்சி யடைந்துவரும் நாடுகளில் பயன்படுத்தப்படாத வளங்களைப் பயன்படுத்த அரசு கடன் பெறுவது தவறாகாது. அரசு பெறு கின்ற கடனானது சிறப்பாக உற்பத்தித் துறைகளில் முதலீடாக்கப் படவேண்டும். அரசின் முதலீடு பெற்றகடனைத் திருப்பித்தரத் தேவையான வருவாயைத் தருவதாக அமைதல் வேண்டும். நாட்டின் மொத்த ஆக்கம் உயரும்போது கடனை மீட்பது எளிதான தாகும். அரசின் சிறப்பான பொதுக்கடன் கொள்கை விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறஉதவுகின்ற பல காரணி களில் ஒன்றாகும்.

# 24. வேளாண்மையும் பொருளாதார முன்னேற்றமும்

## (Agriculture and Economic Development)

பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக முக்கியத்தேவை வேளாண்மை வளர்ச்சி. முன்னேற்றமடைந்த நாடுகளின் பொருளாதாரச் செழுமைக்கும் அது சிறப்பாக உதவியுள்ளது. தலா வருவாய்க் குறைவுள்ள வளர்ச்சியடையாத நாடுகளில் வேளாண்மைக்கும், பிற அடிப்படைத் தொழில்களுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்படுதல் அவசியம். இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு, தொழில் முன்னேற்றத்தின் முன்னோடியாக இருந்த இங்கிலாந்தில் தொழிற்புரட்சிக்குமுன் வேளாண்மைப் புரட்சி ஏற்பட்டதை உணர்த்துகின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜப்பான் போன்ற நாடுகளின் தொழில் வளர்ச்சிக்கு உதவியதும் வேளாண்மை முன்னேற்றமே. இன்றைய வளர்ச்சியடைந்து வரும் நாடுகள், தொழில் வளர்ச்சியைப் பெற்று அதன் மூலம் உயர்ந்த 'தலா வருவாயைப்' பெறலாம் என்பதில் அதிக அக்கறை கொள்ளாமல், வேளாண்மை முன்னேற்றத்தைச் சிறந்த அடிப்படையாகக் கொண்டு பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முயலுகின்றன. வேளாண்மையும், தொழிலும் ஒன்று மற்றொன்றிற்குப் பதிலியல்ல; இரண்டும் நெருங்கிய தொடர்புடையன; இரண்டும் மற்றதின் முன்னேற்றத்திற்கு உதவுகின்றன. இந்தியாவில், மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றி நாம் பெற்ற அனுபவம் என்னவென்றால், திட்டமிட்ட வளர்ச்சிக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டியது வேளாண்மைக்கே என்பதாகும்.

மக்கட்தொகை மிக்க, வேளாண்மையை முக்கிய தொழிலாகக் கொண்ட நாட்டில் பொருளாதார வளர்ச்சியை எல்லாத் துறைகளிலும் பெற உயர்ந்த வேளாண்மை உற்பத்தியையும், உற்பத்தித் திறனையும் பெறவேண்டும். பொருளாதார முன்னேற்றத்தின் முதற்சில நிலைகளில் வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளிப்பதே சரியானதாகும். குறைந்த அளவு முதலீட்டைக் கொண்டே

வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கலாம். சில நிலைகளில், மூலதன அதிகரிப்பு இல்லாமலேயே உற்பத்தியை அதிகரிக்கலாம். உற்பத்திச் செலவில் அதிகரிப்பு இல்லாமலேயே, நல்விதைகளைக் கொண்டு இருமடங்கு அல்லது மும்மடங்கு அதிகரித்த உற்பத்தியைப் பெறலாம். இருபோக சாகுபடி முறையாலும், கிணறுகள், குழாய்க் கிணறுகள் போன்றவற்றைப் பெறுதலாலும், தரிசு நிலங்களில் சாகுபடியை மேற்கொள்ளுதலாலும் உற்பத்தியில் கணிசமான உயர்வைப் பெறமுடியும். இவற்றை செயல்படுத்த அதிக மூலதனம் தேவையில்லை. உயரும் வேளாண்மை உற்பத்தி நிச்சயமாக நாட்டின் பொதுவான பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும். மக்கட்தொகை வேளாண்மை நிலம் இரண்டிற்கும் உள்ள தொடர்பு, மேம்பாடு அடைந்துவரும் நாடுகளில் கருதப்பட வேண்டிய ஒன்றாகும்.

**வேளாண்மைக்கு அதிக முக்யத்துவம் அளிக்கப்படுகின்றமைக்கான காரணங்கள்** (Reasons for According High Priority to Agriculture)

வளர்ச்சியடையாத நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு முதல் தேவை வேளாண்மை வளர்ச்சியாகும். வேளாண்மை முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றமைக்கான அடிப்படைக் காரணங்களை ஆராய்ந்தால் இதை இனிது உணரலாம்.

(1) வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறு உணர்த்தும் படிப்பினைகள், தொழில் முன்னேற்றத்தை எளிதில் பெற உதவிய வேளாண்மை வளர்ச்சியை நமக்கு அறிவுறுத்துகின்றன. இன்றைய தொழில் முன்னேற்றத்தில் முன்னணியில் இருக்கும் நாடுகள் முதலில் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தன. வளர்ச்சியடைந்த வேளாண்மையே தொழில் முன்னேற்றத்திற்கு அந்நாடுகளில் உதவியது என பாயர் (Bauer), யாமி (Yamey) இருவரும் உணர்த்துகின்றனர்.[1]

(2) உணவிற்கான தேவை வளர்ச்சியடையாத நாடுகளில் பெருகுகின்ற காரணத்தால் வேளாண்மை முன்னேற்றத்தைப் பெறுவது அவசியமாகின்றது. மக்கட்தொகைப் பெருக்கம் உணவின் தேவையைப் பெருக்குகின்றது. பணவீக்க நிலையாலும், உணவுக்கான தேவையில் அதிக வருவாய்த் தேவை நெகிழ்ச்சி (Higher Income Elasticity) அமைந்துள்ளதாலும் உணவிற்கான தேவை உயர்ந்தே உள்ளது. வளர்ந்துவரும் நாடுகளில், இரண்டாவது உலகப் போருக்குப்பின் இறப்பு வீதம் மிகக்

[1] P. T. Bauer and B. S. Yamey, The Economics of Under-developed countries, p. 235

குறைந்து, பிறப்புவிதம் அதிகம் குறையாததால் மக்கட் தொகைப் பெருக்கம் மிக அதிகமாக உள்ளது. வேளாண்மை முன்னேற்றத்தின் வீதமானது வேகமாக இருத்தல் வேண்டும்; அப்போதுதான் உணவின் அளிப்பு பெருகுகின்ற தேவைக்கேற்ப உயரும். உணவுப் பொருட்களை உபரியாகக் கொண்ட நாடுகளி லிருந்து, குறிப்பிட்ட குறைந்த அளவு மட்டுமே உணவை இறக்குமதி செய்து கொள்ளலாம். உள்நாட்டு உணவு உற்பத்தி யில் தன்னிறைவைப் பெறுவது நன்மை பயப்பதாகும். ஏனெனில், உணவு இறக்குமதியைச் செய்ய, அதிக அளவு அதற்கு ஈடாக பிற பொருட்களை ஏற்றுமதி செய்ய வேண்டியுள்ளது. உணவில் தன்னிறைவு அடையாவிட்டால் அயல்நாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்துநிலை தோன்றும். வளரும் பொருளாதாரத் திற்கு இந்நிலை நன்மை தராது.

(3) முன்னேறிவரும் தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களை அளிக்கவும் வேளாண்மை முன்னேற்றம் தேவை. கச்சாப்பொருட்களின் பற்றுக்குறையால் வேளாண்மையைச் சார்ந்துள்ள தொழில்களின் வளர்ச்சி பாதிக்கப்படும். வேளாண் மைப் பொருட்களின் பற்றுக்குறை விலையுயர்வை ஏற்படுத்துவ தால், தொழில் உற்பத்திப் பொருட்களின் ஆக்கச் செலவு கூடி விலையுயர்வும் ஏற்படுகின்றது. விலையுயர்வுகள் பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்துவிடும். இந்தியாவில் இச்சிக்கலே பல தொழில்களை வளரமுடியாத நிலையில் வைத்துள்ளது. உற்பத்திச் செலவு அதிகரித்து விலையுயர்வதால் தேவைகள் குறைகின்றன.

(4) வேளாண்மை வளர்ச்சி வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்வதற்கான உபரியை அளிக்கும். பொருளாதார முன்னேற்றத்தின் ஆரம்ப நிலைகளில், வளர்ச்சியடையாத நாடு அவசிய மூலதனப் பொருட்களையும், அடிப்படைப் பொருட்களையும் இறக்குமதி செய்கின்றது. அப்போது வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்கின்ற நிலை அந்நாட்டிற்கு இருந்தால், அது அதிக 'அந்நியச் செலாவணியை' ஈட்டித்தரும். ஆரம்ப நிலைகளில், வளர்ச் சியடையாத நாடு 'பொறிசெய்ப் பொருட்களை' ஏற்றுமதி செய்ய இயலாது. வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்து அந்நியச் செலாவணியைப் பெற்று, அதன் மூலம் தேவையான மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்துகொள்ள வேண்டும். இலாபத்தைத் தரத்தக்க ஏற்றுமதி வேளாண்மைப் பொருட் களில் உற்பத்தி உயர்வு தேவை. கணிசமான முன்னேற்றத்தை வேளாண்மை ஏற்றுமதி உற்பத்தியில் பெற்று அந்நியச் செலாவணி யைப் பெறுவதே எளிய முறையாகும். பிற முறைகளின் மூலம் குறைந்த அந்நியச் செலாவணியையே பெற முடியும். பொருளா

தார முன்னேற்றத்தின் பிற்பகுதியில் வேளாண்மைப் பொருட்களை ஏற்றுமதி செய்வது நன்மை தராது. அப்போது பல வகைப்பட்ட வேறு பொருட்களை ஏற்றுமதிகளைச் செய்வது பெரிதும் நன்மை தரும்.

(5) வேளாண்மை முன்னேற்றம், வேளாண்மையல்லாத துறைகளுக்குத் தேவையான மனித சக்தியை வேளாண்மைத் துறையினின்றும் அளிக்கும். தொடக்கப் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் தொழில்களில் பணியாற்றத் தேவையான உழைப்பு வேளாண்மைத் துறையிலிருந்தான் அளிக்கப்பட வேண்டும். குறைவான நிலத்தில் அதிகமாக உள்ள உபரி உழைப்பை வேளாண்மையல்லாத துறைகளுக்கு மாற்றியமைத்தால்அது பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்தும். "நிலத்திற்கான மக்கள் வீதம் அதிகமுள்ள ஒரு ஏழை நாடு பல இன்னல்களையும் கொண்டுள்ளது," எனக் கின்டில் பெர்க்கர் (Kindleberger)[1] குறிப்பிடுகிறார். எச்ச மக்கட்சக்தியை வேளாண்மையிலிருந்து நீக்குவது வேளாண்மை முன்னேற்றத்திற்கும், பிற துறைகளின் முன்னேற்றத்திற்கும் வகை செய்யும்.

(6) மூலதன அளிப்பை வேளாண்மை முன்னேற்றத்தின் மூலம் பெற்று வளர்ச்சியடையாத நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறலாம். தாதுப்பொருட்கள், பெட்ரோலியம் போன்றவை கிடைக்கப் பெறுவிட்டால் அயல்நாட்டு மூலதனம் பிறவகைத் தொழில்களை வளர்க்கக் கிடைக்காது. மூலதனப் பற்றுக்குறை பொருளாதார வளர்ச்சியைப் பாதித்து விடும். "எல்லாப் பொருளாதார வளர்ச்சிக்கும் தேவையான மூலதனத்தை ஒரே முக்கியத் தொழிலாக அமைந்துள்ள வேளாண்மைத் துறையே அளிக்கின்றது."[2]

வேளாண்மைத் துறையில் உபரி உற்பத்தியைப் பெறுவதும் எளிதே. குறைந்த மூலதனச் செலவைக் கொண்டு உற்பத்தியை மிக அதிக அளவிற்கு உயர்த்தலாம். மேலும், குறிப்பிடத்தக்க அளவில் வளர்ச்சியடையாத நாடுகளில், நுகர்வின் அளவு குறுகிய காலத்தில் மாறுவதில்லை. குறைந்த முதலீட்டினால் அதிக அளவு உற்பத்தியைப் பெறுகின்ற நிலையால் வேளாண்மைத் துறையில் சேமிப்பு எளிதாகிறது. ஆனால், இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மை அதிகமாக உதவவில்லை. அதற்கான காரணம் வேளாண்மை உபரி சிறப்பாகத் திரட்டப்படாமையே ஆகும். வேளாண்மைத்

1 Charles P. Kindleberger, Economic Development, pp. 20-21.
2 Ibid., p. 294.

துறையில் வரிவிதிப்பு செய்வதில் சில அரசியல் சிக்கல்கள் அமைந்துள்ளன. வேளாண்மை பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனத்தை அளிக்கும் திறனைக் கொண்டுள்ளது என்பதை அறியாததாலேயே இச்சிக்கல்கள் எழுகின்றன. ஆனால் இந்த அரசியல் சிக்கல் நீக்கப்பட வேண்டும். ஏனெனில், லூயிஸ் (Lewis) கூறுவதுபோல, "பொருளாதார வளர்ச்சியின் முக்கிய நோக்கு சமுதாயத்தின் சேமிப்பை 5 சதவீதத்திலிருந்து 12 சதவீதமாக உயர்த்துவதாகும்."[1] இச் சேமிப்பின் அளவை அடைய வேளாண்மைத் துறையைப் புறக்கணிக்கக் கூடாது.

(7) வேளாண்மை முன்னேற்றத்திற்கு அதிக அயல்நாட்டு மூலதனமும் தேவைப்படுவதில்லை. உள்நாட்டிலுள்ள வசதிகளைக் கொண்டே வேளாண்மையை வளர்க்கலாம். அயல்நாட்டு மூலதனத்தின் சிக்கல்கள் அங்கு அமைவதில்லை. பல வளர்ச்சியடையாத நாடுகள் அயல்நாட்டு மூலதனப் பற்றுக்குறை கொண்டவைகளே. பலவித நிபந்தனைகள், கட்டுப்பாடுகள் ஆகியவற்றோடு அயல்நாட்டு மூலதனத்தை ஏற்றுக்கொண்டால் அதில் பல சிக்கல்கள் தோன்றலாம். இவ்விதச் சிக்கல்கள் இல்லாமலேயே வேளாண்மை முன்னேற்றத்தில் ஒரு நாடு அதிக கவனத்தைச் செலுத்தலாம்.

(8) விவசாயிகளின் 'வாங்கும் திறன்' (Purchasing Power) உயர்வதால், வேளாண்மையல்லாத பிற துறைகளில் வளர்ச்சி ஏற்பட அது உதவுகிறது. பிற துறைகளின் பொருட்களுக்குத் தேவை பெருகுகிறது. வளர்ச்சியடையாத நாடுகளின் பெரும் பகுதி மக்கட்தொகை வேளாண்மையைச் சார்ந்துள்ளது ; எனவே, மற்ற துறைகளின் முன்னேற்றம் இம்மக்கட்தொகையைச் சார்ந்துள்ளது. அம்மக்கட்தொகையே பிற துறைகளின் உற்பத்திப் பொருட்களை நுகர வேண்டியது ஆகும். எல்லாவகை முன்னேற்றத்திற்கும் அது அவசியமாகின்றது.

விவசாயிகளின் குறைந்த 'வாங்கும் திறன்' பொருளாதாரத்தில் ஏற்படுத்துகின்ற விளைவுகளை பேராசிரியர் நர்க்ஸ் (Prof. Nurkse) விளக்குகின்றார்: "மக்கட்தொகையில் மூன்றில்-இரண்டு பகுதி முதல் ஐந்தில்-நான்கு பகுதிவரை உள்ள விவசாயிகள், வேளாண்மைக் கூலிகள், அவர்களின் குடும்பங்கள் மிக ஏழ்மை நிலையைக் கொண்டுள்ளதால் தொழிற்சாலைகளின் பொருட்களை வாங்க அவர்களுக்கு இயலுவதில்லை. முன்பு வாங்கிய சில பொருட்களுக்கு மேலாக சிறிதளவு கூட எந்தப் பொருளையும்

[1] W. A. Lewis, The Theory of Economic Growth, p. 226.

வாங்க முடிவதில்லை. பொறிசெய்ப் பொருட்களுக்குப் போதுமான சந்தை இல்லாமையே சிக்கலாகின்றது. குறைந்த அளவு வேளாண்மை உற்பத்தியே அவர்களின் குறைந்த வாங்குதிறனுக்குக் காரணமாகிறது."[1] மாற்றுப் பொருளாதாரத்தை (Exchange Economy) பெற 'பணப்பயிர்களின்' (Cash-crops) உற்பத்தியை உயர்த்தலாம். வேளாண்மையல்லாத பிற துறைகள் வளரவும் இது உதவும்.

*(9)* வேளாண்மை, கிராமத்துறைகளின் முன்னேற்றத்திற்கான 'சமுதாய மேலமைப்புக்கள்' (Social Overheads) ஆகியவை குறைந்த மூலதனத்தையே தேவையாகக் கொண்டுள்ளன. கிராமப்புறங்களில் சாலைகள், வீடுகள், கல்வி, மருத்துவம் போன்ற வசதிகளைக் குறைந்த செலவில் ஏற்படுத்திவிடலாம். நகர்ப்புறங்களிலும், தொழில் நகரங்களிலும் இவ்வசதிகளுக்கான மூலதனம் அதிக அளவில் தேவைப்படுகின்றது. மிகக் குறைந்த வசதிகளைச் செய்து தருவதுகூட நகரங்களில் கடினமாகின்றது. வேளாண்மை மற்றும் சில கிராமத் துறைகளில் இவ்விதச் சிக்கல்கள் தோன்றுவதில்லை.

*(10)* மக்கட்தொகை மிக்க, வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்ட ஒரு நாட்டில் நகரத் துறைக்கும், கிராமத் துறைக்கும் இடையே வருவாயில் ஏற்றத்தாழ்வு மிகுதியாக உள்ளது. இந்த வருமான ஏற்றத்தாழ்வை நீக்க வேளாண்மைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். வேளாண்மைச் செழிப்பு கிராம மக்களுக்கு அதிக வருவாயைத் தந்து, வருவாய்களில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் களைய உதவும். வேளாண்மையல்லாத பிற துறைகளில் முன்னேற்றத்திற்கான கவனம் செலுத்தப்பட்டால், வருவாய் நகர்ப்புறங்களிலுள்ள ஒரு சிலருடைய கைகளில் குவிந்துவிடும். இது மேலும் வருவாய் வேற்றுமைகளைத் தோற்றுவிக்கும்.

(11) வேளாண்மை முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றமைக்குச் சில அரசியல், சமுதாயக் காரணங்களும் அமைந்துள்ளன. வேளாண்மைத் துறை விரைவான வளர்ச்சியைப் பெறுவிட்டால், அரசிடம் பெரும்பாலான மக்களுக்கு வெறுப்புணர்ச்சி தோன்றும். இந்நிலை அரசின் நிரந்தரத் தன்மைக்கு நல்லதல்ல. உறுதியான அரசு அமைவதும் கடினமாகிறது. அரசியல், சமுதாய எதிர்ப்புக்களைத் தவிர்த்தல் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழியை ஏற்படுத்தித்தரும். பெரும்பகுதி மக்கள் அரசுக்கு ஆதரவாக இருக்க, அப் பெரும்பகுதியினர் ஈடு

1 Ragnar Nurkse, Patterns of Trade and Development, pp. 41-42.

பட்டுள்ள வேளாண்மையை முன்னேற்றமடையச் செய்வது அவசியமானதாகும். பெரும்பாலான மக்களுக்கு மனநிறைவைத் தருவதாக வேளாண்மை வளர்ச்சி இருக்கிறது. உயர்வடைந்த வேளாண்மை உற்பத்தி உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவுகின்றது. சமுதாயத்தின் மன நிறைவு அரசுக்கு ஆதரவைத் தேடித்தருகின்றது.

**வேளாண்மை முன்னேற்றத்திற்கும் தொழில் முன்னேற்றத்திற்கும் இடையே உள்ள தொடர்பு** (Inter-relation Between Agricultural and Industrial Development)

பொருளாதாரச் சிந்தனைவாதிகள், வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு நாட்டைத் தொழில் மயமாக்குதல் நன்மைதருமெனக் கருதுகின்றனர். இருபதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் உலகெங்கும் இக்கருத்தே நிலவி இருந்தது. வளர்ச்சியடையாத நாடுகளின் நம்பிக்கையை பண்டித நேருவும் கொண்டிருந்தார். அவர் கூறுவதாவது, "உண்மை வளர்ச்சி இறுதியில் தொழில்மயமாதலைச் சார்ந்திருக்கும்." வளர்ச்சி யடைந்த நாடுகளின் முன்னேற்றத்தை, வளர்ச்சியடையாத நாடுகளும் பெற தொழில் முன்னேற்றம் முக்கியமானதென்பதை மறுக்க முடியாது.

தொழில் வளர்ச்சியின் மூலம் முன்னேற்றத்தைப் பெறலாம்; ஆனால், பொருளாதாரத்தின் குறைகள் எல்லாவற்றையும் தொழில் வளர்ச்சியால் நீக்கிவிட இயலாது. பல நாடுகளின் சமீபகால அனுபவங்களின் மூலம் நாம் உணர்வது, வேளாண்மை மேம்பாடு இன்றித் தொழில் முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளித்தலில் தவறுகள் உள்ளன என்பதையாகும்.

தொழில் மயமாக்குதல் எப்போதும் நன்மையைத் தோற்று விக்கும் எனக்கூற முடியாது. முன்னேற்றமடைந்த நிலைக்கும், தொழில் வளர்ச்சிக்கும் இடையே எப்போதும் நெருங்கிய தொடர்பு இருப்பதில்லை. "அதிக வளர்ச்சியடைந்த வேளாண்மைப் பகுதிகளாக உள்ள வட அமெரிக்கா, ஸ்காண்டிநேவியா, மேற்கு ஐரோப்பா, ஆஸ்திரேலியா, ஆசியாவின் சில செழுமைப் பகுதிகள், மலேயா போன்றவை செல்வம் மிக்கவைகளே; எதிரிடையாகப் பல தொழில் முன்னேற்றம் அடைந்த, ஆனால், ஏழ்மை நிலை கொண்ட ஹாங்காங், இத்தாலி, இந்தியா, பாகிஸ்தான் போன்ற பகுதிகளும் உள்ளன."[1]

[1] P. T Bauer, Indian Economic Policy and Development, p. 61.

நீண்டகால நிலைகளில் வேளாண்மையும், தொழில் துறையும் நெருங்கிய தொடர்புடையவை. இரு துறைகளின் முன்னேற்றங்களும் அவசியமானவையே. குறுகிய காலத்தில் அரசு ஒரு துறைக்கு அதிக முக்கியத்துவத்தை அளிக்க முன்வரலாம். அரசு கொண்டுள்ள குறைந்த வசதிகளில், ஒரு துறை பெறும் அதிக மூலதனம் மற்றொரு துறையின் இழப்பாலேயே எனலாம்.

பொருளாதார முன்னேற்ற முறைகளைக் கவனமாக ஆராயும் போது நீண்டகாலமே முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. அந்த நீண்டகாலத்தில் தொழில், வேளாண்மை என்ற இரு துறைகளுமே ஒன்றிற்கொன்று உதவிக் கொள்கின்றன. யூஜீன் ஸ்டாலே (Eugene Staley) கூறுவதைப்போல, "தொழில் முன்னேற்றத்தைப் பொருளாதார முன்னேற்றத்தினின்றும் பிரிக்க முடியாது. ஏனெனில், தொழில் வளர்ச்சி வருவாய் உயர்வினால் ஏற்பட்ட ஒன்று. (மக்கள் அதிக அளவு தொழிற்பொருட்களையும், பணிகளையும் வாங்கச் செலவு செய்கின்றனர்; உணவிற்கான செலவு குறைவாக உள்ளது). தொழில் முன்னேற்றம் அதிக உற்பத்தியாலும் ஏற்பட்டதாகும். வேளாண்மையில் உள்ள எச்ச மக்கட்தொகை நீக்கப்பட்டு வேளாண்மைத்திறன் பெருகுகின்றது. வேளாண்மை உற்பத்தித்திறன் கண்டுபிடிப்புக்களை ஊக்குவித்தலாலும் அதிகரிக்கின்றது."[1]

தொழில்மயமாக்க வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதே அடிப்படை அவசியமாகும். வேளாண்மை புதுமைப் படுத்தப்பட்டு உற்பத்தி உயராவிட்டால் பெரும்பகுதி மக்கள் தேவையான வாங்கும் திறனைக் கொண்டிருக்க மாட்டார்கள். இதனால், தொழிற் பொருட்களின் தேவை குறைந்து தொழில் முன்னேற்றம் பாதிக்கப்படும். தொழில் முன்னேற்றம் மேம்பட்டால்தான் வேளாண்மையின் அதிக மக்கட்தொகைக் குறையும். புதுமை வேளாண்மைக்கான தொழில்நுணுக்க உற்பத்திக் கருவிகளும், மற்ற பணிகளும் தொழில் முன்னேற்றத்தால்தான் கிடைக்கும். எனவே, வேளாண்மை வளர்ச்சி தொழில் முன்னேற்றத்தையும் சார்ந்துள்ளது.

பொருளாதார முன்னேற்றத்தை வேளாண்மை வளர்ச்சியின் மூலம் மட்டுமோ அல்லது தொழில் முன்னேற்றத்தின் மூலமாகவோ பெற்றுவிட முடியாது. தலா வருவாய் உயர்வை வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டு துறைகளின் உற்பத்திப் பெருக்கத்தின் மூலம் பெறலாம்.

[1] Eugene Staley, Future of Underdeveloped Countries, pp. 303-304

தொழில் வளர்ச்சியைப் போன்று விரைவான வளர்ச்சியை வேளாண்மை வளர்ச்சி பெற முடியாது. இதனுல், தொழில் வளர்ச்சிக்கே முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென்பது நன்மை தராது. உற்பத்தி உயர்வை வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டிலும் ஒருங்கே பெற்று 'சரிசம முன்னேற்றத்தைப்' (Balanced Development) பெற முயற்சிகள் செய்ய வேண்டும். அறிவேக, சமநிலை வளர்ச்சி இல்லாத தொழில் முன்னேற்றம் அயல்நாட்டு வாணிபச் செலுத்துநிலையைப் பாதகமாக்கிவிடும். நகரங்களின் பெருக்கம், பணவீக்கம் போன்றவைகளும் ஏற்பட்டு பொருளாதார முன்னேற்றம் தடைப்படுகின்றது. தொழில் முன்னேற்றம் தனியொரு உழைப்பாளருக்கான மூலதனத்தை அதிக அளவு தேவையாகக் கொண்டுள்ளது. அதிக மூதலீட்டைத் தொழில்களில் ஈடுபடுத்தினுல் பலரும் அதன் மூலம் நன்மையைப் பெறமுடியாது.

**சரிசம முன்னேற்றத்திற்கான அவசியம் (Need for Balanced Development)**

தொழில், வேளாண்மை என்ற இரண்டும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. ஒன்றின் முன்னேற்றம் மற்றதின் வளர்ச்சியில் உள்ளது. பொருளாதார முன்னேற்றத்திற்கு இரு துறைகளிலும் சமநிலை வளர்ச்சி தேவை. திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்தில் பல துறைகளுக்கும் வெவ்வேறு வகைகளில் முக்கியத்துவங்கள் அளிக்கப்படுகின்றன. ஒரு துறையின் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படாவிடில், மற்ற துறையின் வளர்ச்சியும் பாதிக்கப்படும். "தொழில், வேளாண்மை இரண்டையும் பொறுத்த வரை அவைகளில் சமநிலை வளர்ச்சியில்லாவிடில், பொருளாதார வளர்ச்சியே ஏற்படமுடியாததாகிவிடும்," என பென்ஜமின் ஹிக்கின்ஸ்[1] குறிப்பிடுகின்றுர்.

**சரியான வேளாண்மை முதலீடு (Choice of Investment in Agriculture)**

வளர்ச்சியடையாத நாட்டில் திட்டமிடுபவர்கள், குறைந்த வசதிகளை வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டு துறைகளின் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்த வேண்டும். எத்துறைக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பது என்பதில் பல சிக்கல்கள் உள்ளன. முன்னேற்றத்திற்கான வசதிகளைக் குறைவாகக் கொண்ட நாட்டில், இரு துறைகளுக்கும் சமநிலை முக்கியத்துவம் அளித்தால், நாட்டின் மொத்த உற்பத்தி, வருவாய் இரண்டையும் அதிகரிக்க முடியாது. உதாரணமாக, குறைந்த அளவே நிதிவசதியைக்

1 Benjamin Higgins, Economic Development, p. 455.

கொண்ட ஒரு அரசு வேளாண்மை, தொழில் இரண்டின் முன்னேற்றத்தையும் சமநிலையில் பெறவேண்டுமென்று கருதி, கொண்டுள்ள நிதியில் பாதியை வேளாண்மை முன்னேற்றத்திற்கும், மற்றொரு பாதியளவு நிதியைத் தொழில் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்தினால் தேசிய ஆக்கத்தின் அளவையும், தேசிய வருவாயையும் அதிக அளவு அதிகரிக்க முடியாது. ஏனெனில், ஏதாவது ஒரு துறையிலாவது அதிக முதலீட்டைச் செய்தால், அதன் மூலம் அத்துறையாவது வளர்ச்சி பெறும். இரண்டு துறைகளிலும் முதலீடு செய்யப்பட்டால், மூலதனப் பற்றுக்குறையால் இரு துறைகளின் முன்னேற்றமும் தடைபடும்.

வேளாண்மை, தொழில் ஆகிய இரு துறைகளில் எத்துறைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென்பதில் இருவிதக் கருத்துக்கள் பல்வேறு பொருளியலறிஞர்களால் தரப்படுகின்றன.

முதலாவதாக, முன்னேற்றத்தைப் பெற முதல் முக்கியத்துவம் வேளாண்மைக்கே தரப்பட வேண்டுமென்பது ஒரு கருத்து. அதற்கான காரணங்களும் அவர்களால் தரப்படுகின்றன. மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தி (Marginal Productivity of Capital) வேளாண்மையிலேயே அதிகமாக உள்ளது. பெருகும் உணவுத் தேவையைச் சமாளிக்க, வேளாண்மை முன்னேற்றத்தின் மூலம் உணவின் அளிப்பை அதிகரிக்க வேண்டும். ஹூவர் (Hoover), கோலே (Coale), ஜாகப் வைனெர் (Jacob Viner), ஏ. இ. கான் (A. E. Kahn) போன்றவர்கள் இக்கருத்தைக் கொண்டுள்ளனர். "கணிசமான முன்னேற்றம் மிகப் பின்தங்கிய பொருளாதாரத் துறையில் (வேளாண்மை) ஏற்பட்டால், அது வெற்றியைத் தரக்கூடிய முன்னேற்றத்தைப் பொருளாதாரத்திற்கு அளிக்கும். ஒரு துறையின் வளர்ச்சி மற்றதின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்துமென்றாலும், வேளாண்மை வளர்ச்சிக் குன்றினால் பெருமளவு பாதிக்கப்படுவது தொழில் துறையாகும்; தொழில் முன்னேற்றம் குன்றினால் வேளாண்மை அதிக அளவு பாதிக்கப்படாது."[1]

மற்றொரு கருத்து வேறு சில பொருளியலறிஞர்களால் தரப்படுகின்றது. குறிப்பாக பென்ஜமின் ஹிக்கின்ஸ் (Benjamin Higgins), ஆல்பெர்ட் ஹிர்ச்மென் (Albert Hirschman), லெபென்ஸ்டீன் (Leibenstein) போன்றவர்கள் 'தொழில்மயமாக்குதலையே' முதல் முக்கியத்துவம் வாய்ந்தது எனக் கருதுகின்றனர். ஹிக்கின்ஸ்

[1] Coale and Hoover, Population Growth and Economic Development in Low-income Countries : A Case Study of India's Prospects, Pages 120-139.

(Higgins) வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதின் அவசியத்தை உணர்ந்துள்ளார். "பரந்த முறையில் வேளாண்மையை இயந்திரமயமாக்குதல் மூலமும், கிராமங்களினின்றும் வெளியேற்றப்பட்ட மக்கட்தொகை ஏற்கும் தொழில் முன்னேற்றத்தின் மூலமும் நிலையான வளர்ச்சியைப் பெறலாம்."[1] இந்தியாவைப்பற்றி குறிப்பிடும்போது அவர் படிப்படியான வளர்ச்சியை எச்சரிக்கின்றார். அதிக மூலதனத் தேவையைக் கொண்ட தொழில் முன்னேற்றமே இந்தியாவிற்குத் தேவை என்கிறார். இந்தியா தன் சக்திக்கு மேலான திட்டங்களையே வகுத்துள்ளது என்றாலும், பொருளாதார முன்னேற்றத்திற்கான 'பெரிய அழுத்தத்தை' (Big Push) தர இரண்டாவது திட்டம் அளவில் சிறியதாகவே உள்ளது எனக் கருதுகிறார். ஒப்பீட்டுச் சாதக நிலையின் அடிப்படையில், இந்தியா உணவுப் பொருட்களை இறக்குமதி செய்து, பெரிய தொழில்களின் உற்பத்திப் பொருட்களை ஏற்றுமதி செய்ய வேண்டும். பின்பு அவர் வேளாண்மை முக்கியத்துவத்தையும் உணர்ந்து கூறுவதாவது, "வேளாண்மையின் பின் தங்கிய நிலை தொழில் முன்னேற்றத்தைப் பின்னுக்கு இழுக்கிறது." இக்கருத்தைக் கொண்ட பிரிவின் பிற பொருளாதார நிபுணர்களும் முன்னேற்றத்தை அடைய தொழில் வளர்ச்சிக்குத் தலையாய முக்கியத்துவம் தேவை என்கின்றனர்.

இந்தியத் திட்டங்களைத் திறனாய்வு செய்த பேராசிரியர் பாயர் (Prof. Bauer), நாட்டைத் தொழில் மயமாக்க போற்றத் தக்க அளவில் வேளாண்மை முன்னேற்றம் முக்கியமானது எனப் பரிந்துரைக்கிறார். கடந்த 50 ஆண்டுகளின் இந்திய அனுபவம், வேளாண்மை வளர்ச்சியின்றி மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியாது என்பதை உணர்த்துகிறது. வேளாண்மை உற்பத்தியின் கணிசமான உயர்வு, பெருகிய தொழில் மக்கட் தொகைக்கு உபரியாக அளிக்கத் தேவைப்படுகின்றது. தொழில்களின் உற்பத்திப் பொருட்களுக்குச் சந்தையாகவும், அரசுக்கு அதிக வரி வருவாயைக் கொடுப்பதாகவும் உற்பத்தியில் உயர்வைப் பெற்ற வேளாண்மைத்துறை விளங்கவேண்டும். இந்தியாவில் அரசுக்கு வேளாண்மைத் துறை மூலம் கிடைக்கும் வரி வருவாய் மிகக் குறைவானதே.

பணப் பொருளாதாரத்தின் திறமைகள், பழக்கங்கள் நடவடிக்கைகள் பராமரிப்புப் பொருளாதாரத்தினின்றும் வேறுபட்டவை. சந்தைக்கான உற்பத்தியை வேளாண்மையில் மேற்கொண்டால், பணப் பொருளாதாரத்தின் திறமைகளையும்,

[1] Benjamin Higgins, Economic Development, Page 455.

நடவடிக்கைகளையும் பராமரிப்புப் பொருளாதாரமாகிய வேளாண் மையிலும் பெறலாம். நாளடைவில் தொழில் மயமாக்குவதற்குத் தேவையான நிர்வாக, தொழில் நுணுக்கத் திறமைகளையும் பெற்று விடலாம். வேளாண்மை வளர்ச்சியில்லாவிடில், தொழில்களின் உற்பத்தித்திறன் முற்றிலும் பயன்படுத்தப்பட மாட்டாது. எனவே, மூலதன-உற்பத்திவீதம் (Capital-Output Ratio) தொழில் துறைகளில் அதிகமாக உள்ளது. சிறப்பாக ஆக்கத்திறன் பயன் படுத்தப்படாமையால், அதிக அளவு மூலதனம் குறைந்த அளவு உற்பத்தியையே தருகின்றது.

வேளாண்மை வளர்ச்சி தொழில் முன்னேற்றத்திற்குத் தேவை ; தொழில் முன்னேற்றம் வேளாண்மை வளர்ச்சிக்குத் தேவை. இவ்விரு துறைகளின் முன்னேற்றம் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியாமையாதது.

## பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மையின் பங்கு (Share of Agriculture in Economic Development)

ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு ஏற்றவாறு, பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மையின் பங்கு மாறுபடுகின்றது. பொருளாதார முன்னேற்றத்தின் ஆரம்ப நிலைகளில் வேளாண்மை யின் பங்கு அதிகமானது ; ஆனால், வேளாண்மையல்லாத துறைகள் வளர்ந்த பின்பு வேளாண்மையின் முக்கியத்துவம் குறைகின்றது. தொழில் வளர்ச்சிக்குப்பின் வேளாண்மைத் துறையில் அமைந்துள்ள மக்கட்தொகையில் குறைவு ஏற்படும். மிக அதிக முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தில் குறைந்த மக்கள் வீதமே வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. குறைந்த அளவு முன்னேற்றமடைந்த நாட்டை முன்னேற்றமடையச் செய்ய வேளாண்மை மக்கட்தொகையைக் குறைக்க வேண்டும். வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கட்தொகையின் வீதம் குறையத் தொடங்கிய பின்னர், வறியநிலை நீங்கி செல்வநிலை தோன்றும்.

வேளாண்மை பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுகின்ற நிலை பல நாடுகளிலும் குறைந்துவிட்டது. சான்றாக, 1870-ஆம் ஆண்டிற்கும் 1930 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை வேலைவாய்ப்பு 54 சதவீதத்திலிருந்து 23 சதவீத மாக அமெரிக்காவில் குறைந்தது ; பிரான்சில் 42 சதவீதத்தி லிருந்து 25 சதவீதமாகவும், ஜப்பானில் 85 சதவீதத்திலிருந்து 51 சதவீதமாகவும் குறைந்தது.

வேளாண்மையல்லாத துறைகள் முன்னேறும்போது, வேளாண்மைத் துறையிலுள்ள உபரி உழைப்பின் தேவை பெருகுகின்றது. நல்ல வருவாயைப் பெற்று சிறந்த வாழ்க்கைத்தரத்தை அடைய வேளாண்மைத் துறையிலுள்ளவர்கள் பிற துறைகளை நாடிச் செல்கின்றனர். இதன் மூலம் வேளாண்மையில் இருக்கும் 'மறைந்துள்ள வேலையின்மை' (Disguised Unemployment) நீக்கப் படுகின்றது. வேளாண்மையில் இயந்திரங்கள், கருவிகள் போன்றவற்றைப் பயன்படுத்துகின்றமையாலும், தொழில்நுட்ப உற்பத்தி முறைகள் மேற்கொள்ளப்படுவதாலும் உழைப்பின் தேவை குறைகிறது. ஆகவே, வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்தால் பொருட்களின் அளிப்பு அதிகரிக்கும்போது, வேளாண்மையல்லாத துறைகளில் உழைப்பின் தேவை பெருகுகிறது. இதன் விளைவே உபரி உழைப்பு வேளாண்மையினின்றும் தொழில்களுக்குச் செல்வதாகும். பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படாமலேயே இதைச் செய்துவிடலாம்.

தனியொரு விவசாயிக்கான உற்பத்தி நுகர்வைவிட அதிகமாக உயர்வதால், வருவாயும் உயர்கின்றது. மக்கள் செல்வ நிலையை அடையும் போது, அவர்கள் குறைந்த அளவே உணவிற்காகச் செலவிடுகின்றனர் ; பொறிசெய் பொருட்களை வாங்கவும், பணிகளைப் பெறவும் அதிக அளவு செலவு செய்கின்றனர். உழைப்பின் உற்பத்தி, தொழில்களில் வேளாண்மையைக் காட்டிலும் அதிகமாக உள்ளது.

இந்நிலைகள், பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது வேளாண்மையின் முக்கியத்துவம் படிப்படியாகக் குறைவதை உணர்த்துகின்றன. ஆனால், வேளாண்மை மக்கட் தொகையைத் தொழில்களில் மாற்றியமைத்துவிட்டால் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றுவிடலாம் எனத் தவறாகக் கருதக்கூடாது. முன்னேற்றத்தின் விளைவே வேளாண்மை மக்கள் தொழில்களில் மாறுகின்ற நிலை ; முன்னேற்றத்தின் காரணமாக இது ஏற்பட முடியாது.

இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வேளாண்மையில் உள்ள உபரி உழைப்பை தொழில்களில் பயன்படுத்த, அதைத் தொடர்ந்து வேளாண்மை உற்பத்தி பெருக வேண்டும் ; விரைவான தொழில் வளர்ச்சி ஏற்பட்டு அது பெருகும் மக்கட்தொகையையும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாய் இருக்க வேண்டும். ஆனால், பல வளர்ச்சியடையாத நாடுகளின் மக்கட்தொகைப் பெருக்கம் அதிகமாக உள்ளதால் இது முடியாததாகின்றது.

பொருளாதார வளர்ச்சி வேளாண்மை முக்கியத்துவத்தைக் குறைப்பது விந்தையாக உள்ளது. ஆனால், இன்றைய வளர்ச்சி யடையாத நாடுகளில் இந்நிலை ஏற்படுவதற்கு நீண்டகாலம் பிடிக்கும்.

## இந்தியப் பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மையின் பங்கு (Role of Agriculture in India's Economic Development)

இந்தியா ஒரு மேம்பாடு அடைந்து வரும் நாடு. மொத்த மக்கட்தொகையில் 70% வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. இது எச்ச மக்கட்தொகை வேளாண்மையில் உள்ளதைக் குறிக்கும். ஆண்டொன்றிற்கான மக்கட்தொகைப் பெருக்கமும் 2.5% என்ற அளவில் அதிகமாகவே உள்ளது. ஏற்றுமதி வாணிபம் வேளாண்மைப் பொருட்களையே சார்ந்துள்ளது. இந்திய தேசிய வருவாயில் 45% வேளாண்மையிலிருந்து கிடைக்கிறது. நம் பொருளாதாரத்தில் உணவுப் பற்றுக்குறை உள்ளது. இலட்சோப இலட்சம் மக்களின் நுகர்விற்காக உணவுப் பொருட்களை இறக்கு மதி செய்கிறோம். பருவநிலை தவறினால் பஞ்சநிலை ஏற்பட்டு வேளாண்மை உற்பத்தி குறைகிறது. பொறிசெய்ப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களின் வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது.

நம் நாடு தொழில் மயமாகிவருகிறது. எனினும், தொழில் வளர்ச்சி வீதம் உயர்வாக இல்லாததால் வேளாண்மையின் அதிக உபரி உழைப்பாளர்களைத் தொழில்களால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை. 'மறைந்துள்ள வேலையின்மையே' (Disguised Unemployment) நம் பொருளாதாரத்தின் முக்கிய இயல்பாக உள்ளது.

இவ்வித இயல்புகளைக் கொண்ட வேளாண்மைப் பொருளா தாரம், பொருளாதார முன்னேற்றத்தில் மிக முக்கியப் பங்கேற்க வேண்டியுள்ளது. திட்டக்குழு உறுப்பினர்கள் இதை நன்கு உணர்ந்திருந்தனர். இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தைத் தவிர பிற திட்டங்களில் வேளாண்மைக்கே முதல் முக்கியத்துவம் அவர் களால் அளிக்கப்பட்டது. இரண்டாவது திட்டத்தில் தொழில் முன்னேற்றத்திற்குத் தலையாய முக்கியத்துவம் அளித்ததைத் தவறென உணர்ந்து, மூன்றாவது, நான்காவது திட்டங்களில் மறு படியும் வேளாண்மைக்கே அதிக முக்கியத்துவம் அளித்தார்கள். இரண்டாவது திட்டம் ஹிக்கின்ஸின் (Higgins) பரிந்தரையின்படி 'பெரிய அழுத்தத் தொழில்மயமாக்கும் திட்டமாக' (Big Push Industrialisation Programme) அமைந்தது.

சோவியத் ரஷ்யாவின் முன்னேற்ற முறைகளை நம் நாட்டில் பின்பற்றுவது கடினமானது. இந்தியாவில் வேளாண்மை உபரி

மிகக்குறைவாக உள்ளதால் அம்முறைகள் நம் நாட்டில் வெற்றியை அளிக்க முடியாது. ஜப்பானின் பொருளாதார வளர்ச்சி முறை நம் நாட்டிற்கு ஏற்றது. இந்தியாவில் பஞ்சநிலை உள்ளது ; அது மேலும் நீடிக்கலாம். வேளாண்மையில் முன்னேற்றத்தைப் பெறாமல், திட்டங்களின் மூலம் தொழிற்திறனைப் பெருக்கினால், தொழில்கள் சுமையாக இருக்குமேயன்றிச் சொத்தாக இருக்க முடியாது. திருவாளர்கள் வக்கீல் (Vakil), பிரம்மானந்த் (Brahmanand) இருவரும் இதைச் சரியாகக் குறிப்பிடுகின்றனர்: "இந்தியா, சோவியத் ரஷ்யா இரண்டும் இயற்கை வளங்களில் வேறுபடுகின்றன. ரஷ்யாவில் வேளாண்மைக்கான நிலம் ஏராளமாக உள்ளது; மேலும், வேளாண்மை உபரியின் அளவு முன்னமேயே உயர்வடைந்த நிலையைக் கொண்டிருந்தது."[1]

இந்தியாவின் பொருளாதாரத் திட்டங்களில், உணவு உற்பத்திக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பது சரியானதாகாது என்று சில பொருளியலாளர்கள் கருத்து கொண்டுள்ளனர். உணவுத் தேவைகளை உள்நாட்டு உற்பத்தியின் மூலமாகவும், அமெரிக்க நாட்டிடமிருந்து இறக்குமதி செய்வதின் மூலமாகவும் பூர்த்தி செய்து கொள்ளலாம் என அவர்கள் கருதுகின்றனர்; உணவிற்கான தேவை திடீரென அதிகமாக உயராது எனவும் வாதிடுகின்றனர். ஏனெனில், வருவாய் உயரும்போது உணவிற்கான தேவையும் அதிகமாக உயராது. உணவிற்கான தேவை ஒன்றிற்குக் குறைந்த வருவாய்த் தேவை நெகிழ்ச்சியைக் கொண்டுள்ளதால், வருவாய் உயரும்போது உணவின் தேவை அதிக அளவில் உயராது.

சில காரணங்களால் மேலே குறிப்பிடப்பட்டுள்ள வாதம் சரியானதல்ல என உணரலாம் :

(1) முதலாவதாக, இந்தியா எவ்வித உணவு உபரியையும் கொண்டிருக்கவில்லை. தட்ப வெப்ப நிலைகள் சாதகமாக இருந்ததாலேயே முதல் திட்டத்தின் தொடக்கக்காலத்தில் உணவில் தன்னிறைவைப் பெற்றுவிடலாம் என்ற எண்ணத்தை நமக்கு அளித்தது. குறைந்த அளவே உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்தும், உணவில் உபரியே ஏற்படவில்லை. அதிக அளவு உணவுப் பற்றுக்குறையே நிலவுகின்றது.

(2) இரண்டாவதாக, மக்கட் தொகைப் பெருக்க வீதம் மிக அதிகமாக உள்ளது ; உணவுத் தானியங்களின் உற்பத்தி வீதத்தை விட அது உயர்வாக உள்ளது. அதேநிலையில், சத்துள்ள உணவை நுகரும் மக்கள் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளனர்.

1 Vakil and Brahmanand, Institutional Implications of a Bolder plan.

(3) மூன்றாவதாக, நாட்டின் ஏற்றுமதிகளைப் பெருக்க அதிகரித்த வேளாண்மை உற்பத்தி வேண்டும். பாதக அயல்நாட்டு வாணிப நிலையைத் திருத்தவும் இது உதவும்.

(4) நான்காவதாக, வருவாய் உயர்வினால் மக்கள் உணவிற்காக அதிக செலவையும் செய்வார்கள்.

(5) ஐந்தாவதாக, அமெரிக்க உணவு உபரியை இறக்குமதி செய்வது, நீண்டகாலத் திட்ட வளர்ச்சியைப் பாதிக்காமல் இருக்க வேண்டும். அதில் உள்ள அரசியல் நோக்கையும் நாம் மறக்கக் கூடாது. அது நாட்டின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளைப் பாதிக்கும். "இயற்கை வளங்களைப் பயன்படுத்தி நீண்ட காலப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேளாண்மைப் பொருட்களை இறக்குமதி செய்வது நன்மை தராது. அதிக அளவு வெளிநாட்டு உதவியைப் பெறுவது அந்நாட்டின் அரசியற் கருத்துக்களை உள்நாட்டில் பரப்ப வழிசெய்யும். எனவே, உள் நாட்டின் சமுதாய, பொருளாதார வசதிகளுக்கு ஏற்ப முதலீடுகள் செய்யப்படுவதில்லை."[1]

உணவிற்காகவும், மூலதனப் பொருட்களுக்காகவும் பிற நாடுகளை நம்பியிருந்த நிலை நமக்குப் பல இன்னல்களையும் அளித்தது. இதனால் திட்டங்களைச் சிறப்பாக நிறைவேற்றுவதும் கடினமாயிற்று. இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகள், தங்களின் அரசியற் கொள்கைகளைப் பரப்ப வேண்டுமென்றே வளர்ச்சியடையாத நாடுகளுக்கு உதவுகின்றன ; வளர்ச்சியடையாத நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப்பெற உதவவேண்டுமென்பது அவற்றின் நோக்கமாக இருப்பதில்லை.

இந்தியாவின் வேளாண்மைத் துறையை வளர்த்து உற்பத்தியைப் பெருக்கமுடியும் என்பதில் நம்பிக்கையில்லாதவர்கள் பேராசிரியர் பாயர் (Prof. Bauer), திருவாளர்கள் லெவிஸ் (Lewis), ஹிக்கின்ஸ் (Higgins); ஆனால், இந்திய உணவுப் பற்றுக்குறையைத் தீர்க்க அமெரிக்கா, மற்றும் சில முன்னேற்றமடைந்த நாடுகளின் வேளாண்மைத்துறை உற்பத்தியில் அவர்கள் அதிக நம்பிக்கை கொண்டுள்ளனர். ஆயினும், அவர்கள் முக்கிய ஒரு உண்மையை ஆராய மறந்து விடுகின்றனர். நம் நாட்டின் வேளாண்மை உற்பத்தியை 'ஒரு ஏக்கருக்கான உற்பத்தியை' (Yield Per Acre) பெருக்குவதின் மூலம் மிகப்பல மடங்கு அதிக்கரிக்கலாம். அதற்கான மூலதனம் குறைவாக இருந்தாலும் போதுமானது. நம் நாட்டின் உணவுச் சிக்கலைத் தீர்ப்பது மிக அவசியமானதாகும்.

[1] P.T. Bauer, Indian Policy and Development, p. 68.

குறுகிய காலத்திலேயே உணவுச் சிக்கலைத் தீர்ப்பது முடிகின்ற ஒன்றேயாகும். பொருளாதார முன்னேற்றத்திற்கான முதல் நிபந்தனை உணவுப் பற்றுக்குறையைத் தவிர்ப்பதும், படிப்படியாகத் தொழிற் பொருட்களின் ஏற்றுமதியை உயர்த்துவதுமாகும். இவ் வழிகளின் மூலம் பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மை பல நன்மைகளையும் தரமுடியும்.

# 25. இந்திய வேளாண்மை நிதி

## (Indian Agricultural Finance)

இந்தியா வளர்ச்சியடைந்துவரும் நாடாக இருப்பதால் 70 சத விதத்திற்கும் அதிகமான மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. எனவே, வேளாண்மைத்துறை முன்னேற்றத்திற்கான நிதி வசதிகளைப் பெருக்கித்தருவது இன்றியமையாத ஒன்றாகும். வேளாண்மைத் தொழிலின் வளர்ச்சிக்குத் தேவையானதாக இருப்பது நிதி வசதியாகும். இந்தியாவில் வேளாண்மை பின் தங்கியுள்ளமைக்கு நிதிப்பற்றாக்குறையும் காரணமாகிறது. இந்திய வேளாண்மை அமைப்பில் அமைந்துள்ள பல குறைகளில், வேளாண்மை நிதியை அளிக்கத்தக்க நிறுவனங்கள் எண்ணிக்கையில் குறைவாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். வேளாண்மை நிதியானது அளிக்கப்பட்டாலும், அது போதுமான அளவில் அமைந்திருக்கவில்லை. விவசாயிகள் சாகுபடிக்காகக் கடன் பெறுவதைத் தவறெனக் கருத முடியாது. எல்லாத் தொழில்களிலும் உற்பத்தி நடவடிக்கைகளை மேற்கொள்ள நிதிவசதிகள் தேவைப்படுகின்றன. வேளாண்மையும் இதற்கு விதிவிலக்காக அமையவில்லை. நிதிப்பற்றாக்குறையால், விவசாயிகள் முன்னேற்றமடைந்த சாகுபடி முறைகளைப் பின்பற்ற முடியவில்லை. எனவே, இந்திய வேளாண்மை தேக்கநிலையில் இருக்கின்றமைக்கு நிதிவசதிக் குறைவும் காரணமாகின்றது. தற்பொழுது லேவாதேவிக்காரர்களும், கூட்டுறவுக் கடன் சங்கங்களும் வேளாண்மை நிதியை அதிக அளவிற்கு அளித்து வருகின்றன. இவை கடன் அளிக்கும் முறைகளிலும் குறைபாடுகள் உள்ளன. மேலும், அவை போதுமான நிதி வசதியை அளிக்க முடியாதவைகளாகவும் இருக்கின்றன. இந்தியாவின் வேளாண்மை நிதிச் சிக்கலைக் குறைந்த அளவில் அமைந்துள்ள நிதி நிறுவனங்கள் தீர்க்க முடியவில்லை.

இந்திய விவசாயிகளுக்குக் குறிப்பிட்டக் காலங்களில் கடன் தேவைப்படுகிறது. விதைகள், உரங்கள், வேளாண்மைக் கருவிகள் கால்நடைகள் ஆகியவற்றை வாங்குவதற்கு நிதி அவசியமாகின்றது. இவற்றைத் தவிர நிலம் வாங்கவும், நில முன்னேற்றத்திற்கும், கிணறுகள் தோண்டவும், வேலிகள் அமைக்கவும், வடி

கால்கள் ஏற்படுத்தவும், புதிய நிலத்தைச் சாகுபடிக்கு எடுத்து கொள்ளவும் கடன் வசதிகள் தேவைப்படுகின்றன. இவ்வகைக் கடன் வசதிகள் விவசாயிகளுக்கு உடனடியாகத் தேவைப்படு கின்றன. வேளாண்மை வளர்ச்சி குன்றும்போது, தொழில் முன் னேற்றமும் பாதிக்கப்படுகிறது. சாகுபடி நிலத்தின் அளவும் மிகக் குறைவாகவே உள்ளது. வேளாண்மை வருவாயும் உறுதியற்றதாக இருக்கின்றது. வேளாண்மை வருவாய் தட்பவெப்ப நிலைகளையும், பருவகால மாற்றங்களையும் பொறுத்து அமைகிறது. தற்பொழுது அமைந்துள்ள நிதிவசதிகள் போதுமானவைகளாக இல்லை. வேளாண்மை நிதி வசதிகளை அளிக்கும் நிறுவனங்கள் சிறப்பாக அமையவில்லை; அவை எண்ணிக்கையில் குறைவாகவும் உள்ளன. ஆனால், தொழில்துறைக்குத் தேவையான நிதிவசதியை அளிக்கும் நிறுவனங்கள் பலவாக அமைந்திருக்கின்றன. தொழில்களுக்குத் தேவையான நிதி எளிதில் கிடைக்கின்றது. போதுமான நிதிவசதி யின்மையால் வேளாண்மையில் ஒரு ஏக்கருக்கான உற்பத்தியும் மிகக்குறைவாக உள்ளது. நம் நாட்டில் ஒரு ஏக்கருக்கான உற்பத்தியின் அளவு குறைவாக உள்ளமைக்குப் பல காரணங்கள் இருந்தாலும், நிதிப்பற்றுக்குறை ஒரு முக்கியக் காரணமா கின்றது.

தற்பொழுதுள்ள வேளாண்மைமுறை பழைய கால வேளாண்மை முறையினின்றும் வேறுபட்டுள்ளது. எனவே, தற் பொழுது விவசாயிகளுக்குக் கடனின் தேவை அதிகரித்துள்ளது. இந்தியாவில் அமைந்திருக்கும் எல்லாவகைக் கடன்களும் விவசாயி களால் பயன்படுத்தப்பட்டும், அவை போதுமானவைகளாக அமைந்திருக்கவில்லை. எளியநிலைக் கடன்களாக இவை இருப்ப தில்லையாகையாலும், விவசாயிகள் எப்பொழுதும் கடன் தொல்லை யினின்றும் மீள முடிவதில்லை. இதனால்தான் விவசாயிகள் கடனில் பிறந்து, கடனில் வாழ்ந்து, கடனில் இறக்கின்றார்கள் எனக் கூறப்படுகின்றது.

பின்வரும் புள்ளிவிவரங்கள் கிராமக்கடன் அளவு வெவ்வேறு ஆண்டுகளில் எவ்வாறு அதிகரித்து வந்துள்ளது என்பதை விளக்கு கின்றன :

| ஆண்டு | கடன் அளவு (கோடி ரூபாயில்) | கணக்கிட்ட அமைப்பு |
|---|---|---|
| 1914 ... | 300 ... | சர் எட்வர்டு மேக்லாகன் |
| 1924 ... | 600 ... | சர் எம். எல். டார்லிங் |
| 1930 ... | 900 ... | மத்திய வங்கி விசாரணைக் குழு |
| 1935 ... | 1,200 ... | டாக்டர் ஆர். முகர்ஜி |
| 1938 ... | 1,800 ... | திரு இ.வி.எஸ். மரியம் |
| 1945 ... | 1,200 ... | பம்பாய்த் திட்டம் |
| 1962 ... | 2,380 ... | இந்திய ரிசர்வ் வங்கி |

இவ்வாறு படிப்படியாகக் கடன் அளவு பெருகி வருகின்றமைக்கு வேளாண்மை முறை மாறி வருவதும் காரணமாகும். அதிகப் பணப்புழக்கம் மற்றொரு முக்கியக் காரணமாக அமைந்திருக்கின்றது. கிராமக்கடன் அளவானது பல ஆண்டுகளில் தனியாராலும், நிறுவனங்களாலும் கணக்கிடப் பெற்றது.

இந்திய விவசாயிகளுக்குக் கடன்கள் மூன்று நோக்கங்களுக்குத் தேவைப்படுகின்றன :

(i) குறுகிய காலக் கடன் சாகுபடிப் பணிகளை மேற்கொள்ளத் தேவைப்படுகின்றது. உதாரணமாக, விதைகள், உரங்கள் போன்றவைகளை வாங்குவதற்கு நிதி குறுகிய காலத்தில் தேவையாகின்றது.

(ii) ஓராண்டு முதல் ஐந்தாண்டுகள் வரையான மத்தியக் காலக் கடன் வேளாண்மைக் கருவிகள், கால்நடைகள் ஆகியவற்றை வாங்குவதற்கு அவசியமாகின்றது.

(iii) ஐந்து ஆண்டுகள் முதல் இருபத்தைந்து ஆண்டுகள் வரையான நீண்ட காலக் கடன்களும் தேவைப்படுகின்றன. நிலம் வாங்கவும், விலையுயர்ந்த வேளாண்மைக் கருவிகள் வாங்கவும், சாகுபடி நிலத்தைச் சுற்றி சிறப்பான வேலிகள் அமைப்பது, கிணறுகள் தோண்டுவது போன்ற நிரந்தர முன்னேற்றங்களைச் செய்யவும் நீண்ட காலக் கடன்கள் அவசியத் தேவைகளாக உள்ளன.

இம்மூன்று வகைக் கடன்களையும் அளிப்பதின் மூலமே பின் தங்கிய தேக்கநிலையை மாற்றி வேளாண்மையை வளர்க்க இயலும்.

வேளாண்மைத்துறையில் பலவிதச் சிக்கல்கள் அமைந்திருந்தாலும், அவற்றுள் தலையாய சிக்கலாய் அமைந்திருப்பது கிராமக்

கடனேயாகும். இந்தியாவின் வேளாண்மை மக்கட்தொகையின் பெரும்பகுதி கடனிலேயே அமைந்துள்ளது. சாகுபடி நில அளவும், குறைந்த உற்பத்தியும், தாழ்ந்த வருவாயும் இதற்குக் காரணமாக அமைகின்றன. கிராமக் கடன்நிலை நம் நாட்டின் வேளாண்மை உற்பத்தியைப் பெரிதும் பாதிக்கின்றது. விவசாயி களின் திறமையும் இதனுல் குறைகின்றது. தீர்க்க முடியாத அளவிற்கு அவர்கள் கடனைக் கொண்டவர்களாக இருக் கின்றனர். கடன்பட்டவர்கள் அதினின்றும் மீளுவது முடியா தாகின்றது. இந்தியாவில் பெரிய அளவில் நிலவுடைமைகளைக் கொண்டவர்கள் மிகக்குறைந்த வீதத்திலேயே உள்ளனர். அவர் களிடம் மட்டுமே வேளாண்மையைச் சிறப்பாகச் செய்வதற்கான மூலதனம் இருகின்றது. பல விவசாயிகள் கடன் பெற்றுச் சாகு படியை மேற்கொண்டாலும், உற்பத்தியானது உறுதியற்றதாக உள்ளது. பருவமழையை நம்பியே வேளாண்மையில் ஈடுபடுகின்ற நிலை இன்றும் அமைந்திருக்கின்றது. கால நிலைகள் சாதகமாக இல்லாதபோது. விவசாயிகள் கடனுக்கான வட்டியைக் கொடுக்கும் நிலையில்கூட இருப்பதில்லை.

விவசாயிகள் பல காரணங்களுக்காகக் கடன் பெறுகின்றனர். நிலச்சீர்திருத்தங்களுக்காவும், குடும்பச் செலவுகளுக்காகவும் அவர்கள் கடன் பெறுவது தவிர்க்க முடியாத ஒன்ருகின்றது. குறுகிய காலக் கடன்கள், நீண்ட காலக் கடன்கள், மத்திய காலக் கடன்கள் பெறப்படுகின்றன. கடனைப் பெற நிலங்கள், நகைகள் போன்றவை அடகு வைக்கப்பெறுகின்றன. கடன்பத்திரங்களை எழுதிக்கொடுத்தும் கடன் பெறுகின்ருர்கள். கிராமக் கடனுனது ஆண்டுதோறும் அதிகரித்து வருகின்றது. பின்வரும் நிலைகளே விவசாயிகள் கடனைக் கொண்டுள்ளமைக்குக் காரணங் களாகின்றன:

(1) விவசாயிகள் வேளாண்மையிலிருந்து பெறுகின்ற வரு வாய் குறைவாக உள்ளமையே அவர்களின் கடன் நிலைக்கு முக்கியக் காரணமாகின்றது. நல்விதைகளையும், உரங்களையும், முன்னேற்ற மடைந்த கருவிகளையும் பயன்படுத்தி சாகுபடியை அவர்களால் மேற்கொள்ள முடியவில்லை. பரம்பரைபரம்பரையாகக் கடன் நிலையிலேயே வாழ்ந்துவரும் விவசாயக் குடும்பம் கடனைத்தீர்க்க முடிவதே இல்லை. ஒருவருடையே நிலம் ஒரே இடத்தில் அமைந் திருக்காமல் வெவ்வேறு இடங்களில் சிறிய அளவுகளில் சிதறிக் கிடக்கின்றது. இதனுல் பேரளவு உற்பத்தி முறையின் நன்மை களைப் பெறமுடிவதில்லை. பலவித உற்பத்திச் சிக்கனங்களையும் கூட அவர்களால் பெற இயலுவதில்லை. 'வேளாண்மை உழைப்பு விசாரணைக் குழு' (Agricultural Labour Enquiry Committee) ஒரு

வேளாண்மைக் குடும்பத்தின் 1956-ஆம் ஆண்டில் வருவாய் சராசரி ரூ. 437 எனவும், அக்குடும்பத்தின் செலவு ரூ. 617 எனவும் கணக்கிட்டது. இந்நிலையின்றும் விவசாயிகளின் வருவாயைக் காட்டிலும் செலவு அதிகமாக உள்ளது என்பதை உணரலாம். விவசாயிகள் கடனிலேயே வாழ்வதற்கு குறைந்த வேளாண்மை வருவாய் ஒரு அடிப்படைக் காரணமாக அமைகின்றது.

(2) பரம்பரைக்கடன் சந்ததியினரைத் தொடர்கின்றது. நிலம், நகை போன்றவற்றை அடகு வைத்தும், கடன் பத்திரங்களை எழுதித்தந்தும் கடன் பெறப்படுகின்றது. தீர்க்க இயலாத அளவிற்குக் கடனும், வட்டியும் உயர்ந்து விடுவதால் வேளாண்மை வருவாய் அதிகரித்து வந்தாலும் கடனைத் தீர்க்க முடிவதில்லை. கடனில் பிறக்கின்ற விவசாயி ஒருவரின் குழந்தை தன்னுடைய வாழ்நாளில் கடனைத் தீர்க்க முடியாத நிலையே அமைந்துள்ளது. கடனைத் தீர்த்தால்தான் அதிக வருவாயைப் பெற்று நிலத்தில் அதிக முதலீட்டைச் செய்யலாம். அதிக மூலதனத்தை வேளாண்மையில் பயன்படுத்த முடியாமைக்குப் பரம்பரைக் கடனும் காரணமாக உள்ளது.

(3) ஐந்தாண்டுத் திட்டங்களில் நீர்ப்பாசன வசதிக்காக அதிக மூலதனம் ஒதுக்கப்பட்டாலும் வேளாண்மை ஒரு பருவ காலத் தொழிலாகவே இருக்கின்றது. இந்தியா பல வள நதிகளைக் கொண்ட நாடாக இருந்தும் வேளாண்மை வளர்ச்சிக்கான நீர்ப்பாசன வசதிகளைச் சிறப்பாகப் பெறமுடிவதில்லை. பருவ மழை தவறும்போது வேளாண்மை உற்பத்தி குறைந்து விவசாயிகளின் வருவாயும் பாதிக்கப்படுகின்றது. அதுபோன்றே அதிக மழைப்பொழிவினால் சில இடங்களில் பயிர்கள் நாசமடைகின்றன. இவை இந்தியாவில் நீர்ப்பாசன வசதிகள் முன்னேறவில்லை என்பதை உணர்த்துகின்றன. இந்திய வேளாண்மை பருவகாலச் சூதாட்டமாக அமைந்து இருக்கின்றது என்றும் கூறலாம். மழையை நம்பி சாகுபடி பல இடங்களிலும் செய்யப்படுவதால் இருபோக, முப்போக சாகுபடி முறைகளையும் மேற்கொள்ள முடிவதில்லை. தொழில் உற்பத்தியானது ஆண்டு முழுதும் செய்யப்படும்போது, வேளாண்மை உற்பத்தி ஆண்டின் சில மாதங்களில் மட்டும் குறைவான வெற்றியோடு செய்யப்படுகின்றது. இதனால் விவசாயிகள் குறைவான வருவாயைப் பெற்று கடன்பெற வேண்டிய நிலையில் அமைந்துள்ளார்கள்.

(4) நிலத்தில் ஈடுபட்டுள்ள பெரும்பகுதி மக்கட்தொகை வேளாண்மை வருவாயை மட்டுமே நம்பி வாழ்ந்து வருகின்றது. பிற வேலைவாய்ப்புக்கள் கிடைக்காமை இதற்குக் காரணமா

கின்றது. தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடாக இந்தியா இருக்கவில்லை. சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் அதிக வேலைவாய்ப்புக்களை அளிக்கும் அளவிற்கு வளர்ந்திருக்கவில்லை. விவசாயிகள் பருவகால வேலையின்மையைக் கொண்டவர்களாக உள்ளனர். ஆண்டின் சில மாதங்களில் மட்டுமே அவர்கள் சாகுபடியில் ஈடுபடுகின்றார்கள்; பிற மாதங்களில் அவர்களுடைய உழைப்பானது வீணடிக்கப்படுகின்றது. 'மறைந்துள்ள வேலையின்மையும்' இந்திய வேளாண்மையில் அமைந்திருக்கின்றது. விரைவாகப் பெருகிவரும் மக்கட்தொகை பிற வேலைவாய்ப்புக்கள் கிடைக்கப்பெறாததால் வேளாண்மையிலேயே அமைகின்றது. தேவைக்கு அதிகமான உழைப்பு வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபடுவதால்தான் மறைந்துள்ள வேலையின்மை தோன்றுகின்றது. வேளாண்மை உற்பத்தி குறைவாக உள்ளமைக்கு இதுவும் ஒரு காரணமாகும். அதிக மக்கள் வேளாண்மையில் அமைவதால் அவர்களின் தலா வருவாயும் குறைகிறது. இதன் காரணமாக குறைந்த சேமிப்பும், முதலீடும் மட்டுமே விளைவாகின்றன. சேமிப்பும், முதலீடும் குறைவாக உள்ளமையால் விவசாயிகள் கடன் பெறுகின்றனர். பலரிடம் சேமிப்பே இருப்பதில்லை என்றும் கூறலாம். எடுத்துக்காட்டாக, அறுவடை முடிந்தவுடன் விவசாயிகள் அடுத்தச் சாகுபடிக்குத் தேவையான விதைக்கான தானியங்களைகூட வைத்துக்கொள்ளாமல் உற்பத்தி செய்யப் பெற்ற எல்லாவற்றையும் விற்பனை செய்துவிடுகின்றனர். பிறகு சாகுபடியைத் தொடங்கும்போது கடன் பெற்று விதைத் தானியங்களை அதிக விலைகொடுத்து வாங்குகின்றனர். பலர் நிலச் சுவான்தார்களிடமிருந்து மிக அதிக அளவு 'தானிய வட்டிக்கு' விதைத் தானியங்களைப் பெறுகின்றனர். விவசாயிகளின் குறைவான வருவாய் இந்நிலையை ஏற்படுத்துகின்றது. வேளாண்மை தவிர பிற துறைகளில் ஈடுபட்டால் அதிக வருவாயைப் பெற இயலும். இந்தியாவில் வேளாண்மை மக்கட்தொகை பிற வேலை வாய்ப்புக்களைப் பெற்றில்லாமையால் உண்மை வருவாய் உயர்வதில்லை; கடன் பெறுவது தவிர்க்க முடியாததாகின்றது.

(5) கிராமங்களில் அமைந்திருந்த குடிசைத் தொழில்களும், சிறு தொழில்களும் பெரிய தொழில்களின் தோற்றத்தால் நசித்துவிட்டன. விவசாயிகளுக்குத் துணைவருவாயை அளிக்கவல்ல இவை சீர்குலைந்தமையாலும் கிராமக்கடன் பெருகியதெனலாம். இதன் காரணமாகவே சிறு தொழில்களின் வளர்ச்சிக்காகத் திட்ட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. சிறு தொழில்கள் வளர்ச்சிக் குன்றியமைக்கு, பெரிய தொழில்கள் முன்னேற்றமான உற்பத்தி முறைகளைப் பின்பற்றி உற்பத்திச் செலவைக் குறைத்த

மையும் காரணமாகும். பேரளவு உற்பத்தி முறையைப் பின்பற்றிய பெரிய தொழில்கள் பல உற்பத்திச் சிக்கனங்களையும் பெற்றன. தரமான பொருட்களும் இவைகளால் உற்பத்தி செய்யப்பட்டன. இவற்றின் போட்டிக்கு ஈடுகொடுக்க முடியாமையால் கிராமத் தொழில்களில் பல சீர்குலைந்தன. இதனால் விவசாயிகள் பிற வேலை வாய்ப்புக்களை இழந்து, வேளாண்மை வருவாயை மட்டுமே பெறுகின்றார்கள். இவ்வருவாய் குறைவாக இருப்பதால் கடன் பெறுவது அவசியமாகின்றது.

(6) விவசாயிகள் கடனுக்காக அளிக்கவேண்டிய வட்டி மிக உயர்வாக உள்ளது. லேவாதேவிக்காரர்களிடமிருந்தும், வேளாண்மைக்குக் கடன் கொடுக்கும் தனியாரிடமிருந்தும், நிலக்கிழார்களிடமிருந்தும் அதிக வட்டிக்குக் கடன் பெறப்படுகிறது. தவிர, இக்கடன் ஆக்கச் செலவுகளுக்காக மட்டும் பயன்படுத்தப்பட்டால் உற்பத்தி உயர்வடையும். ஆனால், விவசாயிகள் ஆக்கமற்றச் செலவுகளுக்காகவும் பெறப்பட்ட கடன் பயன்படுத்தப்படுகிறது. திருவிழாக்கள், திருமணங்கள் போன்றவைகளுக்கு மிக அதிகச் செலவுகள் கடன்பெற்றுச் செய்யப்படுகின்றன. 1951-இல் 'தேசிய வருவாய்க் குழு' (National Income Committee) விவசாயிகள் பெறுகின்ற கடனில் சுமார் 83 சதவீதம் ஆக்கமற்றச் செலவுகளுக்கே பயன்படுத்துகின்றது எனக் கணக்கிட்டுள்ளது. விவசாயக் கடனுக்கான வட்டிவீதம் உயர்வாக உள்ளமைக்கு கடன் அளிக்கும் நிறுவனங்கள் குறைவாக இருப்பதே காரணமாகின்றது. கூட்டுறவுச் சங்கங்களும், அரசும் குறைந்த அளவிற்கு மட்டுமே கடன் அளிக்கின்றன. பிறரிடமிருந்தே பெரும்பாலான கடன்கள் அதிக வட்டிக்குப் பெறப்படுகின்றன. சிலர் 300 சதவீத வட்டியும் பெற்றுக் கடன் அளிக்கின்றனர். கடன் அளிக்கும் முறையும் நேர்மையற்றதாக இருக்கிறது. அசலைவிட அதிகமான வட்டியைச் சில ஆண்டுகளிலேயே கடன் அளிப்பவர்கள் பெறுகின்றார்கள். இந்நிலையால் மேலும் கடன் பெறுவது விவசாயிகளால் தவிர்க்க முடியாததாகின்றது.

(7) விவசாயிகள் சண்டை சச்சரவுகளில் ஈடுபட விரும்புவதில்லை என்றாலும், வருகின்ற சண்டைகளை விடமாட்டார்கள். சிறு சச்சரவுகளைத் தீர்க்கவும் அவர்கள் நீதிமன்றங்களை நாடுகின்றார்கள். தங்களுடைய சொத்து முழுவதும் செலவழிந்தாலும் சட்டபூர்வமான சாதகமானத் தீர்ப்பைப் பெருமையாகக் கருதுகின்றனர். வழக்காடுவதற்கும் கடன் பெறுகின்ற விவசாயிகள் உள்ளனர். இவை யாவும் பெறப்பட்டக் கடன் ஆக்கத்திற்குப் பயன்படுத்தப்படாமையை உணர்த்துகின்றன. வழக்குமன்றங்களுக்குச் செல்வது சில விவசாயிகளுக்குப் பொழுதுபோக்காகவே மாறிவிடுகிறது

என்றும் சொல்லப்படுகின்றது. குறைந்த அளவு மதிப்புள்ள சொத்திற்காக, அதைவிட அதிகச் செலவுகளைச் செய்யும் விவசாயி களும் பலர் இருக்கின்றனர்.

(8) நகரமக்களைப் போன்றில்லாமல் கிராம மக்கள் ஆரோக் கியமற்ற வாழ்வையே நடத்துகின்றனர். பல நோய்களும் அவர்களை எளிதில் பற்றிக்கொள்வதால் உற்பத்தித்திறன் குறை கின்றது. நோய்களை உடன் தீர்ப்பதற்கான மருத்துவ வசதிகளும் கிராமப்புறங்களில் அமைந்திருப்பதில்லை. அம்மை, மலேரியா, காலரா போன்ற நோய்கள் முற்றிலுமாக எல்லாக் கிராமங் களிலும் ஒழிக்கப்படவில்லை. நீண்ட தூரங்களில் அமைந்திருக்கும் நகர மருத்துவ மனைகளில் சென்று சிகிச்சைபெற கிராம மக்கள் விரும்புவதில்லை. சிகிச்சை பெறுவதற்குத் தேவையான பணமும் வருவாய்க் குறைவினால் அவர்களிடம் இருப்பதில்லை. நோய்களால் விவசாயிகளின் உற்பத்தித்திறன் குறைந்துவிடுவதால், வருவாய்க் குறைவும் ஏற்பட்டு அவர்கள் கடன் பெறுகின்றார்கள்.

(9) தற்பொழுது அமைந்துள்ள நிலத்தீர்வை முறை விவசாயிகளுக்குச் சுமையாக இருக்கின்றது. நிலத்தின் அளவைக் கொண்டு நிலவரி விதிக்கப்படுகின்றது. நிலத்தின் விளைச்சலுக்கு ஏற்ப வரிவிதிப்பு செய்வது நல்லது. நிலவரி பணமாகப் பெறப்படு கின்றது. விவசாயிகளின் வசதிக்கேற்பவும் வரி வசூலிக்கப்படுவ தில்லை. தீவிரமான முறைகளில் வரி வசூலிக்கப்படுகின்றது. நிலவரியின் அளவு அதிகமாக உள்ளது என்றும் கூறப்படுகிறது. பல விவசாயிகளும் கடன்பெற்று நிலவரியைச் செலுத்தும் நிலையில் இருக்கின்றனர்.

(10) இந்தியக் கால்நடைகள் 'எலும்புகளையும், தோலையும் கொண்ட மூட்டை' எனச் சொல்லப்படுவதுண்டு. விவசாயிகள் நோய்களால் பாதிக்கப்படுவது போலவே அவர்களின் கால்நடை களும் பாதிக்கப்படுகின்றன. குறைந்த காலத்திற்கு மட்டுமே பயனளிக்கக் கூடியவைகளாக இந்தியக் கால்நடைகள் உள்ளன. கிராமப்புறங்களில் கால்நடை மருத்துவ வசதிகள் குறைந்த அளவிற்குக்கூட அமைந்திருப்பதில்லை. இந்திய வேளாண்மைச் சாகுபடி கால்நடைகளின் உதவிகொண்டே பெரும்பாலும் செய்யப்படுகின்றது. தரமான கால்நடைகள் இல்லாமையும் உற்பத்திக் குறைவிற்குக் காரணமாகின்றது. சிறிய நிலவுடைமை களைக் கொண்டிருப்பவர்களும் கால்நடைகளை வைத்திருக்க வேண்டியது அவசியமாகின்றது. அதற்கான பராமரிப்புச் செலவும் உயர்வாக உள்ளது. கால்நடைகள் வாங்கவும் விவசாயிகள் கடன் பெறுகின்றனர்.

(11) இந்தியாவில் அமைந்துள்ள பணவீக்க நிலையும் விவசாயிகளைக் கடன் பெறத் தூண்டுகின்றது. சமீப காலமாக நிலத்தின் மதிப்பு அதிகரித்துள்ளது; வேளாண்மை விளைபொருட்களின் விலைகளும் உயர்ந்துள்ளன. இதன் காரணமாக எளிதில் கடனைத் திருப்பித் தந்துவிடலாம் என்ற எண்ணம் விவசாயிகளிடம் தோன்றுகின்றது. கடனை அளிப்பவர்களும் கடனை எளிதில் திரும்பப் பெற்றுவிடலாம் என்ற எண்ணத்தில் அதிகக் கடனை அளிக்கின்றனர். வேளாண்மைப் பொருட்களின் விலையுயர்வால் விவசாயிகள் கடன் பெறத் தூண்டப்படுகின்றனர்.

### கிராமக் கடனின் விளைவுகள்

கிராமக் கடன் உற்பத்தித்திறனைப் பெரிதும் பாதித்துவிடுகின்றது. வேளாண்மை உற்பத்தி உயர்வடைந்தாலும் கடனைத் திருப்பித் தருவதிலேயே தங்களின் வருவாயில் பெரும்பகுதியை விவசாயிகள் இழக்கின்றனர். இதனால் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கத்தை அவர்கள் பெறுவதில்லை. உழைப்பின் மூலம் பெற்ற வருவாய் கடனைத் திருப்பியளிப்பதில் செலவிடப் படுவதால், விவசாயிகள் உழைத்து உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஆர்வத்தை இழக்கின்றார்கள். விவசாயிகள் பெறுகின்ற கடனே அவர்களின் தாழ்ந்த நிலைக்குக் காரணமாகின்றது. கடன் பெறுவதால் விவசாயிகளின் பொருளாதார நிலையானது உயரவேண்டும். ஆனால், இந்திய விவசாயிகள் கடன் பெற்று அதன் மூலம் சிறப்பான உற்பத்தி உயர்வைப் பெறுவதில்லை.

திரும்பித் தரத்தக்க இயலாத அளவிற்குமேல் விவசாயிகள் கடன் பெறுகின்றனர். வேளாண்மை பின்தங்கிய தேக்க நிலையில் இருக்கின்றமைக்கு இதுவும் ஒரு காரணமாகின்றது. கடன் பெறுவதால் விவசாயிகளின் முன்னேற்றத்தில் தடைகள் தோன்றுகின்றன. கடனைத் திருப்பித் தருவதற்காக அறுவடை முடிந்தவுடன் விளைபொருட்கள் விற்பனை செய்யப்படுகின்றன. இதனால் அக்காலங்களில் வேளாண்மைப் பொருட்களின் விலைகள் குறைந்து விடுகின்றன. விலைகள் உயரும்வரை சேமித்துவைக்கும் நிலையில் விவசாயிகள் இருப்பதில்லை. கடனைத் திருப்பித்தரவும், பிற தேவைகளுக்காகவும் அறுவடை முடிந்தவுடனேயே வேளாண்மைப் பொருட்கள் குறைவான விலைகளில் விற்பனை செய்யப்படுகின்றன. கடன் அளிப்பவர்களுக்கும், பெறுபவர்களுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றுகின்றன. இவ்விரு பிரிவினர்களுக்கும் சண்டை சச்சரவுகள் ஏற்படுகின்றன. கடனைத் திரும்பித் தருவதில் நேர்மையற்ற நிலையும் விவசாயிகளிடம் திகழ்கின்றது. நேர்மைக் குறைவிற்குக் காரணம் குறைவான வருவாய் ஆகும். மக்களின்

வாழ்வின் தரம் உயரும்போது நேர்மை, கல்வி, பண்பாடு போன்றவைகளும் வளர்கின்றன.

**வேளாண்மைக் கடனுல் விளையும் தீமைகளை நீக்கும் நடவடிக்கைகள்**

கிராமக் கடனுல் ஏற்படும் தீமைகளைக் களைய அரசு பல நடவடிக்கைகளை மேற்கொண்டது. விவசாயிகளின் நிலை திருந்த பல சட்டங்களும் நிறைவேற்றப்பட்டன. கிராமக் கடனுல் ஏற்படுகின்ற தீய விளைவுகள் கீழ்க்கண்ட அரசின் நடவடிக்கைகளால் ஓரளவு நீக்கப் பெற்றுள்ளன:

1. அரசு வேளாண்மை முன்னேற்றத்திற்கான கடன்களை அளிக்கின்றது. விவசாயிகளுக்குக் கடன் அளிக்க வேண்டியதின் அவசியம் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியிலேயே உணரப்பட்டு விட்டது. விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டக் கடன்கள் 'தக்கவிக் கடன்கள்' (Taccavi Loans) எனப்பட்டன இக்கடன்களை அளிக்க 1871, 1876, 187 -ஆம் ஆண்டுகளில் 'தக்கவிச் சட்டங்கள்' (Taccavi Acts) இயற்றப்பட்டன. தொடக்கத்தில் இக்கடன்கள் உற்பத்திக் குறைவாக இருந்த இடங்களுக்குக் குறுகிய காலங்களுக்கு அளிக்கப்பெற்றன. இவ்வகைக் கடன்கள் 1884-இல் 'விவசாயிகளின் கடன்கள் சட்டத்தின்' (Agriculturists' Loans Act) மூலம் தரப்பட்டன. 1883-இல் 'நில அபிவிருத்திக் கடன்கள் சட்டத்தினுல்' (Land Improvement Loans Act) வேளாண்மை வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ள நீண்ட காலக் கடன்கள் அளிக்கப்பட்டன. இவ்வகைக் கடன்களைத் தவணை முறையிலும் திருப்பித் தரலாம். இக்கடன்கள் குறைவான வட்டித் தொகையைக் கொண்டவைகளாகவே இருந்தன.

2. கடன் பெற்ற விவசாயிகளைப் பாதுகாக்கும் சட்டங்களும் அரசால் கொண்டுவரப்பட்டன. 1879-இல் 'டெக்கான் விவசாயிகளின் நிவாரணச் சட்டம்' (The Deccan Agriculturists Relief Act) இயற்றப்பட்டது. கடனைத் திருப்பித் தராதவர்களுக்குச் சிறை தண்டனை அளிக்கப்பட்ட நிலை மாற்றம் பெற்றது. கடனைத் தீர்ப்பதற்காக நிலத்தை விற்கும் நிலையைத் தவிர்க்க இச்சட்டம் நடவடிக்கைகளை மேற்கொண்டது. கடன் அளிப்பவர்கள் நேர்மையான முறையைப் பின்பற்ற நடவடிக்கைகளை எடுத்தது. வட்டி வீதங்களைக் குறைக்கவும் இது வகைசெய்தது.

3. 1901-இல் பஞ்சாப் மாநிலத்தில் 'பஞ்சாப் நில வெளியேற்றுச் சட்டம்' (The Punjab Land Alienation Act) கொண்டுவரப்பட்டது. இதன் மூலம் கடன் பெற்றவர்களிடமிருந்து கடன்

அளித்தவர்கள் கடனுக்காக நிலத்தைப் பெறுவது தடை செய்யப் பட்டது. வேறு சில மாநிலங்களிலும் இவ்வகைச் சட்டங்கள் கொண்டுவரப்பெற்றாலும் எதிர்பார்த்த பலன்கள் கிடைக்கவில்லை என்றே கூற வேண்டும்.

4. கடன் அளிப்பவர்களைக் கட்டுப்படுத்துவதற்கான சட்டங் களும் கொண்டு வரப்பட்டன. இச்சட்டங்களால் கடன் அளிப் பவர்கள் பதிவு செய்துகொள்ள வேண்டியது அவசியமாயிற்று. நேர்மையான முறைகளை அவர்கள் பின்பற்றவும் இச்சட்டங்கள் வகை செய்தன. நாட்டின் பல மாநிலங்களிலும் 1930-ஆம் ஆண்டிற்கும், 1939-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் இவ்வகைச் சட்டங்கள் அதிக அளவில் இயற்றப்பெற்றன. குறிப்பாக லேவாதேவிக்காரர்கள் கடன் அளிக்கும் நிலையில் திருத்தம் ஏற்பட்டது.

5. விவசாயிகளின் கடன் சுமையைக் குறைக்க 'கடன் தீர்வுக் கழகங்கள்' (Debt Settlement Boards) ஏற்படுத்தப் பெற்றன. 1933-இல் இதற்காக முதன் முறையாக மத்தியப் பிரதேசத்தில் சட்டம் கொண்டுவரப்பட்டது. 15 முதல் 20 ஆண்டுகளில் தவணை முறையில் கடனைத் திருப்பித்தர நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. இதனால் கடன் பெற்றவர்கள் எளிதில் கடனைத் தீர்க்க முடிந்தது.

6. வட்டி வீதத்தைக் கட்டுப்படுத்துவதற்கான சட்டங்கள் பல மாநிலங்களிலும் கொண்டுவரப்பட்டன. கூட்டு வட்டி பெறுவது சில மாநிலங்களில் தடை செய்யப்பட்டது. பல மாநிலங்களில் உயர்ந்தபட்ச வட்டி வீதமானது நிர்ணயிக்கப் பெற்றது.

ஆனால், இவ்விதச் சட்டங்களினால் கடன் அளிப்பவர்களின் நேர்மையற்றக் கடன் அளிக்கும் முறைகளை மாற்ற முடியவில்லை. தேவையான கடனை எளிதாகப் பெறும் வசதிகள் ஏராளமாகப் பெருகும்போதுதான் நேர்மையான முறை கடன் அளிப்பவர் களிடம் ஏற்படும். நம் நாட்டில் போதுமான அளவில் வேளாண்மைக் கடன்கள் கிடைப்பதில்லை. இக்குறைகளை நீக்கவே அரசு முக்கிய 14 வணிக வங்கிகளை நாட்டுடைமை ஆக்கியுள்ளது.

இந்தியா சுதந்திர நாடான பிறகு வேளாண்மைக் கடன் வசதி கள் வளர்ந்துள்ளன. பல வகைப்பட்டக் கடன்கள் அரசால் அளிக்கப்படுகின்றன. அரசின் கடன்களைப் பெறுவதில் கால தாமதம் ஏற்படுவதால், விவசாயிகள் உரிய காலத்தில் தேவையான

நிதியைப் பெற இயலுவதில்லை. அரசாங்கத்தால் போதிய அளவு வேளாண்மைக் கடன்கள் அளிக்கப்படுவதில்லை. சிறு விவசாயிகள் அரசு அளிக்கும் கடன்களைப் பெறமுடிவதில்லை. பல விவசாயிகள் அரசு கடன் கொடுப்பதையே அறிந்திருப்பதில்லை. அவ்வாறு அறிந்திருந்தாலும் கடனைப் பெறுவதில் உள்ள இடர்ப்பாடுகளால் விவசாயிகள் அரசின் கடனைப் பெற விரும்புவதில்லை.

கிராமக் கடனால் விளையும் தீமைகளைக் குறைக்கப் பல சட்டங்கள் இயற்றப்பட்டும் எதிர்பார்த்த பலன்கள் ஏற்படவில்லை. லேவாதேவிக்காரர்களைக் கட்டுப்படுத்துவதற்காகக் கொண்டு வரப்பட்ட சட்டங்கள் வெற்றி பெறவில்லை. விவசாயிகளின் வாழ்க்கைத் தரம் உயரும்போதுதான் கிராமக் கடன் அளவானது குறைவடையும். இதற்காக வேளாண்மைக் கடன் சிக்கலோடு இணைந்துள்ள வேறு சில சிக்கல்களும் நீக்கப்பட வேண்டும். சட்டங்கள் அரசால் தீவிரமாகச் செயல்படுத்தப் பெறவேண்டும். வேளாண்மையில் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதின் மூலமே வேளாண்மைக் கடன் சிக்கலைத் தீர்க்க முடியும். இக்கடன் சிக்கலே வேறு சில பொருளாதாரச் சிக்கல்களையும் தோற்றுவிக்கின்றது.

## வேளாண்மைக் கடன் முறைகள்

ஒரு விவசாயி தன்னிடமுள்ள மூலதனத்தைக் கொண்டே வேளாண்மைச் சாகுபடியை மேற்கொள்ளலாம். கடன் பெற்று வேளாண்மை உற்பத்தியைச் செய்யவேண்டுமென்பது அவசியமில்லை. எனினும், இந்தியாவில் அமைந்துள்ள விவசாயிகளில் பெரும்பகுதியினர் குறைந்த வருவாயைக் கொண்டவர்களே யாவர். அவர்களால் கடன் பெறாமல் சாகுபடியை மேற்கொள்வது இயலாததாகின்றது. வளர்ச்சியடைந்த அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் விவசாயிகள் நிலவுடைமைகளை அதிக அளவில் கொண்டிருக்கின்றனர். அதிக உற்பத்தியையும், வருவாயையும் பெறும் அவர்கள் வேளாண்மை முதலீட்டிற்கான மூலதனத்தைப் பெருமளவிற்குப் பிறரிடம் இருந்து பெறுவதில்லை. இந்திய விவசாயிகள் இவ்வித வசதியைக் கொண்டிருப்பதில்லை. எனவே, தேவையான நிதியைக் கடனாகப் பெறுவது அவசியமாகின்றது.

இந்தியாவில் சாகுபடியாளர்களுக்கானக் குறுகிய காலக் கடனின் அளவு வெவ்வேறு நிலைகளில் கணக்கிடப்பட்டுள்ளது. இந்திய ரிசர்வ் வங்கி இதன் அளவை சுமார் ரூ 500 கோடி எனக் கணக்கிட்டுள்ளபொழுது, 1952-இல் அமைக்கப் பெற்ற 'உணவு உற்பத்திப் பெருக்க விசாரணைக் குழு' (Grow More Food Enquiry Committee) இதை ரூ. 800 கோடி எனக் கணக்கிட்டிருக்கின்றது.

1951-52-இல் அகில இந்தியக் கடன் ஆய்வுக் குழுவின் அறிக்கை (All India Rural Credit Survey Committee Report) விவசாயிகள் எவரிடம் எந்த அளவில் கடன் பெற்றுர்கள் என்பதைக் கணக்கிட்டது முக்கியமாக வேளாண்மைக் கடன் அளிக்கும் நிறுவனங்களைப் பின்வருமாறு அது தந்தது:

| எண் | கடன் அளிப்பவர் | மொத்த கடனில் சதவீதம் |
|---|---|---|
| (1) | லேவாதேவிக்காரர்கள் (Professional Money-lenders) | 44.8 |
| (2) | வேளாண்மைக் கடன் அளிக்கும் தனியார் (Agricultural Money-lenders) | 24.9 |
| (3) | உறவினர்கள் | 14.2 |
| (4) | வணிகர்கள், தரகு வணிகர்கள் (Traders and Commission Agents) | 5.5 |
| (5) | அரசு | 3.3 |
| (6) | கூட்டுறவுச் சங்கங்கள் | 3.1 |
| (7) | வணிக வங்கிகள் | 0.9 |
| (8) | நிலக்கிழார்கள் | 1.5 |
| (9) | மற்றவைகள் | 1.8 |
| | மொத்தம் | 100.0 |

## I. லேவாதேவிக்காரர்களும் வேளாண்மைக் கடனும்

தற்பொழுது லேவாதேவிக்காரர்களின் முக்கியத்துவம் சற்றுக் குறைந்திருந்தாலும், வேளாண்மைக் கடனில் பெரும்பகுதியைக் கொடுப்பவர்கள் அவர்களேயாவர். கடனை அளிப்பதில் மிக முக்கியத் தனிநிலையைக் கொண்டிருப்பவர்கள் லேவாதேவிக்காரர்களேயாவர். இவர்கள் கடனிற்காக அதிக வட்டித் தொகையைப் பெற்றாலும் விவசாயிகள் சாகுபடியை மேற்கொள்ளத் தேவையான நிதியை உடனடியாக அளிக்கின்றனர். பிற முறைகளில் கடனைப் பெறுவது அவர்களுக்குக் கடின நிலையைத் தருகின்றது. சிறு விவசாயிகளை நம்பி கடன் அளிப்பவர்கள் லேவாதேவிக்காரர்களைத் தவிர வேறு எவரும் இல்லை. பெரும்பாலான லேவாதேவிக்காரர்கள் வேளாண்மை, வாணிபம் ஆகியவற்றையும் மேற்

கொண்டிருக்கின்றனர். நேர்மையற்ற முறைகளில் அவர்கள் கடன் அளிக்கின்றனர்கள். ஆனால், தேவையான காலங்களில் உடனடிக் கடன்கள் தரப்படுகின்றன. அவர்களுடைய நடவடிக் கைகள் நெகிழ்வுள்ளவைகளாகவும் இருக்கின்றன. கடன் பெறு பவர்கள் அவர்களை நேரடியாக அணுகுகின்றனர். கடன் பெறு வதில் தேவையற்ற கடின நிலைகள் அமைந்திருப்பதில்லை. ஆனால், இவ்வகைக் கடன் ஏழை விவசாயிகளுக்கு எப்போதுமே கிடைப்ப தில்லை. கிராமங்களில் வேளாண்மைக்குக் கடன் அளிக்கும் தனியார் அதிக வட்டியை வசூலிக்கின்றனர். உயர்ந்த அளவில் சுமார் 36 சதவீத வட்டி அவர்களால் பெறப்படுகின்றது. இதனால் விவசாயிகளின் கடன் அளவு பெருகிக்கொண்டே இருக்கின்றது. என்றுமே கடனை முற்றிலும் தீர்க்க முடியாத நிலை சிறு விவசாயி களுக்கு ஏற்படக் காரணமாக அதிக வட்டியும் அமைகின்றது. லேவாதேவிக்காரர்கள் எதையும் சரிவர அறியாத விவசாயிகளை ஏமாற்றுகின்றனர். அவர்களின் நேர்மையற்ற நிலை இவ்வேளாண் மைக் கடன்முறையில் அமைந்துள்ள குறையாகும். பெற்ற கடன்கள் விவசாயிகளால் ஆக்கப்பணிகளுக்கு மட்டும் செலவிடப் படுவதில்லை. சிலவித மதச்சடங்குகளுக்கும் அவர்கள் வீணான செலவுகளைச் செய்கின்றனர்கள். இக்காரணத்தால் உற்பத்தி உயராமல் கடனின் அளவே உயர்ந்து செல்கின்றது.

நகரங்களில் அமைந்திருக்கும் லேவாதேவிக்காரர்கள் பணத்தை வட்டிக்குக் கொடுக்கும் தொழிலில் மட்டுமே ஈடுபடு கின்றனர். கிராம லேவாதேவிக்காரர்கள் கடன் அளிப்பதோடு வாணிபம், வேளாண்மை ஆகியவற்றிலும் ஈடுபட்டுள்ளனர். கிராமக்கடனில் லேவாதேவிக்காரர்களின் நிலை முக்கியமானதாக உள்ளமைக்குப் பல காரணங்களைக் கூறலாம். கடன் பெறுபவர் களின் கடன் பெறும் நோக்கத்தையோ காலத்தையோ ஆராயாமல் லேவாதேவிகாரர்கள் உடனடியாகக் கடன் அளிக்கின்றனர். கடனின் அசல் தொகையைத் திரும்பப்பெற அவர்கள் அதிகம் விரும்புவதில்லை. அவர்களின் முக்கிய நோக்கம் குறிப்பிட்ட காலத் திற்குள் கடனுக்கான வட்டியைச் சரிவரப் பெறுவதேயாகும். திருமணம் போன்றவற்றை நடத்த அவர்களிடமிருந்து அதிக வட்டிக்குக் கடன் பெறப்படுகின்றது. பிறவழிகளில் உடனடி யாகக் கடன் பெறுவது எளிதாக அமைந்திருக்கவில்லை. லேவா தேவிக்காரர்களுக்கும், விவசாயிகளுக்கும் இடையே நெருங்கிய த் தொடர்பு உள்ளது. அவர்கள் விவசாயிகளின் நிலையறிந்து கடன் அளிக்கின்றனர். கடனை எளிதில் வசூலிக்கும் முறைகளையும் அவர்கள் உணர்ந்துள்ளனர்.

லேவாதேவிக்காரர்கள் விவசாயிகளைப் பல வழிகளில் ஏமாற்று கின்றனர்கள். கடனை அளிக்கும்போதே வட்டியை எடுத்துக்கொள்

கின்றனர். கூட்டு வட்டியும் அவர்களால் பெறப்படுகின்றது. குறைந்த விலையில் விவசாயிகளிடமிருந்து வேளாண்மைப் பொருட்களைக் கடனுக்கு ஈடாகப் பெறுகின்றனர்கள். வாக்குறுதிப் பத்திரங்களிலும் நேர்மையற்ற முறைகள் சிலவற்றைப் பின்பற்றுகிறார்கள். லேவாதேவிக்காரர்களைக் கட்டுப்படுத்தி நெறிப்படுத்தப் பல சட்டங்கள் இயற்றப்பட்டன. எனினும், இவ்வகை வேளாண்மைக் கடனில் அமைந்துள்ள குறைபாடுகள் நீக்கப்படவில்லை. பல குறைகளைக் கொண்டிருந்தாலும் இம்முறை வேளாண்மைக் கடன் இன்றும் முக்கிய நிலையைக் கொண்டு அமைந்திருக்கின்றது. பிறவகை வேளாண்மைக் கடன்கள் போதுமான அளவிற்குத் தரப்படும்போதுதான் இம்முறையில் அமைந்துள்ள குறைபாடுகளை நீக்க முடியும்.

## II. நாட்டுப்புற வங்கியாளர்கள் (Indigenous Bankers)

இவர்கள் லேவாதேவிக்காரர்களினின்றும் வேறுபட்டவர்கள். உள்நாட்டு உண்டியல்களைக் கழிவு செய்து இவர்கள் கடன் அளிக்கின்றனர்கள் ; முறைப்படி கணக்குகளையும் வைத்திருக்கின்றனர்கள். இந்தியாவில் வெவ்வேறு இடங்களில் பலவகைப் பட்டவர்கள் இப்பணியில் ஈடுபட்டுள்ளார்கள். மார்வாரிகள், சிந்தி இனத்தவர், முல்தானியர்கள், செட்டியார் இனத்தவர் போன்றோர் இப்பணியில் ஈடுபட்டுள்ளனர். நாட்டுப்புற வங்கியாளர்களான இவர்கள் தங்களுடைய பணத்தையும், பொதுமக்களின் வைப்பு நிதியையும் மூலதனமாகக் கொண்டு தொழில் நடத்துகிறார்கள். வங்கிகளிடமிருந்தும் கடன் பெறுகின்றனர். அதையும் தங்கள் தொழிலில் முதலீடாக்குகின்றனர். இவர்கள் பெரிய விவசாயிகளுக்கும், லேவாதேவிக்காரர்களுக்கும் கடன் தருகின்றனர். வேளாண்மைக்குக் கடன் அளிப்பதோடு வாணிபத்திலும் இவர்களில் சிலர் ஈடுபடுகின்றனர்கள். நாட்டுப்புற வங்கியாளர்கள் நிதியை நேரடியாக விவசாயிகளுக்கு அளிப்பதில்லை. அவர்களின் பணி மறைமுக நிலையில் வேளாண்மைத் துறையால் பெறப்படுகின்றது. வேளாண்மை விளைபொருட்களின் விற்பனைக்கும் அவர்கள் முதலீடு செய்கின்றனர்கள். கிராமப்புறங்களினின்றும் நகரங்களில் அமைந்துள்ள சந்தைகளுக்கும், துறைமுகங்களுக்கும் விளை பொருட்களை எடுத்துச் செல்வதில் அவர்கள் ஈடுபடுகின்றனர்கள். கிராம லேவாதேவிக்காரர்களும் விவசாயிகளுக்குக் கடனளிக்க இவர்களிடமிருந்து மூலதனத்தைப் பெறுகின்றனர்கள்.

## III. நிதியும் சீட்டுத் தொகைகளும் (Nidhi and Chit Funds)

தமிழ்நாட்டில் இம்முறை பெரிதும் வளர்ந்திருக்கின்றது. கூட்டுறவு முறையைப் போன்று பலரும் இணைந்து கடன் வசதி

களைப் பெறுகின்றனர். 'நிதி' என்ற இந்த அமைப்பில் உள்ள உறுப்பினர்கள் குறிப்பிட்டக் காலத்திற்கு மாதம்தோறும் நிதியைச் செலுத்துகின்றனர். இந்நிதியினின்றும் கடன் தரப் படுகின்றது. கடன் பெறுபவர்கள் மாதந்தோறும் தவணைமுறை யில் கடனையும் வட்டியோடு செலுத்தவேண்டும். உறுப்பினர் களுக்குக் கடன்கள் தரப்படுகின்றன. இவை குறைந்த அளவு தொகையைக் கொண்ட கடன்களையும், தற்காலிகக் கடன் களையும் அளிக்கின்றன. இந்நிதியமைப்புக்கள் தமிழ்நாடு முழு வதும் விரைவாக வளர்ந்து வருகின்றன.

மிகப்பழங்காலம் முதற்கொண்டே அமைந்திருக்கும் சீட்டு முறையும் சிறிய அளவுக் கடன்களைப் பெற உதவுகின்றது. இம் முறையில் சிலர் நம்பிக்கையின் அடிப்படையில் கூட்டாக இணை கின்றனர். இதில் 'ஏலசீட்டு முறை', 'குலுக்குச் சீட்டுமுறை' என்ற இரு முறைகள் உள்ளன. கிராமப்புறங்களில் பெருமளவு இம் முறை நடத்தப் பெறுகின்றது. கிராம மக்களிடம் இது சிக்கனத் தையும், சேமிப்பையும் ஏற்படுத்துகிறது. விவசாயிகள் கடன் பெற ஓரளவு இம்முறையும் உதவுகிறது. கிராமச் சேமிப்புக்கள் திரட்டப்பெற்று சிறிய வேளாண்மைக் கடன்களாக பெறப் படுகின்றன. ஆனால், அதிக அளவில் வேளாண்மைக்குத் தேவைப் படுகின்ற கடனை இம்முறையின் மூலம் பெற இயலாது.

## IV. கூட்டுறவுக்கடன் சங்கங்கள் (Co-operative Credit Societies)

கூட்டுறவுக் கடன் சங்கங்கள் விவசாயிகளால் தொடங்கப் படு கின்றன. சங்க உறுப்பினர்களுக்குக் கடன்களை அளிக்க நிதி திரட் டப்படுகின்றது. 20-ஆம் நூற்றுண்டில் தொடக்கப்பெற்று இச் சங்கங்கள் வளர்ந்து வருகின்றன. சமூதாய நலத்திட்டத்தோடு, கூட்டுறவு இயக்கத்தையும் முன்னேற்றமடையச் செய்ய அரசு முயன்று வருகின்றது. சோவியத் ரஷ்யாவில் பொதுவுடைமை யோடு கூட்டுறவு இயக்கமும் செயல்படுகின்றது; இந்தியாவில் சமதர்மத்தோடு கூட்டுறவு இயக்கமும் வளர்க்கப்பட வேண்டும். இந்திய அரசு சமதர்ம சமுதாயத்தை அமைக்கும் கொள்கையைக் கொண்டுள்ளது. சமதர்மத்தை நாட்டில் நிலைநாட்டுவதற்குக் கூட்டுறவு இயக்கம் பெரிதும் துணை செய்யும். இந்தியாவில் மக்களின் உரிமைகள் பறிக்கப்படாமல் செல்வம், வருவாய் ஆகிய வற்றில் உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்க சமதர்மக் கொள்கையே சிறந்ததாகும். மக்களின் வாழ்க்கைத்தரம் உயர அதுவே வழி யாகும். கிராமங்களில் கூட்டுறவுக் கடன் சங்கங்களைத் தொடங்க அரசு பல வகையிலும் உதவிவருகின்றது.

கிராமக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் பெரும்பாலும் மத்தியக் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து நிதியைக் கடனாகப் பெற்று உறுப்பினர்களுக்குக் கடன் அளிக்கின்றன. 1964-ஆம் ஆண்டு ஜூன் 30-ஆம் நாள் 2,09,622 கூட்டுறவு அடிப்படை வேளாண்மைக் கடன் சங்கங்கள் 23.7 மில்லியன் உறுப்பினர்களைக் கொண்டு அமைந்திருந்தன. இச்சங்கங்கள் 1964-ஆம் ஆண்டு ஜூன் 30-ஆம் நாள் வரை ரூ. 297.14 கோடி என்ற அளவிற்கு குறுகிய காலக் கடனையும், மத்திய காலக் கடனையும் அளித்திருந்தன. 1960-ஆம் ஆண்டிற்கும் 1964-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் இக்கடன்களின் அளவு 75.7 சதவீதம் அதிகரித்தது. இதே காலத்தில் (30-6-1964 வரை) நீண்டகாலக் கடன் ரூ. 92.02 கோடி என்ற அளவில் கொடுக்கப்பட்டிருந்தது. 1960-64-இல் இக்கடனின் அளவில் 2.5 சதவீத உயர்வு மட்டுமே ஏற்பட்டது. இதன் மூலம் நீண்டகாலக் கடன் முறை சிறப்பாக வளர்க்கப்படவில்லை என்பதை உணரலாம்.

கிராமக்கடன் சங்கங்களின் நிதி வசதிகள் போதுமானவைளாக இருப்பதில்லை. விவசாயிகளின் கடன் தேவையைத் தீர்க்க அவை போதுமான அளவில் அமைந்திருக்கவில்லை. உற்பத்திப் பணிகளை மேற்கொள்ள மட்டுமே இச்சங்கங்கள் கடனளிக்கின்றன. விவசாயிகளின் பிற செலவினங்களுக்கு நிதியளிக்கப் போதுமான வசதிகள் அவைகளிடம் இருப்பதில்லை. மேலும், அறுவடை முடிந்தவுடன் கடனைத் திருப்பித்தருவது தவிர்க்க முடியாத நிலையைக் கொண்டுள்ளது. இக்காரணங்களால் விவசாயிகள் இவ்வகைக் கடனைப் பெறுவதில் அதிக அக்கறை கொண்டிருப்பதில்லை.

கிராமக்கடன் சிக்கலைத் தீர்க்கக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் அதிக அளவிற்கு உதவவில்லை. ஆனால், கிராமக்கடனைத் தேவையான அளவிற்குப் பெற கூட்டுறவுக் கடன் சங்கங்களை வளர்ப்பது இன்றியமையாததாகும். மெதுவான வேகத்தில் இன்று கூட்டுறவு இயக்கம் வளர்ந்து வருகின்றது. கூட்டுறவுச்சங்கங்கள் அதிகரித்துள்ளன. கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களின் தொகையும் பெருகி இருக்கின்றது. அவையளிக்கின்ற கடன் அளவும் கூடி வருகின்றது.

## V. மாநில அரசுகள்

மாநில அரசுகள் விவசாயிகளுக்கு இருவிதக் கடன்களை நேரடியாக அளிக்கின்றன. குறுகிய காலக் கடன் விதைகள், உரங்கள், கால்நடைகள் போன்றவற்றை விவசாயிகள் வாங்குவதற்காக அளிக்கப்படுகின்றது. நிலத்தில் நிரந்தர முன்னேற்றங்களைச் செய்ய நீண்ட காலக் கடன் தரப்படுகின்றது. இவ்விதக்

கடன்கள் 'தக்கவிக் கடன்கள்' என அழைக்கப்படுகின்றன. ஆனால், விவசாயிகளின் நிதித்தேவையோடு ஒப்பிடும்போது, மாநில அரசுகள் அளிக்கும் இக்கடன்கள் மிகக் குறைவாகவே உள்ளன. விவசாயிகளின் நிதித்தேவை மிக அதிக அளவில் அமைந்திருக்கின்றது. இவ்விதக் கடன்கள் விவசாயிகளுக்குத் தேவையான காலங்களில் தொடர்ச்சியாக அளிக்கப்படுவதில்லை. பொதுவாக, இக்கடன்கள் விவசாயிகளின் நிலை மிகத் தாழ்வாக இருக்கும்போதும், உற்பத்திக் குறைவான காலங்களிலும் மட்டுமே அளிக்கப்படுகின்றன. இவை அவசர காலக் கடன்களாக அமைந் திருக்கின்றன. விவசாயிகள் இவ்விதக் கடன்களையே நம்பியிருக்க முடியாது. மேலும், இக்கடன்களைப் பெறுவதற்கு நீண்ட காலம் பிடிக்கின்றது. காலதாமதமாக அளிக்கப்படுகின்ற கடன்கள் விவசாயிகளுக்குப் பயனளிப்பதில்லை.

மாநில அரசுகள் அளிக்கின்ற கடன்களைப் பெறுவதில் வேறு சில கடின நிலைகளும் அமைந்துள்ளன. விவசாயிகள் இவ்விதக் கடன்களில் அதிக அக்கறை கொண்டு இருப்பதில்லை. மாநில அரசுகள் வேறு சில வழிகளிலும் வேளாண்மைப் பணிகளை மேற் கொள்ள மறைமுகமாக உதவுகின்றன. அடிப்படை வேளாண்மைக் கடன் சங்கங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மத்திய நில அடமான வங்கிகள் ஆகியவற்றின் மூலதனத்தில் ஒரு பங்கை மாநில அரசு அளிக்கிறது. இந்திய ரிசர்வ் வங்கி கூட்டுறவுக் கடன் நிறுவனங்களுக்கு மூலதனத்தை அதிக அளவு அளிக்க மாநில அரசுகள் முயற்சிகளை எடுக்கின்றன.

வேளாண்மை வளர்ச்சிக்காக அரசு கடன் கொடுப்பது ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலேயே அமைந்திருந்தது. 'தக்கவிக் கடன்களில்' உள்ள முக்கிய நன்மை அவை நீண்ட காலக் கடன் களாக இருக்கின்ற நிலையாகும். சுதந்திரம் அடைந்தபின் இக் கடன்கள் வேளாண்மை முன்னேற்றப் பணிகளுக்காக அளிக்கப் படுகின்றன. உணவு உற்பத்தியைப் பெருக்கவும், கிணறுகள் தோண்டுதல் போன்ற சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கும் இக் கடன்கள் தரப்படுகின்றன. பஞ்சநிலை நிலவுகின்ற காலங்களில் இவை கொடுக்கப் பெறுகின்றன. தவிர, வேறு சில வேளாண்மை ஆக்கப்பணிகளுக்காகவும் அரசு நேரடிக் கடன்களை அளித்து வருகின்றது.

## VI. வணிக வங்கிகள் (Commercial Banks)

இந்தியாவின் முக்கிய 14 வணிக வங்கிகள் நாட்டுடைமை ஆக்கப்பட்டமைக்குக் காரணமாக அமைந்தது இவ்வங்கிகளை

வேளாண்மை வளர்ச்சிக்கு நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டு மென்ற எண்ணமும் ஆகும். குறுகிய காலக் கடன்களை வேளாண் மைக்கு அளிக்க இவை பெரும் பணிபுரிய முடியும். நம் நாட்டில் வணிக வங்கிகள் தொழில் துறைக்கு உதவுவதுபோல வேளாண் மைக்கு உதவுவதில்லை. மேலும், கிராம மக்களுக்கும் வணிக வங்கி களுக்கும் நெருங்கியத் தொடர்பு அமைந்திருப்பதில்லை. பெரும் பாலான வணிக வங்கிகள் பெரிய, சிறிய நகரங்களில் மட்டுமே அமைந்துள்ளன. ஆனால், இவை வாணிபத்திற்கு அளிக்கக்கூடிய கடன்கள் மறைமுகமாக வேளாண்மை வளர்ச்சிக்கும் உதவு கின்றன. நிலத்தின் மதிப்பையும், உற்பத்தியின் அளவையும் சரியாகக் கணக்கிட இயலாது. இதன் காரணமாகவும் வணிக வங்கிகள் வேளாண்மைக் கடன்களை அளிக்க முன்வருவதில்லை.

ஆரம்ப காலத்தில் வணிக வங்கிகள் வேளாண்மைக் கடனில் அதிக அக்கறை கொண்டிருக்கவில்லை. ஆனால், சுதந்திரமடைந்த பிறகு அரசு வணிக வங்கிகள் வேளாண்மைக் கடன்களை அளிக்க வேண்டுமென வலியுறுத்தியது. இதன் விளைவாக சில பெரிய வணிக வங்கிகள் பெரிய கிராமங்களில் கிளைகளைத் தொடங்கின. விவசாயிகள் வேளாண்மைக் கருவிகள், டிராக்டர் போன்றவற்றை வாங்கவும் வணிக வங்கிகள் தற்பொழுது கடன் அளிக்கின்றன. நீர்ப்பாசன வசதிகளைச் செய்துகொள்ளவும் இவை உதவுகின்றன. வேளாண்மைக்கடனை அளிக்கப் பல வணிக வங்கிகளும் இணைந்து 'வேளாண்மை நிதிக்கழகத்தை' (Agricultural Finance Corporation) ஏற்படுத்தியுள்ளன. விவசாயிகளுக்கு இவை அளிக்கின்ற கடன் அளவு மிகக் குறைவானதேயாகும். அரசின் உடைமையில் அமைந்துள்ள வணிக வங்கிகள் இனி வேளாண்மை வளர்ச்சியில் அதிகக் கவனத்தைச் செலுத்த வேண்டும். இதன் மூலமே வேளாண்மைக் கடன் சிக்கலைத் தீர்க்க முடியும்.

## VII. நில அடமான வங்கிகள் (Land Mortgage Banks)

நில அடமான வங்கிகள் நீண்டகாலக் கடனை விவசாயிகளுக்கு அளிக்கின்றன. இவ்வங்கிகள் பல நிலைகளில் முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளன. 'முதல்நிலைக் கடன் சங்கங்கள் (Primary Credit Societies) விவசாயிகளுக்குத் தேவையான நீண்ட காலக் கடனை அளிக்க முடிவதில்லை. ஏனெனில், அவை மத்தியக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து மத்திய, குறுகிய காலக் கடன்களைப் பெற்று அவற்றை விவசாயிகளுக்கு அளிக்கின்றன. நீண்டகாலக் கடன்களை அளிக்க நிலத்தின் மதிப்பை அளவிட திறமையாளர்களின் பணி தேவைப்படுகின்றது. இவ்வித வசதி முதல்நிலைக் கடன் சங்கங் களில் அமைந்திருப்பதில்லை. மிகப் பழங்காலத்தில் ஜமீன்தார்கள், லேவாதேவிக்காரர்கள், மகாஜன்கள் போன்றோர் விவசாயிகளுக்கு

நீண்டகாலக் கடன்களை அளித்து வந்தார்கள். இவ்வித அமைப்புக்கள் வழக்கிழந்துவிட்டதால் நில அடமான வங்கிகளின் பணிகள் தேவைப்படுகின்றன. மேலும், நீண்டகாலத்தில் அதிக அளவு மூலதனத்தை முதலீடு செய்வதின் மூலமே உணவுப் பொருட்கள், வாணிபப் பொருட்கள் ஆகியவற்றின் உற்பத்தியை உயர்த்த இயலும். நில அடமான வங்கிகள் சிறப்பாக அமைக்கப் பெற்று நல்ல பணிகளைப் புரிந்தால் மக்களுடைய சேமிப்பைத் திரட்டி நிலத்தின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தலாம்.

விவசாயிகளின் கடன் பளுவைக் குறைக்கவும், நிலத்தின் முன்னேற்றத்திற்கான நிரந்தரப் பணிகளை மேற்கொள்ளவும் நீண்டகாலக் கடன்கள் தேவைப்படுகின்றன. 19-ஆம் நூற்றுண்டிலேயே நில அடமான வங்கிகள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்ற கருத்து நிலவி வந்தது. இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, தென் ஆப்ரிக்கா போன்ற நாடுகளில் நீண்டகாலக் கடன்களை விவசாயிகளுக்கு அளிக்கும் வங்கிகள் உள்ளன. அவை நில வளத்தைக் காக்கவும், நீர்ப்பாசனங்களைப் பெருக்கவும், போக்குவரத்து வசதிகளை அமைக்கவும் நீண்டகாலக் கடன்களை அளிக்கின்றன. இவற்றைப் போன்ற வங்கிகளை இந்தியாவில் அமைக்கும் நோக்கம் சென்ற நூற்றுண்டின் இறுதியிலேயே அமைந்திருந்தது. நில அடமான வங்கிகள் வணிக வங்கிகளைப் போன்றும், கூட்டுறவு நிறுவனங்களாகவும் அமைக்கப்படலாம். இந்தியாவில் இவ் வங்கிகள் கூட்டுறவு அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளன.

இந்தியாவின் நில அடமான வங்கி பஞ்சாபில் ஜாங் (Jhang) என்னுமிடத்தில் 1920-இல் அமைக்கப்பட்டது. ஆனல், அது சிறப்பாகச் செயல்படவில்லை. அதற்கு முன்பே 1833-இல் ஒரு நில அடமான வங்கி முதன் முறையாக தொடங்கப் பெற்றாலும், அது தொடர்ந்து செயலாற்றவில்லை. அளவிற்கு அதிகமானக் கடன்களை அது பாதுகாப்பு இல்லாமல் கொடுத்ததால் வெற்றியைப் பெறவில்லை. சென்னையில் 1925-இல் நிறுவப்பெற்ற நில அடமான வங்கிகள் பெரிதும் வெற்றியைத் தருவதாக அமைந்தன. 1929-இல் சென்னையில் மத்திய நில அடமான வங்கி ஏற்படுத்தப் பட்டது. இதைத் தொடர்ந்து இதே முறையில் வேறு பல மாநிலங்களும் நில அடமான வங்கிகளை ஏற்படுத்தின.

1929-இல் கூட்டுறவு முறையில் சென்னையில் அமைக்கப் பெற்ற 'மத்திய நில அடமான வங்கி' (Central Land Mortgage Bank) கடன் பத்திரங்களின் மூலம் மூலதனத்தைத் திரட்டியது. மாநில அரசு நில அடமான வங்கிக்கு உதவியது. ஒவ்வொரு

வட்டாரத்திலும் 'முதல்நிலை நில அடமான வங்கிகள்' நிறுவப் பெற்றன. மத்திய வங்கி கடனளிக்க இந்நிறுவனங்களை நிறுவியது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து மூலதனத்தைப் பெற்று முதல்நிலை அடமான வங்கிகள் உறுப்பினர்களுக்குக் கடன் அளிக் கின்றன. பழைய கடன்களைத் தீர்க்கவும், நிலச் சீர்திருத்தங்களை மேற்கொள்ளவும், நிலம் வாங்கவும் கடன் அளிக்கப்படுகின்றது. ரூ. 5000 வரை 20 ஆண்டுகளில் திருப்பித் தரத்தக்க கடன் இது வாகும். குறைவான வட்டிவீதத்திலும் இக்கடன் தரப்படு கின்றது.

சென்னையில் நில அடமான வங்கியின் சிறப்பான வளர்ச்சி பிற மாநிலங்களையும் இவ்வகை வங்கியை ஏற்படுத்தத் தூண்டு கோலாக அமைந்தது. பம்பாய், மைசூர், ஒரிசா, மத்தியப் பிரதேசம் போன்ற மாநிலங்களிலும் இவ்வங்கிகள் ஏற்படுத்தப் பெற்று வெற்றியடைந்தன. 1949-50-இல் இந்தியாவில் 283 முதல்நிலை நில அடமான வங்கிகள் அமைந்திருந்தன. இவற்றுள் தமிழ்நாட்டில் மட்டும் 126 வங்கிகள் செயல்பட்டுக் கொண் டிருந்தன. மைசூர், மத்தியப் பிரதேசம் ஆகிய இரு மாநிலங் களிலும் இவ்வங்கிகள் சிறப்பான வளர்ச்சியைப் பெற்றன.

நில அடமான வங்கிகள் 'நிலவள வங்கிகள்' (Land Development Banks) எனவும் அழைக்கப்படுகின்றன. நீண்ட காலக் கிராமக் கடனை அளிக்க நாட்டின் பல மாநிலங்களிலும் இவ்வங்கி கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனால், இவற்றின் வளர்ச்சி மிகக் குறைந்த வேகத்திலேயே அமைந்திருக்கிறது. எனவே வேளாண்மைக் கடனை அளிப்பதில் மிகச்சிறப்பான இடத்தை இவை கொண்டிருக்கவில்லை. 1967-ஆம் ஆண்டு ஜூன் இறுதிவரை 19 மத்திய நில அடமான வங்கிகள் இருந்தன. இவற்றின் புழங்கு மூலதனம் ரூ. 264 கோடியாக அமைந்திருந்தது. 1967-இல் இவை ரூ. 58.9 கோடி கடன்கள் அளித்திருந்தன. 1966-ஆம் ஆண்டு ஜூன் இறுதி வரை 707 முதல்நிலை நில அடமான வங்கிகள் இருந்தன. அவற்றின் உறுப்பினர்களின் தொகை 10.48 இலட்சமாக இருந்தது. அவற்றின் புழங்கு மூலதனம் சுமார் ரூ. 137 கோடி யாக அமைந்திருந்தது. 1966-67-இல் அவை ரூ. 16 கோடி என்ற அளவிற்குக் கடன் அளித்தன. அது 1968-69-இல் ரூ. 100 கோடி யாக உயர்ந்தது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் அவ்வங்கிகளின் மூலம் ரூ. 700 கோடி என்ற அளவிற்குக் கடன் அளிக்கப்படுமென எதிர்பார்க்கப்படுகின்றது. இத்திட்டக் காலத் தில் அவ்வங்கிகளின் பணிகள் விரைவாக்கப்படும். நிலப்பாதுகாப் பிற்கும், குழாய்க் கிணறுகள் போன்ற சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை மேற்கொள்ளவும் கடன்கள் அளிக்கப்பெறும்.

வேளாண்மைக் கடனில் நில அடமான வங்கிகள் மிக முக்கிய நிலையைக் கொண்டே அமைய வேண்டும். கிராமக்கடன்கள் நீண்ட காலத்திற்கும், குறுகிய காலத்திற்கும் தேவைப்படுகின்றன. நீண்ட காலக் கடன்களை அளிக்கின்ற நிறுவனங்கள் அதிக அளவில் இல்லாமையால், நில அடமான வங்கிகள் முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றன. குறுகிய காலக் கடன்களைக் கொண்டு மட்டும் வேளாண்மையை வளரச் செய்யமுடியாது. நீண்ட காலக் கடன்கள் நிலத்தைப் பண்படுத்தவும், நிலத்தில் நிரந்தர முன்னேற்றங்களைச் செய்யவும், புதிய நிலம் வாங்கவும் தேவைப் படுகின்றன. பழைய கடன்களைத் திருப்பித்தரவும் இவை உதவு கின்றன. மாநில அரசுகள் விவசாயிகளுக்கு நேரடியாக அளிக்கும் 'தக்கவிக் கடன்களை' பழைய கடன்களைத் திருப்பித்தர பயன்படுத்த முடியாது. விவசாயிகள் சிறப்பான வகையில் எல்லா உற்பத்திப் பணிகளிலும் ஈடுபட போதுமான கடன் நீண்ட காலத்திற்கு அளிக் கப்பட வேண்டும். விவசாயிகளுக்குப் பல வழிகளிலும் நன்மை யளிக்கக்கூடிய நில வள வங்கிகளின் சேவை நாட்டிற்குத் தேவை யாகின்றது.

நில அடமான வங்கி முறையின் உண்மையான வளர்ச்சி 1929-இல் சென்னையில் நிறுவப்பெற்ற 'மத்திய நில அடமான வங்கியின்' வெற்றிகரமான முன்னேற்றத்திற்குப் பிறகே ஏற்பட்ட தெனலாம். இதைத் தொடர்ந்து 1935-இல் பம்பாயில் 'மாநில நில அடமான வங்கி' ஏற்படுத்தப் பெற்றது. 1951-52-இன் இறுதிக்குள் 6 மத்திய நில அடமான வங்கிகள் அமைக்கப்பட்டு விட்டன. அவற்றின் புழங்கு மூலதனம் ரூ. 10.2 கோடி என்ற அளவில் அமைந்திருந்தது. 1951-52-இல் இவை ரூ. 2.5 கோடி கடன் அளித்தன. சமீப ஆண்டுகளில் இவ்வங்கிகளின் எண்ணிக் கையும், அவற்றின் பணிகளும் பெருகியுள்ளன. 1965-66-இல் 707 முதல்நிலை நில அடமான வங்கிகள் 10.48 இலட்சம் உறுப்பி னர்களைக் கொண்டு இருந்தன. அவற்றின் புழங்கு மூலதனம் ரூ.137 கோடி என்ற நிலையில் இருந்தது.

இவ்வங்கிகளின் வளர்ச்சி மாநிலங்களுக்கிடையே பெரிதும் வேறுபடுகிறது. உதாரணமாக, 707 முதல்நிலை நில அடமான வங்கிகளில் சுமார் நான்கில் மூன்று பகுதி வங்கிகள் தமிழ்நாடு, மைசூர், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் அமைந் துள்ளன. பிற மாநிலங்களில் இவ்வங்கிகள் குறைந்த அளவிற்கு மட்டுமே வளர்ந்துள்ளன. இக் கூட்டுறவு நில அடமான வங்கிகள் கடன்களைத் தீர்க்கவும், நிலங்களில் நிரந்தர முன்னேற்றங்களை ஏற் படுத்தவும், நிலங்களை வாங்கவும், விலையுயர்ந்த சாகுபடிக் கருவிகளை வாங்கவும் கடன் தருகின்றன. இவ்வங்கிகள் நிதியைப் பெறுவதில்

பல வழிகளைப் பின்பற்றுகின்றன. அவற்றில் சிறந்த கடன்பத்திரங்களை வெளியிடும் முறை மத்திய நில அடமான வங்கிகளால் தமிழ் நாடு, ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் பின்பற்றப் படுகின்றன. மாநில அரசுகள் இக்கடன்பத்திரங்களுக்கு உறுதியளிக்கின்றன. கடன்பத்திரங்களில் 40 சதவீதம் வரை இந்திய ரிசர்வ் வங்கி வாங்கி நிதியைத் திரட்ட உதவுகின்றது. நீண்டகால வைப்பு நிதிகளும் பொதுமக்களிடமிருந்து பெறப்படுகின்றன. இந்நிதியானது கிராம நில அடமான சங்கங்களுக்கு அளிக்கப்பட்டு, உறுப்பினர்கள் கடன்களைப் பெறுகின்றனர்.

நில அடமான வங்கிகளுக்கு நிதியளிப்பதில் ரிசர்வ் வங்கி முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றது. முதலாவதாக, மத்திய நில அடமான வங்கிகள் வெளியிடும் கடன்பத்திரங்களை ரிசர்வ் வங்கி வாங்குகின்றது. சமீப காலத்தில் மத்திய நில அடமான வங்கிகள் புதிய வகை 'கிராமக்கடன் பத்திரங்களை' (Rural Debentures) நிதி திரட்ட வெளியிடுகின்றன. இவ்வகைக் கடன் பத்திரங்களில் மூன்றில் இரண்டு பங்கு பத்திரங்களை ரிசர்வ் வங்கி வாங்கத் தயாராக இருக்கிறது. இரண்டாவதாக, 1956 முதல் ரிசர்வ் வங்கி மத்திய நில அடமான வங்கிகளுக்கு 20 ஆண்டுக்காலம் வரை திருப்பித்தரத்தக்கக் கடன்களை அளிக்கின்றது. சமீப காலமாக இந்திய ஸ்டேட் வங்கியும் கடன்பத்திரங்களை வாங்கி மத்திய நில அடமான வங்கிகளுக்கு நிதி திரட்டும் முயற்சியில் உதவுகின்றது.

நில அடமான வங்கி முறை தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம் போன்ற ஒரு சில மாநிலங்களில் மட்டுமே வளர்ந்துள்ளது. பிற மாநிலங்களில் இதனுடைய வளர்ச்சி குறிப்பித்தக்க நிலையைக் கொண்டிருக்கவில்லை. 1965-66-இல் மத்திய நில அடமான வங்கிகள் ரூ. 58.9 கோடி என்ற அளவிற்குக் கடன் அளித்தன. இந்தியாவில் நீண்டகால வேளாண்மைக் கடன்தேவையின் அளவில் இது மிகக் குறைந்தவீதத்தைக் கொண்டதேயாகும். விவசாயிகளுக்கான நீண்டகாலக் கடன்கள் மிக அதிக அளவிற்குத் தேவைப்படுகின்றன. நில அடமான வங்கிகள் பெரும்பாலான கடன்களை விவசாயிகளின் பழைய கடன்களைத் தீர்க்கவே அளிக்கின்றன. உதாரணமாக, 1957-58-இல் இவ்வங்கிகளால் அளிக்கப்பட்ட கடன்களில் 34.2 சதவீதம் விவசாயிகளின் பழைய கடன்களைத் தீர்க்கவே அளிக்கப்பட்டன. இதன் காரணமாக நில அடமான வங்கிகளின் முக்கிய நோக்கமாகிய நிலத்தை முன்னேற்றமடையச் செய்யும் நிலை நிறைவேறுவதில்லை. விவசாயிகளின் கடனைத் தீர்ப்பதின் மூலம் உற்பத்தியை உயர்த்த முடியாது. நிலத்தின் முன்னேற்றத்திற்காகக் கடன் பயன்படுத்தப் பட்டால்தான் விவசாயிகள் அதிக ஆக்கத்தை அடைய முடியும்.

கடனைத் தீர்ப்பதற்காக நிதி உதவியை அளிப்பது தற்காலிக உதவியாக மட்டுமே அமைகின்றது. விவசாயிகளின் வாழ்க்கை நிலையில் நிரந்தர முன்னேற்றம் ஏற்பட நிலத்தைச் சிறப்பாகப் பயன்படுத்துவதே நல்ல வழியாகும். மேலும், பழைய கடன்களைத் தீர்த்துவிட்டால் விவசாயிகள் புதிய கடன்களைப் பெற மாட்டார்கள் என்பதை உறுதியாகக்கூற முடியாது.

நில அடமான வங்கிகள் அதிக அளவு நீண்ட காலக் கடன்களை நீர்ப்பாசன வசதிகளைக் கொண்ட நிலங்களின் பாதுகாப்பிலேயே விவசாயிகளுக்கு அளிக்கின்றன. ஆனால், நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டில்லாத நிலங்களை வைத்திருக்கும் விவசாயிகளுக்கும் இக்கடன்கள் அளிக்கப்பட வேண்டும். கிணறுகள் தோண்டவும், வேறுபல நிரந்தர முன்னேற்றங்களை நிலத்தில் செய்யவும், சாகுபடியில் நிலையான தன்மையை ஏற்படுத்தவும் நீண்டகாலக் கடன்கள் எல்லா விவசாயிகளுக்கும் தேவைப்படுகின்றன. எனவே, நில அடமான வங்கிகள் நாட்டின் எல்லா மாநிலங்களிலும் வளர்க்கப்பட்டு எல்லா விவசாயிகளும் நீண்ட காலக் கடன் வசதியைப் பெறுமாறு செய்தல் வேண்டும்.

இவ்வங்கிகளால் கடன்பத்திரங்களை வெளியிடுவதின் மூலம் போதுமான நிதியைத் திரட்ட முடியவில்லை. நில அடமான வங்கி முறை மாநிலங்களுக்கிடையே வேறுபடுவது போலவே, இவ் வங்கிகள் அளிக்கின்ற கடன் அளவும், வட்டி வீதங்களும் வேறுபடுகின்றன. நிலச்சீர்திருத்தங்களில் வேறுபாடுகள் மாநிலங்களுக்கிடையே அமைந்துள்ளன. ஒரே மாதிரியான கொள்கை எல்லா மாநிலங்களிலும் பின்பற்றப்படாமையே நிலச்சீர்திருத்தங்கள் வெற்றிபெறுமைக்குக் காரணமாகும். அதுபோன்றே நில அடமான வங்கி முறையில் மாநிலங்களுக்கிடையே அமைந்திருக்கும் வேறுபாடுகள் களையப்படுதல் நன்மை பயக்கும். இவ் வங்கிகள் அளிக்கும் கடன்கள் திருந்திய சாகுபடி முறைகளை மேற்கொள்ளுமளவிற்குப் போதுமான அளவில் அளிக்கப்படுவதில்லை. நில அடமான வங்கிகளில் பணியாற்றுபவர்களுக்கும், விவசாயிகளுக்கும் நெருங்கிய தொடர்பு அமையவில்லை. விவசாயிகளின் நிலையை நன்குணர்ந்தவர்களாக அவர்கள் இருப்பதில்லை. நிலத்தின் மதிப்பை அவர்கள் சரியாக அளவிடுவதில்லை. விவசாயிகளின் கடன் தேவையின் இன்றியமையாத தன்மையை அறிந்தும் கடன்கள் அளிக்கப்படுவதில்லை.

**நில அடமான வங்கிகளின் குறைப்பாடுகள்**

சிலவிதக் குறைபாடுகளால் நில அடமான வங்கி முறையின் வளர்ச்சி தடைப்படுகின்றது. அக்குறைபாடுகளைப் பின்வருமாறு விளக்கலாம் :

(1) நிதியைப் பெருக்குவதில் உள்ள தடைகள் : நீண்டகாலக் கடன்பத்திரங்களை வாங்குவதற்குப் பொதுமக்கள் பெரிதும் விரும்புவதில்லை. 15 ஆண்டுகளுக்கு மேலான நீண்டகால நிதியைத் திரட்டுவது நில அடமான வங்கிகளுக்குக் கடின நிலையைத் தருகின்றது. இவ்வங்கிகள் சந்தையில் மத்திய மாநில அரசுகளின் கடன்களோடும், மத்திய மாநில தொழில் நிதி நிறுவனங்களின் கடன் பத்திரங்களோடும் போட்டியிட வேண்டிய நிலை அமைந்திருக்கிறது. நில அடமான வங்கி முறையின் வளர்ச்சி திறமையாகச் செயல்படுவதிலேயே அமைந்துள்ளது. இவ்வங்கிமுறை வெற்றியடைய போதுமான அளவிற்கு நிதி வசதிகள் திரட்டப்படுவது இன்றியமையாததாகும்.

(2) நிலச்சீர்திருத்தங்கள் : இந்தியாவின் பல மாநிலங்களிலும் நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் வெவ்வேறு வகைகளில் அமைந்துள்ளன. நில அடமான வங்கி முறையும் இதனால் பாதிக்கப்பட்டு வளர்ச்சி தடைப்படுகின்றது. சில நிலச்சீர்திருத்தங்களின் விளைவால் விவசாயிகள் தங்கள் நிலங்களை அடமானமாக்கிக் கடன்பெறும் உரிமையை இழக்கின்றார்கள். நீண்டகாலக் கடன்கள் இவ்வங்கிகளால் நில அடமான முறையின் அடிப்படையிலேயே தரப்படுகின்றன. நிலச்சீர்திருத்தங்களினால் ஏற்பட்டுள்ள சில கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டால்தான் விவசாயிகள் எளிதில் கடன் பெற வாய்ப்பு ஏற்படும். மாநில அரசுகள் இச்சிக்கல்களைக் களைவதற்கான தீர்வுகளைக் கண்டு செயல்படுத்த வேண்டும். நில அடமான வங்கி முறையின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ள நிலைகள் மாற்றப்பட வேண்டும். கூட்டுறவுக் கடன் வளர்ச்சிக்காக அமைக்கப்பட்ட குழு இதுபற்றிச் சில பரிந்துரைகளைத் தந்துள்ளது.

### வளர்ச்சிக்கான வழிமுறைகள்

நம் நாட்டின் வேளாண்மை வளர்ச்சிக்கு நில அடமான வங்கிகளின் பணிகள் மிகவும் இன்றியமையாதன. ஆனால், இந்தியாவில் இவ்வங்கி முறை வளர்ந்திருக்கவில்லை. இவ்வங்கிகளின் பணிகளையும், பயன்களையும் பெற பல வழிமுறைகளை நாம் பின்பற்ற வேண்டும். பின்வரும் முறைகளின் மூலம் நிலவள வங்கிகளின் வளர்ச்சியை நம் நாட்டில் பெற முடியும் :

#### (1) பஞ்ச காலங்களில் அரசின் கடன்கள்

பரானி பகுதிகளின் வேளாண்மை உற்பத்தியில் உறுதியற்ற நிலையிருப்பதால் நில அடமான வங்கி முறை வளரவில்லை. உற்பத்தி அளவில் உறுதியின்மை உள்ளதால் கடன் தவணைகளைத் திருப்பிச்

செலுத்துவதிலும் உறுதியின்மை அமைந்திருக்கும். ஒழுங்காகத் தவணைகள் செலுத்தப் பெறுவிட்டால் வங்கிகள் சிறப்பாகச் செயல் பட முடியாது. இக்குறைபாட்டை நீக்கப் பஞ்ச காலங்களில் அரசு நில அடமான வங்கிகளுக்குக் கடன் அளிக்க வேண்டும். இதன் மூலம் வங்கிகள் தொடர்ந்து வெற்றியோடு செயல்பட வழி பிறக்கும். பொதுவாக, நில அடமான வங்கிகள் நிதி வசதியைக் குறைவாகக் கொண்டுள்ளன. கொடுக்கின்ற கடன்களை குறிப்பிட்டகாலத்தில் திரும்பப் பெறமுடியாத நிலை ஏற்பட்டால் இவ்வங்கிகள் செயல் படுவது கடினமாகிறது. அப்போது அரசின் கடன் உதவி நில அடமான வங்கிகளுக்கு அவசியமாகிறது.

**(2) நில உரிமைகளைப் பதிவு செய்தல்**

ஜமீன்தாரி முறை அமைந்திருந்த பகுதிகளில் நில அடமான வங்கிகள் வளர்ந்திருக்கவில்லை. ஏனெனில், இப்பகுதிகளில் நில உடைமையாளர்கள் உரிமைகளைப் பெற்றிருக்கவில்லை. அரசு உரிமைப் பதிவுகளைச் செய்வது நன்மை பயப்பதாகும். இவ்வாறு நிலவுடைமைகள் உரிமைகளோடு இருந்தால்தான் இப்பகுதிகளில் நில அடமான வங்கிகள் தோன்ற வாய்ப்பு ஏற்படும். இவ்வங்கிகள் நில அடமானங்களுக்கே கடன் அளிக்கின்றன. நில உரிமைகளைப் பெற்ற பிறகுதான் அடமானமாக வைத்துக் கடன் பெறமுடியும். எனவே, அரசு நிலவுடைமைகளையும், உரிமைகளையும் பதிவு செய்ய உடனடியாக ஆவன செய்யவேண்டும்.

**(3) நில முன்னேற்றத்திற்கான கடன்கள்**

நில அடமான வங்கிகள் அளிக்கும் கடனில் பெரும்பகுதி விவசாயிகளின் பழைய கடனைத் தீர்க்கவே பயன்படுத்தப்படு கின்றது. தரப்படுகின்ற கடன் நில முன்னேற்றப் பணிகளுக்கும் அதிக அளவில் பயன்படுத்தத் தூண்டப்பட வேண்டும். நில முன்னேற்றப் பணிகளுக்குப் பயன்படுத்தப்பெறுகின்ற கடன் களுக்குக் குறைந்த வட்டியை வசூலிக்கலாம். வறண்ட பகுதி களிலும் நில முன்னேற்றத்திற்காகக் குறைந்த வட்டி வீதத்தில் கடன்கள் அளிக்கப்பட வேண்டும்.

**(4) கடன்களை விரைவாக அளித்தல்**

நில அடமான வங்கிகளிடமிருந்து கடனைப்பெற நீண்ட காலம் பிடிக்கின்றது. உடனடியாகக் கடன் விண்ணப்பங்கள் ஆராயப்பட்டு விரைவாகக் கடன்கள் வழங்கப்பட வேண்டும். வேளாண்மைக் கடன்கள் குறிப்பிட்டக் காலங்களில் உடனடியாகத் தேவைப்படுகின்றன. கடனை அளிப்பதில் உள்ள தேவையற்ற சில நிலைகள் நீக்கப்பட வேண்டும். கடன் விண்ணப்பங்கள் பல நிலைகளைக் கடந்து இறுதியாக கடன் அளிக்கப்படுகின்றது. மேலும்,

இவ்வங்கிகள் 500 ரூபாய்க்குக் குறைந்த கடன்களைத் தருவதில்லை. பெரிய நிலக்கிழார்கள் தங்களுடைய செல்வாக்கினால் கடன்களை எளிதில் பெறுகின்றனர். ஆனால், சிறிய நிலவுடைமையைக் கொண்ட விவசாயிகள் குறைந்த அளவில் கடன்களைப் பெற முடிவதில்லை. உண்மையில், நில முன்னேற்றத்திற்கான கடன் தேவையைக் கொண்டவர்கள் சிறு விவசாயிகளேயாவர். ஆனால், அதிக அளவு நிலவுடைமையைக் கொண்டு இருக்கும் பெரிய விவசாயிகளே கடன்களைப் பெறுகின்றனர். எல்லா விவசாயிகளுக்கும் பயனளிக்கும் வகையில் விரைவாக இக்கடன்கள் அளிக்கப்படுதல் வேண்டும்.

### (5) நில அடமான வங்கிகளுக்கும் அரசின் துறைகளுக்கும் இடையே நெருங்கியத் தொடர்பை ஏற்படுத்துதல்

வேளாண்மைத் துறை வளர்ச்சிக்காகப் பல அரசின் துறைகள் செயல்படுகின்றன. இந்த அரசின் துறைகளோடு நில அடமான வங்கிகளைத் தொடர்புபடுத்த வேண்டும். உதாரணமாக, அரசின் வேளாண்மைத்துறை முன்னேற்றத்திற்கான ஆலோசனைகளைக் கூறலாம். அம்முன்னேற்றப் பணிகளுக்கானக் கடன்களை நில அடமான வங்கிகள் அளிக்கலாம். இதைப் போன்றே பொறியியல் துறை நிலத்தைப் பண்படுத்தும் திட்டங்களையும், நீர்ப்பாசனத் திட்டங்களையும் தீட்டலாம். இத்திட்டங்களுக்கான நிதியை நில அடமான வங்கிகள் தரலாம். அரசின் கூட்டுறவுத்துறை கூட்டுறவுப் பணிகளை பயனுள்ள வகையில் பெற நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். கூட்டுறவுப் பண்ணைகளை ஏற்படுத்தவும் அது முயற்சிகளை மேற்கொள்ளலாம். இவ்வாறு அரசின் பல துறைகளுக்கும், நில அடமான வங்கிகளுக்கும் இடையே நெருங்கியத் தொடர்பை ஏற்படுத்துவதால் வேளாண்மையில் உண்மையான வளர்ச்சியைப் பெற முடியும்.

இந்திய ரிசர்வ் வங்கி நில அடமான வங்கிகளின் தோல்வியைப் பற்றிக் குறிப்பிட்டது. தமிழ்நாடு, பம்பாய், மைசூர் ஆகிய இடங்களைத் தவிர, பிற மாநிலங்களில் நில அடமான வங்கிகள் சிறப்பாக வளர்ந்திருக்கவில்லை. நிலத்தின் அளவைப் பெருக்க முடியாத காரணத்தாலும், விரைவான மக்கட்தொகைப் பெருக்கத்தாலும் நாட்டின் நில வளமானது முற்றிலுமாகப் பயன்படுத்தப்பட வேண்டும். நிலத்தை நன்கு பயன்படுத்த அதிக முதலீடு தேவைப்படுகின்றது. இம்முதலீட்டிற்கான நிதியை நில அடமான வங்கிகள் அளிக்க வேண்டும். சாகுபடியை முன்னேற்றமடையச் செய்யவும், புதிய நிலங்களைச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளவும், மக்கள் பரந்தமுறை செறிந்த முறைச் சாகுபடிகளை மேற்கொள்ள

வும் நில அடமான நிதி முக்கியமானதாகும். உணவு உற்பத்தி உயரும் வகையில் நில முன்னேற்றத்திற்கான கடன்களை இவ் வங்கிகள் அளிக்க வேண்டும்.

நிலவள வங்கிகளின் வளர்ச்சிக்கு அரசு பல வழிகளிலும் உதவி யிருக்கின்றது. கடன் பத்திரங்களுக்கு உறுதியளிக்கிறது. ஒரிசா வின் மாநில அரசு நில அடமான வங்கிகளின் பங்குகளை வாங்கி அவை மூலதனத்தைப் பெற உதவியது. பதிவுக் கட்டணங் களிலும், முத்திரைக் கட்டணங்களிலும் நிலவள வங்கிகளுக்குச் சலுகைகள் அளிக்கப் பெறுகின்றன. நிர்வாகச் செலவில் ஒரு பகுதி மானியமாக வழங்கப்படுகின்றது. அரசு கூட்டுறவுத்துறைப் பதிவாளரை மத்திய நில அடமான வங்கியின் செயற்குழு உறுப் பினராக்குகின்றது. இதன் மூலம் நில அடமான வங்கிகளின் நடவடிக்கைகள் கண்காணிக்கப் படுகின்றன. இவ்வங்கிகளின் வளர்ச்சி நிலத்தின் மதிப்பைக் கணக்கிட்டுக் கடன் அளிப்பதிலும், கடனைப் பெறுபவர்களின் கடனைத் திருப்பித்தரும் திறனைப் பொறுத்தும், உரிய காலத்தில் கடனைத் திருப்பித் தருவதிலும் அமைந்திருப்பதாக ரிசர்வ் வங்கி குறிப்பிடுகின்றது. மேலும், நில அடமான வங்கிகளுக்கும் பிற கூட்டுறவு அமைப்புக்களுக்கும் நெருங்கியத் தொடர்பு வேண்டும். இவ்வங்கிகள் ஒரு சில மாநிலங் களில் மட்டும் செறிந்திருக்கும் நிலை மாறி எல்லா மாநிலங்களிலும் பரவ வேண்டும். இவை கடனைத் தீர்ப்பதற்காக மட்டும் விவசாயி களுக்குக் கடன் அளிக்காமல், நிலத்தின் முன்னேற்றத்திற்குப் பயன்படுமாறு அளிக்க வேண்டும். நிலச்சீர்திருத்தங்களை எல்லா மாநிலங்களும் ஒரே வகையில் செயல்படுத்தி முன்னேற்றமடைந்த சாகுபடி முறைகளை விவசாயிகள் பின்பற்றுமாறு செய்ய வேண்டும். நில அடமான வங்கிமுறை அரசும் தனியாரும் இணைந்து செய லாற்றி வேளாண்மை வளர்ச்சிக்கு உதவ முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது.

## VIII. இந்திய ரிசர்வ் வங்கி (The Reserve Bank of India)

இந்திய ரிசர்வ் வங்கி வேளாண்மை வளர்ச்சிக்கு பல வழி களிலும் நிதி உதவியை அளித்து வருகின்றது. கூட்டுறவுக் கடன் சங்கங்களுக்கு மூலதனத்தின் ஒரு பங்கை மாநில அரசுகள் அளிக் கின்றன. இவ்வுதவிகளை அளிக்க ரிசர்வ் வங்கி மாநில அரசுகளுக் குக் கடன் தருகின்றது. 1966-67-இல் ரிசர்வ் வங்கி நான்கு மாநில கூட்டுறவு வங்கிகளுக்கு ரூ 7.45 கோடி மத்திய காலக் கடன்களை அளித்தது. வங்கி வீதத்திற்கு $1\frac{1}{2}$ சதவீதம் குறைவான வட்டி வீதத்தில் இவை மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு அளிக்கப் பட்டன. மத்திய நில அடமான வங்கிகள் வெளியிட்ட கிராமக் கடன் பத்திரங்களுக்காக ரிசர்வ் வங்கி ரூ. 1.63 கோடி அளித்தது.

1967-ஆம் ஆண்டு ஜூன் 30 வரை ரிசர்வ் வங்கி சாதாரணக் கடன் பத்திரங்களுக்காக ரூ. 20.74 கோடியும், இராமக் கடன் பத்திரங்களுக்காக ரூ. 7.20 கோடியும் அளித்திருந்தது. மேலும், ரிசர்வ் வங்கி வணிக வங்கிகளை நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களை வாங்குமாறு தூண்டுகின்றது. அதன் விளைவாக 1965-66-இல் ரூ 93 இலட்சம் மதிப்புள்ள நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களை வணிக வங்கிகள் வாங்கின ; 1966-67-இல் இதன் அளவு ரூ.3.85 கோடியாக உயர்ந்தது. 1966-67-இல் ரிசர்வ் வங்கி மத்திய காலக்கடன் அளிக்க நில அடமான வங்கிகளுக்கு வங்கி வீதத்தைவிட $1\frac{1}{2}$ சதவீதம் குறைவான சலுகை வட்டி வீதத்தில் ரூ. 15.34 கோடி கடன் அளித்தது.

இந்திய ரிசர்வ் வங்கி வேளாண்மை வளர்ச்சிக்காகப் பல வழிகளிலும் உதவுகின்றது. வேளாண்மைக் கடனுக்கான முக்கியத்துவம் ஆரம்பக்காலம் முதலே அளிக்கப்பட்டு வருகின்றது. வேளாண்மைத்துறை வளர்ச்சிக்காகவே 'வேளாண்மை கடன் துறை' (Agricultural Credit Department) ரிசர்வ் வங்கியின் ஒரு தனி துறையாக இயங்குகின்றது. ரிசர்வ் வங்கி தேசிய உடைமையாக்கப்பட்டது 1949-ஆம் ஆண்டிலாகும். அத் தொடக்கக் காலத்தில் அதிக வேளாண்மைக் கடனை அது அளிக்கவில்லை. 1949-இல் இந்தியாவின் மொத்த வேளாண்மைக் கடன் ரூ. 800 கோடியாகும். ஆனால், ரிசர்வ் வங்கி ரூ. 2.11 கோடி என்ற அளவிற்கு மட்டுமே கடன் அளித்திருந்தது. 1954-இல் கிராமக் கடன் ஆய்வுக் குழுவின் அறிக்கை வேளாண்மைக் கடன் வளர்ச்சிக்காகப் பரிந்துறைகளைத் தந்தது. அப்பரிந்துறைகளை நிறைவேற்றுவதில் ரிசர்வ் வங்கி கவனத்தைச் செலுத்தியது. இந்திய ஸ்டேட் வங்கியை நிறுவவும், வேளாண்மை விற்பனையைத் திருத்த சட்டங்களை ஏற்படுத்தவும், புதிய முறைக் கூட்டுறவுச் சங்கங்களைத் தொடங்கவும் ரிசர்வ் வங்கி நடவடிக்கைகளை எடுத்தது.

கூட்டுறவுத் துறைக்கு ரிசர்வ் வங்கி அளிக்கும் கடன் அளவானது படிப்படியாக அதிகரித்து வருகின்றது. வேளாண்மைக் கடன் வளர பலவகைப் புதிய பணிகளையும் அது மேற்கொண்டுள்ளது. கூட்டுறவுத் துறையில் பணியாற்றுபவர்களுக்கு பயிற்சி அளிக்கப்படுகின்றது. நம் நாட்டில் கூட்டுறவுத் துறை சிறப்பாக முன்னேற்றமடையவில்லை. ஆனால், அது வெற்றியடைய வேண்டுமென்ற நோக்கத்தோடு அரசும், ரிசர்வ் வங்கியும் பல நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன.

இந்திய ரிசர்வ் வங்கி நீண்டகால, இடைக்கால, குறுகிய காலக் கடன்கள் அளிக்க உதவுகின்றது. நீண்டகாலக் கடனை அளிப்பதற்

கான மூலதனத்தை ரிசர்வ் வங்கி இரு வழிகளில் தருகின்றது : (i) கூட்டுறவு நில அடமான வங்கிகள் வெளியிடும் கடன் பத்திரங்களை ரிசர்வ் வங்கி வாங்குகின்றது; (ii) மாநில அரசுகள் கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடன் அளிக்கின்றன. இவ்வாறு கடன் அளிப்பதற்காக ரிசர்வ் வங்கி மாநில அரசுகளுக்குக் கடன் தருகின்றது. 1968 ஜூனில் ரூ. 32 கோடி மதிப்புள்ள நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களில் ரிசர்வ் வங்கி முதலீடு செய்திருந்தது. 1967-68-இல் மாநில அரசுகளுக்கு ரூ. 7.3 கோடி கடன் அளித்திருந்தது.

நிலத்தைப் பண்படுத்தவும், வளப்படுத்தவும், வேறு பல முன்னேற்றப் பணிகளுக்காகவும் 3 முதல் 5 ஆண்டுகள் வரையான இடைக்காலக் கடன்களை ரிசர்வ் வங்கி அளிக்கின்றது. 1967-68-இல் ரூ. 16 கோடி என்ற அளவிற்கு இடைக்காலக் கடன் அளிக்கப் பட்டது. வேளாண்மை வளர்ச்சிக்குத் தேவையான குறுகிய காலக் கடன் அளிக்கவும் ரிசர்வ் வங்கி உதவுகின்றது. படிப்படி யாக குறுகிய காலக் கடன் அளவு அதிகரித்து வருகின்றது. குறுகிய காலக் கடனை அளிக்க மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரிசர்வ் வங்கி கடன் தருகின்றது. இதன் அளவு 1950-51-இல் ரூ. 7.6 கோடியாகவும், 1956-57-இல் ரூ 35 கோடியாகவும், 1967-68-இல் ரூ.368 கோடியாகவும் இருந்தது. இவ்வகையான கடன்கள் மிகக் குறைவான வட்டி வீதத்தில் அளிக்கப்படுவதால், நிலவள வங்கிகள் இதன் மூலம் பல நன்மைகளையும் பெறுகின்றன.

தற்பொழுது கூட்டுறவு வங்கிகளின் மூலதனத்தில் சுமார் 40 சதவீதம் ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறப்படுகின்றது. கூட்டுறவு வங்கிகள் நிதியைத் தேவையான அளவிற்குத் திரட்டும் நிலையில் இல்லை. எதிர் காலத்தில் இந்திய ஸ்டேட் வங்கி அதிக நிதியை கூட்டுறவுத் துறைக்கு அளிக்குமென எதிர்பார்க்கப்படுகின்றது. இந்தியாவில் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் பிற கூட்டுறவுச் சங்கங்களைக் காட்டிலும் நன்கு வளர்ந்துள்ளன. இதற்குக் காரணமாக அமைவது ரிசர்வ் வங்கி கூட்டுறவுச் கடன் சங்கங் களுக்கு அளிக்கும் உதவியேயாகும். கூட்டுறவுத்துறை ஓரளவு வளர்ந்துள்ளமைக்கு ரிசர்வ் வங்கியின் உதவி முக்கியக் காரணங்களுள் ஒன்றாகின்றது.

வளர்ச்சியடையாத பொருளாதாரத்தில் மத்திய வங்கி சாதாரணப் பணிகளை மேற்கொள்வதோடு மட்டும் இருந்துவிடக் கூடாது ; பலவித முன்னேற்றப் பணிகளிலும் அது ஈடுபடுவது அவசியமாகின்றது. முன்னேற்றப் பணிகளில் மிக முக்கியமான தாக இருப்பது வேளாண்மை வளர்ச்சிக்காகக் கடன் அளிப்ப

தாகும். இதன் காரணமாகவே 'வேளாண்மைக் கடன் துறை' ரிசர்வ் வங்கியில் தனியாகவே அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆலோசனை அளிக்கவும், ஆராய்ச்சிகளை நடத்தவும் ரிசர்வ் வங்கியில் திறமையாளர்கள் இருக்கின்றனர். வேளாண்மைக் கடன் பற்றிய ஆலோசனைகளை மத்திய அரசு, மாநில அரசுகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் இவைகளிடமிருந்து பெறலாம். மாநிலக் கூட்டுறவு வங்கிகள், பிற வேளாண்மைக் கடனோடு தொடர்புடைய நிறுவனங்கள் ஆகியவற்றின் மூலம் வேளாண்மை வளர்ச்சிக்குக் ரிசர்வ் வங்கியால் கடன் தரப்படுகின்றது. வேளாண்மை விளைபொருட்களின் விற்பனைக்காகவும் ரிசர்வ் வங்கி முதலீடு செய்கின்றது.

ரிசர்வ் வங்கி அதிக அளவு நிதியை வேளாண்மைத் துறைக்கு அளிப்பதோடு, வேளாண்மைக் கடனில் உள்ள சிக்கல்கள், கூட்டுறவு இயக்கத்தில் உள்ள இடர்ப்பாடுகள் ஆகியவை பற்றிய ஆராய்ச்சிகளை நடத்துகிறது. கிராமக்கடன் பற்றிய அரிய ஆலோசனைகள் அளிக்கப்படுகின்றன. தவிர, 1952-இல் ரிசர்வ் வங்கி 'அகில இந்தியக் கிராமக் கடன் கணக்கெடுப்பு' (All-India Rural Credit Survey) செய்து டிசம்பர் 1954-இல் அறிக்கையை வெளியிட்டது. கிராமக்கடன் பற்றிய எல்லா நிலைகளையும் ஆராய்வதாக இவ்வறிக்கை அமைந்திருந்தது. கிராமக்கடன் முன்னேற்றத்திற்கான சிறப்பான பரிந்துரைகள் இவ்வறிக்கையில் தரப்பட்டிருந்தன. இவ்விதமாகப் பல ஆராய்ச்சிகளும், கணக்கெடுப்புக்களும் ரிசர்வ் வங்கியால் மேற்கொள்ளப்படுகின்றன. இத்தீர்வுகளைத் தவிர, கிராமக்கடன் அமைப்பை வலுவாக்க வேறு சில தீவிர நடவடிக்கைகளையும் ரிசர்வ் வங்கி கைக்கொள்கின்றது. 'வங்கி வளர்ச்சித் துறை' (Department of Banking Development) ரிசர்வ் வங்கியால் நிறுவப்பட்டுள்ளது. இத்துறை கூட்டுறவு வங்கிகளின் வளர்ச்சிக்கு உதவுகின்றது.

கூட்டுறவு அமைப்புக்களின் வளர்ச்சிக்கு திறமையான பயிற்சி பெற்றப் பணியாளர்கள் தேவை. இதற்காக 1952-இல் ரிசர்வ் வங்கி பூனாவில் 'அகில இந்தியப் பயிற்சிக் கல்லூரியை' நிறுவியது. ரிசர்வ் வங்கி தொடங்கப்பட்டு முதல் 15 ஆண்டுகள் வரை கிராமக்கடன் வளர்ச்சிக்காகச் சிறப்பான பணிகளை ஆற்றவில்லை. ஆனால், 1950 முதல் கிராமக் கடன் முன்னேற்றத்திற்கான இதன் முயற்சிகள் மிகச்சிறப்பாகவே இருக்கின்றன. வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்ட நம் நாட்டில், அத்துறையின் வளர்ச்சிக்காக ரிசர்வ் வங்கி அளிக்கின்ற கடன் வசதிகள் பெருகி வருகின்றன.

## IX. வேளாண்மை மறுநிதிக் கழகம் (Agricultural Refinance Corporation)

ரிசர்வ் வங்கி ஏற்படுத்திய மற்ெறாரு அமைப்பு வேளாண்மை மறுநிதிக் கழகமாகும். நிலத்தின் முன்னேற்றத்திற்காகவும், நிலத்தின் வளத்திற்காகவும், நிலத்தைப் பண்படுத்துவதற்காகவும் இக்கழகம் 1966-67-இல் 15 திட்டங்களை அங்கீகரித்தது. இத்திட்டங்களுக்காக ரூ. 853 கோடி செலவிடப்பட்டது. இது தொடங்கிச் செயலாற்றிய நான்கு ஆண்டுகளில் 42 திட்டங்களுக்காக ரூ. 35.34 கோடி நிதியுதவி செய்தது. நில அடமான வங்கிகள் விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடனைத் தேவையான அளவிற்கு அளிக்க முடியவில்லை. நீண்டகாலக் கடன் அளிக்கும் வேறு அமைப்புக்களும் வளர்ந்திருக்கவில்லை. 'வேளாண்மைக் கடன், நில அடமான வங்கிகளின் நிலைபெற்ற ஆலோசனைக்குழு' (The Standing Committee on Agricultural Credit and the Land-mortgage Banks) நீண்ட காலக்கடன் அளிக்க மத்திய நிறுவனம் ஒன்று அமைக்கப்பட வேண்டுமெனக் கூறியது. 1963-ஆம் ஆண்டு ஜூலை முதல் நாள் 'வேளாண்மை மறுநிதிக் கழகம்' தொடங்கப் பெற்றது. அரசு இதற்கான சட்டத்தை நிறைவேற்றி இக்கழகத்தைத் தொடங்கியது. ரூ.25 கோடி அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்தைக் கொண்டு இக்கழகம் தொடங்கப்பட்டது. இது பல பங்குகளாகப் பிரிக்கப்பட்டு அதில் அதிக அளவு பங்குகளை ரிசர்வ் வங்கியே வாங்கியது. மிகுதியான பங்குகளை ஆயுள் காப்பீட்டு நிறுவனமும், பிற காப்பீட்டு நிறுவனங்களும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், மத்திய நில அடமான வங்கிகளும் வாங்கின. மத்திய அரசும் 15 ஆண்டுகளில் திருப்பித் தரத்தக்க வட்டியில்லாத கடனாக ரூ. 5 கோடி அளித்தது. இதனுடைய நிர்வாகம் ஒன்பது பேர் அடங்கிய இயக்குநர் குழுவிடம் உள்ளது. ரிசர்வ் வங்கியோடு இணைந்து இக்கழகம் செயலாற்றுகின்றது. பிற நிறுவனங்களால் கடன் பெறமுடியாத வேளாண்மைத் திட்டங்களுக்கு வேளாண்மை மறு நிதிக்கழகம் உதவுகின்றது.

## X. இந்திய ஸ்டேட் வங்கி (The State Bank of India)

இவ்வங்கி தொடங்கப்பட்ட காலம் முதற்கொண்டே இது கூட்டுறவுத் துறையின் மூலம் வேளாண்மை முன்னேற்றத்திற்குக் கடன் அளித்து வருகின்றது. இந்திய ஸ்டேட் வங்கி அரசின் பத்திரங்களைப் பெற்று மத்திய மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக் குறைந்த வட்டி வீதத்தில் கடன் அளிக்கின்றது. நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களை வாங்குவதோடு, கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்கும் நிதி உதவி அளிக்கின்றது. தவிர, மத்திய மாநிலக் கூட்டுறவு வங்கிகள் வாரம் மூன்று முறை கட்டண

மின்றி இந்திய ஸ்டேட் வங்கியின் மூலம் பணம் அனுப்பலாம். வேளாண்மைக் கடன் முன்னேற்றத்திற்காக இவ்வங்கி பல நடவடிக்கைகளை மேற்கொள்கின்றது. கூட்டுறவு நிதி முறையை ஒருங்கிணைக்கவும் முயலுகின்றது. கிட்டங்கிகளில் இருக்கின்ற வேளாண்மைப் பொருட்களின் மீது கடன் அளிக்கின்றது. பொதுவாகக் கூட்டுறவு சங்கங்களின் வளர்ச்சிக்கு இது உதவுகின்றது.

இந்திய ஸ்டேட் வங்கி கிராமக் கடனில் அதிக அக்கறை கொண்டு வருகின்றது. இவ்வங்கி குறுகியகால, இடைக்கால உதவிகளை கூட்டுறவு வங்கிகளுக்கும், கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் போன்றவைகளுக்கும் அளிக்கின்றது. கூட்டுறவு இயக்கம் வளர்ந்து கிராம மக்கள் நன்மையடைய குறிப்பிடத்தக்க உதவிகளை இந்திய ஸ்டேட் வங்கி அளித்திருக்கின்றது. தொழிற் கூட்டுறவுகளுக்கும் இது உதவுகிறது. இது மறைமுகமாக வேளாண்மை வளர்ச்சிக்கு உதவும்.

இவ்வாறு பல வழிகளிலும் கிராமக் கடன்கள் தரப்பட்டாலும் அவை தேவையான அளவிற்குக் குறைவாகவே உள்ளன. இந்நிலையை மாற்ற கிராமக் கடன் சீர்திருத்தங்கள் தேவைப் படுகின்றன.

தற்பொழுது அளிக்கப்படுகின்ற கிராமக் கடனில் பெரும் பகுதி லேவாதேவிக்காரர்களாலேயே அளிக்கப்படுகின்றது. இந்நிலை சாகுபடியாளர்களுக்குச் சாதகமாக அமைந்திருக்கவில்லை. கூட்டுறவுக் கடன் இயக்கமானது கடந்த 18 ஆண்டுகளில் மொத்த வேளாண்மைக் கடனில் 3.1 சதவீதம் என்ற நிலையினின்றும் 25.8 சதவீதம் என்ற அளவிற்கு உயர்ந்திருக்கின்றது. எனினும், இது அளிக்கின்ற கடன் அளவு வேளாண்மைத் துறைக்குப் போதுமானதாக இல்லை. அரசின் கடன்களும் பஞ்சக் காலங்களில் மட்டுமே அளிக்கப்படுகின்றன.

### வேளாண்மைக் கடன் சீர்திருத்தங்கள்

கடந்த பத்து ஆண்டுகளில் வேளாண்மைக் கடன் அளித்த நிறுவனங்களின் சிறப்பான பணிகளை மறுக்க இயலாது. கிராமக் கடன் வளர்ச்சிக்கு அவை பெரிதும் உதவியுள்ளன. தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட காலச் செயல்) நிதி [National (Agricultural Credit (Long Term Operations) Fund], வேளாண்மை மறுநிதிக் கழகம் ஆகியவற்றை இந்திய ரிசர்வ் வங்கி ஏற்படுத்தியது. இதன் மூலம் எந்த அளவிற்கு இந்திய அரசு வேளாண்மைப் பொருளாதாரத்தை முன்னேற்றமடையச் செய்ய அக்கறை

கொண்டிருக்கின்றது என்பதை உணரலாம். எனினும், அதிக வறிய நிலை கொண்ட கிராமப் பொருளாதாரத்தை மாற்றியமைப்பது எளிதானதல்ல. பல நூற்றுண்டுகளாகப் பின்தங்கிய நிலையைக் கொண்டு இந்தியக் கிராமங்கள் அமைந்திருந்தன. எனவே, மிகச்சிறப்பான தீவிர நடவடிக்கைகளின் மூலமே வேளாண்மைக் கடனைச் சீர்திருத்த இயலும்.

கிராமக் கடன் சிக்கலைத் தீர்க்க 'மத்திய வேளாண்மை வங்கி' (Central Agricultural Bank) நிறுவப்பட வேண்டும். இவ்வங்கியின் பங்குகளை மத்திய அரசு, இந்திய ரிசர்வ் வங்கி, வணிகவங்கிகள், கூட்டுறவு வங்கிகள் ஆகியவை வாங்குதல் வேண்டும். இவ்வங்கியின் அளிக்கப்பட்ட மூலதனம் ரூ. 10 கோடியாக இருக்க வேண்டும். இதற்கு ரிசர்வ் வங்கி கடன் அளிக்கலாம் ; பிற வங்கிகள் மத்திய வேளாண்மை வங்கியில் வைப்புநிதி வைத்திருக்கலாம். இவ்வங்கியின் கிளைகள் கிராமப்புறங்களில் மட்டுமே தொடங்கப்பட வேண்டும். இக்கிளைகள் கடனை மட்டும் அளிப்பவைகளாக இருக்கக்கூடாது ; இவை விவசாயிகளிடமிருந்து வைப்பு நிதிகளைப் பெறுபவைகளாகவும் இருக்க வேண்டும். கிராம மக்களை இக்கிளைகள் கடன் அளிப்பவர்களாக மாற்ற வேண்டும் ; அவர்கள் கடன் பெறுபவர்களாக மட்டும் இருக்கக் கூடாது. இதன் மூலம் வங்கிப் பழக்கம் விவசாயிகளிடம் பரவ வாய்ப்பு ஏற்படும். விவசாயிகளின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்பவைகளாகவும் கிராம வங்கிக் கிளைகள் அமைதல் அவசியம்.

சமீப காலத்தில் வணிக வங்கிகள் வேளாண்மை வளர்ச்சிக்கான கடன்களை அளிக்க முன்வரவேண்டுமென்ற கருத்து நிலவி வருகிறது. ஆனால், அவை வேளாண்மைக் கடன்களை அளிப்பதில் அதிக அக்கறை கொண்டிருக்கவில்லை. எதிர்காலத்தில் இந்திய வேளாண்மை வளர்ச்சிக்கு உதவ வணிக வங்கிகள் 'வேளாண்மை நிதிக் கழகத்தை' (Agricultural Finance Corporation) கூட்டாக ஏற்படுத்தத் தீர்மானித்தன. வேளாண்மைத் துறையோடு கால்நடைகள் பராமரிப்பு, பால் பண்ணைகள், கோழிப் பண்ணைகள் ஆகியவையும் அடங்குகின்றன. வேளாண்மை நிதி நிறுவனத்தின் அங்கீகரிக்கப்பெற்ற மூலதனம் ரூ. 100 கோடியாக இருக்கும். இந்நிறுவனத்தின் நோக்கங்கள் பின்வருமாறு அமைந்திருக்கின்றன. அவை:

(1) விதைப் பண்ணைகளுக்கு இடைக்கால, குறுகிய காலக் கடன்கள் அளிப்பது ;

(2) இயந்திர மயமாக்க இடைக்காலக் கடன்கள் தருவது ;

(3) வேளாண்மைத் துறைக்கும் அதோடு தொடர்புடைய தொழில்களுக்கும் நிதியுதவி அளித்தல் ;

(4) வேளாண்மைப் பொருட்களைச் சேமித்துவைக்கும் இடங்களைக் கட்டுவதற்கான நிதியுதவி அளிப்பது ;

(5) வேளாண்மைத் துறைக்கு உதவும் போக்குவரத்திற்கு நிதி தருவது ;

(6) நிலங்களைச் சமன் செய்யவும், கிணறுகள் தோண்டவும், குழாய்க் கிணறுகள் அமைக்கவும், நீர் இறைக்கும் இயந்திரங்களை வாங்கவும் இடைக்காலக் கடன்களை அளிப்பது ;

(7) விரிவாகப் பூச்சிக் கொல்லி மருந்துகளைத் தெளிப்பதற்கு கடன் வழங்குவது ;

(8) விவசாயிகளுக்கு நிறுவனப் பணிகளை அளிப்பதற்கான நிதியுதவி அளிப்பது ஆகியவைகளாகும்.

கடன் அளிப்பதை ஒழுங்குபடுத்துவது

பல மாநிலங்களிலும் லேவாதேவிக்காரர்கள் பதிவு செய்து கொள்ள வேண்டுமெனச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அவர்கள் கடன் அளிப்பதை ஒழுங்குபடுத்தவும், அவர்கள் பெறுகின்ற அதிக வட்டி வீதத்தைக் குறைத்துக் கட்டுப்படுத்தவும் சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. ஆனால், லேவாதேவிக்காரர்களைக் கட்டுப்படுத்த எடுக்கப்பட்ட முயற்சிகள் முழுதும் வெற்றி பெறவில்லை. சட்டங்களை சரியாக செயல்படுத்த அமைப்பு முறைகள் இல்லாமையே தோல்விக்குக் காரணமாகும். லேவாதேவிக்காரர்கள் சட்டமுறைகளை ஏய்க்கும் திறனைக் கொண்டவர்களாக இருக்கின்றனர். சட்ட ஏய்ப்பிற்கு உடந்தையாகக் கடன் பெறுபவர்களும் உள்ளனர். கடன் பெறுபவர்களில் பலர் சட்ட முறைகளை அறியாதவர்களாவர். சில சட்டங்களால் லேவாதேவிக்காரர்கள் அளிக்கும் கடன் அளவு குறைந்துள்ளது. கிராமங்களில் கடன் பெறுவது இதனால் கடினமாகிவிட்டது. கிராம லேவாதேவிக்காரர்கள் நம்பகரமான கடன் பெறுபவர்களுக்கு மட்டுமே உதவுகின்றனர். நீதிமன்றங்களுக்குச் செல்ல விரும்புபவர்களுக்கும், தங்களுடைய விருப்பப்படி கடனைப் பெற்றுச் செல்லாதவர்களுக்கும் லேவாதேவிக்காரர்கள் கடன் அளிக்க முன்வருவதில்லை.

லேவாதேவிக்காரர்கள் இவ்வாறு தவறான நடவடிக்கைகளில் ஈடுபடுவதைத் தடை செய்யவேண்டும். ஆனால், இவ்வித நடவடிக்

கைகளால் அவர்களுடைய பணியை இழந்துவிடக் கூடாது. கிராமப்புறங்களில் கடன் அளிக்கும் முக்கியமான நிலையைக் கொண்டு அவர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய திறமையையும், அனுபவத்தையும் பயன்படுத்திக்கொள்ள கிராமக்கடன் முறையில் சீர்திருத்தங்கள் தேவை. கிராமக்கடன் தேவையின் முக்கியக் காரணம் விவசாயிகளின் மிகக்குறைந்த வருவாய் ஆகும். கிராமக்கடன் சிக்கலைத் தீர்க்க விவசாயிகளின் உண்மை வருவாய் உயர வேண்டும்; விவசாயிகளின் உண்மை வருவாயை உயர்த்துவது கிராமக் கடன் சிக்கலைத் தீர்ப்பதிலும் அடங்கியுள்ளது.

### கூட்டுறவு இயக்கம்

கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கிராமக்கடன் அளிப்பைச் சிறப்பாகச் செய்யலாம் என்பது எல்லோருடைய கருத்தாகவும் அமைந்திருக்கின்றது. தற்பொழுது எல்லா மாநிலங்களிலும் கூட்டுறவு இயக்கம் உயர்வாக வளர்ந்திருக்கவில்லை. கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படை 'முதல் நிலை வேளாண்மைக் கடன் சங்கங்களாகும்.' இச்சங்கங்கள் திறமையாகச் செயல்பட நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். திறமைகுறைந்த சங்கங்கள் நீக்கப்பட வேண்டும் ; அல்லது திறமையாகச் செயல்படும் சங்கங்களோடு அவை இணைக்கப்படலாம். கூட்டுறவுக் கடன் சங்கங்கள் கடனை அளிக்கும் பணியில் மட்டும் ஈடுபடாமல், பல பணிகளையும் ஆற்றுகின்ற பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களாக மாற்றப்பட வேண்டும். தற்பொழுது 2 இலட்சம் முதல்நிலை வேளாண்மைக் கடன் சங்கங்கள் உள்ளன. இச்சங்கங்கள் மிகச்சிறிய அளவில் அமைந்திருப்பதால் சிறப்பாகப் பணியாற்ற முடிவதில்லை. ஜூலை 1964-இல் மாநில அமைச்சர்களின் மகாநாடு ஹைதிராபாத்தில் நடைபெற்றது. வேளாண்மை உற்பத்தியை உயர்த்த போதுமான நிதியை எவ்வகைகளில் பெறலாம் என்பதை ஆராய இம் மகாநாடு கூட்டப்பெற்றது. இம்மகாநாட்டில் முதல்நிலை வேளாண்மைக் கடன் சங்கங்களைத் திருத்தி அமைப்பது இன்றியமையாதது என வலியுறுத்தப்பட்டது. இம்மகாநாடு மாநில அரசுகள் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றி ஆய்வு நடத்த வேண்டுமெனக் கூறியது. எந்த அளவிற்குக் கூட்டுறவுச் சங்கங்களின் சேவை ஓரிடத்திற்குத் தேவை என்பதை அறிய வேண்டும். அதற்கேற்ப குறிப்பிட்ட இடங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் புதிதாக ஏற்படுத்தப்படலாம் ; அல்லது, இருக்கக்கூடிய சங்கங்கள் மாற்றியமைக்கப்படலாம். இதன்படி, பல மாநில அரசுகள் கணக்கெடுப்புக்கள் நடத்திப் பொருளாதார நிலையில் இலாபகரமாக இல்லாத கூட்டுறவுச் சங்கங்கள் முடிவுக்குக்கொண்டு வரப்பட்டன ; அல்லது, வளர்ச்சியடைந்த சங்கங்களோடு வளர்ச்சி

யடையாத சங்கங்கள் இணைக்கப்பட்டன. இதன் விளைவால் 1964-65-இல் 2.01 இலட்சம் என்ற அளவில் இருந்த முதல் நிலைக் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை நான்காவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள் 1.28 இலட்சம் என்ற அளவிற்குக் குறைந்து விடுமென எதிர்பார்க்கப்படுகின்றது.

கூட்டுறவுச் சங்கம் விவசாயிகளுக்குக் குறைந்த வட்டியில் குறுகிய காலக் கடனையும் அளிக்க இந்திய ரிசர்வ் வங்கியும், வணிக வங்கிகளும் நிதியுதவி செய்யவேண்டும். படிப்படியாக ரிசர்வ் வங்கி கூட்டுறவு வங்கிகளின்மூலம் அதிக நிதியை வேளாண்மைத் துறைக்கு அளித்தல் அவசியமாகும். வணிக வங்கிகள் சிறிய நகரங்களிலும், பெரிய கிராமங்களிலும் கிளைகளைத் தொடங்கு கின்றன. வங்கிகள் இல்லாத பகுதிகளில் வங்கிகளை ஏற்படுத்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இந்நிலையில் இந்திய ஸ்டேட் வங்கி முன்னோடியாகத் திகழ்கின்றது. ஸ்டேட் வங்கியைப் போன்று வணிக வங்கிகள் புதிய இடங்களில் கிளைகளைத் திறக்க முன்வர வேண்டும். இந்திய ரிசர்வ் வங்கி, மாநில அரசுகள் ஆகிய வற்றின் உதவியோடு வேளாண்மை விளைபொருட்களின் விற்பனை யைத் திருத்த கிட்டங்கிகளை நாடு முழுதும் இவ்வங்கிகள் ஏற்படுத்த வேண்டும். மேலும், குறுகியகாலக் கடன் வசதிகளையும் விவசாயி களுக்கு இவை அளிக்க வேண்டும். இவற்றைத்தவிர, இவ்வங்கிகள் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் சாகுபடியாளருக்குக் கடன் அளிக்க லாம். இந்திய அரசு கூட்டுறவு இயக்கத்தை வலுவாக வளர்ப் பதில் முனைந்துள்ளது. இதன்வாயிலாக கிராம லேவாதேவிக் காரர்களை நீக்கிவிட முடியுமென அரசு கருதுகின்றது.

விவசாயிகள் நீண்டகாலக் கடனைப்பெற லேவாதேவிக் காரர்களையும், நில அடமான வங்கிகளையும் மட்டுமே நம்ப வேண்டியிருக்கின்றது. நீண்டகாலக் கடன் தேவையைச் சமாளிக்க நில அடமான வங்கிகள் நாடு முழுதும் பரவலாக, திறமையான வழிகளில் வளர்க்கப்பட வேண்டும். நில அடமான வங்கிகளைப் பரப்ப இந்திய ரிசர்வ் வங்கியும், வணிக வங்கிகளும் மத்திய நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களில் அதிக முதலீடு செய்ய வேண்டியது இன்றியமையாததாகும். இவ்வாறு கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கிராமக் கடன் சிக்கலைப் பெருமளவிற்குத் தீர்க்க முடியும்.

### அகில இந்தியக் கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழுவின் பரிந்துரைகள்
### (All India Rural Credit Survey Committee's Recommendations)

இந்திய ரிசர்வ் வங்கி ஆகஸ்டு 1951-இல் அகில இந்தியக் கிராமக்கடன் கணக்கெடுப்புக் குழுவை அமைத்தது. கிராமக்

கடனை ஒருங்கிணைக்கும் கொள்கைக்குப் பல புள்ளிவிவரங்களை இக்குழு சேகரித்தது. இக்குழுவின் தலைவராக திரு எ. டி. கோர்வாலா (A. D. Gorwala) நியமிக்கப்பட்டார். கிராமக் கடனில் சீர் திருத்தங்களைக் கொண்டுவர இக்குழுவின் அறிக்கை பெரிதும் உதவியது. இந்திய ரிசர்வ் வங்கி, மத்திய அரசு, மாநில அரசுகள் யாவும் கிராமக் கடன் சீர்திருத்தங்களில் பங்கு வகித்தன. இக்குழுவின் ஒரு உறுப்பினராகப் பேராசிரியர் டி. ஆர். காட்கில் (D. R. Gadgil) இருந்தது குறிப்பிடத்தக்கது.

வேளாண்மைத் துறைக்கு எவ்வகைகளில் கடன் கிடைக்கின்றது, அக்கடன் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றது என்பவைகளைப்பற்றி இக்குழு ஆராய்ந்தது. கிராமக்கடன் பற்றிய தெளிவான நிலைகளை ஆராய்ந்து அரசிற்கு உணர்த்த அமைக்கப்பட்ட இக்குழு 1954-இல் அறிக்கையை வெளியிட்டது. 1957-58-இல் இதுபோன்ற மற்றொரு கணக்கெடுப்பு செய்யப்பட்டு இறுதியறிக்கை 1960-இல் வெளியிடப்பட்டது. கிராமக்கடன் பற்றி ஆராய பல குழுக்கள் அமைக்கப்பட்டாலும், அகில இந்திய கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழுவின் அறிக்கையே இன்றும் சிறப்புள்ளதாகக் கருதப்படுகின்றது. ஏனெனில், இவ்வறிக்கை கிராமக்கடன் நிலையைப்பற்றி தெளிவாக விளக்குகின்றது. கிராமக் கடன் சிக்கலைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளையும் இது குறிப்பிடுகின்றது.

இக்குழுவின் ஆய்வின்படி விவசாயிகள் பெறுகின்ற மொத்தக் கடனில் கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் 3.1 சதவீதம் மட்டுமே அளிக்கின்றன என்பது கருதத்தக்கதாகும். லேவாதேவிக்காரர்கள் மிக அதிக அளவு வேளாண்மைக் கடனை அளித்து வருகின்றார்கள். "கூட்டுறவு இயக்கமானது நாட்டின் பல பகுதிகளில் பரவவில்லை; கூட்டுறவு இயக்கம் பரவியுள்ள இடங்களிலும், வேளாண்மை மக்கட்தொகை முழுவதும் கூட்டுறவு உறுப்பினர்களாக அமைந்திருக்கவில்லை; உறுப்பினர்களாக இருப்பவர்களில் சிலர் பெறுகின்ற கடன்களும் குறைவாகவே இருக்கின்றன. எனவே, கூட்டுறவுத் துறை தவிர பிற வழிகளிலும் அவர்கள் கடன் பெறுகின்றனர்," என கிராமக்கடன் கணக்கெடுப்புக்குழு குறிப்பிட்டது.

சில குறிப்பிட்டக் காலங்களில் தனிப்பட்ட நோக்கங்களுக்காக அரசும், கூட்டுறவுத் துறையும் கடன் அளிப்பதுண்டு. இவ்வாறு விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டக் கடன் மொத்தக் குறுகிய காலக் கடனில் 14 சதவீதம் இருந்தது. நீண்டகாலக் கடன் அரசாங்கத்தாலும், கூட்டுறவுத் துறையாலும் 4.8 சதவீதத்திற்கு மட்டுமே அளிக்கப்பட்டது. நீண்டகால, குறுகியகால நுகர்விற்கான கடனை விவசாயிகள் பெரும்பாலும் லேவாதேவிக்

காரர்களிடமிருந்தே பெறுகின்றனர். எனவே, விவசாயிகளின் 90 சதவீதத்திற்கும் மேலான கடன்கள் லேவாதேவிக்காரர்களாலும், வணிகர்களாலும் அளிக்கப்படுகின்றன. இவர்கள் வேளாண்மை வளர்ச்சிக்கான நோக்கத்தோடு கடன் தருவதில்லை. இலாப நோக்கோடு அதிக வட்டி கடன்களுக்காக இவர்களால் வசூலிக்கப் படுகின்றது. கொடுக்கின்ற கடன்களின் மீது எந்த அளவிற்கு வரி வசூலிக்க முடியுமோ, அந்த அளவிற்கு வரி வசூலிக்கப்படு கின்றது. இக்குழுவின் கருத்துப்படி, வேளாண்மைக்கான கூட்டுற வுக்கடன் இயக்கம் 'படுதோல்வியை' அடைந்துள்ளது. வறிய கிராம மக்களுக்குப் பெரிதும் உதவக்கூடிய கடன் முறை யாக இது கருதப்பட்டது. ஆனால், கிராம மக்கள் கூட்டுறவுக் கடன் இயக்கத்தின் எல்லா நன்மைகளையும் பெறமுடியவில்லை.

கிராமப்புறங்களில் பல கடன் அளிக்கும் அமைப்புக்கள் இருந்தும் வேளாண்மைக் கடன் சிக்கலைத் தீர்ப்பது கடினமாகின்றது வேளாண்மைத் துறைக்கு அளிக்கப்படுகின்ற கூட்டுறவுக் கடனும், அரசின் கடனும் போதுமானதாக இல்லை. இதனால் வேளாண்மைக் கடன் சிக்கலைத் தீர்ப்பது எளிதாக இருக்கவில்லை. விவசாயிகளின் கடன் தேவைகளைத் தீர்ப்பது கூட்டுறவுத் துறையாலும், அரசாலும் இயலவில்லை எனக் கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழு கருத்து தெரிவித்தது. மேலும், கூட்டுறவுக் கடன்கள் உண்மையான கடன் தேவைகளைக் கொண்டவர்களைச் சென்று அடைவதில்லை. விரைவா கப்பொருளாதாரம் வளர்ச்சியடைய போதுமான அளவுக் கடன்கள் குறைந்த வட்டி வீதத்தில் அளிக்கப்பட வேண்டும். இக்கடன்களை விவசாயிகளுக்கு மட்டும் அளித்தல் போதுமானதாகாது. கிராம, குடிசைத் தொழில்களுக்கும், விற்பனைக்கும், தானியங்களைச் சேமித்து வைக்கும் கிட்டங்கிகளை ஏற்படுத்துவதற்கும் கடன்கள் தரப்பட வேண்டும். வேளாண்மைத் துறையின் பலவகைப்பட்ட மக்களுக்கும் நிதியுதவியளிக்க நிறுவனங்கள் தேவைப்படுகின்றன. அகில இந்தியக் கிராமக்கடன் கணக்கெடுப்புக் குழு கிராமக்கடன் முறை முற்றிலும் மாற்றியமைக்கப்பட வேண்டுமெனக் கூறியது. இதன் மூலமே நீண்டகால, இடைக்கால, குறுகியகாலக் கடன்களை விவசாயிகளுக்கு விரைவாகவும், நியாயமான வட்டி வீதத்திலும் அளிக்கமுடியும்.

கிராமக் கடன் கணக்கெடுப்புக்குழு வேளாண்மைக் கடன் சீர்திருத்தங்களைப்பெற பின்வரும் பரிந்துரைகளைக் குறிப்பிட்டது.

(1) அரசு கூட்டுறவு நிறுவனங்களின் எல்லா நிலைகளோடும் இணைந்து செயலாற்ற வேண்டும். அரசின் உதவி கூட்டுறவின் முழுமையான வளர்ச்சிக்கும் கிடைக்க வேண்டும். விவசாயிகளுக்கு நன்மையளிக்கும் வகையில் கடன்கள் தரப்பட வேண்டும். கூட்டுற

வுத் துறையில் அரசு அதிகப் பங்கேற்று அதை வலுப்படுத்த வேண்டும்.

(2) ஆக்கப்பணிகளுக்கான நீண்டகாலக் கடனும், குறுகிய காலக்கடனும் அளிக்கப்பட வேண்டும்.

(3) பல பகுதிகளையும் இணைத்த பெரிய அளவு முதல்நிலைக் கடன் சங்கங்கள் அமைக்கப்படவேண்டும். தற்பொழுதுள்ள முதல் நிலைக் கடன் சங்கங்கள் அளவில் சிறியவைகளாக இருக்கின்றன. கூட்டுறவுக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு (Limited Liability) உள்ளவைகளாக இருக்க வேண்டும். நம் நாட்டின் வேளாண்மைக் கடன் வளர்ச்சிக்கு இது இன்றியமையாத தாகும். பல இடங்களிலும் பெரிய அளவுகளில் கூட்டுறவுச் சங்கங்கள் அமைந்திருந்தால்தான் வெற்றியைப் பெற முடியும்.

(4) வேளாண்மைக் கடனிற்கும், பிற பொருளாதார நடவடிக்கைகளுக்கும் இடையே நெருங்கியத் தொடர்பை ஏற்படுத்த வேண்டும். கூட்டுறவுப் பொருளாதார நடவடிக்கைகளை வளர்க்கப் பெரிய அளவில் சேமிப்பு வசதிகளையும், கிட்டங்கி வசதிகளையும் மேம்படுத்த வேண்டும். இது வேளாண்மை உற்பத்தி யைப் பெருக்க உதவுவதோடு, வேளாண்மை விற்பனை முறையும் திருந்த வகை செய்யும்.

(5) சிறு நிதி நிறுவனங்கள் பல இடங்களிலும் கிளைகளைத் தொடங்க வேண்டும். இவற்றின் மூலம் கூட்டுறவு வங்கிகளுக்குப் பல பணிகளும், கடன் வசதிகளும் அளிக்கப்படுதல் அவசியமான தாகும். இந்திய ஸ்டேட் வங்கியின் கிளைகள் கிராமப்புறங்களில் பெருமளவில் தொடங்கப்பட வேண்டுமென இக்குழு கருத்து தெரிவித்தது. கூட்டுறவு வங்கிகளுக்கு உதவும் வகையிலும் இவை அமைதல் வேண்டும்.

(6) அகில இந்திய அளவில் கூட்டுறவுப் பணியாளர்களுக்குப் பயிற்சியளிக்க வேண்டுமெனவும் இக்குழு கூறியது. கூட்டுறவுத் துறை ஊழியர்களின் சிறப்பான பணி அதனுடைய வளர்ச்சிக்கு உதவுவதாகும்.

(7) மேற்குறிப்பிடப்பட்டுள்ள பரிந்துரைகளைச் செயல் படுத்த அதிக நிதி தேவைப்படுகின்றது. நிதி வசதியைப் பெற இந்திய ரிசர்வ் வங்கி இரு தேசிய நிதிகளை ஏற்படுத்த வேண்டும். அவ்விரு நிதிகளாவன : (i) தேசிய வேளாண்மைக்கடன் (நீண்ட காலச் செயல்) நிதி [National Agricultural Credit (Long-term Operations) Fund], (ii) தேசிய வேளாண்மை (நிலைப்படுத்தும்) நிதி [National Agricultural (Stabilisation) Fund]. முதல் நிதி

யானது பல வழிகளில் பயன்படுத்தப்படும். கூட்டுறவுக் கடன் சங்கங்களின் பங்குகளை வாங்குவதற்கு மாநில அரசுகளுக்கு நீண்ட காலக் கடன்களை இந்நிதியினின்றும் அளிக்க வேண்டும்; இடைக்காலக் கடன்களை வேளாண்மைப் பணிகளுக்காக அளிக்க வேண்டும். மத்திய நில அடமான வங்கிகளுக்குக் கடன்கள் தரவேண்டும். இரண்டாவது வகை நிதி மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு இடைக்காலக் கடன்கள் அளிக்கப் பயன்படுத்தப்பட வேண்டும். இவ்விதக் கடன்கள் பஞ்சக் காலங்களிலும், வறட்சிக் காலங்களிலும், இயற்கைக் காரணிகளின் சாதகமற்ற நிலையால் வேளாண்மை உற்பத்திக் குறைந்த காலங்களிலும் தரப்படலாம்.

இவ்விரு தேசிய நிதிகளைத் தவிர, இக்குழு வேறு மூன்று தேசிய நிதிகளை ஏற்படுத்தவும் பரிந்துரைத்தது. அவை: (i) தேசியக் கிட்டங்கி வளர்ச்சி நிதி (The National Warehousing Development Fund), (ii) தேசிய வேளாண்மைக் கடன் நிதி (The National Agricultural Credit Fund), (iii) தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி (The National Co-operative Development Fund) ஆகியவைகளாகும். இவை யாவும் இந்திய அரசால் ஏற்படுத்தப் பட வேண்டும்.

(8) தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி மாநில அரசுகளுக்கு நீண்டகாலக் கடன்களை அளிக்க வேண்டும். கூட்டுறவுத் துறைக்கு மாநில அரசுகள் மூலதனம் அளிக்க இக்கடன்கள் பயன்படுத்தப் பட வேண்டும். வேளாண்மை விற்பனையில் ஈடுபடுகின்ற கூட்டுறவுச் சங்கங்களுக்கு இம்மூலதனம் அளிக்கப்படலாம். தேசிய கிட்டங்கி நிதி அகில இந்தியக் கிட்டங்கிக் கார்ப்பரேஷனுக்கு மூலதனத்தில் ஒரு பங்கை அளிக்கலாம். மாநில அரசுகள் மாநில கிட்டங்கிக் கார்ப்பரேஷன்களுக்கு மூலதனம் அளிக்க வேண்டும். இதற்காக மாநில அரசுகளுக்கு தேசிய கிட்டங்கி வளர்ச்சி நிதி உதவ வேண்டும்.

(9) இந்திய ரிசர்வ் வங்கி நில அடமான வங்கிகளுக்கு நீண்ட கால நிதியுதவியை அளிக்க வேண்டும். நேரடிக்கடன்களாக நிதி அளிக்கப்படலாம். தவிர, தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட காலச் செயல்) நிதியின் கடன் பத்திரங்களை ரிசர்வ் வங்கி வாங்க வேண்டும்.

(10) இந்திய ரிசர்வ் வங்கி மாநில அரசுகளின் உறுதியின் பேரில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் மூலம் வேளாண்மைக் கூட்டுறவுக் கடன் சங்கங்களுக்குக் குறுகிய காலக் கடன்களைத் தொடர்ந்து அளிக்க வேண்டும். ரிசர்வ் வங்கி இடைக்காலக் கடன்

களையும் தேசிய வேளாண்மைக்கடன் (நீண்ட காலச் செயல்) நிதிக்குத் தரவேண்டும்.

கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழுவின் ஆய்வுப்படி, அரசும் கூட்டுறவுத் துறையும் விவசாயிக்குத் தேவையான கடனில் 6.4 சதவீதம் மட்டுமே தருகின்றன. சுமார் 93.6 சதவீதக் கடன்கள் லேவாதேவிக்காரர்கள், தரகர்கள், வணிகர்கள் நிலக்கிழார்கள் ஆகியவர்களாலேயே தரப்படுகின்றன. இவர்கள் மிக அதிக அளவு வட்டி வசூலிக்கின்றனர். நேர்மையான முறைகளில் இவர்கள் பணத்தை வட்டிக்கு அளிப்பதில்லை. கடன் பெறுபவர்களை இவர்கள் ஏமாற்றுகின்றார்கள். கூட்டுறவு நிறுவனங்களை வளர்த்து கிராமக்கடன் முறையைத் திருத்த இக்குழு பல ஆலோசனைகளைக் கூறியது. 'ஒருங்கிணைந்த கிராமக் கடன் அமைப்பு முறை' இக்குழுவின் பரிந்துறைகளில் முக்கியமானதாக இருந்தது. இதன் மூலம் அரசு கூட்டுறவின் பல நிலைகளிலும் பங்கு கொள்ளும். வேளாண்மைக்குக் கடன் அளிப்பதோடு, வேளாண்மைக்கு உதவக்கூடிய பிற பொருளாதாரப் பணிகளுக்கும் கடன்கள் அளிக்கப்பட வேண்டும்.

வேளாண்மைப் பொருட்களைப் பக்குவப்படுத்தி, சேமித்து வைத்து, விற்பனை செய்யும் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட வேண்டுமென கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழு அறிவுறுத்தியது. கிராம மக்களைக் கூட்டுறவுச் சங்கங்களில் ஆர்வத்தோடு ஈடுபடச் செய்ய வேண்டும். சமுதாய முன்னேற்றம் ஏற்படுவது தங்களையே சார்ந்துள்ளது என்பதைக் கிராம மக்கள் உணர வேண்டும். விவசாயிகளுக்குத் தேவையான அளவில் நிதி வசதிகளைத் தொடர்ந்து அளிக்க தேசிய நிதிகள் ஏற்படுத்தப்பட வேண்டும். இக்குழு வேளாண்மை விளைபொருட்களின் விலையில் நிலையான போக்கை ஏற்படுத்த ஆலோசனைகளைக் கூறியது. கிராம, குடிசைத் தொழில்களுக்கு நிதியுதவி அளிக்கும் வழிமுறைகளை அறிவுறுத்தியது.

### கிராமக்கடன் சிக்கலைத் தீர்க்க எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள்

சமீப காலத்தில் கிராமக் கடனில் அமைந்திருக்கும் குறைபாடுகளை நீக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அதில் மிக முக்கியமானது அகில இந்தியக் கடன் கணக்கெடுப்புக் குழுவை 1951-இல் நியமித்ததாகும். 1954-இல் வெளிவந்த இக்குழுவின் அறிக்கை வேளாண்மைக் கடன் முறையைச் சீர்திருத்தப் பல பரிந்துரைகளை அளித்தது. இப்பரிந்துரைகளில் பெரும்பாலானவை ஏற்றுக்கொள்ளப்பட்டு செயல்படுத்தப்பட்டன.

(1) கூட்டுறவு இயக்கமானது அரசின் ஒத்துழைப்போடு வலுவாக்கப்பட்டது.

(2) கடன் அளித்தல் வேளாண்மைப் பொருட்களைப் பதனப் படுத்துதல், விற்பனை செய்தல் போன்ற பொருளாதார நடவடிக் கைகளோடு இணைக்கப்பட்டது.

(3) கிட்டங்கி வசதிகள் பெருக்கப்பட்டன.

(4) இந்திய ஸ்டேட் வங்கி நாட்டுடைமையாக்கப் பெற்றது. இதனால் கிராமக்கடன் அளிப்பில் இவ்வங்கி இப்பொழுது முக்கியப் பங்கு வகிக்கின்றது.

(5) இந்திய ரிசர்வ் வங்கியின் பணிகளும் கிராமக் கடன் வளர்ச்சிக்கு உதவுகின்ற நிலையில் உள்ளன.

(6) பணத்தை வட்டிக்குக் கொடுக்கும் தொழிலிலும் சீர் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன.

(7) அரசின் கடன்கள் தற்பொழுது எளிய முறைகளில் விரை வாக அளிக்கப்படுகின்றன. எளிய முறைகளில் திருப்பித் தரத் தக்க இக்கடன்கள் தாராளமாகத் தரப்படுகின்றன.

(8) நீண்டகால வேளாண்மைக் கடன்களை அதிக அளவிற்கு அளிக்க நில வள வங்கிகள் வளர்க்கப்படுகின்றன.

'வேளாண்மை மறுநிதிக் கழகம்' (Agricultural Refinance Corporation) ஜூலை 1963-இல் நிறுவப்பட்டது. வேளாண்மைக் கடன் அளிக்கும் மத்திய மறுநிதி நிறுவனமாக இது பணியாற்று கின்றது. இதன் மூலம் நிலத்தைப் பண்படுத்தவும், வளப்படுத்தவும் புதிய பயிர்களைச் சாகுபடி செய்யவும், இயந்திரச் சாகுபடி முறை யைப் பின்பற்றவும், கால்நடைப் பராமரிப்பிற்கும், கோழி வளர்ப் பிற்கும் உதவிகள் பெறலாம். வேளாண்மைக் கடன் வளர்ச்சியில் இக்கழகம் ஏற்படுத்தப்பட்டமை குறிப்பிடத்தக்க நிலையைக் கொண்டதெனலாம். உண்மையிலேயே வேளாண்மைக் கடன்களை அளிப்பதில் பல முன்னேற்றங்களைச் செய்துள்ளது.

கிராமக் கடன்களைத் தருவதற்கு ஐந்தாண்டுத் திட்டங்களில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இதன் விளைவாக, 1950-51-இல் விவசாயிகளுக்கு அளிக்கப்பட்ட கூட்டுறவுக்கடன் ரூ. 23 கோடி யாக இருந்த நிலை 1960-61 இல் ரூ. 200 கோடியாக உயர்ந்தது. இது 773 சதவீத அதிகரிப்பாகும். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மொத்த குறுகிய கால, இடைக்காலக் கடன்கள் ரூ. 342 கோடியும், நீண்டகாலக் கடன்கள் ரூ. 58 கோடியும் அளிக்கப்பட்டன. 1968-69-இல் இந்நிலைகள் முறையே ரூ. 450 கோடியாகவும், ரூ. 100 கோடியாகவும் உயர்ந்தன.

நான்காவது ஐந்தாண்டுத்திட்ட இறுதிக்குள் குறுகிய, இடைக் காலக் கடன்கள் ரூ. 750 கோடி என்ற அளவிற்கும், நீண்டகாலக் கடன்கள் ரூ. 700 கோடி என்ற அளவிற்கும், அளிக்கப்படுமென எதிர்பார்க்கப்படுகின்றது.

பண்ணைக் கடன் அளித்தலில் நிலையான தன்மையை ஏற்படுத்த 1966-67-இல் நடவடிக்கைகள் எடுக்கப்பெற்றன. இதற்காக மாநில அரசுகளுக்கு உதவும் மத்தியத் திட்டம் தொடங்கப்பட்டது. கூட்டுறவு வங்கிகளின் கடனை நிலைப்படுத்தும் நிதிகள் வலுவாக்கப்பட்டன. பல மாநிலங்களிலும் தானியக்கடன் திட்டம் கைக்கொள்ளப்பட்டது. இவ்விதமாகப் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டாலும் கிராமக்கடன் சிக்கல் தீர்க்கப்பட்டுவிடவில்லை. அது எளிதில் தீர்க்க இயலாத ஒரு பெரிய சிக்கலாகவே உள்ளது. சரியான வழிகளிலேயே தீர்வுகள் எடுக்கப்படுகின்றன. எனினும், அத்தீர்வுகள் மாபெரும் கிராமக்கடன் சிக்கலைத் தீர்க்கப் போதுமானவைகளாக இல்லை.

**கிராமக்கடன் முன்னேற்றத்திற்கான வழிமுறைகள்**

1. கிராமக்கடனை அளிப்பதற்கான சிறந்த முறை கூட்டுறவு இயக்கமேயாகும். எனவே, கூட்டுறவுக் கடன் இயக்கத்தை விரிவாக்க முன்னேற்றமடையச் செய்வது இன்றியமையாததாகும்.

2. ஆயினும், கூட்டுறவு இயக்கமானது பரவ பல ஆண்டுகள் பிடிக்கும். ஆகவே, விவசாயிகள் போதுமான கடன் வசதிகளைப் பெறுவதற்கும் சற்று நீண்டகாலம் தேவைப்படும். அந்நீண்டகாலம் வரை மத்திய அரசும், மாநில அரசுகளும் குறுகிய காலக் கடன்களை அளிக்கப் பெருமளவில் உதவ வேண்டும்.

3. அரசு அளிக்கும் 'தக்காவிக் கடன்கள்' எளிதானதாகவும், தாராளமானதாகவும், நேர்மையானதாகவும் ஆக்கப்பட வேண்டும். எனினும், இக்கடன்களை கூட்டுறவுகளின் மூலம் அளிப்பது நன்மை தருவதாகும். இதன் காரணமாகக் கூட்டுறவு இயக்கம் வளரவும் வாய்ப்பு ஏற்படும்; தற்பொழுது கூட்டுறவு இயக்கம் சிறப்பாக வளர்ந்தில்லாத நிலையானது மாறும்.

4. அரசிடம் உள்ள நிதிகளின் அளவு குறைவாகவே உள்ளது. எனவே, அமெரிக்காவில் அமைந்திருக்கக்கூடிய 'உறுதியளிக்கப்பட்டுள்ள கடன் நிறுவனங்கள்' (Guaranteed Credit Organisations) போன்று இந்தியாவிலும் கடன் நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும். இவை இந்திய ரிசர்வ் வங்கியோடு தொடர்புபடுத்தப் படவேண்டும். இதன் மூலம் விவசாயிகள் உறுதியாகக் கடன் பெறும் வாய்ப்புக்கள் ஏற்படும்.

5. இந்திய ரிசர்வ் வங்கி கிராமக் கடன் அளிப்பதில் மேலும் தீவிரமான வழிகளில் ஈடுபட வேண்டும். குறிப்பாக ரிசர்வ் வங்கி இடைக்காலக் கடன்களையும், நீண்டகாலக் கடன்களையும் மேலும் அதிக அளவிற்கு அளிக்கவேண்டும். வேளாண்மை விற்பனை முறை திருத்தப்பட வேண்டும். கிராமக் கடனோடு தொடர்புடைய பல நிலைகளும் இணைக்கப்படுவது இன்றியமையாததாகும்.

6. கிராமச் சேமிப்புக்கள் திரட்டப்பட வேண்டும். இதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களை வளர்க்க வேண்டும். அஞ்சலகங்களில் சிறு சேமிப்புக்கள் பெருக ஊக்கங்கள் அளிக்கப்பட வேண்டும். வணிக வங்கிகளிலும் மக்கள் சேமிக்கும் பழக்கத்தை ஏற்படுத்த வேண்டும். பெரும்பகுதி மக்கட்தொகை வங்கிப் பழக்கத்தைக் கொண்டிருக்கும்போதுதான், ஒருநாட்டின் சேமிப்பு வீதமானது அதிகரிக்கும்.

7. அரசின் அனுமதியளிக்கப்பட்ட கிட்டங்கிகளின் வளர்ச்சி தேவையானதாகும். இவ்விதக் கிட்டங்கிகளின் மூலம் விவசாயிகள் நாட்டின் வங்கி முறையோடு தொடர்பு கொள்ளலாம். கிட்டங்கிகளில் உள்ள வேளாண்மைப் பொருட்களின் மீது விவசாயிகள் வங்கிகளிடமிருந்து குறைந்த வட்டிக்குக் கடன் பெறலாம். இம்முறையின் மூலம் விவசாயிகளை கிராம லேவாதேவிக்காரர்கள் சுரண்டும் நிலையானது மாறும்.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள நடவடிக்கைகள் யாவும் முன்னமேயே எடுக்கப்பட்டு விட்டன. ஐந்தாண்டுத் திட்டங்கள் கூட்டுறவு இயக்க வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளிக்கின்றன. இந்திய ரிசர்வ் வங்கியும் வேளாண்மை நிதிக்காக அதிக மூலதனத்தை அளித்து வருகின்றது. தற்பொழுது விவசாயிகள் நிலவுடைமையைக் கொண்டிருக்காவிட்டாலும், சாகுபடிப் பயிர்களின்மீது கடன்கள் தரப்படுகின்றன. விவசாயிகளின் திருப்பித் தரும் சக்திக்கேற்ப கடன்கள் அளிக்கப்படுகின்றன. எளிதான முறைகளில் விவசாயிகள் விரைவாகக் கடன்களைப் பெற முடிகின்றது. உற்பத்திப் பணிகளுக்கான கடன்களை அளிக்க அரசு முடிவு எடுத்துள்ளது. பெறப்படுகின்ற கடன்கள் விதைகள், உரங்கள், முன்னேற்றமடைந்த வேளாண்மைக் கருவிகள் ஆகியவற்றை வாங்கப் பயன்படுத்தப்பட வேண்டும். அதிக உற்பத்தியைப் பெறுவதற்கு இவற்றை வாங்குவது அவசியமானது என வலியுறுத்தத் தேவையில்லை.

'கூட்டுறவு இயக்கத்தின் மிர்தா குழு' (The Mirdha Committee on Co-operative Movement) வேளாண்மைத்துறை வளர்வதற்

கான வசதிகள் பெருக்கப்பட வேண்டும் ; விவசாயிகள் வாணிப நோக்கோடு வேளாண்மையில் ஈடுபட்டால்தான் உற்பத்தியை உயர்த்த முடியும் என கருத்துத் தெரிவித்தது. 1966-67-இல் கிராமக் கடன் அமைப்புமுறை மாற்றியமைக்கப்பட்டு விவசாயிகள் எளிதில் கடன் பெறும் வசதிகள் செய்யப்பட்டன. 1967-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கூட்டுறவு இயக்கம் வளராதிருந்த அஸ்ஸாம், பீஹார், மேற்கு வங்காளம், ஒரிசா, ராஜஸ்தான் போன்ற மாநிலங்களில் 'வேளாண்மைக் கடன் கழகங்கள்' (Agricultural Credit Corporations) அமைக்கப் பெற்றன. இவ்விதக் கழகங்கள் பல மாநிலங்களிலும் கடன் வசதிகளைப் பெருக்கித் தருமெனலாம். இவை இடைக்காலக் கடன்களையும், குறுகிய காலக் கடன்களையும் அளிப்பவைகளாகும்.

'ஒருங்கிணைந்தக் கிராம கடன் அமைப்புமுறை' போற்றத் தக்க வகையில் பல நன்மைகளையும் அளித்து வருகின்றது. 1951-52-இல் இந்திய வேளாண்மைக் கடனில் கூட்டுறவுத் துறை அளித்தது 3 சதவீதமேயாகும் ; 1961-62-இல் இது 19 சதவீத மாக உயர்ந்தது. மூன்றுவது ஐந்தாண்டுத்திட்ட இறுதிக்குள் கூட்டுறவுத்துறை அளிக்கும் கடன் மொத்தக் கடனில் 35 சதவீத மாக உயருமென எதிர்பார்க்கப்பட்டது. கூட்டுறவுத் துறை அளிக்கும் கடன்கள் அதிகரித்து வருகின்றன. எனினும், அவை வேளாண்மைத்துறைக்குப் போதுமான அளவில் அமைந்திருக்க வில்லை. கிராமக்கடன் சிக்கல் தீர்க்கக்கூடிய ஒன்றேயாகும். ஆனால், கிராமக்கடன் சிக்கலுக்குத் தீர்வுகாண்பது குறுகிய காலத்தில் முடியாததாகும்.

அகில இந்தியக் கிராமக் கடன் கணக்கெடுப்புக் குழுவின் பரிந்துறைகளில் பெரும்பாலானவை செயல் படுத்தப்பட்டன. குழுவின் கருத்துப்படி, ஏப்ரல் 1955-இல் பாராளுமன்றத்தில் இந்திய ஸ்டேட் வங்கிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இதன் விளைவாக இந்திய இம்பீரியல் வங்கி 1955-ஆம் ஆண்டு ஜூலை முதல் நாள் அரசுடைமையாக்கப்பெற்று இந்திய ஸ்டேட் வங்கி யாக மாறியது. ஸ்டேட் வங்கி கிராமத்துறைப் பொருளாதாரத் தில் சேமிப்பை பெருக்க நடவடிக்கைகளை எடுக்கின்றது. முக்கிய மாக முன்னேற்றமடையாத பகுதிகளில் கடன் வசதிகளை அளிக் கின்றது. 1955-ஆம் ஆண்டிற்கும் 1966-ஆம் ஆண்டிற்கும் இடைப் பட்டக் காலத்தில் இந்திய ஸ்டேட் வங்கியின் அலுவலகங்கள் 497 என்ற அளவிலிருந்து 1,388 என்ற அளவிற்கு எண்ணிக்கையில் உயர்ந்தன. கணிசமான அளவில் இவ்வங்கியின் கிளைகள் கிராமப் புறங்களிலும் தொடங்கப்பெற்றன. 1955-ஆம் ஆண்டின் இறுதியில் மக்கட்தொகை 10,000 என்ற எண்ணிக்கைக்குக் குறை

வாக உள்ள நகரங்களில் 138 அலுவலகங்கள் மட்டுமே இருந்தன; டிசம்பர் 1966-இல் இதனுடைய எண்ணிக்கை 319 ஆக உயர்ந்தது. டிசம்பர் 31, 1966-இல் இந்தியா முழுதும் அமைந்திருந்த ஸ்டேட் வங்கியின் அலுவலகங்கள் 1,378 ஆகும். அவற்றுள் 757 அலுவலகங்கள் மக்கட்தொகை 25,000 என்ற எண்ணிக்கைக்குக் குறைவாக இருந்த சிறிய நகரங்களில் அமைந்திருந்தன. டிசம்பர் 31,1966 வரை 163 புதிய கிளைகள் தோற்றுவிக்கப்பட்டன. கிராமங்களிலும், சிறிய நகரங்களிலும் வங்கி வசதிகளைப் பெருக்க ஸ்டேட் வங்கி முயற்சிகளை எடுத்து வருகின்றது.

இந்திய ஸ்டேட் வங்கி தொடங்கப்பட்ட காலம் முதல் எல்லா வகைப்பட்ட கூட்டுறவு நிறுவனங்களுக்கும் நிதியுதவி அளித்து வருகின்றது. கூட்டுறவு வங்கிகளுக்கும், நில அடமான வங்கிகளுக்கும், முன்னேற்ற வங்கிகளுக்கும் இவ்வங்கி கடன்களை அளிக்கின்றது. கூட்டுறவு மத்திய நில அடமான வங்கிகள் வெளியிடும் கடன் பத்திரங்களில் முதலீடு செய்கின்றது. டிசம்பர் 31, 1966 வரை இவ்வங்கிகளின் கடன் பத்திரங்களில் ரூ. 13.5 கோடி என்ற அளவிற்கு ஸ்டேட் வங்கி முதலீடு செய்திருந்தது. டிசம்பர் 31, 1966 வரை கூட்டுறவு வங்கிகளுக்கு ரூ. 42.4 கோடிக் கடன் அளிக்கப்பட்டது. இது கூட்டுறவு மத்திய நில அடமான வங்கிகளுக்கு அளிக்கப்பட்ட நிதியுதவியைத் தவிர்த்ததாகும். உணவுப் பொருட்களின் கொள்முதலுக்காகவும், வேளாண்மைப் பொருட்களை பதனப்படுத்துவதற்காகவும் விற்பனை செய்வதற்காகவும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்காகவும் கடன்கள் அளிக்கப்பட்டன. நில அடமான வங்கிகளுக்கும், முன்னேற்ற வங்கிகளுக்கும், ஸ்டேட் வங்கி ரூ. 4.5 கோடி கடன் அளித்திருந்தது.

வேளாண்மைப் பொருட்களைப் பதனப்படுத்தி விற்பனை செய்ய அளிக்கப்பட்ட நிதியுதவி 1966-இல் அதிகரித்தது. 1966-இல் தொழில் கூட்டுறவுகளும் அதிக நிதியுதவியைப் பெற்றன. கூட்டுறவு வங்கிகளுக்குக் கடன் அளித்ததோடு ஸ்டேட் வங்கி பணத்தை அனுப்பும் பணிகளையும் இலவசமாகச் செய்தது. சிறு தொழில்களின் வளர்ச்சிக்கும் இவ்வங்கி உதவி செய்கின்றது. சிறு தொழில்களின் வளர்ச்சிக்காக 1966-இல் எளிய முறையில் தாராளமாகக் கடன் அளிக்கப்பட்டது. சிறு தொழில்களுக்கு இடைக்காலக் கடன்களும் அளிக்கப்பட்டன. 1966-இல் 316 சிறு தொழில்களுக்கு ரூ. 2.8 கோடிக்கு இடைக்காலக் கடன்கள் தரப்பெற்றன. இவ்வங்கி 83 கிராம முன்னோடி மையங்களை நாட்டின் பல பகுதிகளிலும் குறுகிய, இடைக்கால, நீண்டகாலக் கடன்களை அளிக்கத் தொடங்கியது.

ஆக்கப் பணிகளுக்காக அளிக்கப்படும் இக்கடன்கள் கிராமப்புறங் களில் வேளாண்மை வளர்ச்சிக்கும், தொழில் முன்னேற்றத்திற்கும் உதவும்.

அகில இந்தியக் கிராமக்கடன் கணக்கெடுப்புக்குழுவின் பரிந்துறையின்படி, இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங் களில் கூட்டுறவுத் துறையின் முன்னேற்றத்திற்கான தீவிரத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. கீழ்நிலையில் 15,000 பல நோக்கு, பல கிராமக் கூட்டுறவுகளை ஏற்படுத்தத் திட்டமிடப் பட்டது. ரிசர்வ் வங்கி கிராமக் கடன் திட்டத்தில் முக்கியப் பங்கு வகித்தது.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் கூட்டுறவு வளர்ச் சிக்காக ரூ. 77 கோடி செலவிடப்பட்டது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவுத் துறைக்காக ரூ. 206 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. திறமையான சேவைகளைக் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து பெறவும், வேளாண்மைக் கடனை அதிக அளவிற்கு அடையவும் முதல்நிலை வேளாண்மைக் கடன் சங்கங் களின் எண்ணிக்கை 2,08,000லிருந்து 1,28,000 ஆகக் குறைக்கப் படும். திறமை குறைந்த, வசதியற்ற முதல்நிலை வேளாண்மைக் கடன் சங்கங்கள் முடிவுக்குக் கொண்டுவரப்படும்; அல்லது நல்ல நிலையில் செயலாற்றுகின்ற சங்கங்களோடு இணைக்கப்படும். நான் காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியாண்டில் கூட்டுறவுத் துறையின் மூலம் இடைக்கால, குறுகிய காலக் கடன்கள் சுமார் ரூ. 650 கோடி என்ற அளவிற்குத் தரப்படுமெனக் கணக்கிடப் பட்டுள்ளது. 1965-66-இல் வேளாண்மைக் கடன் சங்கங்களின் மூலம் அளிக்கப்பட்ட இடைக்கால, குறுகிய காலக் கடன்கள் ரூ. 400 கோடியாகும்.

சமீப ஆண்டுகளில் இந்திய ரிசர்வ் வங்கி கூட்டுறவு வங்கி களுக்கு அளித்துவரும் நிதியுதவியின் அளவு கணிசமாக அதிகரித் துள்ளது. இந்தியாவில் வேளாண்மை வளர்ச்சிக்கான பரிசோதனை முறைத்திட்டம் ஏழு மாவட்டங்களில் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. இம்மாவட்டங்களில் வேளாண்மைக் கடன் வசதிகள் தரப்படுகின்றன. ரிசர்வ் வங்கி வேளாண்மைக் கடன் வளரத் தீவிரமான கொள்கையைப் பின்பற்றுகின்றது. இம்மாவட்டங் களில் உள்ள விவசாயிகள் எளிதில் கடனைப் பெறமுடியும். இத்திட்டத்தின் மூலம் கடன் அளிப்பது விவசாயிகளின் பிற உற்பத்திப் பணிகளோடு இணைக்கப்படுகின்றது. விவசாயிகளின் கடனைத் திருப்பித்தரும் திறன் அறியப்பட்டு அதற்கேற்ப கடன் தரப்படுகிறது. உத்தரப் பிரதேசம், பஞ்சாப், ராஜஸ்தான்,

ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு, மத்தியப் பிரதேசம், பீஹார் ஆகிய மாநிலங்களின் ஒவ்வொரு மாவட்டத்திலும் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகின்றது. உரங்கள், விதைகள், பூச்சிக் கொல்லி மருந்துகள், வேளாண்மைக் கருவிகள் தேவையான அளவிற்கு அளிக்கப்படுகின்றன. இத்திட்டத்தை எந்த மாவட்டங்களில் செயல்படுத்துவது என்பதை மாநில அரசுகள் முடிவு செய்தன. இத்திட்டம் மத்திய அரசின் உணவு, வேளாண்மை அமைச்சகத்தால் தொடங்கப் பெற்றது.

வேளாண்மை மறுநிதிக் கழகம் ஜூலை 1, 1963-இல் ஏற்படுத்தப் பட்டது. இது வேளாண்மைக் கடன் வளர்ச்சியின் புதிய முன்னேற்றமாகும். வேளாண்மை வளர்ச்சிக்காக இக்கழகம் நீண்டகால, இடைக்காலக் கடன்களை அளிக்கின்றது. இது தொடங்கப்பட்ட பொழுது அங்கீகரிக்கப்பட்ட மூலம் ரூ. 25 கோடியாகும்; அளிக்கப்பட்ட மூலதனம் ரூ. 5 கோடியாகும். இக்கழகத்திடமிருந்து வேளாண்மை வளர்ச்சிக்காக நிதியைப் பெற ஒரு திட்டம் பொருளாதார, வாணிப நோக்கோடு செயல்பட வேண்டும். உற்பத்தியில் உயர்வு ஏற்படும்வகையில் அத்திட்டம் அமைத்திருக்க வேண்டும். அத்திட்டமானது குறிப்பிட்ட இடங்களில், குறிப்பிட்ட பயிர்களைச் சாகுபடி செய்வதாக அமைய வேண்டும். எளிதாக மேற்பார்வையிட்டு, மதிப்பீடு செய்யும் வகையில் அது அமைந்திருக்க வேண்டும். இக்கழகம் 3 முதல் 5 ஆண்டுகள் வரையான இடைக்காலக் கடன்களையும், 15 ஆண்டுகளுக்குள் திருப்பித்தரத்தக்க நீண்டகாலக் கடன்களையும் அளிக்கின்றது. தவிர்க்க முடியாத சில நிலைகளில் நீண்ட காலக்கடன்களை 20 ஆண்டுகளில் திருப்பித்தரலாம். கடனையும், வட்டியையும் திருப்பி அளிப்பதற்கான உறுதியை மாநில அரசு அளிக்க வேண்டும். இக்கழகம் அளிக்கும் எல்லாவகை நிதிகளின் வட்டி வீதமானது $5\frac{1}{2}$ சதவீதமாகும். ஜூன் 30, 1967 வரை இக்கழகம் 42 திட்டங்களை அங்கீகரித்து ரூ. 35.34 கோடிக்குக் கடன் அளித்தது. இத்திட்டங்களின் மொத்த முதலீடு ரூ. 43.29 கோடியாகும். மூலதனத்தின் பெரும் பகுதி வேளாண்மை மறு நிதிக்கழகத்தால் தரப்பட்டது.

1966-67-இல் இக்கழகம் 15 திட்டங்களை அங்கீகரித்தது. நில வளத்தைக் காக்கவும், நிலத்தை சாகுபடிக்கு ஏற்றதாக மாற்றவும், நிலப்பாதுகாப்பிற்காகவும் கடன்கள் வழங்கப்பட்டன. இரப்பர், தேயிலை, காபி, தேங்காய் போன்றவற்றின் உற்பத்தியைப் பெருக்கவும், மீன் பிடிப்பிற்காகவும் ஊக்கங்கள் அளிக்கப்பெற்றன. இதன் வாயிலாக அஸ்ஸாம், தமிழ்நாடு, பீஹார், கேரளம், மஹாராஷ்டிரம், மைசூர், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்கள்

பயனடைந்தன. இத்திட்டங்களுக்கான மொத்த முதலீடு ரூ. 10.53 கோடியாகும். அதில் வேளாண்மை மறுநிதிக் கழகம் அளித்தது ரூ. 8.53 கோடியாகும். அதாவது, மொத்த முதலீட்டில் 81 சதவீதம் மறுநிதிக் கழகத்தால் அளிக்கப்பட்டது. இந்த 15 திட்டங்களில் 4 திட்டங்களுக்கு மத்திய நில அடமான வங்கிகள் நிதியுதவி செய்தன; 2 திட்டங்களுக்கு மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், 9 திட்டங்களுக்குப் பிற வங்கிகளும் நிதியுதவி அளித்தன. சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள், கிணறுகள் தோண்டுதல், குழாய்க் கிணறுகள் அமைத்தல் ஆகியவற்றிற்கும் உதவிகள் தரப்பட்டன. 1966-67-இல் வேளாண்மை மறுநிதிக்கழகம் நில அடமான வங்கிகளின் கடன் பத்திரங்களில் ரூ. 1.92 கோடி என்ற அளவிற்கு முதலீடு செய்தது.

இந்நடவடிக்கைகள் யாவும் அரசாங்கத்தாலும், ரிசர்வ் வங்கியாலும் எடுக்கப்பட்டு வேளாண்மைக் கடன் சிக்கலுக்கான தீர்வுகள் காணப்படுகின்றன. கிராமக்கடன் சிக்கல் முற்றிலும் தீர்க்கப்படவில்லையென்றாலும், எளிய கடன் வசதிகள் ஓரளவு இன்று பெருகியுள்ளன என்றே கூறவேண்டும். இந்தியா கிராமப் பொருளாதாரத்தையே மிகுதியாகக் கொண்டுள்ள காரணத்தால் கிராமக்கடன் சிக்கலுக்கான தீர்வு முறைகள் கவனமாக எடுக்கப்பட வேண்டும். நம்முடைய ஐந்தாண்டுத் திட்டங்கள் வெற்றி பெறுவதும் கிராமக்கடனைப் போதுமான அளவில் அளிப்பதிலேயே அடங்கியுள்ளதெனலாம். இந்தியாவில் வேளாண்மை வளர்ச்சியடைய கிராமக்கடன் தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும். அந்நியச் செலாவணிப் பற்றுக்குறை நம் நாட்டில் அமைந்திருக்கின்றது; விரைவான மக்கட்பெருக்கமும் ஏற்பட்டு வருகின்றது. இச்சிக்கல்களைத் தீர்க்க வேளாண்மை வளர்ச்சியைப் பெற்று உணவு உற்பத்தியை உயர்த்த வேண்டும். கிராமக்கடன் சிக்கலைத் தீர்ப்பதின் மூலம்தான் வேளாண்மைத் துறையில் விரைவான வளர்ச்சியைப் பெறமுடியும்.

# 26. மக்கட்தொகையும் பொருளாதார முன்னேற்றமும்

## (Population and Economic Development)

ஒரு நாட்டின் பொருளாதார நலன் அந்நாட்டு மக்களின் திறனைப் பொறுத்து அமையும். பொருளாதார முன்னேற்றத் திற்கு உதவுபவைகளாகப் பல காரணிகள் உள்ளன. எனினும், அதிக ஊக்கத்தையும், திறனையும் கொண்ட மக்கள் பொருளாதார முன்னேற்றத்தை எளிதாக்குகின்றனர். திறமையான மக்கட் தொகையைக் கொண்டுள்ள பொருளாதாரத்தில் எளிதில் ஆக்கத்தை அதிகரிக்க முடியும். அதிக அளவு உற்பத்தியையும், தரமான உற்பத்தியையும் பெற அம்மக்கட்தொகை உதவுகின்றது. 'நாடுகளின் செல்வம்' (The Wealth of Nations) என்ற நூலில் ஆடம்ஸ்மித் இதுபற்றிக் குறிப்பிடுகின்றார். உழைப்பு நிதியைப் போன்றது; அது வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்ய உதவுகின்றது என ஸ்மித் கூறுகின்றார். எல்லா நாடுகளிலும், உற்பத்திக் காரணிகளுக்கிடையே உழைப்பே செல்வாக்கு மிக்கதாகத் திகழ்கின்றது. முதலாளித்துவக் கொள் கையைப் பின்பற்றும் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளில் உழைப்பிற்கான ஊதியம் உயர்ந்த அளவில் பெறப்படுகின்றது. சோவியத் ரஷ்யா போன்ற பொது வுடைமைக் கொள்கையைப் பின்பற்றும் நாடுகளிலும் உழைப்பு மிகுதியான செல்வாக்கைப் பெற்றுள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளின் உழைப்பிற்கும், வளர்ச்சியடையாத நாடுகளின் உழைப்பிற்கும் திறமையில் வேறுபாடுகள் மிகுதியாக உள்ளன. மனித உழைப்பால்தான் இயற்கை வளங்கள் பயன்படுத்தத் தக்கப் பண்டங்களாகவும், பணிகளாகவும் மாற்றப்படுகின்றன. எல்லாவிதப் பொருளாதாரப் பண்டங்களும், பணிகளும் உழைப்பாலேயே உருவாக்கப் பெறுகின்றன. மனித உழைப் பாலும், திறனாலும், முயற்சியாலும் எவற்றையும் நிறைவேற்ற முடியும் என்ற எண்ணம் தோன்றியுள்ளது. இவ்விதமாகப் பல நன்மைகளையும் அளிக்கக்கூடிய உழைப்பின் அளிப்பு குறிப்

பிட்ட அளவைவிட அதிகமாக இருந்தால் அது ஒரு பொருளாதாரச் சுமையாக மாறிவிடுகிறது.

வளர்ச்சியடையாத நாடுகள் மக்கட்தொகை மிக்கவைகளாக உள்ளன. மேம்பாடடைந்த நாடுகளில் மக்கட்தொகை அடர்த்தி குறைவாகவே உள்ளது வளர்ச்சியடையாத நாடுகளில் மிகுதியான மக்கட்தொகைப் பெருக்கம் சிக்கலாக அமைகின்றது. பொருளாதார முன்னேற்றத்தைத் தடை செய்வதாக அதிக மக்கட்தொகை உள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளின் விரைந்த பொருளாதார முன்னேற்றத்திற்கு உழைப்புப் பற்றுக்குறையும் ஒரு காரணமாகும். உழைப்பு போதா நிலையால் பல இயந்திரங்களும், கருவிகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இதனால் உற்பத்தி பல மடங்கு உயர்ந்தது. ஆனால் வளர்ச்சியடையாத நாடுகளில் மிகுதியான உழைப்பின் அளிப்பால், புதிய கண்டுபிடிப்புகள் ஏற்படுவதில்லை. அந்நாடுகளில் வேலையின்மைச் சிக்கலும் அமைந்துள்ளது. எந்திர மயமயமாக்குதல் சிக்கலை மேலும் பெரிதாக்கிவிடும். பிறநாடுகளின் கண்டுபிடிப்புகளைப் பின்பற்றுவதில் இவ்விதக் கடின நிலை உள்ளது.

பொதுவாக, தென் ஆசிய நாடுகள் வளர்ச்சியடையாத நாடுகளேயாகும். அந்நாடுகளிலெல்லாம் மக்கட்தொகை நெருக்கம் மிகுதியாக உள்ளது பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகுதியாகப் பெருகும் மக்கட்தொகை தடையாக இருக்கின்றது. ஆனால், அதிக மக்கட்தொகையையும் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தும் வாய்ப்புக்கள் ஏராளமாக இருக்கின்றன. பொருளாதார முன்னேற்றத்தின் வெற்றி ஒரு நாட்டின் மக்கட்தொகையின் நிலையைக் கொண்டு அமையும். முன்னேற்றத்திற்கும் மக்கட்தொகைக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது.

விரைவாக மக்கட்தொகைப் பெருக்கம் ஏற்படுவது எல்லா வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் இயல்பானதாக இருக்கிறது. இயற்கை வசதிகளோடு ஒப்பிடும்போது, இந்நாடுகளில் மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக உள்ளதாகக் கூறப்படுகின்றது. பிற உற்பத்திக் காரணிகளின் அளவை அதிகரிக்க முடிந்தாலும், நிலத்தின் அளவைக் கூட்ட முடியாது. நில வளத்தோடு ஒப்பிடுக் கருதும்போது, மக்கட்தொகை சுமையாக உள்ள நிலை அதிக அளவில் ஆசிய நாடுகளிலேயே உள்ளது. ஆசியாவில் உள்ள பல பின்தங்கிய நாடுகளில் இந்நிலை உள்ளதாகக் கூறலாம். தென் ஆசியாவைத்தவிர சீனா, வடக்கு ஆப்பிரிக்கா (எகிப்து உட்பட), இலத்தீன் அமெரிக்கா போன்ற ஒரு சில நாடுகளில்தான் மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக இருக்கின்றது. இலத்தீன்

அமெரிக்காவில்கூட 'கேரிப்பியன்' (Caribbean) பகுதியைத்தவிர பிற பகுதிகளில் மக்கட்தொகை அடர்த்தி குறைவாகவே உள்ளது. அப்பகுதிகளில் பயன்படுத்தப்பெறாத இயற்கை வளங்களும் அமைந்துள்ளன. புதுமையான தொழில்நுட்ப உற்பத்தி முறைகளால் இவ்வளங்களைப் பயன்படுத்திக் குறைந்த செலவில் பல பொருட்களை உற்பத்தி செய்ய இயலும். மேற்கு ஆசியாவில் ஈராக், ஈரான், டர்க்கி, சிரியா ஆகிய நாடுகளிலும் இந்த நிலையே அமைந்துள்ளது. பொருளாதார முன்னேற்றத்திற்கு அதிக அளவு உழைப்பின் அளிப்பு ஆப்பிரிக்காவின் பெரும்பாலான பகுதிகளில் தேவைப்படுகின்றது. மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக இருந்தால்தான் முன்னேற்றத்தைப் பெற இயலும் என்ற நிலையும் இந்நாடுகளில் அமைந்துள்ளது.

இவ்வாறு பெரும்பாலான பின்தங்கிய நாடுகள் அதிக மக்கட்தொகையால் பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெற முடியவில்லை. வேறு சில வளர்ச்சி குன்றிய நாடுகள் மக்கட்தொகைப் போதா நிலையால் முன்னேற்றத்தைப் பெறுவது கடினமாக அமைகின்றது. ஆனால், வளர்ச்சியடைந்த நாடுகளில் பல குறைவான மக்கட்தொகை நெருக்கத்தையே கொண்டுள்ளன. இங்கிலாந்து, ஜப்பான் போன்ற நாடுகள் மக்கட்தொகை மிகுதியாகப் பெருகிய காலத்திலேயே விரைவான முன்னேற்றத்தைப் பெற்றன. ஜப்பான் இயற்கை வளங்களை மிகுதியாகக் கொண்டில்லாத நாடாகும். பல உலகநாடுகளில் இருந்து மூலப்பொருட்களை இறக்குமதி செய்து, பலவகைப்பட்ட தொழில் பொருட்களை ஜப்பான் ஏற்றுமதி செய்கின்றது. இங்கிலாந்தில் தொழில் புரட்சிக் காலத்தில் மக்கட் பெருக்கம் மிகுதியாகவே இருந்தது. எனினும், பல கருவிகளும், இயந்திரங்களும் கண்டுபிடிக்கப்பட்டு பல பெரிய தொழில்கள் தொழிற் புரட்சிக் காலத்தில் வளர்ச்சியடைந்தன. தொழில்களுக்குத் தேவையான மூலப்பொருட்கள் காலனி நாடுகளில் இருந்து இறக்குமதி செய்யப்பட்டது. மக்கட்தொகைப் பெருக்கத்தால் உள்நாட்டில் தேவைகள் அதிகரித்தன. காலனி நாடுகளும் செய்பொருட்களைப் பெறும் சந்தைகளாக இருந்தன. இவ்வாறு மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக இருந்த காலத்தில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்ற ஒருசில நாடுகளும் உள்ளன. அமெரிக்கா போன்ற நாடுகளில் பொருளாதார வளர்ச்சியின் வேகம் உழைப்பின் குறைவான அளிப்பால் ஓரளவு தடைப்பட்டதாகக் கூறலாம். அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சி நிலைகளின் தொடக்கத்தில் உழைப்புப் பற்றாக்குறை இருந்தது. குடியேற்றக் காலத்தில் விரைவான வளர்ச்சி

அங்கு தோன்றவில்லை. இங்கிலாந்து, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளிலிருந்து மக்கட்தொகை அமெரிக்காவில் குடியிறங்கிய பிறகு தான் விரைவான பொருளாதார முன்னேற்றம் தோன்றியது. இங்கிலாந்து தவிர பிற ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் மக்கட்தொகை அமெரிக்காவிற்குக் குடிபெயர்ந்து சென்றது. இந்நிலைகளால் மக்கட்தொகையின் அளவிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

### மக்கட்தொகைப் பரிமாணங்கள் (Dimensions of Population)*

பொருளாதார முன்னேற்றதில் செல்வாக்குள்ளவைகளாக மக்கட்தொகைப் பரிமாணங்கள் பல உள்ளன. அவற்றில் முக்கியமானவைகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம் :

(I) மக்கட்தொகையின் தரம் : கல்வி, ஆரோக்கியத்தின் தரம் போன்ற காரணிகளின் அளவைக் குறிப்பது.

(II) மக்கட்தொகையின் அளவு : ஒரு நாட்டிலோ அல்லது ஒரு குறிப்பிட்ட பிரதேசத்திலோ எவ்வளவு பேர்கள் இருக்கின்றார்கள் என்பதை உணர்த்துவது.

(III) மக்கட்தொகையின் வளர்ச்சி வீதம் : ஒவ்வொரு ஆண்டும் மக்கட்தொகைக் குறைவையோ, அதிகரிப்பையோ சதவீத அளவில் தருவது.

(IV) மக்கட்தொகையின் கலவை : ஆண், பெண் மக்கட்தொகையின் வீதம் ; வெவ்வேறு வயதுப் பிரிவுகளில் உள்ள மக்கட்தொகையின் வீதம் போன்றவற்றைக் குறிப்பது.

(V) மக்கட்தொகையின் பகுப்பு : பொருளாதாரத்தின் பல பணிகளோடும் தொடர்புடைய உழைப்பாளர்களின்

* மக்கட்தொகைப் பரிமாணங்கள் — Dimensions of Population :

மக்கட்தொகையின் தரம்—Quality of Population.

மக்கட்தொகையின் அளவு—Size of Population.

மக்கட்தொகையின் வளர்ச்சி வீதம்—Rate of Growth of Population.

மக்கட்தொகையின் கலவை—Composition of Population.

மக்கட்தொகையின் பகுப்பு—Distribution of Population.

மக்கட்தொகையின் வளர்ச்சி வேறுபாடுகள்—Population Growth Differentials.

வீதம்; வெவ்வேறு பகுதிகளில் வாழ்கின்ற மக்கட் தொகையின் வீதம் (உதாரணமாக கிராம மக்கட் தொகை, நகர மக்கட்தொகை) ஆகியவற்றை உணர்த்துவது.

(VI) மக்கட்தொகையின் வளர்ச்சி பேறுபாடுகள்.

இவற்றில் முக்கியமான முதல் நான்கையும்பற்றி கீழ்க்கண்ட வாறு விளக்கலாம்:

1. **மக்கட்தொகையின் தரம்** (Quality of Population)

உழைப்பானது பல நாடுகளுக்கிடையே தரத்தில் வேறுபடு கின்றது. ஒரு நாட்டிற்குள்ளாகவே பல பகுதிகளிலும் உழைப்பின் தரத்தில் வேறுபாடுகள் உள்ளன. உழைப்பின் தரத்தைக் கல்வி, ஆரோக்கியம், சத்துள்ள உணவு ஆகியவற்றால் உயர்த்த முடியும். சிறந்த தலைமையாலும், நல்ல அரசியல் அமைப்பாலும் உழைப்பை அதிக அளவு உற்பத்தியைத் தரும் வகையில் பயன் படுத்தலாம். பொருளாதார முன்னேற்ற வீதத்தை நிர்ணயிக் கின்ற பல காரணிகளில் மக்களின் தரமும் ஒன்றாக அமை கின்றது. வேளாண்மை உழைப்பாளர்களும், தொழில் உழைப் பாளர்களும் தரமுள்ள உழைப்பைத் தந்தால்தான் நாட்டின் மொத்த ஆக்கத்தை உயர்ந்த அளவில் பெற முடியும். திறமையான பொறியாளர்கள், தொழில்நுணுக்க வல்லுநர்கள், நிர்வாகிகள் தொழில் முயல்வோர்கள் போன்றபலரும் பொருளாதார முன்னேற் றத்தை விரைவுபடுத்த உதவுகின்றனர். உழைப்பின் உற்பத்தித் திறனைப் பெருக்க மக்கள் கல்வியறிவு பெற்றவர்களாக இருக்க வேண்டும்; ஆரோக்கியமுள்ளவர்களாக இருத்தல் வேண்டும்; நல்லுணவைத் தேவையான அளவிற்குப் பெறுபவர்களாகவும் இருக்க வேண்டும். உழைப்பாளர்கள் வலிமையைக் கொண்டவர் களாக, திறன் மிக்கவர்களாக இருத்தல் வேண்டும். ஒருநாடு பல இயற்கை வளங்களைக் கொண்டிருந்தாலும், தரமான உழைப்பைத் தரக்கூடிய மக்கள் இருந்தால்தான் அவ்வளங்களைப் பயன்படுத்தி முன்னேற்றத்தை எளிதில் பெற இயலும். இதைப்போன்றே அதிக மூலதனம், தொழில்நுணுக்கம் ஆகியவை இருந்தாலும்கூட அவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தத் திறமையான உழைப் பாளர்கள் தேவைப்படுகின்றார்கள். உற்பத்தியைப் பல மடங்கு உயர்த்தவும், தரமான பொருட்களை உற்பத்தி செய்யவும், முன்னேற்றமான உற்பத்தி முறைகளைப் பின்பற்றவும் தரமான மக்கள் தேவைப்படுகின்றனர்.

## II. மக்கட்தொகையின் அளவு (Size of Population)

ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியைக் கொண்டுள்ள நாட்டில் மிகுதியான மக்கட்தொகை இருந்தால், தலா வருவாய் குறைந்த அளவில் அமையும். அதே அளவு உற்பத்தியைக் கொண்டுள்ள வேறொரு நாட்டில் மக்கட்தொகையின் அளவு குறைவாக இருந்தால், தலா வருவாய் உயர்ந்த அளவில் அமையும். ஆனால், அதிக மக்கட்தொகை உற்பத்தியை உயர்த்த பல வழிகளில் உதவுகின்றது. அது பரந்த சந்தையை அளிப்பதால் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை அளிக்கின்றது. அதிக மக்கட்தொகையும், பரந்த சந்தையும் 'வேலைப்பகுப்பு முறையைப்' (Division of Labour) பின்பற்றத் தூண்டுகின்றன. பலவிதமான உற்பத்திச் சிக்கனங்களும் பெறப்படுகின்றன. குறைந்த மக்கட்தொகையின் மூலம் ஒரு நாட்டில் உள்ள எல்லா வளங்களையும் சிறப்பாகப் பயன்படுத்த முடியாது. ஒரு நாட்டின் எல்லா வசதிகளையும் உயர்ந்த அளவிற்குப் பயன்படுத்த அதிக மக்கட்தொகை தேவைப்படுகின்றது.

### உழைக்கின்ற மக்கட்தொகையின் அளவு

மக்கட்தொகையின் பெரும் பகுதியினர் ஆக்கப்பணிகளில் ஈடுபட்டிருக்க வேண்டும். மக்கட்தொகையின் பெரும்பகுதி உற்பத்திக்காக உழைப்பைத் தருவதாக இருந்தால், முன்னேற்றத்தைப்பெற அதிக வாய்ப்புகள் ஏற்படும். உழைக்கின்ற மக்கட்தொகையின் அளவு ஆண்-பெண் வீதத்தைப் பொறுத்தும், மணமான பெண்களின் எண்ணிக்கையைப் பொறுத்தும் அமையும். தொழில் முன்னேற்றம், நகரங்களின் பெருக்கம், வெவ்வேறு வயதுப் பிரிவுகளில் உள்ள மக்கட்தொகை ஆகியவற்றைச் சார்ந்தும் உழைக்கின்ற மக்கட்தொகையின் அளவு அமைகின்றது.

## III. மக்கட்தொகையின் கலவை (Composition of Population)

மக்கட்தொகைப் பெருக்க வீதமானது தென்கிழக்கு ஆசிய நாடுகளில் அதிகமாக உள்ளது. இந்நாடுகளின் மக்கட்தொகையில் பெரும்பகுதி குழந்தைகளின் எண்ணிக்கையாகவே இருக்கிறது. இதனால் குறைந்த அளவு உழைப்பைக் கொண்டு மிகுதியான நுகர்விற்கான உற்பத்தியைச் செய்யவேண்டியுள்ளது. குழந்தைகளின் எண்ணிக்கை மக்கட்தொகையில் குறைவாக இருக்கவேண்டும். இதற்கு விரைவான மக்கட்தொகைப் பெருக்கத்தை குறைப்பது இன்றியமையாதது.

குழந்தைகளின் எண்ணிக்கை குறைவாகவும், உழைப்பாளர்களின் எண்ணிக்கை அதிகமாகவும் இருந்தால் தலா வருவாயை

உயர்த்த முடியும். தலா வருவாய் உயர்வின் மூலம் உழைப்பாளர்கள் பல நன்மைகளையும் பெற இயலும். உணவு, உடை, குடியிருப்பு, கல்வி, மருத்துவம் போன்ற பல வசதிகளையும் வருவாய் உயர்வால் அடையலாம். பின்தங்கிய பொருளாதாரங்களில் உழைக்கும் திறன் குறைவாக உள்ளமைக்கு கல்வியறிவின்மையும், சத்துள்ள உணவின்மையும், ஆரோக்கியமற்ற நிலையும் காரணங்களாகின்றன. இதன் காரணமாக உழைப்பு நீண்ட நேரத்திற்குத் திறமையான பணியை ஆற்றுவது முடியாத ஒன்றாகின்றது. அதிகத் தலா வருவாய் சேமிப்பு வீதத்தை உயர்த்துகின்றது. நேரடி முதலீட்டின் அளவையும் அதிகரிக்கின்றது. அரசும் வரி விதிப்பின் மூலமாகக் 'கட்டாயச் சேமிப்பை' (Forced Saving) ஏற்படுத்தலாம். அரசின் வரி வருவாய் உயர்வதோடு, உழைப்பாளர்களின் நுகர்வுச் செலவுகளும் வரிவிதிப்பு முறையால் கட்டுப்படுத்தப்படுகின்றன.

அரசின் சேமிப்போடு, மக்களின் சேமிப்பும் பெருகும்போது தலா வருவாய் மேலும் பெருக வாய்ப்பு ஏற்படுகின்றது. ஆனால், ஆரம்ப நிலையில் தலா வருவாயை உயர்த்த மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது நல்லது. தலா வருவாயில் உயர்வு ஏற்படத் தொடங்கிவிட்டால், அது தொடர்ந்து நீடிக்கும் தன்மையைப் பெற்றுவிடும். மக்கட்தொகைப் பெருக்கம் குறையும்போது உற்பத்திச் செலவும் குறைய வாய்ப்பு உண்டு. ஏனெனில், பிறப்புக் காலங்களில் அதிக அளவு உற்பத்திப் பணிகள் தடைப்படுவது குறைக்கப்படுகின்றது. பிறப்பு வீதத்தைக் குறைத்தால் இறப்பு வீதமும் குறைந்துவிடும். பேறு காலங்களின் இறப்பு வீதம், குழந்தைகளின் இறப்புவீதம் ஆகியவை குறைகின்ற நிலையே இதற்குக் காரணமாக அமைகின்றது. மேலும், பிறப்பு வீதத்தைக் குறைக்கும்போது மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதோடு, விரைவான வருவாய்ப் பெருக்கமும் ஏற்படுகின்றது. பொது ஆரோக்கிய வசதிகளைப் பெறுவதற்குத் தேவையான நிதி வசதியும் கிடைக்கின்றது. இறப்பு வீதம் குறைகின்ற நிலையாலும் வருவாயைப் பெருக்க இயலும். ஏனெனில், இறப்பு வீதம் குறையும்போது நோய்களுக்காகச் செலவிடப்படுகின்ற செலவுத் தொகையும் குறைகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு, இறப்புக்களுக்கான செலவுகள் மிக அதிக அளவில் செய்யப்படுகின்றன. எனவே, இந்நாடுகளில் பிறப்பு, இறப்பு வீதங்களைக் குறைத்து உற்பத்திக்குதவாத இச்செலவைக் குறைக்க வேண்டும்.

பின்தங்கிய நாடுகளில் மக்கட்தொகையின் கலவை முன்னேற்றத்திற்குச் சாதகமாக அமைந்திருப்பதில்லை. உழைப்பவர்களின் வீதம் மொத்த மக்கட்தொகையில் குறைவாக உள்ளது. பிறப்பு

வீதமானது அதிக அளவு குறைக்கப்படாவிட்டாலும், இறப்பு வீதம் பலவித மருத்துவ வசதிகளால் சிறப்பான அளவிற்குக் குறைக்கப்பட்டுள்ளது. இந்நிலையாலும் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மக்கட்தொகை மிகுதியாக உள்ளது. வளர்ச்சியின் நன்மைகளைப்பெற பிறப்புவீதம் குறைக்கப்பட வேண்டும்.

## IV. மக்கட்தொகை வளர்ச்சி வீதம் (Rate of Growth of Population)

பொருளாதார முன்னேற்ற வீதத்தை நிர்ணயிக்கும் முக்கிய காரணியாக மக்கட்தொகை வளர்ச்சிவீதம் அமைகின்றது. மக்கட்தொகைப் பெருக்கத்திற்குப் பிறகே மிகுதியான வருவாய்ப் பெருக்கம் ஏற்பட்டது என்பதை பல நாடுகளின் வரலாறுகள் உணர்த்துகின்றன. ஆனால், குறிப்பிட்ட அளவிற்குமேல் மக்கட் தொகை பெருகும்போது, வருவாய்ப் பெருக்கத்திற்கு அது தடை யாக அமைகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளின் மிகுதியான மக்கட்தொகைப் பெருக்கம் வளர்ச்சியைத் தடை செய்கின்றது. தலா வருவாய் குறைந்த அளவிலேயே பெறப்படுகின்றது. தேசிய வருவாய் உயர்ந்த வீதத்தில் அதிகரித்தாலும்கூட, தலா வருவாய் வீதம் குறைந்த அளவிலேயே அதிகரிக்கின்றது. பின்தங்கிய நாடு களில் இந்நிலை அமைந்துள்ளமைக்கு முக்கியக் காரணம் அதிக மக்கட்தொகைப் பெருக்கமேயாகும். எனவே, மக்கட்தொகைப் பெருக்கம் தீவிர முறைகளைப் பின்பற்றிக் குறைக்கப்பட வேண்டும். பிறப்பு வீதமானது கட்டுப்படுத்தப்படாவிட்டால், பெறப்படு கின்ற வருவாய் உயர்வின் மூலம் மக்கள் நன்மைகளைப் பெற இயலாது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் தீவிர மக்கட்தொகைக் கட்டுப்பாடு பொருளாதார முன்னேற்றத்தைப் பெற மிகத் தேவையான ஒன்றாகும்.

மேம்பாடடைந்த நாடுகள் மக்கட்தொகைப் பெருக்கத்தில் மூன்றுவித நிலைகளைக் கொண்டிருந்தன. முதல் நிலையில், பிறப்பு வீதமும் இறப்பு வீதமும் உயர்வாக இருந்தன. இரண்டாவது நிலையில், பிறப்பு வீதமானது அதிகமாக இருந்தபோது இறப்பு வீதமானது குறைவடைந்தது. ஆரோக்கிய வசதிகள், சத்துள்ள உணவுகள், சுகாதார வாழ்க்கை போன்றவைகளால் இறப்புவீத மானது குறைந்துவிட்டது. மக்களுடைய வருவாயும் உயர்ந்து விட்டதால், விரைவான மக்கட்தொகைப் பெருக்கமானது ஏற்பட்டது. மூன்றாவது நிலையில், பிறப்பு வீதமும் இறப்பு வீதமும் நிலையான குறைந்த அளவில் இருந்தன. இறுதி நிலையில் பிறப்பு வீதம் குறைவடைகின்றமைக்கான பல காரணங்களைக் கூறலாம்.

தொழில் நகரங்களின் வாழ்க்கை மக்களிடையே அறியாமையை அகற்றுகின்றது. மக்களிடையே விழிப்புணர்ச்சி தோன்றுகின்றது. பழக்க வழக்கங்களில் மாறுதல்கள் ஏற்பட்டு, மக்கள் எதையும் திட்டமிட்டுச் செய்கின்றனர்கள். அளவான குடும்பமே வளமான வாழ்வை அளிக்கும் என்பதை மக்கள் உணர்கின்றனர்கள் ; திட்டமிட்ட குடும்பத்தைப் பெற்று வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொள்ள விரும்புகின்றனர்கள். பெரிய குடும்பம் வாழ்க்கைத் தரத்தைக் குறைத்துவிடும் என்பதை அவர்கள் உணர்ந்து விடுகின்றனர்கள்.

தொழில்கள் பெருகி நகரங்கள் தோன்றும்போது பல பண்டங்களும், பணிகளும், பொழுதுபோக்கு வசதிகளும் கிடைக்கின்றன. கிராமப்புறங்களில் இவ்வித வசதிகள் இல்லாமையால்தான் மக்கட்தொகைப் பெருக்கம் மிகுதியாக உள்ளது. நகர மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் கிராம மக்கட்தொகைப் பெருக்க வீதமானது உயர்வாக உள்ளது. இதற்குக் காரணம் நகர்ப்புற மக்களின் தரமான வாழ்வேயாகும். வருவாய் உயர்வையும், கல்வியையும், தரமான வாழ்க்கையையும் கிராம மக்களைப் பெறச் செய்வதின் மூலம் மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும்.

பொருளாதார முன்னேற்றம் சமுதாய வளர்ச்சியையும் தரக்கூடியது. முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தில் சமுதாயப் பெயர்ச்சியும் அமைகின்றது. அளவான குடும்பத்தைக் கொண்டுள்ள ஒருவர் தன்னுடைய நிலையையும் உயர்த்திக்கொள்ளலாம் ; தன்னுடைய குடும்ப நலனையும் பெருக்கிக் கொள்ளலாம். தன்னுடைய குழந்தைகளின் எதிர்காலத்தையும் ஒளிமயமாக்கலாம். பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்ட நிலையில் குறைந்த அளவே குழந்தைகள் செல்வங்களாகக் கருதப்படுகின்றன ; மிகுதியான குழந்தைகள் சுமைகளாக எண்ணப்படுகின்றன. ஒரு குழந்தையின் பிறப்பால் மிகுதியான செலவுகள் பிடிக்கின்றன. குழந்தைகளுக்கான கல்வி வசதிகள், பயிற்சி வசதிகள் ஆகியவைகளுக்காக அதிகம் செலவிட வேண்டியுள்ளது. குழந்தைகளுடைய உழைப்பை உற்பத்திப்பணிகளில் இன்று அதிக அளவிற்கு ஈடுபடுத்துவதில்லை. இங்கிலாந்தின் தொழிற்புரட்சிக் காலத்தில் உழைப்புப் பற்றுக்குறையால், சிறுவர்களின் உழைப்பும் பயன் படுத்தப்பெற்றது. ஆனால், அந்நிலையானது பின்தங்கிய நாடுகளில் கூட இன்று அமைந்திருக்கவில்லை. மிகக் குறைந்த அளவிற்கு மட்டுமே இன்று சிறுவர்களின் உழைப்பு ஆக்கப் பணிகளில் பயன் படுத்தப்படுகின்றது.

பொருளாதார மேம்பாட்டின் விளைவால் ஏற்படுகின்ற நாகரிக முன்னேற்றம் கூட்டுக் குடும்ப நிலையை மாற்றுகின்றது. நகரங்கள் தோன்றுகின்றன. கணவன், மனைவி, குழந்தைகளைக் கொண்ட தனிக் குடும்பங்கள் ஏற்படுகின்றன. கூட்டுக் குடும்ப முறைகளில் சிறு வயதிலேயே மணங்கள் முடிக்கப்படுகின்றன. திருமண வயது குறைவாக இருக்கும்போது பிறப்பு வீதம் உயர்வாகவே உள்ளது. திருமணத்தைத் தள்ளிப்போடுவதின் மூலம் அதிகக் குழந்தைகளின் பிறப்பைத் தவிர்க்க இயலும். நாகரிகம் வளர்கின்ற ஒரு சமுதாயத்தில் திருமண வயதும் வளர்ந்து செல்கின்றது. பெற்றோர்களே குழந்தைகளைக் காக்கவேண்டிய நிலை தனிக்குடும்ப முறையில் அமைந்துள்ளது. எனவே, தங்கள் நலனிற்காகவும், குழந்தைகளின் நலனிற்காகவும் குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்துகின்றனர்.

வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு வீதமும், இறப்பு வீதமும் உயர்வாக இருப்பது இயல்பு. இறப்பு வீதம் அதிகமாக உள்ள நிலையில் மக்கள் பெரிய குடும்பத்தையே விரும்புகின்றனர். அதிக அளவு குழந்தைகளைப் பெற அவர்கள் விரும்புவதின் காரணம் சில குழந்தைகள் இறந்தாலும், வேறு சில குழந்தைகளையாவது பெற்றிருக்கலாம் என்ற எண்ணமாகும். ஆனால், தற்பொழுது பல பின்தங்கிய நாடுகளிலும் இறப்பு வீதமானது குறைந்துவிட்டது. இறப்பு வீதம் குறைந்துவிட்டது என்றாலும்கூட கிராமப்புறங்களில் மருத்துவ, ஆரோக்கிய வசதிகள் முழுமையாகச் செய்து தரப்படவில்லை. இறப்பு வீதத்தைக் குறைப்பதின் மூலமாகவும் பிறப்பு வீதத்தைக் குறைக்க இயலும்.

பல மேம்பாடடைந்த நாடுகளும் மக்கட்தொகை வளர்ச்சியில் உள்ள மூன்று நிலைகளில் இரண்டு நிலைகளைக் கடந்துவிட்டன. மூன்றாவது நிலையாகிய குறைந்த பிறப்பு வீதத்தையும், குறைந்த இறப்பு வீதத்தையும் அவை கொண்டுள்ளன. பொருளாதார முன்னேற்றத்தின் ஆரம்ப நிலையில் உள்ள நாடுகள் இரண்டாவது நிலையாகிய உயர்ந்த பிறப்பு வீதத்தையும், குறைந்த இறப்பு வீதத்தையும் கொண்டுள்ளன எனக் கூறலாம். இந்தியாவிலும் இந்நிலையே அமைந்திருக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தின் முதல் சில நிலைகளில் இறப்பு வீதமானது குறையும்போது, பிறப்பு வீதமானது உயர்ந்த அளவிலேயே அமைகின்றது. சில சமயங்களில் பிறப்பு வீதம் மேலும் அதிகரிப்பதுண்டு. அதற்குக் காரணம் மக்கள் அதிக வருவாயைப் பெறும்போது குடும்பத்தைப் பெரிய அளவில் பெற விரும்புவதுண்டு. பெரிய குடும்பங்களைக் காக்கும் திறனை அவர்கள் அதிக வருவாயால் பெறுகின்றனர்.

பிறப்பு வீதத்தைக் குறைக்கும் சக்திகளுக்குச் சமுதாய எதிர்ப்புகள் தோன்றுகின்றன ; ஆனால், இறப்பு வீதத்தைக் குறைக்கும் சக்திகளுக்கு சமுதாய எதிர்ப்புகள் தோன்றுவதில்லை. இவ்விதப் பொருளாதார முன்னேற்ற நிலையில், வருவாய் வளர்ச்சி வீதமானது மக்கட்தொகை வளர்ச்சி வீதத்தைவிட உயர்வாக இருத்தல் வேண்டும். இவ்வாறு இல்லாவிட்டால் பொருளாதார முன்னேற்ற முறைகளும், கொள்கைகளும், திட்டங்களும் தோல்வியை அடைய நேரிடும். வளர்ச்சியடையாத நாடுகளின் முன்னேற்றத் திட்டங்கள் வெற்றியடைய மக்கட்தொகைப் பெருக்கம் குறைக்கப்பட்டே ஆகவேண்டும்.

விரைவான மக்கட்தொகைப் பெருக்கம் மக்களின் சேமிக்கும் திறனைக் குறைத்து விடுகின்றது. சில வளர்ச்சி குன்றிய நாடுகளில் தற்பொழுதுள்ள தலாவருவாயை நிலைநிறுத்தும் அளவிற்குப் போதுமான சேமிப்புக்கள்கூட செய்யப்படுவதில்லை. வெளிநாட்டு நிதி உதவிகள் இந்நாடுகளில் பெறப்படுகின்றன. பெரிய குடும்பத்திற்கான செலவினங்கள் அதிகமாக உள்ளன. எனவே, சேமிக்கும் திறன் அக்குடும்பங்களுக்கு அமைந்திருப்பதில்லை. ஆனால், அதே அளவு வருவாயைப் பெறும் சிறிய குடும்பங்களால் சேமிக்க இயலுகின்றது. இவ்வாறு குடும்பங்களின் அளவாலும் ஒரு நாட்டின் சேமிப்பு வீதமானது அமைகின்றது.

சிலருடைய கருத்துப்படி, மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தாமல் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியாது. ஆனால், மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும்வரை முன்னேற்றத் திட்டங்களை மேற்கொள்ளத் தேவையில்லை எனக்கருதுவது தவறானதாகும். முன்னேற்றமடைந்த தீவிரக் கொள்கைகளை அரசு கைக்கொண்டு மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். இறப்பு வீதத்தைக் குறைத்து பிறப்பு வீதத்தைக் குறைக்க பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது இன்றியமையாதது. மருத்துவ அறிவைப் பரப்புவதின் மூலமாகவும் பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும். ஆனால், அதிக வருவாய் பெறுபவர்கள்தான் இவ்வித மருத்துவ வசதிகளைப் பெற முடிகின்றது. வருவாயில் உயர்வு ஏற்படாதபோது இவ்வித வசதிகளைப் பெறமுடியாதவர்களாக குறைந்த வருவாய் பெறுபவர்கள் இருக்கின்றனர். வளர்ச்சியடையாத நாடுகளில் பெரும்பகுதி மக்கட்தொகை குறைந்த வருவாயை மட்டுமே பெறுகின்றது. வசதிகள் உயரும்போது வருவாயும் உயர்ந்தால்தான் மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் அதிக வருவாய் பெறும் வகுப்பினர் மருத்துவ வசதிகளைப் பெறுகின்றனர். மருத்துவ அறிவைப் பரப்புவதின் மூலமாக இவ்வகுப்பினரிடையே பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும். இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அதிக வருவாய் பெறுபவர்களின் மக்கட்தொகைப் பெருக்க வீதம் உயர்வாக உள்ளது எனக்கூற இயலாது. நகர்ப்புறங்களில் உள்ள அதிக வருவாய் பெறுபவர்களின் குடும்பங்கள் அளவில் சிறியவைகளாக இருக்கின்றன. கிராமப் புறங்களில் மிகக்குறைந்த வருவாய் பெறுபவர்களிடையே மக்கட்பெருக்க மானது மிக உயர்ந்த அளவில் உள்ளது. வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்களின் பெருக்கமோ, வளர்ச்சியடையாத இந்தியா போன்ற நாடுகளில் மிகுதியாக உள்ளது. மேலும், நகர்ப்புறங்களைச் சார்ந்தவர்கள் குடும்பநலத் திட்டங்களை அறிந்திருக்கின்றனர்; குடும்பக் கட்டுப்பாட்டு முறைகள் பலவற்றையும் அவர்கள் உணர்ந்திருக்கின்றனர். கிராமப் புறங்களில் குடும்பக் கட்டுப்பாட்டுச் சாதனங்களை ஒரு சிலரே உணர்ந்துள்ளனர்.

தற்பொழுது இந்தியாவில் ஒரு சில கருத்தடை முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. 'நிரோத்' போன்ற கருத்தடை இரப்பர் சாதனங்கள் அரசின் உதவியால் குறைந்த விலையில் விற்பனை செய்யப்படுகின்றன. நகர்ப்புறங்களுக்கு ஓரளவு பொருந்தும் இவை கிராமப்புறங்களுக்குப் பொருந்தாது என சொல்லப்படுகின்றது. ஏனெனில், கிராமங்களில் பலரும் சிறிய வீடுகளில் வசிக்கின்றனர். இரவில் பலரும் ஒரே அறையில் இருப்பதைத் தவிர்க்க இயலாது. இந்நிலையால் எளிதில் இவ்விதக் கருத்தடைச் சாதனங்களைப் பயன்படுத்துவது முடிவதில்லை. நிறைவான கருத்தடைச் சாதன முறை நம் நாட்டில் தேவைப்படுகின்றது. பலரும் கருத்தடை மாத்திரைகளைப் பரிந்துரைக்கின்றனர். தற்பொழுது இவ்வித மாத்திரைகள் கிடைக்கப் பெற்றாலும், அவை அதிக விலைகளிலேயே விற்பனை செய்யப்படுகின்றன. வருவாய் மிகுதியாகப் பெறும் வகுப்பினர் மட்டுமே இவற்றை வாங்கும் திறனைக் கொண்டுள்ளனர். அரசின் ஆதரவோடு கருத்தடை மாத்திரைகள் உற்பத்தி செய்யப்பெற்று குறைந்த விலையில் விற்பனை செய்யப்பட வேண்டும். மிகக்குறைந்த வருவாய் பெறுபவர்களும்கூட இவற்றை வாங்கும் அளவிற்கு விலைகள் குறைவாக இருத்தல் அவசியமாகும். இவற்றை உற்பத்தி செய்ய தொடக்கத்தில் மிகுதியான செலவு பிடித்தாலும், நீண்ட காலத்தில் உற்பத்திச் செலவைக் குறைத்து விடலாம். கிராமப் புறங்களில் உள்ளவர்களும் இக்கருத்தடை மாத்திரைகளை எளிதில் பயன்படுத்தலாம். இம்மாத்திரைகளை உற்பத்தி செய்வதற்கு

முதலில் அதிக முதலீடு தேவைப்படுமென்றாலும், அதன் மூலம் ஏற்படக்கூடிய நீண்டகால நன்மை நம் நாட்டிற்குத் தேவைப் படுகின்றது. குடும்ப நலத் திட்டத்திற்காகப் பல கோடி ரூபாய்கள் இன்று மத்திய அரசால் செலவு செய்யப்படுகின்றது. கருத்தடை அறுவை முறை, லூப் பொருத்துதல் போன்ற சில முறைகளும் அரசால் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. லூப் முறையில் அதிக வெற்றி கிடைக்காவிட்டாலும், கருத்தடை அறுவை முறையைச் செயல்படுத்துவதில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. பொதுவாக, கருத்தடை முறைகள் பல அமைந்துள்ளன. விடாய்க் கணக்கு முறை, பாதுகாப்பு முறை போன்ற இயற்கை முறைகள் சில உள்ளன. ஆனால், இவற்றைப் பாதுகாப்பான கருத்தடை முறை கள் எனக் கருதமுடியாது. இம்முறைகளைப் பற்றியும் கிராம மக்கள் அதிக அளவு அறிந்திருப்பதில்லை. 'டெல்ஃபென்' (Delfen) போன்ற கருத்தடை பசைகளும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. பலவகைப்பட்ட முறைகள் அமைந்திருந்தாலும், நிறைவான கருத்தடைச் சாதனம் சிக்கனமானதாக இருக்க வேண்டும்; தேவையானபோது மட்டும் உபயோகிக்கத் தக்கதாக இருக்க வேண்டும்; எளிதான முறையில் விரைவில் பயன்படுத்தத் தக்கதாய் இருக்க வேண்டும்; பாதுகாப்பானதாகவும், சுத்தமானதாகவும், மென்மையானதாகவும் இருத்தல் நல்லது. இவ்வகை நன்மைகளை கருத்தடை மாத்திரைகள் அளிப்பதால், அவற்றைப் பின்பற்றுவது நம் நாட்டில் பெருகிவரும் மக்கட்தொகையைக் கட்டுப்படுத்தப் பெரிதும் உதவும்.

அரசின் முக்கிய பணிகளில் மருத்துவ வசதிகளை அளிப்பதும் ஒன்றாகும். ஒவ்வொரு அரசும் தீவிர முயற்சிகளோடு இவ்வசதிகளை அளிப்பது அவசியமாகின்றது. அரசின் வருவாய் குறைவாக இருந்தாலும், வேறு சில செலவினங்களைக் குறைத்தாவது மருத்துவ வசதிகளை அளிக்க வேண்டும். மருத்துவ வசதிகளைப் பெருக்குவதற்கும், மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்து வதற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. மருத்துவ வசதிகள் மூலம் பொருளாதார முன்னேற்றம் ஏற்படாவிட்டாலும், இறப்பு வீதமானது பெரிதும் குறைக்கப்படும். இவ்வித முறைகளால் மக்கட்தொகையானது பெருக்க நிலையில் குறைக்கப்படாவிட்டால் பஞ்சம், பட்டினி, நோய், சண்டை போன்றவை தோன்றி மக்கட் தொகைப் பெருக்கமானது குறைவடைந்து விடும். வளர்ச்சி யடைந்த நாடுகளுக்குப் பொருந்தாத 'மால்தஸின் மக்கட் தொகைக் கோட்பாடு' (Malthusian Theory of Population) இன்றைய வளர்ச்சியடையாத நாடுகளுக்குப் பொருந்துவதாக அமைந்துள்ளது. ஆனால், மால்தஸின் மக்கட்தொகைக் கோட்

பாட்டில் குறிப்பிட்டுள்ளபடி எந்நாட்டிலும் மக்கட்தொகையில் குறைவும், உயர்வும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. வளர்ச்சி யடைந்த, வளர்ச்சியடையாத எல்லா நாடுகளிலும் மக்கட் தொகை படிப்படியாக அதிகரித்து வருவதையே நாம் அறிகிறோம்.

மக்கட்தொகை வளர்ச்சி வீதத்தைவிட பொருளாதார முன்னேற்ற வீதம் அதிகமாக இருத்தல் வேண்டும். மக்கட் தொகை வளர்ச்சியைவிட பொருளாதார வளர்ச்சி விரைவாக இருத்தல் இன்றியமையாதது. இதன் மூலம் நிரந்தரமாகப் பிறப்பு வீதத்தைக் குறைத்துவிட முடியும். மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைவிட, வருவாய்ப் பெருக்க வீதமானது அதிகமாக இருந் தால் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடையும். வாழ்க்கைத்தர உயர்வாலும், புதிய வாழ்க்கை முறைகளாலும், பொருளாதார முன்னேற்றத்தாலும் பிறப்பு வீதம் குறைவடைகின்றது. இறுதி யாக, பிறப்பு-இறப்பு வீதங்கள் நிலையாகக் குறைந்த அளவில் அமைந்து பொருளாதார முன்னேற்றம் துரிதப்படுத்தப்படு கின்றது. இன்றைய மேம்பாடடைந்துவரும் நாடுகளில் மக்கட் தொகைப் பெருக்கத்தின் இரண்டாவது நிலையை குறைந்தக் காலத் திலேயே நீக்கிவிட வாய்ப்பு உண்டு. அதாவது, இன்று பல வளர்ச்சி யடைந்துவரும் நாடுகள் அதிக பிறப்பு வீதத்தையும், குறைந்த இறப்பு வீதத்தையும் கொண்டுள்ளன. இந்நிலையை மாற்றி பிறப்பு, இறப்பு வீதங்களைக் குறைப்பது குறைந்த காலத்திலேயே பெறக்கூடிய ஒன்றாகும். பொருளாதார முன்னேற்றத்தை முதலில் பெற்ற நாடுகளில் மக்கட்தொகை வளர்ச்சியின் இரண்டாவது நிலை நீண்டகாலத்திற்கு அமைந்திருந்தது. இன்றைய நிலையில், வளர்ச்சி குன்றிய நாடுகள் மருத்துவத்துறையிலும், பிற துறை களிலும் வளர்ச்சியடைந்த நாடுகளைப் பின்பற்றி குறைந்த காலத் திலேயே முன்னேற்றத்தைப் பெறமுடியும். பொதுவாக, பொருளா தார முன்னேற்றத்தையும் இன்று வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் எளிதில் குறுகிய காலத்தில் பெறமுடியும். முன்னேற்றமடைந்த நாடுகள் பின்பற்றிய முறைகளை ஆராய்ந்து, அதற்கேற்பத் திட்ட மிட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பெறுவது அவற்றிற்கு எளி தானதாகும். வளர்ச்சியடைந்த நாடுகளில் உற்பத்தி முறைகளில் மாற்றங்கள் படிப்படியாக மெதுவாக ஏற்பட்டன. உற்பத்தித் தொழில் நுணுக்க முன்னேற்றங்களைப்பெற அந்நாடுகளுக்கு நீண்டகாலம் பிடித்தது.

புதிய கண்டுபிடிப்புகள் ஏற்பட நீண்டகாலம் பிடித்தாலும், அவற்றின் பயன் உணரப்பட்டபிறகு அவை விரைவாகப் பரவி விடுகின்றன. கல்வியறிவைப் பரப்புவதின் வாயிலாக பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும். அடிப்படைக் கல்வியைப் பரப்பு வதின் மூலமே மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த

இயலும். கல்வி வசதிகளை அளிப்பதின் மூலம் உடனடியாகப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடிவதில்லை என்றாலும், அவை பிறப்பு வீதத்தைக் குறைக்கப் பெரிதும் உதவுகின்றன. ஆனால், பொருளாதார முன்னேற்றம் பிறப்பு வீதத்தைக் கட்டுப் படுத்த உதவும் என்பது உண்மையானதாகும். பலவித வசதி களைப் பெற்றிருக்கும் இன்றைய வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு, இறப்பு வீதங்களில் குறைந்த நிலை இயல்பாக ஏற்பட நீண்டகாலம் தேவைப்படும். ஆனால், அந்நீண்ட காலத்திற்குள் மக்கட்தொகை மிகுதியாகப் பெருகிவிடும். எனவே, அந்நிலையைத் தடுக்க மக்கட்தொகையைக் கட்டுப்படுத்தும் முறைகள் தீவிரமாக மேற்கொள்ளப்பட வேண்டும். இதன் மூலமே விரைவான பொருளாதார வளர்ச்சிவீதத்தை மேம்பாடடைந்துவரும் ஒரு நாடு பெற முடியும். பல கடின நிலைகளுக்கிடையே பெறப்பட்ட பொருளாதார முன்னேற்றத்தின் வசதிகள் யாவும் விரைவாகப் பெருகும் மக்கட் தொகையால் பெற இயலாமல் போய் விடுகின்றது. மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தினால் பல நன்மைகளைக் குறைவான மக்கட்தொகை அதிக அளவில் பகிர்ந்து கொள்ள முடியும்.

பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்த கருத்தடைச் சாதனங்களைப் பயன்படுத்துவது இன்றியமையாதது. கிராமப் பொருளா தாரத்தைப் பெருமளவில் கொண்டுள்ள ஒருநாட்டில் இச்சாதனங் களைப் பயன்படுத்துவதில் பல சிக்கல்கள் அமைந்துள்ளன. பல பெண்களும் கல்வியறிவு பெற்றவர்களாக இருப்பதில்லை. கருத்தடை முறைகளைப்பற்றி அவர்கள் அறிந்திருப்பதில்லை. அவைகளைப்பற்றி அறிவதும் அவர்களுக்கு எளிதானதாக இருப்பதில்லை. அவ்வாறு கருத்தடை முறைகளைப்பற்றி அவர்கள் அறிந்திருந்தாலும், அவற்றைச் செயல்படுத்துவது பல காரணங்களால் கடின நிலை யைத் தருகின்றது. மேலும், பின்தங்கிய நாடுகளின் பெரும்பகுதி மக்கட்தொகை வருவாயைக் குறைவாகவே பெறுகின்றது. அதிக விலையுள்ள கருத்தடைச் சாதனங்களை வாங்குவதற்கு அவர்களால் முடிவதில்லை. பெண்களுக்கு கருத்தடை முறைகளைப் பின்பற்றும் பயிற்சிகளையும், ஆலோசனைகளையும் தர அதிக எண்ணிக்கையில் பெண் மருத்துவர்கள் தேவைப்படுகின்றார்கள். வளர்ச்சி குன்றிய நாடுகளில் மருத்துவர்களின் எண்ணிக்கையே குறைவாக அமைந் திருக்கும்போது, பெண் மருத்துவர்களின் எண்ணிக்கையைக் கூட்டுவது மேலும் கடினமாகின்றது.

கருத்தடை முறைகளைப் பின்பற்றுவதற்குச் சமுதாய எதிர்ப்பு அமைந்துள்ளது. மதத்தின் அடிப்படையிலும் கருத்தடை முறை களுக்கு எதிர்ப்பு தோன்றுகின்றது. வளர்ச்சியடையாத நாடுகளின்

சமுதாய அமைப்பு முறை பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்து வதற்குச் சாதகமாக அமைந்திருக்கவில்லை. பிறப்பைக் குறைப் பதற்கு எல்லா மதங்களுமே எதிரான கருத்தைக் கொண்டுள்ளன. கருத்தடைக் கருவிகளைப் பயன்படுத்துவதற்கும் மதங்களின் எதிர்ப்பு அமைந்துள்ளது. பெரிய குடும்பத்தைக் கொண்டுள்ள ஒருவர், "எல்லாம் ஆண்டவன் கொடுத்தவை!" என்று சொல்வதை இன்றும் நம் நாட்டில் நாம் கேட்க முடிகின்றது.

சில வளர்ச்சியடையாத நாடுகள் அதிக மக்கட்தொகையால் பாதிக்கப்படாமல், போதா மக்கட்தொகையால் பாதிக்கப்படு கின்றன. இவ்விதமான எச்ச மக்கட்தொகையும், போதா மக்கட் தொகையும் கொண்டுள்ள நாடுகளில், இச்சிக்கலை குடியேற்றத்தால் தீர்க்கலாம். பன்னாட்டுக் குடியேற்றங்களால் புதிதாகத் தோன்றிய நாடுகளில் விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது. அமெரிக்கப் பொருளாதாரம் விரைவாக வளர்ந்தமைக்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்தும், ஆப்பிரிக்காவிலிருந்தும் மக்கள் அமெரிக்காவில் குடியிறங்கியமையே முக்கியக் காரணமாகும். ஆனால், தற்பொழுது உலகின் எல்லா நாடுகளிலும் குடியேற்றங்கள் அனுமதிக்கப்படுவதில்லை. பல அரசியற் காரணங்களாலும், பொருளாதாரக் காரணங்களாலும் நாடுகளிடையே மக்களின் பெயர்ச்சி மிகக் குறைவாகவே உள்ளது. பன்னாட்டுக் குடியேற்றங் கள் வெற்றியடைய அவை பெருமளவில் எல்லா நாடுகளாலும் அனுமதிக்கப்பட வேண்டும். குடியிறக்கங்களுக்கும், குடியேற்றங் களுக்கும் செலவுகள் தோன்றுகின்றன. குடியிறங்குபவர்களுக் கான வாழ்க்கை வசதிகளும், உற்பத்தியை உயர்த்தும் நோக்கோடு வேலை வாய்ப்பு வசதிகளும் செய்துதர வேண்டும். குடிபெயர்ச் சிக்குப் போக்குவரத்து வசதிகளும் உதவுகின்றன. போக்கு வரத்தை வளர்ப்பதின் மூலம் குடிபெயர்ச்சியை எளிதாக்கலாம். மக்கட்தொகை பெருகிவிடும் என்ற அச்சத்தின் காரணமாகவே இன்றைய உலக நாடுகளில் பல குடியிறக்கங்களை அனுமதிப்ப தில்லை.

பல வளர்ச்சியடைந்த நாடுகளும் திறமை மிக்க உழைப்பை இறக்குமதி செய்ய அனுமதிக்கின்றன. ஆனால், பல பின்தங்கிய நாடுகளிலும் திறமையான உழைப்பு பற்றாக்குறை நிலையிலேயே உள்ளது. சான்றாக, இந்தியாவின் பேராசிரியர்கள், மருத்துவர்கள், பொறியாளர்கள் போன்றோர் அமெரிக்கா, கனடா, இங்கி லாந்து போன்ற நாடுகளில் பணியாற்றுவதைக் குறிப்பிடலாம். திறமை குறைந்த உழைப்பாளர்களை இந்நாடுகள் குடியிறங்க அனு மதிப்பதில்லை. இந்தியாவிலேயே திறமையான உழைப்பிற்குப்

பற்றுக்குறை இருந்து வருகின்றது. திறமையான உழைப்பின் வெளிநாட்டுப் பெயர்ச்சி தடுக்கப்பட வேண்டும். ஆனால், உள் நாட்டில் திறமையான உழைப்பிற்கான ஊதியம் அதிக அளவில் அளிக்கப்படுதல் அவசியமாகும்; தேவையான வசதிகள் யாவும் அவர்களுக்குச் செய்துதர வேண்டும். இதன் மூலமே திறமையான உழைப்பின் வெளிநாட்டுப் பெயர்ச்சியைத் தடுக்க இயலும்

மேம்பாடடைந்த நாடுகள் குடியிறக்கத்தால் பொருளாதாரத் தில் தேக்கநிலை ஏற்படும் என்ற அச்சத்தைக் கொண்டுள்ளன. தேக்கநிலையில் பொருளாதாரம் இருக்கும்போதுகூட, அவை குடியிறக்கத்தை அனுமதிப்பதில்லை. தேக்க நிலையைத் தவிர்க்க இந்நாடுகளில் நுகர்வு தூண்டப்படுகின்றது; அரசின் செலவுகள் அதிகரிக்கப்படுகின்றன; வெளிநாட்டு முதலீடுகளும் வரவேற்கப் படுகின்றன. ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் இன்றும் 'வெள்ளை நிறக் கொள்கையைப்' பின்பற்றுகின்றன. எல்லா உலக நாடுகளுக் கிடையேயும் மதம், இனம், மொழி, கலாச்சாரம், சமுதாயப் பழக்க வழக்கங்கள், அரசியல் அமைப்பு ஆகியவற்றில் வேறுபாடுகள் அமைந்துள்ளன. இக்காரணத்தாலும் உழைப்பின் பெயர்ச்சி நாடு களுக்கிடையே எளிதில் ஏற்படுவதில்லை. தவிர, உலக நாடுகள் அனைத்தும் இணைந்து செயலாற்றினால்தான், அது வெற்றியைப் பெற முடியும். முதலில் மனிதன் தன்னைப்பற்றியே எண்ணுகிறான்; தன்னுடைய நலனிற்காகவே பல நடவடிக்கைகளிலும் ஈடுபடு கின்றான். இரண்டாவது நிலையில் தன்னுடைய குடும்பத்தைப் பற்றிய எண்ணம் அவனிடம் இருக்கின்றது. குடும்ப நலனில் அக்கறை கொண்டும் மனிதன் வாழ்க்கையை நடத்துகின்றான். பிறகு தன் உறவினர்கள், இனம், மதம் இவற்றிலும் விருப்பு ஏற்படுகின்றது. மொழியின் அடிப்படையிலும் பற்று ஏற்படுவ துண்டு. பிறகு ஊர், மாவட்டம், மாநிலம் ஆகியவற்றின் காரண மாகவும் சிலவித சலுகைகள் அளிக்கப்படுவதுண்டு. பிறகு தன் னுடைய நாட்டைப்பற்றிய உணர்வு அவனுக்கு அமைகின்றது. உலகின் ஒவ்வொரு குடிமகனும் தான் ஒரு ரஷ்யன், அமெரிக்கன், ஜப்பானியன், இந்தியன் என்று கூறவே விரும்புகின்றான். அதற் குக் காரணமாக இருப்பது நாட்டுப்பற்றாகும். இன வேறு பாடுகளும் இதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. உலகின் குடிமகன் என்ற எண்ணம் பலருக்கும் இருப்பதில்லை. தன் முன்னேற்றம், தன்னுடைய மாவட்ட, மாநில முன்னேற்றங்கள், தன்னுடைய நாட்டின் முன்னேற்றம் போன்ற எண்ணங்களே மேலோங்கி உள்ளன. இதன் காரணமாகவே உலக நாடுகளுக் கிடையே குடிப்பெயர்ச்சிகள் அதிக அளவிற்கு அனுமதிக்கப்படுவ தில்லை.

வளர்ச்சியடைந்த நாடுகளில் சில 'வெள்ளை நிறத்தவர்களாக' இல்லாவிடில் குடியிறக்கக் கட்டுப்பாடுகளை விதிக்கின்றன. குறிப்பாக, திறமை குறைந்த உழைப்பாளர்களின் குடியிறக்கம் தடை செய்யப்படுகின்றது. இவர்களை குடியிறங்க அனுமதித்தால், ஊதியக் குறைவு ஏற்பட்டு உள்நாட்டு உழைப்பாளர்களின் ஊதியம் குறைந்துவிடும் என்ற எண்ணமும் அந்நாடுகளில் அமைந்துள்ளது. உள்நாட்டில் மக்களின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படும் என்றும் கருதப்படுகின்றது. இன வேறுபாடுகளே நாடுகளுக்கிடையே உழைப்பின் பெயர்ச்சியைப் பெரிதும் தடை செய்கின்றன.

மேலும், குடியேற்றமானது அனுமதிக்கப்பட்டால், துணிவைக் கொண்டவர்களும், இளைஞர்களும், திறமையானவர்களும் மட்டுமே வெளிநாடுகள் செல்ல விரும்புவார்கள். ஆனால், இவர்களுடைய பணி வளர்ச்சியடையாத நாடுகளின் முன்னேற்றத்திற்குத் தேவைப்படுகின்றது. இதனால் இந்நாடுகளில் வயது முதிர்ந்தவர்களும், திறமை குறைந்த உழைப்பாளர்களும் மட்டுமே இருப்பார்கள். திறமையான உழைப்பின் வெளியேற்றத்தால், உள்நாட்டில் முன்னேற்றம் பெரிதும் தடைப்படும்.

மக்கட்தொகைப் பெருக்கத்தை அரசின் வரிவிதிப்பு முறைகளாலும், பிற கொள்கையாலும் கட்டுப்படுத்தலாம் என்ற கருத்து நிலவி வருகின்றது. எனினும், வரிவிதிப்பு முறையின் மூலமாகப் பிறப்பு வீதத்தைக் குறைப்பது கடினமானதேயாகும். பெரிய குடும்பங்கள் ஏற்படாமல் தடுக்க வரி விதிப்பு முறை உதவும் எனக் கூறப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும் போது வருவாய்ப் பெருக்கம் ஏற்படுகின்றது. பெருகும் வருவாயை நுகர்வுக்குப் பயன்படுத்தாமல், முதலீட்டிற்குப் பயன்படுத்துமாறு செய்ய வேண்டும். அரசு அவ்வாறு செய்வதின் மூலம் மக்கட்தொகைப் பெருக்கத்தையும் கட்டுப்படுத்த முடியும். இம்முறையின் மூலம் பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்த இயலும். பொருளாதார முன்னேற்றம் குறிப்பிட்டதொரு நிலையை அடைந்த பிறகு, பிறப்பு வீதம் தானே குறைந்துவிடுகின்றது. கல்வி வசதிகள் பெருகிய பின்னும், கூட்டுக் குடும்ப முறையானது நீக்கப்பட்ட பின்னும், தொழில் நகரங்கள் பல தோன்றிய பின்னும் மக்கட்தொகைப் பெருக்கம் குறையத் தொடங்குகின்றது. அந்நிலையில் பெருகும் நுகர்வை அரசின் நிதிக்கொள்கையால் கட்டுப்படுத்தத் தேவையில்லை. முதலீட்டிற்கான சேமிப்பும் போதுமான அளவிற்குச் செய்யப்படுகின்றது. வருவாய் பெருகும்போது நுகர்வும் அதிகரித்தால்தான் பலவகைப்பட்ட முதலீடுகள் செய்ய வாய்ப்புக்கள் தோன்றும்.

அதிக மக்கட்தொகைப் பெருக்கம் தீமைகளையே தரும் எனக் கருதுவது தவறுடையதாகும்; சில நிலைகளில் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதாக அது அமைந்துள்ளது. மக்கட் தொகை மிக்கப் பொருளாதாரங்கள் சூழ்நிலைகளுக்கு ஏற்ப எளிதில் மாறும் தன்மை கொண்டவை. தேக்க நிலை மக்கட்தொகையைக் கொண்ட பொருளாதாரங்களில் இவ்வித நன்மையைப் பெற இயலாது. அதிக மக்கட்தொகையின் பெருக்கம் சந்தைகளை விரிவுபடுத்துகின்றது. விரிவடைந்த சந்தைகள் அதிக முதலீடு களைச் செய்யத் தூண்டுகின்றன. அதிக மக்கட்தொகை உழைப் பிற்கான ஊதியத்தைக் குறைவடையச் செய்யும். இதனால் உற்பத்தியின் பெரும்பகுதி இலாபமாகக் கிடைக்கின்றது. இலாபம் பெருகுகின்ற காரணத்தால் முதலீட்டின் அளவும் அதிகரிக் கின்றது. இன்றைய மேம்பாடடைந்துவரும் நாடுகளில் இலாபத் தின் அளவிற்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங் கியத் தொடர்பு உள்ளது. இலாப வீதமானது உயர்வாக இருந்தால்தான் சேமிப்பு, முதலீட்டு வீதங்கள் அதிகரிக்கும். அதிக முதலீடு விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும்.

முதலீட்டு வாய்ப்புக்களைவிட சேமிப்பின் அளிப்பு அதிகமாக இருக்கும் வளர்ச்சி நிலையில், மக்கட்தொகைப் பெருக்கம் நன்மை யைத் தருவதாக அமையும். இந்நிலையில் வளர்ச்சியானது விரி வடையும் சந்தைகளால் தொடர்ச்சியாக நிலை நிறுத்தப்படு கின்றது. 'மூலதனத்தின் இறுதிநிலைத் திறனைப்' (Marginal Efficiency of Capital) பெற பரந்த விரிவான சந்தைகள் தேவைப்படு கின்றன. சந்தைகள் விரிவடைந்து, பெருகாவிட்டால், பொருளா தார வளர்ச்சியில் தேக்கநிலை தோன்றிவிடும். ஆனால், மக்கட் தொகையைப் பெருக்குவதின் மூலமாகத்தான் விரிவான சந்தை களைப் பெறலாம் எனக்கூற முடியாது. விரைவான மக்கட் தொகைப் பெருக்கம் இல்லாவிடில், சந்தைகளை விரிவுபடுத்த நிதிக் கொள்கையையும், பணக்கொள்கையையும் பின்பற்றலாம். இக் கொள்கைகளின் மூலம் நுகர்வையும், முதலீட்டையும் ஊக்குவிக்க முடியும். முதலீட்டிற்கும், சேமிப்பிற்கும் நடுவே ஏற்படும் இடை வெளியை அரசின் செலவுகள் மூலம் சரிசெய்யலாம்.

### மக்கட்தொகைக் கொள்கை (Population Policy)

உலக நிலப்பரப்பில் 18 சதவீதம் ஆசியாவினுடையது. ஆசிய மக்கட்தொகை, உலக மக்கட்தொகையில் 57 சதவீதம். ஆனால், வருமானமோ உலக வருமானத்தில் 12 சதவீதம். எனவே அதிக மக்கட்தொகையைக் கொண்டுள்ள தென்கிழக்கு ஆசிய நாடுகள், மக்கட்தொகையைக் கட்டுப்படுத்தும் தீவிரக்

கொள்கையை மேற்கொள்ளுதல் மிகவும் இன்றியமையாததாகும். இறப்பு விதங்கள் குறைக்கப்பட்டு விட்டாலும், மேலும் பல ஆரோக்கிய வசதிகளையும், மருத்துவ வசதிகளையும் அரசு அளிக்க வேண்டும். கல்வியைப் பரப்புவதும் முக்கியமானதாகும். நோய்கள் பரவுதலைத் தடுக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். மக்களுடைய வாழ்க்கை நலனைக் காக்க மருத்துவ வசதிகளை அளித்தல் அரசின் முக்கிய பணிகளுள் ஒன்று என எல்லா உலக நாடுகளும் உணர்ந்துள்ளன. வளர்ச்சியடையாத நாடுகளில் இறப்பு விதத்தைக் குறைக்காமல், பிறப்பு விதத்தைக் குறைப்பது முடியாத ஒன்றாகும்.

மக்கட்தொகைப் பெருக்கத்தைக் குறைக்கக் கட்டாயப் படுத்தும் முறையானது எந்நாட்டிலும் அமைந்திருக்கவில்லை. சிறிய அளவு குடும்பத்தைப் பெறுவது தங்களுக்கு நன்மையளிக்கும் என்பதை மக்களுக்கு உணர்த்த வேண்டும். மக்களுக்கு குடும்பக் கட்டுப்பாடுகளில் நம்பிக்கை தோன்றுமாறு செய்ய அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் நன்மை பயக்கும். குறைந்த எண்ணிக்கையில் குழந்தைகளைப் பெற மக்களைப் பலவகைகளிலும் அரசு தூண்ட வேண்டும். குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைப் பற்றிய அறிவை நாடு முழுதும் பல வழிகளில் பரப்ப வேண்டும். மக்களோடு நெருங்கியத் தொடர்பு கொண்டு, குடும்பக் கட்டுப் பாட்டு முறைகளால் விளையக்கூடிய நன்மைகளை அவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும். இறுதியில், மக்கள் தாங்களே குடும்பக் கட்டுப்பாட்டை முறையைப் பின்பற்றுமாறு செய்தல் வேண்டும்.

பிறப்புக் கட்டுப்பாட்டை மேற்கொள்ளும் எண்ணத்தை மக்களிடம் தோன்றச் செய்ய, அரசு பல வழி முறைகளைப் பின்பற்ற லாம். சிலருடைய கருத்துப்படி, அளவில் சிறிய குடும்பங்களுக்கு நன்கொடை அளிக்கலாம். அதிகக் குழந்தைகளைக் கொண்ட குடும்பங்களுக்கு எவ்விதச் சலுகைகளையும் அரசு அளிக்காமல் தவிர்க்கலாம். ஆனால், இவ்விதக் கொள்கையை எந்த ஒரு நாடும் இதுவரை பின்பற்றியதில்லை. இவ்விதக் கொள்கையைக் கைக் கொள்ள எந்த அரசும் தயக்கத்தையே கொண்டிருக்கும். பெரிய குடும்பங்களுக்கான சில வசதிகள் குறிப்பிட்ட அளவிற்குமேல் குறைக்கப்படுகின்றன. சில நாடுகளில் குறிப்பிட்ட அளவிற்கு மேல் குழந்தை பிறக்கும்போது, பேறு கால விடுமுறையானது பணி யாற்றும் பெண்களுக்கு அளிக்கப்படுவதில்லை. குறிப்பிட்ட எண்ணிக்கைக்கு அதிகமாக குழந்தைகள் இருந்தால், மருத்துவ வசதிகள் கட்டுப்படுத்தப்படுகின்றன.

பின்தங்கிய நாடுகளில் மக்களின் வறிய நிலையே விரைவான மக்கட்தொகைப் பெருக்கத்திற்குக் காரணமாகும். மேற்குறிப்

பிட்டுள்ள முறையானது அரசால் பின்பற்றப்படும்போது, சமுதாயத்தின் தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் பெரிதும் பாதிக்கப் படுவார்கள். எனவே, இம்முறையைப் பின்பற்றி மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது சரியானதல்ல. மேலும், இன்றைய வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பலவும் சமதர்ம பாணியில் சமுதாயத்தை அமைக்கும் நோக்கம் கொண்டுள்ளன. வறிய குடும்பங்கள் மருத்துவ வசதிகளின் குறைவால் ஆரோக்கிய நிலையைப் பெற இயலாது. இவ்விதக் குடும்பங்கள் மேலும் பெருகும்போது திறனற்ற, ஆரோக்கியமற்ற, வசதியற்ற குடும்பங்களே தோன்றும். நாட்டின் விரைவான வளர்ச்சிக்கு இந்நிலை உதவாது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வசதிகள் மிக்க பிரிவினர் சிறிய குடும்பங்களையே கொண்டிருக்கின்றனர். மிகக் குறைந்த வருவாயைப் பெற்று, சமுதாயத்தின் தாழ்ந்த நிலையில் உள்ள மக்களே விரைவாகப் பெருகுகின்றனர். இதனால் திறமை மிக்கவர் களின் பெருக்க வீதம் குறைவாக இருக்கும்போது, திறமை குறைந்தவர்களின் பெருக்க வீதம் மிக அதிகமாக அமைந்திருக் கின்றது.

தென் ஆசிய நாடுகள் பெரிய குடும்பங்களுக்குப் பல வசதிகளை அளித்தலைத் தவிர்க்க வேண்டும். அதிகக் குழந்தைகளைக் கொண்டுள்ள குடும்பங்களுக்காக எவ்விதச் சலுகைகளையும் அரசு அளிக்கக் கூடாது. இவ்வாறு பல வசதிகளும் பெரிய குடும்பங் களுக்கு அளிக்கப்படும்போது, மேலும் பிறப்பு வீதம் அக்குடும்பங் களில் அதிகரிக்க வாய்ப்பு உண்டு. அரசு பிறப்பு வீதத்தைக் குறைத்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முயல வேண்டும். பிறக்கக்கூடிய குழந்தைகளின் நலனும் காக்கப்பட வேண்டியது அவசியமாகும். குறைந்த எண்ணிக்கையில் குழந்தை களைக் கொண்டுள்ள பெற்றோர்களுக்கு, குழந்தைகளை நலத்தோடு வளர்க்க ஊக்கப் பணமும் அளிக்கப்படலாம். குழந்தைகளின் முன்னேற்றத்திற்காகக் கல்வி வசதிகள் அளிக்கப்பட வேண்டும்; அவர்களுக்கு மருத்துவ வசதிகள் தரப்பட வேண்டும்; பயிற்சி வசதிகள் பெருக்கப்பட வேண்டும். பெற்றோர்களிடம் உதவியைப் பணமாக அளித்தலைவிட, பலவித வசதிகளை அளித்தல் நன்மை தருவதாகும். குழந்தைகளுக்கு இவ்வித வசதிகளை அளிப்பதின் மூலம், அவர்களுடைய வாழ்வை நலம்பெறச் செய்யலாம். ஆனால், பின்தங்கிய நாடுகளில் போதிய நிதி வசதிகள் கிடைப்பதில்லை. முன்னேற்றத் திட்டங்களுக்குத் தேவையான மூலதனத்தைத் தேவையான அளவில் பெற முடிவதில்லை. பொதுவாக குழந்தை களின் நலனிற்காகப் பல வசதிகளும் இந்தியா போன்ற வளர்ச்சி

யடைந்துவரும் நாடுகளில் செய்யப்பட்டாலும், அவை மிகக் குறைந்த அளவிற்கே தரப்படுகின்றன. மேலும், இவ்வசதிகள் மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு அளிக்கப்படுவதில்லை. பொதுவான மருத்துவ வசதிகளோடும், கல்வி வசதிகளோடும் இவை இணைக்கப் பெற்றுள்ளன.

ஒரு நாட்டில் மக்கட்தொகைப் பெருக்கம் குறைக்கப்பட்ட பிறகு, மக்கட்தொகைக் கொள்கை மக்கட்தொகையின் தரத்தை உயர்த்த முயல வேண்டும். பல குடும்பங்களின் நலனைக் காக்கும் நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும். பிறப்பு வீதத்தைக் குறைக்கும் கொள்கையின் மூலமே திறமை மிக்க மக்களைப் பெறலாம்; குழந்தைகளின் நலனையும் காக்க முடியும். ஒரு குடும்பமானது சிறிய அளவில் இருந்தால், குறைந்த எண்ணிக்கையில் உள்ள குழந்தைகள் சொத்துக்களையும், வருவாயையும் அதிக அளவில் பகிர்ந்துகொள்கின்றனர். மக்கட்தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப்படும்போது தலா வருவாயை அதிக அளவில் பெற முடியும். தலா வருவாய் உயரும்போது சேமிக்கவும், முதலீடு செய்யவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. அதிகக் குழந்தைகளைக் கொண்டுள்ளவர்களும், குறைவான வருவாயைப் பெறுபவர்களும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களைக் கைக்கொள்வதற்கான முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும். இவ்வித முயற்சிகள் வெற்றி யளித்தால், முன்னமேயே பிறந்த குழந்தைகளின் வாழ்க்கை நலனை உயர்த்த முடியும். அளவான குடும்பம் குழந்தைகளின் நல்வாழ் விற்குத் தேவையானது; தெவிட்டாத இன்பத்தைப் பெற பெற்றோர்கள் திட்டமிட்டுக் குடும்பத்தை அமைத்துக் கொள்வதும் அவசியமானது.

சமீப காலத்தில், தென்கிழக்கு ஆசிய நாடுகள் மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் பல நடவடிக்கை களையும் மேற்கொண்டுள்ளன. இந்தியாவும், பாகிஸ்தானும் பிறப்பு வீதத்தைக் குறைக்கும் பல முறைகளைப் பல்லாண்டுகளுக்கு முன்னமேயே மேற்கொண்டு, தற்பொழுது தீவிரமாகச் செயல் படுத்தி வருகின்றன. இலங்கை, தாய்லாந்து ஆகிய நாடுகள் பிறப்பு வீதத்தைக் குறைக்க முன்னோடித் திட்டங்களை நிறை வேற்றி வருகின்றன. பரிசோதனை முறையில் மாதிரித் திட்டங் களாக இவை அமைந்துள்ளன. இலங்கை, மலேயா ஆகிய நாடு களில் அரசின் ஆதரவில் தனியார் நிறுவனங்கள் குடும்பக் கட்டுப் பாட்டு முறைகளைப் பரப்புகின்றன. வேறு சில வளர்ச்சிகுன்றிய நாடுகள் மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் எண்ணத்தைக் கொண்டுள்ளன. ஆனால், குடும்பக் கட்டுப்பாட்டு முறையை அவை இன்னும் மேற்கொள்ளவில்லை. பலவித முறை

களைப் பின்பற்றிய பிறகும், தென்கிழக்கு ஆசிய நாடுகள் பிறப்பு வீதத்தைக் குறைப்பதில் வெற்றி பெறவில்லை. இந்தியாவில் மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த தீவிர முறைகளைப் பின்பற்றியும், பிறப்பு வீதத்தைக் குறிப்பிடத்தக்க அளவில் குறைக்க இயலவில்லை. சிறிதளவு வெற்றி பிறப்பு வீதத்தைக் குறைப்பதில் கிடைத்திருந்தாலும், பெருமளவிற்கு இறப்பு வீதம் குறைந்துள்ளதால் நன்மைகள் பலவற்றையும் பெற முடியவில்லை.

மக்கட்தொகைப் பெருக்கத்தின் விளைவால், பின்தங்கிய நாடுகளில் 'மறைந்துள்ள வேலையின்மை' (Disguised Unemployment) அமைந்துள்ளது. பிறப்பு வீதத்தைக் குறைத்து, பல வேலைவாய்ப்புக்களைப் பெருக்குவதின் மூலம் இச்சிக்கலுக்குத் தீர்வு காணலாம். அதிக மக்கட்தொகையைக் கொண்டுள்ள நாடுகளில் முன்னேற்றமடைந்தத் தொழில்நுணுக்க உற்பத்தி முறைகளைப் பின்பற்ற முடிவதில்லை. வேளாண்மைத் தொழிலை இயந்திரமயமாக்க முடிவதில்லை. நிலவுடைமைகளில் விஞ்ஞானச் சாகுபடி முறைகளைப் பயன்படுத்த இயலுவதில்லை. இந்நிலைக்குக் காரணம் நிலங்கள் பல சிறிய துண்டுகளாகப் பிரிக்கப்பட்டு சிதறுண்டு கிடக்கின்றமையே ஆகும். மக்கட்தொகை மிக்க நாட்டில் தலா வருவாய் குறைவாகவே அமையும். விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற்றிருந்தாலும், ஒரு நாட்டில் மக்கட்தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப்படாவிட்டால் உயர்ந்த தலா வருவாயைப் பெற முடியாது.

மக்கட்பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையென்றாலும், குறிப்பிட்ட அளவிற்குப் பிறகு மக்கட் தொகைப் பெருகத் தொடங்கினால் வளர்ச்சி நிலை குன்றிவிடும். இந்தியா போன்ற மேம்பாடடைந்துவரும் நாடுகளில், கிராம மக்கள் "இறைவனின் அருளால் இனப்பெருக்கம் ஏற்படுகின்றது" என்று கூறுகின்ற நிலையானது மாற்றப்பட வேண்டும். இந்தியாவில் விரைந்து வளரும் மக்கட்தொகையே பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. இச்சிக்கல் உடனடியாகத் தீர்க்கப்படவேண்டிய ஒன்றாகும். வேறு பல பொருளாதாரச் சிக்கல்களுக்கும் மக்கட்தொகைச் சிக்கல் அடிப்படையாக அமைந்துள்ளது.

வளர்ச்சியடையாத நாடுகளில் குறைவான வருவாய் அளவு மறைந்து, அதிக வருவாயைப் பெற மக்கட்தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப்படுவதோடு, தொழில் நுட்ப உற்பத்தி முறைகளும் பொருளாதாரத்தின் பல துறைகளில் பின்பற்றப்பட வேண்டும். சில நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றம் எந்த அளவிற்கு ஏற்பட்டாலும்கூட, மக்கட்பெருக்கம் கட்டுப்படுத்தப் பெறாவிட்

டால் விரைவான வளர்ச்சியைப் பெற இயலாது. இவ்வித நாடு களில் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களில் பிறப்பு வீதத்தைக் குறைக்கும் தீவிர நடவடிக்கைகள் கைக்கொள்ளப்பட வேண்டும்.

எந்த ஒரு நாடும் தன்னுடைய பொருளாதார நிலையை உயர்த்திக்கொள்ள விரும்புகின்றது. பல இயந்திரங்களையும், கருவி களையும், விஞ்ஞான முறைகளையும் பின்பற்றி எல்லா நாடுகளும் விரைவான வளர்ச்சியைப் பெற விழைகின்றன. ஆனால், சில சமுதாய, பண்பாட்டுக் காரணிகள் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளன.

பின்தங்கிய நாடுகளில் மக்கட்தொகைப் பெருக்கம் எவ் விதக் கட்டுப்பாடும் இன்றி பெருகி வருகின்றது. மக்கட் தொகைக் கட்டுப்படுத்தப்படாத நாடுகளில், ஒரு குறிப் பிட்ட காலத்திற்குப்பின் உணவின் அளிப்பு அதன் தேவையை விடக் குறைவாக அமைகின்றது. பஞ்சங்கள் தோன்றுவதால் உணவு உற்பத்தி குறைகிறது; நோய்கள் பரவுதலால் மக்கட் தொகை குறைகிறது. சமீப காலத்தில் மருத்துவ வசதிகள் பெருக்கப்பட்டுவிட்டமையால், இறப்பு வீதமானது மிகக் குறைந்த அளவிற்குத் தாழ்த்தப்பட்டுள்ளது. ஆனால், உணவு உற்பத்தி யானது பெருக்கப்பட்டுள்ளது என்றாலும்கூட, மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் அது குறைவாகவே உள்ளது. தவிர, சில காலங்களில் வெள்ளம் போன்றவை ஏற்பட்டு அதன் மூலம் உற்பத்தி குறைகின்றது. பருவ மழை சாதகமாக இல்லா விட்டாலும், வறட்சி நிலை நீடித்தாலும் உற்பத்தி பாதிக்கப்படு கின்றது. மக்கட்தொகையில் இந்த அளவிற்குத் திடீர்ச் சரிவு ஏற்படுவதில்லை. இக்காரணத்தால் இந்தியா போன்ற வேளாண்மை நாடுகள் உணவிற்காகப் பிற நாடுகளை நம்பியிருக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

எல்லா வளர்ச்சியடையாத நாடுகளும் மக்கட்தொகைப் பெருக்க வீதத்தை ஒரே அளவில் கொண்டிருக்கவில்லை. மக்கட் தொகைப் பெருக்க வீதத்தைக் கொண்டு மட்டும் ஒரு நாட்டின் மக்கட்தொகை போதா நிலையில் உள்ளதா, எச்ச நிலையில் உள்ளதா என்பதை அறிய முடியாது. மக்கட்தொகையின் அடர்த்தியையும் கணக்கிடுவது அவசியமானதாகும். பெரும் பாலான ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் பிறப்பு வீதத்தை உயர்ந்த அளவில் கொண்டுள்ளன. மேலை நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டபிறகுதான் இறப்பு வீதம் குறை வடைந்தது; மருத்துவ வசதிகளால் இறப்பு வீதம் குறைந்தது பிற்காலத்தில்தான். ஆனால், தற்பொழுதுள்ள வளர்ச்சியடையாத நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தை பெறுவதற்கு முன்பே

இறப்பு வீதத்தைக் குறைத்துவிட்டன. இலங்கையில் 1946-ஆம் ஆண்டிற்கும் 1947-ஆம் ஆண்டிற்கும் இடையே இறப்பு வீதம் சுமார் 34 சதவீதம் குறைவடைந்தது. இதற்குக் காரணமாக அமைந்தது மலேரியா போன்ற நோய்கள் ஒழிக்கப்பட்ட நிலையாகும். டிடிடி (DDT) போன்ற மருந்துகளைத் தெளித்ததின் மூலமாகவும் இறப்பு வீதத்தில் குறைவு ஏற்பட்டது. மிகக் குறுகிய காலத்தில் இறப்பு வீதத்தைக் குறைத்த நாடுகளில் இலங்கையும் ஒன்றாக உள்ளது.

பல வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு வீதம் குறைக்கப் படாவிட்டாலும், இறப்பு வீதமானது மிகக் குறைந்த அளவிற்குக் குறைக்கப்பட்டுவிட்டது. இந்நாடுகளில் இறப்பு வீதம் ஆண்டொன்றிற்கு ஆயிரத்திற்கு 30 என்ற நிலையில் அமைந்துள்ளது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலமே பிறப்பு, இறப்பு வீதங்களில் குறைவைப் பெற்றுவிடலாம். நாட்டைத் தொழில் மயமாக்குவதாலும், நகர்ப்புறங்கள் பெருகுவதாலும் வேளாண்மைப் பொருளாதாரத்தில் அமைந்துள்ள மக்கட் தொகை குறைகின்றது. பெண்களைக் கல்வி கற்கச் செய்வதின் மூலமாகவும் பிறப்பு வீதத்தைக் குறைக்கலாம்.

டாக்டர் நோட்ஸ்டீன் (Dr. Notestein)[1] மக்கட்தொகைப் பெருக்கம் மிக்க நாடுகளுக்கான 'மக்கட்தொகைக் கொள்கையைத்' தருகின்றார். பிறப்பு வீதத்தைக் குறைக்கப் பின்வரும் வழி முறைகள் உதவும் என அவர் விளக்குகின்றார் :

### 1. பொருளாதாரக் காரணிகள்

(i) தொழில்களை வளர்த்து அதிக அளவு நகர மக்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்க வேண்டும். நாட்டைத் தொழில் மயமாக்க மக்களின் பழக்க வழக்கங்கள், எண்ணங்கள் ஆகியவற்றில் மாற்றம் ஏற்பட வேண்டியது இன்றியமையாதது. பொருளாதார முன்னேற்றமென்பது சமுதாய மாற்றங்களால் தோன்றக் கூடிய ஒன்றாகும். வேளாண்மைத் துறையில் அமைந்துள்ள உபரி மக்கட்தொகை ஆக்கப்பணிகளில் ஈடுபடுத்தப்பட வேண்டும். வேளாண்மை ஆக்கத்திற்கு உதவாத அவர்களின் உழைப்பை தொழில் துறையை வளர்த்து அதில் பயன்படுத்த வேண்டும். நெசவுத் தொழில் போன்ற சிறு தொழில்களில் பெண்களையும் ஈடுபடுத்தலாம். வெவ்வேறு இடங்களுக்குச் செல்வதின் மூலம் புதிய அறிவுகளையும், கருத்துக்களையும் அவர்கள் பெறுகின்றனர்.

[1] Quoted by Benjamin Higgins, Economic Development-Principles, Problems and Policies, p. 695.

(ii) வேளாண்மையைத் திருத்தி விரிவாக்கம் செய்வது நன்மை தரும். வேளாண்மை உற்பத்தி முறைகளை முன்னேற்ற மடையச் செய்ய வேண்டும். உற்பத்தியைப் பெருக்க நிலச்சீர் திருத்தங்கள் கொண்டு வரப்பட வேண்டும். புதிய பகுதிகளில் சாகுபடியை மேற்கொள்ள வேண்டும். உற்பத்தியைப் பலவகைப் படுத்தி ஆக்கத்தின் அளவைக் கூட்ட வேண்டும். தன்னிறை விற்காக வேளாண்மை உற்பத்தி செய்யப்படாமல், வாணிப நோக்கத்தோடு செய்யப்பட வேண்டும்.

(iii) பன்னாட்டு வாணிபத்தைப் பெருக்க வேண்டும். புதிய நடவடிக்கைகளையும், புதுமையான அறிவுகளையும் பரப்ப வாணிபம் பெரிதும் உதவுகின்றது.

## 2. கல்வி

கல்வி முறையானது புதிய தேவைகளைத் தோற்றுவிக்குமாறு அமைய வேண்டும். திறமைகளை வளர்ப்பதாகவும் கல்வி முறை இருத்தல் இன்றியமையாதது. வேளாண்மை, தொழில் உற்பத்தி முறைகளில் புதுமையான தொழில் நுணுக்கங்களைப் புகுத்துவதாகவும் அது இருக்க வேண்டும். உள்நாட்டு வசதிகளுக் கேற்ப புதுமைக் கல்வி விரைவாகப் பரப்பப்பட வேண்டும். காலனி நாடுகளில் கல்வி முறை அமைந்திருந்ததைப் போல இக்கல்வி முறை அமையக்கூடாது.

## 3. குடும்பக் கட்டுப்பாடு

பிறப்பு வீதத்தைக் குறைக்க குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியம் மக்களிடம் உணர்த்தப்பட வேண்டும். குழந்தைகளின் நலனிற்கும், ஆரோக்கியத்திற்கும் சிறிய அளவு குடும்பமே நல்லது என்பதை மக்கள் அறியச் செய்ய வேண்டும். பெரிய குடும்பங்களில் உள்ள இன்னல்கள் அறிவுறுத்தப்பட வேண்டும். பொது ஆரோக்கியத் திட்டத்தோடு தொடர்புடையது குடும்ப கட்டுப்பாடு. குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களை விரிவாக மேற்கொள்ள வேண்டியது அவசியமானதாகும். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களின் தேவை, நன்மை, விளைவு ஆகிய எல்லாவற்றையும் மக்களுக்கு உணர்த்த வேண்டும்.

## 4. பொது ஆரோக்கியம்

பிறப்பு வீதத்தைக் குறைக்கப் பொது ஆரோக்கியத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும் அதிக வருவாய் பெறுபவர்கள் சிறிய அளவு குடும்பங்களையே பெற்றிருப்பது போல, நல்ல

ஆரோக்கியத்தைக் கொண்டவர்களும் அதிக மக்கட் பெருக்க வீதத்தைக் கொண்டிருக்க மாட்டார்கள். மேலும், ஆரோக்கிய வசதிகளைப் பெருக்குவதன் மூலமாக இறப்பு வீதத்தைக் குறைக்க முடியும். இறப்பு வீதம் குறைவடையும்போது, அந்நிலை பிறப்பு வீதத்தைக் குறைக்கவும் உதவுகின்றது. ஆரோக்கிய நிலையைக் கொண்டிருக்கும் மக்கள் அதிக இனவிருத்தியில் ஈடுபடுவார்கள் என்ற கருத்தும் நிலவி வருகின்றது. பொதுவாக மருத்துவ வசதிகளைப் பெறும்போதும், வேறு பல ஆரோக்கியப் பணிகளின் நன்மைகளைப் பெறும்போதும் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடைகின்றது எனக்கொள்ளலாம். பொது ஆரோக்கியத்தாலும், வருவாய் உயர்வாலும் பெறக்கூடிய தரமான வாழ்க்கை குறைந்த பிறப்பு வீதத்தையே தரும்.

### 5. அரசியல்

புதுமையான கருத்துக்களை விரைவாகவும், விரிவாகவும் பரப்ப தலைமைகள் தேவைப்படுகின்றன. உள்நாட்டின் அரசியல் தலைவர்களாலும், பல தொழில்களின் அரசியல் அமைப்பில் அமைந்துள்ள ஊழியர்களாலும், நடுத்தரக் குடும்பத்தினராலும், இக்கருத்துக்கள் எளிதில் பரப்பப் படலாம்.

### 6. சமுதாயம்

மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தச் சமுதாய அமைப்புக்களில் மாற்றங்கள் தேவைப்படுகின்றன. இனம், சாதி, போன்ற சமுதாயத் தடைகள் நீக்கப்பெறுதல் வேண்டும். தனியொருவனுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள இவற்றை விரைவாகக் களைய வேண்டும்.

### 7. குடிபெயர்ச்சி

மேற்குறிப்பிட்டுள்ள முறைகள் பயனளிக்காவிட்டால், குடியேற்றங்களின் மூலம் அதிக மக்கட்தொகையின் அளவைக் குறைக்கலாம். குறைந்த அளவில் பிறப்பு வீதங்களைக் கொண்டுள்ள நாடுகள் குடியிறக்கத்தை அனுமதிக்க வேண்டும்; அதிக அளவில் பிறப்பு வீதங்களைக் கொண்டு மிகுதியான மக்கட்தொகையைக் கொண்டுள்ள நாடுகள் மக்களைக் குடியேற்றம் செய்ய.வேண்டும் ஆனால், உலகின் எந்த ஒரு நாடும் திறமைகுறைந்த உழைப்பாளர்களைக் குடியிறக்கம் செய்யத் தற்பொழுது விரும்பவில்லை. குடியேற்றத்திற்குப் பொதுவாக எந்தவித எதிர்ப்பும் பின்தங்கிய நாடுகளில் அமைந்திருப்பதில்லை.

உலக நாடுகள் பலவும் குறிப்பிட்டக் காலத்திற்காவது குடி பெயர்ச்சியை அனுமதிக்கலாம். இதன் மூலம் புதிய கருத்துக்கள், திறமைகள், முறைகள் ஆகிய யாவும் உலகம் முழுதும் பரவ வாய்ப்பு ஏற்படும்.

இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களில் பிறப்பு வீதத்தைக் குறைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. குடும்ப நலத் திட்டங்களுக்காக இந்திய அரசு பல கோடி ரூபாய்கள் செல விட்டு வருகின்றது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதின் அவசி யத்தை அரசு உணர்ந்து விட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கை இதை வெளிப்படுத்துகின்றது. தேசிய நலனைப் பெருக்க மக்கட்தொகையின் அளவும், திறனும் சிறப்பான நிலையில் அமைந்திருக்க வேண்டும். இந்திய மக்கட்தொகை ஒழுங்கு படுத் தப்படாவிட்டால் திட்டமானது வெற்றியைப் பெறமுடியாது.

இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் நோக்கங்கள் பின்வருமாறு அமைந்திருந்தன: அவை,

(1) விரைவான மக்கட்தொகைப் பெருக்கத்திற்கான சரியான காரணங்களைக் கண்டறிவது;

(2) பிறப்பு வீதத்தைப் பற்றி நன்கு அறிந்து அதை ஒழுங்கு படுத்துவது;

(3) மக்களிடம் கல்வியறிவை விரைவாகப் பரப்புவதற்கான வழிமுறைகளைப் பின்பற்றுவது;

(4) மருத்துவ மனைகளோடும், ஆரோக்கிய நிலையங்களோடும் குடும்பநலத் திட்டத்திற்கான ஆலோசனைகளையும், பணிகளையும் இணைப்பது ஆகியவையாகும்.

குடும்பநலத் திட்டங்கள் எல்லா திட்டங்களிலும் அதிக முதலீட்டைச் செய்து மேற்கொள்ளப்பட்டன. கீழ்க்கண்ட முறை களைப் பின்பற்றினல் பிறப்பு வீதத்தைக் குறைக்கலாம்.

(1) குடும்பநலத் திட்டத்திற்கான ஆலோசனைகளையும், பணி களையும் விரிவுபடுத்துவது;

(2) குடும்பநலத் திட்டங்களைச் செயல்படுத்துவதற்கான பயிற்சி நிலையங்களை ஏற்படுத்துவது; பயிற்சியாளர்களுக்கான இந் நிலையங்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருக்க வேண்டும்.

(3) குடும்பநலக் கல்வியை பரந்த அடிப்படையில் விரிவு படுத்துவது; பால் உறவு, குழந்தைப் பராமரிப்பு போன்றவைகளும் இதில் அடங்க வேண்டும்.

(4) மக்கட்தொகைச் சிக்கல் பற்றிய மருத்துவ ஆராய்ச்சிகளை மேற்கொள்வது ;

(5) குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்த உதவும் வழிமுறைகளைக் கண்டறிவது;

(6) மேற்கொள்ளப்பட்ட திட்டங்களின் முன்னேற்றத்தை மேற்பார்வையிடுதல்;

(7) முன்னேற்றத்தைப்பற்றிய அறிக்கைகளை வெளியிடுதல்;

(8) குடும்பநலத் திட்டங்களை நிறைவேற்றும் நிலையங்களை எல்லா வசதிகளோடும் அமைத்தல்.

மக்கட்தொகை 50,000 என்ற அளவிற்கு மேல் உள்ள பெரிய நகரங்களிலும், சிறிய நகரங்களிலும் குடும்பநலத் திட்ட மருத்துவ மனைகளை அமைக்கத் திட்டமிடப்பட்டது. கிராமப்புறங்களில் இவ்வித நிலையங்கள் படிப்படியாகத் தோற்றுவிக்கப் பெறும். மக்களிடையே குடும்பநலத் திட்டத்தைப் பற்றிய விழிப்புணர்ச்சியைத் தோன்றச் செய்யவும், ஆலோசனைகளையும், பணிகளையும் அளிக்கவும் இவை செயலாற்றும். பயிற்சியாளர்களை உருவாக்கப் பெங்களூர் அருகே பயிற்சி நிலையம் அமைக்கப்பட்டுள்ளது. கருத்தடைச் சாதனைகளைப் பெருக்கப் பம்பாயில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. மருத்துவ மனைகளும் குடும்பநலத் திட்டங்களைப் பற்றிய அறிவை மக்களிடம் பரப்ப வேண்டும். இந்தியாவின் குடும்ப நலத் திட்டங்கள் தொடக்க நிலையில் இருப்பதாகவே கூறலாம். இத்திட்டங்களின் விளைவுகளைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

ஆனால், ஜப்பானின் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களின் வெற்றி வெளிப்படையாகத் தெரிகின்றது. இரண்டாவது உலகப் போர் முடிவடைந்தபிறகு பிறப்பு வீதம் குறைந்து, தற்பொழுது மக்கட்தொகை அதிக பெருக்கம் கொண்டதாக அமைந்திருக்கவில்லை. இவ்விதம் ஜப்பானின் பிறப்பு வீதம் திடீரெனக் குறைவடைந்தமைக்கு சட்டபூர்வமாகக் கருச்சிதைவு அனுமதிக்கப்பட்டதே முக்கியக் காரணமாகும். ஆனால், இதைத்தவிர ஜப்பானில் பொருளாதார, சமுதாய, பண்பாட்டு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. கடந்த முப்பது ஆண்டுகளில் இவ்வித மாற்றங்கள் மிக விரைவாக ஏற்பட்டன. தவிர, வேளாண்மையில் ஈடுபட்டிருந்த மக்கட்தொகையின் வீதமும் குறைந்துவிட்டது. அதிக அளவு மக்கள் தொழில் நகரங்களில் அமைந்துள்ளனர். ஜப்பானில் பிறப்பு வீதம் குறைந்தமைக்குத் தொழில்கள் பெருகி நகரங்கள் தோன்றியமை முக்கியக் காரணமாகத் திகழ்கின்றது என டாக்டர் இரேன் டாபெர் (Dr. Irene Tauber) குறிப்பிடுகின்றார். சமீப காலத்தில் ஜப்பானில் ஏற்பட்ட பிறப்புவீதக் குறைவிற்கு அரசின்

நடவடிக்கைகளை முக்கியக் காரணமாகக் கூற முடியாது. மீன் பிடிக்கும் தொழிலைக் கொண்டிருந்த கிராம மக்கள் கனிப்பொருட் களை வெட்டியெடுக்கும் சுரங்கங்கள் அமைந்திருந்த பகுதிகளில் சென்று குடியேறினார்கள். வேளாண்மையில் ஈடுபட்டிருந்த மக்களில் பலரும் தொழில் நகரங்களில் சென்று அமைந்தார்கள். அரசு தனி மருத்துவர்களையும் கருச்சிதைவு செய்ய அனுமதித்தது. கருத்தடை அறுவை சிகிச்சை போன்றவைகளும் அவர்களால் செய்யப்பட்டன. ஆனால் அரசு அதற்கான உதவித் தொகைகளை அளிக்கவில்லை. தற்பொழுது பெரும்பகுதி மக்கட்தொகை நகரங் களிலும், தொழில் பொருளாதாரங்களிலும் பணியாற்றி வருவதை டாக்டர் டாபெர் ஒப்புக்கொள்கின்றார். ஜப்பானியர்களின் வாழ்க் கைத் தர உயர்வும், அமெரிக்கா போன்ற மேலை நாடுகளின் நாக ரிகம் பரவியமையும் பிறப்பு வீதம் குறைந்தமைக்கு உதவின. ஜப்பானில் 'பொது ஆரோக்கிய நிறுவனம்' (Institute of Public Health) கருத்தடை முறைகளைப் பரப்பி வருகின்றது. அதிக அளவு குழந்தைகளைப் பெறுவதால் பெண்களுக்கு ஏற்படக்கூடிய உடல் நலக்குறைவு பற்றியும் விளக்கப்படுகின்றது.

டாக்டர் டாபெர் ஜப்பானில் மக்கட்தொகைக் கட்டுப்பாட் டைப்பெறப் பின்பற்றும் முறைகளை, மக்கட்தொகை மிக்க ஆசிய நாடுகளும் பின்பற்ற வேண்டும் எனக் கூறுகிறார். ஆசிய நாடுகளின் மக்கட்பெருக்கம் அதிக அளவில் மேலும் நீடித்தால், அது அழிவுப் பாதையில் செல்வதைப் போன்றதாகும். ஜப்பானின் மக்கட் தொகைப் பெருக்கம் எவ்வாறு கட்டுப்படுத்தப் பெற்றது என்பதற் கான காரணங்களை இந்நாடுகள் ஆராய்ந்து, அதற்கேறபக் கொள் கைகளை வகுக்க வேண்டும். ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் தொழில்களை வளர்ப்பதற்குமுன் மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப் படுத்த முடியாது என்ற கருத்தும் நிலவி வருகின்றது. நகரங்கள் பெருகிய பிறகும், தொழில்கள் வளர்ந்த பிறகும்தான் மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமென்பது அவசியமில்லை. இந்தியா, இந்தோனேசியா ஆகிய நாடுகளில் எடுக்கப்பெற்ற கணக்கெடுப்புக்களின்படி வேளாண்மைப் பொருளாதாரங்களில் அமைந்துள்ள பெண்கள் குடும்பநலத் திட்டங்களில் ஆர்வம் கொண்டிருக்கின்றனர் என்பது தெரிய வருகிறது.

பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்த மதங்களின் ஆதரவு அமைந் திருக்கவில்லை எனவும் சொல்லப்படுகின்றது. இந்தியாவில் இந்து மதமும், இஸ்லாம் மதமும் அதிக அளவில் பரவியுள்ளன. பிறப்பு வீதத்தைக் குறைப்பதற்கு எதிரிடைக் கருத்தை அவை கொண்டி ருந்தாலும், மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது

இன்றியமையாதது என்பதை அவை உணர்ந்துள்ளன. மக்கட் தொகைப் பெருக்கம் ஒரு சமுதாயச் சிக்கலாகவே இன்று கருதப் படுகின்றது. இரண்டாவதாக, உலக நாடுகளில் முதலில் பிறப்பு வீதத்தைக் குறைத்து சமநிலை மக்கட்தொகையைக் கொண்ட நாடுகள் பிரான்ஸ், இத்தாலி, ஸ்பெயின் ஆகியவைகளாகும். இவை ரோமன் கத்தோலிக்க நாடுகள் எனக் குறிப்பிடுவது முக்கிய மானதாகும்.

பொதுவுடைமை நாடாகிய சீனாவிலும் பிறப்பு வீதத்தைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. ஆண்டொன்றிற்கு 2.2 சதவீத மக்கட்தொகைப் பெருக்கத்தைப் பெற முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. திருமண வயது 25 ஆண்டுகளாக உயர்த்தப்பட்டும், கருத்தடை சாதனங்கள் பயன்படுத்தப்பட்டும் பிறப்பு வீதம் குறைக்கப்பட்டு வருகின்றது. உலகின் வளர்ச்சி யடைந்துவரும் எல்லா நாடுகளும் அதிக மக்கட்தொகைப் பெருக் கத்தால் விளையக்கூடிய தீமைகளை உணர்ந்துள்ளன. மக்கட்பெருக் கத்தைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளும் அந்நாடுகளால் எடுக்கப்பெற்று வருகின்றன.

### இந்தியாவின் மக்கட்தொகைச் சிக்கல்

உலகில் மிக அதிக மக்கட்தொகையைக் கொண்ட நாடு சீனா. அதற்கு அடுத்தபடியாக அதிக மக்கட்தொகையைக் கொண்டுள்ள நாடு இந்தியாவாகும். சீனாவின் மக்கட்தொகை சுமார் 58 கோடியாகும். 1971-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி இந்தியாவின் மக்கட்தொகை 54.7 கோடியாகும். கடந்த பத்து ஆண்டுகளில் 24.5 சதவீத மக்கட்பெருக்கம் ஏற்பட்டுள்ளது. உலக மக்கட்தொகையில் சுமார் ஏழில் ஒரு பகுதியை இந்தியா கொண்டுள்ளது. உலக மக்கட்தொகை 371 கோடியாகும். ஆண்டொன்றிற்கு 2.45 சதவீதம் என்ற அளவிற்கு மக்கட் பெருக்கம் இந்தியாவில் ஏற்பட்டு வருகின்றது. இது 1981-இல் 71.9 கோடியாகவும், 1991 இல் 95.2 கோடியாகவும் உயருமென மதிப் பிடப்பட்டுள்ளது. இந்தியாவில் 1931-ஆம் ஆண்டு முதற்கொண்டே மக்கட்பெருக்கம் விரைவாக ஏற்பட்டு வருகின்றது. இந்தியாவில் ஒவ்வொரு நாளும் சுமார் 50,000 குழந்தைகள் பிறக்கின்றன. நம் நாட்டில் பிறப்புவீதம் அதிகமாக உள்ளமைக்கு இளமைத் திருமணம், கால இடைவெளியின்றிக் குழந்தைகளைப் பெறுதல், வருவாய்க் குறைவு, கல்வியறிவின்மை, தட்ப வெப்ப நிலை, சமுதாய அமைப்பு, சமய நோக்கு, பெண்களின் பிற்போக்கு நிலை ஆகிய வையே காரணமாகும். மக்கட்தொகைப் பெருக்கத்தால் இந்தியா வில் உண்மை வருவாய்க் குறைவாகவே உள்ளது. ஐந்தாண்டுத்

திட்டங்களில் மிகுதியான மூலதனம் மக்கட்தொகையைக் கட்டுப் படுத்தச் செலவிடப்படுவதால், பிறப்பு வீதம் குறைந்து வருகின்றது.

ஒரு நாட்டில் உழைப்பின் அளிப்பு அந்நாட்டின் மக்களின் எண்ணிக்கை, மொத்த மக்களில் உழைக்கும் வயதில் உள்ள மக்களின் வீதம், உழைப்பின் திறன் போன்ற காரணிகளைப் பொறுத்து அமையும். நம் நாட்டின் ஆக்கம் குறைவாக உள்ளமைக்குக் காரணம், அதிக மக்கட்தொகையில் குறைந்த வீதத்திலேயே உழைக்கும் வயதினர் உள்ள நிலையாகும். மேலும், அவர்களின் உழைக்கும் திறனும் குறைவாக உள்ளது. இந்தியா எச்ச மக்கட்தொகையைக் கொண்டுள்ள நாடு எனக் கூறலாம். இந்தியாவின் பொருளாதாரத்தில் அமைந்துள்ள பல சிக்கல்களில் மக்கட்தொகை சிக்கலே தலையாய ஒன்றாகும். மிகுதியான மக்கட் பெருக்கத்தால் உணவுப் பற்றுக்குறை, வேலையின்மைச் சிக்கல், இடநெருக்கடி, ஒழுக்கக் குறைவு, சமுதாயக் கலகங்கள் போன்றவை தோன்றியுள்ளன.

இந்தியாவின் எல்லா வளங்களையும் முற்றிலும் பயன்படுத்தினால் தற்பொழுதுள்ள 54.7 கோடி மக்கட்தொகை எச்ச மக்கட்தொகையாக அமையாது எனச் சொல்லப்படுகின்றது. இக்கூற்று ஓரளவு உண்மையைக் கொண்டுள்ளது என்றாலும், இன்று மக்கட்தொகையே பொருளாதார முன்னேற்றத்திற்கு தடையாக உள்ளது. இவ்வுலக மக்கட்தொகையில் எழுவரில் ஒருவர் இந்தியராக இருக்கின்றார். 1951-ஆம் ஆண்டின் மக்கட்தொகை 36.1 கோடியாக இருந்தது. 1951-இல் இது 43.9 கோடியாக உயர்ந்தது. இது 1951-ஆம் ஆண்டு மக்கட்தொகையைவிட 21 சதவீதம் கூடுதலாகும். 1971-இல் மக்கட்தொகை 54.7 கோடியாக உயர்ந்துள்ளது. இது 1961-ஆம் ஆண்டு மக்கட்தொகையை விட 24.5 சதவீதம் உயர்வானதாகும். ஒவ்வோர் ஆண்டும் இந்தியா ஆஸ்திரேலியாவின் மக்கட்தொகைக்குச் சமமான அளவு மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கொண்டுள்ளது. ஆண்டொன்றிற்கு மக்கட் பெருக்கம் சுமார் 1.2 கோடி என்ற வீதத்தில் அமைந்திருக்கிறது.

## இந்தியாவில் மக்கட் செறிவும் அதை அளவிடும் முறைகளும்

இந்தியாவின் பல பாகங்களிலும் மக்கட் செறிவில் வேறுபாடுகள் உள்ளன. மக்கட்தொகையின் அளவு மாநிலங்களுக்கிடையே வேறுபடுகின்றது. மக்கட் செறிவு என்பது ஒரு சதுர கிலோ மீட்டர் அல்லது ஒரு சதுர மைலுக்குள் வாழும் மக்கட்தொகையின் சராசரி ஆகும். ஒரு நாட்டிற்கோ அல்லது ஒரு

மாநிலத்திற்கோ மக்கட் செறிவைக் கணக்கிட வேண்டுமென்றால், மொத்த மக்கட்தொகையை அதன் பரப்பால் வகுத்துக் கணக்கிட வேண்டும்.

### மக்கட் செறிவிற்கான காரணங்கள்

மக்கட் செறிவு பல்வேறு காரணங்களையும் பொறுத்து அமையும். 1961-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி இந்தியாவின் சராசரி மக்கட்செறிவு (Average Density) சதுர மைலுக்கு 370 பேர்கள் ஆகும். 1967-இல் இது சதுர கிலோ மீட்டருக்கு 156 பேர்கள் என்ற அளவில் அமைந்திருந்தது. வேறு சில நாடுகளின் மக்கட் செறிவு பின்வருமாறு அமைந்துள்ளது: இங்கிலாந்தும் வேல்ஸ்சும் (Wales) 703, அமெரிக்க ஐக்கிய நாடுகள் 56, ஜப்பான் 581. நம் நாட்டிற்குள்ளேயே மக்கட் செறிவில் வேறுபாடுகள் உள்ளன. சில பகுதிகளில் மக்கட் செறிவு மிக அதிகமாகவும், வேறு சில பகுதி களில் செறிவு நிலை சற்று குறைவாகவும் உள்ளது.

எல்லா மாநிலங்களுக்குள்ளும் கேரளத்தில்தான் மக்கட் செறிவு மிகுதியாக உள்ளது. அங்கு ஒரு சதுர கிலோ மீட்டருக்கு 548 பேர் வீதம் உள்ளனர். இரண்டாவது நிலையில் உள்ளது மேற்கு வங்காளமாகும். அங்கு சதுர கிலோ மீட்டருக்கு 507 பேர் உள்ளனர். பீஹாரில் மொத்த மக்கட்தொகையில் 10.31 சதவீதம் மக்கள் வசிக்கின்றனர். உத்தரப் பிரதேசத்தில் ஒரு சதுர கிலோ மீட்டருக்கு 300 பேரும், பஞ்சாபில் 268 பேரும், தமிழ் நாட்டில் 316 பேரும் இருக்கின்றனர். இந்தியாவில் மக்கட் செறிவு இயற்கை மற்றும் பூகோள அமைப்புக்களைப் பொறுத்து அமை கின்றது. ஒரு நாட்டின் வேளாண்மை உற்பத்தி நில வளத்தைப் பொறுத்தும் அமையும். மேற்கு வங்காளம், தமிழ்நாடு, பஞ்சாப், உத்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் வளமான நிலங்கள் அமைந்துள்ளன. இதனால் வேளாண்மையின் பொருட்டு அங்கு வாழும் மக்கட்தொகை அதிகமாக உள்ளது. நிலத்தின் அமைப்பும் மக்கட் செறிவிற்கு முக்கியக் காரணமாகின்றது. சம நிலங்கள் வேளாண்மைக்கு மிகவும் ஏற்றவை ஆதலால், அந் நிலங்கள் உள்ள பகுதிகளிலும் மக்கட் தொகை அதிகமாக உள்ளது. வேளாண்மையை மேற்கொள்ள முடியாத மலைப் பகுதிகளிலும், பாறைகள் அமைந்துள்ள பகுதிகளிலும் மக்கட் செறிவு குறை வாகவே இருக்கும். அஸ்ஸாமில் மக்கட்தொகை மிகுந்து அமைந் துள்ளமைக்குக் காரணம் அங்கு பெய்யும் மழையின் அதிக அளவே ஆகும். எனவே, மழையின் அளவும் மக்கட் செறி விற்குக் காரணமாக அமைகின்றது. செயற்கை முறைகளில் குழாய்க் கிணறுகள் போன்றவற்றை அமைத்து நீர்ப்பாசன வசதி

யைப் பெருக்குவதின் மூலமும் மக்கட் செறிவு உயரக்கூடும். இவ்வகைச் செயற்கைப் பாசன முறைகள் ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு, பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் பெருமளவில் அமைக்கப்பட்டுள்ளன.

மக்கட் செறிவானது ஓரிடத்தின் வேளாண்மை நிலையைப் பொறுத்து மட்டும் அமையுமெனக் கூற இயலாது. பம்பாய், அஹமதாபாத், டில்லி, கான்பூர், நாகபுரி முதலிய நகரங்களில் தொழில்களும், வாணிபமும் பெருகியுள்ளமையால், மக்கட்தொகை இப்பகுதிகளில் மிகுதியாக உள்ளது. இயற்கை அமைப்புக்களைப் பொறுத்தே மக்கட் பெருக்கம் அமையும் எனக் கருத முடியாது. மக்கட் செறிவு பல சூழ்நிலைகளையும், காரணிகளையும் பொறுத்தே அமையும்.

பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் மக்கட் செறிவு மிகுதி என உணரலாம். இந்தியாவில் 1951-இல் சதுர மைலுக்கு 281 பேரும் 1961-இல் 370 பேரும் வாழ்ந்தனர். ஆனால் பிறநாடுகளில் ஒரு சதுரமைலில் வாழும் மக்கள் எண்ணிக்கை குறைவாகவே உள்ளது. உதாரணமாக சோவியத் ரஷ்யாவில் ஒரு சதுரமைலுக்கு 23 பேரும், அமெரிக்காவில் 50 பேரும், சீனாவில் 134 பேரும், பிரான்சில் 193 பேரும் வசிக்கின்றனர். ஆனால் ஜப்பான், இங்கிலாந்து போன்ற சில நாடுகளில் மக்கட் செறிவு மிக அதிகமாகவே உள்ளது. ஆனால், இவை பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்ற நாடுகளாதலால் மக்கட்தொகைச் சிக்கல் தலையாய ஒன்றாக இருக்கவில்லை. ஜப்பானில் பிறப்பு வீதம் குறைக்கப்பட்டுவிட்டது. இங்கிலாந்தில் குடியிறக்கத்திற்குத் தீவிரத் தடைகளை விதிக்கின்றனர். இந்தியா அதிகப் பரப்பளவு கொண்டுள்ள நாடு. அதிகப் பரப்பளவு கொண்டுள்ள நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவின் மக்கட் செறிவு மிக அதிகமாகவே உள்ளது. கங்கை பாயும் சமவெளி, கேரளம், தமிழ்நாடு ஆகிய பகுதிகளில் மக்கட் செறிவு அதிகமாகக் காணப்படுகின்றது. மக்கள் நெருக்கமானது நம் நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் இடையே வேறுபாடு கொண்டுள்ளது.

**இந்தியாவில் விரைவான மக்கட் பெருக்கத்திற்கான காரணங்களும் அதைத் தடுப்பதற்கான வழிமுறைகளும்**

1921-ஆம் ஆண்டு வரை இந்தியாவின் மக்கட் பெருக்கம் குறைவாகவே இருந்தது. 1921 முதல் 1951 வரை ஒவ்வொரு ஆண்டும் மக்கட்தொகை அதிகரிப்பு 10 முதல் 15 சதவீதம் இருந்தது. 1951-ஆம் ஆண்டிற்கும் 1961-ஆம் ஆண்டிற்கும்

இடைப்பட்டக் காலத்தில் மக்கட்தொகை 21.5 சதவீதம் கூடியது. அதாவது இந்தியாவில் பத்தாண்டுக் காலத்தில் இங்கிலாந்தின் மக்கட்தொகையைப் போன்று இரு மடங்கையும் அல்லது பாகிஸ்தானின் மக்கட்தொகைக்குச் சமமான அளவையும் நம்முடைய மக்கட்தொகையோடு சேர்க்கின்றோம்.

இந்தியாவில் விரைவாகப் பெருகும் மக்கட்தொகையைக் கட்டுப்படுத்தாவிட்டால், வேறு பல பொருளாதாரச் சிக்கல்களையும் தீர்க்க இயலாமல் போய்விடும். வளர்ச்சியடைந்த நாடுகளின் மக்கட்தொகைச் சிக்கல் நம் நாட்டின் மக்கட்தொகைச் சிக்கலினின்றும் வேறுபட்டது. மேம்பாடடைந்த நாடுகளில் தொழில்களின் முன்னேற்றத்தாலும், அறிவியல் வளர்ச்சியாலும் மக்கட்தொகைச் சிக்கல் தீர்க்கப்பட்டுவிட்டது. நம் நாட்டில் தொழில் முன்னேற்றத்தைப் பரந்த அளவில் பெறுவதற்கான வாய்ப்பு குறைவாகவே உள்ளது. இந்தியாவில் நீண்ட காலமாகவே 70 சதவீதத்திற்கும் மேலான மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது. மூலதனத் திரட்சி பெருமளவில் இல்லாமையே நம் நாட்டில் தொழில்கள் வளராமைக்குக் காரணமாகும். இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் தொழில்களின் முன்னேற்றத்தைப் பெறாமல் மக்களின் வருவாயையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த முடியாது. பென்ஹாம் (Benham) என்ற பொருளியலறிஞர், இந்தியா, சீனா, ஜப்பான், தென் ஐரோப்பா, மேற்கு ஐரோப்பா ஆகிய பகுதிகளில் மக்கட்தொகை மிகுதியாக உள்ளது என எழுதியுள்ளார்.

மக்கட்தொகைப் பெருக்கம் பிறப்பு வீதம், இறப்பு வீதம் ஆகியவற்றைப் பொறுத்தும் அமையும். வளர்ச்சியடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவின் பிறப்பு வீதம் மிக அதிகமாக உள்ளதை அறிய முடிகிறது. மிகுதியான மக்கட் பெருக்கம் நம் நாட்டில் ஏற்பட்டு வருவதை பின்வருபவைகளின் மூலம் அறியலாம்:

(1) இந்தியாவில் மக்கட் செறிவானது அதிகமாக உள்ளது. சராசரி மக்கள் நெருக்கம் 1971-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி சதுர கிலோ மீட்டருக்கு 182 பேர் ஆகும். 1961-ஆம் ஆண்டில் மக்கள் நெருக்கம் ஒரு சதுர மைலுக்கு 384 பேர் என்ற அளவில் இருந்தது. பிற உலக நாடுகளோடு ஒப்பிடும் போது நம் நாட்டின் மக்கள் நெருக்கம் மிக அதிகமாகவே உள்ளது.

(2) இந்தியாவின் பிறப்பு வீதமும் உயர்வாக உள்ளது. 1971-இன் கணக்குப்படி பிறப்பு வீதம் 1961-ஆம் ஆண்டிற்கும் 1971-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் 24.5 சதவீத

மாகும். பிறப்பு வீதம் 1921-31-இல் 11.01 சதவீதமாகவும், 1931-41-இல் 14.22 சதவீதமாகவும், 1941-51-இல் 13.31 சதவீத மாகவும், 1951-61-இல் 21.5 சதவீதமாகவும் இருந்தது. படிப் படியாக பிறப்பு வீதம் அதிகரித்து வருவதை இது உணர்த்து கின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளில் பிறப்பு வீதம் மிகக் குறைவாக உள்ளது. உதாரணமாக, இங்கிலாந்தில் பிறப்பு வீதம் 4.4 சதவீதமாகவும், பிரான்சில் 6 சதவீதமாகவும், இத்தாலியில் 8 சதவீதமாகவும், அமெரிக்காவில் 13.5 சதவீதமாகவும் இருக் கிறது. பலவித மருத்துவ, ஆரோக்கிய வசதிகள் செய்து தரப்படு கின்றமையால் இறப்பு வீதமானது மிகக் குறைந்துள்ளது. குடும்ப நலத் திட்டங்களினுல் பிறப்பு வீதமானது எதிர்பார்த்த அளவிற்குக் குறையவில்லை. இதன் காரணமாகவும் நம் நாட்டில் மக்கட்தொகை மிகுதியாக இருக்கின்றது.

(3) இந்தியாவில் உணவுப் பற்றுக்குறை அமைந்திருப்ப தாலும் மக்கட்தொகை மிகுதியாக உள்ளது எனக் கருதலாம். இந்தியா ஒரு வேளாண்மை நாடாக இருந்தும், உணவு உற்பத்தி யில் தன்னிறைவைப் பெற முடியவில்லை. உணவு உற்பத்தி போது மான அளவில் இல்லாததால் ஆண்டொன்றிற்குச் சுமார் 2 கோடி டன் என்ற அளவிற்கு உணவுப் பற்றுத நிலை ஏற்படுகின்றது. 54.7 கோடி மக்களில் சுமார் 30 கோடி மக்களுக்குத் தேவையான உணவுப் பொருட்கள் மட்டுமே உற்பத்தி செய்யப்படுகின்றன.

(4) நம் நாட்டின் இயற்கை வளங்களை அதிக அளவு ஆக்கத் தைப் பெறும் வகையில் பயன்படுத்த இயலாமைக்கு மிகுதியான மக்கட்தொகையே காரணமாகும். வேளாண்மையில் பரந்த முறைச் சாகுபடியைப் பின்பற்ற முடியவில்லை. பேரளவுச் சிக்கனங்களை சாகுபடிகளில் நம்மால் பெற முடியாமற் போய் விடுகின்றது. நிலங்கள் சிறிய அளவுகளில் துண்டு துண்டுகளாக இருப்பதாலும் தொழில் நுணுக்கம் மிக்க வேளாண்மைக் கருவி களைப் பயன்படுத்த முடிவதில்லை. செறிந்த சாகுபடி முறை பின் பற்றப்பட்டாலும் ஒரு ஏக்கருக்கான உற்பத்தி மிகவும் குறை வாகவே உள்ளது. மக்கட்தொகை மிகுதியாக உள்ளமையால் எல்லா உற்பத்தி நிலைகளையும் இயந்திரமயமாக்க இயலவில்லை. தவிர, தனி ஒருவரின் வருவாய் குறைவாக உள்ளமையால், அதிக முதலீட்டையும் செய்ய முடிவதில்லை.

(5) விரைவான மக்கட் பெருக்கத்தால் சாகுபடி நிலங்களின் அளவும் குறைந்து வருகின்றது. இந்தியாவில் பெரும்பாலான மாநிலங்களில் 40 சதவீதத்திற்கும் மேற்பட்ட விவசாயிகள் இரண்டு ஏக்கருக்கும் குறைவான நிலத்தையே கொண்டுள்ளனர்.

நம் நாட்டில் சிறிய அளவுள்ள நிலங்களே அதிகமாக உள்ளன. மொத்த நிலத்தில் 11.58 சதவீதம்தான் 50 ஏக்கர்களுக்கு மேல் உள்ளது. சாகுபடி நிலங்களின் அளவு நாடு முழுதும் ஒரே அளவில் அமைந்திருக்கவில்லை. தமிழ் நாட்டில் சாகுபடி நிலத்தின் சராசரி அளவு 3.7 ஏக்கராகும். இதன் அளவு கேரளத்தில் 1.8 ஏக்கராகவும், உத்தரப் பிரதேசத்தில் 4.4 ஏக்கராகவும், மத்தியப் பிரதேசத்தில் 9.9 ஏக்கராகவும், ராஜஸ்தானில் 13.7 ஏக்கராகவும் உள்ளது. பிற நாடுகளோடு ஒப்பிடும்போது சராசரி சாகுபடி நிலத்தின் அளவு மிகக் குறைவானது என அறியலாம். அமெரிக்காவில் சராசரியாக ஒரு விவசாயி 145 ஏக்கர் நிலமும், இங்கிலாந்தில் 20 ஏக்கரும், பிரான்சில் 20 ஏக்கரும், பெல்ஜியத்தில் 14 ஏக்கரும் கொண்டுள்ளனர். இந்தியாவில் சராசரி நிலத்தின் அளவு 7.5 ஏக்கராகும். 1921-ல் ஒரு இந்தியனுக்குக் கிடைத்த நில அளவு 111 செண்டுகளாகும். 1951-ல் இது 84 செண்டுகளாகக் குறைந்து விட்டது. மக்கட் பெருக்கத்தால் இதன் அளவு தொடர்ந்து குறைந்து கொண்டே வருகின்றது.

(6) நம் நாட்டில் மக்களின் தலா வருவாயும் மிகக்குறைவாக உள்ளது. 1965-இல் ரூ. 448 ஆக இருந்த தலா வருவாய் விடுதலை அடைவதற்கு முன் ரூ. 230 என்ற அளவிலேயே இருந்தது. 1961-இல் தலா வருவாய் ரூ. 300 ஆக இருந்தது. தற்பொழுது தலாவருவாய் சுமார் 90 டாலர் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. 500 டாலருக்கும் குறைவான தலா வருவாயைக் கொண்டுள்ள நாடுகள் வளர்ச்சியடையாத நாடுகள் எனக் கூறப்படுகிறது. அமெரிக்காவின் தலா வருவாய் 1800 டாலராகும். இந்தியாவின் தலா வருவாயைக் காட்டிலும் அமெரிக்கா சுமார் 30 மடங்கும், கனடா 20 மடங்கும் அதிகத் தலா வருவாயைப் பெறுகின்றன. உகாண்டாவையும், பர்மாவையும் நீக்கிவிட்டால் உலகில் மிகக் குறைந்த தலா வருவாயைப் பெறும் நாடு இந்தியாவேயாகும். விவசாயிகளின் சராசரி வருவாயும் இந்தியாவில் குறைவாக உள்ளது. ஆஸ்திரேலியாவில் விவசாயி ஒருவரின் சராசரி வருவாய் ஆண்டொன்றிற்கு ரூ. 4000 ஆகும்; இந்திய விவசாயி ரூ 200 என்ற அளவில் மட்டுமே சராசரி வருவாயைப் பெற முடிகின்றது. இந்நிலையிலும் இந்தியா மக்கட்தொகை மிக்க நாடு என உணர்த்தலாம்.

(7) பல திட்டங்களும் செயல்படுத்தப்பெற்ற பிறகு இறப்பு வீதம் 1000 பேருக்கு 18 என்ற அளவிற்குக் குறைக்கப்பட்டுள்ளது. ஆனால், மேம்பாடடைந்த நாடுகளோடு ஒப்பிடும்போது இறப்பு வீதம் இந்தியாவில் உயர்வாகவே உள்ளது. மருத்துவ வசதிகளும், பிற பொது ஆரோக்கிய நடிவடிக்கைகளும் நாட்டின்

எல்லா மக்களுக்கும் கிடைக்கும் வகையில் செய்யப்படவில்லை. தொற்று நோய்கள் முற்றிலுமாக நீக்கப்படவில்லை. மக்கட் தொகையோடு ஒப்பிடும்போது மருத்துவர்களின் எண்ணிக்கைக் குறைவாகவே உள்ளது. மருத்துவ மனைகளும் போதுமான அளவில் எல்லா இடங்களிலும் தொடங்கப்படவில்லை. மக்கட் தொகை மிகுதியாக உள்ள காரணத்தால்தான் சிறப்பான மருத்துவ வசதிகளை எல்லா பகுதி மக்களுக்கும் அளிக்க முடியவில்லை.

(8) இந்தியாவில் உற்பத்தித் திறன் குறைவாக உள்ளமைக்கு மிகுதி மக்கட்தொகையும் காரணமாகிறது. குறிப்பாக வேளாண்மையில் ஆக்கத் திறன் பாதிக்கப்படுகின்றமைக்கு அதிக மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபட்டுள்ளதே காரண மாகும்.

(9) வேலையின்மைச் சிக்கல் பெருகி வருவதின் மூலமாகவும் இந்தியா மிகுதி மக்கட்தொகையைக் கொண்டுள்ளது என்பதை அறியலாம். வேளாண்மைத் துறையில் ஆண்டு முழுதும் வேலை வாய்ப்புக்கள் அமைந்திருப்பதில்லை. தொழில்கள் வளராமையால் வேளாண்மையில் மிகுதியாக உள்ள எச்ச உழைப்பை உற்பத்திப் பணிகளில் பயன்படுத்த முடியவில்லை. நம் நாட்டின் உற்பத்திச் சாதனங்களோடு ஒப்பிடும்போது மக்கட்தொகை மிகுதியாக உள்ளது. உற்பத்திச் சாதனங்களைப் பெருக்க அதிக மூலதனம் தேவை. அதிக மூலதனத் திரட்சியை மக்கட்தொகை மிகுதியாக உள்ள ஒரு நாட்டில் பெறுவது கடினமாகும். இந்தி யாவில் வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காண மக்கட் பெருக்கம் கட்டுப்படுத்தப்பட்டு, சேமிப்பு, முதலீட்டு விதங்களையும் உயர்த்த வேண்டும்.

மக்கட்தொகை பற்றிய பல இயல்புகளையும் பற்றி ஆராய் வதின் மூலமே, பொருளாதார முன்னேற்றத்திற்கு அவை எந்த அளவிற்கு உதவும் என்பதை உணர முடியும். பேராசிரியர் சந்திர சேகர் இந்தியாவில் ஒவ்வொரு நாளும் 50,000 குழந்தைகளுக்கு மேல் பிறப்பதாகவும், ஆண்டொன்றிற்கு மக்கட்தொகையில் சுமார் 125 இலட்சம் கூடுதல் ஏற்படுகின்றது என்றும் குறிப்பிடு கின்றார். இதனால் விளையக்கூடிய தீமைகளைக் குறைக்கவே திட்டங் களில் குடும்பக் கட்டுப்பாட்டிற்காக மிகுதியான மூலதனம் ஒதுக் கப்படுகின்றது. ஆயிரம் பேர்களுக்கு 40 என்ற அளவில் உள்ள பிறப்பு விதத்தை 25 ஆகக் குறைக்கத் தீவிர முயற்சிகள் மேற்

கொள்ளப்படுகின்றன. தற்பொழுதுள்ள பிறப்பு விதமே நீடித்தால் நம் நாட்டின் மக்கட்தொகை பல மடங்குகளாகப் பெருகி விடும்.

## விரைவான மக்கட் பெருக்கத்திற்கான காரணங்கள்

மக்கட்பெருக்கம் மிகுதியாக இருக்கின்றமைக்கான காரணங்களை அறிவதின் மூலமே, அச்சிக்கலைத் தீர்ப்பதற்கான வழி முறைகளை எளிதில் பின்பற்றலாம். இந்தியாவில் அதிகக் குழந்தைகள் பிறப்பதற்கான காரணங்களைப் பின்வருமாறு விளக்கலாம் :

(1) இந்தியாவில் இளம் வயதிலேயே திருமணம் செய்யும் முறை அமைந்துள்ளது. 1951-ஆம் ஆண்டுக் கணக்கெடுப் பின்படி 75 சதவிதத்திற்கும் அதிகமான பெண்கள் 15 முதல் 20 வயதிற்குள் திருமணம் செய்து கொள்கின்றனர். 'சாரதாச் சட்டம்' இயற்றப்பட்டு 15 வயதிற்குட்பட்ட பெண்கள் திருமணம் செய்து கொள்ளக்கூடாது எனத் தடை விதிக்கப்பட்டபின் ஓரளவு இளம் வயதில் திருமணம் செய்வது குறைந்தது.

(2) நம் நாட்டின் தட்ப வெப்ப நிலைகளும் அதிக மக்கட் பெருக்கத்திற்குக் காரணமாக அமைகின்றது. வெப்ப நாடுகளில் பெண்கள் விரைவில் பருவமடைகின்றனர். திருமணமும் இள வயதிலேயே நடந்து விடுகின்றது. குளிர் நாடுகளில் திருமணங்கள் இளவயதிலேயே செய்யப்படுவதில்லை.

(3) கூட்டுக் குடும்ப அமைப்பு அமைந்திருப்பதால், குழந்தைகளைப் பராமரிப்பது பெற்றோர்களுக்கு மட்டும் கடமையாக அமைவதில்லை. பெரிய அளவில் அமைந்துள்ள கூட்டுக் குடும்ப முறையால் குழந்தைகளைக் கணக்கின்றிப் பெறுகின்றனர். மேலை நாடுகளில் கணவன், மனைவி, குழந்தைகள் அடங்கிய தனிக் குடும்ப முறைகளே அமைந்திருக்கின்றன. இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் இந்நிலை அதிக அளவில் அமைந்திருப்பதில்லை.

(4) இந்தியாவின் சமுதாய அமைப்பு முறை மக்கட் பெருக்கத்தைத் தூண்டுவதாக அமைகின்றது. திருமணம் செய்து கொள்ளாதவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவாகவே உள்ளனர். பொதுவாக, நம் நாட்டில் திருமணம் என்பது கட்டாயமாக நடத்தப்பட வேண்டிய ஒன்று எனக் கருதப்படுகின்றது. திருமணம் செய்து கொள்ளாத பெண்களின் எண்ணிக்கை இந்தியாவில் மிகவும் குறைவாக உள்ளது. பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்நிலையை எளிதில் உணரலாம். இங்கிலாந்தில் திருமணம் ஆகாதவர்களின் எண்ணிக்கையைவிட, இந்தியாவில் திருமணம் ஆகாதவர்களின் எண்ணிக்கை குறைவானதேயாகும்.

(5) ஒரு குழந்தையின் பிறப்பிற்கும் அடுத்தக் குழந்தையின் பிறப்பிற்கும் இடையே அதிக இடைவெளி இருப்பதில்லை. குழந்தைகளின் எண்ணிக்கையைக் கொண்டே எத்தனை ஆண்டுகளுக்கு முன் திருமணம் செய்து கொண்டனர் என்பதை உணரும் வகையில் குழந்தைகளின் பிறப்பானது அமைகின்றது. அதிகக் குழந்தைகளைக் குறைந்த காலத்தில் பெறுவது தாய்க்கும் நல்லதல்ல; இதனால் குழந்தைகளின் நலனும் பாதிக்கப்படும். இதன் காரணமாகத்தான் குடும்பநலத் திட்டத் துறையினர், "அடுத்த குழந்தை இப்போது வேண்டாம்; இரண்டிற்கு மேல் எப்போதுமே வேண்டாம்" என விளம்பரங்கள் செய்கின்றனர். குடும்பத்தைக் கட்டுப்படுத்த ஆலோசனைகளையும் அளிக்கின்றனர்.

(6) நம் நாட்டில் உள்ள மதங்களும் அதிகப் பிறப்பிற்கு ஆக்கம் தருகின்றன. குழந்தைகளைச் செல்வங்களாக அடைய சிறிய அளவுள்ள குடும்பங்கள் தேவை. செல்வங்களாகிய குழந்தைகள் சுமையாக மாறுவது பெரிய அளவுள்ள குடும்பங்களால்தான் என்று கூறலாம். இந்து, இஸ்லாம் மதங்களின் கொள்கைகள் குடும்பக் கட்டுப்பாட்டிற்கு எதிரிடையாக உள்ளன. பிறவிப் பயனைப் பெறவும், மறுமைப் பயனை அடையவும் ஆண் குழந்தை தேவை என்ற சமயக்கருத்து நிலவுகின்றது. இதன் காரணமாக ஒரு ஆண் குழந்தையைப் பெறும் எண்ணத்தோடு, பல பெண்குழந்தைகளையே தொடர்ந்து பெறும் இரக்கத்திற்குரிய பெற்றோர்கள் சிலரையும் காண முடிகின்றது.

(7) நம் நாட்டின் பெரும்பகுதி மக்கள் வறுமையால் வாடுகின்றனர். அதிக வருவாய் பெறுபவர்களுக்கும், நகரங்களில் உள்ளவர்களுக்கும் பல பொழுதுபோக்கு வசதிகள் இருக்கின்றன. எனவே, அவர்கள் குறைந்த அளவில் மட்டுமே குழந்தைகளைப் பெறுகின்றனர். ஆனால் கிராமப்புறங்களில், குறைந்த வருவாயைப் பெறுகின்ற விவசாயிகளுக்கு குழந்தைகளைப் பெறுவதே பொழுதுபோக்காக அமைகின்றது. அவர்களின் குறைந்த வருவாயின் மூலம் பெறத்தக்க சிறிய இன்பம் அதுவாகவே இருக்கின்றது. மேலும், வருவாய் குறைந்த ஒவ்வொருவரும் எதிர்காலத்தில் குழந்தைகளின் மூலமாவது அதிக வருவாய் பெறக்கருதி அதிக எண்ணிக்கையில் குழந்தைகளை பெறுகின்றனர்.

(8) கல்வியறிவு பரவாத நிலையாலும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் எதிர்பார்த்த அளவிற்கு வெற்றியளிக்கவில்லை. பொதுவாகக் கல்வி கற்பவர்களின் எண்ணிக்கைக் குறைவாக உள்ளது. பெண்களுக்குக் கல்வியறிவை அளிப்பது அவசியமானதாகக் கருதப்படுவதில்லை. 1971-இல் இந்தியாவின் மொத்த

மக்கட்தொகையில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் வீதம் 29.35 சதவீதம் மட்டுமேயாகும். 1961-இல் இவ்வீதமானது 24.03 சதவீதமாக இருந்தது எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை சுமார் 5.32 சதவீதம் மட்டுமே அதிகரித்துள்ளது. எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் மொத்த மக்கட்தொகையில் சுமார் 70 சதவீதம் இருக்கும்போது குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் எவ்வாறு வெற்றி பெற இயலும்? இதைத்தவிர, ஆண்களில் 39.49 சதவீதத்தினர் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாவர்; ஆனால் பெண்களில் 18.47 சதவீதத்தினர் மட்டுமே எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கின்றனர். தமிழ் நாட்டில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் 43.36 சதவீதத்தினராவர். இக்காரணத்தாலும் தமிழ் நாட்டில் குடும்பநலத் திட்டங்கள் வெற்றி பெற்றுள்ளன.

(9) இந்தியாவில் பெண்களின் பிற்போக்கான நிலையும் அதிக மக்கட் பெருக்கத்திற்குக் காரணமாகின்றது. சமுதாயப் பழக்க வழக்கங்களும், சமுதாய அமைப்பு முறைகளும் பெண்களுக்குச் சம உரிமைகளை வழங்குவதில்லை. ஆண்களோடு சமத்துவ நிலைகளைப் பெண்களும் பெற வேண்டும். எல்லாவற்றையும் உணர்ந்தவர்களாக, எல்லா உரிமைகளையும் பெற்றவர்களாகப் பெண்கள் இருந்தால்தான் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களை செயல்படுத்த முடியும். குடும்பநலத் திட்டங்கள் சரிவர பின்பற்றப் படாமைக்குப் பெண்களின் பிற்போக்கு நிலையே காரணமாகும். இதன் காரணமாகவும் பிறப்பு வீதத்தைக் குறைப்பது கடின நிலையைக் கொண்டு அமைந்துள்ளது.

ஒருவர் பல பெண்களை மணக்கும் வழக்கம் இன்றும் ஓரளவு இருந்து வருகிறது. இறப்பு வீதம் படிப்படியாகக் குறைந்து வருகின்றது. 1951-இல் 1000 பேர்களுக்கு 27.4 என்ற வீதத்தில் இறப்பு வீதம் இருந்தது; ஆனால், தறபொழுது இது 15 என்ற நிலைக்குக் குறைந்துள்ளது. மருத்துவ முன்னேற்றத்தினால் இந் நிலை ஏற்பட்டுள்ளது என்றாலும், பிற நாடுகளோடு ஒப்பிடும் போது இது குறைவான இறப்பு வீதம் இல்லை.

### இறப்பு வீதம் உயர்வாக உள்ளமைக்கான காரணங்கள்

(1) சமுதாய அமைப்பு முறைகளில் நீண்ட காலமாக மாறுதலே தோன்றவில்லை. மக்களின் அறியாமையும், பழைய வாழ்க்கை முறைகளும், கண்மூடிப் பழக்க வழக்கங்களும் அதிக இறப்பு வீதத்தைத் தருகின்றன. அம்மை, காமாலை, காய்ச்சல், காலரா போன்ற கொடிய நோய்களுக்கு மருத்துவ வசதியைப் பெற அவர்கள் விரும்புவதில்லை. சுகாதார வசதிகளை அவர்கள்

செய்து கொள்வதில்லை. ஆரோக்கிய வசதிகள் இல்லாமையால் நோய்கள் எளிதில் பரவுகின்றன.

(2) காற்றோட்டமுள்ள, எல்லா வசதிகளையும் கொண்ட குடியிருப்பு வசதிகள் மக்களுக்குக் கிடைப்பதில்லை குடிநீர் வசதிகள் இல்லாத இடங்களிலும் மக்கள் வாழ்கின்றனர். நகர்ப் புறங்களில் தொழிலாளர்கள் ஆரோக்கியமற்ற வாழ்வு வாழ்கின்றனர். நெருக்கமான குடியிருப்புக்களில் அவர்கள் வசிக்கின்றனர். கிராமங்களில் உள்ள விவசாயிகளின் வீட்டு வசதிகளும் சிறப்பாக அமைந்திருக்கவில்லை.

(3) இந்தியாவில் குழந்தைகளின் இறப்பும், பேறு காலப் பெண்கள் இறப்பும் மிகுதியாக உள்ளன. ஆயிரம் குழந்தைகளில் சுமார் 127 குழந்தைகள் இறந்து விடுவதாகக் கணக்கிடப் பட்டுள்ளது. இளம் வயதில் திருமணம் செய்வதும், அறியாமையும், பழக்கவழக்கங்களும், மருத்துவ வசதிக் குறைவும் இதற்குக் காரணமாக உள்ளது.

(4) இந்தியாவில் போதிய மருத்துவ வசதிகள் அமைந்திருக்கவில்லை. 6,300 பேர்களுக்கு ஒரு மருத்துவர் என்ற விதமே இன்றும் அமைந்துள்ளது. பெரும்பாலான மக்கள் மருத்துவர்களிடம் மருத்துவ மனைக்குச் சென்று சிகிச்சை பெறுவதில்லை. கொடிய காய்ச்சல்களுக்கும்கூட அவர்கள் மருத்துவர்களை நாடுவதில்லை. மகப் பேறுக்காக மருத்துவமனைகளில் பெண்களைச் சேர்ப்பது மிகக் குறைவாகவே உள்ளது. மேலும், கிராமப் புறங்களில் மருத்துவ மனைகள் அமைந்திருப்பதில்லை. நீண்ட தொலைவில் நகர்ப் புறங்களில் அமைந்திருக்கும் மருத்துவ மனைகளில் சிகிச்சை பெற கிராம மக்கள் விரும்புவதில்லை.

(5) மக்களின் குறைந்த வருவாயும் இறப்பு வீதம் உயர்வாக உள்ளமைக்குக் காரணமாகும். சத்துள்ள உணவைக் குழந்தைகளுக்கு அளிக்கப் பெற்றோர்களால் முடிவதில்லை. மூன்று வேளை உணவையே முழுமையாகப் பெற இயலாத மக்கட்தொகையின் பெரும்பகுதி, சத்துள்ள உணவைப் பெறுவது எங்ஙனம்? குழந்தைகளின் உயர்ந்த இறப்பு விதத்திற்கு இது காரணமாகிறது. தவிர, உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனும் இதனால் பாதிக்கப் படுகிறது.

### மக்கட்தொகை சிக்கலைக் குறைப்பதற்கான தீர்வுகள்

இந்தியாவின் பிறப்பு வீதம் இறப்பு வீதத்தைவிட மூன்று மடங்கு அதிகமாக உள்ளது. இவ்வீதத்தில் மக்கட் தொகை பெருகினால், இந்நூற்றாண்டின் இறுதியில் இந்திய

மக்கட்தொகை இரட்டிப்பாகிவிடும். மக்கட்தொகையைக் குறைக்க நடவடிக்கைகள் எடுத்தால்தான், விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெற அது வழி வகுக்கும். அரசு எவ்வித நடவடிக்கைகளை எடுத்தாலும், மக்களுடைய ஒத்துழைப்பு இல்லாவிடில் அவை வெற்றியைப் பெற முடியாது. பின்வரும் பல வழிமுறைகளின் மூலமாக மிகுதியான மக்கட்பெருக்கத்தைக் கட்டுப்படுத்தலாம் :

(1) நாட்டைத் தொழில் மயமாக்குவதின் மூலம் பல நகரங்கள் தோன்றும். கிராம மக்கட்தொகையைக் குறைத்து, நகர்ப்புறங்களில் குடியேறுமாறு செய்ய வேண்டும். இங்கிலாந்தில் தொழிற்புரட்சி ஏற்பட்டபோது மிக விரைவான மக்கட் பெருக்கம் ஏற்பட்டது. பெருகிய மக்கட்தொகைக்குத் தீர்வாகப் பல தொழில்களின் தோற்றம் அமைந்தது. இந்தியாவைத் தொழில் மயமாக்குவது எளிதானதல்ல. தொழில்கள் பலவற்றைத் தொடங்குவதற்கான மூலதன வசதி இந்தியாவில் அமைந்திருக்கவில்லை. அவ்வாறு தொழில்கள் தொடங்கப்பட்டாலும் விரிவான உள்நாட்டுச் சந்தையும், வெளிநாட்டுச் சந்தையும் தேவைப்படுகின்றது. உலகச் சந்தையில் பல உலக நாடுகளின் போட்டியும் அமைந்துள்ளது. ஏற்றுமதியைப் பெருக்குவது இதனால் கடின நிலையைக் கொண்டிருக்கின்றது. வேளாண்மையோடு இந்தியாவில் குறைந்த அளவிற்குச் சிறு தொழில்களும் குடிசைத் தொழில்களும் அமைந்துள்ளன. நாட்டில் பலவகைப்பட்ட பெரிய தொழில்களையும், சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் பெருக்குவதின் மூலமாக மக்களைத் தரமான வாழ்வு பெறச் செய்யலாம். வருவாய் உயர்ந்து வாழ்க்கைத்தரம் அதிகரித்தால்தான், பிறப்பு வீதம் திட்டமிடப்பட்டுள்ள அளவிற்குக் குறையும். குறைவான மூலதனத் தேவையைக் கொண்டுள்ள சிறு தொழில்களின் மூலம் விவசாயிகளின் வருவாயையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த இயலும்.

(2) உழைப்பை உள்நாட்டில் எளிதில் பெயர்ச்சியுடையதாகச் செய்யவேண்டும். இந்தியாவில் உழைப்பாளர்கள் வெவ்வேறிடங்களுக்கு எளிதில் பெயர்ச்சியடைவதில்லை. மக்கட் செறிவு மிக்கப் பகுதிகளிலிருந்து மக்கள் நெருக்கம் குறைவாக உள்ள பகுதிகளுக்கு மக்களைக் குடியேறச் செய்யலாம். ஆனால், இவ்வித முறையில் சிக்கலைத் தவிர்க்க எந்த மாநில அரசும் ஒப்புவதில்லை. மேலும், மக்கள் விருப்பமும் குடிபெயர்ச்சிக்கு எதிரிடையாக உள்ளது. மதம், மொழி, இனம், பழக்க வழக்கங்கள், சமுதாய முறைகள், அரசியல் அமைப்புக்கள் ஆகிய யாவும் மாநிலங்களுக்கிடையே வேறுபடுகின்றன. நாடுகளுக்கிடையே குடியேற்றங்கள் அரிதாக

அமைகின்றன. மாநிலங்களுக்கிடையேயும் மக்கட்தொகை அளவில் பெயர்ச்சியைக் கொண்டிருப்பதில்லை.

(3) வெளிநாடுகளில் குடியேற்றம் செய்வதற்கான வாய்ப்புக்கள் இல்லை எனக் கூறலாம். தற்பொழுது எந்த ஒரு நாடும் குடியிறக்கத்தை அனுமதிப்பதாக அமைந்திருக்கவில்லை. பல முன்னேற்றமடைந்த நாடுகள் திறமை மிக்க உழைப்பை ஓரளவு குடியிறக்கம் செய்ய அனுமதிக்கின்றன. ஆனால், இந்தியா போன்ற மேம்பாடடைந்துவரும் நாடுகளில் திறமைமிக்க உழைப்பு நாட்டைத் தொழில்மயமாக்கத் தேவைப்படுகின்றது. இந்தியர்கள் அமெரிக்கா, இங்கிலாந்து, பர்மா, இலங்கை, மலேயா, தென் ஆப்பிரிக்கா, மார்ஷியஸ் போன்ற நாடுகளில் வசிக்கின்றனர். சுமார் 25 லட்சம் இந்தியர்கள் வெளிநாடுகளில் வசிப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. பர்மா, இலங்கை போன்ற நாடுகள் பல ஆண்டுகளுக்கு முன்பு அந்நாடுகளில் குடியேறிய இந்தியர்களைத் திருப்பியனுப்ப நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன. இந்தியாவிற்கும், இந்நாடுகளுக்கிடையேயும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கைகளால் இந்தியர்கள் தாய்நாட்டிற்கு அனுப்பப்படுகின்றனர்கள். இவ்வாறு வருகின்ற அகதிகளைப் பாதுகாத்து, வேலை வாய்ப்புக்களை அளிப்பது கடின நிலையைத் தருகின்றது. வெளிநாட்டுக் குடியேற்றத்தின் மூலம் மக்கட்தொகைச் சிக்கலுக்கான தீர்வைக் காண முடியாது.

(4) வேளாண்மை உற்பத்தியை உயர்த்தி உணவுப் பற்றாக்குறையைத் தவிர்க்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. நல்விதைகள், இரசாயன உரங்கள், முன்னேற்றமடைந்த கருவிகள் ஆகியவற்றின் பயன் விவசாயிகளால் உணரப்பட்டு வருகின்றது. நீர்ப்பாசன வசதிகள், மின்சார வசதிகள் ஆகிய வசதிகளும் செய்து தரப்படுகின்றன. ஒரு ஏக்கருக்கான உற்பத்தியின் அளவை உயர்த்த செறிவு முறைச் சாகுபடி புகுத்தப்படுகின்றது. அறிவியல் முறையில் வேளாண்மைத் துறையை வளர்க்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. நிலத்தின் அளிப்பு நெகிழ்வற்றதாக இருக்கின்றது. மக்கட் பெருக்கம் மிகுதியாக இருப்பதால் தனியொருவருக்குக் கிடைக்கக்கூடிய நிலத்தின் அளவு குறைந்துவிடுகின்றது. இந்தியாவில் சாகுபடிக்கு ஏற்ற, வேளாண்மை உற்பத்தியில் அமைந்துள்ள நிலத்தின் அளவு சிறியதாகவே இருக்கின்றது. செறிவு முறைச் சாகுபடியின் மூலம் உற்பத்தியை உயர்த்தலாம் என்றாலும், அதிக மக்கட்தொகையே அதற்கு இடையூறாக உள்ளது. மக்கட்தொகைப் பெருக்க வீதத்தின் அளவிற்குச் சமமாக உணவுப் பொருட்களின் உற்பத்தி வீதத்தைப் பெருக்க முடியவில்லை. சாகுபடி நிலத்தின் அளவைக் கூட்டுவதும் இனி இயலாத ஒன்றாகிவிடும். 192[illegible]-ஆம் ஆண்டிற்கும் 1951-ஆம் ஆண்டிற்கும்

இடைப்பட்டக் காலத்தில் சாகுபடிக்குப் புதிதாக எடுத்துக் கொள்ளப்பட்ட நிலத்தின் அளவு 5 சதவீதம் மட்டுமே உயர்ந்திருந்தது. ஆனால், இதே காலத்தில் மக்கட் பெருக்கம் 44 சதவீதம் அதிகரித்தது. இந்திய வேளாண்மை குறைந்த வீதத்தில் வளர்ச்சியடைவதற்கு அதிக மக்கட்தொகையே அடிப்படைக் காரணமாகிறது. விஞ்ஞான அடிப்படையில் செறிவுமுறைச் சாகுபடி மேற்கொள்ளப்பட்டு வேளாண்மை உற்பத்தி உயர்த்தப்பட்டாலும், மக்கட் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது தவிர்க்க முடியாதது.

(5) திருமணத்தை ஒத்திவைப்பதின் மூலமும், ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேலை வாய்ப்புக்களை அதிகரிப்பதின் மூலமும் மக்கட்தொகைச் சிக்கலுக்குத் தீர்வு காணலாம். மக்களின் சமுதாய, பொருளாதார நிலைகள் உயர்த்தப்பட வேண்டும். அதிக பிறப்பு வீதத்தைத் தவிர்க்க கருத்தடை முறைகளை மக்கள் உணருமாறு செய்தல் வேண்டும். ஒரு குழந்தை பிறப்பதற்கும், அதற்கடுத்தக் குழந்தை பிறப்பதற்கும் உள்ள கால இடைவெளியை நீட்டுவதற்கான வழிமுறைகளை மக்கள் பின்பற்றுமாறு செய்வது அவசியமாகின்றது.

(6) மக்கட்தொகையைக் கட்டுப்படுத்துவதே மக்கட்தொகைச் சிக்கலுக்கான சரியான தீர்வாகும். பெருகிவிட்ட மக்கட்தொகையைக் குறைப்பது இயலாதது; பெருகி வருகின்ற மக்கட்தொகை பெருக்க வீதத்தைக் குறைப்பது இயலும். குடும்பநலத் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்துவதின் மூலமே பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும். திருமண வயதை உயர்த்த வேண்டியது இன்றியமையாததாகும். இந்தியாவில் பிறப்பு வீதம் 1000 பேர்களுக்கு 40 என்ற அளவில் இருக்கின்றது. இன்னும் பத்தாண்டுக் காலத்திற்குள் இதை 1000 பேர்களுகு 25 ஆகக் குறைக்க அரசு முயன்று வருகின்றது.

கருத்தடை முறைகளால் பிறப்பு வீதத்தைப் பெருமளவிற்குக் குறைக்கலாம். பல ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளில் பிறப்பு வீதம் குறைவாக உள்ளமைக்கு கருத்தடை முறைகளை அந்நாடுகள் பின்பற்றுகின்ற நிலையே காரணமாகும். கருத்தடை முறைகளுக்கு பல 'சமயங்களின்' எதிர்ப்பும் அமைந்துள்ளது கருத்தடை முறைகளைப் பரப்புவதால் மக்களிடம் ஒழுக்க நிலை குறைந்து விடும் எனச் சொல்லப்படுகின்றது. ஆனால், ஒழுக்கம் என்பது ஒருவருடைய மனநிலையைப் பொறுத்தே அமையும்.

கருச்சிதைவை சட்டத்தின் மூலம் அங்கீகரித்தமையால் ஜப்பானில் பிறப்பு வீதம் மிக்வும் குறைந்து விட்டது. இந்தியாவிலும் கருச்சிதைவைச் சட்டப்படி குற்றமற்றதாக்கலாம். மூன்று குழந்தைகளுக்கு மேல் கட்டாயக் கருத்தடையைச் செய்ய அரசு தீவிர நடவடிக்கையை எடுக்கலாம். மக்கட் பெருக்கத்தைக் குறைத்து பொருளாதார, சமுதாய முன்னேற்றங்களைப் பெறுவதின் மூலமே மக்களுக்கு நல்வாழ்வை அளிக்க முடியும்.

மால்தஸின் தத்துவப்படி, "தடுப்பு முறைகள் இல்லாமல் பஞ்சம், நோய் முதலிய இயல்பான தடுப்புகளால் ஒரு நாட்டின் மக்கட் பெருக்கம் குறைக்கப்பட்டால் அந்நாடு எச்ச மக்கட் தொகையுடையது." ஆனால், தற்காலத் தத்துவங்களின்படி, தலா வருவாயை அதிக அளவில் கொண்டுள்ள நிலையே உத்தம மக்கட் தொகை எனக் கூறப்படுகின்றது. இந்தியா எச்ச மக்கட்தொகையைக் கொண்டுள்ளது எனலாம். வறுமை, நோய், இறப்பு ஆகியவாவும் எச்ச மக்கட்தொகையின் விளைவேயாகும். மால்தஸின் கொள்கைப்படி, ஒரு நாட்டில் மக்கட்தொகை அதிகரிப்பு வீதம் உணவு உற்பத்தி வீதத்தைவிட அதிகமாக இருந்தால் அந்நாடு எச்ச மக்கட் தொகையுடையது என்பது பொருள். இத்தத்துவம் மூன்றில் ஒரு பங்கு வேளாண்மை நாடுகளுக்குப் பெரிதும் பொருந்தும். இந்தியாவில் மொத்த மக்கட்தொகையில் சுமார் 70 சதவீதம் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளது.

இந்தியாவில் 1900-ஆம் ஆண்டு முதல் 1945-ஆம் ஆண்டு வரை மக்கட்தொகை 38 சதவீதம் உயர்ந்தபோது, உணவுத் தானியங்களின் உற்பத்தியில் எவ்வித உயர்வும் ஏற்படவில்லை. எனவே, தலா வருமானம் இக்காலத்தில் குறைவாகவே இருந்தது. கடந்த இருபது ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்டத் திட்டங்களால் உணவு உற்பத்தி உயர்ந்துள்ளது. எனினும், மக்கட்தொகைப்பெருக்கம் உணவுத் தானியங்களின் உற்பத்தியைக் காட்டிலும் குறைவாகவே இருந்தது. 1951-ஆம் ஆண்டிற்கும் 1965-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் மக்கட்தொகை 33 சதவீதம் உயர்ந்தது. உணவுத் தானியங்களின் உற்பத்தி சுமார் 55 சதவீதம் அதிகரித்தது. தனியொருவருக்கான உணவு உற்பத்தி 1951-இல் 13.5 அவுன்சாக இருந்தது. 196.-இல் இது 16 2 அவுன்சாக உயர்ந்தது. மக்கட் பெருக்கத்தால் உணவுத் தேவையும் அதிகரித்தமையால் விலையுயர்வு ஏற்பட்டது. மக்கட்தொகைக்கும், உணவு உற்பத்திக்கும் இடையே சமநிலை இந்தியாவில் ஏற்படவில்லை. உணவின் அளிப்பை நோக்கும்போது நம் நாட்டின் மக்கட்தொகை அதிகமேயாகும்.

விரைவான மக்கட்தொகைப் பெருக்கத்தால் கங்கை நதிப் பள்ளத்தாக்கில் உள்ள தரிசு நிலங்கள் யாவும் சாகுபடிக்கு ஏற்ற நிலங்களாக மாற்றப்பட்டன. மலைகளும், குன்றுகளும், புதர்களும் அழிக்கப்பட்டுச் சாகுபடி நிலங்களாக மாற்றப்பட்டன.

நம் நாடு எச்ச மக்கட்தொகையைக் கொண்டுள்ள நாடாகும். எச்ச மக்கட்தொகை மேலும் பெருக பல வாய்ப்புகள் உள்ளன. நாளுக்கு நாள் மக்கட்தொகை அதிகரித்துக் கொண்டே செல்கின்றது. பிறப்பு வீதத்திற்கும் இறப்பு வீதத்திற்கும் அதிக இடைவெளி உள்ளதால் விரைவான மக்கட் பெருக்கம் ஏற்படுகின்றது. ஒவ்வொரு பத்தாண்டுக் காலத்திலும் பிரிட்டனின் மக்கட்தொகைக்குச் சமமான எண்ணிக்கையில் இந்தியாவின் மக்கட்தொகை கூடுகின்றது.

எச்ச மக்கட்தொகை என்பது ஒரு ஒப்பீட்டுச் சொல்லே ஆகும். ஒரு நாட்டின் அளவையும், வளத்தையும் சார்ந்து அது அமையும். மக்கட்தொகைச் சிக்கலைத் தீர்க்க உற்பத்தி, மக்கட் பெருக்கம் என்ற இருவேறு முறைகளில் அணுகுதல் வேண்டும். மக்கட்தொகைப் பெருக்கவீதம் உற்பத்தி வீதத்தைக்காட்டிலும் குறைவாக இருக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் உற்பத்தி மக்கட்தொகையைக் காட்டிலும் குறைவாக இருக்கக் கூடாது. உற்பத்தியின் அளவு குறையாதிருக்கும் பொருட்டு வேளாண்மைத் துறையை நன்கு வளர்க்க வேண்டும். தரிசு நிலங்களை விளைநிலங்களாக மாற்றுவதாலும், நவீன வேளாண்மைச் சாகுபடி முறைகளைப் பின்பற்றுவதாலும் உணவு உற்பத்தியைப் பல மடங்கு பெருக்க இயலும்.

நாட்டைத் தொழில்மயமாக்குவதும் பிறப்பு வீதத்தைக் குறைக்க உதவுகிறது. பெரிய தொழில்களை வளர்ப்பதின் மூலம் நகரங்களில் வாழும் மக்கட்தொகை அதிகரிக்கின்றது. இதன் வாயிலாக உற்பத்திக்கும் மக்கட்தொகைக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்க முடியும். நகரங்கள் பெருகும்போது மக்கட் பெருக்கம் குறைவதோடு தொழில் ஆக்கமும் அதிகரிக்கின்றது. திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சியால் தொழில் வளத்தைப் பெருக்கி உற்பத்தியைக் கூட்ட முடிகின்றது. இதன் காரணமாக நாட்டின் பொருளாதாரம் மேம்பாடடையும். மேலை நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றமைக்குத் தொழில் வளர்ச்சியே காரணமாக இருந்தது. தொழில் முன்னேற்றம் தரமான வாழ்வை மக்களுக்குக் கொடுக்கின்றது. மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதின் மூலம் மக்கட்தொகைப் பெருக்கத்தைத் தடுக்க முடியும்.

மேலைநாட்டுக் குடும்பங்கள் நம் நாட்டின் குடும்பங்களைவிடச் சிறியவைகளாக இருக்கின்றன. குடும்பத்தின் அளவைக் குறைக்க குடும்பநலத் திட்டங்கள் விரிவாக்கப்பட வேண்டும். சிறிய அளவு குடும்பத்தைக் கல்வியறிவு பெற்றவர்களும், அதிக வருவாய் பெறுபவர்களும் மட்டுமே கொண்டிருக்கின்றனர். கல்வியறிவை மக்களிடம் பெருக்குவதின் மூலம், சிறிய அளவில் குடும்பத்தைக் கொண்டிருப்பதின் அவசியத்தை அவர்கள் உணர்கிறார்கள். பெருகிவரும் மக்கட்தொகையைச் சமாளிக்க அதிக உற்பத்தியையும், விரைவான பொருளாதார முன்னேற்றத்தையும் துணையாகக் கொள்ள வேண்டும். எனினும், மக்கட்தொகைச் சிக்கலுக்குத் தீர்வு காண மக்கட் பெருக்கம் கட்டுப்படுத்தப்பட்டே ஆகவேண்டும்.

## முதல் உலகப் போருக்குப்பின் இந்தியாவின் மக்கட்தொகைப் பெருக்கமும் அதனால் ஏற்பட்ட பொருளாதார மாறுதல்களும்

சில நிலைகளில் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருளாதார முன்னெற்றத்திற்கு மக்கட் பெருக்கமும் காரணமாக அமையும். உழைப்பு குறைந்த ஊதியத்திற்குக் கிடைப்பதாலும், தேவைகள் பெருகுவதாலும் சந்தைப் பொருளாதாரம் தோன்றுகிறது. சந்தைகள் விரிவடைவதால் உற்பத்தி ஊக்கமடைகிறது. ஆஸ்திரேலியா, பிரேசில் ஆகிய மக்கட் செறிவு குறைவான நாடுகளுக்கு இவ்விளக்கம் பொருந்தும். எச்ச மக்கட்தொகையைக் கொண்டுள்ள இந்தியா போன்ற நாடுகளில் இக்கொள்கை எவ்வகையிலும் பொருந்தாது. இந்தியாவின் விரைவான மக்கட் பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் தடையாக உள்ளது. இதனால் திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படுகின்றது. நம்முடைய திட்டங்கள் வெற்றியடையாமைக்கு மிகுதியான மக்கட் பெருக்கமும் ஒரு காரணமாகும். திட்டங்களில் மருத்துவம், ஆரோக்கியம், சமுதாய நலன் ஆகியவற்றிற்காக அரசு அதிக முதலீட்டைச் செய்கின்றது. இதன் விளைவாக இறப்பு வீதம் குறைக்கப்பட்டுள்ளது. குடும்ப நலத் திட்டங்களுக்கு அரசு அதிகச் செலவு செய்தாலும் பிறப்பு வீதம் அதிக அளவிற்குக் குறைக்கப்படவில்லை.

பெருகிவரும் மக்கட்தொகை பொருளாதார முன்னேற்றத்தைக் கீழ்க்கண்ட நிலைகளால் தடை செய்கின்றது :

### (i) உணவுப் பற்றுக்குறை

அதிக மக்கட் பெருக்கத்தைக் கொண்ட நாட்டில் உணவுப் பற்றுக்குறை ஏற்படுவது இயல்பானதேயாகும். மக்கட்தொகை விரைவாக அதிகரிப்பதால் தனியொருவருக்குக் கிடைக்கக்கூடிய நிலத்தின் அளவும் குறைகின்றது. 1921-ஆம் ஆண்டிற்கும்

1951-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் இது 25 சத வீதம் குறைந்தது. இந்தியாவின் பெரும்பகுதி மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபட்டும் உணவுப் பற்றுக்குறையைத் தவிர்க்க முடியவில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் வேளாண்மையில் புதுமையான முறைகளைப் பின்பற்றாமையும், உழைப்பாளர்களின் உண்மையான கடின உழைப்பின்மையுமே ஆகும். உணவுப் பற்றுக்குறையால், பிற நாடுகளினின்றும் உணவுத் தானியங்களை இறக்குமதி செய்ய வேண்டிய நிலையில் இன்று இந்தியா அமைந்துள்ளது. இதன் காரணமாக வெளிநாட்டுச் செலாவணி நிலை பெரிதும் பாதிக்கப்படுகின்றது.

(ii) உற்பத்திக்கு உதவாத மக்கட்தொகையின் உயர்ந்த வீதம்

மக்கட்தொகை அதிகரிக்கும்போது, உற்பத்திப் பணிகளில் ஈடுபடாத சிறுவர்களின் எண்ணிக்கையும் உயர்வடைகின்றது. இந்தியாவில் ஆக்கப் பணிகளில் ஈடுபடாத மக்கட்தொகை 25 கோடியாக உள்ளது. இவ்வாறு உற்பத்திப் பணிகளில் குறைந்த மக்கட்தொகை மட்டும் ஈடுபட்டிருப்பதும் இந்தியாவின் பின் தங்கிய நிலைக்குக் காரணமாகும். இந்தியாவில் மக்கள் உழைக்கும் வயது 15 முதல் 40 வரை எனப் பொருளியலறிஞர்கள் கருது கின்றனர். நம் நாட்டில் உழைக்கும் வயது வரம்பிற்குள் இருப்பவர்கள் 41 சதவீதம் மட்டுமே. இவர்களில் ஆக்கப் பணிகளில் ஈடுபடாத பெண்களை நீக்கி விட்டால் உழைப்பவர்கள் 30 சதவீதம் மட்டுமே உள்ளனர். இந்தியாவில் தலா வருவாய்க் குறைவாக உள்ளமைக்கு இதுவும் ஒரு காரணமாகும்.

(iii) பெண்கள் உழைப்பின் இழப்பு

இந்தியாவில் பெண்கள் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே உள்ளார்கள். நம் நாட்டில் பெரும்பாலான பெண்கள் உற்பத்திப் பணிகளில் ஈடுபடுவதில்லை. சில பெண்கள் வேலைக்குச் சென்றாலும் அவர்கள் வேலை செய்யும் நேரம் குறைவானதேயாகும். பெண் களின் உழைப்பு குறைந்த அளவில் ஆக்கப் பணிகளில் ஈடுபடாமை குறைந்த உற்பத்தியின் அளவிற்குக் காரணமாகின்றது. உற்பத்தி யில் பெண்கள் குறைவாகவே ஈடுபட்டுள்ளனர். ஆண்களில் மூன்றில் இரு பகுதியினர் பணியாற்றுகின்றனர்; பெண்களில் மூன்றில் ஒரு பகுதியினர் மட்டுமே பணியாற்றுகின்றனர்.

(iv) வேலையின்மைச் சிக்கல்

மக்கட்தொகைப் பெருக்கத்தால் வேலையின்றி இருப்போரின் எண்ணிக்கை உயர்ந்து வருகின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடு களின் முன்னேற்றத்தைத் தடுப்பது வேலையின்மைச் சிக்கலே

ஆகும். இந்தியாவில் இந்நிலை அமைந்துள்ளதை நம்மால் அறிய முடிகின்றது. ஐந்தாண்டுத் திட்டங்களில் வேலையின்மையைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டும், வேலையின்மைச் சிக்கல் தீர்க்கப்படாத ஒன்ருகவே உள்ளது. வேலையின்றி இருப்போருக்கான உணவையும் உற்பத்தி செய்ய வேண்டியது அவசியமாகின்றது. பொருளாதார வளர்ச்சி இதனுல் தடைப்படுகின்றது. மக்கட் பெருக்கத்தால் மறைந்துள்ள வேலையின்மை வேளாண்மைத் துறையில் அமைந்துள்ளது. மேலும், பருவகால வேலையின்மையும் வேளாண்மையில் அமைந்திருக்கின்றது. விவசாயிகளுக்கு ஆண்டு முழுதும் சாகுபடி வேலைகள் இருப்பதில்லை. பிற துறைகள் வளராமையால் விவசாயிகள் பகுதி நேர வேலைகளில் ஈடுபட முடிவதில்லை. தொழில் துறையானது வளர்ச்சியடையாத காரணத்தால் மறைந்துள்ள வேலையின்மையில் உள்ளவர்களுக்கும் வேலை வாய்ப்புக்கள் கிடைப்பதில்லை.

(v) குறைவான சேமிப்பும், முதலீடும்

மக்கட்தொகைப் பெருக்கத்தால் ஒரு நாட்டின் சேமிக்கும் திறனும், முதலீட்டுத் திறனும் குறைகின்றன. அதிக மக்கட் பெருக்கத்தால் நாட்டின் வருவாய் குறைவாக அமையும். குறைவான நாட்டு வருவாய் மிகுதியான மக்கட் தொகையிடையே பகிரப்படும்போது குறைந்த தலா வருவாய் விளைவாகின்றது. குறைந்த வருவாயைப் பெறுகின்ற மக்களின் சேமிக்கும் திறன் குறைந்த அளவில் அமைகின்றது. இதனுல் அவர்களுடைய வாங்கும் சக்தியும் குறைவாகவே உள்ளது. கடந்த 10 ஆண்டுக் காலத்தில் தனியொருவர் வருவாய் 16 சதவீதம் அதிகரித்தது. ஆனுல் மக்கட்தொகை 21 சதவீதம் உயர்ந்தது. உற்பத்திப் பணிகளில் ஈடுபட்டுள்ள 1000 பேர்களைச் சார்ந்து சுமார் 2504 பேர்கள் வாழ்கின்றனர். மக்கள் வருவாய்க் குறைவால் வறுமையில் வாடுகின்றனர். 1968-69-இல் இந்தியாவின் சராசரித் தலா வருவாய் ரூ. 546 என நான்காவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கை மதிப்பிடுகின்றது. இது இங்கிலாந்தின் சராசரித் தலா வருவாயில் பதினெட்டில் ஒரு பங்காகும். 1968-69-இல் இந்தியாவின் சேமிப்பு நாட்டு வருவாயில் 8.8 சதவீதம் மட்டுமேயாகும். ஜப்பான் நாட்டின் சேமிப்பு 33 சதவீதமாகவும், அமெரிக்காவின் சேமிப்பு 18 சதவீதமாகவும் உள்ளது. 1950-51-இல் இந்தியாவில் சேமிப்பு நாட்டு வருவாயில் 6.5 சதவீதமாகவும், 1961-62-இல் 9.5 சதவீதமாகவும் இருந்தது. இந்தியாவில் குறைந்த நுகர்வு இருந்தும், சேமிப்பு வீதம் உயர்ந்த அளவில் அமைந்திருக்கவில்லை. வளர்ச்சியடையாத நாடுகள் உற்பத்தித் திறனை உயர்த்த பெரிய அளவு முதலீடுகளை நாட்டு வருவாயில் 15 முதல் 20 சதவீதத்திற்குச் செய்ய வேண்டும்.

(vi) உழைப்பின் குறைவான உற்பத்தித்திறன்

இந்தியாவில் உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன் குறைவாக உள்ளமைக்குப் பல காரணங்களைக் கூறலாம். வெப்ப நாடாகிய இந்தியாவில் இயற்கையிலேயே உழைப்பாளர்கள் நீண்ட நேரத்திற்குச் சிறப்பாகப் பணியாற்ற முடியாது. மக்களின் குறைந்த வருவாயும், வறிய நிலையும் உழைப்பின் திறன் குறைவாக உள்ளமைக்குக் காரணமாகின்றது. கிராம மக்களைவிட நகர மக்கள் முற்போக்குவாதிகளாக இருக்கின்றனர். அவர்களுடைய உற்பத்தித் திறனும், வாழ்க்கைத் தரமும் உயர்வாகவே உள்ளன. கல்வியறிவைப் பெருக்குவதின் மூலமே உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனைப் பெருக்க முடியும். உண்மையாக உழைக்கும் திறனைக் கொண்டுள்ள மக்கள் நாட்டின் அதிக ஆக்கத்திற்குப் பெரிதும் உதவுகின்றனர்.

விரைவான மக்கட் பெருக்கம் பொருளாதார முன்னேற்றத்தை எவ்வாறு பாதிக்கிறது என்பதைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம் :

"மிகுதியான மக்கட் பெருக்கத்தால் உணவுப் பற்றுக்குறை ஏற்படுகின்றது. வேலையின்மைச் சிக்கல் தோன்ற அது வழி வகுக்கின்றது. இதனால் சராசரித் தலா வருவாயில் குறைவு ஏற்படும்; மக்களின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படும். நாட்டின் மொத்த ஆக்கத்தின் அளவும் குறைவாகவே அமையும். உணவு இறக்குமதியால் அந்நியச் செலாவணிச் சிக்கல் தோன்றுகிறது." இக்காரணங்களால் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் மக்கட் தொகையைச் சார்ந்து அமையும் எனலாம். இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பெருகும் மக்கட்தொகை பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும்.

தொழில் பாகுபாடு

ஒரு நாட்டின் பொருளாதார மேம்பாட்டை அறிய தொழில் பாகுபாடுகளைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகின்றது. நாட்டில் அமைந்துள்ள பல வகைப்பட்ட தொழில்களால் மக்களின் வாழ்க்கைத் தரத்தையும், பொருளாதார நிலையையும் புரிந்து கொள்ளலாம். பெரும்பாலான பின் தங்கிய நாடுகள் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளன. நம் நாட்டில் தொழில் பாகுபாட்டில் சிறப்பானச் சமநிலை அமைந்திருக்கவில்லை. 1961-இன் கணக்கெடுப்புக்களின்படி மொத்த மக்கட்தொகையில் 70 சதவீதத்தினர் வேளாண்மையிலும், 11 சதவீதத்தினர் தொழில் துறையிலும், 4 சதவீதத்தினர் வாணிபத்திலும், 3 சதவீதத்தினர் சுரங்கத் தொழில் போன்ற

வற்றிலும், 2 சதவீதத்தினர் போக்குவரத்துத் துறையிலும், 1 சதவீதத்தினர் அமைப்புப் பணிகளிலும் (Construction), மிகுதியுள்ள 10 சதவீதத்தினர் வேறு சில தொழில்களிலும் ஈடுபட்டுள்ளதாகத் தெரியவருகின்றது.

அடிப்படைத் தொழிலாகிய வேளாண்மையில் அமைந்துள்ளவர்கள், பிற தொழில்களில் ஈடுபடுவது மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே ஆகும். தொழில் பாகுபாட்டிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உண்டு. "மக்கள் அடிப்படைத் தொழிலை மட்டும் சார்ந்து, பிற தொழில்களில் ஈடுபடாமல் இருக்கும் நிலை தலா வருவாயைக் குறைந்த அளவிலேயே கொடுக்கும்" என கோலின் கிளார்க் (Colin Clark) குறிப்பிடுகின்றார். வேளாண்மைத் துறையில் வருவாயை உயர்த்துவது எளிதானதல்ல. திட்டங்களின் மூலம் பொருளாதாரத்தைப் பல தொழில் பாகுபாடுகளைக் கொண்டதாக மாற்ற வேண்டுமென அரசு முயன்று வருகின்றது. 1951 முதல் 1961 வரை தொழில் பாகுபாட்டில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படவில்லை. 1951-இல் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தவர்கள் மொத்த மக்கட்தொகையில் 69.7 சதவீதமாகும்; 1961-இல் இது 69.5 சதவீதமாக இருந்தது.

பிற நாடுகளில் தொழில், வாணிபம், போக்குவரத்து போன்ற துறைகளில் பணியாற்றுவோர் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. அந்நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இந்நிலையே முக்கியக் காரணமாகும். சான்றாக, இங்கிலாந்தின் வேளாண்மையில் 8 சதவீதத்தினருக்கும் குறைவானவர்களே ஈடுபட்டுள்ளனர். இதற்கு எதிரான நிலை இந்தியாவில் அமைந்துள்ளது. வேளாண்மையையும், மழையையும் நம்பியே நம் மக்கள் வாழ்ந்து வருகின்றார்கள். மேலும், நிலம் குறைந்து செல் விளைவு செயல்படுகின்ற நிலையைக் கொண்டுள்ளது இந்தியாவில் குறைந்து செல் உற்பத்தித் தோன்றுகின்ற அளவிற்கு வேளாண்மை வளர்ந்திருக்கவில்லை. நிலத்தில் குறைந்து செல் விளைவு விதி செயல்படும்போது, மக்கட் பெருக்கத்தில் இவ்விதி செயல்படுவதில்லை. இந்தியாவைப் பொறுத்த அளவில் மக்கட் பெருக்கம் உயர்ந்து செல் விளைவையே கொண்டுள்ளது எனலாம். இந்தியாவில் பெரும்பகுதி மக்கள் வாழ்நாள் முழுதும் வேளாண்மையிலேயே ஈடுபடுகின்றனர். வேளாண்மையில் பல மாதங்களுக்கு அவர்கள் வேலையின்றி இருக்கின்றனர். விவசாயிகள் வேளாண்மையை முழுதும் சார்ந்துள்ள நிலையே நம் வறுமை நிலைக்கு அடிப்படைக் காரணமாகிறது.

1961-ஆம் ஆண்டுப் புள்ளி விவரங்களின்படி வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்களின் வீதமானது சற்றுக் குறைந்துள்ளது. நகர்ப் புறங்களில் தொழில்கள், வாணிபம், வியாபாரம் ஆகியவற்றில் ஈடு பட்டுள்ளோரின் எண்ணிக்கையும் சற்று அதிகரித்துள்ளது. ஆயினும், கடந்த 60 ஆண்டுகளுக்கு மேலாக நம் நாட்டுப் பொருளா தாரம் பின்தங்கிய தேக்க நிலையிலேயே உள்ளது. போக்குவரத்து, செய்தித்தகவல் தொடர்பு, பாதுகாப்பு போன்ற துறைகளில் பணியாற்றுபவர்களின் எண்ணிக்கையும் படிப்படியாக அதிகரித்து வருகின்றது. பொருளாதார மேம்பாட்டிற்கான சிறந்த திட்டங் களாலும், அவற்றைச் சிறப்பாகச் செயல்படுத்தும் முறைகளாலும் மட்டுமே நம் நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்த இயலும்.

மக்கட் பெருக்கம் என்பது இயற்கைத் தன்மையைக் கொண் டிருந்தாலும், இந்தியாவின் முன்னேற்றத்தை இது பெரிதும் பாதிக்கின்றது. இந்தியாவின் மக்கட்தொகை அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் போல $2\frac{1}{2}$ மடங்கும், கனடாவைப் போல 25 மடங்கும் அதிகமாக உள்ளது. இவ்வாறு மிக உயர்ந்த மக்கட்தொகையைக் கொண்டுள்ள ஒரு பெரிய நாடு பொருளாதாரத்தில் பின்தங்கிய தேக்க நிலையைக் கொண்டிருப்பது இயல்பானதேயாகும். அதிக மக்கட்தொகையும் விரைவான மக்கட் பெருக்கத்திற்கு ஒரு காரண மாக அமைகின்றது. இந்தியாவில் பத்தாண்டுக் காலத்தில் அதிகரிக்கின்ற மக்கட்தொகை, ஐரோப்பிய நாடுகளில் எந்த ஒரு நாட்டின் (ரஷ்யா நீங்கலாக) மக்கட்தொகைக்கும் சமமாக உள்ளது. பிறப்பு வீதம் குறைக்கப்படாமல், இறப்பு வீதம் மட்டும் குறைக்கப்பட்டுவிட்ட நிலையே அதிக மக்கட் பெருக்கத்திற்குக் காரணமாகின்றது.

மக்கட்தொகைச் சிக்கலை இரு வகைகளில் அணுக வேண்டும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். ஆனால் இதன் மூலம் மட்டும் மக்கட்தொகைச் சிக்கலைத் தீர்க்க முடியாது. பிறப்பு வீதத்தைக் குறைப்பதே சிக்கலைத் தீர்க்க உதவும் எளிதான வழி யாகும். மக்கட் பெருக்க வீதத்தைக் குறைக்கக் குடும்ப நலத் திட்டம் பெரிதும் உதவுகின்றது. மக்கட்தொகைப் பெருக்கத்தைத் தடுப்பதற்கு மட்டும் திட்டமிடாமல், தற்பொழுதுள்ள மக்களைச் சிறப்பாகப் பொருள்ாதார முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தவும் திட்டமிட வேண்டும். வேளாண்மை, தொழில் திட்டங்களோடு மக்கட் பெருக்கத்தைக் குறைக்கவும் தீவிரமான திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டும். மக்கட்தொகைப் பெருக்க வீதத் திற்கேற்ப பொருளாதார முன்னேற்ற வீதம் அமைதல் வேண்டும்; அல்லது, பொருளாதார முன்னேற்றத்தின் வீதத்திற்கேற்ப மக்கட்

பெருக்க வீதம் குறைக்கப்படுதல் வேண்டும். இந்நிலை ஏற்படாவிட்டால், பொருளாதார முன்னேற்றத்தினால் ஏற்படும் நன்மைகளை மக்கள் பெற முடியாது ; மக்களின் வாழ்க்கைத்தரம் தாழ்ந்த நிலையிலேயே அமைந்திருக்கும்

மக்கட்தொகைக் கொள்கை பிறப்பு இறப்பு வீதங்களைக் குறைத்து உழைப்பின் தரத்தை உயர்த்துவதாக இருக்க வேண்டும். பொருளாதார முன்னேற்றம் காலப்போக்கில் பிறப்பு வீதத்தைக் குறைத்துவிடும். இதை வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வரலாறுகளினின்றும் உணரலாம் பிறப்பு வீதமானது இயல்பாகக் குறைய பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டுமென்றாலும், வளர்ச்சியடையாத நாடுகளில் பிறப்பு வீதத்தைக் குறைப்பது முன்னேற்றத்தைப் பெற எளிதில் உதவும். முன்னேற்றத்தைப் பெற்று அதன் மூலம் பிறப்பு வீதம் குறையக் காத்திருக்கக் கூடாது. அவ்வாறு காத்திருந்தால், முன்னேற்றத்தைப் பெறும் காலத்திற்குள் மக்கட்தொகை மேலும் பல மடங்கு உயர்ந்துவிடும்.

இந்தியாவின் மக்கட் பெருக்கம் பின்வரும் நான்கு நிலைகளைக் கடந்து வந்துள்ளது:

(i) 1947-ஆம் ஆண்டிற்கு முற்பட்ட அக்கறையின்மைக் காலம்
(The Period of Indifference);

(ii) 1947-ஆம் ஆண்டிற்கும் 1950-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட நடுநிலைமைக் காலம்
(The Period of Neutrality);

(iii) 1951-ஆம் ஆண்டிற்கும் 1961-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டப் பரிசோதனைக் காலம்
(The Period of Experimentation);

(iv) 1961-62-ஆம் ஆண்டு முதல் அமைந்துள்ள மக்கட்தொகைக் கட்டுப்பாட்டுக் கொள்கைக் காலம்
(The Period of the Policy of Population Control)

விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது உதவுகின்றது. அதோடு தற்பொழுது அமைந்துள்ள மக்கள் உழைப்பை முழுமையாக ஆக்கப் பணிகளில் ஈடுபடுத்த வேண்டும். வேலையின்மைச் சிக்கலாலும், வேறு சில காரணங்களாலும் இந்தியாவில் உழைக்கும் திறனைக் கொண்டுள்ளவர்களும் பிச்சைக்காரர்களாக

மாறுகின்றனர்கள். உதாரணமாக, தமிழ் நாட்டில் சுமார் 60,000 பிச்சைக்காரர்கள் உள்ளார்கள் எனவும், அவர்களில் 50 சதவீதத்திற்கு மேற்பட்டவர்கள் உடல் உழைப்பைத் தரும் நிலையில் உள்ளனர் எனவும் கணக்கிடப்பட்டுள்ளது. வளர்ச்சியடைந்த நாடுகளில் உழைப்பின் பற்றாக்குறை அமைந்திருப்பதால், உழைப்பிற்கான ஊதியம் உயர்ந்த அளவில் உள்ளது. ஆனால், இந்தியாவில் மூலதனப் பற்றாக்குறையால் மக்கள் வளமானது சிறப்பாக ஆக்கப்பணிகளில் ஈடுபடுத்தப்படுவதில்லை.

## குடும்பநலத் திட்டம்

குடும்பநலத் திட்டத்தின் மூலம் அளவான குடும்பத்தைப் பெறமுடியும். குடும்பத்தின் அளவைத் தகுந்த நிலையில் வைத்துக் கொள்வதே குடும்பநலத் திட்டத்தின் நோக்கமாகும். பிறப்பு வீதத்தைக் குறைக்க இத்திட்டம் தீவிர நடவடிக்கைகளை எடுக்கின்றது. மேலை நாடுகளில் அரசின் திட்டமின்றி, மக்கள் தாங்களே குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைப் பின்பற்றுகின்றனர்கள். குடும்ப நலத் திட்டமானது இந்தியாவில் சமீப காலத்தில் தொடங்கப் பட்ட ஒன்றாகும். மிகப் பல ஆண்டுகள் முன்பே கைக்கொள்ளப் பட்டிருக்க வேண்டிய இத்திட்டம், சில ஆண்டுகள் முன்புதான் தொடங்கப் பெற்றது. இந்திய அரசு இன்று குடும்பநலத் திட்டத்தை நாடு முழுதும் பரப்பி வருகின்றது. சமுதாய வளர்ச்சிக்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும், ஆரோக்கியமான வாழ்விற்கும் இத்திட்டம் பெரிதும் பயனளிக்கின்றது.

குடும்பநலத் திட்டம் பெண்களின் நலத்தையும், குழந்தைகளின் நலத்தையும் காக்கின்றது. அடிக்கடிக் குழந்தைகளைப் பெறுவது தாய்மார்களின் உடல் நலத்தைக் கெடுக்கும்; பெற்ற குழந்தைகளையும் சிறப்பாக வளர்க்க முடியாது. குறைவான குழந்தைகளைக் கொண்ட அளவான குடும்பங்கள் ஆரோக்கியமான குடும்பங்களாக அமைகின்றன. மக்கட் தொகைச் சிக்கலுக்குத் தீர்வு காண வேளாண்மை வளர்ச்சியோ, தொழில் முன்னேற்றமோ அதிக அளவிற்கு உதவ முடியாது. நாட்டின் உற்பத்திப் பெருகினாலும், மக்கட்தொகை அதிகரிப்பினால் பெருகும் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலாது. நம் நாட்டின் விரைவான மக்கட் பெருக்கத்தால் ஒவ்வோர் ஆண்டும் உணவுத் தானியங்களின் உற்பத்தியை 5 இலட்சம் டன் அதிகரிக்க வேண்டியுள்ளது.

இந்தியாவில் தற்பொழுது பிறப்பு வீதம் உயர்வடையாமல் இருந்தும், இறப்பு வீதத்தில் ஏற்பட்ட வீழ்ச்சியால் மக்கட் பெருக்கம் அதிகமாக உள்ளது. சராசரி ஆயுட்காலம் அதிகரித்து

வருகின்றது. 1941-ஆம் ஆண்டிற்கும் 1951-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் சராசரி ஆயுட்காலம் 32.1 ஆண்டு களாக இருந்தது. 1951-61-இல் இது 41.2 ஆண்டுகளாக உயர்ந்தது. 1961-ஆம் ஆண்டிற்குப் பிறகு சராசரி ஆயுட்காலம் 50 ஆண்டுகளுக்கு மேல் அதிகரித்துள்ளது. ஆகையால் மக்கட் பெருக்கத்தைக் குறைக்க பிறப்பு வீதத்தைக் குறைத்தே ஆக வேண்டும்.

குடும்பநலத் திட்டத்தில் வெற்றியடைய வாய்ப்புகள் உள்ளன. குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்கு அரசு படிப் படியாக அதிக முக்கியத்துவம் அளித்து வருகின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இத்திட்டத்திற்காக ரூ. 65 இலட்சம் ஒதுக்கப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் ரூ. 2.16 கோடி செலவிடப்பட்டது. மூன்றாவது திட்டக்காலத் திலிருந்து குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்காக மிக அதிக மூலதனத்தை அரசு ஒதுக்கி வருகின்றது. மூன்றாவது திட்டத்தில் ரூ. 24.9 கோடி செலவழிக்கப் பெற்றது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 300 கோடி இதற்காக ஒதுக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் குடும்பநலத் திட்டத்திற்கு அரசு செலவழிக்கும் தொகையானது அதிகரித்து வருவதை உணரலாம்.

குடும்பநலத் திட்டம் கீழ்க்கண்ட முக்கிய நோக்கங்களைக் கொண்டதாக அமைந்துள்ளது: அவை,

1. கல்வியறிவைப் பரப்புவதின் மூலம் குடும்பங்கள் சிறிய அளவில் அமைந்திருந்தால் ஏற்படக்கூடிய நன்மைகளை மக்களுக்கு உணர்த்துவது ;

2. சுகாதார நிலையங்களுடன் மக்களைத் தொடர்பு கொள்ளச் செய்தல் ;

3. மருத்துவ மனைகள், சுகாதார நிலையங்கள் மூலமாக அறுவை சிகிச்சைகளைச் செய்தல் ;

4. மருத்துவக் கல்லூரிகளிலும், பிற கல்லூரிகளிலும் குடும்பக் கட்டுப்பாட்டுக் கருத்தரங்குகளை நிகழ்த்துதல் ;

5. குடும்பநலத் திட்டத்தினால் பயனடைவோரின் எண்ணிக் கையைப் பெருக்குதல் ஆகியவைகளாகும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் விரைவான மக்கட் தொகைப் பெருக்கத்திற்கான காரணங்களை ஆராயவும், குடும்ப நலத் திட்டத்தின் வழிமுறைகளை மக்களிடம் பரப்பவும், அரசின் மருத்துவ மனைகளிலும் சுகாதாரப் பணிகளிலும் குடும்பக் கட்டுப்

பாட்டிற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் அரசு ரூ. 65 இலட்சம் ஒதுக்கியது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுக் கழகங்கள் எல்லா மாநிலங்களிலும் அமைக்கப் பெற்றன. குடும்பநலத் திட்டம் இரண்டாவது திட்டக்காலத்திலிருந்து தீவிரமாக்கப்பட்டது. 1961-இல் குடும்பநலத் திட்டத்தைச் செயல்படுத்த 676 நகர நிலையங்களும், 1,121 கிராம நிலையங்களும் தொடங்கப்பட்டன. இரண்டாவது திட்டத்தில் ரூ. 5 கோடியும், மூன்றாவது திட்டதில் ரூ. 50, கோடியும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டன. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மிகத் தீவிரமான குடும்பநலத் திட்டத்தை மேற்கொள்ள முடிவு எடுக்கப் பெற்றுள்ளது.

1968-இல் பிறப்பு வீதம் 1000 பேர்களுக்கு 39 ஆக இருந்தது. குடும்பநலத் திட்டத்திற்கு அதிக முதலீடு செய்யப்படுவதால் 1980-81-இல் இது 1000 பேர்களுக்கு 25 ஆகக் குறைந்துவிடும் எனத் திட்டமிடப்பட்டுள்ளது. அதாவது, மக்கட் பெருக்கம் 2.5 சதவீதத்திலிருந்து 1.7 சதவீதமாகக் குறையுமெனக் கருதப்படுகிறது. நான்காவது திட்ட இறுதிக்குள் பிறப்பு வீதத்தை 1000 பேர்களுக்கு 32 என்ற அளவிற்குக் குறைக்கக் குறியளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இத்திட்ட இறுதியில் சுமார் 280 இலட்சம் தம்பதியர்கள் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் ஈடுபடுத்தப்படுவார்கள். குடும்பநலத் திட்டத்தினால் 180 இலட்சம் குழந்தைகளின் பிறப்பு தவிர்க்கப்படும்.

வறுமையை நீக்கும் வரை பிறப்பு வீதத்தைக் குறைக்க இயலாது. எந்த ஒரு நாட்டிலும் மக்களின் வாழ்க்கைத்தரம் குறைவாக இருக்கும்போது பிறப்பு, இறப்பு வீதங்கள் உயர்வாகவே அமைகின்றன. பெரிய தொழில்கள், சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றை வளர்க்க வேண்டும். அதன் மூலம் மக்களின் வருவாயை உயர்த்த வாய்ப்பு உண்டு; உற்பத்தித்திறன் அதிகரிக்கின்றமையால் நாட்டின் மொத்த ஆக்கமும் அதிகரிக்கும். வாழ்க்கைத் தரத்தை உயர்வாகக் கொண்டுள்ள ஐரோப்பிய நாடுகளில் பிறப்பு, இறப்பு வீதங்கள் மிகக் குறைந்த அளவில் அமைந்துள்ளன. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் முதலில் இறப்பு வீதம் குறையத் தொடங்கி, இறுதியில் பிறப்பு வீதமும் குறைந்துவிடும்.

கல்வியைப் பரப்புவதின் மூலமே குடும்பநலத் திட்டங்களை வெற்றியைப் பெறும் வகையில் நிறைவேற்ற முடியும். 1961-இல் மொத்த மக்கட்தொகையில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் 24

சதவீதமாகும். ஆண்களில் 34 சதவீதத்தினரும், பெண்களில் 13 சதவீதத்தினரும் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக இருந் தனர். 1971-இன் கணக்குப்படி 29.35 சதவீத மக்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் ஆவர். இதில் ஆண்களில் 39.49 சதவீதத் தினரும், பெண்களில் 18.47 சதவீதத்தினரும் அடங்குவார்கள். இதைச் சிறப்பான முன்னேற்றம் எனக் கருத முடியாது. குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் வெற்றியடைய பெண் கல்வி முன்னேற்றம் இன்றியமையாதது. தொழில்களின் முன்னேற்றத்தாலும், பல நகரங்கள் தோன்றுவதாலும் பிறப்பு வீதத்தைக் குறைக்க முடியும்.

குடும்பநலத் திட்டங்களை வெற்றியோடு நிறைவேற்றுகின்ற சில மாநிலங்களில் தமிழ் நாடும் ஒன்றாகும். இதற்குக் காரணம் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கைக் கூடுதல் அடைந்ததேயாகும். 1961-இல் தமிழ் நாட்டின் மக்கட்தொகை 3,36,86,953 ஆகும். 1971-இல் இது 4,11,03,125 ஆக உயர்ந் துள்ளது. மக்கட் பெருக்கம் 22.01 சதவீதத்திற்கு ஏற்பட்டுள்ளது. 1961-இல் மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி படித்தவர்களின் எண்ணிக்கை 1,05,80,616 ஆகும். 1971-இல் இது 1,61,89,712 ஆக உயர்ந்திருக்கின்றது; இது 53 சதவீதம் கூடுதலாகும் இந்தியாவின் மொத்த மக்கட்தொகையில் 7.51 சதவீதத்தைக் கொண்டிருக்கும் தமிழ் நாட்டில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் 39 சதவீதத்தினராவர். இவ்வாறு தமிழ் நாட்டில் படித்தவர்களின் வீதம் அதிகமாக உள்ளமையே குடும்பநலத் திட்டம் வெற்றியடைந் துள்ள நிலைக்குக் காரணமாகும். தமிழ் நாடு குடும்பநலத் துறையின் விளம்பர வெளியீடுகளும் சிறப்பாக உள்ளன. "பதினாறு பேறுகள் பெறுவோம் ; பதினாறு பேர்கள் பெற வேண்டாம்", "நாம் இருவர்; நாம் பெறுவதும் இருவர்" போன்ற விளம்பரங்கள் மக்களை குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி சிந்திக்கவும், மேற்கொள்ளவும் தூண்டுகின்றன. மேலும் சிறப்பான முன்னேற்றத்தைக் குடும்ப நலத்திட்டத்தில் பெற தமிழ் நாட்டில் பெண் கல்வியை வளர்க்க வேண்டும். தமிழ் நாட்டில் 52 சதவீத ஆண்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கும்போது, பெண்களில் 27 சதவீதத்தினரே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக உள்ளனர்.

தமிழ் நாட்டில் குடும்பநலத் திட்டங்கள் சிறப்பாக நிறை வேற்றப்பட்டு வருகின்றன. மேலும் அவை வெற்றியடைய தமிழக முதல்வர் கலைஞர் அவர்களின் நகைச்சுவை உணர்வோடு பொருட்செறிவும் கொண்ட கவிதையை நினைவு கூறுதல் நன்று:

"நாட்டிலே உற்பத்தி பெருக்கென்றால்,
அதை விடுத்து
வீட்டிலே உற்பத்தி பெருக்குகின்றார்......
முத்தென்றும்
மணியென்றும்
சிட்டென்றும்
சிமிழென்றும்
கண் என்றும்
மூக்கென்றும்
கணக்கின்றிப் பெறுதல் விட்டு
நெல் என்றும்
வரகென்றும்
கரும்பென்றும்
உளுந்தென்றும்
பருப்பென்றும்
எள் என்றும்
கொள் என்றும்
உணவைப் பெருக்கிடுவீர்
உற்பத்தி செய்திடுவீர்....."

குடும்பநலத் திட்டத்தை சமுதாயநலத் திட்டங்களோடு இணைக்க வேண்டும். கிராம மக்களிடையே கல்வி அறிவைப் பரப்புவதும், சமுதாய மாற்றங்களை ஏற்படுத்துவதும் பிறப்பு வீதத்தைக் குறைக்க உதவுபவையாகும். பொருளாதார முன்னேற்றத்தை விரைவாகப் பெற மக்கட் பெருக்கம் கட்டுப்படுத்தப்பட வேண்டும்; ஆனால், மக்கட் பெருக்கம் குறைக்கப்பட்டால்தான் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியும். குடும்பக் கட்டுப்பாட்டிற்கான செலவை அரசு மேலும் அதிகரிப்பது நன்மை பயக்கும்.

**குடும்பநலத் திட்டங்கள் குறைந்த அளவே வெற்றி பெற்றுள்ளமைக்கான காரணங்கள்**

*(1)* இந்தியாவின் சமுதாய அமைப்புக்களும், மக்களின் பழைமையை விரும்புகின்ற நிலையும், மதக் கொள்கைகளும், பழக்க வழக்கங்களும் குடும்பநலத் திட்டத்தைச் சரிவர நிறைவேற்ற

இயலாதவாறு செய்துவிடுகின்றன. மதக் கொள்கைகள் குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கையைக் கைக்கொள்வதற்கு எதிரிடையாக உள்ளன.

(2) பெரும்பாலான மக்கள் வறிய நிலையில் உள்ளமையால், அவர்களால் குடும்பநலத் திட்ட முறைகளை பின்பற்ற முடிவதில்லை.

(3) குடும்பநலத் திட்டங்களை விரிவாக மேற்கொள்ள அரசிற்கு அதிக நிதி தேவைப்படுகின்றது. இத்திட்டங்களின் நன்மைகளை பாமர மக்களுக்கு எடுத்துக் கூறப் பல நிறுவனங்களை அமைப்பது அவசியமாகின்றது. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் மிகவும் குறைந்த அளவிற்கே குடும்பநலத் திட்டத்திற்காக அரசு செலவிட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்துதான் பிறப்பு வீதத்தைக் குறைக்க அரசால் அதிக முதலீடு செய்யப்படுகின்றது.

(4) பெண்களின் கல்வியறிவின்மை இத்திட்டத்தை விரிவடையச் செய்வதற்குப் பெரிதும் தடையாக உள்ளது. அத்தகைய பெண்களுக்கு எழுத்துக்களின் வாயிலாக குடும்பநலத் திட்ட முறைகளையும், நன்மைகளையும் விளக்க இயலாது. அவர்களிடம் குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை விளக்கப் பெண் மருத்துவர்களும் அதிக எண்ணிக்கையில் தேவைப்படுகின்றனர். பல பெண் பணியாளர்களின் மூலம் இக்குறையைத் தவிர்க்கலாம்.

குடும்பநலத் திட்டத்தை விரிவாக்குவதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள்

குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை வெற்றியைப் பெறும் வகையில் செயல்படுத்த, பின்வரும் பரிந்துறைகள் அரசால் ஆராயப்பட்டு மேற்கொள்ளப்பட வேண்டும் :

(1) மிகக் குறைந்த வருவாய் கொண்டு வறிய நிலையில் உள்ள மக்களுக்கு கருத்தடைச் சாதனங்களை இலவசமாக வழங்கலாம்.

(2) சிறப்பான குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை மக்கள் பின்பற்றுமாறு செய்யப் பல நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும்.

(3) குடும்பநலத் திட்ட முறைகளையும், நன்மைகளையும் மக்களுக்கு உணர்த்த வேண்டும்.

(4) குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைப் பின்பற்றுபவர்களுக்கு உதவும் வகையில் சலுகைகள் அளிக்கப்படலாம்.

(5) பெற்றோர்களுக்குக் குழந்தைப் பேற்றைப் பற்றிய அறிவை வளர்த்து குடும்பக் கட்டுப்பாட்டு அறுவை சிகிச்சையை மேற்கொள்ளத் தூண்ட வேண்டும். "பாதுகாப்பு நாட்கள்," "பாதுகாப்பு மாத்திரைகள்," "லூப் முறை" ஆகியவற்றை மக்கள் அறியுமாறு செய்ய வேண்டும்.

(6) கல்வியை எல்லா இடங்களிலும் பரப்ப வேண்டும். குறிப்பாகக் கிராம மக்களை எழுத்தறிவுள்ளவர்களாக மாற்றுவது அவசியமானது.

(7) பிறப்பில் ஒரு குழந்தைக்கும் மற்றொரு குழந்தைக்கும் இடையில் உள்ள காலத்தை மிகுதிப்படுத்த வேண்டும்.

இந்தியாவில் மக்கட்தொகை மிகுதியால் பண வருவாய் தேக்க நிலையில் இருப்பதாகவே கூறலாம். எல்லாச் சிக்கல்களுக்கும் அடிப்படையாக உள்ள மக்கட்தொகைச் சிக்கல் தீர்க்கப்பட வேண்டிய ஒன்றாகும். குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளின் மூலம் சிறு குடும்பங்கள் அமைவது அவசியமானதாகும். பெண்களின் திருமண வயதை 15-லிருந்து 20-ஆக உயர்த்த வேண்டியது இன்றியமையாதது. குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை மக்கள் நன்கு அறியுமாறு செய்யவேண்டும். குடும்பநலத் திட்டங்கள் குறைந்த வெற்றியை மட்டுமே பெற்றுள்ளன. அவற்றை அதிக வெற்றியைப் பெறும்படி செய்யத் தீவிர நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும். குடும்பநலத் திட்ட வெற்றியின் அடிப்படையில் தான் விரைவான பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்கம் அமைந்திருக்கின்றது.

# 27. இந்தியாவில் வேலையின்மைச் சிக்கல்
## (Problem of Unemployment in India)

**வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வேலையின்மைச் சிக்கல்**

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காகத் திட்டங்கள் நிறைவேற்றப் படுகின்றன. இத்திட்டங்கள் வேலையின்மைச் சிக்கலைத் தீர்ப்பதை யும் நோக்கமாகக் கொண்டுள்ளன. வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளும் இத்திட்டங்களின் மூலம் எடுக்கப் பெறுகின்றன. பின்தங்கிய நாடுகள் விரைவான முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலமே வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க முடியும். மேம்பாடடைந்த பொருளாதாரங்களில் வேலை யின்மை மிகவும் குறைந்த அளவிற்கே அமைந்துள்ளது மூலதனத் திரட்சி மிகுதியாக ஏற்படக்கூடிய நாடுகளில் வேலை வாய்ப்புக் களும் ஏராளமாக இருக்கின்றன. குறுகிய காலத்தில் குறைந்த அளவிற்கு வேலையின்மை ஒரு பொருளாதாரத்தில் அமைந்திருத்தல் தவறாகாது. ஆனால், நீண்ட காலத்தில் நிரந்தரமாக வேலை யின்மைச் சிக்கல் அமைந்திருத்தல் பொருளாதார முன்னேற்றத் திற்குப் பெருந் தடையாக அமையும். வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக்கூடிய திட்டங்களை அரசு தெரிந்தெடுக்க வேண்டும். இத்திட்டங்களின் மூலம் கிராமங்களில் அமைந்திருக்கக்கூடிய உபரி மக்கட்தொகை உற்பத்தி உயர்விற்குப் பயன்படுத்தப்பட வேண்டும். உழைப்பு முற்றிலும் சிறப்பாகப் பயன்படுத்தப்பட வேண்டுமென்றால் சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றை முன்னேற்றமடையச் செய்யவேண்டும். கிராம மக்கள் தரமான வாழ்வைப் பெற வருவாய் உயர வேண்டும். வருவாய் உயர வேண்டுமென்றால் கிராம மக்கள் வேளாண்மையில் மட்டும் ஈடுபடாமல் பிற துறைகளிலும் ஈடுபட வேண்டும். சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் தொடங்க அரசின் ஆதரவு அமைந்திருத்தல் அவசியமானது.

உழைப்பைத் தர முன்வருபவர்களுக்கு வேலையின்மை நிலை யானது வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் அமைந்திருக்கின்றது.

இந்நாடுகளில் வேலையின்மையோடு மறைந்துள்ள வேலையின்மையும் அமைந்துள்ளது. இந்நிலையால் உற்பத்திக் காரணிகளில் முக்கிய மானதாக இருக்கின்ற உழைப்பு வீணடிக்கப்படுகின்றது. பொருளாதார ரீதியில் நோக்கும்போது இது பெரிய இழப்பாகும். உழைப்பு சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்தப்படும்போதுதான் மிகுதியான மூலதனத்திரட்சி தோன்றும். வேலையின்மையால் அரசியல் அமைப்பில் நிலையற்ற தன்மையும் தோன்றுகின்றது; சமுதாயப் புரட்சிகள் தோன்றவும்கூடும். எனவே, உபரி உழைப்புச் சக்தி நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு முழுமையாகப் பயன்படுத்தப்பட வேண்டும்.

வேலையின்மையால் பல சமுதாயச் சிக்கல்களும் தோன்று கின்றன. வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றச் செய்வது வேலை யின்மையாகும். நேர்மையற்ற நிலைகள் ஏற்படுவதற்கும் இதுவே காரணமாகும். வேலையின்மையின் காரணமாக வாழ்வில் பிடிப் பில்லாத நிலை தோன்றுகின்றது. வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்ற ஆர்வமும் ஏற்படுவதில்லை. ஒரு நாட்டில் அமைந் திருக்கக்கூடிய உழைப்புச் சக்தி முற்றிலும் பயன்படுத்தப்படுவது பொருளாதார, சமுதாய ரீதியில் மிகவும் முக்கியமானதாகும். பின்தங்கிய நாடுகளில் வேலையின்மை பல காரணங்களால் ஏற்படுகின்றது. ‘பருவகால வேலையின்மை’ (Seasonal Unemployment) பருவகால மாற்றங்களால் தோன்றுகின்றது. வெவ்வேறு காலங்களில் தேவை, அளிப்பு நிலைகளில் மாற்றங்கள் ஏற்படு கின்றன. சர்க்கரை ஆலைகள் உற்பத்தியைச் செய்ய கரும்பு கிடைக்கப் பெறுதல் வேண்டும். வாணிபச் சுழல்களால் பொருளா தாரத்தில் மந்தநிலை தோன்றும்போதும் வேலையின்மைச் சிக்கல் தோன்றுகின்றது. பொருளாதார அமைப்புக்களில் உள்ள குறை பாடுகளாலும், தொழில் நுணுக்க வளர்ச்சியாலும் வேலையின்மைச் சிக்கல் தோன்றலாம். உழைப்புச் சந்தையில் அமைந்திருக்கக் கூடிய குறைபாடுகளாலும் தற்காலிக வேலையின்மை தோன்ற வாய்ப்பு உண்டு. ஒருவர் ஒரு வேலையிலிருந்து விலகி மற்றொரு வேலையில் சேருவதற்கு இடைப்பட்டக் காலத்திலும் வேலையின்மை குறுகிய காலத்திற்கு அமைந்திருக்கலாம். வேலை வாய்ப்புக்களைப் பற்றிய விபரங்களை அறியாமையாலும், உழைப்பின் பெயர்ச்சிக் குறைந்த நிலையாலும் வேலையின்மைச் சிக்கல் தோன்றக்கூடும். வேலையின்மையும், மறைந்துள்ள வேலையின்மையும் வளர்ச்சி யடையாத பொருளாதாரங்களின் இயல்புகளாக இருக்கின்றன. பொருளாதாரம் வளர்ச்சியடையாத நிலையில் இருப்பதாலேயே இந்நிலைகள் ஏற்படுகின்றன. விரைவான மக்கட் பெருக்கமும், முதலீடு செய்வதற்குப் போதுமான வசதிகள் இல்லாமையும் வேலையின்மைக்கான பிற காரணங்களாகும்.

வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் நிரந்தரமான 'மறைந்துள்ள வேலையின்மைச் சமநிலை' (Under-employment Equilibrium) அமைந்திருக்கின்றது. வேலையின்மை வெளிப்படையாகவும், மறைந்துள்ள நிலையிலும் காணப்படுகின்றது. பின்தங்கிய பொருளாதாரங்கள் 'நிறை வேலையுடைமையைக்' (Full Employment) கொண்டிருப்பதில்லை. ஆனால், 'நிறை வேலையுடைமையைப்' பெறுவதே பொருளாதார முன்னேற்றத்தின் முக்கிய நோக்கமாக இருக்கின்றது. பின்தங்கிய நாடுகளில் வேலை வாய்ப்புக்களின் எண்ணிக்கை வேலை வாய்ப்புக்களை வேண்டுபவர்களின் எண்ணிக்கையைவிடக் குறைவாக உள்ளது. வெவ்வேறு வகைப்பட்ட வேலையின்மைகளையும் நீக்க விரைவான மூலதனத்திரட்சி ஏற்பட வேண்டும். பல துறைகளிலும் பேரளவில் முதலீடுகளைச் செய்வதின் மூலமே வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வுகாண முடியும்.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் 'வேலையின்மை சிக்கல்களின் சிக்கலாக' இருக்கின்றது. பொருளாதார, சமுதாய, அரசியல் நிலைகளில் அமைதியில்லாத போக்குத் தோன்றுகின்றமைக்கு வேலையின்மையே அடிப்படைக் காரணமாகும். ஆக்கக் காரணிகளில் உழைப்பு முற்றிலும் பயன்படுத்தப்படாத நிலையை வேலையின்மை உணர்த்துகின்றது. வளர்ச்சியடையாத பொருளாதாரங்களில் மூலதனப் பற்றுக்குறையாலேயே உழைப்பைச் சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்த முடிவதில்லை. பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது இந்நிலையேயாகும். வேளாண்மைக்குப் பயன்படுத்தப்படாத ஆற்று நீர் வீணுகக் கடலோடு கலப்பதைப் போன்று, உற்பத்திக்குப் பயன்படுத்தத்தக்க உழைப்பு வீணடிக்கப்படுகின்றது. லிப்சன் போன்றவர்கள், "ஒரு நாட்டின் செல்வம் அந்நாட்டு மக்களின் உழைக்கும் ஆற்றலைப் பொறுத்து அமையும்" என்று கூறுகின்றார்கள். நாட்டில் பலவகைப்பட்ட இயற்கை வளங்கள் அமைந்திருந்தாலும் அவற்றை உற்பத்திக்குப் பயன்படுத்த உழைப்பே மிகவும் அவசியமான காரணியாகின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான வாய்ப்புக்கள் ஏராளமாக உள்ளன. ஆனால், வேலை வாய்ப்புக்கள் போதுமான அளவில் அமைந்தில்லாமையே பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் உள்ளமைக்குக் காரணமாகும். வேலையின்மை அமைந்திருப்பதாலேயே தேசிய வருவாய் குறைவாக இருக்கின்றது. மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் தாழ்வாக உள்ளது. மகிழ்ச்சியற்ற, வறிய வாழ்வைக் கொண்டவர்களாக மக்கள் இருக்கின்றார்கள்.

இந்நாடுகளில் படித்தவர்களிடையேயும் வேலையின்மை அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கதாகும். வேளாண்மை, தொழில் துறைகளிலும் வேலையின்மைச் சிக்கல் அமைந்துள்ளது. கிராமப் புறங்களிலும், நகர்ப் புறங்களிலும் மக்கள் வேலையின்மையால் பாதிக்கப்படுகின்றனர்கள். வளர்ச்சியடைந்த மேலை நாடுகளில் வேலையின்மை வாணிபச் சுழல்களால் தோன்றுகின்றது; வாணிப மந்தத்தினால் தற்காலிகத் தேவைக் குறைவு ஏற்படுகின்ற காரணத்தால் வேலையின்மை ஏற்படக்கூடும். சில தொழில்களில் பருவகால வேலையின்மையும் அமைந்திருப்பதுண்டு.

வேலையின்மைக்கான காரணங்கள் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. மேம்பாடடைந்த பொருளாதாரங்களைக் கொண்டுள்ள நாடுகளில் வேலையின்மை பெரும்பாலும் தொழில் துறையிலேயே தோன்றுகின்றது. முதலாளித்துவ நாடுகளில் வேலையின்மை வாணிபச் சுழல்களால் ஏற்படுகின்றது. இந்நாடுகளில் வேலையின்மையால் அதிக அளவிற்குப் பாதிக்கப்படுபவர்கள் தொழிலாளர்களேயாவர். வேலையின்மை பல வகைகளிலும் அமைந்திருப்பதால் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க வெவ்வேறு வகைப்பட்ட வழிமுறைகளும் பின்பற்றப்பட வேண்டும். மக்கட்தொகைப் பெருக்கத்தைக் குறைப்பதின் மூலமும், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலமும் வேலையின்மை சிக்கலைத் தீர்க்க இயலும்.

**வேலைக் கோட்பாடுகள்** (Theories of Employment)

வேலை வாய்ப்பைப் பற்றி முக்கியமாக இரண்டு கோட்பாடுகள் உள்ளன. 'தொன்மைக் கோட்பாட்டின்படி' (Classical Theory) வேலையின் அளவு ஊதிய வீதத்தைச் சார்ந்து அமையும். ஊதிய வீதங்கள் குறைவாக அமைந்திருக்கும்போது எல்லா உழைப்பாளர்களும் வேலை வாய்ப்பைப் பெறுவார்கள். எனவே, இக்கோட்பாட்டின்படி வேலையின்மைக்கான முக்கியக் காரணம் ஊதியங்களின் அளவு உயர்வாக இருக்கின்ற நிலையாகும். ஆனால், இக்கோட்பாட்டை இன்று ஒருவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. இக்கோட்பாடு பின்தங்கிய நாடுகளில் வேலையின்மை எவ்வகைப்பட்டது என்பதை விளக்கவில்லை. கீன்ஸ் பிரபுவின் (Lord Keynes) கருத்துப்படி, 'ஆயத்தநிலைத் தேவை' (Effective Demand) போதுமான அளவில் இல்லாமையே வேலையின்மைக்குக் காரணமாகும். நுகர்வின் அளவில் சுருக்கம் ஏற்படுவதால் ஆயத்தநிலைத் தேவை போதுமான அளவிற்கு அமைவதில்லை. உற்பத்திப் பொருட்களின் தேவை தொடர்ந்து அமைந்திருந்தால்தான், உற்பத்தியாளர்களும் தொடர்ச்சியாக உற்பத்தியில் ஈடுபடுவார்கள்;

முதலீட்டையும் அதிக அளவில் செய்வார்கள். இதனால் தொழில்களின் வளர்ச்சி காக்கப்பட்டு வேலை வாய்ப்புக்களும் பெருகும். நுகர்வுச் செலவு குறையும் போது உற்பத்தியாளர்களின் வருவாய் குறைகின்றது. இதன் காரணமாகவே வேலையின்மையும் தோன்றுகின்றது. ஆனால், இந்நிலையில் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க அரசு அதிகச் செலவுகளைச் செய்ய வேண்டும். 'நிறை வேலையுடைமையைப்' பெற அரசு பெருமளவிற்கு முதலீடுகளைச் செய்வது அவசியமானதாகும். அரசின் முதலீடுகளால் மொத்தத் தேவையின் அளவை அதிகரிக்கலாம் என்பது கீன்ஸின் கருத்தாகும். அரசின் செலவுகள் நுகர்வு, முதலீடு ஆகியவற்றிற்கான தேவையை அதிகரிப்பதாக அமைய வேண்டும். இதற்காக அரசு பொருளாதார முன்னேற்றத்திற்கும், சமுதாய நலனை உயர்விப்பதற்கும் உதவக்கூடியத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். இவ்வகையில் அரசு அணைகளைக் கட்டலாம்; சாலைகளை அமைக்கலாம்; குடியிருப்பு வசதிகளைக் குறைந்த செலவில் அமைத்துத் தரலாம். இவ்வசதிகளைப் பெருக்குவது பல வகைகளிலும் இன்றியமையாததாகும். மேலும், இவற்றில் முதலீடு செய்யத் தனியார் துறையினர் முன்வருவதில்லை. குறுகிய காலத்தில் இலாபத்தைத் தருவதில்லையாகையால் தனியார் மூலதனம் இவற்றில் முதலீடு செய்யப்படுவதில்லை. தனியார் துறையினர் இலாப நோக்குடனேயே முதலீடுகளைச் செய்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் இவை உதவுகின்றன. தவிர, சமுதாய நன்மைகளும் இவற்றின் மூலம் பெறப்படுகின்றன. தனியார் முதலீடுகள் நிறை வேலையுடைமையைத் தோற்றுவிக்காவிட்டால் அரசு இவ்வாறு பல முதலீடுகளையும் செய்ய வேண்டும். கீன்ஸின் கூற்றுப்படி அரசின் முதலீடு சரிசமக் காரணியாகச் செயல்பட வேண்டும். பொருளாதார மந்தம் ஏற்படும்போதும், மறைந்துள்ள வேலையின்மையைப் பொருளாதாரம் கொண்டிருக்கும் போதும் அரசு அதிக அளவிற்கு முதலீடுகளைச் செய்வது அவசியமாகும்.

கீன்ஸ் குறிப்பிடுகின்ற வேலையின்மைப் பற்றிய கோட்பாடு பின்தங்கிய நாடுகளுக்குப் பொருத்தமுடையதாக இல்லை. இந்நாடுகளில் அரசு பெருமளவிற்கு முதலீடுகளைச் செய்யப் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்றுகின்றது. முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான நிதி இம்முறையின் மூலமே பெறப்படுகின்றது. இதன் விளைவாக பணவீக்க நிலை தோன்றுகின்றது; பாதக அயல்நாட்டுச் செலுத்து இருப்பு நிலையும் ஏற்படுகின்றது. வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்குப் பதிலாக வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் இவ்விதச் சிக்கல்கள் தோன்றுகின்றன. இந்

நாடுகளில் வேலையின்மைக்கு மூலதனப் பொருட்களின் பற்றுக் குறையும் ஒரு காரணமாகும். மேலும், நுகர் பொருட்களின் அளிப்பு நெகிழ்வற்றதாக இருக்கின்றது. குறிப்பாக உணவுப் பொருட்களின் அளிப்பு அதிகரிப்பதில்லை. உற்பத்தியைப் பெருக்குவதிலும், ஆயத்தநிலைத் தேவையை அதிகரிப்பதிலும் பல இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இவ்விடர்ப்பாடுகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம். நுகர் பொருட்களை உற்பத்தி செய்யும் துறையில் உற்பத்தித் திறன் குறைவாக இருக்கின்றது. உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தேவையான கச்சாப் பொருட்களும் எளிதில் கிடைப்பதில்லை. கச்சாப் பொருட்களின் உற்பத்தியை உயர்த்துவதும் கடினமாக இருக்கின்றது. திறமையான உழைப்பின் அமைப்பும் நெகிழ்வற்றதாக உள்ளது. இவ்வாறு பலவிதமான பற்றுக்குறை நிலைகள் இருப்பதால் வேலையின்மைச் சிக்கலும் ஏற்படுகின்றது. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளையும் வளர்ப்பதின் மூலமே வேலை வாய்ப்புக்களைப் பெருக்க இயலும்.

பின்தங்கிய பொருளாதாரங்களில் மக்கட்தொகையின் விரைவான பெருக்கம் மூலதனத் திரட்சிக்கு ஊக்கமளிப்பதாக அமைவதில்லை. மூலதனத் திரட்சி வீதம் இந்நாடுகளில் குறைவாக உள்ளமைக்கு விரைந்து பெருகும் மக்கட்தொகையே காரணமாகும். மக்கட் பெருக்கத்தால் மூலதனத் திரட்சி பாதிக்கப்படுகின்றது. மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்திருக்கும் மக்களின் எண்ணிக்கை அதிகரிக்கின்றது. பிறக்கக்கூடிய குழந்தைகளின் பராமரிப்பிற்கும் பெருமளவில் மூலதனம் செலவிடப்படுகின்றது. டேவிட் ரிக்கார்டோவின் (David Ricardo) வார்த்தைகளில் கூறினால், "இந்நாடுகளில் உழைப்பு ஏராளமான அளவிற்கு அமைந்துள்ளது. ஆனால், அவ்வுழைப்பிற்கு வேலை வாய்ப்பை அளிக்கும் வகையில் மூலதனம் போதுமான அளவிற்கு அமைந்திருப்பதில்லை." எனவே, வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற திட்டங்களைத் தெரிந்தெடுத்து நிறைவேற்ற வேண்டும். இதன் மூலமே இந்நாடுகள் மூலதனத்தைச் சிக்கனப்படுத்த முடியும்; அமைந்திருக்கக் கூடிய உழைப்பையும் முற்றிலுமாகப் பயன்படுத்த இயலும்.

### வேலையின்மையின் இயல்பு

வளர்ச்சியடைந்துவரும் நாட்டின் வேலையின்மைச் சிக்கலின் இயல்பு வளர்ச்சியடைந்த நாட்டின் வேலையின்மைச் சிக்கலினின்றும் வேறுபட்டது. வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வாணிபச் சுழலால் வேலையின்மை தோன்றுகின்றது எனக்கூற முடியாது. பொருளாதாரப் 'பின்னிறக்கம்' (Recession) பண வருவாயையே பெரிதும் பாதிக்கின்றது; உண்மையான உற்பத்தியும், வருவாயும்

பொருளாதாரப் பின்னிறக்கத்தால் பாதிக்கப்படுவதில்லை. மேலும், பின்தங்கிய நாடுகளில் பண வருவாய்க் குறைவு பெருமளவிற்குப் பலரையும் பாதிக்காது. ஏனெனில், பொருளாதாரத்தின் பல துறைகளிலும் உற்பத்தி தன்னிறைவிற்காகச் செய்யப்படுகின்றது. உதாரணமாக, வேளாண்மைத் துறையைக் கூறலாம். இந்நாடுகளில் விவசாயிகள் சந்தைக்காக உற்பத்தியைச் செய்யாமல் தன்னிறைவிற்காகவே செய்கின்றனர்கள். சுயதேவைப் பூர்த்திக்காக உற்பத்தி செய்யப்பட்டு, உற்பத்தியின் மிகக் குறைந்த அளவே சந்தையில் விற்பனை செய்யப்படுகின்றது. இதைப்போன்றே சந்தையிலிருந்து விவசாயிகள் வாங்குகின்ற வேளாண்மைப் பொருட்கள் அல்லாத பிற பொருட்களின் அளவும் மிகக் குறைவாகவே இருக்கின்றது. பின்தங்கிய பொருளாதாரங்களில் வேளாண்மையே முக்கியமான துறையாக இருப்பதால், பொருளாதாரப் பின்னிறக்கக் காலத்திலும் உண்மை வருவாயில் ஓரளவு நிலையான தன்மையானது அமைந்துள்ளது. வாணிபச் சுழலால் உண்மை வருவாயில் அதிக ஏற்றத்தாழ்வுகள் ஏற்படாமைக்கு இதுவே முக்கியக் காரணமாகும்.

பின்தங்கிய நாடுகளில் வேளாண்மை உற்பத்தி ஓரளவு நிலையான அளவில் அமைந்திருப்பது போலவே முன்னேற்றமடைந்த நாடுகளிலும் அமைந்திருக்கின்றது. வேளாண்மை உற்பத்தியில் போட்டி நிலவுகின்ற காரணத்தால், உற்பத்தியைக் கட்டுப்படுத்தி விலைகளை உயர்ந்த அளவில் பெற முடியாது. விவசாயிகள் உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதின் மூலம் நஷ்டத்தையே ஏற்க வேண்டிவரும். தவிர, வேளாண்மையில் முதலீடு செய்து நீண்ட காலத்திற்குப் பிறகே உற்பத்திப் பொருட்களைப் பெறமுடிகின்றது. வேளாண்மை விளைபொருட்களின் அளிப்பு பொருளாதாரப் பின்னிறக்கக் காலத்தில் அதிகமாகவும், பொருளாதாரப் பூரிப்புக் காலத்தில் குறைவாகவும் இருக்கின்றது. அதாவது, விலைகள் குறையும்போது வேளாண்மைப் பொருட்களின் அளிப்பு அதிகமாக இருக்கின்றது; விலைகள் உயர்வாக இருக்கும் போது வேளாண்மைப் பொருட்களின் அளிப்பு குறைவாக உள்ளது.

முன்னேற்றமடைந்த நாடுகளில் ஊதியம் பெறுபவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் மக்கட்தொகையின் பெரும்பகுதி ஊதியத்திற்காக உழைப்பைத் தருவதில்லை. ஆகவே, இந்நாடுகளில் வாணிபச் சுழல் பண வருவாயில் மாற்றங்களை ஏற்படுத்தினாலும் வேலை வாய்ப்பில் மாற்றங்களைத் தோற்றுவிப்பதில்லை. பின்தங்கிய நாடுகளில் வாணிபச் சுழலால் ஏற்படக்கூடிய வேலையின்மை மிகவும் குறைந்த அளவிலேயேயாகும். நிலத்தோடும், மூலதனத்தோடும் ஒப்பிடும் போது மக்கட்தொகை மிகுதியாக உள்ள நிலையே வளர்ச்சிக்

குன்றிய நாடுகளின் வேலையின்மைச் சிக்கலுக்கு முக்கியக் காரணமாகும். உற்பத்திக் காரணிகள் சிறப்பாகப் பயன்படுத்தப்படாத நிலையும், இயற்கை வளங்களை மூலதனப் பற்றாக்குறையால் உற்பத்திக்குப் பயன்படுத்த இயலாத நிலையும் வேலையின்மையை ஏற்படுத்துகின்றன. பிற உற்பத்திக் காரணிகளோடு ஒப்பிட்டு நோக்கும்போது உழைப்பின் அளிப்பு இந்நாடுகளில் மிகவும் அதிகமாக இருக்கின்றது. உழைப்புத்தவிர பிற உற்பத்திக் காரணிகளையும் பெருக்கினாலன்றி வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காண்பது இயலாததாகும்.

மஜும்தார் (Majumdar) மேம்பாடடைந்த நாடுகளிலும், மேம்பாடடைந்துவரும் நாடுகளிலும் வேலையின்மைச் சிக்கலின் இயல்பு எவ்வாறு இருக்கின்றது எனப் பின்வருமாறு விளக்குகின்றார்; "முன்னேற்றமடைந்த தொழில் நாடுகளிலும் வேலையின்மைச் சிக்கல் அமைந்துள்ளது; முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் வேலையின்மையைவிட மறைந்துள்ள வேலையின்மையே முக்கியமான சிக்கலாக இருக்கின்றது. வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரங்களில் வேளாண்மை முக்கியமான தொழிலாக உள்ளது; இப்பொருளாதாரங்களில் தொழில் துறை பெரிதும் வளர்ச்சியடைந்திருப்பதில்லை. பொருளாதாரத்தில் அமைந்திருக்கக்கூடிய தேக்க நிலையே நிரந்தரமாக வேலையின்மையைத் தோற்றுவிக்கின்றது. இந்நாடுகளில் வேலையின்மையால் பெரும் பகுதி மக்கட்தொகை பாதிக்கப்படுகின்றது."

### இந்தியாவில் வேலையின்மை

இந்தியாவில் வேலையின்மையாலும், மறைந்துள்ள வேலையின்மையாலும் மக்களில் பெரும்பாலானோர் பாதிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களின் வாழ்க்கைத்தரம் தாழ்வாக உள்ளமைக்கு வேலையின்மையே முக்கியக் காரணமாகும். நாட்டின் வளங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்படாமையாலும், விரைவான மக்கட் பெருக்கத்தாலும் இச்சிக்கல் தோன்றியுள்ளது. சமீப காலத்தில் இச்சிக்கல் பெரிதும் தீவிரமடைந்துள்ளது. இந்தியாவில் வேலையின்மைச் சிக்கல் ஏற்பட்டுள்ளமைக்கானக் காரணங்களை முதல் ஐந்தாண்டுத் திட்டம் பின்வருமாறு குறிப்பிட்டது:

1. விரைவான மக்கட்தொகைப் பெருக்கம்;

2. கிராமப்புறங்களில் எண்ணிறைந்தவர்களுக்குப் பகுதி நேர வேலையை அளிக்கக்கூடிய பழைய கிராமத் தொழில்களின் மறைவு;

3. வேலைவாய்ப்பை அளிக்கக்கூடிய வேளாண்மையல்லாத பிற துறைகளில் போதுமான முன்னேற்றமின்மை (கடந்த

நாற்பது ஆண்டுக் காலத்தில் இந்தியப் பொருளாதார முன்னேற்றம் கணிசமான அளவில் இருந்தும், 1911-ஆம் ஆண்டிலிருந்து வேளாண்மைத் தொழிலினின்றும் பிற தொழில்களுக்குப் பெயர்ந்து சென்றவர்கள் 3 சதவீதத்தினரேயாவர்);

4. இந்திய, பாகிஸ்தான் பிரிவினையாலும் நம் நாட்டில் மக்கட்தொகையின் நெருக்கம் மிகுதியடைந்தது.

புள்ளி விபரங்கள் போதுமான அளவில் அமைந்தில்லாத காரணத்தால் இந்தியாவில் வேலையின்மை, மறைந்துள்ள வேலையின்மை ஆகியவற்றில் அமைந்துள்ளவர்களின் எண்ணிக்கையைச் சரியாகக் குறிப்பிட இயலாது. சிலருடைய மதிப்பீட்டின்படி மொத்த மக்கட்தொகையில் 30 சதவீதத்தினர் கிராமப் புறங்களில் வேலையின்றி இருக்கின்றனர். இதைத்தவிர, வேளாண்மையில் மறைந்துள்ள வேலையின்மையும் அமைந்திருக்கின்றது. மற்றொரு மதிப்பீட்டின்படி, கிராமங்களிலும் நகரங்களிலும் வேலையின்மையிலும் மறைந்துள்ள வேலையின்மையிலும் அமைந்துள்ளவர்களின் எண்ணிக்கை 50 முதல் 60 மில்லியன் ஆகும். இது மிகவும் அதிக அளவில் வேலையின்மை அமைந்திருப்பதை உணர்த்துகின்றது. அதிக அளவு முன்னேற்றமடைந்த சில மேலை நாடுகளில் பொருளாதாரப் பூரிப்பு நிலை அமைந்திருக்கும்போது மக்களில் 1 சதவீதம் முதல் 3 சதவீதத்தினரே வேலையின்மையில் அமைந்திருக்கின்றார்கள். இந்தியா போன்ற பின்தங்கிய நாடுகளில் பொருளாதாரப் பூரிப்புக் காலங்களில் அமைந்துள்ள வேலையின்மையின் வீதமானது, முன்னேற்றமடைந்த நாடுகளில் பொருளாதார மந்தக் காலங்களில் அமைந்துள்ள வேலையின்மை வீதத்தைக் காட்டிலும்கூட உயர்வாக இருக்கின்றது.

"இந்தியப் பொருளாதார அமைப்பின் நிலை வேலையின்மைச் சிக்கலை நிரந்தரமாக நீடித்திருக்குமாறு செய்கின்றது. இன்றைய நிலையில் நிலமற்ற விவசாயிகளே வேலையின்மையால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கின்றார்கள். இவர்களைப் போன்றே வேளாண்மையல்லாத பணிகளில் ஈடுபட்டிருக்கும் கிராம உழைப்பாளர்களும், நகர உழைப்பாளர்களும், கிராம நகரத் தொழில்களில் பணியாற்றும் உழைப்பாளர்களும், ஊதியத்திற்கு உழைப்பைத் தரக்கூடிய 'கை வினைஞர்களும்' (Artisans) வேலையின்மையால் பாதிக்கப்பட்டுள்ளார்கள்."

வளர்ச்சியடைந்த மேலை நாடுகளில் வேலையின்மைச் சிக்கல் தற்காலிகமானது. அரசு சரியான கொள்கைகளைப் பின்பற்றுவதின் மூலம் இச்சிக்கலை ஓரளவு தீர்க்க முடியும். மேலை நாடுகளில் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்கப் பின்பற்றப்படுகின்ற முறைகளை

இந்தியாவில் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க நாம் பின்பற்ற இய லாது. வளர்ச்சியடைந்த பொருளாதார நிலை இந்தியாவின் பொருளாதார நிலையினின்றும் வேறுபட்டது. இந்தியாவில் வேலை யின்மைச் சிக்கலைத் தீர்க்க நீண்டகாலத் தீர்வுகள் பல எடுக்கப்பட வேண்டும். மக்கட் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் திட்டத்தை நாம் மேற்கொள்ளுதல் அவசியம். சாகுபடிக்கு ஏற்ற நிலங்களை வேளாண்மை உற்பத்திக்குப் பயன்படுத்த வேண்டும். நிலத்தின் வளத்தை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும். நாட்டின் தொழில் துறை நன்கு வளர்க்கப்பட வேண்டும். நாட்டின் பல பகுதிகளிலும் வெவ்வேறு வகைப்பட்ட தொழில்கள் எண்ணிக்கையில் மிகுதியாகத் தோற்றுவிக்கப் பெறுதல் தேவையானதாகும். தொழில் துறையின் உற்பத்தித் திறனைப் பெருக்குவது பல வழிகளிலும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க உதவும். மக்கட் பெருக்கம் ஆண்டொன்றிற்கு $2\frac{1}{2}$ சதவீத மாக இருக்கும்போது வேலையளிப்பதற்கான வசதிகள் இந்த அள விற்கு உயர்வடைவதில்லை. இந்நிலையைக் கொண்ட எந்த ஒரு நாட்டாலும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க இயலாது. மக்க ளுடைய குடியிறக்கத்தை இன்று எந்த ஒரு நாடும் விரும்புவதில்லை. எனவே, ஒரு நாட்டில் மக்கள் நெருக்கத்தைக் கட்டுப்படுத்த மக்கட் பெருக்கம் கட்டுப்படுத்தப்பட வேண்டும். வேளாண்மை, தொழில் ஆகிய துறைகளிம் ஈடுபடுபவர்களின் எண்ணிக்கையை இதன் மூலமாகவே குறைக்க முடியும். இந்நிலை பலருக்கும் வேலை வாய்ப்புக்களை அளிக்க உதவும். ஆனால், இந்நடவடிக்கைகளில் வெற்றியைப்பெற நீண்ட காலம் பிடிக்கும்.

### வேலையின்மையின் பல வகைகள்

இந்தியாவின் வேலையின்மையை முக்கியமான மூன்று வகை களாகப் பிரிக்கலாம்:

(1) வேளாண்மை வேலையின்மை அல்லது மறைந்துள்ள வேலை யின்மை;

(2) படித்தவர்களிடையே வேலையின்மை;

(3) தொழில் துறையில் வேலையின்மை.

வேலையின்மையை கிராம வேலையின்மை, நகர வேலையின்மை எனவும் பிரிக்கலாம். மேலும், உழைப்பாளர்களில் சிலர் முழு நேர வேலையின்மையில் அமைந்துள்ளார்கள்; வேறு பலர் பகுதி நேர வேலையின்மையால் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

கிராம வேலையின்மையை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்க லாம். வேளாண்மையில் அமைந்துள்ள ஒரு பிரிவினர் பருவ காலங்

களில் மட்டும் வேலை வாய்ப்பைப் பெறுகின்றனர். மற்றொரு பிரிவினர் ஆண்டு முழுவதும் வேலைவாய்ப்பு இல்லாமல் இருக்கின்றனர். வேளாண்மையில் தேவைக்கு அதிகமான மக்கட்தொகை ஈடுபட்டுள்ளது. வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்களில் ஒரு பகுதியினரை நீக்கிவிட்டாலும் உற்பத்தியின் அளவு பாதிக்கப்படாது. வேளாண்மையில் உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி மிகமிகக் குறைவாக இருக்கின்றது. இந்தியாவில் உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி பூஜ்யம் என்ற நிலையில் இருக்கின்றது என்று கூறுவோரும் உண்டு. இந்நிலையே 'மறைந்துள்ள வேலையின்மை' என அழைக்கப்படுகின்றது.

ஒரு குறிப்பிட்டக் காலத்தில் (நீண்ட காலம் அல்லது குறுகிய காலம்), பலவேறு காரணங்களால், உழைப்பைத்தர முன்வருபவர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைக்காத நிலையை வேலையின்மை எனலாம். இவ்வேலையின்மை பலவகைப்பட்டதாக இருக்கின்றது. இந்தியாவிலும் பலவகைப்பட்ட வேலையின்மைகள் அமைந்துள்ளன. அவற்றைப் பின்வருமாறு சற்று விளக்கமாக ஆராயலாம்.

(1) பருவகால வேலையின்மை (Seasonal Unemployment)

வேளாண்மையில் ஈடுபட்டுத் தங்கள் வாழ்க்கையை நடத்தி வரும் மக்களில் பெரும்பாலோர் ஆண்டின் பல மாதங்களில் எவ்வித வேலையும் இன்றி இருக்கின்றனர். வேளாண்மை பருவகாலத் தொழிலாக இருப்பதே இதற்குக் காரணமாகும். ஓராண்டில் ஐந்து முதல் ஏழு மாதங்கள் வரை அவர்கள் வேலைவாய்ப்பை இழக்கின்றனர். கிராமங்களில் வேறுவிதமான வேலைவாய்ப்புக்களும் அமைந்திருப்பதில்லை. இந்தியாவின் சில பகுதிகளில் நீர்ப்பாசன வசதிகள் இல்லாமையாலும், பிற காரணங்களாலும் விவசாயிகள் ஒரே வகைப் பயிரை ஒரு போகம் மட்டுமே சாகுபடி செய்கின்றனர். ஆண்டின் பிற மாதங்களை அவர்கள் வீணே கழிக்க வேண்டியிருக்கின்றது. சர்க்கரைத் தொழிலையும் இதற்கு நல்ல உதாரணமாகக் கூறலாம். குறிப்பிட்டக் காலத்தில் கரும்பும் பற்றாக்குறை ஏற்படும்போது, சர்க்கரையை உற்பத்தி செய்யும் ஆலைகள் மூடப்படுகின்றன. இக்காலத்தில் சர்க்கரை ஆலைகளின் தொழிலாளர்கள் வேலையை இழக்கின்றனர். பருவகால வேலையின்மைக்கு முக்கியக் காரணம் தொழில்களின் முன்னேற்றத்தால் நலிவுற்ற கிராமத் தொழில்கள் திரும்பவும் வளர்க்கப்படாமையே ஆகும். பலவகைப்பட்ட துணைத் தொழில்கள் கிராமங்களில் தொடங்கப்பட்டால் பருவகால வேலையின்மையை நீக்கலாம்.

பிற துறைகளைக் காட்டிலும் வேளாண்மையிலேயே பருவகால வேலையின்மை மிகுதியாக அமைந்துள்ளது. வேளாண்மை பருவ

காலத் தொழிலாக இருப்பதால் இதைத் தவிர்ப்பது கடினமான தாகும். விதை விதைத்தல், நாற்று நடுதல், அறுவடை செய்தல் ஆகிய உற்பத்தி நிலைகளுக்கு இடையே நீண்ட கால இடைவெளி ஏற்படுகின்றது. சாகுபடியில் ஈடுபடும்பொழுது விவசாயிகள் மிகவும் கடினமான உழைப்பைத்தர வேண்டியுள்ளது. ஆனால், மற்றக் காலங்களில் உழைக்கும் ஆற்றல் வாய்ந்த அவர்களின் உழைப்பு, வேளாண்மையல்லாத பிற வேலை வாய்ப்புக்கள் இல்லாமையால் வீணடிக்கப்படுகின்றது. சில இடங்களில் சாகுபடிக் காலங்களில் உழைப்பாளர்களின் பற்றாக்குறையும் ஏற்படுவதுண்டு. முன்னேற்றமடைந்த நாடுகளைவிட முன்னேற்ற மடைந்துவரும் நாடுகளில் பருவகால வேலையின்மை பல காரணங் களால் மிகுதியாக இருக்கின்றது. வளர்ச்சியடைந்துவரும் நாடு களில் வேளாண்மை நடவடிக்கைகள் உழைப்புச் செறிந்தவை களாக இருக்கின்றன. முன்னேற்றமடைந்த நாடுகளில் வேளாண்மை இயந்திரமயமாக்கப்பட்டுள்ளது. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில், சில பொருளாதார சமுதாயக் காரணிகளால், உழைப்பின் பெயர்ச்சி பல தொழில்களுக்கும் இடையே மிகவும் குறைவாகவே இருக்கின்றது. ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்திக்கு மேல் விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்க விருப்புக் கொள்வ தில்லை.

வளர்ச்சியடைந்த நாடுகளில் 'செறிந்த முறைச் சாகுபடியும்' (Intensive Cultivation) கைக்கொள்ளப் படுகின்றது. பயிர்ச் சுழற்சி, இருபோக, முப்போகச் சாகுபடி முறைகள் போன்றவை களும் பின்பற்றப்படுகின்றன. வேளாண்மை உற்பத்தி சில துணைத் தொழில்களோடும் இணைக்கப்படுகின்றது. வேளாண்மையில் ஈடுபடுபவர்கள் அதிக வருவாயைப் பெற வளர்ச்சியடைந்த நாடு களில் ஏராளமான வாய்ப்புக்கள் உள்ளன. பல வகைப்பட்ட நுகர் பொருட்களை வாங்கும் திறனை அவர்கள் கொண்டிருக்கின்றார்கள். இதனால் நுகர் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களும் செழிக்கின்றன. இத்தொழில்களில் வேலை வாய்ப்புக்களும் பெருகுகின்றன.

பருவகால வேலையின்மை தொழில் துறையிலும்கூட அமைந் துள்ளது. அரிசி மில்களில் சில வாரங்களுக்கு மட்டுமே வேலை வாய்ப்பு அமைந்திருக்கின்றது. சர்க்கரை ஆலைகளில் உற்பத்தி யானது ஆண்டொன்றில் நான்கு முதல் ஆறு மாதங்களுக்கு நடை பெறுகின்றது. இவற்றைக் காட்டிலும் குடிசைத் தொழில்களில் பருவகால வேலையின்மை அமைந்திருப்பதே மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். குறுகிய காலத்தில் வீணாகும் தன்மை கொண்ட கச்சாப் பொருட்கள் சில இத்தொழில்களின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்

படுகின்றன. மேலும், இவை உற்பத்தி செய்யும் பொருட்களின் தேவை காலத்திற்குக் காலம் வேறுபடுகின்றது. வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் தொழில் துறையில் அமைந்துள்ள பருவகால வேலையின்மை அதிக முக்கியத்துவம் கொண்டதல்ல. ஏனெனில் இந்நாடுகளில் தொழில் துறையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர் களின் எண்ணிக்கைக் குறைவாகவே இருக்கின்றது.

பருவகால வேலையின்மையின் மூலம் மனித உழைப்பு முற்றிலும் பயன்படுத்தப்படாத நிலையோடு, உற்பத்திக்குப் பயன் படுத்தப்படுகின்ற மூலதனப் பொருட்களின் உற்பத்தித் திறனும் முழுமையாகப் பெறப்படுவதில்லை. வளர்ச்சியடையாத நாடுகளில் இவ்வகை மூலதனப் பொருட்கள் குறைந்த அளவிலேயே அமைந் துள்ளன. அவற்றைச் சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்துவது அவசியமானதாகும். உள்நாட்டிலேயே தயாரிக்கப்பட்ட மூலதனப் பொருட்கள் குறைந்த காலத்திற்கு மட்டுமே பயனளிக்கின்றன. இவற்றை முற்றிலும் சிறப்பாகவும், தொடர்ச்சியாகவும் உற்பத்தி உயர்விற்காகப் பயன்படுத்த வேண்டும். வளர்ச்சியடைந்த நாடு களில் இயந்திரங்களைக் கொண்டு வேளாண்மை உற்பத்தி செய்யப் படுகின்றது. பின்தங்கிய நாடுகளில் கால்நடைகளின் உதவியைக் கொண்டு வேளாண்மைச் சாகுபடி முறைகள் நிறைவேற்றப்படு கின்றன. கால்நடைகள் குறிப்பிட்டக் குறைந்த காலத்திற்கு மட்டுமே பயனளிக்கக் கூடியவை. கால்நடைகளைப் பராமரிக்கும் செலவும் அதிகமானதாக இருக்கின்றது. வேளாண்மைச் சாகுபடி நடவடிக்கைகள் இல்லாத காலங்களிலும்கூட கால்நடைகளைக் காக்க வேண்டியது அவசியமானதாகின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பருவகால வேலை யின்மையை ஒருவகையில் மறைந்துள்ள வேலையின்மை என்றும் கூறலாம். தங்களுடைய நிலத்தில் தாங்களே சாகுபடியில் ஈடுபடு பவர்கள் மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளார்கள். 'வேளாண்மைத் தொழிலாளர்கள்' (Agricultural Labourers) பருவ கால வேலையின்மையால் பெரிதும் பாதிக்கப்படுகின்றார்கள். மறைந்துள்ள வேலையின்மை வெளியில் தெரியாதபடி அமைந் துள்ளது; பருவகால வேலையின்மை வெளிப்படையாகத் தெரியக் கூடியது.

### பருவகால வேலையின்மைக்கான தீர்வுகள்

வேளாண்மையில் முழுநேர வேலையை ஏற்படுத்துவதின் மூலம் பருவகால வேலையின்மைக்குத் தீர்வு காண முடியும். வேளாண்மை யிலேயே வேலை வாய்ப்பை நீண்ட காலத்திற்குப் பெற வழி முறைகள் பின்பற்றப்பட வேண்டும். வேளாண்மையில் வேலைக்

காலத்தை நீடிப்பது அவசியமானது. அதன் மூலம் உற்பத்தியை உயர்ந்த அளவிலும் பெற வேண்டும். உற்பத்தியை உயர்த்தாமல் வேலைக் காலத்தை நீடிப்பது எவ்வகையிலும் நன்மையைத் தராது. வேளாண்மையில் வேலைக் காலத்தை நீடிக்க 'செறிவு முறைச் சாகுபடி' (Intensive Cultivation) பரந்த அளவில் பின்பற்றப்பட வேண்டும். பயிர்ச் சுழற்சி முறை, இரு போகச் சாகுபடி முறை போன்றவற்றையும் பின்பற்றலாம். ஆனால், இவற்றை மேற் கொள்ள அதிக முதலீடுகள் தேவைப்படுகின்றன. நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட வேண்டும். நல்ல விதைகளும், உரங்களும் விவசாயிகளுக்கு அளிக்கப்படுதல் வேண்டும். முன்னேற்றமடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் வேளாண்மையில் புகுத்தப்பட வேண்டும். நல்ல கருவிகளும், இயந்திரங்களும் பயன்படுத்தப் பட்டு வேளாண்மை உற்பத்தி பெருக வேண்டும்.

இரண்டாவதாக, சாகுபடி நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும் காலங்களில் உழைப்பின் தேவை அதிகமாக இருக்கின்றது. இதைத் தவிர்க்க வேளாண்மை இயந்திரமயமாக்கப்பட வேண்டும். இத்தீர்வு வெற்றியைப் பெற வேளாண்மை தவிர பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் பெருக்கப்பட வேண்டும். வேளாண்மையை இயந்திரமாக்குவதின் மூலம் கிராமங்களில் உபரி உழைப்பின் அளவானது மேலும் அதிகரிக்கும். வேளாண்மையை நீக்கிய பிற துறைகளில் வேலை வாய்ப்புக்களை அதிகரிக்க மூலதனம் மிக அதிக அளவிற்குத் தேவைப்படுகிறது. நீண்ட காலத்தில் மட்டுமே அதிக மூலதனத்தைப் பெறுவது இயலும்.

மூன்றாவதாக, பருவ நிலைகள் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் வேறுபடுகின்றன. வேளாண்மைச் சாகுபடிகள் பல இடங்களிலும் வெவ்வேறு காலங்களில் மேற்கொள்ளப் பெறுகின்றன. இக்காலங் களில் உழைப்பாளர்களைப் பெயர்ச்சியடையச் செய்வது நன்மை தரும். ஆனால், உழைப்பைப் பெயர்ச்சியுடைய காரணியாக மாற்றுவதில் பல பொருளாதார, சமுதாயச் சிக்கல்கள் தோன்று கின்றன. பல இடங்களிலும் உழைப்பாளர்களுக்குக் குடியிருப்பு வசதிகளை ஏற்படுத்தித் தர வேண்டும். பெயர்ச்சியடையும் உழைப் பாளர்களுக்கு உணவு வசதிகளை ஏற்படுத்தித் தருவதும் இன்றியமையாதது. உழைப்பாளார்கள் தங்கள் குடும்பங்களை வெவ்வேறு காலங்களில் பல்வேறு இடங்களுக்கு அழைத்துச் செல் வதற்கும் அதிகச் செலவு பிடிக்கும். உழைப்பாளர்கள் குடும்பங் களைத் தங்களுடனேயே வைத்துக்கொள்ளாவிட்டால் குடும்ப வாழ்வு பாதிக்கப்பட்டுவிடும்.

நான்காவதாக, பருவ கால வேலையின்மையானது வேளாண் மையில் இருக்கும்போது, தொழில்துறையில் பருவ கால வேலை

வாய்ப்பானது அமைந்திருக்கக்கூடும். உதாரணமாக, கரும்புச் சாகுபடி செய்யும் விவசாயிகள் வேலையின்மைக் காலத்தில் சர்க்கரை ஆலைகளில் தங்கள் உழைப்பைத் தர முன்வரலாம். ஆனால், கரும்புச் சாகுபடி செய்யும் விவசாயிகளின் ஒரு குறைந்த பகுதியினருக்கே சர்க்கரை ஆலைகள் வேலை வாய்ப்பை அளிக்க முடியும். மேலும் வேலைவாய்ப்புக்களைப் பெருக்க வேண்டுமானால், கரும்புச் சாகுபடியாளர்கள் தாங்களே சிறிய அளவுகளில் சர்க்கரை உற்பத்தியை மேற்கொள்ளலாம். தேயிலை உற்பத்தியில் அமைந்திருக்கக்கூடிய பருவகால வேலையின்மை ஓரளவு தவிர்க்கப்படுகின்றது. தேயிலை உற்பத்தியில் ஈடுபடுபவர்கள் வேலையின்மைக் காலங்களில் தேயிலைத்தூள் தயாரிப்பில் ஈடுபடுகின்றனர். தேயிலைத் தூள் தயாரிப்பு பல நிலைகளிலும் குறைந்த அளவுகளில் செய்யப்படுகின்றது. பருத்தி உற்பத்தியில் அமைந்திருக்கும் பருவ கால வேலையின்மையையும் இம்முறையின் மூலம் நீக்கலாம். பருத்தி உற்பத்தியாளர்கள் வேலையின்மைக் காலங்களில் நூற்புத் தொழிலிலும், நெசவுத் தொழிலிலும் ஈடுபடலாம். வேளாண்மையில் அமைந்திருக்கக்கூடிய பருவ கால வேலையின்மையை முற்றிலும் நீக்கக் கிராமப் புறங்களில் சிறு தொழில்களும் ஏற்படுத்தப்பட வேண்டும். இத் தொழில்கள் வேளாண்மைப் பொருட்களை உற்பத்திக்கான கச்சாப் பொருட்களாகக் கொண்டிருக்க வேண்டும்.

குடிசைத் தொழில்களை வளர்ப்பதில் பல இடர்ப்பாடுகளும் தோன்றுகின்றன. இத்தொழில்களைத் தொடங்குவதற்கான நிதி வசதியானது தேவைப்படுகின்றது. கிராம மக்கள் மிகக்குறைந்த வருவாயையே பெறுவதால், திருந்திய வேளாண்மைச் சாகுபடியை மேற்கொள்ளத் தேவையான நிதி வசதிகள்கூட அவர்களிடம் இருப்பதில்லை. குடிசைத் தொழில்களையும், சிறு தொழில்களையும் தொடங்குவதற்குத் தேவையான தொழில் நுட்ப அறிவும் அவர்களிடம் இருப்பதில்லை. இத்தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களின் அளிப்பையும் அதிகமாக்குவது அவசியமாகின்றது. பேரளவுத் தொழில்களின் போட்டியாலும் சிறு தொழில்களின் வளர்ச்சி குன்றிவிடுகின்றது. சிறு தொழில்கள் உற்பத்தி செய்கின்ற பொருட்களை விற்பனை செய்வதற்கான வசதிகளும் செய்யப்படுதல் வேண்டும். ஆனால் இந்நடவடிக்கைகளை எடுப்பதின் மூலம், பின்தங்கியப் பொருளாதாரங்களில் கிடைக்கூடிய குறைந்த அளவு மூலதனம் சிறப்பாகப் பயன்படுத்தப்படும் எனக் கருத இயலாது. குடிசைத் தொழில்களில் விவசாயிகளை ஈடுபடுத்தி உற்பத்திக்கான சிறு தொழில் நுட்பக் கருவிகளை அளிப்பதற்கும்கூட அதிக முதலீடு தேவைப்படுகின்றது. இம்மூலதனமானது பெரிய தொழில்களில் முதலீடு செய்யப்பட்டால் தேசிய வருவாய் பெருமளவிற்கு உயரும்.

நிறை வேலையுடைமையைப் பெறுவது மட்டும் நோக்கமாக இருக்கக் கூடாது. நாட்டின் மொத்த ஆக்கம் உயர்வதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும். அமைந்திருக்கக் கூடிய உற்பத்தி வளங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு, தேசிய வருவாய் உயர்வதற்கான வழிமுறைகள் பின்பற்றப்படுதல் வேண்டும். முழுநேர வேலையில் விவசாயிகள் வேளாண்மையில் ஈடுபடும்போது, அவர்களின் உற்பத்தித்திறன் உயர்வாக இருக்கும் எனக் கூறப்படுகின்றது. பகுதி நேர வேலையில் உழைப்பாளர்கள் வேளாண்மையில் ஈடுபடும்போது, அவர்களின் உற்பத்தித்திறன் குறைவாக இருக்கும் எனக் கருதப்படுகின்றது. இதைப்போன்ற நிலையே குடிசைத் தொழில்களிலும் காணப்படுகின்றது. முழு நேர வேலையில் ஈடுபடும் குடிசைத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறன் பகுதி நேர வேலையில் ஈடுபடும் குடிசைத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறனைவிட அதிகமாக இருக்கின்றது. வேளாண்மையையும், கைவினைத் தொழிலையும் (Handi-craft) இணைக்கும்போது சிறப்புத் தேர்ச்சியைத் தொழிலாளர்கள் பெறுவதில்லை. எனவே, முழு நேர வேலையில் வேளாண்மையிலும், கைவினைத் தொழில்களிலும் தொழிலாளர்கள் ஈடுபடுவதையே சிலர் ஆதரிக்கின்றனர்.

குறைந்த அளவில் கிடைக்கக் கூடிய மூலதனத்தைச் சிறப்பாக உற்பத்தி உயர்விற்குப் பயன்படுத்த முழு நேர விவசாயிகளும், முழு நேர கைவினைஞர்களும் தேவைப்படுகின்றார்கள். வேளாண்மையில் வேலைக்காலத்தை நீடிப்பதின் மூலம், சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் மூலதனப் பொருட்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்படும். வேளாண்மைக் கருவிகளையும், பிற உற்பத்திச் சாதனங்களையும் சிறப்பாகப் பயன்படுத்த இதுவே சிறந்த வழியாகும். பருவகால வேலையின்மையில் அமைந்துள்ள உழைப்பாளர்களுக்கு வேலைவாய்ப்பை அளிக்க குடிசைத் தொழில்கள் உதவுகின்றன. விவசாயிகள் கால்நடைகளைக் கொண்டிருப்பதால், அவர்கள் பால் பொருட்களைத் தயாரிக்கலாம். குறைந்த அளவு மூலதனத்தையும், அதிக அளவு உழைப்பையும் தேவையாகக் கொண்ட குடிசைத் தொழில்களை வளர்ப்பது நல்லது. இதற்கு உதாரணமாக பிரம்புப் பொருட்களின் உற்பத்தி, பாய் முடைதல், கூடை பின்னுதல் சோப்புத் தயாரித்தல் ஆகியவற்றைக் கூறலாம்.

ஐந்தாவதாக, வேளாண்மை வேலையின்மைக் காலங்களில், அரசு பொதுப்பணிகளின் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளைப் பரவலாக எடுக்க வேண்டும். இப்பொதுப்பணிகளின் வளர்ச்சி பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் என்பது குறிப்பிடத்தக்கது.

இறுதியாக, சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றின் கைவினைஞர்க்கு மூலப்பொருட்கள் வாங்கி உற்பத்தியைச் செய்ய எளிய கடன் வசதிகள் செய்துதரப்பட வேண்டும். நீண்ட காலத்திற்கு வீணாகாதத் தன்மை கொண்ட பொருட்கள் உற்பத்தி செய்யப்படலாம். வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர்கள் வேலையில்லாத காலங்களில் இத்தொழில்களில் ஈடுபட்டு உற்பத்தியை மிகுதியாகச் செய்யலாம். இதன் மூலம் தலா வருவாய் உயரும்; மக்கள் தரமான வாழ்வையும் பெறுவார்கள்.

## (2) மறைந்துள்ள வேலையின்மை (Disguised Unemployment)

எண்ணிறைந்த மக்கள் வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ளார்கள். இவர்களில் ஒரு பகுதியினர் நிலத்தை உடைமையாகக் கொண்டுள்ளனர். மற்றொரு பகுதியினர் நிலமற்ற விவசாயிகளாக இருக்கின்றனர். வேளாண்மையில் கூலிக்கு உழைப்பைத் தரும் உழைப்பாளர்களும் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் யாவரும் வேளாண்மை நடவடிக்கைகளைச் செய்தாலும்கூட, அனைவரும் உற்பத்தியை உயர்த்த உதவுகின்றார்கள் எனக்கூற முடியாது. வேளாண்மை மக்கட்தொகை தேவைக்கு அதிகமானதாக இருக்கின்றது. உபரி உழைப்பு வேளாண்மையில் அமைந்திருக்கக் கூடிய நிலையையே 'மறைந்துள்ள வேலையின்மை' என்று கூறுகின்றோம். மறைந்துள்ள வேலையின்மையில் பல உழைப்பாளர்களும் அமைந்திருக்கின்றார்கள். இந்திய வேளாண்மை மறைந்துள்ள வேலையின்மையால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. கிராமப் புறங்களில் வேலையின்மையோடு இவ்வகை மறைந்துள்ள வேலையின்மையும் திகழ்கின்றது.

நம்முடைய பொருளாதாரத்தின் பிழைப்புத் (Subsistence) துறையாகிய வேளாண்மையில் 25 முதல் 30 சதவீத உழைக்கும் மக்கட்தொகை உற்பத்தியை உயர்த்தும் வகையில் அமைந்திருக்கவில்லை. நம் நாட்டில் வேலையின்மையைக் காட்டிலும் மறைந்துள்ள வேலையின்மையே பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதில் பெரிய தடையாக உள்ளது. மறைந்துள்ள வேலையின்மை வேளாண்மை செய்யப்படுகின்ற பல பகுதிகளிலும் அமைந்திருக்கின்றது. மக்கட்தொகையின் பெரும்பகுதி வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ளமையால், உழைப்பின் இறுதிநிலை உற்பத்தி பூஜ்யம் என்ற நிலையிலும் இருக்கிறது. உபரி உழைப்பானது இதன் காரணமாக வீணடிக்கப்படுகின்றது.

கிராமப் பொருளாதாரத்தில் பெரும்பாலான மக்கள் வேலையின்மையில் இருப்பதை மறைந்துள்ள வேலையின்மை உணர்த்துகின்றது. நம்முடைய பொருளாதாரத்தின் பராமரிப்புத் துறை

யாகிய வேளாண்மையில் உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப் படாமை முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. வேளாண்மை உற்பத்தியின் மொத்த அளவு பாதிக்கப்படாமல் உபரி உழைப் பானது வேளாண்மைத் துறையினின்றும் நீக்கப்படலாம். இதன் மூலம் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கலாம். உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றமையால் பிற துறைகளின் உற்பத்தியையும் கூட்ட முடியும். வேளாண்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பாளர்கள் தாங்கள் வேலையில் அமைந்துள்ளதாகவே உணர்கின்றார்கள்; ஆனால், அவர்களுடைய உழைப்பினால் உற்பத்தி உயர்வடைவதில்லை. வேலையில் அமைந்துள்ளது போன்று தோற்றமளிக்கும் மறைந்துள்ள வேலையின்மையைக் கொண்டுள்ள இவர்களை வேலையின்மையில் அமைந்துள்ளவர்கள் என்றே கருத வேண்டும். மொத்த உற்பத்தியை உயர்த்த உதவாத உபரி உழைப் பாளர்களின் பணி வேளாண்மைக்குத் தேவையற்றது. இவ்வுபரி உழைப்பாளர்கள் தங்களுடைய திறனையும், காலத்தையும் வீணடித்துக் கொண்டிருக்கின்றார்கள். எனவே, பராமரிப்புத் துறை யிலிருந்து இவர்களை நீக்கி பிற துறைகளில் இலாபகரமான வேலை வாய்ப்பை அளிக்க வேண்டும்.

மறைந்துள்ள வேலையின்மை தோன்றுவதற்கான முக்கியக் காரணம் விரைவான மக்கட்தொகைப் பெருக்கமாகும். பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் குறைவாக உள்ளமையால், பெருகும் மக்கட்தொகையின் பெரும் பகுதியினர் வேளாண்மை யைச் சார்ந்தே அமைகின்றனர். சிறிய அளவில் வேளாண்மைச் சாகுபடிகள் செய்யப்படுகின்றமையும் முன்னேற்றத்திற்குத் தடை யாக இருக்கின்றது.

உற்பத்தியைச் சிறப்பாக செய்வதற்கான வசதிகள் குறை வாக உள்ளமையும் மறைந்துள்ள வேலையின்மைக்கான மற்றொரு காரணமாகும். எந்த அளவிற்கு ஒரு பொருளாதாரத்தில் மறைந் துள்ள வேலையின்மை அமைந்துள்ளது என்பதைக் கணக்கிடுவது கடினமானது. எனினும், ஐக்கிய நாடுகளின் அறிக்கையின்படி, "இந்தியா, பாகிஸ்தான், இந்தோனேசியா, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் 20 முதல் 25 சதவீதம் வரை உபரி வேளாண்மை மக்கட் தொகை அமைந்துள்ளது." 'வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கான தீர்வுகள்' (Measures for the Economic Development of Under-developed Countries) என்ப தின் மீதான ஐக்கிய நாடுகளின் அறிக்கையினின்றும் இதை அறிய முடிகின்றது.

மறைந்துள்ள வேலையின்மை நிலவுவதால் பராமரிப்புத் துறை யில் அமைந்துள்ள மக்களின் தலா வருவாய் மிகவும் குறைவாக

இருக்கின்றது. இவர்களின் தலா வருவாயை உயர்த்த வேண்டு மென்றால் மறைந்துள்ள வேலையின்மை நீக்கப்பட வேண்டும். குறைந்த அளவே வருவாயைப் பெறுகின்ற இவர்களால் சேமிக்க முடிவதில்லை. மூலதனப் பற்றாக்குறையால் குறைந்த அளவிற்கே உற்பத்திக்கான முதலீட்டைச் செய்கின்றார்கள். இதனால் குறைந்த அளவு உற்பத்தியை மட்டுமே அவர்களால் பெற முடிகின்றது. வேளாண்மை தேக்க நிலையில் உள்ளமைக்கு இவ்வாறான வறுமை வட்டமும் முக்கியக் காரணமாகின்றது. வேளாண்மை வளர்ச் சிக்கும், பிற துறைகளின் முன்னேற்றத்திற்கும் மறைந்துள்ள வேலையின்மையை நீக்குவது இன்றியமையாததாகின்றது.

மறைந்துள்ள வேலையின்மை முக்கியமாக இரண்டு நிலைகளைக் கொண்டிருக்கின்றது : (i) உழைப்பாளர்களின் முழுமையான உழைக்கும் திறன் பயன்படுத்தப்படுவதில்லை. குறைந்த அளவே உற்பத்தியைச் செய்யக்கூடிய தொழிலில் அவர்கள் ஈடுபட்டிருக் கின்றார்கள். (ii) உற்பத்தியைச் செய்வதற்குத் தேவையான உழைப்பாளர்களின் எண்ணிக்கையைவிட, உண்மையில் அமைந் திருக்கக்கூடிய உழைப்பாளர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக் கின்றது. பின்தங்கிய பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடு களில் மறைந்துள்ள வேலையின்மை சுழலும் நிலையில் இல்லாமல் நிரந்தரத்தன்மை கொண்டதாக உள்ளது. மறைந்துள்ள வேலை யின்மை கூலியாட்களின் நிலையைப் பெரிதும் பாதிப்பதில்லை. நில மற்ற விவசாயிகள், தங்கள் நிலத்திலேயே சாகுபடி செய்கின்ற விவசாயிகள் ஆகியவர்களுடைய நிலையை அது பாதிக்கின்றது. ஆயத்தநிலைத் தேவைக் குறைவினால் இவ்வகை வேலையின்மை ஏற்படுவதில்லை. உற்பத்திக்கான வசதிகள் குறைவாக உள்ள நிலையே மறைந்துள்ள வேலையின்மைக்கான காரணங்களுள் ஒன்றாகும்.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் மறைந்துள்ள வேலையின் மைக்கான அடிப்படைக் காரணம், மக்கட் தொகையின் விரைவான வளர்ச்சி வீதத்திற்கு ஏற்ப மூலதன வசதிகளின் பெருக்கம் இல்லா மையே ஆகும். இந்நாடுகளில் மக்கட் பெருக்கம் விரைவான வீதத் தில் ஏற்படுகின்றது. வேளாண்மையை நீக்கிய பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் அந்த அளவிற்குப் பெருகுவதில்லை. எனவே, பெருகிவரும் மக்கட்தொகை வேளாண்மையைச் சார்ந்து அமை வது தவிர்க்க முடியாததாகின்றது. புதிதாக வேளாண்மையில் ஈடுபடுகின்ற உழைப்பாளர்கள் மொத்த உற்பத்தியில் சிறிதளவு உயர்வை மட்டுமே ஏற்படுத்துகின்றார்கள். உற்பத்தி முறைகளில் மாற்றங்கள் ஏற்படுவதில்லை. உற்பத்திக்குப் பயன்படுத்துகின்ற மூலதனம், பிற சாதனங்கள் ஆகியவற்றின் அளவிலும் மாற்றங்கள்

தோன்றுவதில்லை. வேளாண்மைத் தொழிலமைப்பு எவ்வித மாற்றங்களையும் பெறாமலேயே இருக்கின்றது. இந்நிலையில் உபரியாக அமைந்திருக்கக்கூடிய உழைப்பாளர்களை வேளாண்மையினின்றும் நீக்குவதால் உற்பத்தியின் அளவு பாதிக்கப்படாது. இதன்மூலம் திறமையான உற்பத்தி முறைகளைப் பின்பற்ற வாய்ப்பு ஏற்படுவதால் உற்பத்தியையும் உயர்த்தலாம்.

அமைப்பு முறைகள், உற்பத்தி முறைகள், மூலதனத்தின் அளவு ஆகியவற்றில் சிறிய மாற்றங்களை ஏற்படுத்துவதினால் வேளாண்மை மக்கட்தொகையின் ஒரு பகுதியினரை உற்பத்தியில் குறைவு ஏற்படாதவண்ணம் நீக்க முடியும். 'உத்தம அளவுப் பண்ணைகளை' (Optimum Holdings) ஏற்படுத்துவதின் மூலம் கணிசமான அளவிற்கு உபரி உழைப்பாளர்களை நீக்கலாம். இதனால் வேளாண்மை உற்பத்தி அதிகரிக்கும். உயர்வடைந்த உற்பத்தியை குறைந்த வேளாண்மை மக்கட்தொகையே பகிர்ந்து கொள்வதால், தனியொருவருக்கான உற்பத்தியின் அளவும் பெருகுகின்றது. வருவாய் அதிகரிப்பதால் சேமிப்பு, முதலீட்டு வீதங்களும் அதிகரிக்கின்றன. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் வேளாண்மை பின்தங்கிய தேக்க நிலையில் உள்ளமைக்கு 'நிலங்கள் உட்பிரிவு படுத்தப்படுதலும், துண்டாடுதலும்' (Sub-division and Fragmentation of Holdings) முக்கியக் காரணமாகின்றது. வேளாண்மையை முற்றிலும் இயந்திரமாக்குவதும் இயலாததாகும். வேலையின்மைச் சிக்கலை அது மேலும் தீவிரமடையச் செய்யும்.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வேளாண்மை உற்பத்தி பெரும்பாலும் 'குடும்பப் பண்ணை' (Family Holding) முறையிலேயே செய்யப்படுகின்றது. ஒரு குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களும் உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றார்கள். உற்பத்தி உயரும்போது அவர்களுடைய நுகர்வின் அளவும் அதிகரிக்கின்றது. ஏனெனில், குறைந்த உற்பத்தியைப் பெறும்போது குறைந்த அளவு நுகர்விலேயே அவர்கள் ஈடுபடுகின்றார்கள். வருவாய் அதிகரிக்கும் போது விவசாயிகள் உணவுப் பொருட்களைத் தவிர பிற நுகர் பொருட்களையும் வாங்கிப் பயன்படுத்துகின்றார்கள். உயர்வடைகின்ற வருவாய் முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படுவதில்லை. வீணான நுகர்வுகளில் அதிகரிக்கின்ற வருவாய் செலவிடப்படுகின்றது. குடும்பப் பண்ணைகளின் அளவும் சிறியதாக இருக்கின்றது. எனவே, குடும்ப அங்கத்தினர் அனைவருக்கும் முழு வேலைவாய்ப்பை அளிக்கக் கூடியதாகக் குடும்பப் பண்ணை முறை அமைவதில்லை. நிலம் போதுமான அளவில் இல்லாமையும், மூலதனப் பற்றுக்குறையும் இதற்கான காரணமாகும். குடும்ப அங்கத்தினர்களில் சிலர் மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்திருக்கின்றார்கள். இவர்கள் வேறு

தொழில்களில் தங்கள் உழைப்பைத்தருவதின் மூலம் வேளாண்மை உபரி உற்பத்தியின் அளவைப் பெருக்கலாம். மேலும், மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளவர்களே தாங்கள் மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளோம் என்பதை உணர்ந்திருப்பதில்லை. எனவே, மறைந்துள்ள வேலையின்மை வெளிப்படையாகத் தெரியாமல் மறைந்தே உள்ளது. வேளாண்மையைச் சார்ந்துள்ள பெரும்பாலானவர்களின் வருவாய் மிகவும் குறைவாக உள்ளமைக்கு இந்நிலையே காரணமாகும். ஆனால், உழைப்பாளர்களின் ஒரு பகுதியினர் முற்றிலும் வேலையின்றி இருக்கின்றனர் எனவும் கூற முடியாது. ஆகவே, வேறு துறைகளில் வேலை வாய்ப்புக்கள் இருந்தாலும்கூட, அவற்றில் உழைப்பாளர்கள் ஈடுபடுவதில்லை.

பின்தங்கிய நாடுகளில் மறைந்துள்ள வேலையின்மை வேளாண்மைத் துறையில் மட்டுமே அமைந்திருக்கின்றது என்று கருத இயலாது. சில்லரை வாணிபத்திலும், தனியார் பணிகளிலும் மறைந்துள்ள வேலையின்மை இருக்கின்றது. குறிப்பிட்ட ஒரு பகுதியில் சில்லரை வாணிபத்தில் ஈடுபட்டுள்ள வணிகர்கள் எண்ணிக்கையில் மிகுதியாக இருக்கலாம். அவ்வாறு அமைந்திருக்கும்போது அவர்கள் செய்கின்ற வாணிபத்தின் அளவு குறைவாகவே இருக்கும். பொருட்களை வாங்குபவர்களுக்கு எவ்விதத் தொல்லையும் ஏற்படாத வகையில் சில்லரை வாணிபத்தைச் செய்யக்கூடிய கடைகளின் எண்ணிக்கையைக் குறைக்கலாம். கடைகளின் எண்ணிக்கைக் குறையும்போது நுகர்வோர் அதிக நன்மையைப் பெறவும் வாய்ப்பு ஏற்படும். ஒவ்வொரு கடையின் வாணிபமும் அளவில் அதிகரிக்கும்போது, பொருட்கள் குறைந்த விலைக்கு விற்கப்படுகின்றன. பேருந்து நிலையங்களிலும், இரயில்வே நிலையங்களிலும், சந்தைகளிலும் கூலிக்குச் சுமை தூக்குபவர்களின் எண்ணிக்கை மிகுதியாக இருப்பதையும் இதற்கு உதாரணமாகக் கூறலாம். செல்வந்தர்கள் சமுதாய அந்தஸ்தைப் பெறுவதற்காகவும், வீணான பெருமைக்காகவும் அதிக வேலையாட்களை வைத்துக்கொள்கின்றனர்கள். ஆடம்பர நோக்கைத் தவிர வேறு சிறப்பான நோக்கம் இதில் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. இவ்வித உழைப்பாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதின் மூலம் தேசிய அளவில் உற்பத்தியானது பாதிக்கப்பட மாட்டாது.

கூலிக்கு உழைப்பைத் தரும் வேளாண்மை உழைப்பாளர்களும் மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளார்கள். இவ்வுழைப்பாளர்களில் சிலர் தாங்கள் பெறும் கூலியைக் காட்டிலும் குறைந்த அளவு மதிப்புடைய உற்பத்தியை மட்டுமே செய்கின்றனர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நிலவுடைமையாளர்கள் அதிகக்

கூலியைப் பெற்று, குறைந்த உற்பத்தியைச் செய்கின்ற சில உழைப்பாளர்களையும் வேலைக்கு அமர்த்திக் கொள்கின்றனர்கள் என்பது அறியத்தக்கது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் வேலை வாய்ப்பைக் கொண்டுள்ள பல துறைகளில் மறைந்துள்ள வேலையின்மை யானது ஓரளவு அமைந்துள்ளது என்று கூறலாம்.

தீர்வுகள்

வேளாண்மையில் அமைந்திருக்கும் மறைந்துள்ள வேலை யின்மையை நீக்க புதிய நிலங்கள் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப் படலாம். பலருக்கும் வேலைவாய்ப்பை அளிக்க இது உதவும். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் இருக்கக்கூடிய மறைந்துள்ள வேலை யின்மையைக் களைவதற்கான சிறந்த வழி விரைவான பொரு ளாதார முன்னேற்றத்தைப் பெறுவதேயாகும். இதன் மூலம் வேளாண்மை தவிர பிற துறைகளிலும் வேலை வாய்ப்புக்கள் பெருகும்; வேளாண்மையில் அமைந்திருக்கக்கூடிய உபரி உழைப்பைப் பிற துறைகளின் உற்பத்தி உயர்விற்குப் பயன்படுத்த முடியும். பின்தங்கிய நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது கடினமாக இருக்கின்றது. ஆனால், பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலமே மறைந்துள்ள வேலை யின்மையை நீக்க முடியும். சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் கிராமப் புறங்களிலேயே ஏற்படுத்துவதும் நன்மை தருவதாகும். விவசாயிகளில் ஒரு பகுதியினர் இத்தொழில் களில் பகுதி நேரங்களில் உழைப்பைத் தரலாம்; மறைந்துள்ள வேலையின்மையை நீக்க விவசாயிகளில் மற்றொரு பகுதியினர் முழு நேர வேலையிலும் ஈடுபடலாம். இதனால் வேளாண்மை உற்பத்தி கூடுவதோடு, பிற துறைகளின் உற்பத்தியின் அளவும் அதிகரிக்கும். அரசு சில பெரிய தொழில்களையும், அடிப்படைத் தொழில்களையும் ஏற்படுத்துவது நாட்டைத் தொழில் மயமாக்க உதவும். இத் தொழில்களின் முன்னேற்றம் வேறு பல தொழில்கள் நாட்டில் தோன்றவும் வழிவகுக்கும். இவ்வாறு நாட்டின் தொழில் வளத்தை மேம்படுத்துவதின் மூலமும் மறைந்துள்ள வேலையின்மையின் அளவைக் குறைக்கலாம்.

(3) தொழில் வேலையின்மை (Industrial Unemployment)

மறைந்துள்ள வேலையின்மையினின்றும் இது வேறுபட்டது. தொழிலில் வேலையின்மையின் அளவைக் கணக்கிடுவது எளிதானது. குறிப்பிட்ட அளவு ஊதிய வீதத்தில் உழைப்பாளர்கள் உழைப்பைத்தர முன்வந்தாலும், வேலை வாய்ப்பு இல்லாத நிலையை இவ்வேலையின்மை உணர்த்துகின்றது. இவ்வகை வேலையின்மை

இந்தியாவில் படிப்படியாக அதிகரித்து வருகின்றது. தொழில் துறை விரைவாக முன்னேற்றமடையாத காரணத்தால், எண்ணிக்கையில் வேகமாக அதிகரித்துவரும் உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்க முடியவில்லை. தொழில் நகரங்களில் அமைந்துள்ள மக்கள் இவ்வேலையின்மையால் பாதிக்கப்படுகின்றார்கள். படித்தவர்களிடையே வேலையின்மை உள்ளமைக்குத் தொழில் வளம் பெருகாமை ஒரு காரணமாகின்றது. நம்முடைய இந்தியப் பொருளாதாரத்தில் அமைந்துள்ள விந்தையான இயல்புகளில் படித்தவர்களிடையே வேலையின்மை உள்ளமையும் ஒன்றாகும். இது உடனே தீர்க்கப்பட வேண்டிய அவசரத்தன்மை கொண்டுள்ளது. வேலை வாய்ப்புக்கள் எல்லோருக்கும் அளிக்கப்பட்டால்தான் அரசு உறுதியாக நீடித்து, திறமையாகச் செயல்பட முடியும். மக்களில் பெரும்பாலானோரின் ஆதரவு அரசிற்குக் கிடைக்க வேலை வாய்ப்புக்கள் பெருக்கப்படுதல் வேண்டும்.

ஒரு நாட்டில் தொழில் வளத்தைப் பெருக்குவது பல வழிகளிலும் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும். வேளாண்மை வளர்ச்சியும், தொழில் முன்னேற்றமும் ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாகும். வேளாண்மை வளர்ச்சி தொழில் முன்னேற்றத்திற்கு உதவுகின்றது; தொழில் முன்னேற்றமும் வேளாண்மை வளர்ச்சிக்கு வகை செய்கின்றது. தொழில் முன்னேற்றம் பொருளாதாரத்தின் பல துறைகளின் வளர்ச்சிக்கும் உதவுகிறது. பல துறைகளும் வளர்வதால் வேலை வாய்ப்புக்களும் பெருகுகின்றன. எந்த ஒரு நாடும் தொழில் முன்னேற்றத்தைப் பெற்ற பிறகுதான் பொருளாதாரத்தில் விரைவான வளர்ச்சி வீதத்தைப் பெற முடியும். இதை மேம்பாடடைந்த சில நாடுகளின் பொருளாதார வரலாற்றினின்றும் அறியலாம். எனவே, இந்தியாவில் பெரிய தொழில்களையும், சிறிய தொழில்களையும் அரசு ஏற்படுத்துவது இன்றியமையாதது. தனியார் துறையில் அமைந்துள்ள தொழில்களின் முன்னேற்றத்திற்கான ஆதரவையும் அரசு அளிக்க வேண்டும். பலவித சிறிய தொழில்களை மாநில அரசுகளும் நிறுவலாம். கூட்டுறவுத் துறையில் பல தொழில்களை அமைத்தலும் நன்மை தரும். தொழில்களைத் தொடங்குவதற்குத் தேவையான மூலதனத்தைக் குறைந்த வட்டி வீதத்தில் அளிக்கக்கூடிய நிதி நிறுவனங்களும் நம் நாட்டில் இயங்கி வருகின்றன. தொழில் வளத்தை இவ்வாறு பெருக்கி வேலையின்மையைக் குறைக்கலாம்.

(4) சுழற்சியுடைய வேலையின்மை (Cyclical Unemployment)

முன்னேற்றமடைந்த தொழில் வளம் மிக்க நாடுகளில் இவ்வகை வேலையின்மை தோன்றுகின்றது. தேவையின் பற்றாக்

குறையால் இவ்வேலையின்மை ஏற்படுவதாகக் கீன்ஸ் கூறுகின்றார். பலவகைப்பட்ட பொருட்களுக்கும், பணிகளுக்கும் தேவைக் குறைவு தோன்றுவதால் சுழற்சியுடைய வேலையின்மை ஏற்படுகின்றது. வாணிபச் சுழல்களே இவ்வகை வேலையின்மை ஏற்படுவதற்கான அடிப்படைக் காரணமாக அமைகின்றன. வாணிபச் சுழலால் பலவகைப்பட்ட தொழில்களிலும் ஏற்ற இறக்கங்கள் ஏற்படுகின்றன. பொருளாதார பூரிப்புக் காலத்தில் வேலை வாய்ப்புக்கள் அதிக அளவில் அமைந்துள்ளன; பொருளாதார மந்தக் காலத்தில் வேலை வாய்ப்புக்கள் குறைகின்றன. வாணிபச் சுழல்களின் வெவ்வேறு நிலைகளுக்கு ஏற்ப வேலை வாய்ப்புக்களிலும் மாற்றங்கள் தோன்றுகின்றன.

வளர்ச்சியடைந்த நாடுகளில் அமைந்துள்ள வேலையின்மைக்கும் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் அமைந்துள்ள வேலையின்மைக்கும் பல வேறுபாடுகள் உள்ளன. வளர்ச்சியடைந்த நாடுகளில் வேலையின்மை பெரும்பாலும் வாணிபச் சுழலால் ஏற்படுகின்றது. இவ்வகை சுழற்சியுடைய வேலையின்மை பின்தங்கிய நாடுகளில் பெருமளவிற்கு ஏற்படுவதில்லை. இந்நாடுகள் தொழில் வளத்தில் சிறந்தவைகளாகவும் இருப்பதில்லை. வாணிபச் சுழலால் இந்நாடுகளின் பொருளாதாரங்கள் அதிக அளவிற்குப் பாதிக்கப்படுவதில்லை. எனவே, சுழற்சியுடைய வேலையின்மை மேம்பாடடைந்துவரும் நாடுகளில் மிகக் குறைந்த அளவே அமைந்திருக்கக் கூடும்.

(5) தொழில் நுட்ப வளர்ச்சியால் ஏற்படும் வேலையின்மை (Technological Unemployment)

தொழில் நுட்ப உற்பத்தி முறைகளினாலும், அவற்றில் ஏற்படுகின்ற மாற்றங்களாலும் இவ்வகை வேலையின்மை தோன்றுகின்றது. இதனால் உழைப்பாளர்கள் வெவ்வேறு புதிய வேலைகளில் பெயர்ச்சியடைகின்றார்கள். தொழில் அமைப்பிலேயே சிலவகை மாற்றங்கள் ஏற்படும்போது இவ்வகை வேலையின்மை தோன்றக் கூடும். பலவகைப்பட்ட தொழில்களிலும் புதிய, முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகள் புகுத்தப்படலாம். இயந்திரங்கள், கருவிகள் ஆகியவற்றை உற்பத்திக்குப் பயன்படுத்தும்போது வேலையின்மை தோன்றுகின்றது. ஒரு தொழிலில் மேம்பாடான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகள் பின்பற்றப்படும்போது பல தொழிலாளர்களும் வேலையிழக்கின்றார்கள். மனிதச் சக்திக்குப் பதிலாக இயந்திரச் சக்தி உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுவதால் வேலையின்மை ஏற்படுகின்றது. தொழில் நுட்ப வளர்ச்சியால் தோன்றும் வேலையின்மை தொழில் வளம் மிக்க வளர்ச்சியடைந்த

நாடுகளிலேயே செல்வாக்கைக் கொண்டிருக்கின்றது. இந்தியாவில் இவ்வகை வேலையின்மை அதிக அளவில் அமைந்திருக்கவில்லை. ஏனெனில், நம் நாட்டில் பலவகைப்பட்ட தொழில்களும் முன்னேற வில்லை ; தொழில்களின் உற்பத்தி முறைகளிலும் பெருமளவு மாற்றங்கள் ஏற்படவில்லை.

மற்றநிலைகள் மாருதிருக்கும்போது, முன்னேற்றமடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் பின்பற்றப்பட்டால் உழைப் பாளர்களின் உழைப்பின் தேவை குறையும். இயந்திரச் சக்தி மனித உழைப்புச் சக்தியின் தேவையைக் குறைக்கின்றது. மேலும், பழைய உற்பத்தி முறைகளை மட்டுமே அறிந்திருக்கக் கூடிய உழைப்பாளர்களும் வேலையிழக்கின்றனர்கள். அவர்கள் வேறு வேலைகளைத் தேடிச்செல்வது தவிர்க்க முடியாததாகின்றது; அல்லது, புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறைகளை அறியும் வரை யாவது அவர்கள் வேலையின்மையால் பாதிக்கப்படுகின்றனர்கள். வேலையிழந்தவர்கள் திறமை குறைந்த உழைப்பைத் தேவையாகக் கொண்டத் தொழில்களை நாடிச் செல்வதும் உண்டு. தொழில் நுட்ப உற்பத்தி முறைகளில் மிக விரைவான முன்னேற்றங்கள் ஏற்படும் போது வேலையின்மை பெரிய சிக்கலாகவே உருவெடுக்கின்றது. பழைய உற்பத்தி முறைகளுக்கும், புதிய உற்பத்தி முறைகளுக்கும் அதிக வேறுபாடு தோன்றும்போது இவ்வகை வேலையின்மை ஏற் படுகின்றது.

பொதுவாக, வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றங்களால் ஏற்படும் வேலையின்மை அதிக அளவில் அமைந்திருப்பதில்லை. ஏனெனில், இந்நாடுகளில் உற்பத்தி முறை களில் மாற்றங்கள் திடீரெனத் தோன்றுவதில்லை ; தொழில்நுட்ப உற்பத்தி முறைகளில் மாற்றங்கள் குறைந்த வேகத்தில், படிப் படியாகவே ஏற்படுகின்றன. உழைப்பாளர்கள் எவ்விதக் கடின நிலையும் இன்றி முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளைக் கற்றுக் கொள்ள முடியும். எனினும், பின்தங்கிய நாடுகளில் பழைய உற்பத்தி முறைகளைப் புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறை களின் மூலம் மாற்றுவது அயசியமானது. இன்றைய முன்னேற் றமடைந்த நாடுகள் பின்பற்றும் சிறப்புமிக்கத் தொழில் நுட்ப உற்பத்தி முறைகளை என்றுவது முன்னேற்றமடைந்துவரும் நாடு களும் பின்பற்றியே ஆக வேண்டும். வளர்ச்சியடைந்த பொருளா தாரங்களின் உற்பத்தி முறைகளுக்கும், வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரங்களின் உற்பத்தி முறைகளுக்கும் இடையே மிகுதி யான வேறுபாடு அமைந்துள்ளது. இவ்வேறுபாட்டை நீக்குவதின் மூலமே பின்தங்கிய நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறமுடியும். பழைய உற்பத்தி முறைகளையே

தொடர்ந்து பல காலம் பின்பற்றும் எந்த ஒரு பொருளாதாரத்திலும் சிறப்பான முன்னேற்றம் ஏற்படுவதில்லை. புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறையைப் பின்பற்றும்போது குறைந்த எண்ணிக்கையிலேயே உழைப்பாளர்கள் தேவைப்படுகின்றார்கள். இதனால் உழைப்பாளர்களில் பலர் வேலையிழக்கக்கூடும். எனவே, புதிய வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்துவது வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் இன்றியமையாததாகின்றது. பெரிய தொழில்களின் முன்னேற்றத்தால் இந்தியாவில் சிறு தொழில்களிலும், குடிசைத்தொழில்களிலும் அமைந்திருந்த 'கைவினைஞர்கள்' வேலைவாய்ப்பை இழந்தார்கள். இந்தியாவின் 'கைவினைத் தொழில்கள்' (Handicrafts) அழிந்துபட்டமைக்கு புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைக் கொண்ட உள்நாட்டுத் தொழில்களும், வெளிநாட்டுத் தொழில்களும் காரணமாக அமைந்திருந்தன.

பின்தங்கிய பொருளாதாரங்களைக் கொண்டுள்ள நாடுகளில் உற்பத்தி அமைப்பு முறைகள் தவறுடையனவாக இருக்கின்றன. சில தொழில்களில் அமைந்திருக்கக்கூடிய உற்பத்திச் சாதனங்கள், தொழில் நுட்பம், குறைந்த அளவில் உள்ள உழைப்பாளர்களின் பணி ஆகியவற்றைக்கொண்டே உற்பத்தியைப் பெருக்கலாம். இத்தொழில்களின் நிர்வாகம் சிறப்பாகச் செய்யப்பட்டால் உற்பத்தி உயர வழியுண்டு. வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் நிர்வாக அமைப்புக்கள் சிறப்பாக அமைந்திருப்பதில்லை. புதுமையான உற்பத்தி முறைகளைப் புகுத்தினால் உழைப்பாளர்களில் ஒரு பகுதியினர் வேலையை இழப்பார்கள். புது முறைகளில் திறமையான நிர்வாகமும், அமைப்பு முறையும் ஏற்படுத்தப்படும்போதும் வேலையின்மை தோன்றக்கூடும். வளர்ச்சியடைந்துவரும் ஒரு நாட்டில் தொழில் நுட்ப வளர்ச்சியால் ஏற்படும் வேலையின்மை, உற்பத்தியில் புதுமையான முறைகளைப் புகுத்துகின்ற நிலையைச் சார்ந்து அமையும்.

தொழில் நுட்ப மாற்றங்கள் உழைப்பாளர்களிடையே வேலையின்மையை மட்டும் தோற்றுவிப்பதில்லை; பழைய உற்பத்திச் சாதனங்களும் பயனற்றவைகளாகி விடுகின்றன. எடுத்துக்காட்டாக, வேளாண்மையை இயந்திரமயமாக்கினால் பழைமையான வேளாண்மைக் கருவிகளும் கால்நடைகளும் எவ்விதப் பயனையும் அளிப்பதில்லை.

தொழில் நுட்ப முன்னேற்றத்தால் நிலம், உழைப்பு, மூலதனம் ஆகியவற்றின் உற்பத்தித் திறன் பெருகுகின்றது. உற்பத்திப் பெருகுவதால் முதலீட்டிற்கான வசதிகளும் பெருகுகின்றன. முதலீட்டின் அளவு அதிகரிக்கும்போது வேலை வாய்ப்பின் அளவும்

அதிகரிக்கின்றது. ஆனால், இந்நிலை ஏற்பட உற்பத்தி உயரும்போது உற்பத்தியின் ஒரு பகுதியாவது முதலீடு செய்வதற்குப் பயன்படுத்தப்பட வேண்டும். பெருகிய உற்பத்தி முழுதும் நுகர்விற்காகப் பயன்படுத்தப்பட்டால், வேலை வாய்ப்புக்கள் அதிகரிப்பதற்கான முதலீடுகளைச் செய்வது முடியாததாகின்றது. தொழில் நுட்ப உற்பத்தி முறையின் மூலம் உற்பத்தியின் அளவு அதிகரிக்கும் போது, உற்பத்தியாளர்கள் மேலும் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கத்தை இழக்கக்கூடும். உற்பத்தி உயர்வால் அதிக வருவாய் பெறும் அவர்களுக்கு மேலும் அதிக வருவாய் பெற வேண்டுமென்ற நோக்கம் இல்லாமல் இருக்கலாம். முன்னேற்றமான உற்பத்தித் தொழில் நுட்பங்களைப் பின்பற்றுவதின் மூலம் உழைப்பின் தேவையானது குறைவடையும். இதனால் உழைப்பிற்கான ஊதிய வீதங்களும் குறைந்த அளவில் அளிக்கப்படும். இதன் விளைவாகத் தொழில் முயல்வோர் அதிக இலாபத்தைப் பெறுவார்கள். வருவாய் மறுபகிர்வில் ஏற்படுகின்ற மாற்றங்கள் இலாபத்திற்குச் சாதகமாகவும், கூலிக்குப் பாதகமாகவும் அமைகின்றன. இது பொருளாதார ரீதியில் ஆராயப்படும்போது நன்மைகளைத் தருவதாகவே இருக்கின்றது. சமுதாய, அரசியல் அடிப்படைகளில் ஆராயும்போது இந்நிலை பல தீமைகளையே விளைவிக்கும்.

## தீர்வுகள்

தொழில் நுட்ப முன்னேற்றத்தால் ஏற்படும் வேலையின்மையைத் தவிர்க்க மிக விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டும். விரைவான முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலமே எண்ணற்ற வேலை வாய்ப்புக்களைத் தோற்றுவிக்க முடியும். பொருளாதாரம் முன்னேற்றமடையும்போது தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் பெருகுகின்றன. தொழில் நுட்ப வளர்ச்சியால் ஏற்படக்கூடிய வேலையின்மையைத் தீர்க்க மேலும் உயர்வான பொருளாதார வளர்ச்சி வீதம் தேவைப்படுகின்றது.

இரண்டாவதாக, வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைப் புகுத்தும்போது கவனமாக இருத்தல் வேண்டும். வளர்ச்சியடைந்த நாடுகளின் தொழில் நுட்பத்தைப் பின்தங்கிய நாடுகளும் கைக்கொள்ளலாம். ஆனால், இத்தொழில் நுட்பம் வளர்ச்சிக் குன்றிய நாடுகளின் தேவைக்கு ஏற்ப பின்பற்றப்பட வேண்டும். முன்னேற்றமடைந்த நாடுகளில் உழைப்பைச் சிக்கனம் பிடிப்பது அவசியமாகின்றது. அந்நாடுகளில் அதிக மூலதனத்தையும், குறைந்த உழைப்பையும் உற்பத்தி நிலைகளில்

பயன்படுத்துவது பொருத்தமுடையது. ஏனெனில், வளர்ச்சி யடைந்த நாடுகளில் மக்கட்தொகை குறைவாகவே இருக்கின்றது. மூலதனத் திரட்சியும் பெருமளவில் ஏற்படுகின்றது. பின்தங்கிய நாடுகளின் தேவைகள் இதற்கு எதிரிடையாக உள்ளன. இந்நாடுகளில் வேலையின்மையிலும், மறைந்துள்ள வேலையின்மையிலும் அமைந்துள்ள உழைப்பாளர்கள் இருக்கின்றனர்கள்; ஆனால், மூலதனத் திரட்சி போதுமான அளவில் ஏற்படுவதில்லை. எனவே, இந்நாடுகள் உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளைப் பின்பற்ற வேண்டும். மூலதனத்தைச் சிக்கனம் செய்யும் வகையிலும் உற்பத்தி முறைகள் அமைய வேண்டும்.

பின்தங்கிய பொருளாதாரங்களைக் கொண்ட நாடுகள் தொழில் நுட்ப முன்னேற்றத்தைப் பெறுவதில் பல இடர்ப்பாடுகளைக் கொண்டுள்ளன. பின்தங்கிய நாடுகள் நீண்ட காலத்தில் மட்டுமே தொழில் நுட்ப முன்னேற்றத்தைப் பெற முடிகின்றது. முன்னேற்றமடைந்த நாடுகளிலும் இந்நிலையே திகழ்ந்தது எனக் கூறலாம். முன்னேற்றமடைந்த நாடுகளில் இன்று அமைந்திருக்கக்கூடிய தொழில் நுட்ப முன்னேற்றம் பல நூற்றுண்டுகளில் பெறப்பட்டதாகும். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றத்தைப் பெற அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. தொழில் நுட்ப அறிவு கொண்ட திறமையான உழைப்பாளர்களின் பணியும் அவசியமாகின்றது. புதிய தொழில் நுட்ப வளர்ச்சியைப் பெற ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். பின்தங்கிய நாடுகளில் ஆராய்ச்சிகளுக்காக அதிக நிதி ஒதுக்கப்படுவதில்லை. தனியார் துறையில் இவ்வித ஆராய்ச்சிகள் மிகவும் குறைந்த அளவிலேயே செய்யப்படுகின்றன. ஆகவே, அரசு ஆராய்ச்சிகளை மேற்கொள்ள முன்வர வேண்டும். ஆராய்ச்சித் திட்டங்களை மேற்கொள்ளத் தேவையான திறமை மிக்கவர்களைத் தெரிந்தெடுப்பதும் கடினமாக இருக்கின்றது. இவ்வாறு வேலையின்மைச் சிக்கலின் இயல்பு முன்னேற்றமடைந்த நாடுகளுக்கும், முன்னேற்றமடைந்துவரும் நாடுகளுக்கும் இடையே வேறுபடுகின்றது.

**வேலையின்மைக்கான காரணங்கள்.**

இந்தியாவில் வேலையின்மை பலவிதமான காரணங்களால் அமைந்திருக்கின்றது. அக்காரணங்களைப் பின்வருமாறு விளக்கிக் கூறலாம் :

**(1) விரைவான பொருளாதார முன்னேற்றம் இல்லாமை**

இன்றும் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி குறைந்த வேகத்திலேயே ஏற்பட்டு வருகின்றது. பெருகிவருகின்ற மக்கட்

தொகைக்கு வேலை வாய்ப்புக்களை அளிப்பது இதனால் கடின நிலையைத் தருகின்றது. இந்தியாவில் திட்டங்களை மேற்கொண்ட பிறகு படிப்படியாக வேலை வாய்ப்புக்களும் பெருகி வருகின்றன. ஆனால், வேலையின்மையின் அளவும் அதிகரித்து வருவது குறிப்பிடத் தக்கதாகும். திட்டங்களை நிறைவேற்றுவதின் மூலம் முன்னேற் றத்தைப் பெற்று வருகின்றோம். ஆனால், இம்முன்னேற்றத்தின் வேகமானது போதுமானதாக இருக்கவில்லை. உழைப்பாளர்களின் பெருக்க வீதமானது வேலை வாய்ப்புக்களின் பெருக்க வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. விரைவான மக்கட் பெருக்கமே உழைப்பின் அளிப்பு அதிகரித்துள்ளமைக்கு முக்கியக் காரண மாகும்.

இந்தியாவின் ஒவ்வொரு திட்டத்திலும் வேலையின்மையைத் தீர்ப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால், வேலை யின்மையின் அளவானது ஒவ்வொரு திட்டக் காலத்திலும் அதிகரித் திருப்பதை அறிய முடிகின்றது. வேலையின்மை தீர்க்கப்படாத சிக்கலாகவே அமைந்துள்ளது.

(2) விரைவான மக்கட்தொகைப் பெருக்கம்

இந்தியாவில் தாவும் பணவீக்கம் அமைந்துள்ளது போலவே, மக்கட்தொகைப் பெருக்கமும் தாவும் நிலையில் பெருகுகின்றது. சமீப காலத்தில் மக்கட் பெருக்கம் மிக விரைவான வேகத்தில் ஏற்பட்டமை குறிப்பிடத்தக்கது. நாடு விடுதலையடைந்த பிறகு மருத்துவ வசதிகளும், ஆரோக்கிய வசதிகளும் திட்டக் காலத்தில் பெருக்கப்பட்டன. இதனால் இறப்பு வீதம் பெருமளவிற்குக் குறைந்துவிட்டது. பொருளாதார முன்னேற்றமின்மையாலும், நாகரிக வளர்ச்சியின்மையாலும் பிறப்பு வீதம் குறிப்பிடத்தக்க அளவில் குறையவில்லை. விரைவான மக்கட்தொகைப் பெருக்கம் ஏற்பட்டமைக்கு இதுவே முக்கியக் காரணமாகும். திட்டக் காலத் தில் வேலை வாய்ப்புக்கள் பெருகினாலும், வேலையின்மையின் அளவும் அதிகரித்துக்கொண்டே வந்தது. இந்தியாவில் வேலையின்மை தோன்றியமைக்கான அடிப்படைக் காரணம் விரைவான மக்கட் பெருக்கமேயாகும். மக்கட் பெருக்கமே வேலையின்மைக்கான ஒரே காரணம் எனக் கூறயியலாது; வேலையின்மை தோன்றியுள்ளதற் கான பல முக்கியக் காரணங்களில் மக்கட் பெருக்கமும் ஒன்றாகும்.

(3) வேளாண்மையல்லாத பிற துறைகளில் வேலைவாய்ப்பின்மை

வேறு வேலைவாய்ப்புக்கள் பெருகாத காரணத்தால் பெரும் பாலானவர்களின் முக்கியத் தொழிலாக அமைந்திருப்பது வேளாண்மையேயாகும். இந்தியாவின் மக்கட்தொகையில் சுமார்

70 சதவீதத்தினர் வேளாண்மையிலேயே ஈடுபட்டுள்ளார்கள். வேளாண்மையைச் சார்ந்து பலரும் அமைந்துள்ளனர். இதனால் மறைந்துள்ள வேலையின்மையும் ஏற்பட்டுள்ளது. சுமார் 30 சதவீத வேளாண்மை மக்கட்தொகை மறைந்துள்ள வேலையின்மையில் இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. வேளாண்மைச் சாகுபடிகளில் தேவைக்கு அதிகமான உழைப்பாளர்கள் ஈடுபட்டுள்ளனர். பெருகும் மக்கட்தொகை வேளாண்மையில் ஈடுபடுவது இலாபகரமாக அமைவதில்லை. ஏனெனில், தனியொருவருக்கான நிலத்தின் அளவு இதனால் குறைவடைகின்றது. நிலத்தின் மீதான மக்கட்தொகை பெருகுவது வேலையின்மையையும், மறைந்துள்ள வேலையின்மையையும் தோற்றுவிக்கின்றது. நாளுக்கு நாள் இவ்வேலையின்மையின் அளவு பெருகிக்கொண்டே போகிறது. வேளாண்மை தவிர பிற துறைகளின் முன்னேற்றமும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் வகையில் அமைந்திருக்கவில்லை. கிராம மக்களின் வருவாயை உயர்த்த உதவும் தொழில்களும் கிராமங்களில் அமைந்திருப்பதில்லை. பால் பண்ணைகள், கோழிப் பண்ணைகள், தேனீ வளர்ப்பு போன்றவை வளர்ச்சியடைந்த நாடுகளின் கிராமப் பொருளாதாரத்தில் அமைந்துள்ளன. பின்தங்கிய நாடுகளில் இச்சிறிய தொழில்களும்கூட கிராமங்களில் சிறப்பாக அமைந்திருப்பதில்லை.

இந்திய வேளாண்மை பின்தங்கிய நிலையிலேயே உள்ளமைக்கு இவையே காரணமாகும். முன்னேற்றமடையாத உற்பத்தி முறைகளும் வேளாண்மைச் சாகுபடியில் பின்பற்றப்படுகின்றன. பின்தங்கிய பொருளாதாரத்தின் வேளாண்மைத் துறை அதிக அளவு வேலை வாய்ப்பை அளிக்கக் கூடியதேயாகும். ஆனால், அது எந்த அளவிற்கு வேண்டுமென்றாலும் வேலைவாய்ப்பைத் தரக்கூடியது எனக் கருத முடியாது.

## (4) வேளாண்மை பருவகாலத் தொழிலாக இருக்கும் தன்மை

ஆண்டொன்றிற்குச் சில மாதங்களில் மட்டுமே வேளாண்மை உற்பத்தி நடவடிக்கைகள் செய்யப்படுகின்றன. வேளாண்மை ஒரு பருவகாலத் தொழிலாக உள்ளமையே இதற்குக் காரணமாகும். தட்ப வெப்ப நிலைகள், மழைப் பொழிவு ஆகியவற்றிற்கேற்ப வேளாண்மையில் சாகுபடிகள் மேற்கொள்ளப்படுகின்றன. தொழில் துறையைப் போலன்றி வேளாண்மை குறைந்த காலத்திற்கு மட்டுமே வேலை வாய்ப்பை அளிப்பதாகும். பலவிதத் திட்டங்களின் மூலம் நீர்ப்பாசன வசதிகள் பெருகியிருந்தாலும், மழையை நம்பிச் சாகுபடியைச் செய்யக்கூடிய நிலையே இன்றும் நீடிக்கின்றது. பலநோக்கு நீர்ப்பாசனத் திட்டங்கள், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவற்றை அரசு நிறைவேற்றி

வருகின்றது. இதன் மூலம் வேளாண்மையில் அமைந்துள்ள பருவ கால வேலையின்மையை ஓரளவு தவிர்க்கலாம். அணைகளைக் கட்டியும், கிணறுகளைத் தோண்டியும், குழாய்க் கிணறுகளை அமைத்தும் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இதன்மூலம் இருபோக, முப்போகச் சாகுபடிகளை வேளாண்மையில் மேற்கொள்ள முடியும் ஆனால், இயற்கையில் தட்ப வெப்ப நிலைகள் மாறுபடுகின்ற காரணத்தால், வேளாண்மையில் பருவகால வேலையின்மை தொடர்ந்து நீடிக்கின்றது.

### (5) கூட்டுக் குடும்ப முறை

இந்தியக் கிராமச் சமுதாயங்களில் அமைந்திருக்கக்கூடிய கூட்டுக் குடும்ப முறையால் மறைந்துள்ள வேலையின்மை ஏற்பட்டுள்ளது. குடும்ப அங்கத்தினர்களின் எண்ணிக்கை பெருகும் போது, வேளாண்மையைத் தவிர பிற துறைகளில் வேலை வாய்ப்பைப் பெற அவர்கள் விரும்புவதில்லை மேலும், பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் கிடைக்காமையும் அவர்களை வேளாண்மையிலேயே ஈடுபடுமாறு செய்கின்றது. வேளாண்மை தவிர பிற வேலைகளில் ஈடுபடுவதற்குத் தேவையான திறமையும் அவர்களிடம் இருப்பதில்லை. வழிவழியாக ஒரு குடும்பத்தினர் ஒரே தொழிலைச் செய்து வருகின்ற நிலையும் அமைந்திருக்கின்றது. கூட்டுக் குடும்ப முறை மக்களின் வாழ்வோடு இணைந்த ஒன்றாகும். மக்களின் எழுத்தறிவில்லாத நிலையும், பழைமை நோக்கும் கூட்டுக் குடும்ப முறையை ஊக்குவிக்கின்றன. சமுதாய மாற்றங்களை ஏற்படுத்துவதின் மூலமும், பெரும்பாலான மக்களிடையே சிறப்பான புதிய கண்ணோட்டத்தைத் தோற்றுவிப்பதின் மூலமும் கூட்டுக் குடும்ப முறையை ஓரளவு தவிர்க்கலாம்.

### (6) தொழில் துறையின் குறைந்த வேக வளர்ச்சி

இந்தியாவில் தொழில் முன்னேற்றம் விரைவாக ஏற்படுகின்றது எனக் கூறமுடியாது. தொழில் உழைப்பாளர்கள் இதனால் குறைந்த அளவு வேலை வாய்ப்புக்களையே பெறுகின்றார்கள். தொழில் துறையின் வளர்ச்சியானது பெருகிவரும் உழைப்பாளர்கள் அனைவருக்கும் வேலை வாய்ப்புக்களை அளிப்பதாக அமைந்திருக்கவில்லை எனவே, வெளிப்படையாகத் தெரிகின்ற வேலையின்மையின் அளவும் இந்தியாவில் அதிகரித்து வருகின்றது. தொழில் துறையின் குறைந்த வேக வளர்ச்சியும் ஒரு வகையில் வேளாண்மை வளர்ச்சிக் குன்றிய நிலையில் உள்ளமைக்கான காரணங்களில் ஒன்றாகும். ஏனெனில், தொழில் துறைக்குத் தேவையான சில கச்சாப் பொருட்கள் வேளாண்மைத் துறையிலேயே உற்பத்தி செய்யப்படுகின்றன. தொழில் முன்னேற்றம் சிறப்பாக இருக்கும்

போதுதான் கச்சாப் பொருட்களுக்கான தேவையும் அதிகரிக்கும். தேவைப் பெருக்கத்தால் வேளாண்மைக் கச்சாப் பொருட்களின் விலைகள் உயர்வடையும். விலைகளின் உயர்வால் இலாப நோக்குக் கருதி விவசாயிகள் அதிக உற்பத்தியில் ஈடுபடுவார்கள். இவ்வாறு வேளாண்மையும், தொழில் துறையும் வளர்ச்சியில் ஒன்றையொன்று சார்ந்து இருக்கின்றன. சமீப காலமாகத் தொழில் உற்பத்தியின் வளர்ச்சி வீதமும் சிறப்பான அளவில் உயர்ந்திருக்கவில்லை என்றே கூற வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களைக் கைக்கொண்ட பிறகு அந்நியச் செலாவணிச் சிக்கல் ஏற்பட்டது. பல வகைப்பட்ட இறக்குமதிக் கட்டுப்பாடுகளும் அரசினால் விதிக்கப்பட்டன. அவசியம் குறைந்த பொருட்களின் மீது மட்டுமே இவ்வித இறக்குமதிக் கட்டுப்பாடுகள் பின்பற்றப்பட்டன என்று கூற இயலாது. தொழில் முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய இயந்திரங்கள், கருவிகள், கச்சாப் பொருட்கள், பிற உற்பத்திச் சாதனப் பொருட்கள் ஆகியவற்றின்மீதும் ஓரளவு இறக்குமதிக் கட்டுப்பாடுகள் கொண்டுவரப்பட்டன. ஆகவே தொழில் உற்பத்திப் பெருக்கத்தின் வீதமானது சிறப்பான உயர்வைக் எட்டவில்லை.

தொழில் முன்னேற்றத்தின் அளவு உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்புக்களைப் பெருக்கித் தருவதாக இல்லை. மேலும், இன்றைய மேம்பாடடைந்துள்ள நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறும்போது ஏற்பட்ட விரைவான தொழில் வளர்ச்சி வீதம் பின் தங்கிய நாடுகளில் அமைந்திருக்கவில்லை. இங்கிலாந்து, அமெரிக்கா, சோவியத் ரஷ்யா போன்ற நாடுகளில் தொழில் முன்னேற்றம் குறுகிய காலத்தில் பெறப்பட்டது. தவிர, தொழில் முன்னேற்றக் காலத்தில் இந்நாடுகள் பல கண்டுபிடிப்புகளைச் செய்வதும் அவசியமானதாக இருந்தது. ஆனால், இப்போதுள்ள வளர்ச்சியடைந்து வரும் நாடுகள் எவ்விதக் கண்டுபிடிப்புக்களையும் செய்யாமலேயே குறுகிய காலத்தில் தொழில் முன்னேற்றத்தைப் பெற வாய்ப்புக்கள் அமைந்துள்ளன. முன்னேற்றமடைந்த பொருளாதாரங்களின் தொழில் நுட்ப உற்பத்தி முறைகளை இன்று வளர்ச்சிக் குன்றிய நாடுகள் அப்படியே பின்பற்றலாம் எனினும், இந்தியா போன்ற மேம்பாடடைந்துவரும் நாடுகளில் தொழில் வளர்ச்சி வீதமானது உயர்வாக அமைந்திருக்கவில்லை. இவ்வகையில் தொழில் துறையின் குறைந்த வேக வளர்ச்சியும் வேலையின்மைக்கானக் காரணமாகிறது.

(7) இந்தியப் பொருளாதாரத்தின் மந்த நிலை

வளர்ச்சியடைந்துவரும் இந்தியப் பொருளாதாரத்தில் வாணிபச் சுழலும் ஓரளவு செல்வாக்கைக் கொண்டுள்ளது. வாணிபச் சுழலும் ஓரளவு செல்வாக்கினால் இந்தியப் பொருளா

தாரத்தில் செழுமை நிலை (Prosperity), பூரிப்பு நிலை (Boom), பின்னிறக்க நிலை (Recession), மந்த நிலை (Depression), மீட்சி நிலை (Revival) போன்றவை தோன்றுகின்றன. இந்நிலைகளுக்கேற்ப பலவகைப்பட்ட தொழில்களும் வாணிபச் சுழலினால் பாதிக்கப்படுகின்றன. பொருளாதாரப் பின்னிறக்க நிலை, மந்த நிலை, வீழ்ச்சி நிலை ஆகியவற்றில் பல உற்பத்திக் காரணிகளும் வேலையிழக்கின்றன. இவ்வாறு வெவ்வேறு வகைப்பட்ட 'வாணிபச்சுழலின் முகங்களால்' (Phases of Trade Cycle) வேளாண்மைத் துறை பெரிதும் பாதிக்கப்படுவதில்லை. வாணிபச் சுழலால் தொழில் துறை பாதிக்கப்படுகின்றது. பொருளாதாரச் செழுமை நிலை, பூரிப்பு நிலை மீட்சி நிலை ஆகியவற்றில் வேலை வாய்ப்புக்கள் (தொழில் துறையில்) பெருகுகின்றன. இந்தியப் பொருளாதாரத்தில் 1967-68-இல் ஏற்பட்ட பொருளாதாரப் பின்னிறக்கத்தால் பல தொழில்களும் பாதிக்கப்பட்டன. வளர்ச்சியடைந்த நாடுகளில் மட்டுமே வாணிபச் சுழலால் ஏற்படக்கூடிய 'சுழற்சியுடைய வேலையின்மை' அதிக அளவிற்குத் தோன்றுகின்றது. ஆயினும், இன்றைய வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரங்களிலும் ஓரளவு 'சுழற்சியுடைய வேலையின்மை' ஏற்படக்கூடும். ஏனெனில், இப்பொருளாதாரங்களில் தொழில் முன்னேற்றமும் கணிசமான அளவில் பெறப்பட்டுள்ளது.

(8) உழைப்பின் பெயர்ச்சியின்மை

இந்திய உழைப்பாளர்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பெயர்ந்து சென்று தங்கள் உழைப்பைத் தர முன்வருவதில்லை. அவர்கள் தங்களின் குடும்பத்தாருடனேயே வசிக்க விரும்புகின்றார்கள். இந்தியச் சமுதாய அமைப்பும், மக்களுடைய பின் தங்கிய வாழ்க்கையும், பழக்க வழக்கங்களும் உழைப்பைப் பெயர்ச்சியில்லாத காரணியாக்கி விடுகின்றன. மொழி வேறுபாடு, மத வேறுபாடு, இன வேறுபாடு, சாதி வேறுபாடு ஆகியவற்றாலும் இந்தியாவில் உழைப்பு பெயர்ச்சியில்லாததாகின்றது. ஊதியங்கள் அதிக அளவில் கிடைக்கும்போது மட்டுமே உழைப்பு குறைந்த அளவிற்கு பெயர்ச்சியடைகின்றது. உழைப்பு குறைந்த அளவே பெயர்ச்சியுடைய காரணியாக இருப்பதால், வேலை வாய்ப்புக்கள் தோன்றினாலும் அவை சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை.

(9) அமைப்பு முறை மாற்றங்களும், தொழில் நுட்ப மாற்றங்களும்

கடந்த இருபது ஆண்டுக் காலத்தில் கணிசமான அளவில் பொருளாதார அமைப்புக்களில் மாற்றங்கள் தோன்றியுள்ளன. தொழில் நுட்ப உற்பத்தி முறைகளிலும் முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. உற்பத்தி முறை மாற்றங்களால் பல சிறு தொழில்களும், கைவினைத் தொழில்களும் அழிவுற்றன. பெரிய தொழில்களின்

தோற்றத்தால் இத்தொழில்கள் நசித்து விட்டன. முன்னேற்ற மடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைக் கொண்ட பெரிய தொழில்களோடு சிறு தொழில்கள் போட்டியிட முடியவில்லை. பெரிய தொழில்கள் குறைந்த செலவில் தரமான பொருட்களை உற்பத்தி செய்தன. குறைந்த விலையிலும் இவற்றின் பொருட்கள் விற்பனை செய்யப்பட்டன. பாரம்பரியமாக அமைந்திருந்த சிறு தொழில்களால் நவீன உற்பத்தி முறைகளைக் கொண்ட பெரிய தொழில்களோடு போட்டியிட இயலவில்லை. எனவே, அவை அழிந்து விட்டன. இதன் காரணமாகவும் வேலையின்மைச் சிக்கல் நம் நாட்டில் தோன்றியது. கூட்டுக் குடும்ப முறைகளும் ஓரளவு குறைந்து வருகின்றன. சிறிய நிலவுடைமைகளைக் கொண்ட விவசாயிகளும் சிறப்பாக வேளாண்மை நடவடிக்கைகளில் ஈடுபட முடியாமையால் வேளாண்மைத் துறையைவிட்டு வெளியேறுகின்றனர். இவைகளும் உழைப்பின் அளிப்பு சமீப காலத்தில் அதிகரித்துள்ளமைக்குக் காரணங்களாகின்றன. தேவையைக் காட்டிலும் உழைப்பின் அளிப்பு அதிகமாக உள்ளமையே வேலையின்மைச் சிக்கலைத் தோற்றுவிக்கின்றது. உழைப்புச் சந்தையில் உழைப்பின் அளிப்பு பலவித காரணங்களால் அதிகரித்துள்ளது. ஆனால், பொருளாதார அமைப்பு முறைகளின் மாற்றங்களாலும், தொழில் நுட்ப முன்னேற்றங்களாலும் உழைப்பின் தேவைக்கும், அளிப்பிற்கும் இடையே உள்ள மிகுதியான இடைவெளி வேலையின்மையை ஏற்படுத்துகின்றது.

## (10) இந்தியப் பல்கலைக்கழகங்களில் பட்டம் பெற்றவர்களின் பெருக்கம்

சமீப காலமாக இந்தியப் பொருளாதாரத்தில் படித்தவர்களிடையே வேலையின்மை அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இந்தியப் பல்கலைக்கழகங்களில் படித்து, பட்டம் பெற்று வருபவர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் உயர்ந்து வருகின்றது. இந்தியாவில் தொழில் நுட்பக் கல்விக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கவில்லை. பட்டதாரிகள் எவ்வித மான பணிகளையும் குறைந்த ஊதியத்திற்குக்கூட செய்ய வேண்டுமெனச் சொல்லப்படுகின்றது. ஆனால், குறைந்த ஊதியத்தைத் தரக்கூடிய வேலைகளும்கூட கிடைப்பது கடினமானதாக இருக்கின்றது. ஒரு சில பட்டதாரிகள் சமுதாயச் செல்வாக்கு மிக்க, உயர்வான ஊதியத்தைத் தரக்கூடிய வேலைகளைப் பெறவே விரும்புகின்றனர். பள்ளி இறுதிக் கல்வி, இளங்கலைக் கல்வி, முதுகலைக் கல்வி ஆகியவற்றை முடிப்பவர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றது. இவர்களின் எண்ணிக்கை பெருகுவதுபோல, இவர்களுக்கான வேலைவாய்ப்புக்களின்

எண்ணிக்கை பெருகவில்லை. பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றத்தைப் பெருமையே படித்தவர்களிடையே வேலையின்மை உள்ளமைக்கான காரணமாகும்.

### (11) தொழில் துறை உற்பத்திச் செலவையும், விலையையும் குறைக்க முடியாத நிலை

சமீப காலத்தில் 'விற்பனையாளர்களின் சந்தை' (Sellers' Market) 'வாங்குபவர்களின் சந்தையாக' (Buyers' Market) மாறியுள்ளது. எனவே, சந்தையில் தொழிற் பொருட்களின் தேவையைப் பெருக்க விலைகள் குறைக்கப்பட வேண்டும். பெரும்பாலான தொழில் முதலாளிகள் இரண்டாவது உலகப் போர்க் காலத்திலும், போர் முடிவடைந்த பிறகும் தங்கள் மூலதனத்தைப் பல தொழில்களிலும் முதலீடு செய்தார்கள். அப்பொழுது இயந்திரங்கள், கருவிகள், பிற உற்பத்திச் சாதனங்கள் ஆகியவற்றின் விலைகள் உயர்வாக இருந்தன. இதன் காரணமாக முதலீட்டிற்கான செலவும் உயர்ந்த நிலையில் அமைந்திருந்தது. இந்நிலைகளால் உற்பத்திச் செலவு அதிகரித்திருக்கின்றது. ஆகவே, தொழிற் பொருட்களைக் குறைந்த விலையில் விற்பது கடின நிலையைக் கொண்டுள்ளது. உயர்ந்த விலையால் விற்பனை பாதிக்கப்பட்டு பொருட்கள் தேங்கிவிடுகின்றன. மேலும், உற்பத்தியைப் பெருக்குவது அவசியமற்றதால், சில உற்பத்திக் காரணிகள் வேலையிழக்கின்றன ; உழைப்பும் அதில் ஒன்றாகும்.

### (12) தொழிற் சீரமைப்பு (Rationalisation)

சில தொழில்கள் சமீப காலமாகச் சீரமைப்பு முறைகளில் ஈடுபட்டு வருகின்றன. தொழில்களை நவீனப்படுத்தவும், சீரமைப்புச் செய்யவும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. உற்பத்திச் செலவைக் குறைக்கவே இம்முறைகள் பின்பற்றப் படுகின்றன. உற்பத்திச் செலவைக் குறைப்பதின் மூலம் விலையைக் குறைத்து விற்பனையைக் கூட்டலாம். விற்பனை பெருகுவதால், உற்பத்தி பேரளவில் செய்யப்பட்டு இலாபத்தின் அளவும் அதிகரிக்கும். உற்பத்திக் காரணிகளை மிகவும் சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்தும் நிலையே தொழிற் சீரமைப்பு ஆகும். தொழிற் சீரமைப்பு பல நன்மைகளை உற்பத்தியாளர்களுக்கும், நுகர்வோருக்கும் அளிக்கின்றது. ஆனால், உழைப்பாளர்களில் சிலர் சீரமைப்பினால் வேலையிழக்கின்றார்கள். சீரமைப்பின் போது தொழில் புதுமைப்படுத்தப்படுகிறது. புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைப் புகுத்துவதே வேலையின்மைக்குக் காரணமாகிறது.

## (13) வேலை நீக்கம்

போர்க்காலங்களில் தோற்றுவிக்கப்பட்ட சில துறைகளில் பணியாற்றுபவர்கள் வேலைநீக்கம் செய்யப்படுகின்றனர்கள். தற்காலிகமாக நியமிக்கப்பட்ட பணியாளர்கள் தனியார் துறையிலிருந்தும், பொதுத் துறையிலிருந்தும் வேலையிலிருந்து நீக்கப்படலாம். போர்க்காலங்களில் உற்பத்தியைப் பெருக்கவும், நுகர்வைக் குறைக்கவும், கள்ளச் சந்தைகளைக் கட்டுப்படுத்தவும் அரசு பல கட்டுப்பாடுகளைக் கொண்டு வருகின்றது. போர் முடிவடைந்த பிறகு இக்கட்டுப்பாடுகள் நீக்கப்படுகின்றன; அல்லது தளர்த்தப் படுகின்றன. உதாரணமாக, போர்க்காலத்தில் இந்தியாவில் உணவுப் பொருட்கள், துணி, சர்க்கரை போன்றவற்றின் மீது கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருந்தது. போர் முடிவடைந்த பிறகு இக் கட்டுபாடு நீக்கப்பெற்றது. போர்க்காலங்களில் உற்பத்தி நடவடிக்கைகள் விரைவு படுத்தப்படுகின்றன. எனவே, அப்பொழுது வேலை வாய்ப்புக்களும் பெருகுகின்றன. போர் முடிவடைந்தபின் உற்பத்தி நிலைகள் தீவிரமாகச் செயல்படுவதில்லை. ஆகவே, பல உழைப்பாளர்களும் வேலை வாய்ப்பை இழக்கின்றனர்கள். பொருளாதாரத்தின் சில துறைகளில் வேலை வாய்ப்புக்கள் தோன்றும்போது, வேறு சில துறைகளில் உழைப்பாளர்கள் வேலை நீக்கம் செய்யப்படுவதால் வேலையின்மைச் சிக்கலைத் தீர்ப்பது கடினமாகின்றது.

### வேலையின்மையும் திட்டங்களும்

அரசு தீர்க்க வேண்டிய சில முக்கியச் சிக்கல்களில் வேலையின்மையும் ஒன்றாகும். இச்சிக்கலுக்குத் தீர்வு காண்பது கடினமானதாக இருக்கின்றது. பொருளாதாரத்தின் வளர்ச்சியடையாத நிலையே வேலையின்மைக்கான காரணமாகின்றது. இந்தியாவில் உழைப்பாளர்களின் எண்ணிக்கை வீதம் பெருகுவதுபோல வேலை வாய்ப்புக்களின் எண்ணிக்கை வீதம் பெருகுவதில்லை. 1951-ஆம் ஆண்டிற்கும் 1961-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் உழைப்பாளர்களின் எண்ணிக்கை 21 மில்லியன் என்ற அளவிற்கு அதிகரித்தது. இதே காலத்தில் வேளாண்மைத் துறையில் வேலை வாய்ப்புக்கள் 7 மில்லியன் பேர்களுக்கும், வேளாண்மையல்லாத பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் 12 மில்லியன் பேர்களுக்கும் ஏற்பட்டன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் உழைப்பாளர்களின் தொகை 17 மில்லியன் என்ற அளவிற்கு உயர்வடைந்தது. இத்திட்டக் காலத்தில் 4 மில்லியன் பேர்கள் வேளாண்மைத் துறையிலும், 10.5 மில்லியன் பேர்கள் வேளாண்மையல்லாத பிற துறைகளிலும் வேலை வாய்ப்பைப் பெற்றனர்கள். மற்றொரு மதிப்பீட்டின்படி, 1966-67-இல் 10 முதல் 12 மில்லியன்

பேர்கள் வேலையின்மையைக் கொண்டிருப்பார்கள் எனக் கருதப்பட்டது.

இந்தியாவில் வேலையின்மையின் அளவை உறுதியாகக் காட்டுகின்ற புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லை. இந்தியாவில் முழுநேர வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை 10 முதல் 15 மில்லியன் வரையும், பகுதி நேர வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை 100 முதல் 170 மில்லியன் வரையும் இருக்கலாமெனக் கணக்கிடப் பட்டுள்ளது. வேலை தேடித்தரும் நிறுவனங்களின் பதிவுகளின்படி பள்ளியிறுதி வகுப்புவரை படித்தவர்கள் 8.75 இலட்சமும், பட்டம் பெற்றவர்கள் 1.86 இலட்சமும், பொறியியற் கல்வி பெற்றவர்கள் 53,118 பேர்களும் ஜூன் 1969-இல் வேலையின்றி இருந்தார்கள். இதைத்தவிர, வேலை தேடித்தரும் நிறுவனங்களில் பதிவு செய்யாதவர்களின் எண்ணிக்கை இதைக்காட்டிலும் பல மடங்காக இருக்கின்றது. 1951-ஆம் ஆண்டில் மக்கட்தொகையில் 20 சதவீதத்தினர் வேலையின்றி இருந்தனர் என பி. கே. வாட்டல் (P.K. Wattol) என்பவர் கணக்கிட்டார். ஆனால், 'தேசிய மாதிரிக் கணக்கெடுப்பின்படி' (National Sample Survey) மக்கட்தொகையில் 6 முதல் 7 சதவீதத்தினரே 1951-ஆம் ஆண்டில் வேலையில்லாமல் இருந்ததாகக் கூறப்பட்டது.

நம்முடைய திட்டக் குழுவின் மதிப்பீட்டின்படி, நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை 35 மில்லியன் என்ற அளவிற்கு உயரும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் வேலையில்லாதவர்கள் 12 மில்லியனாகவும், புதிதாக வேலையின்மையால் பாதிக்கப்படுபவர்கள் 23 மில்லியனாகவும் இருப்பார்கள் என மதிப்பிடப் பட்டது. நான்காவது திட்டக் காலத்தில் வேளாண்மையல்லாத பிற துறைகளில் 15 முதல் 16 மில்லியன் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்குமெனக் கணக்கிடப் பெற்றது.

மிகவும் அவசியமாகவும், அவசரமாகவும் தீர்க்கப்படவேண்டியது வேலையின்மைச் சிக்கலாகும். இச்சிக்கல் தீர்க்கப்படாவிட்டால் பொருளாதார முன்னேற்றத்தில் பலவிதத் தடைகளும் தோன்றக்கூடும். இந்நிலையை உணர்ந்தமையாலேயே இந்திய அரசு திட்டங்களின் மூலம் வேலையின்மையைத் தீர்க்க நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்கப் பொருளாதாரம் விரிவுபடுத்தப்பட்டு வேலை வாய்ப்புக்கள் பெருக்கப்படுகின்றன. வேலையின்மையைத் தீர்ப்பது நம்முடைய திட்டங்களின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாக உள்ளது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் இதைப்பற்றி நன்கு அறிவுறுத்துகின்றது.

"நாட்டின் மனிதச் சக்தியை நன்கு பயன்படுத்துவது திட்டத்தின் முக்கிய நோக்கமாகும்; மனித உழைப்பை நன்கு பயன்படுத்த வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதும் இன்றியமையாததாகும்." இந்தியத் திட்டங்கள் அனைத்தும் வேலையில்லாதவர்களுக்கு இலாபகரமான வேலை வாய்ப்புக்களை அளிக்க முயலுகின்றன.

இந்தியாவின் திட்டங்கள் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க வில்லை என்றாலும்கூட, வேலையின்மையைக் குறைக்க உதவியுள்ளன என்று கூறலாம். மக்கட்தொகைப் பெருக்கம், கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு உழைப்பாளர்கள் குடிபெயர்தல், கல்வி முன்னேற்றம் போன்றவையே வேலையின்மையைத் தீவிரப்படுத்தியுள்ளன. வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தும்போது வேலையின்மைச் சிக்கல் மூன்று நிலைகளைக் கொண்டது என்பதை உணரவேண்டும்.

(i) தற்பொழுது கிராமப் புறங்களிலும், நகர்ப் புறங்களிலும் வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்கப் பட வேண்டும்;

(ii) மக்கட்தொகைப் பெருக்கத்தால் புதிதாக அதிகரிக்கின்ற உழைப்பாளர்களுக்கும் வேலை வாய்ப்புக்களை அளிப்பது அவசிய மானது;

(iii) வேளாண்மையில் மறைந்துள்ள வேலையின்மையில் இருப்பவர்களுக்கும், கிராமப் புறங்களிலும் நகர்ப் புறங்களிலும் இல்லத் தொழில்களில் வேலை குறைவாக உள்ளவர்களுக்கும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கித் தருவது இன்றியமையாதது.

### முதல் ஐந்தாண்டுத் திட்டம்

முதல் திட்டம் பரிசோதனை நிலையையே கொண்டிருந்தது. இத்திட்டம் வேலையின்மைக்கான காரணங்களையும், அதற்கான தீர்வுகளையும் சிறப்பாக ஆராயவில்லை. எனினும், 1953-ஆம் ஆண்டின் இறுதியில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்கான 11 அம்சத் திட்டமொன்றை திட்டக்குழு வெளியிட்டது. 11 அம்சத் திட்டத்தில் பின்வரும் வழிமுறைகள் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்காகக் கொடுக்கப்பட்டிருந்தன:

(1) வேலை வாய்ப்புக்களை அதிகரிக்க நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்களை நிறைவேற்றுகின்ற இடங்களில் பயிற்சி முகாம்களை ஏற்படுத்துதல்.

(2) சிறிய தொழில்களிலும், வாணிபத்திலும் ஈடுபடுபவர் களுக்கு (ஒருவருக்கோ அல்லது ஒரு சிலருக்கோ) சிறப்பான உதவிகளை அளித்தல்.

(3) உழைப்புப் பற்றுக்குறை உள்ள துறைகளில் பயிற்சி வசதிகளை விரிவாக்குதல்.

(4) சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றின் வளர்ச்சியை ஊக்குவிக்க அரசு அவற்றின் உற்பத்திப் பொருட்களை வாங்குதல்.

(5) நகரங்களிலும், கிராமங்களிலும் பள்ளிகளின் எண்ணிக்கையையும், ஆசிரியர்களுடைய எண்ணிக்கையையும் அதிகரித்தல; பள்ளிகளைத் தொடங்க அரசே நடவடிக்கைகளை எடுத்தல் அல்லது பள்ளிகளைத் தொடங்க அரசு ஆதரவளித்தல்.

(6) அதிக வேலை வாய்ப்புக்களைப் பெருக்க வாய்ப்புள்ளமையால் 'தேசிய விரிவாக்கப் பணியை' (National Extension Service) விரைவாகப் பரப்புதல்.

(7) சாலைப் போக்குவரத்தை முன்னேற்றமடையச் செய்தல்.

(8) சேரி ஒழிப்புத் திட்டங்களை நிறைவேற்றுதல்; நகர்ப்புறங்களில் குறைந்த வருவாய் பெறுபவர்களுக்கு வீடுகளைக் கட்டித் தருதல்.

(9) தனியார் நடவடிக்கைகளை ஊக்குவித்தல்.

(10) சிறப்பான பொருளாதார அடிப்படையைப் பெற திட்டமிட்டு உதவிகளை அளித்தல்.

(11) வேலை வாய்ப்புக்களைத் தோற்றுவிக்கக்கூடிய திட்டங்களுக்கு முக்கியத்துவம் தருதல்; முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை அதற்கேற்ப மாற்றியமைத்தல்.

முதல் திட்டம் வேலையின்மைச் சிக்கலை நேரடியாகத் தீர்ப்பதில் குறைந்த அளவு வெற்றியை மட்டுமே பெற்றது. முதல் திட்டக் காலத்தில் மொத்த முதலீட்டின் அளவு அதிகமாக அமைந்திருக்கவில்லை. தேவையான அளவிற்குக் குறைவாகவே மூலதனத் திரட்சி ஏற்பட்டது இதன் காரணமாக 11 அம்சத் திட்டத்தைச் சிறப்பாக நிறைவேற்ற முடியவில்லை. எனவே, முதல் திட்டக் காலத்தில் வேலை வாய்ப்புக்களின் பெருக்க வீதம் உழைப்பாளர்களின் பெருக்க வீதத்தைவிட மிகவும் குறைவாகவே இருந்தது.

முதல் திட்டம் தொடங்கப்பட்டபோது வேலையின்மைச் சிக்கல் தீவிரமானதாக இருக்கவில்லை. இரண்டாவது உலகப் போர் ஓரளவு வேலையின்மையை ஒரு பெரிய சிக்கலாக உருவா

காமல் தடுத்தது. போர் முடிந்து சில காலம் வரை வேலை யின்மை பெருமளவிற்குத் தோன்றியிருக்கவில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் இடைக்காலத்திலேயே வேலையின்மை தீவிரத் தன்மை கொண்டதாக மாறியது. இந்திய-பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு இந்தியாவில் மக்கட்தொகையின் அடர்த்தி மிகுதியடைந்தது.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் வேலை வாய்ப்புக்களை அதிகரிக்கப் பின்வரும் வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டுமெனக் குறிப் பிட்டது:

### 1. சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் ஊக்குவித்தல்

சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் வேலை வாய்ப் புக்களைப் பெருக்கக் கூடியவைகளாகும். குடிசைத் தொழில்கள் பெருமளவு உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்கக் கூடியவை. இவற்றைத் தொடங்குவதற்கான மூலதனமும் குறைந்த அளவிலேயே தேவைப்படுகின்றது. குறைந்த மூலதனத் தைக் கொண்டு பலருக்கும் வேலை வாய்ப்புக்களை அளிக்கச் சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் ஏற்றவைகளாகும்.

### 2. பொதுவான உற்பத்தித் திட்டம்

முதல் திட்டத்தில் பொதுவான உற்பத்தித் திட்டம் ஒன்றும் தொடங்கப் பெற்றது. இவ்வுற்பத்தித் திட்டத்தில் பின்வரும் இயல்புகள் அமைந்திருந்தன : (i) சிறிய தொழில்களையும், பெரிய தொழில்களையும் வளர்க்க உதவுவதோடு, சில பொருட்களின் உற்பத்தியை சிறிய தொழில்களுக்கே ஒதுக்குவது ; (ii) பேரளவு உற்பத்தித் தொழிலின் உற்பத்தித்திறனைப் பெருக்க அரசு அனு மதிக்காமை ; (iii) பேரளவுத் தொழில்களின் உற்பத்திப் பொருட் களின்மீது ஆயத்தீர்வை விதித்தல் ; (iv) சிறிய தொழில்களுக்கு நிதியுதவி அளிப்பதோடு கச்சாப் பொருட்கள், கருவிகள், தொழில் நுட்ப ஆலோசனைகள் ஆகியவற்றை அளித்தல்.

### 3. தொழில் நுட்ப வளர்ச்சியால் ஏற்படும் வேலையின்மையைத் தவிர்த்தல்

முதல் ஐந்தாண்டுத் திட்டம் முன்னேற்றமடைந்த தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைப் பயன்படுத்துவதால் தோன்றக்கூடிய வேலையின்மை பற்றியும் குறிப்பிட்டது. தொழில் நுட்ப மாற்றங் களால் அதிக அளவில் வேலையின்மை ஏற்படுமென இத்திட்டம் அறிந்திருந்தது. இவ்வகை வேலையின்மையைக் குறைப்பதற்கான சில நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன.

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 4.5 மில்லியன் என்ற அளவிற்கு நேரடி வேலை வாய்ப்புக்கள் தோற்றுவிக்கப்பட்டன. 1955-இன் ஒன்பதாவது சுற்று தேசிய மாதிரிக் கணக்கெடுப்பின்படி உழைப்பாளர்களின் எண்ணிக்கை 160 மில்லியனாக இருந்தது. 1955-56-இல் வேளாண்மைத் துறையின் உழைப்பாளர்கள் எண்ணிக்கை 110 மில்லியன் என மதிப்பிடப்பட்டது. இது மொத்த உழைக்கும் மக்கட்தொகையில் 72.4 சதவீதமாக இருந்தது.

இந்தியாவின் மக்கட்தொகை முதல் திட்டக் காலத்தில் ஆண்டொன்றிற்கு 8 மில்லியன் என்ற வீதத்தில் அதிகரித்தது. இம்மக்கட்தொகையின் அதிகரிப்பில் 40 சதவீதத்தினர் வேலை வாய்ப்பை வேண்டி நின்றனர். எனவே, 9 மில்லியன் வேலைகளை முதல் திட்டக் காலத்தில் தோற்றுவிக்க வேண்டிய நிலை அமைந்திருந்தது. ஆனால், இக்காலத்தின் 5 மில்லியன் என்ற அளவிற்கு மட்டுமே வேலை வாய்ப்புக்கள் பெருகின. எனவே முதல் திட்டத்தின் தொடக்கத்தில் வேலையின்மையில் அமைந்தில்லாத தீவிரம் திட்ட இறுதியில் அமைந்திருந்தது.

மார்ச் 1951-இல் 'வேலை தேடித்தரும் நிறுவனங்களில்' (Employment Exchanges) வேலை வாய்ப்புக் கோரி பதிவு செய்திருந்தவர்களின் எண்ணிக்கை 3,37,000 ஆக இருந்தது. மார்ச் 1956-இல் இது 7,50,000 ஆக உயர்ந்தது.

எனவே, முதல் திட்டத்தின் பொருளாதார முன்னேற்ற வேகம் பெருகிய உழைப்பாளர்கள் அனைவருக்கும் வேலை வாய்ப்பைத் தருவதாக அமையவில்லை. வேலை வாய்ப்புக்களின் பெருக்க வீதத்தைக் காட்டிலும் உழைப்பாளர்களின் பெருக்க வீதம் மிகுதியாக அமைந்திருந்தது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் புதிய வேலை வாய்ப்புக்கள் பெருகின என்பதை மறுக்க இயலாது. வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க நாட்டின் தொழில் வளர்ச்சியும், பொருளாதார முன்னேற்றமும் அவசியமானவை என்பதைத் திட்டக் குழு உணர்ந்தது. அக்டோபர் 1953-இல் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக்கூடிய குறிப்பான சில திட்டங்களுக்காக ரூ. 180 கோடி நிதி ஒதுக்கப்பட்டது. நாட்டின் வேலையின்மையைக் குறைக்க இவ்வாறு நடவடிக்கை எடுக்கப்பட்டது. மாற்றியமைக்கப்பட்ட முதல் திட்டத்தில் வேலையின்மையைத் தீர்ப்பதற்கான வேறு சில வழிமுறைகளும் பின்பற்றப்பட்டன. அவை யாவன:

(1) 'மாநில நிதிக் கழகங்களை' (State Financial Corporations) ஏற்படுத்துதல் ;

(2) மாநிலங்கள் திட்டங்களைத் தொடங்க மத்திய அரசு உதவி அளித்தல்;

(3) சாலைகளை அமைக்கும் நடவடிக்கைகளுக்கும், சிறிய மின்சாரத் திட்டங்களை நிறைவேற்றவும் 'மானியங்களை' (Grants) அளித்தல் ;

(4) தொழில் நுட்பப் பயிற்சி வசதிகளைப் பெருக்குதல் ஆகியவையாகும்.

இவ்வித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டாலும்கூட எதிர் பார்த்த அளவிற்கு வேலையின்மைச் சிக்கல் தீர்க்கப்படவில்லை. கிராமங்களிலும், நகரங்களிலும் வேலையில்லாதவர்களின் எண் ணிக்கை இக்காலத்தில் அதிகரிக்கத் தொடங்கியது. நாட்டைத் தொழில்மயமாக்க அரசு நடவடிக்கைகளை எடுத்தது. இரண் டாவது திட்டத்தின் தொடக்கத்தில் மக்கட்தொகையைக் கட்டுப் படுத்தப்பட வேண்டியதின் அவசியம் உணரப்பட்டது.

தொழிற் பொருட்களின் உற்பத்தியையும், விற்பனையையும் பெருக்கியிருந்தால், முதல் திட்டக் காலத்தில் தொழில் துறையில் அமைந்திருந்த வேலையின்மையைத் தவிர்த்திருக்கலாம். தொழிற் பொருட்களின் ஒரு அலகிற்கான உற்பத்திச் செலவும் குறைக்கப் பட்டிருக்க வேண்டும். இந்தியாவின் பல தொழில்களிலும் உற்பத்திச் செலவின் கணிசமான ஒரு பகுதி உழைப்பாளர்களுக்குத் தரப்படுகின்ற ஊதியமாக இருக்கின்றது. கடந்த 10 ஆண்டுகளில் உழைப்பாளர்களுக்கான ஊதியம் $3\frac{1}{2}$ முதல் 4 மடங்கு அதிகரித் துள்ளது. ஆனால், உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனில் எவ்வித உயர்வும் ஏற்படவில்லை. இந்நிலையில் சில தொழிற்கூடங்களை மூடுவது தவிர்க்க முடியாததாகின்றது. இதனால் பல உழைப் பாளர்கள் வேலையிழக்கின்றார்கள். இந்நிலை முதல் திட்டக் காலத் திற்கு முன்னேமேயே தோன்றியிருக்க வேண்டும். ஆனால், அவ்வாறு தோன்றாமைக்குக் காரணம் இரண்டாவது உலகப் போராகும். போர்க் காலத்திலும், போர் முடிந்து சில ஆண்டுகள் வரையிலும், தொழிற் பொருட்களின் பற்றாக்குறை நிலையால், விலைகள் உயர்வாக அமைந்திருந்தன. உற்பத்திச் செலவும், விலையும் அதிக அளவில் அமைந்திருந்தாலும் பொருட்களை விற்பனை செய்வது எளிதாக இருந்தது. இதற்கு மாறான நிலைகள் முதல் திட்டத்தை மேற்கொண்ட பிறகு ஏற்பட்டன. வேலையின்மையைக் குறைக்க, இந்திய உழைப்பாளர்கள் குறைந்த கூலிக்கு உழைப்பைத்

தர முன்வர வேண்டும் ; அல்லது, அதிகக் கூலியைப் பெற்று கடின உழைப்பைத் தருதல் வேண்டும்.

இந்தியத் தொழிற் பொருட்களின் உற்பத்திச் செலவு கூடியமைக்கு பல காரணங்கள் கூறப்படுகின்றன. மத்திய அரசும், மாநில அரசுகளும் தொழில்களின் மீது பலவகைப்பட்ட வரிகளை விதிக்கின்றன. தொழில்கள் வெவ்வேறு வகையிலும் கட்டுப்படுத்தப்படுகின்றன. பொதுவாக, தனியார் தொழில் நிறுவனங்களின்மீது அரசு பலவகைக் கட்டுப்பாடுகளையும் விதிக்கின்றது. இந்தியாவில் தொழில் துறையின் பெரும்பகுதி தனியாரிடமே அமைந்துள்ளது. தனியார் தொழில் நிறுவனங்களில் உற்பத்திப் பெருக வேண்டும் ; வேலை வாய்ப்புக்களும் அதிகரிக்க வேண்டும். தனியார் துறை வளர அரசு பலவகையிலும் ஆதரவு தருதல் அவசியமானது. அரசின் கட்டுப்பாடுகள் அவற்றின் வளர்ச்சியை எவ்வகையிலும் பாதிக்கக் கூடாது. அரசின் வரிக் கொள்கை, தொழிற் கொள்கை ஆகியவற்றில் செய்யப்படுகின்ற மாற்றங்கள் தொழில் முன்னேற்றத்திற்கு உதவ வேண்டும். அரசின் சிறப்பான கொள்கைகளின் மூலமே ஏற்றுமதியின் அளவைப் பெருக்க முடியும் ; தொழிற் துறையில் அமைந்துள்ள வேலையின்மையின் அளவையும் குறைக்க முடியும்.

நம் நாட்டில் தொழில்கள் சீரமைப்பைச் செய்யக்கூடாது என்ற கருத்தும் சொல்லப்படுகின்றது. தொழிற் சீரமைப்பு வேலையின்மையைத் தீவிரமாக்கிவிடும். ஆனால், இக்கருத்தை விளக்கமாக ஆராயும்போது தவறுடையதெனத் தெரிகின்றது. விற்பனையாளர்களின் சந்தை இன்று முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கவில்லை. வாங்குபவர்களின் சந்தையே தற்பொழுது செல்வாக்கைக் கொண்டுள்ளமையால் தொழிற் பொருட்களின் உற்பத்திச் செலவையும், விலையையும் குறைக்க வேண்டியுள்ளது. இதற்குத் தொழிற் சீரமைப்பு மிகவும் இன்றியமையாததாகும். உற்பத்திச் செலவைக் குறைக்க உதவும் நல்லதொரு முறை தொழிற் சீரமைப்பாகும். தொழிற் சீரமைப்பை மேற்கொண்டால் ஓரளவு வேலையின்மை தோன்றும்; தொழிற் சீரமைப்பை மேற்கொள்ளாவிட்டால் பல உற்பத்தி நிறுவனங்களையும் மூடவேண்டிவரும். தொழில் உற்பத்தி நிறுவனங்கள் மூடப்பட்டால் அதிக அளவு உழைப்பாளர்கள் வேலை வாய்ப்பை இழப்பார்கள்.

### இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்

இரண்டாவது திட்டமும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க வேண்டியதின் அவசியத்தை உணர்ந்திருந்தது. இத்திட்டம் வேலையின்மை பற்றி பின்வருமாறு குறிப்பிட்டது:

"திட்டத்தின் மூலம் தற்பொழுது கிராமப் புறங்களிலும், நகர்ப் புறங்களிலும் வேலையின்றி இருப்பவர்களுக்கு மட்டும் வேலை வாய்ப்பை அளித்தல் போதுமானதாகாது. ஆண்டுதோறும் சுமார் 2 மில்லியன் என்ற அளவிற்கு அதிகரித்து வருகின்ற உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்கக்கூடியதாகத் திட்டம் அமைய வேண்டும். கிராமப் புறங்களில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி மறைந்துள்ள வேலையின்மையை நீக்க வேண்டும்."

இத்திட்டத்தில் வேலையின்மையையும், மறைந்துள்ள வேலையின்மையையும் நீக்குவதே முக்கிய நோக்கமாக அமைந்திருந்தது. பேரளவு கூட்டுப் பங்குத் தொழில் நிறுவனங்களின் முன்னேற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. அது போன்றே கிராமத் தொழில்கள், சிறு தொழில்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்காகவும் அரசு நடவடிக்கைகளை எடுத்தது. இதன் மூலம் வேலையின்மைச் சிக்கலைக் குறைக்கமுடியுமென அரசு கருதியது. ஆனால், இரண்டாவது திட்டத்தின் முதலீட்டு முறை பெரிய தொழில்களுக்கும், போக்குவரத்து முன்னேற்றத்திற்கும் அதிக மூலதனத்தை ஒதுக்குவதாக இருந்தது. இம்முதலீடுகள் குறுகிய காலத்தில் குறைந்த அளவு வேலை வாய்ப்புக்களையே பெருக்கக் கூடியவைகளாக இருக்கின்றன. வேளாண்மையை நீக்கிய பிற துறைகளில் 8 மில்லியன் என்ற அளவிற்கே இத்திட்டக் காலத்தில் வேலை வாய்ப்புக்களை அதிகரிக்க முடிவெடுக்கப்பட்டது. ஆனால், வேலையின்மையைத் தீர்க்க 15½ மில்லியன் வேலை வாய்ப்புக்கள் அப்பொழுது தேவைப்பட்டன. 8 மில்லியன் பேர்களுக்கு வேலை வாய்ப்பளிக்கத் திட்டமிடப்பட்டாலும் சுமார் 6½ மில்லியன் பேர்களுக்கு மட்டுமே வேலை வாய்ப்பளிக்க முடிந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் சுமார் 9 மில்லியன் உழைப்பாளர்கள் வேலையில்லாமல் இருந்தார்கள்.

"அமைந்திருக்கக்கூடிய வசதிகளைத் திறமையாகப் பயன்படுத்தினால் வேலையின்மையை நீக்கலாம்," எனத் திட்டக் குழு கருதியது. அரசு மதிப்பீட்டபடி இரண்டாவது திட்டக் காலத்தில் வேலையின்மைச் சிக்கலைக் குறைக்க முடியவில்லை. இத்திட்டத்தின் தொடக்கத்தில் வேலையின்மையைக் கொண்டிருந்தவர்கள் 5.3 மில்லியன் பேர்களாகும். இதில் கிராமப் புறங்களில் 2.8 மில்லியன் பேர்களும், நகர்ப் புறங்களில் 2.5 மில்லியன் பேர்களும் வேலையின்றி அமைந்திருந்தார்கள்.

### குறியிலக்குகளை அடைவதில் தோல்வி

வேளாண்மையை உள்ளடக்கிய பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் 10 மில்லியன் என்ற அளவிற்கு வேலை வாய்ப்புக்களை

ஏற்படுத்த இரண்டாவது திட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது. ஆனால், இக்குறியிலக்கை எட்டமுடியாத நிலை இத்திட்டக் காலத்தில் இருந்தது. ஏனெனில், இரண்டாவது திட்டம் பெரிய தொழில்களின் வளர்ச்சிக்கே முக்கியத்துவம் அளித்திருந்தது. மேலும், பெரிய தொழில்கள் அதிக அளவிற்கு 'மூலதனச்-செறிவு' (Capital-intensive) கொண்டவைகளாகும். அவற்றின் மூலம் அதிக உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்க முடியாது. இந்தியப் பொருளாதாரம் உழைப்பாளர்களின் அதிக அளிப்பைக் கொண்டதாக இருக்கின்றது. நம் நாட்டில் 'உழைப்புச் செறிந்த' (Labour-intensive) உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதே நன்மை தருவதாக அமையும். ஆனால், பொருளாதார முன்னேற்றத்தை விரைவாகப் பெற பெரிய தொழில்களின் வளர்ச்சி அவசியமாகின்றது. இதன் மூலமே மூலதனத் திரட்சி வீதத்தை உயர்த்த முடியும். நீண்ட காலத்தில் பெரிய தொழில்களும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக் கூடியவைகளாகும். குறுகிய காலத்தில் பெரிய தொழில்களால் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க முடியாது. முன்னேற்றத்திற்கான திட்ட முறைகளைத் தெரிந்தெடுக்கும்போது இவை யாவும் ஆராயப்பட வேண்டும்.

சில தொழில்களில் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவது அவசியமானதாக இருக்கின்றது. சில அடிப்படைத் தொழில்களிலும், பெரிய தொழில்களிலும் உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவது இயலாததாகும். எனவே, இவ்வகைத் தொழில்களில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க வேண்டுமென்ற எண்ணம் அமைந்திருக்கக் கூடாது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இத்தொழில்களை ஏற்படுத்தியே ஆக வேண்டும். மேலும், நீண்ட காலத்தில் இவை வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக் கூடியவைகளாகவே இருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அரசு பெரிய தொழில்களிலும், போக்குவரத்து முன்னேற்றத்திலும் அதிக முதலீடுகளைச் செய்தது. இம்முதலீடுகள் குறுகிய காலத்தில் அதிக வேலை வாய்ப்புக்களைப் பெருக்கித் தரவில்லை. ஆனால், பெரிய தொழில்களின் தோற்றம் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சிறப்பான அடிப்படையை அமைத்துத் தந்தது.

### வேலை வாய்ப்புக் கொள்கை

வேலையின்மை, மறைந்துள்ள வேலையின்மை ஆகியவற்றைக் குறைக்க இரண்டாவது திட்டம் சில வழி முறைகளைப் பின்பற்றியது. திட்டக் குழு வேலை வாய்ப்புக்களைப் பெருக்க அரசிற்குச்

சில ஆலோசனைகளைக் கூறியது. பின்வரும் துறைகளின் முன்னேற்றத்தில் அரசு கவனம் செலுத்துவதின் மூலம் வேலையின்மையைக் குறைக்கலாம் எனத் திட்டக் குழு கருதியது :

(1) பொதுத் துறை நிறுவனங்கள் ஏற்படும்போது, அவை வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக்கூடியவைகளாக இருக்க வேண்டும்.

(2) சாதகச் சூழ்நிலைகளைக் கொண்டிருக்கக்கூடிய தொழில் முதலாளிகளுக்கும், வணிகர்களுக்கும் கடன் வசதிகள் அளிக்கப்பட வேண்டும்.

(3) அரசின் நிதிக் கொள்கைகள் தனியார் முதலீட்டின் அளவைப் பெருக்கக் கூடியவைகளாக இருத்தல் வேண்டும்.

சிறு தொழில்கள்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் சிறு தொழில்களின் வளர்ச்சிக்கான சில நடவடிக்கைகளையும் எடுத்தது. சிறு தொழில்களின் வளர்ச்சி படித்தவர்களிடையே வேலையின்மை இருத்தலைத் தவிர்க்க உதவும். அவ்விதமான சில சிறு தொழில்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம் : (i) கைக்கருவிகள், சிறு கருவிகள், விளையாட்டுப் பொருட்கள், மரச் சாமான்கள் போன்றவைகளை உற்பத்தி செய்யக்கூடிய 'தயாரிப்புத் தொழில்கள்' (Manufacturing Industries) ; (ii) இயந்திர பாகங்களைத் தயாரித்தல், உலோகங்களை உருக்கும் சாலைகள் (Foundries), வாகனங்களை உருவாக்குதல், மின் முலாம் பூசுதல் (Electro-plating) போன்ற தொழில்கள் ; (iii) இயந்திரங்கள், சைக்கிள்கள், பிற வாகனங்கள் ஆகியவற்றைப் பழுது பார்க்கும் சாலைகள்.

மறைந்துள்ள வேலையின்மை

இத்திட்டக் காலத்தில் வேளாண்மை வளர்ச்சிக்கான பல வழிமுறைகளும் பின்பற்றப்பட்டன. நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டன. சமுதாய வளர்ச்சித் திட்டங்களும் நிறைவேற்றப் பெற்றன. வேளாண்மைத் துறையின் வளர்ச்சி மறைந்துள்ள வேலையின்மையைக் குறைக்க உதவுமென எதிர்பார்க்கப்பட்டது.

இரண்டாவது திட்டக் காலத்தில், திட்டக்குழு வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதோடு விரைவான பொருளாதார வளர்ச்சியையும் பெறக் கருதியது. வளர்ச்சிக்கும், வேலை வாய்ப்புக்களுக்கும் இடையே சம நிலையை ஏற்படுத்த அது விரும்பியது. குறுகிய காலத்தில் இந்நிலையைப் பெறுவது முடியாத ஒன்றாகும்.

சிறு தொழில்களை வளர்ப்பதின் மூலம் பலருக்கு வேலை வாய்ப்புக்களை அளிக்க முடியும். ஆனால், இந்நிலையில் பொருளாதார வளர்ச்சி வீதம் உயர்வாக அமையாது. இத்திட்டத்தில் அரசு இரும்பு-எஃகுத் தொழில் போன்ற பெரிய தொழில்களை நிறுவ அதிக முதலீடுகளைச் செய்தது. சிறு தொழில்களை ஊக்குவித்து நுகர் பொருட்களின் உற்பத்தியைக் கூட்டவும் அரசு விரும்பியது. இத்திட்டக் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட வேலை வாய்ப்புக்கள் வேலையின்மையைக் குறைக்க உதவின; ஆனால், இவ்வேலை வாய்ப்புக்கள் தேசிய உற்பத்தியின் அளவை உயர்த்த உதவின என்று கூற முடியாது.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம்

மூன்றாவது திட்டக் காலத்தில் வேலையின்மை மிகவும் சிக்கலான பிரச்சினையாக மாறிவிட்டது. திட்டக் குழுவின் மதிப்பீட்டின் படி, மக்கட் பெருக்கத்தின் காரணமாக, மூன்றாவது திட்டக்காலத்தில் 17 மில்லியன் உழைப்பாளர்கள் புதிதாக வேலையின்மையால் பாதிக்கப்படுவார்கள் எனக் குறிப்பிடப்பட்டது. இரண்டாவது திட்டத்தின் இறுதியில் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை 9 மில்லியனாக இருந்தது. எனவே, இத்திட்டத்தில் 26 மில்லியன் பேர்களுக்கு வேலை வாப்புக்கள் தேவைப்படுமெனக் கருதப்பட்டது. ஆனால், மூன்றாவது திட்டம் 14 மில்லியன் உழைப்பாளர்களுக்கு மட்டுமே வேலை வாய்ப்புக்களை அளிக்கத் திட்டமிட்டது. 1966-ஆம் ஆண்டில் வேலையீன்மையால் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கை 12 மில்லியனாக இருக்குமென மதிப்பிடப்பட்டது.

இந்தியாவில் விந்தையான நிலை திகழ்கின்றது. வேலை வாய்ப்புக்களைப் பெறுபவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும்போது, வேலையின்மையால் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கையும் பெருகுகின்றது. விரைவான மக்கட்தொகைப் பெருக்கமே இதற்குக் காரணமாகும். மேலும், பொருளாதாரம் முன்னேற்றமடையும் போது வேளாண்மை அமைப்பு முறையில் மாற்றம் தோன்றுகின்றது. நவீன உற்பத்தி முறைகள் வேளாண்மையில் பின்பற்றப்படுகின்றன. இதன் காரணமாக மறைந்துள்ள வேலையின்மை வெளிப்படையாகத் தெரியவரும். மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ளவர்களும் வேலை தேடும்போது, வேலையின்மைச் சிக்கல் மேலும் தீவிரமடையும்.

அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை திட்டக் காலத்தில் வேலையின்மை எவ்வாறு இருந்தது என்பதை உணர்த்தும்:

| காலம் | உழைப்பாளர்களின் அதிகரிப்பு (மில்லியன்) | ஏற்படுத்தப் பட்ட வேலை வாய்ப்புக்கள் (மில்லியன்) | வேலையின்மை (மில்லியன்) |
|---|---|---|---|
| திட்டத்திற்கு முன் | — | — | 3.3 |
| முதல் திட்டம் | 9.5 | 7.5 | 5.3 |
| இரண்டாவது திட்டம் | 11.3 | 9.5 | 7.1 |
| மூன்றாவது திட்டம் | 17.0 | 14.5 | 9 6 |
| 1967-69 | 13.8 | 0.4—1.4 | 22—23 |

பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காகத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. ஆனால், ஒவ்வொரு திட்டத்திலும் வேலையின்மையின் அளவானது அதிகரித்துக் கொண்டே வருகின்றது. திட்டங்களின் உண்மையான வெற்றி எல்லோருக்கும் வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தருவதிலேயே இருக்கின்றது. இந்தியாவில் பல காலமாகத் தீர்க்கப்படாததாக வேலையின்மைச் சிக்கல் அமைந்துள்ளது. மத்திய அரசின் 'உழைப்பு, வேலை வாய்ப்புப் பிரிவு' (Labour, Employment Division) செய்த மதிப்பீட்டின்படி 1971-ஆம் ஆண்டின் இறுதியில் வேலையின்மை யால் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கை 28 மில்லியன் என்ற அளவில் அமையும் எனக் குறிப்பிடப்பட்டது.

மூன்றாவது திட்டம், வேளாண்மைத் துறையில் 3½ மில்லியன் பேர்களுக்கும், வேளாண்மையல்லாத பிற துறைகளில் 10½ மில் லியன் பேர்களுக்கும் வேலை வாய்ப்பளிக்கக் கருதியது. இத்திட் டத்தில் நீண்ட காலத்தில் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய நிலைகளும் ஆராயப்பட்டன. அடுத்த 15 ஆண்டுகளில் உழைப்பாளர்களின் எண்ணிக்கை 70 மில்லியனாக உயரும் என மதிப்பீடு செய்யப்பட்டது. இதில் மூன்றாவது திட்டக் காலத்தில் 17 மில்லியனும், நான்காவது திட்டத்தில் 23 மில்லியனும், ஐந்தா வது திட்டத்தில் 30 மில்லியனும் உழைப்பாளர்களின் எண்ணிக் கைகளாக அமையுமென கணக்கிடப் பெற்றது. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் வேளாண்மையல்லாத பிற துறை களிலேயே அதிக அளவு புதிய வேலை வாய்ப்புக்கள் தோற்றுவிக்கப் பட்டன. இந்நிலை தொடர்ந்து நீடித்தல் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளும் வளர உதவும். இதன் மூலம் 1976-இல் வேளாண்மையைச் சார்ந்து அமைந்துள்ள மக்கட்தொகையை 60 சதவீதமாகக் குறைத்து விடலாம்.

இத்திட்டத்தின் வேலை வாய்ப்புக் கொள்கையில் சில சிறப்பு அம்சங்கள் அமைந்திருந்தன:

(1) முதலாவதாக, திட்டத்தில் புதிய வேலை வாய்ப்புக்களைப் பரவலாகப் பெறும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

(2) இரண்டாவதாக, கிராமப் பொருளாதாரத்தைத் தொழில்மயமாக்கப் பெரிய அளவில் திட்டங்கள் நிறைவேற்றப் பட்டன. பல கிராமங்களும் மின்சாரமயமாக்கப்பட்டன. கிராமத் தொழில்களை வளர்க்கவும், கிராமங்களில் தொழில் எஸ்டேட்டுக் களை ஏற்படுத்தவும் நடவடிக்கைகள் எடுக்கப் பெற்றன. பொது வாக, மனித உழைப்பு சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதற்கான முயற்சிகள் பின்பற்றப்பட்டன.

(3) மூன்றாவதாக, கிராமப் பணிகளின் திட்டத்தை நிறைவேற்றவும் முடிவு செய்யப்பட்டது. இத்திட்டத்தின்படி, ஆண்டொன்றிற்குச் சராசரி 100 நாட்களுக்கு 2½ மில்லியன் பேர் களுக்கு வேலை வாய்ப்பளிக்க முடிவெடுக்கப் பெற்றது.

இவற்றின் மூலம் புதிய வேலை வாய்ப்புக்கள் பெருகும் எனக் கருதப்பட்டது. படித்தவர்களிடையே அமைந்திருக்கும் வேலையின் மையைக் குறைக்கவும் இவை உதவுமென எதிர்பார்க்கப்பட்டது. வேலையின்மையின் அளவைச் சரியாகக் கணக்கிடுவது கடினமான தாகும் ; மறைந்துள்ள வேலையின்மையின் அளவைக் கணக்கிடுவது மிகவும் கடினமானதாகும். எனினும், மூன்றாவது திட்டத்தின் மதிப்பீட்டின்படி, மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ள வர்களின் எண்ணிக்கை 15 முதல் 18 மில்லியன் எனச் சொல்லப் பட்டது. சிறு தொழில்களையும், கிராமத் தொழில்களையும் விரி வடையச் செய்வது புதிய வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்துவதோடு, கிராமப் புறங்களில் அமைந்துள்ள வேலையின்மையை நீக்கவும் உதவும்.

புதிய உற்பத்தி நுணுக்கங்களைத் தொழில் நிறுவனங்களில் புகுத்துவது குறுகிய காலத்தில் வேலையின்மையைத் தோற்று வித்தாலும், நீண்ட காலத்தில் கிராமப் பொருளாதாரத்தில் பல நன்மைகளை ஏற்படுத்தும். கிராமப் பணிகளின் திட்டத்தின்படி வேளாண்மை, நீர்ப்பாசனம், கிராமத் தொழில்கள், சாலைகள், செய்தித் தொடர்புகள் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்காக நட வடிக்கைகள் எடுக்கப்பட்டன. இவ்விதமான பணிகளை மேம்பாட டையச் செய்வதின் மூலம் வேலை வாய்ப்புக்கள் அதிகரிப்பதோடு. பல துறைகளின் தொழிகளிலும் உற்பத்தியைப் பெருக்கலாம். இவை உற்பத்தி நடவடிக்கைகளை எளிதாக்குபவையாகும்.

கிராமஙகளின உழைபபுச சகதியைப பயன்படுததவும மூனருவது திடடம பல வழிமுறைகளைப பினபறறியது 'பல ஆணடுகள வரை கிராமப புறஙகளின மனித உழைபபானது வேளாணமை வளாசசித திடடஙகளிலும, சாலை முனனேறறப பணிகளிலும், கிராமஙகளில வீடடு வசதிகளை ஏறபடுததுவதிலும், பிற கிராம வசதிகளைப பெருககுவதிலும பயனபடுததபபடும,' என மூனருவது ஐநதாணடுத திடடம குறிபபிடடது கிராமப புறஙகளில அமைநதுள்ள மறைநதுள்ள வேலையினமைககுத தீாவு காண, வேளாணமையை மாறறியமைததல் மடடும போதுமானதாகாது கிராமப பொருளாதார அமைபபையே வலுபபடுதத வேணடும, கிராமத் தொழிலகளும், சிறு தொழில்களும அமைக்கபபடுதல் வேணடும் கூடடுறவு அடிபபடையிலும இததொழிலகள ஏறபடுததபபடலாம

சிறபபான, முனனேறறமடைநதத தொழில நுணுகக உறபததி முறைகளைப பினபறறுவதின மூலம படிததவர்களிடையே அமைநதுள்ள வேலையினமையைக குறைக்கலாம என அறியபபடடது மூனருவது ஐநதாணடுத திடடக் காலததில புதிதாக வேளாணமைத துறையில 4 மிலலியன போகளுககும, வேளாணமையலலாத பிற துறைகளில 10 5 மிலலியன் போகளுககும வேலை வாயபபளிககத திடடமிடபபடடது மாாச 1971-இல வேலையினமையால பாதிககபபடுபவாகளின் எணணிககை 23 மிலலியனுககு இருககுமென மதிபபிடப பெறறது நானகாவது ஐநதாணடுத திடடததில் தீவிர முயறசிகளை அரசு மேறகொளளாவிடடால வேலையின்மைச சிககலுககுத தீாவு காணபது இயலாததாகிவிடும

மூனருவது திடடக காலததில வேலை வாயபபுககள மிகக குறைநத அளவிறகு மடடுமே கூடின 1967-68 முதல வேளாணமையலலாத பிற துறைகளின வளாசசியில தேகக நிலை அமைந்திருநதமையும இதறகுக காரணமாகும குறிபபாகத தொழில துறை முனனேறறம மேலான நிலையில அமைநதிருககவிலலை பொருளாதார வளாசசி வீதமும இதனால பாதிககபபடடது இககுதிடடததில அரசு வேலையினமைமையப பறறி நனகுணர்நது பல வித நடவடிககைகளை எடுததாலுமகூட, மேறகுறிபபிடட பலவித காரணஙகளால தீாவு காண முடியாத மாபெரும சிககலாக வேலையினமை உருவெடுதது விடடது

### திடடஙகளின மூலம வேலையினமைச சிககலுககுத தீாவு காண முடியாமைககான காரணஙகள

பொருளாதார முன்னேற்றம் இந்தியாவில் திடடமிடடுப பெறபபடுகிறது நமமுடைய திடடங்கள் வேலையினமைச்

சிக்கலைத் தீர்க்கத் தவறிவிட்டன. வேலையின்மையைக் குறைப்பதற்கான நடவடிக்கைகள் பலவும் திட்டக் காலங்களில் எடுக்கப்பட்டன எனினும், ஐந்தாண்டுத் திட்டங்கள் இச்சிக்கலுக்குத் தீர்வு காண முடியாமைக்கு பின்வருபவைகளே முக்கியக் காரணங்களாக இருந்தன :

(1) விரைவான மக்கட்தொகைப் பெருக்கம்

இந்தியாவின் மக்கட் பெருக்கம் ஆண்டொன்றிற்கு 2.5 சதவீதம் என்ற அளவில் அமைந்திருக்கின்றது. 1971-ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி, 1961-ஆம் ஆண்டிற்கும் 1971-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் மக்கட்தொகை வளர்ச்சி வீதம் 24.66 சதவீதமாக இருந்தது எனத் தெரியவருகிறது. இக்கணக்கெடுப்பின்படி தற்பொழுது இந்தியாவின் மக்கட்தொகை 54.7 கோடியாகும். இதில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் 29.34 சதவீதத்தினரேயாவர். நம்முடைய குடும்பநலத் திட்டங்கள் வெற்றி பெறாமைக்கு இதுவும் ஒரு காரணமாகும். பிறப்பு வீதம் ஆண்டொன்றிற்கு ஆயிரத்திற்கு 39 என்று இருக்கின்றது. வேலையின்மைக்கான மிக முக்கியக் காரணம் விரைவான மக்கட் பெருக்கமேயாகும். விரைவாகப் பெருகிவரும் மக்கட் தொகைக்குத் தேவையான வேலை வாய்ப்புக்களைப் பெருக்கித்தர நம்முடைய திட்டங்களால் முடியவில்லை. எனவே, ஒவ்வொரு திட்டக் காலத்திலும் வேலையின்மையின் அளவானது அதிகரித்துக்கொண்டே செல்கின்றது.

(2) குறைவான பொருளாதார வளர்ச்சி வீதம்

மக்கட்தொகைப் பெருக்க வீதத்தைவிட பொருளாதார வளர்ச்சி வீதம் குறைவாக இருக்கின்றது. அரசு நிறைவேற்றிய பல திட்டங்களிலும் வளர்ச்சி வீதத்தை எதிர்பார்த்த அளவிற்குப் பெற முடியவில்லை. தொழில், வாணிபம், போக்குவரத்து ஆகியவற்றின் வளர்ச்சி சிறப்பாக அமைந்திருக்கவில்லை. எனவே, பொருளாதார முன்னேற்றமும் விரைவாகப் பெறப்படவில்லை. மக்கட்தொகைச் சிக்கலுக்குத் தீர்வு காண விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேண்டும். விரைவான முன்னேற்றத்தைப் பெறுவதின் மூலம் வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காணலாம்.

(3) தவறான திட்டங்கள்

வேலையின்மையைக் குறைப்பதற்கான வழிமுறைகள் திட்டங்களில் சிறப்பாகப் பின்பற்றப்படவில்லை. இந்தியாவைத் தொழில்மயமாக்கத் திட்டங்களில் மூலதனச் செறிவுள்ள தொழில்களுக்கு

முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளைக் கொண்ட தொழில்களின் வளர்ச்சி சிறப்பாக அமைய வில்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஒரு தொழில் திட்ட மாக அமைந்தது. அதிக மூலதனத் தேவையைக் கொண்ட கனரகத் தொழில்கள் இத்திட்டக் காலத்தில் தொடங்கப் பெற்றன. இப்பெரிய தொழில்கள் குறைந்த அளவே வேலை வாய்ப்புக்களைத் தருபவைகளாக இருந்தன. ஆகவே, அரசின் முதலீட்டு முறைகள் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதாக அமையவில்லை பொதுப் பணிகளும் திட்டக் காலங்களில் சிறப்பான அளவிற்கு வளர்க்கப்படவில்லை. சிறிய நீர்ப்பாசனத் திட்டங் களுக்கு அரசு அதிக முக்கியத்துவம் தரவில்லை. திட்டங்களின் மொத்தச் செலவில் மிகக் குறைந்த பகுதி மட்டுமே சிறு தொழில்கள், கிராமத் தொழில்கள் ஆகியவற்றின் முன்னேற்றத் திற்காகச் செலவிடப்பட்டது. மற்றொரு புறத்தில், பலநோக்குத் திட்டங்களில் அரசு அதிக முதலீட்டைச் செய்தது இத்திட்டங்கள் குறைந்த அளவிற்கே வேலை வாய்ப்புக்களைத் தருபவைகளாக இருந்தன. முதலீட்டு முறைகளில் அமைந்திருந்த குறைபாடு களும், தவறான திட்டங்களும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க முடியாத நிலையை ஏற்படுத்தின.

(4) நிதிப் பற்றுக்குறை

இந்தியா விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியாமைக்கான காரணம் மூலதனப் பற்றுக்குறையேயாகும். மூலதனத் திரட்சி நம் நாட்டில் குறைந்த அளவிலேயே ஏற்படு கின்றது. அரசு திட்டங்களை நிறைவேற்ற அதிக மூலதனம் தேவையானதாக இருக்கின்றது. வரி விதிப்பின் மூலம் போதுமான நிதியைப் பெற முடியாமையால் அரசு பிற வழிகளிலும் மூலதனத்தைத் திரட்டுகின்றது. பற்றுக்குறை நிதியாக்கமும் அவ்வழிகளில் ஒன்றாகும். இம்முறையைப் பெருமளவில் பின்பற்றுவ தாலும் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் பணவீக்கம் போன்ற தடைகள் தோன்றுகின்றன. பேரளவில் முதலீடுகளைச் செய்வதின் மூலமே வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காணலாம். ஒரு தனி மனிதனுக்கு வேலையளிக்க ரூ. 10,000 தேவைப்படுவ தாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இலட்சோப இலட்சம் மக்கள் இந்தியாவில் வேலையில்லாமல் இருக்கின்றார்கள். இவர்களுக்கு வேலையளிப்பதற்குத் தேவையான அதிக அளவு நிதியைப் பெறுவது கடினமாகின்றது.

(5) பயிற்சி வசதியின்மை

இந்தியாவில் உழைப்பாளர்களுக்குப் பயிற்சியளிக்கக்கூடிய வசதிகள் சிறப்பாக அமைந்திருக்கவில்லை. வேலையின்மையிலும்,

மறைந்துள்ள வேலையின்மையிலும் அமைந்துள்ள உழைப்பாளர்கள் வெவ்வேறு தொழில்களிலும் ஈடுபட பயிற்சி வசதிகள் அதிகரிக்கப்பட வேண்டும். இந்திய உழைப்பாளர்கள் திறமை குறைந்த உழைப்பைத் தருகின்றமைக்கும் பயிற்சி வசதிகள் இல்லாமையே காரணமாகும்.

(6) உழைப்பின் பெயர்ச்சியின்மை

இந்தியர்களில் பெரும்பாலானவர்கள் தங்கள் குடும்பத்தினரோடு வசிக்க விரும்புகின்றனர். சாகுபடி செய்வது இலாபத்தைத் தராவிட்டாலும்கூட விவசாயிகள் வேறு தொழில்களில் ஈடுபட விரும்புவதில்லை. பழைமை நோக்கு, சாதி வேறுபாடு, மொழி வேறுபாடு, இன வேறுபாடு ஆகியவற்றின் காரணமாக இந்தியாவில் உழைப்பாளர்கள் பெயர்ச்சியில்லாதவர்களாக உள்ளனர். கிடைக்கக்கூடிய வேலை வாய்ப்புக்களும் இதனால் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை வேலையின்மைக்கும், மறைந்துள்ள வேலையின்மைக்கும் உழைப்பின் பெயர்ச்சியின்மை ஒரு காரணமாகிறது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டமும் வேலை வாய்ப்பும்

இந்தியாவில் மக்கட்தொகை மிகவும் விரைவாகப் பெருகி வருகின்றது. எனவே, நான்காவது திட்டக் காலத்திலும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்ப்பது கடினமானதேயாகும். விரைவான மக்கட் பெருக்கத்தால் உழைப்பாளர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கின்றது. இவ்வுழைப்பாளர்களில் சுமார் 50 சதவீதத்தினருக்கு மட்டுமே புதிய வேலை வாய்ப்புக்களை அளிக்க முடியும். நான்காவது திட்டத்தின் தொடக்கத்தில் 9.5 மில்லியன் பேர்கள் வேலையின்றி இருப்பார்கள் என மதிப்பிடப்பட்டது. இத்திட்ட இறுதியில் வேலையின்மையின் அளவு 28 மில்லியனாக இருக்குமெனக் கணக்கிடப்பட்டுள்ளது. வேலையின்மையைப் பற்றி பல மதிப்பீடுகள் செய்யப்பட்டாலும், எதையும் சரியானதாகக் கொள்ள முடியாது. 1968-இல் திட்டக் குழு வேலையின்மையைப்பற்றி மதிப்பீடு செய்ய குழு ஒன்றை அமைத்தது 1960-61-இல் வேளாண்மையல்லாத பிற துறைகளில் வேலை வாய்ப்புக்கள் 12.09 மில்லியன் என்ற அளவில் இருந்தன. 1965-66-இல் இது 15.46 மில்லியன் என்ற அளவிற்கு உயர்ந்தது. வேலை வாய்ப்புப் பெருக்கம் 1966-67-இல் 0.8 சதவீதம் என்ற அளவிற்குக் குறைவாக இருந்தது. 1967-68-இல் வேலை வாய்ப்புப் பெருக்கம் இதைவிட மிகக் குறைவாகவே இருந்தது. 1965-66 முதல் இந்தியப் பொருளாதாரம் தேக்க நிலையில் இருந்ததும், தொழில் துறையின் முன்னேற்றம் சிறப்பாக இல்லாமையும் வேலை வாய்ப்புப் பெருகாமைக்கான முக்கியக் காரணங்களாக இருந்தன.

நான்காவது திட்டக் காலத்தில் முன்னேற்றத் திட்டங்களின் மூலம் வேலை வாய்ப்புக்கள் கணிசமான அளவில் தோன்றுமென எதிர்பார்க்கப்படுகின்றது. நான்காவது திட்டம் உழைப்புச் செறிந்த உற்பத்திப் பணிகளுக்கு முக்கியத்துவம் தந்துள்ளது. சாலைகள், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள், நிலவளப் பாதுகாப்பு, வட்டார முன்னேற்றத் திட்டங்கள். கூட்டுறவு, வெள்ளத் தடுப்பு, மின்சார வசதி, குடியிருப்பு வசதி, சிறு தொழில்கள், கிராமத் தொழில்கள், நகர அபிவிருத்தி போன்ற உழைப்புச் செறிந்த பணிகளுக்கு அதிகச் செலவிட அரசு முடிவு செய்திருக்கின்றது. இவ்விதத் திட்டங்கள் கிராமப் புறங்களிலும், நகர்ப் புறங்களிலும் அதிக வேலை வாய்ப்புக்களைத் தோற்றுவிப்பவைகளாகும்.

வேளாண்மை வளர்ச்சிக்கான திட்டங்களும் நிறைவேற்றப் படுகின்றன. சாகுபடி நிலங்களின் அளவை அதிகரித்தல், முன்னேற்றமடைந்த சாகுபடி முறைகளையும் செறிவு முறைச் சாகுபடியையும் பின்பற்றுதல், பல வகைப்பட்ட பயிர்களையும் உற்பத்தி செய்தல் ஆகியவையும் வேளாண்மைத் துறையில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக் கூடியவைகளாகும். இவற்றைப் பின்பற்றுவதின் மூலம் மறைந்துள்ள வேலையின்மைக்குத் தீர்வு காணலாம்.

தொழில் துறையிலும் வேலை வாய்ப்புப் பெருக்கம் விரைவாக ஏற்பட வேண்டும். பொறிசெய் தொழில்கள், சுரங்கத் தொழில், சிறு தொழில்கள், கிராமங்களை மின்சார மயமாக்குதல், போக்கு வரத்து செய்தித்தொடர்பு வசதிகளை முன்னேற்றமடையச் செய்தல் ஆகியவற்றின் மூலம் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க வகையுண்டு. பல வகைப்பட்ட தொழில்களை வளர்த்தல், வேளாண்மையைச் சார்ந்துள்ள தொழில்களை ஏற்படுத்துதல், கிராமங்களில் மின்சார வசதிகளைப் பெருக்குதல் போன்றவை படித்தவர்களிடையே உள்ள வேலையின்மையைக் குறைக்க உதவுபவைகளாகும். கனரகத் தொழில்கள், சுரங்கத் தொழில் ஆகியவை பொறியியலாளர்களுக்கும், திறமையான உழைப்பாளர்களுக்கும், திறமை குறைந்த உழைப்பாளர்களுக்கும் வேலை வாய்ப்பை அளிக்கக்கூடியவைகளாகும். பொதுத் துறை நிர்வாகம், நிதி நடவடிக்கைகள், வாணிபம் போன்றவைகளும் வேலை வாய்ப்பைத் தரக் கூடியவைகளேயாகும்.

1966-ஆம் ஆண்டிற்கும் 1971-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் புதிதாக வேலையில்லாதவர்கள் 23 மில்லியன் என்ற அளவிற்குத் தோன்றுவார்கள் என மதிப்பிடப்பட்டது. 1967-68-இல் ஏற்பட்ட தொழில் பின்னிறக்கத்தாலும் வேலை வாய்ப்புக்கள் எதிர்நோக்கிய அளவிற்கு அதிகரிக்கவில்லை. வேலை

யில்லாதவர்களின் எண்ணிக்கை தொழில் பின்னிறக்கத்தாலும் அதிகரித்தது. எனவே, நான்காவது திட்டக் காலத்தில் வேலையின்மையால் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கை 35 மில்லியனுக்கும் அதிகமாக இருக்கக்கூடும். நான்காவது திட்ட அறிக்கையின்படி இத்திட்டக் காலத்தில் புதிதாக 20 மில்லியன் என்ற அளவிற்கு மட்டுமே வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்த இயலுமெனக் கருதப்பட்டது. ஆகவே, இத்திட்ட இறுதியில் வேலையில்லாதவர்களின் தொகை 15 மில்லியனாக இருக்கும்.

நான்காவது திட்டம் இந்தியப் பொருளாதாரத்தின் உற்பத்தி நடவடிக்கைகளைப் பெருக்கி வேலை வாய்ப்புக்களை அதிகரிக்கக் கருதியுள்ளது. பொருளாதாரத்தைச் சிறப்பாக இயக்குவது இதற்குத் தேவையானது. நாடு முழுதும் பரவலாகத் தொழில்களை அமைப்பதும் அவசியமானது. இத்திட்டத்தில் உழைப்பாளர்களின் நலனிற்காகவும், பயிற்சி வசதிகளுக்காகவும் ரூ. 37.11 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. மத்திய அரசும், மாநில அரசுகளும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்கத் தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமெனத் திட்டக் குழு கூறுகின்றது.

மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் 'முதலீட்டு வேலை வாய்ப்பு வீதம்' (Investment - Employment Ratio) படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்தது. முதல் இரண்டு திட்டங்களிலும் ரூ.10,191 கோடி முதலீட்டின் மூலம் புதிய வேலைகள் 17 மில்லியன் என்ற அளவிற்குத் தோற்றுவிக்கப்பட்டன. இதில் வேளாண்மைத் துறையில் 5 மில்லியனும், வேளாண்மையல்லாத பிற துறைகளில் 12 மில்லியனும் புதிய வேலை வாய்ப்புக்கள் ஏற்பட்டன. ஆனால், மூன்றாவது திட்டத்தில் ரூ. 10,400 கோடி முதலீட்டின் மூலம் 14.5 மில்லியன் என்ற அளவிற்கு மட்டுமே புதிய வேலைகள் தோற்றுவிக்கப்பட்டன. இதில் வேளாண்மைத் துறையில் 4 மில்லியனும், வேளாண்மையல்லாத பிற துறைகளில் 10.5 மில்லியனும் புதிய வாய்ப்புக்கள் ஏற்பட்டன.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் வேலை வாய்ப்புக்களைப் பெருமளவிற்குப் பெருக்க முடியாது என்பதற்குப் பின்வரும் காரணங்கள் குறிப்பிடப்படுகின்றன :

(1) வேலையின்மையைத் தீர்ப்பதற்கான முதலீடுகளுக்காகக் குறைந்த அளவு மூலதனம் மட்டுமே ஒதுக்கப்பட்டுள்ளது.

(2) நீண்ட காலத்தில் பயனளிக்கக்கூடிய திட்டங்களே அதிக முக்கியத்துவத்தைப் பெற்றிருக்கின்றன. இதனால் முதலீடுகளை மாற்றி வேலை வாய்ப்புக்களைப் பெருக்கவும் வாய்ப்பில்லை.

(3) மூலதனச் செறிவுள்ள திட்டங்களின் செலவுகளைக் குறைப்பதும் இயலாததாகும். ஏனெனில், தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெறுவது இத்திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். தன்னிறைவுப் பொருளாதாரத்தைப் பெற மூலதனச் செறிவுள்ள திட்டங்களைச் செயல்படுத்துவது தவிர்க்க முடியாததாகும்.

முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களும் வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்கத் தவறிவிட்டன என்பதை நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் ஏற்றுக் கொண்டுள்ளது. "திட்டத்தின் முக்கிய நோக்கம் முதலீட்டிற்கும், வேலை வாய்ப்புப் பெருக்கத்திற்கும் இடையே சரிசம நிலையைத் தோற்றுவிப்பதாக இருக்க வேண்டும்," என நான்காவது திட்டம் குறிப்பிடுகின்றது. ஆனால், இவ்விதமான சரிசம நிலையை பொருளாதாரம் வளர்ச்சியடையும் நிலைகளில் பெற முடியாது. ஆனால், வேலை வாய்ப்புக்களைத் தோற்றுவிக்கக்கூடிய திட்டங்களைத் தெரிந்தெடுத்து முதலீடு செய்வது நல்லது.

வேலையின்மையைக் குறைப்பதற்கான தீர்வுகள்

இந்தியாவின் மொத்த ஆக்கத்தின் அளவை அதிகரிக்கவும், பெரும்பாலான மக்களுக்கு நல்வாழ்வை அளிக்கவும் வேலையின்மையையும், மறைந்துள்ள வேலையின்மையையும் நீக்குவது இன்றியமையாததாகின்றது. மக்கட்தொகையை பொருளாதார முன்னேற்ற நடவடிக்கைகளில் ஈடுபடுத்தும்போது வேலையின்மையைக் குறைக்கலாம். உற்பத்தி பெருக்கப்படும்போது, மக்கட்தொகைப் பெருக்கம் கட்டுப்படுத்தப்பட வேண்டும். பொருளாதார முன்னேற்றம் கீழ்க்கண்ட முறைகளால் விரைவுபடுத்தப்பட வேண்டும் :

(1) முன்னேற்றமான உற்பத்தி முறைகள், நீர்ப்பாசன வசதி, நிலச்சீர்திருத்தங்கள், சாகுபடி நிலங்களின் அளவை அதிகரித்தல், இயந்திரமயமாக்குதல், கூட்டுப்பண்ணை முறை போன்றவைகளின் மூலம் வேளாண்மையில் புரட்சியை ஏற்படுத்துதல் ;

(2) வேலை வாய்ப்புக்களைப் பெருக்க விரைவாக நாட்டைத் தொழில்மயமாக்குதல் ;

(3) உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகளைக் கொண்ட சிறு தொழில்களையும் குடிசைத் தொழில்களையும் வளர்த்தல் ;

(4) வேளாண்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பைக் கிராம, சமுதாய முன்னேற்றத் திட்டங்களுக்குப் பயன்படுத்துதல்.

பொருளாதார முன்னேற்றத்தை விரைவாக்க அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. மறைந்துள்ள வேலையின்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பாளர்களைச் சேமிக்கும் திறன் பெருகுவதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். நம்முடைய திட்டங்கள் வேலையின்மையைத் தீர்க்க வேண்டியதின் அவசியத்தை உணர்ந்துள்ளன. ஆனால், அவை பின்பற்றும் வேலை வாய்ப்பிற்கான கொள்கை சிறப்பாக அமையவில்லை. முக்கியமாக, மறைந்துள்ள வேலையின்மையை நீக்க வேண்டியது மிகவும் அவசியமானதும், அவசரமானதும் ஆகும்.

பராமரிப்புத் துறையானது சிறப்பாக இயக்கப்படுவதும், விரிவாக்கம் செய்யப்படுவதும் இன்றியமையாதவைகளாகின்றன. வேளாண்மைத் துறையைச் சார்ந்துள்ளவர்களை அதிக வருவாய் பெறுமாறு செய்யவேண்டும். அவர்களுடைய சேமிப்பும், முதலீடும் பெருகுவது நன்மை தரும். அவர்கள் தொழிற் பொருட்களை வாங்குவதும் தொழில் முன்னேற்றத்திற்கு உதவும். திட்டங்களைத் தீட்டுபவர்கள் மறைந்துள்ள வேலையின்மையைப் படிப்படியாக நீக்க எண்ணியுள்ளனர். சமுதாய முன்னேற்றத் திட்டங்கள், கட்டுமானப் பணிகள், சிறிய தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றின் மூலமும் மறைந்துள்ள வேலையின்மை குறைக்கப்படலாம்.

வேலையின்மைக்குத் தீர்வு காண நீண்ட காலத்தில் சில வழிமுறைகளையும், குறுகிய காலத்தில் சில வழிமுறைகளையும் அரசு பின்பற்றவேண்டும்.

**நீண்ட காலத் தீர்வுகள்**

வேலையின்மையைக் குறைக்க உதவும் நீண்ட காலக் கொள்கை பின்வரும் நிலைகளைக் கொண்டு அமைந்திருக்க வேண்டும் :

(1) விரைவாக பல வகைப்பட்ட தொழில்களையும் வளர்த்து பொருளாதாரம் வேகமாக முன்னேற்றமடைய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். புதிய வேலை வாய்ப்புக்கள் பெருக இதுவே வழி வகுக்கும். படித்தவர்களிடையேயும், திறமைமிக்க உழைப்பாளர்களிடையேயும் உள்ள வேலையின்மையை நீக்க இது உதவும். வேளாண்மையில் அமைந்திருக்கும் மறைந்துள்ள வேலையின்மையைக் குறைக்கவும் இது வகை செய்யும். அதிக அளவிற்கு உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகள் இத்தொழில்களில் பின்பற்றப்பட வேண்டும். மூலதனச் செறிவுள்ள உற்பத்தித் தொழில்களால் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க முடியாது.

(2) வேளாண்மையில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க விஞ்ஞான முறைச் சாகுபடிகள் பின்பற்றப்பட வேண்டும். நீர்ப் பாசன வசதிகள், நல்ல விதைகள், உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள் போன்றவற்றைப் பயன்படுத்துவதின் மூலம் ஒரு ஏக்கருக்கான உற்பத்தியின் அளவை அதிகரிக்கலாம். இம்முன்னேற்றத்தைப் பெற தனியொருவருக்கான நிலத்தின் அளவும் அதிகரிக்க வேண்டும்.

(3) தற்பொழுது அமைந்திருக்கக்கூடிய மிக விரைவான மக்கட்தொகைப் பெருக்கம் குறைக்கப்பட வேண்டும்.

(4) தற்பொழுது அமைந்துள்ள கல்வி முறை மாற்றப்பட வேண்டும். தொழில் நுட்பமும், பயிற்சி வசதிகளும் கொண்ட கல்வி முறை ஏற்படுத்தப்பட வேண்டும்.

(5) நகரங்களிலும், கிராமங்களிலும் வேலை தேடித்தரும் நிறுவனங்கள் அதிக எண்ணிக்கையில் அமைக்கப்பட வேண்டும். நாடு முழுவதும் அமைக்கப்படுகின்ற வேலை தேடித்தரும் நிறுவனங்கள் உழைப்பைப் பெயர்ச்சியுடைய காரணியாக மாற்ற ஓரளவு உதவுகின்றன. சமுதாய மாற்றங்கள் தோன்றுவதும் அவசியமாகின்றது. வேலை வாய்ப்புக்களைப் பற்றிய விவரங்கள் வெளியிடப்பட வேண்டும்.

(6) தனியார் துறையின் முதலீடு குறையும்போது அரசின் முதலீடு அதிகரிக்க வேண்டும். இந்நிலையில் அரசு பொதுப்பணித் துறைகளில் அதிக அளவிற்கு முதலீடுகளைச் செய்யலாம்.

குறுகிய காலத் தீர்வுகள்

வேலையின்மைக்குக் குறுகிய காலத்தில் உடனடியாகத் தீர்வு காண பின்வரும் வழிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும்:

(1) திட்டத்தின் மூலம் வேலை வாய்ப்பு ஏற்பட்டுள்ள இடங்களில் பயிற்சி முகாம்கள் ஏற்படுத்தப்பட வேண்டும். உதாரணமாக, நீர்ப்பாசனத் திட்டங்கள், மின்சார உற்பத்தித் திட்டங்கள், சாலையமைப்புத் திட்டங்கள் ஆகியவற்றை வெற்றிகரமாக நிறைவேற்ற பயிற்சி வசதிகள் இன்றியமையாதவைகளாகும்.

(2) சிறு தொழில்களையும், சிறு வாணிபங்களையும் நடத்துபவர்களுக்குத் தனியான உதவிகளையும், சலுகைகளையும் அரசு அளிக்க வேண்டும்.

(3) மனித உழைப்பின் பற்றாக்குறை அமைந்துள்ள சில துறைகளில் பயிற்சி வசதிகள் பெருக்கப்பட வேண்டும்.

(4) சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றின் உற்பத்தியை ஊக்குவிக்க, பொது நிறுவனங்களில் அவற்றின் பொருட்கள் வாங்கப்படுதல் வேண்டும். சிறு தொழில்களைப் பெருக்க நகர்ப் புறங்களில் தொழில் எஸ்டேட்டுகள் அமைக்கப் படலாம்.

(5) கல்வி வசதி பெருகும் வகையில் பள்ளிக்கூடங்கள் நகரங் களிலும், கிராமங்களிலும் அதிக எண்ணிக்கையில் அமைக்கப்பட வேண்டும்.

(6) 'தேசிய விரிவாக்கப்பணி' (National Extension Service) மேலும் அதிக அளவில் மேற்கொள்ளப்படுதல் வேண்டும். இதன் மூலம் பலருக்கும் வேலை வாய்ப்புக்கள் கிடைக்க வகையுண்டு.

(7) சாலைப் போக்குவரத்து வளர்க்கப்பட வேண்டும். அதிக உழைப்பாளர்கள் வேலை வாய்ப்புக்களைப் பெற இது உதவும்.

(8) சேரி ஒழிப்புத் திட்டங்கள், குறைந்த வருவாய் பெறுப வர்களுக்கான குடியிருப்பு வசதித் திட்டங்கள் ஆகியவற்றை நகர்ப் புறங்களில் மேற்கொள்ளலாம்.

(9) திட்டமிட்டு அகதிகளுக்கு உதவிகளை அளிக்க வேண்டும். இந்தியாவில் அகதிகளைப் பராமரிப்பதும், அவர்களுக்கு வேலை வாய்ப்பை அளிப்பதும் பல பொருளாதாரச் சிக்கல்களைத் தோற்று விக்கின்றன.

(10) தனியார் துறை உற்பத்தி நிறுவனங்களுக்கும் அரசு ஊக்கமளிக்க வேண்டும்.

இவற்றைத் தவிர, வேறு சில முறைகளைப் பின்பற்றுவதின் மூலமும் வேலையின்மையைக் குறைக்க முடியும். நிலமற்ற விவசாயிகளுக்குப் புதிய சாகுபடி நிலங்கள் அளிக்கப்படலாம். கிராமங்களுக்கு மின்சார வசதிகளை அளித்தல் சிறு தொழில்களின் முன்னேற்றத்திற்கு உதவும். நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதின் மூலமும் வேளாண்மையில் அமைந்திருக்கும் மறைந் துள்ள வேலையின்மையைக் குறைக்கலாம்.

### கீன்ஸின் வேலை வாய்ப்புப் பெருக்கியும், வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வேலையின்மையும் (Keynesian Employment Multiplier and Unemployment in Underdeveloped Countries)

பின்தங்கிய பொருளாதாரங்களைக் கொண்டுள்ள நாடுகளில் முதலீட்டின் அளவு குறைவாக இருக்கின்றமையால் 'நிறை வேலை

யுடைமை' (Full Employment) ஏற்படுவதில்லை. பற்றுக்குறை நிதியாக்கம், பணக்கட்டுப்பாடு, நிதிக்கட்டுப்பாடு ஆகியவற்றின் மூலம் இந்நாடுகளில் நிறை வேலையுடைமையைப் பெற முடியாது. கீன்ஸ் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க இம்முறைகளைப் பின் பற்றலாமெனக் குறிப்பிட்டுள்ளார். வளர்ச்சிக் குன்றிய நாடுகளில் உற்பத்தி வசதிகளின் அளிப்பு தேவையைக் காட்டிலும் மிகவும் குறைவாக இருக்கின்றது. மக்கள் குறைந்த வருவாயை மட்டுமே பெறுகின்றனர்கள். அவர்களின் நுகரும் விருப்பம் உயர் வாக இருக்கின்றது. குறைந்த வருவாயைப் பெறுவதால் அவர் களின் சேமிக்கும் திறன் குறைவாக இருக்கின்றது. நுகரும் விருப்பம் உயர்வாக உள்ளமையும் சேமிக்கும் திறன் குறைவாக இருக்கின்றமைக்கு ஒரு காரணமாகும். இக்காரணங்களால் பொருளாதாரத்தில் பணவீக்க நிலை தோன்றுகின்றது. பின்தங்கிய பொருளாதாரங்களின் திறன் உழைப்பாளர்களுக்குப் போதுமான அளவில் வேலை வாய்ப்பை அளிப்பதாக இல்லை. கீன்ஸ் குறிப்பிடு கின்ற முறைகளைப் பின்பற்றி வளர்ச்சியடைந்துவரும் நாடுகள் குறுகிய காலத்தில் நிறை வேலையுடைமையைப் பெறுவது இயலாத தாகும். உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தேவையான வசதிகள் இல்லாமையால் வேலை வாய்ப்புக்களை அதிகரிப்பது கடினமான தாகும். வேலையுடைமையைப் பெற அரசு நடவடிக்கைகளை எடுத்தாலும் பொருளாதாரம் பணவீக்க நிலையால் பாதிக்கப்படும். தேவையின் தன்மைக்கேற்பத் தொழில்கள் தொடங்கப்படுவதில்லை. நுகர் பொருட்களின் பற்றுக்குறை விலைகளின் உயர்வைத் தோற்று விக்கின்றது.

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் நுகரும் விருப்பமானது மிகவும் அதிகமாக இருக்கின்றது. குறுகிய காலத்தில் உற்பத்தியின் அளவிலும், நுகர்வின் அளவிலும் அதிக மாற்றங்கள் தோன்றுவ தில்லை. வேளாண்மை உற்பத்திப் பொருட்களின் விலை உயரும் போது, உற்பத்தியின் அளவில் அதிகரிப்பு ஏற்படுவதில்லை. வேளாண்மைப் பொருட்களின் தேவையில் ஏற்படும் மாற்றங் களுக்கு ஏற்ப உற்பத்தியின் அளவை மாற்ற இயலாது. ஏனெனில், குறுகிய காலத்தில் உற்பத்திக்கான வசதிகளைப் பெருக்க முடியாது. இந்நிலைகளில் அதிக முதலீட்டின் மூலம் வேளாண்மைத் துறையில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க முடியும். வேளாண்மை வருவாயும் இதனால் அதிகரிக்கும். வேளாண்மைத் துறை முன்னேற்றம் பிற துறைகளில் உற்பத்தி, வருவாய், வேலை வாய்ப்பு ஆகியவற்றில் பெருக்கத்தை ஏற்படுத்துவதில்லை. வேளாண்மை முன்னேற்றத் தால் பெறக்கூடிய அதிக வருவாய் உணவுப் பொருட்களை வாங்கு வதற்கே செலவிடப்படுகின்றது. கீன்ஸின் 'பெருக்கித் தத்துவ மானது' (Multiplier Principle) பண வருவாயை அடிப்படையாகக்

கொண்டே செயல்படுகின்றது. உண்மையான வருவாயும், வேலை வாய்ப்பும் இத்தத்துவத்தில் செல்வாக்கைக் கொண்டிருக்கவில்லை.

**வேலை வாய்ப்புக் கொள்கை**

ஒவ்வொரு திட்டக் காலத்திலும் அதிகரிக்கின்ற வேலையின்மையின் அளவானது குறைக்கப்பட வேண்டும். பெரிய தொழில்களின் விரைவான வளர்ச்சியும்கூட குறைவான வேலை வாய்ப்புக்களையே தோற்றுவிக்கக் கூடியதாகும். வேளாண்மையை வளர்ச்சியடையச் செய்வதின் மூலம் பயன்படுத்தப்படாத மனித உழைப்பை முற்றிலுமாகப் பயன்படுத்த முடியாது. வேளாண்மையல்லாத பிற துறைகளை வளர்ப்பதும் இன்றியமையாதது. நகர்ப்புறங்களிலேயே அதிக முதலீடுகளைச் செய்ய வேண்டுமென்பதும் அவசியமானதல்ல. வேளாண்மை, பெரிய தொழில்கள், சிறிய தொழில்கள் ஆகியவைகளுக்கிடையே முன்னேற்றத்தில் இணைப்பை ஏற்படுத்த வேண்டும். தொழில்கள் நாடு முழுவதும் பரவலாக அமைக்கப்படுதல் தேவையானதாகும். சிறிய தொழில்கள் ஏற்படுத்தப்பட்டு, வளர்ச்சியடைவதற்கான சுமுகச் சூழ்நிலைகள் உருவாக்கப்பட வேண்டும். கிராமங்களில் வேலை வாய்ப்புக்களைப் பெருக்க அறிவியல் முறைச் சாகுபடிகள் வேளாண்மையில் பின்பற்றப்பட வேண்டும். கிராமங்களுக்கும், நகரங்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பை ஏற்படுத்துதல் நன்மை தரும்.

இந்தியாவில் அமைந்துள்ள பலவிதமான சிக்கல்களிலும் வேலையின்மையைத் தீர்ப்பதே மிகவும் இன்றியமையாதது. பொருளாதார, சமுதாய, அரசியல் அமைப்புகள் நிலைத்திருக்க வேலையின்மைச் சிக்கலைத் தீர்ப்பது அவசியமானதாகும். ஆண்டொன்றிற்கு மக்கட்தொகை $2\frac{1}{2}$ சதவீதம் என்ற அளவிற்குப் பெருகி வந்தால், முன்னேற்றமடைந்த பொருளாதாரங்களிலும்கூட வேலையின்மையைத் தீர்க்க முடியாது. மக்கட்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தி, நிலச் சீர்த்திருத்தங்களை நிறைவேற்றி, பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்தி வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காணலாம். அரசின் சிறப்பான வேலை வாய்ப்புக் கொள்கையும் வேலையின்மையைக் குறைக்க உதவும்.

# 28. இந்தியாவில் பணவீக்கமும் பொருளாதார முன்னேற்றமும்

பணவீக்க நிலை உள்ள பொருளாதாரத்தில் பணத்தின் மதிப்பு குறைவாக இருக்கின்றது. பணத்தின் அளிப்பிற்கும் பணவீக்கத்திற்கும் நெருங்கியத் தொடர்பு உண்டு. பணத்தின் அளிப்பு அதிகமாக இருக்கும்போது விலைகள் உயர்வடைகின்றன. குறைந்த அளவுப் பண்டங்களை அதிக அளவுப் பணமானது துரத்துவதை பணவீக்க நிலை எனக் குறிப்பிடுகின்றோம். பணத்தின் சுழலும் வேகம் அதிகமாக இருந்தாலும் விலைகள் அதிகரிக்கின்றன. பணத்தின் அளிப்பு அரசின் பணத்தையும், வங்கிப் பணத்தையும் பொருத்து அமையும். அரசின் பணம் என்பது காகிதப்பண நோட்டுக்களைக் குறிப்பதாகும்.

இந்தியாவில் பணத்தின் அளிப்பு அதிகமாக இருப்பதால் பணவீக்க நிலை ஏற்பட்டுள்ளது. தற்பொழுது பணத்தின் அளிப்பு ரூ. 5,185 கோடிக்கும் மேலாக இருக்கின்றது. இதில் அரசின் பணம் ரூ. 3,300 கோடியாகவும், வங்கிப் பணம் ரூ. 1,885 கோடியாகவும் உள்ளன. நம் நாட்டில் வங்கிப் பணம் அதிக முக்கியத்துவம் கொண்டதாக அமைந்திருக்கவில்லை. மொத்தப் பணத்தின் அளிப்பில் மூன்றில் ஒருபங்கிற்கும் சற்று அதிகமாக வங்கிப் பணம் உள்ளது. இதற்கு எதிரிடையான நிலை மேம்பாடடைந்த நாடுகளில் அமைந்திருக்கின்றது. அந்நாடுகளில் வங்கிப்பணம் முக்கிய நிலையைக் கொண்டிருப்பதோடு, விரைவான பொருளாதார வளர்ச்சியைப் பெறவும் உதவியது. எடுத்துக்காட்டாக அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வளர்ச்சியடைந்த நாடுகளில் மொத்தப் பணத்தின் அளிப்பில் வங்கிப் பணம் சுமார் 75 சதவீதமாக உள்ளது. வளமான பொருளாதாரத்தைப் பெற வங்கிப் பணம் உதவுகிறது. வளர்ச்சியடையாத நாடுகளில் காசோலைகளுக்குப் பதிலாகக் காகிதப் பணமே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது. முழுமையடைந்த பணப் பொருளாதாரம் பின்தங்கிய நாடுகளில் அமைந்திருப்பதில்லை பின்தங்கிய நாடுகளின் கிராமங்களில் இன்றும் ஓரளவு பண்டமாற்று முறை அமைந்துள்ளதை அறிய முடிகின்றது. இதன் காரணமாகவே வளர்ச்சியடையாத நாடுகள் பின்தங்கிய

பொருளாதாரங்களைக் கொண்டுள்ளன. இந்தியாவிலும் இந்நிலையே அமைந்துள்ளது.

பணத்தின் அளிப்பைப் பாதிக்கும் காரணிகள்

பணத்தின் அளிப்பைப் பாதிப்பவைகளாக மூன்று காரணிகள் விளக்கப்படுகின்றன. அவற்றைப் பின்வருமாறு ஆராயலாம்:

(i) பற்றுக்குறை நிதியாக்கம்

அரசின் வருவாயைக் காட்டிலும் அரசின் செலவு அதிகமாக இருக்கின்ற நிலையே பற்றுக்குறை நிதியாக்கமாகும். அரசு வரி விதிப்பின் மூலம் வருவாயைப் பெறுகின்றது. அரசிற்கு வேறு வழிகளிலும் வருவாய் கிடைக்கின்றது. ஆனால், வரிப்பணத்தின் மூலமாகவே அரசிற்கு அதிக வருவாய் கிடைக்கிறது. அரசின் வருவாய் சமுதாய முன்னேற்றத்திற்காகவும், பல ஆக்கப் பணிகளுக்காகவும் செலவிடப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப்பெற அரசு பல முதலீடுகளைச் செய்கின்றது. வளர்ச்சியடைந்துவரும் இந்தியா போன்ற நாடுகளில் முன்னேற்றத்திற்கான திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. திட்டங்களை நிறைவேற்ற அதிக மூலதனம் தேவைப்படுகிறது. குறைவான வருவாயைப் பெறுகின்ற மக்களே இந்தியாவில் மிகுதியாக உள்ளனர். எனவே, புதிய வரிகளை அதிக அளவிற்கு விதிப்பதும், பழைய வரிகளின் அளவுகளை உயர்த்துவதும் இயலாததாகின்றது. வரி விதிப்பின் மூலம் தேவையான மூலதனத்தைப் பெற முடிவதில்லை. இதைப்போன்றே வெளிநாட்டு உதவியும் போதுமான அளவிற்குக் கிடைப்பதில்லை. அவ்வாறு வெளிநாட்டு உதவி கிடைத்தாலும் தேவையான காலத்தில் அது பெறப்படுவதில்லை. எனவே, பற்றுக்குறை நிதியாக்கத்தைக் கைக்கொள்வது அரசிற்குத் தவிர்க்க முடியாததாகின்றது.

அரசு தன்னுடைய வருவாய்க்கு மேல் செலவிடும் பணமானது மத்திய வங்கியிடமிருந்து பெறப்படுகின்றது. இந்திய அரசு ரிசர்வ் வங்கியிடமிருந்து பணத்தைப் பெறுகின்றது. ரிசர்வ் வங்கியால் காகிதப் பணமானது அச்சிடப்பெற்று, அரசின் பற்றுக்குறைக்கு அது நிதியாக்கம் செய்யப்படுகின்றது. இதனால் பணத்தின் அளிப்பு பொருளாதாரத்தில் அதிகரிக்கின்றது. இதை 'அரசுத் துறையின் நிகர வங்கிக்கடன்' (Net Bank Credit to the Government Sector) எனலாம். இந்தியாவில் 'கடன்' விரிவாக்கம் பெற்றுள்ளமையாலும் பணத்தின் அளிப்பு அதிகரித்துள்ளது. அரசிற்கு ரிசர்வ் வங்கி கடன் அளிப்பது போன்று வணிக வங்கிகளும் கடன் அளிக்கின்றன; வங்கிகளின் வைப்பு நிதிகளும் பெருகி

வருகின்றன. இதற்குப் பணத்தின் அளிப்பு அதிகரித்துள்ளமையும் ஒரு காரணமாகும். இதன் விளைவாகவே இந்தியாவில் பணவீக்க நிலை ஏற்பட்டுள்ளது. பொருட்களின் விலைகள் பலமடங்கு உயர்வடைந்துள்ளன.

(ii) தனியார் துறையின் நிகர வங்கிக் கடன் (Net Bank Credit to Private Sector)

அரசு தன்னுடைய வருவாய்க்கு மேலாகச் செலவிடுவது போலவே, தனியார் பலரும் தங்களுடைய வருவாய்க்கு மேலாகவோ அல்லது தங்களிடம் இருப்பதற்கு அதிகமாகவோ செலவிடுகின்றார்கள். குறிப்பாக சில தனியார் தொழில், வியாபார நிறுவனங்களை இதற்கு உதாரணமாகக் கூறலாம். தொழில் நிறுவனங்கள் தங்களின் வருவாய்க்கு அதிகமாகச் செலவிடுவதின் நோக்கம் அதிக இலாபத்தைப் பெறுவதேயாகும். இவ்வாறு வருவாய்க்கு மேலாகச் செலவிட உபரிப் பணமானது வங்கிகளிடமிருந்து கடனாகப் பெறப்படுகின்றது. இவ்வகையில் பெறப்படும் கடன் 'தனியார் துறையின் நிகர வங்கிக் கடன்' எனக் கூறப்படுகிறது. இதைத் 'தனியார் துறையின் பற்றாக்குறை நிதியாக்கம்' (Deficit Financing by the Private Sector) என்றும் அழைக்கலாம். இதன் காரணமாகவும் பொருளாதாரத்தில் பணத்தின் அளிப்பு அதிகரிக்கின்றது. பணவீக்க நிலையும் தோன்றுகின்றது.

(iii) வெளிநாட்டு வாணிபம்

இந்தியாவில் அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடு அமைந்துள்ளது. இந்நிலையில் ஏற்றுமதியாளர்கள் வெளிநாட்டுப் பணங்களை இந்திய ரிசர்வ் வங்கியிடம் கொடுத்துவிட வேண்டும். அவற்றின் மதிப்பிற்குச் சமமான ரூபாய்கள் ரிசர்வ் வங்கியால் ஏற்றுமதியாளர்களுக்கு அளிக்கப்படுகின்றன. இதன் வாயிலாகவும் பணத்தின் அளிப்பு அதிகரிக்கின்றது. ஒரு நாட்டில் ஏற்றுமதியோடு இறக்குமதியும் செய்யப்படுகிறது. பிற நாடுகளினின்றும் பொருட்கள் இறக்குமதி செய்யப்படும்போது, இறக்குமதியாளர்கள் ரிசர்வ் வங்கியிடம் பொருட்களின் மதிப்பிற்கேற்ப ரூபாய்கள் அளிக்க வேண்டும். அதற்குப் பதிலாக அந்நியச் செலாவணி இறக்குமதியாளர்களுக்குத் தரப்படுகின்றது. இவ்வாறு இறக்குமதியாளர்கள் ரிசர்வ் வங்கியிடம் ரூபாய்களை அளிக்கின்றபோது பொருளாதாரத்தில் பணத்தின் அளிப்பு குறைவடைகின்றது. சுருங்கக் கூறின், ஏற்றுமதியின் மூலம் பணத்தின் அளிப்பு அதிகரிக்கின்றபோது, இறக்குமதியின் மூலம் பணத்தின் அளிப்பில் குறைவு ஏற்படுகின்றது. எனவே, பணத்தின் அளிப்பில் ஏற்படுகின்ற நிகர அதிகரிப்பையோ, குறைவையோ அறிவது அவசியமாகிறது.

இந்தியாவில் இந்நிகர நிலையானது பணத்தின் அளிப்பில் குறைவை ஏற்படுத்துகிறது. இதற்குக் காரணம் இறக்குமதி அதிகமாகவும், ஏற்றுமதி குறைவாகவும் இருக்கின்ற நிலையாகும். நம் நாட்டின் சராசரி ஏற்றுமதி மதிப்பு ஆண்டொன்றிற்குச் சுமார் ரூ. 800 கோடியாகவும், இறக்குமதி மதிப்பு ஆண்டொன்றிற்குச் சுமார் ரூ 1200 கோடியாகவும் உள்ளன. எனவே ரூ. 400 கோடி என்ற அளவிற்குப் பணத்தின் அளிப்பில் குறைவு ஏற்படுகிறது. இவ்வாறு வெளிநாட்டு வாணிபத்திற்கும் பணத்தின் அளிப்பிற்கும் தொடர்பு அமைந்துள்ளது.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூன்று நிலைகளையும் ஒருங்கிணைப்பதின் மூலம் பணத்தின் அளிப்பில் அமைந்துள்ள ஏற்றத்தாழ்வுகளை இனிது உணரலாம். இக்காரணிகளை ஆராய்வதின் வாயிலாக நம் நாட்டில் பணத்தின் அளிப்பு பெருகியுள்ளதை அறிய முடிகின்றது. ஐந்தாண்டுத் திட்டங்களை மேற்கொண்ட பிறகே பணத்தின் அளிப்பு பல மடங்கு பெருகியது. 1951-இல் பணத்தின் அளிப்பு ரூ. 1,800 கோடியாக மட்டுமே இருந்தது; ஜனவரி 1969-இல் இது ரூ. 5,200 கோடியாக உயர்ந்தது. பணத்தின் அளிப்பு இதனால் சுமார் மூன்று மடங்கு அதிகரித்தது. பணத்தின் அளிப்பு அதிகரித்தமைக்கு முக்கியமாக இரண்டு காரணங்களைக் கூறலாம்: முதலாவதாக, பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவு அதிகரித்தது. இரண்டாவதாக, தனியார் துறையின் நிகர வங்கிக்கடனும் வளர்ச்சியடைந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 420 கோடி என்ற அளவிற்குப் பற்றுக்குறை நிதியாக்கம் பின்பற்றப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 950 கோடியாக இது உயர்ந்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 550 கோடி என்ற அளவிற்குப் பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பின்பற்ற திட்டமிடப்பட்டது. ஆனால், உண்மையில் இதைக்காட்டிலும் அதிக அளவில் இம்முறை பின்பற்றப்பட்டது. இதற்கு எதிரிடையாக, ஏற்றுமதிக் குறைவாலும் இறக்குமதி அதிகரிப்பாலும் பணத்தின் அளிப்பு ஓரளவு குறைவடைந்தது. கிராமத் துறையின் வளர்ச்சியாலும் அதிகரித்த பணத்தின் அளிப்பு குறைந்த அளவிற்கே ஏற்றுக்கொள்ளப்பட்டது.

பணத்தின் அளிப்பும் விலைகளும்

ஒரு பொருளாதாரத்தில் பணத்தின் அளிப்பு அதிகரிக்கும் போது விலைகள் உயர்வடையும் என்று பண அளவுக் கோட்பாடு குறிப்பிடுகின்றது. இக்கோட்பாடு கீன்ஸ் உட்பட பல பொருளியலறிஞர்களாலும் ஆராயப் பெற்றது. வளர்ச்சியடைந்த நாடு

களில் இக்கோட்டுபாடு செல்வாக்கிழந்ததாக இருக்கின்றது. சிக்காகோ பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் மில்டன் ப்ரீட்மேன் (Prof. Milton Friedman) பண அளவுக் கோட்பாட்டைச் சரியான தென விளக்குகின்றார். வேறு பல பொருளாதார நிபுணர்கள் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் பண அளவுக் கோட்பாடு இப்பொழுதும்கூட செயல்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். இந்திய அனுபவத்திலிருந்தும் இக்கோட்பாடடில் உள்ள அடிப்படை உண்மை தெரிய வருகின்றது. 'மத்தியப் புள்ளிவிவர அமைப்பின்' (Central Statistical Organisation) மூலம் திரு கே. என். சி. பிள்ளை தலைமையில் இது பற்றிய ஆய்வு செய்யப்பட்டது 1950-51 முதல் 1960-61 வரை பண அளிப்பு அதிகரித்தமையால் விலையுயர்வுகள் ஏற்பட்டன என இந்த ஆய்வின் மூலம் அறியப் பெற்றது. 1966-இல் பணத்தின் அளிப்பு மிக அதிகரித்தது; ஆனால், உண்மை யான தேசிய வருவாய் குறிப்பிடத்தக்க அளவிற்கு உயரவில்லை. இதன் காரணமாகவும் விலையுயர்வுகள் ஏற்பட்டன.

விலையளவைப் பாதிக்கும் வேறு சில காரணிகளும் உள்ளன. உணவு உற்பத்தி, வரி விதிப்பு முறை, பணத்தின் சுழலும் வேகம், தேவை நெகிழ்ச்சிகளில் ஏற்படும் மாற்றங்கள் ஆகியவற்றாலும் விலைகளில் ஏற்றத்தாழ்வுகள் தோன்றுகின்றன. உயர்ந்த அளவு உணவு உற்பத்தியின் மூலம் விலையுயர்வைக் கட்டுப்படுத்தலாம். அரசு அதிக வரி விதிப்பு முறையைப் பின்பற்றினால் பண்டங்களின் விலைகள் உயர்வடைகின்றன. பணத்தின் சுழலும் வேகம் அதிக மாக இருக்கும்பொழுது விலைகள் அதிகரிக்கின்றன. தேவைகள் நெகிழ்ச்சியுள்ளவைகளாக இருந்தால் விலைகளில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றன; தேவைகள் நெகிழ்ச்சிக் குறைந்தவைகளாக இருந்தால் விலைகளில் அதிக மாற்றங்கள் ஏற்படுவதில்லை. ஆனால், இந்தியாவில் இக்காரணிகள் விலைகளின்மீது அதிகச் செல்வாக் கினைக் கொண்டிருக்கவில்லை என்றே கூறவேண்டும் பணத்தின் அளிப்பு அதிகரிகின்ற நிலையே விலையுயர்விற்கு முக்கியக் காரண மாகத் திகழ்கின்றது. வரி விதிப்பின் மூலம் பல பண்டங்களின் விலைகள் ஓரளவு உயர்கின்றன என்பது உண்மையானதேயாகும். ஆனால், வேளாண்மைத் துறை அதிக வரிவிதிப்பிற்கு இலக்காக வில்லை என்றாலும், வேளாண்மைப் பொருட்களின் விலைகள் பல மடங்கு உயர்வடைந்துள்ளன. உணவுப் பொருட்களின்மீது புதிய வரிகள் விதிக்கப்படவில்லை. எனினும் உணவுப் பொருட்களின் விலையுயர்வே மிக அதிகமாக இருந்தது. உண்மையான தேசிய வருவாய்க்கும், விலைகளுக்கும் இடையே நெருங்கியத் தொடர்பு இருக்கின்றது. பணத்தின் அளிப்பு விலை மாற்றங்களுக்கு முக்கியக் காரணமாக உள்ளது.

உண்மையான தேசிய வருவாய் அதிகரிக்கவில்லையென்றால் விலைகள் உயர்வடைகின்றன. இந்தியாவின் இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் இந்நிலை அமைந்திருந்தது. பற்றாக்குறை நிதியாக்கத்தின் மூலம் பணத்தின் அளிப்பு அதிகரித்தமையே பணவீக்க நிலைக்கு அடிப்படைக் காரணமாக இருந்தது. திட்டச் செலவுகள் உயர்ந்தமையால் பற்றாக்குறை நிதியாக்கத்தைத் தவிர்ப்பதும் இயலாததாயிற்று.

### இந்தியாவில் விலையுயர்வுகள்

பொருளாதார வளர்ச்சிக்கும் விலை மாற்றங்களுக்கும் நெருங்கியத் தொடர்பு உள்ளது. ஒரு நாட்டின் பொதுவான பொருளாதார நிலைகளை உணர்த்துபவை விலை மாற்றங்களேயாகும். விலை மாற்றங்களால் பல பிரிவு மக்கள் பல வகைகளில் பாதிக்கப்படுகின்றார்கள். அரசு எவ்விதக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டுமென்பதையும் விலை மட்டங்கள் உணர்த்துகின்றன. இந்தியா போன்ற வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ள நாடுகளில் விலைக் கொள்கை முக்கிய நிலையைக் கொண்டு அமைந்திருக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காக நிறைவேற்றப்படும் திட்டங்கள் வெற்றி பெற விலைகள் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

இந்தியாவில் விலையுயர்வின் தொடக்கம் 1940-ஆம் ஆண்டிற்கும் 1945-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டக் காலத்தில் ஏற்பட்டதெனலாம். இக்காலத்தில் விலையுயர்வைக் கட்டுப்படுத்த 'பத்து அம்சத் திட்டம்' (Ten Point Programme) பின்பற்றப்பட்டது. பத்து அம்சத் திட்டம் பின்வருமாறு அமைந்திருந்தது :

(1) துணிகளின் மீது கட்டுப்பாடு ;

(2) உணவுத் தானியங்களின் மீது விலைகளின் கட்டுப்பாடு ;

(3) இரும்பு, எஃகு விலைகளின் மீது கட்டுப்பாடு ;

(4) சர்க்கரை விலை நிர்ணயம் ;

(5) இறக்குமதியைத் தளர்த்துதல் ;

(6) உற்பத்தியை ஊக்குவித்தல் ;

(7) ஏற்றுமதிக் கட்டுப்பாடு ;

(8) அதிகப் பணத்தின் தீய விளைவுகளைக் குறைக்க சிறு சேமிப்பைப் பெருக்குதல் ;

(9) ஊக வாணிபத்தைக் கட்டுப்படுத்துதல் ;

(10) அரசின் செலவினங்களைச் சிக்கனப்படுத்துதல்.

இதன் மூலம் விலையுயர்வு ஓரளவு மட்டுமே கட்டுப்படுத்தப் பெற்றது. 1945-ஆம் ஆண்டின் ரூபாய் மதிப்புக் குறைப்பிற்குப் பின் விலைகள் உயரத் தலைப்பட்டன. எனவே, அரசு விலைகளைக் கட்டுப்படுத்த எட்டு அம்சத் திட்டமொன்றை நிறைவேற்றியது. அத்திட்டத்தில் பின்வரும் நிலைகள் அமைந்திருந்தன :

(1) ஏற்றுமதிகளின் மீது கட்டுப்பாடுகளை விதிப்பது ;

(2) பேரங்களின் மூலம் இறக்குமதிகளின் செலவைக் குறைப்பது ;

(3) தடுப்பு நடவடிக்கைகளினால் ஊக வாணிபத்தைக் கட்டுப் படுத்துதல் ;

(4) சில ஏற்றுமதிப் பொருட்களின் மீது அதிக ஏற்றுமதி வரிகளை விதிப்பது ;

(5) சிறு சேமிப்புத் திட்டங்களை மேற்கொள்ளுதல் ;

(6) வரிவிதிப்பு முறைகளில் சில மாற்றங்களைச் செய்தல் ;

(7) அரசின் செலவுகளைக் குறைத்தல் ;

(8) உணவுத் தானியங்களின் சில்லரை விலைகளைப் பத்து சதவீதம் குறைத்தல்.

1950-51-இன் 'கொரியப் போரினால்' (Korean War) எதிர் பார்த்ததைப் போன்று விலைகள் குறையவில்லை. அதன் பிறகும் விலைகளில் உயர்வு நிலையே தொடர்ந்து நீடிக்கின்றது. கீழ்க்காணும் அட்டவணை மூன்று ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் விலைகளின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடுகின்றது :

| திட்டம் | முதல் ஆண்டு | இரண்டாவது ஆண்டு | மூன்றாவது ஆண்டு | நான்காவது ஆண்டு | ஐந்தாவது ஆண்டு |
|---|---|---|---|---|---|
| முதல் திட்டம் : | | | | | |
| (அடிப்படை 1939) | 460 | 380 | 400 | 340 | 400 |
| (அடிப்படை 1952-53) | 125 | 100 | 101 | 100 | 91 |
| இரண்டாவது திட்டம் : | | | | | |
| (அடிப்படை 1952-53) | 98 | 105 | 113 | 119 | 125 |
| மூன்றாவது திட்டம் : | | | | | |
| (அடிப்படை 1952-53) | 125 | 128 | 135 | 153 | 165 |

மேலே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையின் மூலம் விலைகளின் குறியீட்டெண் முதல் திட்டக் காலத்தில் குறைவடைந்ததை அறியலாம். இரண்டாவது திட்டக் காலத்தில் விலைகளின் குறியீட்டெண் அதிகரிக்கத் தொடங்கியது. மூன்றாவது திட்டக் காலத்தில் விலைகளின் உயர்வு மிக அதிகமாக இருந்தது. இதற்கு முக்கியக் காரணமாக அமைந்திருந்தது அரசின் பற்றுக்குறை நிதியாக்கக் கொள்கையாகும். இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் பற்றுக்குறை நிதியாக்கம் அதிக அளவில் பின்பற்றப்பட்டது. ஆனால், அப்பொழுது நுகர் பொருட்களின் அளிப்பு பெருகவில்லை. இந்நிலையே பணவீக்கம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது.

பிற நாடுகளில் விலைகளின் உயர்விற்கும் இந்தியாவில் விலைகளின் உயர்விற்கும் வேறுபாடுகள் உள்ளன. இந்தியாவில் குறுகிய காலத்தில் விலைகள் பலமடங்கு உயர்வடைந்தன. மேலும், விலையுயர்வுகள் வருமானத்தைக் குறைவாகப் பெறுபவர்களையே மிகவும் பாதித்தன. உணவுத் தானியங்களின் விலைகள் மிகவும் உயர்வடைந்தன. இதற்குக் காரணம் இந்தியா ஒரு வேளாண்மை நாடாக இருப்பதேயாகும். இவ்விலையுயர்வுகளின் வீதத்திற்கு ஏற்ப ஊதியங்கள் உயரவில்லை. தொழிலாளர் இயக்கங்கள் அமைந்திருந்தாலும்கூட பல தொழில்களில் தொழிலாளர்களின்

ஊதியஙகள அதிகரிககவிலலை தொழிலாளா இயககஙகளில உறுபபினாகளின எணணிககையும குறைவாகவே இருநதது இதனால ஊதிய உயாவிறகாக தொழிலாளாகள நடததிய போராடடஙகள அதிக வெறறியைப பெறவிலலை வேளாணமைப பொருடகளின விலைகள உயாவடைநதன என்றாலும், விவசாயிகள நனமையைப பெற முடியவிலலை ஏனெனில விலையுயாவின் நனமைகளைத தரகாகளே பெறறாாகள அவாகள குறைநத விலைககு வேளாணமைப பொருடகளை விவசாயிகளிடம வாஙகி அதிக விலைகத நுகாவோரிடம விறறாாகள விவசாயிகளும், நுகாவோரும இவவாறு தரகாகளால சுரணடபபடடாாகள நுகாவோா தருகினற விலையை விவசாயிகள பெறுவதிலலை நுகாவோா அளிககினற விலைககும் விவசாயிகள விறபனை செய கினற விலைககும் அதிக வேறுபாடு இருநதது இநத அதிக வேறு பாடடைப பெறறவாகள் தரகாகளேயாவா

பொருளாதார முனனேறறததை விரைவுபடுததத விலையுயாவு நனமையைத தருமெனபதை இநதிய அரசு உணாநதுளளது பொதுவாக, விலையுயாவு நனமை பயபபது எனபதை எலலாப பொருளாதார நிபுணாகளும ஒபபுககொணடுளளனா ஒரு நாடடின உறபததியின அளவு உயா வேணடுமெனறால விலையுயாவு தேவையானதாகிறது பேராசிரியா ஆாதர் லூயிஸ (Prof Arthur Lewis) கருததுபபடி, விரைவான பொருளாதார வளாசசியைப பெற ஆணடொனறிறகு 3 சதவீத விலையுயாவு அமைந திருககலாம ஆனால், தொடாசசியாக விலையுயாவு நீடிககககூடாது நீணட காலததில விலையுயர்வு அதிக அளவிறகு இருககக கூடாது விலைகளைக கடடுபபடுததககூடிய அரசின மீதுதான் மககள நமபிககை கொணடிருபபாாகள பொருளாதார நடவடிககைகள எலலாவறறையும கடடுபபடுததத தகக நிலையில் அரசு அமைந திருகக வேணடும

இநதியாவில விலைகள வானளவு உயர்நதுளளன எனறு சொலலபபடுகினறது அரசின நடவடிககைகள் விலைகளைக கடடுப படுததுவதில குறைநத வெறறியையே பெறறிருககினறன இரணடாவது ஐந்தாணடுத திடடக காலம முதறகொணடு விலைகள் தொடாசசியாக உயாநதவணணம உளளன இநநிலையில அரசுபல தீவிரக கொளகைகளைக கைககொளவது இனறியமையாத தாகும் இநநிலை மேலும தொடாநது நீடிததால பொருளாதாரம சீர்குலைநதுவிடும, பணவீககக நிலையைக கடடுபபடுததுவது எதிர் காலத்தில் எளிதானதாக இருககாது இநதியாவில அமைநதுளள பணவீகக நிலை விரைவான பொருளாதார முனனேறறததைப் பெறுவதறகுத தடையாக இருககினறது

## அதிக விலையுயர்வுகளுக்கான காரணங்களும், அவற்றைத் தவிர்ப்பதற்கான தீர்வுகளும்

முன்னேற்றத்தை உறுதித் தன்மையோடு பெற நாம் முயலு
கின்றோம். இதற்காகத் திட்டமிட்டப் பொருளாதார வளர்ச்சி
கைக்கொள்ளப்பட்டுள்ளது. நிலையான விலை மட்டங்களைப் பெற
அரசு பல முயற்சிகளை மேற்கொள்கின்றது ஆனால், வளர்ச்சி
யடைந்துவரும் பொருளாதாரத்தில் நிலையான விலைகள் நன்மை
யைத்தர முடியாது. சிறிதளவு விலையுயர்வு விரைவான முன்னேற்
றத்திற்கு வழி வகுக்கும். இந்தியப் பொருளாதாரத்தில் 1967-ஆம்
ஆண்டு விலைகள் மிகப் பலமடங்கு உயர்ந்தன. விலைகளின் உயர்வு
1967-இல் 15.3 சதவீதம் என்ற அளவிற்கு அமைந்திருந்தது.
வேறு எந்த ஆண்டிலும் ஏற்படாத மிக அதிக அளவு விலையுயர்வு
இதுவாகும். இதே ஆண்டில் பணவீக்கத்தோடு பொருளாதாரப்
பின்னிறக்க நிலையும் அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இக்
காலத்தில் அவசியப் பண்டங்களின் விலைகள் மிகவும் உயர்ந்தன.
1966-ஆம் ஆண்டு விலைகளோடு ஒப்பிடும்போது 1967-இல்
சர்க்கரை 88 சதவீதமும், உணவுத் தானியங்கள் 27 சதவீதமும்,
பருப்பு வகைகள் 52 சதவீதமும் விலையுயர்வைப் பெற்றிருந்தன.
ஆனால், தொழிற் பொருட்களின் விலைகள் 3 சதவீதம் மட்டுமே அதி
கரித்தன. 1958-இல் வேளாண்மைப் பொருட்களின் விலைகள்
கணிசமாகக் குறைந்தன. கச்சாப் பொருட்களின் விலைக்
குறியீட்டெண் 1967-68-இல் 219 ஆக இருந்தது. இது
1968-69-இல் 236 என்ற அளவிற்கு உயர்ந்துவிட்டது.
ஜனவரி 11, 1969 அன்று மொத்த விற்பனை விலைக் குறியீட்டெண்
207 ஆக இருந்தது. ஆனால், 1968 69-ஆம் ஆண்டிலிருந்து
விலைகள் அதிக அளவிற்கு உயரவில்லை. வேளாண்மை உற்பத்தி
படிப்படியாக அதிகரித்து வருகின்றமையே இதற்கு முக்கியக்
காரணமாகும் இருப்பினும் வேறு சிலவகைப்பட்ட அவசியப்
பொருட்கள் விலையுயர்வைக் கொண்டிருக்கின்றன. அதிக
வரி விதிப்பே இதற்குக் காரணமாக இருக்கின்றது. சான்றாக,
1969-70-ஆம் ஆண்டின் வரி விதிப்பால் மண்ணெண்ணெய்,
பெட்ரோல், உரங்கள், பம்பு செட்டுகள் ஆகியவற்றின் விலைகள்
உயர்வடைந்தன.

விலை மட்டங்கள் உயர்ந்தமையால் நிரந்தர வருவாய் பெறு
பவர்களும், நடுத்தர வகுப்பினரும் பாதிக்கப்பட்டார்கள். அவர்
களின் வாழ்க்கைத்தரம் இதனால் பாதிக்கப்பட்டது. பண்டங்
களின் தேவை பெருகியமைக்கு மக்கட் பெருக்கம் முக்கியக்
காரணமாக அமைந்தது. மக்கட் பெருக்கம் ஆண்டொன்றிற்கு
3 சதவீதம் என்ற அளவிற்கு அதிகரித்தது நடுத்தரப் பொருட்களை

உற்பத்தி செய்யும் தொழில்களிலும், மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்களிலும் அதிக முதலீடு செய்யப் பெற்றது. மாநில அரசுகளும், மத்திய அரசும் செலவுகளைச் சிக்கனமின்றிச் செய்தன. நாட்டின் பாதுகாப்பிற்காகப் பெருமளவு மூலதனம் ஒதுக்கப்பட்டது. பற்றுக்குறை நிதியாக்கத்தை அரசு பின்பற்றியமை பணத்தின் அளிப்பை அதிகரிக்கச் செய்தது. நாட்டின் கடன் பெருக்கமும் ஏற்பட்டது.

அளிப்பின் பக்கத்திலிருந்து நோக்கும்போது, வேளாண்மை உற்பத்தி மிக அதிக அளவிற்குப் பெருகவில்லை. குறைந்த அளவு உற்பத்திப் பொருட்களும் பதுக்கப்பட்டு கள்ளச் சந்தை களில் விற்பனை செய்யப்பட்டன. கணக்கில் காட்டப் பெறாத கறுப்புப் பணத்தின் அளவும் கூடியது விலையுயர்விற்கு மற்றொரு காரணமாயிற்று. விலைகள் அதிகமாக உயர்ந்தமைக்கு இவைகளே காரணங்களாக அமைந்தன.

விலைக் கொள்கை

விலைகளின் உயர்வைக் கட்டுப்படுத்த இந்திய அரசு பல நடவடிக்கைகளை மேற்கொண்டது. 1960-61 ஆம் ஆண்டு வரை விலைக் கொள்கைக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள அதிக அவசர நிலை அமைந்திருக்கவில்லை. 1960-61வரை விலைகள் படிப் படியாகக் குறைந்த அளவிலேயே அதிகரித்துவந்தன. 1962-இல் நாட்டில் அவசர நிலை பிரகடனப் படுத்தப்பட்ட பிறகு விலைகளைக் கட்டுப்படுத்துவது அவசியமாயிற்று. சீனப் படையெடுப்பால் பாது காப்புச் செலவுகள் கூடின. அதற்காக அரசு பற்றுக்குறை நிதி யாக்கத்தை அதிக அளவில் பின்பற்றியது. இதனால் விலைகள் உயர்வடைந்தன.

விலைகளைக் கட்டுப்படுத்த அரசு பின்வரும் வழிமுறைகளைப் பின் பற்றியது :

(1) வரவு-செலவுத் திட்டக் கொள்கை

மக்களின் நுகர்வைக் கட்டுப்படுத்தவும், பற்றுக்குறை நிதியாக் கத்தின் அளவைக் குறைக்கவும் அரசு சில நடவடிக்கைகளை எடுத் தது. எனினும் மத்திய அரசும், மாநில அரசுகளும் இவற்றில் வெற்றி யைப் பெற முடியவில்லை. குறிப்பாக மாநில அரசுகள் தங்களின் வருவாயைக் காட்டிலும் அதிகச் செலவு செய்தன. அரசுகள் பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டத்தைத் தவிர்க்க முடியாமையே விலையுயர்விற்கு ஒரு காரணமாக அமைந்தது. எடுத்துக்காட்டாக, 1960-61-இல் ரூ. 149 கோடி என்ற அளவிற்கு உபரி மூலதன மானது இருந்தது ; ஆனால், 1966-67-இல் ரூ. 450 கோடி என்ற

அளவிற்குப் பற்றுக்குறை ஏற்பட்டது. மாநில அரசுகளின் பொதுக்கடன் அளவும் அதிகரித்தது. 1951-52-இல் ரூ. 445 கோடி பொதுக் கடனாகப் பெறப்பட்டது ; இதன் அளவு 1965-66-இல் ரூ. 5,502 கோடியாகவும், 1967-68-இல் ரூ. 6,800 கோடியாகவும் அதிகரித்தது. மத்திய அரசும், மாநில அரசுகள் பெரும்பாலும் பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டத்தை மேற்கொள்வது விலை களின் உயர்விற்குக் காரணமாகின்றது.

(2) பணக் கொள்கை

அரசின் கொள்கைக்கு ஏற்ப இந்திய ரிசர்வ் வங்கி பணக் கொள்கையைப் பின்பற்றுகின்றது. இந்தியப் பொருளாதாரத்தில் அமைந்திருக்கக்கூடிய பணவீக்கச் சக்திகளைக் கட்டுப்படுத்த ரிசர்வ் வங்கி வங்கிக் கடனை கட்டுப்படுத்தி நெறிப்படுத்துகின்றது. உணவுத் தானியங்களைப் பதுக்கி வைப்பவர்களின் நடவடிக்கையைக் கட்டுப் படுத்த, உணவுத் தானியங்களின் மீது வங்கிகள் கடன் அளிப்பது குறைக்கப்பட்டது. உணவுப் பண்டங்களில் ஊக வாணியம் செய் பவர்களைக் கட்டுப்படுத்த, ரிசர்வ் வங்கி பிற வங்கிகளை உணவுத் தானியங்களின் மீது கடன் அளிக்க வேண்டாம் என அறிவுறுத் தியது. ஒரு நாட்டின் மத்திய வங்கி பின்பற்றுகின்ற பணக் கொள்கைக்கும் விலைகளின் நிலைகளுக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது.

(3) பண்டங்களின் மீது கட்டுப்பாடு

சில அவசியப் பண்டங்களின் விலைகளை அரசு கட்டுப்படுத்து கின்றது. பின்வரும் முறைகளின் மூலமாக இன்றியமையாத சில பண்டங்களின் விலைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன :

(i) உயர்ந்த அளவு விலைகளை நிர்ணயித்தல் ;

(ii) சில பொருட்களைப் பங்கீடு செய்தல் ;

(iii) இறக்குமதியின் மூலம் சில பண்டங்களின் அளிப்பை அதிகரித்தல்.

சில பண்டங்களின் மீது விலைக் கட்டுப்பாடுகள் இருந்தாலும் கள்ளச் சந்தை விற்பனை, பதுக்குதல் போன்ற நிலைகளும் ஏற்படு கின்றன. அவசியப் பண்டங்களின் விலைகள் கட்டுப்படுத்தப் படுகின்றமையால்தான் சமுதாயத்தின் தாழ்ந்த நிலையில் அமைந் துள்ள மக்கள் ஓரளவு நன்மையை அடைகின்றார்கள்.

(4) தொழில் முன்னேற்றம்

தொழில் உற்பத்தியைப் பெருக்க பல வழிகளிலும் முயற்சிகள் எடுக்கப்படுகின்றன. மூலதனப் பொருட்களை இறக்குமதி செய்ய

அந்நியச் செலாவணி அதிக அளவில் ஒதுக்கப்படுகின்றது. தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான இயந்திரங்களும், இயந்திரப் பகுதிகளும், கருவிகளும், கச்சாப் பொருட்களும் எளிதில் இறக்குமதி செய்ய அனுமதிக்கப் படுகின்றன. தொழில் உற்பத்தியைப் பெருக்குவதின் மூலம் விலையுயர்வைத் தவிர்க்கலாம். பொதுவாக, நாட்டின் மொத்த ஆக்கமானது அதிக அளவில் இருக்கும்போது பணவீக்க நிலை தோன்றுது. பொருளாதாரத்தின் புழக்கத்தில் விடப்படும் பண வீதத்தைக் காட்டிலும் உற்பத்தி வீதமானது அதிகரித்தால் பணவீக்க நிலை ஏற்படாது.

பொதுவாக நோக்குமிடத்து, பொருளாதாரத்தில் அமைந்துள்ள பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்த அரசு பல வழிமுறைகளைத் தீவிரமாகப் பின்பற்றி வருகின்றது. எனினும், விலைகளின் உயர்வைக் கட்டுப்படுத்துவதில் வெற்றி கிடைக்கவில்லை என்றே கூற வேண்டும். சமீப காலத்தில், பணத்தின் அளிப்பு அதிகரித்துள்ளது ; வங்கிக் கடனும் பெருகியுள்ளது. அந்நியச் செலாவணிப் பற்றுக்குறையும் அமைந்திருக்கின்றது. நுகர் பொருட்களின் உற்பத்தி அதிகரிக்கவில்லை. இவற்றின் காரணமாகவே விலைகள் உயர்ந்த மட்டத்தை அடைந்தன. மொத்த உற்பத்தியின் அளவானது பெருகாவிட்டால், இனி வரும் ஆண்டுகளிலும் விலையுயர்வைக் கட்டுப்படுத்த இயலாது. பணவீக்க நிலையைத் தவிர்க்க அரசு இதுவரை பின்பற்றிய கொள்கைகள் அதிக அளவு வெற்றியைப் பெறவில்லை. மேலும் அதிக வரிவிதிப்பைச் செய்வதும், வங்கி வீதத்தை உயர்த்துவதும் மட்டும் போதுமானதாகாது. தெரிந்தெடுக்கப்பட்டக் கடன் கட்டுப்பாடுகளும் குறுகிய காலத்திற்கே நன்மை தருகின்றன. பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தும் உண்மையான தீர்வு உற்பத்தி உயர்விலேயே அமைந்திருக்கின்றது.

வேளாண்மை உற்பத்தியை உயர்த்துவதோடு, தொழிற் பொருட்களின் உற்பத்தியையும் பெருக்குவது இன்றியமையாததாகும். உற்பத்தி உயர்வானது 1968-ஆம் ஆண்டிலும் 1969-ஆம் ஆண்டின் தொடக்கத்திலும் இருந்தமையால் விலைகள் அதிக அளவிற்கு உயரவில்லை. தவிர, முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வேளாண்மை உற்பத்திப் பெருகியமையால், பற்றுக்குறை நிதியாக்கம் பின்பற்றப்பட்டபோதும் பணவீக்க நிலை தோன்றவில்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் பருவ நிலைச் சாதகமாக இல்லாமையால், வேளாண்மை உற்பத்தி குறைவடைந்தது. 1965-66-ஆம் ஆண்டு முதல் இந்தியப் பொருளாதாரத்தில் இதன் காரணமாகவே பணவீக்க நிலை ஏற்பட்டது. மூன்றாவது திட்டக் காலத்தில் விலையுயர்வுகள் ஏற்பட்டமைக்கு உற்பத்திக் குறைவே காரணமாகும். ஒரு நாட்டின் மொத்த ஆக்கமானது விரைவாக அதிகரித்தால் விலைகளில் அதிக உயர்வு

ஏற்படாது. புதிதாகப் பொருளாதாரத்தில் புழக்கத்தில் விடப் படும் பண வீதத்தைக் காட்டிலும் உற்பத்தி வீதமானது உயர்வாக இருந்தால் விலைகள் உயர்வடைய மாட்டா.

## பணவீக்கமும் பொருளாதார முன்னேற்றமும்

பின்தங்கிய நாடுகள் பொருளாதார முன்னேற்றத்திற்குத் திட்டமிடும்போது பணவீக்க நிலை ஏற்படுவது இயல்பானதாகும். பணவீக்கக் காலத்தில் எல்லோரும் அதிக வருவாயைப் பெறு கின்றனர். ஆனால், அவ்வருவாய் பண வருவாயாக மட்டுமே அமைகின்றது ; உண்மையான வருவாயாக அமைவதில்லை. அதிகரித்த வருவாயைக் கொண்டு மக்கள் அதிகப் பண்டங்களையும், பணிகளையும் வாங்க முடிவதில்லை. அரசின் செலவுகள் அதிகரிப் பதாலும் பணவீக்க நிலை தோன்றுகின்றது. இதனால் தனியார், துறை விரிவடைகின்றது. இதன் காரணமாகவே மக்களின் பண வருவாய் அதிகரிக்கின்றது. அதே சமயத்தில் அதற்கேற்ப உற்பத்தியானது உயர்வடைவதில்லை. இந்நிலையால் பணவீக்கம் ஏற்படுகின்றது. நாட்டின் குறைந்த அளவுப் பொருட்களை அதிக அளவுப் பணமானது துரத்துவதால் விலைகள் உயர்வடை கின்றன. பொருளாதார முன்னேற்றத்தைப் பெறும் நிலைகளில் பணவீக்க நிலை ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. ஓரளவு விலைகளின் உயர்வு விரைவான பொருளாதார முன்னேற் றத்தைப் பெற இன்றியமையாததாகும். வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் விலையுயர்வு விரைவான முன்னேற்றத்தைப் பொருளா தாரத்தில் ஏற்படுத்துமெனப் பல பொருளியலாளர்கள் கருது கின்றனர். பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பணவீக்கம் உதவுமென்பதற்கு இவர்கள் சில வாதங்களைத் தருகின்றனர். அவற்றைப் பின்வருமாறு விளக்கலாம் :

*(1)* சர் டி. எச். இராபர்ட்சன் (Sir D. H. Robertson) குறைந்த அளவில் பணவீக்கம் ஏற்படுவது நாட்டின் உற்பத்தியை உயர்த்த உதவுமெனக் கூறுகின்றார். ஒரு நாட்டின் பண்டங்களின் உற்பத்தியைச் செய்பவர்கள் பெரும்பாலும் செல்வந்தர்களாகவே இருக்கின்றனர். விலையுயர்வினால் அதிக இலாபத்தை அவர்கள் பெறும்போது மேலும் உற்பத்தியைப் பெருக்குகின்றார்கள். ஆனால் விலைகள் தொடர்ச்சியாகக் குறையும்போது, நாட்டின் மொத்த உற்பத்தியானது உயர்வடையாது. விலைகள் குறைந்தால் முதலீட்டின் அளவு குறையும். இதனால் வேலையின்மை தோன்றும் ; பல உற்பத்திக் காரணிகளும் சிறப்பாகப் பயன்படுத்தப் படுவதில்லை. எனவே, விலை மட்டத்தில் உயர்வடையும் நிலையே வேலையின்மைச் சிக்கலைத் தீர்க்க உதவும். மேம்பாடடைந்துவரும்

நாடுகளில் பல வேலையின்மைச் சிக்கலைக் கொண்டிக்கின்றன. இச்சிக்களைத் தீர்க்க விலையுயர்வு பெரிதும் உதவும்.

(2) பல நாடுகளின் வரலாறுகளினின்றும் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பணவீக்கம் உதவியுள்ள நிலையை அறிய முடிகின்றது. இங்கிலாந்தில் 1790 முதல் 1800 வரை ஏற்பட்ட விலையுயர்வும், அமெரிக்காவில் 1890 முதல் 1900 வரை ஏற்பட்ட விலையுயர்வும், ஜப்பானில் 1870 முதல் 1880 வரை ஏற்பட்ட பணவீக்க நிலையும் அந்நாடுகளின் மூலதனத் திரட்சிக்கு உதவின. நாட்டின் வளங்கள் இதனால் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டன. இலாபத்தின் அளவு பெருகியதோடு நுகர்வும் ஓரளவு கட்டுப் படுத்தப் பெற்றது. இதைப் போன்றே சோவியத் ரஷ்யா 1930 முதல் 1940 வரை தொழில் மயமாக்கப்பட்டதால் அரசு அதிகச் செலவுகளைச் செய்தது. விலைகள் சுமார் 700 சதவீதம் கூடின. இவ்வாறு பணவீக்க நிலை ஏற்பட்ட பிறகே இந்நாடுகள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற்றன.

(3) இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் முழுமையான பணப் பொருளாதாரம் அமைந்திருக்கவில்லை. கிராமப் புறங்களில் பண்ட மாற்று முறையும் அமைந்துள்ளது. இவ்வகைப் பண்ட மாற்று முறையைப் பணமாற்று முறையாக மாற்றுவது அவசியமானதாகும். இந்நிலையால், இது போன்ற நாடுகளில் பணத்தின் அளிப்பின் அளவை அதிகரிப்பது அவசியமா கின்றது. பணத்தின் பயன் முழுமையாக ஒரு நாட்டின் அமைந் திருத்தல் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு வழி வகுக்கும். பின் தங்கிய நாடுகளின் பொருளாதார நடவடிக்கைகளை விரிவாக்கப் பணப்புழக்கம் மிகுதியாக அமைந்திருக்க வேண்டும்.

(4) பணவீக்கத்தால் மிக விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தைப் பெற முடியும் என்று சொல்லப்படுகின்றது. வளர்ச்சி நிலைகளில் ஒரு பொருளாதாரத்தில் பலவிதத் தடைகள் தோன்றுகின்றன. அதில் ஒன்று அந்நியச் செலாவணிச் சிக்கலாகும். இந்தியா போன்ற வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் இந்நிலை அமைந்திருக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உலகின் வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்தும் கடன்கள் பெறப் படுகின்றன. இவ்வித வெளிநாட்டுக் கடன்கள் பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்துகின்றன. பணவீக்கக் கொள் கையின் மூலம் அந்நியச் செலாவணி மிச்சம் பிடிக்கப்படுகின்றது இறக்குமதிப் பொருட்களின் அளவு குறைக்கப்படுவதே இதற்குக் காரணமாகும். பணவீக்க நிலையால் வெளிநாடுகளின் போட்டி யினின்றும் உள்நாட்டுத் தொழில்கள் காக்கப்படுகின்றன.

(5) மேம்பாடடைந்துவரும் இந்தியா போன்ற பொருளாதாரங்களில் அதிக அளவு சேமிப்பு இயல்பாக ஏற்படுவதில்லை. சேமிப்பு அதிக அளவிற்கு ஏற்பட்டால்தான் மூலதனத் திரட்சி உயர்வடையும். அடிப்படைத் தொழிலாகிய வேளாண்மைத் துறையை வளர்ப்பதோடு தொழில் முன்னேற்றமும் இன்றியமையாததாகும். நுகர்வுப் பொருட்களை உற்பத்தி செய்யக்கூடிய தொழில்களோடு மூலதனப் பொருட்களை உற்பத்தி செய்யக் கூடிய தொழில்களும் வளர்க்கப்பட வேண்டும். எதிர்காலத்தில் அதிக நுகர்வில் ஈடுபட தற்பொழுது நுகர்வின் அளவு கட்டுப் படுத்தப்பட வேண்டும். விலையுயர்வால் நுகர்வு கட்டுப்படுத்தப் பட்டு சேமிப்பு உயர்வடைகின்றது பணவீக்க நிலை இவ்வாறு மூலதனத் திரட்சிக்கு உதவுகின்றது. சிறு சேமிப்புக்கள் பெரும் பகுதி மக்கட்தொகையால் செய்யப்படுகின்றன. சேமிப்பு வீதம் உயர்வதால் முதலீட்டு வீதமும் அதிகரிக்கிறது. பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் இதனால் செழிப்பு நிலை தோன்றுகின்றது.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள நிலைகளால் பணவீக்கம் பொருளாதாரத்தில் நல்ல பல விளைவுகளைத் தோற்றுவிக்கின்றது. பொருளாதார முன்னேற்றத்தில் அமைந்துள்ள தேக்க நிலையை மாற்றி இயக்க நிலையை ஏற்படுத்த விலையுயர்வுகள் உதவுகின்றன. விலைகள் உயர்வடையும்போது வேலை வாய்ப்புக்கள் பெருகுகின்றன ; உற்பத்தி அதிகரிக்கின்றது ; இலாபத்தின் அளவு அதிகரிக்கின்றது ; மக்களின் வருவாய் உயர்வடைகின்றது ; வருவாய் உயரும்போது நுகர்வும் உயர்வதால் திரும்பவும் உற்பத்தி பெருகுகின்றது.

பணவீக்கத்திற்கு எதிரான வாதங்கள்

பொருளாதார முன்னேற்றத்திற்குப் பணவீக்கம் உதவும் என்பதற்கு எதிராகச் சில பொருளியலாளர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

(1) பொருளாதாரச் சீர்குலைவு

பணவீக்கம் கட்டுப்படுத்தப்படா விட்டால் அது பொருளாதாரத்தில் பல சீர்குலைவுகளைத் தோற்றுவித்துவிடும். பின்தங்கிய பொருளாதாரத்தில் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவது கடினமாகின்றது. விலையுயர்வுகளைத் தடுக்க உற்பத்தி உயர வேண்டும். பொதுமக்களின் வாங்கும் திறனும் குறைக்கப்பட வேண்டும்; பணக்கொள்கை சிறப்பாகப் பயன்படுத்தப்பட வேண்டும்; பல பொருட்களின் மீது கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டும். ஆனால்

இவற்றில் வெற்றியைப் பெறுவது வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் எளிதாக அமைந்திருப்பதில்லை. இவற்றைப் பெறுவதற்காக எடுக்கப்பெறும் முறைகளும் சிறப்பாக அமைவதில்லை. எனவே, இந்நாடுகளில் பணவீக்க நிலை தோன்றுவதையே அனுமதிக்கக் கூடாது.

(2) செல்வப் பங்கீட்டிலும், வருவாயிலும் ஏற்றத்தாழ்வுகள்

பணவீக்கத்தால் நாட்டில் சில பொருளாதார நன்மைகள் கிடைத்தாலும், சமுதாயத் தீமைகள் பலவும் விளைகின்றன. எனவே, பொருளாதார முன்னேற்றத்தைப் பெற பணவீக்கக் கொள்கையைப் பின்பற்றுதலைத் தவிர்க்க வேண்டும். இந்தியா போன்ற மேம்பாடடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தோடு, சமுதாய நலன்களும் கருதப்பட வேண்டியது அவசியமாகின்றது. பணவீக்கக் காலத்தில், விலைகள் தொடர்ந்து உயர்வடைகின்றன. விலைகள் உயரும் வீதத்திற்கு உழைப்பாளர்களின் ஊதிய வீதம் உயர்வடைவதில்லை விலைகள் உயரும்போது இலாப வீதமானது அதிகரிக்கின்றது. ஆனால், இலாப வீதத்திற்கு ஏற்ப ஊதிய வீதம் உயர்வதில்லை எனவே, ஊதியத்தைப் பெறுபவர்களுக்கும், இலாபத்தைப் பெறுபவர்களுக்கும் நடுவே பெரிய இடைவெளி தோன்றுகின்றது. இதன் காரணமாக ஏற்படுகின்ற வருவாய் வேறுபாடுகளால் சமுதாயச் சிக்கல்கள் பல தோன்றுகின்றன. மக்கள் பல புரட்சிகளில் ஈடுபடுவார்கள்; அரசியலில் நிலையற்ற தன்மை ஏற்படும்; நாட்டில் பலவிதக் குழப்பங்கள் தோன்றும். எனவே, செல்வப் பங்கீட்டிலும், வருவாயிலும் ஏற்றத்தாழ்வு ஏற்படக் காரணமாக இருக்கும் பணவீக்கத்தைத் தவிர்ப்பது நல்லது.

(3) முதலீட்டின் தன்மை

பணவீக்கமானது ஒரு நாட்டின் முதலீட்டின் அளவை உயர்த்த உதவுகின்றது. சில வகை முதலீடுகள் நாட்டிற்கு நன்மையளிக்கின்றன; வேறு சில முதலீடுகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதில்லை. தொழில்கள் தொடங்கவும், இயந்திரங்கள் கருவிகள் வாங்கவும், கட்டடங்கள் கட்டவும், ஆராய்ச்சிக் கூடங்கள் அமைக்கவும் முதலீடுகள் செய்யப்படுதல் பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்தும். போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றின் வளர்ச்சியும் அரசால் செய்யப்பட வேண்டும். ஊக வாணிபம், பதுக்குதல் போன்றவற்றில் முதலீடு செய்தல் நாட்டிற்கு நன்மையளிக்காது. பணவீக்கக் காலத்தில் கட்டடங்கள் கட்டப்படுகின்றன; அதிக அளவிற்கு நிலங்களும் வாங்கப்படுகின்றன. இவற்றின் மூலம் நாட்டின்

உற்பத்திப் பணிகளை ஊக்குவிக்க இயலாது. எனவே, இவ்வித முதலீடுகளைப் பொருளாதார முன்னேற்றத்திற்கு நன்மையளிக்கும் முதலீடுகள் எனக் கருத முடியாது. பணவீக்கக் காலத்தில் மக்களில் சிலர் அரசின் பத்திரங்களில் முதலீடு செய்வதுண்டு. அம்முதலீட்டின் மூலமாக அவர்கள் சுமார் 5 சதவீத வருவாயை ஆண்டொன்றிற்குப் பெறுகின்றனர்கள் ஆனால், விலையுயர்வின் அளவானது ஆண்டொன்றிற்கு 6 சதவீதமாக அமைகின்றது. இதன் காரணமாக முதலீட்டாளர்கள் 1 சதவீத வருவாயை இழக்கின்றனர் கள். இவ்வாறு பணவீக்கத்தினால் ஏற்படுகின்ற வருவாய் உயர்வு முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய துறைகளில் முதலீடு செய்யப்படுகின்றது. உற்பத்தியல்லாத பணிகளிலும் அதிகரிக்கின்ற வருவாய் செலவிடப்படுகின்றது.

(4) பணவீக்கமும் ஏற்றுமதியும்

பொதுவாக, பணவீக்கக் காலத்தில் உள்நாட்டின் எல்லா வகைப் பொருட்களின் விலைகளும் அதிகரிக்கின்றன. அதே சமயத்தில் வெளிநாடுகளின் விலைகள் உயர்வடைவதில்லை. ஆகவே, ஏற்றுமதியைப் பெருக்க வேண்டுமென்றால் உள்நாட்டின் விலைகளில் ஓரளவு நிலைத்தன்மையைப் பெறவேண்டும். விலைகளில் அதிக அளவு மாற்றங்களும், ஏற்றத்தாழ்வுகளும் ஏற்படக்கூடாது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஏற்றுமதி அதிகரிக்கவில்லை. அதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது தொடர்ச்சியாக விலைகளில் உயர்வு ஏற்பட்ட நிலை எனலாம். உள்நாட்டு விலை மட்டங்கள் உயர்வடைந்தால், ஏற்றுமதியைப் பெருக்க ஊக்கமேற்படாது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் பணவீக்க நிலை அமைந்திருந்தாலும் ஏற்றுமதியின் அளவு ஓரளவு கூடியது. இதற்குக் காரணம் ஏற்றுமதியைப் பெருக்க அரசு மேற்கொண்ட பல நடவடிக்கைகளேயாகும். உலகச் சந்தையில் இந்தியப் பொருட்கள் விற்பனையாக வேண்டுமென்றால் குறைவான விலையில் அவை விற்பனை செய்யப்பட வேண்டும். உள்நாட்டில் பணவீக்க நிலை ஏற்பட்டால் விலைகள் குறைந்து ஏற்றுமதியின் அளவு பாதிக்கப்பட்டுவிடும்.

(5) மூலதனத் திரட்சி

பணவீக்க நிலை நிலவும்போது மக்களில் பெரும்பாலோர் தங்கள் வருவாய் அனைத்தையும் செலவிட வேண்டியுள்ளது. விலையுயர்வால் இந்நிலை தோன்றுகின்றது. எனவே, சேமிப்பைச் செய்ய அவர்களால் முடிவதில்லை. சிலர் குறைந்த அளவு சேமிப்பை மட்டுமே செய்ய முடிகின்றது. ஆனால் உற்பத்தியாளர்கள், தொழில் முயல்வோர் ஆகியோருடைய வருவாய் மிக அதிக அள

விற்கு உயர்கின்றது. இதற்குக் காரணம அவர்கள் உற்பத்திப் பொருட்களை அதிக விலைக்கு விற்பனை செய்ய முடிகின்ற நிலை யாகும். எனினும், அதிக வருவாய் பெறும் அவர்களும் பெருமள விற்குச் சேமிப்பதில்லை. அதிக வருவாய் பெறுபவர்கள் ஊக வாணி பத்தில் ஈடுபடுகின்றனர். நவீன வசதிகளைக் கொண்ட கட்டடங் களைக் கட்ட அதிகச் செலவுகளைச் செய்கின்றனர். நுகர் பொருட் களையும், ஆடம்பரப் பொருட்களையும் அதிக அளவில் வாங்கிப் பயன்படுத்துகின்றனர். நாட்டின் மொத்தச் சேமிப்பு மிகக் குறைவாக இருக்கின்றது.' பணவீக்கப் பொருளாதாரத்தைக் கொண்ட பின்தங்கிய நாடுகளில் சேமிப்பு தேசிய வருவாயில் 9 சதவீதத்திற்குக் குறைவாகவே உள்ளது.

இந்தியாவின் பணவீக்க நிலையானது ஒரு சிலருக்கு அதிக இலா பத்தைத் தந்தாலும் முதலீட்டு வீதமானது மிகவும் உயரவில்லை. விலைகளின் உயர்வால் ஓரளவு முதலீட்டு வீதம் உயர்ந்துள்ளது என்பதை மறுக்கவும் இயலாது. வேளாண்மை விளை பொருட்களின் விலையுயர்வால் உற்பத்தி உயர்ந்திருக்கின்றது; ஆனால், விலையுயர் வால் ஏற்பட்ட எல்லா நன்மைகளையும் விவசாயிகள் பெறவில்லை. உற்பத்தியாளர்களுக்கும், நுகர்வோர்க்கும் இடையே உள்ள தரகர் களே பெருமளவு இலாபத்தைப் பெற்றுர்கள். இந்தியாவில் விலை களைக் கட்டுப்படுத்துவதில் அரசின் நிதிக் கொள்கையும், பணக் கொள்கையும் குறைந்த அளவு வெற்றியையே பெற்றன. பல வகைப்பட்ட பொருட்களின் உற்பத்தியையும் பெருக்குவதே பண வீக்க நிலையைக் கட்டுப்படுத்த உதவும்; உள்நாட்டில் நுகர்பொருட் களின் உற்பத்தியையும் பெருக்குவது அவசியமானதாகும். அவசியப் பண்டங்களை அரசு பங்கிடு செய்யலாம்; அரசின் சிறப்பான வரி விதிப்பு முறையாலும் விலைகளை ஓரளவு கட்டுப்படுத்தலாம். கட்டாயச் சேமிப்பு முறையை அரசு ஏற்படுத்தலாம். அரசு அவசிய மற்ற செலவுகளைக் குறைக்க வேண்டும். ஊக வாணிபம் அரசின் நடவடிக்கைகளால் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் பணவீக்கம் ஏற்படுவது இயல்பானதாகும். பணவீக்கத்தைக் குறைக்க வேளாண்மை உற்பத்தி உயர வேண்டும். தொழில் பொருட்களின் உற்பத்தி யையும் அதிகரிக்க வேண்டும். பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவைக் குறைத்து பல வகைப்பட்ட நுகர் பொருட்களின் உற்பத் தியையும் உயர்த்த வேண்டும். பொருட்களின் தேவையைக் காட்டிலும் அளிப்பை அதிகரித்தால் விலைகளின் உயர்வைத் தவிர்க்க முடியும். பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் விரைவான வளர்ச்சியைப் பெற வாய்ப்பானது ஏற்படும்.

## SELECTED BIBLIOGRAPHY


Abromovitz, M. (ed.) — Capital Formation and Economic Growth.

Adler, Johan H., E. R. Schlesinger and E. C. Olson, — Public Finance and Economic Development in Guatemala.

Agarwal, A. N., — Some Aspects of Economic Advancement of Underdeveloped Countries.

Agarwal, A. N., and S. P. Singh, (ed.)—The Economics of Underdevelopment.

Aitken, Hugh F. J., (ed ), — The State and Economic Growth.

Atallah, M. K., — The Long-Term Movement of the Terms of Trade Between Agricultural and Industrial Products.

Balogh, T., — Some Aspects of Economic Growth of Under-developed Areas.

Baran, Paul, — The Political Economy of Growth.

Barlow, E. R., and I. T. Wender, — Foreign Investment and Taxation.

Bauer, P. T., — Economic Analysis and Policy in Under-developed Countries.

Bauer, P. T., — Indian Economic Policy and Development.

Bauer, P. T., and B. S. Yamey, — Economics of Under-developed Countries.

Baumol, William, — Economic Dynamics.

Benham, F., — Economic Aid to Under-developed Countries.

Berliner, J. H, — Soviet Economic Aid: The New Aid and Trade Policy in Underdeveloped Countries.

Bettelheim, C., — Some Basic Planning Problems.

Bhattacharya, K. N., — Indian Plans.

Bhattacharya, K. N., — India's Fourth Plan.

Bhatt, V. V., — Employment and Capital Formation in Underdeveloped Economies.

Boer, W., and I. Kerstenetzy, (ed.)—Inflation and Economic Growth.

Bonne, A., — Studies in Economic Development.

Bruton, H. J., — A Survey of Recent Contributions to the Theory of Economic Growth.

Bruton, H. J., — Inflation in a Growing Economy.

Buchanan, N. S., and H S. Ellis, — Approaches to Economic Development.

Cairncross, Alec., — Factors in Economic Development.

Cameron, R. J., — Investment in Agriculture.

Chakravarty, S., — Logic of Investment Planning.

Chandler, L. V., — Central Banking and Economic Development.

Chandrasekhar, George., — Population and Planned Parenthood in India.

Chelliah, R. J., — Fiscal Policy in Underdeveloped Countries.

Chenery, H. B., and Clark, P. G.,—Inter-industry Economies.

Clark, C., — The Conditions of Economic Progress.

Coale, A. J., and E. M. Hoover., — Population Growth and Economic Development in Low-Income Countries.

Das Gupta, A. K., — Planning and Economic Growth.

Das Gupta, A. K., (ed.) — Trade Theory and Commercial Policy in Relation to Underdeveloped Countries.

Datta, A., — Paths of Economic Growth.

Datta, B., — The Economics of Industrialization.

Datta, B., — Essays in Plan Economics.

Dhar, P. N., and Lydall, H. F., — The Role of Small Enterprises in Indian Economic Development.

Dobb, Maurice — Some Aspects of Economic Development.

Dobb, Maurice — Political Economy and Capitalism.

Dobb, Maurice — On Economic Theory and Socialism.

Dobb, Maurice — An Essay on Economic Growth and Planning.

Domar., E., — Essays in the Theory of Economic Growth.

Dorfman, Samuelson and Solow — Linear Programming and Economic Analysis.

Dupries, L. H.,(ed.) — Economic Progress.

Ellis, H. S., and H. C. Wallich., — Economic Development of Latin America: Proceedings of International Economic Association.

Enke., S., — Economics For Development.

Fatouros, A. A., — Government Guarantees to Foreign Investors.

Friedman, M , — Inflation: Causes and Consequences.

Gadgil, D. R., — Planning and Economic Policy in India.

Gadgil, D. R., — Economic Policy and Development.

Galbraith, J. K., — Economic Development in Perspective.

Gaston, J. Frank., — Obstacles to Direct Foreign Investment.

Ghosh, Alak., — New Horizons in Planning — A History of Planning Techniques With Special Reference to India's First and Second Five Year Plans.

Ghosh, O. K., — Problems of Economic Planning in India.

Ghosh, S. K., — Inflation in an Underdeveloped Economy.

Ghosh, S. K., — Deficit financing in an Underdeveloped Economy.

Ghosh, S. K., — Monetization of an Economy.

Gill, R. T., — Economic Development : Past and Present.

Golay, Frank H., — The Phillippines : Public Policy and National Economic Development.

Gyan Chand —Socialist Transformation of Indian Economy.

Haavelmo, T., — A Study in the Theory of Economic Evolution.

Habakkuk, J. H., and others,—Lectures on Economic Development.

Haberler, G., — International Trade and Economic Development.

Hagen, E. E., — On the Theory of Social Change.

Hanson, A. H., — Public Enterprise and Economic Development.

Hansen, Bent, — Inflation Problems in Small Countries.

Harrod, R. F., — Towards a Dynamic Economics.

Harrod, R. F , — Economic Essays.

Heilbroner, R. L., — The Growing World : Economic Development and the World Bank.

Hicks, J. R., — Essays in World Economics.

Hicks, Ursula K., — Development From Below.

Higgins, B., — Economic Development : Problems, Principles and Policies.

Higgins, Benjamin and Wilfred Malenbaum, — Financing Economic Development.

Hirschman, A. O., — The Strategy of Economic Development.

Hoselitz, B. F, — Sociological Aspects of Economic Growth.

Hoselitz, B. F., (ed) — The Progress of Underdeveloped Areas.

Hozelitz, B. F., and others, — Theories of Economic Growth.

Johnson, L., — A Multi-sectoral Model of Economic Growth.

Johanse, H. G., — International Trade and Economic Growth.

Johanse, H. G., — Money, Trade and Development.

Kaldor, N, — Essays on Economic Stability and Growth.

Keirstead, Burton, — The Theory of Economic Change.

Keynes, J. M., — The General Theory of Employment, Interest and Money.

Keynes, J. M., — Essay in Persuasion.

Khan, M. S, — India's Economic Development and International Economic Relations.

Khan, N. A., — Problems of Growth of an Underdeveloped Economy.

Kindleberger, C. P., — Economic Development.

Knowles, L. C. A., — Economic Development in the 19th Century.

Kurihara, K. K., — The Keynesian Theory of Economic Development.

Kuznets., S, — Six Lectures on Economic Growth.

Kuznets, S. W. E., Moore and J. J. Spengler, — Economic Growth: Brazil, India, Japan.

Lange, O., — Essay on Economic Planning.

Leibenstein, H., — Economic Backwardness and Economic Growth: Studies in the Theory of Economic Development.

Leontief, W. W., and others—Studies in the Structure of American Economy.

Lewis, J. P., — Quiet Crisis in India.

Lewis, W. A., — The Principles of Economic Planning.

Lewis, W. A., — The Theory of Economic Growth.

Lewis, W. A., — Development Planning.

Lewis, W. A., — Aspects of Industrialization.

Lockwood, W. W., — Economic Development of Japan.

Madan, B. K., — Aspects of Economic Development and Policy.

Mahalanobis, P. C., — Talks on Planning.

Mahalanobis, P. C., — The Approach of Operational Research to Planning in India.

Mahalanobis, P. C., — Indian Statistical Institute Series.

Malenbaum. W., — Prospects For Indian Development.

Malthus, T. R.,—Essay on Population.

Man Mohan Singh. H. K., — Demand Theory and Economic Calculation in a Mixed Economy.

Marx, Karl., — Das Capital.

Mason, E. S., — Economic Planning in Underdeveloped Areas: Government and Business.

Mason, E. S., — Promoting Economic Development.

Maynard, G., — Economic Development and the Price Level.

Mc Cleary G. F., — The Malthusian Population Theory.

Meade, J. E., — A Neo-Classical Theory of Economic Growth.

Meier, G. M., — International Trade and Development.

Meier, G. M.,—Leading Issues in Development Economics.

Meier, G. M., and Robert E. Baldwin,—Economic Development.

Meier, R. L., — Development Planning.

Mikesell, R. F., — Intra-Regional Trade and Economic Development.

Millikan, Max F., (ed.),—Investment Criteria and Economic Growth.

Millikan, M. F., and D. I. M. Blackmer,—The Engineering Nations : Their Growth and U. S. Policy.

Mountjoy, A. B., — Industrialization and Underdeveloped Countries.

Myint, H., — The Economics of Developing Countries.

Myrdal, G., — An International Economy: Problems and Prospects.

Myrdal, G , — Economic Theory and Underdeveloped Regions.

Myrdal, G., — Rich Lands and Poor.

Narayan, Shriman—Trends in Indian Planning.

National Bureau of Economic Research,—Capital Formation and Economic Growth.

N. C. A. E. R.,—Price Policy and Economic Growth.

N. C. A. E. R., — Saving in India.

Nelson, E., — Economic Growth, Rationale, Problems, Cases.

Nevin, Edward,—Capital Funds in Underdeveloped countries.

Nurkse, R., — Patterns of Trade and Development.

Nurkse, R., — Problems of Capital Formation in Underdeveloped countries.

Peacock, A. T.,— Theory of Population and Modern Economic Analysis.

Philips, Paul A. M., — Public Finance and Less Developed Economy.

Prasad, K. N., — Technological Choice Under Development Planning.

Prest, A. R.,— Public Finance in Underdeveloped Countries.

Radner, Roy, — Notes on the Theory of Economic Planning.

Raj, K. N., — Employment Aspects of Planning in Underdeveloped Economies.

Raj, K. N., — Economic Aspects of the Bhakra, Nangal Project.

Rangnekar, D. K., — Poverty and Capital Development in India.

Rao, V. K. R. V., and Narain, D., — Foreign Aid and India's Economic Development.

Reddaway, W. B., — The Development of Indian Economy.

Ricardo, David, — Principles of Political Economy and Taxation.

Robinson, Joan, — The Accumulation of Capital.

Robinson, Joan, — Essays on Marxian Economics.

Rostow, W. W., — The Process of Economic Growth.

Rostow, W. W., — The Stages of Economic Growth.

Roy, H. N., — The Role of Monetary Policy in Economic Development.

Sachs Ignacy, — Foreign Trade and Economic Development in Underdeveloped Countries.

Sandee, J., — A Demonstration Planning Model For India.

Schumpeter, J. A., — Business Cycles.

Schumpeter, J. A., — The Theory of Economic Development.

Schumpeter, J. A., — Capitalism, Socialism and Democracy.

Schumpeter, J. A., — History of Economic Analysis.

Schumpeter, J. A., — Ten Great Economists.

Sen, A. K., — Choice of Techniques.

